உ

ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## மூன்றாம் பகுதி

(2377—3579 செய்யுட்கள்)



மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்
அடையாறு :: சென்னை 20

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு—35

உ

ஸ்ரீமத்

கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## மூன்றும் பகுதி

(2377—3579 செய்யுட்கள்)



சோபகிருது௵ ஆடி௴



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

திருவான்மியூர், அடையாறு ] 1963 [ சென்னை—20

# முகவுரை

இவ்வெளியீடு இந்நிலையத்தினின்று வெளிவரும் கம்பராமாயணப் பதிப்புக்களுள் யுத்தகாண்டத்தின் மூன்றும் பகுதியாகும். நான்காவது பகுதியில், பதிப்புரை, நூன்முகம், அரும்பதங்கள் முதலியவற்றின் அகராதி ஆகியவற்றைப் பதிப்பிக்கக் கருதியுள்ளோம். இப்பகுதியிலுள்ள பாடல்களுக்கு முதற்குறிப்பு அகராதி மட்டும் இதனிற் கொடுக்கப்பெற்றுள்ளது.

இக்காண்டத்திற்கும் அன்பர்கள் வழக்கம்போல் ஆதரவு காட்டி ஊக்கமளிக்க வேண்டுகிறோம்.

29—7—1963

# உள்ளுறை


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 21. | பிரமாத்திரப் படலம் | ... | 1 |
| 22. | பிராட்டி களங்காண் படலம் | ... | 219 |
| 23. | மருத்துமலைப் படலம் | ... | 258 |
| 24. | களியாட்டுப் படலம் | ... | 375 |
| 25. | மாயா சீதைப் படலம் | ... | 400 |
| 26. | நிகும்பிலை யாகப் படலம் | ... | 495 |
| 27. | இந்திரசித்து வதைப் படலம் | ... | 664 |
| 28. | இராவணன் சோகப் படலம் | ... | 737 |
| 29. | படைக் காட்சிப் படலம் | ... | 793 |
| 30. | மூலபல வதைப் படலம் | ... | 844 |
| 31. | வேலேற்ற படலம் | ... | 1070 |
| 32. | வாநரர் களங்காண் படலம் | ... | 1117 |
| 33. | இராவணன் களங்காண் படலம் | ... | 1149 |
| | முதற்குறிப்பகராதி | ... | 1175 |

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# சு. யுத்தகாண்டம்

## மூன்றும் பகுதி

---

## 21. பிரமாத்திரப் படலம்

இந்திரசித்து பிரமாத்திரத்தை விடுத்து இலக்குவனையும் வாநரர்களையும் உயிரொடுங்கச் செய்த படலம் என்று விரியும்.

**மகராட்சன் முதலியோர் மாண்டதைத் தூதர் உரைக்க, இராவணன் மேகநாதனை யழைத்துவரச் சொல்லுதல்**

2377. கரன்மகன் பட்ட வாறுங் குருதியின் கண்ணன் காலிற்
சிரனெரிந் துக்க வாறுஞ் சிங்கன தீறுஞ் சேனைப்
பரமினி யுலகுக் காகா தென்பதும் பகரக் கேட்டான்
வரன்முறை துறந்தான் வல்லைத் தருதிரென் மகனை
[யென்ருன்.

கரன் மகன் பட்ட ஆறும் - கரனுடைய புதல்வனை மகரக்கண்ணன் மடிந்த வகையினையும், குருதியின் கண்ணன - இரத்தா

கடின், காலில் - (குரங்கின்) காலினால், சிரம் நெரிந்து உக்க ஆறும் - தலை நுறுங்கி உயிர் நீங்கிய விதத்தையும், சிங்கனது ஈறும் - சிங்கன் சாவினையும், சேனைபரம் - சேனைப்பாரம், இனி உலகுக்கு ஆகாது என்பதும் - இனி உலகில் இல்லாமல் ஒழிந்தது என்பதையும், பகர கேட்டான் - (தூதர் உரைக்கக் கேட்டவனாய்), வரன்முறை துறந்தான் - நீதிமுறை நிகழ்ச்சியினின்றும் விலகினவனாகிய இராவணன், 'என்மகனை வல்லை தருதிர்' - என்னுடைய மைந்தனை விரைவில் அழைத்து வாருங்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான்.

கரன் மகன்: மகரக் கண்ணன். பரம்: பாரம். இங்கே பெருந் தொகுதி என்க. வரன்முறை தவிர்ந்து ஆணவத்தால் வழியல்லா வழிமேற் சென்றது; சென்றவன் இராவணன்.

பா - ம். 1. காலும், காவற்.

2. நெரிந்திற்ற; சிங்கனுஞ் சீறும், சிங்கனிற் செறிந்த.

3. ஆகாவென்பது, ஆகாவெனிலும்.

4. தவிர்ந்தான். 1

சில பிரதிகளில் இந்தச் செய்யுளோடு மகரக்கண்ணன் வதைப் படலம் முடிகின்றது.

## தந்தை அழைக்க இந்திரசித்து விரைந்து வருதல்

2378. கூயின னுந்தை யென்றார் குன்றெனக் குவிந்த தோளான்
போயின நிருத ரியாரும் பொன்றினர் போலு மென்றான்
ஏயின பின்னை மீள்வார் நீயலா தியாவ ரென்னு
மேயது சொன்னார் தூதர் தாதைபால் விரைவின்
[வந்தான்.

'உந்தை கூயினன் - உமது தந்தையார் (உம்மை அழைத்தனர்', என்றார் - என்று (தூதர் தெரிவித்தார்); குன்று என குவிந்த தோளான் - மலை போன்று திரண்ட தோளையுடையவனான இந்திரசித்து, 'போயின நிருதர் யாரும் - (போர்க்குச்) சென்ற அரக்கர் அனைவரும், பொன்றினர் போலும் - இறந்தனர் போல்

காண்கின்றதே', என்றான் - என்று கேட்டான்; 'ஏயின பின்னை - (போருக்குச் செல்லுமாறு) ஏவினபின், '(அப்போரிற்குச் செல்பவரில்), மீள்வார்-மீள வல்லவர், நீ அலாது யாவர்-நீ அல்லது எவர் உளர்?' என்னா - என்று கூறி, மேயது தூதர் சொன்னார் - விளைந்ததைத் தூதுவர் மொழிந்தார்; தாதைபால் விரைவின் வந்தான் - தன் தந்தையிடம் மேகநாதன் விரைந்து வந்தான்.

உந்தை : மரூஉச் சொல். போலும் : ஒப்பில் போலி. நீயலாதி: குற்றியலிகரம். 'யகரம் வரக்குறளு திரிந்தது'. மேவியது என்பது மேயது எனத் திரிந்தது.

பி - ம். 1. குவவு; தோளார்.
2. போந்திலர் போலும்.
3. மீள்வானீயலதியாவதில்லை.
4. தூதர் கேட்டான். 2

## இந்திரசித்து இராவணனைத் தேற்றிப் போருக் கேகுதல்

2379. வணங்கிநீ யைய நொய்தின் மாண்டனர் மக்க ளென்ன
உணங்கலை யின்று காண்டி யுலப்பறு குரங்கை நீக்கிப்
பிணங்களின் குப்பை மற்றை நரருயிர் பிரிந்த யாக்கை
கணங்குழைச் சீதை தானு மமரருங் காண்ப ரென்றான்.

(வந்த இந்திரசித்து), வணங்கி-தந்தையைப் பணிந்து, 'ஐய-ஐயனே! மக்கள் நொய்தின் மாண்டனர் - மக்கள் எளிதில் இறந்து பட்டனர், என்ன - என்று, உணங்கலை - மனவாட்டம் அடைய வேண்டாம்; உலப்புஅறு குரங்கை - எண்ணிக்கையற்ற குரங்குகளை, நீக்கி - (உயிர்) நீக்குவதால், பிணங்களின் குப்பை - (போர்க்களத்து வீழ்ந்து கிடக்கும்) பிணக்குவியலையும், மற்றை - மற்ற, உயிர் பிரிந்த நரர் யாக்கை -'உயிர் நீங்கப்பெற்ற இராம இலக்குவரான அந்த மனிதர்களின் உடலையும், கணம் குழை சீதை தானும்- அமரரும் - திரண்ட (பொன்னால் செய்த) காதணியையுடைய சீதையும், தேவரும், காண்பர் - கண்ணுறுவார்கள், (இவ்வண்ணம் நிகழ்வதை), இன்று காண்டி - இன்று நீயே காண்பாய்', என்றான் - என்று பகர்ந்தான்.

உணங்கல் : மனமும் உடலும் வாடுதல். 'மனமும் வாயும் உணங்கினான்' (யுத்த. 1372); 'உணங்கலின் உலகெலாம்' (சுந்தர. 140); 'நலனற வுணங்கிய நங்கை' (சுந்தர. 332). உலப்பு : 'உலப்பில் யாக்கையை' (யுத்த. மீட்சிப். 259). 'உலப்பிலா வானந்த மாயதேனினை' (திருவாச. பிடித்த. 9); நீக்குதல் : உயிர் பிரியச் செய்தல்; குப்பை : குவியல்; 'கூர்ங்கணைக் குப்பை' (யுத்த. இராவணன் வதை. 7); யாக்கை : கைவிகுதிபெற்ற தொழிற் பெயர்; உடலின் பெயர் : எழுவகைத் தாதுக்களால் சேர்த்துக் கட்டப்படுவது; 'யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்' (நாலடி. 28); 'மக்களி யாக்கை யிதுவென வுணர்ந்து' (மணி.).

பி - ம். 1. வணங்கினன்; மாண்டளமாக்கள், மாண்டனரரக்கர்.

2. உலப்புறு; தூங்கினேங்கல்.

3. ஆருயிர்.

4. சூழற்; காறும்; அன்றே. 3

2380. வலங்கொண்டு வணங்கி வான்செ
லாயிர மடங்கல் பூண்ட
பொலங்கொடி நெடுந்தே ரேறிப்
போர்ப்பணை முழங்கப் போனான்
அலங்கல்வா ளரக்கர் தானை
யறுபது வெள்ள மியானைக்
குலங்களுந் தேரு மாவுங்
குழாங்கொளக் குழீஇய வன்றே.

வலம் கொண்டு வணங்கி - (தன் தந்தையைப்) பிரதட்சிணம் செய்து வணங்கிவிட்டு, வான் செல் ஆயிரம் மடங்கல் பூண்ட - விண்ணிலே செல்லவல்லதும் ஆயிரம் சிங்கம் பூண்டதும், பொலம் கொடி - அழகிய கொடியுடன் கூடியதுமான, நெடு தேர் ஏறி - உயர்ந்த தேரின்மீது ஏறிக்கொண்டு, போர் பணை முழங்க - போர்க்குரிய இசைக்கருவிகள் ஒலிப்ப, போனான் - (இந்திரசித்துச்) சென்றான்; அலங்கல் வாள் - வெற்றிமாலை தரித்த வாட்படை யேந்திய, அரக்கர் தானை - இராக்கதச் சேனை, அறுபது வெள்ளம் - அறுபது வெள்ளமும், யானை குலங்களும் - யானைத் தொகுதி

களும், தேரும் மாவும் குழாம்கொள குழீஇய - தேர்களும் குதிரை களும் கூட்டமாகத் திரண்டு சென்றன. அன்று, ஏ - அசை.

வலங் கொண்டு: 'அன்னத் தொழுதியின் மென்மெலவலங் கொண்டு'; 'திருக்கிளர் மாடம் சேர்ந்து வலங்கொண்டு' (பெருங். 2 : 3 ; 59 ; 3 ; 6 99). 'வலங்கொள்வாரவர் வல்வினை தீர்க்கு மருந்து' (தேவா. 344 ; 9). இச்சொல் 'வலம் வருதல்' எனவும் வழங்கும்' வலம்வந்தமடவார்கள் நடமாட' (தேவா. 278 ; 1); மடங்கல்: பிடரி மயிர் மடங்கப் பெற்றிருப்பது; சிங்கம்; யாவும் தன்னிடம் மடங்கிவிழச் செய்யும் ஆற்றலுடையது எனினுமாம். 'மடங்கல் உண்மை மாயமோ வன்றே' (புறநா. 363 ; 9). அல்: பெயர்விகுதி. போர்ப்பணை: வீரமுரசு. மும்முரசுகளில் ஒன்று; மன்னர்க்குரிய வேறிரு முரசுகள். மணமுரசும் கொடைமுரசுமாம்; சிலர் நியாய முரசு ஒன்று என்பர். குழாங்கொளல் ஒன்ருகத் திரளுதல்: 'குழாக்களிற்றரசர்' (தொல். புறத். 17).

பி - ம். 1. பூண்டான்.

2. கொடியாடுந்; பொருபணை; பொலியப்.

3. வெள்ள யானை.

4. குழீஇயது. 4

2381. கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் பேரி கொட்டும்
பம்பைதார் முரசஞ் சங்கம் பாண்டில்போர்ப் பணவந் தூரி
கம்பலி யுறுமை தக்கை கரடிகை துடிவேய் கண்டை
யம்பலி கனுவை யூமை சகடையோ டார்த்த வன்றே.

கும்பிகை திமிலை செண்டை குறடு - கும்பிகை திமிலை செண்டை குறடு, மாபேரி - பெரிய பேரிகை, கொட்டும் பம்பை - கொட்டுகின்ற பம்பை, தார் முரசம் - மாலையணிந்த முரசம், சங்கம் - சங்கம்; பாண்டில் - பாண்டில், போர் பணவம் - போர்க் குரிய பணவம், தூரி - தூரியம், கம்பலி - கம்பலி, உறுமை தக்கை கரடிகை - உறுமை தக்கை கரடிகை, துடிவேய் - உடுக்கை, புள்ளாங்குழல், கண்டை அம்பலி கனுவை ஊமை சகடை - கண்டை அம்பலி கனுவை ஊமை, சகடையோடு - சகடை யென்பதனோடு; ஆர்த்த - முழங்கின. அன்று, ஏ : அசை.

இங்கே குறிக்கப்பெற்ற இசைக் கருவிகள் எல்லாம் போர்க்குரியன. இவற்றில் தோற் கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி என்ற நான்கும் காணலாம். கும்பிகை : குறடு, பேரி, பம்பை, முரசம், துடி, சகடை ; இவைகள் தோற் கருவிகள். சங்கம், தூரி, வேய் ; துளைக் கருவிகள் : பாண்டில் ; கஞ்சக் கருவி. பேரி ; இது பேரிகை எனவும் வழங்கும் ; 'காரிகை கற்றுக் கவி பாடுவதில், பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே என்ப ; வேய் : ஆகுபெயர் : புள்ளாங் குழல். தார் முரசம் : முரசங்கட்கு மாலை சூட்டுவதும் பலியிடுவதும் பண்டைத் தமிழர் வழக்கங்கள். 'இடியென முழங்கின முரசம்' (புறநா. 16) ; 'முரசு முழங்குதானை மூவருள்ளும்' (புறநா. 35). 'விசித்து வினைமாண்ட மயிர்க்கண் முரசம்' (புறநா. 63).

பா - ம். 1. பேரிகோடி, பேரிகொட்டி.
2. பம்பமர், பம்பைமா ; கஞ்சம்.
3. துடிகை கண்டை, துடிசேண்டை.
4. அம்புலி கடுமை, அம்புலி தடுமை. 5

2382. யானைமேற் பறைசா லீட்டத் தறைமணி யார்த்த தாழி
மானமாப் புரவிப் பொற்றார் மாக்கொடி கொண்ட [பண்ணைச்
சேனையோர் கழலுந் தாருஞ் சேடகப் புளகச் சில்லி
வானகத் தோடு மாழி யலையென வளர்ந்த வன்றே.

யானைமேல் பறைசால் ஈட்டத்து - யானையின் மீது வைக்கப்பட்ட பறைகளின் மிக்க கூட்டத்துடன் (அவைகளின் இருபுறத்திலும்), அறை மணி - மாறி மாறி யொலிக்கின்ற மணி, ஆழி ஆர்த்தது - கடல் போல் ஒலித்தது ; மானம்மா புரவி - தருக்குடன் கூடிய சிறந்த குதிரைகள் பூண்ட, பொன் தார் - பொன்னாலாகிய கிங்கிணிமாலையும், மா கொடி கொண்ட பண்ணை - பெரிய கொடிகளுடன் சென்ற பண்ணையான, சேனையோர் கழலும் - சேனையில் உள்ளாரின் வீரக்கழல் ஒலியும், தாரும் - பொன்னரி மாலையின் ஒலியும், சேடகம் புளகம் சில்லி - பெருமைசான்ற கண்ணடி பதிக்கப்பெற்ற, தேர்ச்சக்கரங்களின் கடகட என்ற ஒலியும், வானகத்

தோடு - விண்ணெல்லை வரையில், ஆழி அலை என வளர்ந்த - கடல் அலையின் ஒலிபோல உயர்ந்தன. அன்று, ஏ - ஈற்றசை.

இங்குக் கூறப்பட்ட பறை வீரமுரசம். மானம்; செருக்கு. நால்வகைப் படைகளும் செய்த பேரொலி கடல் ஒலி போன்ற தெனப்பட்டது. யானையுடைய படை காண்டல் முன் இனிதே என்றபடி யானையை முதலிற் கூறினர். மரக்கொடி கொண்ட பண்ணைச் சேனையோர் என்றது காலாட்படையினை, தேரினைப் பிற்கூறியது ஏனைய படைகள் போன்று எளிதில் இயங்காமையின் என்க. ரதகஜ துரகம் பதாதி என்பதே கூறும் முறை யேனும் போரணி வகுப்பு நோக்கி இங்ஙனம் கூறப்பட்டது என்க. வானகத்தோடு என்றது விண்ணவர் செய்த ஒலியுடன் என்லும் ஆம்.

பி - ம். 1. கிழ்ப்பட்ட தெரிமணி யிரதத்தாளி, கிழ்ப்பட்ட தெரிமணி யயிர்த்த தாழி, கிழட்ட தெறிமணி யிரைத்ததாழி, கிழ்ப்படத் தெரிமணியிர்த்த தாழி.

2. மானமார்; பொற்றேர்; மாக்கடற் கண்டைமானச், ஈலேமானச், கண்டைவாவும், கழலுஞ் சேண்டரப் புரளும் சில்லி, களிப்பதாவிச் சென்ற தெருருமின் சில்லி;

4. வானகத் தோடு மாழி மலையென வளர்ந்ததன்றே, வானகத்தோடு வானை யரியென வலைந்த நன்றே, ஏனைய பிறவு மெல்லா மெழு மொலி யெழுந்த நன்றே, ஆகைந்தோடு வானை யரியென வளைந்த வன்றே.

6

2383. சங்கொலி வயிரி னோசை யாகுளி தழங்கு காளம்
பொங்கொலி வரிகண் பீலிப்பேரொலி வேயின் பொம்மல்
சிங்கத்தின் முழக்கம் வாசிச் சிரிப்புத்தே ரிடிப்புத்
[திண்கைம்
மங்குலி னதிர்வு வான மழையொடு மலைந்த வன்றே.

சங்கு ஒலி - சங்கின் ஒலியும், வயிரின் ஓசை - ஊது கொம்பின் ஒலியும், ஆகுளி - ஆகுளி என்னும் பறையின் ஒலியும், தழங்கு காளம் பொங்கு ஒலி - முழங்குகின்ற காளத்தினின்று மிகுதியாக வெளிப்படும் ஒலியும், வரிகண் பீலி பேரொலி - மயிர்க்கண் வரிந்த பீலியென்ற துளைக்கருவியின் கவர்கின்ற ஒலியும், வேயின் பொம்மல் - புள்ளாங்குழலின் ஒலியும், சிங்கத்தின் முழக்கம் - சிங்கங்களின்

கர்ஜனையும், வாசி சிரிப்பு - குதிரைகளின் கனைத்தலாகிய சிரிப்பினை ஒத்த ஒலியும், தேர் இடிப்பு - தேரின் முழக்கமும், திண்கை- உறுதி யான துதிக்கைகளைக் கொண்ட, மங்குலின் அதிர்வு - மேகம் போன்ற யானைகளின பிளிற்றோசையும், வானமழையொடு மலைந்த- விண்ணின்று வீழும் மழையொடும், மலைந்த - மாறுபட்டன. அன்று, ஏ - ஈற்றசை.

போரில் சங்க நாதம் செய்வது வழக்கம். வயிர் : கொம்பு என்னும் துளைக்கருவி, ஆகுளி ; ஒருவகைச் சிறுபறை, 'நுண்ணீ ராகுளி யிரட்ட' (மதுரைக். 606) ; 'வீரலூன்று படுகண் ஆகுளி கடுப்ப' (மலைபடு. 140), இது நுட்பமான மெல்லிய ஓசையுடையது. தழங்குதல் - முழங்குதல், 'தழங்கு குரல் தோன்ற' (மதுரைக் காஞ்சி. 669), காளம் : எக்காளம் என்ற துளைக்கருவி ; இது தெய்வம், அரசர் இவர்களின் விருதுகளில் ஒன்று ; 'காளமேன் ராஜாங்க மேன்' (தனிப்பா.). பீலி - மயிற்பீலிபோன்ற கண்ணமைத்துச் செய்யப்பட்ட ஓர் துளைக்கருவி ; இதனைப் பீலித்தழை யென்றும் கூறுப ; (யுத்த. பிரமாத். 145). வேய் - மூங்கிலிலிருந்து செய்யப்படும் புள்ளாங்குழல் ; இதனை மும்மடியாகு பெயர் என்ப. இவ்வாறு இசைக்கருவி முழக்கத்துடன் தேரிற் பூட்டப் பட்ட சிங்கம், குதிரை முதலியவற்றின் முழக்கமும், யானையின் முழக்கமும் மாறுபட்டெழுந்தன எனப்பட்டது, திண்கை மங்குல் என்பது அன்மொழித்தொகையாக யானையைக் குறித்தது ; மங்குல் யானைக்குப் பெருவடிவாலும், கரிய நிறத்தாலும் மழை, மதம் இவற்றை முறையே பொழிவதாலும் உவமை என்க.

பி - ம். 1. வரிதாட்பீலி ; பேரொலி.

4. குரல்போல் வானின், அதிர்ப்பும் வான ; மலிந்த தன்றே, மலைந்த தன்றே. 7

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

பண்டரு கிளவிச் செவ்விப் பல்லியத் தொழுகு தீந்தேன்
கண்டினிற் குயின்ற வீணை நரம்பொடு கமழுந் தேறல்
வண்டினிற் பொலியும் நல்யாழ் வழியுறு நறவம் வானத்
தண்டர்தம் செவியின் உண்ணும் அமிழ்தென லாய வன்றே

2384. வில்லொலி வயவ ரார்க்கும் விளியொலி
தெழிப்பி னோங்கும்
ஒல்லொலி வீரர் பேசு முரையொலி
யுரப்பிற் றோன்றுஞ்
செல்லொலி திரடோள் கொட்டுஞ் சேணொலி
நிலத்திற் செல்லுங்
கல்லொலி துரப்ப மற்றைக் கடலொலி
கரந்த தன்றே.

வில் ஒலி - வில்லினொலியும், வயவர் ஆர்க்கும் - வீரர் ஆரவாரிக்கும் குரல் ஒலியும், விளி ஒலி தெழிப்பின் ஓங்கும் ஓல் ஒலி - உரத்துக் கூப்பிடுவதால் ஓங்கி யெழுகின்ற ஓல் என்ற ஒலியும், வீரர் பேசும் உரை ஒலி - வீரர்களின் பேச்சு ஒலியும், உரப்பில் தோன்றும் செல் ஒலி - அதட்டுவதால் தோன்றும் இடி போன்ற ஓசையும், திரள்தோள் கொட்டும் சேண் ஒலி - திரண்ட தோளைக் கொட்டும் மிக்க ஒலியும்; நிலத்தில் செல்லும் கல் ஒலி - பூமியில் நடந்து செல்வதாலான கல்லென்ற ஓசையும், துரப்ப - ஓட்டிவிடுவதனால், மற்றை கடல் ஒலி கரந்தது - இவற்றினும் பிறிதான கடல் ஒலி அடங்கிற்று என்க. அன்று, ஏ - அசை.

வில் ஒலி முதலியவற்றால் கடல் ஒலி அடங்கியது என்க. விளி - கூவியழைத்தல். ஒல்லொலி: 'ஒல்லெனத் திரை பிறழிய விரும்பௌவத்து' (பெரும்பாண். 178). தெழித்தல் - உரக்க ஒலித்தல்; 'திருந்துகோல் தெள்விளி தெழிப்ப' (குறிஞ்சிப். 167). உரப்புதல்: 'தெழித்தனள் உரப்பினள்' (அயோத்தி. மந்தரை. 53). செல்: 'இடிசெல்லோ டெழுமுகில்' (யுத்த. மூலபல. 199). கல்: ஒலிக்குறிப்பு; 'கல்லென்ற ஒலியிற் சென்றார்' (ஆரணிய. 627).

பி - ம். 2. உரப்பித்; சொல்லுஞ்.
3. சொல்லொலி; தாடோள்; சேணொலி யோடும் கூடி.
4. பரப்ப மற்றைக், பரந்த; கடந்தது. 8

2385. நாற்கட லனைய தானை நடந்திடக் கிடந்த பாரின்
மேற்கடுத் தெழுந்த தூளி விசும்பின்மேற் றொடர்ந்து வீச
மாற்கடற் சேனை காணும் வானவர் மகளிர் மானப்
பாற்கட லனைய வாட்கண் பனிக்கடல் படுத்த தன்றே.

நால் கடல் அனைய தானை - நான்கு கடல்களை ஒத்த (நால் வகைப் படையும்), நடந்திட - சென்றதால், கிடந்த பாரின் - பரந்து கிடந்த பூமியிலிருந்து, மேல் - மேலே, கடுத்து எழுந்த - வேகத்துடன் கிளம்பிய, தூளி - புழுதி, விசும்பின் மேல் தொடர்ந்து வீச - ஆகாயத்தின் மீது தொடர்ந்து வீசுவதால், மால் கடல் சேனை காணும் - பெரிய ஆழி போன்ற சேனையைக் கண்ணுறுகின்ற வானவர் மகளிர் மான - தேவமாதர்களின் பெருமை மிக்க. பால் கடல் அனைய வாள்கண்-பாற்கடலை நிகர்த்த கடலை ஒப்பான கண், பனிகடல் படுத்தது - குளிர்ந்த கடலை உண்டு பண்ணியது, அன்று : ஏ. அசை.

படையின் மிகுதியாலும் அவற்றின் செலவாலும் எழுந்த தூளி எங்கும் பரந்தது என்ற கருத்தை விளக்க, தூளி தம் விழிகளில் படுதலால் தேவ கன்னியரும் கண்களில் கண்ணீருடன் தோன்றினர் எனப்பட்டது. தொடர் புயர்வு நவிற்சியணி. படை நான்கு வகையே யாதலின் ஏழுகடலில் நாற்கடலே கொள்ளப் பட்டது. கிடந்தபார் : இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளந்தது கடுத்தல் : விரைதல் ; மால் கடல் ; கரிய கடல். மானம் ; பெருமை, வாள்கண் ; ஒளி பொருந்திய கண்ணுமாம். கண்ணுக்கு கடலை உவமையாக்குதல் மரபு. 'கடலினும் பெரிய கண்கள்' (ஆரணிய. 623) ; கடலாழத்தும் இரத்தினம் முதலிய பல பொருள்கள் உண்மை போன்று, கண்ணகத்தும் பல பொருட் குறிப்புக்கள் உண்டு என்க.. 'கண்ணெனும் தூதினால் துணி பொருள் விளக்கி' (சீவக. 1485) என்றது காண்க. பாற்கடல் பனிக்கடலைப் படுத்தது என்பதில் ஓர் நயம் காணலாம். '(ஒப்பு) : கதிகொண்ட சேனை நடவெழுதுகள் ககனம் சுலாவி யனிலகதியுற, முதிரண்ட சூரகிரண முகில்பஞ்ச பூதவடிவுபெற, வியன் நதிவண்டலாகவ மரருறைதரு நகரம் பொன்வீதி புழுதியெழ' (வில்லிபா. 16-ஆம் போர். 73). 'படுத்தல் ; தோன்றுதல் என்பது 'எற்படு காலை' என்ற இடத்தும் காண்க. யுத்த. 2344-ம் காண்க.

பி - ம். 1. நயத்தலை யெய்தப்.

2. மேற்கடந்து ; கொழுந்து.

3. சேனையோடும்,

2386. ஆயிர கோடித் திண்டே
ரமரர்கோ னகர மென்ன
மேயவர் சுற்றத் தானோர்
கொற்றப்பொற் றேரின் மேலான்
தூயபொற் சுடர்க ளெல்லாஞ்
சுற்றுற நடுவட் டோன்றும்
நாயகப் பரிதி போன்றுன்
றேவரை நடுக்கங் கண்டான்.

அமரர் கோன் நகரம் என்ன - தேவர்கோனுகிய இந்திரனுடைய மாளிகையிற் உள்ளவர் என்னுமாறு, ஆயிரம் கோடி திண் தேர் மேயவர் - ஆயிர கோடி வலிய தேரின்மீது பொருந்தியவர், சுற்ற - சூழ்ந்து நிற்க, தேவரை நடுக்கம் கண்டான் - தேவரை நடுங்கச் செய்தவனுன இந்திரசித்து, தான் ஓர் கொற்றம் பொன் தேரின் மேலான்- தான் ஓர் வெற்றி பொருந்திய பொன் தேரின்மீது ஏறியவனுய், தூய பொன் சுடர்கள் எல்லாம் - தூய்மையான அழகிய ஒளிர்கின்ற கிரகங்கள் அனைத்தும், சுற்றுற - சூழ்ந்து நிற்க, நடுவண் தோன்றும்- அவற்றின் நடுவிற் காணப்படும், நாயகம்பரிதி போன்றுன் - தலைமைபெற்ற சூரியனுக்கு ஒப்பாக விளங்கினுன்.

அமரர்கோன் நகரம் - அமராவதி, இந்திரசித்தின் தேர் நடுவிலும், ஏனைய அரக்கர் வீரர்களின் தேர்கள் அதனைச் சுற்றியும் நின்றமை, சூரியனைச் சுற்றிக் கிரகங்கள் நின்றன போலும் என்பது கருத்து. (ஒப்பு): 'நாண் முதற்றிங்க டன்னைத் தழுவிய வனைய நண்பான' (யுத்த. 2345) மணி. 15 : 75 - 76. நாயகம் : தலைமை 'நாயகப் பெண்பிள்ளாய்' (திருப்பாவை.) ; 'நானேவி தற்கு நாயகமே' (திருவாச. குழைத்த. 7) ; 'துளையிடாத நாயகமுத்து என்றுமாம்' (சீவக. 2184 : உரை) ; 'நாயகக் கோலங் கொள்ளச் சென்றனர்' (யுத்த. மீட்சி : 41).

பி - ம். 2. மேயின.
3. தூயவற் ; தூயவச் ; சுற்றிட்.
4. ஏவரை ; கொண்டான். 10

## இந்திரசித்து அன்றில் வடிவாகத் தானையை வகுந்து நாண் ஒலிஎழுப்பி முழங்குதல்

2387. சென்றுவெங் களத்தை யெய்திச்
சிறையொடு துண்டஞ் செங்கண்
ஒன்றிய கழுத்து மேனி
காலுகிர் வாலோ டொப்பப்
பின்றலில் வெள்ளத் தானை
முறைபடப் பரப்பிப் பேழ்வாய்
அன்றிலி னுருவ தாய
வணிவகுத் தமைந்து நின்றான்.

(இந்திரசித்து), சென்று - போய், வெம் களத்தை எய்தி - கடுமையான போர்க்களத்தை அடைந்து, சிறையொடு துண்டம் செம்கண் ஒன்றிய கழுத்தும் - சிறகும் மூக்கும் சிவந்த கண்ணும் பொருந்திய கழுத்தும், மேனிகால் உகிர் வாலோடு ஒப்ப - உடலும் காலும் உகிரும் வாலும் என்ற இவை ஏற்றபடி அமைய; பின்றல் இல் வெள்ளம் தானை - பின் வாங்குதலில்லாத மேற்கோளையுடைய வெள்ளக் கணக்கான படையைக் கொண்டதான சேனையை, முறைபட பரப்பி - ஒழுங்காகப் பரவச் செய்து, பேழ்வாய் - பிளவுபட்ட வாயினையுடைய, அன்றிலின் உருவது ஆய - அன்றிலின் வடிவினைக் கொண்டதான, அணிவகுத்து அமைந்து நின்றான் - அணியை வகுத்து(ப் போருக்கு) சித்தனாக இருந்தான்.

இங்கு அன்றில் வடிவில் வியூகம் அமைக்கப்பட்டமை குறிக்கப்பட்டது. துண்டம் - மூக்கு; 'துண்டப் படையாற் சிலை துண்ட துண்டங்கள் கண்டான்' 'துண்ட வாளினிற் சுடர்க்கொடி துணிந்த தென்றுணரா' (ஆரணிய. 913, 972); 'வீரத்துண்டத்தன்' (யுத்த. 861); துண்டம் வடசொல். பின்னுதல்: 'பின்றுதவர் பின்றி யிரிந்து பிரிந்தார்' தானை - தாணு என்ற பாரசீகச் சொல்லின் திரிபு என்ப. அன்றிலின் உருவ அணி, இதனைக் கிரௌஞ்சவியூகம் என்ப. அன்றில்: 'ஒன்றில் காலை யன்றில் போல' (நற். 124) என்றபடி என்றும் இணைபிரியாது வாழும் புள்வகை (யுத்த. 1942).

பி - ம். 1. சென்ற; எய்த.

2. முற்பட.

4. உருவமாக.

2388. புரந்தரன் செருவிற் றந்து போயது புணரி யேழும்
உரந்தவிர்த் தூழி பேருங் காலத்து லொலிக்கு மோதை
கரந்தது வயிற்றுக் கால வலம்புரி கையின் வாங்கிச்
சிரம் பொதிர்ந் தமர ரஞ்ச வூதினன் றிசையுஞ் சிந்த.

புரந்தரன் - இந்திரன், செருவில் தந்து போயது - போர்க்களத்தில் புறந்தந்து சென்றதும், ஏழு புணரியும் - ஏழு கடல்களும், உரம் தவிர்த்து - (உலகில் உள்ள பொருள்களனைத்தையும் அவற்றின்) வலிகுன்றச் செய்து, ஊழி பேரும் காலத்துள் - கற்ப காலம் மாறும் காலத்தில், ஒலிக்கும் ஓதை - ஒலிக்கின்ற ஓசையை, வயிற்று கரந்தது - (தன்) வயிற்றினுள்ளே ஒளித்துக் கொண்டிருப்பதுமான, காலன் வலம்புரிகையின் வாங்கி - யமன் போல, அச்சம் விளைக்கத்தக்க வலம்புரிச் சங்கத்தை, கையின் வாங்கி - தன் கையில் வாங்கிக் கொண்டு, சிரம் பொதிர்ந்து அமரர் அஞ்ச - தேவர்களும் தலைநடுங்கி அஞ்சுமாறு; திசையும் சிந்த ஊதினன் - திசைகளும் நிலை கெடுமாறு, ஊதினன் - ஊதி ஒலி எழுப்பினன்.

தந்து போதல் - புறந்தந்து செல்லுதல்; தன்னிடமுள்ள படைக்கலங்களையும் பிற பொருள்களையும் களத்தில் விட்டுச் செல்லுதல்; 'வீரமுங்களத்தே போட்டு' என்றது காண்க. புணரி ஏழும் - உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது, ஊழி பேருதல் - கற்ப காலம் மாறுதல்; 'ஊழி பேரினு முய்குநர் உய்வரே' போர்ச் சங்காதலின் கால வலம்புரி எனப்பட்டது. வலம்புரி - வலப்புறமாக முகம் வளைந்த சங்கு. மிகவும் விலை உயர்ந்தது என்ப. 'வலம்புரி யுமிழ்ந்த முத்தம்' (யுத்த. 640) 'வாய் சொரி யிப்பியோடும், வலம்புரி சலஞ்சலம் வளை இய தொத்தனள்' (சீவக. 184).

பி-ம். 2. உரத்தையுற்று; காலத்தின்.
3. வயிற்றுள்.
4. பொதிந்து; நீந்த.

2389. சங்கத்தின் முழக்கங் கேட்ட கவிப்பெருந் தானை யானை
சிங்கத்தின் முழக்கங் கேட்ட தொத்தது விரிந்து சிந்தி
எங்குற்ற வென்னு வண்ண மிரிந்ததீ தன்றி யேழை
பங்கத்தன் மலைவி லென்னச் சிலையொலி பரப்பி
[யார்த்தான்.

சங்கத்தின் முழக்கம் கேட்ட கவிபெரு தானை - சங்கினுடைய பேரொலியைக் கேட்ட குரங்கின் பெருவாரியான சேனை, சிங்கத்தின் முழக்கம் கேட்டது யானை ஒத்தது - சிங்கத்தின் கர்ச்சனையைச் செவியேற்றதான யானையை ஒத்ததாய்; விரிந்து சிந்தி - எப்புறமும் பரந்து சிதறி, எங்குற்ற என்னு வண்ணம் - எங்கே சென்றது என்பது உணர முடியாதபடி, இரிந்தது - நிலைகுலைந்து ஓடிற்று; ஈது அன்றி - இதோடு அல்லாமல், ஏழை பங்கத்தன் - உமையாளைத் தன் இடது பாகத்து ஏற்ற சிவபெருமானுடைய, மலைவில் மேருமலையாகிய வில் என்னும்படியாக(த் தன்), சிலையொலி என்ன பரப்பி ஆர்த்தான் - வில்லினுடைய நாண் ஒலியை எழுப்பிப் பரவச்செய்து ஆரவாரித்தான் (இந்திரசித்து).

உவமையணி; (ஒப்பு. 2221); எங்குற்ற 'சண்பை ஆண்டகையாரும் அப்பர், எங்குற்றதென்று கேட்ப' (பெரியபு. திருஞான. 595); 'ஏழை பங்கத்தன் - உமையொரு பாகன்; பிருங்கி என்ற முனிவர் சிவபெருமானை மாத்திரம் வலம் வந்து, தேவியை வலம்வர ஒருப்படாத நிலையில், உமாதேவியார் இறைவன் மேனியோடொன்ற, அப்பொழுதும், ஓர் வண்டுருக்கொண்டு நடுவே துளைத்துச் சென்றார் என்று வரலாறு உண்டு. ஏழை என்பது அடக்கம் உள்ள மகளிரைக் குறிக்கும் ஒரு சொல். பொருளின்மை யுடையாரை அன்று, 'இதழரக்க ரேழையர்' (சுந்தர. 1050); 'ஏழை பங்கத்தன் - தீனர்கள் பக்கம் தயையுள்ளவன் எனினுமாம். மலைவில் - மலையாகிய வில், இங்கு திரிபுரம் வெல்ல எழுந்தபோது கைக்கொண்ட வில். இம் மேருவினையே 'இமயம்' என்றும் பகர்வர், 'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்' (கலித். 38). மேருவை வில்லாகக் கொண்டது; (சுந்தர. 272, 350, 451,

982) 'நாகத் தனியொரு வில்லி' (ஆரணிய. 4); ஆரணிய. 745-ம் காண்க. 'ஏழை பங்கத்தன்' 'நாரிபாகத்தன்' (ஆரணிய. 851). 'பாகத்தில் ஒருவன் வைத்தான்' (ஆரணிய. 629). 'பஞ்சின் மெல்லடியாள் பங்கன்' மலைவில் - காலம் கரந்த பெயரெச்சமாகக் கோடலும் ஆம். சிலை ஒலி - நாண் ஏற்றும்கால் எழும் குணத்தொனி.

பி - ம். 1. வயப்பெருந் ; தள்ளிங்.
2. சிங்கத்தின் நாதம் வந்து செவிப்புக விலங்கு.
3. எங்குந் (தம்முயிரினேடும், இரிந்தன திரிந்தவ, இரிந்த போலிரிந்த, இரிந்த போலாங்க.
4. மலைவிலன்ன. 13

## வாநரத்தின் நிலைமை

2390. கீண்டன செவிக ணெஞ்சங் கிழிந்தன கிளர்ந்து செல்லா
மீண்டன கால்கள் கையின் விழுந்தன மரனும் வெற்பும்
பூண்டன நடுக்கம் வாய்கள் புலர்ந்தன மயிரும் பொங்க
மாண்டன மன்றே வென்ற வாநர மெவையு மாதோ.

வாநரம் எவையும் - எல்லாக் குரங்குகளும், செவிகள் கீண்டன - காதுகள் கிழியப் பெற்றன ; நெஞ்சம் கிழிந்தன - மனம் பிளக்கப் பெற்றன ; கால்கள் - கால்களோடு, கிளர்ந்து செல்லா மீண்டன - மன எழுச்சியுடன் போக முடியாமல் திரும்பின ; கையின் மரனும் வெற்பும் விழுந்தன - அவர்கள் (பொருவதற்காகக்) கையில் எடுத்திருந்த மலையும் மரங்களும் கீழே நழுவி விழுந்தன ; நடுக்கம் பூண்டன - நடுக்கத்தை மேற்கொண்டன ; வாய்கள் புலர்ந்தன - வாய்கள் உலரப் பெற்றன ; 'மயிரும் பொங்க மாண்டனம் அன்றே - மயிரும் மிகுதியாகச் சிந்த, உயிர் நீங்கப் பெற்றோமல்லவோ' என்ற - என்று சொல்லின. மாது : ஓ ஈற்றசை.

கீண்டன - கிழிந்தன ; கீள் - பகுதி ; 'திசைகள் பத்தும் கீண்டில' (சுந்தர. 1277) ; செல்லா செல்லமாட்டாதனவாய் ; ஈறு

கெட்ட எதிர்மறை வினையெஞ்சுகிளவி. மரனும் வெற்பும் கையி னின்றும் விழுந்தன எனினுமாம். மூன்றுமடியிற் குறிக்கப் பெற்றவை அவலத்தின் மெய்ப்பாடுகள். மயிர் பொங்க மாளுதல் - உரோமம் வெகுவாக உதிர்தல்.

பி - ம். 3. பொங்கா.

4. என்றே. 14

## சுக்கிரீவன் முதலிய சிலரன்றி ஏனையோர் நிலை கெட்டோடியமை

2391. செங்கதிர்ச் செல்வன் சேயுஞ் சமீரணன் சிறுவன் றானும்
அங்கதப் பெயரி னானு மண்ணலு மிளைய கோவும்
வெங்கதிர் மௌலிச் செங்கண் வீடணன் முதலாம் வீரர்
இங்கிவர் நின்று ரல்ல திரிந்தது சேனை யெல்லாம்.

செம் கதிர் செல்வன் சேயும் - செந்நிற ஒளித் தொகுதிகளை யுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், சமீரணன் சிறுவன் தானும் - வாயுவின் குமாரனான அநுமானும், அங்கதன் பெயரினானும் - அங்கதன் என்ற பெயரையுடையவனும், அண்ணலும் - இராமபிரானும், இளையகோவும் - இலக்குவனும், வெம்கதிர் மௌலி செம்கண் வீடணன் முதலாம் வீரர் - வெம்மையான கிரணங்களை உமிழ்கின்ற மகுடம் தரித்த சிவந்த விழிகளையுடைய வீடணன், ஆதியான வீரர்களும் ஆகிய, இவர் - இவர்கள், இங்கு நின்றார் - இங்கே நின்றார்கள்; அல்லது சேனை எல்லாம் இரிந்தது - இவர் கள் அல்லாமல் ஏனைய படைகள் யாவும் நிலைகுலைந்து ஓடின.

சமீரணன் - காற்று. 'சமீரணன் மகனுரை தருவான்; (கிட்கிந்தா. 150); 'சமீரணன் அகன்ற பின்னர்' (பால. வேள்வி. 10) 'சமீரணன் தனையன் சொல்வான்' (சுந்தர. 1127); இயற்கை யாகவே அரக்கர்க்குச் சிவந்த கண்கள் ஆதலின் 'செங்கண்' எனப்பட்டது. மௌலி : இருமடியாகு பெயர்.

பி - ம். 1. தனையன்.

3. முதல, முதலர்.

4. குரகவினீட்டம்.

## வாநரச் சேனையிரிய, அரக்கர் சேனை போர்க்களத்துப் புகுதல்

2392. படைப்பெருந் தலைவர் நிற்கப்
பல்பெருந் தானை வேலை
உடைப்புறு புனலி னோட
வூழிநா ளுவரி யோதை
கிடைத்திட முழங்கி யார்த்துக்
கிளர்ந்தது நிருதர் சேனை
அடைத்தது திசைக ளெல்லா
மன்னவ ரகத்த ரானார்.

படை பெருதலைவர் நிற்க - படைக்குரிய பெருந் தலைவர் நின்று கொண்டிருக்கவும், பல்பெரு தானைவேலை - பலவாகிய பெரிய (குரங்குச்) சேனைக்கடல், உடைப்பு உறு - கரையை உடைத்துக்கொண்டு செல்கின்ற (பெருக்கு), புனலின் ஓட - நீர் போன்று விரையா நிற்க, நிருதர் சேனை - அரக்கர் படை, ஊழிநாள் உவரி - யுக முடிவில் கடலினின்று எழும், ஓதை கிடைத்திட - ஓசை தோன்றுமாறு, முழங்கி ஆர்த்து - முழங்கி ஆரவாரித்து, கிளர்ந்தது - மன எழுச்சி கொண்டதால், திசைகள் எல்லாம் அடைத்தது - திக்குகள் எல்லாவற்றையும் (வெறும் இடம் இல்லையாகுமாறு), அடைத்துக் கொண்டது ; அன்னவர் அகத்தர் ஆனார் - அந்த வாநர வீரரும் போர்க்களத் துறுபவர் ஆனார்.

பெரும் படைத் தலைவர் எனினுமாம். உடைப்புறு புனல் - இரிந்து வீற்றுவிற்றுக ஓடியதற்குப் பொருந்திய உவமை. உவரி - உவர்த்தல் காரணம் பற்றிக் கடலுக்குப் பெயர். இ - பெயர் விகுதி. 'கைத்தலத் துவரி நீரைக் கலக்கினான் பயந்த காளை' (கிட்கிந்தா. 367) ; 'உவரி வாயன்றிப் பாற்கடலுதவிய வமுதே' (அயோத்தி. சித்திரகூட. 5) ; கிடைத்தல் - அடைதல் ; 'திங்களெட்டாவதற் கிடைக்கும்' (கலு. 2).

பி - ம். 1. சேனைவெள்ளம்.
3. கிடைத்திடை ; பொங்கி ; கிளர்ந்தெழும், கிளைத்தெழும்.
4. அடைத்தன ; அகத்தரானார். 16

## அநுமன் தோளிலும் அங்கதன் தோளிலும் முறையே இராமபிரானும் இலக்குவனும் ஏறிநிற்க, வானவர் பூமழை பொழிதல்

2393. மாருதி யலங்கல் மாலை மணியணி வயிரத் தோண்மேல்
வீரனும் வாலி சேய்தன் விறல்கெழு சிகரத் தோண்மேல்
ஆரியற் கிளைய கோவு மேறின ரமரர் வாழ்த்தி
வேரியம் பூவின் மாரி சொரிந்தன ரிடைவிடாமை.

மாருதி - அநுமனுடைய, அலங்கல் மாலை - அசையும் இயல்புள்ள மாலையை, அணி - அணிந்த, மணி வயிரம் தோள்மேல் - அழகிய உறுதி வாய்ந்த தோளின்மீது, வீரனும் - இராமபிரானும், வாலி சேய்தன் - வாலியின் மகனான அங்கதனுடைய, விறல்கெழு - வலிமை பொருந்திய, சிகரம் தோள்மேல் - மலை முடியொத்த (வலிய) தோள்மீது, ஆரியற்கு இளைய கோவும் - இராமபிரான் இளவலான இலக்குவனும், ஏறினர் - ஏறினார்கள்; (அப்போது), அமரர் வாழ்த்தி - தேவர்கள் வாழ்த்தி, வேரி அம்பூவின் மாரி - தேனைக் கொண்ட அழகிய மலர்மழையை, இடைவிடாமை - இடையீடின்றி, சொரிந்தனர் - பெய்தார்கள்.

அலங்கல் - அசைவது பற்றி மாலைக்கு ஆகு பெயர். ஆரியன் - இராமபிரான். 'சூரியன்மர பிற்குமொர் தொல் மறு, ஆரியன் பிறந் தாக்கினை யாமரோ' (கிட்கிந்தா. 316) வேரி : கள்; நறு மணமுமாம். 'வேரியங்கமலை நோக்கும்' (கம்பரா. பாயிரம்) 'வேரி நறுஞ் சாந்தொழுகும் வேங்கடமே' (திருவே. மாலை); இடை விடாமை - இடைவிடாமல்.

பி - ம். 3. மேவநின்று.
4. விடாமல்.

17

## அநுமான் அங்கதன் இவர்களின் தோள்மேலமர்ந்த இராமவிலக்குவரின் வருணனை

2394 விடையின்மேற் கலுழன் றன்மேல்
வில்லினர் விளங்கு கின்ற
கடையின்மே லுயர்ந்த காட்சி
யிருவருங் கடுத்தார் கண்ணுற்

றடையின்மே ருவையுஞ் சாய்க்கு
மனுமனங் கதனென் றின்னர்
தொடையின்மேன் மலர்ந்த தாரர்
தோளின்மேற் றேன்றும் வீரர்.

கண்ணுற்று அடையின் - கண்ணுக்குப் புலனாகிப் பொருந்து மாயின், மேருவையும் சாய்க்கும்-மேரு மலையையும் வீழ்த்தும், அநு மன் அங்கதன் என்று இன்னர் - அநுமன் அங்கதன் என்ற இவர்களின், தோளின்மேல் தோன்றும்- தோள்களினமேல் காணப் பெறுகின்றவரும், மேல் மலர்ந்த தொடையின் தாரர் - மேலே விளங்கும்படியான தொகுக்கப் பெற்ற மாலையினரும், வில்லினர் - வில் தாங்கியவருமான, வீரர் - இராம இலக்குவர், விடையின் மேல்- காளை மாட்டின்மீதும், கலுழன் தன்மேல் - கருடன் மீதும், விளங்கு கின்ற - ஒளிர்கின்ற, கடையின் மேல் உயர்ந்த - முடிவின்றி மேமபட்டுயர்ந்த, காட்சி-காட்சியினையுடைய, இருவரும் கடுத்தார் - சிவன் திருமால் என்ற இரு மூர்த்திகளையும் நிகர்த்து விளங்கினர்.

கடை - முடிவு; அதன்மேல் உயர்வதாவது. அவர்களின் பெருமை அளக்கும் தரத்ததன்று என்க. கடுதத்ல்-ஒத்தல். இது ஓர் சிறந்த உவமை. தொடை - தொடுக்கப்படுதல் என று மலர் மாலைக்குக் காரணக் குறி. 'தொடுக்கும் கடவுட் பழம் பாடற்றொடையின் பயனே' (மீனுட்சி. பிள்ளைத். 62) (ஒப்பு) விராதன் தோளில் இராம இலக்குவர் ஏறியதும் காண்க(ஆரணிய. 37, 38).

பி - ம் 2. காட்சிக்கு.
3. என்றன்னேர், அன்றன்னர், என்றின்ன.
4. உயர்ந்த, அமர்ந்த. 18

## நீலன் முதலாகவுள்ள படைத் தலைவரைப் பின்னணியில் நிற்குமாறு இராமபிரான் கூறுதல்

2395. நீலனை முதலா யுள்ள நெடும்படைத் தலைவர் நின்றார்
தாலமு மலையு மேந்தித் தாக்குவான் சமைந்த வேலை
ஞாலமும் விசும்புங் காத்த நானிலக் கிழவன் மைந்தன்
மேலமர் வினைவை யுன்னி விலக்கினன் விளம்ப லுற்றான்

நீலனை முதலா உள்ள - நீலனை முதலாக உடைய, நெடுபடை தலைவர் - நெடிய சேனை அதிபர்கள், தாலமும் மலையும் ஏந்தி - பனை மரங்களையும் மலைகளையும் தாங்கிக் கொண்டு, நின்றார்-நின்றவராய், தாக்குவான் சமைந்த வேலை - எதிர்த்தற்கு முயன்ற பொழுதில், ஞாலமும் விசும்பும் காத்த நால்நிலம் கிழவன் மைந்தன் - பூமி ஆகாயம் என்ற இரண்டையும் காப்பாற்றிய, புவிமன்னனாகிய தயரதன் புதல்வன் ஆன இராமபிரான், மேல் விளைவு அமரை உன்னி - மேற்கொண்டு நிகழவிருக்கும் போரைக் கருதி, விலக்கினன் - தவிர்த்தானாய், விளம்பல் உற்றான் - சொல்லத் தொடங்கினான்.

நெடுமை பெருமை மேற்று, தாலம் - பனைவகை. 'தாலப் பனை கைக் கொடு சென்று தடுத்தான்' (யுத்த. 1909); தாக்குவான் - வானீற்று வினையெச்சம். ஞாலமும் விசும்பும் காத்த; 'சம்பரனைக் குலத்தொடுந் தொலைத்து நீ கொண்டன்றளித்த அரசன்றோ புரந்தரனின்றாள்கின்ற தரசது' (பால. கையடை. 8); சம்பரன் தன்னை எதிர்த்த அளவில், அவனுக்கு அஞ்சித் தேவேந்திரன் தயரதன் உதவியை நாடத் தயரதன், கைகேயியையும் உடனழைத்துக் கொண்டு, அசுரனை வென்று, இந்திரனுக்கு அரசினை மீட்டளித்த தாக வரலாறு. ஞாலமும் விசும்பும்; 'ஞாலமே விசும்பே' (திருவாச. திருச்சதகம் 42); விலக்கினன் முற்றெச்சம். நால் நிலம்; முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற நான்கு நிலத்தால் ஆகிய பூமி.

பி - ம். 1. நீலனே.

2. சமைந்த காலை.

4. மேலமை, மேலவாம்; வினையை; வினவினான். விலங்கினன். 19

## இந்திரசித்துவிடும் கடவுட்படையின் வலிமையை விளக்கிப் பின்னிரையில் நிற்க என்று நீலன் முதலியோர்க்கு இராமபிரான் கூறல்

2396. கடவுளர் படையை நும்மேல்
வெய்யவன் துரந்த காலைத்
தடையுள வல்ல தாங்குந்
தன்மையி ரல்லிர் தாக்கிற்

கிடையுள தெம்பா னல்கிப்
பின்னிரை நிற்றி ரீண்டிப்
படையுள தனையு மின்றெம்
விற்றொழில் பார்த்தி ரென்றான்.

'வெய்யவன் - தீயோனாகிய இந்திரசித்து, நும்மேல் - உங்கள் மீது, கடவுளர் படையை - தெய்வப் படைகளை, துரந்தகாலே - ஏவின போது, தடை உள அல்ல - (அவை மரம் மலை முதலிய வற்றால்) தடுக்கற் குரியனவல்ல; தாங்கும் தன்மையர் அல்லிர் - (நீங்களும்) அவற்றைப் பொறுத்துச் சமாளிக்கும் வன்மை பெற்ற வரல்லீர்; தாக்கிற்கு இடை உளது - தாக்கற்குரியதாய் உள்ள இடத்தினை, எம்பால் நல்கி - (முன்னணியில்) எமக்குத் தந்து, பின் நிரை நிற்றிர் - (நீங்கள்) பின் அணியில் நில்லுங்கள்; ஈண்டு - இங்கு, இ படை உளதனையும் - இந்த அரக்கர் சேனை யுள்ளவரையும், இன்று எம் வில் தொழில் பார்த்திர் - இன்று எம் முடைய வில் தொழில் காண்பீராக', என்றான் - என்று பகர்ந் தான் (இராமபிரான்).

கடவுளர் படை: 'தேவர் தம் படைகள் செப்ப' (பால. வேள்வி. 3).

பி - ம். 1. படைகள்; காலந்.

2. அல்லது, அல்லல்; ஆகுந்; தானையிர், தன்மையால்; வீரத் தானைக்கு.

3. இடையுள தோம்பல்; பின்னுற.

4. உளவதனையெம்பி, உளதனையேயின்றெம், உளதனையென்றம்பி, உளதனையுமெம்பி. 20

## இராம இலக்குவர் அரக்கர் சேனையோடு பொருதல்

2397. அருண்முறை யவரு நின்று ராண்டகை வீர ராழி
உருண்முறை தேரின் மாவி னோடைமால் வரையி னூழி
இருண்முறை நிருதர் தம்மே லேவின ரிமைப்பி லோரும்
மருண்முறை யெய்திற் றென்பர் சிலைவழங் கசனி மாரி.

அருள் முறை - (இராமபிரான்) அருளிச் செய்த முறைப்படியே, அவரும் - அந்தக் குரக்கு வீரரும், நின்றார் - (பின்னணியில்) நின்றனர்; ஆண்டகை வீரர் - ஆண்மைத் தகுதி வாய்ந்த இராம இலக்குவர்கள், (எதிர்க்கச் சித்தமானவர்களாய்), ஆழி உருள்முறை தேரின்-சக்கரங்களால் உருள்கின்ற முறைமையையுடைய தேரின் மேலும், பாவின்-குதிரை மீதும், ஓடை மால்வரையின்-ஓடை என்ற முகவணி அணிந்த பெரிய மலைபோன்ற யானையின் மீதும், ஊழி இருள் முறை நிருதர் தம்மேல் - ஊழிக்காலத்து இருளின் தன்மையைக் கொண்ட அரக்கர் மீதும், சிலை - வில்லானது, வழங்கு - வெளிப்படுத்துகின்ற, அசனிமாரி - இடி மழையினை, ஏவினர் - செலுத்தினர்; இமைப்பிலோரும் மருள்முறை எய்திற்று-இமையாதவரான தேவரும் மருளும்படியான நிலை வந்தது. என்பர் : அசை.

உருண் முறை: 'உருளுறு சகடம் பூண்ட' (அயோத்தி. கைகேசி. 10); 'உருளுறு தேரினனும்' (யுத்த. 430). ஓடை மால்வரை : அன்மொழித் தொகையாக யானையைச் சுட்டிற்று. ஓடை மால்வரை : வெளிப்படை; 'வருங்குன்ற மொன்றுரித்தோன்' (திருக். 15) என்ற இடத்துப்போல.

பா - ம். 2. ஊழின்.

3. ஏவினுள்.

4. எய்தி நொய்திற் சிலை வழங்கசனி கேட்டார். 21

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

இமைப்பதன் முன்னம் வந்த
 விராக்கத வெள்ளந் தன்னைக்
குமைத்தொழில் புரிந்த வீரர்
 தனுத்தொழில் குறித்தின் றெம்மால்
அமைப்பதென் பிறிதொன் றுண்டோ
 மேரு வென்றமைந்த வில்லான்
உமைக்கொரு பாக னெய்த
 புரங்களில் ஒருங்கி வீழ்ந்த.

## இராம இலக்குவரின் போர்த்திறனை இந்திரசித்து கண்டு வியத்தல்

2398. தேரின்மேற் சிலையி னின்ற விந்திர சித்தென் றோதும்
வீரருள் வீரன் கண்டான் விழுந்தன விழுந்த வென்னும்
பாரின்மே னோக்கி னன்றேற் பட்டனர் பட்டா ரென்னும்
போரின்மே னோக்கி லாத விருவரும் பொருத பூசல்.

'விழுந்தன விழுந்த - மேன் மேலும் விழுந்தபடியே யுள்ளன', என்னும் - என்று சொல்லுமாறு, (போர் புரியும்), பாரின்மேல் நோக்கின் அன்றேல் - பூமியின்மீது (படைகள் இறந்து வீழ்வதைக்) காண்பதல்லது, பட்டனர் பட்டார் - (இன்னார்) பட்டனர், பட்டார் - இன்னார் இறந்தார், என்னும்-என்று துணிந்து சொல்லுமாறு, போரின்மேல் நோக்கு இலாத இருவரும் - போர் செய்வதன்மீது ஒரு சிறிதும் கருத்துச் செலுத்தாமல் பராக்காகப் பொருத இருவரும், பொருத பூசல் - எதிர்த்துச் செய்த போரை, தேரின்மேல் சிலையின் நின்ற - தேரின்மீது வில்லினை யூன்றிக் கொண்டு நின்ற, இந்திரசித்து என்று ஓதும் - இந்திர சித்து என்று புகழ்ந்து கூறப்படுகின்ற, வீரருள் வீரன் கண்டான் - வீரர்களுக்குள் வீரன் பார்த்தான்.

சிலையின் நின்ற - பெரு வியப்பாலும் பிரமையாலும் சிலை போனின்றான் என்ற தொனியும் காண்க; 'கல்லாய்ச் சமைந்தான்' என்றது போல. ஓதுதல் - புகழ்ந்து பேசப்படுதல். வீரருள் வீரன் - 'வில்லாளரானார்க்கெல்லாம் மேலவன்' (யுத்த. இந்திர சித்து. 56); 'வீரரென்பார்கட்கெல்லாம் முன்னிற்கும் வீரர் வீரன்' (யுத்த. இந்திரசித்து. 50); 'போரின்மேல் நோக்கிலாத' என்றது அநாயாசமாக எவ்வித முயற்சியுமின்றி இராம இலக்குவர் பொருதமையைக் குறிக்கும்.

பி - ம். 1. விழ்ந்தனர் விழ்ந்த.
3. நோக்கின் ; அன்றே.
4. நோக்கிவிந்த, நோக்கிலிதிவ்.

2399. யானைபட் டனவோ வென்று
னிரதமிற் றனவோ வென்றான்
மானமா வந்த வெல்லா
மறிந்தொழிந் தனவோ வென்றான்
ஏனைவா ளரக்க ரியாரு
மில்லையோ வெடுக்க வென்றான்
வானுயர் பிணத்தின் குப்பை
மறைத்தலின் மயக்க முற்றான்.

வான் உயர் பிணத்தின் குப்பை - (இந்திரசித்து), வானம் வரையில் உயர்ந்து நின்ற பிணத்தின் குவியல், மறைத்தலின - (பகைவர்களைக்) காணவொட்டாமல்), மறைப்பதனால், மயக்கம் உற்றான் - மயக்கம் அடைந்தவனாகி, 'யானை பட்டனவோ-யானைகள் இறந்தனவோ', என்றான் - என்று கேட்டான்; 'இரதம் இற்றனவோ - தேர்கள் அழிந்தனவோ' என்றான் - என்றான்; 'வந்த மானம்மா எல்லாம் - போர்க்கு வந்திருந்த பெருமையுள்ள குதிரைகள் அனைத்தும், மறிந்து ஒழிந்தனவோ - இறந்து கழிந்தனவோ என்றான் - என்றான்; 'எடுக்க - (இறந்தவர்களைத் தூக்கி) அப்பாற் படுத்த, ஏனைவாள் அரக்கர் யாரும் இல்லையோ-பிறர் வாள் ஏந்திய அரக்கர்கள் எவரும் இல்லையோ', என்றான் - என்று அங்கலாய்த்தான்.

ஓகாரம்: வினா.

பி - ம். 2. ஆனதெல்லா மடிந்தழிந்தன. 23

2400. செய்கின்றா ரிருவர் வெம்போர் சிதைகின்ற சேனை நோக்கின்
ஐயந்தா னில்லா வெள்ள மறுபது மவிக வென்று
வைகின்றா ரல்ல ராக வரிசிலை வலத்தான் மான
எய்கின்றா ரல்ல ரீதெவ் விந்திர சால மென்றான்.

'வெம்போர் செய்கின்றார் இருவர் - கடுமையான போரினைப் புரிகின்றவர் இருவரே, சிதைகின்ற சேனை நோக்கின் - கெட்டழிகின்ற படையைப் பார்த்தால், ஐயம் தான் இல்லா அறுபது வெள்ளம் - சந்தேகத்திற்கிடமில்லையாம்படி அறுபது வெள்ளம்;

(இவர் இச் சேனை முழுதும்), 'அவிக - அழிவதாக' என்று - என்று, வைகின்றார் - (சேனையை) வைதல் மூலம் அழிக்கின்றார்; அல்லர் ஆக - அங்ஙனம் அல்லாராக, வரிசிலை வலத்தான் மாள எய்கின்றார் அல்லர் - கட்டமைந்த வில்லின் வன்மையால் (அச் சேனைகள்) இறந்துபட (அம்புகளை), விடுக்கின்றாரும் அல்லர்; ஈது - இச்செயல், எவ் இந்திர சாலமோ - எவ்வகையான இந்திரசாலமோ', என்றான் - என்று வியந்தான் (இந்திரசித்து).

அவித்தல் - அழித்தல். 'ஐந்தவித்தானாற்றல்' (குறள். 25) வைகின்றாரல்லர்: 'வைத வைவில் மராமரமேழ் துளை யெய்த' பால. பாயிரம்.); 'வைதாலன வாளி' (யுத்த. 1/13). இந்திர சாலம்: மாயவித்தை; ஏனைய பிறவுங் கண்டார்க் கிந்திரசால மென்ன' (யுத்த. களியாட்டு. 12); 'அதிலாசை யொழிந்தா ரிந்திர சாலமென' (வில்லி. பா. நச். 19).

பி - ம்; 1. நோக்கி.
2. அறுபது மறுக, இல்லை: அறுபதும் விக.
3. அல்லராகின், அல்லவாகின்.
4. ஈதாம், ஈதோர்; எந்த, இந்திரஞாலம். 24

## போரின் நிகழ்ச்சியை இந்திரசித்து வியப்புடன் பார்த்தல்

2401. அம்பின்மா மழையை நோக்கு
முதிரத்தி னாற்றை நோக்கும்
உம்பரி னளவுஞ் சென்ற
பிணக்குன்றி னுயர்வை நோக்கும்
கொம்பற வுதிர்ந்த முத்தின்
குப்பையை நோக்குங் கொன்ற
தும்பியை நோக்கும் வீரர்
சுந்தரத் தோளை நோக்கும்.

(இந்திரசித்து), அம்பின் மாமழையை நோக்கும் - வாளியால் உண்டான பெரு மழையைக் கண்ணுறுவான், உதிரத்தின் ஆற்றை நோக்கும் - பெருகிய வெள்ளத்தைக் கண்ணுறுவான்;

உம்பரின் அளவும் சென்ற பிணம் குன்றின் உயர்வை நோக்கும் - வானுலகம் வரையில் உயர்ந்த பிணமலையின் உயர்வைக் கண்ணுறுவான்; கொம்பு அற உதிர்ந்த முத்தின் குப்பையை நோக்கும் - தந்தம் அறுபட்டதால் சிதர்ந்த முத்தின் குவைவையைக் கண்ணுறுவான்; கொன்ற தும்பியை நோக்கும் - கொலை செய்யப்பட்ட யானைகளைக் கண்ணுறுவான்; வீரர் சுந்தரம் தோளை நோக்கும் - வீரர்களான (இராம இலக்குவரின்) அழகிய தோளைக் கண்ணுறுவான்.

அம்பின் மாமழை - சரமாரி என்ற வடமொழி வழக்குக் காண்க. உதிரத்தின் ஆறு - உதிரத்தினுல் உண்டான வெள்ளப் பெருக்கு. உம்பர் - வானம். யானைத் தந்தம், முத்துப் பிறக்கும் இடங்களில் ஒன்ருகலின், கொம்பற உதிர்ந்த முத்து எனப் பட்டது. முத்தின் குப்பை என்றது கொண்டு, இறந்த யானைகளின் பேரளவு புலனும். முத்துப் பிறக்கும் இடங்கள்; தாமரை, யானை, வேய், சாலி, கரும்பு, கடல், வலம்புரி, மேகம் முதலியன. கொன்ற - கொல்லப்பட்ட என்று பிறவினையாக்குக. சொற்பொருட் பின்வருநிலையணி. இச்செய்யுள் நினைப்பணியின்பாற்படும்; (ஒப்பு): ஆரணிய. 1060, பால. கார்முக. 11, யுத்த. இந்திரசித்து. 67. இதனை அடுத்துவரும் நான்கு செய்யுட்களையும் நோக்குக. அவைகளும் நினைப்பணிகளே.

பி - ம். 1. நோக்கி.
2. அளவினின்ற, அணவி நின்ற, அளவிச் சென்ற. ஒழுக்கை.
3. கொம்பிற உற, கொண்ட.
4. விரன்.

25

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

தலைகளை நோக்கும் தான்றன்
சரங்களை நோக்கும் தன்கைச்
சிலையினை நோக்கும் செம்பொன்
தேரினை நோக்கும் செய்த
கொலைகளை நோக்கும் கொன்ற
கொற்றவர் தம்மை நோக்கும்
அலைபொருங் குருதி யென்னும்
அளக்கரை யமைய நோக்கும்.

2402. மலைகளை நோக்கு மற்ற வானுறக் குவிந்த வன்கண்
தலைகளை நோக்கும் வீரர் சரங்களை நோக்குந் தாக்கி
உலைகொள்வெம் பொறியி னுக்க படைக்கலத் தொழுக்கை
[நோக்கும்
சிலைகளை நோக்கு நாணேற் றிடியினைச் செவியி னேற்கும்.

மலைகளை நோக்கும் - மலைகளைக் கண்ணுறுவான்; மற்று அவ் வான்உற குவிந்த வன்கண் தலைகளை நோக்கும் - மற்றும் விண் அளாவக் குவிந்த கொடிய விழிகளைக்கொண்ட அந்தத் தலைகளைக் கண்ணுறுவான்; வீரர் சரங்களை நோக்கும் - (இங்ஙனம் குவிவதற்குக் காரணமாய் நின்ற), வீரருடைய வாளிகளின் வன்மையை எண்ணிப் பார்ப்பான்; தாக்கி - மோதி, உலைகொள் வெம் பொறியின் - உலைக் களத்துக் கொண்ட தீப்பொறியுடனே, உக்க-சிதறிக் கிடக்கின்ற, படைகலத்து ஒழுக்கை நோக்கும் - படைக்கலங்களின் நீண்ட வரிசையை நோக்குவான்; சிலைகளை நோக்கும் - (இவ்வாறெல்லாம் இழைத்து நின்ற இராம இலக்குவரின்), விற்களைக் கண்ணுறுவான்; (அன்னார்) நாண் ஏற்று இடியினை செவியின் ஏற்கும் - நாண் ஏற்றிய குணத்தொனியைச் செவிக்கொள்வான்.

மலைகள்: போரில் எறியப்பட்ட மலைகள்; அல்லது, தேர், யானை முதலியவற்றினின்று பெரிதும் சிதைந்தன. அரக்கர் சிரங்கள் ஆகலின் 'வன்கண் தலை' எனப்பட்டது. உலைகொள் வெம்பொறி; உதிர்ந்த, ஒளிசெய்கின்ற படைக்கலத்துக்குவமை. இடி போன்ற குணத்தொனி; நாணேற்றிடியினை; 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர் படியிடை யிடிபொடித் தென்ன' (யுத்த. 1413). ஒழுக்கு: 'சிறு நுண்ணெறும்பின் சில்லொழுக்கேய்ப்ப' (புறநா. 173). நோக்கும்: செய்யும் என்னும் முற்று ஆண்பாற்குவந்தது.

பி-ம். 1. நோக்குமாபோல்; குவித்த.
2. தாங்கி, தாக்கும்.
3. ஒழுங்கை.
4. இடிகளை; நோக்கும்.

2403. ஆயிரந் தேரை யாட லானையை யலங்கன் மாவை
ஆயிரந் தலையை யாழிப் படைகளை யறுத்து மப்பாற்
போயின பகழி வேகத் தன்மையைப் புரிந்து நோக்கும்
பாயும்வெம் பகழிக் கொன்றுங் கணக்கிலாப் பரப்பைப்
[பார்க்கும்.

ஆயிரம் தேரை - ஆயிரம் தேர்களேயும், ஆடல் ஆனையை - வலிமை சான்ற வேழங்களையும், அலங்கல் மாவை - கூத்தாடுமியல்புள்ள குதிரைகளையும், ஆயிரம் தலையை - ஆயிரம் (வீரர்களின்) தலைகளையும், ஆழி படைகளை - அழிக்கும் தன்மையுள்ள படைக் கருவிகளையும், அறுத்தும் - அறுத்திட்டும் (அமையாது), அப்பால் போயின பகழி - அப்பால் சென்ற அம்புகளின், வேகத்தன்மையை - விரைந்து செல்லும் தகவினையும், புரிந்து நோக்கும் - விரும்பிப் பார்ப்பான்; பாயும் வெம்பகழிக்கு - விரைந்து செல்கின்ற அம்புக்கு, கணக்கு ஒன்றும் இலா பரப்பை பார்க்கும் - எல்லை ஒன்றுமில்லாத பரப்பினைக் கண்ணுறுவான்.

அடல் ஆடல் என்றும், அழி ஆழி என்றும் நீண்டன. அலங்கல்: அசைதல்; இங்கே கூத்தாடுதல். ஆழிப்படை சக்கராயுதமாம். (ஒப்பு): கிட்கிந்தா. 173, 174 என்ற செய்யுட்களையும் அவற்றின் உரைக் குறிப்பும் காண்க. முன் கவியில் வீரர் சரங்களைக் கூறினர். இங்கு அவை ஆற்றிய அரிய செயலைக் குறித்தார் என்க.

பி - ம். 2. அறுக்கும்.
4. பகழியென்னும்.

27

2404. அறுபது வெள்ள மாய வரக்கர்த மாற்றற் கேற்ற
எறிவன வெய்வ பெய்வ வெற்றுறு படைக ளியாவும்
பொறிவனம் வெந்த போலச் சாம்பராய்ப் போய தல்லாற்
செறிவன வில்லா வாற்றைச் சிந்தையாற் றெரிய
[நோக்கும்.

அறுபது வெள்ளம் ஆய அரக்கர் தம் ஆற்றற்கு ஏற்ற - அறுபதுவெள்ளத் தொகையினரான அரக்கருடைய வன்மைக்குத்

தக்கனவான, எறிவன, எய்வ, பெய்வ எற்றுஉறு படைகள் யாவும்- வீசுவனவும், விடுப்பனவும், பொழிவனவும் தாக்குவனவுமான போர்க்கருவிகள் அனைத்தும், பொறிவனம் வெந்தபோல - யந்திரக் காடு வெந்தாற்போன்று, சாம்பராய் போயது அல்லால் - சாம்பராகி விட்டதன்றி, செறிவன இல்லா ஆற்றை - (மோதுமாறு வந்து) நெருங்குவன இல்லாத விதத்தை, சிந்தையால் தெரிய நோக்கும் - மனத்தினால் கருதிப் பார்க்கலானான்.

எறிவன எய்வ பெய்வ: வினையாலணையும் பெயர்கள். பொறி வனம்: பொறி; யந்திரம். சிலர் பொறி என்பதை வண்டு என்று கொண்டு வண்டுகள் மொய்த்த வனம் என்பர். இங்குக் குறிக்கப் பட்டவை எல்லாம் பெரும்பாலும் உலோகங்களாலானவை ஆகலின் பொறிக்கு எந்திரம் என்று பொருள் தரப்பட்டது. யந்திரவனம்: யந்திரத்தொகுதி. சாம்பர்: சாம்பல்; இறுதிப் போலி; இல்லா: இல்லாத என்பது ஈறு குறைந்தது. சிந்தை: உள்ளம். சிந்தா வடசொல்.

பி - ம். 1. வெள்ளத்தாய; ஒந்து.
2. எம்யப் பெற்றது.
3. சாம்பலாய்; போவது.
4. வரர்த்தை. 28

இச்செய்யுள் சில பிரதிகளில் 'வயிறலைத்து' என்ற பாட லுக்குப்பின் காணப்படுகிறது.

2405. வயிறலைத் தோடி வந்து
கொழுநர்மேன் மகளிர் மாழ்கிக்
குயிறலத் துக்க வென்னக்
குழைகின்ற குழைவை நோக்கும்
எயிறலைத் திடிக்கும் பெழ்வாய்த்
தலையிலா வாக்கை யீட்டம்
பயிறலைப் பறவை பாரிற்
படிகிலாப் பரப்பைப் பார்க்கும்.

வயிறு அலைத்து ஓடி வந்து - வயிற்றில் அடித்துக் கொண்டு ஓடி வந்து, கொழுநர் மேல் மகளிர் மாழ்கி - (தத்தம்) கணவன்மார் மீது மகளிர் மனம் வருந்தி, குயில் தலத்து உக்க என்ன - குயில்

தரையிலே (சிறகரியப்பட்டு) வீழ்ந்துள்ளன என்னும்படி, குழைகின்ற - மனம் தளர்கின்ற, குழைவை நோக்கும் - நெகிழ்ச்சியைப் பார்ப்பான்; எயிறு அலைத்து - பற்களைப் பிறழுமாறு கடித்துக் கொண்டு, இடிக்கும்-முழக்குகின்ற, பேழ்வாய்-பிளவுபட்ட வாயினையுடைய, தலைஇலா ஆக்கை ஈட்டம் - தலைகள் இல்லாத உடற்றொகுதிகள் (கவந்தங்கள்) பயில்தலை - கூத்தாடுதலையும், (அது கண்டு அஞ்சி), பறவை பாரில் படிகிலா படியை பார்க்கும் - பறவைகள் பூமியில் படியவியலாத தன்மையையும நோக்குவானுனன்.

வயிறலைத்து: 'வந்தானை முகநோக்கி வயிறலைத்து' (ஆரணிய. 333); 'அடுத்தாள் முலைமேல் வயிறலைத்தாள்' (யுத்த. சீதைகளங். 8). கொழுநன்: கணவன்; 'தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்' (குறள். 55); மணி. 1; 22; 59; 'அணங்கனையாரிதயமுந்தம் மருட்கொழுந ரிதயமுமொன் ருகுந் தானே' (திருவாரூர் நான்மணிமாலை. 8). மாழ்குதல்: மயங்குதல்; 'குழறி மாழ்கி' (ஆரணிய.) தலையிலா ஆக்கை யீட்டம்; கவந்தத் தொகுதிகள். இறுதியடி முற்றுமோனை. குயில், அழுது அரற்றிய அரக்கியரின் குரலுக்குவமை.

பி - ம். 3. இருக்குர்

4. பறவை யீட்டம்; பரம்பைப் பார்க்கும். 29

2406. அங்கத ரனந்த கோடி யுளரெனு மனுமனென்பார்க்
கிங்கினி யுலக மெல்லா மிடமிலை போலு மென்னும்
எங்குமிம் மனித ரென்பா ரிருவரே கொல்லென் றுன்னுஞ்
சிங்கவே றனைய வீரர் கடுமையைத் தெரிகி லாதான்.

சிங்க ஏறு அனைய வீரர் - அச் சிங்கத்தை ஒத்த வீரரான, அங்கதன் அநுமன் என்ற இவர்களின், கடுமையை தெரிகிலாதான் வேகத்தினை அறிய வியலாத இந்திரசித்து, 'அங்கதர் அனந்த கோடி உளர் - அங்கதர் என்பார் பல கோடி உள்ளனர்' எனும் - என்பான், 'அநுமன் என்பார்க்கு - அநுமன் என்னும் பேர் படைத்தவர்க்கு, இனி - இனிமேல், இங்கு - இங்கே, உலகம் எல்லாம் இடம் இலைபோலும் - உலகம் எல்லாம் செல்லுதற்கு இடம் போதுமானதாக இல்லைபோலும்', என்னும் - என்பான், எங்கும்

இமனிதர் என்பார் இருவர் கொல் - எல்லாவிடத்தும் காணப் படுகின்ற இந்த மனிதர் என்பார் இருவர் தாமோ', என்று உன்னும் - என்று கருதுவான். ஏ : அசை.

அனந்தம் - வடசொல்; ந அந்த என்பது சமாசம். அநுமன் அங்கதன் என்ற இருவரும் வெகுலாகவ மாகச் சாரிவந்த போது, அவர்கள் இருவரின் தோள்மீதமர்ந்த இராம இலக்கு வரும் அவர்களைத் தாங்கி நின்ற இருவரும் நால்வராக இல்லாமல் பறபலராகக் காணப்பட்டனர் என்பது கருத்து. பெருவலி படைத்த அநுமன் வாயுவின் புதல்வனுதலின் காற்று வீசிச் சுழல்வது போலச் சுழல, அவன் சாரியின் கதிக்கு இவ்வுலகமே இடம்பற்ருது என்று நினைந்தான் இந்திரசித்து. கொல்: ஐயம். சிங்கவேறு அனைய; சிங்க வேறனையான், (யுந்த. 428); 'சிங்கவேறெனத் திறற்சித்தர் சேரவே' (ஆரணிய. 562).

பி - ம். 1. உளவெனும்; என்பார்க்கு,

2. உலகம் யாவும்; என்பான்.

3. எங்குமே; இருவர் கொல்லென்ன.

4. தெரிக்கிலாதான். 30

2407. ஆர்க்கின்ற வமரர் தம்மை
நோக்குமாங் கவர்க ளள்ளித்
தூர்க்கின்ற பூவை நோக்குந்
துடிக்கின்ற விடத்தோ ளுேக்கும்
பார்க்கின்ற திசைக ளெங்கும்
படும்பிணப் பரப்பைப் பாக்கும்
ஈர்க்கின்ற குருதி யாற்றின்
யானையின் பிணத்தை நோக்கும்.

(அரக்கர் சேனையின் நிலை குலைவு, கண்டு), ஆர்க்கின்ற - மகிழ்ச்சி ஆரவாரம் செய்து நின்ற, அமரர் தம்மை - தேவர்களை, நோக்கும் - பார்ப்பான்; ஆங்கு - அப்பொழுது, அவர்கள் அள்ளி தூர்க்கின்ற பூவை நோக்கும் - அத்தேவர்கள் கையினுல் வாரித் தூர்க்கின்ற மலர்களைப்பார்ப்பான்; துடிக்கின்ற இட தோள் நோக்கும் - துடிக்கின்ற தனது இடத் தோளைபார்ப்பான்,

பார்க்கின்ற திசைகள் எங்கும் - கண்ணுறுகின்ற திக்குகளில் எல்லாம், படும் பிணம் பரப்பை பார்க்கும் - இறந்து கிடந்த பிணங்களின் பரப்பினை நோக்குவான்; குருதி ஆற்றின ஈர்க்கின்ற - உதிர ஆற்றினால் இழுத்துச் செல்லப்படுகின்ற, யானையின் பிணத்தை நோக்கும் - வேழங்களின் சவங்களைப் பார்ப்பான்.

அமரர் ஆர்ப்பு அரக்கர் பெருவாரியாய் மடிந்தது கண்டு; தூர்த்தல்; நிறைத்தல், இடத்தோள் துடிப்பது; ஆடவர்க்குக் கெட்ட அறிகுறி, பெண்டிர்க்கு வலது தோள் துடிப்பது கெட்ட அறிகுறி, ஈர்க்கின்ற - இழுக்கின்ற, 'இரும்புதரு மனத்தேனை யிர்த்தீர்த் தெனுள முருக்கி' (திருவாச. திருவேசறவு; 1), இச்செய்யுளும் நினைப்பணி, 2401-3405, செய்யுட்களோடு ஒப்புக் காண்க.

பி - ம். 1. தேவர் தம்மை.

2. தோளை நோக்கும்.

3. பெரும்பிணப்.

4. யாற்றாடி யானையின், யாற்றேடி யானையின். 31

## அரக்கரிற் பெரும்பாலோரிறந்ததும் குரக்குப்படை இந்திர சித்தினிட முள்ள அச்சத்தினால் திரும்பி வராமை.

2408. ஆயிர கோடித் தேரு மரக்கரு மொழிய வல்லார்
மாயிருஞ் சேனை யெல்லா மாய்ந்தவா கண்டும் வல்லை
போயின குரக்குத் தானை புகுந்தில தன்றே பொற்றேர்த்
தீயவன் றன்மே லுள்ள பயத்தினுற் கலக்கந் தீரா.

ஆயிரம் கோடி தேரும் - ஆயிரம் கோடி இரதங்களும், அரக்கரும் - இராக்கதர்களும், ஒழிய - நீங்கலாக, அல்லார் - மற்றையோரான அரக்கரின், மா இரு சேனை எல்லாம் - கரிய பெரிய படைகள் அனைத்தும், மாய்ந்தவா கண்டும் - இறந்து பட்டமை நோக்கியும், வல்லை - விரைந்து, போயின குரக்கு தானை - நிலை குலைந்து ஓடிய குரங்குப்படை, பொன் தேர் தீயவன் தன் மேல் உள்ள - பொன் தேரினைக் கொண்ட கொடியவனான இந்திரசித்தின் இட முள்ள, பயத்தினால் - அச்சத்தால், கலக்கம் தீரா - மனக் குழப்பம் நீங்காமல், புகுந்திலது - மீண்டு வந்திலது: அன்று. ஏ - ஈற்றசை.

மாஇரு : இருபெய ரொட்டுமாம், மாய்ந்தவாறு என்பது ஈறு கெட்டது, தீரா ; ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். பொற்றேர் ; பொன்னாலியன்றதேர் 'கொற்றப் பொற்றேரின் மேலான்' என்று மேல் (2386) வந்தது காண்க. குரக்குத்தானை தீரா புகுந்திலது என இயைக்க.

பி - ம். 1. வல்ல.
3. குரங்கின்றானை ; புகுந்தில வன்றே,
4. மனத்தினூற் ; சிறுமை ; தீர்ந்தார். 32

## இராம இலக்குவரின் போர்த்தொழில் கண்டு அநுமான் தோள் கொட்டி ஆர்த்தலும் அரக்கர் நடுங்குதலும்.

2409. தளப்பெருஞ் சேனை வெள்ள
மறுபதுந் தலத்த தாக
அளப்பருந் தேரி னுள்ள
தாயிரக் கோடி யாகத்
துளக்கமி லாற்றல் வீரர்
பொருதபோர்த் தொழிலை நோக்கி
அளப்பருந் தோளைக் கொட்டி
யஞ்சனை மதலை யார்த்தான்.

தளம் பெரு சேனை வெள்ளம் - தொகுதியாயுள்ள பெரிய சேனை வெள்ளம், அறுபதும் தலத்தது ஆக - அறுபதும் (தரையில் உயிரற்று) விழுந்ததாகவும், அளப்பரும் தேரின் - எண்ணி முடியாத தேரின், (அரக்கர் படை), உள்ளது ஆயிரம் கோடி ஆக - மீதியாக உள்ளது ஆயிரம் கோடியே யாகவும், துளக்கம் இல் - மனக்குழப்ப மில்லாத, ஆற்றல் வீரர் - வலிமை வாய்ந்த வீரரான இராம இலக்குவர், பொருத போர் தொழிலை நோக்கி - எதிர்த்து நின்ற போர்ச் செயலைக் கண்ணுற்று, அஞ்சனை மதலை - அஞ்சனா தேவியின் புதல்வனான அநுமன், அளப்பு அரு - அளந்து காணமுடியாத, தோளை கொட்டி - (தனது) தோளைத் தட்டிக் கொண்டு, ஆர்த்தான் - பெரு முழக்கம் செய்தான்.

தளம் - கூட்டம் ; இங்கே சேனைத் தொகுதி யென்க. தளபதி என்ற வழக்குண்மையும் காண்க. தலம் - பூமி ; இது தாலம்

எனவும் வழங்கும், 'பொருப்புருண்டனவா மெனத் தலத்திடைப் புரண்ட' (யுத்த. 1419), 'தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதி தழைத் தென்ன' (சுந்தர. 1080), துளக்கம் - மனக்கலக்கம், 'ஏவுண்டு துளக்க மெய்தா' (யுத்த 2358), தெருக்கும் அளப்பரிய தன்மையைக் கூறவே, அநுமனின் உன்னதற்குரிய பெருந்தோற்றம் விளங்கும். அஞ்சனை மதலை; 'வாயுவேந்தற் கஞ்சனை வயிற்றின் வந்தேன்' (கிட்கிந்தா. 58); என்று அநுமனே கூறுதல் காண்க; 'அஞ்சனைக் கொரு சிறுவன் அஞ்சனக்கிரி யனைய மஞ்சன்' (கிட்கிந்தா. 47); அஞ்சனை மகனாதலின் அவனுக்கு ஆஞ்சனேயன் என்ற பெயருண்மையும் காண்க. அஞ்சனைச் சிங்கம் கிட்கிந்தா. 106. தோள் கொட்டுதல்; வீரத்தின் மெய்ப்பாடு, மதலை- சார்பு அல்லது ஆதரவு என்று பொருள்படும் இச்சொல் தந்தைக்கு அவனது தளர்ந்த காலத்தில் ஆதரவாக நிற்கும் மகனைக் குறித்து, ஆகுபெயர், 'சிதலை தினப்பட்ட வால மரத்தை மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு' (நாலடி. 197) மதலையாம் சார்பிலார்க் கில்லை நிலை' (குறள். 449).

பி - ம். 1. வெள்ளத்து.

4. அஞ்சனை சிங்கம். 33

2410. ஆரிடை யனும னார்த்த வார்ப்பொலி யசனி கேளாத்
தேரிடை நின்று வீழ்ந்தார் சிலர்சிலர் படைகள் சிந்திப்
பாரிடை யிருந்து வீழ்ந்து பதைத்தனர் பைம்பொ னிஞ்சி
ஊரிடை நின்று ளாரு முயிரினோ டுதிரங் கான்றார்.

அருமை இடை -(நோக்கற்கரிய) கொடிய போர் அரங்கில், அநுமன் ஆர்த்த ஆர்ப்பு ஒலி - அநுமன் ஆரவாரம் செய்ததால் எழுந்த பெருமுழக்கமாகிய, அசனி கேளா - இடியோசையைக் கேட்டு, சிலர் - சில இராக்கதர்கள், தேர் இடை நின்று வீழ்ந்தார் - தேர்மீதிருந்து கீழே விழுந்தனர்; சிலர் - சில அரக்கர், படைகள் சிந்தி - படைக்கலங்களை நழுவவிட்டு, பார் இடை இருந்து - பூமியிலிருந்தே, வீழ்ந்து பதைத்தனர் - தரையில் வீழ்ந்து துடித்தனர்; பசுமை பொன் இஞ்சி - பசிய பொன்னால் இயற்றப்

பட்ட மதிலினையுடைய, ஊர் இடை நின்றுளாரும் - இலங்கை நகர்க்குள் இருந்த அரக்கர்களும், உயிரினோடு உதிரம் கான்றார் - உயிரையும் உதிரத்தையும் கக்கினார்கள்.

ஆரிடை: அருமை + இடை; பண்புப்புணர்ச்சி. பைம் பொன் இஞ்சி - பசிய பொன்னாலாகிய இலங்கையின் மதில்கள் ஏழு; சுந்தர. 116. போரில் நின்றவர் அல்லாது போர் புரியாமல் ஊர்க்குள் இருந்த அரக்கரும் உயிரினோடு உதிரம் கான்றார் என்று எதிரிகள் செய்த அட்டகாசத்தால் உற்ற அச்சம் குறிக்கப் பட்டது. காலுதல் - கக்குதல்; இஃது ஓர் இடக்கர்ச்சொல்; இதனைப்பற்றிய குறிப்பினை பெரும்பாண். 2-இன் உரையில் காண்க.

பி - ம். 1. ஆர்கலி.

3. விழ்ந்துபோகப் பாரித்தார், அழிந்துபோதப் பரித்தனர், இழிந்து விழ்ந்து பதைத்தனர்.

4. நின்றுளார் தம்முயிரொடும். 34

## அஞ்சினவர்களைச் சினந்து, இந்திரசித்து இராம இலக்குவர் மீது வருதல்

2411. அஞ்சினீர் போமி னின்றோ ரார்ப்பொலிக் கழியற் பாலிர்
வெஞ்சமம் விளைப்ப தென்னோ நீருமிவ் வீர ரோடு
துஞ்சினிர் போலு மன்றோ வென்றவர்ச் சுளித்து நோக்கி
மஞ்சினிற் கரிய மெய்யா னிருவர்மே லொருவன் வந்தான்.

மஞ்சினில் கரிய மெய்யான் - மேகத்தினும் கருமையான உடலுடன்கூடிய இந்திரசித்து, 'இன்று - இப்பொழுது, ஓர் - ஒரு, ஆர்ப்பு ஒலிக்கு அழியல் பாலிர் - ஆரவார ஒலிக்கே மன மழியும் தன்மையுடையவர்களாய், அஞ்சினீர் - பயந்தவர்களே! போமின் - ஊர்க்கே திரும்பிச் செல்லுங்கள்; (இத்தகைய பயங் கொள்ளிகளாகிய நீங்கள்), வெம் சமம் விளைபபது என்னோ - கொடும்போரைச் செய்வது என்பது எங்குள்ளது? நீரும் - நீங்களும், இவ் வீரரோடு - (இங்கு மரித்துக்கிடக்கின்ற) இந்த வீரரோடு, துஞ்சினிர் போலும் அன்றோ - இறந்தவரேபோல் ஒன்றுக்கும் உதவாதவர்களாக நிற்கின்றீர்கள் அல்லவா?' என்று - என்று மொழிந்து, அவர் சுளித்து நோக்கி - அவர்களைச்

சினந்து பார்த்து, இருவர்மேல் ஒருவன் வந்தான் - இராம இலக்குவரான இருவரை நோக்கி ஒருவனாக எதிர்த்து வந்தான்.

வெஞ்சமம் : 'நணித்துவெஞ் சமமொன்ப தோருவகை' (யுத்த. இராவணன் தேரேறு. 29); 'ஆனதோ வெஞ்சமம்' (யுத்த 1283). துஞ்சுதல் - இறத்தல்; 'நிலமிசைத், துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட்டார் அல்லால்' (நாலடி. 21). போலும் : ஒப்பில்போலி. சுளித்து - வெகுண்டு; 'சுளிமுகக் களிறனான்' (சீவக. 298). மஞ்சு - மேகம்; 'மஞ்சொக்கு மளகவோதி' (ஆரணிய. 623); 'மஞ்செனத் திரண்டகோல மேனிய' (கிட்கிந்தா. 58).

பி - ம். 1. அஞ்சினிர், அஞ்சினர்; என்றான்; இழியப்பாலிர்.

2. என்னே; நீவிரும், நீரிரு.

3. என்றென் றவர்முகம், அன்றே யென்றவர்; சுளிய, சுளிந்து.

4. மஞ்சினும். 35

## ஆயிரங்கோடித் தேரும் வெகுண்டு பொரப்புகுதல்

2412 அக்கணத் தார்த்து மண்டி யாயிர கோடித் தேரும்
புக்கன நேமிப் பாட்டிற் கிழிந்தன புவன மென்னத்
திக்கணி நின்ற யானை சிரம்பொதி ரெறியப் பாரின்
உக்கன விசும்பின் மீன்க ளுதிர்ந்திடத் தேவ ருட்க.

அ கணத்து - அப்பொழுதே; (அதுகண்டு), திக்கு அணி நின்ற யானை - திசைக்கு அலங்காரமாக நின்ற யானைகள் எல்லாம், (தமது), சிரம் பொதிர் எறிய - தலைகள் நடுக்கமெய்தவும், விசும்பின் மீன்கள் பாரின் உக்கு அன உதிர்ந்திட - ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்கள் பூமியில் சிந்தினவாய் உதிர்ந்திடவும், தேவர் உட்க - அமரர்கள் அச்சம் கொள்ளவும், ஆயிரம் கோடி தேரும் ஆர்த்து மண்டி - ஆயிரங்கோடி இரதங்களும் பெருமுழக்கம் செய்து நெருங்கி, நேமி பாட்டில் - சக்கரம் படுவதால், புவனம் கிழிந்தன என்ன - பூமி கிழிந்தன என்று, (பல்லோரும்எண்ணுமாறு), புக்கன - போர்க்களத்துட் புகுந்தன.

அக்கணத்து : ஆரணிய. 313. பாடு - படுதல்; முதனிலை திரிந்த தொழிற்பெயர். நேமி - தேர்ச்சக்கரம்; 'தானவ ரூனெடுங்

தேய்த்த நேமியது' (யுத்த. நாகபாசப். 22). புவனம் கிழிந்தன என்றதிலிருந்து ஈரேழு புவனமும் என்க. திக்கு அணி நின்ற யானை - எட்டுத்திக்கு யானைகள்; கிட்கிந்தா. 441 உரை காண்க. பொதிர் எறிதல் - நடுக்குறல்; 'விண்ணோர் தலைபொதி ரெறிய வார்த்தான்' (யுத்த. 1860). உக்கு அன உதிர்ந்திட என்க. அன: உவம உருபு. உக்கது அன என்பதன் தொகுத்தல்; உக்கால் அன என்பது தொகுத்த தெனினுமாம். மீன் - நட்சத்திரம்; மின்னுதல் அல்லது ஒளிவிடுதல் காரணமாகப் பெயர் பெற்றது; தமிழ்ச்சொல். விசும்பு - ஆகாயம்; 'விசும்புதை வருவளியும்' (புறநா. 2). உட்குதல் - அஞ்சுதல்; 'உட்கப் படாஅர் ஒளி யிழப்பர்' (குறள். 921).

பி-ம். 3. திக்கிடை நின்ற, திக்கிட நின்ற; ஆனை; சிந்தி. 36

வேறு

இலக்குவன் கூனுறவு

2413. மாற்றமொன் றிளையவன் வளைவிற் செங்கரத்
தேற்றினன் வணங்கிநின் றியம்பு வானிகல்
ஆற்றின னரவுகொண் டசைப்ப வாரமர்
தோற்றனெ னென்றுகொண் டுலகஞ் சொல்லுமால்.

(நாணேறிட்டதனால்), வளைவில் செம் கரத்து - வளைந்துள்ள வில்லை(த் தன்) சிவந்த கையில், ஏற்றினன் - தாங்கியவனாய், வணங்கி நின்று - (இராமபிரானைப்) பணிந்து நின்று, இளையவன் - இலக்குவன், மாற்றம் ஒன்று - வார்த்தை யொன்றை, இயம்பு வான் - பின்வருமாறு மொழியலானான்; 'இகல் ஆற்றினன் - மாறுபாட்டை மிகுதியாகக் காட்டிநின்ற இந்திரசித்து, அரவு கொண்டு அசைப்ப - அரவின் வாளிகொண்டு பிணித்ததால், அருமை அமர் தோற்றனென் - அருமையான போரில் யான் தோல்வியுற்றேன்', என்று - என்று சொல்லி, உலகம் சொல்லும் - உலகில் உள்ளார் பழிப்புரை பகர்வர். கொண்டு, ஆல் - அசை.

மாற்றம் - வார்த்தை; 'மாற்றமஃ துரைசெய' (அயோத்தி. மந்தரை. 51). இகல் - மாறுபாடு; 'ஏற்றவளை வரிசிலையோ

னியம்பாமு னிகலரக்கி' (ஆரணிய. 340). அசைத்தல்: இறுக்கி யசைத்தல் அல்லது ஆட்டுதல். அருமை + அமர் = ஆரமர்; இங்கு போர்க்கு அருமை, எளிதில் வெல்ல வியலாமை. உலகம்: இடவாகுபெயர், 'உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டே' என்பது நிகண்டு.

பி - ம். 1. மழையில், மழையின்.

2. ஏற்றினை.

3. ஆற்றல னரவுகொண்டு, ஆற்றல னுற்றல்கொண்டு; இசைப்ப. 37

2414. காக்கவுங் கிற்றிலன் காத னண்பரைப்
போக்கவுங் கிற்றில னொருவன் போய்ப்பிணி
ஆக்கவுங் கிற்றிலன் அமரி லாருயிர்
நீக்கவுங் கிற்றில னென்று நின்றதால்.

'காதல் நண்பரை - அன்பார்ந்த நண்பர்க்கு; (தீங்கு வராமல்), காக்கவும் கிற்றிலன் - புரக்கவும் வன்மையற்றவன்; (அவர்களைக் கட்டியுள்ள பாசக்கட்டினை), போக்கவும் கிற்றிலன் - நீக்கவும் வன்மையற்றவன்; ஒருவன் போய் - ஒருவனாகச் சென்று, பிணி ஆக்கவும் கிற்றிலன் - (கெடுதி விளைத்த அந்த இந்திரசித்துக்கு) நோய் உண்டாக்கவும் வன்மையற்றவன் ஆனான்; (இவ்வாறு உள்ளவன்), அமரில் அருமை உயிர் நீக்கவும் கிற்றிலன் - போரில் தனது அரிய உயிரைப்போக்க வல்லமையற்றவன் ஆயினான்; என்று நின்றது - என்று (பழிப்புரை உலகத்தில்) நிலைபெற்றது. ஆல் - அசை.

கில் என்பது ஆற்றலையுணர்த்தும் இடைநிலை. பிணி போக்கவும் கிற்றிலன், பிணி ஆக்கவும் கிற்றிலன் எனத் தனித் தனி இயைத்துப் பொருள் செய்க. தன்னைப் பிணித்தவனைத் தான் பிணிக்கவில்லையே என்று இலக்குவன் வருந்துகின்றான்.

பி - ம். 3. கற்றிலன்; வென்றி யாருயிர்.

4. கற்றிலன்; ஒன்று.

38

2415. இந்திரன் பகையெனு மிவனை யென்சரம்
அந்தரத் தருந்தலை யறுக்க லாதெனின்
வெந்தொழிற் செய்கையன் விருந்து மாய்நெடு
மைந்தரிற் கடையெனப் படுவன் வாழியாய்.

'வாழியாய் - நல் வாழ்வினை யுடையவனே! இந்திரன் பகை எனும் - இந்திரன் பகைவன் என்கின்ற, இவனை - இவனுடைய, அருதலை - அரிய தலையை, என் சரம் அந்தரத்து அறுக்கலாது எனின் - என் வாளி ஆகாயத்தினிடையே துணித்துத் தள்ளாது என்றால், வெம் தொழில் செய்கையன் - தீய தொழில் புரிபவனுக்கு (யமனுக்கு), விருந்துமாய் - விருந்தும் ஆகி, (இறந்து போய்) நெடு மைந்தரில் - பெருமையுற்ற மனிதரில் (ஒருவனாகக் கருதப்படாது), கடை என படுவன் - இழிந்தவன் என்னப் பழிக்கப் படுபவன் ஆவேன்.

இலக்குவன் சூளுறவு, இந்திரன் பகை எனவே தேவர்கள் அனைவர்க்கும் பகைவன்; இவன் சூளுறவுக்கேற்பவே, 'தாம மண்டலம் விழுந்தது என்ன விழுந்தது தலையு மண்மேல்' (யுத்த. இந்திரசித்து, 54)ல் வருதல் காண்க. அந்தரம்: ஆகாயம். வாழியாய் என்பது ஒரு மங்கலச் சொல்; 'வாழியாய் கேட்டியால் வாழ்வு கைம்மிக' (யுத்த. 316); வெந்தொழிற் செய்கையன் - யமன், 'மின்திகழ் பிறழ்பற் கூற்றம் விலாப்புடை வீங்க வுண்ண' (குசேலோ. 3 ; 6); மைந்தரில்: ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள்; கடை: தீமை யெடுத்துரைக்கும் திண்ணறிவில்லாதர்ர், தாமும் அவரிற் கடை' (நாலடி. 227); நெடுமை பெருமைமேற்று.

பி - ம். 1. அறுத்திலாதெனின்.
3. செய்கையர், செவ்வையின் முந்துமேல்.
4. வாழ்வன், திரிவன்.



2416. நின்னுடை முன்னரியான் நெறியி னீர்மையான்
தன்னுடைச் சிரத்தையென் சரத்திற் றள்ளிலுற்
பொன்னுடை வனைகழற் பொலம்பொற் றேளினுய்
என்னுடை யடிமையு மிசையிற் றுமரோ.

'பொன் உடைவனை கழல் பொலம் பொன் தோளினய் - பொன்னால் செய்த அழகிய வீரகண்டை யுடனே, அழகிய பொன் ஆபரணங்களை அணிந்த, தோள்களை யுடையவனே! நின் உடை முன்னர் - உன்னுடைய கண் முன்பாக, யான் - நான்; நெறி இல் நீர்மையான் தன்னுடை - நல் வழியில் புகும் இயல்பில்லாத வனுன இந்திரசித்தினுடைய, சிரத்தை - தலையை, என் சரத்தில் தள்ளினல் - என் சரத்தால் தள்ளினல்தான், என் உடை அடிமை யும் இசையிற்று ஆம் - என்னுடைய அடிமைத் தன்மையும் புகழ் வாய்ந்ததாகும். அரோ: ஈற்றசை.

பொலம் பொன் - இரு பெயரொட்டுமாம்.

பி - ம். 1. முன்னரின்; நீர்மையான், நெடும்பகை மனைபிளேர்ந்தவன்.
3. பொன்னுடை பொலங், வரி.
4. இயைபிற்றுமரோ. 40

2417. கடிதினி லுலகெலாங் கண்டு நிற்கவென்
அடுசர மிவன்றலை யறுத்தி லாதெனின்
முடியவொன் றுணர்த்துவெ னுனக்கு நான்முயல்
அடிமையின் பயனிகந் தறுக ஆழியாய்.

'ஆழியாய் - ஆணைச் சக்கரத்தை யுடையவனே! கடிதினில் உலகு எலாம் - விரைவினில் உலகம் எல்லாம், கண்டு நிற்க - நோக்கி நிற்கும் போழ்தே, என் - என்னுடைய, அடுசரம் - கொல்ல வல்ல அம்பு, இவன் தலை அறுத்திலாது எனின் - இந்த இந்திர சித்தின் சிரத்தை அறுக்காததால், முடிய - முடிவாக, ஒன்று உணர்த்துவென் - ஒரு பொருள் உனக்கு மொழிவேன்; உனக்கு நான் முயல் அடிமையின் பயன் இகந்து அறுக - உனக்காக நான் முயல்கின்ற அடிமைச் செயலின் பயன், (என்னைவிட்டு) நீங்கு வதாக' என்று சூளுரைத்தான்.

அடுசரம் - வினைத்தொகை. உனக்கு நான் முயல் அடிமையின் பயனிகந்து அறுக; (ஒப்பு) 'அன்னவர்க் கடியே னல்லேன் என்

றனன் அறிவின் மிக்கான்' (யுத்த. 255); பயனிகத்தல்-பயனின்றிக் கழிதல்.

பி - ம். 1. நெடியனவுலகெலாங்; கண்டு நிற்பவென்.
2. சுடுசரமிவன்றலை துணிக்கலாவெனின்.
3. முடிய நின்று; உணர்த்தியென்.
4. பயனிழந்தறுவதாகென்ருன், பயனிழந்தறுக வாழியாய். 41

## தேவர் முதலியோர் ஆரவாரித்தல்

2418. வல்லவ னவ்வுரை வழங்கு மேல்வையின்
அல்லனீங் கினமென வமர ரார்த்தனர்
எல்லையி லுலகமும் யாவு மார்த்தன
நல்லற மார்த்தது நமனு மார்த்தனன்.

வல்லவன் - வலிமை யுள்ளவனுன இலக்குவன், அவ் உரை வழங்கும் ஏல்வையின் - அத்தகைய சொற்களைச் சொல்லும் பொழுதில், அமரர் - வானவர்கள், 'அல்லல் நீங்கினம்' - துன்பம் ஒழியப் பெற்றோம்', என ஆர்த்தனர் - என்று ஆரவாரம் செய்தனர்; எல்லை இல் உலகமும் யாவும் - வரம்பில்லாத உலகமும், மற்றுமுள்ள உயிர்களும், ஆர்த்தன - பெருமுழக்கம் செய்தன; நல் அறம் ஆர்த்தது - சிறந்த அறக்கடவுளும் ஆர்ப்பரித்தது; நமனும் ஆர்த்தனன் - இதுகாறும் அனுபவிதற்கும் இயலாதிருந்த அரக்கர் உயிர்கள் கைவரப் பெற்றது கருதி யமனும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தான்.

அவ்வுரை, முன் பாட்டில் சொன்ன சூளுரை. ஏல்வை - சமயம். 'அரசாள்கின்ற ஏல்வை' (உத்தரரா. சம்புவன். 6); அல்லல் - துன்பம்; இன்பமல்லாதது; செல்லல் அல்லல் இன்னுமையே' (தொல். சொல்.); அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே, செல்வத்தைத் தேய்க்கும் படை' (குறள். 555); இச் சூளுறவு கொண்டே அமரரார்த்தது, இலக்குவன் சுத்த வீரன் ஆகலின்தான் சூளுற்றதை முடித்தே தீருவான் என்ற துணிவுபற்றி என்க. தெளிவுபற்றி வந்த காலவழுவமைதி. உலகம் என்ற அதனிடை உள்ள 84 லக்ஷம் சீவராசிகள் அடங்குவதாக, யாவும் என்று சொல்லியது அறிவுள்ள பொருள்களும் அறிவற்ற பொருள்களும்

என்ற அனைத்தும் அடங்க என்க. 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்பது நிகண்டு. மறச் செய்கை புரிந்து, உலகிற்குக் கேடு விளைவித்தவன் அழிதல் திண்ணம் என்றது கண்டு, 'நல்லறம்' ஆர்த்தது எனப்பட்டது. 'பனிக்கற் சுரத்துக் கரன் முதலோர் கவந்தப் படையும் பல்பேயும், தனிக்கைச் சிலையும் வானவரும், முனிவர் குழுவும் தனியறமும், இனிக்கட் டழிந்த தரக்கர்குலம் என்றே சுருதியீரிரண்டும், குனிக்கக் குனிந்த புருவம்' (சுந்தர. 544) என்றது காண்க. 'அறம் புகாமையா லழியும் மிப்பதி' (சுந்தர. 118) என்றபடி, அறமே இலங்கை நகரிற் புகா திருந்தது. இப்பொழுது இலக்குவன் நன்முயற்சியால் தனக்கு நல்லகாலம் என்று அறக் கடவுளும் மகிழ்ந்தார் என்க. 'கருநிறத் தோர்பால், வெளுத்து வைகுதல் அரிதென விவருரு மேவி, ஒளித்து வாழ்கின்ற தருமமன்னன்' என்று வீடணனைக் குறித் ததும் இங்குக் காணத்தகும்.

பி-ம். 1. வல்லையினிவ்வுரை ; ஏல்வையுள், பொழ்தினில், காலையின்.
2. அல்லலை நீங்கிய.
3. உலகங்களேவையும்.
4. ஆர்த்தவ.

42

## இராமபிரான் இலக்குவன் வன்மையைக் கொண்டாடுதல்

2419. முறுவல்வாண் முகத்தினன் முளரிக் கண்ணனும்
அறிவநீ யடுவலென் றமைதி யாமெனின்
இறுதியுங் காவலு மியற்று மீசரும்
வெறுவியர் வேறினி விளைவதி யாதென்றான்.

முளரி கண்ணனும் - தாமரைக் கண்ணனான இராமபிரானும், முறுவல் வாள் முகத்தினன் - புன்னகை எழுகின்ற ஒளிகொண்ட முகத்தினை யுடையவனாய், அறிவ - அறிஞனே! 'நீ அடுவல் - நீ இன்னாரைக் கொல்வேன்', என்று அமைதி ஆம் எனின் - என்று உட்கொள்வை யாயின், இறுதியும் காவலும் இயற்றும் ஈசரும் - அழிவும் காத்தலும் என்ற தொழிலைப் புரிகின்ற உருத் திரன் திருமால் என்ற இருவரும், வெறுவியர் - (உன் ஆற்றலுக்கு முன்னே) ஒன்றுமிலாதவர் ஆவர்; இனி விளைவது வேறு யாது - இனி நிகழவிருப்பது வேறு என்ன உள்ளது', என்றான் - என்று இலக்குவனைப் புகழ்ந்தான்.

முறுவல் - இராமபிரானுடைய புன்னகை கம்பநாடரால் பலவிடங்களில் சிறப்பாகக் காட்டப்பெறும். 'முந்தியென்னுயிரையம்முறுவலுண்டதே' (பால. மிதிலைக். 56); 'சிறியதோர் முறுவல் செய்தான்' (ஆரணிய. 221); முளரி : தாமரை இங்கு இராமபிரான் விழிகட்கு. 'செந்தாமரைக் கண்ணோடும் செங்கனி வாயினோடும்' (ஆரணிய. 702); 'தாதை யப்பரிசுரை செயத் தாமரைக் கண்ணன்' (அயோத்தி. மந்திரப் : 70); முளரி - முள்ளாலாகிய அரை அல்லது தண்டினை யுடையது என்று தாமரைக்குக் காரணக் குறி. இதனைக் காரண விடுகுறிப் பெயர் என்பர். வாள் முறுவல் முகத்தினன் என வாளினை முறுவலுக் கேற்றினும் ஒன்றும். அடுவல்-தன்மையொருமை விகுதி. இறுதியும் காவலும் கூறினர். உபலக்கணத்தாற் படைப்புக் கடவுளும் கொள்க. அன்றியும் படைக்கப்பெற்ற உயிர்கட்குத் தானே காவலும் இறுதியும், எனவே அதனைக் கூறுது விடுத்தனர் என்றலுமாம். இனி விளைவது வேறு யாது எனப் பிரித்துக் காட்டுக. அமைதியாமெனின் ஈசர் வெறுவியர் என்க. 'குறுமுனி குடித்த வேலை குப்புறு கொள்கைத்தாதல் வெறுவிது' (சுந்தர. 15); 'வெறியரன்றே குணங்களால் விரிஞ்சன் முதலா மேலானோர்' (சுந்தர. 599).

பி - ம். 2. அறிவை நி, அறிவ நி, அறிய நி; செய்தியென்று, செய்வனென்று, அடுவையென்று.

3. காலமும்.

4. விளைவ.



## இராமபிரானைத் தொழுது இலக்குவன் போருக்கு எழுதல்

2420. சொல்லது கேட்டடி தொழுது சுற்றிய
பல்பெருந் தேரொடு மரக்கர் பண்ணையைக்
கொல்வெனிங் கன்னது காண்டி கொல்லென
ஒல்லையி லெழுந்தன னுவகை யுள்ளத்தான்

அது சொல் கேட்டு - இராமபிரானுடைய அந்தச் சொல்லைச் செவியேற்று, அடிதொழுது - திருவடிகளைப் பணிந்து, 'சுற்றிய - சூழ்ந்த, பல்பெரு தேரொடும் - பலவாகிய பெரிய இரதத்துடனே, அரக்கர் பண்ணையைக் - இராக்கதப் பெருங்கூட்டத்தினை, இங்கு கொல்வென் - இப்பொழுதே கொல்வென்; அன்னது காண்டி - அச்

செயலைக் கண்ணுறுவாயாக’, என - என்று, உவகை உள்ளத்தான் - மகிழ்ச்சி நிரம்பிய மனத்தினனாய், ஒல்லையில் எழுந்தனன் - விரைந்து கிளம்பினான் (இலக்குவன்), கொல் : அசை.

சொல்லது - அது பகுதிப் பொருள் விகுதியுமாம். பண்ணை - பெரும் தொகுதி. ஒல்லை - விரைவு; ‘ஒல்லைச் செருவேட்டு’ (கிட்கிந்தா. 263).

பி - ம். 1. சொல்லிது ; கேட்டவன், கேட்டபின்.

2. அரக்கன்.

3. கொல்லுவனிங்கிது ; காண்டிகோ. 44

## அங்கதனார்ப்பும் இராமபிரானது சங்கநாதமும்

2421. அங்கத னார்த்தன னசனி யேறென
மங்குலி னதிர்ந்தன வயவன் றேர்புனை
சிங்கமு நடுங்குறத் திருவி னாயகன்
சங்கமொன் றொலித்தது கடலுந் தள்ளுற.

வயவன் தேர் புனை சிங்கமும் - வீரனான இந்திரசித்தின் தேரிற் பூட்டிய சிங்கங்களும், நடுங்குற - நடுக்கம் எய்துமாறு, மங்குல் நின்று அதிர்ந்தன - மேகத்தினின்று முழங்கினவான, அசனி ஏறு என - பேரிடிகள் போன்று, அங்கதன் ஆர்த்தனன் - அங்கதன் ஆரவாரம் செய்தனன்; கடலும் தள்ளுற - கடல் இரைச்சலும் பின்னிடுமாறு, திருவின்நாயகன் சங்கம் ஒன்று ஒலித்தது - இலக்குவன் சங்கம் ஒன்று முழங்கியது.

அசனி - இடி; ‘மாதர், அடங்கலும் அசனிகேட்ட வளையுறை யரவ மொத்தார்’ (யுத்த. 2220). மங்குல் - மேகம்; ‘மங்குலிற் பொலிந்தனால மாதுமை யுடைத்து மாதோ’ (சுந்தர. 1130). வயவன் - இந்திரசித்து. திருவின் நாயகன் : வீரத்திருவிற் குடையவன். கைங்கர்யலக்ஷ்மி தங்கப்பெற்றவனுமாம்.

பி - ம். 2. மங்கிநின் றுதிர்ந்துக வயவற் ; தேர்புனை.

4. ஒலித்தனன், ஊதினான். 45

## அரக்கர்படையை இலக்குவன் அழித்தல்

2422. எழுமழுச் சக்கர மீட்டி தோமரம்
முழுமுரட் டண்டுவேன் முசுண்டி மூவிலை
கழுவயிற் கப்பணங் கவண்கல் கன்னகம்
விழுமழைக் கிரட்டிவிட் டரக்கர் வீசினர்.

எழு மழு சக்கரம் ஈட்டி தோமரம் - எழுக்கள் மழு சக்கரம் ஈட்டி தோமரம், முழு முரண் தண்டு - நிறைந்த வன்மைகொண்ட கதாயுதம், வேல் முசுண்டி - வேற்படை முசுண்டி, மூவிலை கழு - மூன்று இலை வடிவான முனையுடன்கூடிய கழு, அயில் கப்பணம் - கூரிய கப்பணம், கவண் கல் - கவணில் அமைத்து வீசும் கல், கன்னகம் - கன்னகம் ஆகிய இப்படைகளை, விழு மழைக்கு இரட்டி - விண்ணின்று வீழும் மாரிக்கு இரு மடங்காக, அரக்கர் விட்டு வீசினர் - இராக்கதர் விட்டெறிந்தனர்.

எழு - தூண்போன்று நீண்டு பருத்த ஓர் படைக்கலம்; 'எழுவினும் உயர்ந்த தோளாய்' (அயோத்தி. குகப். 33). மழு - பரசு, எரியீட்டி என்றும் கோடாலி யென்றும் கூறுவர்; 'மாமழுச் சூலம்பாடி' (திருவாச. 9, 17). கப்பணம் - கைவேல்; (திவா.). ஆணெருஞ்சி முள்போல் இரும்பால் பண்ணிய கருவி; 'கப்பணம் சிதறினன்' (சீவக. 285). கன்னகம் - கன்னக்கோல்; கன் என்ற தாதுக்கு அகழ்வது என்பது பொருள்; 'கன்னகமின்றியும் கவைக்கோ லின்றியும்' (சிலப். 16, 142). இரட்டி - இரு மடங்கு; 'அன்னதனை யறிந்தன்றோ வன்பிரட்டி கொண்டது நான் அறிவிலேனோ' (ஆரணிய. 351); 'ஏம்பலாசைக் கிரட்டிவந் தெய்தினன்' (யுத்த. மீட்சி. 21) அரக்கர் விட்டு வீசினர் என்க.

பி - ம். 1. எழுமரச்.
2. முழுமுதல்.
3. கழுவயக்; கணைகற்; பின்னகம்.
4. அரக்கன் வீசினன்.

2423. மீனெலாம் விண்ணினின் றொருங்கு வீழ்ந்தென
வானெலா மண்ணெலா மறைய வந்தன
கானெலாந் துணிந்துபோய்த் தகர்ந்து காந்தின
வேனிலா னனையவன் பகழி வெம்மையால்.

வேனிலான் அனையவன் - வயந்த காலத்துக்குரியவனான மாரனையொத்த பேரழகினையுடைய இலக்குவன் தன், பகழி வெம்மையால் - வாளிகளின் கடுமையால், மீன் எலாம் விண்ணின் நின்று ஒருங்கு வீழ்ந்தது என - நட்சத்திரங்கள் எல்லாம் விண்ணினின்று ஒருங்கு வீழ்வனபோன்று, வான் எலாம் மண் எலாம் மறைய வந்தன - வான் முழுதும் மண் முழுதும் மறையுமாறு வந்தனவான, கான் எலாம் - படைக்கலத் தொகுதிகள் அனைத்தும் துணிந்துபோய் - துண்டுபட்டு, தகர்ந்து - நுறுங்கி, காந்தின - ஒளிவிட்டுக் கிடந்தன.

வேனிலான் அனையவன் - இலக்குவன்; 'வேனிலா னிவனென விளங்கு காலையில்' (வில்லி. பா. 34); 'வேனிலான் மேனியா' (யுத்த. மருத்து. 87); வேனில் ஆறு பருவங்களில் ஒன்று; இது இளவேனில் முதுவேனில் என்று இரண்டாகும். சித்திரை வைகாசி மாதங்கள் இளவேனில், ஆனி ஆடி மாதங்கள் முதுவேனில்; 'வேனில் வேள்மலர்க் கணைக்கும்' (திருவாச. திருச் சதகம். 19).

பி ம். 1. விழ்ந்தன.
2. வந்தெனத்.
3. தான்; தணந்து; சாய்ந்தன.

47

2424. ஆயிரந் தேரொரு தொடையி னச்சிறும்
பாய்பரிக் குலம்படும் பாகர் பொன்றுவர்
நாயகர் நெடுந்தலை துமியு நாமறத்
தீயெழும் புகையெழு முலகந் தீயுமால்.

ஒரு தொடையின் - ஓர் அம்பில், ஆயிரம் தேர் அச்சு இறும் - ஆயிரம் தேர்கள் அச்சு முரிந்து விழும்; பாய்பரி குலம் படும் - தாவிச்செல்லும் தன்மையுள்ள குதிரைக் கூட்டங்கள் மரித்து

விழும்; பாகர் பொன்றுவர் - பாகரும் இறப்பர்; நாம் அற - அச்சம் நீங்கும்படி, நாயகர் நெடு தலை துமியும் - தலைவர்களின் பெரிய தலைகள் துணிபடும்; தீ எழும் - தீ மேற்கிளம்பும்; புகை எழும் - புகையும் மேலெழும்; உலகம் தீயும் - உலகமும் எரிந்து படும். ஆல் : அசை.

இலக்குவன் விடுக்கும் திருவாளியின் நிகழ்ச்சி இங்குக் குறிக்கப்பட்டது. பாகர் - தேர்ப்பாகர், பரிப்பாகர். நாம்: அச்சம்; நாம் உரும் என்பன அச்சத்தைக் குறிக்கும் சொல்.

பி - ம். 1. அச்சறும்.

3. தலைதுணியும்; நாகமும்.

4. உலகும்; தீய்ந்தற. 48

2425. அடியறுந் தேர்முர ணாழி யச்சிறும்
வடிநெடுஞ் சிலையறும் வாசி மார்பறும்
கொடியறுங் குடையறுங் கொற்ற வீரர்தம்
முடியறு முரசறு முகிலும் சிந்துமால்.

தேர் அடி அறும் - தேரின் அடிப்பாகம் அற்றிடும்; (அன்றியும்), முரண் ஆழி அச்சு இறும் - வலிமையுடைய சக்கரம் அச்சுடனே அற்றிடும்; வடி - தேர்ந்தெடுத்து(த் தேரில் வைக்கப்பட்டுள்ள), நெடு சிலை - நீண்ட வில், அறும் - அற்றிடும்; வாசி - தேரிற் பூட்டிய குதிரை, மார்பு அறும் - மார்பு பிளக்கப்பெறும்; கொடி அறும் - கொடி அறுந்துபடும்; குடை அறும் - குடை அற்றிடும்; கொற்றம் வீரர் தம் - வெற்றியமைந்த வீரருடைய, முடி அறும் - முடிகள் அற்றிடும; முரசு அறும் - வீரமுரசு கிழிந்துபடும்; முகிலும் சிந்தும் - மேகமும் சிதர்ந்து விழும். ஆல் - அசை.

சொற்பொருட்பின்வருநிலையணி. இச்செய்யுளில் அடியென்று தொடங்கி இறுதி யடியில் முடி என்று வந்தது காண்க.

பி - ம். 1. அடியிறும்.

2. அக்கு.

4. முழுதும். 49

2426. இன்னதோ ருறுப்பிவை யினைய தேர்பரி
மன்னவ ரிவரிவர் படைஞர் மற்றுளோர்
என்னவோர் தன்மையுந் தெரிந்த தில்லையால்
சின்னபின் னங்களாய் மயங்கிச் சிந்தலால்.

(போரரங்கில் அனைவரும்) சின்னபின்னங்களாய் மயங்கி சிந்தலால் - கண்டதுண்டமாகச் சிதறிக் கலந்து சிதறியதனால், இன்னது ஓர் உறுப்பு - இது இன்ன உறுப்பு, இவை இனைய தேர் பரி - இவைகள் இப்படிப்பட்ட தேர்களும் குதிரைகளும், இவர் மன்னவர் - இவர்கள் அரசர், இவர் படைஞர் - இவர்கள் சேனை வீரர்கள், மற்றுளோர் - (இவர்கள்) பிறரும் உள்ளவர்கள், என்ன - என்று, ஓர் தன்மையும் தெரிந்தது இல்லை - ஓர் தன்மையும் அறியப்பட்டதில்லை. ஆல் - அசை.

நால்வகைப் படைகளும் இலக்குவன் வாளியால் துணிபட்டு உருத்தெரியாமல் கலந்து கிடந்தமையின், இன்னார் தலையின்னாரது, 'இன்னார் அவையவங்கள் இவை, இன்னதன் பாகம் இது என்று அறியக்கூடவில்லை எனப்பட்டது; இதனை நாழி லாட்டு என்பர். சின்னபின்னங்கள் : யுத். 2113 உரை காண்க. மயங்குதல் - கலத்தல்; 'தமிழ் தலைமயங்கிய தலையாலங் கானத்து' (புறநா. 19).

பி - ம். 1. இன்னவோர். இன்னதோல்.
2. மன்னவருவர்.
4. சின்னபின்னங்களாய்; சிந்துமால்.

50

2427. தந்தையர் தேரிடைத் தனயர் வன்றலை
வந்தன தாதையர் வயிர வான்சிரம்
சிந்தின காதலர் தேரிற் சின்னமாய்
அந்தரத் தம்பொடு மற்றெ ழுந்தன.

சின்னமாய் அற்று - கண்டங்களாக அறுபட்டு, அம்பொடு - சரத்துடனே, அந்தரத்து எழுந்தன - விண்ணில் எழுந்தனவாகிய, தனயர் வல் தலை - மக்களின் வலிய சிரங்கள், தந்தையர் தேர் இடை - (அம்மக்களின்) பெற்றோர்கள் (ஊர்ந்து வந்த) தேரிடத்து,

வந்தன - வந்து வீழ்ந்தன; தாதையர் வயிரம் வான் சிரம் - தந்தைமார்களின் உறுதிவாய்ந்த பெரிய தலைகள், காதலர் தேரில் சிந்தின - புதல்வர்களின் தேரிடத்துச் சிதறிக்கிடந்தன.

அம்பினால் துணிபட்ட தந்தையர் சிரங்கள் தனயரிடத்திலும், தனயர் சிரங்கள் தந்தைமாரிடத்திலும் வீழ்ந்தன எனப்பட்டது. இருசாராரும் ஒன்றுபட்டுத் தகாதவழியை மேற்கொண்டு பொரு திறந்தமையின், ஒருவரை யொருவர் கண்டு தம் செயற்கிரங்குவது போலும் இருந்தன என்க. இங்குப் 'பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்' (யுத்த. 1213) என்ற இடத்துக் கூறிய குறிப்புக் காண்க. தனயன்: 'நேமியான் தனையனும்' (அயோத்தி. பள்ளி. 19). தாதை - தந்தை; 'தாதையப்பரி சுரை செய' (அயோத்தி. மந்திரப். 70). சின்னமாயற்று என இயைக்கப் பட்டது. சின்னமாயந்தரத் தம்பொடு மற்றெழுந்தன என்ற தொடரை இடைநிலை விளக்காக முன்னும் பின்னும் இயைத்துப் பொருள் கொள்க.

பி - ம். 1. தந்தையை.

2. கரதலஞ்; சிந்தின; சிரந்தலத்திடை; காதலர்க் கியைந்த; தேரிடை.

51

2428. செம்பெருங் குருதியிற் றிகழ்ந்த செங்கண்மீன்
கொம்பொடும் பரவையிற் றிரியுங் கொட்பெனத்
தும்பையந் தொடையலர்த் தடக்கை தூணிவாங்
கம்பொடுந் துணிந்தன நிலையொ டற்றன.

தூணி - தூணியினின்றும், வாங்கு அம்பொடும் - எடுத்த சரத்தினைக் கைப்பற்றிய, நிலையொடு - நிலைமையுடன், துணிந்தன அற்றன - துணிபட்டு அறுந்தனவாகி, தும்பை அம் தொடையலர் தட கை - போர்க்குரிய தும்பையாகிய அழகிய மாலை விளங்கப்பெற்ற பெரிய கரங்கள், செம் கண் மீன் - செந்நிற மான விழிகளையுடைய மீன்கள், கொம்பொடும் பரவையில் திரியும் கொட்பு என - கொம்புடனே கடலிடை அலைந்து சுற்றும் தன்மைக்கு ஒப்பாக, செம் பெரு குருதியில் திகழ்ந்த - செந்நிற மான பரந்த உதிரத்தில் விளங்கின.

அம்பினைப்பற்றிய கைகளுக்குக் கொம்புமீன் ஒப்பு; கொம்பு மீன், சுறு முதலியன. 'சுறவினத்தன்ன வாளோர் மொய்ப்ப' (புறநா. 13). பரவை: பரந்திருத்தலின் கடலுக்குக் காரணக்குறி. தும்பை - போர்மாலை. தூணி - ஆவம். துணிந்தன - துணிந்தன வாய்; முற்றெச்சம்.

பி - ம். 2. கொட்பன.

3. தும்பியந் தொடைமலர், தும்பையுந் தொடையலார், தும்பையந் தொடையலார்.

4. சிலையொடு. 52

2429. தடிவன கொடுஞ்சரந் தள்ளத் தள்ளுற
மடிவன கொடிகளுங் குடையு மற்றவும்
வெடிபடு கடனிகர் குருதி வெள்ளத்திற்
படிவன வொத்தன பறவைப் பன்மைய.

தடிவன கொடுசரம் - அறுக்கும் தன்மையவாய கொடிய அமபு, தள்ள தள்ளுற - மிகுதியாகத் துணித்து வீழ்த்தலின், மடிவன - அறுந்து விழுந்தனவாய, கொடிகளும் குடையும் - கொடிகளும் குடைகளும், மற்றவும் - மற்றும் உள்ளனவும், வெடிபடு கடல் நிகர் - அஞ்சும் தன்மை பொருந்திய கடலை ஒத்த, குருதி வெள்ளத்தில் - உதிரப் பெருக்கிடை, படிவன பன்மைய பறவை ஒத்தன - வீழ்வனவாகிய பலவகைப் பட்ட பறவைகளை ஒத்தன.

தடிவன - வினையாலணையும் பெயர். தள்ள-மிகுதியாக. வெடி - அச்சம்; (பிங்)*; ஓசையுமாம்.

பி - ம். 3. முடிவுறு பெரும்பிணக் கணத்தின் மொய்த்தன, முடிவறு பிணப் பெருங்கனத்தின் மொய்த்தன.

4. படிவன போன்றன; பான்மைய. 53

## வேறு

2430. சிந்து ரங்களின் பருமமும் பகழியுந் தேரும்
குந்து வன்னெடுஞ் சிலைமுதற் படைகளுங் கொடியும்
இந்த னங்களா யிறந்தவர் விழிக்கன லிலங்க
வெந்த வெம்பிணம் விழுங்கின கழுதுகள் விரும்பி.

சிந்துரங்களின் பருமமும் - யானைகளின மேல் இடும் தவிசும், பகழியும் தேரும் - அம்புகளும் தேரும், குந்து - (அம்பு நன்கு பதிகின்ற), வல்நெடு சிலை முதல் படைகளும் கொடியும் - வலிய நீண்ட வில் முதலான போர்க் கருவிகளும் கொடியும், இந்தனங்களாய் - விறகுகளாக (அமைய), இறந்தவர் விழி கனல் இலங்க - மரித்தவர்களின் விழியினின்று தோன்றுகின்ற நெருப்பு ஒளிர்தலால், வெந்த வெம்பிணம் - வெந்திட்ட கொடிய நாற்றம் வீசும் பிணங்களை, கழுதுகள் விரும்பி விழுங்கின - பேய்கள் விரும்பின வாய்த் தின்றன.

போர்க்களத்தில் போர்க் கருவிகளைக் கண்ணுறுங்கால் வீரர்கள் விழியில், சினத்தால் தீப்பொறி பறக்கும்: எனவே பருமம் பகழி முதலானவற்றை விறகாக்கி, வீரர்கள் விழி நெருப்பினை அதனை எரிக்கும் அனலாக்கினர்; உருவகம். சிந்துரம்: யானை; 'சிந்துரம் வயப்புரவி' (ஆரணிய. 524); 'சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின் மருப்பொசித்த செங்கண்மாலே' (வில்லி. பா. கிருட்டினன் தூது. 11) பருமம்: யானைக் கழுத்திடு மெத்தை; 'பருமமு முதுகிடு படிகையும்' (யுத்த. 1792); 'பருமங்களையாப் பாய்பரிககலிமா' (நெடுநல். 179) இதனை 'அம்பாரி என்ப' (சீவக. 203); குந்துதல் - நன்கு பதிதல். இந்தனம்: விறகு; 'இன்னல் நெஞ்சினோ டிந்தனத் தேற்றினான்' (யுத்த. இராவணன் வதை. 248); 'தறிந்த விந்தனந் தினந்தொறுந்தாங்கி' (திருவிளை. விறகு. 14); 'வெந்த வெம்பிணம்' வெந்த நிலையிலும் வெம்பிணம் என்றது இறந்த நிலையிலும் காணப்பட்ட முகத்தின் கொடுமை நோக்கி. கழுதுகள் - பேய்கள்; 'கழுதொடு காட்டிடை நாடகமாடி' (திருவாச. திருச் சதகம். 7).

பி - ம். 3. கனல் பிறங்க.
4. அருந்தின ; கழுகினம். 54

2431. சில்லி யூடறச் சிதறின சிலசில கோத்த
வல்லி யூடற மறிந்தன புரவிகள் மடியப்
புல்லி மண்ணிடைப் புரண்டன சிலசில போரால்
வில்லி சாரதி யொடும்படத் திரிந்தன வெறிய.

(பகைவர் வீசியதனுல்), சில - சில தேர்கள், சில்லி ஊடு அற சிதறின - சக்கரங்கள் நடுவே முறியச் சிதறுண்டன; சில - சில தேர்கள், கோத்த - (தம்மில்) இணைத்த, வல்லி ஊடு அற - குசைக் கயிறுகள் இடையே அறுந்துவிட, மண் இடை மடிய - தரையில் மடியும்படி, புரவிகள் - குதிரைகள், புல்லி புரண்டன - தழுவிப் புரண்டனவாய், மறிந்தன - உயிர் மடங்கி வீழப் பெற்றன; சிலசில - சிற்சில தேர்கள், போர் ஆள் - போரினை மேற்கொண்ட, வில்லி சாரதியொடும் - வில்லாளி பாகனுடனே, பட - மரித்திட, வெறிய திரிந்தன - வறிதாகத் திரிவனவாயின.

சில்லி - சக்கரம்; 'சில்லியங் தேர்மேற்' (யுத்த. மூலபல. 3); வல்லி - குசைக் கயிறு; போராள்; போரை ஆள்கின்ற; வெறிய - வெறியனவாய்.

பி - ம். 1. ஊடுற ; சேர்ந்து.
2. மறைந்தன ; மறையப் ; மறியப். 55

2432. அலங்கு பன்மணிக் கதிரன குருதியி னழுந்தி
விலங்கு செஞ்சுடர் விடுவன வெளியின்றி மிடைந்த
குலங்கொள் வெய்யவ ரமர்க்களத் தீயிடைக் குளித்த
இலங்கை மாநகர் மாளிகை நிகர்த்தன விரதம்.

அலங்கு - அசைந்தசைந்து ஒளிவிடுகின்ற, பல்மணி கதிரன - பலவகை மணிகளின் ஒளியை யுடையனவும், குருதியின் அழுந்தி - உதிரத்தில் அமிழ்ந்து, விலங்கு - விளங்குகின்ற, செம் சுடர் விடுவன - செந்நிற ஒளியை வெளிவிடுவனவுமாகி, வெளி இன்றி மிடைந்த இரதம் - இடைவெளியின்றி நெருங்கிய தேர்கள், குலம் கொள் - கூட்டமாகவுள்ள, வெய்யவர் - கொடிய அரக்கர்களின், அமர்களம் தீ இடை - யுத்த களத்துத் தோன்றிய நெருப்பினிடையிலே, குளித்த - மூழ்கிய, இலங்கை மாநகர் - இலங்கை மாநகரின், மாளிகை நிகர்த்தன - மாளிகையை ஒத்து விளங்கின.

குலம் கொள்ளுதல் - கூட்டம் கொள்ளுதல். தீயிடைக் குளித்த: 'தீயிடைக் குளித்தவத் தெய்வக் கற்பினுள்' (யுத்த. 92). எரிக்கப்பட்ட இலங்கைக்குத் தேர் உவமை. விளங்கு எதுகை நோக்கி விலங்கென நின்றது.

பி - ம். 1. கதிரினம்; அழுந்த.
2. வெஞ்சுடர்; வெஞ்சரம்; வெளியின்றி.
3. வெய்யவர் மறுகிடத்; கொதித்தார்.
4. மாளிகைக் கொத்தன. 56

## இராமபிரான் அம்புவிட இந்திரசித்து தனிப்படுதல்

2433. ஆன காலையி னிராமனு மயின்முகப் பகழி
சோனை மாரியிற் சொரிந்தன னனுமனைத் தூண்டி
வான மானங்கண் மறிந்தெனத் தேரெலா மடியத்
தானுந் தேருமே யாயின னிராவணன் றனயன்.

ஆன காலையின் - அப்பொழுது, இராமனும்-இராமபிரானும், அநுமனை - மாருதியை, தூண்டி - (இந்திரசித்தின் அண்மையிற் செல்லுமாறு) தூண்டி, அயில் முகம் பகழி - கூர்மையான நுதியினை யுடைய வாளியை, சோனை மாரியில் சொரிந்தனன் - விடா மழை போன்று பொழிந்தான்; (அக்காலையில்), வானம் மானங்கள் - விண்ணில் சரித்த விமானங்கள், மறிந்தென-முறிந்து விழுந்தாற் போன்று, தேரெலாம் மடிய - தேரெல்லாம் சிதைய, இராவணன் தனயன்-இராவணன் புதல்வனான இந்திரசித்து, தானும் தேருமே ஆயினன் - தானும் (தன்) தேருமாகத் தனிப்பட்டவனானான்.

சோனை - விடாமழை (பிங்); 'சோனை மாரியினிருமடி மும்மடி துரந்தான்' (யுத்த. 2442) மானம் - விமானம்; இதனை 'வலவ்னே வா வான வூர்தி' என்ப.

பி - ம். 3. மடிந்தெனத்; மடிந்த. 57

## இந்திரசித்து ஒன்றுகூறத் தொடங்குதல்

2434. பல்வி லங்கொடு புரவிகள் பூண்டதேர்ப் பரவை
வல்வி லங்கல்போ லரக்கர்தங் குழாத்தொடு மடிய
வில்வி லங்கிய வீரரை நோக்கினன் வெகுண்டான்
சொல்வி லங்கலன் சொல்லின னிராவணன் றோன்றல்.

பல்விலங்கொடு - பல மிருகங்களுடனே, புரவிகள் பூண்ட - குதிரைகள் பூட்டிய, தேர் பரவை-தேர்த்தொகுதிகள், வல்விலங்கல் போல் - வலிய மலைகள் போல, அரக்கர்தம் குழாத்தொடு மடிய - அரக்கர் கூட்டத்தோடு அழிந்திட (அப்போது), வில் விலங்கிய வீரரை-விற்றொழிலிற் பின்னிட்ட வீரரை, நோக்கினன் வெகுண்டான் -கண்ணுற்றுச் சினந்தவனாய், இராவணன் தோன்றல் - இராவணன் புதல்வனான இந்திரசித்து, விலங்கலன் - (தன் நிலையினின்றும்) விலகாதவனாய், (இராம இலக்குவரை நோக்கி) ஒரு சொல் சொல்லினன்-ஒரு சொல்லைச் சொன்னான்.

தேர்ப்பரவை - கடல் போன்ற தேர்த்தொகுதி. 'ஏர் பரவை யிடைப்பட்ட வெண்ணைசை யெழுபரவை' (பெரியபு. தடுத்தாட். 148); விலங்கல் - மலை. 'விலங்கலைக் கால்விண்டு மேனமேலிட' (திருக்கோ. 21); நோக்கினன் - முற்றெச்சம். தோன்றல் - புதல்வன்.

பி - ம். 2. வல் விலங்குபோல்; அரக்கரைக் குலத்தொடும்; அவிய.
4. சொல் விலங்கில, விலங்கல்கள். 58

## இந்திரசித்து நீவிர் எவ்வண்ணம் பொரப் போகின்றீரென்று இராம இலக்குவரை வினவுதல்

2435. இருவி ரென்னொடு பொருதிரோ வன்றெனி னேற்ற
ஒருவிர் வந்துயிர் தருதிரோ வும்படை யோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ வுறுவது புகலும்
தருவ னின்றுமக் கேற்றுள யானெனச் சலித்தான்.

'இருவிர் என்னொடு பொருதிரோ - நீங்கள் இரண்டு பேரும் என்னுடன் போர் புரிகின்றீர்களோ? அன்று எனின் - அல்லாவிடில், ஏற்ற - என்னுடன் (பொருதற்குத்) தக்க, ஒருவிர் வந்து உயிர் தருதிரோ-ஒருவர் வந்து உயிரை விடுகின்றீர்களா? அல்லது (தனியாகவோ சேர்ந்தோ), உம் படையோடும்-உங்களுடைய சேனைகளுடனே, பொருது - யுத்தம் செய்து, பொன்றுதல் புரிதிரோ - இறத்தலைச் செய்கின்றீர்களோ? உறுவது புகலும்-நீங்கள் செய்யப் போவதைச் சொல்லுங்கள், யான் - நான், இன்று - இப்பொழுதே, உமக்கு ஏற்றுள தருவன் - உங்கட்குத் தகுந்தவற்றைச் செய்து முடிப்பேன்,' என - என்று, சலித்தான்-சினம் கொண்டுரைத்தான் (இந்திரசித்து).

ஓகாரம் - வினா; பொன்றுதல் - இறத்தல்; 'பொன்றுதல் ஒரு காலத்துத் தவிருமோ' (யுத்த. இந்திரசித்து. 10); சலித்தான் - சினம் என்று பொருள்படும் சலம் என்ற பெயரடியாகப் பிறந்த முற்று.

பி - ம். 1. இருவர்; என்னுடன்.
2. ஒருவர்; வந்தமர்.
4. தருவல்; ஒன்றுளது, உற்றுளது; சமைந்தான். 59

இலக்குவன் உன்னைக் கொல்லுமாறு சூளுற்றேன் என்று மறுமொழி இறுத்தல்

2436. வாளிற் றிண்சிலைத் தொழிலினின் மல்லினின் மற்றை
ஆளுற் றெண்ணிய படைக்கல மெவற்றினு மமரில்
கோளுற் றுன்னொடு குறித்தமர் செய்துயிர் கொள்வான்
சூளுற் றேனிது சரதமென் றிலக்குவன் சொன்னான்.

'வாளில் - வாள் கொண்டும், திண்சிலை தொழிலினில் - உறுதியான வில் ஆற்றலினாலும், மல்லினில்-மற்போர் புரிந்தும், மற்றை-வேறான, ஆள் உற்று - ஆளுதல் பொருந்தி, எண்ணிய-எண்ணப்பட்ட, படைகலம் எவற்றினும்-போர்க் கருவிகள் எல்லாவற்றாலும், அமரில் - போரில், கோள் உற்று - வன்மை பொருந்தி, உன்னொடு குறித்து - உன் நேர் நின்று, அமர் செய்து - போர் புரிந்து, உயிர் கொள்வான்-உங்கள் உயிரைக் கொள்ளும் பொருட்டு, சூளுற்றேன்-வஞ்சினம் கூறினன்; இது சரதம்-இது உறுதி,' என்று - என்று, இலக்குவன் சொன்னான் - இலக்குவன் விடையிறுத்தான்.

வாட்போர், விற்போர், மற்போர், படைக்கலப் போர் என்ற எவற்றிலும் வல்லவன் ஆதலின் இலக்குவன் வஞ்சினம் கூறினன் என்க. ஆள் உற்று: ஆள் முதனிலைத் தொழிற்பெயர். கொள்வான்: வானீற்று வினையெச்சம். சூளுறுதல்: வஞ்சினம் மொழிதல்; 'முன்னம் சூளுற வென்னாந் தோன்றல்' (யுத்த. 918); சரதம் - நிச்சயம்; 'சரதமிப் புவி யெலாம் தம்பி யோடுமிவ்' (அயோத்தி. மந்தரை. 57).

பி - ம். 1. சிலை மல்லினின்றோளினின் மற்றை.
3. குறித்தது; கொள்ளச். 60

## இந்திரசித்து இலக்குவனை நோக்கி, உன்னைக் கொன்று, பின்பு இராமனைக் கொல்வேனெனல்.

2437. முன்பி றந்தநின் றமையனை முறைதவிர்த் துனக்குப்
பின்பி றந்தவ னுக்குவென் பின்பிறந் தோயை
முன்பி றந்தவ னுக்குவெ னிதுமுடி யேனேல்
என்பி றந்தத னற்பய னிராவணற் கென்றான்.

'முன் பிறந்த நின் தமையனை - (உனக்கு) முன்னே பிறந்த உனது அண்ணனை, முறை தவிர்த்து - முறைமையினின்றும் நீக்கி, உனக்கு பின்பு இறந்தவன் ஆக்குவேன் - உனக்குப் பிறகு இறந்தவனாகச் செய்வேன்: பின்பிறந்தோயை - தம்பியாகப் பிறந்த உன்னை, முன்பு இறந்தவன் ஆக்குவென், (அண்ணனுக்கு) முன்னர் இறந்தவனாகச் செய்வேன்; இது முடியேனேல் - இதனை நான் செய்து முடிக்காமற் போனால், இராவணற்கு பிறந்ததனால் பயன் என் - இராவணனுக்கு மகனாகப் பிறந்ததனால் உற்ற பயன் யாது?' என்றான் - என்று மொழிந்தான் இராவணி.

வீரனான இராவணனுக்குப் பிறந்த வீரமகன் கடமை, தந்தையின் கருத்தை முற்றுவிப்பதே யாகும; அவன் கருத்துப்பகைவர்களாகிய இராம இலக்குவரைக் கொல்லுதல், ஆகவே முதலிற் போர்க்கு வரும் இலக்குவனைக் கொன்று, பின்னர் இராமனைக் கொல்வதாகக் கூறினன் இந்திரசித்து. பின்னே பிறந்தவனைப் முன்னே பிறந்தவனாகவும், முன்னே பிறந்தவனைப் பின்னே பிறந்தவனாகவும் செய்வதாகக் கூறியது சமத்காரம்; வயது முதிர்ந்தவர்கள் முன்னேயிறத்தலும், இளையவர் மூத்தோர்க்கு பின்னிறத்தலும் அக்காலத்து முறையாதலின், அந்த முறையை மாற்றி எனக் கூறினன்.

பி - ம். 1. உன்றம் முனை ; நும்முனை.

## பின்னும் இந்திரசித்து இலக்குவனை நோக்கி உன்னைக் கொல்வேனெனல்

2438. இலக்கு வன்னெனும் பெயருனக் கியைவதே யென்ன
இலக்கு வன்கணைக் காக்குவெ னிதுபுகுந் திடையே
விலக்கு வென்னென விடையவன் விலக்கினும் வீரம்
கலக்கு வென்னிது காணுமுன் றமையனுங் கண்ணால்.

'இலக்குவன் எனும் பெயர் உனக்கு இயைவதே - இலக்குவன் என்ற திருநாமம் உனக்குப் பொருத்தமே' என்ன - என்று (யாவரும்) எண்ணுமாறு, (உன்னை) வன் கணைக்கு இலக்கு ஆக்குவென் - (என்னுடைய) வலிய வாளிக்கு இலக்காகச் செய்வேன்; 'இது - இப்போர்க்களத்தில், இடையே புகுந்து - இடையில் நுழைந்து, விலக்குவென் - தவிர்ப்பேன்', என - என்று, விடையவன் விலக்கினும் - (எங்கட்கு வரமளித்த) காளை மாட்டினை வாகனமாகவுடைய, சிவபிரானே, விலக்கினும் - (வந்து) விலக்கினாலும் வீரம் கலக்குவென் - (அவனுடைய வீரத்தையும்) கலங்கச் செய்வேன், இது - இந்த (என்னுடைய) அரிய போர்ச் செயலை, உன் தமையனும் கண்ணால் காணும்-உன் அண்ணனும் (தன்) கண்ணால் காணப் போகின்றான்' (என்று பகர்ந்தான்).

இலக்குவன் என்ற பெயரினைச் சாமர்த்தியமாக இருபொருட்படுமாறு பாடப்பட்டது. இலக்குவன் என்பது லக்ஷ்மணன் என்ற வடசொல்லின் திரிபு: எனினும் அதனைத் தமிழ்ச் சொல்லாகவே கொண்டு கம்பநாடர், அம்புக்கு இலக்கானவன் என்று பொருள்பட அமைத்த நயம் காண்க. இனி 3-ஆம் அடியில் விலக்குவென் என்பதை விலங்கின் வலித்தலாகக் கொண்டு பொருள் கூறினாரும் உளர். இச்செய்யுள் திரிபு என்ற சொல்லணி.

பி - ம். 1. என்னே, என்றான், என்று,; என்னில்.
3. விலங்கினும்; விரம்.
3. கலக்குவன்னிது ... ... ... கண்ணால்.
4. விலக்குவ னின்னை ... ... ... விழியால்.

## இந்திரசித்து வாநரப்படைகளை யொழிப்பே னெனல்

2439. அறுப தாகிய வெள்ளத்தி னரக்கரை யம்பால்
இறுவ தாக்கிய விரண்டுவில் லினருங்கண் டிரங்க
மறுவ தாக்கிய வெழுபது வெள்ளமு மாள
வெறுவி தாக்குவ னுலகினைக் கணத்தினோர் வில்லால்.

'அறுபது வெள்ளத்தினர் ஆகிய அரக்கரை - அறுபது வெள்ளம் என்று கணக்கிடப் பெற்றவரான இராக்கதர்களை, அம்பால் - வாளியால், இறுவது ஆக்கிய - இற்றுப் போகுமாறு புரிந்த, இரண்டு வில்லினரும் கண்டு இரங்க - இருவில்லாளிகளான (இராம இலக்குவர்களும்) பார்த்துப் பரிதவிக்குமாறு, மறுவது ஆக்கிய - (அரக்கர்க்கு) மறுவை உண்டு பண்ணிய, எழுபது வெள்ளமும் மாள - எழுபது வெள்ளம் சேனையும் இறந்து படுமாறு செய்து, ஓர் கணத்தினில் - ஒரு கணப்பொழுதில், வில்லால் - என்னுடைய வில்லினைக் கொண்டு, உலகினை வெறுவிது ஆக்குவென் - உலகத்தை வெறிச்சென்று வெள்ளிட மாமாறு செய்வேன்' என்றான்.

அறுவதை இறுவதாகிய என்ற இடத்து அறுபதை இருப தாக்கிய என்ற தொனிப் பொருளும் காண்க. இருவர் வில்லினர் 'இருவர் மானிடர் தாபதர் ஏந்திய, பொருவில் வாளியர்; ஆரணிய. 365): இரங்குதல்; மனம் வருந்துதல்; 'ஈத்த திரங்கான் ஈத் தொறு ம்கிழான்' (பதிற்றுப். 61 : 13); 'தம்பியென நினைந்திரங்கித் தவிரான்' (யுத்த. 1562); மறுவாக்குதல்; களங்கம் உண்டு பண்ணுதல்; 'சூரியன்மர புக்குமோர் தொல்மறு, வாரியன் பிறந் தாக்கினை' (கிட்கிந்தா. 316); மறுவது, அதுபகுதிப் பொருள் விகுதி. வெறுவிது - வெறிச் சென்று செய்தல்,

பி - ம். 1. அறுபதாக்கிய; அரக்கர் தம் வெள்ளத்தை.
2. ஆறுய: வில்லீருங்.
3. வெறுவது, உலகையிக், உலகினிற்.

**இந்திரசித்து ‘உங்கள் உதிரம் கொண்டு இறந்த தம்பி மார்க்கும் சிற்றப்பனுக்கும் நீர்க்கடன் செய்வேன்’ எனல்**

2440. கும்பகன்னனென் றொருவனீ ரம்பிடைக் குறைத்த
தம்பி யல்லனு னிராவணன் மகனொரு தமியேன்
எம்பி மாருக்கு மென்சிறு தாதைக்கு மிருவிர்
செம்பு ணீர்கொடு கடன்கழிப் பேனென்று தெரித்தான்.

‘நீர் அம்பிடை குறைத்த - நீர் வாளியினால் வெட்டிய, கும்ப கன்னன் என்று ஒருவன் - கும்பகன்னன் என்று பெயர் படைத்த ஒருவனாகிய, தம்பி அல்லன் நான் - (இராவணனுடைய) தம்பி அல்லன் நான்; உம்மாற் (கொல்லப்படுவதற்கு); இராவணன் மகன் - (நான்) இராவணன மகன்; ஆனால் (அவன் மக்களாகிய அக்க குமாரன், அதிகாயன் என்பார் போன்று அல்லேன்); ஒரு தமியேன் - ஒப்பற்றுத் தனிப்பட்டுள்ளவன்; (உம்மைக் கொல்லும் ஆற்றலுடையேன்); எம்பிமாருக்கும் - (இறந்து பட்ட) என் தம்பிமார் கட்கும், என்சிறு தாதைக்கும் - என் சிற்றப்பனான கும்பகன்ன னுக்கும், இருவிர் - உங்களிருவருடைய, செம்புண் நீர் கொடு - உதிரமாகிய புனலைக்கொண்டு, கடன் கழிப்பேன் - (நீர்க்கடன் தீக்கடன்களைச்) செய்து முடிப்பேன்’ என்று - என்று, தெரித் தான் - அறிவித்தான்.

இந்திர சித்தின் வீரவுரை; சாதாரணமாக நீர் கொண்டு, இறந் தார்க்குக் கடன் செய்வது வழக்கு; இங்கு உதிரம் கொண்டு கழிப் பதாகக் கூறினன்; இறந்தார்க்குக் கடன் கழிப்பது பண்டை வழக்கு. ‘தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும், பொன் பொற் புதல்வர்’ (புறநா. 9) என்றமை காண்க. செம்புணீர்; உதிரம்: ‘புண்ணீர் வெள்ளத்துக் கால் தாழ்ந்து (திருவிளை. பழியஞ்சின: 10); ‘சேனை பட்டதுபட்டது செம்புணீர்’ (யுத்த. 1005).

பா - ம். 1. இராமனன்றமரிடைக் கொன்ற, ஒருவனீர மரிடைக் கொன்ற.
2. அல்ல யானிராவண னொருமகன்.
3. இருவர்.
4. கொண்டு; கழிப்பான்; இன்று, எனத்; தீர்ந்தான். 64

## உங்கள் அனைவர்க்கும் வீடணனே இறுதிக்கடன் செய்வான் எனல்

2441. அரக்க ரென்பதோர் பெயர்படைத் தவர்க்கெலா மடுத்த
புரக்கு நன்கடன் செயவுளன் வீடணன் போந்தான்
கரக்கு நுந்தைக்கு நீசெயக் கடவன கடன்கள்
இரக்க முற்றுனக் கவன்செயு மென்றன னிளையோன்.

'அரக்கர் என்பது ஓர் பெயர் படைத்தவர்க்கு எலாம்-இராக்கதர் என்பதான ஒரு நாமம் தரித்தவர் அனைவர்க்கும், அடுத்த-நிகழ்வதாக உள்ளதும், புரக்கும்-(உயிர்) ஈடேறுவதற்குரியதுமான, நல் கடன்-சிறந்த ஈமக்கடன்களை, செய-புரிதற்கு, வீடணன் போந்தான் உளன்-வீடணன் (இங்கு) வந்திருக்கின்றான்; கரக்கும் நுந்தைக்கு - இறந்து மறையப் போகின்ற உன் தந்தைக்கு, நீ செயகடவன கடன்கள் - நீ ஆற்றவேண்டிய கடன்களை, (நீ இப்போதே மரிக்கப் போகின்றாய் ஆதலால்), இரக்கம் உற்று-மனமிரங்கி, உனக்கு அவன் செயும்-உனக்கு அவன் செய்யப் போகின்றான்,' என்றனன் இளையோன் - என்று பகர்ந்தான் இலக்குவன்.

அரக்கர் என்பதோர் பெயர் படைத்தவர்க்கெலாம் என்றதனால் அரக்கர் பூண்டேயில்லாமல் அழிக்கப்படுவார்கள் என்ற குறிப்புக் காண்க. புரக்கும் - அவர்கள் நன்னிலை பெறுமாறு பேணும் என்க. போந்தான் வீடணன் உளன் என மாற்றுக. நீ என்பது இந்திரசித்தினை; அவன் என்பது இராவணனை. நீ செயக் கடவன கடன்கள்:—'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாமிரங்கி யேங்கி, யுனக்கு நான் செய்வதானேன்' (யுத்த. இராவணன் சோகப். 39). 'சுமித்திரை யுய்யவீன்ற, நன்மகன் வாளி நக்க நாயவன் உடலை நக்க, என்மக னிறந்தா னென்ன நீயெடுத் தரற்றல்' (யுத்த. 1625).

பா-ப. 1. படைத்திர்க்கெலாம், படைத்துயிர்க்கெலாம்; அடுத்துப், அடையப்.
2. மந்திரஞ்செயவுளன், நன்கடன் செய்யவும்.
3. உற்தைக்கும்.
4. உமக்கிவன்; இளங்கோன், இளங்கோ.

## இந்திரசித்தின் கடும்போர்

2442. ஆன காலையி னயிலெயிற் றரக்கனெஞ் சழன்றான்
வானும் வையமுந் திசைகளு மியாவையு மறையப்
பானல் வேலையைப் பருகுவ சுடர்முகப் பகழி
சோனை மாரியி னிருமடி மும்மடி சொரிந்தான்.

ஆன காலையின் - அப்போது, அயில் எயிற்று அரக்கன் - கூர்மையான பற்களையுடைய இந்திரசித்து, நெஞ்சு அழன்றான் - மனம் கொதித்தவனாய், வானும் வையமும் திசைகளும் யாவையும் - வானமும் நிலனும் திக்குகள் யாவையும், மறைய - மறையுமாறு, நல்பால் வேலையை - சிறந்த பாலாழியைப் போன்ற குரங்குப்படையை, பருகுவ - குடிப்பனவான, சுடர் முகம் பகழி - ஒளியை நுதியிலே கொண்ட அம்பினை, சோனை மாரியின் - விடாமழை பொழியும் மேகத்தினும், இருமடி மும்மடி சொரிந்தான் - இருமடங்கு மும்மடங்கு (அதிகமாகச்) செலுத்தினான்.

அயிலெயிறு: 'அரவாகிச் சுமத்தியால் அயில் எயிற்றின் ஏந்துதியால்' (ஆரணிய. 58); பால் நல்வேலை, இலக்கணையால் பால் போன்று வெண்ணிறமான குரக்குப் படையைக் குறித்து நின்றது. யுத்த. 321. உரை காண்க. சுடர்முகப் பகழி: எரிமுகக் கணை; ஆக்கினே யாத்திரம் என்ப. சோனை மாரி: விடாமழை. 'சோனை மாரியிற் சொரிந்தனன்' (யுத்த. 2433); சோனை: நீருண்டமேகம்; (சுந்தர. 701); இருமடி மும்மடி 'இற்ற தானையினிருமடி' (யுத்த. 1251); 'மும்மடி யிராவணனென்னும் படிமையோர்' (யுத்த. மூலபல. 151).

பா - ம். 1. அழன்று.
2. வானம்; பரவையும்.
3. பானுவேலையை, பானவேலையை.
4. சொரிந்தான்.

2443. அங்க தன்றன்மே லாயிர மவற்றினுக் கிரட்டி
வெங்கண் மாருதி மேனிமேல் வேறுள வீரச்
சிங்க மன்னவ ராக்கைமே லுலப்பில செலுத்தி
எங்கும் வெங்கணை யாக்கின னிராவணன் சிறுவன்.

இராவணன் சிறுவன் - இராவணன் புதல்வனான இந்திர சித்து, அங்கதன் தன்மேல் ஆயிரம் - அங்கதன் மீது ஆயிரம் சரங்களும், அவற்றினுக்கு இரட்டி - அவற்றினும் இருமடங்கான இரண்டாயிரம் சரங்களும், வெம் கண் - சினத்தால் வெம்மையுற்ற விழிகளையுடைய, மாருதி மேனிமேல் - அநுமனது உடலின் மீதும், வேறு உள - வேறாக உள்ள, வீரசிங்கம் அன்னவர் ஆக்கைமேல் - வீரசிங்கங்கள் போன்ற படை வீரர்கள் மீதும், உலப்பில செலுத்தி - கணக்கிட முடியாத அம்புகளும் விடுத்து, எங்கும் வெம்கணை ஆக்கினன் - போரரங்கில் எல்லா இடங்களிலும் கொடிய கணைகள் நிரம்பும்படி செய்தான்.

வெங்கண்மை: கொடுமையுமாம். 'வெங்கண் எரியப் புருவ மீதுற விடைத்தான்' (ஆரணிய. 742); சிங்க மன்னவர்; இராம லிலக்குவர். எங்கு பார்த்தாலும் கணை மயமாக ஆக்கினன் இந்திர சித்து. இவ்வளவு பராக்கிரமச் செயல்களைச் செய்தவன் வயது வந்தவனோ முதிர்ந்தவனோ அன்று, இராவணன் சிறுவன் என்றதன் நயம் காண்க.

பி - ம். 2. வீரர்.

67

2444. இளைய மைந்தன்மே லிராமன்மே லிராவணி யிகலி
விளையும் வன்றிறல் வாநர வீரர்மேன் மெய்யுற்
றுளையும் வெஞ்சரஞ் சொரிந்தன னுழிகை யொன்று
வளையு மண்டலப் பிறையென நின்றதவ் வரிவில்.

இராவணி - இராவணன் மகனான மேகநாதன், இளையமைந்தன் மேல் இராமன் மேல் - இலக்குவன் மீதும் இராமபிரான் மீதும், இகலி விளையும் - மாறுபாடுற்றுத் தோன்றுகின்ற, வல்திறல் வாநர வீரர் மேல் - வலிய திறல் அமைந்த வாநர வீரர்கள் மீதும், மெய்உற்று - உடலில் பொருந்தி, உளையும் - துன்புறுத்தக்கூடிய, வெம்சரம் சொரிந்தனன் - கொடிய வாளிகளைப் பொழிந்தான்;

வரிவில் - (அந்த இந்திரசித்தினுடைய) கட்டமைந்த வில்லானது, வளையும் - வளைந்து காணப்படுகின்ற, மண்டலம் பிறைஎன - வான மண்டலத்திற்றோன்றும் பிறை மதிபோல, நாழிகை ஒன்று நின்றது - ஒரு நாழிகை நேரம் நின்றது.

மைந்தன் - மகன். மைந்து : வலிமை ; தந்தைக்கு இறுதிக் காலத்தில் வலிமை தந்து நிற்பவன் என்ப. மதலை என்ற சொல்லும் இச்சொற் போன்றது. நாழிகை : 24 நிமிடங்கள். $2\frac{1}{2}$ நாழிகை ஒரு மணி நேரம் ; மண்டலம் வளையும் பிறைஎன்க. வரிவில் : 'வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்'(ஆரணிய. 365).

பி - ம். 1. அநுமன்மேல் ; இகலில்,

2. மெய்யிற்று.

3. உளைய ; ஒன்றில்.

4. மண்டலம், நின்றதவ். 68

2445. பச்சி மத்தினு முகத்தினு மருங்கினும் பகழி
உச்சி முற்றிய வெய்யவன் கதிரென வுமிழக்
கச்ச முற்றவன் கைத்துணைக் கடுமையைக் காணு
அச்ச முற்றனர் கண்புதைத் தடங்கின ரமரர்.

உச்சி முற்றிய வெய்யவன் - உச்சிக் கண் வந்துள்ள முற்றிய வெம்மை யுடையவன் ஆன சூரியனுடைய, கதிர் என - கிரணங்கள் போன்று, பகழி - கொடிய அம்புகளை, பச்சிமத்தினும் - பின் புறத்திலும், முகத்தினும் - முகத்திலும், மருங்கினும் - பக்கங்களிலும் உமிழ - சிந்தும்படி, கச்சம் உற்றவன் - (போரில் பகைவரைத் தீர்த்துக் கட்டுமாறு தனக்குள்) ஓர் ஒப்பந்தம் (சூளுறவு) செய்து கொண்ட இந்திரசித்தின், துணைகை கடுமையை - இருகரங்களின் கடுமையை, காணு-வேகத்தினைக் கண்டு, அமரர் அச்சம் உற்றனர்- தேவரும் பயம் அடைந்தவர்களாய், கண் புதைத்து அடங்கினர்- விழிகளைக் கைகளால் மறைத்துக் கொண்டு ஒடுங்கினர்.

பச்சிமம்-மேற்கு ; இங்கு பின்புறம். உச்சி முற்றிய வெய்யவன்; நண்பகல் கதிரோன். கச்சம் ; ஒப்பந்தம் ; 'சபதம்' அடிக்கண்

மாரும் அவிரோதத்தாற் கூடிச் செய்த கச்சமாதும்' (சீவக. 2219); காணு, செய்யா வென்னும் வாய்பாட்டு உடன் பாட்டு வினை யெச்சம்; 'கூற்றமுங் கட் புலம் புதைப்ப' (யுத்த. 1970).

பி - ம். 1. மருங்கினு முகத்தினும்.

3. கச்சு முற்றவன்: கைத்தொழிற், தகத்தொழிற்.

4. ஒடுங்கினர். 69

2446. மெய்யிற் பட்டன படப்படா தனவெலாம் விலக்கித்
தெய்வப் போர்க்கணைக் கத்துணைக் கத்துணை செலுத்தி
ஐயற் காங்கிளங் கோளரி யறிவிலா னறைந்த
பொய்யிற் போம்படி யாக்கினன் கடிதினிற் புக்கான்.

ஆங்கு - அப்போது, ஐயற்கு இள கோளரி - இராமபிரானுக்கு, இளையவன் ஆன சிங்கம் போன்ற இலக்குவன், கடிதினில் புக்கான் - விரைந்து போர்க்களத்துப் புகுந்தவனாய், மெய்யில் பட்டன படபடாதன எலாம் விலக்கி - தன் உடலில் தைத்தன தைக்கப் பெறுதன என்ற அனைத்தையும் விலகச் செய்து, அறம் இலான் அறைந்த பொய்யில் - தருமமில்லாதவன் கூறிய பொய்யினைப் போன்று (பகைவன் எறிந்த), தெய்வம் போர்க்கணைக்கு - தெய்வத்தன்மை வாய்ந்த, போரில் எய்யப்பட்ட அம்புகளை, அ துணைக்கு அதுணை செலுத்தி-அவ்வளவுக்கு அவ்வளவு (தெய்வவாளிகளை) விடுத்து, (அக்கணைகளை) போம்படி - பாழாகும் படி, ஆக்கினன் - செய்தான்.

அறமிலான் அறைந்த பொய் - உவமையணி; அறமிலான் அறைந்த பொய்யில் போம்படி (ஒப்பு): 'மைக்கரு மனத்தொடு வஞ்சன் மாண்பிலன், பொய்க்கரி கூறிய கடுஞ்சொல் போன்றவே' (ஆரணிய. 485). திறனிலா ரெடுத்த தீமொழி யெல்லாம (கலித். 27 : 21).

பி - ம். 2. போர்க்கணை.

3. அறமிலானறைந்த, அறமிலான் மறைத்த.

4. போம்படி போக்கினன். 70

2447. பிறகி னின்றனன் பெருந்தகை யிளவலைப் பிரியான்
அறனி தன்றென வரக்கன்மேற் சரந்தொடுத் தருளான்
இறவு கண்டில ரிருவரு மொருவரை யொருவர்
விறகின் வெந்தென விசும்பிடைச் செறிந்தன விசிகம்.

பெருந்தகை - பெருமைக் குணவானான இராமபிரான், 'இது அறன் அன்று - இது தரும நெறியாகாது' என - என்று, அரக்கன்மேல் சரம் தொடுத்து அருளான் - இந்திரசித்தின்மீது வாளி தொடுக்காதவனாகி, இளவலை பிரியான் - இலக்குவனைப் பிரியாதவனாய், பிறகில் நின்றனன் - பின்புறத்திலேயே நின்றான்; இருவரும் - இந்திரசித்து இலக்குவன் என்ற இருவரும், ஒருவரை ஒருவர் இறவு கண்டிலர் - ஒருவர் ஒருவரை (வெற்றியினால்) மேம்படுவதை (யாரும்) பார்த்தாரில்லை; விசிகம் - (அவர்கள் விடுத்த) வாளிகள், விறகின் வெந்தென - விறகு போன்று வெந்தனவாய், விசும்பிடை செறிந்தன - விண்ணகத்தே நெருங்கின.

பிறகு - பின்புறம்; (அக. நி.); 'பெருந்தகை: 'பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக்கத்தை' (தேவா. 657 : 1); இளவல் - இளையவன்; அல் - பெயர் விகுதி. இந்திரசித்து நிராயுதபாணியாகவே, அவன்மீது வாளி தொடுப்பது அறப்போராகாது என்று கருதி இராமபிரான் வாளா நின்றனன் எனக. புறத்திணை. 10. நச். உரை காண்க. 'தழிஞ்சி' என்னும் புறப்பொருட்டுறையும் காணத் தகும். தொடுத்தருளல் ஒரு சொல் : தொடுத்தல் என்றே பொருள்படும். பெரும்பாலும் வைணவ சமயத்தில் இந்த அருளல் என்பது சொற்களுடன் சேர்ந்தே வழங்கும். கேட்டருளல், எழுந்தருளல் என்பன காண்க. இறவு : வுவிகுதி பெற்ற தொழிற் பெயர். வெந்தென: வெந்தது என. விசிகம்: அம்பு. விசையுடன் செல்வது என்ற காரணம் பற்றி வந்த பெயர் போலும். 'தடந் தோளினு மார்பினும் விசிகம்' (யுத்த. வேலேற்ற. 20).

பி - ம். 1. பிறகு.
2. அல்லவென்று ; சரந்துரந்து.
4. விசும்பிடைக் கண்டிலன் ; சென்றன.

2448. மாடெ ரிந்தெழுந் திருவர்தங் கணைகளும் வழங்கக்
காடெ ரிந்தன கனவரை யெரிந்தன கனக
வீடெ ரிந்தன வேலைக ளெரிந்தன மேகம்
ஊடெ ரிந்தன வூழியி னெரிந்தன வுலகம்.

இருவர் - இரண்டுபேரும், தம் கணைகளும் - தம்து அம்பு களும், வழங்க - விடும்போது, மாடு - பக்கங்களில், எரிந்து எழுந்து - ஒளி விட்டுக்கொண்டு எழுதலாலே, காடு எரிந்தன - காடுகள் எரிந் தன ; கனம்வரை எரிந்தன - பெரிய மலைகள் எரிந்தன, கனகம் வீடு எரிந்தன - பொன்மயமான வீடுகள் எரிந்தன, வேலைகள் எரிந்தன - (நீர் நிறைந்த) ஆழிகளும் எரிந்தன ; மேகம் ஊடு எரிந்தன - மேகங் களின் உட்புறமும் எரிந்தன ; உலகம் ஊழியின் எரிந்தன - உலகம் ஊழித் தீயில் எரிவது போன்று எரிந்தன.

மாடு : பக்கம் ; 'மாடுபற்றி யிடங்கர் வலித்திட' (கிட்கிந்தா. 538) கனகம் வீடு ; 'மர மடங்கலும் கற்பகம் மணியெலாம் கனகம்' (சுந்தர. 104) ; 'ஊழியின் : ஊழித் தீயின்.

பி - ம். 1. எரிந்தெரிந்து, எரிந்தன ; சரங்களின் மயங்கிச், சங்களும் வழங்கக்.
3. விரிஞ்சன்.
4. ஊரெரிந்தன.

72

2449. படங்கொள் பாம்பணை துறந்தவற் கிளையவன் பகழி
விடங்கொள் வெள்ளத்தின் மேலன வருவன விலக்கி
இடங்க ரேறன வெறுழ்வலி யரக்கன்றே ரிழுக்கும்
மடங்க லையிரு நூற்றையுங் கூற்றின்வாய் மடுத்தான்.

படம் கொள் - படத்தைக் கொண்டுள்ள, பாம்பு அணை துறந்தவற்கு - ஆதிசேடனாகிய பாயலை விடுத்து இராமபிரானாகத் திருவவதாரம் செய்தவனுக்கு, இளையவன் - இளையவனான இலக்கு வன், வெள்ளத்தின் மேலன வருவன - வெள்ளத்தினும் அதிகமாக வருவனவாகிய, விடம் கொள் பகழி - விடத்தைத் தன்னிடம் கொண்ட அம்புகளை, விலக்கி - தடுத்து, எறுழ்வலி - மிக்க வலி படைத்த, அரக்கன் தேர் - அரக்கனுடைய தேருடனே (அத் தேரினை அழித்து), இழுக்கும் - அதனை இழுத்துச் செல்வன

வான, இடங்கர் ஏறு அன மடங்கல் - ஆண் முதலையைப் போன்ற சிங்கங்கள், ஐ இரு நூற்றையும் கூற்றின்வாய் மடுத்தான் - ஆயிரத்தையும் யமனுக்கிரையாக்கினான்.

படம்கொள் பாம்பணை துறந்தவன் - இராமபிரான்; கம்பர் பல இடங்களிலும் இராமபிரானைத் திருமாலாகவே கூறிச் செல்வர். சுந்தர. 395, 1123, 107, 187, 560, 197, 578; கிட்கிந்தா. 293, 965, 146, 382, 41, 363, 96, 152, 153, 304, 211, 683. பரம்பொருள். 1, 56, 67, 87, 350, 352, 560, 376 முதலியன காண்க. இடங்கர். கிட்கிந்தா. 549. உரைக் குறிப்புக் காண்க. தன் ஊரிலிருந்து பொருதலின் இந்திரசித்து இடங்கர் எனப்பட்டான், ஏறுழ்வலி, ஒரு பொருட்பன் மொழி. மடங்கல்: சிங்கம்; கிட்கிந்தா. 861, 994. ஏறுழ்வலி மடங்கல் என இயைத்தலுமாம்.

பி - ம். 2. மேலவன் விடுவன.

3. இடங்கரேறனுன்; ஈர்க்கும். 73

2450. தேர ழிந்திடச் சேமத்தேர் பிறிதிலன் செறிந்த
ஊர ழிந்திடத் தனிநின்ற கதிரவ னொத்தான்
பார ழிந்தது குரங்கெனும் பெயரெனப் பதைத்தார்
சூர ழிந்திடத் துரந்தனன் சுடுசரஞ் சொரிந்தான்.

(இந்திரசித்து தன்) தேர் அழிந்திட - தேர் அழிந்த அளவில். சேமம் தேர் பிறிது இலன் - (ஏறுவதற்குத்) தேர் மற்றொன்று இல்லாதவனாய், செறிந்த - நெருங்கிய, ஊர் அழிந்திட - ஊர்கோள் அழியப் பெற்று, தனி நின்ற கதிரவன் ஒத்தான் - தனிப்பட்டு நின்ற சூரியனை நிகர்த்து விளங்கினான்; (விளங்கிய இந்திரசித்து), சுடுசரம் சொரிந்தான் - சுடுகின்ற அம்புகளைப் பொழிந்தவனாய், சூர் அழிந்திட - வீரியம் அழிந்திட, துரந்தனன் - (அத் தேரை) ஓட்டினான்; (அப்போது) 'குரங்கு எனும் பெயர் பார் அழிந்தது - குரங்கு என்ற பெயரும் பூமியில் இல்லையாம்படி அழிந்தது', என - என்று, பதைத்தார் - (யாவரும்) நடுக்கமுற்றனர்.

சேமத் தேர் - ஏறியிருந்த தேர் அழிந்த உடனே ஏறுவதற்காக அமைந்த உதவித் தேர். இந்த சேமத் தேர் போரில்

மிக்க அவசியமானது. 'தேரிரண்டு சிடையாத குறையன்றே களத்தவிந்தான் சிறுவன்' (வி. பா. 13-ம் போர். 136) என்று அபிமன்யுவினைக் குறித்து கூறப்பட்டமை காண்க. ஊர் - ஊர் கோள்; இதனைப் பரிவேடம் என்றும் சொல்வர். 'செங்கதிர்ச் செல்வனைச் சூழ்ந்த ஊரழிந்தது' (யுத்த. 1447); 'செங்கதிரோன், ஊரொடு படிந்தனனெனத்து' (யுத்த. மூலபல. 198); குராங்கெனும் பெயர் பாரில் அழிந்தது என்க. சுடுசரம்: வினைத்தொகை. சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73).

பி - ம். 1. அழிந்துகச்.

2. புரமெனும்படியவரான் பகையின்; சொரிந்தநற்; துரந்தான். 74

2451. அற்ற தேர்மிசை நின்றுபோ ரங்கத னலங்கற்
கொற்றத் தோளினு மிலக்குவன் புயத்தினுங் குளித்து
முற்ற வெண்ணிலா முரட்கணை தூர்த்தனன் முரட்போர்
ஒற்றைச் சங்கெடுத் தூதின னுலகெலா முலைய.

முரண் போர் - மாறுபட்டுச் செய்யும் போரிலே, (இந்திரசித்து) அற்ற தேர்மிசை நின்று - (உறுப்புக்கள்) குலையப் பெற்ற தேர்மீது நின்றுகொண்டு, போர் அங்கதன் - போரில் வல்ல அங்கதனுடைய, அலங்கல் - மாலையை யணிந்த, கொற்றம் தோளினும் - வெற்றித் தோளின்மீதும், இலக்குவன் புயத்தினும் - இலக்குவனுடைய புயங்களின்மீதும, குளித்து முற்ற - உட் புகுந்து முழுகும்படி, வெள் நிலா முரண் கணை - வெள்ளிய பிறைமதி போன்ற (அர்த்த சந்திர) பாணங்களை, தூர்த்தனன் - நிரப்பினனாய், உலகு எலாம் உலைய ஒற்றை சங்கு எடுத்து ஊதினன் - உலகெலாம் வருந்துமாறு (தன்னுடைய) ஒற்றைச் சங்கத்தை எடுத்து ஊதி முழக்கினான்.

கணைக்கு முரண் - வலிமை, போர்க்கு முரண், மாறுபட்டு மும் முரமாகப் பொருவது என்க. உலகு: உலகத்துள்ள அனைத்திற்கும் இடவாகு பெயர். அங்கதன் கொற்றத் தோள் என்று கூறி, இலக்குவன் புயம் என்று அடைமொழி கொடாது கூறப்பட்டது. சேடன் அவதாரமான இலக்குவன் வன்மை உலகறிந்ததாதலின் என்க. வெற்றி பெற்ற பின்னரும் சங்கம் ஊதப்படும்.

பி - ம். 1. அற்ற தேரின்மேல்.

2. குளிக்க.

3. துரந்தனன்.

75

2452. சங்க மூதிய தசமுகன் றனிமகன் றரித்த
கங்க மாபெருங் கவசமு மூட்டறக் கழல
வெங்க டுங்கணை யையிரண் டுருமென வீசிச்
சிங்கவே றன்ன விலக்குவன் சிலையைநா ணெறிந்தான்.

சிங்க ஏறு அன்ன இலக்குவன் - ஆண் சிங்கம் போன்றவனான இலக்குவன், சங்கம் ஊதிய - சங்கம் முழக்கிய, தசமுகன் தனிமகன் தரித்த - இராவணனுடைய ஒப்பற்ற புதல்வனான இந்திரசித்து அணிந்த, கங்கம் ஆர் பெருகவசமும் - பொன் நிறையுமாறு செய்யப் பெற்ற பெரிய கவசமும், மூட்டு அற கழல - கொக்குவாயுடன் முழுவதும் கழலுமாறு, வெம் கடுகணை ஐயிரண்டு - வெம்மை சான்ற வேகமுள்ள அம்புகள் பத்தினை, உரும் என வீசி - இடி போன்று தாக்குமாறு, எறிந்து, (அந்த மேகநாதனுடைய சங்கொலிக்கு மாறாக) சிலையை நாண் எறிந்தான் - வில்லினை நாண் ஏற்றிக் குணத்தொனி விளைத்தான்.

கங்கம் : ஓர் வடநாட்டுத் தேசம். பொன் விளையும் இடமாதலின், பொன்னையே கங்கம் என்றார். மூட்டு : முகப்பு அல்லது கொக்குவாய். ஐயிரண்டு : 'ஆயிரம் அல்ல போன ஐயிரண்டென்பர் பொய்யே' (யுத்த. 1580); சிங்கவேறு: 'சிங்கவேறனையான் சொன்ன வாசகம் (யுத்த. 428); நாணெறிதல் : 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர்' (யுத்த. 1413); அன்ன : உவம உருபு.

பி - ம். 1. ஊதினன்.
2. தங்கடற்பெருங், கங்கணந்தொடு ; கவசமுமிற்றுடன் கழல.
4. ஏறென்ன. 76

## இலக்குவனது வெற்றி கண்ட இராமபிரான் ஆரவாரஞ் செய்யுமாறு கட்டளையிட, வாநரர் ஆர்த்தல்

2453. கண்ட கார்முகில் வண்ணனுங் கமலக்கண் கலுழத்
துண்ட வெண்பிறை நிலவென முறுவலுந் தோன்ற
அண்ட முண்டதன் வாயினு லார்மினென் றருள
விண்ட தண்டமென் றுலைந்திட வார்த்தனர் வீரர்.

கண்ட - (அதனைக்) கண்ணுற்ற, கார்முகில் வண்ணனும்-கரிய முகில் போன்ற திரு நிறத்தினனான, இராமபிரானும், கமலம் கண் கலுழ - தாமரை போன்ற விழிகளில் (உவகை) நீர் ஒழுக, வெள் துண்டம் பிறை - வெண்ணிறமான பிறைத் துண்டாகிய சந்திர னிடத்திலிருந்து, நிலவு என - நிலவொளி தோன்றுவது போல, முறுவலும் தோன்ற-புன்னகை காணப்படவும். அண்டம் உண்ட தன வாயினால் - அண்டத்தை உண்ட தன் வாயினால், இலக்குவ னுடைய வில் நாண் ஒலிக்கு ஏற்றவாறு), 'ஆர்மின் - ஆரவாரம் செய்யுங்கள்,' என்று அருள-என்று அருளிச் செய்ய, வீரர்-குரக்கு வீரர், அண்டம் விண்டது என்று உலைந்திட ஆர்த்தனர் - அண்ட கோளமே பிளந்தது என்று யாவரும் மனம் உலையுமாறு பேரொலி செய்தனர்.

கார்முகில் வண்ணன் : நீலமேக நிறத்தினனான இராமபிரான் ; இவன் மேனியழகில் ஈடுபட்ட கம்பநாடர் நூற்றுக்கணக்கான இடங்களில் முகிலை உவமையாக்குவர். சுந்தர. 57, 507, 573; யுத்த. 1332. வெண்பிறை நிலவென முறுவல் : 'வீரனும் சிறிது வெண் முறுவல் வெண்ணிலவுக' (ஆரணிய. 23) ; அண்டமுண்ட தன் வாயினால் : 'உண்டா யுலகேழ் முன்னமே வுமிழ்ந்து மாயை யால் புக்கு' (திருவாய். 1, 5, 6) ; 'கிடந்திருந்து நின்றளந்து கேழ லாய்க் கீழ்ப்புக் கிடந்திடும், தன்னுள் கரக்கும் உமிழும்' (திருவாய். 2 : 7, 7).

பி - ம். 1. கார்மழை,
2. நிலவெனும்.

77

## இந்திரசித்து வானத்தில் மறைய, இராமனிடத்து இலக்குவன் பிரமாத்திரம் தொடுப்பேனென இராமபிரான் தடுத்தல்

2454. கண்ணி மைப்பதன் முன்புபோய் விசும்பிடைக் கரந்தான்
அண்ணல் மற்றவ னுக்கைகண் டறிகில னுசிப்
பண்ண வற்கிவன் பிழைக்குமேற் படுக்குநம் படையை
எண்ண மற்றிலை யயன்படை தொடுப்பெனென்
[றிசைத்தான்.

(அப்போது இந்திரசித்து அபாயம் நிகழும் என்று அஞ்சி), கண் இமைப்பதன் முன்பு போய் - கண் இமைப்பதற்கு முன்னரே சென்று, விசும்பிடை கரந்தான் - விண்ணிடத்து மறைந்தான்; அண்ணல் - பெருமை சான்ற இலக்குவன், அவன் ஆக்கை கண்டு அறிகிலன் ஆகி-அவன் உடலைக் காணாதவனாகி, 'இவன் பிழைக்கு மேல் - இவன் பிழைப்பானாகில், நம் படையை படுக்கும் - நமது சேனையை அழித்துவிடுவான், (ஆதலின்) மற்று எண்ணம் இலை - பிறிதோர் எண்ணம் இல்லாமல், அயன்படை - பிரமாத்திரத்தை (இவன் மீது) தொடுப்பென் - செலுத்துவேன்', என்று - என்று, பண்ணவற்கு இசைத்தான் - இராமபிரானிடம் சொன்னான்

கண்ணிமைக்கும் அளவு ஒரு மாத்திரை என்க. விசும்பு - ஆகாயம்: 'நிலனேந்திய விசும்பும்' (புறநா. 2); பண்ணவன் - இராமபிரான். மற்று - அசை.

பி - ம். 1. முன்னம்போய் ; விண்ணிடைக்.

2. அறிந்திலன், அறிந்தனனூழிப்.

3. படுக்கும்வெம். 78

2455. ஆன்ற வன்னது புகறலு மறநிலை வழாதாய்
ஈன்ற வந்தணன் படைக்கலந் தொடுக்கிலிவ் வுலகம்
மூன்றை யுஞ்சுடு மொருவனுன் முடிகல தென்றான்
சான்ற வன்னது தவிர்ந்தன னுணர்வுடைத் தம்பி.

ஆன்றவன் அதுபுகறலும் - சிறந்தவனான இலக்குவன் அவ்வாறு சொன்ன அளவில், 'அறம் நிலை வழாதாய் - தரும நெறியினின்று விலகாதவனே! உலகம் ஈன்ற அந்தணன்-உலகனைத்தையும் படைத்த கடவுளாகிய பிரமதேவனுடைய, படைக்கலம்-படைக்கலத்தை, தொடுக்கில் - நீ விடுத்தால், இவ் உலகம் மூன்றையும் சுடும் - இந்த மூன்றுலகங்களையும் எரித்துவிடும்; ஒருவனால் முடிகலது - அதனைத் தவிர்க்க எவனாலும் இயலாது; (ஆதலின் அதனைச் செய்யாதே)' என்றான் - என்று கூறினான்; உணர்வுடை தம்பி - நல்ல அறிவாளியும் இளையவனுமான, சான்றவன் - சிறந்தவன், அது தவிர்ந்தனன் - அவ்வாறு விடுவதை ஒழிந்தான்.

ஆன்றவன் - சிறந்தவன் ; 'ஆன்றான் பகர்வான்' (அயோத்தி. நகர் நீ. 138); உலகம் ஈன்ற அந்தணன் பிரமன். 'இவ்வுலகம் மூன்றையும்' என்ற தொடரை இடைநிலை விளக்காகக் கொள்க. அறனிலை வழாதாய்; இராமனியையந்த நீதி, வளையா வரு நன்னெறி நின்னறிவாகுமன்றே ; 'இலக்குவ வுலக மோரேழு மேழுநீ, கலக்கு வெனென்றது கருதினல் அது, விலக்குவ தரிதது விளம்ப வேண்டுமோ' (அயோத்தி. கிளை கண்டு. 42) ; உலையாவறம் வற்றிட ஆழ்வழுவுற்ற சிற்றம், 'விளையாத நிலத்து' (அயோத்தி. நகர் நீ. 129); முடிகலது : அல் எதிர்மறை இடைநிலை.

பி - ம். 1. ஆன்றவன்னவை ; பகர்தலும்.

2. அறவனிமுனிந்தால், தொடுக்கிலிவ்.

3. முடியுமோவென்னக், முடிக்குறு வென்றுற். 78

## இவர்களெண்ணத்தை யறிந்த இந்திரசித்து பிரமாத்திரம் விடுவதாக எண்ணி மறைந்து செல்ல, அவன் கருத்தை அறியமாட்டாத தேவர்கள் மகிழ்ந்து ஆர்த்தல்

2456. மறைந்து போய்நின்ற வஞ்சனு
மவருடை மனத்தை
அறிந்து தெய்வவான் படைக்கலந்
தொடுப்பதற் கமைந்தான்
பிரிந்து போவதே கருமமிப்
பொழுதெனப் பெயர்ந்தான்
செறிந்த தேவர்க ளாவலங்
கொட்டினர் சிரித்தார்.

மறைந்து போய் நின்ற வஞ்சனும் - மறைந்து சென்றிருந்த வஞ்சகனாகிய இந்திரசித்தும், அவருடைய மனத்தை - அந்த இராம இலக்குவரின் கருத்தை, அறிந்து - உணர்ந்து கொண்டு, தெய்வம் வான் படைகலம் தொடுப்பதற்கு அமைந்தான் - தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த படைக்கலமாகிய பிரமாத்திரத்தைச் செலுத்துவதற்கு மனம் ஒன்றியவனாய், (அவ்வாறு செய்தற்கான சில சடங்குகளைச் செய்யும் பொருட்டு), 'இப்பொழுது பிறிந்து போவதே கருமம் - (இவ்விடத்தை விடுத்து) இப்பொழுதே வேற்

றிடம் செல்வதுதான் செய்யத்தக்க காரியம்', என - என்று எண்ணி, பெயர்ந்தான் - அவ்விடம் விட்டு அகன்றான்; செறிந்த தேவர்கள் ஆவலம் கொட்டினர் சிரித்தார் - (அங்குப் போர் காண்டற்கு வந்து கூடி நின்ற) தேவர்கள், (அவனுடைய உள்ளக் கருத்தை அறியாராய்) பெரு மகிழ்ச்சியால் கைகொட்டி நகைத்தார்கள்.

இராம இலக்குவருடைய தயாள குணத்தை அறிந்தும், அந்தப் பண்பினைப் பாராட்டாது, அந்தக் கொடிய பிரமாத்திரத்தை விடுக்க முயன்றானாகலின், இந்திரசித்தை வஞ்சன் என்றார். பிரிந்து-எதுகை நோக்கிப் பிறிந்து என வந்தது. செறிந்த தேவர்கள்; யுத்த. 2418 காண்க. ஆவலம் கொட்டுதல்; கந்தபு. சிங்கமுகா. 438; சுந்தர. 1040.

பி - ம். 1. நின்றவரக்கனும்.
3. போயதே.
4. செறிந்து. 80

2457. செஞ்சரத்தொடு சேண்கதிர் விசும்பின்மேற் செல்லா
மஞ்சின் மாமழை போயின தாமென மாற
அஞ்சி னன்மறைந் தானகன் றானென வார்த்தார்
வெஞ்சி னந்தரு களிப்பினர் வாநர வீரர்.

செம் சரத்தொடு - செந்நிறமான அம்புடன் கூடி, சேண்-வெகு தூரத்தில், கதிர் - சூரியன் சஞ்சரிக்கின்ற, விசும்பின் மேல் செல்லா-ஆகாயத்தின் மீது சென்று, மஞ்சின் மாமழை போயினது ஆம் என - கறுத்த நீருண்ட மேகம் செல்வது என்று கூறுமாறு, மாற -(அக் களத்தினின்று) நீங்க, (முன்பு) தோற்றோடிய) வாநர வீரர் - குரக்கு வீரர்களும், 'அஞ்சினன் மறைந்தான் அகன்றான் - பயந்து ஒளிந்து நீங்கினன் (இந்திரசித்து),' என - என்று (தவறாகக்) கருதி, வெஞ்சினம் தரு களிப்பினர் - கொடுமையான கோபத்துடன் விளைந்த மகிழ்ச்சியினராய், ஆர்த்தார்: ஆரவாரம் செய்தனர்.

செஞ்சரம்: செம்மை, சரத்தின் தவறாமற்றைக்கும் திறம் குறித்து நின்றது. 'செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன'

(அயோத்தி. குகப். 14); சேண் - வெகு தூரம்; சேண் விசும்புமாம். 'சேணிற்பொலி' (திருக்கோ. 23); செல்லா : செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். மஞ்சு : மேகம்; 'மஞ்சொக்கு மளகவோதி' (ஆரணிய. 623); அஞ்சினன் மறைந்தான்; முற்றெச்சங்கள். வெஞ்சினம் தரு களிப்பினர்; இரண்டு மெய்ப்பாடுகள் ஒருங்கே நிகழ்ந்தமை காண்க. துன்பமு வகையுஞ் சுமந்த உள்ளத்தாள் என்ற இடத்துப்போல. இங்கு வெகுளி நகை என்க. ஒருபுறம் அந்த அரக்கன் மீதெழுந்த வெகுளி, மற்றொருபுறம் அவன் அஞ்சி அகன்றதாலான களிப்பு எனினுமாம். இந்தக் களிப்பு, உண்மை யறியாமையின் எழுந்தது,

பி - ம். 1. செஞ்சரங்கொடு; செம் மழை, சேண் மழை, சின மழை; விசும்பிடைச்; செல்ல. செல்வான்.

2. மஞ்சின் மாமழை; ஓவியதாமென, ஓவியமாமென.

3. அகன்றனனென்பதறிந்தனர்.

4. தோளினர்.

81

## முன் தோற்றோடிய வாநரசேனை வந்து ஆரவாரிக்க, இந்திரசித்து இலங்கை சேர்தல்

2458 உடைந்த வாநரச் சேனையு
மோதநீ ருவரி
அடைந்த தாமென வந்திரைத்
தார்த்தெழுந் தாடித்
தொடர்ந்து சென்றது தோற்றவன்
யாவர்க்குந் தோன்றாக்
கடைந்த வேலைபேரற் கலங்குறு
மிலங்கையிற் கரந்தான்.

உடைந்த வாநரர் சேனையும் - தோற்றோடிய குரக்குப் படையும் ஓதம் நீர் உவரி அடைந்தது ஆம் என - வெள்ள நீரையுடைய, கடல் வந்து பொருந்திய தென்னுமாறு, வந்து இரைத்து ஆர்த்து எழுந்து ஆடி-மீட்டும் பேரிரைச்சலிட்டுக்குதித்து ஆடிய வண்ணம், தொடர்ந்து சென்றது-தொடர்ச்சியாகச் சென்றது; தோற்றவன் - முறியடிக்கப் பெற்றவனான இந்திரசித்து, யாவர்க்கும் தோன்றா -

யாவர்க்கும் கண்ணிற்படாமல், கடைந்த வேலைபோல் - கடையப் பட்டபாற்கடல் போன்று, கலங்குறும் இலங்கையில் கரந்தான் - கலக்கம் எய்தி நின்ற இலங்கையிடத்து மறைந்தான்.

உடைந்த வானரச் சேனை மகிழ்ந்து திரும்பிற்று; 'திருகினுர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வில்லி பா. 13-ம் போர். 135). கடைந்த வேலைபோல் கலங்கும் இலங்கை: உவமையணி; வேலை கடைந்த வரலாறு; யுத்த. 936. உரைக் குறிப்புக் காண்க, ஓதநீர்: 'ஓதினுன் ஓதநீர் கடந்து' (யுத்த. 408).

பி - ம். 2. எழுந்தோடித்.

3. கொற்றமன்றிளவற்குத் தோற்ருன், தோற்றவன் யாவர்க்குந் தோற்ருன்.

4. வேலையிற்; இலங்கையைக் கலந்தான். 82

இந்திரசித்தின் மனக்கருத்தை இராமவிலக்குவர் உணராமை

2459. எற்கொ ணுன்முகன் படைக்கல மிவரென்மேல் விடாமுன்
முற்கொள் வேனெனு முயற்சியன் மறைமுறை மொழிந்த
சொற்கொள் வேள்விபோய்த் தொடங்குவா னமைந்தவன் [றுணிவை
மற்கொ டோளவ ருணர்ந்தில ரவன்றிற மறந்தார்.

மல்கொள் தோளவர் - வலிமை கொண்ட புயங்களை யுடையவரான இராம இலக்குவர், அவன் திறம் மறந்தார் - அந்த இந்திரசித்தின் வன்மையை மறந்தவராய், 'எல்கொள் நான்முகன் படைகலம் - ஒளி பொருந்திய பிரமன் படையினை, இவர் என்மேல் விடாமுன் - இவர் என்மீது விடுவதன் முன்னம், முன் கொள்வேன் - (நான்) முற்படுவேன்', எனும் முயற்சியன் - என்னும் முயற்சியினனுய், மறைமுறை மொழிந்த - வேதங்கள் முறையாகக் கூறிய, சொல்கொள் - வேத மந்திரங்களைக் கொண்டு செய்யப் பெறும், வேள்வி போய் தொடங்குவான் - யாகத்தினை தொடங்கும் பொருட்டு, அமைந்தவன் - பொருந்தியவனுன (இந்திரசித்தின்), துணிவை - மன வலியை, உணர்ந்திலர் - உணராதவராயினர்.

மற்கொள் தோளவர் உணர்ந்திலர் என்க. மறை முறை மொழிந்த சொற்கொள் வேள்வி, வேதங்கள் முறையாகச் சொன்ன

ஆபிசார மந்திரங்களைப் பின்பற்றிச் செய்கின்ற ஹோமங்களும் பிறவும். இவை அதர்வண வேதத்தில் அடங்கிய பகுதி என்க. தொடங்குவான்: வானீற்று வினையெச்சம். அவ்வன் திறம் மறந்தார் என்றது, தாம் எடுத்த மனித வுருவிற்கேற்றவாறு மனிதனாக நடித்த திறம் என்க.

பி - ம். 1. விடுமுன்.

3. தொடங்குவான்; துணிந்தவன்.

4. அமர்த்தொழில். 83

## இராமவிலக்குவர் போர்க்கோலங் களைந்து நிற்றலும், வானவர் பூமழை பொழிதலும்

2460. அனும னங்கதன் றோளினின் றிழிந்தன ராகித்
தனுவும் வெங்கணைப் புட்டிலுங் கவசமுந் தடக்கைக்
கினிய கோதையுந் துறந்தன ரிருந்தன ரிமையோர்
பனிம லர்த்தொகை பொழிந்தனர் வாழ்த்தொலி பரப்பி.

(இந்திரசித்தின் போக்கினை உணராமையின்), அநுமன் அங்கதன் தோளினின்று இழிந்தனர் ஆகி - அநுமன் அங்கதன் என்ற இவர்களின் தோள்களினின்றும் (இராம இலக்குவர்), இறங்கியவராகி, தனுவும் - விற்களும், வெங்கணை புட்டிலும் - கடுமையாகச் சென்று சுடக்கூடிய அம்பறுத்தூணிகளும், கவசமும் - மெய்புகு கருவிகளும், தடகைக்கு இனிய கோதையும்-பெரிய கரங்களுக்கு இதமான விரலுறைகளும் (என்ற இவற்றை), துறந்தனர் இருந்தனர் - துறந்தவராய் இருந்தனர்; இமையோர் - தேவர்கள், வாழ்த்தொலி பரப்பி-வாழ்த்துரைகளைப் பரவச் செய்து, பனிமலர் தொகைபொழிந்தனர் - குளிர்ந்த மலர்த்தொகுதிகளைப் பெய்தனர்.

அநுமன் தோளின் மீது இராவணனும், அங்கதன் தோளின் மீது இலக்குவனும் ஏறி நின்றமை முன்னர்க் குறிக்கப் பெற்றது. யுத்த. 2393, 2394 காண்க. கோதை: விரலுறை; 'கோதையை விரலாற்றுங்கி' (யுத்த. 546); 'கோலஞ்சார் நெடுங்கோதையும் புட்டிலும் கட்டி' (யுத்த. இராவணன் தேர். 9); துறந்தனர் - முற்றெச்சம். பனிமலர்க் குழற்பாவை நல்லாரினும்' (தேவா. 455 : 10);

பரப்பிப் பொழிந்தனர் என்க. இச்செய்யுள் பழைய பதிப்பில் இல்லை.

பி - ம். 3. துறந்தனரிருவரும்.
4. மலர் பொழிந்தார்த்தனர்; வாழ்த்தினர் பல்கால்; வாழ்த்தினர் பரப்பி. 84

## சூரியன் மறைதல்

2461. ஆர்த்த சேனையி னமலைபோய் விசும்பினை யலைக்க
ஈர்த்த தேரொடுங் கடிதுசென் றனகன் றிரவி
தீர்த்தன் மேலவன் றிசைமுகன் படைக்கலஞ் செலுத்தப்
பார்க்கி லேன்முந்திப் படுவதே நன்றெனப் பட்டான்.

ஆர்த்த சேனையின் அமலை போய் - ஆரவாரித்த (குரக்குப்) படைகளின் போரொலி சென்று, விசும்பினை அலைக்க - ஆகாயத் திடத்தைக் கலந்தசைக்க, ஈர்த்ததேரொடும் - (குதிரைகளால்) இழுக்கப்பட்ட தேருடன், இரவி - சூரியன், அகன்று - நீங்கி, கடிது சென்றான் - விரைந்து ஏகினான்; 'தீர்த்தன் மேல் - மிகவும் தூயவனான இலக்குவன் மீது, அவன் - அந்த இந்திரசித்து, திசைமுகம் படைக்கலம் செலுத்த பார்க்கிலேன் - பிரமன் அத்திரத்தை, விடுத்தலைக் காணப்பொறேன்; முந்தி படுவதே நன்று - முன்னர் மறைந்து செல்வதே நல்லது,' என - என்று, பட்டான் - அத்தமித்தான்.

ஏதுத் தற்குறிப்பேற்றவணி. ஆர்த்த: 'ஆர்த்தவானவர்' (சுந்தர. 1027); அமலை: பேரொலி. 'வேலை யமலையினரவச் சேனை' (சுந்தர. 944); ஈர்த்தல்; 'இளக்கரு நெடுவரை யீர்க்கு மாறெலாம்' (யுத்த. மூலபல. 180); இரவி: ரவி என்ற வடசொல். 'ரவ்விற் கம் முதலா முக்குறிலும்' (நன்.) என்றபடி இகரம் பெற்று வந்தது. படுதல்: 'எற்படுகாலை' (தொல். அகத்திணை).

பி - ம். 2. அந்தவிரவி.
3. தீர்த்த.
4. பார்ச்கற்கிலேன் படுவன்யானென, பார்க்கிலேன் முந்தப்படுவலென் பரனெனப். 85

## இராமன் விரைவில் சேனைகட்கு உணவு கொணர்க என வீடணனை யனுப்புதல்

2462. இரவு நன்பக லும்பெரு நெடுஞ்செரு வியற்றி
உரவு நம்படை மெலிந்துள தருந்துதற் குணவு
வரவு தாழ்த்தது வீடண வல்லையி னேகித்
தரவு வேண்டின னென்றனன் றாமரைக் கண்ணன்.

'இரவும் நன்பகலும் - இரவிலும் நல்ல பகலிலும், பெரு நெடு செரு இயற்றி - பெரிய நீண்ட போரினைச் செய்து, உரவு நம்படை மெலிந்துளது - வலிமிக்க நமது சேனை மெலிவுற்றுள்ளது, அருந்துதற்கு உணவு வரவு தாழ்த்தது - (இப் படை) உண்பதற்கான உணவு வரக் காலதாமதமாயிற்று; வீடண - விபீஷணனே! வல்லையின் ஏகி - விரைந்து சென்று, தரவு வேண்டினன் (கொணர்ந்து) தருதலை விரும்பினன், என்றனன் - என்று மொழிந்தான், தாமரைக் கண்ணன் - தாமரைக் கண்ணனான இராமபிரான்.

பெருநெடு : பெருமை பேரளவினையும், நெடுமை காலத்தினையும் சுட்டின. உரவு : வன்மை. 'ஊரங்கண நீர் உரவு நீர் சேர்ந்தக் கால்' (நாலடி. 175); 'அருந்துதற்குத் தாழ்த்தல்; அருந்துதற்கினிய மீன்' (யுத்த. 335); 'தாழா தேகுதியறிஞ' (யுத்த. 433); 'வரக் கருதாது தாழ்த்த வருணனின் மாறு கொண்டார்' (யுத்த. 592); 'இந்நிலை விரைவி னெய்தாதித்துணை தாழ்த்தியாயின்' (யுத்த. 871); வல்லை : விரைவு, 'வச்சிரத்தெயிற்றவன் வல்லைகூறுவான்' (யுத்த. 39); தரவு : தருதல்; தொழிற் பெயர்; வு விகுதி பெற்றது. தாமரைக் கண்ணன். 'தாதை யப்பரி சுரை செயத் தாமரைக் கண்ணன்' (அயோத்தி. மந்திரப். 70).

பி - ம். 1. பகலினும்; நெடும் பெருஞ்செரு, பெருஞ்செருவினை.
2. நன்படையே லெறிந்துந்துதற்கு.
3. வல்லையினெய்தித்.
4. தரவு வேண்டினது.

## வீடணன் உடன்பட்டுச் செல்லுதல்

2463. இன்ன தேகடி தியற்றுவெ னெனத்தொழு தெழுந்தான்
பொன்னின் மௌலியன் வீடணன் றமரொடும் போனன்
கன்ன லொன்றிலோர் கங்குலின் வேலையைக் கடந்தான்
அன்ன வேலையி னிராமனீ திளையவற் கறைந்தான்.

'பொன்னின் மௌலியன் வீடணன் - பொன்னாலாகிய மகுடம் தரித்த வீடணன், 'இன்னதே - இச் செயலையே, கடிது இயற்றுவென் - விரைவிற் புரிவேன்', என - என்று சொல்லி, தொழுது எழுந்தான் - வணங்கி எழுந்தவனாய், தமரொடும் போனன்- தம்மவரோடும் போயினான், கன்னல் ஒன்றில் ஓர் - ஒரு இரவுநாழிகை ஒன்றிற்குள்ளாக, கங்குலின் வேலையை கடந்தான் - ஒப்பற்ற இரவுக் கடலைத் தாண்டிச் சென்றான்; அன்ன வேலையில்- அப்படிப் பட்ட நேரத்தில், இராமன் - இராமபிரான், இளையவற்கு ஈது அறைந்தான் - இலக்குவற்குப் பின் வருமாறு கூறினான்.

இலங்கை யரசுக்கிறைவனாக இராமபிரானால் ஆக்கப்பட்டமையின், பொன்னின் மௌலியன் வீடணன் எனப்பட்டான். யுத்த. 445, 447, 448 என்ற செய்யுட்களையும் அவற்றின் உரைக் குறிப்பும் காண்க. தமர்:வீடணன் தமரான அனலன் முதலிய நால்வர் என்க. 'ஆர் தமராக நீரிங்கிருப்பதென்று' (பெரியபு. கண்ணப்ப. 113) கன்னல்: ஓர் நாழிகை; 'கன்னல் மூன்றிற் களப்படக் கால்வலை' (சுந்தர. 351); கன்னல் - நாழிகையை அளவிட்டுக்கூறும் ஓர் பாத்திரம்; அது முதலாகு பெயராய் அளவிடும் நாழிகைக்கு வழங்குவது. 'குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப' (முல்லைப். 58); கன்னலை: நாழிகை வட்டில் என்றும் கூறுப. கங்குல்: இருட்டு; 'கங்குலாகிய நங்கையே' (அயோத்தி. கைகேசி: 46) கடத்தல்: அரிதிற்றாண்டுதல்.

பி - ம். 3. காலினின்.

4. அன்னகாலையில், காலையீது.

## சேனையைப் பாதுகாப்பாயென்று இளைய பெருமாளுக்குச் சொல்லிவிட்டு இராமபிரான் படைப்பூசைக்குச் செல்லுதல்

2464. தெய்வ வான்பெரும் படைகட்கு வரன்முறை திருந்து
மெய்கொள் பூசனை யியற்றினம் விடுமிது விதியால்
ஐய நானிவை யாற்றினன் வருவதோ ரளவும்
கைகொள் சேனையைக் காவெனப் போர்க்களங்
[கடந்தான்.

'தெய்வம் வான் பெருபடைகட்கு - தெய்வத் தன்மை வாய்ந்த மிகவும் உயர்ந்த போர்க்கருவிகட்கு, வரன் முறை - கிரமமாக, திருந்து - திருத்தமான, மெய்கொள் பூசனை - உண்மையான பூசையை, இயற்றினம்-செய்தோமாகி, (ப்பிறகு அவற்றை) விடும்-ஏவுகின்ற, இது விதி - இதுவே முறையான செயலாகும்; ஐய - ஐயனே! நான் இவை ஆற்றினேன் - நான் இப் பூசனைகளைப் புரிந்து, வருவது ஒர் அளவும் - மீண்டும் வரும்வரையில், கைகொள் சேனையை - அணி வகுத்தலைக்கொண்ட படையை, கா - பாதுகாப்பாயாக', என-என்று சொல்லி, போர்க்களம் கடந்தான்- யுத்த களத்தைதக்கடந்து சென்முன், (இராமபிரான்). ஆல்:அசை.

தெய்வப் பெரும்படை, 'தேவர்தம் படைகள் செப்ப,' (பால. வேள்வி. 3).

பி - ம். 2. இயற்றினன் ; விடுவது.
3. அவையியற்றியே.



அதிகப் பாடல் :—

இன்ன திவ் வழி நிற்கமற் றிருஞ்சமர்க் குடைந்தே
துன்று வான்வழி யிலங்கையில் பேர்கின்ற தோன்றல்
பொன்னின் வார்சிலைக் கரத்தொடு பொருக்கெனப்
புகுந்து
தன்னை யீன்றிடும் ஒரு தனித் தாதையைக் கண்டான்.

### இந்திரசித்து களத்து நிகழ்ந்தனவற்றைத் தந்தையிடம் சொல்ல, இனி யாது செய்யவேண்டுவது ? என்று அவன் வினவல்.

2465. தந்தை யைக்கண்டு புகுந்துள தன்மையுந் தன்மேல்
முந்தை நாள்முகன் படைக்கலந் தொடுக்குற்ற முறையும்
சிந்தை யுட்புகச் செப்பின னனையவன் றிகைத்தான்
எந்தை யென்னினிச் செயத்தக்க திசையென
[விசைத்தான்.

(இந்திரசித்து), தந்தையை கண்டு-(தன்) தந்தையை நோக்கி, புகுந்து உள தன்மையும் - நேர்ந்த செயலையும், தன் மேல் - தன் மீது, முந்தை - பழமையான. நான் முகன் படைக்கலம் - பிரமாத்திரத்தை; தொடுக்குற்ற முறையும் - தொடுக்குமாறு, (பகைவர்) கருதிய முறையையும், சிந்தை உட்புக செப்பினன் - (அந்த) இராவணனுடைய மனதில் நன்கு பதியுமாறு பகர்ந்தான்; அனையவன் திகைத்தான் - இராவணன் திகைப்புற்றவனாய், 'எந்தை - எந்தையே, இனி செய தக்கது என் - இப்பொழுது புரியத்தக்க செயல் யாது? இசை - சொல்', என இசைத்தான் - என்று வினவினான்.

தொடுக்க உற்ற என்பது அகர ஈறு குறைந்தது. எந்தை - அண்மை விளி; அன்புபற்றியது. செயத்தக்க : 'செய்தக்க வல்ல செயக்கெடும்' (குறள். 466).

பி - ம். 2. முந்த.
4. எந்தையே : தக்கதா மெனா.



### இந்திரசித்து, அறியாமல் மறைந்து பிரமாத்திரம் விடுத்து அவர்களை யொழிப்பேனெனல்.

2466. தன்னைக் கொல்வது துணிவரேற் றனக்கது தகுமேல்
முன்னர்க் கொல்லிய முயல்கவென் றறிஞரே மொழிந்தார்
அன்னப் போரவ ாறிவுரு வகைமறைந் தயன்றன்
வென்னப் போர்ப்படை விடுதலே நலமிது விதியால்.

'தன்னை கொல்வது துணிவரேல் - (ஒருவர்) தன்னைக் கொல்வதற்குத் துணிந்தாராயின், தனக்கு அது தகுமேல் - தனக்கு அவ்வாறு தன்னைக் கொல்லத் துணிந்தவரைக் கொல்வதென்பது இயையுமாயின், 'முன்னர் கொல்லிய முயல்க - முன்னர் அவரைக் கொல்லுமாறு முயல்க'. என்று அறிஞரே மொழிந்தார் - என்று அறிவாளிகளே கூறியுள்ளனர்; அன்ன போர் - அத்தகைய போரினை, அவர் - (அந்தப் பகைவராகிய) மானுடர், அறிவு உரு வகை - தெரிந்து கொள்ளாதபடி, மறைந்து - மறைந்து நின்று, அயன் தன் - பிரமதேவனுடைய, வென்ன போர்ப்படை விடுதலே நலம் - அழகிய போர்க்குரிய படைக்கலத்தை ஏவுவதே நல்லது; இது விதியால் - இதுவே முறையாம்.

இது இராவணன் கூற்று; தன்னைக் கொல்லவந்த பசுவைக் கொல் என்பது முதுமொழி; தற்கொல்லியை முற்கொன்றது குண்டலகேசி வரலாற்றிற் காண்க. தற்காப்பின் பொருட்டு எதுவும் செய்யலாம் என்பது இங்குக் குறிக்கப்பெற்றது. பகைவரைக் கொல்லுதல் எளிதன்று ஆகலின், 'தகுமேல்' எனப்பட்டது. சொல்லிய: செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அறிஞரே; ஏகாரம் பிரிநிலை. அன்ன போர் என்பது செய்யுள் இன்பம் நோக்கி அன்னப்போர் என நின்றது. வென்னம்: வர்ணம் என்ற வடசொல். வன்னமாகி, மொழிமுதல் அகரம் எகரமாயிற்று.

பி - ம். 1. கொல்லிய; துணிய.

2. முன்னரிற் கொலை, முன்னாற் சொல்லுகை, முன்னைச் சொல்லியது; உலகமென்று, நலமென.

3. அறிவரும்.

4. வென்னாற்; பொற்படை; மெய்யால். 90

2467. தொடுக்கின்றேனென்ப துணர்வரே
லப்படை தொடுத்தே
தடுப்பர் காண்பரேற் கொல்லவும்
வலத்தரத் தவத்தோர்
இடுக்கொன் றுகின்ற தில்லைநல்
வேள்வியை யியற்றி
முடிப்பெ னின்றவர் வாழ்வையோர்
கணத்தென மொழிந்தான்.

'தொடுக்கின்றேன் என்பது உணர்வரேல் - யான் (அரவின் கணையை) விடுகின்றேன் என்பதை அவர்கள் அறிவார்களாயின், அ-படை தொடுத்தே - அந்த அரவக்கணையை விடுத்தே, தடுப்பர் (யான் விடும் அம்பினைத்) தடுப்பார்கள்; காண்பரேல் - (நேரில்) பார்ப்பார்களானால், கொல்லவும் வல்லர் அ-தவத்தோர் -,(என்னைக்) கொல்லவும் வலத்தர் அந்தத் தவத்தினர்; இடுக்கு ஒன்று ஆகின்றது இல்லை - நடுவில் ஒன்றும் ஆகப் போவது இல்லை; நல் வேள்வியை இயற்றி - நல்ல யாகத்தைச் செய்து, அவர் வாழ்வை - அந்த மானுடர் வாழ்வினை, இன்று-இன்றே, ஓர் கணத்து முடிப்பென் - ஒரு கணத்தில் முடிப்பென்' என - என்று, மொழிந்தான் - கூறினான் (இந்திசித்து).

வினைவலியும் தன் வலியும் மாற்றான் வலியும், துணை வலியும் தூக்கிச் செயல், (குறள், 471). இங்குக் காணத்தகும். வேள்வி : ஒன்றை விரும்பிச் செய்யும் ஓர் ஓமச்சடங்கு; இ. பெயர் விகுதி.

பி - ம். 1. என்பதறிவரேல்; தொடுத்துத்.
2. வல்லவர், வல்லரத்.
3. வேள்வியின்.
4. ஆவியோர்; கணத்தென்று; மொழிந்தான். 91

## இந்திரசித்து சொல்லியதுகேட்டு இராவணன் மகோதரனுக்கு இட்ட கட்டளை

2468. என்னை யன்னவர் அறிந்திலா வகைசெய லியற்றத்
துன்னு போர்ப்படை முடிவிலா தவர்வயிற் றூண்டின்
பின்னை நின்றது புரிவெனென் றன்னவன் பேச
மன்னன் முன்னின்ற மகோதரற் கிம்மொழி வழங்கும்.

'என்னை - என்னை, அன்னவர் - அந்த இராம இலக்குவர், அறிந்திலா வகை செயல் இயற்ற - அறியாதவாறு செய்து முடிக்க, துன்னு - செறிந்த, போர்படை-போர் புரியவல்ல சேனைகளை, முடிவிலாது - ஓர் முடிவு காணமுடியாதபடி, அவர் வயின் தூண்டின் - அவர் மீது செல்லும்படி தூண்டுவாயாகில், பின்னை நின்றது புரிவென் - பின்னர், (நான் புரியக் கூடியதாக) நின்றதை-(நிற்பதான

அயன்கணை விடுப்பதை, புரிவென்-செய்வேன்', என்று - என்று, அன்னவன் பேச - இந்திரசித்து உரை செய்ய, மன்னன் - இலங்கா புரி அரசன் ஆன இராவணன், முன் நின்ற - தன் முன்பு நின்று கொண்டிருந்த, மகோதரற்கு - மகோதரனுக்கு, இ மொழி பகர்வான் - பின்வரும் வார்த்தைகளைச் சொன்னான்.

அன்னவர்: இராம இலக்குவர், நின்றது; அயன்கணையை ஏவுவது. மகோதரன்; இவனது சொற் செயல்களை; யுத்தகாண்டம். இராவணன் மந்திரப்; அணிவகுப்பு, கும்பகன்ன, மாயா சனகம், அதிகாயன், பிரமாத்திரம், மாயா சீதை, இராவணன் சோகம், இராவணன் வதை, முதலிய படலங்களிற் காண்க.

பி - ம். 1. மறந்தனர் நின்றிகலியற்ற, மறைந்தில னென்றிகல்.
2. பொய்ப்படை ; முடிவிலாவவர் ; தூண்டிப்.
3. புரிவனென் றிளையவன்.
4. மன்னனுந்திறன், மன்னனின்றவன். 92

2469. வெள்ள நூறுடை வெஞ்சினச் சேனையை வீர
அள்ளி லைப்படை யகம்பனே முதலிய வரக்கர்
எள்ளி லெண்ணிலர் தம்மொடு விரைந்தனை யேகிக்
கொள்ளை வெஞ்செரு வியற்றுதி மனிதரைக் குறுகி.

'வீர - வீரனே! அள் இலை - நெருங்கிய இலையையுடைய, படை - வேற் படையைக் கொண்டுள்ள, அகம்பன் முதலிய அரக்கர் - அகம்பன் முதலிய இராக்கதர்கள், எள் இல் - எள் தொகுதியில், எண் இலர் தம்மொடு - எள்வீழ்றக்கின்றி, (கணக்கிட முடியாமல் இருப்பவருடனே, நூறு வெள்ளம் உடை - நூறு வெள்ளம் என்னும் எண்ணிக்கையரான, வெம் சினம் - கடுமையான வெகுளியையுடைய, சேனையை - படையைக் கொண்டு, விரைந்தனை ஏகி - வேகமாய்ப் போய், கொள்ளை வெம் செரு - (உயிர்களைக்) கொள்ளை கொள்ளுதற்கிடமான கொடிய போரினை, மனிதரை குறுகி - மானிடரை அணுகி, இயற்றுதி - செய்வாயாக'. ஏ: அசை.

வீர: அண்மை விளி, அகம்பனே: ஏகாரம் அவன் முதன்மையைக் குறித்தது எனினுமாம். இலைப்படை - இலை வடிவான

தலையை யுடைய வேலாயுதம். அகம்பன்; இவன் முருகப்பிரானை எதிர்த்து முறியடிக்கப்பட்டு இறந்து, பின்னர் இப்பெயருடன் பிறந்தவன்; (பிரமாந். 123); இலங்கை கேள்வி; 33 குறிப்புக் காண்க. இவன் அநுமனொடும் பல வகையாகப் பொருது முடிவில், காற்றின் புதல்வன் கையால் மரித்தான். 'மாண்டனன் அகம்பன் மண்மேல் மடிந்தன நிருதர் சேனை' (பிரமாத்திர. 140). எள்ளில் எண்ணிலர், 'எள் போட்டால் எள்விழாது' என்ற பழமொழி இங்குக் காணத்தகும். அரக்கர் மிகுதி குறிக்கப் பட்டது. எண் என்பதே ஆதிவடிவு அது எள் எனப்பின் திரிந்தது. இதற்கு இகழப்படாதவரும் கணக்கிட முடியாதவரும் என்றும் பொருள் கொள்வர். விரைந்தனை; முற்றெச்சம். கொள்ளை அரக்கர் எள்ளில் எண்ணிலர் எனக் கூட்டினுமாம். கொள்ளை; மிகுதி) இரணி. 17. கொள்ளை வண்டு, கொள்ளை நீர்; கொள் ஐ வெம்செரு; உயிர்களைக் கொள்ளுதற்கிடமான நேர்மையான கொடிய போர் எனினுமாம்.

பி - ம். 1. சினைத்தானையை; விரவி.

2. அகம்பனை.

3. எய்திக்.

4. கொள்ளும்; வெஞ்சமப். 93

2470. மாயை யென்றன வல்லன யாவையும் வழங்கித்
தீயி ருட்பெரும் பரப்பினைச் செறிவுறத் திருத்தி
நீயொ ருத்தனே யுலகொரு மூன்றையு நிமிர்வாய்
போயு ருத்தவ ருயிர்குடித் துதவெனப் புகன்றான்.

'நீ ஒருத்தனே - நீ ஒருவனே, வல்லன - மிக்க வன்மையுள்ள, மாயை என்றன - மாயை என்று சொல்லப்படுவன, யாவையும் வழங்கி - எல்லாவற்றையும் செய்து, தீ இருள் பெரும் பரப்பினை செறிவுற திருத்தி - கொடிய மிக்க இருள்தொகுதியை நெருக்கமாக உண்டாக்கி, உலகு ஒரு மூன்றையும் நிமிர்வாய் - ஒப்பற்ற மூன்று உலகங்களையும் வென்று ஒளிரவல்லாய்; போய் - (அத்தகைய நீ இங்கு நின்றும்) போய், உருத்தவர் உயிர் குடித்து உதவு - நம் மிடம் வெகுண்டவருடைய உயிரைப்பருகி உதவுவாயாக', என -

என்று, புகன்றான் - (மகோதரனைப் பார்த்து இராவணன்) கூறினான்.

ஒருத்தன் : 'நெற்றித் தனிக்கண் ஒருத்தன்' (திருக்கோவை. 62). நிமிர்தல் - வென்றுயர்தல். உருத்தவன் : 'வானகுவாளொரு கைக்கொ டுருத்தான்' (யுத்த. மாயாசீதை. 30).

பி - ம். 2. பிழம்பினைத் திகழ்வுறத், பரப்பினைச் செருவுறச்.

4. உயிருருத்து.

## மகோதரன் மகிழ்ந்து பெரும்படையோடு செல்லுதல்

2471. என்ற காலையி னென்றுகொ லேவுவ தென்று
நின்ற வாளெயிற் றரக்கனு முவகையி னிமிர்ந்தான்
சென்று தேர்மிசை யேறின னிராக்கதர் செறிந்தார்
குன்று சுற்றிய மதகரிக் குலமன்ன குறியார்.

என்ற காலையின் - என்று இலங்கேசன் கூறிய அளவில், 'ஏவுவது என்று கொல் - (நம்மை இராவணன்) கட்டளையிடுவது என்று கொல்லோ', என்று - என்று, நின்ற - ஆயத்தமாக நின்ற, வாள் எயிறு அரக்கனும் - வாள்போன்ற பற்களைக்கொண்ட மகோதரனும், உவகையின் நிமிர்ந்தான் - மகிழ்ச்சியோடு தலை நிமிர்ந்து, சென்று - போய், தேர்மிசை ஏறினன் - தேர்மீது ஏறியமர்ந்தான் ; குன்று சுற்றிய மதம் கரிகுலம் அன்ன குறியார் - மலையைச் சூழ்ந்துநின்ற மதம்செறிந்த யானைக்கூட்டம் ஒத்த தன்மை யுடையவரான, இராக்கதர் செறிந்தார் - அரக்கர்கள் (அவனுடன் செல்லும்பொருட்டு) நெருங்கினர்.

கொல் : ஐயம். உவகையின் நிமிர்ந்தான் - மகிழ்ச்சி நிரம்பியவன் ஆனான் எனினுமாம். குன்று - மகோதரன், மத கரிகுலம் - அவனைச் சூழ்ந்துநின்ற அரக்கர் படைவீரர்.

பி - ம். 2. நிமிர்ந்து.

4. குலமெனக்.

2472. கோடி கோடிநூ றுயிர மாயிரங் குறித்த
ஆட லானைக ளணிதொறு மணிதொறு மமைந்த
ஓடு தேர்க்குல முலப்பில வோடிவந் துற்ற
கேடில் வாம்பரி கணக்கையுங் கடந்தன கிளர்ந்த.

கோடி கோடி நூறு ஆயிரம் ஆயிரம் குறித்த - கோடி கோடி நூறுயிரம் ஆயிரம் என்னும் கணக்கினவான, ஆடல் ஆனைகள் - வலிமிக்க வேழங்கள், அணிதோறும் அணிதொறும் அமைந்த - ஒவ்வொரு அணிவகுப்பிலும் பொருந்தியிருந்தன; ஓடு தேர் குலம் - விரைகின்ற தேர்க்கூட்டங்கள், உலப்பு இல - எண்ணிக்கை யற்றனவாய்; ஓடி வந்து உற்ற - ஓடிவந்து சேர்ந்தன; கேடு இல் - பழுதில்லாத, வாம் பரி - தாவுகின்ற குதிரைகள், கணக்கையும் கடந்தன - வரம்பற்றனவாய், கிளர்ந்த - கிளர்ச்சி கொண்டெழுந்தன.

ஆடல் - வலிமை; 'ஆடல் இந்திரன் அல்லவர்' (யுத்த. பிரமாத்திர. 170) அணி - படைவகுப்பு. உலப்பு இல: 'உலப்பில வுதிரவா றுவரி' (யுத்த. 1187); 'உலப்பிலா வானந்தமாய தேனினைச் சொரிந்து' (திருவாசக. பிடித்த. 9). கேடு-பழுது; சுழிக் கேடு முதலியன இல்லாத குதிரைகள்; திருவிளையாடற் புராணம், நரிபரியாக்கிய படலம் 87—95 பார்க்க. வாம்: வாவும் என்பதன் தொகுத்தல். கடந்தன: முற்றெச்சம். கேடில்: 'இங்கரர் சம்பு மாலி கேடிலா ஐவர்' (சுந்தர. 990).

பி - ம். 1. குவித்த.
2. அமைத்தது.
3. உலப்பில கோடி; உற்றது.
4. ஆடல் வாம்பரிக்; அரந்தை; அடைந்த. 96

2473. படைக்க லங்களும் பருமணிப் பூண்களும் பகுவாய்
இடைக் கலந்தபே ரெயிற்றிளம் பிறைகளு மெறிப்பப்
புடைப்ப ரந்தன வெயில்களு நிலாக்களும் புரள
விடைக்கு லங்கள்போ லிராக்கதப் பதாதியு மிடைந்த.

படைகலங்களும் - (தாம் கைக்கொண்டிருந்த) போர்க்கருவிகளும், பரு மணி பூண்களும் - பருத்த மணிகள் அழுத்திச் செய்யப்பெற்ற அணிகலங்களும், பகு வாய் இடை - பிளந்த வாயினிடையே, கலந்த - கலந்துள்ள, பேர் எயிறு இளம் பிறைகளும் - பெரிய பற்களாகிய இளம் பிறைகளும், எறிப்ப - ஒளிவிடுவதால், புடை பரந்தன வெயில்களும் - பக்கங்களிற் படர்ந்தனவான கதிர் ஒளிகளும், நிலாக்களும் புரள - நிலவொளிகளும் மாறிமாறி விளங்க, விடை குலங்கள்போல் - காளைமாடுகளின் கூட்டம் போன்று, இராக்கதர் பதாதியும் மிடைந்த - அரக்கரின் காலாட் படையும் நெருங்கி நின்றன.

படைக்கல ஒளியினால் நிலவும், மணிப்பூண்களின் ஒளியால் வெயிலும், பற்களின் ஒளியால் நிலவும் தோன்றின. பகு வாய் - பிளந்த வாய்; 'பகுவா யாக்கை யப்புறத் தகத்தது' (யுத். 263). முன் செய்யுட்கண் யானை, தேர், புரவிகள் கூறப்பட்டன; இதில் காலாட்படை குறிக்கப்பட்டது. அரக்கருக்கு விடைக்குல உவமை.

பி - ம்: 2. இடைக்கலந்தன, கலந்தனர்.
4. அரக்கர்தம்.

97

2474. கொடிக்குழீஇயின கொழுந்தெடுத்
தெழுந்து மேற்கொள்ள
இடிக்குழீஇயெழு மழைப்பெருங்
குலங்களை யிரித்த
அடிக்குழீஇயிடு மிடந்தொறும்
அதிர்ந்தெழுந் தார்த்த
பொடிக்குழீஇயண்டம் படைத்தவன்
கண்ணையும் புதைத்த.

குழீஇயின கொடி - திரண்டனவாகிய கொடிகள், கொழுந்து - தம் கொழுவிய நுனிப்பாகங்கள், எடுத்து எழுந்து - (காற்றினால்) உயர்ந்து மேலோங்கி, மேல் கொள்ள - மேலிடத்தை அகப்படுத்துவதனால், இடி - இடிகள், குழீஇ - திரண்டு, எழு - எழுவனவாகிய, மழை பெரு குலங்களை - மேகத்தின் பெரிய

தொகுதிகளை, இரித்த - நிலைகுலையச் செய்தன; அடி - (இச்சேனைகளின்) அடிகள், குழீஇ - ஒன்றுகூடி, இடும் - பதிகின்ற, இடம் தொறும் - இடங்கள்தோறும், அதிர்ந்து எழுந்து - முழங்கிக் கொண்டு கிளப்பி, ஆர்த்த பொடி - நிறைந்த துகள்கள், குழீஇ - ஒன்றாகத் திரண்டு, அண்டம் படைத்தவன் கண்ணையும் புதைத்த - உலகங்களைச் சிருட்டித்தவனான பிரமனுடைய கண்களையும் மூடின.

தொடர்புயர்வுநவிற்சியணி. கொழுந்து - கொடிச் சிலையின் நுனி குழீஇ, குழீஇ என வந்தமையின் சொற்பொருட் பின்வருநிலையணி. புதைத்தல் - மூடுதல்; 'புதையிருட் பொழுதினும்' (யுத்த. 1068).

பி - ம். 1. செற்கொள்ள, கொள்விசும்பின்.

3. குழீஇயன; இடத்தொடும்; பிரிந்தெழுந்து, பிதிர்ந்தெழுந்து. 38

2475. ஆனை யென்னுமா மலைகளி னிழிமத வருவி
வான யாறுகள் வாசிவாய் நுரையொடு மயங்கிக்
கான மாமரங் கல்லொடு மீர்த்தன கடிதிற்
போன போக்கரும் பெருமைய புணரியுட் புக்க.

ஆனை என்னும் மா மலைகளின் - யானைகள் என்னும் பெரிய மலைகளினின்று, இழி - பொழிகின்ற, மதம் அருவி - மதநீராகிய, வானம் யாறுகள் - ஆகாய நதிகள், வாசி வாய் நுரையொடும் - குதிரைகளின் வாயினின்று பெருகும் விலாழி எனப்படும் நுரையொடும், மயங்கி - கலந்து, கானம் மா மரம் - காட்டில் உள்ள பெரிய மரங்களை, கல்லொடும் ஈர்த்தன - கற்களுடனே இழுத்துக் கொண்டு, கடிதின் போன - விரைந்து சென்றனவாய், போக்க அரு பெருமைய - நீக்கமுடியாத பெருமையை உடையனவாகக், புணரியுள் புக்க - கடலினுள்ளே புகுந்தன.

யானை குதிரைப்படைகளின் மிகுதியை இச்செய்யுட்கண் காண்க. யானையின் மதநீர்ப் பெருக்கினை வானயாறாக உருவகம் செய்தார். போக்கு அரு பெருமைய - குற்றம் தீர்ந்த பெருமைய எனினுமாம்; போக்கு - குற்றம்; 'போக்கரு பனுவல்' என்ற

இடந்துக் காண்க. புணரி: பல நதிகள் வந்து புணர்தற்கு இடனுயதுபற்றிக் கடலுக்குக் காரணக்குறி; இ: பெயர்விகுதி.

பி-ம். 1. மலையினின் றிழிதரு.

2. யாறெனு வாசியின் விலாழியின், யாறுகள் வாசியி னுரையொடு; மயங்கக்.

3. கடுகிப்.

4. போக்கரும் பெருமையிற், பெருமையைப்; நீர்தரும் பொரும்புழை போதரும் பெருநதி, போதரும் பெருந்திரைப், போதரும் பெருமைய; புணரியிற்.

88

2476. தடித்து மின்குலம் விசும்பிடைத் தயங்குவ சலத்தின்
மடித்த வாயினர் வாளெயிற் றரக்கர்தம் வலத்திற்
பிடித்த திண்படை விதிர்த்திட விதிர்த்திடப் பிறழ்ந்து
பொடித்த வெம்பொறி புகையொடு போவன போல்வ.

சலத்தின் - சினத்தோடு, மடித்தவாயினர் - மடித்த வாயினை யுடையவரான, வாள் எயிறு அரக்கர் - வாள்போல் கூர்மையான கோரப் பற்களையுடைய இராக்கதர், தம் வலத்தில் - தமது வலக் கைகளில், பிடித்த - பற்றி நின்ற, திண்படை - வலிய போர்க் கருவி களை, விதிர்த்திட விதிர்த்திட - அசைக்கும்தோறும் அசைக்குந் தோறும், பிறழ்ந்து பொடித்த - மாறிமாறித் தோன்றிய, வெம் பொறி - கொடிய அனற் பொறிகள், புகையொடு - புகை விட்டுக் கொண்டு, போவன - மேலே செல்வன, தடித்து - தடித்து என்று கூறப்படுகின்ற, மின்குலம் - மின்னல் தொகுதிகள், விசும்பிடை தயங்குவ போல்வ - ஆகாயத்தினிடத்தே ஒளி விடுவனவற்றை நிகர்த்தன.

தடித்துமின் என்பன ஒரு பொருளன. ஆகவே தடித்து என்னும் மின் எனப்பட்டது. 'தடித்தா மென்னத் தன்னெதிர் செல்லும்' (சுந்தா. 183); 'தடித்தின்றி மதிவானம் கலந்திடித்தன' (சுந்தா. 299); தயங்குதல்: ஒளி விடுதல்; (கிட்கிந்தா. வாலி வதை. 53); மடித்தவாய்: வெகுளியின் மெய்ப்பாடு; 'வெகுண்டோன் அவிநயம் விளம்பும் காலை, மடித்தவாயு மலர்ந்த மார்பும், துடித்த புருவமும் சுட்டிய விரலும்' (சிலப். அரங்கேற்று. உரை); 'வாளெயிற்

றரக்கர் ' 'வாளெயிற்றரக்கர் வைகும், தாழ்கட லிலங்கை' (யுத்த. 445). தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. மின்கலும் ; தயங்கிய.

2. தம்வரத்திற்.

3. அங்கையால் விதிர்ந்திடைப் ; பிறழ்ந்த, பிறந்து, பிறந்த, மின்னும்.

4. வெம்பிறை தொத்தின போன்றன போவ ; வெம்பொறி கொதித்து முன் போவன போன்ற, செம்பொறி போன்றன போல்வ. 100

2477. சொன்ன நூறுடை வெள்ளமன் றிராவணன் றுரந்த
அன்ன சேனையை வாயிலூ டுமிழ்கின்ற வமைதி
முன்னம் வேலையை முழுவதுங் குடித்தது முறையீ
தென்ன மீட்டுமிழ் தமிழ்முனி யொத்ததவ் விலங்கை.

அன்று - அன்று, இராவணன் துரந்த சொன்ன - அந்த இராவணன் அனுப்பியனவாகக் (கீழ்க்) கூறிய, நூறு உடை வெள்ளம் - நூறு வெள்ளம் என்ற எண்ணிக்கைகொண்ட, அன்ன சேனையை - அந்தச் சேனையை, இலங்கை - இலங்கை நகரானது, வாயில் ஊடு உமிழ்கின்ற அமைதி - (தன்) வாயின் வழியாக வெளி விடுகின்ற தன்மையால், முன்னம் வேலையை - முற்காலத்துக் கடலை, முழுவதும் குடித்தது - முழுவதும் பருகியதனை, (வெளி விடுகின்ற), ஈது முறை என்ன - இதுவே முறையென்று, மீட்டு உமிழ் தமிழ் முனி ஒத்தது - மீளவும் உமிழ்ந்த தமிழ் முனிவனான அகத்தியனை ஒத்தது.

உவமையணி. சொன்ன : கீழே (2468-ம்) கவியில் காண்க. தமிழ் முனி வேலையைக் குடித்தது : 'பண்டவுணர் மூழ்கினர் படார்க ளென வானோர், எண்டவ வெமக்கருள் கெனக்குறை யிரப்பக், கண்டொருகை வாரினன் முகந்துகட லெல்லாம், உண்டவர்கள் பின்னுமிழ்க வென்றலு முமிழ்ந்தான்' (ஆரணிய. 154).

பி - ம். 1. நூறிடை ; வெள்ளமென்று.

2. சேனையவ்.

3. வேலைகள். 101

4. குறுமுனி.

2478. சங்கு பேரியுங் காளமுந் தாளமுந் தலைவர்
சிங்க நாதமுஞ் சிலையினு ணொலிகளுஞ் சினமாப்
பொங்கு மோதையும் புரவியி னமலையும் பொலந்தேர்
வெங்க ணோலமு மாலென விழுங்கிய வுலகை.

சங்கு - சங்கங்களும், பேரியும்-பேரிகளும், காளமும-எக்காளங்களும், தாளமும் - தாளங்களும், தலைவர் சிங்கநாதமும் - சேனைத் தலைவர்களின் சிங்கநாதங்களும், சிலையின் நாண் ஒலிகளும் - விற்களின் நாணொலிகளும், சினமா - சினம் கொள்ளும் இயல்புள்ள மிருகமாகிய யானைகளின், பொங்கும் ஓதையும் - கிளர்ந்து எழும் ஒலிகளும், புரவியின் அமலையும் - குதிரைகளின் கனைப்பொலியும், பொலம் - பொன்மயமான, தேர் - இரதங்களின், வெம்கண் ஓலமும்-கொடிய (ஆழிக் கணுக்களிலிருந்து) எழும் பேர் ஒலியும், மால் என உலகை விழுங்கிய-திருமால் என்று சொல்லும்படி உலகினைத் (தன்னுள்) அடக்கிக் கொண்டன.

சிங்கநாதம் : வீரர் செய்யும் சிங்கம் போன்ற ஒலி. மா என்பது மிருகப் பொதுவினைக் குறிப்பினும், இங்கு இடம் நோக்கி யானை எனப்பட்டது. உவமையணி. இச் செய்யுட்கண் ஒலியின் பிரதிபதங்கள் பல அமைக்கப்பெற்றன காண்க.

பி - ம் 1. சங்க, சங்கும் ; தாளமும் காளமும்.
3. புரவியினோதையும் ; பொலிதேர்.
4. விழுங்கியது.

102

## அரக்கர்க்கும் வானரர்க்கும் நிகழ்ந்த போர்

2479. புக்க தாற்பெரும் போர்ப்படை பறந்தலைப் புறத்தில்
தொக்க தானெடு வாநரத் தானையுந் துவன்றி
ஒக்க வார்த்தன வுறுக்கின தெழித்தன வுருமின்
மிக்க வான்படை விடுகணை மாமலை விலக்கி.

பெரும் போர்படை - பெரும் போரை இயற்றுதற்குரிய அந்த (அரக்கர்) சேனை, பறந்தலை புறத்தில் புக்கது - துவன்றிப் போர்க்களத்துப் புகுந்தது ; நெடு வாநரர் தானையும் துவன்றி தொக்கது - நீண்ட குரக்குப் படையும் நெருங்கிக் கூடிற்று, (பின்னர் படைக்

கணுள்ள குரங்குகள்), மிக்க வான்படை விடுகணை - மிகுதியாக இருந்த பெரிய அரக்கப்படை ஏவுகின்ற, வாளி-கணைகளை, மாமலை விலக்கி - பெரிய மலைகளால் தடுத்து, ஒக்க ஆர்த்தன - திரண்டு ஆரவாரித்தன; உறுக்கின - மிரட்டின; உருமின் தெழித்தன - இடிபோன்று உரப்பின. ஆல்: அசை.

பறந்தலை: போர்க்களம்; 'வேந்து புறங்கொடுத்த வீய்ந்துகு பறந்தலை' (புறநா. 373); 'கள்ளிபோகிய களரியம் பறந்தலை' (புறநா. 237); தெழித்தன: 'தெழித்தனள் உரப்பினள்' (அயோத்தி. மந்தரை. 53).

பி - ம். 3. ஆர்த்தனருறுக்கினர், ஆர்த்தனவுருக்கின.

4. மாமழை; விலக்க, விலக்கி. 103

2480. குன்று கோடியுங் கோடிமேற் கோடியுங் குறித்த
வென்றி வாநர வீரர்கண் முகந்தொறும் விலங்கல்
ஒன்றில் நால்வரு மைவரு மிராக்கத ருலந்தார்
பொன்றி வீழ்ந்தன பொருகரி பாய்பரி பொலந்தேர்.

முகம் தொறும் - இடம் தோறும், கோடியும் கோடிமேல் கோடியும் குன்று குறித்த - கோடியும் கோடிமேல் கோடியுமாகக் குன்றுகளைக் குறிபார்த்து எறிந்த, வென்றி வாநர வீரர்கள் - வெற்றி பொருந்திய வாநர வீரர்களின், விலங்கல் ஒன்றில் - ஒரு குன்றிற்கு, நால்வரும் ஐவரும் - நால்வரும் ஐவரும் ஆக, இராக்கதர் உலந்தார் - அரக்கர்கள் இறந்து வீழ்ந்தனர்; பொருகரி - போர் செய்யும் யானைகளும், பாய் பரி - பாய்ந்து செல்லும் குதிரைகளும், பொலம் தேர் - பொன்மயமான தேர்களும், பொன்றி வீழ்ந்தன - மடிந்து வீழ்ந்தன.

முகம்: போர்முகம்; 'அறுத்து மீமை உலந்த அனந்தமே' (யுத்த. மூலபல. 129.); பொருகரி பாய்பரி: வினைத்தொகை.

பி - ம். 2. வீரர்தம்; விலங்க.

4. வீழ்ந்தனர்; பொருகளம்; மதகரி. 104

2481. மழுவுஞ் சூலமும் வலயமும் நாஞ்சிலும் வாளும்
எழுவு மீட்டியுந் தோட்டியு மெழுமுனைத் தண்டும்
தழுவும் வேலொடு கணையமும் பகழியுந் தாக்கக்
குழுவி னேடுபட் டுருண்டன வாநரக் குலங்கள்.

(அரக்கரிடமிருந்த), மழுவும் சூலமும் வலயமும் நாஞ்சிலும் வாளும் - மழுவும் சூலப்படையும் வாகுவலயமும் நாஞ்சிலும் வாளும், எழுவும் - கணைய மரமும், ஈட்டியும் - ஈட்டியும், தோட்டியும்-தோட்டியும், எழுமுனை தண்டும் - எழுவினைப் போன்ற நுதியினையுடைய கதையும், தழுவும் - (மார்பிடைத்) தழுவும், வேலொடு - அணைத்த வேலொடு, கணையமும் - கணையமும், பகழியும் - அம்பும், தாக்க- மோத, வாநரர் குலங்கள் - குரங்குக்கூட்டங்கள், குழுவினேடுபட்டு உருண்டன - கூட்டம் கூட்டமாக மாண்டு தரையில் உருண்டன.

வாநரங்கள் தொகுதி தொகுதியாக அரக்கர் படைகளால் தாக்கப்பட்டு இறந்தமை இதில் கூறப்பட்டது.

பி - ம். 2. எழுமுனைத், எழுமுழுத்.
3. சமுவும்......காத்த.
4. குழுவினேடுமட்டு.

105

2482. முற்க ரங்களு முசலமு முசுண்டியு முளையும்
சக்க ரங்களும் பிண்டிபா லத்தொடு தண்டும்
கப்ப ணங்களும் வளையமுங் கவணுமிழ் கல்லும்
வெற்பி னங்களை நுறுக்கின கவிகளை வீழ்த்த.

(மற்றும் இராக்கதர் விடுத்தனவான) முற்கரங்களும் - முற்கரங்களும், முசலமும் - உலக்கைகளும், முசுண்டியும் முளையும் - முசுண்டியும் முங்கிலும், சக்கரங்களும் - ஆழிப் படையும், பிண்டிபாலத்தொடு - பிண்டி பாலங்களுடன், தண்டும் - கதையும், கப்பணங்களும் - கப்பணங்களும், வளையமும் - வலையமும், கவண் உமிழ் கல்லும் - கவண் வீசுகின்ற கல்லும், வெற்பினங்களை நுறுக்கின - மலைத் தொகுதிகளைத் தூளாக்கின; கவிகளை வீழ்த்த - குரங்குகளை வீழ்த்தின.

பல்வகைப் போர்க் கருவிகளும் இங்குக் குறிக்கப்பட்டன. (யுத்த. 2422 உரைக் குறிப்புக் காண்க.

பா - ம். 1. முசுண்டியும் வளையமும் ; முளையும்.
2. கணையமும் ; கவண்விடு.
3. துரக்கின்ற கவிகளை. 106

## இருதிறத்துச் சேனைகளும் இயங்கமாட்டாமை

2483. கதிர யிற்படைக் கலம்வரன் முறைமுறை கடாவ
அதிர்பி ணப்பெருங் குன்றுகள் படப்பட வழிந்த
உதிர முற்றபே ராறுகள் திசைத்திசை யோட
எதிர்நடக்கில குரக்கின மரக்கரு மியங்கார்.

கதிர் - ஒளி செய்கின்ற, அயில் படைகலம் - கூரிய படைக் கலங்களை, வரன்முறை முறை கடாவ - வரன்முறை பிழையாமல், முறையே (அரக்கர் படை) விடுத்தலால், குரக்கினம் - குரங்குத் தொகுதிகள், எதிர் நடக்கில - அரக்கர் எதிரே நடக்கவியலாதன வாயின ; அதிர் பிணம் பெரு குன்றுகள் - சத்தமிட்டுக்கொண்டு விழுகின்ற பிணங்களின் பெரிய மலைகள், படபட - மிகுதியாகத் தாக்குதலாலும், அழிந்த - அந்தப் பிணங்களினின்று மிகுதியாக எழுந்த, உதிரம் உற்ற பேர் ஆறுகள் - இரத்தத்துடன் கூடிய பெரிய ஆறுகள், திசை திசை ஓட - திக்குகள் தோறும் ஓடுவதனாலும், அரக்கரும் இயங்கார் - இராக்கதரும் நடமாட்டமில்லாதவ ராயினர்.

கதிர் அயில் என்ற அடைமொழிகள் ஒளியையும் படைகளின் கூர்மையையும் குறித்தன. கடாவுதல் : செலுத்துதல் ; 'மான்தேர் கடிதினிற் கடாவி' (யுத்த. 1111) ; 'ஒருகை அங்குசம் கடாவ' (திருமுரு. 110) அரக்கரும் : உம்மை உயர்வு சிறப்பு.

பா - ம். 1. வரமுறை, அவர் முறை, குலம்வரன்.
2. எதிர் விளைப்பெருங் குன்றுகள் படப்பட விழுந்த.
3. உதிரவிற்பின.
4. கவிக்குலம். 107

## மடிந்த வானரர் தேவர்களாதல்

2484. யாவ ராங்கிகல் வானர ராயின ரெவரும்
தேவ ராதலி னவரொடும் விசும்பிடைத் திரிந்தார்
மேவு காதலின் மெலிவுறு மரம்பையர் விரும்பி
ஆவி யொன்றிடத் தழுவினர் பிரிவுநோ யகன்றார்.

ஆங்கு - அப் போர்க்களத்தில், யாவர் இகல் வானரர் ஆயினர்- எவரெவர் மாறுபட்டுப் பொருதவரான வானரரோ, எவரும் - அவர் அனைவரும், தேவர் ஆதலின் - (தமது இயற்கை வடிவான) தேவர் களாக மாறி விடுதலின், அவரொடும் - அந்த வானவருடன், விசும் பிடை திரிந்தார் - ஆகாயத்தினிடை திரிந்தவராகவே, மேவு காதலின் - (இத்துணைக் காலம்) பொருந்திய ஆசையால், மெலி வுறும் அரம்பையர் - (உடலும் மனமும்) தளர்ந்திருந்த அரம்பை மார்கள், விரும்பி - (தம்முடைய) ஆசை கைகூடப் பெற்று, ஆவி ஒன்றிட தழுவினர் - உயிர் ஒன்று என்னுமாறு தழுவினவராய், பிரிவு நோய் அகன்றார் - விரகம் என்ற பிணி நீங்கப் பெற்றனர்.

வானரர் ஆயினர் எவரும் தேவராதலின்; வானுளோரனைவரும் வானரங்களாக் கானினும் வரையினும் கடிதடத்தினும், சேனையோ டவதரித்திடுமின் சென்றென, ஆனன மலர்ந்தன னருளி னுழியான்' (பால. திருவவ. 22); மற்றும் அப்படலம் 26, 27, 28 29-ப் காண்க. 'செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவர் என்றார்' (யுத்த. 761); போர்க்களத்து விழுப்புண்பட்டு இறந்த வீரர், வீரர் சுவர்க்கம் அடைதலும் அவர்களை அரம்பையர் தழுவுதலும் நூல்கள் கூறும் 'தரைமகள் தன் கொழுநன்றன் உடலந் தன்னைத், தாங்காமல் தன்னுடலாற்றுங்கி விண்ணுட், டரமகளிர் அவ்வுயிரைப் புணராமுன்னம், ஆவியொக்க விடுவானைக் காண்மின் காண்மின்' (கலிங். 483); 'எதிர்கொளும் சுரர் விமானங் களிற் சுரர்களாய் ஏறுமானவர்' (கலிங். 492); பிரிவு நோய்: தலை வரைப் பிரிந்ததால் உண்டான நோய்; இதனை விப்ரளம்பம் என் பர் வடநூலார். 'ஆவியொன்றிட' 'ஆவியொன்றாக நட்டான்' (சுந்தர.); இந்த வானரர்கள் தேவராயிருந்தபோது அவர் களைத் தழுவி யின்புற்றவராகலின், இப்பொழுது மீட்டும்

அணைத்து பிரிவு நோயகன்றூர் எனப்பட்டது. போரில் இறந்தவர் வீரசுவர்க்கம் அடைதல் 'ஹதோவா ப்ராம்ஸ்யஸே ஸ்வர்கம்' (பகவற்கீதை.).

பி - ம். 1. இங்கிகல் ; வாநரமாயினர்.

2. அவருடன் ; விசும்பினில்.

3. மங்கையர் விரும்பி.

4. மங்கையர் ; விழைவினர். 108

## மரித்த அரக்கர் தேவராதல்

2485. கரக்கு மாயமும் வஞ்சமுங் களவுமே கடனு
இரக்க மேமுதல் தருமத்தி னெறியொன்று மில்லா
அரக்க ரைப்பெருந் தேவர்க ளாக்கின வமலன்
சரத்தின் வேறினிப் பவித்திர முளதெனப் தகுமோ.

கரக்கும் - ஒளி மறைவாகச் செய்கின்ற, மாயமும் வஞ்சமும் களவுமே கடனு - மாயமும் வஞ்சனையும் சோரத்தனமுமே (தமது) கடமையாகக் கொண்டு, இரக்கமே முதல் தருமத்தின் நெறி ஒன்றும் இல்லா - இரக்கம் முதலான தரும வழி ஒன்றும் இருக்கப் பெருத, அரக்கரை - இராக்கதரையும், பெரு தேவர்கள் ஆக்கின - பெருமை சான்ற அமரர்கள் ஆகச் செய்தன ; அமலன் - அழுக் கற்ற இலக்குவனுடைய, சரத்தின் - அம்புகளைக் காட்டிலும், இனி - இனி, பவித்திரம் - தூய்மையான, வேறு - பிறிது பொருள், உளது என தகுமோ - இருக்கின்றது என்று கூறுதல் பொருந்துமோ? ஓ : எதிர்மறை.

முன் செய்யுவில் வாநரர் தேவர்கள் ஆனதாகக் கூறினர். இதில் அரக்கரும் போரில் விழுப்புண்பட்டிறந்தமையின் தேவ ராஞர் எனப்பட்டது. வாநரர் தேவர்களாயிருந்து இராம காரிய மாகப் பூவுலகம் எய்தி, மீட்டும் தேவர் ஆயினர். அரக்கர் மாயம் வஞ்சம் முதலிய பண்புகளைக் கொண்டிருந்த போதும், அமலனுை இலக்குவன் புனித வாளியினுல் தூய்மை எய்தித் தேவராயினர். இரக்கம் இல்லார் : 'இரக்கமென் ஞெருபொரு ளிலாத நெஞ்சினர், தருமத்தின் நெறியில்லார் (ஆரணிய. 129) ; அறம்புகாமை யாலழியு மிப்பதி' (சுந்தர. 118) இங்கு வாநரர் தேவராயினர்; அரக்கர் பெருந்

தேவராயினர் என்றது காண்க. பவித்திரம்: தூய்மை; 'பவித்ர பயோதரி' (நக்ஷ. 74); 'பவித்திரத் தும்பி பறந்ததே' சீவக. 2311) இனி, இராவணன் தன்னுடைய இதயமாம் சிறையில் கற்புக் கணிகலமாம் சீதையை வைத்தான்; அவள் மீதிருந்த காதல் உள்ளவரை அவனுக்கு நற்கதியில்லை; ஆதலின் இராகவன் புனித வாளி, சானகியை மனச் சிறையிற் கரந்த காதல் உள்ளிருக்கு மெனக் கருதி, யுடற்புகுந்து தடவியதாகக் கூறிய நயமும் காண்க. (யுத்த. இராவணன் வதை. 239). இங்கு அமலன் சரம் என்றதற் கேற்ப, இராகவன் சரத்தைப் 'புனித வாளி' (யுத்த. இராவணன் வதை. 198) என்றது காண்க.

பி-ம். 2. இரக்கமாம்; நெறியொன்றும், நெறியென்றும், நெறிக்கொன்றும்.
3. ஆக்கின்ற.
4. உளவெனப். 109

## இலக்குவன் செய்த போர்

2486. அந்த கன்பெரும் படைக்கல மந்திரித் தமைந்தான்
இந்து வெள்ளெயிற் றரக்கரு மியானையுந் தேரும்
வந்த வந்தன வானக மிடம்பெறு வண்ணம்
சிந்தி னுன்சர மிலக்குவன் முகந்தொறுந் திரிந்தான்.

இலக்குவன - இளையகோ, அந்தகன் பெரு படைக்கலம் மந்திரித்து அமைந்தான் - யமனுடைய பெரிய அத்திரத்தை, மந்திரத்துடன் கையில் ஏற்றியவனுய், முகம் தொறும் திரிந்தான் - போர் முனைகளில் எல்லாம் திரிந்தவண்ணம், இந்து வெள் எயிறு அரக்கரும் - பிறைமதியினைப் போன்ற வளைந்த வெண்ணிறமான பற்களையுடைய இராக்கதரும், யானையும் தேரும் - யானையும் இரதமும் ஆகிய, வந்த வந்தன - (தன்னை நோக்கி) வந்த வந்த அவைகளை, வானகம் இடம்பெறு வண்ணம் - விண் வீதியில் இடமின்றி நிறையுமாறு, சரம் சிந்தினுன் - வாளிகளை வாரியிறைத்தான்.

அந்தகன் பெரும்படை - யமாத்திரம். அந்தகன் - உயிர்கட்கு, அந்தம் அல்லது முடிவைச் செய்பவன் என்று பொருள்படும்.

'காலனென்னும் கண்ணிலி யுயப்ப' (புறநா. 240) என்று காலனை அந்தகனாகக் கூறியதும் காண்க. மந்திரித்தமைதல்: படைகள் விடுதற்கு முன்பு மந்திரம் வழங்கல். இந்து-சந்திரன்; 'இந்துவை வளைக்கு மெழிலிக் குலமெனத்தான்' (ஆரணிய. 524). இந்து வெள்ளெயிறு - பிறைமதி போன்ற வளைந்த வெள்ளிய பற்கள். இடம் பெறு - இடம் பெறுத என்றது ஈறு குறைந்தது.

பி - ம். 1. மந்திரத்து.
3. வந்த வந்துயர்.
4. தெரிந்தான். 110

## அநுமன் கதைகொண்டு பொருதல்

2487. கும்ப கன்னனுண் டிட்டது வயிரவான் குன்றின்
வெம்பு வெஞ்சுடர் விரிப்பது தேவரை மேனுள்
தும்பை யின்றலைத் துரந்தது சுடர்மணித் தண்டொன்
றிம்பர் ஞாலத்தை நெளிப்பது மாருதி யெடுத்தான்.

கும்பகன்னன் ஆண்டு இட்டது - கும்பகன்னன் அந்தப் போரரங்கிலே விடுத்ததும், வான் வயிரம் குன்றின் - பெரிய வயிர மலைபோன்று, வெம்பு - வெம்புதற்குக் காரணமான, வெஞ்சுடர் - கொடிய சுடரை, விரிப்பது - பரப்புவதும், மேல் நாள் - முன் காலத்தில், தேவரை - விண்ணவரை, தும்பையின் தலை - போர் முனையில், துரந்தது - துரத்தியதும், இம்பர் ஞாலத்தை நெளிப்பது - இவ்வுலகத்தை நெளிந்து வளையச் செய்வதும், சுடர்மணி - ஒளி செறிந்த மணிகள் அழுத்தப் பெற்றதும் ஆன, தண்டு ஒன்று - கதை ஒன்றை, மாருதி எடுத்தான் - அநுமன் கையில் எடுத்துக் கொண்டான்.

கும்பகன்னன் தண்டாயுதத்தை இராமபிரான் துணித்தது. (யுத்த. 1541). தண்டின் கொடுமை மிகுதி தோன்ற வெம்பு வெஞ்சுடர் எனப்பட்டது. தும்பை-இங்கு போர் மாலையாகிய தும்பையைச் சூடிப்பொரும் போர்க்களத்துக்கு ஆகி வந்தது. பூமியில் இட்ட அளவில் பூமியைத் தன் பாரத்தால் நெளியச் செய்யும் கதை

ஆதலின், , இம்பர் ஞாலத்தை நெளிப்பது எனப்பட்டது. மாருதி தண்டொன்று எடுத்தான் என்க.

பி - ம். 1. அன்றிட்டது.

4. ஞாலத்தைத் தடுத்தது, தடுப்பது. 111

## வேறு

2488. காற்றன்றிது கனலன்றென விமையோரிடை காணு
வேற்றங்கடு விசையோடுயர் கொலைநீடிய வியல்பால்
சீற்றந்தனி யுருவாயிடை தேருததொர் மாருய்க்
கூற்றங்கொடு முனைவந்தெனக் கொன்ருனிகல் நின்ருன்.

இகல் நின்ருன் - மாறுபட்டு நின்றவன் ஆன அனுமன், ஏற்றம் - மிக்குள்ள, கடுவிசையோடு - மிக்க வேகத்துடனே, உயர் கொலை - பெரிய கொலைத் தொழிலும், நீடிய இயல்பால் - மிக்குள்ள இயல்பினுல், 'இது காற்று அன்று - இது காற்று அன்று, இது கனல் அன்று - (இது) கனலும் அன்று', என - என்று சொல்லி, இமையோர் இடைகாணு - தேவர்களும் நிலைமையைக்காண வியலாமல் இருப்ப, கூற்றம் சீற்றம் தனி உருவாய் - யமனுடைய சினம் என்பதே தனியே உருவாகப்படைத்து, இடை தேருதது ஓர் மாருய் - (தன் நிலை) தெளிய முடியாதபடியாக ஒப்பற்ற மாறுபாடு கொண்டு, கொடுமுனை வந்தென - கொடிய போர்க்களத்திலே வந்தாற் போன்று, கொன்ருன் - (அந்தக் கையினுலே இராக்கதர் களைக்) கொல்லலுற்ருன்.

சீற்றம் தனி உருவாய் (ஒப்பு): 'பிரிவெ னும்துயர் உருவு கொண் டாலெனும் பிணியாள்' (சுந்தர. 336); 'கொடுமையாக, இரக்கமேயாக' (சுந்தர. 515) முனை : போர்முனை ; 'இடுநெறி முனை யகன் பெரும்பாழ்' (பதிற்றுப். 25 : 9). இச் செய்யுட் சந்தம், 'வெய் யோனெளி தன்மேனியில்' (அயோத்தி. கங்கைப். 1) என்ற செய்யுட் சந்தம் போன்றது. வந்தது எனஎன்பது, வந்தென எனத் தொகுத்தது.

பி - ம். 1. கனலாமென.

2. கொடுவிசையோடின ; இயலால்.

3. ஒருமாருங்.

4. கூற்றங்கடு.

112

2489. வெங்கண்மத மலைமேல் விரை
பரிமேல்விடு தேர்மேல்
சங்கந்தரு படை வீரர்க
ளுடன்மேலவர் தலைமேல்
எங்கும்முள னொருவன்னெதிர்த்
திருநான் மறை தெரிக்குஞ்
செங்கண்ணவ னிவனே யெனத்
திரிந்தான் கலை தெரிந்தான்.

கலை தெரிந்தான் - பல கலைகளையும் கற்றுத் தெளிந்தவனான அநுமன், வெம்கண் - கொடிய கண்ணையும், மதம் - மதத்தையும் உடைய, மலைமேல் - மலைபோன்ற வேழத்தின் மீதும், விரை பரி மேல் - விரைந்து செல்லும் குதிரை மீதும், விடு தேர்மேல் - செலுத்தப்படும் தேரின் மீதும், சங்கம் தரு படைவீரர்கள் உடன் மேல் - திரளாக உள்ள படை வீரர்களின் உடலின் மீதும், அவர் தலைமேல்-அவர்களின் சிரசின் மேலும், இரு நான்மறை தெரிக்கும்- பெருமை சான்ற வேதங்களாலும் தெரிவிக்கப்படுகின்ற, செங் கண்ணவன் இவனே - செந்தாமரைக் கண்ணன் இவனே, என - என்னுமாறு, ஒருவன் - (தான்) ஒருவனே, எங்கும் உளன் ஆகி எதிர்த்துத் திரிந்தான் - எங்கும் காணப்படுபவனாகிப் பகைவரைத் தாக்கித் திரிந்தான்.

சங்கம் தருதல் - திரளாக இருத்தல். எங்கும் காணப்படும் தன்மையினால் இவன் திருமால்தானோ என எண்ணுமாறு அநுமன் சாரி திரிந்தான் என்க. இருநான்மறை: இருமை-பெருமை. எங்கும் உளன் ஒருவன்; சர்வாந்தர்யாமி அல்லது சர்வவியாபி. 'சாணி னும் உளன்' (யுத்த. 253) எனத் தொடங்கும் செய்யுளைக் காண்க. 'என்கணா னேக்கிக் காண்டற் கெங்கணும் உளன்' (யுத்த. 250); 'அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமாய் ஆனந்த ரூபியாகி' (தாயு. 1); செங்கண்ணன் - திருமால். 'செங்கணான் யோக நீங்கினனென' (யுத்த. மருத்து. 104); 'யாருமச் செங்கணானைப் பூண்டனர்' (யுத்த. இராவணன் களங். 19). கலை தெரிந்தான் - அநுமன். 'இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவ னிசைகள் கூறக் கல்லாத கலையும்' (கிட்கிந்தா. 61); (சுந்தர. 1233, 1237).

பி - ம். 3. ஒருவன்னென; தெரியும்.

2490. கிளர்ந்தாரையுங் கிடைத்தாரையுங்
கிழித்தான்கனல் விழித்தான்
களந்தானொரு குழம்பாம்வகை
யரைத்தானிரு கரத்தான்
வளர்ந்தானிலை யுணர்ந்தாருல
கொருமூன்றையும் வலத்தால்
அளந்தான்முன மிவனேயென
விமையோர்களு மயிர்த்தார்.

கிளர்ந்தாரையும் - உள்ளக் கிளர்ச்சி கொண்டு மேல் வந்தாரையும், கிடைத்தாரையும் - கையில் சிக்கியவரையும், கனல் விழித்தான் - தீப்பொறி பிறக்க விழித்து, கிழித்தான் - கிழித்தவனாய், களம் ஒரு குழம்பாம் வகை - போர்க்களம் எங்கும் ஒப்பற்ற கொழுப்புக் குழம்பாகுமாறு, இருகரத்தான் அரைத்தான் - இரண்டு கைகளாலும் அரைத்தான் (அநுமன்); வளர்ந்தான் நிலை உணர்ந்தார் - வளர்ந்தவனான (அந்த) மாருதியினுடைய நிலையை உணர்ந்தவராய், இமையோர்களும் - தேவர்களும், 'ஒரு உலகு மூன்றையும் - ஒப்பற்ற உலகம் மூன்றினையும், வலத்தால் - தனது வன்மையால், முனம் - முன்னாளில், அளந்தான் இவனே - அளந்தவன் இவனே', என - என்று, அயிர்த்தார் - ஐயுறவு கொண்டனர். தான்: அசை.

இச் செய்யுட் கண்ணும் அநுமனைத் திருமாலாகவே கூறியமை காண்க. இங்கு வளர்ந்ததாலும், எங்கும் அவன் உருவால் அளந்ததாலும் உவமை. வலத்தால் அளத்தல் - தன் வன்மையால் அளத்தல்; திருமால் உலகை அளந்தது: பாலகாண்டத்து மாவலி வரலாற்றிற் காண்க. 'விசும்பினோங்கினன், உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே' 'ஒன்றி வானக மெலாம் ஒடுக்கி யும்பரை, வென்றதால் மீண்டது வெளி பெருமையே' (பால. வேள்வி, 35, 36); 'விண்டு, காலினா லளந்த வான முகட்டையுங் கடக்கக் கால, வாலினால் அளந்தானென்று' (சுந்தர. 33); இமையோர்களும் அயிர்த்தார்; உம்மை உயர்வு சிறப்பு. அயிர்த்தல்:

'ஆரென்னலோடு மனலென்ன வயிர்த்துயிர்த்தாள்' (பால. பூக்கொய். 18).

பி - ம். 1. கிளர்ந்தான்னியல்; கிடந்தாரையும்.

2. உருக்கரைத்தான்.

3. வளர்ந்தோர் நிலை.

4. அளந்தானுமுன். 114

2491. மத்தக்கரி நெடுமத்தகம் வகிர்ப்பட்டுக மண்மேல்
முத்திற்பொலி முழுமேனியன் முகில்விண்டொடு
[மெய்யான்
ஒத்தக்கடை யுகமுற்றுழி யுறுகால்பொர வுடுமீன்
தொத்தப்பொலி கனகக்கிரி வெயில்சுற்றிய தொத்தான்.

மத்தகரி - மதம் கொண்ட வேழங்களின், நெடு மத்தகம் வகிர் பட்டு - நீண்ட மத்தகம் பிளவுண்டு, உக - சிந்துவதால், மண்மேல் - இப் பூமியின்மீது (அம் மத்தகத்தினின்று வெளிப்பட்ட), முத்தில் பொலி - முத்துக்களினுற் விளங்குகின்ற, முழு மேனியன் - முழு உடலை யுடையவனும், முகில் விண்தொடு மெய்யான் - மேகங்கள் படிந்துள்ள ஆகாயத்தைச் சென்று தீண்டும் உடலை யுடையவனுமான, அநுமன், ஒத்து அகடை உகம் உற்றுழி - (எல்லாப் பொருளும்) ஒருசேர அந்தக் கடையுகத்தில் அழியும்போது, உறு கால் பொர - பெருங் காற்றடிக்க, உடுமீன் - உடு எனப்படும் நட்சத்திரங்கள், தொத்த - (தன் மீது) தொத்தி நிற்க, பொலி - விளங்குவதும், வெயில் சுற்றியது - சூரியன் சுற்றி வருவதுமான, கனகம் கிரி ஒத்தான் - மேரு மலையை ஒத்து விளங்கினுன்.

யானை மத்தகத்தில் முத்து உண்டென்பர். கரட விகட கடத் தந்திப் பிறைக்கூன் மருப்பில் விளை தரளம் (திருச்செந்தூர். பிள்ளைத் தமிழ். முத்தப்); மற்றும்: முத்துப் பிறக்கும் இடங்கள், வலம்புரி, சாலி என்ற உயர்ந்த நெல், மேகம், பன்றி முதலியன. 'மைக்கரு முகில்வேய் பாம்பின் மத்தகம் பன்றிக்கோடு, மிக்க வெண்சாலி யிப்பி மீன்தலை வேழக் கன்னல், கரிமருப் பைவாய் மான்கை கற்புடை மடவார் கண்டம், இருசிறைக் கொக்கின் கண்டம்' (திருவிளை. மாணிக்க. 53, 54)-ம் காண்க. முகில் விண்: முகில் படிந்த ஆகாசம். கால்: இங்கு ஊழிக்காற்று. அநுமனுக்குக்

கனகக்கிரியும், அவன் மேனிமீது முத்துக்கள் நிரம்பி நின்ற மைக்கு, மேருமலை மீது விண் மீன்கள் தொத்தி யிருந்ததும் உவமை. யுகக்கடை என்பது செய்யுள் நோக்கிக் கடையுகம் என வந்தது. தொத்துதல் : 'தொத்தி மீண்டில் வால்நெடுந் தூளியே' (யுந்ந. 996); கனகக்கரி : மேருமலை. வெயில் : கிரணம். அதனை யுடைய சூரியனுக்கு ஆகி வந்தது.

பி - ம். 1. அநிர் பற்றுக ; மணிமேல்.

2. வித்தப்பொலி ; மழைமின்னொடு மொய்யான்.

3. ஒத்ந்தக் ; உடுகார்பொக ; உடுவின்.

4. தொத்நிப் பெயர், செத்நப் பொலி. 115

2492. இடித்தானிலம் விசும்போடென
விட்டானடி யெழுந்தான்
பொடித்தான்கடற் பெருஞ்சேனையைப்
பொலந்தண்டுதன் வலத்தால்
பிடித்தான்மத கரிதேர்முதல்
பிழம்பானவை குழம்பா
அடித்தானுயிர் குடித்தானெடுத்
தார்த்தான்பகை தீர்த்தான்.

(பின்னும் மாருதி), பொலம் தண்டு தன் வலத்தால் பிடித்தான் - அழகிய கதாயுதத்தைத் தனது வன்மையாற் பற்றியவனாய், நிலம் - பூமியை, விசும்போடு இடித்தான் என - ஆகாயத்தோடு தகர்த்தான் என்னுமாறு, அடி இட்டான் - (பூமியில்) அடி வைத்து, எழுந்தான் - (வான் அளாவ) உயர்ந்து, (போர்க்களம் எங்கும் திரிந்து), கடல் பெரு சேனையை பொடித்தான் - கடல் போன்று பரந்த பெரிய அரக்கர் படையைத் துகள் செய்தான்; (அன்றியும்), மதம் கரி தேர் முதல் பிழம்பானவை - மதம்கொண்ட யானை தேர் முதலான உருவப் பொருள்கள் அனைத்தையும், குழம்பா அடித்தான் - குழம்பாகுமாறு செய்து, உயிர் குடித்தான் - (அவற்றின்) உயிரைப் பருகி, பகை தீர்த்தான் - பகையை ஒழித்த வனாகி, எடுத்து ஆர்த்தான் - குரலை யுயர்த்திப் பேராரவாரம் செய்தான்.

நிலம் விசும்போடு இடித்தான் என்று மொழி மாற்றிப் பொருள் தரப்பட்டது. 'பொடிப்பன போக்கில' (யுத்த. இராவணன் வதை. 43); 'பொடித்தா னுகுமிப் பொழுது' (யுத்த. இராவணன் வதை. 140). பிழம்பு - வடிவு; 'பிழம்பின திரிவண வென்னும் பெற்றியார்' (யுத்த. இராவணன் வதை. 64); 'அன்பு பிழம்பாய்த் திரிவார் அவர் கருத்தின் அளவினரோ' (பெரியபு. கண்ணப்ப. 154). பொலங் தண்டுதன் வலத்தால், பிழம்பானவை குழம்பா, ஆர்த்தான் பகை தீர்த்தான் என்ற இடங்களில், இணை எதுகை வந்து செய்யுட் சந்தத்துக்கு இனிய ஓசை தந்தமை காண்க. உயிர் குடித்தல்: 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டனபோலக் கூறலு மரபே' (தொல். பொருளி. 19).

பி - ம். 1. இகல் விசும்பொடுடன்.

3. படிந்தான் மதக்கரி; கரிமுதல்; பிழம்பாமது, பிழம்பாயுறு, பரியாவையுங்.

4. வடிந்தான். 116

2493. நூறுயிர மதமால்கரி யொருநாழிகை நுவல்போ
தாறுய்நெடுங் கடுஞ்சோரியி னளறும்வகை யரைப்பான்
ஏறுயிர மெனலாயெழு வயவீரரை யிடறித்
தேறுதுறு கொலைமேவிய திசையானையிற் றிரிந்தான்.

ஒரு நாழிகை நுவல்போது - ஒரு நாழிகை என்று கூறப்படும் கால அளவில், ஆறுய் - ஆறுய்ப் பெருக்கெடுக்கின்ற, நெடு கடு சோரியின் - மிகக் கொடிய உதிரத்தில், நூறு ஆயிரம் மதம் மால் கரி - லக்ஷம் என்ற எண்ணிக்கையுள்ள மதம்கொண்ட பெரிய யானைகளை, அளறு ஆம் வகை அரைப்பான் - சேறுகும்படி அரைப்பவனுன அநுமன், ஆயிரம் ஏறு எனலாய் - ஆயிரக் கணக்கான ஆண் சிங்கம் என்று பகருமாறு, எழுவயம் வீரரை - தன் மேல் வருகின்ற வலி பொருந்திய (இராக்கத) வீரர்களை, இடறி - (காலினுல்) இடறி, தேறுது உறு - தெளிவுறுது (மதமால் கொண்டு) மிக்க, கொலை மேவிய - கொல்லும் தொழிலை விரும்பிப் புரிகின்ற, திசை யானையில் திரிந்தான் - திக்கிலுள்ள வேழங்களைப் போன்று திரிந்தான்.

அளறு - சேறு ; 'விரிகடலளற தெழுந்தன' (யுத்த. மூலபல. 216) ; 'அங்கம் வெந்து பேரளற்றிடை யடுக்கிய கிடந்த' (யுத்த. 559) ; திசை யானை - எட்டுத் திக்கு யானைகள். கிட்கிந்தா. 441. குறிப்புக் காண்க. மேவுதல் - விரும்புதல் ; 'மூவுலகத்தவரும் முதலோரும், மேவின விற்றொழில்' (யுத்த. மாயா சீதை. 26) ஏறு - விலங்குகளின் ஆண்கட்குப் பொதுப் பெயரேனும், இங்கு இடம் நோக்கி மிருகேந்திரனாகிய சிங்கவேறே கொள்ளப்பட்டது.

பி - ம். 2. ஆரு ; சோரியாரும் வகை, சேரரியினுரும்படி.

3. மெனலாய் வரும், எனலாவெழும் ; இடிந்த.



2494. தேரேறினர் பரியேறினர் விடையேறினர் சினவெங்
காரேறினர் மழையேறினர் கலையேறினர் பலவெம்
போரேறினர் புகழேறினர் புகுந்தார்புடை வளைந்தார்
நேரேறினர் விசும்பேறிட நெரித்தான் கதை திரித்தான்.

விடை ஏறினர் -, இடபத்தின் தன்மை கொண்டவராய், தேர் ஏறினர் - தேர்மீது ஏறி வந்தவரும், பரி ஏறினர் - குதிரைமீது ஏறி வந்தவரும், சினம் வெம்கார் ஏறினர் - சீற்றம் மிக்க கொடிய மேகம் போன்ற யானைமீது ஏறி வந்தவரும் ஆகி, மழை ஏறினர் - மழையை மிகுதியாகப் பொழிகின்றவரும், கலை ஏறினர் - போர்க் கலையில் தேர்ந்தவரும், பலவெம் போர் ஏறினர் - பலவான கொடிய போர் முறையிற் சென்று பொருது; புகழ் ஏறினர் - புகழ் பெற்றவரும், புகுந்தார் - (இப்போது களத்திற்) புகுந்து, புடை வளைந்தார் - (தன்னை) எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டு, நேர் ஏறினர் - நேரே பொருபவருமான, (அரக்க) வீரர்கள் அனைவரையும், (அநுமன்) கதை - தண்டாயுதத்தை, திரித்தான் - சுழற்றியவனாய், விசும்பு ஏறிட நெரித்தான் - விண்ணில் ஏறும்படி நெருக்கிக் கொன்றான்.

கலையேறினர் பலவெம், நெரித்தான் கதை திரித்தான் என்ற இடங்களில் இணையெதுகை காண்க. விசும்பேறிட ; (ஒப்பு) : 'நாராயண கோபாலரும் நாகங்குடியேற' (வி. பா.).

பி - ம். 1. களிற்றேறினர்.

2. மழையேறனர், கடலேறினர் ; மழைவெம், பலவும்.

3. புகுந்தாரிடை.

வேறு

## சுக்கிரீவன் முதலியோர் ஒருவரை யொருவர் காணமல் அரக்கர் சேனையின் நடுவண் இருத்தல்

2495. அரிகுல மன்ன னீல னங்கதன் குமுதன் சாம்பன்
பருவலிப் பனச னென்றிப் படைத்தலை வீரர் யாரும்
பொருசினந் திருகி வெற்றிப் போர்க்கள மருங்கிற் புக்கார்
ஒருவரை யொருவர் காணு ருயர்படைக் கடலி னுள்ளார்.

அரிகுலம் மன்னன் - வானர வரசனாகிய சுக்கிரீவனும், நீலன் அங்கதன் குமுதன் சாம்பன் - நீலன் அங்கதன் குமுதன் சாம்பன், பருவலி பனசன் - மிக்க வன்மை வாய்ந்த பனசன், என்று இ படைதலை வீரர் யாரும் - என்ற தலைமை பெற்ற இந்தச் சேனை வீரர் யாரும், பொரு சினம் திருகி - போர் புரிதற்குரிய கோபத்தால் மாறுபட்டு, வெற்றி போர்க்களம் மருங்கில் புக்கார் - வெற்றியைத் தருகின்ற யுத்த களத்தின் நடுவே புகுந்து, ஒருவரை ஒருவர் காணர் - ஒருவரை ஒருவர் காணமல், உயர் படை கடலின் உள்ளார் - பெரிய இராக்கதர் சேனையாகிய கடலினுள்ளே இருப்பவர் ஆனார்கள்.

அரிகுலம் : 'அன்னகாலை யரிக்குல வீரரும்' (யுத்த. 1001); சினம் திருகல் : வெகுளியால் மாறுபடுதல்; 'திருகு வெஞ்சினத்தன' (யுத்த. 336).

பி - ம். 1. அநுமன் சாம்பன்.
3. நெருங்கப் புக்கார்.



## அநுமன் அகம்பனென்ற அரக்கவீரரை எதிர்த்தல்

2496. தொகும்படை யரக்கர் வெள்ளந்
துறைதுறை யள்ளித் தூவி
நகம்படை யாகக் கொல்லு
நரசிங்க நடந்த தென்ன

மிகும்படைக் கடலுட் செல்லு
மாருதி வீர வாழ்க்கை
அகம்பனைக் கிடைத்தான் றண்டா
லரக்கரை யரைக்குங் கையான்.

வெள்ளம் தொகும்படை அரக்கர் - வெள்ளக்கணக்கான திரளாகவுள்ள அரக்கர் சேனையை, துறை துறை - போர்க்களத்து இடம் தோறும் இடம் தோறும், அள்ளி தூவி - வாரியிறைத்து, நகம்படை ஆக கொல்லும் நரசிங்கம் நடந்தது என்ன - நகத்தையே ஆயுதமாகக் கொண்டு கொல்லும் தன்மையுள்ள நரசிங்கப் பெருமான் (முன்பு) நடந்தது போன்று, மிகும் படை கடலுள் செல்லும் மாருதி - (பெரிய) அரக்கர் சேனையாகிய கடலுள் செல் லும் அநுமன், தண்டால் அரக்கரை அரைக்கும் கையான் - கதா யுதத்தினல் இராக்கதரை அரைக்கும் கரத்தை யுடையவனுகி, வீரம் வாழ்க்கை - வீரத்தினல் வாழ்க்கை நடத்தலை யுடைய, அகம்பனை கிடைத்தான் - அகம்பன் என்பவனைக் கிட்டினன்.

நகம்படையாகக் கொல்லும் நரசிங்கம்; 'வயிரவாளுகிரின்...... வெயில் விரிமார்பு, தீயெழப் பிளந்து' (யுத்த. 282); நரசிங்கா வதாரம்-திருமாலின் நான்காவது அவதாரம். ,அரக்கர் படையைக் கடலாகக் கூறியதற்கேற்ப மாருதியைப் படகாகவோ மரக்கல மாகவோ கூருமையின் ஏகதேச வுருவகம். மாருதி - தத்திதாந்தப் பெயர். வீர வாழ்க்கை அகம்பன் என்பதிலிருந்து, அவ்வரக்க னுடைய பேராற்றல் தொனிக்கும். கிடைத்தல்-கிட்டுதல் அல்லது சந்தித்தல். இங்கு நரசிங்கத்தை அநுமனுக்கு உவமையாக்கிய கவிஞன், 'நகம்பல் என்றிவை யல்லதோர் நரசிங்க மனையான் என்று அகம்பனைக் குறித்தமை காண்க. யுத்த. 490, குறிப்பும் காண்க. மற்றும் அகம்பனைப் பற்றிய செய்திகள்; யுத்த. பிரமாத் திரப் படலத்துப் பல இடங்களிலும் காணலாம்.

பி ம். 1. அவுணர்தம்மை ; அள்ள.

2. நகும்படைத் தலைவர் ; நடந்ததே போல்.

120

## அகம்பன் இன்னனெனல்

2497. மலைப்பெருங் கழுதை யைஞ்ஞூற்
றிரட்டியான் மனத்திற் செல்லுந்
தலைத்தடந் தேரன் வில்லன்
றருகனென்னுந் தன்மைக்
கொலைத்தொழி லவுணன் பின்னை
யிராக்கத வேடங் கொண்டான்
சிலைத்தொழிற் குமரன் கொல்லத்
தொல்லைநாட் செருவிற் றீர்ந்தான்.

மலைபெரு கழுதை - மலைபோன்ற பெரிய கழுதைகள், ஐஞ்ஞூறு இரட்டியான் - ஆயிரம் பூட்டப் பெற்றிருத்தலின், மனத்தில் செல்லும் - மனத்தைக் காட்டிலும் விரைந்து செல்லக்கூடிய, தலை தடதேரன் - தலைமைபெற்ற பெருந் தேரினையுடையவனும், வில்லன் - வில்லைத் தாங்கியிருப்பவனுமான, அந்த அகம்பன், தாருகன் என்னும் - தாருகன் என்று பெயர் தரித்த, கொலைத் தொழில் தன்மை அவுணன் - கொலைத் தொழிலையே இயல்பாகக் கொண்ட அவுணன்; (அவன்) சிலை தொழில் குமரன் தொல்லை நாள் செருவில் கொல்லதீர்ந்தான் - விற்றொழிலையு முடைய முருகக் கடவுள் முன்காலத்து நிகழ்ந்த போரில் கொல்ல உயிரிழந்தவனாய், பின்னை - இப்போது, இராக்கத வேடம் கொண்டான் - இவ் விராக்கத வடிவம் கொண்டுள்ளான்.

இது கவிக்கூற்று : முருகக் கடவுளால் கொல்லப்பட்ட தாருகனே இப்பிறப்பில் அகம்பனாக வந்துள்ளான் என்றபடி, வேகத்துக்கு மனத்தை உவமை கூறுவது மரபு; 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' (அகநா. 384); தாருகன : இப்பெயர் கொண்டவன் அதிகாயனுக்குத் துணையாய் வந்து இலக்குவனாற் கொல்லப்பட்டான்; (யுத்த. 1782, 1783); இங்குக் குறிக்கப்பட்ட தாருகன் முன்பு தேவரைத் தகர்த்தவன். (யுத்த. பிரமாத்திர. 123); முருகனுக்கு வேற்கையன் என்ற பெயர் உண்டு எனினும் சிலையும் அவன் படைக் கருவிகளில் ஒன்று. முருகனுக்கும் தாருகனுக்கும நிகழ்ந்த போரும், தாருகன் மரணமும் கந்த புராணத்துக் காண்க. பிறிதொரு தாருகன் காளியினால் கொல்லப்பட்டவன்; ஆரணிய.

1000 : காண்க. 'தாருகன் பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்' (சிலப். 20 : 39 ; 40).

பி-ம். 3. கொலைத்தொழில் வீரன் ; பின்னோர். 121

## அகம்பன் அநுமனது வன்மையை வியத்தல்

2498. பாகசா தனனு மற்றைப் பகையடுந் திகிரி பற்றும்
ஏகசா தனனு மூன்று புரமும்பண் டெரித்து ளோனும்
போகதா மொருவர் மற்றிக் குரங்கொடு பொரக்கற் றாரே
ஆககூற் றாவி யுண்ப திதனின் மேற் றாகு மென்றான்.

'(அகம்பன்), பாகசாதனனும் - இந்திரனும், மற்றை - மற்றும், பகை அடும் - பகைவரைக் கொல்லவல்ல, திகிரி - ஆழிப்படையை, பற்றும் - கைக்கொண்டுள்ள, ஏகசாதனனும் - ஒப்பற்ற சாதனத்தையுடைய திருமாலும், மூன்று புரமும் - திரிபுரங்களையும், பண்டு - முன்காலத்து, எரித்துளோனும் - தீக்கிரையாக்கியவனான சிவபெருமானும், போக - போர்புரியப் போகட்டும் ; தாம் ஒருவர் - வேறு யாரேனும் ஒருவர், இ குரங்கொடு பொர கற்றாரே ஆக - இந்தக் குரங்குடன் போர் செய்யக் கற்றவரே யாகட்டும் ; (அவ்வாறு போர் புரிகுவராயின்), கூற்று - கூற்றுவனைக் கொண்டு, ஆவி உண்பது - அவர்கள் உயிரைப் பருகுவது, இதனின் மேற்று ஆகும் - இந்தக் குரங்கின் மாட்டு அமைந்துள்ளது', என்றான் - என்று பகர்ந்தான். மற்று : அசை.

பாகசாதனன் : இந்திரன் ; பாகன் என்ற அசுரனைக் கொன்றவன். சிவபிரான் திரிபுரம் அட்டது. இந்நூலில் பல இடங்களில் குறிக்கப்பெறுதல் காணலாம் ; ஆரணிய. 139, 258, 458, 815, 905, 921, 999 ; கிட்கிந்தா. 351, 452, 530 ; சுந்தர. 139, 179, 451, 982, 991, 1171, 1177, 1178 ; யுத்த. 1246, 2175 ; மூலபல. 76 : திகிரி பற்றும் ஏகசாதனன் : திருமால் : திகிரி அவனுடைய ஐம்படைகளில் ஒன்று. ஏகசாதனன் ; (ஒப்பு) : ஓகமாட ஓகபாண ஓகபத்தினி என்ற வழக்கும் காண்க. போக, ஆக ; வியங்கோள்

முற்று. ஆவி உண்பது: உண்டற்குரியதல்லாததை உண்டது போலக் கூறும் வழக்கு,

பா - ம். 1.. பகைபடுஞ்.

2. ஏகமால்தானும் ; புரங்கள்.

3. பற்றிக்.

4. ஆகடற்றுவி ; மேலாகும். 122

## அகம்பன் அநுமன்மீது செல்ல, அநுமனும் எதிர்த்து வருதல்

2499. யான்றடே னென்னின் மற்றிவ்
வெழுதிரை வளாக மென்னும்
வான்றடா தரக்க ரென்னும்
பெயரையு மாய்க்கு மென்னு
ஊன்றடா நின்ற வாளி
மழைதுரந் துருத்துச் சென்றான்
மீன்றொடா நின்ற திண்டோ
ளனுமனும் விரைவின் வந்தான்.

'யான் தடேன் என்னின் - (அந்த மாருதியை) நான் தடுக்காவிடில், இவ் எழுதிரை வளாகம் என் ஆம் - ஏழு கடல்களால் சூழப்பட்ட (இந்த வட்டம் என்ன ஆகும் ; (பூதலமே இவனால் அழிக்கப் பெற்றுவிடும்) ; வான் தடாது - வானத்துள்ள தேவரோ தடுக்கும் வன்மையற்றவர் ; (இவன்), அரக்கர் என்னும் பெயரையும் மாய்க்கும் - அரக்கர் என்ற பெயரேயில்லாமல் அழித்து விடுவான்', என்னா - என்று சொல்லி, (எதிர்த்து வருகின்ற), ஊன் - உடல் படைத்த உயிர்களை, தடா நின்ற வாளி மழை துரந்து - தடுக்கின்ற அம்புமாரியைப் பொழிந்துகொண்டு, உருத்து - வெகுண்டு, சென்றான் - போனான் (மேகநாதன்) ; மீன் தொடா நின்ற திண்தோள் - நட்சத்திர மண்டலங்களைச் சென்று தீண்டும்படியான உறுதியான புயங்களைக்கொண்ட, அநுமனும்-மாருதியும், விரைவின் வந்தான் - வேகமாய் (அந்த அரக்கன்பால்) வந்தான். மற்று : அசை.

எழுதிரை வாளகம் : ஏழுகடல்களால் சூழப்பட்ட பூமண்டலம்' எழுகடல்; கிட்கிந்தா. 709, 710; உரைக் குறிப்பும் காண்க; வளாகம் : வட்டம் ; 'தென்கடல் வளாகம் பொதுமையின்றி : (புறநா. 189); 'திசைதருமுந்நீர் வளாக மெல்லாம்' (கலிங். 146, 28). வானவர்கள் சுயகாரிய துரந்தரர் ஆதலின் அவர்கள் தடுக்க வேண்டிய அவசியமில்லை எனினுமாம். தடேன் : 'தருதுயரந் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை' (பெருமாள்திரு. 5, 1); ஊன் : ஊனையுடைய உயிர்க்கு ஆகுபெயர். மீன்தொடா நின்றது என்றது அநுமனுடைய விசுவரூபம் குறித்து நின்றது. அவனுடைய விசுவரூபம் : கிட்கிந்தா. 73, 75லிலும்; சுந்தர. 587, 593லும் காண்க. 'ஒத்துயர் கனகவான் கிரியினேங்கிய, மெய்த் துறு மரந்தொறு மின்மினிக்குலம், மொய்த்துள வாமென முன்னும் பின்னரும், தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம் (சுந்தர. 589) ; யுத்த. மருத்துமலை. 30—36.

பி - ம். 1. எழுகடல் ; வளாக மெல்லாம், என்ன.

2. மான்தடாது.

3. மழையெனத் ; துரந்து, உரந்துச் ; சொன்னுன், வந்தான்.

4. மீன் தடா நின்ற. 123

## அகம்பன் வர அநுமன் கதையைச் சுற்றுதல்

2500. தேரொடு களிறு மாவு
மரக்கரு நெருங்கித் தெற்றக்
காரொடு கனலுங் காலுங்
கிளர்ந்த தோர் காலமென்ன
வாரொடுந் தொடர்ந்த பைம்பொற்
கழலினுன் வருத லோடுஞ்
சூரொடுந் தொடர்ந்த தண்டைச்
சுழற்றினுன் வயிரத் தோளான்.

தேரொடும் - தேருடன், களிறும் மாவும் அரக்கரும் - யானை களும் குதிரைகளும் இராக்கதரும், நெருங்கி - நெருங்கி, தெற்ற - உடன் வர, காரொடு - மேகத்துடன், கனலும் காலும் - நெருப்பும் காற்றும், கிளர்ந்தது ஓர் காலம் என்ன - பொங்கி மெல் வந்த ஓர்

ஊழிக்காலம்போல, வாரொடும் தொடர்ந்த - வாரினால் பிணிக்கப் பட்ட, பசும்பொன் கழலினான் - பசிய பொன் கழலைப் புனைந்த அகம்பன், வருதலோடும்-வருதலோடும், வயிரம் தோளான்-வயிரம் ஒத்த உறுதியான தோளையுடையவனான அநுமன், சூரொடும் தொடர்ந்த - சூரத்தனத்துடன் தான்பற்றி நின்ற, தண்டை சுழற்றினான் - கதையைத் திரித்தான்.

தெற்றுதல் : நெருங்குதல்; 'தேருமாவும் படைஞருந் தெற்றிட' (யுத்த. 1055); 'ஒன்றோடொன்று தெற்றிக்கிடக்கின்ற கதிரினையும்' (புறநா. 97. உரை); 'கற்றவர் தெற்றிவர' (பெரியாழ். 1, 5, 8), 'கழிகளால் தெற்றிப் பண்ணின சூடில்கள்' (மலைபடு. 438) நச் : உரை); கிளர்ந்ததோர் காலம்; ஊழிக்காலம். கழலினான்: அகம்பன் : இவனைப்பற்றிய குறிப்பு யுத்த. 490-ல் காண்க. இவன் ஆற்றிய அரும்போரும். இவன் திறனும், இவன் அநுமனால் கொல்லப்பட்டு உயிரிழந்ததும் இப்படலத்திற் காண்க. சூர் : சூரத்தனமன்றி அச்சமுமாம் ; 'சூருறு மஞ்ஞையிற் சோர்ந்த கூந்தலர்' (பெருங். உஞ்சைக். 44, 22) ; தண்டைச் சுற்றினவன் மாருதி.

பா - ம். 1. நெருக்கி ; செற்றிக், தெற்றிக்
4. சுற்றினன்.

124

2501. எற்றின வெறிந்த வெல்லை
யெய்தின வெய்த பெய்த
முற்றின படைக ளியாவு
முறைமுறை முறிந்து சிந்தச்
சுற்றின வயிரத் தண்டாற்
றுகைத்தன னமரர் துள்ளக்
கற்றில னின்று கற்றான்
கதையினால் வதையின் கல்வி.

(அகம்பனுடன் வந்த அரக்கர்), எற்றின - தாக்கியவைகளும், எறிந்தன -வீசியவைகளும், எல்லை எய்தின எய்த - தன் குறியினை யடைந்தனவாக எய்தவைகளும், பெய்த - சொரிந்தவைகளும், ஆகிய, முற்றின - (வன்மை) முற்றப்பட்ட, படைகள் யாவும் -

படைகள் அனைத்தும், முறைமுறை முறிந்து - படிப்படியாக முறிபட்டு, சிந்த - சிதறுமாறு, சுற்றின வயிரம் தண்டால் - சுழற்றிய வயிரக் கதையினாலே, அமரர் துள்ள துகைத்தனன் - தேவர்கள் (கண்டு) உவகையால் துள்ளுமாறு அழித்திட்டான்; கற்றிலன் - (இதுகாறும் வதைக்கும் தொழிலைக்) கற்றிருந்தான் என்று சொல்வதற்கில்லை; இன்று - இப்போது தான், கதையினால் வதையின் கல்வி கற்றான் - தண்டின் மூலமாய்க் கொன்றொழித்த லாகிய கல்வியைக் கற்றுத் தேர்ந்தான் எனல் வேண்டும்.

எற்றின எறிந்த: 'எறிந்த எய்தன வெற்றின குத்தின ஈர்த்தன' (யுத்த. 212); முற்றின படைகள் - வழுவின்றிச் செய்யப் பெற்று உறுதிகொண்ட கருவிகள். அமரர் துள்ளியது அநும னுடைய பேராற்றல் கண்டு. கற்றிலன் என்றது; சூரியன் தேர் முன் சென்று பல கலைகளையும் கற்றுணர்ந்த அநுமன், இன்று கதைப் போரினையும முடியக் கற்றான் எனப்பட்டது. கவிக்கூற்று; சுந்தரகாண்டத்தும் அநுமன் கதைத்தொழிலைக் கண்டோமெனி னும், கதைத்தொழில் இன்று காட்டியது போன்று இதற்குமுன் அநுமன் காட்டியதில்லை என்று கொள்க.

பி - ம். 1. வல்லை; ஏயிவ.

2. முற்றின போர்க்கண்.

3. சுற்றினன்.

4. கற்றிலன் அன்று; வதைக்குங் கல்வி. 125

2502. அகம்பனுங் காணக் காண வையிரு கோடிக் கைம்மா
முகம்பயில் கலினப் பாய்மா முனைவயிற் றாண்டு மூரி
நுகம்பயி றேரி னோடு நுறுக்கின னூழி தீர்த்தான்
உகம்பெய ரூழிக் காற்றி னுலைவிலா மேரு வொப்பான்.

உகம் பெயர் - கற்பம் முடிவடைகின்ற யுக இறுதியில் தோன்றுகின்ற, ஊழிகாற்றின் - ஊழிக் காற்றால், உலைவு இலா - தளர்ச்சியுறாத, மேரு ஒப்பான் - மேருவோடு ஒத்தவன் ஆன அநு மன், அகம்பனும் காண காண - அகம்பனும் பார்த்துக்கொண்டே

யிருக்கையில், ஐயிருகோடி கைம்மா - பத்துக்கோடி யானைகளையும், முகம் பயில் - முகத்திற்பொருந்திய, கலினம் பாய்மா - கடிவாளம் பூண்ட (அத்துணைக்) குதிரைகளையும், முனைவயின் - போர்க்களத்திலே, தூண்டும் - செலுத்தப்படும், மூரி நுகம் பயில் தேரினோடும் - வலிய நுகத்துடன் கூடிய (அத்துணை) இரதங்களோடும், நுறுக்கினன் - தூளாகச் செய்தவனாய், நாழில் தீர்த்தான் - கொன்று குவித்தலைத் தீரச் செய்தான்.

உகம்பெயர் ஊழிக்காற்றின் உலைவிலா என்பதிலிருந்து, அகம்பனை ஊழிக்காற்றாகவும், அவன் முன்பாகவே நாழிலாட்டிய அநுமனை மேருவாகவும் கூறினர். இடைவிடாது நுறுக்கினன் அநுமன் ஆகலின், 'அகம்பனும் காணக்காண' எனப்பட்டது. கைம்மா - துதிக்கையையுடைய யானை. 'கைம்மா என்றேன் சும்மாக் கலங்கினளே' (தனிப்பா:); கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தென' (புறநா. 320); கலினப்பாய்மா - கொய்யுளைக் கலின மாவின்' (நைடத. சுயம்வர. 3); மேரு ஒப்பான். 'மேரு கிரிக்கு மீதுற நிற்கும் பெருமெய்யீர்' (கிட்கிந்தா. 989); 'பொன்னெடுங் கிரியெனப் பொலிந்த மேனியான்' (கிட்கிந்தா. 824); மற்றும் சுந்தர. 283, 589, 698, 737ம் காண்க.

பி - ம். 2. முனைபொயபிற்பரக்கர், முனையெயிற்றிட்ட.

3. நுகம்படு ; பல ; ஊழிநிர்த்தான்.

4. காற்றல் ; உலாவினன். 126

## அநுமனைக் கொல்லக்கருதி அகம்பன் நெருங்க, அநுமனும் வரவேற்றல்

2503. இன்றிவன் றன்னை விண்ணு
டேற்றிவா ளிலங்கை வேந்தை
வென்றிய னுக்கி மற்றை
மனிதரை வெறிய ராக்கி
நின்றுயர் நெடிய துன்ப
மமரர்பா னிறுப்பெ னென்னுச்
சென்றன னரக்க னன்று
வருகென வனுமன் சேர்ந்தான்.

'இன்று - இன்று, இவன் தன்னை - இவனை, விண்நாடு ஏற்றி வீர சொர்க்கத்தில் ஏற்றி, வாள் இலங்கை வேந்தை - வாளாயுதம் ஏற்றுள்ள இலங்கையரசனாகிய இராவணனை, வென்றியன் ஆக்கி - வெற்றி பெற்றவனாகச் செய்து, மற்றை மனிதரை வெறியராக்கி - மற்றும் மானிடரைத் தோல்வியுற்றவராகச் செய்து, அமரர்பால் - தேவர்களிடத்து, நின்று உயர் - நிலைபெற்ற உயர்ந்த, நெடிய துன்பம் - மிக்க துயரத்தை, நிறுப்பென் - நிலைபெறச் செய்வேன்', என்னு - என்று, அரக்கன் சென்றனன் - அகம்பன் போயினன்; 'நன்று வருக - நல்லது வருக', என - என்று சொல்லி, அநுமன் சேர்ந்தான் - அநுமனும் சேர்ந்தான்.

விண்ணாடு - வீர சொர்க்கம். வெறியர்; 'வெறியரன்றே குணங்களால் விரிஞ்சன் முதலாம் மேலானோர்' (சுந்தர. 599); இறுதியடியில் அன்று வருக எனவும் பிரிக்கலாம். இவன் என்றது அநுமனை; சில பிரதிகளில் இச் செய்யுள் 'வில்லினால்' என்ற பாட்டின் பின் உள்ளது.

பி-ம். 1. விண்ணில் ஏற்றி; வாழ், வான்.
3. நின்றவாழ், நின்றுழி; நிற்குமென்னச்.
4. அவனுஞ்; சென்றான்.

127

## அகம்பன் அனுமன்மீது அம்புமழை பொழிதல்

2504. படுகளப் பரப்பை நோக்கிப்
பாழிவாய் மடித்து நூழிற்
சுடுதழற் புகைவெங் கண்ணிற்
றோன்றிடக் கொடித்தேர் தூண்டி
விடுகணைப் படல மாரி
மழையினு மும்மை வீசி
முடுகுறச் சென்று குன்றின்
முட்டினன் முகிலி னார்ப்பான்.

(அகம்பன்), படுகளம் பரப்பை நோக்கி - போர்க்களப் பரப்பினைப் பார்த்து, பாழிவாய் மடித்து - குகைபோன்ற (தன்) வாயை மடித்துக்கொண்டு, நூழில் - எதிரிகளைக் கொன்று குவிக்கும் தொழிலிலே, சுடு - சுடுகின்ற, தழல் - தீயுடன், புகை - (எழுகின்ற)

புகை, வெம் கண்ணில் தோன்றிட - (தன்) கொடிய விழிகளில் காணப்பட, கொடிதேர் தூண்டி - கொடி கட்டிய தேரினைச் செலுத்தி, விடுகணை படலம் மாரி - விடுகின்ற அம்புத் தொகுதி மழையை, மழையினும் மும்மை வீசி - மழையினும் மும்மடங்கு அதிகமாக வீசிக்கொண்டு, முகிலின் ஆர்ப்பான் - மேகம் போன்ற பெருங் குரலுடன் முழங்குபவனாகி, முடுகு உற சென்று - விரைந்து போய், குன்றின் முட்டினான் - குன்று போன்று, அநுமனை மோதினான்.

பாழி - பிலம் அல்லது குகை. 'பாழி பொரு வன்பிலனுள்' (கிட்கிந்தா. 864); வாய் மடித்தல்: வெகுளியின் மெய்ப்பாடு. 'வாய் மடித்துருத்து நக்கான்' (சுந்தர. 985); நூழில்: கொன்று குவித்தல்; நூழிலாட்டு என்பது ஓர் புறப் பொருட்டுறை; 'வேழப்பழனத்து நூழிலாட்டு' (மதுரைக். 257); சுடுதழல்: வினைத்தொகை. கண்ணிற்புகை தோன்றலும் வெகுளியின் மெய்ப்பாடே. மும்மை: மூன்றுமடங்கு; 'ஒருமையி னிறுவி மும்மை யுலகினு முயர்தியன்றே' (கிட்கிந்தா. 363); முட்டுதல்: 'முட்டுவேன்கொருக்கு வேன் கொல்' (குறுந். 28); குன்றின் முட்டினான் என்பதற்குக் குன்றுபோல் நின்ற அநுமன்மீது மோதினான் எனினுமாம்.

பா - ம். 1. மடித்த, மடுக்கும், அதுக்கி; ஊழின், ஊழிச்.
2. சுடுகின்ற பொறிகள் வெங்கண்.
3. விடுகின்ற பகழி, விடுகனற் பகழி.
4. முடுகுறச் சென்ற.

128

2505. சொரிந்தன பகழி மாரி தோளினு மார்பின் மேலுந்
தெரிந்தன வசனி போல்வ செறிபொறி பிதிர்வ திக்கின்
வரிந்தன வெருவை மானச் சிறைகளா லமரர் மார்பை
அரிந்தன வடிம்பு பொன்கொண் டணிந்தன வாகுங் [கண்ண.

அசனி போல்வ - இடியை ஒத்தனவான, செறி - நெருங்கிய, பொறி - அனற்பொறிகளை, திக்கின் பிதிர்வ - திசைகளில் சிதறுவனவும், எருவை மானம் சிறைகளால் வரிந்தன - கழுகுகளின் பெரிய சிறகுகளால் கட்டப்பட்டனவும், அமரர் மார்பை அரிந்தன - வானவர் மார்பை (முன்னர்) அரிந்தனவும், பொன் கொண்டு

வடிம்பு அணிந்தன ஆகும் கண்ண - பொன்னைக்கொண்டு கூரிய முனை அலங்கரிக்கப்பட்ட இடத்தைக் கொண்டனவுமான, சொரிந்தன பகழி மாரி - (அகம்பன்) பொழிந்தனவான அம்பு மழைகள், தோளினும் மார்பின் மேலும் தெரிந்தன - (அநுமனது) தோளின் மீதும் மார்பின்மீதும் காணப்பட்டன.

தீப்பொறிகளைச் சிந்துவனவும், கழுகின் சிறகுகளால் கட்டப்பட்டனவும், தேவர்கள் மார்பினை அரிந்தனவும், விளிம்பு பொன்னால் அமைக்கப்பட்டனவுமான பகழி மாரி என்க. பிதிர்வ - இடந்தொறும் பிதிர்ந்தெழுந் தார்த்த; (யுத்த. 2474). வடிம்பு - கூரிய முனை; 'பொன்னின்ற வடிம்பின் வாளி' (யுத்த. 1864); 'பொன் சென்ற வடிம்பின் வாளி' (யுத்த. 2132). வரித்தல் - கட்டுதல்; 'வசத்துற வரித்தெனல்' (யுத்த. இராமன் தேரேறு. 3). எருவை - கழுகு; 'எருவை வேந்தன் வீசிய வடகம்' (கிட்கிந்தா. 895).

பி - ம். 2. அசனி போலந்தெறு.

3. விரிந்தன; மேரு; சிறைகளாம்; மானமார்பை, விரர்மார்பை.

4. அணிந்தன வாங்குகண்ண, அணிந்தனவாகுமென்ன. 129

## அநுமன் அகம்பனுடைய தேரினைத் தகர்த்தல்

2506. மார்பினுந் தோளின் மேலும் வாளிவாய் மடுத்த வாயிற்
சோர்பெருங் குருதி சோரத் துளங்குவான் றேரு முன்னந்
தேரிரண் டருகு பூண்ட கழுதையு மச்சுஞ் சிந்தச்
சாரதி புரள வீரத் தண்டினுற் கண்டஞ் செய்தான்.

மார்பினும் தோளின் மேலும் - (தனது) மார்பினும் தோளின் மீதும், வாளி வாய் மடுத்த - அம்பு துளைபண்ணிச் சென்ற, வாயில் - வாய்வழியாக, சோர் பெரு குருதி - வழியும் தன்மையுள்ள பெரும் உதிரம், சோர - பெருகியவண்ணமிருக்க, துளங்குவான் - தளர்ந்தசைவுகொண்ட அநுமன், தேரு முன்னம் - (தான்) தெளிவதன் முன்னரே, தேர் இரண்டு அருகு பூண்ட - தேரின் இருமருங்கும் பூட்டப்பட்ட, கழுதையும் - கோவேறு கழுதையும், அச்சும் சிந்த - அச்சும் முறிந்துவிழவும், சாரதி புரள - பாகன் புரண்டு தரையில் விழவும், வீரம் தண்டினுல் கண்டம் செய்தான் - வீரக்கதையினுல் துண்டுபண்ணினுன்.

கண்டம் செய்தவன் அநுமன். தேரு முன்னம் என்றது உயர்வுநவிற்சியணி. முழுத்தெளிவு பெறுதற்கு முன்பே அச் செயலை ஆற்றினன் என்று அநுமனுடைய ஆற்றலை வியந்த வாறு. துளங்குதல்: 'வேல்தலத் தூன்றினர் துளங்கு மெய்யி னர்' (யுத்த. நிகும்பலை. 49).

பி - ம். 1. சுக்கித்தொன்னிறஞ் சிவந்து தோன்றத்.

3. அருகும்; சிந்திச்.

4. துண்டம் செய்தான். 130

## அகம்பனும் தண்டினை யெடுத்துக் கொள்ளுதல்

2507. வில்லினு லிவனை வெல்ல லரிதென நிருதன் வெய்ய
மல்லினு லியன்ற தோளின் வலியினுல் வானத் தச்சன்
கொல்லினு லமைத்த தாண்டோர் கொடுமுனைத் தண்டு
[கொண்டான்
அல்லினுல் வகுத்த தன்ன மேனியான் கடலி னுர்ப்பான்.

'இவனை வில்லினுல் வெல்லல் அரிது - இவனை வில்லினுல் வெல்வது அருமை', என - என்று எண்ணி, அல்லினுல் வகுத் தது அன்ன மேனியான் - இருளைக்கொண்டு வனைந்தாலொத்த (கருநிற) உடலையுடையவனும், கடலின் ஆர்ப்பான் - ஆழிபோன்று பெருமுழக்கம் செய்பவனுமான, (அகம்பன் என்ற) நிருதன் - அரக்கன், வெய்ய - கொடிய, மல்லினுல் இயன்ற தோளின் வலியி னுல் - வலிமைவாய்ந்த தன் தோளின் வன்மையால் (வெல்லக் கருதி), வானம் தச்சன்-தெய்வத்தச்சன், கொல்லினுல் அமைத்தது- கொல்லுத்தொழிலால் இயற்றியதான, கொடு முனை - கூரிய முனையையுள்ள, ஓர் தண்டு ஆண்டு கொண்டான் - ஒரு தண்டா யுதத்தை அப்போது (கையில்) எடுத்துக்கொண்டான்.

வானத்தச்சன் - விசுவகன்மா. கொல்: கொல்லர் தொழில். அல்லினுல் வகுத்ததன்னமேனி இங்குக் கூறப்பட்டதற்கும், அல்லை யாண் டமைந்த மேனி (அயோத்தி. குகப். 42) என்ற தொடர்க்கும்

உள்ள வேற்றுமை உய்த்துணர்க; (ஒப்பு): 'எள்ளா நீரிந் திரிநீலத் தெழுந்த கொழுந்து மரகதத்தின், விள்ளா முழுவா ணிழற்பிழம்பும் வேண்ட வேண்டு மேனியதே' (சுந்தர. 543). கடலின்: கடல்போன்று அல்லது கடலைக்காட்டிலும் என்க.

வி - ம். 1. வெல்ல; வெல்வது, வென்றல்.

2. வலியினுல் வாய்ந்த.

3. எமைந்நது; ஆங்கோர்; சுடர்மணித், குருமுனை, குழுமுனை. 131

## அகம்பனுடனே அநுமன் பொருது அவனைக் கொல்லுதல்

2508. தாக்கினு ரிடத்து மற்றும் வலத்தினுந் திரிந்தார் சாரி
ஓக்கினு ரூழி னார்ப்புக் கொட்டினர் கிட்டி னார்கீழ்த்
தூக்கினர் சுழற்றி மேன்மேற் சுற்றினு ரெற்றி வெற்றி
நீக்கினர் நெருக்கி னார்மே னெருங்கினர் நீங்கி னார்மேல்.

தாக்கினர் - (அகம்பனும் அநுமனும் ஒருவரை ஒருவர்) தாக்கினர்கள்; மற்றும் இடத்தும் வலத்தினும் சாரி திரிந்தார் - பின்னும் இடது புறமும் வலதுபுறமுமாகச் சாரி வந்தனர்; ஊழின் ஆர்ப்பு ஒக்கினர் - பிரளயகாலத்தைப்போன்று பேராரவாரத்தை எழுப்பினர்; கொட்டினர் - (தோள்) தட்டினர்; கீழ் கிட்டினர் - கீழ்ப்புறமாக நெருங்கி, தூக்கினர் - தூக்கி, சுழற்றி - வளைத்து, மேன்மேல் சுற்றினர் - மேன்மேலும் சுற்றி, எற்றி - தாக்கி, வெற்றி நீக்கினர் - வெற்றியை விலக்கப்பார்த்தார்; நெருக்கினர் - நெருக்கினர், மேல் நெருங்கினர் - மேலே நெருங்கியவராய், மேல் நீங்கினர் - (பின்) விலகினர்.

இச்செய்யுளிலும் இதனை அடுத்த செய்யுட்கண்ணும் மற் போரின் வகைகள் கூறப்பட்டுள்ளமை காண்க. வலசாரி இடசாரி யாகத் திரிதலும் பேராரவாரம் செய்தலும் தோள் கொட்டுதலும் ஒருவர் ஒருவரைத் தூக்கி எறிதலும், எடுத்துச் சுற்றுதலும், நெருக்கிப் பிடித்தலும் இங்குக் குறிக்கப்பெற்றுள்ளன. வெற்றி நீக்கினர் என்றது, ஒருவர்க்கொருவர் சளையாமை குறித்து

நின்றது. எத்தொழிலைச் சித்திரித்தாலும் அத்தொழிலில் சிறந்தவர்போன்று எடுத்துக்காட்டுவது உயர்ந்த கவிகளின் இயல்பு; கம்பர் மற்போர் வரிசைகளை இங்குக் கூறியமை காண்க.

பி-ம். 1. வந்துமற்றை யிடங்களுந் திரிந்து, வலத்து மற்றை யிடத்தினுந் திரிந்து, வந்துமற் றெவ்விடத்திலுந் ; திரிந்து.

2. போக்கினர் ; தெழிப்பின், கழிப்பின் ; ஒட்டினர்கள்.

3. சுழற்றினர்மேற் ; எற்றவெற்ற, எற்றவெற்றி.

4. நெருங்கினர் மேனெருக்கினர் நிங்கினர்மேல், நெருங்கினர் போய் நிங்கின ரேங்கினர்மேல், நெருங்கினர் போய் நிங்கினர் மேல், நெருக்கினர் பேர்ய் நெக்கினர் நிங்கினர் மேல். 132

2509. தட்டினர் தழுவி னர்மேற் றவினர் தரையி னேடுங்
கிட்டினர் கிடைத்தார் வீசிப் புடைத்தவை கீழு மேலுங்
கட்டினர் காத்தா ரொன்றுங் காண்கிலா ரிறவு கண்ணுற்
றொட்டினர் மாறி வட்ட மோடின ராதி போனர்.

தட்டினர் - தோள் கொட்டி, தழுவினர் - (ஒருவரை யொருவர்) தழுவினர்; மேல் தாவினர் - மேலே தாவினர்; தரையினேடும் கிட்டினர் - தரையிடத்துக் கிட்டினர்; கிடைத்தார் - (ஒருவர் ஒருவரை) நெருங்கினர்; வீசி புடைத்தவை - ஓங்கி அறைந்தவை (தம்மேல் படாதபடி), கீழும் மேலும் கட்டினர் காத்தார் - கீழும் மேலும் (கரத்தினல்) கட்டிக் காத்துக்கொண்டார்; இறவு ஒன்றும் காண்கிலார் - (மாற்ருனிலும் தாம் வன்மையில் சிறத்தலைச்) சிறிதும் காண இயலாதவராய், கண்ணுற்று - ஒருவர் ஒருவரை நோக்கி, ஓட்டினர் - சூளுற்றனர்; வட்டம்ஓடினர் மாறி ஆதி போனர் - வட்டமாகப் போதலை யொழித்து நேராகச் சென்ருர்.

இச்செய்யுட்கு, (ஒப்பு): 'நின்ருர் திரிந்தார் நெடுஞ்சாரி நிலந்திரிந்த, வன்ரேட் குயவன் திரிமட்கலத் தாழி யன்ன' (கிட்கிந்தா. 272); மற்றும், கிட்கிந்தா. 281, 282ம் காண்க. இறவு - மேம்படுதல், தொழிற்பெயர்; 'இறவு கண்டில ரிருவரும்' (யுத்த. 2447). ஒட்டுதல் - சூளுறுதல்; 'ஒட்டிக் கொல்ல வுணர்ந்து வெகுண்டான்' (யுத்த. 229); 'ஒட்டவுடனே யவனும் வந்தவனை யுற்ருன்' (யுத்த. 848). மகுடபங்கப் படலத்து இராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நிகழ்ந்ததும், இரணியன் வதைப் படலத்து இரணியனுக்கும் நரசிங்கப்பெருமானுக்கும் நிகழ்ந்ததுமான மற்

போரும் இங்குக் காணத்தகும். ஆதிபோதல் - நேராக ஓடுதல்; ஆதி என்பதனைக் குதிரையின் நேரோட்டமாகிய கதிவகை என்பர்; இங்கு இவ்வீரர்களின் ஓட்டத்தைக் குறித்து நின்றது; 'அடிபடு மண் டிலத் தாதி போகிய' (மதுரைக். 390).

பி - ம். 1. தடவினர்.

3. காத்தாரென்றும்.

4. மாழ்கி, திகிரி, சாரிபோனர், அதிபோரானர். 133

2510. மையொடும் பகைத்து நின்ற
நிறத்தினன் வயிர மார்பிற்
பொய்யொடும் பகைத்து நின்ற
குணத்தினன் புகுந்து மோத
வெய்யவ னதனைத் தண்டால்
விலக்கினன் விலக்க லோடுங்
கையொடு மிற்று மற்றக்
கதைகளங் கிடந்த தன்றே.

பொய்யொடும் பகைத்து நின்ற குணத்தினன் - பொய்யுடன் பகைத்து நின்ற பண்பினையுடையவனான அநுமன், மையொடும் பகைத்து நின்ற நிறத்தினன் - அஞ்சனமையுடன் பகைத்து நின்ற நிறத்தினனான அகம்பனுடைய, வயிரம் மார்பில் - திண்ணிய மார்பிடத்து, புகுந்து மோத - (தண்டு கைக்கொண்டு) புக்குத் தாக்கிய அளவில், வெய்யவன் - கொடியவனான அகம்பன், அதனை - அந்தத் தாக்குதலை, தண்டால் விலக்கினன் - (தன்) தண்டினால் தடுத்தான்; விலக்கலோடும் - தடுத்த அளவில், அ கதை - அந்தத் தண்டாயுதம், கையொடும் - (பிடித்திருந்த வலக்) கரத்துடனே, இற்று - முறிந்து, களம் கிடந்தது - போர்க்களத்திலே விழுந்திட்டது, மற்று : வினைமாற்று; அன்று ஏ : அசை

மை : அஞ்சனம்; 'மையோ மரகதமோ' (அயோத்தி. கங்கை. 1); பொய்யொடும் பகைத்து நின்றவன் : அநுமன்; 'மெய்ம்மையின் வேலி' (கிட்கிந்தா. 68); 'மெய்ம்மை பூண்டானவன்' (சுந்தர. 62);

'நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர்' (கிட்கிந்தா. 992): மையொடும் பகைத்து நின்ற நிறத்தினன். (ஒப்பு) 'மைக் கருமனத்தொரு' (ஆரணிய. 485); வெய்யவன் : அகம்பன்.

பி-ம். 1. வயிரத் தோளின்மேற்.
2. புகன்று.
4. சையொடுமற்று ; களங்கண்டது. 134

2511. கையொடு தண்டு நீங்கக்
கடலெனக் கலக்க முற்ற
மெய்யொடு நின்ற வெய்யோன்
மிடலுடை யிடக்கை வீசி
ஐயனை யலங்க லாகத்
தடித்தன னடித்த லோடும்
ஒய்யென வயிரக் குன்றத்
துருமினே றிடித்த தொத்த.

கையொடு தண்டும் நீங்க - வலக்கரத்துடன் கதாயுதமும் அற்றுவிட, கடல் என கலக்கம் உற்ற - கடல்போன்று குழப்பமுற்ற, மெய்யொடு நின்ற - உடலுடன் நின்ற, வெய்யோன் - கொடியவனான அகம்பன், மிடல் உடை இடக்கை வீசி - வலிமை கொண்ட (தனது) இடது கரத்தினை அசைத்து, ஐயனை - அநுமனை, அலங்கல் ஆகத்து அடித்தனன் - (அவனுடைய) மாலை புனைந்த மார்பின்கண் அடித்தான் ; அடித்தலோடும் - அடித்த அளவில் (அது) ஒய்யென - விரைவாக, வயிரம் குன்றத்து - வயிர மலைமீது, உருமின் ஏறு - ஆண் இடி, இடித்தது ஒத்த - இடித்ததை நிகர்த்திருந்தது.

கடலெனக் கலக்கமுறுதல் : பெருங்காற்றால் கொந்தளிப்புற்ற கடல் போன்று கலங்குதல். 'வேலைபோற் கலங்குறு மிலங்கையை' (யுத்த. 2458); அலங்கல் ஆகத்தையனை எனமாற்றிப் பொருள் கோடலுமாம். ஒய்யென : விரைவுக் குறிப்பு ; 'ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி' (அகம். 165); உருமின் ஏறு : பேரிடி.

பி-ம். 1. தண்டு நீங்கி ; கலக்கமுற்று.
2. வீரன் ; வீசி.
4. மெய்யொளிர் ; ஒத்தான், ஒப்ப. 135

2512. அடித்தவன் றன்னை நோக்கி
யசனியே றனைய தண்டு
பிடித்துநின் றேயு மெற்றான்
வெறுங்கையான் பிழையிற் றென்னு
மடித்துவா யிடத்துக் கையான்
மார்பிடைக் குத்த வாயாற்
குடித்துநின் றுமிழ்வா னென்னக்
கக்கினன் குருதி வெள்ளம்.

(அநுமன்), அசனி ஏறு அனைய தண்டு - பேரிடியை நிகர்த்த கதாயுதத்தை (த் தான்), பிடித்து நின்றேயும் - கைக்கொண்டு நின்றாலும், அடித்தவன் தன்னை நோக்கி - (தன்னை) அடித்தவனைக் கண்ணுற்று, 'வெறும்கையான் - இவன் நிராயுதபாணி; பிழையிற்று - இவனை அடித்தல் தவறாகும்', என்னு - என்று நினைந்து, எற்றான் - தாக்காதவனாய், வாய் மடித்து - வாயினை மடித்துக் கொண்டு, இடத்து கையான் மார்பிடை குத்த - தனது இடக் கரத்தால் அவன் மார்பினில் குத்த, (அகம்பன்), குருதி வெள்ளம் - உதிரப் பெருக்கினை, வாயால் குடித்து நின்று - வாயினால் (முன்னம்) பருகிநின்று, உமிழ்வான் என்ன - (இப்போது) உமிழ் பவன் போன்று, கக்கினன் - கக்கினான்.

அசனி ஏறு: முன்னர் 'உருமேறு' என்றது காண்க. 2511. எற்றுதல்: தாக்குதல். வெறுங்கையான் பிழையிற்றென்னு என்றான்; இந்த அருட்செயல் கொண்டே இலக்குவனை 'அருளுடைக் குரிசில்' (2522), 'வள்ளல்' (2517) என்றார். இங்கு, 'சிறப்புடை அரசியலாவன மடிந்த உள்ளத்தோனையும் மகப் பெறாதோனையும் மயிர் குலைந்தோனையும் அடி பிறக்கிட்டோனை யும் பெண் பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்த படை யெடாதோனையும் பிறவும் இத்தன்மையுடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப்பொருதலும் (தொல். புறத். 10. என்ற நச். உரை காண்க); தழிஞ்சி என்னும் புறப் பொருட்டுறையுமது. கக்கினான்: 'கக்கினனுயிர்' (கிட்கிந்தா. 287); உடற்கண் உள்ள இரத்தம்

காணப்படும் அத்துணையாகக் கூடாமையின், 'வாயாற் குடித்து நின்றுமிழ்வான் என்ன' எனக் கூறப்பட்டது.

பி - ம். 2. நின்றேயுமாற்றுன்.

3. இடத்தகையான், இடக்கையானை; வாயிற்.

4. உமிழ்வான் போல; குருதிகொள்ள, குருதிக் கொள்ளை. 136

2513. மீட்டுமக் கையால் வீசிச்
செவித்தலத் தெற்றி வீழ்த்தான்
கூட்டினு னுயிரை விண்ணோர்
குழாத்திடை யரக்கர் கூட்டங்
காட்டில்வாழ் விலங்கு மாக்கள்
கோளரி கண்ட வென்ன
ஈட்டமுற் றெதிர்ந்த வெல்லா
மிரிந்தன திசைக ளெங்கும்.

மீட்டும் - திரும்பவும், (அநுமன்) கையால் வீசி - அந்த இடது கரத்தினாலேயே, (அகம்பனை) வீசி - ஓங்கி, செவி தலத்து எற்றி வீழ்த்தான் - காதினிடைத் தாக்கிக் கீழே வீழச் செய்து, உயிரை விண்ணோர் குழாத்து இடை கூட்டினான் - அவன் உயிரை வானவர் கூட்டத்திற் சேர்த்தான்; ஈட்டமுற்று எதிர்ந்த அரக்கர் கூட்டம் எல்லாம்-(இதுகாறும்) திரளாகப் பொருந்தி எதிர்த்த இராக்கதர் கூட்டம் அனைத்தும், கோளரி கண்ட - சிங்கத்தைக் கண்ணுற்ற, காட்டில் வாழ்விலங்குமாக்கள் என்ன - காட்டில் சஞ்சரிக்கின்ற குறுக்கே படர்வனவான மிருகங்கள் போன்று, திசைகள் எங்கும் இரிந்தன - எல்லாத் திக்குகளிலும் நிலை குலைந்து சென்றன.

செவித்தலம்: செவியாகிய இடம். 'உற்றது செவித்தலத்தையன்' (யுத்த. வீடணன். 339); விண்ணோர் குழாத்திடை உயிரைக்கூட்டினான்; அகம்பனை வீரசுவர்க்கத் துய்த்தான் என்றபடி, யுத்த. 2484, 2485 உரைக் குறிப்புக் காண்க. காட்டில் வாழ்விலங்கு மாக்கள் கோளரி கண்டவென்ன: உவமையணி. விலங்கு: திரியக் என்ற வடசொல்லின் தமிழாக்கம், மாக்கள்;

விலங்குப்பொது, 'மாவுமாக்களு மையறிவினவே' (தொல். மரபி.); கோளரி: பெருமை வாய்ந்த மிருகேந்திரன்; பிறவுயிர்களைக் கொள்ளவல்லது எனினுமாம்; புடைத்தார் பொருகின்றனர் கோளரி போல்வார்' (யுத்த. 1898).

பி - ம். 1. எற்ற; வீழ்ந்தான்.

2. கூட்டினர்.

3. கண்டதென்ன.

4. எதிர்ந்தது. 137

## இலக்குவன் வாளியால் அரக்கர்படை இறத்தல்

2514. மாண்டன னகம்பன் மண்மேன்
மடிந்தன நிருதர் சேனை
மீண்டனர் குரக்கு வீரர்
விழுந்தன சினக்கை வேழம்
தூண்டின கொடித்தே ரற்றுத்
துணிந்தன தொடுத்த வாசி
ஆண்டகை யிளைய வீர
னடுசிலை பொழியு மம்பால்.

அகம்பன் மண்மேல் மாண்டனன் - அகம்பன் தரைமீது இறந்து வீழ்ந்தான்; நிருதர் சேனை மடிந்தன - அரக்கர் படையும் (தரைமீது) இறந்து வீழ்ந்தன; குரக்கு வீரர் மீண்டனர் - வானர வீரர் பிழைத்துத் திரும்பினர்; ஆண்தகை இளைய வீரன் - ஆண்மைக்குணம் செறிந்த இலக்குவனுடைய, சிலை பொழியும் அடும் அம்பால் - வில்லிலிருந்து வெளிப்படுகின்ற (பகைவரைக்) கொன்று வீழ்த்தும் வாளிகளால், சினம் கை வேழம் - கோபம் மிக்க கையினையுடைய யானைகள், விழுந்தன - (உயிரற்று) வீழ்ந்தன; தூண்டின கொடிதேர் - (இராக்கதர்) செலுத்தி நின்ற கொடி கட்டிய தேர், அற்று - முறிந்து (போக), தொடுத்த வாசி - தேரிற் பிணைத்த குதிரைகள், துணிந்தன - அறுபட்டன.

பி - ம். 2. மீண்டன குரங்குவெள்ளம்.

3. கொடித்திண்டேர்கடுகைக் கையம் பொருப்பு, கொடித்திண்டேர்கள் துணிந்தன பொருப்பு.

138

## இலக்குவன் முதலியோரைப்பற்றி ஒன்றுந் தெரியாமையால் அநுமன் வருந்துதல்

2515. ஆர்க்கின்ற குரலுங் கேளா
னிலக்குவ னசனி யேற்றைப்
போர்க்கின்ற சிலேயி னுணின்
போரொலி கேளான் வீரர்
யார்க்கின்ன லுற்ற தென்ப
துணர்ந்தில னிசைப்போ ரில்லேப்
போர்க்குன்ற மனைய தோளா
னனையதோர் பொரும லுற்றான்.

(படைத்தலைவர்), ஆர்க்கின்ற குரல் கேளானும் - ஆர்ப்பரிக்கின்ற குரலைக் கேளாதவனும், இலக்குவன் - இலக்குவனுடைய, அசனி ஏற்றை - பேரிடியின் ஒலியையும், போர்க்கின்ற - அடக்க வல்ல, சிலையின் நாணின் போர் ஒலி கேளான் - வில் நாணியின் போர் ஒலியையும் செவிக்கொள்ளாதவனுமாய், வீரர் யார்க்கு - வீரரில் எவர்க்கு, இன்னல் உற்றது என்பது உணர்ந்திலன் - துன்பம் நேர்ந்தது என்பதை அறிந்திலன்; ஏனெனின் இசைப் போர் இல்லை - வந்து சொல்வோர் இல்லை; (ஆகவே), போர் குன்றம் அனைய தோளான் - போர் செய்ய வல்ல குன்றத்தை ஒத்த தோளையுடையவன் ஆன அநுமன், (குன்றம்) அனையது ஓர் பொருமல் உற்றான் - (குன்றம்போன்ற) ஓர் பெரும் வருத்தம் அடைந்தான்.

அசனி ஏறு: ஆணிடி. போர்த்தல்: இங்கு மறைத்தல் அல்லது அடங்கச் செய்தல். போர்த் தோளான் குன்றமனைய தோளான் எனத் தனித்தனிக் கூட்டுக. போர் செய்கின்ற குன்றம் ஒன்றின்மையின். குன்றம் அனைய தோளான் குன்றம் அனைய பொருமல் உற்றான் என்றதன் நயம் காண்க. 'மலை போன்ற இடர் எல்லாம் பனிபோன்று நீங்கும்' என்ற வழக்கும் அறிக. பொருமல்: துன்பம்; 'போயதெம் பொருமலென்று

விந்திரன் உவகை பூத்தான்' (திருவவ. 25); 'பொங்கிய பொருமல் வீங்கியுயிர்ப்பொடு புரத்தைப் போர்ப்ப' (யுத்த. மாயா சீதை. 56).

பா-ம். 2. கேளான் வீரன்.

3. இன்னதுற்றதென்பது, இன்னலுற்றதென்ன, ஈச்கின்றதென்னை யுற்றது; உணர்கிலன், அறிகிலான்.

4. இளையதோர், வெய்யதோர். 139

இச் செய்யுள் 'அன்னதே' என்றதின்பின் உள்ளது ஓர் பிரதியில். இஃது ஓர் பிரதியில் இல்லை.

## அங்கதன் முதலியோர் அரக்கர் சேனையில் வெகுதூரம் சென்றிருந்தமை

2516. வீசின நிருதர் சேனை வேலையிற் றென்மேற் றிக்கின்
யோசனை யேழு சென்று னங்கத னவனுக் கப்பால்
ஆசையி னிரட்டி சென்று னரிகுலத் தலைவ னப்பால்
ஈசனுக் கிளைய வீர னிரட்டிக்கு மிரட்டி சென்றுன்.

வீசின நிருதர் சேனை - வெகுதூரம் பரவியிருந்த இராக்கதர் படையாகிய, வேலையில் - கடலில், தென் மேல் திக்கில் - தென் மேற்குத் திக்கில், அங்கதன் ஏழுயோசனை சென்றுன் - அங்கதன் ஏழுயோசனை தூரம் சென்றிருந்தான்; அரி குலம் தலைவன் - குரங்குக் கூட்டங்கட்குத் தலைவனுன சுக்கிரீவன், அவனுக்கு அப்பால் - அந்த அங்கதனுக்கு அப்பால், ஆசையின் - திக்கில், இரட்டி சென்றுன் - அதில் இருமடங்கான பதினன்கு யோசனை தூரம் சென்றுன்; ஈசனுக்கு இளைய வீரன் - இராமபிரானுக்குத் தம்பியான இலக்குவன். அப்பால் - அதனையும் கடந்து, இரட்டிக்கும் இரட்டி சென்றுன் - அந்த இருமடங்கின் மேல் இரு மடங்கான ஐம்பத்தாறு யோசனை தூரம் சென்றுன்.

வீசுதல்: பரவுதல். யோசனை: ஏழரை மைல் என்றும் பத்து மைல் என்றும் நாற்காத தூரம் என்றும் கூறுவர். 'ஏகினர் யோசனை யேழோடேழு பார்' (கிட்கிந்தா. 800); 'ஒன்றினுக் கொன்றினிடை நெடிது யோசனையுடைய' (கிட்கிந்தா. 168); 'இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்' (நாலடி. 100); ஒரு யோசனை தூரம் கூந்தல் மணம் கமழும் என்பது கொண்டு

பாரதத்தில் வரும் மச்சகந்திக்கு யோசனைகந்தி என்ற பெயருண்மையும் காண்க. ஆசை : திக்கு ; 'ஆசையினளவும் எல்லாவுலகமுந் தானேயாள்வான்' (யுத்த. 916); 'ஆசைகளை யுற்றுருவமப்புறமுமோடும்' (யுத்த. மூலபல. 141); ஈசன் : இங்குத் திருமாலாகிய இராமபிரான் ; 'ஈசனை, உன்னை நீ உணராய்' (யுத்த. 602); 'ஈசனெதிருற்றுகுவ தல்லது' (யுத்த. மூலபல. 141) ; 'ஆர்த்தவோசை யீசனுண்ட வண்டமுற்றுமுண்டதே' (கிட்கிந்தா. 237) ; இச்சொல் பெரும்பாலும் ஈசானனென சிவபெருமானுக்கே வழங்கும் ; 'ஈசானஸ்ஸர்வவித்யானாம் ஈச்வரஸ்ஸர்வபூதானாம் சதாசிவோம்' என்று கூறப்படுதல் காண்க. இரட்டி : 'அன் பிரட்டி கொடதியான் அறிவிலேனே' (ஆரணிய. 351).

பி - ம். 1. வீசினன், வீசினர்.

2. அநனுக்கப்பால்.

3. அரிகுலத்தரசன், மன்னன். 140

3, 4, 5 அடிகள் : 'ஓசனையெழுந்து சென்றா னரிகுல மன்னனுப்பால், ஈசனுக்கிளைய வீர னிரட்டிக்கு மிரட்டி சென்றான், நீசரைத் தொலைத்து நீல னோசனை யாறு சென்றான்', என்று சில பிரதிகளில் காணப்படுகிறது.

## அநுமன் தனக்கும் இலக்குவனுக்கும் இரண்டு மூன்று காவதமிருக்குமாறு சேர்தல்

2517. மற்றையோர் நாலு மைந்தும் யோசனை மலைந்து புக்கார்
கொற்றமா ருதியும் வள்ள லிலக்குவ னின்ற சூழல்
முற்றின னிரண்டு மூன்று காவத மொழியப் பின்னுஞ்
சுற்றிய சேனை நீர்மேற் பாசிபோன் மிடைந்து துன்ன.

மற்றையோர் - ஏனைய வானர வீரர், மலைந்து - போர் புரிந்து, யோசனை நாலும் ஐந்தும் புக்கார் - ஒன்பது யோசனை சென்றனர், பின்னும் சுற்றிய சேனை - அதன் மேலும் சூழ்ந்து நின்ற படை, நீர் மேல் பாசிபோல் மிடைந்து துன்ன - நீர் மேல் பாசி படர்வது போன்று நெருங்கி அணுக, கொற்றம் மாருதியும் - வெற்றி பொருந்திய அநுமனும், வள்ளல் இலக்குவன் - கருணையாளனான இலக்குவன், நின்ற சூழல் - நின்ற இடத்திற்கு, இரண்டு

மூன்று காவதம் ஒழிய - இரண்டு மூன்று காவதம் இடையிட்டு, முற்றினன் - சேர்ந்தான்.

யோசனை: 2516. உரைக்குறிப்புக் காண்க. நீர்மேற் பாசி: உவமை. 'நீர்ச் செருவீழ்ந்த பாசியும்' என்ற (தொல். புறத். 68)-ம் இதற்கு; 'மதிலகத்தை விட்டுப் போகாத புறத்தோடும் அவரைக் கழியத்தாக்கல்; ஆற்றுத அகத்தோரும் எயிற் புறத்து அகழின் இருகரையும் பற்றி நீரிடைப் படர்ந்த பாசி போன்று அக்கிடங்கின்கட் போரை விரும்பின பாசியும்: பாசிபோல நீங்காமல் நிற்றலின் பாசி என்றார்; நீரிற் பாசிபோல இருவரும் ஒதுங்கியும் தூர்ந்தும் பொருதல்' என்ற நச்சினர்க்கினியர் வரைந்த உரையும் காண்க. 'நீர்ச் செறி பாசிபோல் நீங்காது தங்கோமா, னூர்ச்செரு வுற்றுரைக் கண்டு' என்பது நச்சினர்க் கினியர் தந்த மேற்கோள்.

இங்கு ஓர் அதிகப்பாடல்:

அருந்திற லகம்ப னாதி யரக்கரோ டளவி லாற்றல்
பொருந்திறற் களிறு காலாள் புரவிதேர் அளவில் கோடி
யெரிந்திடக் கொன்று தானங் கொருதிறை யாரு மின்றிப்
பொருந்திய வருளின் பொம்மல் பொலியமா ருதியும் நின்றான்.

பி-ம். 2. இலக்குவன் நின்ற கொற்றம், உற்ற கொற்றம்.

3. முற்றின விரண்டு.

4. பாசியின்; மிடையுந்; துள்ளனி, துன்னரி.

141

## இலக்குவனை அணுகுமாறு சென்ற அநுமன், தன் துயர் நீங்க, அவனால் நிகழ்ந்த பல்வேறு குறிகளைக் காணுதல்

2518. இளையவ னின்ற சூழ
லெய்துவென் விரைவி னென்றோர்
உளைவுவந் துள்ளந் தூண்ட
வூழிவெங் காலிற் செல்வான்

களைவருந் துன்ப நீங்கக்
கண்டன னென்ப மன்னோ
விளைவன செருவிற் பல்வே
றுயின குறிகள் மேய.

(இளைய கோவைக் கரணுமையின்), உள்ளம் - மனத்தில், ஓர் உளைவு வந்து தூண்ட - ஓர் வருத்தம் எழுந்து தூண்ட, (அநுமன்) 'இளையவன் நின்ற சூழல் விரைவின் எய்துவென் - இலக்குவன் இருந்த இடத்தை வேகமாகச் சென்று சேர்வேன்' என்று - என்று மொழிந்து, ஊழிவெம் காலில் - மகாப் பிரளயகாலத்து வீசும் பெருங் காற்றுப் போன்று, செல்வான் - (விரைந்து) செல்பவனுய், களைவு அரும் - (பிறவகைகளால்) நீக்கற்கரிய, துன்பம் நீங்க - துயரம் அகலுமாறு, செருவில் விளைவன பல்வேறு ஆயின குறிகள் - போரில் நிகழக்கூடிய பலவகையான அடையாளங்கள், மேய கண்டனன் - பொருந்தியவற்றைப் பார்த்தான். என்ப. மன் ஓ : அசைகள்.

உளைவு: வருத்தம்; 'உளைவனவெனினுங்' (யுத்த. 1243); விளைவன : 'வளையெயிற்றவர்களோடு வரும்விளை யாட்டென்று லும் விளைவன தீமை யேயாம்' (ஆரணிய. 286); மேயகுறிகள்; இவை அடுத்த ஏழுகவிகளிற் கூறப்பெறும்.

பி - ம். 1. என்ருன் ; என்று.

3. களைவரும் துயரம் ; நீங்கிக் ; மாதோ.

4. இளையவன் ; பல்வேருக்கின குறியிது ; என்ன, மெய்யின் ஏய. 142

## இலக்குவன் போர் செய்ததனல் நிகழ்ந்த குறிகள்

2519. ஆனையின் கோடும் பீலித் தழைகளு மாரத் தோடு
மானமா மணியும் பொன்னு முத்தமுங் கொழித்து வாரி
மீனென வங்கு மிங்கும் படைக்கல மிளிர வீசும்
பேனவெண் குடைய வாய குருதிப்பே ராறு கண்டான்.

ஆனையின் கோடும் - வேழங்களின் தந்தங்களையும், பீலி தழைகளும் - பீலி என்ற இசைக்கருவியையும், ஆரத்தோடு மானம் மா மணியும் - மணிமாலைகளுடன் சேர்ந்த (பலவகை)

அரதனங்களையும், பொன்னும் முத்தமும் - பொன்னையும் முத்துக்களையும், கொழித்து - கொழித்துக்கொண்டு, வாரி மீன் என - நீரில் வதிகின்ற மீன் என்னும்படி, படைக்கலம் அங்கும் இங்கும் மிளிர - போர்க்கருவிகள் அங்கும் இங்கும் ஒளிர, வீசும் பேனம் - எறிகின்ற நுரையென்று புகலத்தக்க, வெண்குடைய - வெண்ணிறக் குடையையுடைய, ஆய - அப்படிப்பட்ட, குருதிபேர் ஆறு கண்டான் - உதிரப் பெருக்கினையுடைய நதியினைப் பார்த்தான்.

கோடு - மருப்பு: 'கோடுசங்கூதும் கொம்பு மரக் கொம்பு விலங்கின் கொம்பு' (நிகண்டு), மனம்: பெருமை' கொழித்து வாரி என இயைத்தலுமாம். பொன் முத்தம் முதலியன மின்னுவன மீன்போன்றிருந்தன என்க. மின்னுவதால் நீர்வாழ் மீனுக்கும் மீன் என்ற பெயர் வந்தது. வடமொழிவாணர் கூறுவது போன்று மீனம் என்ற வடசொல் அன்று. பேனம் - நுரை; 'பேனம் நீர் நெடு நெய்யென' (யுத்த. 549); 'பேன வேலையிற் புடைபரந்தது பெருஞ்சேனை' (சுந்தர. 869); குருதிப் பேராறு (143); நீர் நுரை வெண்ணிறத்தால் குடைகட்குவமை.

பி - ம். 3. மிளிர விர்க்கும்; வீசிப், விங்கும்.

4. மோனை வெண்குடையவாறு முதிரப் பேரியாறு; கானப் பேராறு, ஆனவெண் குடையவாய குருதிப் பேராறு. 143

2520. ஆசைக டோறுஞ் சுற்றி மலைகின்ற வரக்கர் தம்மேல்
வீசின பகழி யற்ற தலையொடும் வீசும்பை முட்டி
ஓசையி னுலக மெங்கு மதிர்வுற வூழி நாளிற்
காசறு கல்லின் மாரி பொழிவபோல் விழுவ கண்டான்.

ஆசைகள் தோறும் சுற்றி மலைகின்ற அரக்கர் தம்மேல் - திசைகள்தோறும் வளைந்துகொண்டு போர்செய்கின்ற இராக்கதர்களின்மீது, வீசின பகழி - எறிந்த அம்புகள், அற்ற தலையொடும் - (தம்மால்) துணிபட்ட தலைகளோடும், விசும்பை முட்டி - ஆகாயத்தில் சென்று தாக்கி, ஓசையின் - (அங்ஙனம் தாக்கிய) ஓசையினால், உலகம் எங்கும் அதிர்வு உற - உலகனைத்தும் அதிர்ச்சியடையுமாறு, ஊழி நாளில் - பிரளய காலத்து, காசு அறு - குற்றமற்ற, கல்லின் மாரி பொழிவபோல் விழுவ கண்டான் - கல்மழை வருடிப்பதுபோன்று விழுவனவற்றைக் கண்ணுற்றான்.

ஆசை - திசை; 2516 உரைக்குறிப்புக் காண்க. விசும்பு - ஆகாயம்; 'விசும்பையும் கடந்தது விரிந்த தூளியே' (யுத்த. 1749); 'விசும்பின் மீதா வேகுமேல் வெல்வன்' (யுத்த. 2116); 'விசும்பு தைவருவளியும்' (புறநா. 2). பகழி தலையொடும் விழுந்த தற்குக் கல்மாரி உவமை.

பி - ம். 1. அலைகின்ற, அலைக்கின்ற; அரக்கன்றன்மேல்.
2. பகழி பற்ற, அற்றத்; தலைகளும்.
3. உதிர்வுற, தாளிறும்.
4. விழக்கண்டனன். 144

2521. மானவே லரக்கர் விட்ட படைக்கல வான மாரி
ஆனவன் பகழி சிந்தத் திசைதொறும் பொறியோ டற்ற
மீனினம் விசும்பி னின்று மிருளுக விழுவ போலக்
கானகந் தொடர்ந்த தீயிற் சுடுவன பலவுங் கண்டான்.

ஆனவன் பகழி - (போர் புரிதற்கு) ஏற்றவனான இலக்குவன் விடுத்த வாளிகள், சிந்த - தம்மீது சிந்துவதால், மானம் வேல் அரக்கர் - பெருமைசான்ற வேற்படையையுடைய இராக்கதர், விட்ட - செலுத்திய, படைக்கலம் வானம் மாரி - படைக்கலமாகிய வானமழைகள், திசைதொறும் - திக்குகள்தோறும், பொறியோடு அற்ற - தீப்பொறியுடன் அற்றனவாய், மீனினம் - நடசத்திரத் தொகுதிகள், விசும்பின் நின்றும் இருள் உக - ஆகாயத்திலிருந்தும் இருள் ஒழியும்படி, விழுவபோல - விழுவனபோன்று, கானகம் தொடர்ந்த தீயில் - காட்டிற்பற்றிய நெருப்புப்போன்று, சுடுவன - சுடுவனவான, பலவும் கண்டான் - பலவற்றையும் கண்ணுற்றான்.

மானவேல்: 'மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர் போம் கானவேல் முட்டைக்கும் காடு' (தனிப்பா.). வானமாரி - விண்மழை. பொறி - தீப்பொறி; உவமையணி.

பி - ம். 1. ஆனவாரி.
2. பொறியொடுந் திசையொடும்; திசையோடற்ற.
3. விசும்பினின்று மிச்செலவிழ்வ. 145

2522. அருடைக் குரிசில் வாளி யந்தர மெங்குந் தாமாய்த்
தெருளுறத் தொடர்ந்து வீசிச் செல்வன தேவர் காண
இருளிடைச் சுடலையாடு மெண்புயத் தண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்றெனச் சுடர்வ
[கண்டான்.

(மற்றும் அநுமன்), அருள் உடை - அருளையுடைய, குரிசில் - பெருமையாளன் ஆன இலக்குவனுடைய, வாளி - அம்புகள், அந்தரம் எங்கும் தாமாய் - ஆகாயம் எங்கும் தாமேயாய், தெருள் உற - (யாவரும்) தேறுமாறு, தொடர்ந்து வீசி செல்வன - இடைவிடாது வீசப்பெற்றுச் செல்பவை, இருள் இடை - இராப்போதில், சுடலை - நன்காட்டில், தேவர் காண - அமரர் காணுமாறு, ஆடும் - நடம்புரியும், எண் புயத்து அண்ணல் - எட்டுப் புயங்களையுடைய சிவபெருமானுடைய, வண்ணம் - அழகிய, சுருள் உடை சடையின் கற்றை சுற்று என - சுருளுதலைக் கொண்ட சடைத்தொகுதியின் சுற்றுப்போன்று, சுடர்வ கண்டான் - ஒளிசெய்வதைக் கண்ணுற்றான்.

அருள் உடை குரிசில்; (ஒப்பு): 'அருளுடை ஒருவன்நீக்க அப்பிணி யவிழ்த்த தொத்தான்' (அயோத்தி. கைகேசி. 109), இலக்குவன் இப்பொழுது செய்த போர் இரவினில் நிகழ்ந்ததாகலின், இரவில் ஒளிரும் அம்புகட்குவமையாக இருளிடைச் சுடலையாடும் அண்ணலின் சடைக்கற்றைச் சுற்றினைக் கூறினார். இருளிடைச் சுடலையாடும் எண்புயத் தண்ணல்: 'எண்டோள் வீசிநின் றாடும்பிரான்' (அப்பர். திருவங்கமாலை). வண்ணச் சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்று; (ஒப்பு): 'சுற்றும் சடைக் கற்றைச் சிற்றம்பலவன்' (திருக்கோ. 134). சுருளுடைச் சடை: 'நீண்டு குழன்று ......... கடைசுருண்டு சடையாயினது' (சுந்தர. 546). சுடலை: 'நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர், சுடலை சேர்வது சொற்பிர மாணமே' (தேவா. 1203 : 4); 'இவ் வழல்வாய்ச் சுடலைதின்னக் கண்டும்' (மணி. 6 : 101). கற்றைச் சடை: 'கற்றையஞ் சடைக் கடவுளும்' (யுத்த. 131).

பி - ம். 1. வாளி பரந்திட; தானுய்.
2. தெருளுறத் துரந்து; வீசச்.
3. அருளுடைச்; ஓடும்.

2523. நெய்யுறக் கொளுத்தப் பட்ட
நெருப்பெனப் பொருப்பி னோங்கும்
மெய்யுறக் குருதித் தாரை
விசும்புற விளங்கி நின்ற
தையனிக் கங்குன் மாலை
யரசென வறிந்து காலங்
கைவிளக் கெடுத்த தென்னக்
கவந்தத்தின் காடு கண்டான்.

(பின்னும்), நெய் உற - நெய்விடப்பெற்று, கொளுத்தப்பட்ட - எரிக்கப்பட்ட, நெருப்பு என - நெருப்புப்போன்று, பொருப்பின் ஓங்கும் - மலைபோன்று உயர்ந்து நிற்கும், மெய் உற - உடலி னின்று மிகுதியாக, குருதி தாரை - உதிரத்தின் ஒழுக்கு, விசும்பு உற - ஆகாயத்தின் உற, விளங்கி நின்றது - விளங்கி நின்றமை, ஐயன் - அழகனான இலக்குவன், அரசு என அறிந்து - மன்ன னென்று அறிந்து, இ கங்குல் மாலை காலம் - இந்த இருட்போது, கைவிளக்கு எடுத்தது என்ன - கைவிளக்கு ஏந்தினாற்போன்று தோன்ற, கவந்தத்தின் காடு கண்டான் - (அந்தக்) கவந்தத்தின் காட்டை (அநுமன்) கண்ணுற்றான்.

நெய்யுற கொளுத்தப்பட்ட நெருப்பு : 'நெய்யுறு விளக்கனாய்' (சுந்தர. 513). அநுமன் கவந்தத்தொகுதிகளைக் கண்டமை இங்குக் கூறப்பட்டது. இராக்கதரின் தலைகள் துணிபடவே, தலையற்ற உடல் முண்டங்களிலிருந்து மேலெழுந்து பாயும் உதிரம், நெய் வார்த்து எரிக்கும் தீப்பந்தத்தின் ஒளிபோலும் எனப்பட்டது. மற்றும் இலக்குவன் அரசிளங்குமரன் ஆதலின், அடர்ந்த இருளில் அவன் தடையின்றிச் செல்லட்டும் என்று, இராப்போது தீப்பந்தம் பிடிப்பதுபோலும் என்று கற்பிக்கப்பெற்றது, ஏதுத் தற்குறிப்பேற்றவணி. கங்குல் மாலைக்காலம் - இருளுடன்கூடிய இராக் காலம். அரசற்கு மரியாதையாகக் கைவிளக்கேற்றுவது மரபு; 'நான நெய் விளக்க நாலிரு கோடி நங்கைய ரங்கையா லெடுப்ப' (சுந்தர. 409).

பி - ம். 2. விசும்புற விளங்குகின்ற.

3. வையகம் கங்குன் ; ஒன்றவரறிந்து வந்த, ஆமென வறிந்துவந்த, ஆச்சென வறிந்து காலன்.

2524. ஆளெலா மழிந்த தேரு மானையு மாடன் மாவும்
நாளெலா மெண்ணி னுலுந் தொலைவிலா நாத ரின்றித்
தாளெலாங் குலைய வோடித் திரிவன தாங்க லாற்றுங்
கோளிலா மன்ன னுட்டிற் குடியெனக் குலைவ கண்டான்.

(மற்றும் அநுமன்), ஆள் எலாம் - வீரர் அனைவரும், அழிந்த தேரும் - அழியப்பெற்ற இரதமும், ஆனையும் - வேழமும், ஆடல் மாவும் - ஆடும் இயல்புள்ள குதிரைகளும், நாள் எலாம் எண்ணினுலும் - பொழுதெல்லாம் எண்ணிடினும், தொலைவு இலா - (தம் வாழ்நாட்கு) இறுதி காணவியலாத, நாதர் இன்றி - (தம்) பாகரோ தலைவரோ இல்லாமல், தாள் எலாம் குலைய - தாள் எல்லாம் குலையுமாறு, ஓடி திரிவன - ஓடித் திரிவனவாய், தாங்கல் ஆற்றும் - தாங்குதலைச் செய்யும், கோள் இலா - கொள்கையில்லாத, மன்னன் நாட்டில் குடி என குலைவ கண்டான் - அரசனது நாட்டில் குடிகள்போன்று நிலைகெடுமாற்றைக் கண்ணுற்றுன்.

ஆள் - காலாள் வீரர். ஆடல் மா - நாட்டியக் குதிரைகள். தொலைவு - அழிவு அல்லது இறுதி. தாங்கல் ஆற்றும் கோளிலா மன்னன் நாட்டில் குடி; (ஒப்பு): 'அலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள் வெஃகிக், கொலையஞ்சா வினைவராற் கோல் கோடி யவனீழல், உலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்' (கலித். பாலை. 9); 'அல்லற்பட் டாற்று தழுதகண்ணீர்' (குறள். 555) என்று கொடுங்கோல் மன்னன் வாழுநாட்டில் உள்ள குடிகளின் அவலநிலை கூறப்பட்டுள்ளமையும் காண்க. தாங்கல் ஆற்றும் கோள்: குடிதழிஇக் கோலோச்சும் நல்லியல்பு. நாள் எலாம் எண்ணினுலும், தொலைவிலா நாதர் என்று கூட்டியும் பொருள் கொள்வர்.

பி - ம். 1. ஆளெலாமிழந்த.
2. தொலைவிலா நாகரிகத்.
3. தோளெலாங்; துரகன்றுனும்.
4. கோளுளாம்; நாட்டுக்.

2525. மிடல்கொளும் பகழி மாரி வானினு மும்மை வீசி
மடல்கொளு மலங்கன் மார்பன் மலைந்திட வுலந்து
[மாண்டார்
உடல்களு முதிர நீரு மொளிர்படைக் கலமு முற்ற
கடல்களு நெடிய கானுங் கார்தவழ் மலையுங் கண்டான்.

(மேலும் மாருதி), மடல் கொளும் அலங்கல் மார்பன் - இதழுடன்கூடிய பூமாலையைப் புனைந்த மார்பினை யுடையவனுன இலக்குவன், மிடல் கொளும் பகழி மாரி - வலிமைகொண்ட வாளி மழைகளை, வானினும் - விண் மாரியைக்காட்டிலும், மும்மை வீசி - மும்மடங்கு வீசி, மலைந்திட - போர் புரிந்ததனுல், உலந்து மாண்டார் - உயிரொழிந்துபட்டவரான (அரக்கரின்), உடல்களும் - உடல்களும், உதிரம் நீரும் - இரத்தப் புனலும், ஒளிர் படை கலமும் - ஒளிசெய்கின்ற போர்க்கருவிகளுமாக, உற்ற - பொருந்திய, கடல்களும் - கடல்களையும், நெடிய கானும் - பரந்த காட்டினையும், கார் தவழ் மலையும் கண்டான் - மேகம் தவழ்கின்ற மலையையும் கண்டான்.

உலத்தல்: 'கொற்றவெங் கணையுலக்க வெய்தவை' (யுத்த. 2023); 'உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249). இறந்துபட்டவர்களின் உடல்கள் மலை, உதிரப்பெருக்கு கடல், போர்க்கருவிகள் நெடிய கானம் என்க.

பி - ம். 1. வானின் மாரியின், மாரி வானினும்.
2. உலைந்தோர், உலைந்து, அலைந்து.
3. உடைப்படைக்கலமும்; மிடை, மிடல்; படைக்கலக்கம்; இற்ற.
4. வானுங். 14ப

அநுமன் இலக்குவனது நாணொலிகேட்டுப் பேராரவாரஞ் செய்தல்

2526. சுழித்தெறி யூழிக் காலிற்
றுருவினன் தொடருந் தோன்றல்
தழிக்கொண்ட குருதி வேலை
தாவுவான் றனிப்பே ரண்டங்

கிழிந்தது கிழிந்த தென்னு
நாணுரு மேறு கேட்டான்
அழித்தொழி காலத் தார்க்கு
மார்கலிக் கிரட்டி யார்த்தான்.

சுழித்து எறி - சுழன்று வீசுகின்ற, ஊழி காலில் 'துருவினன் - மகாப்பிரளயகாலத்துச் சண்டமாருதம்போலத் தேடி, தொடரும் தொடர்பவனும், தழிக்கொண்ட - தழுவிக்கொண்ட, குருதி வேலை தாவுவான் - உதிரக்கடலைக் கடந்து செல்பவனுமாகிய, தோன்றல் - பெருமைமிக்க அநுமன், தனி பேர் அண்டம் - 'தனித்த பெரிய அண்டத்தை, கிழித்தது கிழித்தது - பிளந்தது பிளந்தது', என்னும் - என்று பகரத்தக்க, நாண் உரும் ஏறு கேட்டான் - நாணியின் உரத்த ஓசையைக்கேட்டு; (அதனால் எழுந்த மகிழ்ச்சியால் உலகனைத்தையும்), அழித்து ஒழி காலத்து ஆர்க்கும் - அழித்துத் தீர்க்கின்ற ஊழிக்காலத்தில் ஆரவாரிக்கும், ஆர்கலிக்கு இரட்டி ஆர்த்தான் - கடலைக்காட்டிலும் இருமடங்கு பெருமுழக்கம் செய்தான்.

அநுமனுடைய வேகத்திற்கு ஊழிக்காலத்துக் காற்று உவமை. துருவுதல்: 'துருவித் தேடிக் கொணர்குவன்' (யுத்த. மருத்து. 9). தழீஇக் கொண்ட: 'மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய துணைவனேல்'. உரும் ஏறு - பெருத்த இடியோசை ஒத்த முழக்கம். ஊழிக்காற்றும் ஊழிப்பெருவெள்ளமும் முறையே அநுமன் தேடியதற்கும் அவன் இலக்குவன் வில்லினது நாண் ஒலி கேட்டு ஆர்த்ததற்கும் உவமை. ஆர்கலி - நிறைந்த ஓசையையுடையது என்று கடலுக்குக் காரணக்குறி; 'ஆர்கலி யமரருய்ய வமிழ்துபண் டளித்த தன்றே' (யுத்த. 431).

பி-ம். 1. காலத்துருமெனத் தொடர்ந்து; தோன்றத்.

2. தழீஇக்கொடு, தழீக்கொடு, தழீஇத்தழீஇ.

4. அழிதொழில் வீரர்.

150

## அநுமன் இலக்குவனைக் கண்டு தழுவுதல்

2527. ஆர்த்தபே ரமலை கேளா
வனுகின னனும னெல்லார்
வார்த்தையுங் கேட்க லாகு
மென்றக மகிழ்ந்து வள்ளல்
பார்ப்பதன் முன்னம் வந்து
பணிந்தனன் விசயப் பாவை
தூர்த்தனை யிளைய வீரன்
றழுவின னினைய சொன்னான்.

ஆர்த்தபேர் அமலை கேளா - (வில் நாண்) ஒலித்த பெரும் சத்தத்தைக் கேட்டு, அநுமன் - மாருதி, அணுகினன் - (இளைய கோவை) நெருங்கி (இனி), எல்லார் வார்த்தையும் கேட்கலாகும் - எல்லோரைப்பற்றிய செய்திகளையும் கேட்டல்கூடும், என்று அகம் மகிழ்ந்து - என்று மனம் உவந்து, வள்ளல் - வண்மையனான அவ் விலக்குவன், பார்ப்பதன் முன்னம் வந்து பணிந்தனன் - கண்ணுறுவதற்கு முன்னரே வந்து வணங்கினான்; விசய பாவை தூர்த்தனை - வெற்றிமகளின் காதலனாகிய அநுமனை, இளைய வீரன் தழுவினன் - இலக்குவன் தழுவினவனாய், இனைய சொன்னான் - இவ்வார்த்தைகளைச் சொன்னான்.

அமலை - பேரொலி; 'அட்ட வேந்தன் வாளோராடு மமலையும்' (தொல். பொ. 72 உரை). கேளா: செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். வள்ளல் - இலக்குவன்; 'வள்ளல் இலக்குவன்' (யுத்த. 2517); 'அருளுடைக்குரிசில்' (யுத்த. 2522) என்று வந்திருத்தல் காண்க. 'நினைவானும் மாதர்நலம்பேணாது வளர்ந்தவனும், பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தவனும், நைட்டிக பிரமசாரியுமான அநுமனையும் தூர்த்தனாக்க எண்ணி, அவனை விசயப்பாவை தூர்த்தன் என்று குறித்த கம்பநாடர் சொற்றிறம் ஆராய்ந்தின்புறற்பாலது. விசயப்பாவை - வெற்றிமகள்; வெற்றிமகள் கேள்வன் கணவன், என்னாது, தூர்த்தன் என்றது. பலர் வயவர்களும் அவளைக் காதலிக்கக்கூடுமாகலின் என்க. தூர்த்தன் - காமுகன். பூமகள் இலம்பகம், நாமகள் இலம்பகம், மண்மகள் இலம்பகம், முத்தி இலம்பகம் என்று, திருமகளையும், கலைமகளையும், மண்மகளையும்,

முத்திமகளையும் சீவகன் மணம் செய்ததாகத் தேவர் குறித்துள்ளமை இங்குக் காணலாம்; வடமொழி வாணர் முத்தியும் ஸ்திரிலிங்கம் என்ப; 'விடரும் தூர்த்தரும்' (மணி. 14, 16).

பி - ம். 1. எல்லா.

2. என்றுளம்.

3. பார்த்தவன் முன்னஞ்சென்று வணங்கினன்.

4. தூர்த்தனன், தீர்த்தனை; தழுவி நின்று. 151

## இலக்குவன் அநுமனிடம் வாநர வீரர்களைக் குறித்து வினவுதல்

2528. அரிகுல வீர ரைய
யாண்டைய ரருக்கன் மைந்தன்
பிரிவுனைச் செய்த தெவ்வா
றங்கதன் பெயர்ந்த தெங்கே
விரியிருட் பரவைச் சேனை
வெள்ளத்து விளைந்த தொன்றுந்
தெரிகிலெ னுரைத்தீ யென்றான்
சென்னிமேற் கையன் சொன்னான்.

'ஐய - ஐயனே! அரி குல வீரர் யாண்டையர் - குரக்குக் குலத்து வீரர்கள் எவ்விடத்துள்ளனர்? அருக்கன் மைந்தன் உனை பிரிவு செய்தது எவ்வாறு - சூரியன் மகன் உன்னைப் பிரிந்தது எவ்வாறு? அங்கதன் பெயர்ந்தது எங்கே - அங்கதன் சென்றது எங்கே? விரி இருள் பரவை சேனை வெள்ளத்து - பரந்த இருட் கடலில் கலந்த சேனை வெள்ளத்திலே, விளைந்தது ஒன்றும் தெரிகிலேன் - நிகழ்ந்தது ஒன்றும் தெரிந்தேனில்லை; உரைத்தி - பகர்வாயாக'; என்றான் - என்று (இலக்குவன்) கேட்டான்; (அநுமன்), சென்னிமேல் கையன் சொன்னான் - சிரசின்மேல் குவித்த கையனாய் மொழியலானான்.

யாண்டையர்: 'அரசர் கோமகன் யாண்டையான்' (அயோத்தி. பள்ளிபடை. 43). அர்க்க என்ற வடசொல் தமிழ் மரபிற்கேற்ப உகரம்பெற்று அருக்கன் என வந்தது. உனைப் பிரிவு செய்து

என மொழி மாற்றப்பட்டது. சென்னியிற் கைகூப்புதல்: வணங்கும் முறைகளில் ஒன்று. 'சென்னியிற் கையன் - அநுமன். அநுமன் கூறுவனவற்றை இதனையடுத்துள்ள இரண்டு செய்யுட்களிற் காண்க.

பி - ம். 1. திருவினை செய்தநிலன்.
2. பேர்ந்தது.
3. விரியருட் பரவைவேலை ; விளைந்த, விளைந்தது.
4. சென்னியிற். 152

தனக்கும் ஒன்றும் தெரியாதென்று அநுமன் அறிவித்தல்

2529. போயினூர் போய வாறும் போயின தன்றிப் போரில்
ஆயினு ராய தொன்று மறிந்தில னைய யாரும்
மேயினுர் மேய போதே தெரியலாம் விளைந்த தென்ருன்
தாயினுன் வேலை யோடு மயிந்திரப் பரவை தன்னை.

வேலையோடும் ஐந்திரம் பரவை தன்னை தாயினுன் - கடலோடும் ஐந்திர வியாகரணமாகிய கடலையும் கடந்தவனுன அநுமன், (இளையகோவைப் பார்த்து), 'ஐய - ஐயனே! போயினுர் போய ஆறும் - (ஓடிப்) போனவர் போனபடியும், போயினது அன்றி - ஓடிப்போனதும் அல்லாமல், போரில் ஆயினுர்-போர்க்குச் சென்றவர், ஆயது ஒன்றும் - இன்ன ஆனுர் என்றதையும், அறிந்திலன் - தெரிந்தேனில்லை ; யாரும் - யாரைப்பற்றியும், மேயினுர் மேயபோதே - சென்றவர் மீண்டுவந்த போழ்துதான், விளைந்த தெரியலாம் - நிகழ்ந்தவற்றை அறிதல்கூடும்', என்ருன் - என்று பகர்ந்தான்.

இலக்குவனிடம் நிகழ்ந்தவற்றைக் கேட்டறியலாம் என்று எண்ணிவந்த அநுமன், இளையகோவே ஒரு விவரமும் அறியாததைக்கேட்டுப், போர்க்குச் சென்றவர் திரும்பி வந்தபோதுதான் செய்திகளை அறியக்கூடும் என்ருன். வேலையோடு மயிந்திரப் பரவை தன்னை தாயினுன் - அநுமன் ; 'அயிந்திரம் நிறைந்தவன்

ஆணை யேவலால்' (யுத்த. 345)ம் அதன் உரைக்குறிப்பும் காண்க; (ஒப்பு): 'கதிரோன் முன்சென் றேதினுன் ஓதநீர் கடந்து பகை கடிந் துலகை யுய்யக் கொண்டான்' (யுத்த. 408).

பி-ம். 2. ஆயினு ராயவானும்; அறிந்திலனனைய.

3. தெரியுறும், தெரிவது.

4. தாயினர் வேலையொன்று, தாயினன் பரவையோடும்; பரவைதானே.

## மயக்கத்தை மாற்றும் வழியை அநுமன் கூறுதல்

2530. மந்திர முளதா லைய
வுணர்வுறு மாலைத் தஃதுன்
சிந்தையி னுணர்ந்து செய்யற்
பாற்றினிச் செய்தி தெவ்வர்
தந்திர மிதனைத் தெய்வப்
படையினுற் சமைக்கி னல்லால்
எந்தைநின் னடியர் யாரு
மெய்தலர் நின்னை யென்ருன்.

'ஐய - ஐயனே! உணர்வு உறு மாலைத்து மந்திரம் உளது - (மயக்கம் ஒழிந்து) நல்லுணர்வினைப் பொருந்தும் தன்மையதான மந்திரம் உள்ளது; அஃது உன் சிந்தையின் உணர்ந்து - அஃது உன் மனத்தினுலே உணர்ந்து, செய்யல் பாற்று - புரிதற்குரியது தாதலின், இனி செய்தி - இனிச் செய்வாயாக; தெவ்வர் - பகைவருடைய, தந்திரம் - சூழ்ச்சியால் நேர்ந்த, இதனை - இந்தத் திகைப்பினை, தெய்வப் படையினுல் சமைக்கின் அல்லால் - தெய்வப் படையினுல் அகற்றின் அல்லாமல், எந்தை - எந்தையே, நின் அடியர் யாரும் நின்னை எய்திலர் - நின் அடியார் எவரும் உன்னை (நல் உணர்வுடன்) அடையமாட்டார்', என்ருன் - என்று (அநுமன் இலக்குவனிடம்) தெரிவித்தான். ஆல்: அசை.

மந்திரம், 'நிறை மொழி மாந்த ராணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப' (தொல். செய். 178); மாலைத்து: இயல்பினது. தெவ்வர்: பகைவர்; தெவ்வுப் பகையாகும்' (தொல். உரி. 50); 'தெவ்வரிவர் சேமமிது' (சுந்தர. 167); 'தேவர்

தானவரென்னுந் தெவ்வர்' (சுந்தர. 755); 'திண்பொருளெய்த லாகும் தெவ்வரைச் செருக்கலாகும்' (சீவக. 1760). எய்தலர்: அல்: எதிர்மறையிடைநிலை.

பி-ம். 1. மாலை காறும், மாலை தானும், மாலைத்தொன்றும்.

2. செய்யற் பாற்றினி.

3. தந்திரமதனைத்; படைகளாற்; சமைப்பின். 154

## இலக்குவன் அநுமன் சொல்லைக்கேட்டுப் பசுபதி அத்திரத்தைத் தொடுத்துவிடுதல்

2531. அன்னது புரிவே னென்று
வாயிர நாமத் தண்ணல்
தன்னையே வணங்கி வாழ்த்திச்
சரங்களைத் தெரிந்து வாங்கிப்
பொன்மலை வில்லி னுன்றன்
படைக்கலம் பொருந்த வேந்தி
மின்னெயிற் றரக்கர் தம்மேல்
வீசினன் வில்லின் செல்வன்.

வில்லின் செல்வன் - விற்றொழிலாகிய செல்வத்தை உடையவனான இலக்குவன், 'அன்னது புரிவேன் - அதனைச் செய்வேன்', என்று - என்று மொழிந்து, ஆயிரம் நாமத்து அண்ணல் தன்னையே - ஆயிரம் நாமத்துக்குரியவனான இராமபிரானையே, வணங்கி வாழ்த்தி - வணக்கம் புரிந்து வாழ்த்திவிட்டு, (பிறகு) சரங்களை தெரிந்து வாங்கி - வாளிகளைத் தேர்ந்து எடுத்து, பொன் மலை வில்லினன் தன் - பொன் மயமான மேருமலையை வில்லாகக் கொண்டவனான சிவபெருமானுடைய, படைகலம் பொருந்த ஏந்தி - அத்திரத்தை பொருந்தும்படி தாங்கி, மின் எயிறு - மின்னல் போன்ற பற்களையுடைய, அரக்கர் தம்மேல் வீசினன் - இராக்கதர்மீது வீசினன்.

ஆயிர நாமத்தண்ணல்: திருமால் அவதாரமான இராமபிரான்; 'ஆயிர நாமத்தாழியரி' (யுத்த. 1633)-ம் அதன் உரைக்

குறிப்பும் காண்க. தன்னையே வணங்கி வாழ்த்தி : ஏகாரம் தேற்றம்; 'தலையறுப்புண்டும் சாவேன் சத்தியம் காண்மினையா, சிலையினுல்லங்கை செற்ற தேவனே தேவனுவான்' (திருமாலை. 7); 'வாயவனை வாழ்த்தாது கையுலகந், தாயவனை யல்லாது தாம் தொழா' (இயற்பா. முதல். 11); தெரிந்து : குணம் குற்றம் ஆராய்ந்து. பொன்மலை வில்லினுன் - மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான்; 'நாகத்தனி யொருவில்லி' (ஆரணிய. 458). மின்னெயிற்றரக்கர்; 'மின்திகழ் பிறழ்பற் கூற்றம்' (குசேலா. 3 : 6); 'இது ஈசனிகல்' (ஆரணிய. 745); 'வில்லா வடித்தமலை' சுந்தர. 272, 350, 451, 982-ம் காண்க. 'மேரு வில்லாளன்' (யுத்த. 1954). மேருவினை வில்லாக்கொண்டது; திரிபுரம் எரித்த காலத்து என்ப. சொல்லின் செல்வன் என்று அநுமனைக் கூறியது போன்று இங்கு இலக்குவனை வில்லின் செல்வன் என்றுர்.

பி - ம். 2. தொழுது; தெரிந்து தாங்கி.
3. பொருந்தப்பற்றி.
4. ஏவினுன். 155

## இலக்குவன் விடுத்த பசுபதி அத்திரத்தால் அரக்கர்படை எரிய இருளொழிதல்

2532. முக்கணுன் படையை மூட்டி விடுதலு மூங்கிற் காட்டிற்
புக்கதோ ரூழித் தீயிற் புறத்தினோ ருருவும் போகா
தக்கணத் தெரிந்து வீழ்ந்த தரக்கர்தஞ் சேனை யாழி
திக்கெலா மிருளுந் தீர்ந்த தேவரு மயக்கந் தீர்ந்தார்.

முக்கணுன் படையை - மூன்று கண்களையுடைய சிவபெருமான் அத்திரத்தை, மூட்டி விடுதலும் - (இலக்குவன்) தொடுத்துவிட்ட அளவில், மூங்கில் காட்டில் புக்கது ஓர் ஊழி தீயில் - மூங்கிற் காட்டிலே புக்கதான ஓர் ஊழிக்காலத் தீப்போன்று, புறத்தின் ஓர் உருவும் போகாது - புறத்தே ஒதுங்கி ஒரு பொருளும் போகாத படி, அரக்கர் சேனை ஆழி - அரக்கர் சேனைக்கடல், அக்கணத்து - அக்கணத்தில்தானே, எரிந்து வீழ்ந்தது - தீப்பட்டு விழுந்தது;

திக்கு எலாம் இருளும் தீர்ந்தது - திசைகளில் எல்லாம் இருளும் ஒழிந்தது; தேவரும் மயக்கம் தீர்ந்தார் - வானவரும் திகைப்பு ஒழிந்து நின்றார்.

முக்கணன்: 'முக்கண னெண்கண னுமுளரியா யிரங்கணனும்' (யுத்த. 283); சிவபெருமான்: மூன்று கண்கள் சூரியன் சந்திரன் அக்கினி. 'முக்கணு நிலவெழ முகிழ்த்த மூரலும்' (வி. பா. அருச். தவ. 120); முக்கணன் படை: பாசுபதாத்திரம்; இதனை அருச்சுனன் தவம் செய்து சிவபெருமானை நேரில் தரப் பெற்றது; வில்லி பாரதம்: அருச்சுனன் தவநிலைச் சருக்கத்துக் காண்க. 'ஐயனுமம்மையொ டருள்புரிந்துபின், வெய்ய பொற் றூணியும் வில்லு மந்திரமுந், துய்ய பாசுபத மெய்த் தொடையு முட்டியு, மொய்யென நிலையுடனுதவினனரோ' (வி. பா. அருச். தவ. 129); என்றமை காண்க. மூங்கிற் காட்டிற் புக்கதோர் ஊழித்தீ: இஃது ஓர் சிறந்த உவமை. தீயின்றியே மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்வதால் நெருப்புப் பிறக்கும்; இங்கு தீ, அதுவும் ஊழித்தீயிற் புக்கது என்று அதன் கடுமை விளக்கப் பட்டது. புறத்தின் ஓர் உருவம் போகாது என்றது. எந்த உருவப் பொருளையும் விட்டுவிடாமல் என்றபடி. தேவரும்: உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 3. புறத்தின் போகா, புறத்தொன்றும், போகாவண்ணம்.
3. ன்க்கணத் தெரித்து வீழ்ந்தானரக்கர் தம்படையை; ஆழித்.
4. மருளும் தீர்ந்தான்; இடுக்கண் தீர்ந்தார். 156

## மகோதரன் மறைய, குரக்கு வீரர் இலக்குவனைக் கூடல்

2533. தேவர்தம் படையை விட்டா
னென்பது சிந்தை செய்யா
மாபெரு மாயை நீங்க
மகோதரன் மறையப் போனான்
யாவரு மிரிந்தா ரெல்லா
மினமழை கழிய வார்த்துக்
கோவிளங் களிற்றை வந்து
கூடினா ராடல் கொண்டார்

(இலக்குவன்), தேவர்தம் படையை விட்டான் என்பது - பசுபதி அத்திரத்தை ஏவினுன் என்பதை, சிந்தை செய்யா - மனத்திற் கொண்டு, மா பெரு மாயை நீங்க-கருநிறமாக வந்த பெரு மாயை அகன்றெழிய, மகோதரன் மறைய போனுன் - மகோதரன் மறைந்து சென்றான்; இரிந்தார் யாவரும் - நிலைகுலைந்து ஓடிய எல்லோரும், இனம் மழை எல்லாம் - தொகுதியான மேகம் எல்லாம், கழிய - பின்னிடுமாறு, ஆர்த்து - ஆரவாரித்து, இளம் களிற்றை - இளைய யானை போன்ற இலக்குவனை, வந்து கூடினுர் - வந்து சேர்ந்துகொண்டு, ஆடல் கொண்டார் - கூத்தாடத் தொடங்கினுர்.

சிந்தை செய்யா : மனத்துக்கொண்டு, மாபெரு என்று ஒரு பொருட் குறித்த இரண்டு சொற்கள் வந்தமையின், மா என்பதற்குக் கரிய எனப் பொருள் தரப்பட்டது; மிகவும் பெரிய மாயை எனினுமாம். இனம்மழை எல்லாம் கழிய ஆர்த்து என்றது. மேகத்தின் முழக்கமும் பின்னிடையுமாறு பெருமுழக்கம் செய்து என்றவாறு. களிறு உவமவாகுபெயர்; நடையிலும் வீரத்தாலும் கம்பீரத்தாலும் இலக்குவற்குவமை. ஆடல் கொண்டார் வலிமை மிக்கார் எனினுமாம். இப்பொருளில் அடல் ஆடல் என நீண்டது என்க. இளங்கோக் களிற்றை எனக் கூட்டுக.

பி - ம். 1. என்பதும்.
2. மாபெருந் தேரினின்ற, மாவரு மாயை நீங்க.
3. ஏவரும்; மேன்மழையென்ன; இமைழையரிய. 157

## இலக்குவன் குரக்குச் சேனையுடன் இனிதிருத்தல்

2534. யாவர்க்குந் தீதி லாமை
கண்டுகண் டுவகை யேறத்
தேவர்க்குந் தேவன் றம்பி
திருமனத் தையந் தீர்ந்தான்
காவற்போர்க் குரக்குச் சேனை
கல்லெனக் கலந்துபுல்லப்
பூவர்க்க மிமையோர் தூவப்
பொலிந்தனன் றூதர் போனுர்.

தேவர்க்கும் தேவன் தம்பி - தேவாதிதேவனுன இராமபிரானுடைய இளவலான அழகிய இலக்குவன், யாவர்க்கும் தீது

இலாமை கண்டு கண்டு உவகை ஏற - எவர்க்கும் எவ்வகையான தீங்கில்லாமையை விடாமல் பார்த்து மகிழ்ச்சி மிக, திருமனத்து ஐயம் தீர்ந்தான் - உள்ளத்துச் சந்தேகம் தீரப்பெற்றவனாய், காவல் - தனக்குக் காவலாய், போர் குரக்கு சேனை - போர் புரிதற்குரிய வானரப்படை, கல் என கலந்து புல்ல - கல்லென்ற ஓதையுடன் (தன்னைக்) கூடி அணைந்து நிற்க, இமையோர் பூவர்க்கம் தூவ - வானவர் மலர்வகைகளைத் தூவ, பொலிந்தனன் - விளங்கி நின்றான், தூதர் போனார் - (அச்செய்தியைச் சொல்ல இராவணனிடம்) தூதுவர் சென்றார்.

கண்டு கண்டு என்ற அடுக்கு உவகை மிகுதற்பொருட்டு. தேவர்க்கும் தேவன்: 'தேவர்க்குந் தேவன் நல்க' (யுத்த. 1354). கல்லெனல் - ஒலிக்குறிப்பு; 'கல்லென்ற ஒலியிற் சென்றார்' (ஆரணிய. 617). வர்க்கம் - வடசொல்; எதுகைநோக்கி ரகரம் உகரம் பெறாமல் நின்றது.

பி - ம். 1. கண்டுவந்துவகையெய்தி.
3. குரங்கின் சேனை; கடலெனக் கடிதுகூட, கடலெனக்கிளர்ந்து சுற்ற.
4. பொலிந்தனர். 158

## அரக்கர் சேனை பட்டதை தூதர் இராவணனுக்கு அறிவித்தல்

2535. இலங்கையர் கோனை யெய்தி
யெய்திய துரைத்தார் நீவிர்
விலங்கினிர் போலும் வெள்ள
நூற்றையோர் வில்லின் வேழக்
குலங்களி னோடுங் கொல்லக்
கூடுமோ வென்னக் கொன்றை
அலங்கலான் படையி னென்று
ரன்னதே லாகு மென்றான்.

இலங்கையர் கோனை எய்தி - இலங்கை மன்னனான இராவணனை அடைந்து, (தூதர்) எய்தியது உரைத்தார் - நிகழ்ந்ததைச் சொன்னார்; (அதனைச் செவியேற்ற இராவணன்), 'நீவிர் விலங்கினிர் போலும் - நீங்கள் (பயந்து) விலகி வந்துவிட்டீர் போலும்; வேழம் குலங்களினோடும் - யானைக் கூட்டங்களுடனே, வெள்ளம்

நாற்றை - நூறுவெள்ளம் (அரக்கர்) படையையும், ஓர் வில்லின் கொல்ல கூடுமோ - ஒரு வில்லினல் கொன்றொழிக்க இயலுமோ?" என்ன - என்று கேட்க, '(இவ்வளவும் நிகழ்ந்தது), கொன்றை அலங்கலான் படையின் - கொன்றைமாலை புனைந்த சிவபெருமானுடைய அத்திரத்தால்', என்றார் - என்று (தூதர்) விடையிறுத்தார்; (இராவணன்), 'அன்னதேல் ஆகும் - அவ்வாறு எனின் (அரக்கர்படை அத்தனையும் அழிந்தமை) நிகழ்ந்திருத்தல்கூடும்', என்றான் - என்று ஒத்துக்கொண்டான். ஓகாரம் - வினு.

விலங்குதல் - விலங்கிச் செல்லுதல். கொன்றை அலங்கலான் - கடுக்கை என்ற கொன்றைமாலை வேய்ந்த சிவபெருமான்; 'முருகலர் கொன்றை திங்கள் முடிமே லணிந்து'; 'நதியொடு கொன்றைமாலை முடிமே லணிந்து' (தேவா. 1171, 314). பசுபதியின் படையெனவே அப்படை அவ்வரிய அழிப்புச் செயலைச் செய்திருத்தல்கூடும் என்று அமைந்ததனுல், அப்பெருமானும் தனக்குப் பேரருள் புரிந்தவனுமான சிவபிரான் ஆற்றலை அரக்கன் உணர்ந்திருந்தது அறிக. இங்கு இராமபிரானைப் பற்றிச் சூர்ப்பணகை கூறிய 'எல்லொன்று கமலச் செங்கணி ராமனென் றிசைத்த வேந்தல், வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏற்றினன்' (ஆரணிய. 617) என்ற வரிகள் காணத்தகும்.

பி - ம். 1. நீங்கள், நிர்கள்.

2. நூற்றையும்; வில்லால் வீழக். 159

## அச்செய்தியை இந்திரசித்திற்கு உணர்த்துமாறு இராவணன் தூதரிடம் கூறுதல்

2536. தோடவி ழலங்க லென்சேய்க்
குணர்த்துமி னென்னச் சொன்னுன்
ஓடினர் சாரர் வல்லை
யுணர்த்தினர் துணுக்க மெய்தா
ஆடவர் திலகன் யாண்டை
யானிக லனும னேனோர்
வீடணன் யாங்க ணுள்ளா
ருணர்த்துமின் விரைவி னென்றான்.

'தோடு அவிழ் அலங்கல் என் சேய்க்கு - இதழ்கள் விரியப் பெற்ற மாலையைப் புனைந்த என் மகனுக்கு, உணர்த்துமின் - தெரிவியுங்கள்' என்ன சொன்னான் - என்று இராவணன் பகர்ந்தான்; சாரர் வல்லை ஓடினார் உணர்த்தினர் - ஒற்றர்கள் விரைந்து ஓடி (இந்திரசித்துக்கு) அறிவித்தார்கள்; (அதுகேட்டு இந்திரசித்து), துணுக்கம் எய்தா - மன நடுக்கம் உற்று, (ஒற்றரைப் பார்த்து) 'ஆடவர் திலகன் யாண்டையான் - ஆடவரில் திலகம் போன்றவனை இராமபிரான் எங்குள்ளான்? இகல் அநுமன் - வலிமை சான்ற மாருதியும், ஏனோர் - பிற வாநரமும், யாங்கண் உள்ளார் - எங்கே இருக்கின்றனர்? விரைவின் உணர்த்துமின் - தாமதமின்றிக் கூறுங்கள்', என்றான் - என்று கேட்டான்.

தோடு: இதழ்; 'தோடேமடலே யோலைபென்றா' (தொல். மரபி. 86); 'தோடுழுத தார்வண்டும் திசையானை மதந்துதைந்த வண்டும்' (சுந்தர. 312); 'இரும்பனை வெண்டோடு மலைந்தோனல்லன்' (புறநா. 45); துணுக்கம்: நடுக்கம்; 'சொன்னதுண்டு துணுக்கமகற்றுவாள்' (சுந்தர. 628). ஆடவர் திலக: 'ஆடவர் திலக நின்னாலன்று' (யுத்த. இந்திரசித்து. 71); இகல் அநுமன்: (ஒப்பு) 'ஏற்றவனை வரிசிலையோ னியம்பாமு னிகலரக்கி' (ஆரணிய. 340); 'யாண்டையான்' (அயோத்தி. பள்ளிபடை. 43).

பி - ம். 2. ஓடினார் சார.
3. அனலனோ டனிலனோனோர்.
4. விடணக்குரிசில் யாங்கண். 160

வேறு

## தூதர் இராமன்முதலியோருள்ள இடத்தை மேகநாதனிடங் கூறல்

2537. வந்திலனிராமன் வேறோர்
மலையுளா னுந்தை மாயந்
தந்தன தெரிவான் போனா
னுண்பன தாழ்க்கத் தாழா

எந்தைதீ தியன்ற தென்ன
மகோதர னியாண்டை யென்ன
அந்தரத் திடைய னென்ன
விராவணி யழகிற் றென்றான்.

'இராமன் வந்திலன் - இராமபிரான் வந்தானில்லை; வேறோர் மலை உளான் - (அவன்) வேறோர் மலைக்கண் இருக்கின்றான்; மாயம் தந்தனன் தெரிவான் உந்தை - (இராக்கதர்) புரியும் மாயத்தை அறிய வல்லவனான உன் சிற்றப்பன் (வீடணன்), உண்பன தாழ்க்க - (சேனைகட்குத் தேவையான) உணவுப்பொருள் வரத் தாமதித்ததால், போனான் - (அவற்றைக் கொண்டுவரச்) சென்றான்; தாழா எந்தை - காலம் தாழ்க்காமல் (விரைந்து செயலாற்றவல்ல) என் தந்தையே; தீது இயன்றது - கெடுதல் விளைந்தது', என்ன - என்று (தூதர்) அறிவித்தாராக, (இந்திர சித்து) 'மகோதரன் யாண்டை - மகோதரன் எவ்விடத்தான்', என்ன - என்று கேட்க, 'அந்தரத்து இடையன் - விண்ணகத்தே உள்ளான்', என்ன - என்று சொல்ல, இராவணி - இந்திரசித்து, 'அழகிது - நன்றாக இருந்தது', என்றான் - என்று மொழிந்தான்.

உண்பன - வினையாலணையும் பெயர்; உண்டற்குரிய பொருள். தாழாது என்பது தாழா என ஈறு குறைந்து நின்றது. இச் செய்யுட்கண் வினாவிடையாகப் பொருள் அமைந்து சுருங்கச் சொல்லல் என்ற அழகு மிளிர்வது காண்க. படைகள் சூழ்ந்து நிற்கையில் மகோதரன் வானத்தொளிந்திருப்பது தகுதியன்று என்பான். அழகிற்று என்றான்: 'அரக்கர்கோ னதனைக் கேட்டா னழகிற்றே யாகுமென்றான்' (யுத்த. 915).

பி - ம். 1. மலையினன்

2. தந்திரந் தீர்ப்பான்; தாழாது.

3. *தியன்றது, நீதியென்றது; என்றான், என்றார்

4. இடையாய்; அழகிது.

## வேறு

## இந்திரசித்து அயன்படையை ஏவுவதற்கு அங்கியில் வேள்விசெய்தல்

2538. கால மீதெனக் கருதிய விராவணன் காதல்
ஆல மாமர மொன்றினை விரைவினி னடைந்தான்
மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகண் முறையாற்
கூல நீங்கிய விராக்கதப் பூசுரர் கொணர்ந்தார்.

'ஈது - இதுவே, காலம் - அயன் படையை விடுத்தற்கேற்ற தருணம்' என - என்று, கருதிய - நினைந்த, இராவணன் காதல் - இராவணனுடைய ஆசைக் குமரனை (இந்திரசித்து), மா ஆல மரம் ஒன்றினை விரைவினின் அடைந்தான் - பெரியதோர் ஆல மரத்தை வேகமாக அடைந்தான்; கூலம் நீங்கிய இராக்கதர் பூசுரர் - ஒழுக்க வரம்பினைக் கடந்த அரக்கப் பிராமணர், மூலம் வேள்விக்கு வேண்டுவ கலப்பைகள் முறையால் கொணர்ந்தார் - முக்கியமான யாகத்திற்கு வேண்டிய கருவிகளை முறையாகக் கொண்டுவந்தனர்.

இது, ஈதெனச் சுட்டு நீண்டது. இராவணன் காதல் - இராவணனுடைய அன்பிற்குப் பாத்திரமான இந்திரசித்து; 'தனிக் காதலை' (யுத்த. 1777). காதலன் - புதல்வன்; 'எரி யமைந்த மயானத்தை யெய்துகின்ற காதலனை' (யுத்த. மீட்சி. 228). அசுவத்தாமன் பாண்டவரைக் கொல்லுமாறு ஆலமரத் தடியில் பெரிய வேள்வி புரிந்ததாகப் பாரதம் கூறும்; 'அந்நெடு மாமறை யால மரத்திடை யழிசேனை, யின்னுயிர் பெற்றிடும் வகைகொடு மீளவு மிகல்வேனென், றுன்னி' (வி. பா. 18ஆம் போர் 102) என்றது காண்க. கலப்பை - கருவி; இங்கு வேள்விக்குரிய கருவிகள்; கூலம் - கரை, இங்கே எல்லை அல்லது வரம்பு; 'கூலத்தா ருலகமெல்லாம்' (ஆரணிய. 657); 'கூலமிட்டிய வார்கலி கோத்தலால்' (யுத்த. 653). பூசுரர் - பிராமணர்; இவரைத் தரைத்தேவர் என்றும் கூறுப; 'பூசுரர்க் கலக்க ணீந்தான்' (யுத்த. 916); 'பூசுரேசர் வேதங்க ளியம்பினர்' (சுந்தர. 74).

பி - ம். 1. கருதியிட்டு; மைந்தன்
4. கூல நீங்கிலா.

2539. அம்பி ஞற்பெருஞ் சமிதைக ளமைத்தன னனலில்
தும்பை மாமலர் தூவினன் காரியெட் சொரிந்தான்
கொம்பு பல்லொடு கரியவெள் ளாட்டிருங் குருதி
வெம்பு வெந்தசை முறையினிட் டெண்ணெயால்
[வேட்டான்.

(இந்திரசித்து), அம்பினுல் பெரும் சமிதைகள் அமைத்தனன் - அம்பினுலேயே பெரிய சமித்துக்களை அமைத்தான்; அனலில் - தீயில், தும்பை மா மலர் - தும்பையாகிய பெரிய மலர்களை, தூவினன் - இறைத்தான்; காரி எள் சொரிந்தான் - கருநிற எள்ளினைப் பெய்தான்; கொம்பு பல்லொடு - கொம்பு பற்கள் என்றவற்றுடன் கூடிய, கரிய வெள் ஆடு இரு குருதி - கருநிறமுள்ள வெள்ளாட்டினது மிகுதியான உதிரத்தையும், வெம்பு வெம் தசை - வேகவைக்கவேண்டிய வெவ்விய தசையையும், முறையின் இட்டு - முறையாகப் பெய்து, எண் நெயால் - நன்கு மதிக்கப்படுகின்ற நெய்யைக்கொண்டு ஓமச்சடங்கியற்றினுன்.

சமிதை: வடசொல். காரி எள் - கறுத்த எள்; வெள் எள்ளின் வேறுபடுத்தக் காரி எள் எனப்பட்டது. காரி - கருமை; வாசுதேவன் கருநிறத்தினன் ஆகலின், 'செங்கட் காரி' எனப் படுவன்; (பரிபா. 3, 81). கரிய வெள்ளாடு: முரண், 'காராட்டை வெள்ளாடு என்பது மங்கல வழக்கு. தசை: எழுவகை யுடற்ருதுக்களுள் ஒன்று; 'தசைப் பொதி கழித்திங்குன்பால், ஆங்கு நின் தாங்கள் போற்றும் பேய்வடிவு' (பெரிய பு. காரைக்கால். 49); எண்நெயால் வேட்டான்: எண்நெய்; எண்ணெயுமாம். எண்ணெயும் அபிடேகம் முதலியவற்றிற் குரித்தாதல் காண்க. எண்: எள்; வேட்டல்: விரும்பிச் செய்யும் யாகம் முதலியன.

பி - ம். 1. அமைத்தனர்; அளவில்
2. தூவினர்; சொரிந்தார்
3. கொம்பர்; பல்லெழும்; ஆட்டொடுங்;
4. வேட்டார்.

## நல்லகுறிகண்டு தொடுக்க இந்திரசித்து வானத்தெழுதல்

2540. வலஞ்சு ழித்துவந் தெழுந்தெரி
நறுவெறி வயங்கி
நலஞ்சு ரந்தன பெருங்குறி
முறைமையி னல்கக்
குலஞ்சு ரந்தெழு கொடுமையான்
முறையினிற் கொண்டே
நிலஞ்சு ரந்தெழு வென்றியென்
றும்பரி னிமிர்ந்தான்.

எரி - யாகாக்கினியானது, நறு வெறி வயங்கி - நறுமணம் விளங்கப் பெற்று, வலம் சுழித்து வந்து எழுந்து - வலதுபுறமாகச் சுழன்று வந்து நிமிர்ந்து; நலம் சுரந்தன பெருகுறி - நன்மை தருவனவான பெரிய குறிப்பிணை, முறைமையின் நல்க - முறையாக வுணர்த்த, குலம் சுரந்து எழு - (இராக்கதர்) குலத்தில் சுரந்து தோன்றுகின்ற, கொடுமையான் - கொடுமைகட்கெல்லாம் நிலைக் களமான இந்திரசித்து, வென்றி - வெற்றியானது, நிலம் சுரந்து எழும் - போர்க்களத்தினின்று தோன்றும் என்று, முறையினில் கொண்டே - முறைமையால் உளத்திற் கொண்டு, (அயன் படை தொடுக்குமாறு), உம்பரின் நிமிர்ந்தான் - வானத்து உயர்ந்து நின்றான்.

யாகத்தில் தீயானது வலம் சுழித்து எழுந்தால் நல்ல சகுனம் என்பர். 'உடுவையா னறுநெ யார்த்தி, வாக்கிட வாா மாந்தி வலஞ்சுழித் தகடுவீங்கி' (திருவிளை. திருமணப். 184); தீயில் பன்னீர் நறுமலர் முதலியனவும் பெய்தலின் நறுவெறியெனப் பட்டது. சுரந்தெழு கொடுமை என்றதனால் அரக்கர் பரம்பரையில் தலைமுறை தலைமுறையாக எழுவது கொடுமை என்பது அறிக. 'குலஞ் சுரக்குமொழுக்கங் குடிக்கெலாம்' (பால. நாட்டு. 36); நிலம் : போர்க்களம்.

பி - ம். 1. எரியெழு முவகையை வணங்கி, எழுந்தன வுவகையின் வணங்கி
2. நலஞ்சிறந்தன, செறிந்தன ; என நின்று நல்கி
3. சுரந்தனற் ; வரன்முறை கொண்ட, நிறையினிற் கொண்டான்
4. சுரந்துயர், சுரந்தெழு.

## இராவணி எவரும் காணுதவாறு மாயையால் மறைந்திருத்தல்

2541. விசும்பு போயினன் மாயையின் பெருமையான் மேலைப்
பசும்பொ னுட்டவர் நாட்டமு முள்ளமும் படரா
வசும்பு விண்ணிடை யடங்கினன் முனிவரும் மறியார்
தசும்பு நுண்ணெடுங் கோளொடு காலமுஞ் சார.

மாயையின் பெருமையான் - மாயையின் மகத்துவத்தால் விசும்பு போயினன் - (இந்திரசித்து) ஆகாயத்திற் சென்றவனாய், தசும்பு நுண்நெடு கோளொடு - கும்பராசிக்குடைய சனிபகவான், இலக்குவனுடைய ஜன்ம நக்ஷத்திரமான ஆயில்யத்திற்குரிய சந்திர ராசியில், நெடுகோளொடு - நீண்ட கேது என்னும் கிரகத்துடன்கூட, காலமும் சார - காலமும் உடன்சேர, மேலை பசும்பொன் நாட்டவர் நாட்டமும் உள்ளமும் படரா - மேலைப் பசும் பொன்னுட்டிருப்பவரான தேவர்களின் கண்ணும் மனமும் செல்ல வியலாத, அசும்புவிண் இடை - கலங்கிய நீர்த்திவலையை யுடைய வானத்திடை, அடங்கினன் - ஒடுங்கி நின்ருன் ; (அதனை) முனிவரும் அறியாதவராயினர்.

மாயையின் பெருமையான் : இந்திரசித்து. நாட்டம் : கண் 'நாட்டமிரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டியுரைக்கும் குறிப்புரையாகும்' (தொல்). 'நஞ்சிடை யமிழ்தங் கூட்டி நாட்டங்களான வென்ன' (பால. கோலங்காண். 15); அசும்பு : கலங்கிய நீர்த்துளி. முனிவரும் : உம்மை உயர்வு சிறப்பு; முக்காலமும் உணரவல்ல இருடிகளும் என்பது குறிப்பு. தசும்பு குடம் ; இங்குக் கும்பராசியைமுதற்கண் குறித்து, அந்த இராசிக்குடையவனுன சனிக்கோளையும் குறித்து நின்றது ; இந்திரசித்து அரக்கன் ஆதலினுலும் அவன் ஜாதகம் பாவக் கிரகங்கள் வலுத்த தொன்ருதலினுலும், கும்ப ராசிக்குரிய சனி வலுத்தது என்பது காட்டத், தசும்பு நுண்ணெடுங் கோளொடு எனப்பட்டது எனினுமாம்.

இங்குக் கோளும் காலமும் என்று அடைமொழியின்றிக் கூறினர் கம்ப நாடர். நல்ல காலமா தீய காலமா என விதக்காமல் பொதுப்படக் காலம் என்ருர். கதைத் தொடர்பால் இப்பொழுது

அவன் மாயை சிறிது பலித்து நின்ற போதிலும். அடுத்துவரும் மருத்துமலை கொணர்தல் முதலிய நிகழ்ச்சிகளால், அவனுக்கு வீழ்ச்சிக் காலம் தொடங்குவது காணலாம்; எனவே தீர்க்கதரிசியாகிய கம்பநாடர், காலம் என்றே சொல்லியமைந்தார். இங்குத் தசும்பு என்பது ததும்பு என்ற சொல் சகரம் பெற்று வந்ததென்று கூறி, அதற்கேற்பப் பொருள் செய்வர் ஒரு சாரார்; எனினும் ஏனைய மூன்றடிகளினும் சகரவுகரமே இருத்தல் காண்க.

இனி, தசும்பின் நுண்ணெடுங் கோளொடு காலமும் சார என்றது; இளைய பெருமாள் திருவவதரித்த ஆயிலியத்துக்கு அட்டமராசியான கும்பத்துக்குடைய சனிக்கோள் அந்த ஆயிலியத்திலே வந்து கேதுவுடன் கூடுகிற வேளையை எதிர்பார்த்திருந்தான். இங்ஙனம் ஜன்ம ராசியில் அட்டமத்துச்சனி வந்து கூடுவது கெட்ட காலம் என்பர். சந்திரனிருக்கும் இராசியில் சனிக்கோள் நிற்பது ஜன்மச் சனி என்பர். மற்றும், தசும்பு: கும்பராசிக்குரிய சனி. இந்தச் சனிக்கோள் அதற்கு மாரகத் தானமும் பகை வீடுமாகிய சிங்கராசியில் நெடுங்கோளெனப்படும் கேதுவினுடன் கூடிக், கெட்டகாலமும் உடன் வந்ததாக என்று கூறலும் ஒன்று. இது இந்திரசித்துக்கும் பொருந்தாத காலம் என்பது, அடுத்து அவன் மரணம் நிகழவிருப்பதால் உணரலாம். மகத்துச்சனி கொடியது என்று நூல்கள் கூறும். எந்த ராசிக்கும் ஆயுட்டானமாகிய எட்டாவது இடத்திற்கு விரயத்தானமான ஏழாமிடம் மாரகத்தானம் என்பர். மாரகம்: மரணம். அசும்பு விண்: ஊற்றொழுகு மேகம்.

## மகோதரனது மாயப்போர்

2542. அனைய னின்றன னவ்வழி மகோதர னறிந்தோர்
வினைய மெண்ணின னிந்திர வேடத்தை மேவித்
துனைவ லத்தயி ராபதக் களிற்றின்மேற் றோன்றி
முனைவர் வானவ ரவரொடும் போர்செய மூண்டான்.

அனையன் - அந்த இராவணி, (விண்ணில் ஒடுங்கியவனாய்), நின்றனன் - நின்றான்; அவ்வழி - அப்போது, மகோதரன் - மகோதரன், அறிந்து - ஆராய்ந்து, ஓர் - ஒரு, வினையம் எண்ணினன் -

ஒரு மாயச் செயலைச் செய்ய நினைத்தான்; (நினைத்தவண்ணம்), இந்திர வேடத்தை மேவி - இந்திரனுடைய வேடம் பூண்டு. துனை வலத்து - வேகமும் வலிமையும் கொண்ட, அயிராபதம் களிற்றின் மேல் தோன்றி - ஐராவதவேழத்தின் மேல் தோன்றி, முனிவர் வானவர் அவரொடும் போர்செய மூண்டான் - முனிவர் விண்ணவர் என்ற இவர்களோடும் போர்புரிய முனைந்தெழுந்தான்.

மகோதரன்: யுத்த. 1244; மற்றும்: யுத்த. 35-39: 493, 903. 1244-1251. உரைக்குறிப்புக் காண்க. அரக்கர்கள் காம ரூபிகள் ஆகலின், மகோதரன் இந்திரவேடம் தரித்ததாகக் கூறப்பட்டது. வினையம்: 'வினையமீதல்லதில்லை' (ஆரணிய. 274); ஐராவதம்: இந்திரனுக்குரிய வெள்ளை யானை, 'வரை சிறகரிந்து வெள்ளிக், குன்றிடை நீலக் கொண்மூவமர்ந்தென மதத்தின் குன்றின், நின்ற வனளித்த மைந்தன் மகன்' (யுத்த. மூலபல. 55); அயிராவண மேருதானேறேறி அமரர்நா டாளாதே யாரூராண்ட. அயிரா வணமே என் அம்மானே' (தேவா. 712: 1); 'பிறைக்கோட் டயிராபதம்' (மீனுட்சிபிள்ளை. நீராடல். 7); மாயையினுல் தான் இந்திரனுகவும், தன் வாகனம் ஐராவதமாகவும், தன் பரிவாரங்கள் முனிவராகவும் வானவராகவும் வந்தது, மாயையின் வன்மையால் என்க.

ப - ம். 1. நின்றவன்

2. மேவா

3. துனைமதத்து; ஐராவதக் கழுத்தின்மேல்; தோன்ற

4. வானவரெவரொடும், வானவரொடும் போயதிசயமுற்றுர். 166

2543. அரக்கர் மானிடர் குரங்கெனு மவையெலர மல்ல
உருக்களி யாவுள வுயிரினி யுலகத்தி னுழல்வ
தருக்கு போர்க்குடன் வந்துள வாமெனச் சமைத்தான்
வெருக்கொ ளப்பெருங் கவிப்படை குலைந்தது விலங்கி.

அரக்கர் மானிடர் குரங்கு எனும் அவை எலாம் அல்ல - அரக்கரும் மானுடரும் குரங்கும் என்ற அவற்றுடன் எல்லாம் அல்ல; இப்போது உலகத்தின் உழல்வ - உலகத்தில் நடமாடு வனவாய், உருக்கள் உயிர் இனி யாஉள - உருவத்தைப் படைத்த

பிராணிகள் எவையுள்ளன? அவை எலாம் - அவையனைத்தும், தருக்கு போர்க்கு உடன் வந்தன ஆம் என - செருக்குடன் புரி கின்ற போர்க்கு உடன் வந்துள்ளனவாம் என்று கருதுமாறு, சமைத்தான் - மாயைகளைச் செய்தான், (அதுகண்டு) பெருகவி படை வெருகொள - பெரிய குரக்குச் சேனை அச்சம் கொண்டத னால், விலங்கி குலைந்தது - பின்வாங்கி நிலைகெட்டது.

தருக்கு: செருக்கு. 'தருக்கென்று மவிந்த விடை' (குசேலோ. எ : 57); சமைத்தல்: மாயை புரிதல். வெருக்கொள: 'வெருக் கொண்டு பதைபதைத்து' (குசேலோ. 3 : 57).

பி - ம். 1. இவையெலாமல்லா

2. யாவுள யாவையு முலகத்தினுழல்வ, யாவுள வுயிரென வுலகினு முலவத், ஆயுள யாவையு முலகத்தினுலவாத்.

3. தருக்கும்; வந்துளதாமென, வந்துளவாமென; சார்ந்தான்

4. வெருக்கொளாப்; விளங்கி, வெருவி. 167

## இந்திராதிகள் தம்மீது எதிர்த்துவரக் காரணம் என்? என்று வாநரர் திகைத்தல்

2544. கோடு நான்குடைப் பானிறக் குன்றமேற் கொண்டான்
ஆட லிந்திர னல்லவ ரியாவரு மமரர்
சேடர் சிந்தனை முனிவர்க ளமர்பொரச் சீறி
ஊடு வந்துற்ற தென்கொலோ நிபமென வுலைந்தார்.

'நான்கு கோடு உடை - நான்கு தந்தங்களையுடைய, பால் நிறம் குன்றம் மேல் கொண்டான் - (ஐராவதம்) என்ற பால் போன்ற நிறம் செறிந்த யானையின் மீது ஏறிச் செலுத்துபவன், ஆடல் இந்திரன் - வலிமை வாய்ந்த இந்திரன்; அல்லவர் அமரர் - ஏனையோர் (பரிவாரமாக வந்தவர்) எல்லோரும் தேவர் கள்; சேடர் - எஞ்சியவர், சிந்தனை முனிவர்கள் - கடவுளைத் தியானிக்கின்ற இருடிகள்; (இவர் அனைவரும்), பொர - போர் புரியுமாறு, சீறி - வெகுண்டு, ஊடு - இப்போரினிடையே, வந்து உற்றது நிபம் என் கொலோ - வந்து அடைந்ததற்குக் காரணம் என்னவோ', என உலைந்தார் - என மனம் வருந்தினர் (தேவர்கள்).

ஐராவதம் என்ற, இந்திரன் யானைக்கு நான்கு தந்தங்கள். அதன் நிறம் வெள்ளை. கோடு நான்குடைக் குன்றம்: வெளிப் படை, 'வருங்குன்றம்', பாயாவேங்கை, பறவாக் கொக்குப்போல. ஆடல்: வலிமை, அடல் ஆடல் என நீண்டது செய்யுள் விகாரம். சேடர்: எஞ்சியவர். சிந்தனை முனிவர்கள்: மனனசீலர்; அனை வரும் தேவர்களே; அவ்வாறிருக்கத் தம்முடன் பொருதற்கு வரக்காரணம் என்ன என்று திகைத்தார் அமரர் 'நிபம்,; காரணம்.

பி - ம். 1. பாசடுங் குன்றின்மேல், பானிறக் கனிற்றின்மேல்

4. என்கொலோ வரம். 168

## முனிவர் முதலியோர் சினந்துவரக் காரணம் என்ன என்று இலக்குவன் அநுமனை வினவுதல்

2545. அனுமன் வாண்முக நோக்கின னாழியை யகற்றித்
தனுவ லங்கொண்ட தாமரைக் கண்ணவன் றம்பி
முனிவர் வானவர் முனிந்துவந் தெய்தயா முயன்ற
துனிக ளென்கொலோ சொல்லுதி விரைந்தெனச்
[சொன்னான்.

ஆழியை அகற்றி - சக்கரப் படையை விடுத்து, தனுவலம் கொண்ட - வில்லினை வலது கையிற் கொண்ட, தாமரைக் கண்ணவன் தம்பி - செந்தாமரையொத்த நேத்திரங்களையுடையவ னான இராமபிரான் இளவலான இலக்குவன், அநுமன் வாள் முகம் நோக்கினன் - மாருதியினுடைய ஒளி சிறந்த முகத்தைக் கண்ணுற்று, 'முனிவர் வானவர் முனிந்து வந்து எய்த - இருடி களும் தேவர்களும் சினந்து நம்மேல் பொருதற்கு வர, யாம் முயன்ற - யாம் முயற்சியுடன் புரிந்த, துனிகள் என் கொலோ - தீமைகள் யாவை, விரைந்து சொல்லுதி - தாமதமின்றிப் பகர் வாயாக', என சொன்னான் - என்று வினவினான், கொல்: ஓ. அசைநிலை: கொல்: ஐயமுமாம்.

போரிடத்தும் கடுமையின்றி ஒளியுடன் கூடிய முகம் என்பார் 'வாண்முகம்' என்றார் 'வண்டுழாயலங்கலாய் வஞ்சர் வாண்முகம். (யுத்த. 393); ஆழியை அகற்றித் தனுவலங் கொண்ட தாமரைக்

கண்ணவன்; திருமால் அவதாரமான இராமபிரான். (யுத்த. 757 758). இராமபிரானைத் திருமாலாகவே கம்ப நாடர் பல இடங்களில் குறிப்பர். பால. திருவவ: 118; 137; கையடைப்: 16; தாடகை: 45; மிதிலைக். 154; கோலங்காண். 32; குகப். 65; விராதன். 55, 57; கவந்தன். 42, 43; கிட்கிந்தா. வாலி. 132, 71, 148; சுந்தர. காட்சி. 66, பிணிவீட்டு. 80; பிரமாத்திர. 228 முதலியன காண்க. அண்ணமலைப் பல்கலைக் கழகம் பால காண்டம் முதற் பகுதியில் எதிர்கொள்படலத்துக்கு நான் எழுதியுள்ள முகவுரை இங்குக் காணத்தகும். வாளாது இலக்குவன் என்றமையாது இன்னான் தம்பி என்று குறித்தது, திருமாலின் அமிசமான இளைய கோவுக்கும் அவன் தமையனுடைய ஆற்றல் உண்டென்று குறித்தற்காகும். துனிகள் - வருத்தம் தரும் செயல்கள்; 'துனியுழந்தயர்வதென்னோ' யுத்த. 1249)

பி - ம். 1. தனுவிடங்

3. வந்தேயமர், வந்தெய்தமர்

4. துனியிது, புணர்த்தென. 169

இதன்பின் ஒரு பாடல் என்பது ஐயரவர்கள் குறிப்பு.

## இந்நிலையில் இந்திரசித்து இலக்குவன்மீது அயன்படையை விடுத்தல்

2546. இன்ன காலையி னிலக்குவன்
மேனிமே லெய்தான்
முன்னை நான்முகன் படைக்கல
மிமைப்பதன் முன்னம்
பொன்னின் மால்வரைக் குரீஇயின
மொய்ப்பன போலப்
பன்ன லாந்தர மல்லன
சுடர்க்கணை பாய்ந்த.

இன்னகாலையின் - (இவ்வாறு வினவிக்கொண்டிருக்கும் போழ்தில்), முன்னை நான்முகன் படைகலம் - பழமையான அயன் அத்திரத்தை, இமைப்பதன் முன்னம் - ஒரு மாத்திரைக் குள்ளாக, இலக்குவன் மேனிமேல் எய்தான் - இளைய கோவின் உடல்மீது

விடுத்தான்; பொன்னின் மால்வரை குரீஇ இனம் மொய்ப்பன போல - பொன் மயமான பெரிய மலையிலே குருவிக் கூட்டங்கள் மொய்ப்பன போல, பன்னலாம் தரம் அல்லன - சொல்லத் தரமல்லாதனவான, சுடர்கணை - ஒளி விடுகின்ற சரங்கள், பாய்ந்த - (அவ்விலக்குவன் உடலில்) விரைந்து புக்கன-

முன்னை: முன்னுள்; 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே' (திருவெம்பாவை. 9); இமைப்பதன் முன்னம்: ஒரு நாழிகையளவிற்குள்ளாக; 'கண்ணிமை கைந் நொடியவ்வே மாத்திரை' (தொல். எழுத். 7); பொன்னின் மால் வரை: மேருமலை யெனினுமாம். மால்வரை குரீ இனம் மொய்த்தல், இலக்குவனுடைய பொன் மலைபோன்ற மேனியில் அம்புகள் தைத்தற்குச் சிறந்த உவமை. 'ஆயோ னெடுங் குருவிக்குல மென்னுஞ் சில வம்பால்' (யுத்த. நிகும்பலை. 106); (ஒப்பு) 'கை போய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி யெய்போற் கிடந்தா னென்னேறு' (புறப். வெ. மா. 176);

பி - ம். 2. முன்னம்

3. குரீ இ யின மொய்த்தது போலப், குருசிலை மேயது போலப்

4. சுடு, சுடுங். 170

## இலக்குவன் அயன்படையால் அயர்தல்

2547. கோடி கோடிநூ றாயிரங் கொடுங்கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச் சுற்றின மூழ்க
ஊடு செய்வதொன் றுணர்ந்தில னுணர்வுபுக் கொடுங்க
ஆடன் மாகரி சேவக மமைந்தென வயர்ந்தான்.

கோடி கோடி நூறாயிரம் கொடு கணை குழாங்கள் - கோடி லக்ஷம் கொடிய வாளிக்குவைகள், மேனியை முற்று மூடி சுற்றின மூழ்க - உடலை முழுவதும் மூடிச் சூழ்ந்தனவாய் மூழ்க, ஊடு - இடையில், செய்வது ஒன்று உணர்ந்திலன் - (இலக்குவன்) புரிவது இன்னது என்பதைக்குறித்து ஒன்றும் தெளியமாட்டாதவனாய், உணர்வு புக்கு ஒடுங்க - தன் அறிவுபோய் ஒடுங்க, ஆடல் மா கரி - வலிய பெரிய யானை, சேவகம் அமைந்தென அயர்ந்தான் - படுக்கையிடத்தில் அடங்கினாற்போலக் களைப்புற்றிருந்தான்,

இரண்டாவதடி, அயன்படை இலக்குவனைப் பலவகையிலும் சூழ்ந்து பிணித்ததைக் குறிக்கும். ஊடு - இடையே. ஆடன் மா கரி - வலிய பெரிய வேழம்; அடல் முதனீண்டது செய்யுள் விகாரம். சேவகம் - யானை துயிலிடம்; 'தறிபொரு களிநல்யானை சேவகம் தள்ளி யோங்க' (யுத்த. களியாட்டு. 19); 'சிறுகண் யானையி னினஞ்சேர்ந்து சேவகங்கொள' (சீவக. 1897); 'சேவகம மைந்த சிறுகட்கரி' (பால. தைலமாட்டு. 12); 'யானை, சேவகம் சேர்ந்த தென்னச் செறிமல ரமளி சேர்ந்தான்' (யுத்த. 1219). அமைந்தது என என்பது அமைந்தென எனத் தொகுத்தது.

பி - ம். 1. சுடுகணை, கொடுஞ்சுடர்க் கணைகள்
3. உணர்வுகெட்டொதுங்க
4. ஆடல் வாம்பரி; அசைந்தான். 171

### அநுமன் அயன்கணையால் தளர்ந்து வீழ்தல்

2548. அனும னிந்திரன் வந்தவ
னென்கொலீ தமைந்தான்
இனிய னெற்றுவன் களிற்றினோ
டெடுத்தென வெழுந்தான்
தனுவி னுயிரங் கோடிவெங்
கடுங்கணை தைக்க
நினைவுஞ் செய்கையு மறந்துபோய்
நெடுநிலஞ் சேர்ந்தான்.

அநுமன் - அநுமனானவன், 'இனியன் இந்திரன் வந்தவன் - (நமக்கு) இனியனான இந்திரன் இப்போது வந்தவனாகி, ஈது என்கொல் அமைந்தான் - (நம்முடன் பொருதலாகிய) இச்செயலை ஏன் மேற்கொண்டனன்; (என்று எண்ணி, யாதேனும் ஆகுக அந்த இந்திரனை), களிற்றினோடு எடுத்து எற்றுவன் - யானையோடு தூக்கி எறிவேன்', என எழுந்தான் - என்று கிளம்பினான்; (அப்போது தன்), தனுவில் - உடலில், ஆயிரம் கோடி வெம் கடு கணை தைக்க - ஆயிரம்கோடி கொடிய கடிய சரங்கள் பதிந்ததனால், நினைவும் செய்கையும் மறந்துபோய் - எண்ணமும் செயலும் மறந்தொழிய, நெடு நிலம் சேர்ந்தான் - அகன்ற தரையில் விழுந்தான்.

ஈது: இது என்ற சுட்டு நீண்டது. தனு-உடல்; 'தனு கரண புவன போகம்' என்றது காண்க, வெங்கடும்: வெம்மையும் வேகமும். நினைந்து தான் செயலாற்ற வேண்டுமாகலின் நினைவும் செய்கையும் எனப்பட்டது; 'கைகள் தலை புக்கன கருத்துளதும் எல்லாம், தெய்வமென வுற்றவுடல் சிந்தை வசமன்றோ' (பால. கோலங். 34) என்றது காண்க.

பி-ம். 1. அமைத்தான்

2. இனிதினெற்றுவான் களிந்றினே டெடுத்தென, இனியவன் களிற்றின் னெடு மெடுக்கென

3. கணை பல தைப்ப

4. உற்ருன், 172

## சுக்கிரீவன் அயன்படையால் நிலத்து விழுதல்

2549. அருக்கன் மாமக னடகக் குன்றமொன் றலர்ந்த
முருக்கின் கானக மாமெனக் குருதிநீர் முடுகத்
தருக்கி வெஞ்சரந் தலைத்தலை மயங்கின தைக்க
உருக்கு செம்பன கண்ணின னெடுநில முற்ருன்.

அருக்கன் மா மகன்-சூரியனுடைய பெரும் புதல்வனை சுக்கிரீவன், ஆடகம் குன்றம் ஒன்று-பொன்மயமான மலை ஒன்றில், அலர்ந்த-மலர்ந்த, முருக்கின் கானகம் ஆம் என-பலாசவனம் என்னுமாறு, குருதிநீர் முடுக-உதிரம் விரைந்தெழ, தருக்கி-செருக்கி, வெம் சரம்-கொடிய வாளிகள், தலை தலை-உடலின் இடந்தொறும், மயங்கின தைக்க-மாறிமாறிப் பதிய, உருக்கு செம்பு அன கண்ணினன்-உருக்கிய செம்பு ஒத்த விழிகளை யுடையவனாய், நெடு நிலம் உற்ருன்-பரந்த தரையை அடைந்தான்.

ஆடகம்-உயர்ந்த பொன்; 'ஆடகத் தோளைநோக்கி நொந்துநொந் தழுங்கி நைவர்' (யுத்த. 2130); 'ஆடகத் தசும்பு' (ஆரணிய. 414); 'ஆடக மாடங் கடந்தறியாதவென் ஆரணங்கே' (இறையனர். கள). முருக்கு: பலாசமரம்; இதனைக் கலியாண முருக்க மரம் என்பர்; மகளிர் அதரத்துக்கு இதன் மலரை உவமிப்பர். கண், சினத்தாலும் மாட்டாமையாலும் உருக்கிய

செம்பு போன்றது எனப்பட்டது. 'முருக்கி னுண்மலர் முகை விரிந்தாலன முரட்கண்' (யுத்த. 1453); (ஒப்பு): 'எருவை, யுருக்கினு லன்ன குருதிநீ ராறுக ளொதுங்க' (யுத்த. 1453); 'உலைக்குவட் டுருகு செம்பொத் துதிரநீர் உமிழுங் கண்ணுள்' (யுத்த. 1927). மலர்ந்த முள் முருக்க மரம் உதிரம் சொரியும் உடற்குவமை.

பி - ம் 1. குன்றினில்

2. கானகமொத்தனவாமென ; முழங்க

3. தருக்கின் ; மயக்குற ; தைப்ப

4. செம்பெனக். 173

## அயன்படையால் வாநர வீரர்கள் மரித்தல்

2550. அங்க தன்பதி னுயிர மயிற்கணை யழுந்தச்
சிங்க வேறிடி யுண்டென நெடுநிலஞ் சேர்ந்தான்
சங்க மேறிய பெரும்புகழ்ச் சாம்பனுஞ் சாய்ந்தான்
துங்க மார்பையுந் தோளையும் தடிக்கணை துளைக்க.

அங்கதன் - அங்கதன் என்ற வாநரவீரன், (தன் உடலின்மீது) பதினுயிரம் அயில் கணை அழுந்த - பதினுயிரம் கூரிய அம்புகள் பதிந்ததனுல், சிங்க ஏறு இடி உண்டென - ஆண் சிங்கம் (தன்மீது) இடிவிழப் பெற்றதுபோல, நெடு நிலம் சேர்ந்தான் - பெரிய நிலத்திலே வீழ்ந்தான்; சங்கம் ஏறிய பெரு புகழ் சாம்பனும் - வீரர் குழுவில் உயர்ந்து விளங்கிய பெரிய புகழினனுன சாம்பவனும், துங்கம் மார்பையும் தோளையும் தடி கணை துளைக்க சாய்ந்தான் - உயர்ந்த மார்பையும் தோளையும் கனத்த அம்புகள் துளைக்க வீழ்ந்து கிடந்தான்.

சங்கம் ஏறிய பெரும்புகழ் என்ற தொடர், வீரர்களுள் வீரனுன் சாம்பனுடைய பெருமையைக் குறித்தது. தடி கணை: மின்னல்போன்று விரைந்து தாக்கும் அம்பு எனினுமாம்.

பி - ம். 1. நெடியதாயிரம்

4. துளைப்ப, தொலைப்ப, தொலைக்க. 174

2551. நீல னுயிரம் வடிக்கணை நிறம்புக்கு நெருங்கக்
கால னூர்முகங் கண்டன னிடபன்விண் கலந்தான்
ஆலமேயன்ன பகழியாற் பனசனு மயர்ந்தான்
கோலின் மேவிய கூற்றினுற் குமுதனுங் குலைந்தான்.

நீலன் - நீலன் என்னும் வானர வீரன், ஆயிரம் வடி கணை நிறம் புக்கு நெருங்க - ஆயிரம் கூரிய வாளிகள் மார்பிற் பாய்ந்து அடர, காலனூர் முகம் கண்டனன் - யமனூர் முகத்தைப் பார்த்தான் (இறந்தான்); இடபன் விண் கலந்தான் - இடபனும் சுவர்க்கம் புக்கான்; பனசனும் - பனசனும், ஆலமே அன்ன பகழியால் அயர்ந்தான் - விடம்போன்ற அம்பினுல் ஓய்ந்தான்; குமுதனும் - குமுதனும், கோலின் மேவிய கூற்றினுல் குலைந்தான் - அம்பினிடத்து விரும்பியமர்ந்த யமனுல் உயிர் நீங்கினுன்.

நீலன்: யுத்த. 1025 உரைக்குறிப்புக் காண்க. நிறம் - மார்பு; 'நிமிர்ந்த செஞ்சரம் நிறந்தொறும் படுதலும்' (யுத்த. 553). காலனூர் முகம் காணுதல் - இறத்தல்; பரியாயம். விண் கலந்தான்: பரியாயவணி. ஆலம் - விடம்; 'ஆலமன்னவர்க் கல்லையெற் கல்லையால்; (சுந்தர. 619). கோலின் மேவிய கூற்று என்றது, கோல் அல்லது அம்பினை விழைந்து நின்ற கூற்று என்க; அம்பே கூற்ருயினது என்றவாறு. 'அவ்வேலே' அவன் காதற், கொம்பிற்கு மாயிற்றே கூற்று' (பு. வெ. மா. காஞ்சி. 23); குமுதனும்: உம்மை இறந்தது தழீஇயது. கோல் - அம்பு; 'ஐங்கோலைக் கொன்று கைக்கொண்ட முக்கோலன்' (திருவேங். கலம். காப்பு. 3).

பி - ம். 1. நேடும்
3. பனசனுமசைந்தான்
4. கோலமேனி மால்வரையன்ன, கோலின் மேனியன் கூற்றினுல்; குறைந்தான்.

175

2552. வேலை தட்டவ னுயிரம் பகழியால் வீழ்ந்தான்
வாலி நேர்வலி மைந்தனுந் தம்பியு மடிந்தார்
கால வெந்தொழிற் கவயனும் வானகங் கண்டான்
மாலை வாளியிற் கேசரி மண்ணிடை மறைந்தான்.

வேலை தட்டவன் - (மலைகொண்டு) சமுத்திரத்தை அணை கட்டிய நளன், ஆயிரம் பகழியால் வீழ்ந்தான் - ஆயிரம் அம்புகள் தைத்து இறந்தான்; வாலி நேர் வலி மயிந்தனும் - வாலியை ஒத்த வன்மைவாய்ந்த மயிந்தனும், தம்பியும் - அவன் தம்பியான துமிந்தனும், மடிந்தார் - இறந்துபட்டனர்; காலன் வெம் தொழில் கவயனும் வானகம் கண்டான் - யமனையொத்த கொடிய கொலைத் தொழிலில் வல்ல கவயனும் விண்ணுலகைக் கண்டனன்; (இறந்தான்), கேசரி - கேசரி என்பவன், மாலை வாளியில் மண் இடை மறைந்தான் - பல மலர்களால் பிணைத்த மாலைபோன்று தொடுக்கப்பட்ட அம்புகளால் உயிரொழிந்து மறைந்தான்.

தட்டவன்: 'தட்டோரம்ம விவண் தட்டோரே' (புறநா. 18). வேலை கட்டினோன் - நளன்; யுத்த. 661, 662, 825 பார்க்க. கால வெந்தொழில்: கொன்று குவிக்கும் தொழில். வானகங் கண்டான்: பரியாயம். மாலை வாளி: தொடுக்கப்பெற்ற மலர்போன்று இடைவிடாது தொடுக்கப்பட்ட அம்பு. மயிந்தன்: யுத்த. 345, 654.

பி-ம். 1. கட்டவன், கட்டினோன்
2. நேர்வரும்; துமிந்தனும்; மாண்டார்
4. மடிந்தான். 176

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

கனக னுயிரங் கணைபட வானிடைக் கலந்தான்
அனக னுயின சங்கனு மக்கணத் தயர்ந்தான்
முனையின் வாளியிற் சதவலி என்பவன் முடிந்தான்
புனையு மம்பினிற் றம்பனும் பொருப்பெனப் புரண்டான்.

2553. விந்த மன்னதோட் சதவலி சுசேடணன் வினதன்
கெந்த மாதன னிடும்பன்வன் றதிமுகன் கிளர
உந்து வார்கணை கோடிதம் முடலமுற் றுருவிப்பத்
தந்த நல்லுணர் வொடுங்கினர் மண்ணுறச் சாய்ந்தார்.

விந்தம் அன்ன தோள் சதவலி - விந்திய மலைபோன்று (உயர்ந்து அகன்ற) தோளினையுடைய சதவலியும், சுசேடணன் -

சுசேடணனும், வினதன் - வினதனும், கெந்தமாதனன் - கெந்தமாதனனும், இடும்பன் - இடும்பனும், வல் ததிமுகன் - வலிய ததிமுகனும், கிளர - மேல் எழுமாறு, உந்துவார் கோடி கணை - செலுத்தப்படுகின்ற நீண்ட கோடிக்கணக்கான வாளிகள், தம் உடலம் உற்று ஒளிப்ப - தமது உடலில் பொருந்தி மறைய, தம் தம் நல் உணர்வு ஒடுங்கினர் - தங்கள் தங்களுடைய நல்ல உணர்ச்சி அடங்கப் பெற்றவராய், மண் உற சாய்ந்தார் - மண்ணில் பொருந்துமாறு வீழ்ந்தனர்.

விந்தம் - விந்தியமலை; இதனை அகத்தியர் அடக்கியதாக நூல்கள் கூறும்; 'மேகநெடு மாலைதவழ் விந்தமெனும் விண்டோய், நாகமது நாகமுற நாகமென நின்றான்' (ஆரணிய. 156); நன்னெறி. 37 காண்க. சதவலி: யுத்த. 829, 2112. சுசேடணன்: கிட்கிந்தா. 690; 'சுசேடணன் தீயொடுந் தொடர்ந்தோன்' (யுத்த. 830). இடும்பன் - கரடியின் காவலன்; யுத்த. 1018. கும்பானுவையெதிர்த்தழித்தவன்: யுத்த. 1019, 1021. ததிமுகன்: யுத்த. 831. தம்தம்: தத்தம் இங்கு தந்தமென நின்றது.

பி - ம். 1. விந்தமென்னுந்; சரபனிற்
2. கிளரும்
3. துங்கவார்கணை; முற்றுந் தொலைப்ப
4. ஒடுங்கிட. 178

2554. மற்றை வீரர்க ளியாவரும் வடிக்கணை மழையால்
முற்றும் வீந்தனர் முழங்குபே ருதிரத்தின் முந்நீர்
எற்று வான்றிரைக் கடலொடும் பொருதுசென் றேற
ஒற்றை வான்கணை யாயிரங் குரங்கினை யுருட்ட.

முழங்கு பேர் உதிரத்தின் முந்நீர் - இரைக்கின்ற பெருகிய உதிரக்கடலானது, எற்று - எடுத்தெறிகின்ற, வான் திரை கடலொடும் - உயர்ந்த அலைகளையுடைய (நீர்க்) கடலோடும், பொருது சென்று ஏற - மாறுபட்டு ஓடிச்சேருமாறு, ஒற்றை - ஒப்பற்ற, வான் கணை ஆயிரம் - சிறந்த ஆயிரம் அம்புகள், குரங்கினை உருட்ட - குரங்குகளை உருளுமாறு செய்தலால், மற்றை வீரர்கள் - ஏனைய குரக்கு வீரர்கள், யாவரும் - அனைவரும், வடி

கணை மழையால் - கூரிய அம்பு மாரியால், முற்றும் வீந்தனர் - அடியோடு மரித்து விழுந்தனர்.

கணை மழை - சரமாரி. முந்நீர்: மண்ணைப் படைத்தல் காத்தல், அழித்தல் என்னும் மூன்று நீர்மையை யுடையதாகும் (சிலப். 17 அடியார்க்கு); யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீரு முடைமையால் இப்பெயர் பெற்றதென்பது சிலர் கொள்கை; புறநா. 9. முந்நீர் என்றதற்கு வரைந்துள்ள குறிப்புக் காண்க. எற்றும் திரை - எற்றுதல், எடுத்தெறிதல்; 'எற்றுந் திரையி னமிர்தை யினித்தம ரிற்செறிப்பார்' (திருக்கோ. 134)ம், எற்றுந்திரை யென்பது சினையாகி தன்பொருட்கேற்ற அடையடுத்து நின்றதோராகுபெயர். ஒற்றை - ஒப்பற்ற; 'சுடுமென் ஒற்றை யானை' (யுத்த. 176) உரைக்குறிப்புக் காண்க.

பா - ம். 1. மற்றும்
2. முற்றும் விழ்ந்தனர், இற்றவிந்தனர்
3. சென்றெற்ற, ஏறி
4. ஒற்றைவார்கணை. 176

2555. தளைத்து வைத்தது சதுமுகன் பெரும்படை தள்ளி
ஒளிக்க மற்றொரு புகலிட முணர்கில ருருமின்
வளைத்து வித்திய வாளியான் மண்ணொடு திண்ணம்
முளைப்பு டைத்தன வொத்தன வாநர முடிந்த.

சதுமுகன் பெரு படை - பிரமனுடைய பெரிய கணையானது, தள்ளி - (தரையில்) வீழச் செய்து, தளைத்து வைத்தது - பிணித்து வைத்தாற்போல் செய்துவிட்டது; ஒளிக்க - (அந்த அம்பினின்று) தம்மை மறைத்துக்கொள்வதற்கு (வாநரர்), மற்று ஒரு புகலிடம் உணர்கிலர் - பிறிதொரு புகலிடம் காணமாட்டாதவராயினர்; வளைத்து வித்திய - சூழ்ந்துகொண்டு விதையை இட்டாற் போன்று விடுத்த, உருமின் - இடியொத்த (இந்திரசித்தினது) வாளியான் - அம்புகளால், மண்ணொடு - மண்ணோடு, திண்ணம் - உறுதியாக, (அசைவற்று நிற்குமாறு), முளை புடைத்தன ஒத்தன - முளையறையப்பட்டன ஒத்து, வாநரம் முடிந்த - குரங்குகள் இறந்துபட்டன.

புகலிடம் - அடைக்கலமாகச் சென்று சாரும் இடம்; 'புக லிடம் பிறிதொன்றில்லை' (திருவாச. 5 : 62). திண்ணம் - உறுதி; 'வாழ்வாவது மாயமிது மண்ணாவது திண்ணம்'. மூளைப் புடைத்தன ஒத்தன என்பது. 'ஆட்டுத்தோல் உலர நாலு திக்கும் ஆணி யறைந்ததுபோல் வானரங்களை மலக்கிடத்திக் கைகால் அழுந்த அம்பினால் மூளையறைந்தான்' என்பது பழையவுரை.

பி - ம். 1. திசைமுகன்
2. புகலிடமில்லென
3. வளைந்து விட்டிய
4. ஒத்தன வாமென. 179

## உதிரத்திற் கிடந்த குரங்குக் கடலின் வருணனை

2556. குவளைக் கண்ணியர் வானவர் மடந்தையர் கோட்டித்
துவளப் பாரிடைக் கிடந்தனர் குருதிநீர் சுற்றித்
திவளக் கீழொடு மேல்புடை பரந்திடை செறியப்
பவளக் காடுடைப் பாற்கட லொத்ததப் பரவை.

குவளை கண்ணியர் - நீல மலர்போன்ற விழியினராகிய, வானவர் மடந்தையர் - தேவ மாதர்கள், கோட்டி துவள - தலை சாய்த்துத் துவளும்படி, (இலக்குவனும் குரக்கு வீரரும்); பார் இடை கிடந்தனர் - பூமியில் வீழ்ந்து கிடந்தனர்; (அவர்களுடைய) குருதி நீர் சுற்றி - உதிரம் சூழ்ந்து, கீழொடு மேல் புடை - கீழும் மேலும் புறத்திலும், பரந்து - பரவி, இடை திவள செறிய - எங்கும் விளங்க நெருங்குதலின், அ பரவை - அந்தக் குரங்குப் படைக்கடல், பவளம் காடு உடை பால் கடல் ஒத்தது - பவழக் கானத்தைத்தன் அகம் கொண்ட பாலாழி நிகர்த்து விளங்கிற்று.

குவளை மலர் : மகளிர் விழிகட்குவமை கூறப்படும்; 'காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும், மாணிழை கண்ணொவ்வே மென்று' (குறள். 1114); கண் கொட்டுதல்: 'ஒரு கண் சிறக் கணித்தாள் போல நகும்' (குறள். 1095); வானவர் மடந்தையர்

துவண்டது, முன்னர் அவ்வானரர் தம்மவராய் நின்றவராதலின் என்க. 'வானுளோ ரனைவரும் வானரங்களா' (பால. திருவவ. 21); என்றது காண்க. பவளக் காடுடை பாற்கடல் மிகவும் பொருத்த மான உவமை. பரவை : குரங்குப்படைக்குவமை. (ஒப்பு); 'கார்க்கடல் கமலம் பூத்த தெனப் பொலி வானை' (யுத்த. 435).

பி - ம். 1. கன்னனினை, கன்னனுடை ; கோடி.
2. கிடந்தது. 180

## வாநரர் விருந்தினராய் வந்தது கண்டு தேவர்கள் உபசரித்துப் பூமியிற் செல்லுக எனல்.

2557. விண்ணிற் சென்றது கவிக்குலப் பெரும்படை வெள்ளங்
கண்ணிற் கண்டனர் வானவர் விருந்தெனக் கலந்தார்
உண்ணிற் கும்பெருங் களிப்பின ரளவளா யுவந்தார்
மண்ணிற் செல்லுதி ரிக்கணத் தேயென வலிந்தார்.

கவிகுலம் பெருபடை வெள்ளம் விண்ணில் சென்றது - குரங்குக் கூட்டமாகிய பெரிய படை வெள்ளம், விண்ணில் சென்றது - வானுலகத்தை அடைந்தது; வானவர் கண்ணில் கண்டனர் - தேவர்கள் அவர்களை நேரில் கண்ணுற்றவராய், விருந்து என கலந்தார் - விருந்தாளிகளாக ஏற்று, நட்புக் கொண்டவராய்; உள் நிற்கும் பெரு களிப்பினர் - உள்ளத்தில் நிறைந்து நிற்கும் பெரிய மகிழ்ச்சியை உடையவராய், அளவளாய் உவந்தார் - நெஞ்சம் கலந்து களித்தவராய், இ கணத்தே - இப்போதே, (இராக்கதரைக் கொல்லுமாறு), மண்ணில் செல்லுதிர் - பூவுலகத்திற்கு போமின்கள், என வலிந்தார் - என வற்புறுத்தினர்.

விருந்து : புதுமை; இங்கு வாநரராகிய விருந்தினரைக் குறித்து நின்றது. அளவளாய்: 'அளவளாய் நட்டாலும்' (மூதுரை. 4); 'அளவளா வில்லாதான் வாழ்க்கை' (குறள். 522): சுற்றத்தோடு அளவளாவுதல்: நெஞ்சு கலப்புத் தன்னளவும் அதனளவுமுசாவுதலான் வருவதாகலின், அளவளா என்பது. ஆகுபெயர்; (பரி. உரை); தேவர்கள் இறப்பு அகால மரணம் ஆதலின், அவர்களைப் பூவுலகம் செல்லுமாறு பணித்தனர்

வானவர். இங்ஙனம் கூறியதன் கருத்தினை அடுத்த கவியிற் காண்க.

பி - ம். 2. கண்டவர்.

3. கவியினைக்; உகந்தார்,

4. எனுமனத்தார். 181

2558. பார்ப டைத்தவன் படைக்கொரு பூசனை படைத்தீர்
நீர் படக்கட வீரலீர் வரிசிலை நெடியோன்
பேர்ப டைத்தவற் கடியவர்க் கடியரும் பெறுவார்
வேர்ப டைத்தவெம் பிறவியாற் றுவக்குறு வீடு.

பார் படைத்தவன் - நில வுலகைச் சிருட்டித்தவனான - பிரமதேவனுடைய படைக்கு, ஒரு பூசனை படைத்தீர் - கணைக்கு ஒரு பூசனை ஆற்றினீர்; நீர் பட கட வீரலீர் - நீங்கள் இறந்து படற் குரியீரல்லீர்; வரிசிலை - கட்டமைந்த வில்லினனும், நெடியோன் பேர் படைத்தவற்கு - திருமால் என்னும் பேர் படைத்தவனான இராம்பிரானுடைய, அடியவற்கு அடியரும்-அடியார்க்கு அடியவரும், வேர்படைத்த - வேர் ஊன்றிய, வெம் பிறவியால் - கொடிய பிறவியினாலே நேரும், துவக்க ஒணு வீடு - கட்டுப்படுத லில்லாத விடுதலையை, பெறுவார் - அடைபவராயினர்.

பார் படைத்தவன்: பிரமன். பூசனை படைத்தது: அவன் பெயர் பூண்ட கணையைக் கௌரவித்து அதற்குட்பட்டிருந்தது. இராமபிரானுக்கு அடியராக, அவன் காரிய துரந்தரராகப் பூவுலகம் போந்து சேவையாற்றினமையின், அவர்கட்குப் பிறப்பிறப்புக் கிடையாது என்று கூறப்பெற்றது. வரி சிலை நெடியோன்: திருமால்; அவன் பேர்படைத்தவன் இராமபிரான். அவன் அடியார், பிறவியால் துவக்கொணு வீடு அடைவார் என்றது. 'சன்மமு மரணமின்றித் தீருமே, இம்மையே இராமவென் றிரண் டெழுத்தினால்' (பால. பாயி. 11); என்றது காண்க. வேர் படைத்த வெம்பிறவி என்றது எளிதில் போக்கற்கரிய பவப்பிணி என்றறிவதற்கு. நெடியோன் திருமால்; 'நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்' (சிலப் 8; 1); 'நின்று தாழ்த்தொரு பயனிலை யென்றலு நெடியோன்' (ஆரணிய. 974): துவக்க ஒணு என்பது அகர ஈறு குறைந்து துவக்கொணு

என்றுயது ; துவக்குதல் : பிணித்தல் ; இங்குத் துவக்கு என்றது பிரமன் கணையால் உண்டாய பிணிப்பென்று கொண்டு, பிறந்து நன்மை தீமைகளைத் துய்க்கவேண்டிய நிலையில், நிகழ்ந்ததாகிய இதினின்று அவிழப்பெறுதல் என்றும் பொருள் கொள்ளலாம். இது பின் மருத்துமலைப் படலத்து அனைவரும் உயிர் பெற்றெழுதலால் பெறப்படுதல் காண்க. துவக்குறுதல் 'சித்தமதா மொருதறியிற் றுவக்குறு, சித்தி விநாயக னிசையைப் பழிச்சுநும்' (மீனாட்சி. பிள்ளை. 3).

பி - ம். 3. அடியருக்கடியரும்.
4. பிறவியிற். 182

2559. நங்கள் காரிய மியற்றுவா னுலகிடை நடந்தீர்
உங்க ளாருயி ரெம்முயி ருடல்பிறி துற்றீர்
செங்க ணுயகற் காகவெங் களத்திடைத் தீர்ந்தீர்
எங்க ணுயகர் நீங்களென் றிமையவ ரிசைத்தார்.

'(நீங்கள்) நங்கள் காரியம் இயற்றுவான் உலகிடை நடந்தீர் - எங்கள் காரியத்தைச் செய்து முடித்தற்காகவே, பூவுலகத்துச் சென்று பிறந்தீர் ; உங்கள் அருமை உயிர் எம் உயிர் - உங்களுடைய அரிய உயிர் எங்களுடைய உயிரேயாகும் ; உடல் பிறிது உற்றீர் - உடல் மட்டும் வேருக அமையப் பெற்றீர் ; செம்கண் நாயகற்கு ஆக வெம் களத்திடை தீர்ந்தீர் - சிவந்த நேத்திரங்களையுடைய இராமபிரான் பொருட்டுக் கொடிய போர்க்களத்திடை உயிர்விடப் பெற்றீர் ; நீங்கள் எங்கள் நாயகர் - நீங்கள் எங்கட்குத் தலைவர் ஆவீர்', என்று - என்று, இமையவர் இசைத்தார் - வானவர் கூறினர்.

நங்கள் காரியம் இயற்றுவான் உலகிடை நடந்தீர் : இங்கு இராமாவதார இரகசியம் குறிக்கப் பெறுதல் காணக. பால. திருவவ. 21-29 பார்க்க. உடலிரண்டேனும் உயிர் ஒன்றெனக் கூறப்பட்டது. 'இருதலைப்புள்ளின் ஓருயிர்' என்றமை காண்க. செங்கணுயகன் : சிவந்த விழிகளை யுடையவனுன இராமபிரான்.

திருமால் அவதாரமான இராமபிரான் பொருட்டு உயிர் விடுத்தவர் ஆதலின், வெங்களத்திடைத் தீர்ந்தீர்' எனப்பட்டது.

பி - ம். 1. பாரிடை.

2. எங்களாருயிரும் முயிருடல் பிறிதுற்றிர், உங்களாருயிரோடுலகம் பிற.

3. களத்துயிர்.

4. நாயகம்; நீர்கள், 183

## இந்திரசித்து இராவணனை யடைதல்

2560. வெங்கண் வாநரக் குழுவொடு மிளையவன் விளிந்தான்
இங்கு வந்தில னகன்றன னிராமனென் றிகழ்ந்தான்
சங்க மூதினன் றாதையை வல்லையிற் சார்ந்தான்
பொங்கு போரிடைப் புகுந்துள பொருளெலாம்
[புகன்றான்.

'வெம்கண் - கொடிய விழிகளையுடைய, வாநரர் குழுவொடு - குரங்குத் திரள்களுடனே, இளையவன் விளிந்தான் - இலக்குவன் மாண்டான்; இராமன் - இராமபிரானோ, இங்கு வந்திலன் - இப் போர்க்களத்துக்கு எய்தாதவனாய், அகன்றனன் - அப்பாற் சென்றான்'; என்று இகழ்ந்தான் - என்று இந்திரசித்து இகழ்ந்து கூறினான்; (பின்னர்), சங்கம் ஊதினன் - (வெற்றிச்) சங்கத்தை ஊதினவனாய், தாதையை வல்லையில் சார்ந்தான் - தந்தையை வேகமாகச் சென்று அடைந்து, பொங்கு போர் இடை - மன எழுச்சியுடன் புரியும் போரிடத்து, புகுந்துள பொருள் எலாம் புகன்றான் - நிகழ்ந்த விடயங்கள் அனைத்தையும் கூறினன்.

இளையவன்: இலக்குவன்; 'இளையவன் முனியுநங்கை யேகுதி விரைவினென்றான்' (ஆரணிய. 286); 'இளையவன் தனக்கு மாற்றா தென்பெருஞ் சேனை நம்ப' (யுத்த. 1226); 'தூரம் போவதன முன் றொடர்துமென் றிளையவன் சொன்னான் (ஆரணிய. 967); 'நிற்கு நோக்கி லென்பயனென விளையவ னோர்ந்தான்' (ஆரணிய. 970);

'புண்டரிகக் கண்ணமலனுக் கிளையவன் புகன்றான்' (ஆரணிய. 972). இறுதியடி முற்றுமோனை.

பி - ம். 1. இலக்குவன் ; விழ்ந்தான்.

2. வந்திலனிராமனிப்போதென ; இசைத்தான். 194

## 'இராமன் இறந்திலனோ?' என்று இராவணன் வினவ, இந்திரசித்து விடையிறுத்தல்

2561. இறந்தி லன்கொலவ் விராமனென் றிராவண னிசைத்தான்
துறந்து நீங்கின னல்லனேற் றம்பியைத் தொலைத்துச்
சிறந்த நண்பரைக் கொன்றுதன் சேனையைச் சிதைக்க
மறந்து நிற்குமோ மற்றவன் றிறனென்றான் மதலை.

'அவ் இராமன் இறந்திலன் கொல் - அந்த இராமன் மாண்டிலனோ', என்று - என்று, இராவணன் இசைத்தான் - இராவணன் கேட்டான்; (அதற்கு) மதலை - அவன் புதல்வனான இந்திரசித்து, 'துறந்து நீங்கினன் - பயத்தால் (எல்லோரையும் விடுத்துச் சென்றனன்; அல்லனேல் - அங்ஙனம் விடுத்துப் போகாமலிருந்திருப்பானாயின், தம்பியை தொலைத்து-தன் தம்பியை உயிரிழக்கச் செய்து, சிறந்த நண்பரை கொன்று - சிறந்த நண்பரைச் கொல்வித்து, தன் சேனையை சிதைக்க - தன் படையை அழிக்கும் வரை, மற்றவன் - அவ்விராமன், (தன்) திறம் மறந்து நிற்குமோ - தன் ஆற்றலை மறந்து, (பிரதி ஒன்றும் செய்யாமல்), நிற்பானோ;' என்றான் - என்று கூறினான்.

கொல்; ஐயம்; தம்பி; இலக்குவன்; சிறந்த நண்பர்; சுக்கிரீவாதிகள். மதலை; மகவு: தந்தைக்குத் தளர்ந்த காலத்து ஆதரவாயிருப்பவன் என்பது பொருள். நாலடி: 197 ஒகாரம்: எதிர்மறை.

பி - ம். 1. கொலாம்.

2. நீங்கிலன்.

4. மறைந்து போகுமோ, மறந்து நீங்குமே என்றவன் தசானனன் மதலை. 195

## இச்சொற்களால் இராவணன் மனவமைதியுற இந்திரசித்தும் மகோதரனும் தம் இருக்கை சேர்தல்

2562. அன்ன தேயென வரக்கனு மாதரித் தமைந்தான்
சொன்ன மைந்தனுந் தன்பெருங் கோயிலைத் [தொடர்ந்தான்
மன்ன னேவலின் மகோதரன் போயினன் வந்தான்
என்னை யாளுடை நாயகன் வேறிடத் திருந்தான்.

(இலங்கேசனும்), 'அன்னதே அவ்வாறு தான் நிகழ்ந்திருக்கும்', என - என்று, ஆதரித்து அமைந்தான் - (மகன் பகர்ந்ததை) ஏற்று மனச்சாந்தி யுற்றான்; சொன்ன மைந்தனும் - சொல்லிய இந்திரசித்தும், தன் பெரு கோயிலை தொடர்ந்தான் - தன்னுடைய பெரிய அரண்மனையை நாடிச் சென்றான்; மன்னன் ஏவலின் வந்தான் - அரசன் கட்டளையை மேற்கொண்டு வந்தவனான, மகோதரன் - மகோதரனும், போயினன் - (தன் மனைக்கு) ஏகினன்; வேறு இடத்து இருந்தான் - என்னை ஆள் உடை நாயகன் பிறிதோரிடத்து இருந்தவனும் என்னை ஆட்கொண்டருளும் தலைவனுமான 'வீரன்' என மேலைக்கவியொடும் தொடரும்.

ஆதரித்து என்பதற்கு அன்பு கூர்ந்து எனினுமாம்; 'ஆதரித் தமுதிற் கோல் தோய்த்து' (பால. மிதிலைக். 5); மைந்தன்: இந்திரசித்து; மைந்து: வலிமை; தந்தையைத் தளர்ந்த காலத்து வலிமையுடன் தாங்குபவன் என்பது பொருள்: மதலை என்றது போல; கோயில்: அரண்மனை; இச்சொல் ஓகாரத்தின் முன் வகரவுடம்படு மெய்பெற்று வரவேண்டியது, யகர வுடம்படு மெய்பெற்று வந்தது. இருவகைகளும் வழக்கில் உண்டு. (தொல். சொல்). பார்க்க. என்னை யாளுடை நாயகன்; கவிக்கூற்று. 'என்னையா ளுடைய வையன் கலுழன்மீதெழுந்து போயபின்றை' (பால. திருவவ. 26) திருஞான சம்பந்தரை 'ஆளுடைய பிள்ளையார்' என்ப.

பி - ம். 1. அனுதரித்தகன்றான்,

2. ஆழ்ந்தான்.

3. மன்னனுணையின்; மகோதரன் போனவன், போயின மகோதரன். 186

## இராமபிரான் அத்திர பூசை செய்தபின் போர்க்களம் செல்ல முயறல்

2563. செய்ய தாமரை நாண்மலர்க் கைத்தலஞ் சேப்பத்
துய்ய தேவர்தம் படைக்கெலாம் வரன்முறை துரக்கும்
மெய்கொள் பூசனை விதிமுறை யியற்றிமேல் வீரன்
மொய்கொள் போர்க்களத் தெய்துவா மினியென
[முயன்றான்.

வீரன் - வீரனான இராமபிரான், செய்ய தாமரை நாள்மலர் - அன்றலர்ந்த செந்தாமரை மலர் ஒத்த, கைதலம் - (தனது) கரம், சேப்ப - (பின்னும்) சிவப்பேறும்படி, துய்ய தேவர்தம் படைக்கு எலாம் - தூய்மை வாய்ந்த தேவர் படையனைத்துக்கும், வரன்முறை துரக்கும் மெய்கொள் பூசனை - முறைப்படி ஆற்ற வேண்டிய உண்மையான பூசனையை, விதிமுறை யியற்றி - நியதிப்படியே புரிந்து, மேல் - பிறகு, 'இனி-இனிமேல், மொய்கொள் - (வீரர்கள் தம்) வலிமைநிறைந்து விளங்கும், போர்களத்து எய்துவாம்-சமர்க் களத்தை அடைவோம்', என - என்று, முயன்றான் - அதற்கான ஏற்பாடுகளில் முனைந்து நின்றான்.

இராமபிரான் கைத்தலத்திற்கு அன்றலர்ந்த தாமரை மலர் உவமை; (ஒப்பு) : 'திருமுகச்செவ்வி நோக்கின், ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உணரக் கேட்ட, அப்பொழுதலர்ந்த செந் தா மரையினை வென்றதம்மா' (அயோத்தி. கைகேசி. 108); கைத் தலம் சேப்ப: இயற்கையாகச் சிவந்த கை மேலும் சேப்ப; 'ஈய்ந்து சிவந்தது வண்சீதக்காதி யிருகரம்' (தனிப்பா). என்றது காண்க. இங்குப் பூசனையியற்றிச் சிவந்தது என்க. மெய்கொள் பூசனை : மனப்பூர்வமான பூசனை. விதிமுறை ஞான நூல்களில் சொன்ன விதிவழியே. மொய்கொள்; போர் வீரர்கள் நிறைந்த எனினுமாம். 'பொக்க மிக்கவர் பூவும் நீறும் இட்டுப் போலிப்பூசை புரிவதும் உண்டாகலின் மெய்கொள் பூசனை எனப்பட்டது.

பி-ம். 2. தெய்வவான்; முறைமுறை.
3. முறை முறை.
4. எய்துவன்.

## இராமபிரான் போர்க்களமடைதல்

2564. கொள்ளி யிற்சுட ரனலிதன் பகழிகைக் கொண்டான்
அள்ளி நுங்கலா மாரிருட் பிழம்பினை யழித்தான்
வெள்ள வெங்களப் பரப்பினைப் பொருக்கென விழித்தான்
தள்ளி ருமரைச் சேவடி நுடங்குறச் சார்ந்தான்.

கொள்ளியில் - கொள்ளிக்கட்டை போன்று, சுடரும் - ஒளி விடுகின்ற, அனலிதன் - அங்கிக் கடவுளின், பகழி - அம்பினை, கைகொணடான் - கையிற் பற்றிக் கொண்டு, அள்ளி - (கையில்) அள்ளி, நுங்கலாம் அருமை இருள் பிழம்பினை அழித்தான் - பருகு தற்குரியது போன்று அடர்ந்த அரிய இருள் தொகுதியை ஒழித் தான்; தள்ளில் தாமரை சேவடி - தள்ளப்படுதலில்லாத (உயர்ந்த, தாமரை போன்ற சிவந்த திருவடி, நுடங்குற - அசையுமாறு) சார்ந்தான் - சென்று சேர்ந்து, வெள்ளம் வெம்களம் பரப்பினை - (குரங்குச்சேனை) வெள்ளத்தைக் கொண்ட கொடிய போர்க்களப் பரப்பினை, பொருக்கென விழித்தான் - சரேலெனக் கண்விழித்துப் பார்த்தான்.

அனலிதன் படை : ஆக்கினேயாத்திரம். நுங்குதல் : விழுங் குதல், 'காகாதிகணுங்குதல் காணுதியால்' (யுத்த. 1742); 'நுங்கலாமாரிருட் பிழம்பு' (ஒப்பு) 'வெவ்வழி யிருடரமதித்து மீச் செல்வார்' (சுந்தர. 142), அருமை இருள் : ஆரிருள் : அருமை : எளிதில் கரைகாணவோ, கடக்கவோ வியலாமை. வெள்ளம் : மடிந்த குரக்குச் சேனை மிகுதி. பொருக்கென : பொருக்கென வயோத்தியெய்தி' (யுத்த.-விடைகொடுத்த. 14); 'பொருக்கெனப் புகல் புக்கு' (யுத்த. மீட்சி. 11); 'பொருக்கென நிதியமும் நனி வழங்கினன்' (யுத்த. மீட்சி. 260); தள்ளில் : புறக்கணித்தற்கரிய; 'தள்ளரிய பெருநீதித் தனியாறு' (பால. குலமுறை. 21).

பி - ம். 1. சுடர்ப்பகழியினங்கி, சுடரனலியின் பகழி.
2. நுங்கலா, நீக்கலா.
3. வெள்ளி ; பரப்பினில் ; விழிமுகத் துநிரம்.
4. தள்ளித் ; நுடங்கிடத் ; தளர்ந்தான்

## இராமபிரான் களத்திற்கிடக்கும் வாநரத்தலைவரைப் பார்த்தல்

2565. நோக்கி னுன்பெருந் திசைதொறு முறைமுறை நோக்கி
ஊக்கி னுன்றடந் தாமரைத் திருமுகத் துதிரம்
போக்கி னுனிணப் பறந்தலை யழுவத்துட் புக்கான்
தாக்கும் வன்றுணைத் தலைவரைத் தனித்தனிக் கண்டான்.

பெரு திசைதொறும் - பரந்த திக்குகளில் எல்லாம், நோக்கினுன் - பார்த்தான்; ஊக்கினுன் - முயன்று, முறை முறை நோக்கி - விடாமல் பார்த்து, தட தாமரை திருமுகத்து உதிரம் போக்கினுன் - விரிந்த செந்தாமரையொத்த அழகிய முகத்தில் உதிரத்தை விடுத்தான்; நிணம் பறந்தலை அழுவத்துள் - கொழுப்பு நிறைந்த போர்க்களப் பரப்பின்கட், புக்கான் - நுழைந்தான்; தாக்கும் வல்துணை தலைவரை தனி தனி கண்டான் - பகைவரை எதிர்க்கும் தொழிலினை மேற்கொண்டிருந்த (தனது) உதவித்தலைவர்களை, ஒவ்வொருவராகப் பார்த்தான்.

ஊக்கி: முயன்று; 'ஊக்கித் தாங்கி விண்படர்வெனென்று' (ஆரணிய. 312); 'நீணெறி யூக்கினு னுவவுறும்தியி னெண்மையான்' (சீவக. 1409); தடம்தாமரை: அகன்ற அழகிய இராமபிரான் முகத்திற்குவமை; 'அமலத்தின் கரமுங் காலும் வதனமுங் கண்ணு மான, கமலத்தின் காடுபூத்த காளமா மேகமொத்தான்' (யுத்த. 778); 'கண்டனன் வதனம் வாய் கண் கை காலெனப், புண்டரீகத்தடம் பூத்த' (யுத்த. 1483)-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. பறந்தலை: பரந்த போர்க்களம்; 'பறந்தலை முழுதும் பட்ட' (யுத்த. 2034), 'கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை' (புறநா. 19); 'களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை' (புறநா. 35); அழுவம்: பரப்பு; 'அழுவத் துளழுத்தினுன்; (யுத்த. 1564); காக்கும்: போர் புரிந்து காக்கும்.

பி - ம். 2. தூக்கினுன், நூக்கினுன்; திருமுகம் சோர.
3. நிணப்பங்கயத்து, நிணப்பங்கயம்.
4. காக்குவான் றுணை, வன்றுணைத், தாக்கும் வாநரத். 180

## இராமபிரான் சுக்கிரீவனையும் அநுமனையுங் கண்ணுறல்

2566. சுக்கி ரீவனை நோக்கித்தன் றாமரைத் துணைக்கண்
உக்க நீர்த்திர ளொழுகிட நெடிதுநின் றுயிர்த்தான்
தக்க தோவிது நினக்கென்று தன்மனந் தளர்ந்தான்
பக்க நோக்கினன் மாருதி தன்மையைப் பார்த்தான்.

சுக்கிரீவனை நோக்கி - சுக்கிரீவனைப் பார்த்து, தன் தாமரை துணைகண் - தன்னுடைய தாமரை மலர் போன்ற இரு விழிகளினின்றும், உக்க நீர் திரள் - ஒழுகிய நீர்த் தொகுதிகள், ஒழுகிட - வழிந்த வண்ணமே யிருக்க, நின்று நெடிது உயிர்த்தான் - வெகு நேரம் நின்று பெரு மூச்செறிந்து, 'இது நினக்கு தக்கதோ - இவ்வாறு கிடப்பது உனக்குப் பொருந்துவதோ?', என்று - என்று, தன் மனம் தளர்ந்தான் - தனது மனம் நெகிழப் பெற்றான்; பக்கம் நோக்கினன் - பக்கத்தில் பார்த்தான்; மாருதி தன்மையை பார்த்தான் - அநுமனின் நிலைமையைக் கண்ணுற்றான்.

உக்க : உகுதல்; சிந்துதல்; நெடிது நின்றுயிர்த்தான் : நின்று நெடிதுயிர்த்தான் என மொழிமாற்றுக, நெடிது நின்று : நெடுநேரம் நின்று எனினுமாம்; 'நெடிது போதுயிர்த்து நின்று' (பெரிய. பு. கண்ணப்ப. 106); தக்கதோ : ஓகாரம் எதிர் மறை; தக்கதன்று என்பது பொருள். இது : இவ்வாறு மூர்ச்சையற்றுக் கிடப்பது. பக்க நோக்கினன் : 'நேர்வோர், பக்க நோக்கலென்' (அயோத்தி. நகர்நீ. 215).

பி - ம். 1. நோக்கினன்.
2. உக்கு.
3. தக்கதோவுது ; தனிமனம் ; தளர்வான்.
4. தன்மையும்.

191

## அநுமனைக் கண்டதும் இராமபிரான் புலம்பல்

2567. கடல் கடந்துபுக் கரக்கரைக் கருமுதற் கலக்கி
இடர் கடந்துநா னிருக்கநீ நல்கிய திதற்கோ
உடல் கடந்தன வோவுனை யரக்கன்வில் லுதைத்த
அடல் கடந்தபோர் வாளியென் றுகுலித் தழுதான்.

'கடல் கடந்து - ஆழியைத் தாண்டி, புக்கு - (இலங்கை நகரில் நுழைந்து), அரக்கரை கருமுதல் கலக்கி - இராக்கதர்களை (அவர்களின்) கருப்பச் சிசுவுடன் கலங்கச் செய்து, நான் இடர் கடந்து - நான் துன்பத்தைக் கடந்து, இருக்க - தரிக்குமாறு, நீ நல்கியது - நீ நல்லருள் புரிந்தது, இதற்கோ - (இறுதியில்) நீ இந்நிலையை எய்தற்குத்தானோ? அரக்கன் வில் உதைத்த - இராக்கதனுடைய வில்லினால் உந்தப்பட்ட, கடந்த அடல் போர் வாளி - மிகுந்த வலிமை செறிந்த போர்க்குரிய சரங்கள், உனை உடல் கடந்தனவோ - உன்னுடைய உடலை ஊடுருவிச் சென்றனவோ?' என்று - என்று கூறி, ஆகுலித்து அழுதான் - துன்புற்றுப் புலம்பினான்.

முதலிரண்டடிகட்கு: 'காதல்நான் முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன்சென், றோதினான் ஓத நீர் கடந்து பகை கடிந்துலகை யுய்யக்கொண்டான்' (யுத்த. 408); இதற்கோ: ஓகாரம் வினா. அரக்கன் வில் உதைத்த வாளி உடல் கடந்தனவோ. என மொழி மாற்றிப் பொருள் கொள்க. வில் உதைத்த: வில்லினின்றும் செலுத்திய. ஆகுலித்தல்: வியாகூலம் என்ற வடசொல். ஆகுலமாய், அதனின்று பிறந்தவினை ஆகுலித்து என்பது. 'அனையன பலவும் பன்னி யாகுலித் தரற்று வானை' (யுத்த. 2149); வில்லுதைத்தல்: 'அண்டர் நாயகனடுசிலை யுதைத்தபே ரம்பு' (யுத்த. 1201); 'நிமிர்வெஞ்சிலை யுதைக்கின்றன சுடர் வெங்கணை' (யுத்த இரா. வதைப். 46.)

பி - ப். 1. புகுந்து; போயரக்கரைக் கரு
2. இடர் கடந்த, நாமிருக்க, யானிருப்ப; திதுவோ.
4. அடல் கிடந்த. 192

## இராமபிரான் நோதலைத் தெரிவிக்கும்

2568. முன்னைத் தேவர்தம் வரங்களு
முனிவர்தம் மொழியும்
பின்னைச் சானகி யுதவியும்
பிழைத்தன பிறந்த
புன்மைச் செய்தொழி லென்வினைக்
கொடுமையாற் புகழோய்
என்னைப் போல்பவ ராருள
ரொருவரென் றிசைத்தான்.

'புகழோய் - கீர்த்தி வாய்ந்தவனே ! பிறந்த - (உடன்) பிறந்த, புன்மை செய் தொழில் - இழிந்த செயலையுடைய, என்வினை கொடுமையால் - எனது செயலின் கொடுமையால், முன்னை - முன்பு' தேவர்தம் வரங்களும் - தேவர்கள் (உனக்) களித்த வரங்களும், முனிவர் தம் மொழியும் - இருடிகளின் நற்சொற்களும், பின்னை - பிறகு, சானகி உதவியும் - சீதாப் பிராட்டியார் (உனக்குப் புரிந்த) உபகாரமும், பிழைத்தன - பலன்தரத்தவறிவிட்டன ; (இவ்வாறு செய்த), என்னைப் போல்பவர் ஒருவர் ஆர் உளர் - என்னை ஒப்பவர் ஒருவர் எவருளர்' என்று - என்று, இசைத்தான் - (தன்னை வெறுத்துச்) சொன்னான் (இராமபிரான்).

முன்னைத் தேவர்தம் வரங்களும்: முனிவர்தம் மொழியும் ; 'அநுமனெனும் பேர் பெற்றுலக முள்ளளவும் பெறுதி பெயராப் புகழ்' (உத்தர. அநுமப். 34); 'என், வில்லார் கரத்திற் சதகூற்றி லொருகூ றுனக்கு மேவிடுக, எல்லா விஞ்சை களுந்தரிக்க விசைந்த சத்தியுண்டாக, நல்லாய் கொண்ணீ தருகின்றேன்' (உத்தர. அநுமப். 34); 'இரணபூமி யிடைநேர்ந்தா லென் பாசத்தா லார்த்தக்கால், மரணமில்லை யுனக்கென்று வருணராசன் வரங் கொடுப்பத், தரணியோரை விதிவழியே தண்டிப்போனென் றண்டத்தால், முரணின் மிகுமா ருதியாவி முடியாதொழிய வரமளித் தான் (அநுமப். 36). 'காற்றின் சிறுவன் முகநோக்கிக் கருணையா லென் கதையானீ, கூற்றின்சூழ லுருயென்று குபேரன் கூறக் கூற்றுதைத்த, ஏற்றின் பாகன் என்கரமூ விலையினாலு மென்னா லும், ஆற்றன் மிகுமா ருதியாவி யகலா தொழிக வெனவருள' (உத்தர. அநுமப். 37). 'தாதாவுரைக்கு மென்பிரம தண்டாற்றா னுஞ் சாவின்றி, மேதாவியுமா யொருநாளும் விளியா நாளும் உறுக வென, தீதா யிரவே ரறுக்குமிவன் தேவர் படையாற் செருக்களத் தில், வாதா மகன்சா வொழிகவென வானோர் தச்சன் வரங்கொடுத் தான். (உத்தர. அநுமப். 38) ; 'வானோர் முதலாய் வந்து நின்ற மறையோர் முனிவரருளாளர் ஆனோரெல்லா மநுமானுக்கழிவிலாத வரமளிப்ப' (உத்தர. அநுமப். 39); என்பன காண்க. 'பாய நோக்கிய வானவர் தானவர் பழிப்பில், தூய மாதரை முதலினோர் தோன்றிய வியப்பால், வாயு வேகமும் வயின தேயன்றன் மாக்கதி யும் ஒய்வி லாதிவனிடத்தினிலிருக்க வென்றுரைத்தார்' 'பின்னைச்

சானகி யுதவியும்', 'பாழியபணைத்தோள் வீர துணையிலேன் பரிவு தீர்த்த, வாழியர் வள்ள லேயான் மறுவிலா மனத்தே னென்னின், ஊழியோர் பகலா யோதும் ஆண்டெலாம் உலக மேழும், ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென விருத்தியென்றாள்' (சுந்தர. 561); மற்றும் அநுமான் வாலில் அரக்கர் தீயிட்ட போழ்து அங்கிக் கடவுளை நோக்கிப் பிராட்டி 'கற்பதனிற்றூயே னென்னிற் றெழுகின்றேன் எரியே அவனைச் சுடல்' என்றாள். (சுந்தர. 1169); என்றதும் காண்க. இச்செய்திகள் யாவும் வானரர் மூலமாக இராக வன் அறிந்திருந்தனன் போலும். பிழைத்தன - தவறி விட்டன; 'பிழைத்தனை பாவியுன் பெண்மையா லென்றான். (கிட்கிந்தா. 257); இவ்வாறு தேவர்கள் முனிவர்கள் என்ற இவர்களின் ஆசியும், பிராட்டியின் வாழ்த்துக்களும் பயனற்றொழிந்தமை, தான் புரிந்த தீவினையின் பயன் என்கின்றான் இராமபிரான். இராமபிரானும் விதியையும் வினையையும் நோவது இக் காப்பியத்திற் பல இடங் களிலும் காணலாம். 'விதியின் பயனீ யிதற் கென்னை வெகுண்ட தென்றான். (அயோத்தி. நகர் நீ. 133).

பி-ம். 2. பிழைத்தன பிறிதென்.

3. கொடுமையிற் புகழோர். 193

2569. புன்றொ ழிற்புலை யரசினை வெஃகினேன் பூண்டேன்
கொன்றொ ருக்கினே னெந்தையைச் சடாயுவைக்
[குறைத்தேன்
இன்றொ ருக்கினே னித்தனை வீரரை யிருந்தேன்
வன்றொ ழிற்கொரு வரம்புமுண் டாய்வர வற்றே.

'புன் தொழில் புலை அரசினை வெஃகினேன் பூண்டேன் - இழி வான தொழிலைச் செய்ய வேண்டி வரும் கீழ்மையான அரசினை விரும்பி மேற்கொண்டேன்; (அதனால்) எந்தையை கொன்று ஒருக்கினேன் - என் தந்தையைக் கொன்றொழித்தேன்; எந்தையை சடாயுவை குறைத்தேன் -(என் தந்தை முறையான) சடாயுவின் ஆயுளையும் குறையச் செய்தேன்; இன்று இத்தனை வீரரை ஒருக்கி னேன் இருந்தேன் - இப்பொழுது (இங்கே வீழ்ந்து கிடக்கின்ற) இத்தனை வீரரையும் கொன்றவனாய், (நான் மட்டும்) இருக்கின்றேன்,

வல் தொழிற்கு ஒரு வரம்பும் உண்டாய் வரவற்ரோ-எனது வன்மை யான தொழிலுக்கு ஒரு எல்லையும் ஏற்படக் கூடியதோ?' இல்லை என்றபடி.

புன் தொழில் - 'புன்ருெழிலரக்கன் கொண்டு போந்த நாள்; (சுந்தர. 522); புன் தொழிற் புலையரசு; (ஒப்பு) 'இனியது போலு மிவ்வரசை யெண்ணுமோ' (அயோத்தி. மந்திரப், 23); 'நெடிது நாளுண்ட எச்சிலை நுகருவதின்பமாகுமோ' (அயோத்தி, மந்திர. 26) என்று தயரதன் வெறுத்துக் கூறுதல் காண்க. வெஃகினேன் - இராமபிரான் இனிது என்று அரசினை ஏற்கவில்லை. 'தாதையப் பரி சுரை செயத் தாமரைக்கண்ணன், காத லுற்றில னிகழ்ந்திலன் கடனிதென் றுணர்ந்தும், யாது கொற்றவ னேவிய ததுசெய லன்ருே, நீதி யெற்கென நினைந்துமப் பணிதலை நின்ருன்' (அயோத்தி. மந்திர. 70) என்றது காண்க. 'மெய்த்திருப்பத மே வென்ற போதினும், இத் திருத்துறந் தேகென்ற போதினும், சித்திரத் தினலர்ந்த செந்தாமரை, யொத்திருந்த முகத்தினை யுன்னுவாள்' (சுந்தர.349) 'தெருளுடை மனத்து மன்ன னேவலிற் றிறம்ப வஞ்சி, யிருளுடை யுலகந் தாங்கு மின்னலுக் கியைந்து நின்ருன், உரு ளுடைச் சகடம் பூண்ட வுடையவ னுய்த்த காரே, றருளுடை யொருவ னீக்க வப்பிணி யவிழ்ந்த தொத்தான்; (அயோத்தி. கைகேசி. 109); என வருவன காண்க. வெஃகினேன்:முற்றெச்சம், எந்தை என்றது, இராமபிரானுக்குத் தந்தை முறையான சடாயுவை; ஆரணிய. 202; இச்சொல் ஈரிடத்தும் கூட்டி யுரைக்கப் பெற்றது. 'வல்லைமைந்த' (ஆரணிய. 212); 'வந்திலர் மைந்தர் தாம் மருகிக் கெய்திய, வெந்துயர் துடைத்தன ரென்று மெய்ப் புகழ், தந்திலர்' 'கடலுணட்டிய மலையன்ன தாதை யைக் கண்டான்' (ஆரணிய. 944, 983); 'தனியுயிர்த் தாதை வள்ளி யோன்' (ஆரணிய. 984) 'என்னுறுவான் வேண்டி யிடருறுவே னெந்தாயே' (ஆரணிய. 987); 'தெண்ணீர், தந்தனன் தாதை தன்னைத் தடக்கையி னெடுத்துச் சார்வான் (ஆரணிய 1025); என வருவன காண்க. மற்றும் தந்தைக்குச் செய்வது போன்று, சடாயுவுக்கு ஈமக் கடன்களை இராமபிரான் செய்ததும் காண்க.

குறைத்தல் - ஆயுளைக் குறையச் செய்தல்; ஒருக்குதல் - அழித்தல்; இருந்தேன் (ஒப்பு) 'நின்றேன் நின்றேனு நெடுமரம்போ னின்றேனே' (ஆரணிய. 989);

பி - ம். 1. வெஃகியென், வரவினன் ; பூண்ட.
3. இத்துணை ; விரையுமிருந்தே,
4. வன்றெழிற்குமோர் ; வரமற்றே. 194

2570. தமையனைக்கொன்று தம்பிக்கு வாநரத் தலைமை
அமைய நல்கினெ னடங்கலு மவிப்பதற் கமைந்தேன்
கமைபி டித்துநின் றுங்களை யித்துணை கண்டேன்
சுமையு டற்பொறை சுமக்கவந் தன னெனச் சொன்னான்.

'தமையனை கொன்று - அண்ணனைக் கொன்று, தம்பிக்கு வாநரர் தலைமை அமைய நல்கினென் - தம்பிக்குப் பொருந்தும்படி தந்து (நல்லது புரிந்தது போன்று), (நான்) அடங்கலும் அவிப்பதற்கு அமைந்தேன் - அனைத்தையும் அழிப்பதற்கே முயன்றவனாகினன், கமை பிடித்து நின்று - பொறுமையைக் கடைப்பிடித்து நின்று, உங்களை இதுணை கண்டேன் - உங்களை இவ்வளவு இன்னலுக்குள்ளாக்கினேன் ; சுமை - (பூமிக்குப்) பெருஞ் சுமையான, உடல் பொறை சுமக்க வந்தனன் - உடற் பாரத்தைச் சுமக்கத்தான் தோன்றினேன்' என - என்று கூறி அழுதான் (இராமபிரான்).

தமையன் : வாலி ; தம்பி : சுக்கிரீவன் ; கமை, க்ஷமா என்ற வடசொல், தமிழ் மொழிக்கேற்பத் திரிந்தது. 'கமையினையுடையராகி' (தேவா. 1104 : 5); 'காலன் வலத்தாள் கமையில்லாள்' (சுந்தர. 171); 'கமையினு டிருமுகத்து' (சுந்தர. 339); கமை பிடித்தது - இளையவன் அயன்கணைவிடவேண்டும் என்றபோது, வேண்டாம் என்று விலக்கியது. உடற்பொறை : 'உடற்பொறை யுவகையிற் குனிப்பவொத்தன' (யுத்த. 1771); 'உடற்பொறை தொடர்ந்த நோயென' (யுத்த. நிகும்பலை. 52); பிராட்டியை மீட்பதற்கே சுக்கிரீவ பட்டாபிஷேகம் செய்ததனால் இராமபிரான் இங்ஙனம் கூறினன்.

பி - ம். 2. விப்பதா சமைந்து.
4. எமையுடைப் ; வந்தேன். 195

## அங்கதனைக் கண்ணுற்று இராமபிரான் வருந்துதல்

2571. விடைக்கு லங்களி னடுவணோர் விடைகிடந் தென்னக்
கடைக்கண் டீயுக வங்கதக் களிற்றினைக் கண்டான்
படைக்க லங்களைச் சுமக்கின்ற பதகனேன் பழிபார்த்
தடைக்க லப்பொருள் காத்தவா றழகிதென் றழுதான்.

'விடை குலங்களின் நடுவண்-காளை மாட்டுக் கூட்டங்களாகிய (வாநரர்க்கு) இடையில், ஓர்-ஒப்பற்ற, விடை கிடந்தென்ன-இடபம் கிடந்தாற்போன்று (கிடக்கின்ற), அங்கதன் களிற்றினைக் கண்டான்-அங்கதன் என்ற யானையைப் பார்த்தான்; (கண்டு, இராமபிரான்), கண் கடை தீ உக-கடைக்கண்ணினின்று நெருப்புப் பொறி வெளிப்பட, படை கலங்களை. சுமக்கின்ற - (பகைவரிடமிருந்து நண்பரைப் பாதுகாவாமல்) போர்க் கருவிகளைத் தாங்கி நிற்கின்ற, பதகனேன் - பாவியாகிய நான், பழி பார்த்து - (எனக்கே) பழி வருவதைப் பார்த்து, அடைக்கலம் பொருள் காத்த ஆறு அழகிது-அடைக்கலப் பொருளைப் போற்றிக் காத்த வன்மை நன்றாயிருந்தது', என்று அழுதான் - என்று அவலித்தான்.

விடைக் குலங்களின் நடுவணோர் விடை கிடந்தென்ன; (ஒப்பு) 'குளனணி தாமரைக் கொழுமலர் நாப்பண், ஒரு தனியோங்கிய திருமலர் போன்று' (மணி. *15 : 75 - 76*); கிடந்தாலென்ன என்பது கிடந்தென்ன எனத் தொகுத்தது. கண் கடை : முன் பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. களிறு அங்கதற்கு வலியாலும் கம்பீரத்தாலும் நடையாலும் உவமை. படைக்கலங்களைச் சுமக்கின்ற பதகனேன்' (ஒப்பு) 'வன்றாட் சிலையேந்தி வாளிக் கடற் சுமந்து, நின்றேனு நின்றேன் நெடுமரம்போ னின்றேன்' (ஆரணிய. *989*); இரு தோளெனச் சோம்பியோங்கும், கல்லும் சுமந்தேன் கணைவரிப்புட்டிலும் சுமந்தேன், வில்லுஞ் சுமக்கப் பிறந்தேன்' (அயோத்தி. நகர்நீ. *138*); 'எத்துய ருனக்குள தினிப்பழி சுமக்கப், பத்துள தலைப்பகுதி தோள்கள்பல வன்றே' (ஆரணிய. *614*); பதகன்; பாற் கடலமுவத்துள்ள தொத்ததப் பதகன் மூதூர்' (யுத்த. *911*); 'பாசங் கலந்த பசிபோ லகன்ற பதகன் துரந்த வுரகம்' (யுத்த. *2199*). 'வெய்யன் பதகன் பரதார விருப்பன்

வீணன்' (அரிச். பு. இந்திர. 35); பழி: அடைக்கலப் பொருளைப் பாதுகாவாமையால் ஏற்படுவது; அங்கதன் அடைக்கலப் பொருள் ஆனது. 'மற்றுன் கையடை யாகு மென்று விராமற்குக் காட்டும் காலை' (கிட்கிந்தா. 379); 'அடைந்தவர்க் கருளா ணுயி னறமென்னு மாண்மை யென்னும்' (யுத்த. 414); மற்றும் இந்த அபயப் பிரதானத்தின் பெருமையை விபீடணன் அடைக்கலப் படலம் யுத்த 412 - 422 வரையுள்ளசெய்யுட்களில் காண்க.

பி-ம். 1. இடையொரு, நடுவொடு.

3. படைச்கலக் கடல். படைக்கலஞ் சுமந்து; உழல்கின்ற; பாதத்து.

## இலக்குவனை இராமபிரான் காணுதல்

2572. உடலி டைத்தொடர் பகழியி
னொளிர்கதிர்க் கற்றைச்
சுடரு டைப்பெருங் குருதியிற்
பாம்பெனச் சுமந்த
மிடலு டைப்பண மீமிசைத்
தான்பண்டை வெள்ளக்
கடலி டைத்துயில் வானன்ன
தம்பியைக் கண்டான்.

உடல் இடை தொடர் - உடலினிடையே இடைவிடாது வந்து ஊன்றிய, பகழியின் - அம்புகளின், ஒளிர் கதிர் கற்றை - சுடர்கின்ற ஒளித் தொகுதிகளால், சுடர் உடை - பிரகாசத்தையுடைய, பெரு குருதியில் - மிக்க உதிரத்திலே, பாம்பு என - பாம்பெனப் பகருமாறு, சுமந்த - சுமந்த, மிடல் உடை - வலிமையை யுடைய, பணம் மீமிசை - படத்தின் மேலே, பண்டை - பழமையான, வெள்ளம் கடல் இடை - வெள்ளக் கடலின்மீது, துயில்வான் தான் அன்ன - யோக வுறக்கம் புரியும் தன்னை நிகர்த்த, தம்பியை - இளவலான இலக்குவனை, கண்டான் - இராமபிரான் பார்த்தான்.

இங்கு, பாற்கடலின் யோக நித்திரை புரிபவன் திருமால்; அவனுக்குப் பாயாக அமைந்தவன் ஆதிசேடன் அவதாரமான

இலக்குவன்; கடலில் பாம்பின் படத்தின்மீது பள்ளி கொண்டான்; இங்குப் பிணத்தின்மீது கிடந்தான் என்க. இலக்குவனைத் திருமாலாகவே இங்குக் கூறப்பட்டது. மீமிசை; ஒரு பொருட் பன்மொழி. தான்: அசை.

பி. ம். 1. உடலிற்றைத்தன, உடலிடைத்தைத்தன, உடலுடைத்துயர்; தளிர்க் கற்றை,

2. சுடரிற் சூழ்; பாரம்போற்.

3. மிடனுடைப் பன்மணிப்பார் மிசை.

4. கண்ணிற் கண்டான். 197

## இராமபிரான் துன்புறுதல்

2573. பொருமி னனகம் பொங்கின னுயிர்முற்றும் புகைந்தான்
குரும ணித்திரு மேனியு மனமெனக் குலைந்தான்
தரும நின்றுதன் கண்புடைத் தலம்வரச் சாய்ந்தான்
உருமி னலிடி யுண்டதோர் மராமர மொத்தான்.

அகம் பொருமினன் - மனம் வெதும்பினன்; பொங்கினன் - வெகுண்டெழுந்தான்; உயிர் முற்றும் புகைந்தான் - உயிர்ப்பு முழுவதும் புகைந்து காணப் பெற்றான்; குருமணி திருமேனியும் - ஒளிவிடும் நீலரத்தினம் ஒத்ததிரு மேனியும், மனம் என குலைந்தான் - மனம் போலவே ஒடுங்கப் பெற்றான், தருமம்-அறக் கடவுள், நின்று -,நின்று, தன் கண் புடைத்து அலம்வர - தன் விழிகளில் அடித்துக் கொண்டு வருந்துமாறு, உருமினால் இடி உண்டது ஓர் மராமரம் ஒத்தான் - இடியினால் தாக்கப்பட்டதான ஓர் மராமரத்தை நிகர்த்தவனாய், சாய்ந்தான் - (தரையில்) வீழ்ந்தான்.

பொருமி: போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான் (யுத்த. மீட்சி. 208); 'பொருமியொரு மகவழும்' (குசேலோ. 70); குருமணி: 'கூல மாமென வென்புறக் குளிர்ந்ததக் குருமணித் திருமேனி' (யுத்த. 215); உயிர்: உயிர்ப்பு; மேனியு மனமெனக் குலைந்தான். (ஒப்பு); 'மென் மருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. 332); அறந்தலை நின்று தருமத்தைப் புரந்தருள வந்தவன் இராமபிரான் ஆகலின், அறக்கடவுள் அவனுடைய அவலநிலை கண்டு கண் புடைத்து அலம் வந்தது எனப்பட்டது.

இவ்வாறு அவலித்த இவை வானவரும் முனிவர் குழுவும் தனியறனும், இனிக்கெட் டழிந்த தரக்கர் குலம் என்றே சுருதியீரிரண்டும் குனிக்கக் குனித்த புருவம்' (சுந்தர. 544) எனப்படுவது காண்க. அலம்வரல் - அலம்வரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல். உரி. 14).

பி - ம். 2. மேளியுமன்னவா.

3. தரும நின்ற ; புதைந்தன வலம்வர, புடைத்தலமரச்.

4. ஒப்பான், ஒப்ப. 198

2574. உயிர்த்தி லன்னொரு நாழிகை
யுணர்ந்தில னொன்றும்
வியர்த்தி லன்னுடல் விழித்திலன்
கண்ணிணை விண்ணோர்
அயர்த்த னன்கொலென் றஞ்சின
ரங்கையுந் தாளும்
பெயர்த்தி லன்னுயிர் பிரிந்திலன்
கருணையாற் பிறந்தான்.

கருணையால் பிறந்தான் - (உயிர்கள் மீது வைத்த) பெருங் கருணை காரணமாக, அவதரித்தவனான இராமபிரான், ஒரு நாழிகை உயிர்த்திலன் - ஒரு நாழிகை நேரம் மூச்செறிந்தானில்லை, ஒன்றும் உணர்ந்திலன் - ஒன்றும் உணர்ந்தானில்லை ; வியர்த்திலன் - (துக்கம் மிக்கிருந்தும்), உடல் வியர்வை கொள்ளவுமில்லை ; கண் இணை விழித்திலன்- இரு கண்களும் திறக்கவுமில்லை ; அம்கையும் தாளும் பெயர்த்திலன் - அழகிய கரமும் பாதமும் நிலை பெயராதவனுமாயினன் ; உயிர் பிரிந்திலன் - உயிர் பிரிந்தான் என்பது மட்டுமில்லை ; விண்ணோர் அயர்த்தனன் கொல் - தேவர்கள் உயிரொடுங்கினனோ', என அஞ்சினர் - எனப்பயந்தார்.

இராமபிரானிடம் காணப்பட்ட பலவகை மெய்ப்பாடுகள் இங்குக் குறிக்கப்பட்டன. கருணையாற் பிறந்தான் : 'பரித்ராணாய சாதூநாம் விநாசாயசதுஷ்கிருதாம், தரும சம்ஸ்தாபனார்த்தாய, சம்பவாமி யுகே யுகே' (பகவற் கீதை.) என்றது காண்க. 'அறம் திறம்புமென் றையனயோத்தியிற் பிறந்த பின்பும்' (அயோத்தி.

நகர். நீ. 223); 'அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந்தறைந்த நீதித், திறந்தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர், இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்தேக வீண்டுப் பிறந்தனன் தன்பொற் பாத மேத்துவார் பிறப்பறுப்பான்' (சுந்தர. 1123).

பி - ம். 2. வெயர்ந்திலன் ; கண்ணரினை.

3. அயிர்ந்திலன்.

4. உயிருயிர்ந்திலன் ; பிறந்தோன். 199

2575. தாங்கு வாரில்லைத் தம்பியைத் தழீஇக்கொண்ட தடக்கை
வாங்கு வாரில்லை வாக்கினுல் தெருட்டுவா ரில்லை
பாங்க ராயுள்ளோ ரியாவரும் பட்டனர் பட்ட
தீங்கு தானிது தமியனை யார்துயர் தீர்ப்பார்.

பாங்கராயுள்ளோர் யாவரும் பட்டனர் - (இராமபிரானுக்கு) நண்பரா யுள்ளோர் அனைவரும் மரித்தனர்; தாங்குவார் இல்லை - (அவலித்துச் சாய்ந்த அவனைத்) தாங்குவாரில்லை; தம்பியை தழீஇ கொண்ட - தம்பியை அணைத்துக்கொண்டு கிடக்கின்ற (இராமபிரானுடைய), தடகை-பெரிய கரத்தை, வாங்குவார் இல்லை- அவன் உடலினின்று எடுப்பாரில்லை; வாக்கினுல் தெருட்டுவார் இல்லை - வாய்கொண்டு தேறுதல் கூறுவாரும் இல்லை; பட்ட தீங்கு இது - அவன் துய்த்த துன்பம் இத்தகையது; தமியனை - நண்பர் உறவினர் எவரும் இன்றித் தனிப்பட்டவனை, துயர் தீர்ப்பார் யார் - துன்பம் தவிர்ப்பவர் எவர் உளர்? தான் : அசை.

தடகை : 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். உரி. 24) தெருட்டுதல் : தெளியச் செய்தல்; 'தோகையைத் தெருட்டி மீடிர்' (கிட்கிந்தா. 976); 'தலைமகன் தோழிக்குரைப்பானுய்க் கிழத்தியைத் தெருட்டியது' (குறுந். 209).

பி - ம். 1. தழீக்கொண்டதன்னை.

3. பாங்கராயினேர் ; பட்டது.

4. தீங்குமாலிறைத், தீங்கிஞலிது, ஈங்குவாலிது. 200

## இராமபிரானைத் தெருட்டுவோர் இன்மைக்குக் காரணம்

2576. கவந்த பந்தமுங் கழுதுந்தங் கணவரைக் காணுச்
சிவந்த கண்ணியர் தேடினர் திரிபவர் திரளும்
உவந்த சாதகத் தீட்டமும் ஓரியி னொழுக்கும்
நிவந்த வல்லது பிறவில்லைக் கடத்திடை நின்ற.

கவந்த பந்தமும் - உடற் குறைகளின் தொகுதியும், கழுதும் - பேய்களும், தம் கணவரைக் காணுர் - தங் கணவன்மாரைக் காணப் பெருமையால், சிவந்த கண்ணியர் - (துன்பத்தால்) சிவப்பேறிய விழியினராய், தேடினர் திரிபவர் திரளும்-தேடியலையும் மாதர்களின் குழுவும், உவந்த சாதகத்து ஈட்டமும் - (உணவு மிகுதியும் கிடைத் தமையின்) மகிழ்ந்த பத்திரகாளியின் ஏவலாட்களும், ஓரியின் ஒழுக்கும் - நரிகளின் வரிசையும், நிவந்த அல்லது-உயர்ந்து விளங் கினவே அல்லாமல், கடத்திடை நின்ற பிற இல்லை - அந்தக் காட்டில் உயிர் தங்கப் பெற்றவை வேறு எதுவும் இல்லை.

கவந்த பந்தம் : தலையற்ற உடற் குறைகளின் கூட்டம். கழுது-பேய், 'கழுதொடு காட்டிடை' (திருவாச. திருச்சத. 8) காணுது; என்பது ஈறு கெட்டது. தேடினர் - முற்றெச்சம். சாதகம்-பூதம். ஓரி - நரி ; 'வெவ்வாயோரி முழவாக' (சீவக. 309); நிவந்த : 'நிவந்த வாசனத்தினி திருப்ப' (அயோத்தி. மந்தரை. 55).

பி - ம். 1. கண்ணினர்.
3. சாதகர், பாதகர், ஒழுங்கும்.
4. பிறர் ; நின்றுர். 201

## தேவர் முதலானோர் துயருறுதல்

2577. வான நாடியர் வயிறலைத் தழுதகண் மழைநீர்
சோனை மாரியிற் சொரிந்தன தேவருஞ் சொரிந்தார்
ஏனை நிற்பவுந் திரிபவு மிரங்கின வெவையும்
ஞான நாயக னுருவமே யாதலா னடுங்கி.

வான நாடியர் - விண்ணுலகத்து மாதர்கள், வயிறு அலைத்து- வயிற்றிலெற்றிக் கொண்டு, அழுத கண் மழை நீர் - அழுத கண் மழை நீர், சோனை மாரியில் சொரிந்தன - விடா மழைபோன்று வீழ்ந்தன, தேவரும் சொரிந்தார் - விண்ணவரும் (கண்ணீர்) பெய்தனர், எவையும் ஞான நாயகன் உருவமே யாகலின் - எல்லாப் பொருள்களும் ஞான நாயகனான இராமபிரான் உருவமன்றிப் பிறிதின்றாகலான்; நடுங்கி - நடுக்கமுற்று, ஏனை நிற்பவும திரிபவும் இரங்கின - மற்றும் நிலைத்திணை இயங்குதிணைப் பொருள் களும் மனம் தளர்ந்தன.

வான நாடியர் - தேவ மாதர். வயிறலைத்து : வயிற்றிலடித்துக் கொண்டு; துன்பக்குறி: 'வந்தானை முக நோக்கி வயிறலைத்து' (ஆரணிய. 332); மற்றும் சுந்தர. 739, 979, 988. தேவரும் : உம்மை உயர்வு சிறப்பு. சோனை : விடாமழை. ஞான நாயக னுருவமே யாதலானடுங்கி : இங்குக் கூறப்பட்ட செய்கைகளுடன் இராம பிரான் காட்டிற்கேகும் கால், நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் வருணனைகளை யும், சீதை களங்காண் படலத்துக் கூறப்பட்ட, 'மங்கையழலும்' (5) எனத்தொடங்கும் பாடலையும் ஒப்பு நோக்குக. திரு விளையாடல் மண் சுமந்த படலத்துப், பாண்டியன் கூலியாளாக வந்த சிவபெருமானைப் பிரம்புகொண்டு அடித்த காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் ஒப்பு நோக்குக. இவ்வருணனைகள் அனைத்தும், எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்து விளங்கிச் சர்வாந்தர்யாமியாய் ஒளிரும் இறைவன் பெருமையைச் சுட்டி நின்றமை காண்க.

பி - ம். 1. கண்மலி நீர்.
2. சொரிந்தன ; சோர்ந்தார்.
3. நிற்பவுமிரங்கின மயங்கின.

202

2578. முகையி னுண்மலர்க் கிழவற்கு முக்கணன் றனக்கும்
தகையி னீங்கிய திருமுகங் கருணையி னலிந்த
தொகையி னின்றவர்க் குள்ளது சொல்லியென் தொடர்ந்த
பகையும் பார்க்கின்ற பாவமுங் கலுழ்ந்தன் பரிவால்.

முகை இல் நாண் மலர் - கிழவற்கும் - மொட்டாக வில்லாமலே புதிதாக மலர்ந்தது போன்ற தாமரையில் வசிப்

பவனை பிரமனுக்கும், முக்கணன் தனக்கும் - மூன்று விழிகளை யுடைய சிவபெருமானுக்கும், தகையின் நீங்கிய - அவைகட்கியல்பாக வுள்ள இனிமையினின்று நீங்கப்பெற்ற, திருமுகம் கருணையின் நலிந்த - திருமுகங்கள் அருட்கருணையினால் வருந்தின; தொகையின் நின்றவர்க்கு - இனத்தில் பொருந்தியவர்க்கு, உள்ளது சொல்லி என் - உள்ளதாகிய துயரத்தைப்பற்றி மொழிவதனால் எய்தும் பயன் யாது? தொடர்ந்த பகையும் - தொடர்ந்துள்ள பகைமையும், பார்க்கின்ற - (அத்துயரத்தைக்) கண்ணுறுகின்ற, பாவமும் பரிவால் கலுழ்ந்தன - பாவத்திற்குரிய தேவதையும் துன்பத்தினால் கண்ணீர் விடுத்தன.

முகை. மொட்டு. கிழவன்: உரியவன். கிழவன்: வயது முதிர்ந்தவன் என்பது பின்னெழுந்த பொருள். திருமாலின் நாபிக் கமலத்தில் தோன்றியவன் பிரமனாதலின், முகையினாண்மலர்க் கிழவன் எனப் பட்டான். முக்கணன்: சிவபெருமான். மூன்று கண்கள் சூரியன் சந்திரன் அங்கி என்ப. கருணையும் அவலத்துக் காரணமாகலின் கருணையின் நலிந்த எனப்பட்டது. இனம் அல்லது நெருங்கிய தொடர்பு பற்றித் துயரம் தோன்றும். பிரமனும் திருமாலும் திரிமூர்த்திகளில் சேர்ந்தவர் ஆதலின் தொகையினின்றவர்க் குள்ளது சொல்லியென் எனப்பட்டது. கண்ணிற் பட்டாற் கறிக்குமா, புருவத்திற் பட்டாற் கறிக்குமா என்பது பழமொழி. இங்கு இரங்க வேண்டாதவைகளும் இரங்கின எனக் குறிக்கப் பெற்றது. ஒருவன் துன்புறுவதைக் கண்ணுறுவதில் மகிழ்ச்சி கொள்ளும் பாவமுமே துன்புற்றுக் கண்ணீர் விடுத்தன என்பது இறுதியடியால் விளங்கும். (ஒப்பு) 'பருவரலின்ப மென்றிரண்டும் ஒக்க நோக்கிய யோகருமருந் துயருழந்தார்' (அயோத்தி. நகர்நீ. 215).

மங்கையழுதாள் வானாட்டு மயில்களழுதாள் மழவிடையோன்
பங்கினுறையுங் குயிலழுதாள் பதுமத்திருந்த மாதழுதாள்
கங்கையழுதா ளுமடந்தையழுதாள் கமலத்தடங்கண்ணன்
தங்கையழுதா ளிரங்காத வரக்கிமாருந் தளர்ந் தழுதார்.

(யுத்த. சீதை களங். 5)

பொன்ஞுழ் குழையா டீனயீன்ற பூமாமடந்தை புரிந்தழுதாள்
குன்ரு மறைதேர் தருமமு மெய்குழைந்து குழைந்து தளர்ந்தழுத
பின்ரு துடற்றும் பெரும்பாவ மழுத பின்னென் பிறர் செய்கை.

(யுத்த. சீதை களங். 6)

மற்றும் அயோத்தியா காண்டம் நகர் நீங்கு படலத்துச் (179-216) செய்யுட்களும் காண்க. தொகையினின்றவர்: தேவர் தொகுதியிற் சேர்ந்தவர் எனினுமாம்.

பி-ம். 2. நகையு நீங்கிய, நகையு நீக்கிய; கருணையு நலியத்.
3. நின்றவர்க்குற்றது.
4. பார்த்தன்று, ஆர்த்தநது. 203

## இராமபிரான் விழித்துப் பார்த்துத் தம்பி மரித்தானென்று புலம்பத் தொடங்குதல்

2579. அண்ண லுஞ்சிறி துணர்வினே டயர்வுயிர்ப் பணுகிக்
கண்வி ழித்தனன் தம்பியைத் தெரிவுறக் கண்டான்
விண்ணை யுற்றனன் மீள்கில னென்றகம் வெதும்பப்
புண்ணி னுற்றதோ ரெரியன்ன துயரினன் புலம்பும்.

அண்ணலும் - பெருமை மிக்கவனுன இராமபிரானும், சிறிது உணர்விேைடு - சிறிது உணர்ச்சியோடும், அயர்வு உயிர்ப்பு அணுகி - நெட்டுயிர்த்தலோடும் பொருந்த, கண் விழித்தனன் - கண் விழித்து, தம்பியை தெரிவுற கண்டான் - தம்பியைத் தெளியக் கண்டான்; (கண்டு தம்பி), 'விண்ணை உற்றனன் - விண்ணிடத்தை அடைந்தனன்; மீள்கிலன் - திரும்பமாட்டான்! என்று அகம் வெதும்ப - என்று மனம் வெம்மையெய்த, புண்ணின் ஓர் எரி உற்றது அன்ன - புண்ணில் ஒரு நெருப்புப் புகுந்தாற் போன்ற, துயரினன் - வருத்தத்துடன் கூடியவனுய், புலம்பும் - (பின் வருமாறு) அழுபவனுஞன்.

2574 ஆம் பாடலில் 'உயிர்த்தில னொரு நாழிகை உணர்ந்திலன்' என்று கூறப்பட்டதனுல், இங்கு அண்ணல் அந்த அவச நிலையினின்று சிறிது உணர்விேைடு உயிர்ப்புப் பெற்றதாகக்

கூறப்பட்டது. அயாவுயிர்ப்பு: 'திருவயர்வுயிர்க்கு மார்பன்' (சூளா. துற. 23); அணுகி: அணுக என்க. 'தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்' (சிலப். வரந்தரு. 185); விண்ணையுறல்: வீர சுவர்க்கம் அடைதல். புண்ணின் உற்றதோர் எரி; 'புண்ணிடை யெரிபுக் கென்ன மானத்தாற் புழுங்கினையும்' (யுத்த. 1925); 'புண்ணுற்ற தீயிற் புகையுற் றுயிர் பதைப்ப' (அயோத்தி. நகர்நீ. 97); 'புண்ணிலாம் பெரும்புழையிற் கனல் நுழைந்தாலெனச் செவியிற் புகுதலோடும்' (பால. கையடை. 11); மனைவியை யிழந்ததனு லாகிய புண்ணில், தம்பியையும் இழக்க நேர்ந்ததாகிய எரி என்க. புலம்பும்: செய்யுமென் முற்று ஆண்பாற்குவந்தது.

பி-ம். 3. வெதும்பிப், வெதும்பாப்.
4. உற்றன; வேலன்ன. 203

## வேறு

## இராமன் அவலித்தல்

2580. எந்தை யிறந்தா னென்று மிருந்தே னுலகெல்லாந்
தந்தன னென்னுங் கொள்கை தவிர்ந்தேன் றனியல்லேன்
உய்ந்து மிருந்தாய் நீயென நின்றே னுரைகாணேன்
வந்தன னையா வந்தன னையா வினிவாழேன்.

'எந்தை இறந்தான் என்றும்-என் தந்தை இறந்தான் என்று கேள்வியுற்றும், இருந்தேன் - (நான்) உயிர் வாழ்ந்திருந்தேன்; உலகு எல்லாம் தந்தனன் என்னும் கொள்கை தவிர்ந்தேன் - உலகனைத்தையும் (பரதனுக்குக்) கொடுத்தேன் என்ற கொள்கையும் விடுத்தேன்; தனி அல்லேன் - (நான்) தனிப்பட்டவனல்லாத வனாய், நீ உய்ந்தும் இருந்தாய் - நீ பிழைத்திருந்தா யென்றே, நின்றேன் - (இவ்வாறு) நின்றேன்; உரைகாணேன். இப்போது உன் பேச்சைக் காணேன். (ஆதலின் யான்), இனி வாழேன் - இனி வாழமாட்டேன்; ஐயா - ஐயனே! வந்தனன் - வந்துவிட்டேன், ஐயா - ஐயனே, வந்தனன் - வந்து விட்டேன்.

நீ உடனுள்ளாய் என்ற நம்பிக்கையால், தந்தை இறந்ததையும் பொருட்படுத்தவில்லை; உனது உதவியால் எளிதாக ஆட்சி செய்தல் கூடும் என்ற உறுதியால், பரதனுக்கு ஈந்த அரசையும்

அவன் திருப்பித்தரப் பெற்றுக்கொள்ள இணங்கினேன். நீ இறந்துபட்டாயாதலின் இனி உயிர்தரியேன் என்று புலம்பினன் இராமபிரான். இராமபிரான் தந்தை இறந்ததைக் கேட்டு, இலக்குவனை நோக்கி 'உன் தந்தை இறந்தார், என்று மொழிந்ததாகவும், பிராட்டியைப் பார்த்து, உன் மாமனார் இறந்தார், என்று கூறியதாகவும், முதனூலில் கூறப்பட்டிருத்தல் இங்குக் குறிக்கொள்ளத்தகும். இராமபிரான் வினயவுரையை, 'புதல்வராற் பொலிந்தானுந்தை' ((யுத்த. 449); என்ற இடத்தும் காண்க. இங்கு இலக்குவனை நோக்கி உனக்குத் தந்தை இறந்தார் என்று இராமபிரான் அருளியது என் எனின்; தனக்குத் தந்தை செய்யவேண்டியவற்றைச் செய்ய அவன் இருத்தலால், தன்னைப் பொறுத்தவளவில், தந்தை இறந்தாரல்லர் என்பது. இதனை 'பாவஜ்ஞேந, கிருத்ஜ்ஞேந, தர்மஜ்ஞேந சலக்ஷ்மண, த்வயா புத்ரேண தர்மாத்மா நாஸம்வ்ருத்த ப்பிதாமம' (வான்மீகம் ஆரணிய. 15); என்றது கொண்டும் தெளிக. இங்கு கிட்கிந்தா காண்டம். 269 உரைக் குறிப்பும் காண்க.

பி - ம். 1. யானும்.
2. என்றும், தமிபல்லேன்.
3. கந்தனிருந்தாய் ; கரைகாணேன்.
4. வந்தனனெம்பி. 204

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

தந்தை யிறந்தும் தாயர் பிரிந்தும் தலம் விட்டும்
பின்றனி மேவும் மாது பிரிந்தும் பிரிவில்லா
எம்துணை நீயென் றின்பமடைந்தே னிதுகாணேன்
வந்தனென் எம்பி வந்தனெ னெந்தா யினிவாழேன்.

2581. தாயோ நீயே தந்தையு நீயே தவநீயே
சேயோ நீயே தம்பியு நீயே திருநீயே
போயோ நின்று யென்னை யிகந்தாய் புகழ்பாராய்
நீயோ யானோ நின்னினு நெஞ்சம் வலியேனால்.

'தாயோ நீயே - தாயும் நீதான்; தந்தையும் நீயே - தந்தையும் நீதான்; தவம் நீயே - தவமும் நீதான்; சேயோ நீயே -,புதல்வனும்

நீதான் ; தம்பியும் நீயே - தம்பியும் நீதான் ; திரு நீயே - செல்வமும் நீதான் ; நீயோ - நீ என்றால், புகழ் பாராய் - புகழைக் கருதாமல், என்னை இகந்தாய் போயோ நின்றாய்-என்னை விடுத்துப் போனவனாய் ; யானோ - நான் எனின் ; (இன்னும் உயிர் தரிக்கின்றேன் ஆதலின்), நின்னினும் நெஞ்சம் வலியேன் - உன்னைக்காட்டிலும் நெஞ்சம்கடினமானவன். ஆல் : அசை. ஓகாரங்கள் : பிரிநிலை.

இச்செய்யுட்கு ஒப்பு : 'மாதாராமோ மத்பிதா ராமச்சந்திரகா, பிராதாராமோ மத்சகா ராகவேந்திரகா' என்ற வடமொழிச் சுலோகம் இங்குக் காணத்தக்கது. நீ எனக்குத் தாய் முதலாகச் சொல்லப்பட்ட பலராகவும் இருந்தாய். நீ மரித்தவுடனே நானும் உடன் வந்திருத்தல் வேண்டும் ; அங்ஙனம் செய்யாது இன்னும் உயிருடனிருத்தலின் நான் மிகவும் வன்னெஞ்சன் என்று இராம பிரான் வருந்தினன் என்க. (ஒப்பு) என்னின் வேறரக்கியர் யாண்டுளார் கொலோ (சுந்தர. 500).

பி - ம். 1. நீயென் ; தவம், நீயென்.

2. நீயென் ; செய்பொருணீயே ; நீயென்.

3. என்னையிகழ்ந்தாய்.

4. நீயாயானே, நீயோயானும், நின்றனன், நின்றவில், நின்ன ; வலியேமால், வலியேனே. 205

இதன்பின், 'பயிலும்' என்ற பாடல் சில பிரதியில்.

2582. ஊறாய் நின்ற புண்ணுடை யாய்பா லுயிர்காணேன்
ஆறா நின்றே னாவி சுமந்தே யழுகின்றேன்
ஏறே யின்னு முய்யினு முய்வே னிருகூறுக்
கீறா நெஞ்சம் பெற்றன னன்றோ கெடுவேனே.

'ஊறாய் நின்ற புண் உடையாய் பால் உயிர் காணேன் - ஊறுற்றுக் காணப்படுகின்ற புண்ணையுடைய உடலில், உயிர்ப்பினைக் காண்கிலேன் ; ஆறா நின்றேன் - சிறிதுமனமாறி, ஆவி சுமந்தே - உயிரைச் சுமந்தவண்ணம், அழுகின்றேன் - அவலிக்கின்றேன், ஏறே - ஆண்சிங்கம் போன்றவனே ! கெடுவேன் - கெட்டொழிவேன், இருகூறு கீறாநெஞ்சம் பெற்றனன் அன்றோ -

இரண்டுபிளவாகப் பிளவாத நெஞ்சம் பெற்றேனன்றோ? (ஆதலின்), இன்னும் உய்யினும் உய்வேன் - இன்னும் பிழைத்திருந்தாலும் அஃது ஓர் புதுமையன்று. அன்றோ : ஓ ; வினா. ஏ : அசை.

பாபீ ஜராயுஸ் என்பது பழமொழி. உண்மையில் உடன்பிறப்பு என்னும் எண்ணம் என்பால் இருக்கும் எனின், என் உயிர் அப்பொழுதே நீங்கியிருத்தல் வேண்டும். அவ்வாறு நிகழாமை கொண்டே என் கடினசித்தம் தெளிவாகும் என்றபடி. (ஒப்பு : கிட்கிந்தா : 391; உயிரும் பெரும்பாரமான நிலையில் சுமந்தே என்றான்-இருகூறாக் கீறா நெஞ்சம் : (ஒப்பு), 'இக்காயம், கீறுகின்றில' திருவாச. திருச்சதகம். 32); கெடுவேன் : என்பது செயலற்ற நிலையில் ஒருவர் வருந்திக் கூறும் சொல்.

பி - ம். 1. ஊரு.

2. சுமந்தே னழிகின்றேன்.

4. பெற்றனை னன்றே ; கெடுவேனுன். 206

2583. பயிலுங் காலம் பத்தொடு நாலும் படர்கானத்
தயில்கின் றேனுக் காவன நல்கி யயிலாதாய்
வெயிலென் றுன்னாய் நின்று தளர்ந்தே மெலிவெய்தித்
துயில்கின் றாயோ வின்றிவ் வுறக்கந் துறவாயோ.

'படர் கானத்து - அகன்ற காட்டிலே, பயிலும் காலம் பத்தொடு நாலும் - பழகிய பதினான்கு ஆண்டுகளும், (காட்டில் அகப்படும் உணவுகளை எல்லாம்), அயில்கின்றேனுக்கு - உண்கின்ற எனக்கு, ஆவன நல்கி - தேவையானவைகளைத் தந்து, அயிலாதாய் - உண்ணாதிருந்தவனே! வெயில் என்று உன்னாய் - வெயில் என்று கருதாத நீ, தளர்ந்து நின்றே - உடல் தளர்ச்சியுற்று நின்று, மெலிவு எய்தி - உள்ளமும் வாட்டமுற்று, இன்று துயில்கின்றாயோ - இன்று நித்திரை புரிகின்றாயோ? இவ் உறக்கம் துறவாயோ - இந்தத் தூக்கத்தை ஒழிக்கமாட்டாயோ?' ஓகாரம் : வினா.

பயிலும் காலம் பத்தொடு நாலும் : இங்குக் கிட்கிந்தா காண்டம் 664-ன் உரைக்குறிப்புக் காண்க. அயிலுதல் : உண்ணுதல் ; 'சிங்கவுனே யயிறல்' (யுத்த, 1270).

பி - ம். 1. பயில்
2. ஆனவை
3. தளர்ந்து
4. இன்றி. 207

இதன்பின் வேள்வி என்ற பாடல் ஓர் பிரதியில்.

2584. அயிரா நெஞ்சு மாவியு மொன்றே யெனுமச்சொல்
பயிரா வெல்லைப் பாதக னேற்கும் பரிவுண்டோ
செயிரோ வில்லா வுன்னை யிழந்துந் திரிகின்றேன்
உயிரோ நானே வாரினி யுன்னோ டுறவையா.

'அயிரா - ஐயுறவு கொள்ளாத, (ஒருவர் ஒருவரை நம்புகின்ற), நெஞ்சும் ஆவியும் - உள்ளமும் உயிரும், ஒன்றே - (இருவர்க்கும் ஒன்றே), எனும் அ சொல் - என்று (உலகோர்) மொழிகின்ற அந்தச் சொல், பயிரா எல்லை - பொருளுள்ளதாக ஆகாதபோது, பாதகனேற்கும் பரிவு உண்டோ - பாவியாகிய என்னிடம் இரக்கம் என்ற உணர்ச்சிதான் நிகழுமோ? செயிர் இல்லா - குற்றம் சிறிதுமில்லாத, உன்னை இழந்தும் - உன்னை இழந்த பின்பும், திரிகின்றேன் - (உயிரோடும்) அலைகின்றேன் ; ஐயா - ஐயனே ! இனி உன்னோடு உறவு - இனி உன்னோடு உறவு, உயிரோ - (எனது) உயிரோ? நானோ - யானோ, ஆர் - யார்? செயிரோ : ஓ அசை. ஓகாரம் : வினா.

தான் உண்மையுறவினன் அல்லன் என்று இராமபிரான் தன்னை நொந்து கொண்டவாறு, செயிர் - குற்றம் ; 'செயிர்ப்பறு தெய்வச் சிந்தை' (யுத்த. களியாட்டு. 14).

பி - ம். 2. வேலைப்பாதக னெனக்கும்.
3. இல்லாய் நின்னை. 208

2585. வேள்விக் கேகி வில்லு மிறுத்தோர் விடமம்மா
வாழ்விக் கும்மென் றெண்ணினன் முன்னே வருவித்தேன்
சூழ்வித் தென்னைச் சுற்றின ரோடுஞ் சுடுவித்தேன்
தாழ்வித் தேனோ வித்தனை கேடுந் தருவித்தேன்.

'வேள்விக்கு ஏகி-(சனகராசன் செய்த) யாகத்திற்குச் சென்று, வில்லும் இறுத்து - சிவன் வில்லினையும் ஒடித்து, ஓர்விடம் - ஓர் நஞ்சினை (சீதையை), வாழ்விக்கும் - (நம்மை இது) வாழ்வுறச் செய்யும், என்று எண்ணினேன் - என்று நினைத்தேன்; முன்னே வருவித்தேன் - முன்பு வரச்செய்தேன்; (யாவரையும்) சூழ்வித்து-வஞ்சனைகள் இழைத்து, என்னை சுற்றினரோடும் - என்னைச் சூழவிருந்தவரோடும் (நண்பரோடும்), சுடுவித்தேன் - சுட்டொழித்தேன்; தாழ்வித்தேனோ - சிறிதேனும் பின் வாங்கினேனோ? இத்தனை கேடும் தருவித்தேன் - இத்தனை கெடுதிகளையும் விளைத்து விட்டேன். அம்மா: வியப்பிடைச் சொல்.

சீதையை மணந்த பின்னர் விளைந்த கெடுதிகளைப்பற்றிக் கூறி வியப்பெய்தினன் இராமபிரான். வேள்வி: வேள்வி என்னும் திருமணம். வில்லிறுத்தது: இதன் வரலாற்றினைப் பாலகாண்டம் கார்முகப் படலத்துக் காண்க. விடம்: பிராட்டி; இங்கு விடம் வாழ்விக்கும் என்று எண்ணினேன் என்பது; சனகி என்னும் விடத்தை இராவணன் இலங்கை கொண்டு சென்றான். அந்த விடம் அவனை அழித்துத் தன்னை வாழ்விக்கும் என்று இராம பிரான் கருதியதாகக் கொள்க. இராமபிரானே பிராட்டியை விடம் என்று கூறுதல் காண்க. மற்றும் சானகியை நஞ்சம் என்று கூறிய இடங்கள்: 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி, (யுத்த. 1284); 'சீதையென் றமிழ்திற் றோய்த்த நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித்தகையனன்றோ' (யுத்த. இராவணன் சோகப். 53); 'வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்' (சுந்தர. 430): என்பது கவிக்கூற்று. சூழ்வித்து, தாழ்வித்தேனோ என்பன தன்வினைப் பொருளில் வந்த பிறவினை.

பி-ம் 1. எய்தி.

2. மாள்விக்கும் மென்றெண்ணிலன்.

2586. மண்மேல் வைத்த காதலின் மாதா முதலோர்க்குப்
புண்மேல் வைத்த தீநிகர் துன்பம் புகுவித்தேன்
பெண்மேல் வைத்த காதலி னிப்பே றுகள்பெற்றேன்
எண்மேல் வைத்தவென்புகழ் நன்று லெளியேனே.

'மண்மேல் வைத்த காதலின் - மண்ணாசையினால், மாதா முதலோர்க்கு - தாயாரான (கைகேயி) முதலானோர்க்கு, புண்மேல் வைத்த தீ நிகர் துன்பம் புகுவித்தேன் - புண்ணின்மீது பொருத்திய நெருப்பினையொத்த துயரம் நிகழுமாறு புரிந்தேன்; பெண்மேல் வைத்த காதலின் இபேறுகள் பெற்றேன் - பெண் மீது கொண்ட ஆசை காரணமாக இத்தகைய பேறுகளைப் பெற்றேன்; எண்மேல் வைத்த - மதிக்குமாறு உள்ள; என் புகழ் நன்று - யானடைந்த கீர்த்தி மிகவும் அழகாயிருந்தது; எளியேனே - நான் இரங்கத்தக்கவனே?' ஓகாரம்: எதிர்மறை. ஆல்: அசை.

புண்மேல் வைத்த தீ: யுத்த. 2579 உரைக் குறிப்புப்பார்க்க. இப்பேறுகள் பெற்றேன், எண்மேல் வைத்த என்புகழ் நன்றால் இவை பிற குறிப்பு. மண்மேல்வைத்த காதல் அரசன் தயரதன் வற்புறுத்தியதன்மேல் அரசினை ஒப்புக் கொண்டது.

பி - ம். 1. முதலோர்க்கும்.

2. நீயன. 210

இச் செய்யுள் சில பிரதிகளில் (சான்றோர்) என்ற பாடலுக்குப் பின் உள்ளது. சில பிரதிகளில் இதன்பின் 'இருந்தேனானால்' என்ற செய்யுள் காணப்படுகிறது.

2587. மாண்டாய் நீயோ யானொரு போது முயிர்வாழேன்
ஆண்டா னல்ல னனில மந்தோ பரதன்றான்
பூண்டா ரெல்லாம் பொன்றுவர் துன்பம் பொறையாற்றார்
வேண்டா வோநா னல்லற மஞ்சி மெலிவுற்றால்.

'நீயோ மாண்டாய் - நீயோ இறந்துபட்டாய்; யான் - நான், ஒருபோதும் உயிர் வாழேன் - இனி ஒருகணமும் உயிர்தரியேன்; (நான் உயிர் வாழாவிடின்), பரதன் நானிலம் ஆண்டான் அல்லன்-

பரதன் (தான்) பூமியை ஆட்சி செய்பவனுகான்; அந்தோ - ஐயோ! துன்பம் பொறை ஆற்றுர் - துன்பப் பாரத்தைத் தாங்க மாட்டாதவராகி, பூண்டார் எல்லாம் - உறவு பூண்டவர் அனைவரும், பொன்றுவர் - மரிப்பர்; நான் நல் அறம் அஞ்சி மெலிவுற்றுல் - நான் உயர்ந்த தருமத்திற்குப்பயந்து தளர்வுற்றுல், வேண்டாவோ - (அதன் விளைவாக இவ்வளவு) நிகழ வேண்டாவோ. (நிகழ்ந்தே தீரும்).

அயன் கணையை விடவேண்டா என்று தம்பியைத் தடுத்ததன் பயன் இவ்வாருக நிகழ்ந்தது என்று இராமபிரான் இரங்கினுன் என்க. யுத்த. 2570-ல் 'கமைபிடித்து நின்று' என்பதன் உரை காண்க. துன்பம் பொறை - துன்பமாகிய பொறை வேண்டாவோ; 'வேண்டாவோ வேண்டுவது மேம்படு நல்லறமேயோ' (வி. பா. கிருட்டினன். 24). இச்செய்யுளுடன் மாயாசீதைப் படலம் 76 முதல் 81 வரையுள்ள செய்யுட்களை ஒப்பு நோக்குக.

பி - ம். 2. அந்தோ நானில மன்றே; பரதன்றுன்.

3. துன்பப்பொறை. 211

இதன்பின் 'சான்ருேர்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

2588. அறந்தாய் தந்தை சுற்றமு மற்று மெனையல்லால்
துறந்தா யென்று மென்னை மருதாய் துணைவந்து
பிறந்தா யென்னைப் பின்பு தொடர்ந்தாய் பிரிவாற்ருய்
இறந்தா யுன்னைக் கண்டு மிருந்தே னெளியேனே.

'அறம் தாய் தந்தை சுற்றமும் - அறமும் தாயும் தந்தையும் உறவும், மற்றும் - மற்றும் உள்ளனவும், எனை அல்லால் - என்னை யன்றி, (பிறிதொன்று உள்ளது என்று நினையாமல்), துறந்தாய் - விடுத்தவனே! என்றும் என்னை மருதாய் - எக்காலத்தும் என்னை மறவாதவனே! துணை வந்து பிறந்தாய் - எனக்குத் தம்பியாக வந்து தோன்றியவனே! பிரிவு ஆற்ருய் - பிரிவை ஆற்ருதவனுய், என்னை பின்பு தொடர்ந்தாய் - (என்னைப் பின் பற்றி வனத்துக்கும்) தொடர்ந்து வந்தவனே! இறந்தாய் - நீ மரித்தாய்; உன்னைக் கண்டும் - அங்ஙனம் இறந்த உன்னைக் கண்டும், இருந்தேன் - நான் உயிர் தாங்கியிருந்தேன்; (நான்) எளியேனே - சாதாரணமானவனே? ஒகாரம் எதிர்மறை.

தன்னுடன் வனத்தில் வசிப்பதற்காக இல்லாள் முதலான வரை இலக்குவன் விடுத்து வந்தது பற்றி ‘அறந்தாய் - துறந்தாய் என்றது என்க. ‘நற்றுதையும் நீ தனிநாயகனீ வயிற்றிற் பெற்றுயு நீயே பிறர்க்கு நல்க. (அயோத்தி. நகர். நீ. 136); இங்கு ஆகாததன்று லுனக் கவ்வன மிவ்வயோத்தி, மாகாதலிராமனம் மன்னவன்’ அயோத்தி. நகர். நீ. 150); என்றது காண்க. பின்பு தொடர்ந்தாய்: ‘எற்றேடினை வந்த விளங்களிறே’ (ஆரணிய. 1100); ‘மெய்யுறவோர், தாந்தா மொழியத் தமியேனுடனே, போந்தாய்’ (ஆரணிய. 1102); பிரிவாற்றாய்; நீருளவெனினுளமீனு நீலமும்... நாருளதனுவுளாய் நானும் சீதையும், ஆருளர் எனினுளே ‘மருளுவா யென்றான்’ (அயோத்தி. நகர் நீ. 156); ‘நெய் குழலுறு மிழையென நிலை திரிவார்’ (பால. திருவவ. 130); ‘நொடி பகிரா......... வரதனு மிளவலுமென’ (பால. திருவவ. 131). ‘பிறந்தானுமுளனென்னப் பிரியாதான் தனைப்பயந்த’ (அயோத்தி. குகப். 68). இறந்தாய்: அன்னைமுன்னம் முடியென்றதற்கேற்ப மடிந்தாய் எ-று.

பி-ம். 1. எந்தை; மற்றவையெல்லாம்; மற்றையனவெல்லாம்.
2. மறந்தாய்.
3. பிரிவற்றாய். 212

ஒரு பிரதியில் இச்செய்யுள் ‘வேலைப்பள்ளம்’ என்தன்பின் உள்ளது.

2589. சான்றோர் மாதைத் தக்க வரக்கன் சிறை தட்டால்
ஆன்றோர் சொல்லு நல்லற மன்னுன் வயமானல்.
மூன்றாய் நின்ற பேருல கொன்றாய் முடியா வேல்
தோன்று வோவென் வில்வலி தீரத் தொழிலம்மா

‘சான்றோர் மாதை - மிகச் சிறந்த சால்பு வாய்ந்தவரின் மகளை, தக்க அரக்கன் - வலிமை சான்ற அரக்கன், சிறை தட்டால் - சிறையிலே தடுத்து வைத்தானானல், (அறம் அவனை அழிக்க வேண்டும். (அவ்வாறு செய்யாமல்), ஆன்றோர் - உயர்ந்தோர், சொல்லும் - புகழ்ந்து போற்றுகின்ற) நல் அறம் - சிறந்த தருமமானது, அன்னான் வயம் ஆனல் - அத்தகைய பாதகனுக்குச் சாதகமானல், மூன்றாய் நின்றபேர் உலகு ஒன்றாய் - மூன்றாக நிலை பெற்ற இப்பெரிய உலகம் ஒருசேர (அழியவேண்டும் அங்ஙனம்) முடியாவேல் - அழியாவிடின், என் வில்வலி - என்னுடைய

வில்லினது, தீரம் தொழில் - வீரியத்துடன் இயைந்த தொழில், தோன்றுவோ - வெளிப்பட மாட்டாதோ? அம்மா : வியப்பிடைச் சொல்.

முறைதவறிச் செயல் புரிந்த அரக்கன், அறக்கடவுளால் கொல்லப்படாமல் வாழ்ந்திருப்பதனால், மூன்று புவனத்தையும் தனது வில்லாற்றல் கொண்டு அழித்துவிடுவதாகக் கூறுகிறான் இராமபிரான் : சிறைதட்டால் : சிறையில் அடைத்தால் : 'தட் டோரம்மவிவண் தட்டோரே' (புறநா. 18); மூன்றாய் நின்ற பேருலகம் : மண் விண் பாதாளம் என்ப. மெய்ப்பாடு வீரத் தெழுந்த வெகுளி. (ஒப்பு) : சுந்தர. 623.

பி - ம். 1. தக்கது ; தட்ட, வைக்க, செய்ய.
2. வசமானால்.
3. வில்வலி ; விரத். 213

2590. வேலைப் பள்ளக் குண்டக ழிக்கும் விராதற்குங்
காலிற் செல்லுங் காக மணிக்குங் கரனுக்கும்
மூலப் பொத்தற் செத்த மரத்தேழ் முதலுக்கும்
வாலிக் கும்மே யாயின வாறென் வலியம்மா.

'வேலை பள்ளம் குண்டு அகழிக்கும் - கடல் என்று கூறப்படு கின்ற பள்ளமாகிய ஆழ்ந்த (இலங்காபுரியின்) அகழிக்கும், விரா தற்கும் - விராதனுக்கும். காலில் செல்லும் காகம் மணிக்கும் - காற்றைப் போல் வேகமாகப் பறக்கின்ற காகாசுரனுடைய (கண்ணின்) கருமணிக்கும், கரனுக்கும் - கரனுக்கும், மூலம் பொத்தல் செத்த மரத்து ஏழ் முதலுக்கும் - வேரின்கண் துளை யைப் பெற்றிருந்த, சத்தில்லாத ஏழு மராமரமாகிய முதலுக்கும், வாலிக்கும் ஏ - வாலிக்குமே, என் வலி - என் வலி, ஆயினவாறு என் - பயன்பட்டவாறு என்? அம்மா : வியப்பிடைச்சொல்.

மேலே சொன்ன இத்துணைப் பெயரையும் கொன்றொழித்த எனது வில் இந்திரசித்தைக் கொல்லாமல் இருக்கின்றதே என்று வியப்படைகின்றான். வேலைப் பள்ளம் : 'இவ்வேலைப் பள்ளமொரு கைந் நீரள்ளிக் குடிக்கப்போதும் பான்மையதோ' (சுந்தர. 603); குண்டு : ஆழம் ; 'இண்டேர் குழித்த குண்டு நெடுந் தெருவின்' (பெரும்பாண். 397); 'அருங் குழுமிளைக் குண்டு கிடங்கின்'

(மதுரைக். 64); 'குண்டு நீர்ப்பனித்துறைக் குவவுமணல்' (மதுரைக். 585-6); 'குமிழி சுழலும் குண்டுகய முடுக்கர்' (மலைபடு. 213); இங்கு இராமபிரான் பழைய நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்து இரங்குகின்றான். பள்ளக்குண்டகழி வாளியால் தூர்த்தது. வருணன் அடைக்கலப்படலத்தும், விராதனை வதைத்தது, ஆரணிய காண்டத்தும், காக மணிகவர்ந்தது சுந்தர காண்டத்தும், கரனை வதைத்தது, ஆரணிய காண்டம்: கரன் வதைப்படலத்தும், மரத்தைத் துளைத்தது மராமரப் படலத்தும், வாலியைக்கொன்றது வாலி வதைப் படலத்தும் காண்க. இங்கு நிகழ்ச்சிகள் முன் பின்னாகப் பிறழ்ந்து கூறப்பெற்றமை செய்யுள் அமைப்பு நோக்கி என்க. காகமணி: 'காகத்திரு கண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கு' (திருக். 71); மூலப்பொத்தல்: 'ஊன வில்லிறுத் தோட்டைமா மரத்துளம் போட்டி' (யுத்த. 120).

பி - ம். 1. விரதிக்கும்.
2. செல்லாக் கவந்தனுயிர்க்கும், செல்லுகவந்த னுயிர்க்கும்.
3. பொத்தைச், சொத்தை.
4. ஆயினது ; என்றன், ஒருவன். 214

2591. இருந்தே னாகி லிந்திர சித்தே முதலாய
பெருந்தே ராரைக் கொன்று பிழைக்கப் பெறுவேனோ
வருந்தே னீயே வெல்லுதி யென்னும் வலிகொண்டேன்
பொருந்தே னனிப் பொய்ப்பிற விக்கும்
[பொறையல்லேன்.

'வருந்தேன் - (இந்திரசித்தைக் கொல்லுமாறு) முயற்சி செய்யேன், நீயே வெல்லுதி - நீயே வெல்வாய்', என்னும் - என்று (உன்னைப் பார்த்துச்) சொன்ன, வலிகொண்டேன் - வலிமை கொண்ட நான், இருந்தேன் ஆனால் - இவ்விடத்திலேயே இருந்தேனாகில், (அப்போதுதான்) இந்திரசித்தே முதல் ஆய-இந்திரசித்து முதலான, பெருதேராரை கொன்று - பெரிய தேர் வீரர்களைக் கொன்று, பிழைக்க பெறுவேனோ - பிழைக்கப் பெறுவேனோ? நான் பொருந்தேன் - நான் உன்னுடன் தோன்றியதாகவும் ஏற்றுக் கொள்ளேன், (ஆகவே) பொய் பிறவிக்கும்) பொறை அல்லேன் - (இந்தப்) பொய்ப் பிறவியைச் சுமக்கவும் வல்லேனல்லேன்.

இந்திரசித்து முதலான பெரிய தேர்வீரரை ஒழிக்கும் ஆற்றலுடையவனாக இருந்தால் அவன் களத்திற்கு வந்தபோதே என் வலியால் கொன்றிருக்க மாட்டேனோ? என்கின்றான் இராமபிரான்.

பி - ம். 2. பெறுவேனேல், பெரியோனே.

3. மருந்தே; நானீ; வெல்லுமதன்றே.

4. பொருந்தேனன்றே; பிறவிக்குப்; புரை, பொருள். 215

2592. மாதா வும்நஞ் சுற்றமு நாடு மறையோரும்
ஏதா னாரோ வென்று தளர்ந்தே யிறுவாரைத்
தாதாய் காணச் சால நினைந்தேன் றளர்கின்றேன்
போதா யையா பொன்முடி யென்னைப் புனைவிப்பான்.

'மாதாவும் - தாயும், நம் சுற்றமும்-நமது உறவினரும், நாடும்- நாட்டில் உள்ளாரும், மறையோரும் - வேதியரும், 'ஏதானாரோ - காட்டிற்குச் சென்ற (இராம இலக்குவர்) எந்தக் கதிக்கு ஆளானாரோ?' என்று தளர்ந்து - என்று தளர்ச்சியுற்று, இறுவாரை - மனம் ஒடிந்து அழிபவரை, தாதாய் - பிள்ளாய்! காண - பார்க்க வேண்டும் என்று, சால நினைந்தேன் - மிகவும் நினைந்துள்ளேனாய், தளர்கின்றேன் - மனம் தளர்கின்றேன்; ஐயா - ஐயனே! என்னை பொன் முடி புனைவிப்பான் போதாய் - எனக்குப் பொன் மகுடம் சூட்டுமாறு எழுந்து வருவாயாக. ஓ: வினா. ஐயம் குறித்து நின்றது. எ: அசை.

நாடு: நாட்டில் வாழ்வார்க்கு இடவாகு பெயர். தாதை: அன்பு பற்றிய மரபு வழுவமைதி. சால: மிக என்று பொருள் படும் ஓர் உரிச் சொல். மனம் மடிந்தழிபவர் மகிழும்படி எனக்கு நீ முடிசூட்டுமாறு வருக என்று இரங்கிக் கூறுகின்றான்.

பி - ம். 3. தரையாள்வேம், தரைவாழ்வேன்.

4. புனைவிப்பாய், புனைவிக்க.

216

2593. பாசமு முற்றச் சுற்றிய போதும் பகையாலே
நாசமு ஞற்றிப் போது நடந்தே னுடனல்லேன்
நேசமு மற்றார் செய்வன செய்தே நிலைநின்றேன்
தேசமு முற்றென் கொற்ற நலத்தைச் சிரியாரோ.

'பாசமும் - நாகபாசம், முற்ற சுற்றிய போதும் - (உடல்) முழுதும் வளைத்துக்கொண்ட போதும், பகையாலே நாசம் உளுற்று இப்போது-பகைவனாலே அழிவு நேர்ந்த இப்போதும், உடன் அல்லேன் - உடன் தங்காதவனாய், நடந்தேன்- அப்பாற் சென்றுவிட்டேன்; நேசமும் அற்றார் செய்வன செய்தே நிலை நின்றேன் - அன்பில்லாதவர் புரிவனவும் புரிந்தே உயிருடன் நிலைத்து நிற்கின்றேன்; தேசமும் - தேசத்தில் உள்ளாரும், உற்று - பொருந்தி, என் கொற்றம் நலத்தை சிரியாரோ-என்னுடைய வெற்றி மேம்பாட்டைக் கண்ணுற்று நகைக்க மாட்டார்களா? ஓகாரம் - எதிர்மறை.

உலகத்துள்ளோர் எல்லாரும் தன் தோல்வியை அறியுமாறு வழியல்லா வழியிலே நடந்து கொண்டதாக இராமபிரான் மனம் உளைகின்றான்.

பி - ம். 2. நாசமுழுற்றி, உளுற்றப்.

3. செய்தேன்றனி.

4. மற்றென்; சொற்றநலத்தும்; தெரியாதோ. 217

2594. கொடுத்தே னன்றே வீடண னுக்குக் குலமாள
முடித்தோர் செல்வ மியான்முடி யாதே முடிகின்றேன்
படித்தே னென்றே பொய்ம்மை குடிக்குப் பழிபெற்றேன்
ஒடித்தே னன்றே யென்புகழ் நானே யுணர்வற்றேன்.

'(முன்னரே), வீடணனுக்கு - வீடணனுக்கு, குலம் ஆள - (அரக்கர்) குலத்தை ஆட்சி புரியுமாறு, முடித்து - முடிசூட்டி, ஓர் செல்வம் - ஒப்பற்ற (அரசச்) செல்வத்தினையும், கொடுத்தேன் - தந்தேன்; அன்றே - அல்லவோ? (அதனை) முடியாதே - பூர்த்தி செய்யாமலே, யான் முடிகின்றேன் - யான் இப்போதே உயிர் விடுகின்றேன்; (இதனால்) பொய்ம்மை படித்தேன் - பொய்யைப் பழகினேன் என்றே, குடிக்கு -(இட்சுவாகு) வழிக்கு, பழி பெற்றேன் - பழியை ஈட்டி வைத்தேன்; உணர்வு அற்றேன் - நல் உணர்ச்சியற்ற நான், என் புகழ் நானே ஒடித்தேன்-என்னுடைய கீர்த்தியை நானே குலைத்துக் கொண்டேன்.'

படித்தல்: பழகுதல் என்ற பொருளில் வந்தது. பெற்றேன்-பெறுமாறு செய்தேன். (ஒப்பு) கிட்கிந்தா. 316.

பி - ம். 1. அன்றேன், அன்றே; குலமாளும்.

3. படித்தோ னென்றே, படித்தேனென்றே, படித்தோனன்றே, படுத்தேனென்றே, நொடித்தேனன்றே.

4. நொடித்தேனன்றே; நான்ருனுடையேனே. 218

## தன்னை மறந்து இராமபிரான் சோர்ந்து துயிலுதல்

2595. என்றென் றேங்கா விம்மு முயிர்க்கு மிடையஃகிச்
சென்றென் ருென்ருே டிந்திய மெல்லாஞ் சிறை யெய்தப்
பொன்றும் மென்னுந் தம்பியை மார்வத் தொடுபுல்லி
ஒன்றும் பேசான் றன்னை மறந்தான் துயில்வுற்ருன்.

என்றென்று ஏங்கா - என்றென்று புலம்பி ஏங்கி, விம்மும் - விம்முவான்; உயிர்க்கும் - பெருமூச்செறிவான்; (பின்னர்), இடை அஃகி சென்று - இடையிலே குறைந்துபோய், ஒன்ருெடு - ஓர் இந்திரியத்துடன் (அதாவது மனத்துடன்), இந்தியம் எல்லாம் ஒன்று - ஏனைய இந்திரியங்கள் எல்லாம் ஒன்ருக விணைந்து, சிறை எய்த-சிறைப்பட, பொன்றும் என்னும் - இறந்தவனுகின்ருன் என்னும்படியான, தம்பியை - இளவலான இலக்குவனை, மார்வத்தொடு புல்லி - மார்புடன் அணைத்து, ஒன்றும் பேசான் - யாதும் உரையாடாதவனுய், தன்னை மறந்தான் துயில் வுற்ருன் - மெய்ம்மறந்தவனுகி நித்திரை கொண்டான்'.

ஏங்கா: செய்யா என்னும் வாய்ப்பாடு.

பி - ம். 1. எங்கும்; இடை எய்த, இடையாகி.

2. ஒன்றே, சிறைசெய்து.

3. என்னுத்; ஆர்வத்தொடு.

4. ஒன்றுந்தேருன்; துயிலுற்ருன். 219

## இராமபிரான் துயிலுற்றது கண்டு தேவர் அன்போடு கூறத் தொடங்குதல்

2596. கண்டார் விண்ணோர் கண்கள் புடைத்தார் கலுழ்கின்றார்
கொண்டார் துன்ப மென்முடி வென்னக் குலைகின்றார்
அண்டா வையா வெங்கள் பொருட்டா லயர்கின்றாய்
உண்டோ வுன்பாற் றுன்பென வன்பா லுரை செய்தார்.

விண்ணோர் - வானவர், கண்டார் - (இராமபிரான்) நித்திரை செய்ததைக் கண்ணுற்றார்கள்; கண்கள் புடைத்தார் - விழிகளிலே புடைத்துக் கொண்டவராய், கலுழ்கின்றார்-அழுதார்கள்; துன்பம் கொண்டார் - துயரமுற்றவராய், 'முடிவு என்ன - முடிவு எதுவாக இருக்கும்', என் - என்று, குலைகின்றார் - நடுக்கமெய்தினார்; 'அண்டா - தேவனே! ஐயா - ஐயனே! எங்கள் பொருட்டால் அயர்கின்றாய் - எங்கள் சார்பாகத் துயர்பவனாகப் பாவிக்கின்றாய்; உன்பால் துன்பு உண்டோ - உனக்கும் துன்பம் என்பது உளதோ' என - என்று, அன்பால் உரை செய்தார் - அன்புடன் பகரத் தொடங்கினார்.

வானோர் கூறுவதை இதனை அடுத்து வரும் ஏழு கவிகளிற் காண்க. இச்செய்யுட்கண் அவலத்தின் பல மெய்ப்பாடுகள் காணலாம். இறுதி யாதாகுமோ என்று மனமுடைகின்றார் தேவர்கள் எனப்பட்டது. எங்கள் பொருட்டால் அயர்கின்றாய்; திருவவதாரத்து இதன் வரலாற்றினைக் காண்க. கானிடை வந்தவாறும்; வானவர் கடாவவேயாம்' (யுத்த. 763) என்பது சாம்பன் கூற்று. 'தேவர் செய் தவத்தினாற் செம்மலேகினான்' (ஆரணிய. 825); உண்டோ வுன்பால் துன்பு' 'இன்பமும் துன்பமுமில்லானே உள்ளானே' (திருவாச. சிவபுராணம்); இறைவன் உயிர் கண் மாட்டு, எள்ளுக்குள் எண்ணெய் போன்று உடனுறைந்தாலும், அவ்வுயிர்களின் வினைகாரணமாக எழுந்த இன்பதுன்பங்கள் அவனைச் சாரா என்பது குறிப்பு. 'அலகிலா வுயிர்கள் தத்தம் ஆணையினமர்ந்து செல்லத், தலைவனாய் அவற்றின்றன்மை தனக் கெய்தலின்றி; (சிவ. சித்தி). என்றது காண்க.

பி - ம். 4. துன்பமுமென்றே, துன்பென வன்பால். 220

## வேறு

## தேவர்கள் இராமபிரானுக்கு உண்மை யுணர்த்தல்

2597. உன்னை யுள்ள படியறியோ
முலக முள்ள திறமுள்ளோம்
பின்னை யறியோ முன்னறியோ
மிடையு மறியோம் பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியி னிற்கு மதுவல்லால்
என்னை யடியேஞ் செயற்பால
வின்ப துன்ப மில்லோனே.

'இன்ப துன்பம் இல்லோனே - சுக துக்கங்களில்லாதவனே! உன்னை உள்ளபடி அறியோம் - உன் நிலையை உள்ளது உள்ள வாறு அறியும் வன்மையுடையோம் அல்லோம்; உலகம் - உலகம், உள்ள திறம் உள்ளோம் - உன் இடம் அமைந்துள்ள கூறுபாட்டினையும் கருத மாட்டோம்; பின்னை அறியோம் - இனி நடக்கப் போவதையும் உணரோம், முன் அறியோம் - முன்னே நடைபெற்றதையும் அறியவல்லோ மல்லோம்; இடையும் அறியோம் - இடையிலே நிகழ்வதையும், பிறழாமல் - முறை தவறாத வண்ணம், அறியோம் - தெரிந்து கொள்ளும் ஆற்றல் உடையோம் அல்லோம்; நின்னை வணங்கி - நின்னைப் பணிந்து, நீ வகுத்த நெறியின் நிற்கும் அது அல்லால் - உன்னால் ஏற்படுத்தப்பட்ட வழியில் நிற்பதன்றி, அடியேம் செயற்பால என்னை - அடியோமாகிய நாங்கள் செய்யக் கடவன யாவுள?

உன்னை உள்ளபடி அறியோம்; 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' (திருக்கோ. 9). பதிஞானத்தாலன்றிப் பசுஞானத்தால் அறியப்படாதவன் பெருமான்; இதுபற்றியே தான் தேவர்கோவறியாத தேவதேவன் எனப்படுவன் இறைவன். (ஒப்பு): இப்படியன் இந்நிறத்த னிவ்வண்ணத்தனிவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே' (தேவா. 1255:10); உலகம் உள்ள திறம்: உலகம் பெருமானிடத்தில அடங்கி நிற்கும் முறைமை. 'தன்னுள்ளே யுலகங்களெவையுந் தந்தவை, தன்னுள்ளே நின்று தானவற்றுட் டங்குவான், பின்னிலன் முன்னிலனொருவன் பேர்கிலன், தொன்

னிலை யொருவரால் துணியற் பாலதோ (யுத்த. 188); நின்னை வணங்கி நீ வகுத்த நெறியினிற்குமது; இதுவே மறைகள் கூறும் சன்மார்க்க நெறி. இன்ப துன்பம் இல்லோனே. 'இன்பமும் துன்பமுமில்லானே யுள்ளானே' (திருவாச. சிவபுராணம்).

பி - ம். 1. உலகையுள்ள; அறிவோம், உள்ளாய், அறியோம்.

4. செயற்பாலம், செயற்பாலது. 221

2598. அரக்கர் குலத்தை வேரறுத்தெம்
மல்ல னீக்கி யருளா யென்
றிரக்க வெம்மேற் கருணையினு
லிசையா வுருவ மிவையெய்திப்
புரக்கு மன்னர் குடிப்பிறந்து
போந்தா யறத்தைப் பொறைதீர்ப்பான்
கரக்க நின்றே நெடு மாய
மெமக்குங் காட்டக் கடவாயோ.

'அரக்கர் குலத்தை வேரறுத்து-அரக்கர் குலத்தை அடியோடழித்து, எம் அல்லல் நீக்கி - எமது இன்னுமையையும் போக்கி, அருளாய் - அருள் புரிவாயாக, என்று - என்று சொல்லி, இரக்க- (நாங்கள்) வேண்டினேமாக, எம்மேல் கருணையினல் - எங்கள் மீது கருணையினுலே, இசையா உருவம் இவை எய்தி - உனக்குச் சற்றும் பொருந்தாத இந்த உருவங்களை மேவி, புரக்கும் மன்னர் குடி பிறந்து - குடிகளைக் காக்கும் சூரிய வமிசத்து அரசர் மரபினில் தோன்றி, போந்தாய் - வந்தவனே! அறத்தை பொறை தீர்ப்பான்- (துட்டர்கள் பலர் இவ்வுலகில் தோன்றியதனல்), அறக்கடவுளுக்கு பாரத்தை அகற்றும் பொருட்டு, கரக்க நின்றே - மறையும்படி நின்றே, (யுள்ள உன்), மாயம் - மாயத்தை, எமக்கும் காட்ட கடவாயோ - எமக்கும் காட்டக் கடவாயோ?'

முன்னிரண்டடிகளில் அவதார ரகஸ்யம் கூறப் பெறுதல் காண்க. (திருவவதாரப் படலம். 21-29). அன்பர் பொருட்டு மீனுகவும் ஆமையாகவும் பிறவாகவும் உருவெடுக்க நேர்ந்தமையின் 'இசையா வுருவம்' எனப்பட்டது. 'பிறப்பில் பல பிறவிப் பெம்மான்; பொறை தீர்ப்பான்: 'இம்மா ஞாலம் பொறை தீர்ப்பான் பிறந்த மாயனே' (திருவாய். ). 'நீ இவ்வாறு பூதலத்

தவதரிக்கும் செய்தியை நாங்கள் அறியாதவரல்ல; அவ்வா றிருந்தும் எங்களிடத்தும் நின் மாயையின் வன்மையைக் காட்டு தியோ இது தர்மமோ' என்றனர் வானவர். இதுவே எமக்கும் என்ற உம்மையின் உட்குறிப்பு.

பி-ம். 2. இயையா வுருவமி; தெய்தி, இயையா வுருவமிசைவெய்தி.

3. இந்தப் பொறை.

4. நின்ற; மாயை. 222

2599. ஈன்றெம் மிடுக்கண் டுடைத்தளிப்பா
னிரங்கி யரச ரிற்பிறந்தாய்
மூன்று முலகந் துயர்தீர்த்தி
யென்னு மாசை முயல்கின்றேம்
ஏன்று மறந்தோ மவனல்லன்
மனித னென்றே யிதுமாயம்
போன்ற தில்லை யாளுடையாய்
பொய்யும் புகலப் புக்காயோ.

'ஈன்ற எம் - உம்மாற் படைக்கப்பெற்ற எம்முடைய, இடுக்கண் துடைத்து - இன்னலை நீக்கி, அளிப்பான் இரங்கி - பரதுகாக்கும் பொருட்டு மனம் கசிந்து, அரசர் இல் பிறந்தாய் - மன்னர் இல்லத்துதித்தவனே! மூன்றும் உலகம்-மூன்றாகிய உலகத்துக்கு நிகழ்ந்துள்ள, துயர் தீர்த்தி - துன்பத்தை ஒழிப்பாய், என்னும் ஆசை முயல்கின்றேம் - என்றும் ஆசையினால் (நாங்கள்) முயற்சி செய்கின்றேம்; ஏன்று - நீ மயக்கமுற்றிருப்பதை (உண்மையாகவே) ஏற்றுக்கொண்டு (இவன்) அவன் அல்லன் - அவன் அல்லன், மனிதன்-மானுடன் என்ற - என்ற (உறுதியான) எண்ணத்தால், மறந்தோம்-உனது தெய்வீகத்தன்மையை மறந்தோம், இதுமாயம் போன்றது இல்லை-இந்த மாயச் செய்கை போன்ற செயல் (யாதும்) இல்லை; ஆள் உடையாய் - எம்மை அடிமையாகக் கொண்டவனே! (எமது அறியாமைக்கு ஏற்ப) பொய்யும் புகல புக்காயோ-பொய்யும் பகரத் தொடங்கி விட்டாயோ?') ஓகாரம் - வினா.

வானவர் முன்பும் மனிதன் போன்றே இராமபிரான் நடித்துக் காட்டுவதால், பொய்யும் புகலப் புக்காயோ' என்றார் தேவர். அரசிற் பிறந்தாய் 2598 காண்க. ஆசை: ஆசையால்; வானோர்

முன்னிலையிலும் மனிதன் போலவே இராமபிரான் நடித்துக் காட்டுவதால் 'பொய்யும் புகலப் புக்காயோ' என்கின்றனர். 'மானுஷம் மன்யே ராமம் தசர தாத் மஜம்' (என்பது முதனூல்).

பி - ம். 1. ஈன்றாய்! இடுக்கந் துடைத்தளிப்பாய்.

2. பிறந்து; மூன்று தலமும், மூன்றுமுலகத், மூன்றுமுலகைத்.

3. ஏன்றுமறிந்தோம்; இம்மாயம். 223

2600. அண்டம் பலவு மனைத்துயிரு
மகத்தும் புறத்து முளவாக்கி
உண்டு முமிழ்ந்து மளந்திடந்து
முள்ளும் புறத்து முளையாகிக்
கொண்டு சிலம்பி தன்வாயிற்
கூர்நூலியையக் கூடியற்றிப்
பண்டு மின்று மமைக்கின்ற
படியை யொருவாய் பரமேட்டி.

'பரமேட்டி - பரமேட்டியே! அண்டம் பலவும் - அண்டங்கள் பலவற்றையும், அனைத்துயிரும் - எல்லா உயிர்களையும், உண்டும் உமிழ்ந்தும் - உட்கொண்டும், உமிழ்ந்தும்; அகத்தும் புறத்தும் உள ஆக்கி - (வயிற்றின்) உள்ளும் புறத்தும் இருக்குமாறு புரிந்தும், அளந்து இடந்தும் - அளந்தும் பகிர்ந்தும், உள்ளும் புறத்தும் உளையாகி - உள்ளும் புறத்தும் உள்ளவனாகியிருந்து, சிலம்பி - சிலந்திப் பூச்சி, தன் வாயில் கூர் நூல் இயைய - தன் வாயில் மெல்லிய நூலினால் பொருந்த, கொண்டு - கொண்டு, கூடு இயற்றி - கூட்டினை வகுத்து, பண்டும் - முன்னும், இன்றும் - இப்போதும், அமைக்கின்ற படியை ஒருவாய் - அமைக்கின்ற முறையைவிட்டு நீங்காய்.

'உண்டுமுமிழ்ந்தும், கடந்துமிடத்தும். கிடந்தும், நின்றும், கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும், மணம் கூடியும், கண்ட ஆற்றால் தனதே உலகென நின்றான். (திருவாய். 4 : 5 : 10); (ஆரணிய. 58-ம் பக்கம் பார்க்க. சிலந்திப் பூச்சி தன் உருவத்திற்கு எவ்விதமான விகாரமும் சிறிதுமின்றி நூலினை உண்டு பண்ணி மீண்டும், தான் வெளிப்படுத்திய நூலை உள்ளே இழுத்துக்

சொல்வது போன்றே, ஈசன் தன் உண்மை வடிவுக்கு எந்தவித விகாரமும் இன்றியே, அண்டங்களைப் படைத்து மீண்டும் அவற்றைத் தன்னுள் அடக்குவன் என்று மறைகள் பகர்வதை ஒட்டி இச்செய்யுளின் இறுதியடிகள் அமைக்கப் பெற்றன. 'சின்னூல் பலபல வாயாலிழைத்துச் சிலந்தி பின்னும், அந்நூல் அருந்தி விடுவது போல வரங்கரண்டம், பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே, மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே' (திருவரங். மாலை. 18); என்றது காண்க.

பி - ம். 1. அளவாகி, உளவாகி.
2. உள்ளும் புறமும்.
3. கொண்டும்; வயிற்றின்; நூலான்மேய கூடியுற்றி.
4. அமைகின்ற; ஒருவாப். 254

2601. துன்ப விளையாட் டிதுவேயு
முன்னைத் துன்பந் தொடர்பின்மை
இன்ப விளையாட் டாமெனினு
மறியா தேமுக் கிடருற்ருல்
அன்பு விளையு மருள்விளையு
மறிவு விளையு மவையெல்லாம்
முன்பு பின்பு நடுவில்லாய்
முடித்தா லன்றி முடியாவே.

'முன்பு பின்பு நடு இல்லாய் - முன்பின் இடையில்லாமல் எக்காலத்தும் உள்ளவனே! உன்னை துன்பம் தொடர்பு இன்மை - உன்னைத் துயரம் தொடர்தல் இல்லாமையால், இன்ப விளையாட்டாம் - (நீ துயருற்ருய் போன்றும் தளர்வுற்ருய் போன்றும் விளையாடுகின்ற), இது துன்ப விளையாட்டேயும் - இது துன்ப விளையாட்டே எனினும் (இதுவும் உனக்கு), இன்ப விளையாட்டு ஆம் - இன்ப விளையாட்டேயாம். எனினும் - என்ருலும், அறியாதேமுக்கு - (காட்சியன்றி உண்மையை) உணரமாட்டாத எங்கட்கு, இடர் உற்ருல் - நீ துன்புற்ருயெனின், அன்பு விளையும் - உன்மாட்டு அன்பு எழும், அருள் விளையும் - கருணையும் உண்டாகும், அறிவு விளையும் - துன்ப உணர்ச்சியும் நேரும், அவை எல்லாம் - அவையனைத்தும், முடித்தால் அன்றி முடியாவே - நீ தீர்த்து வைத்தால் அல்லாமல் எம்மனோரால் அகற்ற வியலாது ஏ: அசை.

முன்பு பின்பு நடுவில்லாய்; ஆதிமத்யாந்தரகிதன்; 'ஆதியோடந்தமில்லான் அருணடம் ஆடும்போது' (பெரிய. பு. காரைக்கால். 66); 'பின்னிலன் முன்னிலன் ஒருவன் பேர்கிலன்' (யுத்த. 188); 'முடித்தாலன்றி முடியாவே' 'அவனன்றியோரணுவு மசையாது' (தாயு).

பி-ம். 1. துன்பம் தொடர்வு.
2. அறியாதோருக் கிடருறுமால், அறியாதோருக் கிடருற்றல்.
3. அன்பின்; விளைவும்; அருளதுவும், அருளிதுவும்.
4. முடிந்தாலன்றி; முடியாதே. 225

2602. வருவாய்போல வாராதாய் வந்தா
யென்று மனங் களிப்ப
வெருவா திருந்தோ நீயிடையே
துன்பம் விளைக்க மெலிகின்றோம்
கருவா யளிக்குங் களைகண்ணே
நீயே யிதனைக் களையாயேல்
திருவாழ் மார்ப நின்மாயை
யெம்மாற் றீர்க்கத் தீருமோ.

'வருவாய் போல வாராதாய்-உணர்வினால் தெளியப்பட்டவன் போன்று, அறிவுக்கு விஷயமாகாதவனே! வந்தாய் - (துட்ட நிக்கிரகம் செய்யும் பொருட்டு எங்கட்காக) அவதரித்தாய், என்று - என்று, மனம் களிப்ப - உள்ளம் மகிழ, வெருவாது இருந்தோம் - அஞ்சாது இருந்தோம்; நீ - நீ, இடையே (அரக்கர்களை ஒழிக்கு முன்னரே) துன்பம் விளைக்க - துன்பம் விளைக்க, மெலிகின்றோம் - (அதனால்) மெலிகின்றோம்; கருவாய் - கருப்பத்திற் றோன்றிய வனாகி, அளிக்கும் - எம்மை காத்தருள்கின்ற, களைகண்ணே - எமது புகலிடமே! நீயே - நீயே, இதனை களையாயேல் - இந்தத் துன்பத்தினை நீக்காயாயின், திருவாழ் மார்ப - திருமகள் உறையும் மார்பனே! நின்மாயை எம்மால் தீர்க்கதீருமோ - உன்னுடைய மாயாவிலாசம் எம்போன்றவரால் தீர்க்கத் தீர்ந்து விடக் கூடியதோ? ஓ: எதிர்மறை.

வருவாய் போல வாராதாய்: 'வந்தாய் போலவாராதாய் வாராதாய்போல் வருவானே' (திருவாய். 6 : 109); ஆதரவு: கண்கண்' 'களைகண்ணிலா வேவலாளரின்' (யுத்த. 671).

பி - ம். 1. மனங்களித்து.

3. கருவரிய்க் கனிர்கும்; இடரைக் காவாயேல்.

4. மாயம். 226

2603. அம்ப ரீடற் கருளியது
மயனார் மகனுக் களித்ததுவும்
எம்பி ரானே யெமக்கின்று
பயந்தா யென்றே யேமுறுவோம்
வெம்பு துயர நீயுழக்க
வெளிகா ணது மெலிகின்றோம்
தம்பி துணைவா நீயிதனைத்
தவிர்த்தெம் முணர்வைத் தாராயோ.

'எம்பிரானே - எம் தலைவனே! அம்பரீடற்கு அருளியதும் - அம்பரீஷ மன்னனுக்கு நீ கருணை செய்ததையும், அயனார் மகனுக்கு - பிரமன் மகனாகிய உருத்திரக் கடவுளுக்கு, அளித்ததுவும் - அருளியதும், எமக்கு இன்று பயந்தாய் - எங்கட்கு இன்று தந்தருளினை' என்றே - என்று, ஏமுறுவோம் - உமது பாது காப்பினை நாடிநிற்கின்றோம், வெம்பு துயரம் நீ உழக்க - மனம் வெதும்புதற்குக் காரணமான இடரை நீ ஏற்று வருந்த, வெளி காணாது மெலிகின்றோம் - வெளியிடம் காணப்பெறாது மெலிகின்றோம், தம்பி துணைவா - தம்பிக்கு உற்ற நண்பனே! இதனை - இத்துயரத்தை, தவிர்த்து - போக்கி, எம் உணர்வை தாராயோ - எங்களறிவைத் தரமாட்டாயோ?'

அம்பரீடர்க்கருளியதும்: சூரியகுலத்து மன்னனான அம்பரீஷன் ஏகாதசி விரதம் மேற்கொண்டு, துவாதசி பாரணை செய்ய இருக்கும்போது, துருவாச முனிவன்வர அவனை வரவேற்றான்; வந்த முனிவன். நித்திய கருமம் செய்யச் சென்றவன், திரும்பி வரச் சிறிது காலம் தாழ்த்தமையின், திருமால் அபிடேகத் தீர்த்தத்தைப் பருகினான் மன்னன். முனிவர் வந்து வெகுண்டு, தமது சடையினின்றெடுத்த ஓர் மயிரில் ஓர் பூதம் வரும்படி

செய்து மன்னனைத் துரத்த, மன்னன் திருமாலிடம் புகலடைந்தான்; அங்நிலையில் திருமாலின் ஆழிப்படை முனிவரை விரட்ட, அம் முனிவன் திருமாலையே சரண் அடைந்தான். மன்னனும் முனிவனுக்கு எந்தவகையான இடரும் நிகழ்த்தலாகாதென ஆழிப்படையை வேண்டி முனிவனைக் காத்தான என்பது வரலாறு.

அயனூர் மகனுக்கு அளித்த வரலாறு :

பஸ்மாசுரன் என்பவன் தான் யார் தலையிற் கைவைத்தாலும் அவன் எரிந்து சாம்பராகுமாறு சிவனிடம் வரம் பெற்று, அச் சிவபிரான் தலையிலேயே கைவைக்குமாறு செல்ல, அப்பொழுது திருமால் மோகினி வேடம் கொண்டு வந்ததாகவும், அந்தப் பெண்ணைக் கண்டு மோகித்து, மோகினி கட்டளையால் நீராடச் சென்றவன், நீராட்டயர்ந்து, தலை துவட்டிக்கொள்ளுமாறு தன் தலையில் கைவைத்த அளவில் அவன் எரிந்து சாம்பரானதாகவும் வரலாறு. மற்றும் அயன் தலையைச் சிவபிரான் திருக, அவரைப் பிரமகத்தி பற்றிக் கபாலமும் கையில் ஒட்டிக்கொள்ள, அந்தக் கபாலம் நிறைய உணவு நிறைத்துச் சிவபெருமானுடைய பிரம கத்தியைத் திருமால் அகற்றியதுமாம். அயனூர் மகன் என்றது சிவபெருமானை; வைணவர் கொள்கைப்படிச் சிவபிரான் பிரமனுடைய மகன் ஆவர்; 'நாரணன் நான்முகனை யீன்றான், அவன் தான் முகமாகி அரனுரை யீன்றான்' என்பது திவ்வியப் பிரபந்தம்: 'வையத்தார் வானத்தார் மழுவாளிக்கன்றளித்த, ஐயத்தால் சிறிதையம் தவிர்ந்தாரு முளரையா' (ஆரணிய. 59)-ம் அதன் உரைக்குறிப்பும் காண்க.

பி - ம். 1. அயனூர் மகனூற்கு ; அளித்தனவும்.
2. பயந்தா மென்றே ; பய்ந்த யென்றென்றே.
4. தவிர்ந்து.

227

## இராமபிரான் ஒடுங்கிய செய்தியைத் தூதர் இராவணனுக்குச் சொல்லச் செல்லல்

2604. என்ப பலவு மெடுத்தியம்பி
யிமையா தோருமிட ருழந்தார்
அன்பு மிகுதி யாலைய
னுவி யுள்ளே யடங்கினன்

துன்ப மனிதர் கருமமே
புணர முன்பு துணிந்தமையாற்
புன்க ணிருதர் பெருந்தூதர்
போனா ரரக்க னிடம் புக்கார்.

என்ப பலவும் - என்பவை பலவற்றையும், எடுத்து இயம்பி - எடுத்துச் சொல்லி, இமையோரும் இடர் உழந்தார் - தேவர்களும் துன்புற்று வருந்தினர்; துன்பம் மனிதர் கருமமே - துன்பத்தைத் துய்க்கின்ற மனிதருடைய தொழிலே, புணர-(தன்னிடம்) சேருமாறு, முன்பு-(அவதாரம் செய்யும்) முன்னரே, துணிந்தமையால் - மனத்து உறுதியாகக் கொண்டமையின், அன்பு மிகுதியால் - (தம்பியினிடம் உள்ள) அன்பின் பெருக்குக் காரணமாக, ஐயன் ஆவி உள்ளே அடங்கினான்-இராமபிரான் உயிர் உள்ளே அடங்கப் பெற்றான்; புன்கண் நிருதர் - இழிந்த தன்மையுள்ளவரான, நிருதர் பெரு தூதர் போனார் - அரக்கரின் பெருந் தூதர் (அந் நிகழ்ச்சியை அறிவிக்கச் சென்று) அரக்கன் இடம் புக்கார் - இராவணனிடத்திற் சேர்ந்தார்.

இன்புறுவதே தமக்குத் தொழிலாகக் கொண்ட வானவர் இடருற்றார் என்றமையின், இமையாதோரும் என்றதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு. துன்ப மனிதர் கருமம்: இறந்து பிறக்கும் மனித உருவற்றமையின், அம்மக்கள் துய்க்கும் இன்ப துன்பங்களைத் தானும் உற்றதாக நடித்துக்காட்டுதல். இதனை இறைவனுடைய அகடிதகடனா சாமர்த்தியம் என்பர்.

பி - ம். 1. இடருழந்தே.
2. அறிவும்.
3. கருமமேபுரிய; முன்னே.
4. புகுந்தார்.

228

இங்கு பிரமன் படைக்கலப் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் காணப்படுகிறது.

## தூதர் இராவணனிடம் இராமபிரான் செய்தியைத் தெரிவித்தல்

2605. என்வந் ததுநீ ரென்றரக்கர்க்
கிறைவ னியம்ப வெறிசெருவில்
நின்மைந் தன்றன் னெடுஞ்சரத்தாற்
றுணைவ ரெல்லா நிலஞ்சேரப்
பின்வந் தவனு முயிரிழந்த
பிழையை நோக்கிப் பெருந்துயரால்
முன்வந் தவனு முடிந்தானுன்
பகைபோய் முடிந்த தெனமொழிந்தார்.

அரக்கர்க்கு இறைவன் - அரக்கர் கோனாகிய இராவணன், 'நீர் வந்தது என் - நீர் வந்தது என்ன காரணம்பற்றி ?' என்று இயம்ப - என்று வினவ (அத்தூதுவர்), எறி செருவில் - (ஒருவரை ஒருவர்) தாக்குகின்ற போரில், நின் மைந்தன் தன் - உன் புதல்வனான இந்திரசித்தின், நெடு சரத்தால் - பெரிய வாளியால், துணைவர் எல்லாம் நிலம் சேர - துணைவர் யாவரும் உயிர் ஒடுங்கித் தரையில் வீழ்ந்து கிடக்க, (அத்துணைவருடனே தன்), பின் வந்தவனும் - பின் பிறந்தவனும், உயிர் இழந்த - உயிர் நீங்கப் பெற்ற, பிழையை நோக்கி - பிழையினைக் கண்டு, பெரு துயரால் - மிக்க துன்பத்தினால், முன்வந்தவனும் - முன்பிறந்தவனான இராமபிரானும், முடிந்தான் - உயிர் இறுதியுற்றான் ; (ஆகவே), உன் பகை போய் முடிந்தது - உன் பகை ஒழிந்து விட்டது, உனக்கு இனிப் பகையில்லை', என மொழிந்தார் - என்று பகர்ந்தனர்.

பி - ம். 1. மைந்தனது ; நிலஞ் சேர்ந்தார்
3. முன்முடிந்த பின்முடிந்தான்.
4. பகையும். 229

இச் செய்யுள் மர்ரே பதிப்பில் அதிகப் பாடலாகக் காட்டப் பெற்றுள்ளது.

## இப்படலத்தை ஒட்டி முதனூல் கூறுவது:

வான்மீகம் 73-வது சர்க்கம் தேவாந்தகன் முதலியோரும் திரிசிரசும் அதிகாயனும் மடிந்த செய்தியை விரைவுடன் இலங்கேசனிடம் தெரிவித்தனர். இராவணன் பெரிதும் வருந்தினன். இந்நிலையில் இந்திரசித்து என்ற அவன் மகன், அவனைப் பலவாறு தேற்றி இராம இலக்குவரை ஒழித்துக் கட்டுவதாகச் சூளுரைக்கின்றான். உடனே கோவேறு கழுதைகள் பூட்டப் பெற்ற தேரின் மீது பலவகைப் போர்க் கருவிகளுடன் சென்றான். போர் புரிதற்காக மந்திரங்கள் சொல்லி வேள்வி செய்தான். நல்ல அறிகுறிகள் காணப்பட்டன. அரக்கர்களைத் தைரியமுடன் பொருமாறு ஏவித், தான் விண்ணில் மறைந்து நின்று வானரர்களை வருத்தினன். குரக்கு வீரரும் பலவாறு மலைகளையும் மரங்களையும் கொண்டு பொருதனர். கந்தமாதனன், நளன், கஜன், ஜாம்பவான், நீலன், சுக்கிரீவன், அங்கதன் முதலானவர்கள் அரக்கன் அம்புகளால் வலியொடுங்கினர். இந்நிலையில் இந்திரசித்து மாயையால் மறைந்து பொருதமையின் அவனை அசுரர்கள் காண இயலவில்லை. இந்திரசித்து பிரமாத்திரத்தை ஏவவே, இலக்குவன் முதலான எல்லோரும் உயிர்ப்பு அற்றுக் கிடந்தனர். இந்திரசித்து வானர வீரரும் பிறரும் கணையால் மயங்கி வீழ்ந்ததைத் தந்தையினிடம் கூறச் சென்றான். முதனூலில் இராமபிரானும் அயன் கணையால் மோகமடைந்து வீழ்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. கம்பர் காவியத்தில் இராமபிரான் அயன் கணையால் பீடிக்கப்பட்டதாகக் கூறப்படவில்லை.

---

# 22. பிராட்டி களங்காண் படலம்

பிரமன் கணையால் உயிரற்றுக் கிடந்தாரைச் சீதாபிராட்டியார் பகைவர் போர்க்களத்திலே கண்டதைக் கூறும் படலம் என விரியும். களங்காட்டு படலம் எனவும், சானகி களங்காண் படலம் எனவும், சனகி களங்காண் படலம் எனவும் வழங்கும்.

## செய்தியை ஊரெங்கும் தெரிவிக்குமாறு இராவணன் கட்டளையிடுதல்.

2606. பொய்யார் தூத ரென்பதனுற்
பொங்கி யெழுந்த வுவகையினுன்
மெய்யார் நிதியம் பெருவெறுக்கை
வெறுக்க வீசி விளைந்தபடி
கையார் வரைமேன் முரசேற்றிச்
சாற்றி நகரங் களிசிறப்ப
நெய்யா ராடல் கொள்கென்று
நிகழ்த்து கென்ருு னெறியில்லான்.

நெறி இல்லான் - நல்வழி மேற்கொள்ளாத இராவணன், தூதர் பொய்யார் என்பதனுல் - தூதுவர் பொய் புகலார் என்பது கருதி (தன் பகை ஒழிந்தது என்றது பற்றி) பொங்கி எழுந்த உவகையினுன் - மேலே பொங்கி எழுந்த மகிழ்ச்சியோடு கூடியவனுன இராவணன், மெய் ஆர் - சங்கம் பதுமம் என்ற இவற்றின் வடிவாகச் செறிந்துள்ள, பெரு வெறுக்கை நிதியம் - மிகப் பெரும் தொகுதியாக அமைந்த செல்வத்தை, வெறுக்க - ஏற்றுக் கொள்பவர் சலிப்படையுமாறு, வீசி - வாரி இறைத்து, 'விளைந்த படி - நிகழ்ந்த செய்தியை (பகைவர் மாண்டொழிந்ததை) கை ஆர் வரை மேன் - துதிக்கையை யுடைய மலைபோன்ற யானையின் மீது, முரசு ஏற்றி சாற்றி - முரசினை ஏற்றி அடித்துத் தெரிவித்து, நகரம் - இலங்கை நகர்க்கண் உள்ள அனைவரும், களி சிறப்ப - மகிழ்ச்சி மிக, நெய்யார் ஆடல் கொள்க - நெய் தேய்த்து முழுகுக', என்று - என்று, நிகழ்த்துக - பறை சாற்றுவாயாக' என்ருன் - என்று கட்டளையிட்டான்.

கண்டதைக் கேட்டதை உள்ளது உள்ளபடி யுரைத்தலே தூதுவன் இலக்கணம் ஆதலின், 'பொய்யார் தூதர்' எனப் பட்டது. 'தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின் வாய்மை வழியுரைப்பான் பண்பு' (குறள். 688); மெய்யார் நிதியம்: சங்கம் பதுமம் என்ற இவற்றின் வடிவமைந்த நிதியம்; சங்க நிதி பதும் நிதி என்றது காண்க. வெறுக்கை: வெறுப்பே செறிவு; வெறுக்கை என்ற சொல்லைத் தொழிற் பெயராக்கி, 'பொரு வறு பந்தமெல்லாம் புணர்த்திடும் தெய்வ சிந்தை, யொருவ மேலிட்டு நிற்கும் உறக்கமுமிறக்கச் செய்யும், கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண் டதனுலன்றோ, விருநிலத்திடை வெறுக்கை யென்மனர்' (குசேலா. 1 : 110) என்று சிலேடைக் கண் அமைத் துப் பாடினர் மகா வித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. விளைந்த படி - நிகழ்ந்த வண்ணம். கையார் வரை - வெளிப்படை. யானைமீது முரசேற்றி நகர மாக்கட்கு முக்கியமான அரசியற் செய்திகளை அறி விப்பது பண்டைய வழக்கு. மணிமேகலை விழாவறை காதை காண்க. இவ்வாறு பறை சாற்றுவார் வள்ளுவர் எனப்படுவர். களி சிறப்ப - உவகை மிக: 'கண்டு மனம் களி சிறப்ப வொளி சிறந்து' (பால. மிதிலைக். 152); நெய்யார் ஆடல் - திருநாள்களில் எண்ணெய் பூசி மங்கள நீராடுதல்; 'அண்டர் மண்டிப் புகுந்து நெய்யாடினர்' (பெரியாழ். 1 : 1 : 5); 'நெய்யாட்டரவமும் நீராட்டர வமும்' (பெருங். 5 : 6 : 71); கொள்க, நிகழ்த்துக என்ற சொற்கள் அகரம் கெட்டுப் புணர்ந்தன. நெறியில்லான் - துன்மார்க்கன் ஆன இராவணன், 'நெறியறிந்திலாத நீசா' (சுந்தர. 464); என்றது பிராட்டி இராவணனை நோக்கிக் கூறியது. 'அண்டங்களவையும தாக்கிக் காப்பினுமறமிலாதான்' (யுத்த. 720); 'அறம் புகாமை யாலழியு மிப்பதி' (சுந்தர. 118); பிறன் தாரத்தை வஞ்சித்துக் கவர்ந்தவன் ஆகலின் 'நெறியில்லான்' எனப்பட்டான். இங்குக் குறிக்கப் பெற்ற முரசு, மும்முரசுகளில் வெற்றி முரசு என்க.

பி - ம். 1. உவகையனய், உவகையினய்.

2. நிதியின்; விளைந்தபடியே மிகவீந்து.

3. முரசியற்றி; நாரமெங்குங் கனிகூர.

4. ஆடல் ஆட்டென்று, ஆகென்று; நிகழ்த்து கின்றன், நிகழ்ந்தா னெஞ்சம், நிகழ்த்து மென்றன்.

1

மரித்த அரக்கருடலைக் கடலிலிடுமாறு மருத்தனுக்குக்கூற, அவன் அவ்வாறே செய்தல்.

2607. அந்த நெறியை யவர்செய்ய
வரக்கன் மருத்தன் றனைக்கூவி
முந்த நீபோ யரக்கருடல்
முழுதுங் கடலில் முடுக்கிடுநின்
சிந்தை யொழியப் பிறரறியிற்
சிரமும் வரமுஞ் சிந்துவெனென்
றுந்த வவன்போ யரக்கருடல்
முழுதுங் கடலி னுள்ளிட்டான்.

அந்த நெறியை-(இராவணன் இட்ட) அந்தக் கட்டளையை, அவர்-அந்த ஏவன்மாக்கள், செய்ய-இயற்ற, அரக்கன்-இராவணன், மருத்தன் தனை கூவி-மருத்தனை அழைத்து, 'முந்த நீ போய்-முற்பட்டு நீ சென்று, அரக்கர் உடல் முழுதும்-இராக்கதருடைய உடல் முழுவதையும், கடலில் முடுக்கிடு-ஆழியில் விரைவாகச் செலுத்தி முழுக்கி விடு; (நீ இங்ஙனம் புரிவது), நின் சிந்தை ஒழிய-உன் மனம் தவிர, பிறர் அறியில்-பிறர் அறிந்தால், சிரமும்-உன் தலையையும், வரமும்-உனக்கு நான் ஈந்துள்ள பெருமையையும், சிந்துவென்-வாங்கி விடுவேன்', என்று-என்று, உந்த-செலுத்த, அவன்-அந்த மருத்தன், போய்-சென்று, அரக்கர் உடல் முழுதும்-இராக்கதரின் உடல் அனைத்தையும், கடலின் உள் இட்டான-சமுத்திரத்தில் எறிந்திட்டான்.

நெறி: கட்டளை, முடுக்குதல்; விரைதல்; மருத்தன்: இவனைப் பற்றி மாயாசனகப் படலத்துக் காண்க. இவன் மாயையில் வல்லவன். சிந்தை: சிந்தா என்ற வடசொல் ஐயீறு பெற்று வந்தது. சிரமும் வரமும் என்ற இடத்து இணையெதுகை காண்க. சிந்துதல்-உதிர்ந்து ஒழிதல்; கணபதியைச் சிந்திப்போம் இருவினைகள் சிந்திப்போமே' உந்துதல்: செலுத்துதல்: 'உயிருண்டவனு ருயிர்மேல் உந்தாய்' (யுத்த. 2340): முழுதும் கடலில் முடுக்கிடு என்றும், பிறர் அறியில் சிரமும் வரமும் சிந்துவென் என்றும் இராவணன் கூறியது, சீதாதேவி வந்து களத்தைக்காணின் அரக்கர் ஒருவரும் இறந்தாரில்லை போலும் என்று எண்ணுமாறு என்க. போர்க்களத்தைச் சீதா தேவிக்குக் காட்டுமாறு கட்டளையிடப் போகின்றானாகலின் இங்ஙனம் ஆணை பிறப்பித்தான் என்க.

பி - ம். 1. அரசன் ; மருத்தோன்.

2. நீயே ; முடுக்கிவை.

3. அறிவிற் செல்லாவுன்நன் செயல் செய்கென்று.

4. அடங்கக், உதிரப்பித்தான். 2

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

## இராவணன் ஏவற்படி அரக்கியர் சீதையைப் போர்க் களத்திற்கு அழைத்துச் செல்லுதல்.

2608. தெய்வ விமானத் திடையேற்றி
மனித்தர்க் குற்ற செயலெல்லாந்
தையல் காணக் காட்டுமின்கள்
கண்டா லன்றித் தன்னுள்ளத்
தைய நீங்கா ளென்றுரைக்க
வரக்கர் மகளி ரிரைத்தீண்டி
உய்யுமுணர்வு நீத்தாளை
நெடும்போர்க் களத்தின் மிசையுய்த்தார்.

(பின்னர் இராவணன் சானகிக்குக் காவலாக அமர்ந்த அரக்கியரை அழைத்துச் சீதாதேவியை) தெய்வ விமானத்து இடை ஏற்றி - தெய்வத் தன்மை வாய்ந்த விமானத்தின் மீது ஏற்றி, 'மனிதர்க்கு - மானிடராகிய இராம இலக்குவர்க்கு, உற்ற செயல் எல்லாம் - நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம், தையல் காண காட்டுமின்கள் - சீதாதேவி கண்ணுறுமாறு காட்டுங்கள் ; கண்டால் அன்றி - அவள் நேரில் கண்ணுற்றாலன்றி, தன் உள்ளத்து ஐயம் நீங்காள் - தன் மனத்தின்கண் நிலைபெற்றுள்ள ஐயப்பாடு நீங்கப் பெறுள் ;' என்று உரைக்க - என்று மொழிய, அரக்கர் மகளிர் - இராக்கத மாதர்கள், இரைத்து ஈண்டி - கூச்சலிட்டுக்கொண்டு ஒன்றாகக் கூடி, 'உய்யும் - இனியும் நாம் பிழைத்திருப்போம்', உணர்வு நீத்தாளை - (என்ற) நினைவினை நீக்கிநின்றாளாகிய பிராட்டியை, நெடு போர்க்களத்தின் மிசை உய்த்தார் - அகன்று பரந்த யுத்த களத்தின்கண் சேர்த்தார்கள்.

தெய்வ விமானம்; புட்பகம்: 'வாங்கி ஞனிரு நிதியொடு தனதனில் வள்ளால், ஓங்கு மால்வெள்ள மெழுபது தேறினு மொல்கா, தீங்குளா ரெலா மிவருவ திவரினீ யினிது, பூங்குலா நகர் புகுதி' (யுத்த. மீட்சிப். 143) சீதை களங்காண். 29-ம் காண்க. உள்ளத்து எண்ணம்; இராவணற்கு இராம இலக்குவரைக் கொல்லும் ஆற்றல்இன்று என்று அவர் கொண்டிருந்த எண்ணம். இரைத்து: பெரு முழக்கம் செய்து; உய்யும் உணர்வு: பிழைப் போம் என்ற எண்ணம், உய்த்தல்: செலுத்துதல்; 'தையற் கட னின்றெடுத்தவனைத் தைலக் கடலின் றலையுய்த்தார்' அயோத்தி. தைல மாட்டு. 75).

பி - ம். 1. மானத்தேர், மானத்திடை.

2. தையலறியக்; தனதுள்ளத்து.

3. எனவுரைப்ப; இரைத்தார்த்தே; தங்கணவர்.

4. உய்வு முணர்வும் 3

ஒரு பிரதியில் இச் செய்யுளோடு பிரமாத்திரப் படலம் முடி கின்றது; பெருமாள் சோகப் படலம் முற்றும் என்றும் ஓர் பிரதி யில் காணப்படுகிறது.

## பிராட்டியின் ஆருத்துயரம்

2609. கண்டாள் கண்ணுற் கணவனுரு
வன்றி யொன்றுங் காணுதாள்
உண்டாள் விடத்தை யெனவுடலு
முணர்வு முயிர்ப்பு முடனேய்ந்தாள்
தண்டா மரைப்பூ நெருப்புற்ற
தன்மை யுற்ரு டரியாதாள்
பெண்டா னுற்ற பெரும்பிழை
யுலகுக் கெல்லாம் பெரிதன்ரே.

கணவன் உரு அன்றி ஒன்றும் காணுதாள் - (தனது) மணாள ஞன இராமபிரானுடைய உருவத்தையே யன்றிப் பிறிதொன்றினை யும் கண்ணெடுத்து நோக்காதவள் ஆன சீதாதேவி, (களத்தில் இராமபிரான் உயிர் மயங்கிக் கிடத்தலைக்) கண்டாள் தரியாதாள் கண்ணினுல் நேராகக் கண்ணுற்று அதனைப் பொறுக்கமாட்டா

தவளாய், விடத்தை உண்டாள் என - நஞ்சினைப் பருகினவள் போன்று, உடலும் உணர்வும் உயிர்ப்பும் - உடம்பும் அறிவும் மூச்சும், உடன் ஓய்ந்தாள் - ஒரு சேர ஓயப் பெற்றவளாய், தண் தாமரை பூ நெருப்பு உற்ற தன்மை உற்ருள் - குளிர்ந்த தாமரை மலர் நெருப்பில் பட்ட தன்மையை அடைந்தாள்; (தீயில் வீழ்ந்த மலர் போன்று வாடினுள்); (இவ்வாறு) பெண் உற்ற பெரு பீழை உலகுக்கு எல்லாம் பெரிது அன்ருே - ஒரு பெண் உற்ற பெருந் துயரம், உலகத்துக்கு மிகவும் பெரிதாகக் காணப்படுமல்லவோ? தான்: அசை. ஓகாரம்: எதிர்மறை.

இச் செய்யுள் கவிக்கூற்று.

கணவனுருவன்றி ஒன்றும் காணுதாள் என்று பிராட்டியின் கற்பு நிலை விளக்கப்பட்டது. இராவணனை நேராகப் பாராமல் துரும்பினை நோக்கிச் சொல்வதாகக் கூறப்படுதல் (சுந்தர. 445) காண்க. 'புல்லிய கிடந்த தொன்றை நோக்கினள் புகல்வதானுள்' (யுத்த. 1584) என வருதலும் காண்க. 'விடத்தை யுண்டாளென' (நாய்ச். திருமொழி.) பூநெருப்புற்ற தன்மை; 'எரியுறு தளிரின் வாடி'. தரியாதாள்: 'தரிக்கிலேன் காய வாழ்க்கை' (திருவாச, திருச்சதகம். 61) 'தரியேன் நான் ஆமாறு' (திருவாச. திருச் சதகம். 18); பீழை - துன்பம்; 'முடிந்தாலும் பீழை தரும்' (குறள். 658); 'பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவினுட் பீழை தருவ தொன்றில்' (குறள். 829); கற்பரசியரகிய பிராட்டி படும் துயரம் உலகத்தார்க்கே பெரிதும் துன்பம் விளைக்கும் அன்ருே' என்பார், உலகுக்கெல்லாம் பெரிதன்ருே என்ருர். இனி இராமபிரானைக் களத்திற் கண்ணுல் கண்டாள்; அந்த அளவில் ஆங்கிருந்த எப்பொருளும் அவட்குக் கட்புலனுகவில்லை எனினுமாம். மிக்க துயருற்றவரும் காமுகரும், தம் அவச நிலைக்குக் காரணமாயிருந்ததைத் தவிர்த்துப் பிறிதொன்றினையும் காணுதிருத்தல் இயல்பாதலின் இங்ஙனம் கூறினுர் என்க.

பி - ம். 1. என்றும்.
2. உயிர்த்தாருடலு முணர்வும்.
3. தன்மை யொத்தாள்; தரியாத.
4. பீடை; அன்றே.

4

இங்குப் பிராட்டி களங்காண் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் காணப்படுகின்றது.

## சீதாபிராட்டியின் துயரம் கண்டு மற்றையோர் துயருறல்

2610. மங்கை யழுதாள் வானாட்டு
மயில்க ளழுதார் மழவிடையோன்
பங்கி னுறையுங் குயிலழுதாள்
பதுமத் திருந்த மாதழுதாள்
கங்கை யழுதா ணாமடந்தை
யழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கை யழுதா ளிரங்காத
வரக்கி மாருந் தளர்ந்தழுதார்.

மங்கை அழுதாள் - பிராட்டி புலம்பினாள்; (அதனைக் கண்ணுற்று), வான் நாட்டு மயில்கள் அழுதார் - விண்ணுலகத்துள்ள மயில் போன்ற சாயலரான அமர மாதர் புலம்பினர்; மழவிடையோன் பங்கின் உறையும் - என்றும் இளையதான (மூத்தலில்லாத) காளை மாட்டினை ஏறும் வாகனமாக வுடைய சிவபெருமான் தன் இடப்பாகத்தின்கண் வதியும், குயில் அழுதாள் - குரலால் இனிய உமை புலம்பினாள்; பதுமத்து இருந்த மாது அழுதாள் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் புலம்பினாள்; கங்கை அழுதாள் - பாகீரதிபுலம்பினாள்; நாமடந்தை அழுதாள் - கலைமகள் அவலித்தாள்; கமலம் தட கண்ணன் தங்கை அழுதாள் - செந்தாமரை போன்ற அகன்ற கண்களையுடைய திருமாலின் உடன் பிறந்தோளான துர்க்கையும் புலம்பினாள்; இரங்காத அரக்கிமாரும் - என்றும் யாரிடத்தும் சற்றும் இரக்கம் என்ற பண்பினைக் காட்டாதவரான இராக்கதப் பெண்களும், தளர்ந்து அழுதார் - மிகவும் சோர்ந்து புலம்பினர்.

பார்ப்பதிக்குக் குயில் குரலாலும் கருநிறத்தாலும் உவமை. கண்ணன் தங்கை, துர்க்கை அல்லது காளி. இவரனைவரும் அழுதாள் என்று வாளாது கூறி, இரங்காத அரக்கிமாரும் தளர்ந்தழுதார் என்று இராக்கத மாதரின் அவலத்தை மிகுத்துக் கூறியது நோக்கத்தக்கது. அரக்கரைப் பற்றிக் கூறுங்கால் கம்பநாடர் 'இரக்கமென் றொருபொருளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129) என்றார். (ஒப்பு): 'பருவரலின்ப மென்றிரண்டும், ஒக்க நோக்கிய யோகரு மருந்துயருழந்தார்' (அயோத்தி. நகர்நீ 215); 'பிள்ளையழுத

பெரியோரை யென் சொல்ல' (அயோத்தி. நகர். நீ. 100); மற்றும் யுத்த. 2578. உரைக் குறிப்பும் காண்க. 2609-ஆவது செய்யுள் இறுதியடியில் 'பெண்டா னுற்ற பெரும் பீழை யுலகுக்கெல்லாம் பெரிதன்றோ' என்று குறித்ததை இந்தச் செய்யுட் கொண்டும் இதனை அடுத்துள்ள பாடலானும் விரிக்கின்றார் என்க. 'பெண் ணென்றால் பேயுமிரங்கும் என்பது பழமொழி. இளகிய உள்ளத்தர் ஆகலின் அவர்கள், பிராட்டியின் அவலம் கண்டு அழுதார் என்று அவர்களையே முன்னர்க் குறிக்கப்பட்டது. பிரமாத்திரப்படலத்து இலக்குவன் அயர்ந்து கிடந்த நிலையைக் கண்டு இராமபிரான் அவலித்ததைக் கண்ணுற்றுச் சிவபிரான் முதலானோர் புலம்பிய தாகக் கூறிய கல்வியிற் பெரியார், இங்குப் பிராட்டி அவலம் கண்டு பார்ப்பதி முதலானோர் வருந்தியதாகக் கூறுதலின் பொருத்தம் காண்க. கங்கை என்றது கங்காதேவியை. துர்க்கை பார்ப்பதி யின் அம்சம். கண்ணபிரான் தங்கை துர்க்கை என்பதைப் பாக வதம் பத்தாவதுகந்தம் கண்ணன் பிறப்பு வரலாறு கொண் டுணர்க. (யுத்த. 2578-ல், 'பகையும் பார்க்கின்ற பாவமும் கலுழ்ந்தனபரிவால்' என்றதும் காண்க.

பி - ம். 1. மங்கை யழலும்.

2. பதுமமலர்மென், மலர்மேலிருந்தாள் பரிந்தழுதாள்.

4. தாந்தளர்ந்தார்.

இதன் பின் 'நினைப்பு' என்ற பாடல் ஓர் பிரதியில்.

2611. பொன்றாழ் குழையா டனையீன்ற
பூமா மடந்தை புரிந்தழுதாள்
குன்றா மறையுந் தருமமுமெய்
குழைந்து குழைந்து தளர்ந்தழுத
பின்றா துடற்றும் பெரும்பாவ
மழுத பின்னென் பிறர்செய்கை
நின்றார் நின்ற படியழுதார்
நினைப்பு முயிர்ப்பு நீத்திட்டாள்.

பொன்தாழ் குழையாள் தனை - பொன் தன்னிடத்தே தங்கப் பெற்ற குழை என்ற காதணியை அணிந்தவளான சீதாதேவியை,

ஈன்ற-பெற்ற, பூமா மடந்தை புரிந்து அழுதாள்-புவியாகிய பெரிய பெண் (மனத்தில்) மிகவும் இரக்கம் கொண்டு புலம்பினுள்; குன்ரு மறையும் - என்றும் குறைவுருத வேதமும், தருமமும் - அறக் கடவுளும், மெய் குழைந்து குழைந்து தளர்ந்து அழுத - உடல் நெகிழ்ந்து நெகிழ்ந்து மெலிந்து புலம்பின; பின்ருது உடற்றும் பெரும்பாவம் அழுத - பின்னிடாது யாவரையும் வருத்தக் கூடிய பெரும் பாவமும் புலம்பிற்று, பிறர் செய்கை பின்என் - பிறர் செய்கை பின்னர் என்னென்று கூறுவது; நின்ருர்- ஆங்காங்கிருந்தவர் (மதிமயங்கி), நின்றபடி அழுதார் - நின்றது நின்றவண்ணம் புலம்பினுர்; (அப்போது பிராட்டி) நினைப்பும் உயிர்ப்பும் நீத்திட்டாள் - தன் நினைவினையும் மூக்சு விடுதலையும் விடுத்தாள்.

மகளிர் அவலம் கண்டு, பெற்றவள் மிகவும் மறுகுதல் இயல்பாகலின் பூமா மகளை இங்குக் கூறினுள். 'உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரொளிபோல், பொழிகின்ற புவிமடந்தை திருவெளிப்பட் டெனப் புணரி, எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கத், தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினுள்' (பால. கார்முக. 17); 'நீர் தந்ததனை வெல்வானிலந்தந்து நிமிர்ந்தது' (ஆரணிய. 631); 'கோளில் கீடம்போல், நிலத்தினிற் பிறந்தமை நிரப்பினுயரோ' (யுத்த. மீட்சி. 65); பொன்தாழ் என்பதற்குப் பொன்ஞனியன்றதும் தாழ்ந்து தொங்குவதுமான குழையெனினும் ஆம். பூ மடந்தை என்ஞது பூமா மடந்தை என்றது பொறுமையிற் சிறந்தவள் ஆதல் பற்றியும் பிராட்டியையீன்றது பற்றியும் என்க. வேதங்கள் அஞதி ஆகலின் குன்ரு மறை எனப்பட்டது. மறையும் தருமமும் அழுத என அமையாது, குழைந்து குழைந்து தளர்ந்தழுத என்றது. அவ்விரண்டினையும் புரந்து தருமத்தை நிலை பெறுத்துமாறு அவதரித்த இராமபிரானுக்கு உறுதுணையாக வந்தவள் பிராட்டியாகலின் என்க. அநுமன் பிராட்டியிடம் இராமபிரானுடைய அங்க இலக்கணங்களைக் கூறுங்கால், அவன் புருவத்தைச் சிறப்பித்து, 'தனிக்கைச் சிலையும் வானவரும் முனிவர் குழுவும் தனியறனும், இனிக்கட்டழிந்த தரக்கர் குலம் என்றே சுருதி யீரிரண்டும், குனிக்கக்குனித்த புருவம்' என்று கூறுவது கொண்டு இங்கு குழைந்தழுத அறமும் சுருதியும் மகிழ்ச்சி மிகுந்து கூத்தாடின என்பது காணத்தகும். மற்றும் ஆரணிய காண்டத்தில்

(170), 'வாழு மறை வாழு மனு நீதியறம் வாழும், ஏழுலகம் வாழு மினியிங்குறைதி' என்று அகத்தியர் இராமபிரானிடம் கூறியதிலிருந்து, தருமமும் மறைகளும் உய்வைப் பெறவே இராமபிரான் அவதரித்தது புலனும்; ஆகவே அவையிரண்டும் குழைந்தழுதது வியப்பன்று. 'அறந்திறம்புமென்றையன யோத்தியிற் 'பிறந்த பின்பும் பிரிவிலளாயினுள்' (அயோத்தி. நகர் நீ. :223) என்றது காண்க. புரிந்தழுதாள் - புரிதல்; மிகுதல் என்னும் பொருட்டு உடற்றுதல் - வருத்தல்; 'உடற்றும் பாவம் வந்தடையும்' (குசேலோ. 3; 124); இச் செய்யுளும் இதற்கு முன்புள்ளதும் அவலத்தை மிகுத்துக் கூறும் அரிய செய்யுட்கள்.

பி - ம். 2. குலைந்து குலைந்து; விழுந்தழுத.

4. நீக்கினுர், நீங்கினுர், நீக்கினுள். 6

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

## அரக்கியர் உபசரிக்கச், சீதை தெளிந்து மிக வருந்துதல்

2612. நினைப்பு முயிர்ப்பு நீத்தாளை
நீராற் றெளித்து நெடும்பொழுதின்
இனத்தி னரக்கர் மடவார்க
ளெடுத்தா ருயிர்வந் தேங்கினுள்
கனத்தி னிறத்தான் றனைப்பெயர்த்துங்
கண்டாள் கயலைக் கமலத்தாற்
சினத்தி னலைப்பா ளெனக்கண்ணைச்
சிதையக் கையான் மோதினுள்.

அரக்கர் இனத்தின் மடவார்கள் - அரக்கர் மரபில் தோன்றிய இராக்கத மகளிர், நினைப்பும் உயிர்ப்பும் நீத்தாளை - தன் நினைவும் மூச்சும் இன்றிக் கிடந்த, அந்தச் சீதாதேவியை, நீரால் தெளித்து - நீரைக் கொண்டு தெளிவு வரும்படி செய்து, எடுத்தார் - (தமது கரங்களினுல்) எடுத்தார்கள்; (பிராட்டி), நெடும் பொழுதின் - நெடுநேரம் கழித்து (ஒடுங்கி யிருந்த) உயிர் வந்து ஏங்கினுள் - உயிர் வரப்பெற்று அழுது, கனத்தின் நிறத்தான் தனைபெயர்த்தும் கண்டாள் - நீல மேகம் போன்று கரு நிறத்தையுடைய, இராமபிரானை மீட்டும் நோக்கி, சினத்தின் - கோபத்தினுல், கயலை -

கெண்டை மீனை, கமலத்தால் அலைப்பாள் என - தாமரை மலரால் அடிப்பது போன்று, (அப் பெருமானிருந்த அவல நிலையைக் கண்ட தனது) கண்களை, சிதைய - குலைந்து கெடுமாறு, கையால் மோதினுள் - தனது கரத்தால் மோதினுள்.

உவமையணி : இரங்காத அரக்கிமாரும் தளர்ந்தழுதார் என்று முன்னர்ச் சொல்லப்பட்டது. அந்த அவலம் பெண்ணினம் பற்றி எழுந்தது. இங்கு அவளுக்கு உபசாரம் செய்து நினைவு வருமாறு செய்தது எதுபற்றி எனின், பிராட்டிக்கு இராமபிரானிடம் இருந்த அன்பைத் தங்கள் தலைவனுன இராவணன்பால் செலுத்துமாறு செய்ய வேண்டும் என்ற சுயநலம் பற்றி என்க.

பி - ம். 3. தனைப்பின்றும்.

4. அலைத்தாலெனக் கண்ணை, அலைத்தாலிலைய கணை, சீதை; சினத்தாற் தார் சிதையாலிலை வயிற்றைச் சிதையக் கையால் மோதினுள். 7

## சீதையின் பெருந் துன்பநிலை

2613. அடித்தாண் முலைமேல் வயிறலைத்தா
ளழுதா டொழுதா ளனல்வீழ்ந்த
கொடித்தா னென்ன மெய்சுருண்டாள்
கொதித்தாள் பதைத்தாள் குலைவுற்றுள்
துடித்தாண் மின்போ லுயிர்கரப்பச்
சோர்ந்தாள் சுழன்று டுள்ளினுள்
குடித்தா டுயரை யுயிரோடுங்
குழைத்தா ளுழைத்தாள் குயிலன்னுள்.

குயில் அன்னுள் - குயில் போலும் (இனிய) குரலை யுடையவளான சீதாதேவி, முலைமேல் அடித்தாள் - தனங்களின்மீது அடித்துக் கொண்டாள் ; வயிறு அலைத்தாள் - வயிற்றிலும் புடைத்துக் கொண்டாள்; அழுதாள் - புலம்பினுள்; தொழுதாள்-வணங்கினுள்; அனல் வீழ்ந்த - தீயில் வீழ்ந்த, கொடிதான் என்ன - கொடி என்னும்படி, மெய் சுருண்டாள் - உடல் சுருண்டாள்! கொதித்தாள் - (துன்பத்தால்) மனம் வெதும்பினுள்; பதைத்தாள் - பதைத்தாள்; குலைவு உற்றுள் - உருக்குலைந்தாள்; மின்போல் துடித்தாள் - மின்

னல் போலத் துடித்தாள்; உயிர் கரப்ப - மூச்சுக் குறைய, சோர்ந்தாள் - துவண்டாள்; சுழன்றாள் - மனம் சுழலப் பெற்றாள்; துன்னினாள் - துள்ளிக் குதித்தாள்; துயரை குடித்தாள் - துன்பத்தைப் பருகினவளாய், உயிரோடும் குழைத்தாள் - உயிரோடும் அத் துன்பத்தைக் கூட்டிக் குழைத்தாள்; - உழைத்தாள் (இவ்வண்ணம்) மிகவும் வருந்தினாள். தான் : அசை.

இச் செய்யுட்கண் அவலத்தின் மெய்ப்பாடுகள் அனைத்தும் கூறப்பட்டமை காண்க. (ஒப்பு) 'விழுதல் விம்முதல்' சுந்தர. 334) எனத் தொடங்கும் சுந்தர காண்டத்துப் பாடல் காணத்தகும். முலைமேல் அடித்தல்: கமலப் பூவாற் குரும்பையைப் புடைக்கின்றாள் போற் கைகளான் முலைமேற் கொட்டி' (யுத்த. இராவணன் சோகப். 44); 'வளைகளோ டாரமேங்க முலைக்குவட் டெற்றுங்கையாள்' (யுத்த. 1927); வயிறலைத்தல்: 'மயன் மகள் வயிறலைத்தலறி மாழ்கினாள்' (சுந்தர. 979); 'வயிறலைத்தோடி வந்து கொழுநர்மேன் மகளிர் மாழ்கி' (யுத்த. 2405); 'அனல் வீழ்ந்த கொடி' 'எரியுறு தளிரின் வாடி'; துயரைக் குடித்தாள் : மரபு வழுவமைதி.

பி - ம். 1. அனல் விழித்தாள்.

3. நடித்தாள்.

4. உயிர் வந்தேஎகினாள், உயிரை யுயிரோடுங் குழைந்தாள்; உழைத்த; உலைந்தாள், உளைந்தாள். 8

2614. விழுந்தாள் புரண்டா ளுடன்முழுதும்
வியர்த்தா ளுயிர்த்தாள் வெதும்பினாள்
எழுந்தா ளிருந்தாண் மலர்க்கரத்தை
நெரித்தாள் சிரித்தா ளேங்கினாள்
கொழுந்தா வென்று ளயோத்தியர்தங்
கோவே யென்றா ளெவ்வுலகுந்
தொழுந்தா ளரசே யோவென்றாள்
சோர்ந்தா ளரற்றத் தொடங்கினாள்.

(பின்னும்) சீதாதேவி, விழுந்தாள் - (விமானத்தில்), விழுந்து, புரண்டாள் - புரண்டாள்; உடல் முழுதும் வியர்த்தாள் - உடல் முழுதும் வெயர்த்தாளாய், உயிர்த்தாள் - பெருமூச்செறிந்தாள், வெதும்பினாள் - மனம் வெந்தாள்; எழுந்தாள் இருந்தாள் - எழுந்து

உட்கார்ந்து கொண்டு, மலர் கரத்தை - தன் தாமரை மலர் போன்ற கரத்தை, நெரித்தாள் - (மடக்கிக் கொண்டு) நெரித்தாள்; சிரித்தாள் - நகைத்தாள்; ஏங்கினுள் - ஏக்கமுற்ருள்; கொழுந்தா என்ருள் - கணவனே என்று கூவினுள்; அயோத்தியர் தம் கோவே என்ருள் - அயோத்தியில் உள்ளவர்களுக்கு அரசே என்ருள்; எவ் உலகும் தொழும்தாள் அரசேயோ - எந்த உலகத்தவரும் வணக்கம் செய்யும் திருவடிகளையுடைய மன்னவா'! என்று விளித்தாள்; சோர்ந்தாள் - (மனம்). தளர்ந்தாள் ; அரற்ற தொடங்கினுள் - வாய் விட்டுக் கதறத் தொடங்கினுள். இவள் புலம்பலை அடுத்துவரும் பன்னிரண்டு பாடல்களிற் காண்க.

மலர்க்கரத்தை நெரித்தல் : இதுவும் சோக மிகுதியில் மகளிர் புரிவது. 'கையைக் கையின் நெரிக்கும்' (அயோத்தி. நகர் நீ. 11); பிராட்டி தனது இகழத்தக்க நிலையினைக் குறித்துச் சிரித்தாள். இஃது எள்ளல் பற்றி வந்தது; மற்றும் இவ்வளவு அவலம் நேர்ந்ததும் அரக்கரையும் பிறரையும் சபித்தழிக்காமல் வந்த நகை எனினுமாம். கொழுந்தன் - இலக்குவன் என்பாரும் உளர். தன் மனைவியான பிராட்டியைக் குகப்பிரானுக்குக் காட்டி, 'இந் நன்னுதலவனுள்கேள் நங்கை. 68 என்றதும், 'நங்கை கொழுந்தி' (சுந்தர. 352) என்றதும் காண்க. அயோத்தியர் தங்கோவே என்றமையாது பின்னும் 'எவ்வுலகுந் தொழுந்தாளரசே' என்றது திருமாலவதாரமாகிய இராமபிரான் மூவுலகங்கட்கு மிறைவன் ஆதல் குறித்து என்க.

பி - ம். 1. வெயர்த்தாளயர்ந்தாள், வெய்துயிர்த்தாஇ, மேன்மேலும்.
3. இரு கரத்தை, தளிர்க் கரத்தை.
3. ஏழுலகும், மூவுலகும். 9

## வேறு

### பிராட்டி அரற்றுதல்

2615. உறமே வியகா தலுனக் குடையார்
புறமே துமிலா ரொடுபூ ணகிலாய்
மறமே புரிவார் வசமா யினையோ
அறமே கொடியா யிதுவோ வருடான்.

அறமே - தரும தேவதையே? உற மேவிய காதல் உனக்கு (உடையார் - உன்பால்) மிகுதியாக அமைந்த அன்பினை யுடையவராய், (உனக்குப்) புறம் - புறம்பானரிடத்து, ஏதும் இலாரொடு - யாதொரு தொடர்பும் இல்லாதவரான என் காதலரோடு, பூணகிலாய் - நட்புரிமையை மேற்கொள்ள மாட்டாதவனாய், மறமே புரிவார் - பாவச் செயல்களையே செய்வார், வசம் ஆயினையோ - (அரக்கரது) வசமாகி விட்டனையோ? கொடியாய் கொடியோய்? அருள் தான் இதுவோ - அருள் என்பது இத்தன்மையதோ? ஓகாரம் : வினா. தான் அசை.

அறமானது தருமநெறி மேற்கொண்டவரான இராமபிரானை விடுத்து மறநெறி பூண்டவர்பால் உறவாடியதாக்க் குற்றம் சாட்டுகின்றாள் தேவி. மறம் : பாவச் செய்கை. 'மறந்தருதீ நெறிமாற (பெரிய பு. திருநாவு. 11).

பி - ம். 2. புறமே துயிலாரொடு, புறமே துயில்வாரொடு, புறமே பயிலாரொடு; பூண் முலையார்.

4. இவையோ. 10

இச் செய்யுட் சந்தத்துடன் பால. கடிமணப். 3—18-ம் சுந்தர (காண்டம் 491-497-ம்) செய்யுட் சந்தங்களையும் ஒப்பு நோக்குக.

2616. முதியா ருணர்வேத மொழிந் தவலாற்
கதியே துமிலார் றுயர்கா ணுதியோ
மதியேன் மதியே னுனைவாய் மையிலா
விதியே கொடியாய் விளையா டுதியோ.

'வாய்மை இலா விதியே - உண்மையில் ஒருதலையான பற்றில்லா ஊழ்வினையே! முதியார் உணர் வேதம் மொழிந்த வலால் - அறிவு முதிர்ந்த பெரியோரால் நன்கு அறியப்பட்ட வேதம் கூறிய முறையல்லாமல், கதியேதும் இலார் - வேறு வழியில் செல்லாதவரான எம்போன்றவரின், துயர் காணுதியோ - துன்பத்தைக் காணக் கடவையோ? உனை மதியேன் - உன்னை ஒரு பொருட்டாக எண்ணேன்; கொடியாய் - கொடியாய். விளையாடுதியோ - நீ (இவ்வாறு விளையாடுகின்றாயோ? ஓ : வினா.

உண்மையால் உயர்ந்தாரை வீழ்த்தும். அதற்கு மாறான வழியில் நிற்பவரை வாழ்வித்தும் நிற்றலின், வாய்மையிலா விதி என்றழைத்தாள். முதியார் : ஞான முதிர்ந்த முனிவர்கள். வாய்மையிலா விதியே - உண்மையை ஒருதலையாகச் சாராத ஊழ்வினையே.

பி - ம். 1. மொழிந்தகலார்.

3. மதியே மதியேயுனை, மதியான் மதியேனுனை, மதியே மதியேனுள ; வாய்மையினல். 11

இதன்பின் 'உறமே என்ற பாடல்' சில பிரதிகளில்.

2617. கொடியே னிவைகாண் கிலனென் னுயிர்கோள்
முடியா நமனே முறையோ முறையோ
விடியா விருள்வா யெனைவீ சினையே
அடியே னுயிரே யருணா யகனே.

'கொடியேன் - கொடியவளாகிய யான், இவை - (இராம இலக்குவர்க்கு நேர்ந்துள்ள), இந்த அவல நிலைமையைக் காண்கிலேன் - காணப் பொறேன் ; என் உயிர்கோள் முடியாத நமனே - என் உயிரைக் கொண்டு எனக்கு முடிவு செய்யாத யமனே ! முறையோ முறையோ - நான் இருந்தேங்குமாறு அவ் விருவருயிரை மட்டும் கவர்ந்தது முறையோ? முறையோ?, அடியேன் உயிரே - என் உயிர் போன்றவனே ! அருள் நாயகனே - என் பால் பேரருள் கொண்டிருக்கும் என் தலைவனே !, விடியா - இருள் வாய் எனை வீசினையோ - என்றும் புலராத இருளிடத்து என்னை உதறித் தள்ளி விட்டாயோ?' ஓ : வினா.

முன்னிரண்டடி இராம இலக்குவருடைய உயிரைக் கவர்ந்த யமனிடம் செய்த முறையீடு ; பின்னிரண்டடிகள் தன்னைத் துயரத்துக்காளாக்கி விட்டு விண்ணடைந்த இராம இலக்குவரைக் குறித்துச் சீதாதேவி புலம்பியது. முறையோ முறையோ என்ற அடுக்கு, பிராட்டியின் அவலமிகையைச் சுட்டி நின்றது. வீசுதல் : அலட்சியமாகத் தூக்கி எறிதல், 'அவன் வில்லின் ஆற்றற்குமா சென்று வீசினேன்' (சுந்தர. 624) ; அடியேனுயிரே 'எனக்குயிர் பிறிது முண்டென்றெண்ணலை' (யுத்த. 1590) என்று பிராட்டியும் 'உரைசேராயிரே யென்னுள்ளமே' (கிட்கிந்தா. 385) 'ஐயா நீயென தாவி யென்றதும் பொய்யோ' (கிட்கிந்தா. 390) 'செருவார்

தோளநின் சிந்தை யுளேனெனில், மருவார் வெஞ்சரமெனையும் வவ்வுமால், ஒருவே னுள்ளுளை யாகிலுய்தியால், இருவே முள்ளிருவே மிருந்திலேம்' (கிட்கிந்தா. 391) எனத் தாரையும் கூறுவது காண்க.

பி - ம். 1. கொடியேனுயிர்; காண்கிலேன்; கொண்டுயிரை.

2. முடியாய்; தவமே.

3. இருனாகென; வீசினையோ.

4. நாயகமே. 12

2618. எண்ணு வுயிரோ டுமிருந் ததுநின்
புண்ணு சியமே னிபொருந் திடவோ
மண்ணோ ருயிரே யிமையோர் வலியே
கண்ணே யமுதே கருணா கரனே.

'மண்ணோர் உயிரே - உலகில் உள்ளோர்க்கு உயிர் போன்றவனே! இமையோர் வலியே - (பகைவரை ஒழித்துக் கட்டுவதனால்) வானோர்க்குச் சிறந்த வலிமையாக உள்ளவனே! கண்ணே - எனது கண் போன்றவனே! அமுதே - அமுதம் போன்று சுவைப்பவனே! கருணாகரனே - அருளுக்கு இருப்பிடமானவனே! எண்ணு - (எனக்குற்ற துன்பங்களைச் சிறிதும்) பொருட்படுத்தாமல், உயிரோடும் இருந்தது - (நான் இத்தனை நாள்) உயிருடன் கூடி இருந்தது, நின் - உன்னுடைய, புண்ணுகிய மேனி பொருந்திடவோ - புண்பட்ட உடலுடன் கூடுவதற்காகவோ?

'அரக்கராற் சிறைப்படுக்கப்பட்டிருந்தும் நான் இத்தனை நாள் உயிருடன் நிலைத்திருந்தது அரக்கரை அழித்து வெற்றியுடன் மீளும் உனது திருமேனியைச் சேர எண்ணியன்றோ; உனது புண் தைத்த மேனியைக் கூடுதற்கன்றே' என்று பிராட்டி புலம்புகின்றாள். 'நாணிலா திருந்தே னல்லேன்; நவையறு குணங்களென்னும், பூணெலாம் பொறுத்த மேனி புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாமின்னும் என்னும் ஆசையா லிருந்தேன் கண்டாய்' (யுத்த. 1588) என்றும், 'வாரா தொழியான் எனும் வண்மையினால், ஓராயிரகோடி யிடர்க்குடையேன்' (சுந்தர. 494); என்றும் பிராட்டி கூறியது காண்க. எல்லா வுயிர்க்கும் உயிராக வுள்ளவன்

பெருமான் ஆகலின் 'மண்ணேருயிரே' என்ருள். எண்ணது என்பது ஈறு குறைந்தது: உறுப்புக்களிற் சிறந்தது ஆகலின் கண்ணைக் கூறினர். உயிரைக் காக்கும் இயல்பினதாதலின் அமுதே எனப்பட்டது. திருமாலுக்கு ஆராவமுதன் என்னும் பெயருண்மையும் காண்க. முத்திக்கும் அமுதம் என்ற பெயருண்டாகலின் முத்திவடிவனே எனினுமாம்.

பி - ம். 1. மயலோடும்.

2. பொருந்துறவோ.

3. கருணுகரனே யமிழ்தே. 13

2619. மேவிக் கனன்முன் மிதிலைத் தலையென்
பாவிக் கைபிடித் ததுபண் ணவநின்
ஆவிக் கொருகோள் வரவோ வலர்வாழ்
தேவிக் கமுதே மறையின் றெளிவே.

'அலர் வாழ் தேவிக்கு அமுதே-தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளுக்குத் தேவாமிர்தம் போன்றிருப்பவனே! மறையின் தெளிவே - வேதங்களினுல் (முதற் பொருள் என்று) தெளியப் பெற்றவனே! பண்ணவ - கடவுளே; மிதிலைத் தலை - மிதிலா நகரிடத்தே, கனல்முன் மேவி - அக்கினியின் முன்னே விரும்பியமர்ந்து (நீ), பாவி என் கைபிடித்தது - பாவியாகிய என்னுடைய கரத்தைப் பிடிததது, நின் ஆவிக்கு ஒரு கோள் வரவோ - உனது உயிருக்கே ஓர் தீமை நிகழ்தற்குத்தானே?

உனக்கு இப்பொழுது நேர்ந்துள்ள விபத்து தீ வேள்வியில் என்னைப் பாணிக்கிரகணம் செய்ததனுல் தானே என்று பிராட்டி வருந்துகின்ருள். இராமபிரானைத் திருமாலின் திருவவதாரம் என்று பிராட்டி தெளிந்தவளாதலின் 'அலர் வாழ் தேவிக்கமுதே' என்ருள்.

மிதிலைத் தலைமேவி என மொழி மாற்றிக் கூறலுமாம். தலை: ஏழனுருபு; பாவிக்கை என்று பாவி என்ற சொல்லைக் கைக்கேற்றியும் பொருள் செய்வர். 'ஏர் பிடித்தவன் என்ன செய்வான், பானை பிடித்தவள் பாக்யம்' என வழங்கும் முதுமொழி யிங்குக் காண்க. பண்ணவன் ஆரணிய. 817, கிட்கிந்தா. 364. 'அலர் வாழ் தேவிக்

கழுதே' என்று தன்னைத் திருமகளிடத்திலிருந்தும் வேறுபடுத்திக் கூறினள். 'மண்ணவர் பண்ணவர்' (மீனாட்சி பிள்ளை. 39), கோள்: தீமை, (திவா) மறையின் தெளிவே - மறையினால் நன்கு தெளியப் பட்ட பரம்பொருளே.

பி - ம். 1. வேள்விக்கனல்.
2. மன்னவநின்,
4. திருவே. 14

2620 உய்யா ளுயர்கோ சலைதன் னுயிரோ
டையா விளையோ ருயிர்வாழ் கிலரால்
மெய்யா வினையெண் ணிவிடுத் தகொடுங்
கைகே சிகருத் திதுவோ களிறே.

'களிறே - ஆண் யானை ஒப்பவனே! உயர் கோசலை தன் உயிரோடு உய்யாள் - (உனக்கு நேர்ந்துள்ள இந்த அவச நிலையைக் கேட்பின் நற்பண்புகளாற் சிறந்த உனது அன்னை) கோசலாதேவி உயிருடன் பிழைத்திராள், மெய்யா - சத்திய சந்தனே! ஐயா - தலைவனே! இளையோர் உயிர் வாழ்கிலர் - இளையோராகிய பிறரும் இனி உயிருடன் வாழமாட்டார்; வினை எண்ணி - (நமக்கு நிகழவிருக்கும்), கெடுதியை எண்ணி, விடுத்த - வனம் செல்லுமாறு அனுப்பிய, கொடு கைகேசி கருத்து இதுவோ - கொடுமை மிக்க கைகேசியின் எண்ணம் இதுதானோ? (எல்லோரும் இறந்துபடத் தான் மட்டும் தன் மகனோடு இனிது வாழ்ந்திருத்தலோ)? ஆல்: அசை; ஓகாரம்: ஐயம்.

இங்கு கைகேசியைப் பழித்துரைக்கின்றாள் பிராட்டி. தனது கண் போன்ற இராமபிரான் காடு சென்ற நிலையிலும் மனச்சலிப் பின்றித் தன் கணவனான தயரதன் சேவையிற் கண்ணும் கருத்து மாக இருந்தது பற்றி 'உயர் கோசலை' எனப்பட்டாள். வரன் முறை தவறி மூத்தவற்குரிய அரசினை இளையவனான தன் மகனுக்கு வலிந்து பெற்றுப் பல இன்னல்கட்குக் காரணமாக இருந்தவளாகலின் 'கொடுங் கைகேசி' எனப்பட்டாள். இளையோர் - கோசலைக்கிளையவரான தயரதன் மனைவிமார்; தம்பிமாருமாம். மெய்யா: சத்தியசந்தனே. 'தருமஞ்ஞஸ்ச கிருதஞ்ஞஸ்ச, சத்திய வாக்யோ த்ருடவிருதகா' என்பது முதனூல்: 'மறையினு

மெய்யன்' (கிட்கிந்தா. 105) மெய்யா; விளி: கருத்து மெய்யாக இதுவோ என்றும் இணக்கலாம். அப்பொழுது மெய்யாக என்பது ஈறு குறைந்ததெனக் கொள்க. களிறு: உவமவாகு பெயராக இராமபிரானைச் சுட்டியது. அன்பு பற்றி இவ்வாறு கூறுவது மரபு: 'எம் பெருங் களிறே காண வேசற்றே னெழுந்திராயே' (யுத்த. இராவணன் சோகப். 50); வினை எண்ணி விடுத்தது அயோத்தி. கைகேசி சூழ்வினைப்படலத்துக் காண்க.

பி - ம். 1. உய்யார்; உயிர்; இன்; உயிரோ, உயிரும்.

2. இனையோனக ராளகிலான், இனையாரவர் வாழ்கிலரால்' இனையானகர் வாழ்கிலனும்.

3. மெய்யா.

15

2621. தகைவா ணகர்நீ தவிர்வா யெனவும்
வகையா துதொடர்ந் தொருமான் முதலாப்
புகையா டியகா டுபுகுந் துடனே
பகையா டியவா பரிவே துமிலேன்.

'தகை - பலவகை அழகுகளும் நிறைந்த, வாள் நகர் - ஒளிமிக்க (அயோத்தி) நகரில்தானே, நீ தவிர்வாய் - நீ தங்கியிருப்பாய்', எனவும் - (நீ என்னை நோக்கி நின்று) சொல்லவும், நான்வகை யாது - ஒருவகைப் படுத்தாமல் (அந்தச் சொற்களைச் செவியேற் காமல்), தொடர்ந்து - உன்னைப் பின்பற்றி, புகையாடிய காடு புகுந்து - ஆங்காங்குத் தீப்பற்றிப் புகை பரந்த காட்டிலே புகுந்தத னுல்; உடனே - உடனே, (என் பொருட்டாக), ஒரு மான் முதல - ஒப்பற்ற பொன்மான் முதலாக, பகை - பகைவர்களை, ஆடிய - கொல்லுமாறு நேர்ந்த, ஆ - விதம் (இருந்தவாறு) என்னே! ஏதும் இலேன் - இத்தகைய உன் திறத்தில் அன்பு சிறிதும் இலேன்.

இராமபிரானுக்குக் காட்டில் நிகழ்ந்துள்ள இடர்கள் அனைத் தும் தான் அவனை வலியப் பின் தொடர்ந்ததனுல்தான் என்று இரங்கிப், பரிவேதுமிலேன் என்றுள் என்க. தகை: அழகு; 'தாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி' (புறநா. 59, 2); 'ஆதரிக்கின்ற அவ்வுலகத்தோ ரிழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்தி மாநகரம்' (பால. நகரப். 1); மற்றும், 'நிலமகள் முகமோ'

(பால. நகரப். 2) என்ற செய்யுளும் காணத்தகும். தவிர்தல்: தங்குதல்; 'இடைச்சுர மருங்கிற் றவிர்தலில்லை' (தொல். பொ. 194); இராமபிரான் மாட்டு உண்மையான அன்பு தனக்கு இருந்திருக்குமாயின் அவன் அவச நிலைமையில் தன் உயிரும் உடனே உலந்திருத்தல் வேண்டும். அங்ஙனம் நிகழாமையின் தனக்கு அன்பு சிறிதும் அவன்பாலில்லை யென்று தன்னையேதான் பழித்தவளாய்ப் பரிவேதுமிலேன் என்றாள் பிராட்டி. நகர் நீ தவிர்வாய்: 'கற்றடங் கண்டு நான், வருவெனீண்டு வருந்தலை' அயோத்தி. நகர்நீ. 221) என்று இராமபிரான் பணித்தபோதில், 'காட்டயற், கல்லரக்கும் கடுமைய வல்லவின், சில்லரக்குண்ட சேவடிப்போது' என்று சொல்லித் தன்னுடன் பிராட்டி காட்டிற்குத் தொடர்வதை விலக்கா நிற்கவும், தான் பிடிவாதமாகத் தொடர்ந்ததனுல்தானே, மாய மானுகிய வந்த மாரீசன் முதலானவர்களோடு போர் நேர்ந்தது என்று தன்னை நொந்து கொண்டாள் சீதாதேவி.

இச் செய்யுட்குப் பிறிதொரு வகையிலும் உரை கூறலாம். அது பின்வருமாறு:

'தனக - அழகு பொருந்திய, நகரை - (அயோத்தி) நகரை, தவிர்வாய் - இராமா நீ துறந்து செல்' எனவும் - என்று கைகேசி கட்டளையிடவும், வகையாது - அதற்கு மறுத்துரையாடாமல், தொடர்ந்து - அந்தக் கட்டளையைப் பின்பற்றி, புகை ஆடிய காடு புகுந்து - தீப்பட்டெரிவதால் புகை பரந்து நின்ற காட்டிற் புகுந்து, ஒருமான் முதலா - ஒப்பற்ற மானை முதலாகக் கொண்டு, உடனே - உடனே, பகை ஆடியவா - நீ பகைவரைக் கொன்றவாறு என்னே! (இத்தகைய உன் அன்பின் திறத்தில்) பரிவு இலேன் - (நான்) சிறிதும் அன்பில்லாதவளாக உள்ளேன் என்றாள் சீதாதேவி.

பி - ம். 1. வாளகர், வாணகை.
2. வகையாது நயந்தொரு, முதலாய்ப்.
4. பகை நாடிய யான். 16

இதன் பின் 'மேதா' என்ற பாடல் ஓர் பிரதியில்.

2622. இன்றே கிலையே லிறவிவ் விடைமான்
அன்றே யெனவும் பரிவோ டடியேன்
நின்றே வதுநின் னைநெடுஞ் செருவிற்
கொன்றே வதொர் கொள்கை குறித்தலினே.

'இன்று - இன்றைக்கே, இவ் இடை - இந்த இடத்தில், மான் ஈகிலேயேல் - பொன் மானை எனக்குப் பிடித்துத்தராவிடில், இறவு - மரணம் உறுவது நிச்சயம்; (ஆதலின் இதனை), ஈ - தந்தருள்க, எனவும் - என்று வேண்டவும், (உடனே இராமபிரான் பிரிந்து சென்றதன் காரணமாக) பரிவோடு - துன்பத்தோடு, நீன்றிவது - நான் தனிப்பட்டு நின்றது, நெடு .செருவில் - நீண்ட போரில், கொன்று ஈவது கொள்கை குறித்தலினே - கொல்வதாகிய ஓர் கோட்பாட்டினைக் கருதியதால்தானே?

பொன் மான் வேண்டும் என்று பிராட்டி கூற அதனை வீழ்த்தியபோது, அரக்கன் 'சீதாலக்ஷ்மணா' என்று கூக்குரலிட்டு மரிக்க, குரல் இராமபிரானது என்று தவறாக எண்ணி இளைய பெருமானை வைது விடுத்தாளாக, இலக்குவன் பிரிந்து சென்றதே, பிராட்டியை இராவணன் கவர்ந்து செல்ல இடம் தந்து, இராம பிரானைப் பல்வகை யிடர்க்குட் படுத்தியதாகலின் 'பரிவோடடியேன் கொன்றிவதோர் கொள்கை குறித்தலினே' எனப்பட்டது.

இனி முன்னிரண்டடிகட்கு, 'இன்றீச் சிலையே பிறரில் விடை வாய், பின்றீயெனவே பிரிவோ டடியேன்' என்ற பாடம் கொண்டும் பொருள் கொள்வர். நின்றீவது: தொழிற் பெயர் வினைத்திரி சொல்; 'செல்லாது நின்றீயல்' என்ற கலித் தொகையில் இங்ஙனமே நச்சினார்க்கினியர் கூறியிருத்தல் காண்க. கொன்றீவது என்பதும் இது போன்றதே.

பி - ம். 1. பிறன்.

2. பன்றி; பரிவோடு.

4. நீமை; குறித்திலரோ, குறித்ததினே, கொடுத்தலிலோ. 17

இதன் பின் 'நெய்யார்' என்ற பாடல் சில பிரதிகளில்.

2623. மேதா வினையோய் விதியார் வினைவாற்
போதா நெறியெம் மொடுபோ துறுநாள்
மூதா னவன்முன் னமுடிந் திடெனும்
மாதா வுரையின் வழிநின் றனையோ.

'விதியார் வினைவால் - ஊழ்வினையின் பயனாக, போதா நெறி - கடப்பதற்கு அருமையான காட்டு வழியிலே, எம்மோடு - (நான்

என் கணவன்) என்ற எங்களிருவருடன், போதுறு நாள் - செல்லப் புறப்பட்ட அக்காலத்தில், இளையோய் - இளையோனே! மேதா - அறிவாளியே! 'மூதானவன் - (உன்னிலும் வயது) முதிர்ந்தவனான இராமபிரான், (விதி காரணமாக இறக்க நேரின்), முன்னம் முடிந் திடு - (அவன் மரிப்பதற்கு முன்னரே நீ இறந்து விடு, எனும் என்று கட்டளையிட்ட, மாதா உரையின் வழி நின்றனையோ - (உனது) அன்னையாகிய சுமித்திரா தேவியின், ஆணையின் வழியிலே இருந்து விட்டாயோ' (இறந்து விட்டாயோ) ஓகாரம் : வினா.

கைகேயியின் கட்டளையின்படி வனம் நோக்கிப் புறப்பட்ட இராமபிரான் பின்செல்லுமாறு தன் அன்னை சுமத்திரைபால் விடை பெறச் செல்லும்கால், அப்பெரியாள் மகனை நோக்கி, 'மகனே, இவன் பின் செல், தம்பி என்னும் படியன், றடியாரினி னேவல் செய்தி, மன்னும் நகர்க்கே யிவன் வந்திடின்வா அதன்றேல், முன்னம்முடி' என்று கூறியதனை யுட்கொண்டு, இராமபிரானுக்கு முன்னமே நீ இறந்தனையோ' என்று கொழுந்தன் இறந்து கிடந்தது கண்டு பிராட்டி இரங்கிக் கூறியவாறு. மேதை : அறி வாளி, விதியார் வினைவு : ஊழ்வினையின் பயன்; போதாநெறி - அடிப்படாத காட்டு வழி; விதியின் விளையாட்டு இக் காப்பியத்தில் பலராலும் பலவிடங்களிலும் குறிக்கப்படும். 'விதியின் பயனீயிதற் கென்னை வெகுண்டது' (அயோத்தி. நகர்நீ. 133); 'விதி கொடுந்த விளைந்தது' (யுத்த. 737); 'விதியை யார் தீர்க்ககிற்பார்' (யுத்த. 1375); போதா நெறி போதுறு என்பதில் முரண் தொடை காண்க. 'முன்னம் முடிந்திடு' என்னும் கருத்து, 'என்றுயுன் முன் னேயினயாவு மிசையின்னல், பின்றுதெய்திப் பேரிசை யாளர்க் கழிவுண்டேல், பொன்று முன்னம் பொன்றுதி யென்று ளுரை பொய்யா, நின்றுலன்றே நின்றது வாய்மை நிலையம்மா' (ஆரணிய. 1160) என்ற இடத்தும் குறிக்கப் பெறுதல் காண்க.

பா - ம். 1. வேதா வினைபோய், வேதா வினையோய்.

2. போதே.

3. மூதாவிவன்.

2624. பூவுந் தளிருந் தொகுபொங் கணைமேற்
கோவின் துயிலைத் தவிர்வாய் கொடியார்
ஏவின் றலைவந் தவிருங் கணையின்
மேவும் குளிர்மெல் லணைமே வினையோ.

'பூவும் தளிரும் - மலர்களும் தளிர்களும், தொகு - நிறைந்த, பொங்கு அணைமேல் - பூரிப்பினை அளிக்கும் படுக்கையில் (படுத்து), கோவின் துயிலை தவிர்வாய் - அரசன் கொள்கின்ற உறக்கத்தை ஒழித்தவனே! கொடியார் - தீயவரான அரக்கருடைய, ஏவின் தலை வந்த - வில்லினிடத்திருந்து வெளிவந்த, இரு கணையின் - பெரிய அம்புகளால், மேவும் - அமைந்த, குளிர்மெல் அணை மேவினையோ - குளிர்ந்த மிருதுவான (சரதல்பத்தை), (இப்போது) விரும்பி அடைந்தாயோ? ஓகாரம்: வினா.

இச்செய்யுள் கீழே கிடந்த இலக்குவனை நோக்கிப் பிராட்டி கூறியது; பொங்கு கணை: போகமும் மகிழ்ச்சியும் பொங்குதற்குக் காரணமான அணை. அரிய அமளி: 'தனித்தார்க்குப் பொறுத்தற் கரிய படுக்கை' (சீவக. 1304; நச். உரை) என்றாற்போல. கோவின் துயில்: அரசர் பெருமகன் ஐந்தடுக்கமளிமேல் கொள்ளும் உறக்கம். ஏ: அம்பு. இங்கு அம்புகள் விடுதற்கிடமான வில்லிற் காகி வந்தது. இருங்கணை: இருமை: பெருமை. கணையின் மேவும் குளிர்மெல்லணை: பிறகுறிப்பு; அரசிளங் குமரனுய்த் துயில வேண்டிய நிலைக்கும்; இங்கு போர்க்களத்தில் சரதல்பம் என்ற அம்புப்படுக்கையில் கிடந்ததற்கும் வேற்றுமை காட்டி அவலத்தை மிகுத்தவாறு (ஒப்பு): சீவக. 306—310 காண்க. காம்பரிந்த மல்லிகை மலர்களை மெத்தைமீது பரப்பும் வழக்கமாதலின் 'பூவும் தளிரும் தொகு' எனப்பட்டது.

பி - ம். 1. தரு, தகு; பொங்கணையிற்.
2. கோவுந், கோமின்; துயிலத், துயிலித்; தருவாய், துயிலாய்; கொடியான்.
3. ஏவுன்; கணையாம். 19

இதன்பின் 'மழுவாள' என்ற பாடல் ஓர்பிரதியில்.

2625. நெய்யார் அழல்வேள் விநிரப் பிநெடுஞ்
செய்யார் புனனு டுதிருத் துதியால்
மெய்யா கியவா சகமும் விதியும்
பொய்யா னவென்மே னிபொருந் துதலால்.

'நெய் ஆர் அழல் வேள்வி நிரப்பி - நெய் நிறையப் பெய்து அக்கினி வளர்த்துச் செய்யப்படுகின்ற யாகங்களை முடித்துக் கொண்டு, நெடு செய் ஆர் - நீண்ட வயல்கள் நிறைந்த, புனல் நாடு - நீர்வளம் செறிந்த கோசல நாட்டினை, திருத்துதி - மனு நீதி தவறாமல் ஆண்டிருப்பாய்; நீ, என்மேனி பொருந்துதலால் - என் உடலைத் தீண்டியதனால் - (என்னை விவாகம் செய்து கூடியதால்) மெய்யாகிய வாசகமும் - உனது உண்மையான சொற்களும், விதியும் - உனது நல்வினைப் பயனும், பொய்யான - பொய்த்துப் போயின. ஆல் : ஈற்றசை.

மன்னனாக இருந்து : கோசலை நாட்டில் முடி சூடியிருப்பின் பலவகை வேள்விகளைச் செய்து, மனு நெறிதவறாமல் ஆட்சி புரிந்திருக்கக் கூடும். தன்னை மணந்ததனால் அந்தப் போகங்கள் எல்லாம் இன்றாயின, என்றிரங்குகின்றாள் தேவி. 'உமையாளைப் பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான்' (தனிப்பா.). இச்செய்யுள் 'மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த யாரும், செய்யாத யாகமிவன் செய்து மறந்த' என்ற கவியை நினைப்பூட்டுகின்றது.

பி - ம். 1. பெருவேள்வி, எரி, புரி.
2. திருத்துதியாம், திருத்துதியோ, திருத்துமெனும், திருந்துதியோ.
3. வாய்மையு நீதியு நீ.
4. பொய்யானவன் ; பொய்யாயதென். 20

## வருந்திய சீதை இராமபிரான்மீது விழப்புக, திரிசடை தடுத்தல்

2626. மழுவாள் வரினும் பிளவா மனனுண்
டழுவே னினியென் னிடரா றிடயான்
விழுவே னவன்மே னியின் மீதிலெனு
எழுவா ளைவிலக் கியியம் பினளால்.

'மழு - எரியீட்டி என்னும் ஆயுதமும், வாள் - வாட் படையும், வரினும் - வந்து பிளந்தாலும், பிளவா மனன் உண்டு - பிளக்கப் படாத உளத்தைக் கொண்டு, அழுவேன் - புலம்பும் யான், இனி - இனிமேல், என் இடர் ஆறிட - என் துன்பம் தணியும் வண்ணம், அவன் மேனியின் மீதில் விழுவேன் - அந்த இராமபிரானுடைய திருமேனிமீது விழுந்து மரிப்பேன்', என - என்று சொல்லி, எழுவாளை - எழுந்தவளாகிய பிராட்டியை, விலக்கி இயம்பினளால் - தடுத்துத் (திரிசடை) கூறலானாள். ஆல்: ஈற்றசை.

கணவன் இறந்த நிலையிலேயே தன் உயிர் கொண்டு அவன் உயிர் தேடுவாள்போல் தானும் இறந்திருத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாது வெறும் அழுகையை மாத்திரம் மேற்கொண்டமையின், 'மழுவாள் வரினும் பிளவா மனன்' என்று தன் கடினசித்தத்தைக் குறிக்கின்றாள் பிராட்டி; (ஒப்பு): 'பார்குலாம் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை, ஈர்கிலாக் கள்வனேன்' (அயோத்தி. கங்கைப். 44) என்று குகன் கூறுவது காண்க.

பி - ம். 1. உறினும்; மனனோடு.

2. அழுவாரினி யென்னிடர், அழுவேனினி யின்றிடர், எழுவேனெனி யின்னிடர், எழுவானெனினின்றிடல்; ஆறுவனியான், ஆற்றிடுநாள்.

3. விழுவான்.

4. இயம்பினர். 21

## வேறு

### திரிசடை அரக்கியரை விலக்கிச் சீதையிடம் சில சொல்லத் தொடங்குதல்.

2627. மாடுற வளைந்து நின்ற
வளையெயிற் றரக்கி மாரைப்
பாடுற வகற்றி நோக்கிப்
பாவையைத் தழுவிப் பற்றிக்
கூடின ளென்ன நின்று
செவியிடைக் குறுகிச் சொன்னாள்
தேடிய தவமே யன்ன
திரிசடை மறுக்கந் தீர்ப்பாள்.

தேடிய தவமே அன்ன திரிசடை - (முற் பிறப்பிலே சீதா தேவி) தேடி வைத்த தவம் போன்றிருப்பவளான திரிசடை என்பவள், மறுக்கம் தீர்ப்பாள் - (அந்தப் பிராட்டியின்) மனக் கலக்கத்தை அகற்றுபவளாகி, மாடுற வளைந்து நின்ற வளை எயிறு அரக்கிமாரை பாடு உற அகற்றி - நெருக்கமாக அவள் பக்கத்தில் சூழ்ந்து நின்ற இராக்கத மகளிரைப் பக்கத்தில் சென்று ஒதுங்கு மாறு போக்கி, பாவையை நோக்கி - பிரதிமை ஒத்தவளான சீதா பிராட்டியைப் பார்த்து, குறுகி - நெருங்கி, பற்றி தழுவி - இறுக அணைத்துக்கொண்டு, கூடினள் என்ன நின்று - அவள் உடலுடன் ஒன்றிவிட்டாள்போன்று இருந்து, செவி இடை சொன்னாள் - அவள் காதினிடத்து மொழிபவளானாள்.

மாடு : பக்கம் ; 'மாடு பற்றி யிடங்கர் வலித்திட' (கிட்கிந்தா. 338) ; வளைந்து நின்ற அரக்கிமார், 'வன்மருங்குல் வாளரக்கியர் நெருக்க வங்கிருந்தாள்' (சுந்தர. 332) ; பாவை : உவமவாகு பெய ராகப் பிரதிமையைப் போன்ற பிராட்டியைக் குறித்தது. குறுகிப் பற்றித் தழுவியெனக் கொண்டுகூட்டாகப் பொருள் செய்யப் பட்டது. சொல்ல வேண்டியவைகள் பரம ரகசியமானதும் பிறர் அறிதற்குரியன வல்லாதனவுமாகலின் செவியிடைக் குறுகிச் சொன்னாள் எனப்பட்டது. தேடிய: முற்பிறப்பிலே நாடியடைந்த ; ஒரு பிறப்பில் செய்த புண்ணிய பாவங்கள் பல பிறப்புக்களிலும் தொடரும் என்ற கொள்கை பற்றி இங்ஙனம் கூறப்பெற்றது. (ஒப்பு) ; 'உம்பர் தம் படைகளெல்லாம், தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்களெல்லாம், மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்தவன்றே' ; 'முன் செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே' (பட்டினத்தார் தனிப்பாடல்) ; 'முன் செய்த தவத்தி னீட்ட முடிவிலா வின்பமான, அன்பினை யெடுத்துக் காட்ட' (பெரியபு. கண்ணப்ப. 102) ; பாவை : 'எழுது பாவை' (சுந்தர. 689) ; 'அனங்கவேள் செய்த ஓவியம்' (சுந்தர. 340) ; 'ஆவி யுண்டிலை யென்னச் செய்த வோவியம் ஒக்கின்றாளை' (யுத்த. மாயா சீதை. 92) ; தவமே அன்ன திரிசடை : தவமே வடிவு கொண்டா லொத்ததிரிசடை, (ஒப்பு) 'காழியர் தவமே கவுணியர் தனமே' (பெரியபு. திருஞான. 91). திரிசடை : இவளை முச்சடை யென்றும் கூறுவர் கம்பநாடர் ; (சுந்தர. 488) ; இவள வீடணன் மகள், இவளை அன்பினால் தாயினுமினியவள் என்பர். (சுந்தர. 360) ; 'இன்

சொலால் திருந்தினள்' (சுந்தர. 359) இவளைக் கன்னி என்றே குறிப்பர்: 'கன்னி யென்வயின் வைத்த கருணையால்' (சுந்தர- 28) என்று அவளே கூறுதல் காண்க. 'சிந்தை பேர்ப்பன செஞ் சொலாளத் திரிசடை' (யுத்த. மாயா சீதை. 93); திரிசடையின் சிறந்த பண்புகள்: இப் பெண்ணைத் தவிர்த்துப் பிற அரக்கி மாரைக் கொல்வதற்கு அநுமன் பிராட்டியிடம் அநுமதி கேட்டது கொண்டும் (யுத்த. மீட்சிப். 31); 'வணங்கு நுண்ணிடைத் திரிசடை வணங்குவாள் கற்பிற், கிணங்கரின்மையாள் நோக்கியோ ரிடரின்றி யிலங்கைக், கணங்குதானென விருத்திய' (யுத்த. மீட்சி. 147), என்று பிராட்டியே அப் பெரியாளை நோக்கிக் கூறியது கொண்டும் தெளியலாம். மறுக்கம்: மனக் கலக்கம்; 'வல்லிய மருங்கு கண்ட மானென மறுக்கமுற்ற' (யுத்த. 1584); 'மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினர்' (ஆரணிய. 123) பிராட்டி தன் உயிரை யிழக்கத் துணிந்த போது அருகிலிருந்து தேறுதல் கூறி அவட் குதவி புரிந்தவளாகலின் 'தேடிய தவமே யெனப்பட்டது' வேண்டிய வேண்டியாங் கெய்துமாறு செய்வது தவம் என்ப துணர்க.

பி-ம். 1. வாளெயிற்று.

2. அற்ற நோக்கி; நீக்கி நின்ற பாவையைத், அவரை நீக்கிப்பாடுற; தழுவிக்கொண்டு.

4. தேடிய தெய்வம்; என்னத்; மயக்கந் தீர்ப்பாள். 22

## திரிசடை சீதாபிராட்டியின் கலக்கம் தீர்த்தல்

2628. மாயமான் விடுத்த வாறுஞ்
சனகனை வருத்த வாறும்
போயநாள் நாக பாசம்
பிணித்தது போன வாறும்
நீயமா நினையாய் மாள
நினைதியோ நெறியி லாரால்
ஆயமா மாய மொன்று
மஞ்சலை யன்ன மன்னாய்.

'அன்னம் அன்னாய் - அன்னம் போன்ற தாயே! போய நாள் - கழிந்த நாட்களில், மாயமான் விடுத்த ஆறும் - (இராவணன்

மாரீசன் என்ற) மாயையால் மானாக வந்தவனை (உன்னை மயக்குமாறு) அனுப்பிய வண்ணமும், சனகனை வகுத்த ஆறும் - மாயா சனகனைக் கொணர்ந்து காட்டிய வண்ணமும், நாகபாசம் பிணித்தது போன ஆறும்-அரவக் கணையால் (இராம இலக்குவர்) கட்டப்பட்டு அந்தக் கட்டு நீங்கின வண்ணமும், அம்மா-கேட்பாயாக! நீ நினையாய் - நீ எண்ணிப் பாராதவளாய், மாள நினைதியோ - உயிரை மாய்த்துக் கொள்ளுமாறு எண்ணுகின்றாயோ? நெறியிலாரால் ஆய-தூய வழியில் செல்லாதவராகிய இராக்கதர்களால் உண்டான மா மாயம் ஒன்றும் அஞ்சிலை - பெருத்த மாயச் செயற்கு நீ சிறிதும் அஞ்சாதே.

அரக்கருடைய மாயச் செயல்கட்குச் சிறிது கட்டுப்பட்டு இந் நிலையை அடைந்தனர் உன் கணவனும் கொழுந்தனும்; உண்மையில் அவர்கள் இறந்தார்கள் இல்லை. அரவக் கணையால் கட்டுண்ட அவர்கள் எப்படி உயிர் பெற்றெழுந்தனரோ, அவ்வண்ணமே, இந்தப் பிரமன் கணையினால் ஏற்பட்ட மயக்கத்தினின்றும் எழுவர். பகையையும் வெல்வர். ஆகவே நீ உயிர்விட எண்ணுவது தக்கதன்று என்று சொல்லி, திரிசடை பிராட்டியைத் தேற்றினள். நெறியிலாரால் (நிகழ்ந்த) ஆயம் மாயம் எனினுமாம். மாய மானை விடுத்த செய்தி ஆரணிய காண்டத்தும், மாயா சனகனை வகுத்தது மாயாசனகப் படலத்தும், நாகபாசப் பிணிப்பு, நாகபாசப் படலத்தும் காண்க. போலும்: ஒப்பில் போலி. அன்னாய்: அன்பு பற்றிய மரபு வழுவமைதி; அம்மா: கேள், அம்ம: கேட்பிக்கும், அமா: அசையுமாம்.

பி - ம். 2. போயமா; பொதுவுறப்.

3. நினைவாய்; நினைந்தியோ; நெறியிலாதார்.

4. அறிந்திலை போலுமன்னாய். 23

2629. கண்டன கனவும் பெற்ற நிமித்தமு நினது கற்புந்
தண்டக முறையு நாளிற் செய்கையுந் தருமந் தாங்கும்
அண்டர்நா யகன்றன் வீரத் தன்மையு மயரேற் செங்கட்
புண்டரீ கற்கு முண்டோ விறுதியிப் புல்லர் கையால்.

'கண்டன கனவும் - கண்டிருந்த கனவுகளும், பெற்ற நிமித்தமும் - அமைந்துள்ள நல்ல சகுனக் குறிகளும், நினது கற்பும் -

உன் பதிவிரதைத் தன்மையும், தண்டகம் உறையும் நாளில் செய்கையும் - தண்டக வனத்தில் வசித்தபோது நடைபெற்ற செயலும், தருமம் தாங்கும் - அறத்தை புரப்பதற்காகத் திருவவதாரம் செய்துள்ள, அண்டர் நாயகன் தன் - தேவர்கள் கோமானாகிய இராம பிரானுடைய, வீரம் தன்மையும் - வீரப்பான்மையும், (ஆகிய இவையனைத்தையும்), அயரேல் - மறந்து விடாதே; புண்டரீகம் இ செங் கண்ணற்கும் புல்லர் கையால் இறுதி உண்டோ - செந்தாமரை போன்ற திரு நேத்திரங்களை யுடைய இராமபிரானுக்கு இந்த அற்பர்கள் கையால் மரணம் உண்டாகக் கூடியதோ? இல்லை.

கண்ட கனவுகளும் நிமித்தமும், (சுந்தர. 369, 370, 371, முதல் 381 வரை காண்க. மற்றும் நிமித்தங்கள், சுந்தர. 361, தண்டகம் உறையும் நாளில் செய்கையும்; தண்டகாரணிய முனிவர்க்கு இராம பிரான் அபயமளித்தமை, ஆரணிய. 134, 138, 139 காண்க. நினது கற்பும்: கற்பு என்பது; 'கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறே வழிபடுக எனவும், இருமுது குரவர் கற்பித்தலானும், 'அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்' 'ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று' (தொல். பொ. 142) என்பது கொண்டறிக. தண்டகம்: இதன் வரலாறு. இக்குவாகு மன்னனுடைய மகன் தண்டகன்; இவன் மதுமந்தம் என்ற நகரை ஆட்சி புரியுங்கால், தனது புரோகிதரான சுக்கிராசாரியாரின் மகளை வலிந்து கற்பழித்ததன் காரணமாகச் சுக்கிரனுடைய சாபம்பெற்று அழிய, அவன் நாடும் மண்மாரியால் அழிந்து, தண்டக வனமாக மாறிற்று என்ப. தருமம் தாங்கும் அண்டர் நாயகன், இராமபிரான் அறம் நிலைநிறுத்த அவதரித்தவன் என்பது இக்காவியத்தில் பலவிடங்களிலும் குறிக்கப்பெறுதல் காணலாம். யுத்தகாண்டம் ஒற்றுக் கேள்விப் படலத்து வரும், 756 - 763 செய்யுட்களையும் அவற்றின் உரைக் குறிப்பினையும் காண்க. 'அறநெறி நிறுத்தி வந்த விறை' (கிட்கிந்தா. 360) என்பது நேர் எதிரியான வாலியின் கூற்று. பிறவும் காண்க.

பி - ம். 1. கண்டவக்கனவும்; நின்ற.

2. தண்டகவிலாதார், தண்டவாளமக்கர்; பாவச் செய்கையும், செய்யும் தகைமையும்.

3. அண்டர் நாயகர்தம்; விரத்தின்மையும்; அயர்ந்தாய் போலும், அயர்த்தாய் போலப், அயர்க்கலாமோ.

4. புலையர்க்கல்லால், புலையர் கையால். 24

2630. ஆழியா னுக்கை தாக்கி
யம்பொன்று மறுக்கி லாமை
ஏழைநீ காண்டி யன்றே
யிளையவன் வதன மின்னும்
ஊழிநா ளிரவி யென்ன
வொளிர்கின்ற துயிருக் கின்னல்
வாழியாற் கில்லை வாளா
மயங்கலை மண்ணில் வந்தாய்.

'ஏழை - இரங்கத்தக்கவளே! ஆழியான் - நீ திகிரிப்படை தாங்குபவனான இந்த இராமபிரானுடைய, ஆக்கை - திருமேனியில், ஒன்று அம்பும் தாக்கி - ஓர் அம்பும் மோதி, அறுக்கிலாமை - அறுக்காத தன்மையை, நீ காண்டி - நீ நேர்முகமாகக் கண்ணுறு கின்றுயல்லவோ? (அதனால் அவன் உயிர்க்கு இறுதியில்லை என்பது நிச்சயம்), மண்ணில் வந்தாய் - பூமியினின்றும் தோன்றி யவளே! (அம்பினால் தாக்கப்பட்டாலும்), இளையவன் வதனம் - இலக்குவனுடைய முகமானது, இன்னும் - இப்பொழுதும், (சவக் களை யின்றி), ஊழிநாள் இரவி என்ன - யுக முடிவில் உதிர்கின்ற சூரியன் போன்று, ஒளிர்கின்றது - விளங்குகின்றது; வாழியார்க்கு உயிருக்கு இன்னல் இல்லை - இந்த வாழ்ச்சியையுடைய இலக்குவ னுடைய உயிருக்கும் மரணம் இல்லை (இஃது உறுதி), வாளா மயங்கலை - நீ வீணாக மனம் மயங்க வேண்டாம். அன்று, ஏ : அசை.

மறுக்கிலாமை என்று கொண்டு பொருள் கூறினுமாம். மண்ணில் வந்தாய் என்றது அவள் அயோநிஜையாகிய தெய்வப் பிறவி எனச் சுட்டும்பொருட்டு என்க; (கார்முக. 17) 'குலத்திற் பிறந்திலை, கோளில் கிடம்போல், நிலத்திற் பிறந்தமை நிரப்பினாய்' (யுத்த மீட்சி. 66) என்பது இராமபிரான் கூற்று. 'புனைக் காயாம்பூ நிறத்தானை யன்றி மற்றோர் பூமனையான், மனத் தால் வாக்கா னினையேனேல், வழிதா வெனக்கு மண்மகளே' 'வருந்தியே பயந்தநீ' (உத்தர. அசுவமேத. 296 - 297) என்பன பிராட்டி கூற்று. ஆழியான் : கடலிற் றுயில்பவன் எனினுமாம்.

வதனம் இன்னும் ஒளிர்கின்றது என்று காட்சிப் பிரமாணம் காட்டித் தெளிவித்தவாறு. மயங்கலே : அல் எதிர்மறை யிடைநிலை.

பி - ம். 1. ஆக்கை பேணி, ஆகம்தன்னை, ஆக்கைதன்னை, ஆகம் காணுய்.

2. மறுத்திலாமை, அறிகிலாமை, உறுகிலாமை.

3. உயிருக்கினம், உயிருக்கூனம்.

4. மயங்கலர்; வேள்வி வந்தாய். 25

2631. வீய்ந்துள னிராம னென்னி
னுலகமோ ரேழு மேழுந்
தீர்ந்தறு மிரவி ;பின்னுந்
திரியுமே தெய்வ மென்னும்
வீய்ந்துறும் விரிஞ்சன் முன்னு
வுயிரெலாம் வெருவ லன்னை
ஆய்ந்தவை யுள்ள போதே
யவருள ரறமு முண்டால்.

'இராமன் வீய்ந்துளன் என்னின் - இராமபிரான் இறந்திருப் பானேயாகில், உலகம் ஓர் ஏழும் ஏழும் - கீழ் ஏழ் மேலேழ் என்ற பதினன்கு புவனங்களும், தீர்ந்து அறும் - அழிந்தொழியும் (அன்றியும்), பின்னும் - மேலும், இரவி திரியுமே - (தவருத உலகில் ஒளி விடுகின்ற) சூரியன் (விண்ணில்) சஞ்சரிப்பானே? தெய்வம் என்னும் - தெய்வம் உண்டென்பது யாதாக முடியும்? விரிஞ்சன் முன்னு உயிர் எலாம் வீய்ந்துறும் - பிரமன் முதலாக உள்ள உயிர்த்தொகுதிகள் அனைத்தும் அழிந்துபடும்; ஆய்ந்தவை உள்ள போதே - ஆராயப் பெற்ற உலகப் பொருள்கள் அழியாம லிருக்கையிலேயே, அவர் உளர் - அவர் உயிருடன் இருக்கின்ருர்; அறமும் உண்டு - தருமமும் நிலை பெற்றுள்ளது; (ஆதலின்), அன்னை - தாயே! வெருவல் - அஞ்ச வேண்டா. ஆல் : அசை.

இராமபிரான் தெய்வமாதலின் எல்லாப் பொருள்கட்கும் உயிர் ஆவன்; எனவே அப்பொருள்கள் அழியாமல் நிற்றலின், அவ் விராமபிரான் உயிரோடிருக்கின்றனன் என்பது உறுதி என்ருள் திரிசடை. அவனுல் நிலைநாட்டப்பட்டது அறமாதலின் அந்த அறமும் நிலைபெற்றுள்ளது. 'தீண்டிலனென்னும் வாய்மை திசை

முகன் செய்த முட்டை, கிண்டில தனந்தனுக்கி இழிந்தில தெழுந்து வேலே, மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதம் செய்கை, மரண் டிலவென்னும் தன்மை வாய்மையா லுணர்தி' (சுந்தர. 1277) இராகவன் புல்லரான அரக்கரால் கொலே யுண்டான் எனின், மறம் வென்று அறம் தோற்றதாக ஏற்படும்; அதுபற்றித் தெய்வம் இல்லே என்ற கொள்கை முன்னேறும் என்பது 'தெய்வமென்னும்' என்பதன் கருத்து. திரியுமே: ஏகாரம் எதிர்மறை. உலகம் ஓர் ஏழு மேழும், 'உலகமேழினே டேழும் வந்து' (கிட்கிந்தா. 148) முன்னு: முதலாக.

பி - ம். 1. ஒய்ந்துளன்; விரன்; என்னும்.

2. நிய்ந்தறும், நிர்ந்துறும், நிய்ந்துறும்; பின்னேந்; திரியுமோ.

3. ஈய்ந்துள வெண்கணுன்; வெருவும்.

4. ஆய்ந்தவர்; அவருள்ளார்.

26

2632. மாருதிக் கில்லே யன்றே
மங்கைநின் வரத்தி னுலே
ஆருயிர் நீங்கல் நின்பாற்
கற்புக்கு மழிவுண் டாமே
சீரிய தன்றி தொன்றுந்
திசைமுகன் படையின் செய்கை
பேருமிப் பொழுதே தேவ
ரெண்ணமும் பிழைப்ப துண்டோ.

'மங்கை - பெண்ணே! நின் வரத்தினுலே - நீ ஈந்த வரத்தின் விளைவாக, மாருதிக்கு அருமை உயிர் நீங்கல் இல்லே - அநு மனுக்கு அருமையான உயிர் நீங்கப் பெறுதல் இல்லே (மரண மில்லே), அன்றே - அல்லவோ? (அவனுக்கு இறப்பு நேரின்) நின் பால் கற்புக்கும் அழிவுண்டாம் - உன்னுடைய பாதிவிருத்யத்துக் கும் பங்கம் ஏற்படும்; இது - இவ்வாறு எண்ணுவது, ஒன்றும் சீரியது அன்று - சிறிதும் சிறப்புடையதாகாது; திசைமுகன் படை யின் செய்கை - பிரமனுடைய அம்பினுல் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சி, இப்பொழுதே பேரும் - இப்பொழுதே நீங்கிவிடும்; தேவர் எண்ண

மும் பிழைப்பது உண்டோ - வானவர்களின் எண்ணமும் தவறுவது உண்டோ ?

இராம இலக்குவர்க்கு இறப்பு இல்லை என்பதைக் காரணம் காட்டி நிறுவிய திரிசடை, அநுமனுக்கும் மரணம் இல்லை என்பதையும் கூறுகின்றாள். மங்கை : அண்மை விளி. மங்கை வரம் : 'மறுவிலா மனத்தேனென்னின், ஊழியோர் பகலா யோதும் ஆண்டெலாம் உலகமேழும், ஏழுமவீய் வுற்ற ஞான்று மின்றென விருத்தி என்றாள்' (சுந்தர. 561) ; மற்றும் அநுமனுக்கு அழிவில்லா ஆயுள் பட்டம். முன் இந்திரன், சூரியன், வருணன், யமன், குபேரன், சிவபிரான், பிரமன், விசுவகன்மன் என்ற யாவராலும் அருளிச் செய்யப்பட்டது. (உத்தர. அநுமப். 34 - 40). மேலும் 'கற்பதனில், தூயேனென்னில் தொழுகின்றேன் எரியே அவனைச் சுடல்' (சுந்தர. 1169) என்று பிராட்டி அங்கிக் கடவுளை வேண்டியதும் காண்க. 'வேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகை நாளீர்' (கிட்கிந்தா. 986) என்பது சாம்பன் கூற்று. 'இன்று வீகலாதெவருமெம்முடன், நின்று வாழுமா நெடிது நல்கினாய், ஒன்று மின்னல்நோ யுறுதியாது நீ, என்றும் வாழ்தியா லினிதெனேவலால்' (யுத்த. 114) என்பது இராமபிரான் கூற்று.

பி - ம். 1. நீங்கின் ; ஆனல், உன்பால் ; அழிவுமுண்டோ, அழிவுண்டாமால்.
3. ஏரியர், அன்றித்தோன்றும், ஒன்றிதன்றே.
4. மறப்பதுண்டோ. 27

2633. தேவரைக் கண்டேன் பைம்பொற்
செங்கரஞ் சிரத்திற் சேர்த்தி
மூவரைக் கண்டா லென்ன
விருவரை முறையி னேக்கி
ஆவலிப் பெய்து நின்று
ரயர்த்தில ரஞ்ச லன்னை
கூவலிற் புக்கு வேலை
கோட்படு மென்று கொள்ளேல்.

'தேவரை கண்டேன் - விண்ணவர் என்ன செய்கின்றார் என்பதைப் பார்த்தேன் ; (அவர்கள்), மூவரைக் கண்டால் என்ன - திரிமூர்த்திகளைக் காண்பார் போன்று, (உயிர் தளர்ந்து கிடக்கின்ற)

இருவரை முறையின் நோக்கி - இருவரை முறையாகப் பார்த்து, பசும்பொன் செம் கரம் சிரத்தில் சேர்த்தி - பசிய பொன்னலாகிய அணிகள் தரித்த சிவந்த கைகளைத் தலைமேற் கூப்பிக்கொண்டு, ஆவலிப்பு எய்துகின்றார் - பெருமிதம் அடைந்திருக்கின்றனர்; அயர்த்திலர் - சிறிதும் வருந்துகிறார்கள் இல்லை; (ஆதலின்), அன்னை - தாயே! அஞ்சல் - பயப்படாதே; வேலை - கடல், கூவலில் புக்கு - கிணற்றுட் புகுந்து அதனலே அடக்கிக் கொண்டுவிடும், என்று கொள்ளேல் - என்று உளத்திற் கொள்ளாதே.

அரக்கிகட்குப் பலவித ஆற்றலும் உண்மையின், திரிசடை விண்ணுலகம் சென்று தேவரைப் பார்த்து அவர்கள் கவலையின்றி மகிழ்வுடன் இருப்பதாகக் கூறுகின்றாள். மூவரை இருவரை என்ற இடத்து முரண் காண்க. முறையின்: பெரியார்களைக் காணவேண்டிய நியதிப்படி. ஆவலிப்பு: பெருமிதம்; 'நின்னுமங் கற்ற ஆவலிப்புடைமை' (திருமாலை. 1); கூவலிற்புக்கு வேலை கோட்படும் என்று கொள்ளேல்; (ஒப்பு): 'கூவத்தின் சிறு புனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ கொற்ற வேந்தே' (யுத்த. 406); கிணற்று நீர் வெள்ளத்தைக் கொள்ளாது என்பது பழமொழி. கடல்போன்று பரந்துள்ள வீரமுடைய இராம இலக்குவரால் அற்ப பலமுள்ளவரான அரக்கர்கள் அழிவரேயன்றி, இராம இலக்குவர் அழிதற்கில்லை என்பது கருத்து. இங்குக் 'கூவலம் தீம்புனற் கொள்ளுமோ வெள்ளங் கோளிழைத்தே' (சடகோபரந்தாதி.).

பி-ம். 1. கண்டேம்; அப்பால்; சிரத்தினேற்றி.
2. கண்டாரன்ன; இருவரும்.
3. எய்தி நின்றார்; அயர்த்தில வஞ்சில்; என்னை.
4. புக்கும், புக்கவ், என்றல் கோளே. 28

2634. மங்கல நீங்கி னரை யாருயிர் வாங்கி னரை
நங்கையிக் கடவுண் மானந் தாங்குறு நவையிற் றன்றால்
இங்கிவை யளவை யாக விடர்க்கடல் கடத்தி யென்றாள்
சங்கைய ளாய தையல் சிறிதுயிர் தரிப்ப தானாள்.

'நங்கை - பெண்ணே! (தமது), மங்கலம் நீங்கினரை - மங்கல நாண் கழிக்கப் பெற்றவர்களையும், ஆருயிர் வாங்கினரை - அருமையான உயிர் நீங்கப் பெற்றவரையும், இகடவுள் மானம் - இந்தத்

தெய்வீக விமானம், தாங்குறும் நவையிற்று அன்று - தாங்கக் கூடிய குற்றமுடையதன்று, இங்கு இவை அளவையாக-இப்போது நான் பகர்ந்த யாவும் (நிகழ்ந்ததன் உண்மையை உணர்தற்குத் தக்க) அளவையாகலின், (இவை கொண்டு), இடர் கடல் கடத்தி - உன் துன்பக் கடலினின்றும் கரை ஏறுவாயாக'; என்றுள் - என்று கூறி நிறுத்தினுள் (திரிசடை); சங்கையள் ஆய தையல் சிறிது உயிர் தரிப்பதானுள் - மனத்திற் சங்கை கொண்டிருந்தவளான சீதாதேவி, (தன் ஐயம் சிறிது நீங்கி) சிறிது உயிர் தரிப்பது ஆனுள் - சிறிதளவாகப் பிராணனைத் தாங்கினுள். ஆல் : அசை.

இப்பொழுது சீதாதேவியைத் தெய்வ விமானம் தாங்கி நின்றது கொண்டே, இராமபிரான் உயிருடன் இருக்கின்றுன் என்பதைத் தெளியலாம் என்றுள். பெண்டிர் மங்கலவணி புனைவது தமிழ் நாட்டில் தொன்றுதொட்ட வழக்கம் என்பதும், ஆருயிர்க் கணவன்மார் இறக்கப்பெற்ற நிலையில், அவ்வணியைக் களைவது உண்டென்பதும் இங்கு அறிதல் தகும்; (கிட்கிந்தா. 603-க்கு யான் எழுதிய குறிப்புக் காண்க. அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பதிப்பில் பால. 1208-க்கு யான் எழுதிய குறிப்பும் காண்டல் தகும். நங்கை : அண்மை விளி. கடல் என்று சொல்லி மேலே கூறிய அளவையைத் தெப்பமாகக் கூருமையால் இது ஏகதேச வுருவகம். 'சங்கை யின்றுணர்தி வாலி செய்கையால் (கிட்கிந்தா. 411).

பி - ம். 1. நீக்கினுரை.

3. தங்குதல், தாங்குதல், தாங்கல் ; நவையிற்றின்ருல்.

3. இங்கிவை வளவையாகும், இங்இவை யுளவையாக, இங்கிவை தெய்வமாக வித்தனைகாலமுய்ந்தேன்.

4. நங்கை.



## திரிசடையை நோக்கிச் சீதை அவள் சொற்களாற்றுன் உயிர் வைத்துக்கொண்டிருப்பதாகக் கூறல்

2635. அன்னைநீ யுரைத்த தொன்று
மழிந்தில தாத லானே
உன்னையே தெய்வ மாக்கொண்
டித்தனை கால முய்ந்தேன்

இன்னமிவ் விரவு முற்று
மிருக்கின்றே னிறத்த லென்பால்
முன்னமே முடிந்த தன்றே
யென்றனள் முளரி நீத்தாள்.

முளரி நீத்தாள் - தன் இருப்பிடமான தாமரையை விடுத்துச் (சனகன் மகளாகத்) தோன்றிய சீதாபிராட்டி, (இங்ஙனம் தேறுதல் கூறிய திரிசடையைப் பார்த்து) ' அன்னை - தாயே! நீ உரைத்தது ஒன்றும் அழிந்திலது ஆதலான் - நீ (இதுகாறும்) பகர்ந்தது எதுவும், அழிந்திலது - பொய் போனதில்லை ஆகலின் ; உன்னையே தெய்வமா கொண்டு - உன்னையே தெய்வமாகக் கருதி, இத்துணை காலம் உய்ந்தேன் - இவ்வளவு காலம் உயிர் தரித்திருந்தேன் ; இன்னம் - இன்னமும், இவ் இரவு முற்றும் இருக்கின்றேன் - இந்த இரவு முழுவதும் உயிர் பிழைத்திருப்பேன் ; இறத்தல் என்பால் முன்னமே முடிந்தது அன்றே - சாதல் என்பது என்னைப்பொறுத்த அளவில் முன்னமே முடிவு செய்யப்பெற்றதல்லவோ?' என்றனள் - என்று பகர்ந்தாள் பிராட்டி. ஏ : அசை.

'இராவணன் என்னை எப்போது வஞ்சித்துத் தூக்கி வந்தானே அப்போதே நான் உயிர் துறந்திருக்க வேண்டும். பின்னரும் சிஞ்சுபவனத்தில் அரக்கியர் சிறிது அயர, உயிரை மாய்த்துக் கொள்ள மாதவிப்பொதும்பர் எய்தினேன் ; ஆனால் அப்பொழுது தாரக நாமம் சொல்லியும், ஆழிகாட்டியும் என் ஆருயிரைக் காத்தான் அநுமன் ; எனவே உயிர் துறக்கும் எண்ணம் முன்னம் பலகால் என்னிடம் உண்டு. இப்பொழுது உன் இனிய தேறுதல் சொற்களால் உயிர் வாழ்கின்றேன்' என்றாள் பிராட்டி. முளரி நீத்தாள் : பிராட்டி திருமகள் அவதாரம் என்பதைக் குறிக்கும் ; 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங். 35) ; 'மையறு மலரினீங்கி யான் செய்மா தவத்தின் வந்து' (பால. மிதிலைக். 1) ; 'தேவனே யவனிவள் கமலச் செல்வியே' (சுந்தர. 395) ; 'நாடி நாங்கொணரும் நளினத்தாளை' (கிட்கிந்தா. 925) ; 'தாமரை துறந்த தையல்' (கிட்கிந்தா. 492) ; 'அல்லிமலர் புல்லும், மங்கை யிவளாமென வசிட்டன் மகிழ்வுற்றான்' (பால. கோலங். 32).

பி - ம். 1. அன்னநீ ; அழிவிலை, அழிந்தில,
2. தெய்வமாக.
4. முடிந்த ; தீர்ந்தாள்.

சீதை 'உயிர் விட்டிடுதல் எளிதாயினும், இராமனையடையலாமோ ? என்ற எண்ணமே நான் உயிர் வைத்திருக்கக் காரணம்' எனல்

2636. நாணெலாந் துறந்தே னில்லி
னன்மையி னல்லார்க் கேய்ந்த
பூணெலாந் துறந்தே னென்றன்
பொருசிலை மேகந் தன்னைக்
காணலா மென்னு மாசை
தடுக்கவென் னுவி காத்தேன்
ஏணிலா வுடல நீக்க
லெளிதெனக் கெனவுஞ் சொன்னாள்.

(பின்னரும் பிராட்டி திரிசடையை நோக்கி) 'நாண் எலாம் துறந்தேன் - (பெண்கட்கின்றியமையாத) நாணம் என்ற பண்பினை முழுதும் கைவிட்டேன்; இல்லின் - இல்லறத்திற்கு வேண்டிய, நன்மையின் - நல்ல தன்மையுடன் இயைந்ததும், நல்லார்க்கு ஏய்ந்த - மகளிர்க்குத் தகுதியானதுமான, பூண் எலாம் துறந்தேன் - அணியாகவுள்ள (மடம், அச்சம், பயிர்ப்பு) என்ற பண்புகளையும் துறந்தேன்; (இங்ஙனமாகவும்), என் தன் பொருசிலை மேகம்தன்னை - எனக்குரிய பொருகின்ற வில்லைத் தாங்கிய மேகம்போன்ற இராம பிரானை, காணலாம் என்னும் ஆசை தடுக்க - மீண்டும் காணப் பெறலாம் என்னும் ஆசை தடை செய்வதனால், என் ஆவி காத்தேன் - (என்) உயிரை (நீக்காமல்) பாதுகாத்து நிற்கின்றேன்; ஏண் இலா உடலம் நீக்கல் எனக்கு எளிது - சிறிதும் பெருமை தங்கப் பெறாத எனது சட்டகத்தை நீக்குதல் எனக்கு ஓர் அரிய காரியம் அன்று', எனவும் சொன்னாள் - என்றும் பகர்ந்தாள், (சீதாதேவி).

முதலிரண்டடிகட்கு (ஒப்பு): 'நாணிலாதிருந்தேனல்லேன், நவையறு குணங்கள் என்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்திதன்னைக், காணலாம் இன்னும் என்னும் ஆசையால் இருந்தேன் கண்டாய்' (யுத்த. 1578); 'வாரா தொழியான் எனும் வண்மையினால் ஓராயிரம் கோடி யுயிர்க்குடையேன்' (சுந்தர. 494) 'பொறையிருந்தாற்றி யென்னுயிரும் போற்றினேன்,

அறையிருங் கழலவற் காணுமாசையால்' (சுந்தர. 499); 'கனவின் வந்த கானலஞ் சேர்ப்பன், நனவின் வருதலும் உண்டென, அணை வரை நின்றதென் அரும்பெற லுயிரே' (நெய்கற் கவி. 11); நாணம் முதலியவற்றைப் பூணாகக் கூறினாள்; (ஒப்பு): 'நாற்குணமு நாற் படையா' (நள. 34). ஏண் - பெருமை; 'பொருசிலை மேகம்' ஆரணிய. 126, 270, 952; சுந்தர. 507 - 573, கிட்கிந்தா. 304, 57.

பி - ம். 1. எல்லி நாண்மெயுந் துறந்தார்க்கெல்லாம், இல்லினன்மையு நல்லோர்க் கெய்தும்.

2. பூணெலாமாகி நின்ற குணங்களும் பொதுவிற் போக.

3. ஆசைகடுக்க, கருநி.

4. உடலனீக்க, உடலினீங்கல், உடலனீத்தற்கு, உடலைத் தாங்கி; என்னச், என்றும். 31

2637. தையலை யிராமன் மேனி
தைத்தவேற் றடங்க ணாளைக்
கைகளிற் பற்றிக் கொண்டார்
விமானத்தைக் கடாவு கின்றார்
மெய்யுயி ருலகத் தாக
விதியையும் வலித்து விண்மேல்
பொய்யுடல் கொண்டு செல்லு
நமனுடைத் தூதர் போன்றார்.

இராமபிரான் மேனி தைத்தவேல் தடகண்ணாளை - இராமபிரானுடைய திருமேனியிலே படிந்த வேல்போன்று (கூரிய) பெரிய விழிகளையுடையவளான, தையல் - சீதாதேவியை, கைகளில் பற்றி கொண்டார் - கரங்களால் பற்றிக் கொண்டு, விமானத்தை கடாவுகின்றார் - தெய்வீக ஊர்தியை, கடாவுகின்றார்-மீள (அசோக வனத்துக்குச்) செலுத்துகின்றவர்களான அரக்கிமார், மெய் உயிர் உலகத்து ஆக - உண்மையான உயிர் உலகத்தில் இருக்க, விதியையும் வலித்து - ஊழையும் வலிமையாற் கடந்து, விண்மேல் - ஆகாய வழியாக, பொய் உடல் கொண்டு செல்லும் நமன் உடை தூதர் போன்றார் - பொய்யான உடலை எடுத்துச் செல்லும் யமதூதரை ஒத்து விளங்கினர்.

இங்கு உயிர் மண்மீதிருக்க உடலைக் கொண்டு சென்றனர் யம தூதர் எனப்பட்டது. உடல் மண்மீதிருக்க உயிரை விண் வழிக் கவர்ந்து செல்வது மரபு. இங்கு மாற்றிக் கூறினர் கம்பநாடர். இவ்வாறு மாற்றிக் கூறுவது அவருடைய கவித்துவத்தின் ஓர் சிறப்பு; (ஒப்பு): 'உயிரெலா முறைவதோர் உடம்பு மாயினான்' (பால. அரசியல். 10) தயரதன் என்பார். பொதுவாக 'மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்' (புறநா. 186) என்று கூறப்படும். இனி இராமபிரான் பிராட்டியின் உயிர்; எனவே உயிரைப் பிரிந்து நின்ற உடல் பொய்யுடல் எனினுமாம். யமதூதர் மாருகக் கொண்டு சென்றமையின் 'விதியினை வலித்து' எனப்பட்டது என்க.

பி - ம். 1. வாள்நுடங்.

2. கையினைப்; கொண்டு; மானத்தை.

3. மெய்யுர் நல்லதாக வுயிரையும்; வலிந்து, நலிந்து.

4. தூதிற்; போனர். 32

இதுவரையில் யுத்த. 2879 பாடல் என்றும், நாய்ச்சியார் சோகப் படலம் முற்றும் என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றன.

பிராட்டி களங்காண் படலம் முற்றும்.

---

# 23. மருத்துமலைப் படலம்

இறந்த உயிர்களையும் மீட்கக்கூடிய சஞ்சீவகரணி முதலிய ஓடதிகளையுடைய மலையை (அநுமன் சாம்பவன் மொழிப்படியே) கொணர்ந்து யாவரும் உயிர் பெற்றெழுந்ததும், திரும்பவும் கொண்டு போனதும் என்றவைகளைப் பற்றிக் கூறும் படலம் என விரியும். இது மருத்துப் படலம் என்றும் சில பிரதிகளில் காணப் படுகின்றது.

## வீடணன் உணவுகொண்டு போர்க்களம் அடைதல்

2638. போயின டைய லிப்பாற் புரிகெனப் புலவர் கோமான்
ஏயின கரும நோக்கி யேகிய விலங்கை வேந்தன்
மேயின வுணவு கொண்டு மீண்டவை யுறையுள் விட்ட
ஆயின வாக்கித் தான்வந் தமர்ப்பெருங் களத்த னானன்.

தையல் போயினள்-சீதாதேவி தன் இருக்கைக்குச் சென்றாள்; இப்பால் - இங்கே, புரிக என - (உணவு கொண்டு வருதலைச்) செய்க என்று, புலவர் கோமான் - தேவாதி தேவனான இராமபிரான், ஏயின கருமம் நோக்கி - ஏவிய கட்டளையிட்ட காரியத்தின் தகுதியைப் பார்த்துச் சென்ற, இலங்கை வேந்தன் - வீடணன், மேயின உணவு கொண்டு - பொருத்தமாக அமைந்த நல்ல உணவுகளைக் கைக்கொண்டு, மீண்டு-திரும்பி, அவை - அவைகளை, உறையுள் விட்ட ஆயின ஆக்கி - பாசறையுள் வைக்கப்பட்டன வாகச் செய்து, தான் வந்து அமர் பெருகளத்தன் ஆனான் - தான் வந்து பெரிய போர்க்களத்தை யடைபவன் ஆனான்.

இராமபிரான் விரைவில் உணவு கொண்டுவருமாறு வீடணனை அனுப்பியது பிரமாத்திரப் படலத்து (88-ல்) 'இரவு நண்பகலும் பெரு நெடுஞ்செரு வியற்றி' எனத் தொடங்கும் செய்யுட்கண் குறிக்கப்பெற்றது. புரிக என்பதில் அகரம் ஈறு தொகுத்தது. புலவர்

கோமான் - தேவர்கள் தேவனான இராமபிரான்; மாபா சீநை. 55) உறையுள் : பாசறைக்குள்; போயினள் தையல் எனப் பிரிக்க.

பி - ம். 1. போயினளடைய, போயினளடைய, போயினான்டை; புகுந்துளன் புகுந்துள, புகுந்தனன்.
2. நோக்கி யெய்திய, எய்தினன்.
3. உணர்வு; விட்டது, விட்டால்.
4. ஆயினவாகத்; தானே வந்தமர்க்; களத்தின். 1

## வாநரர்களின் நிலைமையைக் கண்டு வீடணன் உணர்வோய்தல்

2639. நோக்கினன் கண்டான் பண்டிவ்
வுலகங்கள் படைக்க நோற்றான்
வாக்கினன் மாண்டா ரென்ன
வாநர வீரர் முற்றும்
தாக்கின ரெல்லாம் பட்ட
தன்மையை விடத்தைத் தானே
தேக்கின னென்ன நின்று
தியங்கின னுணர்வு தீர்ந்தான்.

(களத்திற் புக்க வீடணன் அங்கு) பண்டு-முன்பு, இவ் உலகங்கள் படைக்க நோற்றான்-இந்த உலகங்கள் அனைத்தும் சிருட்டிக்குமாறு நோன்பியற்றியவனான பிரமதேவனுடைய, வாக்கினால்-சாபமொழியால், மாண்டார் என்ன-இறந்தவர் போன்று, (வாளிகளால்) வாநர வீரர் முற்றும் தாக்கினர் - குரங்கு வீரர்கள் (மேனி) அடங்கலும் தாக்கப் பெற்றவராய், எல்லாம் பட்ட தன்மையை - எல்லோரும் இறந்தாற் போன்று, (தரையில் கிடந்த நிலையை) நோக்கினன் கண்டான் - நேரே கண்டு, விடத்தை தானே தேக்கினன் என்ன - நஞ்சினைத் தானே நிரம்பப் பருகினவன் போல, நின்று - (முன்னம்) மயக்கம் கொண்டு நின்று, (பின்பு) உணர்வு தீர்ந்தான் - உணர்வு நீங்கப் பெற்றவனானான்.

நோக்கினன் : கண்டான் ; முற்றெச்சங்கள். உலகங்கள் படைக்க நோற்றான் : ' உன்னைப் படைத்தாய் நீ யென்றாலுயிர்

படைப்பான். என்னைப் படைத்தாய் நீ யெனுமிதுவு மேதாமோ' (யுத்த. 286) 'விரைக் கமலத்தோன் மாலு மேவலான் மேவினர்கள் 'புரைத்ததிகார சத்தி புண்ணிய நண்ணலாலே' (சிவஞான சித்தி. சுபக்கம். 1 : 24); வாக்கு : வசை அல்லது சாப மொழி. 'அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைத் தந்தே தீரும் வார்த்தை; 'சொல்லினுற் சுடுவேன்' (சுந்தர. 624) என்று பிராட்டியே கூறுதல் காண்க. 'சொல்லொக்கும் கடியவேகச் சுடு சரம்' (பால. தாடகை. 73); தாக்கினர் : தாக்கப்பட்டார் என்று பிறவினையாகக் கொள்க; 'தழுவின புளிஞர் வேந்தன்' (அயோத்தி. குகப். 33) என்ற இடத்துப் போல. தேக்குதல்: நிரம்பப்பருகுதல்; 'நிறைமத்த மதுவைத் தேக்கி' (யுத்த. 1875).

பி - ம். 1. உலகினைப் படைப்ப.

3. தன்மைய. 2

## வருத்தத்துடன் வந்த வீடணன் இலக்குவனுடன் இராமபிரானைக் காணுதல்.

2640. விளைந்தவா றுணர்ந்தி லாதா
னேங்கினன் வெதும்பி னன்மேல்
உளைந்துளைந் துயிர்த்தா னவி
யுண்டிலை யென்ன வோய்ந்தான்
வளைந்தபேய்க் கணமு நாயு
நரிகளு மிரிய வந்தான்
இளங்கிளை யோடுஞ் சாய்ந்த
விராமனை யெய்திக் கண்டான்.

விளைந்த ஆறு உணர்ந்திலாதான் - நிகழ்ந்த தன்மையை அறியாதவனான வீடணன், (சிறிது தேறி), ஏங்கினன் - ஏக்க முற்று, வெதும்பினன் - (மனம்) கொதித்து, மேல் - பிறகு, உளைந்து உளைந்து - வருந்தி வருந்தி, உயிர்த்தான் - பெருமூச்செறிந்து, 'ஆவி உண்டு இலை என்ன ஓய்ந்தான் - உயிருண்டோ இன்றோ ;' என்று (கண்டோர்) ஐயுற்றுக் கூறுமாறு ஒய்வுற்றவனாய், வளைந்த பேய் கணமும் - சுற்றி நின்ற பேய்த் திரள்களும், நாயும் நரிகளும் - நாயும் நரிகளும், இரிய - நிலை குலைந்தோட, வந்தான் - வந்து, இள கிளையோடும் - இலக்குவனுடன், சாய்ந்த - வீழ்ந்து

கிடந்த, இராமனை எய்தி கண்டான் - இராமபிரானை அடைந்து நோக்கினான்.

வெதும்புதல்: 'விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல்' (சுந்தர. 334); 'உளைந்துளைந்து' (ஆரணிய. 646); 'ஆவியுண்டிலை யென்ன' (ஒப்பு) 'ஆவியோ நிலையிற் கலங்கியது யாக்கை வகத்ததோ புறத்ததோ வறியேன்' (வி. பா. 17-ஆம் போர் 240); ஓய்தல்: 'ஓய்தல் ஆய்தல் நிழற்றல் சா அய், ஆவயினான்கும் உள்ளதன் நுணுக்கம்' (தொல். சொல். உரி: 32).

பி - ம். 1. உணர்கிலாதான்; விங்கினன்; போய், மெய்.

4. இமைங்கணிறேடும்; இடையிற். 3

2641. என்பென்ப தியாக்கை யென்ப
துயிரென்ப திவைக ளெல்லாம்
பின்பென்ப வல்ல வேனுந்
தம்முடை நிலையிற் பேரா
முன்பென்ப வுளதென் றாலு
முழுவதுந் தெரிந்த வாற்றால்
அன்பென்ப தொன்றின் றன்மை
யமரரு மறிந்த தன்றால்.

என்பு என்பது யாக்கை என்பது உயிர் என்பது இவைகள் எல்லாம் - என்பு என்பதும் உடல் என்பதும் உயிர் என்பதும் இவை அனைத்தும், (அன்பைக் கருதுமிடத்துப்), பின்பு என்ப - பிற்பட்டன; அல்ல - (முக்கியமானவையல்ல); (அன்பு தோன்றற்கு அவை அடிப்படையாதலின் பிற்பட்டன) அல்ல (முற்பட்டன); என்றாலும் - என்று கூறினாலும், தம்முடை நிலையில் பேரா - தம்முடைய அந்நிலையினின்றும் நீங்கப்பெறா, முழுவதும் தெரிந்த ஆற்றால் - முடிவு போக ஆராய்ந்த வகையில், அன்பென்பது ஒன்றின் தன்மை அமரரும் அறிந்தது அன்று - அன்பு என்று சொல்லப்படும் ஒன்றின் தன்மை, அமரரும் அறிந்தது அன்று - தேவர்களும் அறிந்ததன்றாகும். ஆல்: அசை.

என்பு யாக்கை உயிர் என்ற இவைகள் உண்டான பின்னரே அன்பு என்ற உணர்ச்சி தோன்ற வேண்டும் என்பர். உயிர்

தோன்றித் தானே உணர்வு தோன்றும். ஆயினும், நட்பும் தயையும் கொடையும் பிறவிக் குணம் ஆகலின் வினை வயத்தால் மேனி தோன்றும் போதே முன் பிறப்பின் வாசனையால் அன்பு தோன்றும். ஆகலின் உடல் எடுத்தற்கு முன்னரே உயிர்க்குண மாயமைந்தது அன்பு என்பது பெறப்படும். வில்லிபாரதம் 17-ஆம் போரில் தன் முன்னர் ஓர் அந்தணனாக வந்து, தான் செய்த புண்ணியமனைத்தும் நீர் வார்த்துத் தத்தம் செய்யப் பெற்றுக்கொண்டு, தனது விசுவரூபம் காட்டி நின்ற கண்ணனிடம், கன்னன் 'ஈகையும் செல்வமும் இரந்தான். இங்குச் செல்வமும் ஈகையும் என்று கேட்காமல் முறை மாற்றிக் கூறினமையின் ஈகை என்பது உடல் தோன்றற்கு முன்னரே உயிரைப்பொருந்திப்பிறப்புத்தோறும் தொடர்ந்து; எழுமைக்கும் ஏமாப்புடைத்தாகி வரும்; அஃது ஒருமையில் ஒருவன் கற்ற கல்வி போன்றது என்க. இனி, 'அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போடியைந்த தொடர்பு' (குறள். 73) என்ற இடத்துப் பரிமேலழகர் 'உடம்போடியைந்தல்லது அன்பு செய்யலாகாமையின் அது செய்தற் பொருட்டுளதாயிற்று' ஆகவே இத் தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமை ஆயிற்று என்பர். இது கொண்டு என்போடியைந்த உடல் முக்கியமானதேனும், உயிர்க் குணமாகிய நட்போ அன்போ இன்றேல் அந்த யாக்கை பயனற்றது என்பது கூறப்பட்டது. இந்த அன்பின் தன்மை அமரரும் அறிந்த தன்று' என்றது என் எனின், 'ஈவாரும் ஏற்பாரும் இல்லாத வானுலகில், வாழ்வாரே வன்கணவர்' என்றபடி புண்ணிய விசேடத்தால் அந்தப் புண்ணியப் பயன் கழியும்காறும் இன்பமே அநுபவித்துக்கொண்டு, உலகில் இல்லறத்தான தன்னுடன் இயைந்துள்ளாரிடம் நட்புரிமை கொண்டு வாழும் வாழ்க்கை அங்கின்றாகலின், தொடர்புடையார் மாட்டுக் கொள்ளும் அன்போடு பொதுவாக எவ்வுயிர் மாட்டும் காட்டப்பெறும் அருளும் இல்லாதவராகலின் என்க. இங்கு 'முன்புறக்கண்டிலேன்' (யுத்த. 326) எனத் தொடங்கும் செய்யுள் காணத்தக்கது.

பா - ம். 1. என்பென்பதுயிரென்றாயும்.
2. என்பது ; என்னும் ; தன்னுடை.
3. முன்பென்னு முளவென்றானும், முன்பென்று முளதென்றாலும் தெரியக்காணூர்.
4. அறிந்தன்றே.

## இராமன் இறந்திலனென்று வீடணன் உணர்தல்

2642. ஆயினு மிவருக் கில்லை
யழிவெனு மதனு லாவி
போயின தில்லை வாயாற்
புலம்பிலன் பொருமிப் பொங்கித்
தீயினு மெரியு நெஞ்சின்
வெருவலன் றெரிய நோக்கி
நாயகன் மேனிக் கில்லை
வடுவென நடுக்கந் தீர்ந்தான்.

(இங்ஙனம் அன்பை உடையவனுகி வீடணன்), 'ஆயினும் இவருக்கு அழிவு இல்லை - இருந்தாலும் அவருக்கு இறப்பில்லை எனும்அதனுல் - என்ற காரணத்தால், ஆவி போயினது இல்லை - வீடணனுக்கு உயிர் நீங்கவில்லை; வாயால் புலம்பிலன்-வாய் திறந்து புலம்பாதவனுய், பொருமி பொங்கி-பொருமல் கொண்டு (துன்பம் மிகுந்து), தீயினும் எரியும் நெஞ்சின் - தீயினைக் காட்டிலும் மிக்கு எரிகின்ற நெஞ்சினுல், வெருவலன் - கலங்காதவனுய், தெரிய நோக்கி-பின்பு ஆராய்ந்து பார்த்து, 'நாயகன் மேனிக்கு வடு இல்லை என - இராமபிரான் திருமேனிக்கு எந்தவிதமான பழுதும் இல்லை என்று', நடுக்கம் தீர்ந்தான் - நடுங்குதலை விடுத்தான்.

இராமபிரான் உயிர் நீங்கியிருந்தால் வீடணன் உயிரும் நீங்கியிருக்கும். ஆனுல் இராமபிரான் இறந்தானில்லை. என்றுலும் துக்கத்தால் தீயைக் காட்டிலும் நெஞ்சு கொதிக்கப் பெற்றவனுய் நின்ருன் வீடணன். அந்நிலையிலும் சிறிதும் அஞ்சாதவனுய் நன்ருக இராமபிரான் மேனியின் அங்க அடையாளங்களை ஆராய்ந்து அவனுக்கு ஒருவிதமான கெடுதியும் இல்லை என்று கண்டு தனது உயிர் உடல்களின் நடுக்கத்தை நீக்கினுன். பொருமுதல் - பொருமினுனகம் பொங்கினுன். (யுந்த. 2573); 'பொருமியொரு மகவழும்' (குசேலா. 1: 70) 'வெருவலன்: அல் எதிர்மறை இடைநிலை. குற்றம்: 'வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்' (நாலடி :114).

பி - ம். 1. இதனால்.

2. புலம்பினன், புலம்புவான்.

3. நெஞ்சன் ; வெருவலான், வெருவலால்.

4. நாயக மேனிக்கு. 5

## வீடணன் நிகழ்ந்ததை எண்ணித் தெளிந்து வாளியின் விளைவைத் தீர்க்க வழி தேடுதல்.

2643. அந்தணன் படையால் வந்த
தென்பது மாற்றல் சான்ற
இந்திர சித்தே யெய்தா
னென்பது மிள வற்காக
நொந்தன னிராம னென்னு
முண்மையு நொய்து நோக்கிச்
சிந்தையி னெண்ணி யெண்ணித்
தீர்வதோ ருபாயந் தேர்வான்.

'(இலக்குவன் முதலானோர்க்கு நிகழ்ந்த அவலநிலை), அந்தணன் படையால் வந்தது என்பதும் - பிரமன் அத்திரத்தால் நிகழ்ந்தது என்பதையும், ஆற்றல் சான்ற - வன்மையிற் சிறந்த. இந்திரசித்தே எய்தான் என்பதும் - இந்திரசித்துத்தான் (அந்தப் படையை) விடுத்தவன் என்பதையும், இளவற்காக - இலக்குவன் பொருட்டே, இராமன் - இராமபிரான். நொந்தனன் என்னும் உண்மையும் - வருந்தி நின்றான் என்ற உண்மையினையும், நொய்து நோக்கி - எளிதில் உணர்ந்து, சிந்தையின் எண்ணி எண்ணி - மனத்தால் ஆராய்ந்து ஆராய்ந்து, தீர்வதோர் உபாயம் தேர்வான் - இந்த விபத்தினின்றும் நீங்குவதற்கான ஓர் வழியை ஆராய்பவனானான்.

இராமபிரான் திருமேனியைக் கண்ணுற்று அதில் எவ்வித மான வடுவும் இன்மையை யுணர்ந்து, இராமபிரான், இலக்குவன் நிலையினைக் கண்டே மயக்கமுற்றுக் கிடந்தான் என்று ஊகித்தான் வீடணன். அயன் படையை விடுவதற்குப் பிறர் எவர்க்கும் இயலாது என்பதை விளக்க 'ஆற்றல் சான்ற இந்திரசித் தெனப்

பட்டது' இளவல் : தம்பி ; அல் பெயர் விகுதி. நொய்து - எளிதில். ஏகாரம் தேற்றம்.

பி - ம் 1. ஆன்ற.
2. இளையோற்காக.
3. என்னு நுண்மையும், இன்னுமுணர்வினுன் ; நொய்திநேக்கி, நோக்கி நோக்கி.
4. சிந்தையினுணரவெண்ணி ; அறிவினுற் கண்டானன்றே, நிர்வதோருபாயம் தேர்ந்தான். 6

2644. உள்ளுறு துன்ப மூன்ற வுற்றன னுறக்க மன்றே
தெள்ளிதி லுணர்ந்த பின்னைச் சிந்தனை தெரிவ தன்றே
வள்ளலோ தம்பி மாய வாழ்கிலன் மாய வாழ்க்கைக்
கள்வரோ வென்று ரென்னு மழையெனக் கலுழுங்
[கண்ணுன்.

'உள் உறு துன்பம் ஊன்ற - மனத்துள்ளே மிக்க துயரம் பதிந்துள்ளமையின், (இராமபிரான்) உறக்கம் உற்றனன் அன்றே - நித்திரை (மூர்ச்சை) உற்றனன் அல்லவோ? தெள்ளிதின் உணர்ந்த பின்னை - தெளிவாக அறிந்த பின்னர், சிந்தனை தெரிவது - அவன் எண்ணம் உணரத்தக்கது; (ஏனெனில்) வள்ளலோ - அருட்கடலான இந்த இராமபிரானே, தம்பி மாய வாழ்கிலன் - தம்பி இறந்து பட்டால் (பின்னர்) உயிர்வாழ மாட்டான் ; ஆகவே, மாய வாழ்க்கை - மாயத்தினுல் வாழும் வாழ்க்கையை யுடைய, கள்வரோ - வஞ்சரான இராக்கதரோ, வென்றார் - வெற்றி பெற்றவராவார்,' என்னு - என்று, மழை என கலுழும் கண்ணுன் - மழை போலக் கண்ணீர் பொழிகின்ற கண்களை யுடையவனுனன். அன்று, ஏ : அசை

உள்ளுறு : 'உள்ளுற வெந்த செம்பொ னுற்றநீர்ப் புள்ளி யற்ருல்' (சீவக. ) ; 'வள்ளலோ தம்பி மாய வாழ்கிலன்' 'தம்பியரல்லது தனக்கு வேறுயிர், இம்பரினிலதென வெண்ணி யேய்ந்தவன்' (கிட்கிந்தா. 26) என்ற வாலி கூற்றைக் காண்க. 'வரிவிற்கை யெனுருயிர் வந்திலனுல்' 'தன் வினையேன் தனதாருயிராய்' (ஆரணிய. 1095; 1097). 'தன்னைப் பிரிவேனுளனுவதுதான், உன்னைப் பிரியாத வுயிர்ப்பலவோ' (ஆரணிய. 1099); 'தன்ன

தாருயிர்த் தம்பியுந் தாமரைப் பொன்னும்' (அயோத்தி. நகர்நீ. ) 238); 'நீருளவெளினுள மீனும்' (அயோத்தி. நகர் நீ. 156) என்பன. காண்க.

பி - ம். 1. உற்றன னுறக்கமென்னுந், உற்றன னுறக்கமொன்றே, உறக்க மென்றே, உற்றன வுறக்கமன்றே.

2. தெள்ளிதது ; தெரிவதன்றால், தெரிவனன்றி, தெரிவனன்றால்.

3. தம்பிமாள, மாளில் ; வாழ்கின்றானல்லன் வஞ்சக் ; கள்ளனேவென்று னென்றான். 7

## வீடணன் மனத்தடுமாற்றம் நீங்குதல்

2645. பாசம்போ யிற்றாற் போலப்
பதுமத்தோன் படையு மின்றே
நாசம்போ யெய்து நம்பி
தம்பிக்கு நாச மில்லை
வீசும்போர்க் களத்து வீழ்ந்த
சேனையு மீளும் வெய்ய
நீசன்போர் வெல்வ துண்டோ
வென்றக நினைந்து நின்றான்.

'பாசம் போய் இற்றால் போல - நாகபாசமானது அறுபட்டுப் போனது போன்றே, பதுமத்தோன் படையும் இன்றே நாசம் போய் எய்தும் - பிரமன் வாளியும் இன்றைய தினமே நாசத்தைச் சென்று அடையும் ; நம்பி தம்பிக்கும் நாசம் இல்லை - இராமபிரானுடைய தம்பிக்கும் அழிவில்லை ; வீசும் போர்க்களத்து - (படைக்கலங்கள்) எறியப்படும் போர்க்களத்திலே, வீழ்ந்த சேனையும் - மடிந்த படையும், மீளும் - உயிர் மீண்டு எய்தப் பெறும் ; வெய்ய நீசன் - கொடுமை வாய்ந்த மிகவும் இழிந்தவனான இராவணன், போர் வெல்வது உண்டோ - யுத்தத்தில் வெற்றி பெறுவதென்பது நிகழக் கூடியதா ?' என்று-என்று, அகம் நினைந்து நின்றான் - மனத்தில் கருதி நின்றான். ஓகாரம் : எதிர்மறைப் பொருளை உணர்த்தி நின்றது.

பாசம் : நாகபாசம் ; இஃது இற்றது ; 'தேசம் கலந்த மறை வாணர் செஞ்சொலறிவாள ரென்றிம் முதலோர், பாசங் கலந்த பசி

போலகன்ற பதகன் றுரந்த வுரகம்' (யுத்த. 2199) என்றது காண்க. வீசும்போர் - படைகள் வீசப்படும் போர்; உளம் நிலையினின்முன் - நெஞ்சில் உறுதிகொண்டு நின்முன்.

பி - ம். 1. பேரற்றுற் போல; இன்னே.

2. நடுக்கமில்லே.

3. வியந்த விரரும்; மீள்வர்.

4. நிசர்; என்றுள்ள நினைப்பின், என்றன னெறியின்; என்றக நினைந்து. 8

## இறவாதவருளரோ என்று வீடணன் கொள்ளிக்கட்டை கொண்டு போர்க்களத்திற் பார்த்தல்

2646. உணர்வதன் முன்ன மின்னே
யுற்றுழி யுதவற் கொத்த
துணைவர்க டுஞ்ச லில்லா
ருளரெனிற் றுருவித் தேடிக்
கொணர்குவென் விரைவி னென்னுக்
கொள்ளியொன் றங்கை கொண்டான்
புணரியி னுதிர வெள்ளத்
தொருதனி விரைவிற் போனுன்

'உணர்வதன் முன்னம் - (இராமபிரான்) தன்னினைவு பெறுவதன் முன்பே, இன்னே - இப்பொழுதே, உற்றுழி உதவற்கு ஒத்த துணைவர்கள் - ஓர் ஊறுபாடுள்ளவிடத்து உதவி புரிவதற்குத் தக்க துணைவர்கள், துஞ்சல் இல்லார் உளர் எனில்-மடியாதவர்கள் உண்டெனில், துருவி தேடி-ஆராய்ந்து தேடி, விரைவில் கொணர்குவென்-விரைவில் கொண்டு வருவேன்,' என்னு-என்று, கொள்ளி ஒன்று அம்கை கொண்டான் - கொள்ளிக்கட்டை ஒன்றை அழகிய கரத்திலே பற்றிக்கொண்டவனுய், உதிரம் புணரியின் வெள்ளத்து-இரத்தக் கடற்பெருக்கிலே, ஒருதனி விரைவில் போனுன் - தன்னந்தனியனுய்த் தாமதியாமல் சென்முன்.

இன்னே: 'நன்றே செய்யவும் வேண்டும், இன்றே செய்யவும் வேண்டும் அதுவும், இன்னே செய்யவு வேண்டும்' (தனிப்பா.

ஔவை. ); உற்றுழி - 'உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்' (புறநா. 183); 'உற்றுழித் தீர்வாருறவல்லர்' (மூதுரை. 17) 'உற்றுழியுங்கை கொடுக்கும்' (நீதிநெறி. 2) துஞ்சல்: மங்கல வழக்கு. கொள்ளி: தீப்பந்தம்; 'ஆசைக டோறு மள்ளினகொள்ளி; 'குஞ்சரமன்னர் வீசிய கொள்ளி' (யுத்த. மாயா சீதை. 22, 23), 'இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்பொத்து' (திருவாச. நீத்தல். 10); கொள்ளம் என்ற பாடம் கொண்டு ஓடம் என்பர் சிலர். ஆயினும முதனூலிலும் கொள்ளி கொண்டு தேடியதாகவே உள்ளது.

பி-ம். 1. முன்னர் முன்னே, முன்னே முன்னே; உதவத்தக்க, உணர்தற் கொத்த.

2. துஞ்சல் செல்லார்; துருவித் தோன்றச்; தோன்றி.

4. புணரியின் குருதி; வெள்ளக் கொள்ளியொன்று. 9

## தேடும் வீடணன் அநுமனைக்கண்டு மயக்கம் தெளிவித்தல்

2647. வாய்மடித் திரண்டு கையு
முறுக்கித்தன் வயிரச் செங்கண்
தீயுகக் கனகக் குன்றிற்
றிரண்டதோள் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப்
பெருப்பிணத் தமளி மேலான்
காய்சினத் தனும னென்னுங்
கடல் கிடந்தானைக் கண்டான்.

வாய் மடித்து - வாயினை மடித்துக் கொண்டும், இரண்டு கையும் முறுக்கி - இரு கரங்களையும் முறுக்கிக் கொண்டும், தன் வயிரம் செ கண் தீ உக - தன்னுடைய பகைமை உணர்ச்சி (நிறையப் பெற்ற சிவந்த) விழிகளிலிருந்து நெருப்புப் பொறி சிதற, கனகம் குன்றில் திரண்டதோள் மழையை தீண்ட - மேரு மலையை ஒத்த திரண்ட புயம் மேகமண்டலத்தைச் சென்று தொட, ஆயிரம் கோடி யானை பெரும்பிணத்து அமளி மேலான் - ஆயிரம் கோடி யானைகளின் மிக்க சவங்களாகிய படுக்கைமீது கிடப்பவனாய், காய் சினத்து அநுமன் என்னும் - காய்கின்ற சினத்தைக்

கொண்ட அநுமன் என்னும், கடல் கிடந்தானை கண்டான் - கடல் போலக் கிடந்தவனான வீரனைப் பார்த்தான்.

காதல் நான்முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கடந்தும், ஓத நீர்க் கடல் கடந்தும் நின்ற அநுமன் இப்பொழுது துயர்க் கடலைக் கடக்கும் வன்மையின்றிக் கிடந்தான் என்று கூறப்பட்டது. வாய் மடித்துக் கைமுறுக்குதல்; கண்களில் தீப்பொறி பறத்தல் முதலியன வெகுளியின் மெய்ப்பாடு. பெரும் பிணத்தமளி என்பது சோக மிகுதியைக் காட்டி நின்றது. 'காய்சின வழுதியென்றே' ஓர் பாண்டியன் சங்க காலத்தில் இருந்ததாகக் கேட்கப்படுவது. காய்சினம் வினைத்தொகை; 'காய் சினத்தவரைக் கொன்று கடன் கழித்தோமுமாதும்' (ஆரணிய. 787); 'காய் சினந்திருகிய கடுந் திறல் வேனில்' பெரும்பாண். 3); கனகக் குன்று : பொன்மயமான மேருமலை.

பி - ம். 2. திரண்டதோர் மழையிற்றுண்ட.

3. மேலாக்.

4. கடந்தானை.

2648. கண்டுதன் கண்க ளூடு
மழையெனக் கலுழி கால
உண்டுயி ரென்ப துன்னி
யுடற்கணை யொன்றுன் றுக
விண்டனீர்ப் புண்ணி னின்று
மெல்லென விரகின் வாங்கிக்
கொண்டனீர் கொணர்ந்து கோல
முகத்தினைக் குளிரச் செய்தான்.

கண்டு - (வீடணன் அநுமனைக்) கண்ணுற்று, தன் கண்கள் ஊடு - தனது விழிகளின் வழியாக, மழை என கலுழிகால - மழை போன்று (கண்ணீர்ப்) பெருக்கெழ, உயிர் உண்டு என்பது உன்னி - (இவனுக்கு) உயிர் உள்ளது என்று அநுமானித்து, விண்ட புண்ணின் நீர் நின்று - பிளவுபட்ட புண்ணினின்று வந்த உதிரத்திலிருந்து, மெல்ல-மிருதுவாக (வருந்தாதபடி), உடல்கணை - (அவனுடைய) உடலிலிருந்து வாளிகளை, ஒன்று ஒன்று ஆக -

தனித்தனியாக, விரகின் வாங்கி - சாமர்த்தியமாகக் எடுத்து, கொண்டல், நீர் கொணர்ந்து - மேகத்தினின்று தண்ணீரை முகந்து வந்து, கோல முகத்தினை குளிர செய்தான் - அழகிய முகத்தைக் குளிருமாறு செய்தான்.

கலுழி, கண்ணீர்; 'மடவாள் கலுழிதனை மாற்றி' (நல். பாரத. சர்ப்பயா. 1); கண்ணீர் பொழிவதால் உயிருண்டென்று அநுமானித்தான் வீடணன்; உடல் கணை, மேனியில் தைத்த வாளிகள். புண்ணின் விண்ட நீர் எனினுமாம். தைத்த அம்புகளை வாங்குதற்கு விரகு என்றது திருமேனிவருந்தாமல் களைதல் என்க, விரகு: தந்திரம் அல்லது உபாயம். 'விடுதியால் விரகின் மிக்காய்' (யுத்த. நிகும்பலை. 7); 'காமம் விற்கின்ற விரகிற்றேரலாப், பொய்வினை மகளிர் கற்பும் போன்றதப் பொலம் பொற்றிண்டேர்' (யுத்த. இந்திரசித்து. 28); கொண்டல் நீர் கொணர்ந்தது; அரக்கன் ஆதலின் எங்கும் செல்லக்கூடிய தன்மையைக் குறித்தது. அரக்கர் பெருமையைக் குறித்துக் கூறுங்கால் 'மூண்ட வான்மழை யுரித்துடுத்துலாவரு மூர்க்கர்' (யுத்த. மூலபல. 7) என்றும்; 'தண்ணின் நீர்முறை தப்பிடிற்றடக்கையாற்றடவி, விண்ணின் மேகத்தை வாரி வாய்ப்பிழிந்திடும் விடாயர்' (யுத்த. மூலபல. 9) என்றும் உரைத்தது காண்க. முகத்திற்றண்ணீர் தெளித்தல்: சைத்தியோபசாரம் என்க.

பி-ம். 1. கலுழிசோர, வார.
2. உண்டுயிர் என்ன.
3. விண்டுதிர் புண்ணினின்ற, விண்டு மேல்வைரப் புண்ணின்! மெல்லென விரகின் வாங்கிக், விரகினின் வாங்கி வேந்தன்.
4. கொண்டனீர்முகந்து; பல்கால், வீரன்.

11

## அநுமன் களைநீங்கி இராமனைப் பற்றி வினவி அறிதல்

2649. உயிர்ப்புமுன் னுதித்த பின்ன
ருரோமங்கள் சிலிர்ப்பு வூடு
வியர்ப்புள தாகக் கண்கள்
விழித்தன மேனி மெல்லப்

பெயர்த்துவாய் புனல்வந் தூற
விக்கலும் பிறந்த தாக
அயர்த்தில னிராம நாமம்
வாழ்த்தின னமர ரார்த்தார்.

உயிர்ப்பு முன் உதித்த பின்னர் - சுவாசம் முன்னே வந்த பின்பு, உரோமங்கள் சிலிர்ப்ப - மயிர் கூச்செறிய, ஊடு வியர்ப்பு உளது ஆக - உடலின்கண்ணே வியர்வைநீர் தோன்றியதாக, கண்கள் விழித்தன - கண்கள் திறக்கப்பெற்றன; (அப்போது), மேனி மெல்ல பெயர்த்து - உடலை மெதுவாகப் புரட்டி, வாய் புனல் வந்து ஊற - (வாயினில்) நீர் வந்து ஊற, விக்கலும் பிறந்தது ஆக - விக்கலும் எழுந்ததாக, அயர்த்திலன் - (அந்த நிலையிலும்) மறவாதவனாய், இராம நாமம் வாழ்த்தினன் - இராமபிரானுடைய திருப்பெயரை (அநுமன்) வாழ்த்தினன்; (அது கண்டு), அமரர் ஆர்த்தார் - தேவர்கள் ஆரவாரித்தனர்.

உயிர்ப்பு வந்த அளவில் நிகழ்ந்த மெய்ப்பாடுகள் இங்கு முறையாகக் கூறப்பெற்றன. விக்கல்: 'நெஞ்சே விக்கல் வராது கண்டாய்' (திருவருட்பா. 6, நெஞ்சொடு இளத்தல். 10); 'தொண்டை விக்கிக் கொள்ளுமோ' (திருவருட்பா.). சிறிது உயிர்ப்பு வந்த நிலையில், அதுகாறும் உச்சரியாத இராம நாமத்தை வாழ்த்தினான் அநுமன் என்பது, சிறிய திருவடியின் அளவிறந்த இராம பக்தியைக் காட்டும். அயர்த்தல் - மறத்தல்; 'ஆருளர், அயர்ந்தா னல்லன்' (கிட்கிந்தா. 606).

பி - ம். 1. சிலிர்க்க வூறி, சிலிர்ப்பவாறி.
2. வியர்ப்புள; விழித்தனன்; மேனியென்னப்.
3. விக்கலும் பிறந்த.
4. இராமனுமம். 12

2650. அழுகையோ டுவகை யுற்ற
வீடண ணுர்வங் கூரத்
தழுவின னவனைத் தானு
மன்பொடு தழுவித் தக்கோய்

வழுவில னன்றே வள்ள
லென்றனன் வலிய னென்றான்
தொழுதன னுலக மூன்றுந்
தலையின்மேற் கொள்ளுந் தூயான்.

அழுகையோடு - அழுகையுடன், உவகை உற்ற - மகிழ்ச்சியும் கொண்ட, வீடணன் - வீடணன், ஆர்வம் கூர - அன்பு மிக, அவனை - அந்தச் சிறிய திருவடியை, தழுவினன் - அணைத்துக் கொண்டான்; தானும் - அநுமனும், அன்பொடு தழுவி - அந்த வீடணனை அணைத்துக்கொண்டு, 'தக்கோய் - நீதி சான்றவனே! வள்ளல் வழு இலன் அன்றே - கருணைமிக்கோனான இராமபிரான் (எவ்விதக்) கெடுதியும் இன்றி உள்ளான் அல்லவோ?' என்றனன் - என்று கேட்டான்; 'வலியன் - சுகமாயிருக்கின்றான்', என்றான் - விடை யிறுத்தான்; உலகம் மூன்றும் தலையின்மேல் கொள்ளும் தூயான் - மூன்று புவனங்களும் தலையின்மீது வைத்துப் போற்றும் தகுதி வாய்ந்தவனும் பரிசுத்தமானவனும் ஆன அநுமன், தொழுதனன் - இராமபிரானை (த் திக்கு நோக்கி) வணங்கினான்.

இரு மெய்ப்பாடுகள் இங்கு ஒரே காலத்து நிகழ்ந்தமை குறிக்கப்பட்டது. அநுமனுக்கும் பிறர்க்கும் உற்ற அவலம் பற்றி அழுகையும், அநுமன் உயிர்ப்புப் பெற்றது பற்றி உவகையும் எழுந்தன என்க. (ஒப்பு); 'துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தான' (சுந்தர. 583); அவனைத் தழுவினன் என்றும், தானும் அவனை அன்பொடு தழுவி என்றும் ஈரிடத்தும் கூட்டுக. வலியன்- திடமாக உள்ளான். 'வன்றிறலாய வாலி வலியன் கொல்' (சுந்தர. 1125); 'வழுவிலனன்றே வள்ளலென்றனன் வலியனென்றான்' (யுத்த. 2650); 'மல்லுயர் தோளினான் வலியனோ என்றான்' (அயோத்தி. கிளைகண்டு. 56); உலக மூன்றுந் தலையின்மேல் கொள்ளுந்தூயான்; (ஒப்பு); 'ஊழிதோறு முயர்வுறுங் கீர்த்தியான்' (சுந்தர. 429); 'தொகவொருங்கிய ஞானமென்றவரினுந் தூயான்; (யுத்த. ); 'தொழுதான் - இராமபிரானைத் திசை நோக்கி வணங்கினான்'. 'துன்பமொரு முடிவில்லை திசை நோக்கித் தொழுகின்றான்' (அயோத்தி. குகப் 30).

பி-ம். 2. அன்பொடு தழுவிக்கொண்டான்.
3. வழுவினன்; அண்ணல்.
4. உலகமெல்லாம்; சுமக்குந்தாளான், கொள்ளுந்தாளான், கொள்ளுந் தோளான்,

## சாம்பனே வாழ்விக்க வல்லவன் என்றுணர்ந்து அநுமன் சாம்பனைத் தேடியடைதல்

2651. அன்புதன் றம்பி மேலாத்
தறிவினை மயக்க வையன்
துன்பொடுந் துயில ஞனு
னுணர்வினித் தொடர்ந்த பின்னே
என்புகுந் தெய்து மென்ப
தறிகிலெ மென்ற லோடுந்
தன்பெருந் தன்மைக் கொத்த
சாம்பனெத் தலைய னென்ருன்.

'அன்பு தன் தம்பி மேல் ஆத்து - அன்பு தன் இளவல்மீது பிணைத்தலால், அறிவினை மயக்க - உணர்வினை மயக்க, ஐயன் - இராமபிரான், துன்புடன் துயிலன் ஆனுன் - துயரத்துடனே உறக்கம் பொருந்தியவன் ஆயினுன்; இனி உணர்வு தொடர்ந்த பின்னே - இனி (இராமபிரானுக்கு) நினைவு வந்த பின்னர், என் புகுந்து எய்தும் என்பது அறிகிலெம் - என்ன வந்து அடையும் என்பதைத் தெரியேம்', என்றலோடும் - என்று (வீடணன்) மீண்டும் கூறியவளவில், (அநுமன்) 'தன் பெரு தன்மைக்கு ஒத்த சாம்பன் எ தலையன் - தன்னுடைய பெருந்தன்மையால் தானே தனக்கொத்தவனுன சாம்பன் எவ்விடத்துள்ளான்', என்ருன் - என்று கேட்டான்,

யாத்து என்பது ஆத்து என வந்தது. 'மோத்தையுந் தகரு முதளுமப்பரும், யாத்தவென்ப யாட்டின் கண்ணே' (தொல். மரபி. 47). தன் பெருந் தன்மைக்கு ஒத்த என்பதற்குத் தன் பெருந் தன்மையைக் கருதுங்கால் அறிவாலும் ஆற்றலாலும் தானே தனக்கு நிகரெனத்தக்க சாம்பன் என்க. (ஒப்பு); 'தன் பெருங் குணத்தால் தன்னைத் தானல தொப்பிலர்தான்' (கிட்கிந்தா. 52) இனி, தன்மைக்கேற்ற பேரறிவும் உடையவனுன சாம்பன் எனினுமாம். எத்தலையன் - எவ்விடத்தான்; தலை - ஏழனுருபு. சாம்பன்; 'கரடிப் பெரும்படை விருத்தன்' (யுத்த. 656); கருங் கடலடைக்க வம்மெனத் தளமலி சேனையைச் சாம்பன் சாற்றினுன்'

(யுத்த. 619); இவன் பெருமையை 'மாலியைக் கண்டேன் பின்னை மாலியவானைக் கண்டேன்' (யுத்த. மூலபல. 52) எனத் தொடங்கும் செய்யுட் கொண்டுணர்க.

பி - ம். 1. மேலாய், மேலொத்து, மேலே, மேல்வைத்து.

2. துன்பினன், துன்புற, துன்பவன், பின்பவன்; உணர்வினை உணர்வினில்: பின்னர்.

3. புகுந்தேயும்; அறிகிலேன்: என்றபோது.

4. தகைமைக்கு; சாம்பனெத்தகையன், சாம்பனெத்தலத்தன், சாம்பனை தலைவன். 14

2652. அறிந்தில னவனை யாண்டுங்
கண்டில னாவி யாக்கை
பிறிந்துள திலதென் றென்றுந்
தெரிந்திலென் பெயர்ந்தே னென்று
செறிந்ததார் நிருதர் வேந்த
னுரைசெயக் காலின் செம்மல்
இறுந்திற மவனுக் கின்று
ளடுது மேகி யென்றான்.

'அவனை அறிந்திலன் - அந்தச் சாம்பனைப் பற்றி யான் ஒன்றும் அறிந்தேனில்லை; யாண்டும் கண்டிலன் - (அவனை) எவ்விடத்தும் காணவில்லை; யாக்கை ஆவி பிறிந்துளது - (அவன்) உடலைவிட்டுஉயிர் பிரிந்து விட்டது? இலது - (அல்லது) பிரிந்திலது, என்று ஒன்றும் தெரிந்திலென் பெயர்ந்தேன் - என்று யாதும் தெரியாதவனாகவே வந்துள்ளேன்', என்று-என்று, செறிந்ததார் நிருதர் வேந்தன்-நெருங்கிய மாலையை அணிந்த அரக்கர் தலைவனான வீடணன், உரை செய - சொல்ல, காலின் செம்மல்-காற்றின் புதல்வனான அநுமன், 'அவனுக்கு இறும்திறம் இன்று-அவனுக்குச் சாவு என்பது இல்லை; (ஆகலின்) ஏகி நாடுதும் - சென்று துருவுவோம்', என்றான்-என்று பகர்ந்தான். ஆல்: அசை.

யாண்டும் - எவ்விடத்தும்; 'யாண்டுங் காணேன் மாண்டக் கோனை' (குறுந். 31); பிறிந்துளதோ, இலதோ என்க. தெரிந்திலன் - முற்றெச்சம். காலின் செம்மல்: அநுமன். அவனுக்கு

இறும்திறம் இன்று, ஏகி நாடுதும் என்றும் மொழி மாற்றிப் பொருள் கொள்க.

பி - ம். 1. யானும்; ஆவியாதும்.
2. பிறந்திலனுள னென்றென்றும்.
3. காலின் தோல்றல்.
4. அவனுக்குண்டோ, இல்லை.

2653. அன்னவன் றன்னைக் கண்டா
லாணையே யரக்கர்க் கெல்லாம்
மன்னவ நம்மை மீட்டு
வாழ்விக்கு முபாயம் வல்லன்
என்னலு முய்ந்தோ மைய
வேகுதும் விரைவி னென்னு
மின்னிற வொளியிற் சென்றார்
சாம்பனை விரைவிற் சேர்ந்தார்.

(பின்னும் அநுமன் வீடணனை நோக்கி), 'அரக்கர்க்கு எல்லாம் மன்னவ - இராக்கதர்கட்கெல்லாம் அரசே! அன்னவன் தன்னை கண்டால் - அந்த சாம்பனைக் கண்ணுற்றால், நம்மை மீட்டும் வாழ்விக்கும் உபாயம் வல்லன் - (அவன்) நம்மை (இவ்விடரினின்றும் பிழைக்கச் செய்து, திரும்பவும் வாழ்வளிக்கும் வகையைப் பகரவல்லன்; ஆணையே - இது உறுதியே', என்னலும் - என்று மொழிந்தவுடனே, 'ஐய - ஐயனே! உய்ந்தோம் - நாம் பிழைத்தோம், விரைவின் ஏகுதும் - தாமதமின்றி (அவன்பாற்) செல்வோம்', என்னு - என்று (வீடணன் சொல்ல), மின்நிற ஒளியில் - மின்னலுடைய வெண்ணிற ஒளியைத் துணைக்கொண்டு சென்றாராய், சாம்பனை விரைவில் சேர்ந்தார் - சாம்பனை விரைந்து அடைந்தார்.

அன்னவன் என்றது சாம்பனை, ஆணையே வாழ்விக்கும் எனினுமாம். வீடணன், இராமபிரான் அளிக்க இலங்காபுரி அரசினை மேவினன் ஆதலின் அடிக்கடி அவனை இலங்கை வேந்தன் எனக் கூறுதல் காண்க. 'இங்கு அரக்கர்க்கெல்லாம்

மன்னவ' எனப்பட்டது. 'இலங்கை வேந்தன்' (யுத்த. 2638); 'செறிந்ததார் நிருதர் வேந்தன்' (யுத்த. 2652).

பா - ம். 1. ஆணையவ், ஆணைய ; அரக்கர்க்கோலம்.

2. நம்மையெல்லாம்' எம்மையின்டு, நம்கைமிண்டு ; வாழ்விக்குமுறுநி.

3. என்னலுமுவந்தோன், உயர்ந்தோம் ; என்றான்.

4. சின்னெறி யிருளிற் 16

## வருத்தநிலையிலும் சாம்பன் இருவர் வருகையை யறிதல்

2654. எரிகின்ற மூப்பி னாலு மேவுண்ட நோவி னாலும்
அரிக்கின்ற துன்பத் தாலு மாருயிர்ப் படங்கி யொன்றுந்
தெரிகின்ற தில்லா மம்மர்ச் சிந்தைய னெனினும் வீரர்
வருகின்ற சுவட்டை யோர்ந்தான் செவிகளால்
வயிரத்தோளான்.

எரிகின்ற மூப்பினாலும் - துன்பத்தரல் வருந்துகின்ற கிழத் தன்மையாலும், ஏவுண்ட-அம்பு தைத்ததனாலான, நோவினாலும்-துன்பத்தாலும், அரிக்கின்ற துன்பத்தாலும் -(நண்பர்கள் அனை வரும் மரித்தனரே என்பதை விடாது நினைத்தலின்), உள்ளத்தைப் புண் செய்கின்ற துயராலும், அருமை உயிர்ப்பு அடங்கி-அருமை யான மூச்சும் அடங்கப் பெற்று, ஒன்றும் தெரிகின்றது இல்லா - யாதும் அறியமாட்டாத, மம்மர் சிந்தையன் எனினும் - மயக்கம் கொண்ட மனத்தான் என்றாலும், வயிரம் தோளான் - வயிரம் போல் உறுதியான தோள்களை யுடையவன் ஆன சாம்பன், வருகின்ற சுவட்டை செவிகளால் ஓர்ந்தான் - வீரர் வருகின்ற காலடி ஓசையைக் காதுகள் மூலம் ஓர்ந்தான்.

ஏவுண்ணுதல் : அம்பால் தைக்கப்படுதல். 'ஏவுண்டு துளக்க மெய்தா விரத்தகப் பரிதியீன்ற, பூவுண்ட கண்ணன்' (யுத்த. 2358); ஆருயிர்ப்பு : அருமை உயிர்ப்பு. இல்லாத என்பது ஈறு

கெட்டு இல்லா என நின்றது. மம்மர் : மயக்கம் ; 'கல்விபோல், மம்மரறுக்கு மருந்து' (நாலடி. 132) ; சுவடு : காலடி ஓசை.

பி - ம். 1. ஏவுண்ட புன்னிணுனும், ஓய்வினுனும்.

2. அடங்கி யாதும்.

3. தெரிகின்றதில்லை ; அம்மா, மற்றைச் ; சிந்தையவேனும் ; செல்வர், சேர்வார்.

4. ஏற்ருன் ; ஓர்ந்தான் ; செவியினல். 17

யாவர் வருகின்ருரென்று சாம்பன் கருதிப் பார்த்தல்

2655. அரக்கனே வென்னை யாளு
மண்ணலோ வனுமன் ருனே
இரக்கமுற் றருள வந்த
தேவரோ முனிவ ரேயோ
வரக்கட வார்க ளெல்லின்
மாற்றலர் மலைந்து போனர்
புரக்கவுள் ளாரே ;'யென்ன
நினைந்தனன் பொரும றீர்ந்தான்.

'அரக்கனே - வீடணனே ? என்னை ஆளும் அண்ணலோ - (அன்றி) என்னை ஆட்கொள்ளும் இராமபிரானே ? (அல்லது), அநுமன் தானே - மாருதி தானே ? இரக்கம் உற்று அருளவந்த தேவரோ - என்பால் இரக்கம் கொண்டு அருள்புரிய வந்த தேவரோ ? முனிவரேயோ - முனிவர் தாமோ ? எல்லில் - இரவில் (நடமாடுபவரான), மாற்றலர் - பகைவர்கள், மலைந்து போனர் - போர் புரிந்து வெற்றியுடன் திரும்பிச் சென்றனர் ; (ஆதலின்), புரக்க உள்ளாரே வர கடவார்கள் - நம்மை ஆதரிக்கக் கூடியவர்கள் தான் இங்கு வருதற்குரியவர்', என்ன - என்று, நினைந்தனன் - எண்ணி, பொருமல் தீர்ந்தான் - மனத் துன்பம் நீங்கப் பெற்றான், ஓகாரம் : ஐயம்.

முதலிரண்டடிகட்கு (ஒப்பு) ; 'அரக்கனேயாக வேறோர் அமர னேயாக வன்றிக், குரக்கினத் தொருவனே தான் ஆகுக, கொடுமை யாக, இரக்கமே யாக' (சுந்தர. 515) ; மாற்றலர் எல்லின் மலைந்து

போனார் என்று கூட்டினும் ஆம். இரவே அரக்கர்க்கு வன்மை தருவதாகலின் போர் இரவிற் புரிபவர் அரக்கர், 'செவ்வழி மந்திரத் திசைய ராகையால், வெவ்வழி யிருடர மதித்துமீச் செல்வார்' (சுந்தர. 142); கடவார்: 'யானேதும் பிறப்பஞ் சேனிறப்பதனுக் கென்கடவேன்' (திருவாச. திருச்சதகம்; 15); எல்: இச்சொல் இரவு பகல் என்ற இரண்டினையும் குறிக்கும். இங்கு இரவினைக் குறித்தது; 'எல்லியில் யானிவனிரண மாளிகை' (யுத்த. 402); பகல்: 'எல்லினும் வெள்ளிபட வெதிர்வது கண்டு' (யுத்த. இந்திரசித்து. 25); மாற்றலர்: பகைவர்; 'என்னையுங் களத்திற் கொல்லு மாற்றலர்' (யுத்த. 115); புரக்கவுள்ளாரே வரக் கடவர்கள் என மாற்றுக. உள்ளாரே: ஏகாரம் தேற்றம்.

பி-ம். 2. அருளி வந்த, ஆள.

3. எல்லா மாற்றலால், அல்லர் மாற்றலர், அல்லர் மாற்றவர்; மறிந்து.

4. உள்ளாரோவென்று; கருதினன்; பொம்மல். 18

அணுகி நின்றுரைச் சாம்பன் வினவியறிதல்

2656 வந்தய னின்று குன்றின் வார்ந்துவீ ழருவி மானச்
சிந்திய கண்ணி னீர ரேங்குவார் தம்மைத் தேற்றி
அந்தமில் குணத்தி ரியாவி ரணுகினி ரென்று வினய
உய்ந்தன முய்ந்தோ மென்ற வீடண னுரையைக்
[கேட்டான்.

வந்து - வந்து, அயல் நின்று - அணித்தாக நின்று, குன்றின் - மலையிலிருந்து, வார்ந்து - ஒழுகி, வீழ் - வீழ்கின்ற, அருவிமான - நீரருவியை ஒப்ப, சிந்திய - சிந்துகின்ற, கண்ணின் நீரர் - கண்ணீரை யுடையவரும், ஏங்குவார் தம்மை - திகைத்து வருந்துபவருமான இவர்களை, தேற்றி - தெளிவித்து, (சாம்பன்) 'அந்தம் இல் குணத்திர் - எல்லையற்ற நற்பண்பு வாய்ந்தவர்களே! அணுகினிர் யாவிர் - என்பால் நெருங்கி வந்த நீங்கள் யார்,' என்றான் - என்று வினாவினான்; 'ஐயா - ஐயா, உய்ந்தனம் உய்ந்தோம் - (நாங்கள் உம்மைத் தரிசித்ததனாலே) பிழைத்தோம் பிழைத்தோம்', என்ற - என்று கூறிய, வீடணன் உரையை கேட்டான் - வீடணன் சொற்களைச் செவியேற்றான்.

அணுகினிர் யாவிர் என மாற்றுக. எல்லோரும் இறந்து கிடந்த நிலையில், சாம்பன் மட்டும் உயிருடனிருந்தது கண்டும், அவன் இறந்தவர்களைப் பிழைப்பிக்கும் உபாயம் கூறுதல் கூடும் என்பதை யுட்கொண்டும், 'உய்ந்தனம் உய்ந்தோம்' என்ருன் வீடணன்.

பி - ம். 1. அவனின்று, அயலனின்ருர் ; வந்து.

2. கண்ணிரெங்கும், கண்ணினின்ருர், கண்ணிநீரின் ; ஏங்குவான்றனை ; நோக்கி.

3. யாவர் ; என்கின்ருனை.

4. என்னு, என்று. 18

## அநுமன் வந்துள்ளமையை யறிந்து சாம்பன் இனி யாவரும் உய்ந்தோம் எனல்

2657. மற்றய னின்ரு னியாவ னென்னமா ருதியும் வாழி
கொற்றவ வனும னின்றேன் ருெழுதன னென்று கூற
இற்றில மைய வெல்லோ மெழுந்தன மெழுந்தோ
[மென்னு
உற்றபே ருவகை யாலே யோங்கினு னூற்ற முற்ருன்.

மற்று - பின்பு, 'அயல் நின்ருன் யாவன் - பக்கத்தின் நின்றவன் யார்', என்ன - என்று (சாம்பன்) கேட்க, மாருதியும் - அநுமனும், 'கொற்றவ - வெற்றி வீரனே, வாழி - வாழி ; அநுமன் நின்றேன் - அநுமன் நிற்கின்றேன் ; தொழுதனன் - தொழுதேன்', என்று கூற - என்று சொல்ல, ஊற்றம் உற்ருன்-வலிமை பொருந்தியவனை சாம்பன், 'இற்றிலம் - (நாங்கள்) இறந்தோம் அல்லோம் ; ஐய - ஐயனே ! எல்லோம் எழுந்தனம் எழுந்தோம் - நாம் அனைவரும் உயிர் பெற்றெழுந்தோம் எழுந்தோம்', என்னு-என்று பகர்ந்து, உற்ற பேர் உவகையாலே - பொருந்திய பெரு மகிழ்ச்சி யினுலே, ஓங்கினுன் - சிறந்து விளங்கினுன்.

கொற்றவன் - வெற்றி வீரன்; 'கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோது' (சுந்தர. 523) : ஊற்றம் : வன்மை ; 'ஊற்றமில்லவனேடினன் கனகனை யுற்ருன்' (யுத்த. 163); 'ஊன்றின பரிக்கவோ ரூற்றம் பெற்றிலாள்' (ஆரணிய. 246) அநுமன் உதவி

கொண்டு இறந்தோரனைவரையுமே பிழைப்பிக்கலாம் என்ற தெளி விளுல், 'எழுந்தன மெழுந்தோம்' என்ருன் சாம்பவான். எழுந் தனம் எழுந்தோம்: துணிவு பற்றிய காலவழுவமைதி. முன் கவியில் 'உய்ந்தன முய்ந்தோம்' என்றது காண்க. உவகை பற்றிய அடுக்கு.

பி-ம். 1. மற்றவன்; அயலே வின்ருர் யாரென, நின்ருரியாவரென்ன.
3. இற்றனம்; வையம் வெல்வோம்.
4. ஓங்கினர். 20

## சாம்பன் இராமபிரானைப் பற்றிக் கேட்டறிதல்

2658. விரிஞ்சன் வெம் படையென்ருலும்
வேதத்தி னுட்பங் கூறும்
அரிந்தமன் றன்னை யொன்று
மாற்றல தென்னு மாற்றல்
தெரிந்தனன் முன்னே யன்ஞன்
செய்ததென் றெரித்தி யென்ருன்
பெருந்தகை துன்ப வெள்ளத்
துயிலுளான் பெரும வென்ருன்.

'விரிஞ்சன் வெம்படை என்ருலும் - பிரமாத்திரமே (விடுக்கப் பட்டது) ஆனாலும், வேதத்தின் நுட்பம் கூறும் - நான்மறைகளின் நுணணிய பொருளாகக் கூறப்படுகின்ற, அரிந்தமன் தன்னை - சத்துருக்களை அடக்க வல்லவனுகிய இராமபிரானை, ஒன்றும் ஆற்றலது - ஒன்றும் செய்கிலது, என்னும் ஆற்றல் தெரிந்தனன் - என்னும் மனத்துக்கு வன்மை தரக்கூடிய செய்தியை அறிந்துள் ளேன்; அன்னுன் செய்தது என் - அப்பெருமான் புரிந்த செயல் என்ன? முன்னே தெரித்தி-முன்னம் அறிவிப்பாய்' என்ருன்-என்று வினவினுன், (சாம்பன்); 'பெரும - பெருமை மிக்கோய், பெருந் தகை - பெருந்தகுதி யுள்ளவனுன இராமபிரான், துன்ப வெள்ளம் துயிலுளான் - துன்பப் பெருக்கால் விளைந்த நித்திரைக்குட் பட்டுள்ளான்', என்ருன் - என்று அறிவித்தான்.

விரிஞ்சன் - பிரமன்; 'விரிஞ்சனே விடைவல்லானே' (கிட்கிந்தா. 61). வேதத்தினுட்பம் கூறும் அரிந்தமன், இராமபிரான். அரிந்தமன்: பகைவரை வெல்பவன் என்பது பொருள்; 'நான்

மறையின் கனி' (ஆரணிய. 97); 'சுருதி நாயகன்' (சுந்தர. 338); பாற்கடல் வெள்ளத்துத் துயில்பவனான இராமபிரான், இங்குத் துன்பவெள்ளத்துத் துயிலுளான் ஆயினன். 'தொல்லாழி தனை நீத்துத் துயராழிக்கண் துயில்கின்றானை'

பி . ம். 1. விரிஞ்சன் தன்; படையினாலே; வேதமன்ன.

2. வருஞ்சமஞ்; மாற்றலரென்று மாற்றல், ஆற்றலை வறிகிலாமால்.

3. முன்னேயென்னச்; செய்தது; தெரிதி.

4. வெள்ளத்திடை; பெருமை. 21

## சாம்பன், யாவரையும் பிழைப்பிக்கும் மருந்து கொணருமாறு கூறல்

2659. அன்னவன் றன்னைக் கண்டா
லாற்றுமோ வாக்கை வேறே
இன்னுயி ரொன்றே மூலத்
திருவரு மொருவ ரேயால்
இன்னது கிடப்பத் தாழா
விங்கினி யிமைப்பின் முன்னர்க்
கொன்னியல் வயிரத் தோளாய்
மருந்துபோய்க் கொணர்தி யென்றான்.

'அன்னவன் தன்னை கண்டால் - (அந்த அவல நிலையிற் கிடந்த) இலக்குவனைப் பார்த்தால், ஆற்றுமோ - மன அமைதி கொண்டு உயிர் தாங்கவல்லதோ? மூலத்து - அடிப்படை வரலாற்றை ஆராய்ந்து நோக்கின், இருவரும் ஒருவரே - இருவரும் ஒருவரே; (இஃது உறுதி), ஆக்கை வேறு - இருவர்க்கும் உடல் மட்டும் வேறு; (எனினும்) இன் உயிர் ஒன்றே - இனிமையான உயிர் ஒன்றேயாம்; கொன் இயல் வயிரம் தோளாய் - (பகைவர் கட்கு) அச்சம் இயற்றுகின்ற வலிய தோள்களை யுடையவனே! இன்னது கிடப்ப - இத்தன்மை இங்ஙனமிருப்பதால், இனி இங்கு தாழா - இனிமேல் இங்கிருந்து காலதாமதம் செய்யாமல், இமைப்பின் முன்னர் - கண்ணிமைக்கும் நேரமான ஒரு மாத்திரைக் குள்ளாக, போய் மருந்து கொணர்தி - சென்று (பிழைப்பிக்கும்) அமுதத்தைக் கொண்டு வருவாயாக', என்றான் - என்று மொழிந்தான் சாம்பன். ஆல்: ஏ: அசை.

அன்னவன் என்றது இலக்குவனை, ஆற்றுமோ - உயிர் தாங்கப் பெறுமோ, ஆக்கை வேறே யின்னுயிர் ஒன்றே. 'இரண்டு உடற் குயிரொன்றுயினுர்' (பால. மிதிலைக். 38.); 'ஆவியொன்ருக நட்டான்' (சுந்தர.); 'உயிரொன்றுள மொன்று' (திருக்கோ. 18); 'இருதலைப் புள்ளின் ஒருயிரம்மே' (அகம்: 12; கலித்: 89ம்) காண்க. (ஒப்பு) 'உங்களாருயி ரெமதுயிருடல் பிறிதுற்றீர்' (யுத்த. 2559); மூலத்திருவரும் ஒருவரே-ஒரே திருமாலின் அம்சாவதாரம் இராம இலக்குவராதல் காண்க. திருமாலின் பாயலாகிய ஆதிசேடனே இலக்குவன் என்று இக் காப்பியத்தில் பல இடங்களிலும் காணலாம், 'வளையொடு திகிரியும் வடவை தீதர, விளை தருகடுவுடை விரிகொள் பாயலும், இளைஞர்க ளெனவடி பரவ வேகிநாம், வளைமதிலயோத்தியில் வருதுமென்றனன்' (பால. திருவவ. 23); 'அண்ணற் பெரியோன்றனதாதியின் மூர்த்தியொத்தான்' (அயோத்தி. நகர் நீ. 116); 'அன்னவற்கிளவல் தன்னை யருமறை பரமென்ருேதும், தன்னிலை நின்றுதீரா நவையிலா வுயிர்கடோறும், தொன்னிலை பிரிந்தானென்னப் பலவகை நின்றதூயோன், இன்னணை யென்ன யாருமியம்புவர்' (யுத்த. 758); கொன் - அச்சம். 'கொன்னேயுள னிலத் தேயுளன்' (யுத்த. மூலபல. 115).

பி - ம். 1. தன்மை; ஆற்றுமே.

3. என்னது, இந்நிலை; தாழ்வதிளியில்லை; தாழாவினியில்லை, தாழாதினியில்லை.

4. பொன்னியல். 22

## மருந்து கொணர்ந்தால் யாவரும் பிழைப்பார் எனல்

2660. எழுபது வெள்ளத் தோரு
மிராமனு மிளைய கோவும்
முழுதுமிவ் வுலக மூன்று
நல்லற மூர்த்தி தானும்
வழுவலின் மறையு முன்னல்
வாழ்ந்தன வாகு மைந்த
பொழுதிறை தாழா தென்சொன்
னெறிதரக் கடிது போதி.

'மைந்த - மைந்தனே! (நீ மருந்து கொணர்வாயானால்), எழு பது வெள்ளத்தோரும் - எழுபது வெள்ளம் வானரச் சேனைகளும், இராமனும் - இராமபிரானும், இளையகோவும் - இலக்குமணப் பெருமாளும், முழுதும் இ உலகம் மூன்றும் - முழுதாகிய இந்த மூன்றுலகங்களும், நல் அறம் மூர்த்தி தானும் - சிறந்த தரும தேவதையும், வழுவல் இல் மறையும் - பழுதற்ற வேதங்களும், உன்னால் வாழ்ந்தன ஆகும் - உன் உதவியால் அழியாது நிலைபெறுவன ஆகும்; ஆதலின், இறை பொழுது தாழாது - சிறிது காலமும் தாமதம் செய்யாமல், என சொல் நெறிதர - நான் சொல்வழிகாட்ட, கடிது போதி - விரைந்து எழுவயாக.

வானரப்படை எழுபது வெள்ளம் என்பது பல இடங்களிலும் குறிக்கப் பெறுதல் காணலாம். பிழைக்கும் ; மருந்து கொணரவே, இராமபிரானும் பலரும் உயிர் பெற்றெழுவர்; எனவே மூன்று புவனங்களும், அறக்கடவுளும், நான்மறையும் வாழும் என்றான்; (ஒப்பு) 'பனிக்கற் சிலையும்' (சுந்தர. 544) எனத் தொடங்கும் செய்யுள். வழுவல் இல்: குற்றமில்லாத. 'வழுவலிலபய முன்பால் வழங்கினன்' (யுத்த. 427); இறை பொழுது தாழாது என மொழி மாற்றுக; என் சொல் நெறிதர என்பது என் சொல்லானது உனக்கு வழியைக் காட்ட என்க.

பி - ம். 2. முழுவதில்.
3. வழுவிலா.
4. என்சொல் தேறுநி ; கடிதுபோநி. 23

### வேறு

### மருத்துமலைக்குச் சாம்பன் வழி கூறுதல்

2661. பின்புளதிக் கடலென்னப் பெயர்ந்த தற்பின்
யோசனைகள் பேசநின்ற
ஒன்பதினா யிரங்கடந்தா லிமயமெனுங்
குலவரையை யுறுதி யுற்றால்
தன்பெருமை யோரிரண்டா யிரமுளோ
சனையதுபின் றவிரப் போனால்
முன்புளயோ சனையெல்லாமுற்றினை பொற்
கூடஞ்சென் றுறுதி மொய்ம்ப.

'மொய்ம்ப - வலியானே! இ கடல் - இந்தக் கடல், பின்பு உளது என்ன - பின்பு உள்ளது என்னுமாறு, பெயர்ந்ததன் பின் - (இதனைத்) தாண்டிச் சென்ற பிறகு, பேச நின்ற யோசனைகள் - புகழ்ந்து பேசப்படா நின்ற, ஒன்பதினாயிரம் கடந்தால் - ஒன்பதினாயிரம் யோசனைகள் கடந்து சென்றால், இமயம் எனும் குலவரையை உறுதி - இமயம் என்ற குலபருவதத்தை அடைவாய்; உற்றால் - அடைந்தால், தன் பெருமை ஓர் இரண்டு ஆயிரம் உள-(அது) தன் குறுக்கு நெடுக்கு அளவு, இரண்டாயிரம் யோசனை உள்ளது; பின் தவிர - அது பின்னிடுமாறு, முன்பு உள - முன்புள்ள, யோசனை எல்லாம் முற்றினை - (ஒன்பதினாயிரம்) யோசனைகளைக் கடந்து, பொன் கூடம் சென்று உறுதி-ஏமகூட மலையைச் சென்றடைவாய்.

யோசனை : ஓர் அளவு; இதனை மூன்று மைல் தூரம் என்றும், பத்து மைல் தூரம் என்று கூறுவார்கள். குலவரை : 'கனை கடலைக் குலவரையைக் கடந்து நின்ற பெரியானை' (தேவா. 12 : 1) 'குலவரைக் குவடுமேய்க்கும்' (யுத்த. மீட்சி. 196); தன் பெருமை - இங்கு அதன் அகலநீளப் பெருமை என்க. பொற்கூடம் - ஏம கூடம். 'ஏம கூடமும் காசியு மன்றியு மிப்பால்' (அரிச் பு. சூழ்வினை: 103) ஏமகூடம் : எட்டுக்குல மலைகளில் ஒன்று. மேருவின் தெற்கு இமயத்திற்கப்பால், 9000 யோசனையில் உள்ள மலை. இது 'விஞ்சையர் வாழிடம்' (அபி. சிந். பக். 281).

இந்தச் செய்யுள் முதல் 98-ஆம் செய்யுள்வரைக் குளகப் பொருள்.

இளாவிரத கண்டத்தின் தென்பால், தெற்கு நின்று இமயபர் வதமும் அதன் வடக்கு ஏமகூட பருவதமும், அதன் வடக்கு நிடத பர்வதமும், இளாவிருத கண்டத்தின் வடபாலில் அழகு பொருந்திய நீல பருவதமும் உள. நீல மலையும் நிடத மலையும் கீழ்மேல் லட்சம் நீளமாம்; பெரிதான ஏமகூடவரையும் சுவேதவரையும் தொண்ணூறாயிரம் யோசனையாம்; நீல் பருவதமும் மாலியவான் பருவதமும் யோசனை நீலமணி போல இருக்கும்; இமய மலையும் சுவேத மலையும் பால்நிற மாயிருக்கும்; நிடதம் படிகநிறமாக இருக்கும்; ஏமகூட

வரை பொன்னிறமாயிருக்கும். மேருவைச் சூழ்ந்த இளாவிருத கண்டத்துக்கு வடபாலில் கிழ் மேலிலக்கம் யோசனை நீளமுள்ளது, நீலமலை. மேருவைச் சூழ்ந்த இளாவிருத கண்டத்துக்குத் தென்பால் கிழ் மேலிலக்கம் யோசனை நீளமுள்ள நிடத பருவதத்துக்குத் தெற்கு அரிகண்டம், தென்வடல் ஒன்பதினாயிரம் யோசனை; இதன் தென்பால், கிழ்மேல் தொண்ணூறாயிரம் யோசனை நீளமுள்ளது ஏமகூட மலை. அண்டகோள விலாசத்தில் நவகண்டமுரைத்த அத்தியாயத்திலிருந்து இச் செய்தி குறிக்கப் பெற்றது.

பி - ம். 1. பேர்ந்ததற் பின்; பேசா நின்ற.

3. உளதி யோசனையது;

4. கடந்து; முற்றின; முன்ப. 24

2662. இம்மலைக்கு மொன்பதினா யிரமுளதா
ஒியோசனையி னிடத மென்னுஞ்
செம்மலைக்கு முளவாய வத்தனையோ
சனைகடந்தாற் சென்று காண்டி
எம்மலைக்கும் பெரிதாய வடமலையை
யம்மலையி னகல மெண்ணின்
மொய்ம்மலைந்த திண்டோளாய் முப்பத்தீ
ராயிரமியோ சனையின் முற்றும்.

'இ மலைக்கும் - இந்த ஏமகூட பர்வதத்துக்கும் (அப்பால்), ஒன்பதினாயிரம் யோசனையில் நிடதம் என்னும் செம்மலை உளது - ஒன்பதினாயிரம் யோசனையில் நிடதம் என்னும் செவ்விய மலை யுள்ளது; அம்மலைக்கும் - அந்தச் செவ்விய மலைக்கும், உளவாய் - உள்ளதான, அத்தனை யோசனை கடந்தால் - (அதே அளவான) ஒன்பதினாயிரம் யோசனை தூரம், கடந்தால் - கடந்து சென்றால், எ மலைக்கும் பெரிது ஆய வடமலையை சென்று காண்டி - எல்லா மலைகளைக் காட்டிலும் பெரிதான மேரு மலையைச் சென்று காண்பாய்; அ மலையின் அகலம் எண்ணின் - அந்த மலையின் விஸ்தீர்ணத்தைக் கருதி நோக்கின், மொய் மலைந்த திண் தோளாய் - வன்மையுடன் போர் புரியவல்ல உறுதியான தோள்களை யுடையவனே; முப்பத்தீராயிரம் யோசனையின் முற்றும் - முப்பத்தீராயிரம் யோசனைகளில் முற்றுப்பெற்றிருக்கும். ஆல்: அசை.

இம் மலை என்றது ஏமகூடத்தை; 'நிடதம் எட்டுக்குலமலைகளில் ஒன்று' (அபி. சிந். பக். 970); செம்மலை-செம்பாறைகளாலான மலையுமாம். வடமலை : மேரு, இதன் விவரம் அபிதான சிந்தாமணி பக். 1346 ல் காண்க. சிவபிரானால் வில்லாக வளைக்கப் பெற்றது, ஒன்பது கோள்களாலும் வலஞ் செய்யப் பெறுவது; வாயுவினால் ஒரு காலத்தில் மூன்று சிகரங்களாகப் பெயர்க்கப் பெற்றது; விநாயகர் இதனை ஏடாகக் கொண்டு மாபாரதம் தீட்டினர் என்ப. மொய் : போர் எனினுமாம்.

பி-ம். 1. அம்மலைக்கு; உளயோசனையதனில் ளிடதமென்றும், உளதாலோசனையிலிடபமென்னும், உளவோசனை யவனி நிடதம்.

2. செம்மலைக்கு முளவாய, செம்மலைக்குமப்பாலும், அத்துணையதுணை, அத்தகையவது.

3. எம்மலைக்குமாருய வடமலையை.

4. மலைந்ததிரள், மலையின்றிரள், மலையதிரள். 25

2663. மேருவினைக் கடந்தப்பா லொன்பதினு
யிரமுளவோ சனையை விட்டால்
நேரணுகு நீலகிரி தானிரண்டா
யிரமுளயோ சனையி னிற்கும்
மாருதிமற் றதற்கப்பா லியோசனைநா
லாயிரத்தின் மருந்து வைகுங்
கார்வரையைக் காணுதிமற் றதுகாண
வித்துயர்க்குக் கரையுங் காண்டி.

'மேருவினை கடந்து அப்பால் - மேரு மலையைத் தாண்டி அதற்கப்பால், ஒன்பதினாயிரம் உள யோசனையை விட்டால் - ஒன்பதினாயிரமாக உள்ள யோசனையைக் கடந்தால், நேர் அணுகும் - எதிரே நெருங்குகின்ற, நீலகிரி தான் - நீலகிரி என்ற மலைதான், இரண்டாயிரம் உள யோசனையின் நிற்கும் - இரண்டாயிரம் யோசனை தூரத்தில் இருக்கும்; மாருதி - அநுமானே ! மற்று - மேலும், அதற்கு அப்பால் - அதற்கப்புறத்தில், நாலாயிரம் யோசனையில் மருந்து வைகும் - நாலாயிரம் யோசனை தூரத்தில் மருந்து தங்கியிருக்கப் பெற்ற, கார் வரையை காணுதி - கரிய மலையைக் காண்பாய்; காண - அதனைக் கண்ணுறவே, இ துயர்க்குக்

கரையும் காண்டி - இந்த நண்பர்கள் அனைவரும் இறந்து பட்டதனு லான துன்பத்திற்குக் கரையும் காண்பாய். மற்றும்: வினைமாற்று.

மேருப் பிரமாணத்தை: அண்டகோள விலாசம் 63-66 ல் காண்க. மாருதி: அண்மைவிளி. கார்வரை: மேகம் தங்கப்பெற்ற மலை யெனினுமாம். மந்தர மலையைக் கார்வரை என்பர். 'கார்வரை நிறுவித் தன்னைக் கனலெழக் கலக்கக் கண்டும்' (யுத்த. 431); துயர்க்குக் கரையென்று கூறித் துயரை நீராகக் கூறுமையின் ஏகதேச வுருவகம்.

பி - ப். 1. எண்பதினுயிரம்,

2. நேரனுகி.

3. நாலாயிரத்து; மருத்து.

4. ஞாணிலித்; துயரங். 26

## சாம்பன் மருந்துகளின் அங்க அடையாளத்தை அநுமனுக்குக் கூறுதல்

2664. மாண்டாரை யுய்விக்கு மருந்தொன்று
மெய்வேறு வகிர்களாகக்
கீண்டாலும் பொருந்து விப்பதொருமருந்தும்
படைக்கலங்கள் கிளர்ப்பதொன்றும்
மீண்டேயுந் தம்முருவே யருளுவதோர்
மெய்ம்மருந்து முளநீ வீர
ஆண்டேகிக் கொணர்தியென வடையாளத்
தொடுமுரைத்தா னறிவின் மிக்கான்.

அறிவின் மிக்கான் - அறிவிற் சிறந்தவனான சாம்பன், 'மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்று - இறந்தவரைப் பிழைப் பிக்கும் மருந்து ஒன்றும், மெய் - உடல், வேறு வகிர்கள் ஆக கீண்டாலும் - வேறு வேறு பிளவாகப் பிளந்திட்டாலும், பொருந்து விப்பது ஒரு மருந்தும் - ஒட்டும்படி செய்யும் ஒரு மருந்தும், படை கலங்கள் (தைத்த) ஆயுதங்களை, கிளர்ப்பது ஒன்றும் - வெளிப் படுத்துவதொரு மருந்தும், மீண்டேயும் - (உருவம் குலைந்தவிடத் தும்) திரும்பவும், தம் உருவே - தமது உருவினையே, அருளுவது ஓர்-

செய்யவல்ல, மெய் மருந்தும் - உண்மையான (தவறாத) மருந்து ஒன்றும், உள - உள்ளன; வீர - வீரனே! ஆண்டுஏகி - (நீ) அவ்விடம் சென்று, கொணர்தி - (அம் மருந்துகளைக்) கொணர்ந்துதவுக', என - என்று, அடையாளத்தொடும் உரைத்தான் - அவற்றின் அங்கக் குறிகளுடன் (அநுமனுக்குப்) பகர்ந்தான்.

மாண்டாரை உய்விக்கும் மருந்து, மிருத சஞ்சீவினி; மெய் வேறு வகிர்களாகக் கீண்டாலும் பொருந்துவிப்பது; ஸந்தான காணீ; படைக்கலங்கள் கிளர்ப்பது விஸல்ய கரணீ; மீண்டேயுந் தம் முருவே யருளுவது சாவர்ண்ய கரணீ; இவை முதனூலிற் கண்டவை. கீண்டாலும்; கீள்: பகுதி. 'திசைமுகன் செய்த முட்டை கீண்டிலது' (சுந்தர. 1277).

பி - ம். 1. மருந்தொன்றிவ்வுடல்.
2. பொருந்துவிக்கும்; கிளைப்பது.
3. தம்முருவை.
4. உளது. 27

## அம்மருந்துகளைப் பற்றிய வரலாறு

2665. இன்னமருந் தொருநான்கும் பயோததியைக்
கலக்கியஞான் றெழுந்த தேவர்
முன்னியமைத் தனர்மறைக்கு மெட்டாத
பரஞ்சுடரிவ் வுலக மூன்றும்
தன்னிருதா ளுள்ளடக்கிப் பொலி
போழ்தின் யான்முரசஞ் சாற்றும்வேலை
அன்னவைகண் டுயாவுதலுந் தொன்முனிவ
ரவற்றியலெற் கறிவித் தாரால்.

'இன்ன மருந்து ஒரு நான்கும் - இத்தகைய நான்கு மருந்துகளும், தேவர் பயோததியை கலக்கிய ஞான்று எழுந்த - அமரர்கள் பாற்கடலைக் கடைந்த காலத்து வெளிப்பட்டவை; (அத்தேவர்கள்) முன்னி - அவற்றின் ஆற்றலை யெண்ணி, அமைத்தனர் - பாதுகாப்பில் வைத்துள்ளார்கள்; மறைக்கும் எட்டாத - வேதத்திற்கும் எட்டாத, பரம்சுடர் - மேலான சோதி வடிவினன் (வாமனனான)

திருமால், (திருவிக்கிரமனை), இவ் உலகம் மூன்றும்-இந்த உலகங்கள் மூன்றினையும், தன் இருதாள் உள் அடக்கி - தன்னுடைய இரண்டு திருவடிகட்குள் அடக்கி, பொலி போழ்தின் - விளங்கிய காலத்தில், யான் முரசம் சாற்றும் வேலை - நான் வெற்றி முரசை அடிக்கையில், அன்னவை கண்டு உயாவுதலும் - அந்த மருந்துகளைக் கண்டு வினவுதலும், தொல் முனிவர்-பழமைசான்ற முனிவர், அவற்று இயல் எற்கு அறிவித்தார் - அவற்றின் பண்புகளை எனக்குத் தெரிவித்தனர். ஆல் : அசை.

பயோததி : பய+உததி ; வடமொழிச் சந்தி. பயோததியைக் கலக்கியது ; ஆரணிய. 102 ; 178 ; சுந்தர. 42 ; யுத்த. 413 காண்க. முன்னுதல் : அம் மருந்துகளின் சிறப்பினையும் ஆற்றலையும் ஆராய்தல். 'முன் பிறந்தனையர் தம்மை முன்னினு னென்ன நின்றான்' (கிட்கிந்தா. 52); மறைக்கு மெட்டாத பரஞ்சுடர் : திருமால் ; 'வேதமும் போதமும் காண்கிலாதான்' (சுந்தர. 578) ; உலக மூன்றும் தன் தாளில் அடக்கியது; பாலகாண்டம் வேள்விப் படலம் (23 - 38 ல்) காண்க. முரசம் சாற்றியது ; 'அனைவருங் கருங் கடலடைக்க வம்மெனத், தளமலி சேனையைச் சாம்பன் சாற்றினான் (யுத்த. 619). 28

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

### சாம்பன் அம்மருந்துகளைக் கொண்டு வருமாறு கூறல்

2666. இம்மருந்து காத்துறைவ வெண்ணிலவாற்
றெய்வங்க ளிரங்கா யார்க்கும்
நெய்ம்மருங்கு படரகில்லா நெடுநேமிப்
படையுமவற் றுடனே நிற்கும்
பொய்ம்மருங்கி னில்லாதாய் புரிகின்ற
காரியத்தின் பொருளை நோக்கிக்
கைம்மருங்குண் டாநின்னைக் காயாவா
மப்புறம்போய்க் கரக்கு மென்றான்.

'இ மருந்து காத்து உறைவ - இந்த மருந்துகளைப் பாதுகாத்துக் கொண்டிருப்பனவான, தெய்வங்கள் எண்ணில - தெய்வங்கள்

கணக்கற்றனவாகும்; (அவை) யார்க்கும் இரங்கா - எவர்மாட்டும் இரக்கம் கொள்ளா, நெய் - நெய் பூசப் பெற்றதும், மருங்கு படர கில்லா - அருகில் செல்வதற்கும் இயலாததுமான, நெடு நேமி படையும் - நெடிய ஆழிப் படையும், அவற்றுடனே நிற்கும் - மேற் சொல்லியவற்றுடனே (பாதுகாவலாய்) நிற்கும்; பொய் மருங்கின் நில்லாதாய் - பொய்யின் அணிமையிலும் நில்லாதவனே! (நீ), புரிகின்ற காரியத்தின் பொருளை நோக்கி - செய்யப் போகின்ற காரியத்தின் பயனை ஆராய்ந்து, கைமருங்கு உண்டாம்-அம் மருந்து கள் உன் கையில் வந்து சேரும்; (அம் மருந்துகளைக் காக்கின்ற தெய்வங்களும்), நின்னை காயாவாம் - உன்மீது சினம் கொள்ளா தனவாய், அப்புறம் போய் கரக்கும் - அப்புறம் சென்று மறைந்து விடும்', என்றான் - என்று மொழிந்தான். ஆல்: அசை.

தெய்வங்கள் எண்ணில என்றும், யார்க்கும் இரங்கா என்றும் மாற்றுக. படரகில்லா: கில் ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. பொய்ம் மருங்கின் நில்லாதாய் என்று அநுமனை விளித்தான் சாம்பன். 'நீதியினின்றீர் வாய்மையமைந்தீர்' (கிட்கிந்தா. 992); 'மெய்ம்மையின் வேலிபோல்வான்' (கிட்கிந்தா. 68); 'மெய்ம்மை பூண்டவன்' (சுந்தர. 62); 'பொய்யொடும் பகைத்து நின்ற குணத் தினன்' (யுத்த. 2510); பொய் நிற்கும் இடத்தும் நில்லாதவன் என்ற உலக வழக்கும் காண்க. கைம்மருங்கு; 'கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று' (பெரிய பு. காரைக்கால். 25).

பி - ம். 1. காத்துறைவது, காத்துறையும், கரந்துறையும்; தெய்வங்க ளெண்ணிலவால்; இரங்கி.
2. அவற்றுடனே காக்கும்.
3. பொய்ம்மருங்குமில்லாதாய்; பொதுமை.
4. கைம்மருங்கு தொடர்ந்துன்னைக் காவாயென் றப்புறம் போய்க் காக்குமென்றான், கைம்மருந்துகொணர்ந் தெம்மைக் காவாயேல் அப்புறம் போய்க் காக்குமென்றான்.



## அநுமன் இயைந்து அங்கு செல்லப் பெருவடிவங் கொள்ளுதல்

2667. ஈங்கிதுவே பணியாகி னிறந்தாரும்
பிறந்தாரே யெங்கோக் கியாதுந்
தீங்கிடையூ றெய்தாமற் றெருட்டிடுதிர்போ
யெனச்சொல்லி யவரைத் தீர்ந்தான்

ஓங்கினன்வா னெடுமுகட்டை யுற்றனன்பொற்
றோளிரண்டுந் திசையோ டொக்க
வீங்கினவா காசத்தை விழுங்கினனே
யெனவளர்ந்தான் வேதம் போல்வான்.

'ஈங்கு - இப்பொழுது, இதுவே - இச் செயலே, பணியாகின் - (யான் ஆற்ற வேண்டிய) கட்டளையாயின், இறந்தாரும் பிறந்தாரே - மரித்தோர் அனைவரும் (மீண்டும்) பிறந்தவராய்விடுவர், எம்கோக்கு - எங்கள் தலைவனான இராமபிரானுக்கு, யாதும் - எவ்வகையான, தீங்கு இடையூறு எய்தாமல் - தீமையும் இடையூறும் நேராத வண்ணம், போய் - சென்று, தெருட்டிடுதிர் - தேறுதல் கூறுவீராக'; என சொல்லி - என உரைத்து, அவரை நீர்ந்தான் - அவரை விடுத்து நீங்கினவனாய், வேதம் போல்வான் - வேதம் ஒப்பவனான அநுமன், ஓங்கினன் - உயர்ந்து, வான் நெடு முகட்டை - வானத்தின் மேல் முகட்டினை, உற்றனன் - அடைந்தான்; (அவனுடைய), பொன் தோள் இரண்டும் - அழகிய தோள்களிரண்டும், திசையோடு ஒக்க வீங்கின - திக்குகளோடு ஒப்ப வளர்ந்தன; ஆகாசத்தை விழுங்கினனே என வளர்ந்தான் - ஆகாயத்தை விழுங்கினன் போலப் பேருருவம் கொண்டு உயர்ந்தான்.

தீங்கிடையூறு என்பது உம்மைத் தொகையுமாம்; தீங்கு உடற்கும், இடையூறு உள்ளத்திற்கும் என்று கொள்க. வேதம் போல்வான்; 'வேதமொத்தனன் மாருதி' (யுத்த. 1175) 'சுருதியே யனைய தோளாள் வீசினன்' (யுத்த. 1088); 'புகுதி கூர்ந்துள்ளார் வேதம் பொதுவுறப் புலத்து நோக்கும், பகுதியை யொத்த வீரன்' (யுத்த. 1176);

பி - ம். 1. கோற்கு.
2. அவனைத் , நீர்ந்தே.
3. உற்றனை ; ஒப்ப, ஓங்கி. 30

### அநுமன் கொண்ட பேருருவத்தின் நிலை

2668. கோளோடு தாரகைகள் கோத்தமைத்த
மணியாரக் கோவை போன்ற
தோளோடு தோளகல மாயிரமியோ
சனையெனவுஞ் சொல்ல வொண்ணு

தாளோடு தாள்பெயர்க்க விடமிலதா
கியதிலங்கை தடக்கை வீச
நீளோடு திசைபோதா விசைத்தெழுவா
னுருவத்தி னிலையி தம்மா.

கோளோடு - கிரகங்களுடன், தாரகைகள் - நட்சத்திரங்கள், (அந்த மாருதிக்கு), கோத்து அமைத்த மணி ஆரம் கோவை போன்ற-இணைத்து அமைக்கப்பெற்ற மணி மாலைகளை நிகர்த்தன; தோளோடு தோள் அகலம்ஆயிரம் யோசனை எனவும் சொல்ல ஒண்ணு - தோள்களின் இடைப்பட்ட அகலம் ஆயிரம் யோசனை என்றும் சொல்லவியலாது; (ஆயிரத்தினும் மிக்கிருந்தது); தாளோடு தாள் பெயர்க்க இலங்கை இடம் இலது ஆகியது - ஒரு அடி வைத்து மற்றொன்றைப் பெயர்த்து வைக்க இலங்கையில் இடம் இல்லை ஆயிற்று; தடகை வீச - பெரிய கரங்களை வீச, நீள் ஓடு திசை - நீளமாக, விரிந்துள்ள திசை, போதா - திக்குகளும் போதாவாம்; (மருந்து கொண்டுவர), விசைத்து எழுவான் உருவத்தின் நிலை இது - விரைந்து எழுந்தவனான அநுமனுடைய பேருருவத்தின் தன்மை இது. அம்மா : வியப்பிடைச் சொல்.

கோள் : நவகிரகங்கள் ; அவை சூரியன், சந்திரன், செவ்வாய், இராகு, குரு, சனி, புதன், கேது, சுக்கிரன் என்ப. தாரகை : வடசொல்; உடுக்கள். 'தாரகை சுடர்கள் மேகம்' (சுந்தர. 9); 'தோளொத்த தோளகலம்' (ஒப்பு); 'நீளொத்துயர் தோள் விசும்பு நிறைந்த மெய்யில்' (சுந்தர. 65); நீளோடு நீள் ஒத்து : என்பதில் நீள் நீளம் என்று பொருள்படுதல் காண்க. (சுந்தர. 65) இலங்கை இடமில,தாகியது என்க.

பி - ம். 1. தாரகை நிலையின் ; அமைந்த மணிக்கோவை போன்று கொற்றத்.

2. யோசனை யளவுஞ், அகன்ற.

3. ஆயின.

4. நீளோட, நீளோடி ; போத ; நிலையது.

## அநுமன் எழுந்ததும் அதனால் நிகழ்ந்த விளைவுகளும்

2669. வால் வளைத்துக் கைந்நிமிர்த்து வாயினையுஞ்
சிறிதகல மடித்து மானக்
கானிலத்தி னிடையூன்றி யுரம்விரித்துக்
கழுத்தினையுஞ் சுருக்கிக் காட்டித்
தோன்மயிர்க்குந் தளஞ்சிலிர்ப்ப விசைத்தெழுந்தா
னவ்விலங்கை துளங்கிச் சூழ்ந்த
வேலையிற்புக் கழுந்தியதோர் மரக்கலம்போற்
றிரிந்தயர விசயத் தோளான்.

விசயம் தோளான் - வெற்றியோடியைந்த தோள்களை யுடைய வன் ஆன அநுமன், வால் வளைத்து - வாலினை வளைத்து, கை நிமிர்த்து - கரத்தை யுயர்த்தி, வாயினையும் சிறிது அகல மடித்து - வாயினையும் சிறிது விரியுமாறு மடித்து, மானம் கால் நிலத்தின் இடை ஊன்றி - பெருமையுள்ள திருவடியைப் பூமியில் பதியச் செய்து, உரம்விரித்து - மார்பினை விரித்து, கழுத்தினையும் சுருக்கி காட்டி - கழுத்தினையும் சுருக்கிக் காண்பித்து, தோல்-உடல் சருமத்தின் மீதுள்ள, மயிர் குந்தளம் சிலிர்ப்ப - மயிர்க்குழற்சிகள் மலரா நிற்க, துளங்கி - குலைந்து, சூழ்ந்த - தன்னைச் சுற்றிய, வேலையில் புக்கு அழுந்தியது ஓர் மரக்கலம் போல் - கடலிற் நுழைந்து அழுந்தப் பெற்ற ஒரு கப்பல்போன்று, அவ் இலங்கை திரிந்து அயர - அந்த இலங்கை சுழன்று தளருமாறு, விசைத்து எழுந்தான் - விரைவுடன் கிளம்பினான்.

அநுமன் கிளம்பும்போது அவன் உடல் எவ்வாறு தொழிற் பட்டிருக்கும் என்பதைக் கம்பநாடர் தமது மனக்கண்ணால் ஆராய்ந்து அழகுபெறப் படம் பிடித்துக் காட்டியுள்ளமை போற்றத்தக்கது. மற்போர் நிகழ்ச்சிகளையும் இவ்வாறே கூறிக் காட்டுவர் ஆசிரியர். குந்தளம் : மயிற் குழற்சி; இச் சொல் கொந் தளம் எனவும் வழங்கும்; 'கருங்குஞ்சி கொந்தளமாகப் பரப்பி' (பெரிய பு. சிறுத்தொண்ட. 26); கானிலத்து: 'கானிலந் தோயாக் கடவுளை' (நாலடி. கடவுள் வாழ்த்து); அநுமன் எழுச்சியால்

துளங்கிய இலங்கைக்கு வேலையில் புக்கழுந்திய மரக்கலம் உவமை. (ஒப்பு) 'வந்ததே, ஆழ் கலத்தன்ன கலி' (நாலடி. 12).

பி - ம். 1. வால் விசைத்து ; அகலவகுத்து, உருத்த.
2. இடையூன்றி யொருமித்துக், உரநெருக்கிக், உரம் விசைத்துக் ; சுரித்து ; தூண்டி.
3. கொந்தளம் ; எழுவான்,
4. சுரித்துலைய, சுரிந்துலைய, திரிந்துலைய. 32

2670. கிழிந்தனமா மழைக்குலங்கள் கீண்டதுநீண்
டகல்வேலை கிழக்கு மேற்கும்
பொழிந்தன மீன்தொடர்ந்தெழுந்த பொருப்பினமுந்
தருக்குலமும் பிறவும் பொங்கி
அழிந்தனவா னவர்மான மாகாயத்
தீடையினிற்பே ரசனி யென்ன
விழுந்தனநீர்க் கடலழுந்த வேறினமேற்
கீறினபோய்த் திசைக ளெல்லாம்.

மாமழை குலங்கள் கிழிந்தன - பெரிய மேகத் தொகுதிகள் கிழிபட்டன ; நீண்டு அகல்வேலை கீண்டது - நீண்டு பரந்த ஆழி பிளந்தது ; கிழக்கும் மேற்கும் மீன் பொழிந்தன - கிழக்கிலும் மேற்கிலும் நட்சத்திரங்கள் (பெருவாரியாக) உதிர்ந்தன ; பொருப்பு இனமும் தரு குலமும் - மலைத் தொகுதிகளும் மரத் தொகுதிகளும், பிறவும் - பிறவும், பொங்கி தொடர்ந்து எழுந்த - கிளம்பி உடன் தொடர்ந்து எழுந்தன ; வானவர் மானம் - தேவர்களின் விமானங்கள், ஆகாயத்து இடையினில் - விண்ணிடத்தே, பேர் அசனி என்ன - பெரிய இடி போன்று, நீர் கடல்அழுந்த விழுந்தன - நீர்க் கடலில் அழுந்துமாறு வீழ்ந்தன ; (அதனால் கடல் நீர்கள்), திசைகள் எல்லாம் போய் கீறின - திக்குகளில் எல்லாம் சென்று கிழித்தனவாய் மேலேறின.

மழைக்குலம் : மேகத் தொகுதி. கீண்டது, திசைமுகன் செய்த முட்டை கீண்டிலது' (சுந்தர. 1277) ; பொருப்பு : மலை ; 'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து'

(வில்லி. பா. பாயிரம்); மானம்: விமானம், பொருப்பினம் தருக் குலம்; ஏறினமேற் கிறின’ என்ற இடங்களில் இணையெதுகைகள் வந்து சந்த இசையை அழகு செய்வது காண்க.

பி-ம். 1. மலை; கீண்டன; நீணெடு வேலை, மீண்டெழுந்தபெரும், வின்றொடர்ந் தெழுந்த; போக்கி.

3. அழிந்தனர்; வானவர் நகரம், ஆமானத்தேர்; இடையே போய், இடையினிற் போய், இடையன போல். 33

2671. பாய்ந்தனனங் கப்பொழுதே பருவரைக
ளெனைப்பலவும் வடபா கத்துச்
சாய்ந்தனபே ருடற்பிறந்த சண்டமா
ருதம்வீசத் தாதை சால
ஓய்ந்தனனென் றுரைசெய்ய விசும்பூடு
படர்கின்று னுருவே கத்தாற்
காய்ந்தனவே லைகண்மேகங் கரிந்தனவெந்
தெரிந்தபெருங் கான மெல்லாம்.

அப்பொழுதே அங்கு பாய்ந்தனன் - அப்பொழுதே அங்குப் பாய்ந்தான்; பருவரைகள் எனை பலவும் - பருத்த மலைகள் மிகப் பலவும், பேர் உடல் - பெரிய உடலிலிருந்து, பிறந்த - தோன்றிய சண்டம் மாருதம் வீச - பெருங் காற்று வீசுதலால், வட பாகத்து சாய்ந்தன - வடது புறத்துச் சாய்ந்தன; ‘தாதை சால ஓய்ந்தனன் - தந்தையான வாயு பகவானும் மிகவும் தளர்ச்சியுற்றான்’ என்று உரை செய்ய - என்று சொல்லுமாறு, விசும்பு ஊடு - ஆகாயத்தின் இடையே, படர்கின்றான் - செல்பவனான அநுமனுடைய, உரு வேகத்தால் - அஞ்சத்தக்க விசையால், வேலைகள் காய்ந்தன - கடல்கள் வற்றின, மேகம் கரிந்தன - மேகங்கள் (நீர் சுண்டிக்) கரிந்தன; பெருகானம் எல்லாம் வெந்து எரிந்த - பெரிய காடுகள் எல்லாம் எரிந்து கரியாயின.

பருவரைகள்; ‘வெள்ளிப் பருவரையும்; (பால. கையடை, 7); தெற்கிருந்து விசையுடன் படர்தலின் வட பாகம் சாய்ந்தது எனப் பட்டது. வாயுவின் புதல்வன் ஆதலின் அநுமன் உடலிலிருந்து சண்டமாருதம் வீசிற்றெனப்பட்டது. சண்டமாருதம்: விசைத்து வீசும் காற்று; ‘சண்டமாருத மென்னத் தடவரை கொண்டு சீறி’ (யுத்த. *1018*). ஓய்தல்: உள்ளதன் நுணுக்கம். உருவேகம்: தன்

னுடைய உருவின் வேகத்தால் எனினுமாம். உரை செய்ய; 'ஆண்டவனி துரைசெய்ய வஞ்சலித்த மலர்க்கையார்' (ஆரணிய. 203); 'உரைசெய்வ துளதுறுகோள் தானும் தீய' (தேவா. திருஞான. 616).

பி-ம். 1. காய்ந்தனனைப் பொழுதந்தே; படர வார்த்து, படர்ந்து பாரிற்.
2. மாருத விசையிற்றுறை; காலே.
3. உறு.
4. கனலும். 34

இப் பாடல் 'கடல் பின்னே' என்ற பாடற்குப் பின் ஓர் பிரதியில் உள்ளது.

2672. கடல்பின்னே நிமிர்ந்தோடக் கான்முன்னே
கடிதோடக் காலிற் செல்வான்
உடல்முன்னே செலவுள்ளங் கடைகுழையாச்
செலச்செல்வா னுருவை நோக்கி
அடன்முன்னே தொடங்கியநா ளாழ்கடல்சூ
ழிலங்கையெனு மரக்கர் வாழுந்
திடர்முந்நீ ரிடைப்படுத்துப் பறித்தனனந்
துயரென்றார் தேவ ரெல்லாம்.

கடல் பின்னே நிமிர்ந்து ஓட-கடல் பின்னே நிமிர்ந்து செல்லவும், கால் முன்னே கடிது ஓட-கால் முன்னே விரைந்து ஓடவும், காலில் செல்வான்-காற்றுப் போன்று விரைந்து செல்பவனும், உடல் முன்னே செல-உடலானது முன்னே செல்லவும், உள்ளம்-மனம், கடை குழையா செல-கடைக் கூழையாய் (ப்பின்னே) செல்லவும், செல்வான் உருவை நோக்கி-செல்பவனுமான அநுமனது உருவத்தைப் பார்த்து, தேவர் எல்லாம்-வானோர் அனைவரும், 'முன்னே-(இவன்) முன்பு, அடல் தொடங்கிய நாள்-தன் வலிமையைக் காட்டத் தொடங்கிய நாளிலேயே, ஆழ் கடல் சூழ் இலங்கை எனும்-ஆழ்ந்த கடலாற் சூழப்பட்ட இலங்காபுரி என்னும், அரக்கர் வாழும் திடர்-இராக்கதர்கள் வாசம் செய்யும் திட்டை, முந்நீர் இடை படுத்து-(துன்பக் கடலில்) அழுத்தி, நம் துயர் பறித்தனன்-நமது துன்பத்தைப் போக்கினான்', என்றார்-என்று பகர்ந்தார்.

முதலடியில் கால்கள் இரண்டில், முதலது காலாகிய உறுப்பிணையும் இரண்டாவது காற்றிணையும் குறிக்கும். முன்னே காற்றோடவும் அதன் பின்னே கடல்களோடவும், காற்றைப்போற் செல்கின்ற அநுமனுடைய திருமேனியானது முன்னே போகவும், மனம் பின்னணியிற் செல்லவும், செல்கின்ற அநுமனின் உருவத்தைக் கண்டு எல்லாத் தேவர்களும், இவன் தன்னுடைய பலத்தை முன்னே காட்டும்போதே, ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட இலங்கை என்னும் அரக்கர் வதிகின்ற மேட்டை கடலில் சேர்த்து விட்டான்; இனி நம்முடைய துக்கம் ஆனது நீங்கிற்று என்று பேசிக் கொண்டார்கள். சுந்தர காண்டத்துக் கூறப்பெற்ற அநுமன் தன் அருஞ்செயலே இங்குக் குறிக்கப் பெற்றதென்க. இனி, அநுமன் பிறந்த பொழுதே காட்டிய வீரப்பான்மையெனினுமாம். இவன் பிறந்த நாளிலேயே காட்டிய பல வீரச்செயல்களை உத்தரகாண்டம் அநுமப் படலத்துக் காண்க. கடைக்குழை: கடைக்கூழை.

பி - ம். 1. கடல் முன்னே; கால் பின்னே; தொடர்ந்தோடக்கடிநிப்.

2. செல்லுமுளம்; கடைக்குழைவால்; வான் செல்வான்.

3. அரக்கர் வைகும்.

4. முந்நீரிடைப்படுத்தும் செல்வ மலநோறெழுந்து, முந்நீர்க்கிடை யெறித்தான், முரிந்தது, முந்நீர்க்கிடை யெறிந்தானென்றூர், முன்னீரிடை 35
மறித்துப் பறித்திலன் என்றூர்.

2673. மேகத்தின் பதங்கடந்து வெங்கதிருந்
தண்கதிரும் விரைவிற் செல்லும்
மாகத்தி னெறிக்கப்பால் வானமீன்
குலம்வழங்கும் வரைப்பு நீங்கிப்
போகத்தின் குறிதொடர்ந்தார் புகலிடங்கள்
பிற்படப்போய்ப் பூவின் வந்த
ஏகத்தந் தனைிருக்கை யினிச்சேய்த்தன்
றூமென்ன வெழுந்துசென்றான்.

மேகத்தின் பதம் கடந்து - மேகங்கள் தங்கும் இடத்தைத் தாண்டி, வெம் கதிரும் - சுடுகின்ற கிரணங்களை யுடைய சூரியனும், தண் கதிரும்-குளிர்ந்த கிரணங்களை யுடைய சந்திரனும், விரைவில் செல்லும் - விரைந்து செல்லும், மாகத்தின் நெறிக்கு அப்பால் -

வானவழிக்கு அப்பால், வானமீன் குலம் வழங்கும் - ஆகாயத்தில் உடுக்கள் சஞ்சரிக்கின்ற, (உடு மண்டலத்தின்) வரைப்பு நீங்கி - எல்லையினைக் கடந்து, போகத்தின் குறி தொடர்ந்தார் - சுவர்க்காதி போகங்களை யடையுமாறு வேள்விகள் செய்தவர், புகல் இடங்கள் - புகலா யடைகின்ற சுவர்க்கலோகத் தானங்களும், பின்பட போய் - பின்னுகுமாறு சென்று, 'பூவின் வந்த - (திருமாலின் நாபிக்) கமலத்துதித்த, ஏகத்து அந்தணன் இருக்கை - ஒப்பற்ற மூர்த்தியாகிய பிரமதேவனுடைய வாழ்விடம், இனி சேய்த்து அன்று ஆம் - இனித் தூரமானதன்று ஆம்', என்ன - என்னுமபடி, எழுந்து சென்றான் - எழுந்து போனான், (அநுமன்).

இச் செய்யுளிலிருந்து அண்டகோளத்தின் அமைப்பினைப் பற்றிக் கம்பநாடர் கொண்ட கொள்கை புலனும். மேகங்கள் உலவும் இடம் சூரிய சந்திரமண்டலத்துக் கீழ் உள்ளதென்பது யாவரும் அறிந்ததே; மாகம் : ஆகாயம், 'மாகமால்விசும் பீறென நடுவண வரைப்பில்' (சுந்தர. 1087); 'மாகத்தோள் வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி' (ஆரணிய. 624) கதிர்மதிகளைப் போன்ற பெரிய நட்சத்திரங்களும் சேய்மையினுலேயே சிறிதாகக் காணப்படுகின்றன. போகத்தின் குறிதொடர்ந்தார் : இந்திராதி போகங்களை விழைந்து அதற்கு வேண்டிய வேள்விகளைப் புரிபவர். 'ஜியோதிஷ்டோமம் ஸ்வர்க்ககாமோ யஜேதா' என்றது காண்க. பூவில் வந்த ஏகத்தந்தணன் : பிரமதேவன். அந்தணன் ஏகத்திருக்கை எனினுமாம். ஏகத்திருக்கை : தனிப்பீடம். இங்கு பூ என்றது திருமாலின் நாபிக்கமலத்தை, 'பூவின்வந்த புராதனனே புகல், சாவமுண்டு' (சுந்தர. 627). ஏகத்தந்தண னிருக்கை : சத்திய லோகம்; இது பூலோகம் புவர்லோகம் என்ற வரிசையில் ஏழாவதாகக் கூறப்படுவது. போகத்தின் நெறி கடந்தார் புகலிடங்கள் சாலோகமாதி பதமுத்திகள் என்ப.

பி - ம். 1. விரகிற்.

2. வழுவும், விளங்கும்; வரம்பு நீங்கி, வரம்பை நீங்கிப், வரையை விட்டு.

3. நெறி கடந்தார்.

4. வேதத்தனிருக்கையினிச் சேய்ந்தன்றுமென்ன மிக; விரைந்து.

## அநுமனது வேகத்தைக் கண்டு விண்ணவர் பலவகையாக அநுமானித்தல்

2674. வானநாட் டுறைகின்றார் வயக்கலுழன்
வல்விசையான் மாயன் வைகுந்
தானநாட் டுறுகின்றா னென்றுரைத்தார்
சிலர்சிலர்கள் விரிஞ்சன் றான்றன்
ஏனைநாட் டெழுகின்றா னென்றுரைத்தார்
சிலர்சிலர்க ளீச னல்லாற்
போனநாட் டிடைபோக வல்லனோ
விவன்முக்கட் புனித னென்றார்.

வானம் நாடு உறைகின்றார் சிலர்-வான நாட்டில் உறைபவரிற் சிலர், 'வயம் கலுழன் - வலிமை சான்ற கருடன், வல் விசையான் - மிக்க வேகத்தை மேற்கொண்டவனாய், மாயன் வைகும் - திருமால் வாசம் புரியும், தானம் நாடு உறுகின்றான் - தானமாகிய வைகுந்த நாட்டிற்குச் செல்கின்றான்,' என்று உரைத்தார்-என்று சொன்னார்கள்; சிலர்கள் - வேறு சிலர், 'விரிஞ்சன் தான்-பிரமதேவன்தான், தன் - தன்னுடைய, ஏனை நாடு எழுகின்றான் - பிறிதொரு நாடாகிய பிரமலோகத்துச் செல்கின்றான்,' என்று உரைத்தார் - என்று புகன்றனர், சிலாசிலர்கள்-சிற்சிலர்கள், 'ஈசன் அல்லால்-ஈசன் அல்லாவிடின், போன நாடு இடைபோக வல்லனோ - வெகு சேய்மையிலுள்ள மேலுலகத்துக்குச் செல்ல வல்லானோ? (ஆகையால்) இவன் முக்கண் புனிதன் - இவன் மூன்று கண்களையுடைய தூய்மையனான சிவபிரானே' என்றார் - என்று கூறினர். ஓகாரம் - எதிர்மறை.

போன நாடு: சேய்மையின் அகன்ற நாடு. முக்கட் புனிதன்: சிவபெருமான்; கதிர் மதிர் அங்கி என்றவற்றை மூன்று கண்களாக வுடையவன். 'முக்கட் செல்வன் நகர்வலம் வசற்கே' (புறநா. 6).

பி-ம். 1. விசையின்.
2. எழுகின்றான்; சிலர்கள் சிலர், சதுமறையோன்; விரிஞ்சனென்றார்க்கு, விரிஞ்சன்றானே, விரிஞ்சனென்பான்.
3. அல்லார்.
4. வல்லரோ.

2675. வேண்டுருவங் கொண்டுவந்து விளையாடு
கின்றான்மெய் வேத நான்குந்
தீண்டுருவ னல்லாத திருமாலே
யிவனென்றார் தெரிய நோக்கிக்
காண்டுமென விமைப்பதன்முன் கட்புலத்தைக்
கடந்தகலு மின்னுங் காண்மின்
மீண்டுவருந் தரமல்லா வீட்டுலகம்
புகுமென்றார் மென்மே லுள்ளார்.

மென்மேல் உள்ளார் - ஒன்றன்மேல் ஒன்றாக உள்ள உலகத்தவர்களில் சிலர், '(இவன) வேண்டுருவம் கொண்டு வந்து - வேண்டிய உருவத்தை யேற்று, விளையாடுகின்றான் - விளையாடுபவனான, மெய் - உண்மையாக, வேதம் நான்கும் தீண்டு உருவன் அல்லாத - மறைகள் நான்கிற்கும் எட்டத்தக்க வடிவம் உடையவன் அல்லாத, திருமாலே இவன் - திருமாலே யாவன்', என்றார் - என்று கூறினார்; (சிலர்), தெரிய நோக்கி - ஆராய்ந்து பார்த்து, காண்டும் என - காண்போம் என்று கருதி, 'இமைப்பதன் முன் - கண் இமைக்கும் முன்பே, கண் புலத்தை கடந்து அகலும் - கண் புலத்தைக் கடந்து அகல்கின்றான்; இன்னும் காண்மின் - இன்னும் காண்பீர்களாக; மீண்டு வரும் தரம் அல்லா வீடுலகம் புகும் என்றார் - மீண்டு வருதலில்லாத மோட்சலோகத்துப் புகுவான்,' என்றார் - என்று கூறினர்.

வேண்டுருவம் கொள்ளுதல்: 'இச்சா மாத்திரம் பிரபோத் சிருஷ்டி' என்றது காண்க. 'வெறுப்பொடு விருப்புத்தன்பால் மேவுதலிலாமையானும், நிறுத்திடு நினைந்த மேனி நின்மலனருளினாலே' (சிவ சித்தி. 45); 'இறப்பதே பிறப்பதே யெனும் விளையாட்டு வந்தனையே' (ஆரணிய. 51); 'அலகிலா விளையாட்டுடையாரவர்' (பால. பாயிரம். 1) என்றதும் காண்க. மெய் வேதம்: வேதப் பொருள்கள் எஞ்ஞான்றும் உண்மையாதலின், 'நாஅல் வேத நெறி திரியினும்' (புறநா. 2) என்றதனால் வேத நெறி என்றும் மாறுபடாதென்பது பெறப்படும். 'வேலை கரையிழந்தால் வேதம் நெறி பிறழ்ந்தால்' (நள. 222) என்றபடி வேதம் நெறி பிறழாதென்பது பெறப்படும். வேத நான்கும் எனப்பட்டதேனும் வேதங்கள் எண்ணிலவென்ப. 'ஐயன்

வேதங் ஆயிரம் வல்லான்' (சுந்தர. 483;) 'அனந்தாவை வேதா' என்றமை காண்க. 'மறையினு லயனுன் மாலான் மனத்தினுல் வாக்கான் மற்றுங், குறைவிலா வளவினுலுங் கூறெணுதாகி நின்ற இறைவனுர்' (சீவ சித்தி. அவையடக்கம்); 'உயர் வேதமும் போதமுங் காண்கிலா தான்' சுந்தர. 578) என்று இராமபிரானைக் கூறியது காண்க. 'மீண்டுவரும் தரமல்லா வீட்டுலகம்: மீளாக்கதி என்ற மோட்ச உலகம்; 'நசபுனரா வர்த்ததே, நசபுனரா வர்த்ததே' என்பது வேத வாக்யம். வீட்டுலகம்: 'வானேர்க்குயர்ந்த உலகம்' (குறள். 346); இதற்கு, வானேர்க்கும் எய்தற்கரிய வீட்டுலகம் என்று பரிமேலழகர் உரைத்தல் காண்க. புண்ணிய விசேடத்தால் வானேர் அடையும் சுவர்க்கலோகம், புண்ணியம் தீர்ந்தவுடன் அவர்க்கு இல்லையாகும்; க்ஷீணே புண்யே ம்ருத்யு லோகம் விசந்தி' (கீதை.) என்றது காண்க. மற்றும், 'மற்றீண்டுவாரா நெறி' (குறள். 356) லும் 'ஈண்டுவாரா நெறி வீட்டுநெறி' என்று அந்த உரைகாரரே வரைதலும் காணத்தகும். 'வானேயும் பெறில் வேண்டேன்' (திருவாச. திருச்சதகம் 12.) என்று மணிவாசகரும், 'வானுளும் செல்வமும் மண்ணர சும்யான் வேண்டேன்' (பெருமாள்திரு. 4: 2) என்று குலசேகராழ்வாரும் முறையே கூறுதலும், வீட்டு நெறியின் சிறப்பினை விளக்கும்.

பி - ம். 1. கொண்டெழுந்து.

2. உருவமல்லாத, உருவனல்லானேல், உருவந்தாளல்லான், உருநான் முகனல்லால்.

3. என நினைப்பதன் முன், முன்னினைப்பதன் முன்; கட்புலமும்; மேலே போம்.

4. தரமல்லன்.



2676. உருவென்ருர் சிலர்சிலர்க ளொளியென்ருர்
சிலர்சிலர்க ளொளிரு மேனி
அருவென்ருர் சிலர்சிலர்க ளண்டத்துக்
கப்புறநின் றுலக மாக்குங்
கருவென்ருர் சிலர்சிலர்கள் காற்றென்ருர்
சிலர்சிலர்கள் கடலைத் தாவிச்
செருவென்ற நிலை யொன்றுந் தெரியகிலா
ருலகனைத்துந் தெரியுஞ் செல்வர்.

உலகு அனைத்தும் தெரியும் செல்வர் - உலகனைத்தையும் அறிந்த ஞானமாகிய தனத்தையுடைய பெரியோர், கடலை தாவி - ஆழியைக் கடந்து, செரு வென்றான் - போரில் வென்றவனாகிய அநுமனுடைய, நிலை ஒன்றும் தெரியகிலார் - தன்மையை ஒன்றும் உணரமாட்டாதவராயினார்; (அதனால் அவருள்), சிலர் சிலர்கள் - சிலர் சிலர்கள், ஒளிரும் மேனி - விளங்குகின்ற, உரு - உருவுடையதென்றார்கள்; சிலர் சிலர்கள் - சிற்சிலர், ஒளி - ஒளி வடிவமானது, என்றார் - என்றார்கள்; பின்னும் சிலர் சிலர் - மற்றும் சிற்சிலர், காற்று - காற்றே என்றார்கள்; சிலர் சிலர் - வேறு சிற்சிலர், அரு என்றார் - அருவம் என்றார்கள்; மற்றும் சிலர் சிலர் - பின்னும் சிற்சிலர், அண்டத்துக்கு அப்புறம் நின்று - அண்டத்துக்கப்பால் இருந்து கொண்டு, உலகம் ஆக்கும் கரு - உலகத்தை யுண்டாக்கும் நிமித்த காரணம், என்றார் - என்று பகர்ந்தார்கள்.

இங்கு அநுமனுடைய நிலை இறைவன் உருப்போன்று பல வகையாகக் காணப்பட்டது எனக் கூறப்பட்டது. 'அருவமோ ரூப ரூபமானதோவன்றி நின்ற யுருவமோ வுரைக்கும் கர்த்தா,' எனின் மூன்றும் பெருமானுக்கு உண்டென்னும் ஞான நூல். ஒருவாறு கட்புலனாவதால் உருவென்றும், சூக்கும நிலையில் ஒளி என்றும், கண்ணிற் படாமல் ஆனால் விரையும்போது எழுகின்ற காற்று மேற் படுவது போன்றிருத்தலின் அருவுரு என்றும், யாவர் கண்ணிலும் படாது மறைந்து நின்று அண்டங்களைப் படைக்கும் நிமித்தகாரணனான பெருமானே என்றும், விரைகின்ற வேகத்தால் காற்றென்றும் கூறினர். உலகனைத்தும் தெரியுஞ் செல்வர்: பிற குறிப்பு; இச் செல்வர்களே நிலையுணரமாட்டாத நிலையில் வேறு யார்தான் அறிதல் கூடும் என்பது கருத்து; இங்கு 'பல்லியல் நெறியிற்பார்க்கும் பரம்பொருள்' (பால. கோலங். 12) என்ற தொடர் காணத்தகும்.

பி - ம். 1. சிலர் சிலவர்; ஒளியென்ன; ஒளிருமேனும்

2. சிலர்கள் சிலர், சிலர் சிலவர்; அண்டத்துக்கப்பாலின்று, அண்டத்தும் புறத்தும் நின்று; உலகம் காக்கும்.

3. சிலர் சிலர்கள் மற்றென்றார், அன்றுயிர்.

4. செருவென்றார்; நிலைபொருவர்; தெரிக்கிலார், தெரிகிலார்கள்; தெரியுந் தேவர், சொல்வார் தேவர்.

## அநுமனுடலிலிருந்து தோன்றிய ஒலி

2677. வாசநாண் மலரோன்ற னுலகளவு
நிமிர்ந்தனமேல் வான மான
காசமா யினவெல்லாங் கரந்ததன
துருவிடையே கனகத் தோள்கள்
வீசவான் முகடுரிஞ்ச விசைத்தெழுவா
னுடற்பிறந்த முழக்கம் விம்ம
ஆசைகா வலர்தலைகள் பொதிரெறிந்தார்
விதிரெறிந்த தண்ட கோளம்.

வாசம்நாள் மலரோன் தன் - நறுமணமிக்க அன்றலர்ந்த செந்தாமரை மலரில் தோன்றியவனான பிரம தேவனுடைய, உலகு அளவும் - சத்தியலோகம் வரையில், நிமிர்ந்தன - உயர்ந்தனவாகி, மேல் வானம் ஆன - அதன் மேலுள்ள வானமான, காசம் ஆயின எல்லாம் - ஆகாயமெல்லாம், கரந்த - மறைவதற்கு ஏதுவான, தனது உரு இடையே - தனது உருவத்தினிடத்தே யுள்ள, கனகம் தோள்கள் - பொன்னிறத்தவான தோள்கள், வீச - வீசுவதால், வான் முகடு உரிஞ்ச - வான் முகட்டைத் தீண்டுமாறு, விசைத்து எழுவான் - விரைந்து கிளம்புபவன் ஆன, அநுமனுடைய, உடல் பிறந்த முழக்கம் - உடலிலிருந்து எழுந்த பேரொலி, விம்ம - வீங்கி யெழ, ஆசை காவலர் - திசைக் காவலர்கள், தலைகள் பொதிர் எறிந்தார் - (தம்) தலைகள் நடுங்கப் பெற்றனர்; அண்டம்கோளம் விதிர் எறிந்தது - அண்டகோளம் விதிர் விதிர்ப்பெய்திற்று.

வாச நாண்மலர் : 'வாசங் கலந்த மரைநாள நூலின்' (யுத்த. 2199); காசம்: ஆகாயத்தின் முதற் குறை. ஆகாயம் காயம் என வழங்குதலும் காண்க. 'வாசப் பொடியொடு காயத்துகளும்' (பெருங். 1 : 42 : 76); 'வறிது நிலை இய காயமும்' (புற நா. 20); கனகத் தோள்கள் : 'பொன்னுருக் கொண்ட மேரு புயத்திற்கு முவமை போதாத் தன்னுரு; (கிட்கிந்தா. 73); 'பொன்னையே பொருவுவாய் போதெனப் போதுவான்' (கிட்கிந்தா. 93); 'பொன் னெடுங் கிரியெனப் பொலிந்த மேனியான்' (கிட்கிந்தா. 824); 'பொன் மேனியனு மினிதாகிப் புனைந்து போனான்' (சுந்தர. 73); 'கனகமா மேனியைக் காட்ட' (சுந்தர. 1041); உடற் பிறந்த ஒலி -

காற்றின் மகனுதலின் இங்ஙனம் கூறப்பட்டது. ஆசைக் காவலர் - எட்டுத் திக்குப் பாலகர்கள். இவர்கள் கீழ்த்திசையிலிருந்து முறையே இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பர். ஆசை : திசை. 'ஆசையினளவு மெல்லா வுலகமுந் தானே யாள்வான்' (யுத்த. 916); 'ஆசைக டோறுமள்ளின கொள்ளி' (யுத்த. மாயா சீதை. 22): 'பொதி ரெறிதல் : நடுக்கமுறுதல்; 'விண்ணோர் தலை பொதிரெறி யவார்த் தான்' (யுத்த. 1860).

பி - ம். 1. மலரவன்றன், மலரயன்றன்; இறிந்தன, இருந்தன, விரிந்தன; வானமானக்.

2. காசமாயினது; கரந்து தனதுருவிடையே; கவர்ந்தது தன்னுரு வென்ன.

3. உடன் பிறந்த.

4. வாசற் காவலர்கள் தலை; எறிந்த விடைபிளந்த. 40

## வேறு

### அநுமனெழுந்த நாளின் வருணனை

2678. தொடுத்தநாண் மாலை வானோர்
முனிவரே முதல தொல்லோர்
அடுத்தநான் மறைக ளோதி
வாழ்த்தலா லவுணர் வேந்தன்
கொடுத்தநா ளளந்து கொண்ட
குறளனூர் குறிய பாதம்
எடுத்தநா ளொத்த தண்ண
லெழுந்தநா ளுலகுக் கெல்லாம்.

அண்ணல் எழுந்த நாள் - பெருமை சான்றவன் ஆன அந்த அநுமன் உயர்ந்து எழுந்த அந்த நாளானது, உலகுக்கு எல்லாம் - உலகங்கட்கு எல்லாம், தொடுத்தநாள் மாலை - அன்றலர்ந்த மலர் கொண்டு தொடுக்கப் பெற்ற மாலையைப் புனைந்த, வானோர் முனிவர் முதல தொல்லோர் - தேவர்கள் இருடிகள் முதலான பழமை வாய்ந்தோர், அடுத்த - தாம் ஓதற்குப் பொருந்திய, நான் மறைகள் ஓதி வாழ்த்தலால் - நான்கு வேதங்களை ஓதி வாழ்த்திய

தனால், அவுணர் வேந்தன் - அவுணர்க்கு அரசனான மகாபலி, கொடுத்த நாள் - நீரட்டுத் தாரை வார்த்தளித்த காலத்தில், அளந்து கொண்ட - (பூமியை) ஈரடியால் அளந்து கொண்ட, குறளனார் - வாமன மூர்த்தியானவர், குறிய பாதம் - (தம்து) சிறிய திருவடியை, எடுத்தநாள் ஒத்தது - உயர்த்திய நாளை நிகர்த்திருந்தது.

திருமால் குறள் உருவில் வந்து பின்னர் மாவலி நீரட்டிக் கொடுத்த போழ்தில் பேருருக் கொண்டு உலகை அளக்கையில், வானவர் முதலினோர் வாழ்த்தியது போன்று, இப்பொழுதும் குறிய வடிவாயிருந்து பேருருவம் கொண்டு நின்ற அநுமனை வாழ்த்தினர் என்க. மாவலியிடம் ஞாலம் வேண்டித் திருமால் உலகினை அளந்த வரலாறு பாலகாண்டம் வேள்விப் படலத்துக் காண்க. 'பொரு வரு வேலை தாவும் புந்தியான் புவனந்தாய, பெருவடி வுயர்ந்த மாயோன். மேக்குறப் பெயர்ந்த தாள்போல், உருவறிவடி வினும்பர் ஓங்கினன் உவமையானும், திருவடி யென்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான்' (கிட்கிந்தா. 1001) என்பது இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. முனிவரர் தொல்லை நல்லோர், முனிவர் மற்றுள்ளோர் தொல்லோர்.
2. நான் ; ஆய்ந்தநாள்.
3. குறளனுன்.
4. ஒத்த தன்றான். 41

## தேவர் முதலியோர் மணி முதலியன தூவுதல்

2679 தேவரு முனிவர் தாமுஞ்
சித்தருந் தெரிவை மாரும்
மூவகை யுலகி னுள்ளா
ருவகையால் தொடர்ந்து மொய்த்தார்
தூவின மணியுஞ் சாந்துஞ்
சுண்ணமு மலருந் தொத்தப்
பூவுடை யமரர் தெய்வத்
தருவென விசும்பிற் போனான்.

மூவகை உலகின் உள்ளார் - மூவுலகத்தும் உள்ளவரான, தேவரும் முனிவர் தாமும் சித்தரும் தெரிவைமாரும் - தேவரும்

முனிவரும் சித்தரும் அவரவர்களின் தேவிமாரும், உவகையால் தொடர்ந்து மொய்த்தார் - மகிழ்ச்சியுடன் பின்பற்றி நெருங்கினவர் களாய், தூவின-வாரி வீசிய, மணியும் சாந்தும் சுண்ணமும் மலரும் தொத்த - மணிகளும் சந்தனமும் சுண்ணப் பொடியும் மலர்களும் (தன் உடல் மீது) தொத்தியதனாலே, பூ உடை - பூவைக் கொண்ட, அமரர் - தேவர்களின், தெய்வம் தரு என - தெய்வத் தருவைப் போன்று, (அநுமன்) விசும்பில்போனான்-ஆகாயவழியே சென்றான்.

தேவர் : முப்பத்து முக்கோடி என்பர். முனிவர் : மனன சீலர்; சித்தரும் : பதினெண்கணத்தில் ஒரு வகையினர். வித்யா தரர் கின்னரர் முதலானவர்களையும் உபலக்கணத்தாற் கொள்க. தெரிவை : பொதுப்பட மகளிரைக் குறித்தது; பருவம் குறித்து வந்ததன்று. மகிழ்ச்சிக் குறியாக மணி சாந்து சுண்ணம் முதலியன தூவுதல் வழக்கு. (ஒப்பு) 'தேவரு முனிவர் தாமும் திசைதொறு மலர்கள் சிந்தக், கேவல மலராய் வேறோ ரிடமின்றிக் கிடந்த வாற் றால் பூவெனு நாமமின்றிவ் வுலகுக்குப் பொருந்திற்றன்றே' (யுத்த. திருமுடி. 8.) அநுமனைத் தெய்வத் தருவென்று கூறினர். தேவர் முதலாயினார் வாரி யிறைத்த மலர்கள் முதலியன அவன் திரு மேனியில் தங்கி நின்றமையின் பூவுடைத்தரு வெனப்பட்டது. வேட்டவர்க்கு வேட்டபடி மலர் மட்டுமன்றி மணி சாந்தம் முதலான பலவும் தெய்வத்தரு கொடுக்கும் என்பது வரலாறு. 'அம்பொன் கற்பகங் கொடுக்க வாங்கிக் கலன் தெரிந்தணிகின்றாரை' (சுந்தர. 204); விசும்பு - ஆகாயம்; 'விசும்பு தைவருவளியும்' (புற நா. 2).

பி - ம். 2. மூவுலகிடையுமுள்ளார், மூவுலகிடையுளோரும், மூவகை யுலதுளோரும்
3. தூவின மலரும்; தொக்க, நொக்கும், தொற்ற. 42

## இமயத்தையும் கயிலையையும் அநுமன் அடைதல்

2680. இமயமால் வரையை யுற்று
னங்குள விமைப்பி லோருங்
கமையுடை முனிவர் மற்று
மறநெறி கலந்தோ ரெல்லாம்

அமைகநின் கரும மென்று
வாழ்த்தின ரதனுக் கப்பால்
உமையொரு பாகன் வைகுங்
கயிலைகண் டுவகை யுற்றான்.

(அநுமன்), இமயம் மால்வரையை உற்றான் - இமயம் என்னும் பெரிய மலையை யடைந்தான்; அங்கு உள - அவ்விடத்தில் உள்ள, இமைப்பிலோரும் - கண்ணிமைத்தலில்லாதவானவரும், கமை உடை முனிவர் - பொறுமையுடைய முனிவரும், மற்றும் - மேலும், அறம் நெறி கலந்தோர் எல்லாம் - தரும வழியில் நடப்பாரும் ஆகிய அனைவரும், 'நின் கருமம் அமைக - நீ மேற் கொண்டுள்ள காரியம் இனிது நிறைவேறுக', என்று வாழ்த்தினர் - என்று ஆசீர்வதித்தனர்; அதனுக்கு அப்பால் - அதன் பின்னர், உமை ஒரு பாகன் வைகும் - உமா தேவியைத் தன் இடது பாகத்து அமர்த்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும், கயிலை கண்டு உவகை உற்றான் - கயிலை மலையைக் கண்ணுற்று மகிழ்ச்சி யடைந்தான்.

இமைப்பிலோர்: தேவர்; கமை: பொறுமை; க்ஷமா என்ற வட சொல்லின் தமிழாக்கம். 'கமையில ளுற்றலென்ன' (யுத்த. 1859); 'கமைபிடித்து நின்றுங்களை' (யுத்த. 2570); குணம் என்னும் குன்றேறி நின்றவராகலின் கமையுடை முனிவர் எனப்பட்டார். அதனுக்கப்பால்: அந்த இமய மலைக்கப்பால், கயிலை: கயிலாயம்; உமையொரு பாகன். 'வலப்பாகம் செழும் பவளச் சோதியென்ன வாணீலச் சோதியென்ன மற்றைப் பாகம், கலப்பான திருமேனி' (வில்லி பா. அருச். தவநிலை. 40) நாரிபாகத்த; (ஆரணிய. 857); உமையம்மை சிவபெருமானைப் பூசித்து அவள் விருப்பப்படி அப் பெருமான் உடலில் ஒரு பாகமாய் அமர்ந்தாள் என்பது புராண வரலாறு. சிலர் பிருங்கி என்ற ஓர் முனிவன் பொருட்டுச் சிவபெருமானுடைய இந்தக்கோலம் நிகழ்ந்த தென்பர். மற்றும் கிட்கிந்தா. 373, 388, 209 என்ற இடங்களும் காண்க.

பி - ம். 1. அங்குறை.

2. தாமுந் தன்னெறி, முற்று மறநெறி, மற்று நன்னெறி; கடந்தோர். 43

## சிவபெருமான் அநுமனைச் சுட்டிக்காட்டி உமைக்கு உரைத்தல்

2681. வடகுண திசையிற் றோன்று
மழுவலா னாண்டு வைகுந்
தடவரை யதனை நோக்கித்
தாமரைச் செங்கை கூப்பிப்
படர்குவான் றன்னை யன்ன
பரமனும் பரிவிற் பார்த்துத்
தடமுலை யுமைக்குக் காட்டி
வாயுவின் றனய னென்றான்.

வடகுணம் திசையில் தோன்றும் மழுவலான் - வட கிழக்குத் திக்கில் காணப்படும் மழுப்படையைத் தாங்கியவனான சிவபெருமான், ஆண்டு வைகும் - ஆட்சி கொண்டு வீற்றிருக்கும், தடவரை அதனை நோக்கி - பெரிய கைலாய மலையைக் கண்ணுற்று, தாமரை செம் கைகூப்பி - தாமரை மலர் போன்ற சிவந்த கரங்களைக் கூப்பி, படர்குவான் தன்னை - செல்பவனான அநுமனை, அன்ன பரமனும் - அந்த மலைக்குரியவனான பரமனும், பரிவின் பார்த்து - அன்புடன் நோக்கி, தடமுலை உமைக்குக் காட்டி - பருத்த தனங்களையுடைய பார்வதிக்குக் காண்பித்து, 'வாயுவின் தனயன் - (இவன்) வாயு பகவானுடைய புதல்வன்' என்றான் - என்று பகர்ந்தான்.

வடகுண திசை : ஈசான்யம் ; இதற்குரியவன் ஈசானன் என்ற சிவபெருமான் (யுத்த. 890) ; மழு : எரியீட்டி என்பர். இந்த மழு தாருக வனத்து முனிவர் இயற்றிய ஆபிசார ஓமத்தின் எழுந்த தென்றும், அதனைச் சிவபிரான் தனது வலக்கரத்தில் ஏற்றனன் என்றும் புராணம் கூறும். 'வாசவன் மலரின் மேலான் மழு வலான்' (யுத்த. 1587) ; தடவரை : பெரிய மலை ; தடவும் கயவும் நளியும் பெருமை ; (தொல். சொல். உரி.24) ; தடமுலை : தடமுலை வேசையராகப் பிறந்தோமில்லை' (தனிப் பா.) கைலாயம் இமயத்தைச் சார்ந்தது' (பெரிய பு. பாயிரம்).

பி - ம். 2. தடவரை யதனில் ; கைகள்.
3. அன்பால் ; விசும்பைப் பார்த்தான், மூசும்பிற் பார்த்தான்.
4. மதலை.

## அநுமன் செல்லும் காரணத்தைச் சிவபெருமான் உமையினிடத்துத் தெரிவித்தல்

2682. என்னிவ னெழுந்த தன்மை
யென்றுல கீன்றாள் கேட்ப
மன்னவ னிராமன் றூதன்
மருந்தின்மேல் வந்தான் வஞ்சர்
தென்னக ரிலங்கைத் தீமை
தீர்வது திண்ணஞ் சேர்ந்து
நன்னுத னாமும் வெம்போர்
காணுது நாளை யென்றான்.

'இவன் எழுந்த தன்மை என் - இவன் (ஆகாய வழியே) எழுந்து செல்கின்ற காரணம் யாது?' என்று - என்று, உலகு ஈன்றாள் கேட்ப - உலகினை யீன்றவளான உமா தேவியார் வினவ, மன்னவன் - அரச குலத்தில் தோன்றியவனான, இராமன் தூதன் - இராமபிரான் தூதன், மருந்தின்மேல் வந்தான் - மருந்தைக் கொண்டு செல்ல வந்திருக்கின்றான்; வஞ்சர் - வஞ்சகரான அரக்கருடைய, தென்நகர் இலங்கை - தென் திசையில் உள்ளதாகிய இலங்காபுரியின், தீமை தீர்வது திண்ணம் - தீங்கு நீங்குவது உறுதி; நல் நுதல் - அழகிய நுதலினையுடையாய்! நாமும் - நாமும் (தேவருடன்), சேர்ந்து - தேவருடன் சேர்ந்து, நாளை வெம்போர் காணுதும் - நாளைய தினம் கொடிய போரைக் காண்போம்', என்றான் - என்று கூறினன் பரமன்.

உலகீன்றாள் : 'மெய்த்துயர முயிர்க்கெய்தும் விளையாட்டு முலகீன்ற அத்திருவும்' (சிதம்பரச் செய்யுட்கோவை. 66); 'உலகு சூற்கொண்ட தலைவி' (காசிக். 2); 'உலகேழும் பெற்ற தாய்க்கு' (முத்துக். பிள்ளைத். 42); தென் நகர் : இலங்கை; தென் நகர் : அழகிய நகருமாம். சுந்தர. : நன்னுதல் : அண்மை விளி; மகளிர்க்கு நுதல் சிறுத்திருந்தால் மிகுந்த வனப்புத் தரும் என்பர். 'நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி' (கலித்.); வெம்போர் : கொடிய போர் என்று சிவபெருமானே கூறுதல் காண்க. 'இராம

இராவண யுத்தத்துக்கு இராம இராவண யுத்தமே நிகர்' என்று வழங்குவதும் காண்க.

பி-ம் 1. என்னவன் ; ஏகுந்.

3. தீர்ப்பது. 45

## அநுமன் ஏமகூடஞ் சேர்ந்து பின் நிடதத்தை அடைதல்

2683. நாமயோ சனைகள் கொண்ட
தாயிர நடுவு நீங்கி
ஏமகூடத்தி னும்ப ரெய்தின
னிறுதி யில்லாக்
காமமே நுகருஞ் செல்வக்
கடவுள ரீட்டங் கண்டான்
நேமியின் விசையிற் செல்வா
னிடதத்தி னெற்றி யுற்ருன்.

நேமியின் விசையில் செல்வான் - ஆழிப்படையின் வேகத்தோடும் செல்பவனுன அநுமன், நாமம் ஆயிரம் யோசனைகள் கொண்டது - பேர் பெற்ற ஆயிரம் யோசனைகள் தூரம் கொண்டதான, நடுவு நீங்கி - இடைவெளியைக் கடந்து, ஏமகூடத்தின் உம்பர் எய்தினன் - ஏமகூட மலையின் மேற்புறத்தை யடைந்து, இறுதி இல்லா - முடிவில்லாத, காமமே நுகரும் செல்வம் கடவுளர் ஈட்டம் கண்டான் - காம போகத்தைத் துய்க்கும் தேவர்களின் கூட்டத்தைப் பார்த்தான் ; (அப்பால்) நிடதத்தின் நெற்றி உற்ருன் - நிடத மலையின் சிகரத்தை அடைந்தான்.

நிடதம் ; யுத்த. 2662 உரைக் குறிப்புக் காண்க. ஏமகூடம் ; யுத்த. 2661 குறிப்புக் காண்க. இறுதியில்லாக் காமமே நுகரும் செல்வக் கடவுளர் ; புண்ணியத்தின் பயனுகத் தேவருலகில் எவ்விதக் கவலையுமின்றி வாழ்பவரான தேவர்கள் இன்பம் ஈறில்லாததேனும், தாங்கள் ஆற்றிய புண்ணியம் குறைந்ததழியுமானுல், மீட்டும் இறந்து பிறக்கும் உலகத்தில் தள்ளப்படுவார்கள். 'க்ஷீணே புண்யே ம்ருத்யு லோகம் விசந்தி' (பகவத் கீதை) என்றது

காண்க. காமமே நுகரும் என்றது, நிரதிசயப் பேரானந்தப் பெரு வீட்டினை யடைய விழையாதவராகலின் (ஒப்பு) 'தேவரனையர் கயவர் அவரவர் மேவன செய்தொழுகலான்' (குறள். 1073) கடவுளர்: முப்பத்து முக்கோடி தேவர்கள். நேமி: ஆழிப்படை. திருமாலின் ஐம்படைகளில் ஒன்று.

பி - ம். 1. கொண்டீர், சொன்ன.
2. எய்தி நின்று.
4. இடபத்தின். 46

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

### அநுமன் மேருவின்மீது செல்லுதல்

2684. எண்ணுக்கு மளவி லாத
வறிவினோ ரிருந்து நோக்குங்
கண்ணுக்குங் கருதுந் தெய்வ
மனத்திற்குங் கடிய னானன்
மண்ணுக்குந் திசைகள் வைந்த
வரம்பிற்கு மலரோன் வைகும்
விண்ணுக்கு மளவை யாய
மேருவின் மீது சென்றான்.

எண்ணுக்கும் - மனத்துக்கும், அளவு இலாத அறிவினோர் - அளக்க முடியாத அறிவை உடையவர், இருந்து நோக்கும் - அமர்ந்து கண்ணுறுகின்ற, கண்ணுக்கும் - ஞானக் கண்கட்கும், கருதும் - எதையும் நினைக்கும் வன்மையுடைய, தெய்வம் மனத்திற்கும் - தெய்வ உள்ளத்திற்கும் (எட்டாதபடி), கடியன் ஆனான் - விரைவினை யுடையவனான அநுமன், மண்ணுக்கும் - பூமிக்கும், திசைகள் வைத்த வரம்பிற்கும் - திக்குகளில் நியமிக்கப்பட்டுள்ள எல்லைக்கும், மலரோன் வைகும்-மலரவனான பிரமதேவன் வீற்றிருந்தருளும், விண்ணுக்கும் - சத்திய லோகத்துக்கும், அளவை ஆய - அளக்கும் கருவி போன்றுள்ள, மேருவின்மீது சென்றான் - மேருவின் மேலே போனான்.

எண்ணற்ற அறிவினோருடைய ஞானக் கண்ணிற்கும், தெய்வ மனத்திற்குமே அறியமுடியாத வேகம் என்று சிறப்

பித்தார். மேருமலை உலகம் முழுதும் வியாபித்துள்ளது என்ப. மேரு : சக்கரவாளத்தின் நடுவேயுள்ள ஒரு மலை ; சுமேருவென்றும் கூறப்படும். 'பொன்றிகழ் நெடுவரை' (மணி. பதிகம். 3) ; 'சூழ் கடல் வளை இய வர்ழியங்குன்றத்து, நடுவு நின்ற மேருக்குன்றமும்' (மணி. *6 : 162 - 163*) ; 'மேரு மலையினையே இமய மலையென்றும் பகர்வர்' மணி. *18 : 62* குறிப்பு.

பி - ம். 1. இமைந்து நோக்கும், இரைந்து.

2. கருணைத் தெய்வம். 47

## மேரு மலையின்மீது நாவன்மரத்தைக் காணுதல்

2685. யாவது நிலைமைத் தன்மை
யின்னதென் றிமையா நாட்டத்
தேவருந் தெரிந்தி லாத
வடமலைக் கும்பர்ச் சென்றான்
நாவலம் பெருந்தீ வென்னு
நளிர்கடல் வளாக வைப்பிற்
காவன்மூன் றுலக மோதுங்
கடவுண்மா மரத்தைக் கண்டான்.

இமையா நாட்டம் தேவரும் - இமைக்காத விழிகளைப் பெற்ற சுரரும், நிலைமை தன்மை இன்னது என்று - நிலையாயுள்ள தன்மை இது என்று, யாவதும் - ஒரு சிறிதும், தெரிந்திலாத - அறிய முடியாத, வடமலைக்கு உம்பர் சென்றான் - வடக்கணுள்ள மேருகிரிமீது போய், (அநுமன்), நளிர் கடல்வளாக வைப்பில் - குளிர்ந்த சமுத்திரத்தால் சூழப்பட்ட இடமான பூமியில், பெரு - பூமியில் பெருமை வாய்ந்த, நாவலம் தீவு என்னு - நாவலம் தீவென்று, காவல் மூன்று உலகம் ஓதும் - காவலைக் கொண்ட மூன்றுலகமும், ஓதும் - புகழ்ந்து கூறற்குக் காரணமான கடவுண்மா மரத்தை கண்டான் - தெய்வத் தன்மை பெற்ற பெரிய நாவல் மரத்தைப் பார்த்தான்.

வடமலை : மேருமலை ; 'வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்' (பட்டினப். *187*) 'வடமலைப் பிறந்த வான்கேழ்வட்டம்' (சிலப். *4 : 37*)

'வடவரையை மத்தாக்கி' (சிலப். ஆய்ச்சியர் குரவை) யாவது; எது: எனினுமாம். 'காரியம் யாவது கழறுவீர்' (கந்தபு. தக்கன் மக. 6); தேவரும்-உம்மை உயர்வு சிறப்பு. நாவலம் பெருந்தீவு-இது சம்புத் தீவு என்றும் வழங்கும். 'நால்வகை மரபின்மாபெருந் தீவு' (மணி. 2 : 1); 'தீங்கனி நாவ லோங்குமித் தீவிடை' (மணி. 9 : 17); வளாகம்; 'தென் கடல் வளாகம் பொதுமையின்றி' (புற நா. 199)ம் இவ் வரிக்குத் தெளிந்த நீராற் சூழப்பட்ட உலக முழுவதையும் என்று உரைகாரர் எழுதியதையும் காண்க. கடவுள் மாமரம்-நாவன் மரம், 'நன்னிலை யுலகினுள் நாவல் போலவும்' (பெருங். 2 : 3 : 91).

பி - ம். 1. அறியாநாட்டந்.

2. தெரிக்கிலாத.

3. நீவென்னும், நீவென்ன.

4. நளிகடல். 48

## அநுமன் மேருமலையிற் பிரமனைக் கண்டு வணங்குதல்

2686. அன்னமா மலையி னும்ப
ருலகெலா மமைத்த வண்ணல்
நன்னக ரதனை நோக்கி
யதனடு நாப்ப ணுமப்
பொன் மலர்ப் பீடந்தன்மே
னுன்முகன் பொலியத் தோன்றுந்
தன்மையுங் கண்டு கையால்
வணங்கினன் றருமம் போல்வான்.

தருமம் போல்வான் - அறமே உருவெடுத்தாற் போன்றவனை அநுமன், அன்னமா மலையின் உம்பர் - அந்த மேரு மலையின் உச்சியிலே, உலகு எலாம் அமைத்த அண்ணல் - உலகனைத்தையும் படைத்த பிரமதேவனுடைய, நன்னகர் அதனை நோக்கி - சிறந்த நகரமாகிய அதனைக் கண்ணுற்று, அதன் நடு நாப்பண் - அதன் நட்ட நடுவினில், நாமம் பொன் மலர் பீடம் தன்மேல் - புகழ் பெற்ற பொன் மலர்ப் பீடத்தின்மீது, நான்முகன் - பிரமதேவன், பொலிய தோன்றும் தன்மையும்-விளங்கத் தோன்றுகின்ற தன்மையையும், கண்டு-பார்த்து, கையால் வணங்கினன் - கைகூப்பித் தொழுதான்.

அண்ணல் : பிரமன் ; அவன் நன்னகர் : சத்தியலோகம் ; நடு நாப்பண் : ஒரு பொருட் பன்மொழி ; ஆதலின் நட்ட நடுவில் எனப் பொருள் செய்யப்பட்டது. தருமம் போல்வான் : அநுமன் ; (ஒப்பு) (கிட்கிந்தா. 73) ; 'மேருவின் உச்சியில் பிரமன் வாழ்தல்' (பால. 201).

பி - ம். 2. நன்னெடு நகரம் ; நாப்பணுய.

3. பொன்மலை ; பொலிந்து. 49

## திருமாலைக் கண்டு வணங்குதல்

2687. தருவன மொன்றி வானோர்
தலைத்தலை மயங்கித் தாழப்
பொருவரு முனிவர் வேதம்
புகழ்ந்துரை யோதை பொங்க
மருவிரி துளப மௌலி
மாநிலக் கிழத்தி யோடுந்
திருவொடு மிருந்த மூலத்
தேவையும் வணக்கஞ் செய்தாள்.

(பின்னர் மாருதி), தருவனம் ஒன்றி - மரங்கள் செறிந்த வனம் பொருந்தி, வானோர் - தேவர்கள், தலைதலை - இடம்தோறும் இடம் தோறும், மயங்கி தாழ - பத்தியின் வசப்பட்டு வணங்கவும், பொரு அரு முனிவர் வேதம் புகழ்ந்து உரை ஓதை பொங்க - ஒப்பற்ற முனிவர் வேத வாக்கியங்களால் போற்றிப் புகழும் ஓசை எங்கும் நிறையவும், மாநிலம் கிழத்தியோடும் - பூமிப் பிராட்டியோடும், திருவொடும் - இலக்குமிப் பிராட்டியோடும், மருவிரி துளபம் மௌலி - நறுமணம் பரந்த திருத்துழாயை அணிந்த மகுடத்துடன் வீற்றிருந்த, மூலம் தேவையும் - (எல்லாப் பொருள்கட்கும்) ஆதிகாரணனை திருமாலையும், வணக்கம் செய்தான் - வணங்கினான்.

தருவனம் ; 'தருவனத்துள் யாமியற்றும் தவ வேள்வி' (பால. கையடைப். 10) ; 'திசைகள் தோறும் தலைத்தலை' ((யுத்த. 1988) 'தத்தரிக் கண்ணார் தலைத்தலை வருமே' (பரி. 16, 10) ; பொருவரு :

'பொருவருஞ் சிறப்பின் மிக்காரிவர்க்கு' (பெரிய பு. கண்ணப். 10); வேதம் புகழ்ந்து: வேதத்தால் புகழ்ந்து, மாநிலக் கிழத்தி: 'வழுவினியுள தன்றிந்த மாநிலக் கிழத்திக்கென்றான்' (யுத். மீட்சி. 353) மூலத்தேவு: திருமால்; தேவையும்: உம்மை உயர்வு சிறப்பு; 'தனி மூலத்தரும் பரமே பரமே' (ஆரணிய. 49); 'நீயாதி பரம் பரமும்' (ஆரணிய. 54); 'மூலமே யில்லா முதல்வனே' (ஆரணிய' 1172); 'ஆதிப் பிரமனுநீ யாதிப் பரமனுநீ, ஆதி எனும் பொருளுக் கப்பாலுண்டாயினுநீ' (ஆரணிய. 1175); 'மூலமு நடுவு மீறுமில்லதோர் மும்மைத்தாய, காலமுங் கணக்குநீத்த காரணன்' (சுந்தர. 1122) என்ற இத்தொடர்கள் கொண்டு கம்பநாடர் திருமாலுக்குப் பரத்வம் கூறுதல் காண்க.

பி-ம். 1. ஒன்று, ஒன்றில்; தாழ்ந்து, ; தாழ்ந்த. 50

இச் செய்யுள் சில பிரதிகளில் 'ஆயதன்' என்ற பாடற்குப் பின் உள்ளது.

### உருத்திரமூர்த்தியைக் கண்டு வணங்குதல்

2688. ஆயதன் வடகீழ் பாகத் தாயிர மருக்க ரான்ற
காய்கதிர் பரப்பி யஞ்சு கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலக மூன்றுந் தூவிய மலரிற் சூழ்ந்த
சேயிழை பாகத் தெண்டோ ளொருவனை வணக்கஞ்
[செய்தான்.

(பின்னர்), ஆயதன் வட கீழ் பாகத்து - அந்த மலையின் வடகிழக்கில், ஆன்ற - உயர்ந்த, ஆயிரம் அருக்கர் - ஆயிரம் சூரியர்கள் போல, காய் கதிர் - (இருளைப்) போக்குவனவான கிரணங்களை, பரப்பி - விரித்துக்கொண்டு, கதிர் - ஒளியுடன் கூடிய, அஞ்சு முகம் கமலம் காட்டி - ஐந்து முகங்களாகிய தாமரையைக் காட்டி, தூய பேர் உலகம் மூன்றும் - பவித்திரமான பெரிய மூன்று உலகத்துள்ளோரும், தூவிய - அர்ச்சனை புரிந்த, மலரில் சூழ்ந்த - மலர்களாற் சூழப் பெற்று, செம்மை இழை - செம்பொன் அணிகளைப் புனைந்த பார்ப்பதியம்மையை, பாகத்து - (இடது) பாகத்துக் கொண்டருளிய, எண் தோள் ஒருவனை - எட்டுத் தோள்களையுடைய ஒப்பற்றவனை (சிவபெருமானை), வணக்கம் செய்தான் - வணங்கினான்.

ஆயிரம் சூரியர் ஒருங்கிருந்தாற் போன்ற பேரொளியுடனும், ஐந்து முகத்துடனும் எட்டுத் தோள்களுடனும் சிவபிரான் வீற்றிருந்தான் எனப்பட்டது. (ஒப்பு) : 'ஞாயிற்றோர் நிறத்தகை' (பரி. *5 : 12*) என்று முருகனைப் புகழ்ந்தமை காண்க. ஆன்ற : சிறந்த எனினுமாம்; காய் கதிர் : வினைத்தொகை. ஐந்து முகம் : அகோரம், வாமனம் தத்புருஷம் ஈசானம் சத்தியோசாதம் என்ப. சேயிழை பாகன் : உமாதேவியைத் தனது இடது பாகத்தில் வைத்தவனான சிவபெருமான். 'பாகத்தில் ஒருவன் வைத்தான' (ஆரணிய. *629*); 'வலப்பாகம் செழும்பவளச் சோதியென்ன வாணீலச் சோதி யென்ன மற்றப் பாகம், கலப்பான திருமேனி' (வி. பா. அருச். *40*) 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே மாதொரு பாகனார் தம் வருவர்' (சவ. சிந்தி. *2*-ஆம் சூத். *25*); 'எண்டோள் ஒருவன்' 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்றன்னை' (திருவங்கமாலை).

பி - ம். 1. அருக்கர்க்கான்ற, அருக்கர்கற்றை.
2. பரப்பில்.
4. சேயிதழ்; பாதத் தெண்டோன், பாகந் திண்டோள். 51

## இந்திரனைக் கண்டு வணங்குதல்

2689. சந்திர னனைய கொற்றத்
தனிக்குடை தலையிற் றூகச்
சுந்தர மகளி ரங்கைச்
சாமரை தென்ற றூவ
அந்தர வான நாட
ரடிதொழ முரச மார்ப்ப
இந்திர னிருந்த தன்மை
கண்டுவந் திறைஞ்சிப் போனான்.

(பின்னர்), சந்திரன் அனைய - சந்திரனை நிகர்த்த, கொற்றம் தனி குடை - வெற்றி யமைந்த ஒப்பற்ற குடை, தலையிற்று ஆக - தலைமீது நிழற்றவும், சுந்தரம் மகளிர் - அழகிய தேவமாதர், அகம்கை சாமரை - அழகிய கையில் ஏந்திய வெண்சாமரங்களாக, தென்றல் தூவ - தென்றலை வீசவும், அந்தரம் வானம் - அந்தரம் என்று வழங்கும் வானத்தில் உள்ள, நாடர் - நாடாகிய சுவர்க்கத்தில் உள்ளாரான தேவர்கள், அடி தொழ - பாதத்தில் வணக்கம்

செலுத்தவும், முாசம் ஆர்ப்ப - வெற்றி முரசு முழங்கவும், இந்திரன் இருந்த - அமரேந்திரன் வீற்றிருந்த, தன்மை கண்டு - வைபவத்தைக் கண்ணுற்று, உவந்து - மகிழ்ந்து, இறைஞ்சி போனான். வணங்கிச் சென்றான்.

சந்திரவட்டக் குடை : அரசன் அல்லது தலைவன் சின்னம்- கொற்றத் தனிக்குடை : 'கொற்றக் கவிகை நிழற்ற' (திருக்கருவை. கலித். அங். 66); சுந்தரமகளிர் : அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை, முதலியோர். சாமரை : வெண் சாமரம். இந்திரன் இருந்தது அமராவதி நகரம். அந்தர வானநாடர் : 'அமையா தென்றாரந்தர வானத்தவ ரெல்லாம்' (பால. மிதிலைக். 25).

பி - ம். 1. தோற்றத்தளி ; தலையதாக. 52

## அனுமன் எட்டுத்திசைப் பாலகரையும் காணுதல்

2690. பூவலர் மரத்தைப் போர்ப்பப்
பொற்பகம் விரிந்து பொங்கித்
தேவர்த மிருக்கை யான
மேருவின் சிகரச் சேர்ப்பின்
மூவகை யுலகுஞ் சூழ்ந்த
முரட்டிசை முறையிற் றாங்குங்
காவல ரெண்மர் நின்ற
தன்மையுந் தெரியக் கண்டான்.

பூ அலர் - மலர்கள் விரிந்துள்ள, மரத்தை போர்ப்ப - கற்பகத் தருவைச் சூழுமாறு, பொற்பு - பொலிவு, அகம் - தன்னிடத்து, விரிந்து பொங்கி - விரிந்து மிகுந்து, தேவர் தம் இருக்கை ஆன - வானோர்க்கு இருப்பிடமான, மேருவின் சிகரம் சேர்ப்பில் - மேரு பர்வதத்தின் உச்சியிடத்து, மூவகை உலகும் சூழ்ந்த - மூன்று திறத்ததான உலகத்திலும் சூழ்ந்துள்ள, முரண் திசை - (தம்முள்) மாறுபட்ட திசைகளை, முறையில் தாங்கும் - முறைமையாகத்

தாங்கும், எண்மர் காவலர் - எட்டுத்திக்குப் பாலகர், நின்ற தன்மையும் தெரிய கண்டான் - நின்ற நிலையையும் நன்கு பார்த்தான்.

மேரு; யுத்த. 2685 உரைக் குறிப்புக் காண்க. இருக்கை: வாசஸ்தலம்; 'நீநின் னின்னியலிருக்கை யெய்தி' (கிட்கிந்தா. 405) 'இருக்கை யெழலு மெதிர்செலவும்' (நாலடி. 143) முரண் திசை: ஒன்றுக்கொன்று மாறான திசை. காவலர் எண்மர்: எட்டுத்திக்குப் பாலகர்; ஆசை காவலர் (யுத்த. 2677) என்றதன் உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. பூவலரமைந்த பொற்பிற் கிரணங்கள் பொலிந்து, பூவிலமரத்லதப் போல வந்தர மறைந்து; பெயங்கத், பொங்கும்.
2. சிகர வெற்பில், சிகர வைப்பின்.
3. சூழ்ந்து; முறையிற்ருங்கக். 53

## உத்தரகுருவை யடைந்து உதயமாயிற்றே யென்று அநுமன் வருந்துதலும் உண்மையை யுணர்ந்து துன்பம் நீங்கலும்

2691. அத்தடங் கிரியை நீங்கி யத்தலை யடைந்த வள்ளல்
உத்தர குருவை யுற்ரு னொளியவன் கதிர்க ளூன்றிச்
செற்றிய விருளின் ருக்கி விளங்கிய செயலை நோக்கி
வித்தகன் விடிந்த தென்னு முடிந்ததென் வேக
[மென்ருன்.

அதடகிரியை நீங்கி - அந்தப் பெரிய மலையைத் தாண்டி, அ தலை அடைந்த வள்ளல் - அப்பால் அடைந்த வண்மையனான அநுமன், உத்தர குருவை உற்ருன் - உத்தர குருவை யடைந்தான்; (அங்கு), ஒளியவன் கதிர்கள் ஊன்றி - கதிரவனுடைய ஒளிக் கற்றைகள் பதியப் பெற்று, செற்றிய - அடர்ந்த, இருள் இன்று ஆக்கி - இருளை இல்லாமற் செய்து, விளங்கிய செயலை நோக்கி - விளங்கிய செய்கையைக் கண்ணுற்று, வித்தகன் - செயலாற்றுவதில் சமர்த்தனான அநுமன், 'விடிந்தது - உதயமாகி விட்டதே', என்னு - என்று சொல்லி, 'என் வேகம் முடிந்தது - எனது வேகமும் முடிவெய்தியது', என்ருன் - என்று (வருந்திக்) கூறினுன்.

இறந்துபட்ட பலரையும் பிழைப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டவனாகலின் வள்ளல் எனப் பெற்றான் அநுமன். உத்தரகுரு; 'சுவர்க்கத்தின்கட்சென்று போகந்துய்ப்பல் • என்றும், உத்தர குருவின்கட் சென்று போகந்துய்ப்பல் என்றும் எழுந்த காமங் கண்டாயன்றே' (இறை. அகப். 15); இது பூமியில் ஒன்று. மேருவிற்கு வடக்கண் உள்ளது. செற்றிய - செறிந்த; 'சுகவளைப் பொலிந்த தேராளும் செற்றும்' (புறநா. 260). வித்தகன்: 'வித்தகனே இராமாவோ' (பெரியாழ். 3, 10, 6); 'பத்துடையடியர்க்கெளியவன் பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1:3 1); விடிந்தது: 'கங்குல் விடிந்த தென்றிருந்தேன்' (யுத்த. மாயா சீதை. 47); வேகமும்; வந்த வேகத்துடன் மனோ வேகமுமாம்; மனக்கிளர்ச்சியும் குன்றியது என்க. பொழுது விடிவதற்குள் மருந்து மலையைக் கண்டு ஓடதியை எடுத்துச் செல்ல எண்ணினவன் ஆகலின் உத்தர குருவின் ஒளியைக் கண்டு மனம் தளர்ந்தான் என்க.

பி - ம். 1. அடைந்த அண்ணல்.

2. கதிரையூன்றி.

3. இருளிற்றுக. 54

2692. ஆதியா னுணரா முன்ன
மருமருந் துதவி யல்லிற்
பாதியா லனைய துன்ப
மகற்றுவான் பாவித் தேற்குச்
சோதியா னுதயஞ் செய்தா
னுற்றதோர் துணித லாற்றேன்
ஏதியான் செய்வ தென்னு
விடருற்று னிணையி லாதான்.

இணையிலாதான் - தன்னை நேர்வார் ஒருவருமில்லாத அநுமன், 'ஆதியான் உணரா முன்னம், - ஆதி மூர்த்தியாகிய இராமபிரான் தெளிவெய்துவதற்கு முன், அரு மருந்து உதவி - அரிய மருந்தினைக் (கொண்டு போய்க்) கொடுத்து, அல்லில் பாதியால் - பாதி இரவிற்குள்ளாக, அனைய துன்பம் அகற்றுவான் பாவித்தேற்கு - அத்தகைய துன்பத்தைப் போக்குமாறு எண்ணியிருந்த எனக்கு, (என் எண்ணம் ஈடேறாதபடி) சோதியான் உதயம் செய்தான் -

பேரொளி உடையவனுன கதிரவன் உதித்தனன்; உற்றது-(அதனுல்) எனக்குத் துயரம் ஏற்பட்டது; ஓர் துணிதல் ஆற்றேன்-இப்போது ஓர் துணிவினைக் கொண்டேனில்லை; யான் செய்வது ஏது-(இப்போது) யான் செய்யவேண்டுவது எது', என்று-என்று, இடர் உற்ருன்-வருத்தமடைந்தான்.

ஆதியான்; யுத்த. 2687 உரைக் குறிப்புக் காண்க. அனைய துன்பம்-இலக்குவன் முதலானோரும் வானரரும் உற்ற துயரம்; சோதியான்-சூரியன்; உற்றது-இடையூறு நிகழ்ந்தது. யான் செய்வது ஏது என மொழி மாற்றுக. இணையிலாதான்; 'தன் பெருங்குணத்தால் தன்னைத் தானலா தொப்பிலாதான்' (கிட்கிந்தா. 52); 'என்னலதில்லை யென்னை யொப்பேன வெனக்குமீந்தாள்' (சுந்தர. 1271); 'தன்னில் நேர்பிறர் தானலாதில்லவன் தோண் மேல்' (யுத்த. 1436).

பி-ம். 1. அல்லாற்,
2. ஆற்றுவான்.
3. செய்தாய்; உற்றது; தேற்றேன். 55

2693. காற்றிசை சுருங்கச் செல்லுங்
கடுமையான் கதிரின் செல்வன்
மேற்றிசை யெழுவா னல்லன்
விடிந்தது மன்று மேரு
மாற்றினன் வடபாற் றேன்று
மென்பது மறைகள் வல்லோர்
சாற்றினு ரென்னத் துன்பந்
தணிந்தனன் றவத்து மிக்கான்.

தவத்து மிக்கான்-தவத்தாற் சிறந்தவனும், கால் திசை சுருங்க செல்லும் கடுமையான்-காற்றுத் திசையிலே அடங்கி வீசுமாறு, செல்லும்-பறந்து செல்கின்ற கடும் வேகத்தினையுடையவனுமான, அநுமன்-(வடக்கு நோக்கிச் செல்கின்ற தனது இடதுபுறத்தில் சூரியன் இருத்தல் கண்டு) 'கதிரின் செல்வன்-ஒளிக் கற்றைகளையுடைய சூரியன், மேல்திசை எழுவான் அல்லன்-மேலைத் திசையில் உதிக்கமாட்டான்; விடிந்ததும் அன்று-இப்போது விடியற்காலமுமில்லை; மேரு-மேரு மலையில், மாற்றினன்-

தன் செலவை மாற்றினவனாய், வடபால் தோன்றும் என்பது - (சூரியன்) வடபுறத்தில் (உள்ளார்க்கு மேற்குத் திசையில்) தோன்றும் என்பது, மறைகள் வல்லோர் சாற்றினர் - வேதம் பயின்றவர்கள் பகர்ந்துள்ளார்', என்ன - என்று எண்ணி, துன்பம் தணிந்தனன் - துயரம் தணியப் பெற்றான்.

கால்திசை : வடமேற்குத் திசையுமாம். அநுமன் சென்ற வேகத்தால் காற்றின் வேகமும் குறைந்தது என்க. கதிரின் செல்வன் : ஒளிக் கற்றைகளையே தன் செல்வமாக உடையவன்; சொல்லின் செல்வன் என்றது போல. கதிரோன் மேருவைச் சுற்றி வருவான் என்பதும், அம் மலையின் வடபுறத்திலுள்ளார்க்குச் சூரியன் மேற்கே தோன்றும்போது காலையும், கிழக்கே உதிக்கும் போது மாலையும் நிகழும் என்பதும் புராணக் கொள்கை. மற்றும் சூரியமூர்த்தியின் வரலாறும் பெருமையும் அபிதான சிந்தாமணியிற் காண்க. 'கலையனைத்தும் கதிரோன் முன்சென்றோதினவன்' ஆதலாலும், 'வேதக் கடல்' என்று இராமபிரானால் புகழப் பெற்றவன் ஆதல் கொண்டும், சிறிய திருவடியின் பெருமையை அறிக.

பி - ம். 1. கருத்தாச் செல்லும்.
4. சாற்றினன் என்று ; தவிர்ந்தனன் ; தவத்தின். 56

## உத்தரகுரு நாட்டைக் கண்டு அநுமன் அப்பாற் செல்லுதல்

2694. இருவரே தோன்றி யென்று
மீறிலா வாயு ளெய்தி
ஒருவரோ டொருவ ருள்ள
முயிரொடு மொன்றே யாகிப்
பொருவரு மின்பந் துய்த்துப்
புண்ணியம் புரிந்தோர் வைகுந்
திருவுறை கமல மன்ன
நாட்டையுந் தெரியக் கண்டான்.

இருவரே தோன்றி - (ஆண் பெண் என்ற) இருவராகவே பிறந்து, என்றும் ஈறு இலா ஆயுள் எய்தி - என்றும் முடிவில்லாத

ஆயுளைப் பெற்று, ஒருவரோடு ஒருவர் உள்ளம் உயிரொடும் ஒன்றே ஆகி - ஒருவரோடு ஒருவர் உயிருடன் மனமும் ஒன்று பட்டவராய், பொருவரும் இன்பம் துய்த்து - நிகரற்ற துன்பத்தைத் துய்த்துக் கொண்டு, புண்ணியம் புரிந்தோர் வைகும் - புண்ணியச் செயல்களைச் செய்தோர் பொருந்தியிருப்பதான, திரு உறை கமலம் அன்ன - திருமகள் வசிக்கும் தாமரை மலரை யொத்த, (இலக்குமி நித்யவாசம் செய்யும்படியான), நாட்டையும் தெரியக் கண்டான் - உத்தர குரு நாட்டினையும் விளங்கக் கண்ணுற்றான்.

'காதலிருவர் கருத்தொருமித் தாதரவுப்பட்டதே இன்பம்' என்றார் ஔவையார். ஒரு பிறப்பில் கணவன் மனைவியராக அமைந்தவர் மனமொன்றி வாழ்ந்த வாழ்க்கையரெனின், அவர்கள் தொடர்பு பல பிறப்புக்களிலும் தொடரும் என்று நூல்கள் கூறும். 'பிறப்பா னடுப்பினும் பின்னும் துன்னத் தகும் பெற்றியர்' (திருக். 205); 'இம்மை மாறி மறுமையாயினும், நீயாகிய ரெங் கணவனை, யானா கியர்நின் நெஞ்சு நேர்பவளே' (குறுந். 49); 'ஈண்டு நானிருந்தின்னுயிர் மாயினும், மீண்டு வந்து பிறந்து தன் மேனியைத், தீண்டலாவதோர் தீவினை தீர்வரம் வேண்டினாள்'. சீதாபிராட்டியார் என்பன காண்க. முன் காலத்து வழக்கிலிருந்து இப்பொழுது வழக்கு வீழ்ந்த சதி அல்லது உடன்கட்டையேறுதல் என்ற பழக்கமும் இக்கொள்கையைப் பின்பற்றியெழுந்ததேயாகும். ஒருவரோ டொருவ ருள்ள முயிரொடும் ஒன்றேயாகி ; (ஒப்பு): 'உயி ரொன்றுளமொன்று' (திருக். 18) என்றது காண்க. 'ஈண்டு நீயிருக்க வாண்டவ் வெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 525) என்று அநுமன் பிராட்டியிடம் நயம்படக் கூறியதும் காண்க. பொருவரு மின்பந் துய்த்துப் புண்ணியம் புரிந்தோர் என்றது ; இல்வாழ்க்கை வாழ்பவன் புண்ணியம் புரிதல் வேண்டின் ஒத்த சிந்தையளான மனைவியின்றேல் இயலாது என்பதைக் காட்ட ; 'வருவிருந் துவப்பவூட்டும் நேசமிக் குடையாள் கொண்கனினைப் பறிந்தொழுகு நீராள்' (குசேலோ. 1 : 60) என்றது காண்க. 'பாங்கில் வருமனையறத்தின் பண்பு வழாமையிற் பயில்வார்' (பெரியபு. காரைக்கால். 14) என்று அம்மையார் புகழப் பெற்றதும் காணலாம். திருவுறை கமலம் அன்ன நாடு-உத்தரகுரு ; 'திருவின் அருந்தவ முடித்தோர், உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய' (சிலப்.

மனையறம். 9 - 10); 'அறத்தினாகிய பொருளால் தலைப்படுதானத் தைத் செய்தோர் எய்தும் உத்தர குருவினை' என்ற அதன் உரையும் காணத்தகும். போக பூமி: 'காதலாற் காமபூமிக் கதிரொளி யவரு மொத்தார்' (சீவக. 189)ம், காமபூமி: 'தானப் பயனாற் பெறும் போகபூமி' என்ற அதனுரையும் காண்க.

பி - ம். 1. ஒருவரோடொருவரென்றும் ; ஆகப்.
3. இன்ப துன்பம். 57

2695. வன்னிநாட் டியபொன் மௌலி
வானவன் மலரின் மேலான்
கன்னிநாட் டிருவைச் சேர்ந்த
கண்ணனு மாளுங் காணிச்
சென்னிநாட் டெரியல் வீரன்
றியாகமா விநோதன் றெய்வப்
பொன்னிநாட் டுவமை வைப்பைப்
புலன்கொள நோக்கிப் போனான்.

வன்னி நாட்டிய - வன்னி மலரைத் தரித்த, பொன் மௌலி - பொன்னிறமான சடையைத் தலைமிசைக் கொண்டவனான, வான வன் - தேவனும் (சிவபெருமானும்), மலரின் மேலான் - தாமரை மலரின்மீது வீற்றிருக்கும் பிரமதேவனும், நாள் - என்றும் இளை யாளும் அழகுடையவளும் புதியவளுமான, கன்னி திருவை சேர்ந்த-கன்னிப் பருவம் வாய்ந்த திருமகளைத் தன் திருமார்பின் கண் கொண்டுள்ள, கண்ணனும் - செந்தாமரைக் கண்ணனான திரு மாலும், ஆளும் காணி - ஆட்சி செய்கின்ற தலமாகி, சென்னி - தலையில், நாள் தெரியல் - அன்றலர்ந்த மலர் மாலையைப் புனைந்த, வீரன் - வீரனும், தியாகமா விநோதன் - கொடையினையே தன் விநோதப் பொழுது போக்காகக் கொண்டவனுமான சோழ னுடைய, தெய்வம் பொன்னி நாடு உவமை வைப்பை - காவிரி வளம் செய்யும் நாட்டுக்குவமையான நிலங்களை, புலன்கொள நோக்கி போனான் - கண்ணாகிய புலன் நன்கு பொருந்தக் காணுமாறு (களிப்புடன்) சென்றான்.

வன்னி நாட்டிய பொன்: நெருப்பு நின்றாற் போன்ற பொன்னொத்த சடையுமாம். பொன் மௌலி, 'ஞான்ற குழற் சடைகள் பொன்வரை போல் மின்னுவன' (பதினோரா். அற்புத. 26); 'வாசவன் மலரின் மேலான்' (யுத்த. 1587); நாட் கன்னித்திரு என இயைக்க, கண்ணன்: திருமால்; காணி: இடம்; 'மாகாணிக்கே காமுன்' (தனிப்பா. காளமேகம்); சென்னி: சோழ மன்னரின் புனை பெயர்களுள் ஒன்று. நாள் தெரியல்: அன்றலர்ந்த மலர்களைத் தெரிந்தெடுத்துத் தொகுக்கப்பட்ட மாலை: அல்: பெயர் விகுதி. இங்குச் சோழனுக்குரியது ஆத்திமாலை என்பதுணர்க. 'போந்தை வேம்பே யாரென வரூஉம், மாபெருந் தானையர் மலைந்த பூவும்' (தொல். புறத். 5); தியாகமா விநோதன்: இந்தப் பெயர் இரண்டு மூன்று சோழ மன்னர்களின் விருதுப் பெயராகச் சாசனங்களில் காணப்படுகிறது; ஆதலின் இந்தப் பட்டப் பெயரைக் கொண்டு கம்பநாடர் வாழ்ந்த காலத்தை அறுதியிட வியலாமல் ஆராய்ச்சியாளர் இடர்ப்படுகின்றனர். இச் சோழனைப்பற்றியே 'புவி புகழ் சென்னி பேரபயன் தோள்புகழ், கவிகட மனையெனக் கனக ராசியும்' (கிட்கிந்தா. 828) என்று கம்பர் சிறப்பிப்பர். இவனே மூன்றாங் குலோத்துங்கச் சோழன் என்றும், திரிபுவன வீரன், வீர ராஜேந்திரன் என்பன இவன் தரித்த நாமங்கள் ஆகலின் வீரன் போரமலன் என்றும், இவை இவன் முன்னோர் சிலர்க்கும் உரியவாய்ப் பொதுவாகலின், இவனுக்கே அமைந்த சிறப்புப் பெயரால் 'தியாக விநோதன்' என்று கம்பநாடர் குறித்தனர் என்றும் கூறுவர் பண்டிதர். மு. இராகவையங்கார், (சாசனத் தமிழ்க் கவி சரிதம் 34-ஆம் பக்கம்) கிட்கிந்தா காண்டம் 828-ஆம் செய்யுட் குறிப்பும் காண்க. இனி, தியாக விநோதன் என்ற பெயர் இன்னும் சில சோழர்க்கும் உரிய பெயரென்று கூறிக் கம்பர் காலம் அரிஞ்சயன் என்ற சோழன் வாய்ந்த காலம் என்று கூறுவர் சதாசிவ பண்டாரத்தார். பின்னும் சிலர் இரண்டாங் குலோத்துங்கன் காலம் என்பர். இங்கு பொன்னி வளநாட்டை உத்தர குருவிற்கு ஒப்பாகக் கூறியதிலிருந்து கம்பநாடரது நாட்டபிமானம் மிகத் தெளிவாம்; கிட்கிந்தா. 750 உரைக்குறிப்புக் காண்க. பொன்: பொன்போன்ற சடை.

பி - ம். 2. சேரும்; காட்சிச்.
4. போலன்கொள.

## நீலமால் வரைக்கப்பால் மருத்து மலையை அநுமன் காணுதல்

2696. விரியவான் மேரு வென்னும்
வெற்பினின் மீது செல்லும்
பெரியவ னயனார் செல்வம்
பெற்றவன் பிறப்பிற் பேர்ந்தான்
அரியவ னுலக மெல்லா
மளந்தநாள் வளர்ந்து தோன்றுங்
கரியவ னென்ன நின்ற
நீலமால் வரையைக் கண்டான்.

வான் விரிய - ஆகாயமும் பிளக்கும்படி, மேரு என்னும் வெற்பினின் மீது செல்லும் - வலிய மேரு என்னும் மலைக்கு மீதாகச் செல்லும், பெரியவன் - பெருமையனும், அயனார் செல்வம் பெற்றவன் - பிரம பட்டத்தை உண்மையாக அடையப் போகின்றவனும், பிறப்பில் பேர்ந்தான் - (இனிப்) பிறப்பில்லாதவனும் ஆகிய அநுமன், உலகம் எல்லாம் அளந்தநாள் - (திரிவிக்கிரமனாகி) உலகம் எல்லாம் (ஈரடியால்) அளந்த நாளிலே, வளர்ந்து தோன்றும் - வளர்ந்து தோன்றிய, அரியவன் கரியவன் என்ன - அரி என்ற பெயர் கொண்ட கருநிறம் உள்ள திருமால் போன்று, நின்ற (உயர்ந்து) நின்ற, நீலம் மால்வரையைக் கண்டான் - நீலம் என்ற பெரியவரையைக் கண்ணுற்றான்.

பெரியவன் : 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள். 26) என்பது பெருமைக்கிலக்கணமாகத் திருவள்ளுவர் கூறியது காண்க. இங்கு சுந்தர காண்டத்துப் பிராட்டி அநுமன் கொண்ட பேருருக் கண்டு வியந்து பாராட்டிய 597, 598, 599-ம் காண்க. அயனார் செல்வம் பெற்றவன் ; 'காலனை யொக்குந் தூதன் காலுங் கண்ணுதலு மென்றார், மேலுமொன்றுரைத்தா ரன்னான் விரிஞ்சனு மினிமேலென்றார்' (யுத்த. 760) ; 'முன்ன தாக்கிய மூவுலகாக்கிய பதமின்ன தாக்கினன் பெற்றாய்' (யுத்த. 529) ; 'அப்பத மவனுக் கீந்தா னரக்கர்வேர் அறுப்பதாக, இப்பதி யெய்தினனவ் விராம னென்றெவரும் சொன்னார்' (யுத்த. 761) ; 'இலங்கை நகரை யெரி

யூட்டி, மன்னனிராமன் மனமுவப்ப வயவாளரக்கர் குலமறுத்துப்' பின்னை யவன்றன் பேரருளாற் பிரமபதமும் பெறுகென்ருன், (உத்தர. அநும்ப. 40); பெற்றவன்: எதிர்காலம் இறந்த காலமாக வந்த கால வழுவமைதி; தெளிவு பற்றி வந்தது. பிறப்பிற் பேர்ந்தான்: பிறப்பு ஒழியப் பெற்றவன்; 'மரணமில்லை உனக்கென்று வருணராசன் வரமளித்ததும்', 'ஆற்றல் மிகு மாருதி யாவியகலா தொழிகவென'ச் சிவபெருமான் வரமருளியதும், 'ஒருநாளும் விளியா நாளும் உறுக'வெனப் பிரமன் அருளியதும், 'வாதாமகன் சாவொழிக' வென வானோர் தச்சன் கூறியருளியதும் பிறவும். உத்தர காண்டத்து அநுமப் படலத்துக் காண்க. 'சன்மமும் மரணமு மின்றித் தீருமே, விம்மையே ராமவென்றிரண்டெழுத்தினுல்' (பால. பாயி.) என்றபடி அநவரதம் இராம நாமம் உச்சரிப்பவனுகலின் அநுமனுக்கு மறுபிறப்பில்லை என்க. மற்றும், 'யான் மறுவிலா மனத்தேனென்னின், ஊழியோர் பகலா யோது மாண்டெலா முலகமேழும், ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' (சுந்தர. 561) என்ற பிராட்டி கூற்ருலும் மாருதிக்கு மறுபிறப்பில்லை என்க; திருமால் போன்று நின்றது நீலமால்வரை எனப்பட்டது. யுத்த. 2663 குறிப்புக் காண்க. அரியவன் - கரியவன் என்றியைக்க.

பி - ம். 1. விரியவன்; வெற்பினும்.
2. பிறப்பும்.
4. நீலமால் மலையைக்.

59

2697. அற்குன்ற வலங்கு சோதி
யம்மலை யகலப் போனன்
பொற்குன்ற மனைய தோளா
னேக்கினன் புலவன் சொன்ன
நற்குன்ற மதனைக் கண்டா
னுணர்ந்தன னுக முற்ற
எற்குன்ற வெறியுந் தெய்வ
மருந்தடை யாள மென்ன.

அல் குன்ற - இருளும் (தன் முன்னர்) ஒடுங்குமாறு; அலங்கு சோதி-(மிகக் கருநிறத்துடன்) விளங்கும் சோதியையுடைய, அ மலை அகல போனான் - அந்த மலை பின்னிடுமாறு கடந்து சென்றவனாய், பொன் குன்றம் அனைய - பொன் மலையை நிகர்த்த, தோளான் - தோள்களை யுடைய அநுமன், நோக்கினான் - பார்த்து, புலவன் சொன்ன -பேரறிஞன் ஆன சாம்பன் சொன்ன, நல்குன்றம் அதனை - சிறந்த மருத்து மலையை, கண்டான் - கண்டு, 'தெய்வம் மருந்து அடையாளம் - தெய்வத் தன்மை வாய்ந்த மருந்துக்கு அறிகுறி, நாகம் முற்ற -மேலுலகம் முழுதும், எல் குன்ற-சூரியனுடைய ஒளி குறையுமாறு, எறியும் - ஒளிவிடுவது' என்ன - என்று ஊகித்து, உணர்ந்தனன் - தெரிந்து கொண்டான்.

அல் : இருள் ; 'அல்லை யாண்டமைந்த மேனி' (அயோத்தி. குகப். 42); அம்மலை : நீலமலை. பொற் குன்றமனைய தோள் ; 'பொற் குன்றமனைய தோளாய்' (கிட்கிந்தா. 361); புலவன் : சாம்பன் ; 'முக்காலமு மொய்ம்மதியான் முறையின் னுணர்வான்' (யுத்த. 826) கிட்கிந்தா ; 699 உரைக் குறிப்பிற் காண்க. மரித் தாரைப் பிழைப்பிக்கும் மூலிகைகளைத் தன்னிடத்துக் கொண் டமையின் 'நற்குன்றம்' எனப்பட்டது. நாகம் : விண்ணுலகம் ; பாதலமுமாம். சுந்தர. 1087 இச் செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி காண்க. எல் : சூரியன்.

பி - ம். 1. குன்றம் ; விளங்கு, மலங்கு, விலங்கு.
4. குன்றுந் தெரியும் ; என்றுன், ௬0

## மலையைக் காக்கும் தேவதைகளின் இசைவுபெற்று அநுமன் அம்மலையைப் பெயர்த்தல்

2698. பாய்ந்தனன் பாய்த லோடு
மம்மலை பாத லத்துச்
சாய்ந்தது காக்குந் தெய்வஞ்
சலித்தன தடுத்து வந்து
காய்ந்தன நீதா னியாவன்
கருத்தென்கொல் கூறு கென்ன
ஆய்ந்தவ னுற்ற தெல்லா
மவற்றினுக் கறியச் சொன்னான்.

பாய்ந்தனன் - (அநுமன்) அந்த மலைமீது பாய்ந்தான்: பாய் தலோடும் - பாய்ந்த உடனே, அம் மலை - அந்த மருத்துமலை, (மாருதியின் வேகம் தாங்கலாற்ருது), பாதலத்து சாய்ந்தது - பாதாளத்திற் சாய்ந்தது; காக்கும் தெய்வம் - (அம் மருந்துகட்குக்) காவலாக இருந்த தேவதைகளும், சலித்தன - முதலில் மனம் தளர்ந்தனவாய் (பிறகு தேறி அக்குரங்கைத்), தடுத்து வந்து - தடுத்து வந்து, காய்ந்தன - வெகுண்டனவாய், 'நீ தான் யாவன் - நீ யாவன்? கருத்து என் - (உன்) எண்ணம் யாது? என்று கேட்க, ஆய்ந்தவன் - ஆராயும் தன்மையனுன அநுமன், உற்றது எல்லாம் - (தான்) வந்த காரணமனைத்தும், அவற்றினுக்கு அறிய சொன்னுன் - அந்தத் தேவதைகள் அறிந்து கொள்ளுமாறு பகர்ந்தான்.

கழறுகென்ன: கழறுக என்றது அகரம் குறைந்து நின்றது.

பி - ம். 1. பாதாளத்துச்.

2. சாய்ந்தன; சலித்தது; கடுத்து.

3. காய்ந்தனை......என்கொல்; காய்ந்தனன்......கருந்தென்ன, காய்ந்த நீயாவனேது கருத்தென்னை.

4. ஆய்ந்ததுதான்; உற்றதன்மை. 61

2699. கேட்டவை யைய வேண்டிற்
றியற்றிப்பின் கெடாம லெம்பாற்
காட்டென வுணர்த்தி வாழ்த்திக்
கரந்தன கமலக் கண்ணன்
வாட்டலை நேமி தோன்றி
மறைந்தது மண்ணி னின்றுந்
தோட்டன னனுமன் மற்றக்
குன்றினை வயிரத் தோளால்.

கேட்டவை - அநுமன் சொன்னவைகளைச் செவியேற்ற அத் தேவதைகள், 'ஐய - ஐயனே! வேண்டிற்று இயற்றி - (இம் மருந்துகளினுல் உனக்கு ஆக) வேண்டுவனவற்றைச் செய்து முடித்துக்கொண்டு, பின் - பின்னர், கெடாமல் - எந்தவிதமான ஊறுபாடுமின்றி, எம்பால் காட்டு - எம்மிடம் (அவைகளைக்)

கொணர்ந்து காட்டுக', என - என்று, உணர்த்தி வாழ்த்தி - அறிவித்து வாழ்த்தி, கரந்தன - மறைந்தன; (பின்னர்), கமலம் கண்ணன் - செந்தாமரைக் கண்ணனான திருமாலின், வாள்தலை - கூர்மையான நுனியினையுடைய, நேமி - ஆழிப்படை, தோன்றி - காட்சி தந்து, மறைந்தது - (அதுவும்) மறைந்திட்டது; வயிரம் தோளால் - வயிரம் போன்று உறுதியான தோளினால், அநுமன் - மாருதி, மற்று - பின்பு, அ குன்றினை - அந்த மலையை, மண்ணின் நின்றும் - பூமியிலிருந்தும், தோட்டனன் - வேருடன் அகழ்ந்தெடுத்தான்.

கேட்டவை: பலவின்பால் வினையாலணையும் பெயர். வாள் தலை: வாள் போன்று கூரிய நுனி. தொட்டனன்: முதனீண்டது. தொடுதல்: தோண்டுதல்; 'தொட்டனைத் தூறு மணற்கேணி' (குறள். 396); 'வயிரத்தோள்; 'வயிரத் தோளை மெலிவித்தீர்' (யுத்த. 1577).

பி - ம். 1. கேட்டனவுய்ய.
2. உரைத்து; கரந்தனன்.
3. மறைந்தன. 62

வேறு

## அநுமன் மருத்து மலையைக் கையிலேந்தி விரைந்து போதல்

2700. இங்குநின் றின்னன மருந்தென் றெண்ணினாற்
சிங்குமாற் காலமென் றுணர்ந்த சிந்தையான்
அங்கது வேரொடு மங்கை தாங்கினான்
பொங்கிய விசும்பிடைக் கடிது போகுவான்.

'இங்கு நின்று - இங்கிருந்து கொண்டு, இன்னன மருந்து என்று எண்ணினால் - இன்னவை நமக்குத் தேவையான மருந்துகள் என்று ஆராய்வோமானால், காலம் சிங்கும் - காலம் (வீணே) கழியும்', என்று - என்று, உணர்ந்த சிந்தையான் - தெளிந்த மனத்தினனான (மாருதி), அங்கு - அப்போது, அது - அம் மலையை,

வேரொடும் - வேருடன், அம்கை தாங்கினன் - அழகிய கரத்தில் தாங்கிக்கொண்டு, பொங்கிய விசும்பிடை - அகன்று பரந்த ஆகாயத்தில், கடிது போகுவான் - விரைந்து செல்பவன் ஆனான், ஆல் : அசை.

இச் செய்யுட்கண் 'எண்ணித் துணிக கருமம்' (குறள். 467) என்ற குறளின்படி அநுமன் ஆராய்தல் காண்க; (ஒப்பு): இங்கு சுந்தர. 316, 317 காண்க. சிங்கும் : குறையும்; 'சிங்கலில் பெரும் பொருளிழந்து சிறினோர்' (யுத்த. 383); சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்து' (சிலப். பதி. 47); காலந்தாழ்ப்பின் என்ன விபரீதம் நிகழுமோ என்று அஞ்சிக் கடிது சென்றான் என்க. (ஒப்பு) (சுந்தர. 1104). அநுமன் மருந்துகளை மட்டும் எடுத்துச் செல்லாமல் மலையையே வேரோடும் கொண்டு சென்றமைக்குக் காரணம் கூறப் பட்டது.

பி - ம். 1. இன்னமா.
2. சிங்குமாங், தங்குமாங்; உணரும், தன்மையான்.
4. பொங்குநல்; கடந்து; போதுவான். 83

## அம்மலையின் கீழ்மேற் பரப்புக்கள்

2701. ஆயிர மியோசனை யகல மீதுயர்ந்
தாயிர மியோசனை யாழ்ந்த தம்மலை
ஏயெனு மாத்திரத் தொருகை யேந்தினன்
தாயின னுலகெலாந் தவழ்ந்த சீர்த்தியான்.

உலகு எலாம் தவழ்ந்த சீர்த்தியான் – உலகு முழுதும் பரந்த புகழுடன் கூடியவனான அநுமன், ஆயிரம் யோசனை அகலம்மீது உயர்ந்து - ஆயிரம் யோசனை தூரம் அகலம் மேற்புறத்துயர்ந்து, ஆயிரம் யோசனை ஆழ்ந்தது அ மலை - ஆயிரம் யோசனை தூரம் ஆழ்ந்துள்ளதான அந்தச் சஞ்சிவி மலையை, ஏ எனும் மாத்திரத்து ஒரு கை ஏந்தினன் - ஏ என்று ஒருதரம் சொல்லும் காலவளவில் ஒரு கரத்தில் ஏந்திக் கொண்டு, தாயினன் - தாவினான்.

ஏயெனு மாத்திரத்து - 'ஏ யெனுந் துணை மாத்திரத் தெய்தன' (யுத்த. 211); 'ஏயெனு மளவினிலழிந்தது' (யுத்த. நிகும்

பலே. 59); 'ஏ யெனு மாத்திரத்தெய்து கொன்றனன்' (யுத்த. மூலபல. 174); 'ஊழிதோறு முயர்வுறு' சுந்தர. 429.

பி - ம். 1. ஆயிர யோசனை ; அகன்று ; மீயுயர்ந்து.

2. ஆழ்ந்த.

4. தாயினும் ; தவழும், தழைந்த ; கீர்த்தியான். 64

## கவிக் கூற்று

2702. அத்தலை யன்னவ னனைய னுயினுன்
இத்தலை யிருவரும் விரைவி னெய்தினர்
கைத்தலத் தாலடி வருடுங் காலையில்
உத்தமற் குற்றதை யுணர்த்து வாமரோ.

அ தலை அன்னவன் அனையன் ஆயினுன் - அவ்விடத்தில் அந்த அநுமன் அவ்வாறுயினுன் ; இ தலை — இங்கே போர்க் களத்திலே, இருவரும் - சாம்பன் வீடணன் என்ற இருவரும், விரைவின் - வேகமாக, எய்தினர் - (இராமபிரானைச் சென்று) சேர்ந்தவர்களாய், கைதலத்தால் அடிவருடும் காலையில் - கரங் களால் (அப் பெருமானுடைய) திருவடிகளை மெல்லப் பிடிக்கும் காலத்தில், உத்தமற்கு உற்றதை உணர்த்துவாம் - உத்தமனான, அவ்விராமபிரானுக்கு நிகழ்ந்ததைக் கூறுவோம். அரோ ஈற்றசை.

முதலடி முற்றுமோனை. அத்தலை : அநுமனிருந்த இடம். இத்தலை : போர்க்களம். இருவர் சாம்பன் வீடணன். கைத்தலம். 'கைத்தலத்துவரிநீரைக் கலக்கினுன் பயந்தகாளை' (கிட்கிந்தா. 367); 'கைத்தலத்தகன்ற பந்திற்' (சீவக. 1595) அடி வருடுதல் : காலைத் தடவிப் பிடித்தல் ; 'பொன்னி திரைக் கையால் அடிவருடப் பள் ளிக் கொள்ளும்' (பெருமாள். திருமொழி. 1); 'அடிவருடிப் பின்றூங்கி முன்னெழுந்த பேதையே! (தனிப்பா.) உத்தமன் : புருடோத்தம னான இராமபிரான். கம்பநாடர் கதைத் தொடர்பினை வாசகர்க்கு ஆங்காங்கறிவுறுத்திச் செல்லும் வகையில், அத்தலை நிகழ்ந்த

வற்றைக் கூறினேம். இத்தலை உத்தமற்குற்றதை உணர்த்துவாம் என்றார். (ஒப்பு); 'அத்தலை யறிந்த தெல்லா மறைந்தமை ஆழியான்மாட், டித்தலை நிகழ்ந்த வெல்லா மியம்புவா னெடுத்துக்கொண்டாம்' (சுந்தர. 1257); 'இங்கிலை யிணையவர் செயலியம் பினும், பொன்னிலை மானின் பின் தொடர்ந்து போகிய, மன்னிலை யறிகென மங்கை யேவிய, பின்னவன் றன்னிலை பேசுவாம்' (ஆரணிய. 957) என்பன காண்க.

பி - ம். 1. அணையவன் ; அணையவாந்துணை, அணையவாந்துணை.

2. இசைய வெய்தினர், அசைய. 65

## இராமபிரான் கண்களை விழித்தல்

2703. வண்டென மடந்தையர் மனத்தை வேரொடுங்
கண்டன கொளவருங் கருணை தாமெனக்
கொண்டன கொடுப்பன வரங்கள் கோளிலாப்
புண்டரீ கத்துணை தருமம் பூத்தன.

வண்டு என - (தம்மீது படிந்திருக்கும்) வண்டு எனும்படி, மடந்தையர் மனத்தை வேரொடும் கண்டன-மகளிரின் உள்ளத்தை வேரோடு கொண்டனவும், கொளவரும் - (எல்லா உயிர்களும் முகந்து) கொள்ளும்படி எழுகின்ற, கருணை தாம் என - கருணையே தாம் என்னுமாறு, கொண்டன - (அக் கருணையை நிரம்பக்) கொண்டனவும், வரங்கள் கொடுப்பன-வரங்களை உதவுவனவுமான, கோள் இலா - மாறுபாடில்லாத, புண்டரீகம் துணை - தாமரை மலர் போன்ற விழியிணைகள், தருமம் பூத்தன - தருமம் போன்று மலர்ந்து திகழ்ந்தன.

இராமபிரான் திருக்கண்களைத் திறந்தான் என்பது கருத்து. தாமரை மலரில் வண்டுகள் மொய்ப்பது போன்று பெருமானுடைய திருக்கண்களின் வனப்பில் ஈடுபட்டு மாதர்களின் உள்ளம் முற்றும் படிந்துள்ளன எனப்பட்டது. இங்கே மடந்தையர்களின் கண்கள் வண்டு: பெருமானுடைய விழியிணைகள் தாமரை; இராமபிரானுடைய விழியிணைகள் கருணையும் அறமும் கொண்டு விளங்கின என்க.

பி - ம். 1. வண்டள.

2. கண்டனனிருவரும், கண்டன கெழீஇவரும் ; கருணைந்தாமென.

3. வரத்தைக்.

4. புண்டரிகத்தொடும் ; பூத்தென. 66

## வீடணனை இராமபிரான் கண்டு வினவுதல்

2704. நோக்கினன் கரடிகட் கரசு நோன்புகழ்
ஆக்கிய நிருதனு மழுத கண்ணினர்
தூக்கிய தலையினர் தொழுத கையினர்
ஏக்கமுற் றருகிருந் திரங்கு வார்களை.

அழுத கண்ணினர் - அழுத கண்களை யுடையவரும், தூக்கிய தலையினர் - நிமிர்த்த சிரத்தையுடையவரும், தொழுதகையினர் - தொழும்படியான தகுதியை யுடையவரும், ஏக்கமுற்று - ஏக்கமடைந்து, அருகு இருந்து இரங்குவார்களை - அண்மையில் இருந்து கொண்டு அவலிப்பவரும் ஆன, கரடிகட்கு அரசு - கரடிகளுக்குத் தலைவனான சாம்பனையும், நோன்புகழ் ஆக்கிய நிருதனும்-மிக்க புகழை(த் தன் நற்குண நற்செய்கைகளால்) பெருக்கிக் கொண்டவனான வீடணனையும், நோக்கினன் -(இராமபிரான்) பார்த்தான்.

தொழுத கையினர் எனக் கோடலுமாம். 'தொழுதுயர் கையினன்' (அயோத்தி. கிளைகண்டு. 49) இரங்குவார் களை நோக்கினன் : விற்பூட்டு.

பி - ம். 1. நோன்கழல்,

2. கண்ணினீர்,

4. ஏங்குவார்களை. 67

2705. ஏவிய காரிய மியற்றி யெய்தினை
நோவிலை கொல்லென நோக்கி வீடணன்
தாவரும் பெரும்புகழ்ச் சாம்பன் றன்னையும்
ஆவிவந் தனைகொலென் றருளி னனரோ.

வீடணன் நோக்கி - வீடணனைப் பார்த்து, 'வீடணன்-வீடணா, ஏவிய காரியம் இயற்றி எய்தினை-கட்டளையிடப்பட்ட காரியத்தை முடித்து வந்தாயா? நோவு இலை கொல் - தீதின்றி யுள்ளனையா?' என-எனவும், தா அரு பெரு புகழ் சாம்பன் தன்னையும்-குற்றமற்ற புகழினனான சாம்பனையும் பார்த்து, 'ஆவி வந்தனை கொல்-உயிர் வரப் பெற்றனையா,' என்று-என்றும், அருளினான் - அருள்கொண்டு கேட்டான் (இராமபிரான்). அரோ : ஈற்றசை.

ஏவிய காரியம்: விரைவில் வானரச் சேனைகட்கு உணவு கொண்டு வருமாறு வீடணனை இராமபிரான் ஏவியது. இடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் தன்னினைவற்றுக் கிடந்த இராமபிரான் பிரஞ்ஞையுற்ற நிலையில், வானரர் உணவு என்னாயிற்று என்ற கவலை கொண்டவனாகலின் 'ஏவிய காரியம்' என்றான். நினைவு வந்த அளவில் முதற்கேள்வியாக உணவைப் பற்றிக் கேட்டது கொண்டே, இராமபிரானுடைய பெருங் கருணைத்திறம் உணரலாம். தா : குற்றம். 'தாவில் வேதியன்' (யுத்த. 170).

பி - ம். 1. வந்தனை,
2. வீடணவென்று நோக்கிப்பின்,
3. தாழ்வறும் ; தன்னை நீ. 68

2706. ஐயன்மீர் நமக்குற்ற வழிவி தாதலின்
செய்வகை பிறிதிலா வுயிரிற் றீர்ந்தவர்
உய்கில ரினிச்செயற் குரிய துண்டெனிற்
பொய்யிலீர் புகலுதிர் புலமை யுள்ளத்தீர்.

'ஐயன்மீர் - ஐயன்மார்களே! பிறிது செய்வகை இலா - மாறாக (அதாவது பிழைப்பிக்கத்தக்க) செயல் ஒன்றுமின்றி, உயிரில் தீர்ந்தவர் - உயிர் பிரியப் பெற்றவர், உய்கிலர் - பிழைத்திலர் நமக்கு உற்ற அழிவு இது ஆதலின் - நமக்கு நேர்ந்த அழிவு இஃதாதலின், இனி-இப்போது, செயற்கு உரியது உண்டு எனில்-புரிதற்குரிய செயல் (யாதேனும்) உண்டாயின், புலமை உள்ளத்தீர்-அறிவு மிக்க மனத்தை உடையவரே! பொய்யிலீர் - பொய் சிறிதும் இல்லாதவர்களே! புகலுதிர் - சொல்லுவீர்களாக.

பிறிது செய்வகை இலா என்று மொழி மாற்றப்பட்டது. பிறிது செய்தல்: இறந்து பட்டவரைப் பிழைப்பிக்கும் செயலை ஆற்ற முயலுதல். புலமை கொண்டு புனைந்துரைத்தலும் இயலு மாகலின் பொய்யிலீர் என விளித்தான்.

பி - ம். 1. நங்குலத்து. நாமுற,

2. செய்கையோர், செய்கையோ; பிறிதிய, பிறிதிலார், பிறிதிலம்,

3. செயல்,

4. புகலுவீர், புகலுநீர். 69

## இராமபிரான் பலவாறு வருந்துதல்

2707. சீதையென் றொருத்தியா லுள்ளந் தேம்பிய
பேதையேன் சிறுமையா லுற்ற பெற்றியை
யாதென வுணர்த்துகே னுலகொ டிவ்வுருக்
காதைவன் பழியொடுந் திருத்திக் காட்டினேன்.

'சீதை என்ற ஒருத்தியால்-சீதை என்ற ஒருத்தி காரணமாக, உள்ளம் தேம்பிய - மனம் உழன்ற, பேதையேன் - அறிவிலியாகிய யான், சிறுமையால் - கீழ்மைப்பட்ட அறிவினால், உற்ற பெற்றியை- அடைந்த தன்மையை, யாது என உணர்த்துகேன் - என்ன வென்று பகர்வேன்; இவ் உலகொடு உரு - இவ்வுலகோடும் பொருந்தாத, காதை -(இந்த என்) வாழ்க்கைக் கதையை, வன் பழி யொடும் திருத்தி காட்டினேன்-கொடிய பழியொடும் பொருந்து மாறு செய்து காண்பித்தேன்.

சீதை யென்றொருத்தியால் உள்ளம் தேம்பிய பேதையேன்; 'தையல் சொற் கேளேல்' என்ற ஔவை கூற்றும்; 'ஸ்திரீ புத்தி பிரளயாந்தகா' என்ற வடமொழிப் பழமொழியும இருக்கவும் தையல் சொற்கேட்டுத் தளர்ந்ததாகக் கூறினன் இராமபிரான். மற்றும் இராமபிரான் மகளிரைக் குறை கூறிய இடங்களும் உண்டு. 'பெண்மேல் வைத்த காதலினிப் பேறுகள் பெற்றேன்' (யுத்த. 2586); 'மங்கையர் திறத்தா லெய்தும் மாந்தர்க்கு மரணமென்றல், சங்கையின் றுணர்தி வாலிசெய்கையால் சாலுமினனும் அங்கவர் திறத்தினாலே அல்லலும் பழியுமாதல், எங்களிற் காண்டி'

(கிட்கிந்தா. 411); (ஒப்பு) 'செறிதருதன் மனப்படியே செய்த லொருவர்க்கினிதாம், அறிவுறுக்கும் குருமொழிகேட் டாக் கலஃதினுஞ் சிறப்பாம், முறிதரு மேதிலர் சொற்கேட்டுஞற்றல் முனிதுயர் மனையாள், வறியவுரை கேட்டு ஞற்றன் மண்ணிறனோர் கெடுதியுறும்' (குசேலா. 1:191) சிறுமை; அறிவுச் சிறுமை, காதை வன்பழியொடும் திருத்தி; (ஒப்பு) 'காதையென் புகழினோடும் நிலை பெற' (யுத்த. இந்திர. 9).

பி - ம். 1. நீர்விலாப்,

2. பேதையன்; பெற்றிமை, பேதைமை,

3. உலகொடீர்வுருக், உலகொடீவுருர்,

4. காதனைன் வழியொடு நிறுந்தி, காதை வன்பழியொடு நிறுத்தி. 70

2708. மாயையின் மானென வெம்பி வாய்மையால்
தூயன வுறுதிகள் சொன்ன சொற்கொளேன்
போயினன் பெண்ணுரை மருது போனதால்
ஆயதிப் பழியுடை யானி யன்பினீர்.

'அன்பினீர் - அன்புடையீர்! 'மாயையின் மான் - (இது) மாய மான்', என - என்று, எம்பி - என் தம்பி, வாய்மையால் - உண்மையாக, தூயன உறுதிகள் சொன்ன சொல் கொளேன் - தூய்மை பெற்றனவாய உறுதிகளை மொழிந்த சொற்களை ஏற்றுக் கொள்ளாதவனாய், போயினன் - அந்த மானைப் பிடிக்கச் சென்றேன், பெண் உரை மருது - பெண்ணின் சொல்லை மறுக்காமல், போனதால் - சென்றதனால், இ பழி உடை ஆனி ஆயது - இந்தப் பழியுடன் இயைந்த தீங்கு நேர்ந்தது.

முதலிரண்டடிகட்கு: 'வேண்டும் மெனலாம் விழை வன்றிது' 'மாயம் மெனலன்றி மனக் கொளவே, எயும் மிறை யையுற வென்றனன்' (ஆரணிய. 775, 776); 'காரியமென்னை யீண்டுக் கண்டது கனகமானேல்.........மீள்வதே மேன்மை யென்றான்' (ஆரணிய. 784); 'தெளிவுடைத் தம்பி செப்பும், வெய்யவல்லரக்கர் வஞ்சம் விரும்பினார் வினையிற் செய்த, கைதவ மானென் றண்ணல் காணுதி கடையி னென்றான்' (ஆரணிய. 786); 'பொன்னின்ற வயிரத் தோளாய் புகழுடைத்தாமன் றென்றான்' (ஆரணிய. 788):

'அடுத்தவு மெண்ணிச் செய்த லண்ணலே யமைதி யன்றோ' (ஆரணிய. 720); 'முன்னமுமானாய் வந்த மூவரில் ஒருவன் போனான், அன்னமாரீசனென்றே யயிர்த்தன னிதனை ஐயா' (ஆரணிய. 793) என்றன காண்க. ஆனி: தீங்கு என்று பொருள்படும். ஹானி என்ற வடசொல் ஆனி என வந்தது; 'பிள்ளை மேனிக்கோ ரானி வந்திலது' (யுத்த. 213).

பி - ம். 1. மர்மையயிம்; வாய்மையாள்,

2. தூய்மையினுணர்ந்தினன் உணர்ந்த, உளர்த்தின றுணர்ந்த, தூயன வுறுதிதான் சொற்களேனெனப்,

3. போகலால்,

4. மரணம். 71

2709. கண்டன னிராவணன் றன்னைக் கண்களால்
மண்டமர் புரிந்தனன் வலியி னுருயிர்
கொண்டில னுறவெலாங் கொடுத்து மாளநான்
பண்டுடைத் தீவினை பயந்த பண்பினால்.

'இராவணன் தன்னை கண்களால் கண்டனன் - இராவணனை நேரிற் பார்த்தேன்; வலியின் - திறலோடு, மண்டமர் புரிந்தனன் - நெருங்கிய போரினைச் செய்தேன் (ஆயினும்), நான் பண்டு உடை தீவினை பயந்த பண்பினால் - நான் முன் பிறவிகளில் செய்துள்ள தீவினை விளைத்த பான்மையால், உறவு எலாம் மாள - நான் உறவினர்கள் அனைவரும் இறந்துபடுமாறு, கொடுத்தும் - பறி கொடுத்து, வலியின் - என் வன்மையால், ஆருயிர் கொண்டிலன் - அவ்விராவணனுடைய அருமையான உயிரைக் கொள்ளாதவனாயினன்.

முதலடிக்கு, (ஒப்பு): கண்டனன் கற்பினுக்கணியைக் கண்களால்: மண்டுதல் மிக்குச் செல்லுதல். வலியின் என்ற சொல் இடைநிலைவிளக்காக வினைகளைப் புரிந்தனன் என்ற வினையுடனும், கொண்டிலன் என்ற வினையுடனும் இயைந்தது. 'உறவெலாம் மாளக்கொடுத்து' என்க. 'தந்தைதாய் தமர்தார மகவென்றவிவை யெலாம் சந்தையிற் கூட்டம்' (தாயு. தேசோ. 3) 'உறவுமுறை

கதறியழ, (திருப்புகழ்); தீவினை பயந்து; விதியின் பிழைநீ யிதற் கென்னை வெகுண்ட தென்றான்; 'விதியை யார் தீர்க்ககிற்பார் (யுத்த. 1375); 'விதியின் வெம்மையால்' (யுத்த. 2710). பண்டுடைத் தீவினை; 'ஊழ்வினை யுருத்து வந்தூட்டு மென்பதும்' (சிலப். பாயி.); 'பல்லா வுளுய்த்து விடினும் குழக்கன்று வல்லதாம் தாய்நாடிக் கோடலை, தொல்லைப் - பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு' (நாலடி. 101) எனவருவன காண்க.

பி - ம். 2. புரிந்திலன்; வலியினுலுயிர்.
3. உயிரெலசம்; மீள. 72

2710 தேவர்தம் படைக்கலந் தொடுத்துத் தீயவன்
சாவது காண்டுமென் றிளவல் சாற்றவும்
ஆவதை யிசைந்தில னழிவ தென்வயின்
மேவுத லுறுவதோர் விதியின் வெம்மையால்.

'இளவல் (என்) தம்பி, தேவர் தம் படைகலம் - பிரம தேவருடைய படைக்கலத்தை, தொடுத்து - விடுத்து, தீயவன் சாவது காண்டும் - கொடியவனான மேகநாதன் மரிப்பதைக் காண்போம்', என்று - என்று, சாற்றவும் - சொல்லிய காலத்தும் அழிவது என் வயின் மேவுதல் உறுவது ஓர் விதியின் வெம்மையால் - அழிய வேண்டிய காலம் என்னிடம் பொருந்துவ தான ஒப்பற்ற விதியின் கொடுமையால், ஆவதை இசைந்திலன் - பொருந்துவதான அச் செயலை ஏற்றுக் கொண்டேனில்லை.

தேவர் தம் படைக்கலம்: 'தேவர் தம் படைகள் செப்ப; தீயவன்: இந்திரசித்து. இளவல் சாற்றியது; 'அயன் படை தொடுப்ப னென்றிசைத்தது' (யுத்த. 2454). இராமபிரான் இசைந் திலன்; 'அறவனீ முனிந்தால், ஈன்ற அந்தணன் படைக்கலந் தொடுக்க விவ்வுலகம், மூன்றையும் சுடும், ஒருவனால் முடிகல தென்றான்' (யுத்த. 2455) என்றது காண்க. காண்டும் விகுதி எதிர்காலம் காட்டிற்று. 'டவ்வொடு கழிவு' (நன். பத. 18)ல், ஈங்கே என்ற மிகையாய் காண்டும் என 'டும்' விகுதி எதிர்காலம்

காட்டிற்று. இங்கும் விதியின் கொடுமை இராமபிரானைற் குறிக்கப் பெற்றமை காண்க; (அடுத்த செய்யுளும் காண்க). அழிவதென் வயின் மேவுதல்: விநாசகால விபரீத புத்தி என்பர்.

பி - ம். 2. காண்மினென்று. காண்டியென்று, சாற்றலும்.

3. ஆவகை; அறிந்திலன், உணர்ந்திலேன்; நவையினின்றமர், அழிவி தென்வயின்,

4. வென்றியால். 73

2711. நின்றில னுடனெறி படைக்கு நீதியால்
ஒன்றிய பூசனை யியற்ற வுன்னினேன்
பொன்றினர் தமரெலா மிளவல் போயினன்
வென்றில னரக்கனை விதியின் வெம்மையால்.

'நின்றிலன் - (போர்க்களத்துத்) தம்பியுடன நிற்காதவனும்; எறி படைக்கு - வீசுகின்ற போர்க் கருவிக்கு, நீதியால் - முறைப்படி, ஒன்றிய - பொருந்திய, பூசனை இயற்ற உன்னினேன் - பூசையைச் செய்யக் கருதினேன்; விதியின் வெம்மையால் - தீவினையின் கொடுமையால், தமர் எலாம் பொன்றினர் - (எம்) உறவினர் அனைவரும் மரித்தனர்; இளவல் - என் தம்பி, அரக்கனை வென்றிலன் போயினன் - இராக்கதனை வெல்லாதவனாய் உயிர் நீத்தான்.

பி - ம். 1. உடனெறு, நெடுங்.

3. பூசனையமைக்க.

4. வென்றிலேன்; அரக்கரை; வினையின்; மேன்மையால். 74

2712 ஈண்டிவ ணிருந்திவை யியம்பு மேழைமை
வேண்டுவ தன்றினி யமரின் வீடிய
ஆண்டகை யன்பரை யமரர் நாட்டிடைக்
காண்டலே நலம்பிற கண்ட தில்லையால்.

'ஈண்டு - இப்போது, இவண் இருந்து - இங்கே இருந்து, இவை - இத்தகையசொற்களை, இயம்பும் ஏழைமை - மொழிகின்ற அறிவின்மை, வேண்டுவது அன்று - விரும்பத்தக்கதன்று; இனி - இனி, அமரின் வீடிய - போரில் உயிர்நீத்த, ஆண் தகை அன்பரை -

ஆண்மைக்குணமுடைய அன்பரை, அமரர் நாடு இடை காண்டலே நலம் - விண்ணுலகத்தில் காண்பதுவே நன்மை பயப்பது, பிற கண்டது இல்லை - அவர்களை இவ்வுலகிற் காண வேறுவழி காணக் கூடவில்லை. ஆல் : அசை.

அமரர் நாட்டிடைக் காண்டல் - இறத்தல். பிறிதினவியப்சியணி.

பி - ம். 1. ஈண்டிருந்தவை,
2. வேண்டுவதின்றவை,
4. நலமினிக். 75

2713. எம்பியைத் துணைவரை யிழந்தப் பாலினி
வெம்புபோ ரரக்கரை முருக்கி வேரறுத்
தம்பினி னிராவண னுவி பாழ்படுத்
தும்பருக் குதவிமே லுறுவ தென்னரோ.

'எம்பியை - என் தம்பியையும், துணைவரை - நண்பரையும், இழந்து - இழந்துவிட்டு, அப்பால் - அதன் பின்னர், இனி - இனி மேல், வெம்பு அரக்கரை - (மனம்) கொதிக்கச் செய்கின்ற இராக்கதரை, போர் - சமரில், முருக்கி - அழித்து, வேர் அறுத்து - (அவர்களை) அடியோடு தொலைத்துவிட்டு, அம்பினில்-எனது வாளியால், இராவணன் ஆவி பாழ்படுத்து - இராவணன் உயிரையும் அழித்து, உம்பருக்கு உதவி - அமரர்க்கு உதவி புரிந்திட்டு, மேல் உறுவது என் - பின்னர் (யான்) பெறப் போவது என்ன? அரோ : அசை.

என் தம்பியும் தமரும் இறந்துபட்ட நிலையில் தேவர் பொருட்டு அரக்கரை எதிர்த்து அழிப்பது பயனை விளைக்காது என்றான் இராமபிரான்.

பி - ம். 1. இழந்துயானினி, இழந்த நானினி,
4. உறுதனன்றரோ. 76

2714. இளையவ னிறந்தபின் னெவரு மென்னெனக்
களவறு சீர்த்தியென் னறனென் னுண்மையென்
கிளையுறு சுற்றமென் னரசென் கேண்மையென்
விளைவுதா னென்மறை விதியென் மெய்ம்மையென்.

'இளையவன் இறந்த பின் - இலக்குவன் உயிர் நீத்த பின்னர், எனக்கு எவரும் என் - எனக்கு யாவராயிருந்தால் என்ன? அளவு அறு கீர்த்தி என் - கணக்கற்ற புகழால்தான் என்ன? அறன் என் - அறத்தால்தான் என்ன? ஆண்மை என் - ஆண்மை இருந்தால்தான் என்ன? கிளை உறு சுற்றம் என் - மரக்கிளைபோல தழுவும் தன்மையுள்ள உறவினரால்தான் என்ன? கேண்மை என் - நண்பினரால்தான் என்ன? அரசு என் - அரசினால்தான் என்ன? விளைவுதான் என் - வேறு நல்ல விளைவுகளால்தான் என்ன; நான் மறை விதியென் - வேத ஒழுக்கத்தால்தான் என்ன? மெய்ம்மை என் - சத்தியத்தினால்தான் என்ன?

மேலே சொன்ன அனைத்திலும் தம்பியே உயர்ந்தவனும் வேண்டப்படுபவனும் என்பது கருத்து.

பி - ம். 1. ஏவம், எவ்வம்,
2. அளவுறு ; அறிவென், தவமென்,
3. அறமென், அரக்கன ; கேள்வி,
4. மென்மை ; வேள்வி. 77

2715. இரக்கமும் பாழ்பட வெம்பி யீறுகண்
டரக்கரை வென்றுநின் றுண்மை யாள்வெனேல்
மரக்கண்வன் கள்வனேன் வஞ்ச னேனினிக்
கரக்கும தல்லதோர் கடனுண் டாகுமோ.

'இரக்கமும் பாழ்பட - தயை என்கின்ற பண்பும் வீணாகும்படி, எம்பி ஈறு கண்டு - என் தம்பியின் 'இறுதி கண்டபின், அரக்கரை வென்று நின்று - இராக்கதரை வெற்றி கொண்டு நின்று, ஆண்மை ஆள்வெனேல் - வீரத்தை மேற்கொள்வேனேயானால், மரம் கண் - மரப்பாவையின் (கண் போன்ற) கண்களைப் பெற்ற, வல் கள்வனேன் - வலிய திருடனும், வஞ்சனேன் - வஞ்சகனுமாவேன்; (ஆதலால்), இனி - இனிமேல், கரக்குமதல்லது - உயிரைப் போக்குவதல்லது, ஓர் - ஒரு, கடன் உண்டாகுமோ - ஒரு செய்ய வேண்டிய செயல் நிகழுமோ? ஓ : எதிர்மறை.

மரக்கண் : 'மரக்கண்ணோ மண்ணுள்வார் கண்ணென்றிரக் கண்டாய்' (முத்தொள். 101) காக்குவது : உயிரை மறையச் செய்வது அதாவது உயிரை விடுவது.

பா - ம். 2. அரக்கரை முருக்கி ; ஆள்வனே,
3. கள்வனே,
4. கரக்குவது. 78

2716 தாதையை யிழந்தபின் சடாயு•விற்றபின்
காதலின் றுணைவரு முடியக் காத்துழல்
கோதறு தம்பியும் விளியக் கோளிலன்
சீதையை யுவந்துளா னென்பர் சீரியோர்.

'தாதையை இழந்தபின் - தந்தையாகிய தயரதப் பேரரசனை இழந்த பின்னும், சடாயு இற்ற பின் - தந்தை முறையினனான சடாயுமரித்த பின்னும், காதலின் துணைவரும் முடிய - அன்புடைய நண்பரெல்லாம் உயிர் நீங்கப் பெறவும், காத்து உழல் - (இரவு பகலாகக்) என்னைப் பாதுகாத்து வருத்தமுற்ற, கோது அறு தம்பியும் - குற்றம் நீங்கிய தம்பியான இலக்குவனும், விளிய - இறந்துபடவும், சீதையை உவந்துளான் - சீதையினிடம் பற்று வைத்துள்ளான்; கோள் இலன் - நல்ல எண்ணமற்றவன்; என்பர் சீரியோர் - என்று சிறந்த அறிஞர் என்னைப் பழித்துரையாடுவர்.

தாதை : தந்தையான தயரதன், சடாயு : தாதை முறையினின்ற கழுகரசன். காதலின் துணைவர் ; சுக்கிரீவன் அங்கதன் முதலியோர். காத்து உழல் கோதறு தம்பி : இலக்குவன். 'வீரனும் விரித்த நாணல், மாலைவாய்ப்பாரின் பாயல் வைகினன் வரிவிலேந்திக், காலைவா யளவுந் தம்பி யிமைப்பிலன் காத்து நின்றான்' (அயோத்தி. கங்கைப். 48); 'வில்லையூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்,...... .....கண்கணீர் சொரியக் க்ங்குல்' எல்லைகாண்பளவும் நின்றான்' (அயோத்தி. குகப். 422); ஆரணியம் 1106-ம் காண்க. கோதறு : குற்றமற்ற ; 'கோதறு புகழின் யாக்கை' (விநாயக. அரசியற். 41); கோள் : பெருமையுமாம். இறுதியடியிலிருந்து பெரியோர் புகழ்மொழி பழமொழிகளைக் கருதி நோக்குபவன் இராமபிரான் என்பது புலப்படும். இங்கு, இராம

பிரான் உலக வதந்தியைச் செவிக்கொண்டு, பிராட்டியை வனத்திற் கனுப்பியது காண்க. "தீயவாளரக்கன் சிறையிடைருந்து செந் நெறித் தீயிடை மூழ்கி, ஏயுமாதவர்க்கு மிமையவராஞே ரியாவர்க்கு மென்மனத்துக்கும், தூயளாயிருந்தாளாயினும உலகோர் சொல் லுறு பெரும்பழிதனைக்கேட். டோயுமெனுள்ளம்' (உத்தர. சீதை வனம். 37) காண்க.

பி - ம். 1. இழந்து,

2. காதலென்; படியக்; மடியக்,

3. பிரியக்; கோதிலன், கோளிறன்,

4. உகந்துளோன். 79

2717. வென்றன னரக்கரை வேரும் வீய்ந்தறக்
கொன்றன னயோத்தியைக் குறுகினேன் குணத்
தின்றுணைத் தம்பியை யின்றி யானுளேன்
நன்றர சாளுமா சால நன்றரோ.

'வென்றனன் - (போரில்) வெற்றிகொண்டு, அரக்கரை வேரு வீய்ந்து அற - இராக்கதரை வேரும் அற்றுப் போகுமாறு, கொன் றனன் - கொன்று, அயோத்தியை குறுகினேன் - அயோத்தி நகரத்தை யடைந்து, குணத்து - நற் பண்புகள் நிறைந்த, இன் துணை தம்பியை - இனிய துணைவனான தம்பியை, இன்றி - துறந்தே, யான் உளேன் - யான் (மட்டும்) உயிர் வாழ்வதனால், அரசு ஆளுமா நன்று - அரசு புரிவது நன்று; சால நன்று - மிகவும் அழகியது. அரோ: ஈற்றசை.

வென்றனன் கொன்றனன் குறுகினேன்: இவை முற்றெச்சங் கள். நன்று நன்று: பிற குறிப்பு; பழி விளைப்பது என்பது பொருள். ஆளுமாறு: என்பது ஈறு குறைந்து ஆளுமா என நின்றது.

பி - ம். 1. அரக்கனை; வெருவி,

3. எம்பியை,

4. ஆளுமவ்வரசு, 80

## இறப்பதே தகுதியென்று இராமபிரான் சொல்லச் சாம்பன் கூறுதல்

2718. படியின தாதலி னியாதும் பார்க்கிலன்
முடிகுவ னுடனென முடுக்கிக் கூறலும்
அடியிணை வணங்கியச் சாம்ப னுழியாய்
நொடிகுவ துளதென நுவல்வ தாயினன்.

'படியினது ஆதலின் - (என்) நிலைமை இவ்வாறிருத்தலின், யாதும் பார்க்கிலன் - முன் பின் எதையும் ஆய்ந்து பாராதவனாய், 'உடன் முடிகுவன் - உடனே இறப்பேன்', என - என்று, முடுக்கி கூறலும் - விரைந்து சொன்ன அளவில், அ சாம்பன் - அந்தச் சாம்பன், அடி இணை வணங்கி (அப் பெருமானது) உபய பாதங்களில் வணக்கம் செலுத்தி, 'ஆழியாய் : சக்கரப் படை யேந்திய வனே! நொடிகுவது உளது - கூற வேண்டுவது (ஒன்று) உண்டு', என - என்று, நுவல்வது ஆயினன் - மொழியலாயினன்.

இராமபிரான் இறப்பதற்குத் துணிந்த இடம் இக் காப்பியத்தில் பிறவும் உண்டு. 'மறப்பால் வடிவாள் கொடு மன்னுயிரைத், துறப்பானுறுகின்ற தொடர்ச்சியின் வாய்' (ஆரணிய. *1106*) என்றது காண்க. அச் சாம்பன் : பண்டறி சுட்டு; பிரசித்தி பற்றி வந்தது. நொடிதல் : சொல்லுதல் ; 'துணங்கையஞ் செல்விக் கணங்கு நொடித் தாங்கு (பெரும்பாண். *459*) ; 'பெருங் காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு' (கலித். *89*).

பி - ம். 1. படியின்மேற் காதலின், படியிணைக் காத்தலோ, படியினதாகலின்,
2. முடிகுவன் யானென ; முடியக் ; வணங்கிய. 81

## சாம்பன் இராமபிரானைத் துதித்து 'அநுமன் கொணரும் சஞ்சீவி மலையினால் யாவரும் உய்வர்' எனல்

2719. உன்னைநீ யுணர்கிலை யடிய னேனுனை
முன்னமே யுணர்குவன் மொழித ரீதது
என்னெனி லிமையவ ரெண்ணுக் கீனமாம்
பின்னரே தெரிகுதி தெரிவில் பெற்றியாய்.

தெரிவில் பெற்றியாய் - (எவராலும்) அறிந்துகொள்ள முடியாத தன்மையனே! உன்னை நீ உணர்கிலை - உன்னை நீ அறியாதவன் போன்றுள்ளாய், அடியனேன் - அடியேன், உனை முன்னமே உணர்குவன் - உன்னை முன்னரே அறிவேன், அது மொழிதல் தீது - (அதனை) ப் புகலுதல் நன்றன்று; என் எனின் - ஏனென்றால், இமையவர் எண்ணுக்கு ஈனம் ஆம் - வானவருடைய எண்ணத்துக்குக் குறைவாம்; பின்னரே தெரிகுதி-(உன் தன்மையை நீ) பின்பே அறிகுவாய்.

மன வாசகம் கடந்தவனாதலின் 'தெரிவில் பெற்றியாய்' என்றான. உன்னை நீ உணர்கிலை: 'உன்னை நீ தானும் உணராதாய்' (வில்லி. பா. கிருட்டிணன் 36); 'தன் பெருமை தானுணராத் தன்மையன்' 'அடியனேன் உனை முன்னமே யுணர்குவன்' இச் சாம்பன் பழமையும் பெருமையும் யுத். மூலபல. 50 - 51 ல் காண்க. இராமபிரானுடைய பூர்வ வரலாறுகள் அனைத்தும் தனக்குத் தெரிந்தனவேனும், அவை அவதார ரகசியத்தின்பாற் படுமாதலின் தேவர்கள் அறிதல் நன்றன்று என்று கூறிப் பின்னர் உரிய காலத்து அனைத்தும் தெளிவாகும் என்றான் சாம்பன். இங்கு, 'பறவையின் குலங்கள் காக்கும் பாவகன் பழைய நினனே, டுறவுள தன்மை யெல்லாம் உணர்த்துவெனரக்கரோடம், மறவினை முடித்த பின்னர் வருவனின் னுழையன்' (யுத். 2206) என்று கருடபகவான் கூறுதல் குறிக்கொள்ளத் தகும். இராமபிரானே 'மாநுஷம் மன்யேராகவம் தசரதாத்மஜம்' என்று கூறியிருப்பது காண்க.

பி - ம், 2. அறிகுவேன்; நீநிது,

3. என்னினி; எண்ணக்கு; ஈனமால்,

4. தெரிகுதும்; தெரியும். 82

2720. அம்புயத் தவன்படை யாத றேறினன்
உம்பியை யுலப்பரு முருவை யூன்றிட
வெம்புவெங் களத்திடை விழுத்த வென்றியான்
எம்பெருந் தலைவவீ தெண்ண முண்மையான்.

'எம் பெரும் தலைவ - எம்முடைய பெருமை மிக்க தலைவனே! வெம்பு வெம் களத்து இடை - வயவர்கள் மனம் புழுங்குகின்ற

கொடிய அமர்க் களத்திலே, உம்பியை - உன் தம்பியையும், உலப்பு அரு - அழித்தற்கு முடியாத, உருவை - வாநரர் உடலிலே, ஊன்றிட - நன்கு பதிந்து, விழுத்த - உயிரைப் போக்கிய, வென்றியான் - வெற்றியைப் படைத்துள்ளமையின், அப்புயத்தவன் படை ஆதல் தேறினன் - (எதிரி ஏவியது), பிரமதேவன் அத்திரம் என்பதைத் தெளிந்தேன்; ஈது: இந்தக் கருத்து, உண்மை - சத்தியமானதே. ஆல்: அசை.

உலப்பு: அழிவு; "தோளாற்றற் குலப்போவில்லை' (யுத்த. இராவணன் வதை. 243).

பி - ம். 1. தேறிமுன்,

2. தம்பியை; அவற்றிலே தைத்த, வலத்தை யோய்த்தது; வலத்தை யொத்தது,

3. வெம்போர்லகளத்திடை; மேவும், வீழ்த்த, விழுந்த,

4. எம்பதி; தலைவரின் மேலும்; மெய்ம்மையால், எய்தலால். 83

2721. அன்னவன் படைக்கல மமரர் தானவர்
தன்னையும் விடினுயிர் குடிக்குந் தற்பர
உன்னையொன் றிழைத்தில தொழிந்து நீங்கியது
இன்னமு முவமையொன் றெண்ண வேண்டுமோ.

'அன்னவன் படைக்கலம் - அந்தப் பிரமதேவனுடைய வாளி, விடின் - ஏவப் பெறுமாயின், அமரர் தானவர் தன்னையும் - தேவர் அசுரர் என்பவர்களையும், உயிர் குடிக்கும - உயிர் போக்கிநிற்கும்; தற்பர - எல்லாப் பொருளிலும் மிக்கோனே! உன்னை ஒன்று இழைத்திலது - (அது) உனக்கு எவ்விதமான தீங்கும் புரியாமல், ஒழிந்து நீங்கியது - விடுத்து அகன்றது; இன்னமும் உவமை ஒன்று எண்ண வேண்டுமோ - இதைக்காட்டிலும் இந்தப் படைக்கு வேறு உவமை கருதற்குரியதோ? கருத வேண்டுமோ? ஓ: எதிர்மறை.

தானவர்: 'கலங்குமாலினுந்தானவர் தேவியர் கருப்பம்' (யுத்த. 512) உயிர் குடித்தல்; 'உலக்க வின்னுயிர் குடித்தொல்லை மீள்குவென்' (கிட்கிந்தா. 249); உயிர் குடித்தல் - மரபுவழு.

'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மரபே' (தொல். பொருளி. 19) என்றமை காண்க. மூன்று மடிக்கு; (ஒப்பு) 'நிலஞ் செய்து விசும்பும் செய்து நெடியமால் படை நின்றானை, வலஞ் செய்து போவ தானால் மற்றினி வலிய துண்டோ' (யுத்த. இந்திரசித்து. 4); உவமை; உன்னை ஒன்றும் செய்யாமை கொண்டே இந்தப் பிரமன் படை தன்னிகரற்ற தென்று தெளியலாமே என்பது கருத்து. இழைத்தல் - செய்தல்; 'அன்பிழைத்த' (ஆரணிய. 333) அமரர் தானவர் தன்னையும்: பன்மையில் ஒருமை வந்தது; ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும், ஓரிடம் பிறவிடம் தழுவலு முளவே' (நன். பொது. 29).

பி - ம். 1. அமலகல்லது, மாறென்றன்னது.

2. தன்னையேவிடுள்; தவிர்க்குந்; சாய்விலாது, தாழ்க்கிலாது, சர்ா நலால்,

3. இழைக்கிலது; ஒளிந்து நீங்கியது. ஒழிந்து விங்கியது; உளவை, உவகை; எண்ணில். 84

2722 பெருந்திற லனுமனீண் டுணர்வு பெற்றுத்தான்
அருந்துயர் முடிக்குறு மளவி லாற்றலான்
மருந்திறைப் பொழுதினிற் கொணர்கு வாயெனப்
பொருந்தினன் வடதிசைக் கடிது போயினான்.

'பெரு திறல் அநுமன் - பெருவன்மை படைத்த மாருதி, ஈண்டு - இப்போது, உணர்வு பெற்று - தன்னினைவு எய்தப் பெற்று; அருதுயர் - நீக்குதற்குரிய துன்பத்தை, முடிக்குறும் - தீர்த்து வைக்கக் கூடிய, அளவு இல் ஆற்றலான் - எல்லை காண முடியாத திறமை வாய்ந்தவனை, யான் - நான், 'மருந்து - இறந்தாரைப் பிழைப்பிக்கும் மருந்தை, இறை பொழுதினில்-நொடிப் பொழுதினில், கொணர்குவாய் - கொண்டு வருவாயாக', என - என்று பா, பொருந்தினன் - கொணர்தற்கு மனம் இயைந்தவனாய், தான் - அவன், வடதிசை கடிது போயினன் - வடக்குத் திக்கைக் குறித்துவிரைந்து சென்றான்.

பெருந்திறல் அநுமன்: 'பற்றினான் தாதை யொப்பான்' (சுந்தர. 739); 'வீரருள் வீரன்' (சுந்தர. 919); அருந்துயர்:

அருமை; பொறுத்தற்கு அல்லது போக்கற்கருமை. பொருந் தினன் : மனமிசைந்தான். பெற : செய என்னும் வாய்பாடு.

பி - ம். 1. பெற்றுத்தன், பெற்றுளான்,

2. அருந்துயரளவிலா தாற்றுவானை ; அளவிறலாற்றுவான்றனை,

3. கொணரும் வாய்மொழி. 85

2723. பனிவரை கடந்தனன் பருப்ப தங்களின்
தனியர சின்புறந் தவிரச் சார்ந்துளன்
இனியொரு கணத்தின்வந் தெய்து மீண்டுறுந்
துனிவரு துன்பநீ துறத்தி தொல்லையோய்.

'பனிவரை கடந்தனன் - இமய கிரியைத் தாண்டி, பருப்பதங் களின் தனி அரசின்புறம் தவிர - மலைகட்கு ஒப்பற்ற அரசனான மேரு மலையின் பக்கமும் பிற்பட, சார்ந்துளன் - அப்பாற் சென்றடைந்தவனான அநுமன், ஈண்டு ஒரு கணத்தின் வந்து எய்தும் - இனி இங்கு ஒரு கணப்பொழுதிற்குள் வந்து சேர்வான்; தொல்லையோய் - பழமையானவனே! உறும் துனிவரு துன்பம் நீ துறத்தி - மிக மனம் கலங்குதற்குக் காரணமான துயரத்தை விடுவாயாக'.

பனிவரை : இமயம் ; இமம் : பனி ; 'பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும்' (பால. கையடைப். 7); 'பனிவரை யிரதமவிந்தன' (யுத்த. மூலபல. 216) ; பருப்பதம் : பர்வதம் என்ற வட சொல்லின் திரிபு. 'பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை. 22) ; 'படையுறு பிணத்தின் பம்மற் பருப்பதந் துவன்றி' (யுத்த. 2155) ; ஒரு கணத்தின் ஈண்டு வந்தெய்தும் என்க. உறு : மிக்க, உரிச்சொல். உறும் துனி - மிக்க துன்பம். தொல்லையோய் ; (ஒப்பு) 'முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே' (திருவாச. திருவெம். 9) 'ஊழி முதலாயகன்' (யுத்த. 689).

பி - ம். 2. தனியரசி தன் புறந்தவிர்ந்து, தனிவரை சிறப்பவுந்தவிர்க்கச்,

3. மீண்டவன்,

4. துடைத்தி ; நேமியாய். 86

2724. யானலா லெந்தையா யுலகை யீன்றுளான்
தானலாற் சிவனலா னேமி தாங்கிய
கோனலா லியாவரு முணருங் கோளிலர்
வேனிலான் மேனியா மருந்தை மெய்யுற.

வேனிலான் மேனியா - வசந்த காலத்திறைவனான மன்மதன் போன்ற பேரழகு வாய்ந்தவனே! யான் அலால் - யானல்லாமலும், எந்தையாய் - என் தந்தையாகி, உலகை ஈன்றுளான் தான் அலால் - உலகைப் படைத்த பிரமதேவன் அல்லாமலும், சிவன் அலால் - சிவபிரானல்லாமலும், நேமி தாங்கியகோன் அலால் - ஆழிப்படை யேந்திய தலைவனாகிய திருமால் அல்லாமலும், யாவரும் - எவரும், மருந்தை மெய்உற உணரும் கோள் இலர் - மருந்தினை உள்ளது உள்ளவாறு அறியும் அறிவற்றவராவர்.

எந்தை : என் தந்தை என்பதன் மரூஉ. வேனிலான் : வசந்தன் எனப்படும் மன்மதன். 'மாரருளரே யிருவர் ஒருயிரின் வாழ்வார்' (ஆரணிய. 608); 'மன்மதனை யொப்பர்' (ஆரணிய 605); 'வாராக வாமனனே யரங்கா வட்டநேமி வலவாராகவா வுன்வடிவு கண்டால் மன்மதனு மடவராக வாதரஞ் செய்வன்' (திருவரங்கத். 60); (திருவேங்கட. அந்தாதி.) 'சாட்சாத் மன்மத மன்மதகா' என்பன காண்க. வேனிலா னிவனென விளங்கு காலையில்' (வி. பா. குருகுலச். 34); 'வேனிலா னனையவன் பகழி வெம்மையால்' (யுத்த. 2423); இங்கு இச்சொல் இலக்குவற்குவந்தது; 'வேனிலான் மெலமுந்துமால்' (மதுரைக். 100); 'வேனிலான் வருநெறி வெண்முள் வித்தினர்' (சீவக. 2635); பரத்தையர் சேரியை 'வேனிலான் விழைந்த சேரி' (சீவக. 111) என்றமையும் காண்க. மேனியா : மேனியனே ; விளி.

பி - ம். 1. எந்தையாய் ; உலகம் ; ஈன்றவன்,
2. தாங்கும்,
3. எனையரும், எனைவரும் ; கோளிலரர்களால்,
4. மேனியாய், மேனிலை ; மேயுற. 87

2725. ஆர்கலி கடைந்தநா ளமிர்தின் வந்தன
கார்நிறத் தண்ணற னேமி காப்பன
மேருவி னுத்தர குருவின் மேலுள
யாருமுற் றுணர்கிலா வரண மெய்தின.

(அம் மருந்து), 'ஆர்கலி கடைந்த நாள் - கடலைக் கடைந்த காலத்து, அமிர்தின் வந்தன - அமுதத்துடன் எழுந்தன; கார் நிறத்து அண்ணல் தன் - கரிய நிறம் உடைய கடவுளான, நேமி காப்பன - ஆழிப் படையினால் பாதுகாக்கப்படுவன; மேருவின் உத்தர குருவின் மேல் உள - மேரு மலையின் வடக்கண் உள்ள குரு நாட்டிற்கும் அப்பால் உள்ளன; யாரும் உற்று உணர்கிலா அரணம் எய்தின - யாரும் கிட்டி அறிய முடியாத பாதுகாப்பினைப் பெற்றன.

முதலடிக்கு: 'இன்னமருந் தொருநான்கும் பயோததியைக் கலக்கிய ஞான்றெழுந்த' (யுத்த. 2665) நேமி காப்பன: 'நெய்ம் மருங்கு படரகில்லா நெடுநேமிப் படையு மவற்றுடனே நிற்கும்' (யுத்த. 2666); ஆர்கலி: நிறைந்த ஓசை யுடையது எனக் கடலுக்குக் காரணக் குறி. யுத்த. 431. ஆர்கலி கடைந்தது; பால. அகலிகை. 21 - 26 காண்க. பாரதத்தில் கூறப்பெறும் குரு நாட்டினின்று வேறுபடுத்து மேருவின் உத்தர குரு வெனப்பட்டது. உத்தரகுரு: யுத்த. 2691 உரைக் குறிப்புக் காண்க. முற்றுணர் எனக்கோடலும் ஆம்; சிலர்: கேட்டிருப்பார்கள் அன்றி முற்றும் உணர்ந்தவரில்லை என்க.

பி - ம். 2. கார்நிறக் கண்ணனன்றன்; மேனி,
3. மேலுளோர், மேலுளது,
4. யாருமற்று; அணுகலா, உணர்கிலர்; வானமெய்தினேர். 88

2726. தோன்றிய நாண்முத லியாருந் தொட்டில
ஆன்றபே ரண்ணலே யவற்றி னாற்றல்கேள்
மூன்றென வொன்றிய வுலக முன்னைநாள்
ஈன்றவ னிறப்பினு மாவி யீயுமால்.

'தோன்றிய நாள்முதல் - இம் மருந்துகள் பாற்கடலில் உதித்த நாள் தொடங்கி, யாரும் தொட்டில - எவரும் அவற்றைத் தீண்டியவரில்லை; ஆன்ற பேர் அண்ணலே - நிறைந்த புகழ் வாய்ந்த பெருமையனே! அவற்றின் ஆற்றல் கேள் - அவற்றின்

திறனைக் கேட்பாயாக; மூன்று என ஒன்றிய - மூன்றென்று ஒன்றுகூட்டிச் சொல்லப்படுகின்ற, உலகம் - எல்லா உலகங்களையும், முன்னை நாள் ஈன்றவன் - ஆதிகாலத்தில் படைத்தவனை பிரமதேவன். இறப்பினும் - மரணம் எய்தினும், ஆவி ஈயும் - (அம்மருந்துகள்) அவனுடைய உயிரையும் மீட்டும் உதவும். ஆல்: அசை.

தோன்றுதல் - கடலில் உதித்தல். அவற்றின் - அந்த ஓடதிகளின். மூன்றென ஒன்றிய: 'மூன்றென முற்றிய முடிவில் பேருலகு' (கிட்கிந்தா. 251). முன்னைநாள் ஈன்றவன் - பிரமதேவன்; ஈன்றவன் இறப்பினும் என்ற உம்மை பிரமற்கழிவில்லையென்பதைத் தெரிவிக்கும் எனினும், 'நூறுகோடி பிரமாகள் நொந்தினர்' (தேவா. 1218) என்ற சொற்றொடரின்படி பிரமற்கும் அழிவுண்டு என்பது சைவசித்தாந்தத்தின் கொள்கை. இறப்பினும்: உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 1. தொட்டிலார்.

2. பேரமுதினங்; அளவினுற்றல, அதனினுற்றல்கேள், மருந்தின்.

3. மூன்றினுேடொன்றுள; முன்ன நாள்.

4. உயிரை யியுமால். 89

2727. சல்லிய மகற்றுவ தொன்று சந்துகள்
புல்லுறப் பொருத்துவ தொன்று போயின
நல்லுயிர் நல்குவ தொன்று நன்னிறந்
தொல்லைய தாக்குவ தொன்று தொல்லையோய்.

தொல்லையோய் - பழமையானவனே! ஒன்று - (அம் மருந்துகளில்) ஒன்று, சல்லியம் அகற்றுவது - உடலில் தைத்த படைகளைப் போக்குவது; ஒன்று - ஒன்று, சந்துகள் புல் உற பொருத்துவது - மூட்டுவாய்களை ஒன்றுபடுமாறு இயைப்பது; ஒன்று - ஒன்று, போயின நல் உயிர் நல்குவது - பிரிந்துபோன சிறந்த பிராணனை மீட்டுத் தருவது; ஒன்று - மற்றொன்று, நல் நிறம் - நல்ல உடலை, தொல்லையது ஆக்குவது - முன்னிருந்தபடி செய்வது.

முன் கவியில் மருந்துகள் என்று குறித்தான்; இங்கு அவை இவ்வளவின என்றும், இன்ன ஆற்றலுடையன என்றும் மொழி

கின்றுன். இச்செய்யுளுடன், 'மாண்டாரை யுய்விக்கும் மருந் தொன்று' (யுத்த. 2664) எனத்தொடங்கும் செய்யுளை இயைத்துக் காண்க. சல்லிய மகற்றுவது; படைக்கலங்களைக் கிளர்ப்பது; விசல்யகரணி. சந்துகள் புல்லுறப் பொருத்துவது: உடலில் மூட்டுவிட்டிருந்தால் ஒன்று கூட்டுவது; அதாவது, வேறு வகிர்களான உடலைப் பொருத்துவிக்கும் மருந்து. ஸந்தானகரணி: போன உயிரைத் தருவது; அதாவது, மாண்டாரை யுய்விக்கும் மருந்து. ஸஞ்சீவகரணி: வடுக்கள் இருப்பின் அவற்றைப் போக்கி உடம்பை முன்னிருந்தபடி வடுவின்றி ஆக்குவது; அதாவது, தம்முருவை யருள்வது ஸாவர்ணியகரணி. உயிரார் உய்யின் உடலாருய்வார் எனப்படுதலின் நல்உயிர் எனப்பட்டது. நிறம் - உடல்; 'மெல்லியலை மல்லற், றன்னிற மொன்றிலிருத்தி நின்றேன்' (திருக். 58). தொல்லையோய்: இச்சொல் 2723-லும் வந்துள்ளமை காண்க.

பி-ம். 2. பொருந்துவது.

3. ஈகுவது.

4. தொல்லையதாகவே தோன்றும். 90

2728. வருவது திண்ணநீ வருந்தன் மாருதி
தருநெறி தருமமே காட்டத் தாழ்கலன்
அருமைய தன்றெனு வடிவ ணங்கினுன்
இருமையுந் துடைப்பவ னேம்ப லெய்தினுன்.

'வருவது திண்ணம் - (மருந்து) கொணரப்பட்டு வந்து சேர்வது உறுதி; நீ வருந்தல் - நீ துயரப்படாதே; மாருதி - அநுமன், தருமமே - தருமதேவதையே, தருநெறி காட்ட - எடுத்து வரும் வழிகாட்ட, தாழ்கலன் - கால தாமதம் செய்யாதவனுய்க் கொண்டு வருவான்; அருமையது அன்று - (அவனுக்கு இச் செயல்) செய்தற்கரிய தொன்றுகாது', எனு - என்று கூறி, அடி வணங்கினுன் - (சாம்பன் இராமபிரான்) திருவடிகளில் பணிந்தான்; (அது கண்டு), இருமையும் துடைப்பவன் - (தன்னைச் சரண் அடைந்தாருடைய நல்வினை தீவினை என்று இரண்டு வினைகளை யும் ஒழிப்பவனுன (திருமாலின் அவதாரமான) இராமபிரான், ஏம்பல் எய்தினுன் - மகிழ்ச்சியடைந்தான்.

திண்ணம் : 'மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம்' (இலக். கொத்து.); வருந்தல் : அல்லீற்றுவியங் கோள்; மாருதி : மாருதத்தின் மகனான அநுமன்; தருநெறி தருமமே காட்ட : முன் 2660-இல் என் சொல் : நெறிதரக் கடிது போதி என்று சொல்லப்பட்டது. இங்கு 'ஒருநெறி தருமமே காட்ட' எனப்பட்டது. 'தெய்வம் மனுஷ்யரூபேண' என்பது இங்குக் கருதத் தக்கது. இறைவன் மக்கள் வடிவிலிருந்தே அருள்வன் என்பது கருத்து. 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யங்கே, மாதொரு பாகனார்தாம் வருவா' (சிவ. சித்தி. 2. 25); தாழ்கலன் : அல் எதிர்மறையிடைநிலை. இருமையும் துடைப்பவன் : இராமபிரான்; இருமையும் : நல்வினை தீவினைகளையும் அவற்றினால் எய்தும் பிறப்பிறப்புக்களையும்; 'தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சன்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்; (பால. பாயி.); இருமை : இம்மை மறுமையுமாம். 'இருமையும் எய்தினாய்' (கிட்கிந்தா. 363); 'இருமையுந் தெரிந்தெண்ணலை' (கிட்கிந்தா. 330) ஏம்பல்-மகிழ்ச்சி, 'ஏம்பல் வந்தெய்தச் சொல்லித் தேற்றினையல்லையோ நீ' (யுத்த. மூலபல. 45).

பி-ம் 1. வருமது ; காட்டுந்.
2. கணமுந் ; தாழ்க்கிலன்.
4. துறப்பவன். 91

## அநுமன் மருந்து கொணர்வானென்பதை நம்பினேனென்று இராமபிரான் கூறுகையில் வடதிசையி லொலி யெழுதல்

2729. பொன்மலை மீதுபோய்ப் போக பூமியின்
நன்மருந் துதவுமென் றுரைத்த நல்லுரைக்
கன்வய மில்லையென் றயிர்க்கின் றேனலேன்
என்னலும் வடதிசை யெழுந்த தங்கொலி.

'பொன் மலை மீதுபோய் - மேரு பருவதத்தையும் கடந்து சென்று, போகம் பூமியின் - போக பூமியிலுள்ள, நன் மருந்து - சிறந்த ஓஷதிகளை, உதவும்என்று - அநுமன் கொணர்வான் என்று, உரைத்த நல் உரைக்கு - பகர்ந்த சொற்களுக்கு, அன்வயம் இல்லை, என்று - பொருள் இல்லை யென்று, அயிர்க்கின்றேன் அலேன் -

ஐயம் கொள்கின்றேன் அல்லன்', என்னலும் - என்று இராம பிரான் மொழிந்த அளவில், அங்கு - அங்கே, வடதிசை ஒலி எழுந்தது - வடக்குத் திக்கில் ஒலி கிளம்பியது.

போக பூமி ; யுத்த. 2694 உரைக் குறிப்புக் காண்க. அன்வயம் - வடசொல் ; பொருள் அல்லது பொருத்தம் என்று பொருள்படும். 'நன் மருந்து போல் நலனற வுணங்கிய நங்கை' (சுந்தர. ,332) ; அயிர்க்கின்றேன் ; 'அன்னமா ரீசனென்றே யயிர்த்தனென்' (ஆரணிய. 793) ; 'ஆரென்னலோடும் மனலென்ன வயிர்த் துயிர்த்தாள்' (பால. பூக்கொய். 18) ; வடதிசைப் புண்ணிய திசை என்பர் ; 'மாவியல் வடதிசை' (கிட்கிந்தா 432 ம்) அதற்கு நான் எழுதிய உரைக் குறிப்பும் காண்க.

பி - ம். 2. நல்லுரை.

3. அன்மயம், அன்மையம் ; அயிர்க்கின்றேனரோ, அயிர்ப்பு நீங்கினேன்

4. என்னலும் விசும்பிடை, ஈண்டொலி, ஆண்டொலி. 92

## பெருங் காற்று எழுதல்

2730. கடல்கிளர்ந் தெழுந்துமேற் படரக் கார்வரை
இடையிடை பறிந்துவிண் ணேற விற்றிடை
தடையிலா துடற்றுறு சண்ட மாருதம்
வடதிசை தோன்றிய மறுக்க முற்றதால்.

கடல் - கடலானது, கிளர்ந்து எழுந்து மேல்படர - கொந்தளித்து உயர்ந்து (கரை) மீது தாக்கவும், கார்வரை - மேகங்கள் தங்கப்பெற்ற மலை, இடை இடை பறிந்து விண் ஏற - இடையிடையிலே சிதைக்கப்பட்டு வானத்தில் ஏறவும், இடை இற்று - நடுவே முறிந்து, தடை இலாது - தடுக்கப்படலின்றி, உடற்றுறு சண்ட மாருதம் - கடுமையாய் வீசுகின்ற பெருங் காற்று, வடதிசை தோன்றிய மறுக்கம் உற்ற - வடக்குத் திக்கில் எழுந்ததாலான கலவரம் நிகழ்ந்தது. ஆல் : அசை.

கார்வரை ; 'கார்வரை நிறுவித் தன்னை கனலெழக் கலக்கக் கண்டும்' (யுத்த. 431) தடையிலா ; 'சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்' (சிவ சித்தி. 1 : 61) மறுக்கம் ; 'வானவர் மறுக்கங் கண்டான்' (யுத்த. மாயா சீதை. 95) சண்டமாருதம் -

காற்று; இது அநுமன் வரும் வேகத்தால் நிகழ்ந்தது. 'பேருடற் பிறந்த சண்டமாருதம்' (யுத்த. 2671); 'சண்டமாருதமென்ன' (யுத்த. 1018).

பி-ம். 2. இடையறிந்துதிர; விற்றிடை.

3. இலனுற்றுறு, இலதுடற்றுவ, இலதுற்றெரு.

4. வடதிசை வந்ததோர்; மயக்கம்; வந்ததால். 93

(93-102) பாடல்கள் பழைய பதிப்பில் இல்லை.

## உடுக்களின் கூட்டத்தின் நிலைகுலைவும் பிற நிகழ்ச்சிகளும்

2731. மீன்குலங் குலைந்துக வெயிலின் மண்டிலந்
தான்குலைந் துயர்மதி தழுவத் தன்னுழை
மான்குலம் வெருக்கொள மயங்கி மண்டிவான்
தேன்குலங் கலங்கிய நறவிற் சென்றவால்.

மீன்குலம் - உடுக்களின் கூட்டம். குலைந்து உக - நிலை தடுமாறிச் சிதறவும், வெயிலின் மண்டிலம்தான் - சூரிய மண்டலமானது, குலைந்து உயர் மதி தழுவ - நிலைகுலைந்து உயர்ந்துள்ள சந்திரனைத் தழுவவும், தன் உழை - தன்னகத்து உள்ளமானால், மான் குலம் வெருகொள - மான் கூட்டம் அஞ்சுமாறும், தேன் குலம் கலங்கிய - தேன் கூட்டிலே மொய்ப்பனவாய் நிலைகுலையப் பெற்ற தேனினம் போன்று, வான் - மேகம், மண்டி - (ஒன்றோடொன்று) நெருங்கி, மயங்கி சென்ற - கலந்து சென்றன. ஆல்: அசை.

இச் செய்யுட்கண் திரிபு என்னும் சொல்லணி காண்க. இங்கு உழை என்பது மான் ஆதலின் அந்த மானைக் கண்டு ஏனைய மான்கள் வெருக்கொள என்று கொள்ளப்பட்டது. மயங்குதல் - ஒன்றோடொன்று கலத்தல். நறவு - தேன். நறவு கலங்கிய தேன் குலம் என்று மொழி மாற்றிப் பொருள் கொள்க. தன் உழை மான்; சந்திரனிடத்துள்ள களங்கத்தை மானாகவும் முயலாகவும் கூறுதல் மரபு. 'வருகலை மானென்று மருவினை நீ யிவன் வள்ளி மான் மருவு மெம்மான்' (பழனி முருகன் பிள்ளைத்.); தன் உழை குலம் மான் வெருக்கொள எனினுமாம். நறவு - தேன்; நறவுண்டு,

மறந்தேன்' 'ஏயின நறவல்லான்' (கிட்கிந்தா. 640, 641); நறவு-தேன் கூட்டிற்கு இலக்கணை.

பி - ம். 2. மழை தழுவித்; தன்னசை.
3. வான்ருலம்; தெற்கு.
4. சென்றதால். 94

## அநுமன் ஆரவாரம் செய்தல்

2732. வேர்த்துணர் தூரொடு விசும்பை மீச்செலப்
போர்த்தன மலையொடு மரனு முன்புபோல்
தூர்த்தன வேலையைக் காலின் ருேன்றலும்
ஆர்த்தன னணையவ ரரந்தை யாற்றுவான்.

வேர் துணர் தூரொடு - வேரும் பூங்கொத்தும் தூருடனே விசும்பை மீசெல - ஆகாயத்தைக் கடந்து சென்றமையின், போர்த்தன - அவ்விடத்தை மறைத்துக் கொண்டனவாகி, மலையொடு மரனும் - மலையும் மரமும், முன்புபோல் - (நளன் சேது அணை கட்டிய காலத்துப் போன்று), வேலையை தூர்த்தன - கடலை வற்றச் செய்தன; காலின் தோன்றலும் - மாருதியும், அனையவர் அரந்தை ஆற்றுவான் - ஆங்குள்ள இராமபிரான் சாம்பன் வீடணன் என்பவருடைய துன்பத்தை நீக்கும் பொருட்டு, ஆர்த்தனன் - பெரு முழக்கம் செய்தான்,

விசும்பு-ஆகாயம்; 'நிலந்தீ நீர்வளி விசும்பு' (தொல். மரபு. 89); மரம் மான் : ஈற்றுப் போலி. முன்பு போல் என்றது நளன் சேது கட்டிய காலத்து நிகழ்ந்த வண்ணம் எனும் பொருட்டு. 'அக்கருங்கடறார வயற்கடற், புக்கடங்கிடப் போவன போன்றவே (யுத்த. 672) காலின் தோன்றல்; 'காலின் தோன்றல் கரியனுய் வெளியனுகி' (சுந்தர. 197) அரந்தை : துன்பம்; 'அரந்தை உவா வுற்ற ஆர்கலியே யொத்தது' (யுத்த. 1936); 'அரந்தை வெம்' பிறவி யென்னுேய்க் கருமருந்தனையவையா' (கிட்கிந்தா. 349); ஆற்றுவான் : வானீற்று வினையெச்சம்.

பி - ம். 1. வேர்த்துள; வேர்த்தன.
2. போர்த்துள; மகனும் போவன, வானம் போல்வன.
3. தூர்த்தன.
4. அனையவன்; அரதி. 95

2733. மழைகளுங் கடல்களு மற்று முற்றுமண்
உழையவும் விசும்பவு மொலித்தற் கொத்துள
குழீஇயின குமுறின கொள்கை கொண்டவால்
உழுவையின் சினத்தவ னார்த்த வோசையே.

உழுவையின் சினத்தவன் - புலி போன்ற கோபத்தை யுடைய வனான அநுமன், ஆர்த்த ஓசை - முழக்கிய ஒலியானது, மண் உழையவும் - மண்ணிடை யிருப்பனவும், விசும்பவும் - ஆகாயத்தினிடத்தனவும், ஒலித்தற்கு ஒத்து உள - ஒலித்தற்கு பொருந்தியனவுமான, மழைகளும் கடல்களும் - மேகங்களும் கடல்களும், மற்றும் முற்றும் - மற்றும் உள்ள அனைத்தும், குழீஇயின - ஒன்றாக இயைந்தனவாய், குமுறின கொள்கை கொண்ட - சப்தித்த தன்மையைக் கொண்டது. ஆல் : ஏ : அசை.

தற்குறிப்பேற்றவணி. குமுறுதல் : கிளர்ந்தொலித்தல். உழுவை - புலி.

பி - ம். 2. உழைகளும் விசும்பு மேலொலி தந்துள, உழையவும் விசும்பி மோலொலி வந்துள.
3. குழை இயின ; கொண்டன, கண்டநால்.
4. உழுவையை நிகர்த்தவன். 96

மருந்து மலையைக் கொண்டுவரும் அநுமனுடைய தோற்றம்

2734. எறிதிரைப் பெருங்கடல் கடைய வேற்றநாள்
செறிசுடர் மந்தரந் தருதி சென்றெனா
வெறிதுகொ லெனக்கொடு விசும்பின் மீச்செலும்
உறுவலிக் கலுழனே யொத்துத் தோன்றினன்.

எறி திரை - வீசுகின்ற அலைகளையுடைய, பெரு கடல் கடைய - பெரிய பாற்கடலைக் கடையுமாறு, ஏற்ற நாள் - (தேவரும் அசுரரும்) மனமியைந்த காலத்தில், 'செறி சுடர் - நெருக்கமான ஒளியினை யுடைய, மந்தரம் சென்று தருதி - மந்தர மலையைச் சென்று கொணர்வாய்' என - என்று கட்டளை பிறப்பிக்க, 'வெறிது கொல் - (இவ்விடம்) வெறுமையானது தானோ!' என - என்று (அந்த மலையிருந்த) தலத்தைச் கண்ணுற்றோர்) சொல்லுமாறு, கொடு -

(அம்மலையை வேருடன் அகழ்ந்து) கொண்டு, விசும்பின் மீசெலும்- விண் வழியாக மேலே செல்லுகின்ற, உறுவலி - மிக்க வன்மையை யுடைய கலுழனே ஒத்து தோன்றினன் - கருடனையே நிகர்த்து அநுமன் காணப்பட்டன.

தற்குறிப்பேற்றவணி. கலுழனே யொத்துத் தோன்றினன்; 'தெய்வக் கடலெலாங் கலக்கத்தாவுங் கலுழனு மனையனானன்' (சுந்தர. 32).

பி - ம். 2. எறிசுடர், எரிசுடர்; மந்தமத்தருகு சென்றனன், மந்தரத் திருகிச் சென்றென.

3. வெறிதுலகெனக் கொடு; மேற்செலும்.

4. உறுவகைக். 97

2735. பூதலத் தரவொடு மலைந்து போனநாள்
ஓதிய வென்றிய னுடற்று மூற்றத்தன்
ஏதமி லிலங்கையங் கிரிகொ டெய்திய
தாதையு மொத்தன னுவமை தற்கிலான்.

பூதலத்து - பூவுலகின் கண்ணே, அரவொடு மலைந்து போன நாள் - ஆதி சேடனுடன் போர் செய்து சென்ற காலத்தில், ஓதிய வென்றியன் - யாவரும் புகழ்ந்து சொல்லும் வெற்றியை யுடைய வனும், உடற்றும் ஊற்றத்தன் - சமராற்றவல்ல வலிமையுடைய வனும் ஆகி, ஏதம் இல் இலங்கை - குற்றமற்ற இலங்கை நகரிலே, அம்கிரி கொடு எய்திய - அழகிய திரிகூட மலையை எடுத்து வந்த, தாதையும் ஒத்தனன் - தந்தையாகிய காற்றின் வேந்தனையும், தற்கு உவமை இலான் ஒத்தனன் - தனக்குக் கூறத்தக்க உவமை யிலாதவனான அநுமன் ஒத்தனன்.

'பூதலம்: இரு பெயரொட்டு; 'பூதல மிருக்குங் காலும் புகழுடம்பிருக்கும்' (விநாயக. அரசி. 41). தாதையும் ஒத்தனன் - 'முடிவு காலத், தழிவுறக் கடுகும் வேகத் தாதையு மனையனானன்' (சுந்தர. 29.) மற்றும் சுந்தர. 22, 43, 84, 1176 ம் காண்க.'

பி - ம். 1. அரசொடு மலிந்து.

2. வென்றியேன்று; ஊற்றமுற்றவன்.

3. ஏதமிலங்கையங்; கரங்கொடெய்திய, கிரியொடேந்திய.

4. உவமை தற்கிலான். 98

## அநுமன் வந்து அடியூன்றி நிலத்தைச் சேர்தல்

2736. தோன்றின னென்னுமச் சொல்லின் முன்னம்வந்
தூன்றின னிலத்தடி கடவு ளோங்கருன்
வான்றனி னின்றது வஞ்ச ரூர்வர
ஏன்றில தாதலி னனும னெய்தினன்.

'தோன்றினன்-வந்து விட்டான், (அநுமன்,)' என்னும்-என்ற, அ சொல்லின் - அந்தச் சாம்பன் சொல்லிய சொல்லுக்கு, முன்னம் வந்து, நிலத்து அடி ஊன்றினன் - தரையில் காலை அழுந்த வைத்தவனாய், அநுமன் எய்தினன் - மாருதி வந்தடைந்தான்; வஞ்சர் ஊர்வர ஏன்றிலது ஆதலின் - வஞ்சக அரக்கரின் ஊர்க்கண் வருவதற்கு மனங் கொள்ளாமையின், கடவுள் ஓங்கல் வான் தனில் நின்றது - தெய்வத் தன்மை வாய்ந்த அந்த மருத்து மலை விண்ணிலேயே நின்றது.

ஏன்றிலது: இசைந்திலது. வஞ்சர் ஊர்வர: 'வாங்கிய வாழி தன்னை வஞ்சரூர் வந்ததாமென், றுங்குயர் மழைக்கணீரால் ஆயிரம் கலசமாட்டி' (சுந்தர. 1287) ஆல்: அசை.

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

அதிகப் பாடல்:—

வந்தன மருந்தினை மருத்து வானவன்
சிந்தையிற் பெருமகிழ் சிறப்பச் சேர்ந்துறீஇ
அந்தரத் தருக்கன்மா மகனொ டாயவர்
வந்திறைத் தார்த்தெழும் வகைசெய் தானரோ.

பி - ம். 1. என்பதோர் சொல்லின்.
3. வான்றனி நின்றது.
4. ஏன்றலவாதலால், ஏன்றலதாதலின். 99

## அனைவரும் உயிர் பெற்றெழுதல்

2737. காற்றுவந் தசைத்தலுங் கடவு ளுட்டவர்
போற்றினர் விருந்துவந் திருந்த புண்ணியர்
ஏற்றமும் பெருவலி யழகொ டெய்தினர்
கூற்றினை வென்றுத முருவுங் கூடினர்.

கடவுள் நாட்டவர் [2]போற்றினர் - விண்ணுலகத்தவரால் புகழப் பட்டவராய், விருந்து வந்திருந்த புண்ணியர் - விருந்தாக வந்திருந்த புண்ணியசாலிகள், காற்று வந்து அசைத்தலும் - (மரித்த தம் உடலைக்) காற்று வீசி வந்து அசைத்த அளவில், ஏற்றமும் - உயர்வும், பெருவலி அழகொடு எய்தினர் - மிக்க வலியும் அழகும் பெற்றவராய், கூற்றினை வென்று தம் உருவும் கூடினர் - யமனையும் வெற்றி கண்டு தமது பழைய வாநர உருவுடன் இயைந்தனர்.

பிரமன் கணையால் இறப்பு நேரச் சுவர்க்கத்தை அடைந்து அங்குத் தேவர்களால் போற்றப் பெற்ற வாநரர் மருந்துக் காற்று மேல்பட்டவுடன் அழகு வலி என்ற இவைகளைப் பெற்றவராய்த் தம் உடலை மீண்டும் பெற்றார்கள். புண்ணியர் : மடிந்த வாநரங்கள்.

பி - ம். 2. போற்றினர் நந்தவந்து.
3. அழகும்.
4. தம்முயிரும். 100

## அரக்கர் உயிர் பெருமைக்கும் வானரர் உயிர் பெற்றமைக்குங் காரணம்

2738. அரக்கர்த மாக்கைக ளழிவி லாழியிற்
கரக்கமற் றொழிந்தன வொழியக் கண்டன
மரக்கல முதலவு முய்ந்து வாழ்ந்தன
குரக்கின முய்ந்தது கூற வேண்டுமோ.

அரக்கர் தம் ஆக்கைகள் - இராக்கதருடைய உடல்கள், அழிவில் ஆழியில் - அழிவற்ற கடலிலே, கரக்க - (எறியப்பட்டு) மறைந்ததனால், ஒழிந்தன - (உயிர் வரப்பெறாமல்) கழிந்தன; ஒழிய கண்டன - (அவை நீங்கலாகக்) காணப்பட்டனவான, மரக்கலம் முதலவும் - கப்பல் முதலாயினவும், உய்ந்து வாழ்ந்தன - பிழைத்து வாழ்வுற்றன; குரங்கு இனம் உய்ந்தது கூற வேண்டுமோ - குரங்கினம் பிழைத்தது கூறவேண்டுமோ? ஓகாரம்: எதிர் மறை. மற்று : வினைமாற்று.

எல்லாவுலகத்தையும் அழித்துத் தான் எஞ்சி நிற்றலின் ஆழி எனப்பட்டது. ஆழியில் கரக்க : முன்னர் இராவணன் மருத்தனை

அழைத்து அரக்கர் உடல் முழுதும் கடலில் இடு என்று சொன்னதை, 'அரக்கன் மருத்தன்தனைக் கூவி, முந்த நீபோ யரக்கருடல் முழுதும் கடலில் முடுக்கிடு' (யுத்த. 2607) என்றமை கொண்டு காண்க. மரக்கலம்: மரக்கலத்திலிருந்தவர் என்னக் கொள்க, மரக்கலம்: கப்பல்; 'ஓர் மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினார்' (ஆரணிய. 123); குரக்கினம்; 'குரக்கரசதனைக் கொல்ல' (கிட்கிந்தா. 123).

பி-ம். 1. அரக்கர்கள்; அரக்கராழியில், அளக்கராழியில்.

2. கரக்கலுற்று. கரக்கவற்று.

4. உற்றது. 101

## இலக்குவன் உயிர்பெற்றெழுதலும் இராமபிரான் அவனைத் தழுவுதலும்

2739. கழன்றன நெடுங்கணை கழன்ற புண்கடுத்
தழன்றன குளிர்ந்தன வங்கஞ் செங்கண்கள்
சுழன்றன வுலகெலாந் தொழுத தொங்கலின்
குழன்றெழுங் குஞ்சியா னுணர்வு கூடினான்.

நெடுகணை கழன்றன - நீண்ட வாளிகள் இலக்குவன் உடலினின்றும் நெகிழ்ந்து வெளி வந்தன, கழன்ற - கழன்றதனால், புண் கடுத்து அழன்றன - புண்கள் வலிகொண்டு எரிந்தவை, குளிர்ந்தன - குளிர்ந்து நின்றன; அங்கம் - உடலிலே, செம் கண்கள் - செந்நிறமான கண்கள், சுழன்றன - சுழலத் தொடங்கின; உலகு எலாம் தொழுத - உலகனைத்தும் தொழுவனவாயின; தொங்கலின் - மாலை போன்று, குழன்று எழும் - குழற்சியுடன் காணப்படும், குஞ்சியான் - மயிர் முடியினையுடைய இளைய பெருமாள், உணர்வு கூடினன் - தன் நினைவு வரப் பெற்றான்.

நெடுங்கணை கழன்றன: விசல்லிய கரணியால் கணைகள் கழன்று வெளி வந்தன; அங்கம் குளிர்ந்து பண்டைநிலை யெய்தச் செய்தது ஸாவர்ண்ய கரணி. செங் கண்கள் சுழன்றமை: உயிர் வந்ததற்கு அறிகுறி; இதனைச் செய்தது சஞ்சீவ கரணி. தொங்கல்: தொங்குதல் பற்றி மாலைக்குக் காரணக்குறி. குழலுதல்;

'நீண்டு குழன்று நெய்த்திருண்டு' (சுந்தர. 546) குஞ்சி: ஆண் மயிர்; 'குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்' (நாலடி. 131).

பி - ம். 1. கரந்த.
2. அழன்றில.
3. சுழன்றில; தொழுவ; ஓங்கலே.
4. குழன்றபூங்; உணர்வுங். 102

2740. யாவரு மெழுந்தன ரார்த்த வேழ்கடல்
தாழ்வரும் பேரொலி செவியிற் சார்தலும்
தேவர்கள் வாழ்த்தொலி கேட்ட செங்கணுன்
ஏவநீங் கினனென விளவ லோங்கினுன்.

ஏழ் கடல் தாழ்வரும் - ஏழு கடலும் பின்னிடைதற்குக், காரணமாய், யாவரும் - (குரக்கு வீரர்), எல்லோரும், எழுந்தனர் ஆர்த்த பேர் ஒலி - உயிர் பெற்றெழுந்து ஆரவாரித்த பெரு முழக்கம், செவியில் சார்தலும் - தன் செவியிற் பட்டவுடனே தேவர்கள் வாழ்த்தொலி கேட்ட செங்கணுன் - வானவர்கள் வாழ்த்துகின்ற ஒலியைச் செவியேற்ற செங்கண்ணணுகிய திருமால், ஏவம் நீங்கினன் என - துன்பம் நீங்கப் பெற்றுன் என்னுமாறு இளவல் ஓங்கினுன் - இலக்குவன் எழுந்து காட்சி யளித்தான்.

இளவல் உயிர் பெற்றெழுதலே இராமபிரான் துன்பம் நீங்கற் குக் காரணம் ஆகலின் ஏவம் நீங்கினன் எனப்பட்டது. இலக் குவன் உயிர் பெற்றெழுந்தான்: அவனைத் தன்னுயிராகப் பெற்ற இராமபிரான் துயர் நீங்கினன் என்க. 'தம்பியரல்லது தனக்கு வேறுயிர், இம்பரினில்லெதன வெண்ணி யேய்ந்தவன்' (கிட்கிந்தா. 261) என்று வாலியே இராமபிரானுடைய பிராதா வாத்ஸல்யத்தைக் கூறுதல் காண்க.

பி - ம். 1. எழுந்தவரேத்த, எழுந்துவந்தார்த்த, எழுந்தனரேந்த.
2. தாவரும்; செவியைச். 103

2741. ஓங்கிய தம்பியை யுயிர்வந் துள்ளுற
வீங்கிய தோள்களாற் றழுவி வெந்துயர்
நீங்கின னிராமனு முலகி னின்றில
தீங்குள தேவரு மறுக்கஞ் சிந்தினர்.

உயிர் வந்து உள் உற ஓங்கிய தம்பியை - உயிர் வந்து உடலுள்ளே பொருந்தப் பெற்றமையின் எழுந்து நின்ற தம்பியை, வீங்கிய தோள்களால் தழுவி - (மகிழ்ச்சியால்) பூரித்துயர்ந்த புயங்களால் அணைத்து, இராமனும் - இராமபிரானும், வெந்துயர் நீங்கினன் - கடுந் துன்பம் ஒழியப் பெற்றான்; உள தேவரும் மறுக்கம் சிந்தினர் - அமுதமுண்டமையின் சாவாமலிருந்த விண்ணோரும் (தம் பகைவரால் கொண்ட) கவலை நீங்கப் பெற்றனர், தீங்கு உலகில் நின்றில - தீமைகளும் உலகில் நில்லாமல் ஒழிந்தன.

தேவரும்: உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 3. நின்றவர், நின்றுள மலரும் சிந்தினர்.
4. நீர்ந்தனர். 104

## அரம்பையர் முதலியோரின் மகிழ்ச்சிச் செயல்

2742. அரம்பைய ராடின ரமுத வேழிசை
நரம்பியல் கின்னர முதல நன்மையே
நிரம்பின வுலகெலா முவகை நெய்விழாப்
பரம்பின முனிவரர் வேதம் பாடினர்.

அரம்பையர் ஆடினர் - அரம்பை மாதர் ஆடினர்; நரம்பு இயல் கின்னரம் முதல - நரம்பினால் ஆக்கப்பட்ட (நரப்புக் கருவிகளான) கின்னரம் முதலிய இசைக்கருவிகள், நன்மையே அமுதம் ஏழ் இசை நிரம்பின - இனிதாக அமுதம் போல் இனிமையான ஏழிசைகள் நிரம்பப் பெற்றன; உலகு எலாம் - உலகனைத்திலும், உவகை - மகிழ்ச்சிக்கு அறிகுறியாக, நெய்விழா - நெய்யாடல் விழா, பரம்பின - பரவின; முனிவரர் வேதம் பாடினர் - முனிவர்கள் வேத கோஷம் செய்தனர்.

அமுத ஏழிசை: இனிய சப்த ஸ்வரம்; அவை சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம்; தமிழில் உழை

இனி, விளரிதாரம், குரல், துத்தம், கைக்கிளை ; ஏழிசையாயிசைப் பயனுய். கின்னரம் ஒருவகை யாழ். நெய் விழா : 'நெய்யாட் டரவமும் நீராட்டரவமும்' (பெருங். 5 : 71); திருநாளில் மங்களமாக ஆடும் முழுக்கு; 'இவனைத் தோற்பித்ததற்கு நெய்யாடல் போற்று கிறபடி' (ஈடு. 7, 3, 1); முனிவரர் முனிச்சிரேட்டர்.

பி - ம். 1. அரம்பையர் வாழ்த்தொலி.

2. நரம்பயர், நரம்பயில் ; கின்னரர் முதலிவர் ; நானுற, நாதமே.

3. உலகென.

4. விரும்பின முனிவரும். 105

## அப்போது வேதம் முதலியன ஆர்த்தல்

2743. வேதநின் ருர்த்தன வேத வேதியர்
போதநின் ருர்த்தன புகழு மார்த்தன
ஓதநின் ருர்த்தன வோத வேலையிற்
சீதநின் ருர்த்தன தேவர் சிந்தனை.

வேதம் - நான் மறைகள், நின்று ஆர்த்தன - (மகிழ்வுடன்) நிலைபெற்று ஆரவாரித்தன ; வேதம் வேதியர் போதம் நின்று ஆர்த்தன - மறைகளில் தேர்ச்சி பெற்ற நான்மறையோர் ஞானமும் ஆரவாரித்து நின்றன, புகழும் ஆர்த்தன - கீர்த்தியும் ஆர்த்தன ; ஓதம் நின்று ஆர்த்தன - கடல்களும் பொங்கியெழுந்து பெரு முழக்கம் செய்தன ; தேவர் சிந்தனை - வானவருள்ளமும், ஓதம் வேலையில் - நீர்ப்பெருக்குற்ற கடலைப்போன்று சீதம் நின்று, ஆர்த்தன - குளிர்ச்சி நிலைபெற்றுக் குதூகலித்தது.

நின்ருர்த்தன என்று நான்கடிகளிலும் வந்தது ; சொற் பொருட்பின் வருநிலையணி. சிந்தனை : 'சிந்தனை நின்றனக் காக்கி' (திருவா. திருச்சதகம். 26); 'என்சிந்தனை நின்றதென்ருன் தெரிவரும் வஞ்சக் கள்வன்' (குசேலா. 2 : 274).

பி - ம். 1. வேதநின்ருர்ந்தனர் வேதவேள்வியர்.

2. தாதை நின்ருர்த்தனன் ; தருமம் பூத்தன.

3. ஓதம் உள்ளுறச்.

4. ஆர்த்தனர். 106

## அயன்படை இராமபிரானை வலம்வந்து வணங்கித் தன்னிடஞ் சேர்தல்

2744. உந்தின பின்கொலை யொழிவி லுண்மையும்
தந்தனை நீயது நினக்குச் சான்றெனச்
சுந்தர வில்லியைத் தொழுது சூழவந்
தந்தணன் படையுநின் றகன்று போனதால்.

கொலை உந்தின பின் - கொலை நீங்கினபின் (யாவரும் உயிர் பெற்றெழுந்தபின்), அந்தணன் படையும் - பிரமாத்திரமும், சுந்தரம் வில்லியை - அழகிய வில்லாளனான இராமபிரானை, சூழ வந்து தொழுது - சுற்றிவந்து வணங்கி, நின்று - எதிர் நின்று, 'நீ - நீ, ஒழிவில் உண்மையையும் தந்தனை - நீங்குதலில்லாத சத்தியத்தையும் தந்தனை; அது நினக்குச் சான்று - அது உனக்குப் பெருமையே' என - என்று சொல்லி, அகன்று போனது - நீங்கிச் சென்றது. ஆல் : அசை.

சுந்தர வில்லி, 'இருவர் மானுடர் தாபதர் ஏந்திய, வரிவில் வாழ்க்கையர் மன்மதன மேனியர்' (ஆரணிய, 365); சூழவந்து அகன்று போனது ; 'நிலஞ் செய்து விசும்பும் செய்து நெடியவன் படை நின்றானை, வலஞ்செய்து போவதானால் மற்றினி வலிய துண்டோ' (யுத்த. இந்திரசித்து. 4).

பி - ம். 1. உந்தினைபின், உய்ந்தனனினிக்.
2. ஒழிவதுண்மையுந்தந்தனன் ; இனையது.
4. அயர்ந்து போனதால். 107

## வேறு

## இராமபிரான் அநுமனைத் தழுவுதல்

2745. ஆய காலையி னமர ரார்த்தெழத்
தாயி னன்பனைத் தழுவி னன்றனி
நாய கன்பெருந் துயர நாமறத்
தூய காதனீர் துளங்கு கண்ணினன்.

ஆயகாலேயின் - அப்போது, தனிநாயகன் - நிகரற்ற தலைவனான இராமபிரான், பெரு துயரம் நாம அற - மிக்க துன்பம் பேரும் நிற்கப் பெறுமல் ஒழியவே, தூயகாதல் - தூய்மையான அன்பினுல், நீர் துளங்கு கண்ணினன் - நீர் அசையப் பெற்ற விழிகளையுடையவனய், தாயின் அன்பனை - தாயினும் மிக்க அன்புடையவனான மாருதியை, அமரர் ஆர்த்து எழ - தேவர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்து எழா நிற்க, தழுவினன் - அணைத்துக்கொண்டான்.

தாயின் அன்பனை: 'தாயேயன்ன கருணையான்' (சுந்தர. 1169); 'தாயின் மன்னுயிர்க் கன்பினன்' (யுத்த. 211); 'பாலினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' (திருவாச. பிடித்த: 9); தனிநாயகன்: ஒப்புயர் வற்றவன்; 'நாராயணனே தனிநாயகனே' (சுந்தர. 494); நாம் அற: பெயரும் அற்றுப் போகுமாறு 'நன்றினி நமரொடு குரங்கை நாமறக் கொன்று (யுத்த. 52); காதல் நீர்: அன்பினுல் பெருகி வழியும் ஆனந்தக் கண்ணீர்; 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல் தரும்' (குறள். 71).

பி - ம். 1. ஆயின; காலேவாய்.
2. தாயினும்.
3. துயர்நாளும், துயரகன்று.
4. நூயவர், தூயினான்; கண்ணினர். 108

107—108 பின்முன்னகச் சில பிரதிகளில் உள்ளன.

## இராமபிரான் அநுமனிடம் பின்வருமாறு கூறுதல்

2746. எழுது குங்குமத் திருவி னேந்துகோ
டுழுத மார்பின னுருகி யுள்ளுறத்
தழுவி நிற்றலுந் தாழ்ந்து தாளுறத்
தொழுத மாருதிக் கினைய சொல்லுவான்.

எழுது - கோலமாக வரைந்த, குங்குமம் - குங்குமக் குழம்பினைக் கொண்டதாய், திருவின் - பிராட்டியின், ஏந்துகோடு - சாய்ந்த தனத்தின் உச்சியினலே, உழுத மார்பினன் - உழப்

பெற்ற மார்பினையுடையவன் ஆன இராமபிரான், உள் உற உருகி - நெஞ்சம் நன்கு உருகப்பெற்று, தழுவி நிற்றலும் - அணைத்து நின்ற போழ்தில், தாள்உற தாழ்ந்து தொழுத மாருதிக்கு - திருவடிகளிலே (சிரம்) பொருந்தப் பணிந்த அநுமனுக்கு, இனைய சொல்லுவான் - இவ்வார்த்தைகளைப் பகர்வானானான். இவற்றை அடுத்து வரும் நான்கு கவிகளில் காண்க.

ஏந்துகோடு: உயர்ந்த தந்தம்; 'இடைப்புலத்தொழிந்த வேந்து கோட்டியானை' (மதுரைக். காஞ்சி. 688); ஏந்துதல்: உயர்தல்; இங்கு ஏந்துகொடு திருமகள் தனபாரங்கட்கு இலக்கணை. கோடுழுத மார்பினன். 'கோடுழுத மார்பானை' (சுந்தர. 312); தாளுறத்தாழ்ந்து என்று மாற்றிக் கொள்க. திருமகட்கே உரிய மார்பினால் அநுமனைத் தழுவியது இராமபிரானுக்குச் சிறிய திருவடி மீதிருந்த பேரன்பினைக் காட்டும். (ஒப்பு) பிராட்டி ஓரிடத்தில் அநுமனிடம் உன்னைத் தலையினால் தொழவேதகும் தன்மையோய் என்றது காண்க.

பி - ம். 3. தழுவியுற்றலும்.
4. இனிய சொல்லினன். 109

2747. முன்னிற் றோன்றினோர் முறையி னீங்கலா
தென்னிற் றோன்றிய துயரி னீறுசேர்
மன்னிற் றோன்றினே முன்ன மாண்டுளோம்
நின்னிற் றோன்றினோ நெறியிற் றோன்றினாய்.

'முன்னில் தோன்றினோர் - முன்னர் (எம் குலத்துப்) பிறந்தாருடைய, முறையின் நீங்கலாது - சத்திய நெறியினின்று வழுவாமலிருந்து, என்னில் தோன்றிய துயரின் - என்னால் உற்ற துன்பத்தால், ஈறுசேர் - மரணத்தையடைந்த (என் பிரிவு காரணமாக இறந்த) மன்னின் தோன்றினோம் - தயரத மன்னனிடத்து நின்று முன்பு உதித்த நாங்கள், முன்னம் மாண்டுளோம் - (சற்று முன்பு) பிரமாத்திரத்தினால் இறந்தொழிந்தோம்; (பிறகு), நெறியில் தோன்றினாய் - நன்னெறியிலேயே (நடந்துகொண்டு) ஒழுகுபவனே, நின்னில் தோன்றினோம் - உன்னிடத்துநின்று (மீண்டும்) உதித்தவரானோம்.

முன்னில் ரேன்றினோர் முறை: சத்தியம் தவறாமை: (வாய்மையுமரபும் காத்து மன்னுயிர் துறந்தவள்ளல்' (கிட்கிந்தா. 305) என்று தயரதன் புகழப் பெற்றமை காண்க. 'உந்தையுண்மையனுக்கி' (ஆரணிய. 211); என்பது சடாயு கூற்று; 'பொய்ப்பகை, மெய்க்கணி' (ஆரணிய. 195); 'மறக்க முற்றுதன வாய்மை காத்தவன்' (ஆரணிய. 163); 'வாய்மை யாவர்க்கும் சான்றென நின்றவத் தருமமன்னவன்' (ஆரணிய, 489); 'வையகமுற்று நடந்த வாய்மை மன்னன்' (அயோத்தி. கைகேசி 23, 23); என்னில் தோன்றிய துயர் - தான் காடுபோந்ததனுல் தயரதன் சாக நேர்ந்தமை. மன்னன்: தயரதன்; இன்று இறந்துபட்ட தங்கள் உயிரை ஈந்ததால் 'நின்னிற் றேன்றினேம்' எனப்பட்டது. முன்னர்த் தயரதனிடம் தோன்றியவர் நாங்கள். இப்போது உன்னுல் மறு பிறவியெடுத்தோம்; எனவே நீ எங்களைப் பிறப்பித்த தந்தை யாவாய் என்றவாறு; இங்கு அநுமன் கணையாழியை யீந்தவுடன் பிராட்டி வாழ்த்திய 'மும்மை யாமுலகந் தந்த முதல்வர்க்கு முதல்வன் தூதாய்ச், செம்மையால் உயிர்தந் தாய்க்கு செய லென்னுலெளியதுண்டே; அம்மையே அத்தனுய அப்பனே அருளின் வாழ்வே, இம்மையே மறுமை தானும் நல்கினை' (சுந்தர. 560); என்பவை ஒப்பு நோக்குக. நெறி சன்மார்க்க நெறி 'நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர் நினைவாலும் மாதர் நலம்பேணுது வளர்ந்தீர்' (கிட்கிந்தா. 992).

பி - ம். 1. நீங்கலா, நின்றிலாது, நீங்கலான்.

3. முதல். 110

2748. அழியுங் காற்றரு முதவி யையனே
மொழியுங் காற்றரு முயிரின் முற்றுமே
பழியுங் காத்தரும் பகையுங் காத்தெமை
வழியுங் காத்தனை மறையுங் காத்தனை.

'ஐயனே - ஐயனே! மொழியும் கால் - பகருமிடத்து, அழியும் கால் தரும் உதவி - (உயிர்) நீங்கவருங்கால் புரியும் உபகாரமானது, தரும் உயிரின் - தருகின்ற உயிரினுல் (உயிருக்குப் பிரதி கொடுத்ததால்), முற்றுமே - ஈடுசெய்ததாகுமா? (நீ எம் உயிரைக் கொடுத்ததன் காரணமாக) பழியும் காத்து - பழியும் (எமக்கு நேராமல்) தடை செய்து, பகையும் - அரிய பகைவரையும் (காத்து) தலை

யெடுக்க வொட்டாதுசெய்து, எமைவழியும் காத்தனை - எம்மைக் குலத்தோடும் பாதுகாத்தனை, மறையும் காத்தனை, வேதமார்க் கத்தையும் நிலைபெறச் செய்தனை. ஏ: எதிர்மறை.

இராம இலக்குவர்க்கு மரணம் நேரின், பரதன் முதலானோரும் உயிர் வாழார்: அதுபற்றி வழியும் காத்தனை என்றான். அரக்கர் அழிவும் ஒருதலையாகலின் அவராற்றடை செய்யப்பெற்ற மறையும் காத்தனை எனப்பட்டது. அவர் தடைசெய்தது; 'வேதமும் வேள்வியும் விலக்கி (யுத்த. 378); என்பதில் காண்க. 'மறைகள் யாவையும் ஓதலெம்' (ஆரணிய. 131); முதலிரண்டடிகட்கு (ஒப்பு) 'செய்யாமற் செய்தவுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது' (குறள். 101); 'உதவிக் கைம்மா றென்னுயிரென்ன வுற்றெண் ணிலது, மற்றுங்கவன்றன்னது' (திருவாய். 7:9:10); பழியும் காத்து, பகையும் காத்து: என்பனவற்றில் காத்து, தடுத்து எனும் பொருளில் நின்றது; 'கணமேயுங் காத்தலரிது' (குறள். 29) என்ற இடத்துப்போல.

பி - ம். 1. உதவிக்கு.
2. உயிரின் முற்றுமோ, உயிரும் காத்தனை.
3. காத்தனை ; பகையும் காத்தனை.
4. சாத்துநம் ; மரபும், காத்தநீ. 111

2749. தாழ்வு மீங்கிறைப் பொழுது தக்கதே
வாழி யெம்பிமே லன்பு மாட்டலால்
ஏழும் வீயுமென் பகர்வ தெல்லைவாய்
ஊழி காணுநீ யுதவி னையரோ.

'எம்பிமேல் அன்பு மாட்டலால்-என் தம்பிமீதுள்ள அன்பினை நிலை பெறுத்திக் காண்பித்ததால், ஈங்கு இறைப்பொழுது தாழ்வும் தக்கதே - இப்போது ஒரு கணப்பொழுது (எங்கட்குற்ற) தாழ்வும் வேண்டப்படுவதே; வாழி - வாழ்ச்சியோடிருந்து, ஊழி காணும் நீ - பிரளயகாலத்தையும் காணவல்ல நீ, எல்லை வாய் - தக்க காலத் தில், உதவினை - உதவி செய்தாய்; (அவ்வாறு செய்திலையேல்)

என் பகர்வது - என்ன சொல்வது; ஏழும் வீயும் - (உலகேழுமே) அழிவெய்தியிருக்கும். அரோ : அசை.

மாட்டுதல் : நிலைபெறுதல். ஏழு : உலகம் ஏழு. ஊழி காணு நீ : சுந்தர. 561. (ஒப்பு) 'உகம்பெய ரூழிக்காற்றின் உலைவிலா மேருவொப்பான்' யுத்த. 2502. 'ஊழிகாண்குறு நினதுயிரை யோர்கிலாய்' (யுத்த. 316)

பி - ம். 1. தாழ்விலிங்கு, தாழவிங்கு, தாழ்த்ததேல்.

2. மாட்டிவான்.

3. ஏழும் விழும்; எல்லையின், எல்லை நாள்.

4. கான நீ; காலமும். 112

2750. இன்று வீகலா தெவரு மெம்முடன்
நின்று வாழுமா நெடிது நல்கினய்
ஒன்று மின்னனோ யுறுகி லாதுநீ
என்றும் வாழ்தியா லினிதெ னேவலால்.

'இன்று - (மேகநாதன் அயன் படையை விடுத்த) இந் நாளில், வீகலாது - (எவரும்) இறந்தொழியாது. எம்முடன் நின்று - எம் மோடும் இருந்து, நெடிது வாழுமா நல்கினய் - நீண்ட காலம் வாழ்ச்சியுறுமாறு அருளினை; (இங்ஙனம் அருளிய) நீ - நீ, இன்னல் நோய் ஒன்றும் உறுகிலாது - துன்பம் விளைக்கத்தக்க பிணியொன் றும் அடையாது, இனிது - இன்பமாக, என் ஏவலால் - என் ஏவலி னால், என்றும் வாழ்தி - என்றும் வாழ்வாயாக, ஆல் : அசை.

வாழுமாறு என்பதில் ஈறுகெட்டது. இன்னலும் நோயும் என உம்மைத் தொகையாகக் கோடலுமாம்; என்றும் வாழ்தி : சிரஞ்சீவியாக வாழ்க என்றபடி. (ஒப்பு) 'பேரீசன், முன்னுன பூதங்கள் யாவுமுடி வுற்றிடினும், உன்னு ளுலவாய்நீ யென் போலுளை யென்றான்' (யுத்த. 299).

பி - ம். 2. வாழுநாள்,

4. வாழுவாயினிதின். 113

## பிறரும் அநுமனைத் தொழுது வாழ்த்தல்

2751. மற்றை யோர்களு மனுமன் வண்மையால்
பெற்ற வாயுளார் பிறந்த காதலார்
சுற்று மேயினர் தொழுது வாழ்த்தினர்
உற்ற வாறெலா முணரக் கூறினன்.

மற்றையோர்களும் - மற்றையவரும், அநுமன் வண்மையால் - அநுமனுடைய வள்ளன்மைப் பண்பினால், பெற்ற ஆயுளார் - பெற்ற வாழ்நாளை யுடையவரும் (பிழைத்தெழுந்தவரும்), பிறந்த காதலார் - (அநுமனிடம்) உண்டாய அன்புடையவருமாகி, சுற்றும் மேயினர் - (அவனைச்) சுற்றிலும் பொருந்தியவராய், தொழுது வாழ்த்தினர் - வணங்கித் துதித்தார்கள்; உற்ற ஆறு எலாம் உணர கூறினன் - நிகழ்ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் அவர்கள் அறிந்து கொள்ளுமாறு (அவ்வநுமன்) சொன்னான்.

பெற்ற ஆயுளார், பிறந்த காதலார். வடமொழி நடை.

பி - ம். 1. வன்மையால்,
3. மேவினர், எய்தினர்; வாழ்த்தினர்க்கு.
4. கூறினரி. 114

## சஞ்சீவி மலையை இருந்த இடத்துக்கொண்டு வைக்கும்படி சாம்பன் அநுமனுக்குக் கூறுதல்

2752. உய்த்த மாமருந் துதவ வொன்னலார்
பொய்த்த சிந்தையா ரிறுதல் பொய்க்குமால்
மொய்த்த குன்றையம் மூல மூழைவாய்
வைத்து மீடியால் வரம்பி லாற்றலாய்.

'வரம்பில் ஆற்றலாய் - எல்லை காண முடியாத வன்மை யுடையவனே! மா மருந்து - நீ கொணர்ந்த பெரு மருந்து; உதவ - உதவி புரிவதால், பொய்த்த சிந்தையார் - பொய்த்த உள்ளத்தை யுடையரான, ஒன்னலார் - (நமது) பகைவர், இறுதல் - உயிர் முடிவெய்தலும்; பொய்க்கும் - தவறிவிடும்; (இம் மலை இங்கே யிருப்பின்); மொய்த்த குன்றை - நல் மருந்துகள் அடர்ந்துள்ள இந்த மலையை, மூல மூழைவாய் வைத்துமீடி - அஃது முன்னிருந்த இடத்தில் தானே வைத்து மீள்வாயாக', (என்றான் சாம்பன்). ஆல்: அசை.

மூழை: முழை நீண்டது. குகையெனப் பொருள்படும். இங்கே ஆழமான பள்ளம் என்க. முதற்கண் அம் மலையைக் கொணரச் சொல்லி வழி முதலியன கூறியவனாகலின், அச் சாம்பனே அதனை மீட்டும் எடுத்துச் செல்லுமாறு மொழிந்தான். 'பொழுதிறை தாழாதென் சொன்னெறி தரக் கடிது போதி' (யுத்த. மருத்து. 2660); மொய்த்த: மூலிகைகள் அடர்ந்த. மீடி: மீள்; தீ.

பி-ம். 1. ஒன்றலாப்,

2. போக்குமால்,

3. மூலவூழிவாய், மூலவூழின்வாய். 115

அநுமன் சஞ்சீவி மலையை மீட்டுங் கொண்டு செல்லுதல்

2753. என்று சாம்பவ னியம்ப வீதரோ
நன்று சாலவென் றென்று நாழிகைச்
சென்று மீள்வனென் றுணர்ந்து தெய்வமாக்
குன்று தாங்கியக் குரிசில் போயினன்.

என்று சாம்பவன் இயம்ப - என்று கரடிக்கிறைவனான சாம்பன் சொல்ல, 'ஈது சால நன்று - (இவன் பகர்ந்த) இது மிகவும் சிறந்ததொன்று என்று மொழிந்து, ஒன்று நாழிகை சென்று மீள்வன் - ஒரு நாழிகைக்குள்ளாகப் போய் மீண்டு வருவேன்', என்று உணர்ந்து - என்று மனத்தில் கொண்டு, மா - பெரிய, தெய்வம் குன்று தாங்கி - தெய்வ மலையைச், சுமந்துகொண்டு, அ குரிசில் போயினன் - அந்தப் பெருந்தகையான அநுமன் சென்றான். அரோ: ஈற்றசை.

தெய்வ மாக்குன்று: மருத்துமலை. குரிசில்: பெருமையாளன்.

பி-ம். 1. சாம்பனுண்டு,

2. சாலவென்றுவந்தோர், உவந்து,

3. ஒன்றி, ஒன்றில்; எழுந்து,

4. தாங்கிய. 116

மருத்துமலைப் படலம் முற்றும்.

---

இப் படலத்தினை ஒட்டி முதனூல் கூறுவது பின் வருமாறு:

போர்க்களத்தில் இராம இலக்குமணர் இருவரும் பிரமன் படையால் அவதியுறுங்கால், வானரப் படை யனைத்தும் மயங்கி விழுந்தன. அப்பொழுது அறிஞன் ஆன வீடணன், இராம இலக்குவர் மயங்கியதாகக் காட்டியது, பிரமன் படையைப் பெருமைப் படுத்துவதற்காகவே என்றும், அது பற்றித் துயருறு தல் மடமை என்றும் கூறினன். இந் நிலையில் தன் நினைவு வரப் பெற்ற அநுமனும் வீடணனும் கொள்ளிக் கட்டையைக் கையிற் கொண்டு சமர்க்களத்தில் உயிரொடுங்கியிருந்த குரங்கு வீரர்களைக் கண்டனர்; உடனே அவ்விருவரும் சாம்பனை அணுக, சாம்பன் இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் ஓஷதி மலையைக் கொணரும்படி கூறினன். கூறுங்கால் இமய மலையையும், ரிஷப மலைச் சிகரங் களையும்கூறி, அவ்விரு சிகரங்களுக்கும் இடையில், ஓஷதி மலையுள்ள தென்றும், அங்கு நான்கு ஓஷதிகள் காணப்படும் என்றும், அம் மூலிகைகளின் பெயர் மிருத சஞ்சீவினி (இறந்தவர்களைப் பிழைப்பிப்பது), விசல்யகரணீ (அம்பினால் தோன்றிய புண்ணை ஆற்றுவது), ஸாவர்ண்யகரணீ (பட்ட புண்வாயிலைத் தெரிய வொட்டாது ஒரே நிறமாக்குவது), ஸந்தானகரணீ (அறுபட்ட உறுப்பை ஒட்டச் செய்வது) என்றும் மொழிந்தான். உடனே அநுமன் திரிகூட மலைமீதேறிச் சென்று பின்னர் இங்காமலய மலையை அடைந்தான். வெகு வேகமாகச் சென்று சூரிய மண்டல வழியை அடைந்து வருத்தமின்றிச் செல்லலானான். பின்னர் இமயத்தைக் கண்டான். அங்கே பிரமதேவனுடைய மாளிகையை யும்,உருத்திரமூர்த்தி விளையாட்டாகப் பாணம்விடுமிடமும்,பாதாள லோகத்துக்குப் போகும் வழியையும் கைலை மலையையும் ரிஷபச் சிகரத்தையும் ஓஷதி மலையையும் கண்ணுற்றான். மூலிகைகளைத் தேடத் தொடங்கினன்; மூலிகைகள் கட்புலனாகாமல் ஒளித்துக் கொண்டன. அநுமன் சினம் கொண்டு ஓஷதி மலையையே வேருடன் அகழ்ந்து கொண்டு விண்ணிற் கிளம்பிச் சென்றான். இவன் மலையுடன் வருவதைக் கண்ட வானரர்கள் பெரு முழக்கம் செய்தனர். அரக்கர்கள் பயங்கரக் கூச்சலிட்டார்கள். ஓஷதி

மலை போர்க்களத்துற்ற அளவில் அனைவரும் உயிர் பெற்றெழுந்தனர். இங்ஙனமாகவும், வானரர்களால் கொல்லப்பட்ட அரக்கர்கள் இராவணனுடைய கட்டளையால் ஆழியில் தள்ளப்பட்டனர் ஆகலின், அந்த அரக்கர்கள் மட்டும் உயிர் பெற்றெழவில்லை. பின்னர் அநுமன் மூலிகைகள் நிரம்பிய அம் மலையை மீட்டும் தூக்கிக் கொண்டுசென்று, இமவானிடம் வைத்துவிட்டு இராமபிரானை வந்தடைந்தான்.

---

# 24. களியாட்டுப் படலம்

அரக்க மாதர் இராவணன் காணுமாறு கள்ளைப் பருகிக் களியா லாடியதைக் கூறும் படலம் என விரியும். இது களி யாட்டுப் படலம் என்றும் சில பிரதிகளில் காணப்படுகிறது.

வேறு

இராவணன் மகளிரின் களியாட்டங் காணுதல்

2754. இன்னதித் தலைய தாக
விராவண னெழுந்து பொங்கித்
தன்னையுங் கடந்து நீண்ட
வுவகையன் சமைத்த கீதங்
கின்னரர் முதலோர் பாட
முகத்திடைக் கிடந்த கெண்டைக்
கன்னிநன் மயிலன் னாரை
நெடுங்களி யாட்டங் கண்டான்.

இ தலை இன்னது ஆக - இவ்விடத்து) (இராமபிரானுடைய சேனையில் நிகழ்ந்த செயல் இங்ஙனமாக, (பிரமன் படையால் பகைவர் அனைவரும் உயிரற்றுக் கிடந்தார் என்று அறிந்ததனால்,) இராவணன் பொங்கி எழுந்து - இராவணன் ஊக்கத்துடன் எழுந்து, தன்னையும் கடந்து நீண்ட உவகையன் - தன்னையும் விஞ்சிப் பரந்த மகிழ்ச்சியை யுடையவனாய், சமைத்த கீதம் - இசை இலக்கணத்துக்கேற்ப அமைக்கப் பெற்ற இசையை, கின்னரர் முதலோர் பாட - கின்னரர் முதலானோர் பாட (ச் சென்று தம்) முகத்திடை கிடந்த - முகத்தினிடத்துத் தங்கிய, கெண்டை - கெண்டை போன்ற விழிகளையுடைய, கன்னி - இளம் பருவம் வாய்ந்த, நல் மயில் அன்னாரை - சிறந்த மயில் போன்ற சாயலை யுடையவரான மாதர்களின்; நெடு களி ஆட்டம் கண்டான் - நீண்ட களியாட்டத்தைக் கண்ணுற்றான்.

கம்பர் காவியம் ஓர் நாடக முறையில் அமைந்ததொன்று என்பர் அறிஞர். மருத்து மலையில் இறந்துபட்டவர்கள் உயிர் பெற்றெழுந்ததை அறியாத நிலையில், அவர்கள் அனைவரும் மரித்தனர் என்றே மனத்துக்கொண்டு மகோன்மத்தனுய்க் களியாட்டம் காண்பவனுடைய பெரிய வீழ்ச்சியும், அவன் அருமைத் திருப் புதல்வனான இந்திரசித்தின் மரணமும் அடுத்துக் காணப்படும். அளவுகடந்த இன்பத்தின் இறுதியில் ஆற்ருெணுத் துன்பம் நிகழும் என்ப. இங்ஙனம் வாழ்வு தாழ்வுகள் அடுத்தடுத்து வரும்; 'வாழ்வினை நுதலிய மங்கலத்துநாள், தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினன்' (அயோத்தி. நகர் நீ. 163). இங்கே வாழ்க்கையின் படப்பிடிப்புக் காணலாம். தன்னையுங் கடந்து நீண்ட உவகை: அளவு மீறி எழுந்த மகிழ்ச்சி. முகத்திடைக் கிடந்த கெண்டை: முகத்தில் பதிந்து நின்ற கெண்டை மீன் போன்ற கண்கள்! இலக்கணை. 'கெண்டைத் தடங்கண்ணாள் உள்ளேகிளுகிளுத் தாள்' (யுத்த. 1653) 'கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டு தந்த' (திருக்கோவை. 6); மயில்: சாயலால் மயில்.

பி - ம். 1. இத்தலையவாக.

2. கடக்க; சமயந்தன்னில்,

3. கின்னர முதல்வர்.

## அரம்பையர் முதலோர் நிருத்தம் செய்துகொண்டு வருதல்

2755. அரம்பையர் விஞ்சை மாத
ரரக்கிய ரவுண மாதர்
குரும்பையங் கொங்கை நாகர்
கோதைய ரியக்கர் கோதில்
கரும்பினு மினிய சொல்லார்
சித்தர்தங் கன்னி மார்கள்
வரம்பறு சும்மை யோர்கண்
மயிற்குல மருள வந்தார்.

அரம்பையர் - வானுலக மாதர்களும், விஞ்சை மாதர் - வித்தியாதர மகளிரும், அரக்கியர் - இராக்கதப் பெண்களும், அவுணர் மாதர் - அவுண மங்கையரும், குரும்பை அம் கொங்கை நாகர் கோதையர் - குரும்பை போன்ற அழகிய தனங்களையுடைய நாக கன்னியரும், ¹இயக்கர் கோதையர் - யக்ஷமடவாரும், கோதுஇல் கரும்பினும் இனிய சொல்லார் சித்தர் கன்னிமார்கள் - கோது (சக்கை) இல்லாத கருப்பஞ் சாற்றினும் இனிமை வாய்ந்த மொழியினையுடைய சித்தர் வனிதையரும் என்ற, வரம்பு அறு - எல்லையற்ற சும்மையோர்கள் - கூட்டத்தார், மயில் குலம் மருள வந்தார் - மயிற் குழாங்களும் மருட்சி யுறுமாறு வந்தார்கள்.

வித்யாதர மாதர்: விஞ்சை மாதர் என நின்றது. அரக்கர் வேறு அவுணர் வேறு; மகா வித்வான், ரா. இராகவையங்கார் எழுதிய தமிழ் வரலாறு பார்க்க. குரும்பை: மகளிர் தனத்திற் குவமை. 'குவவின கொங்கை குரும்பை' (திருக்கோ. 108); 'குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு' (தேவா. 621 : 1); 'முதிர் கோங்கின் முகையென முகஞ் செய்த குரும்பையென' (கலித். 56) கோதில் கரும்பு: கோது; கருப்பஞ் சக்கை; 'கரும்பூர்ந்த சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன், கோது போற் போகும் உடம்பு' (நாலடி. 34) இந்தக் கரும்பு . சற்றும் கோதில்லைகாண்' (திருக்காளத்தி. உலா.); கரும்பினுமினிய சொல்லார்; 'கன்னி நடக்கும நடை கற்றாள் கரும்பு கசக்கும் மொழி பெற்றாள்' (பிரபு. மாயை உற்பத்தி, 57); 'கரும்புங் கசந்துபின் தேனுமுவர்த்தறக் கைத்ததுவே' (கந்தரலங். 6) 'சும்மை: தொகுதி. சும்மை செய்து' (சுந்தர. 778); மயிற் குலம் பெண்களின் சாயல் கண்டு மருண்டது என்க. சாயலை இயல் என்றும் அழகின் மென்மை என்றும் பகர்வர். 'விழியாற் பிணையாம் விளங்கியலான் மயிலாம்' (திருக்கோ. 11) 'விளங்குகின்ற சாயலான் மயிலெல்லாம்' என்பது பேராசிரியர் உரை. 'மயிலியற் சாயல்' என்று கூட்டியும் உரைப்பர் அரிச்சந்திர புராண ஆசிரியர்

பி - ம். 2. தோகையர்,

4. மகளிர் கூடி.

2756. மேனகை யிலங்கு வாட்கட்
டிலோத்தமை யரம்பை மெல்லென்
தேனகு மழலை யின்சொ
லுருப்பசி முதல தெய்வ
வானக மகளிர் வந்தார்
சில்லரிச் சதங்கை பம்ப
ஆனக முரசஞ் சங்க
முருட்டொடு மிரட்ட வாடி.

மேனகை - மேனகையும், இலங்கு 'வாள்கண் திலோத்தமை - விளங்கும் வாள் ஒத்த விழிகளையுடைய திலோத்தமையும், அரம்பை - அரம்பையும், தேன் நகு - தேன்போல் விளங்கும், மெல் என் - மிருதுவான, மழலை இன் சொல் - முற்றாத இனிய சொல்லை யுடைய, உருப்பசி - உருப்பசியும், முதல - முதலான, தெய்வம் வான் அகம் மகளிர் - தெய்வலோகத்து வனிதையர்கள், ஆனகம் முரசம் சங்கம் - ஆனகம் என்ன வழங்கும் முரசம் சங்கம் என்ற வாத்தியங்களுடனும், முருட்டொடும்-முருடுஎன்னும் பறையுடனும், இரட்ட - ஒலித்துக் கொண்டிருக்க, சில் அரி - சிலவாகிய அரிகளை யுடைய, சதங்கை பம்ப - சதங்கை சத்திக்குமாறு, ஆடி வந்தனர் - நர்த்தனம் செய்து கொண்டே வந்தனர்.

இவ்வாறு வருவதை நடை கேளிக்கை என்பர். மேனகை; 'வீடு மீட்குறும் மேனகை மேனகை விளங்க' (சுந்தர. 1090); உருப்பசி யுடைவாளேந்தின டொடர, மேனகை வெள்ளடையுதவ' (சுந்தர. 408) திலோத்தமை; 'சிந்தோடரி யுண்கண் திலோத்தமை காதல் செற்ற' (கிட்கிந்தா. 274); சிறந்த அழகு வாய்ந்த மகளிரிடமிருந்து திலம் அல்லது எள் அளவாக எடுத்துக் கூட்டிப் பேரழகியாகப் பிரமனுற் படைக்கப்பட்டவள் ஆதலின், இப் பெயர் பெற்றுள் என்ப. தேன் நகு: தேனையும் ஏளனம் செய்கின்ற மழலை எனினுமாம். மழலை : மழலைச் சொற் கேளாதவர் (குறள். 66) மழலை எழுத்து வடிவில்லாத சொல்; 'மெய்பெரு வெழுத்துயிர்க் கும் மழலை' 'மழலை எக்காலத்திற்கும் கூறுப' (சீவக. 181); 'உண்டு மகிழ்தட்ட மழலை நாவிற் பழஞ் செருக்காளர்' (மதுரைக். 668 - 669) சில் அரிச் சதங்கை : சிறு மணிகள் உள்ளிடப் பெற்று ஒலிக்கும் சதங்கை : 'குமரேசரிரு, தாளும் சிலம்பும்

சதங்கையும் தண்டையுஞ் சண்முகமும்' (கந்நரலங். 38); பம்ப: ஒலிப்ப; 'பம்பு பொற்கழல்கள்' (யுத்ந. 1358); ஆனகம்: இசைக் கருவி; இது ஆனக துந்துபி என்று சேர்ந்தே வழங்கும். இரட்ட: இரட்டுதல் மாறி மாறி ஒலித்தல்; 'படுமணியிரட்டும்' (புறநா. 72).

பி - ம். 1. விசயவாட்கட்; விஞ்சைவாட்கட், விசயவொண்கட்; மெல்லன்,

2. உருப்பசி முதலார்,

3. வானவர் சல்லரிப்பாண்டில்வேணு, சில்லரி மழலைமாழ்க, சில்லரி மழலைப்பாடல், சில்லரிப் பாண்டிமரழ்க, சில்லரி சதங்கை காழ்இ, ஆர்வமென் கொங்கை மாழ்க,

4. ஆனசிர்; முருடொடும். 3

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

வடித்திடு மமுதத் தேறல் மாந்தினர் எவரும் உள்ளம்
பிடித்தது களிப்பின் வெற்றி பிறந்தது காம வேகம்
எடுத்தனர் மகர யாழின் இன்னிசை யினிமை யோடு
நடித்தனர் நங்கை மார்கள் நாடகத் தொகையின் பேதம்.

## கள்ளுண்டமையால் மடந்தைமாரிடம் தோன்றிய வேறுபாடுகள்

2757. தோடுண்ட சுருளுந் தூங்குங்
குழைகளுஞ் சுருளிற் றோன்றும்
ஏடுண்ட பசும்பொற் பூவுந்
திலதமு மிலவச் செவ்வாய்
மூடுண்ட முறுவன் முத்து
முள்ளுண்ட முளரிச் செங்கட்
காடுண்டு புகுந்த தென்ன
முனிந்தது கறைவெண் டிங்கள்.

தோடுண்ட - பனந்தோட்டினால் செய்தது போன்ற, சுருளும் - பொன்னாற் பண்ணிய சுருள் என்னும் அணியும், தூங்கும் குழைகளும் - தொங்குகின்ற காதணிகளும், சுருளில் தோன்றும் - சுருள்

என்ற முடி வகையில் தோன்றும், ஏடு உண்ட பசு பொன் பூவும் - இதழுடன் கூடிய பசும் பொற் பூவும், திலதமும் - நெற்றிப் பொட்டும், இலவம் செவ்வாய் - இலவம் பூப்போன்ற செந்நிறத்த வாயால், மூடுண்ட - மூடப் பெற்ற, முறுவல் முத்தும்-புன் சிரிப்புக் காட்டுகின்ற முத்துப் போன்ற பற்களும், முள் உண்ட - முள்ளைத் தன்னகம் கொண்டுள்ள, முளரி செம்கண் - தாமரை நிகர்த்த விழி களும் என்றவற்றைக் கொண்ட, காடு உண்டு புகுந்தது என்ன - (தனக்குப் பகையான முளரிக் காடு தன்னை மறைக்கும் வண்ணம்), புகுந்தது என்ன - புகுந்துள்ளது என்ற காரணத்தால், கறை வெண் திங்கள் - களங்கத்துடன் கூடிய வெண்ணிறமான சந்திரன், முனிந்தது - வெகுண்டது.

மகளிர் கள்ளுண்டமையின் அவர்களின் முகமாகிய மதிகள் தம் இயற்கை நிறத்தை நீத்துச் செந்நிறத்தை யடைந்தன. அந் நிலையில் தம்மிடத்துத் தானே தாம் பகைக்கின்ற தாமரை முதலிய வற்றைத் தன்னிடம் கொண்டு சிவப்பேறியதாகக் கற்பனை செய்யப் பட்டது. தோடு; 'தோடே மடலே யோலை யென்கு' (தொல். மரபி. 86); 'இரும்பனை வெண்டோடு மலைந்தோனல்லன்' (புற நா. 45); 'வண்டோட்டு நெல்லின் வாங்கு கதிர்க் கழனி' (நெடுநல். 22) 'தோடுடைய செவியன்' தேவா. 61) குழை: காதணி; 'கனங்குழாய், கொல்லுலை கூடத் திறல்' (நீதிநெறி. 14) குழை: மகளிர் முதல் முதல் சிறு தழைகளை யுருட்டிக் காதில் அணிவர்; அச் சொல் நாளடைவில் 'உயர் பொருட்பேறு' பெற்றுப் பொற் குழையாகப் பரிணமித்தது. 'காதார் குழையாட' (திருவெம். 14); ஏடு: இதழ். 'ஏடேயிதழே' (தொல். மரபி. 86): திலதம்: நெற்றிப் பொட்டு. 'தெரிமுத்தம் சேர்ந்த திலதம்' (கலித். 92); இது திலகம் எனவும் வழங்கும். முள்ளுண்ட முளரி; இயற்கை யடைமொழி; 'தூம்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 2958) என்ற இடத்துப் போல. முளரி: தாமரை; முள்ளாலாகிய அரை அல்லது தண்டினையுடையது; இதைக் காரணவிடுகுறிப்பெயர் என்பர் இலக்கண நூலார். காடு: கூந்தற் காடு. கறை வெண் திங்கள்: பூரணமதி; பிறைக்குக் களங்கம் தோன்றாதாகலின்; தற்குறிப்பேற்றவணி; திங்கள்: உருவகம். சுருள் குழை பூதிலகம் முத்து என்றவற்றைத் துணைக்கொண்டு (தனக்குப் பகையாகிய) முளரிக் காடு புகுந்ததனால் திங்கள் முனிந்தது என்க. (அரிச். பு. விவாக. 12) காண்க.

பி - ப. 1. தூண்டும்; சுருளிற்றேய்ந்து, தொத்தும்கோதை,

2. தேடுண்ட; இலங்கச்,

3. ஊடுண்ட; முள்ளுடைக் கமலச் செங்கேழ், உலப்பிலாக் கமலச் செங்கேழ்,

4. பரந்தென்ன! புகுதற்கொத்த புருவமும். 4

2758. முளைக்கொழுங் கதிரின் கற்றை
முறுவல்வெண் ணிலவு மூரி
ஒளிப்பிழம் பொழுகும் பூணி
னுமிழிள வெயிலு மொண்பொன்
விளக்கையும் விளக்கு மேனி
மிளிர்கதிர்ப் பரப்பும் வீச
வளைத்தபே ரிருளும் கண்டோ
ரறிவென மருளு மாதோ.

முளை - தோன்றுதலை யுடைய, கொழு கதிரின் கற்றை - கொழுவிய ஒளித் தொகுதியைக் கொண்ட, முறுவல் - புன்னகையாகிய, வெள் நிலவும் - வெண்ணிறத்த நிலவும், மூரி - மிக்க, ஒளி பிழம்பு ஒழுகும் - ஒளித்திரள் வெளிப்படுகின்ற, பூணின் - அணிகளிலிருந்து, உமிழ் - வெளியாகின்ற, இள வெயிலும் - இள வெயிலும, ஒண் பொன் - ஒள்ளிய பொன்போல, விளக்கையும் விளக்கும் - விளக்கையும் விளங்கச் செய்ய வல்ல (அங்கு வந்துள்ள மாதர்களின்), மேனி - மேனியிலிருந்து, மிளிர் கதிர் - கிளர்ந்து எழுகின்ற, கதிர் பரப்பும் வீச - கிரணத் தொகுதிகளும் எறிதலால், வளைத்த பேர் இருளும் - சூழ்ந்து நின்ற பெரிய இருள்களும், கண்டோர் அறிவு என - (இந்தக் கூத்தினைக்) கண்ணுற்றவரின் மனம் போல, (நிலவும் வெயிலுமான) இருசுடரும் மருளும் - மயங்கும். மாது ஓ: அசை.

விளக்கையும் விளக்கும் மேனி என்றது ஒளிதரும் விளக்கினைக் காட்டிலும் ஒளிவாய்ந்த மேனி என்பது பற்றி.

பி - ம். 1. நிலவின்,

2. ஒழுகு; ஊடுமிழ், உதிக்குறு,

3. விரிகதிர்; வீசி,

4. வளைத்த பேரிருளும் கண்டோர் அறிவையும்; மருட்டும்; மயக்கும். 5

2759. நற்பெருங் கல்விச் செல்வ
நவையறு நெறியை நண்ணி
முற்பய னுணர்ந்த தூயோர்
மொழியொடும் பழகி முற்றிப்
பிற்பய னுணர்த றேற்ருப்
பேதைபால் வஞ்சன் செய்த
கற்பனை யென்ன வோடிக்
கலந்தது கள்ளின் வேகம்.

நல்பெரு கல்வி செல்வம் - சிறந்த பெரிய கல்விச் செல்வத்தாலே, நவை அறு நெறியை நண்ணி - குற்றமற்ற வழியைப் பின்பற்றி, முன்பயன் உணர்ந்த - மேலே விளையக்கூடிய பயனை அறிந்து தெளிந்த, தூயோர் மொழியோடும் - தூய்மையான தன்மையுள்ள பெரியோரின், இனிய உபதேச மொழியோடும், பழகி முற்றி - பழகி அறிவு முதிர்ந்து, பின் பயன் - பின்வரும் பயனையும் அறிய வேண்டியதாயிருக்க, உணர்தல் தேற்ரு - (அவ்வாறு) அறிய மாட்டாத, பேதைபால் - அறிவிலியிடத்தில், வஞ்சன் செய்த - வஞ்சகன் செய்த, கற்பனை என்ன - கற்பனைச் செயல் போன்று, கள்ளின் வேகம் கலந்தது - கள்ளின் வேகமானது (அம்மகளிடம்) விரைந்து கலந்தது.

நற்பெருங் கல்வி : நற்பெருந்தவத்தாள் (சுந்தர. 1273); கல்வியின் உயர்வும் பரப்பும் கூறப்பட்டன. நற்கல்வி : வாலறிவன் நற்ருள் தொழுமாறு செய்யும் பரஞானக் கல்வி : பெருங்கல்வி. பரந்த அறிவு நூற்கல்வி, கல்விச் செல்வம்: 'கல்வியே மக்கட் கருந்தனம்' நவையறு நெறி - நெறிகள் நான்கில் சன்மார்க்க நெறி; முற்பயன் உணர்ந்த தூயோர் : திரிகால ஞானிகள் : 'உற்றது கொண்டு மேல் வந்துறு பொருள் உணரும் கோளார்' (அயோத்தி. மந்திரப். 7); உவமையணி. கற்பவை கற்றுணர்ந்தும் பேதையென நிற்பவர் இங்குக் குறிக்கப்பட்டனர். 'ஓதியுணர்ந்தும் பிறர்க் குரைத்தும் தானடங்காப் பேதையிற் பேதையாரில்' (குறள். 834); பேதையாகலின் பிறன் கற்பனைக் கெளிதில் வசப்பட்டு விடுவான்; அதுபோன்று கள்ளின் வேகம் பரவிற்று என்க. (ஒப்பு) 'மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்தது' (ஆரணிய 639). இங்கு 'பழகி முற்றிப்பிற்பயன் உணர்தல் தெற்ரு' என்றதன் குறிப்பு: அபரஞானமாகிய நூலுணர்வு சால இருப்பினும், பரஞானமாகிய மெய்யுணர்வு இன்றேல் தெளிவு ஏற்படாது : இறைவன் அருள் அவசியம் வேண்டும் என்ற குறிப்புக்காணலாம் : 'சமயங்களான

வற்றின் நல்லாறு தெரிந்துணர்ந்தும் நம்பரருளாமையினால் அமண் சமயங் குறுகுவார் (பெரிய பு. திருநாவு. 37) என்றது காண்க.

பி - ம். 1. கல்விச்செல்வி ; நெறியான்.

3. தோற்றுப் ; பேதைபோல், பேதைமை.

4. கலந்த.

2760. பலபட முறுவல் வந்து
பரந்தன பனித்த மெய்வேர்
இலவிதழ் துடித்த முல்லை
யெயிறுவெண் ணிலவை யீன்ற
கொலைபயி னயன வேலின்
கொழுங்கடை சிவந்த கொற்றச்
சிலைநகர் புருவ நெற்றிக்
குனித்தன விளர்த்த செவ்வாய்.

முறுவல் பலபட வந்து பரந்தன - புன்னகை பலவாறாகத் தோன்றிப் பரவின ; மெய் வேர் பனித்த - உடல் வேர்வைத் துளியைக் கொண்டன ; இலவு இதழ் துடித்த - இலவ மலர் போன்ற உதடுகள் துடித்தன ; முல்லை எயிறு - முல்லை யரும்பு ஒத்த பற்கள், வெண் நிலவை ஈன்ற - வெண்ணிறமான ஒலியை வீசின ; கொலை பயில் நயனம் வேலின் - கொலைத் தொழிலில் (ஆடவரை வருத்துவதில்) பழகினவேற்படை போன்ற, கொழுகடை கண் - கொழுவிய விழிகளின் ஓரங்களில், சிவந்த - சிவப்பேறின ; சிலைநிகர் புருவம் நெற்றி குனித்தன - வில்போன்ற புருவங்கள் நெற்றிமீது வளைந்தன, செவ்வாய் விளர்த்தன - செந்நிறமான வாய் வெண்ணிறம் பெற்றன.

முறுவல் : 'முறிமேனி முத்தம் முறுவல்' (குறள். 1113); இலவிதழ் : 'இலவிதழ்ச் செவ்வாய் காணுயோ நீ' (மணி. 20 : 51); வெண்ணிலவை யீன்ற : 'வீரனும் சிறிது வெண் முறுவல் வெண்ணிலவுக' (ஆரணிய. 22); இயற்கையாகச் செந்நிறம் வாய்ந்த வாய், கட்குடியால் விளர்த்தது எனப்பட்டது. 'கரும்பார் தோள் முத்தம் கழன்று செவ்வாய் விளர்த்து' (சீவக. 231) (ஒப்பு) 'கோதறு குவளை நாட்டங் கொழுநர்கண் வண்ணங் கொள்ளத், தாதுளங் கனியை வென்று துவர்த்தவாய் வெண்மை தோன்றக் காதலங் கள்ளுண்டார் போன் முறை முறை களிக்கின்றாரை'

(சுந்தர. 203); களித்தோன் அவிநயம் கழறுங்காலை, ஒளித்தவை யொளியானுரைத்தலின்னமையும், கவிழ்ந்துஞ் சோர்ந்தும் தாழ்ந்துந் தளர்ந்தும், வீழ்ந்த சொல்லொடு மிழற்றிச் சாய்தலும்) களிகைக் கவர்ந்த கடைக்கணேக்குடைமையும்' (சிலப். 3 : 85, பார்க்க.

பி ம். 1. பயந்தன ; வெர்த்தமெய்ய, பனித்த மெய்வேர்வு.

2. வெளுத்த ; வெற்கள், வேல்கள்.

4. நெற்றிக் ; குளிர்ந்தன ; வெளுத்தசெவ்வால், துவர்த்தசெவ்வாய், மயக்கஞ் செயல். 7

2761. கூந்தலம் பாரக் கற்றைக்
கொந்தளக் கோலக் கொண்டல்
ஏந்தக லல்குற் றேரை
யிகந்துபோ யிறங்க யாணர்ப்
பூந்துகி லோடும் பூசன்
மேகலை சிலம்பு பூண்ட
மாந்தளி ரெய்த நொய்தின்
மயங்கினர் மழலைச் சொல்லார்.

(தமது) கூந்தல் அம்பாரம் கற்றை - கூந்தலின் அழகிய சுமையான தொகுதியாகிய, கொந்தளம் கோலம் கொண்டல் - சுருளாகப் பரந்த அழகிய மேகம், ஏந்து - ஏந்திய, அகல் அல்குல் தேரை - அகன்ற அல்குலாகிய தேரையும், இகந்துபோய் - கடந்து சென்று, இறங்க - தாழ்ந்திருக்க, யாணர் - புதிதான, பூந்துகிலோடும் - அழகிய ஆடையுடனே, பூசல் - ஒலி செய்கின்ற, மேகலை - மேகலை என்னும் இடையணி, சிலம்பு பூண்ட - சிலம்பினை அணிந்துள்ள, மாந்தளிர் எய்த - மாந்தளிரைச் சென்று பொருந்த, மழலைச் சொல்லார் நொய்தின் மயங்கினர் - மழலைச் சொல்லையுடையவரான மாதர் (காலைப் பற்றிக்கொண்ட பேர் யார் என்று) எளிதின் மயக்கமுற்றனர்.

கொந்தளம்: படர் துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமாகப் பரப்பி (பெரிய. பு. சிறுத்தொண்டர். 26); அகல் அல்குல்: அகன்ற வல்குல் அந்நுண் மருங்குல் (யாப். காரிகை); 'அரவகலல்குலார் பால் ஆசை நீத்தவர்க்கே' (திருவிளை. பாயிரம்); தேர்: தேர்த்தட்டு; அல்குல் என்ற சொல் ஆடவரின் அபரபாகத்

தையும், பெண்களின் கருவிந்திரியத்தையும் சுட்டும்; பிற்காலப் புலவர் இச்சொல்லை மகளிரின் ஜனனேந்திரியத்துக்கே வழங்கினர். 'கலை கடந்தகலல்குல்' (பால. நீர்விளையாட்டு. 18); அவிழ்ந்து வீழ்ந்த கூந்தல் நீண்டு அல்குலையும் கடந்து தொங்க, நெகிழ்ந்த மேகலை சிலம்பணிந்த மாந்தளிர் ஒத்த பாதத்தில் வீழ்ந்து கிடந்தது என்க. மழலைச் சொல்லார்: யுத்த. 2756: உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. காலக்கொண்டல்.
2. தேரையிகழ்ந்து தெரிவிழிந்து; இறங்கி.
3. பூந்துகிற் படுமாப்; சிலம்பப்
4. மாந்தரின்: நொய்திநெய்தி, பாதநோக்கி. 8

2762. கோத்தமே கலையி னோடுந்
துகின்மணிக் குறங்கைக் கூடக்
காத்தன கூந்தற் கற்றை
யற்றமத் தன்மை கண்டு
வேத்தவை கீழு ளோர்கள்
கீழ்மையே விளைத்தார் மேலாஞ்
சீர்த்தவர் செய்யத் தக்க
கருமமே செய்தா ரென்ன.

வேந்து அவை கீழ் உளோர்கள் - அரசவையில் தாழ்ந்த பணி புரிபவர்கள், கீழ்மையே விளைத்தார் - கீழ்மையானவற்றையே புரிந்தாராக, மேலாம் சீர்த்தவர் - மேதக்க சிறந்த குணம் உடையோர், செய்யத்தக்க கருமமே செய்தார் என்ன - புரியத்தக்க செயல்களையே செய்பவராவது போல, கோத்த மேகலையினோடும் - கோக்கப்பட்ட மேகலையுடனே, துகில் - ஆடையும், மணி குறங்கை கூட - (இடையை நீத்து) அழகின் தொடையைச் சென்றணைய, அ தன்மை கண்டு - அந்த நிலையைப் பார்த்து, கூந்தல் கற்றை - கூந்தல் தொகுதி, அற்றம் காத்தன - மானக்குறைவு (நேராத வண்ணம்) பாதுகாத்தன. ஏகாரம்: தேற்றம்.

கோத்த மேகலை: 'மடந்தை பொற்றிரு மேகலை மணி எடுக்கவோ கோக்கவோ வென்றான்' (வி. பா. கிருட்டிணன். 255); 'உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே யிடுக்கண் களைவதா

நட்பு' (குறள். 788); என்றபடி மகளிர் புனைந்த மேகலையும் துகிலும் தாம் காவலாக அமைய வேண்டிய இடத்தை விடுத்துக் கீழிறங்கித் துடைப்பகுதியைச் சேர, அந்த அவச நிலையைக் கண்டு, மர்மத் தானம் பிறர் காணாதவண்ணம் நீண்டு தாழ்ந்த கூந்தல் மறைத்தது என்க. (ஒருசார் ஒப்பு) 'தாளின், மின்பெற்ற காஞ்சி தட்ப, விலங்கொடு நடப்பா ளொத்தாள்' (திருவிளை. திருமணப். 137); 'கூந்தல் அற்றம் மறைத்தது' (அகம். 136-ம் காண்க). முன் கவியில் கொந்தளக் கோலக்கொண்டல் அல்குல் தேரையிகந்து போயிறங்கியதன் விளைவு இச்செய்யுளிற் கூறப்பட்டது. கீழோர் கீழ்மையான செயலைப் புரிந்தபோதும் மேன் மக்களா யுள்ளவர், தம்மாலியன்றவரை அந்தக் கீழ்மக்களின் செயல் வெளித்தெரியாத படி உதவிபுரிவர் என்பது குறிப்பு. மேன்மக்கள் கீழ்மக்கள் என்றது கூந்தல் மேலும் மேகலையும் துகிலும் கீழும் இருப்பதால் விளங்கும். 'சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல, பெரியார் பெருமையைச் சார்ந்து' (ஒப்பு): (பால. வரைக்காட்சி. 8); (நாலடி. 177); ஒப்பு நோக்குக. அற்றம்: அவமானம்; 'அற்றமறைக்கும் பெருமை சிறுமைதான், குற்றமே கூறிவிடும்' (குறள். 980).

கம்பநாடர் திருக்குறட் பாக்களைப் பொன்னே போற் போற்றித் தமது பெருங்காப்பியத்தில் ஆங்காங்கே யமைப்பர். இங்கு ஓர் அருமையான குறளைக் கையாண்டது காண்க.

பி - ம். 1. துகின்மலிக்கோவை.

2. அற்றவத். உற்றவத்.

3. கீழுளாரும்: வினைப்பார் மேலோர்.

4. சீர்த்தமை தவிரத்தக்க; செய் வாரென்ன. 8

2763. பாணியிற் றள்ளிக் கால
மாத்திரைப் படாது பட்ட
நாணியின் முறையிற் கூடா
தொருவழி நடையிற் செல்லும்
ஆணியி னழிந்த பாட
லீன்றன ரனங்க வேடன்
தூணியி னடைத்த வம்பிற்
கொடுந்தொழி றுறந்த கண்ணார்.

அனங்கன் வேடன் - மன்மதனாகிய வேடன், (உலகினர் மீது பெய்யாமல்), தூணியின் அடைத்த அம்பில் - அம்பறாத் தூணியின் அடைத்துவைத்த அம்புபோன்று, கொடு தொழில் துறந்த கண்ணார் - (தமது) கொடிய தொழிலை நீத்த விழிகளையுடைய மகளிர்கள், பாணியின் தள்ளி - கையினால் ஒத்தறுக்கப்பட்டு, காலம் மாத்திரை - (பாடவேண்டிய) காலப் பிரமாண அளவினின்று தவறி, துருவம், மத்திமம் மந்தம் என்பவைகட்கு, படாது - அமைந்த அட்சரகாலத்துக்குக் கட்டுப்படாமலும், பட்ட நாணியின் முறையில் கூடாது - நரம்புக் கருவியில் அமைந்துள்ள நரம்பு ஒலிக்கின்ற முறைக்கு ஒவ்வாமலும், ஒருவழி நடையில் செல்லும் - பிறிதொரு வழியில் செல்லுகின்ற, ஆணியின் அழிந்த பாடல் ஈன்றனர் - வரம்பு மீறிய பாடலைப் பாடினர்.

மதுமயக்கத்தால் மகளிர் முறைதவறிப் பாடினர் என்க. அநங்கன் : உருவிலியான மாரன்; அவன் ஆடவரையும் பெண்டிரையும் அம்பு எய்து வருத்துதலால் வேடன் எனப்பட்டான். அந்த மதனனும் இப்பொழுது எய்யவில்லை என்பது தூணீரத்தில் அம்புகளை அடைத்திட்டான் என்பதாற் பெறப்பட்டது- அவ்வாறு செறிக்கப்பட்ட அம்புகள் போன்று, இயல்பாகவே ஆடவரை வருத்தத்தக்க வேல்போன்ற கண்களும், அந்தக் கள்ளுண்ட அவச நிலையில் காம நோயை விளைக்கமாட்டாதனவாயின என்பது கருத்து. 'இரு நோக் கிவளுண்கணுள்ள தொரு நோக்கு, நோய் நோக்கொன்றந்நோய் மருந்து' (குறள்.1091) கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல் நோக்கமிம் மூன்றுமுடைத்து' (குறள். 1085); எனப்பட்ட கண்கள் இப்பொழுது செருகிச் செயலற்றன என்க.

ப - ம். 1. வாணியிற்; வட்ட.
2. நாணினம், நாணியன் : செல்லாது; நடப்பவான.
3. நாணியின்பாணியின் : உமிழ்ந்த, அழித்த, பாட; பயின்றனர், நறவென.
4. துனியினிருந்த; தோற்றும், புரிந்த. 10

2764. வங்கியம் வருத்த கான மாறுகொண் மழலை வாயர்
சங்கையில் பெரும்ப ணுற்ற நிறத்துறை நிரம்பித்தள்ளச்
சிங்கலி னமுதி னேடும் புளியளாந் தேற லென்ன
வெங்குர லெடுத்த பாடல் விளித்தனர் மயக்கம் வீங்க.

வங்கியம் வகுத்த கானம் - நாகசுரத்தில் சுரங்கள் வகைப் படுத்தப்பெற்ற இசைப் பாடலுடனே, மாறுகொள் - மாறுகொள் இன்ற, மழலை வாயர் - நிரம்பா மென் சொல்லைக்கொண்ட வாயினை யுடைய மாதர்கள், மயக்கம் வீங்க - (கள்ளுண்ட) மயக்கம் பெருகவே, சங்கை இல் - குற்றமற்ற, பெருபண் உற்ற - பெரிய பண்ணின் அமைந்த, நிறம் துறை நிரம்பித் தள்ள - விளக்கமான துறையினின்று மிக்கு மாறுபட்டு நீங்க, சிங்கல் இல் அமுதினோடும் - குறைவில்லாத அமுதத்தினோடும், புளி அளாம் தேறல் என்ன - புளிச்சுவை கூடிய கள் தெளிவு (இயைந்தாற்) போல, வெம் குரல் எடுத்த பாடல் விளித்தனர் - கடுமையான குரல் கொண்டு உயர்த்திய பாடலைப் பாடினார்கள்.

வங்கியம் : துளைக்கருவி. எழிலியம்ப : (திருவாச. திருவெம் பாவை. 8); கானம் : பாட்டு, வடசொல். மழலை : யுத்த. 2756. உரைக் குறிப்புக் காண்க. பெரும்பண் : கனராகமுமாம். நிறத் துறை நிரம்பித்தள்ள என்றது சுருதியைச் சாராத பாடல் ஆனதுபற்றி; சிங்கல் : குழைதல்; இங்கே சுவை குன்றாத : 'சிங்குமாற் கால மென்றுணர்ந்த சிந்தையான்' (யுத்த. 2700); 'சிங்கலில் பெரும் பொருளிழந்து சீறினோர்' (யுத்த. 383); 'சிங்காமை விரித்தவன்' (திருவாய்.); 'திருவளித்தும் வீடளித்தும் சிங்காமை' (ஆரணிய. 99); தேறல் : கட்டெளிவு. 'தமிழ் நிகழ் நறவமும் தனித்தண் டேறலும்' (கிட்கிந்தா. 830); பெருங்கூப் பாடாக முடிந்தது பற்றிவிளித்தனர் எனப்பட்டது. (ஒப்பு): கழிபேரிரையான்கணேய்' (குறள். 946); விளித்தல் : பாடல். 'விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்' (திரிகடு. 11).

பி - ம். 1. வங்கியங் குருகுற்றென்வ வங்கியம் வகுத்ததாம் ; வயங்கிய, மழலை மாருச், மழலையீரு, மழலைமானச், மலைத்ததாகச்.

2. பெரும்பானுற்ற, பெரும்பணித்துத் ; துறைதொறுந்திறம்பி, நிறத் துறைதிறம்பித்.

3. அளியளி : விங்கிசைய மூதட்டல், விரிந்தன, விளிந்தனர் ; விங்கி. 11

2765. ஏனைய பிறவுங் கண்டார்க்
கிந்திர சால மென்னத்
தானவை யுருவிற் றேன்றும்
பாவனைத் தகைமை சான்றோர்

மானமர் நோக்கி னுரை
மைந்தரைக் காட்டி வாயால்
ஆனையை விளம்பித் தேரை
யபிநயத் தியற்றி யுற்றூர்.

(பாடுபவராய்) அவை - அந்தந்த மெய்ப்பாடுகள், உருவில் தோன்றும் - தமது உருவில் தோன்றும், பாவனை தகைமை சான்றோர் - அபிநயத்தில் தகுதி வாய்ந்தவர்கள், (இப் போது கள்ளின் மயக்கத்தால்) ஏனைய பிறவும் - பிற அபிநயச் செயல்களும், கண்டார்க்கு - கண்ணுற்றோர்க்கு, இந்திரசாலம் என்ன - இந்திரசாலத் தோற்றம் போன்று நிற்க, மான் அமர் நோக்கினுரை - மான்களும் விரும்பத்தக்க பார்வையினரான மகளிர் வடிவுக்கு (அபிநயம் காட்டச் சொன்னால்), மைந்தரை - ஆடவரை, காட்டி - சுட்டிக் காண்பித்தும், வாயினால் - வாயினால், (பாடும்போது), ஆனையை விளம்பி - ஆனையைச் சொல்லி, அபி நயத்து - அபிநயம் காட்டுங்கால், தேரை இயற்றி உற்றூர் - தேரையைக் காட்டியும் நின்றனர். தான் : அசை.

இந்திர சாலம் வல்லவர்கள். ஒரு பொருளை முன்பு காட்டிப் பின்னர் வெவ்வேறு பொருளாகக் காட்ட வல்லவர்கள்; அவர்களே போன்று மகளிரும் கள்ளுண்ட மயக்கத்தால் ஆடவரையும் பெண்டிரையும் சுட்டிக் காட்டிக் களிற்றினைச் சொல்லித்தேரையை அபிநயித்தனர் எனப்பட்டது. நடிக்குங்கால் அபிநயத்தில் காட்டும் பொருள்கள் விளக்கமாக இருத்தல் வேண்டும். இவர் கள் உண்மையில் நடிப்பில் தேர்ந்தவரே எனினும், கள் மயக்கத் தால் பொருள்களை மாறிக்காட்டினர் என்க. நோக்கினுரை மைந்தரை : உம்மை தொக்கது. தேரைத் தேர் என்றும் கொள்வர். இங்கே பெரிய மிருகமான ஆனையும் அதற்கு நேர் எதிரிடையாகச் சிறிய உருவுடன் கூடிய தேரையும் என்றே கொள்க. தேரை : கல்லினுள்ளே வதியும் ஒருசிறு பிராணி; 'கல்லினுட் சிறு தேரைக்கும் (குசேலோ. 1: 99); 'தேரையார் தெங்கிளநீ ருண்ணூர் பழிசுமப்பர்' (தனிப்பா. பொய்யாமொழி).

பி - ம். 1. ஏனையர் ; கண்டார் : இந்திரஞாலம்.
2. உருவிற் றோரன் ; சான்ற.
3. நோக்கினூர்க்குந் ; காட்டி.
4. அபிநயத்தாற்றி, அவிநயம் தெரிக்கல்.

2766. அழுகுவார் நகுவார் பாடி
யாடுவா ரயனின் றுரைத்
தொழுகுவார் துயில்வார் துள்ளித்
தூங்குவார் துவர்வா யின்றேன்
ஒழுகுவா ரொல்கி யொல்கி
யொருவர்மே லொருவர் புக்கு
முழுகுவார் குருதி வாட்கண்
முகிழ்த்திட மூரி போவார்.

(மது மயக்கத்தால் சிலர்) அழுகுவார் - அழுவார்; நகுவார் - (சிலர்) சிரிப்பார்; பாடி ஆடுவார் - (சிலர்) பாடி ஆடுவார்; (சிலர்) அயல் நின்றுரை தொழுகுவார் - (சிலர்) அருகில் நின்றுரை வணங்குவார்கள்; துயில்வார் - (சிலர்) உறங்குவார்; துள்ளி தூங்குவார் - (சிலர்) துள்ளிச் சோர்வார்; துவர் வாய் இன் தேன் ஒழுகுவார் - (சிலர்) பவளம் போன்ற வாயினின்று கள் கடைவாயில் ஒழுகப் பெறுவார், ஒல்கி ஒல்கி - (சிலர்) ஒசிந்தொசிந்து, ஒருவர் மேல் ஒருவர் புக்கு முழுகுவார் - ஒருவர்மேல் மற்றொருவர் சார்ந்து படிவார், குருதி வாள்கண் முகிழ்த்திட - (சிலர்) உதிரம் போலும் செந்நிறமுற்ற வாளையொத்த கண்ணை மூடிக் கொண்டு, மூரி போவார் - சோம்பல் முறிப்பார்.

துவர் வாய் : பவளம் போன்ற வாய்; 'துவர்த் தொண்டையஞ் செவ்வாய்' (சீவக. 1074) முகிழ்த்தல் : மூடுதல்; 'துயிலெனக் கண்களிமைத்தலு முகிழ்த்தலுந் துறந்தாள்' மூரி போதல் - சோம்பல் முறித்தல்.

பி - ம். 1. அழுகுவர் ; ஆயினுரை.

2. தூங்கித்துள்ளுவர் ; தள்ளித் தூங்குவார்; வாயிற்றிந்தேன். தொழுவோர் மீளமீள வாயிற்றிந்தேன்.

4. மூரி முகிழ்த்திடை. 13

2767. உயிர்ப்புறத் துற்ற தன்மை
யுணர்த்தினு ருள்ளத் துள்ள
தயிர்ப்பினி லறிதி ரென்றே
யதுகளி யாட்ட மாகச்

செயிர்ப்பறு தெய்வச் சிந்தைத்
திருமறை முனிவர்க் கேயும்
மயிர்ப்புறந் தோறும் வந்து
பொடித்தன மதன வாளி.

(மகளிர்), 'உள்ளத்து உள்ளது-(எமது) மனத்துள் உள்ளதை, அயிர்ப்பினில் - ஐயுறவாலன்றி, அறிதிர் - தெளிவாகவே தெரிந்து கொள்வீர்கள்' என்று - என்று, உயிர் புறத்து உற்ற தன்மை உணர்த்தினர் - தமது உயிரினிடத்துள்ள தன்மையைத் தெரிவித்தார்கள்; அது களியாட்டம் ஆக - அத் தன்மையான களியாட்டம் நடைபெறுகையில், (அதனைக் கண்ணுற்றவர்) செயிர்ப்பு அறு - பழுதற்ற, தெய்வம் சிந்தை திருமறை முனிவர்க் கேயும் - கடவுள் தியானத்திலேயே ஊன்றியுள்ள அழகிய வேதங் களில் வல்ல முனிவராக இருப்பினும், (அவர்கட்கும்) மதனன் வாளி - மன்மதனுடைய அம்புகள், மயிர்புறம் தோறும் வந்து பொடித்தன - மயிர்க்கால்கள் தோறும் வந்து நிறைந்தன.

கள்ளுண்டவர் கள் மயக்கத்தால் தம் வயம் இழந்து வெளி யிடத் தகாத பரம ரகசியங்களையும் வாய்விட்டுச் சொல்லி விடுவது இயல்பு; இப்பொழுதுகூட நீதித் தலங்களில் குற்றவாளிகளிடம் வாக்குமூலம் வாங்குங்கால், அவர்கள் குடிகாரராக இருப்பின், அவர்களைக் கள் பருகுமாறு செய்து, வாங்குவது வழக்கம். 'சாராயத்தை வார்த்துப் பூராயத்தைக் கேள்' என்பது பழமொழி. கள்ளுக்கே சொல் விளம்பி என்ற ஓர் பெயருண்மையும் காண்க. உள்ளத்து உள்ளது; 'உள்ளத்தினுள்ளதை உரையின் முந்துற' (யுத்த. 394) களியாட்டம்; இந்தக் களி என்ற சொல் சங்க காலத் தில் கள்ளுண்டு களித்தலையே குறித்தது. பின்னர் அஃது உயர் பொருட்பேறு என்ற இலக்கணத்தின்படி எல்லாவகையான மகிழ்ச்சியையும் குறித்தது. 'ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச், சான்றோர் முகத்துக்களி' (குறள். 923); 'களித் தானைக் காரணம் காட்டுதல்' (குறள். 929) செயிர்ப்பு - குற்றம்; 'செயிர்ப்பொடு சிவந்து நோக்கி' (சீவக. 1624) செயிர்ப்பு: ஐம் புலன்களின் வழிப்படுதலாகிய குற்றம்; ஐம்புலன்களை யடக்கிக் கடவுளையே தியானிக்கும் மறை முனிவர்களுக்கும் காமவிச்சையை யுண்டு பண்ணும் அந்த மகளிர் களியாட்டம் என்க. (ஒப்பு);

'ஆடல் நோக்குறின் அருந்தவ முனிவர்க்கு மமைந்த வீடு மீட்குறும் மேனகை மேனகை விளங்க' (சுந்தர. 1090); 'வீடு பெற்றவரும் வீழும் வெம்முலை' (சீவக. 1996); மதனவாளி: மாரனுடைய மலரம்புகள் ஐந்து' கிட்கிந்தா. 518 உரை காண்க.

பி - ம். 1. உணர்த்தினல்; உணர்த்தினும்; உள்ள,

2. அயிர்ப்பினல், அயிர்ப்பினை; அறிந்தும், அரியது, அற்றது, அறிதி, அறிதும், அன்றே,

3. சிந்தைத் தெய்வத்,

4. பொடிந்தது; காமவாரி. 14

2768. மாப்பிறழ் நோக்கி னார்தம்
மணிநெடுங் குவளை வாட்கண்
சேப்புற வரத்தச் செவ்வாய்ச்
செங்கிடை வெண்மை சேரக்
காப்புறு படைக்கைக் கள்வ
நிருதர்க்கோ ரிறுதி காட்டிப்
பூப்பிறழ்ந் துருவம் வேருய்ப்
பொலிந்ததோர் தன்மை போன்ற.

மா பிறழ் நோக்கினார் தம் - மான் போன்று மருண்டு நோக்கும் இயல்பினைக் கொண்ட விழிகளை யுடையரான இராக்கதப் பெண்களின், மணி - அழகிய, நெடு - நீண்ட, குவளை வாள் கண் - நீல மலர் போன்ற ஒளி வாய்ந்த கண்கள், சேப்பு உற - செந்நிறத்தைப் பெற்றதும், செம் கிடை - செங்கிடையையும், அரத்தம் - செவ்வாம்பல் மலரையும் ஒத்து, செவ்வாய் - செந்நிறத்தைப் பெற்ற வாய்கள், வெண்மை சேர - வெண்ணிறத்தைச் சேர்ந்ததுவும், உறு தோள்வளை பொருந்திய, காப்பு உறு படைகை - காவலாக அமைந்த படைகளைக் கையிற்கொண்ட, கள்வ நிருதர்க்கு - வஞ்சனை மிக்க அரக்கர்க்கு, (நேரவிருக்கின்ற) ஓர் இறுதி காட்டி - ஒப்பற்ற முடிவினை முன்னர்த் தெரிவித்து, பூ பிறழ்ந்து உருவம் வேருய் பொலிந்தது ஓர் தன்மை போன்ற - மலர்கள் (தமது வண்ணம் மாறி), வேருகி விளங்குகின்ற, ஓர் தன்மை போன்ற - ஒரு தன்மையை ஒத்தன.

மலர்கள் தமது இயற்கை நிறம் மாறி வேறு நிறத்தனவாகப் பூத்தல், பின்னர் அரக்கர்க்கு நிகழவிருக்கும் தீங்கினைக் குறிக்கும்

எனப்பட்டது. மகளிருடைய விழிகளாகிய நீலமலர்களும், வாய்களாகிய, செவ்வாம்பல்களும், கள்ளுண்டதனால் நிறம் மாறப்பெற்று முறையே செந்நிறத்தையும் வெண்ணிறத்தையும் உற்று, கெட்ட அறிகுறியாக நிறம்மாறி மலர்ந்த பூக்களைப் போன்றன எனப்பட்டது. **தன்மைத் தற்குறிப்பேற்றவணி.** மா பிறழ் நோக்கினர் - மாவடு போன்ற விழியினர் என்பது பழைய உரைக்குறிப்பு.

பி - ம். 1. மணிக்கரும்,
2. வாய்ந்த......துவர்ந்தவாயார்; தோன்ற,
3. காப்புறழ்; இறுதிக் காலம்,
4. மலர்ந்ததோர்; பழனம். 15

இச் செய்யுள் சில பிரதிகளில் 'கயல்வரு' என்ற பாடற் குப்பின் உள்ளது.

2769. கயல்வரு காலன் வைவேற்
காமவேள் கணையென் றாலும்
இயல்வரு கிற்கி லாத
நெடுங்கண ரிணைமென் கொங்கைத்
துயல்வரு கனக நாணுங்
காஞ்சியுந் துகிலும் வாங்கிப்
புயல்வரு கூந்தற் பாரக்
கற்றையிற் புனைய லுற்றார்.

கயல் - கெண்டை மீனும், வரு - உயிரைக் கவர வருகின்ற, காலன் - யமனுடைய, வை வேல் - கூரிய வேலாயுதமும், காமன வேள் கணை என்றாலும் - மன்மதனுடைய வாளி என்று உவமை பகர்ந்தாலும், இயல் வருகிற்கிலாத - ஒப்புமை அமையாத, நெடு கணார் - நீண்ட நேத்திரங்களையுடைய இராக்கத மகளிர்கள் (கள்ளின் வேகத்தால் தமது), இணை மெல் கொங்கை - இரட்டையாகிய மெல்லிய தனங்களில், துயல்வரு - புரள்கின்ற, கனகம் நாணும் - பொன் சரட்டினையும், காஞ்சியும் - இடையில் அணிந்துள்ள மேகலையினையும், துகிலும் - ஆடையினையும், வாங்கி - கையிலெடுத்து, புயல் வரு - மேகத்தை ஒத்த, கூந்தல் பாரம் கற்றையில் - மயிர்ச் சுமைத் தொகுதியில், புனையல் உற்றார் - அணியத் தொடங்கினார்கள்.

களிமயக்கத்தால் நினைவு தடுமாறிக் கனகநாண் முதலியவற்றை முறைமாறி அணிந்தனர். (ஒப்பு); ஒருத்தி..............வன்ன மேகலையை நீக்கி மலர்த்தொடை யல்குல் சூழ்ந்தாள், பொன்னரி மாலை கொண்டு புரிகுழல் புனையலுற்றாள்' (பால. உண்டாட்டு. 16) மற்றும் பால. உண்டாட்டுப் படலத்துள்ள பல செய்யுட்களும் இங்கே ஒப்பு நோக்கத்தகும். மேலும்; 'ஊன்பொதி பசுங் குடையார்' பாடிய 'தென்பரதவர் மிடல்சாய' எனத் தொடங்கும் புறநானூற்றுச் செய்யுளிற் கூறப்பட்ட செய்தியும் இங்கு ஒப்பு நோக்குக. வருகாலன்: உயிர்களைக் கவர்தற்கு எய்தும் யமன். துயல்வரு: 'தொடையல் மாலை துயல்வந் துலவுதோள்' (ஆரணிய. 10); கனகநாண்: மங்கல நாணுமாம். 'கழுத்தின்நாண் உன் மகற்குக் காப்பின்நாண்' (அயோத்தி. நகர்நீ. 49) என்றமை காண்க. கயல்வரு காலன் வைவேல் காமவேள் கணையென் றாலும், இயல் வருகிற்கிலாத நெடுங்கணாள்' (ஒப்பு) 'வில்லொக்கு நுதலென்றா லும்' (ஆரணிய. 627) என்ற செய்யுள்: எதிர்நிலையணி. இங்குக் களியாட்டுப் படலம் முற்றும், என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி-ம். 1. கயல்வரும்; காமன்; கைவேல்,
4. புயல்பொரு. 16

## இங்ஙனம் களியாட்டயர்தலை இராவணன் கண்டு நிற்கையில், வானரசேனை ஆர்த்த ஓசை அவன் காதில் விழுதல்

2770. முத்தன்மை மொழிய லாகா முகிழின முறுவ னல்லார்
இத்தன்மை யெய்த னோக்கி யரசுவீற் றிருந்த வெல்லை
யத்தன்மை யரியின் சேனை யார்கலி யார்த்த வோசை
அத்தன்மெய் மயங்க வந்து செவிதொறு மடுத்த தன்றே.

முத்து அன்மை மொழியல் ஆகா - முத்தல்லாமையைச் சொல்ல முடியாத, (முத்து என்றே பகரத்தக்க), முகிழ் இள முறுவல் நல்லார் - மலர்ந்த புன்னகையினை யுடைய மகளிர், இ தன்மை எய்தல் நோக்கி - (களியாட்டினால்) இத் தகைய நிலைமையினை எய்துதலை, அரசு - அரக்கர் கோனான இராவணன், நோக்கி வீற்றிருந்த எல்லை - கண்ணுற்றுப் பெருமையுடன் அமர்ந்திருந்த காலை, அ தன்மை - (மருத்து மலையினால் உயிர்பெற்று எழுதலான)

அந்த நிலையினையுடைய, அரியின் சேனை ஆர்கலி - குரக்குப் படையாகிய கடல், ஆர்த்த ஓசை - ஆரவாரித்த ஓசையானது, அத்தன் - அந்த இராவணனுடைய, மெய் மயங்க - உடல் தளருமாறு, செவி தொறும் வந்து அடுத்தது - செவிகள் தோறும் வந்து நுழைந்தது. அன்று : ஏ : அசை,

முதலடிக்கு அரக்க மகளிர் முறுவல் முத்துப் போன்றதென்று கொள்க. 'முறிமேனி முத்த முறுவல்' (குறள். 1113); குரக்குப் படையின் பேரொலி செவியில் விழுந்த அளவில் உவகைமாறி அச்சம் நிகழ, உவகை யளிக்கும் மகளிர் களியாட்டமும் இலங்கேசனுக்கு உவர்ப்பினை விளைத்ததால் மெய் மயங்க எனப்பட்டது (ஒப்பு) 'தோகைமாந்தர் கள் மைந்தரிற் றேன்றினர் சுற்ற' (சுந்தர 1087); 'முத்துத் தன்மை' என்பது விகாரப்பட்டதாகக் கொண்டு முத்தின் தன்மையினையும் வென்றது முறுவல் எனினுமாம்.

பி - ம். முகிணகை ; முகிணிலா.

2. செய்நனேக்கி, எய்ந நோக்கி ; வேலே.

4. மயக்க ; மடுத்த மாதோ. 17

ஒரு பிரதியில் இச் செய்யுளோடு களியாட்டுப் படலம் முடிய, அடுத்த பாடலில் 'மாயா சீதைப் படலம்' தொடங்குகிறது.

## வானரங்களினார்ப்பொலியால் மகளிரினுடல் முதலியன ஒடுங்குதல்

2771. ஆடலுங் களிப்பின் வந்த
வமலேயு மமுதி னுன்ற
பாடலு முழவின் றெய்வப்
பாணியும் பவள வாயார்
ஊடலுங் கடைக்கண் ணேக்கு
மழலேவெவ் வுரையு மெல்லாம்
வாடன்மென் மலரே யொத்த
வார்ப்பொலி வருத லோடும்.

பவள வாயார் - பவளம் போன்ற வாயினையுடைய அரக்கிமார்களின், ஆடலும் - ஆடல்களும், களிப்பின் வந்த அமலேயும் -

கள்ளுண்ட வெறியால் எழுந்த பேராரவாரமும், அமுதின் ஆன்ற பாடலும் - அமிழ்தினும் (இனிமையான) சிறந்த பாடல்களும், முழவின் தெய்வம் பாணியும் - முழாக்களின் தெய்வத் தன்மை வாய்ந்த தாளங்களும், ஊடலும் - புலவியும், கடைகண் நோக்கும் - கடைக்கண் பார்வையும், மழலை வெம்மை உரையும் - மெய்பெரு வெழுத்துக்களாக வெளிவந்த விரும்பத்தக்க உரையாடலும், எல்லாம் - இவையனைத்தும், ஆர்ப்பு ஒலி வருதலோடும் - (உயிர் பெற்றெழுந்த) குரக்குப் படைகளின் ஆரவார ஒலி செவி தோறும் வந்து நுழைதலும், வாடல் மெல் மலரே ஒத்த - வாடிப்போன மெல்லிய மலரைப் போன்றன, (பொலிவிழந்தன) என்க.

களிப்பு - கள்ளுட்கொண்டதால் உற்ற மகிழ்ச்சி; வெம்மை உரை - விரும்பத்தக்க உரையாட்டு; வெம்மை-வேண்டல்; (தொல். சொல். உரி. 38) (ஒப்பு); 'நாளொத்த நளினமன்ன முகத்தியர் நயன மெல்லாம், வாளொத்த மைந்தர் வார்த்தை யிராகவன் வாளி யொத்த' (யுத்த. 1214).

பி - ம். 1. ஆடலின் களிப்பின், ஆடலுங் களியின்; அழகினுன்ற, அளவிலாத,
2. முழவும், அளவில்,
3. ஊடலின்; நோக்கம்; முதல
4. வாடின மலரே, ஆடல் செய்வேலே, ஆடுவல்லரவே. 18

## இராமவிலக்குவரின் நாணொலி தோன்றுதல்

2772. தறிபொரு களிநல் யானை
சேவகந் தள்ளி யேங்கத்
துறுசுவற் புரவி தூங்கித்
துணுக்குற வரக்க ருட்கச்
செறிகழ லிருவர் தெய்வச்
சிலையொலி பிறந்த தன்றே
எறிகடல் கடைந்த மேனா
ளெழுந்த பேராசை யென்ன.

செறிகழல் இருவர் - பொருந்திய வீர கண்டையை யணிந்த இராம இலக்குவரின், தெய்வம் சிலை ஒலி - தெய்வத் தன்மை

வாய்ந்த விற்களின் நாணோசையானது, தறிபொரு - கட்டுத் தறியைப் பொருகின்ற, களி நல் யானை - மத மயக்கம் உள்ள சிறந்த வேழங்கள், சேவகம் தள்ளி ஏங்க - தாம் படுக்கும் இடங் களில் சோர்ந்து ஏங்கவும், துறு சுவல் புரவி - பிடரி மயிர் அடர்ந்த குதிரைகள், தூங்கி துணுக்கு உற - அசைந்து நடுக்க மெய்திச் சோரவும், அரக்கர் உட்க - இராக்கதர்கள் அஞ்சவும். எறி - அலை வீசுகின்ற, கடல் கடைந்த - பாற் கடலைக் கடைந்த, மேனாள் - முன் நாளில், எழுந்த பேர் ஓசை என்ன - கிளம்பிய பெரிய முழக்கம் என்னுமாறு, பிறந்தது - எழுந்தது. அன்று ஏ : அசை.

தறி : கட்டுத்தறி இதனைக் கந்து என்றும் வழங்குவர். சேவகம் : யானை துயிலிடம்; 'சேவகம் அமைந்த சிறுகட்கரி' (அயோத்தி. தைலவ. 12); சுவல் : பிடரி மயிர், உட்குதல் : 'உட்கப் படா அரொளி யிழப்பர்' (குறள். 921); செறி கழல் : 'செறிகழ லரக்கர் தமரசு' (யுத்த. 396); 'எறிகட லுலகெலா மிளவற் கீந்த தோர், பிறிவருங் கருணையும்' (யுத்த. 396); மேனாள் : 'மேனாளிவ் வுலகாண்ட விடபருவன்' (வி. பா. இராசசூய. 4).

பி - ம். 1. தெறுபொருக் ; சேசர்வுற்றுத் தள்ளி ; சேவகந்...ஒங்க.
2. தூங்கத்.
3. சிறந்த தன்றே, பரப்புஞ் செய்கை,
4. கடந்த ; பேரொலிகொலென்ன. 19

ஒரு பிரதியில் இச் செய்யுளுடன் களியாட்டுப் படலம் முடிகின்றது.

## அப்போது இராவணனுக்குக் மகளிரிடத்தில் வெறுப்புத் தோன்றினமை

2773. முத்தம்வா ணகைக்குத் தோற்கு
முகத்தியர் முழுக்கண் வேலாற்
குத்துவார் கூட்ட மெல்லாம்
வானரக் குழுவிற் றேன்ற
மத்துவாழ் கடலி னுள்ள
மறுகுற வதன மென்னும்
பத்துவான் மதிக்கு மந்நாட்
பகலொத்த திரவு பண்பால்.

முழுகண் வேலால் - முழுக் கண்ணுகிய வேலினுலே, குத்து வார் - குத்துவாராகி, முத்தம் - முத்துக்கள், வாள் நகைக்கு - (தமது) ஒளி செறிந்த முறுவலுக்கு, தோற்கும் முகத்தியர் - தோற்கும்படியான முகத்தையுடைய அரக்கர் மகளிரின் கூட்டம் எல்லாம் - தொகுதி யெல்லாம், (இன்புறுத்தாது துன்புறுத்து தலின்), வானரம் குழுவில் தோன்ற - குரங்குத் திரள் போன்று காணப்படவும், மத்துவாழ் கடலின் - (மந்திர மலையாகிய) மத்து தங்கப் பெற்ற கடல் போன்று, உள்ளம் மறுகுற - (தன் மனம்) கலக்குறவும், அ நாள் - அந்த நாளின், இரவு - இரவானது, (பொலிவை அகற்றி நின்ற), பண்பால் - தன்மையால் (இராவண னுடைய), வதனம் என்னும் - முகமென்று சொல்லப்படும், வாள் - ஒளியுள்ள, பத்துமதிக்கும் - பத்துச் சந்திரர்களுக்கும், பகல் ஒத்தது - பகலை நிகர்த்து விளங்கிற்று.

மத்து - மந்தரமலை, வாழ்தல் - தங்குதல், கடல் கடைந்த வரலாறு; பாலகாண்டத்துக் காண்க. சந்திரனுக்கு நண்பகலில் ஒளியில்லை; அது போன்று பத்துமதிகள் போன்ற இராவண னுடைய முகங்களுக்கும் சோபை யில்லை என்க.

பி - ம். 1. முத்த வாணகையின் மூரல், முத்து வாணகைக்குங் கொற்ற, முத்து வாள் முறுவல் மூரல்.

3. மத்துவார்; மறுக்கிட, மறுகிட.

4. வான், வாழ்; இரவும்பைய. 20

## இராவணன் ஒற்றரால் செய்தியுணர்ந்து மந்திரசாலைக்குச் செல்லுதல்

2774. ஈதிடை யாக வந்தா
ரலங்கன்மீ தேறி னூர்போய்
ஊதினர் வேய்கள் வண்டி
னுருவினு ருற்ற வெல்லாந்
தீதிலர் பகைஞ ரென்னத்
திக்கென்ற மனத்தன் றெய்வம்
போதுகு பந்தர் நின்று
மந்திரத் திருக்கை புக்கான்.

ஈது இடையாக-இவ்வாறு நிகழும் போதில். வந்தார் வேய்கள்-வந்த ஒற்றர்கள், வண்டின் உருவினர் - வண்டின் உருவத்தைக் கொண்டவராய், அலங்கல் மீது போய் ஏறினர் - இராவணனுடைய மாலையின் மீதில் ஏறிப்போய், ஊதினர் - (அநுமன் கொணர்ந்த மருத்து மலையால் அனைவரும் உயிர் பெற்றெழுந்ததாகிய) உற்ற எல்லாம் - நிகழ்ந்தவை அனைத்தும், காதில் விழுமாறு ஊதினர்; இராவணன் பகைஞர் தீது இலர் என்ன - பகைவர்கள் ஒரு கெடுதியும் இன்றி இருந்தனர் எனக் கேட்டதனால், திக் என்ற மனத்தன்-திக்பிரமை கொண்ட உள்ளத்தனாய், தெய்வம் போது உகு பந்தர் நின்று - தெய்வ மலர்கள் சிந்தியுள்ள அந்தப் பந்தலை விடுத்து, மந்திரத்து புக்கான் - மந்திராலோசனை மண்டபத்தை அடைந்தான்.

அலங்கல் : மாலை; இராவணன் அணிந்தது. அரக்கர்கள் காமரூபிகள் ஆகலின் வண்டுருவம் கொண்டனர் என்க. அடுத்து வரும் மாயா சீதைப் படலத்து வீடணன் வண்டுருக் கொண்டு பிராட்டியைக் காணச் சென்றான் என்று கூறப்படுவதும் காண்க. 'வண்டின துருவம் கொண்டான்' (யுத்த. மாயா சீதை. 92); திக்கெனல் : திடுக்கிடுதல்; ஒலிக் குறிப்பு. 'வண்டொடு காலையும் வரவு மாற்றினன்' (யுத்த. 19); என்றதும் இதுபற்றி.

'சீதைக்குக் களங்காட்டியதும், களியாட்டும் கம்பநாடர் படைப்பு'; முதனூலில் இல்லை.

பி - ம். 1. இலங்கையர் வேந்தன்றன்றோ டலங்கள் மீதேற்றுர்போல்.

2. ஒதினர்; வண்டிற்றுருவினர், வண்டினுருவதாய்; தன்மை.

3. தீகின்ற, தீக்கின்ற.

4. போதவழ்சோலை; மந்திரந்தெல்லை, மந்திரவிருக்கை, 'ஈதிவணிகழுங் காலை யிராவணன் செவியில் மெல்ல' என்று ஓர் பிரதியில் முதலடி காணப்படுகின்றது. 21

களியாட்டுப் படலம் முற்றும்.

---

# 25. மாயா சீதைப் படலம்

இந்திரசித்து மாயா சீதாப் பிராட்டியின் உருவமொன்றை மாயையினால் சமைத்து அதனைக் கொன்றதையும் அதனால் விளைந்தவற்றையும் கூறும் படலம் என விரியும்.

அநுமன் மருத்து மலையைக் கொணர்ந்து இந்திரசித்தின் பிரமாத்திரத்தால் பட்டவர்களை எழுப்பியது கண்டு, இந்திரசித்து நிகும்பிலை என்ற இடத்தில் வேள்வியொன்று இயற்றிப் பழுதுபடாப் படைகளைப் பெற விரும்பி, அவ்வாறு தான் செய்யப்புகும் வேள்வியைப் பகைவர் அறிந்து இடையூறு செய்யாமலிருக்கும பொருட்டு, அவர்களுடைய நினைப்பை வேறு பக்கத்தில் திருப்ப, மாயையால் சீதாப்பிராட்டியின் உருவொன்றினைச் சமைத்து, அவ்வுருவினை அநுமன் கண்ணுக்கெதிரில் வெட்ட, அதனால் விளைந்தவற்றையும்; முடிவில் வீடணனின் அறிவுக் கூர்மையரல் உண்மை வெளியான பின் இராமபிரான் முதலியோர் ஆறுதலடைந்து, மேலே செய்ய வேண்டியவற்றை ஆராய்ந்து முடிவு செய்ததைப் பற்றியும் இப் படலம் கூறும்.

### இந்திரசித்து முதலியோர் சூழ்ந்துநிற்க இராவணன் தன் நிலையைத் தானே கூறிக்கொள்ளுதல் மாலியவான் கூற்று

2775. மைந்தனு மற்று ளோரு
மகோதரன் முதலோ ராய
தந்திரத் தலைமை யோரு
முதியருந் தழுவத் தக்க
மந்திர ரெவரும் வந்து
மருங்குறப் படர்ந்தார் பட்ட
அந்தர முழுதுந் தானே
யனையவர்க் கறியச் சொன்னான்.

மைந்தனும் - இந்திரசித்தாகிய மைந்தனும், மற்றுளோரும் - பிற உறவினரும், மகோதரன் முதலோராய - மகோதரன் முதலோ

ரான, தந்திரம் தலைவரும் - சேனைத் தலைவர்களும், முதியரும் - பிராயம் முதிர்ந்தவர்களும், (இன்னும்) தழுவ தக்க மந்திரர் எவரும் - (ஆலோசனைக்குரியவர் யாவரும், வந்து - சென்று, மருங்கு உற - (இராவணன்) அருகு அமைய, படர்ந்தார் - சூழ்ந்திருந்தனர்; (அப்பொழுது அவன்), பட்ட - தான் பட்ட, அந்தரம் முழுதும் - துன்பம்:யாவற்றையும், அனையவர்க்கு - (அச் சபையில்:வந்த அனை வர்க்கும்), தானே - தன் வாயாலேயே, அறிய சொன்னான் - அறியும் படியாக (விளக்கமாகக்) கூறினான்.

களியாட்டின முடிவில், தான் நினைத்ததற்கு மாறாக இலக்கு வன் முதலானோர் மருத்துவ மலையின் உதவியால் உயிர் பெற்றெழ, அதைக் கண்ட வானரர் ஆர்த்ததையும், அவன் ஒற்றர் வந்து கூறிய செய்தியையும் கேட்ட இராவணன் 'திக்கென்ற மனத்தனாய்' மந்திரத் திருக்கை புகுந்து, அங்குக் கூடியிருந்தவரோடு தன் துயரத்தை எடுத்துக் கூறினன் என்க. மந்திரச் சபையில் இருக்கக் கூடியவர் யாவர் என்பது; (யுந்த. 19 - 20), மகோதரன்; (யுத்த. 493), இவன் ஒரு தந்திரத் தலைவனும் ஆவன். தந்திரம் - சேனை, பந்தி - கூட்டம், சுந்தரம் - துன்பம்; ஈங்கு. (அயோத்தி. கைகேசி சூழ்வினைப். 40); (சுந்தர. 401) தானே சொன்னான் என்பதும், அறியச் சொன்னான் என்பதும் இராவணனின் கவலை யின் ஆழத்தைக் குறிக்கின்றன. அந்தரம், முடிவு என்றும் பொருள் கூறுவர். மந்திரம் - ஆலோசனை.

பி - ம். 1. மகோதரப் பெயரினனும்; மகோதரன் முதல்வராய.
2. தந்திரத் தன்மையோரும்.
3. பந்தியரெவரும்.
4. அந்தரமெழுந்த தன்மை தாளவர்க்கறியச் சொன்னன் தந்திரமெழுந்த தன்மை. 1

2776. இலங்கையி னின்று மேருப்
பிற்பட விமைப்பிற் பாய்ந்து
வலங்கிளர் மருந்து நின்ற
மலையொடுங் கொணர வல்லான்
அலங்கலந் தடந்தோ ளண்ண
லநுமனே யாதல் வேண்டும்
கலங்கலி லுலகுக் கெல்லாங்
காரணங் கண்ட வாற்றல்.

(அப்போது மாலியவான் இராவணனை நோக்கி), உலகுக்கு எல்லாம் - உலகங்களுக்கெல்லாம், கலங்கலில் காரணம் - கலக்கமில்லாத (உறுதியான ஒரே) காரணமான மூலப்பொருளை, கண்ட ஆற்றல் - (அநுமன்) கண்டுள்ள தன்மையால், 'இலங்கையின் நின்று - இலங்கையிலிருந்து, இமைப்பின் - ஒரு கணத்தில், மேரு பிற்பட - மேரு மலையும் பின்னே போகும்படி, பாய்ந்து - (முன்னே) பாய்ந்து, வலம் கிளர் மருந்து - வலிமை விளங்கும் சஞ்சீவியை, நின்ற மலையொடும் - அஃது இருந்த மலையோடும், கொணர வல்லான் - கொண்டு வரத்தக்க வல்லமை பொருந்தியவன், அலங்கல் அம் தடம் தோள் - மாலை சூடிய அழகிய அகன்ற தோள்களையுடைய, அண்ணல் - பெரியோனான, அநுமனே ஆதல் வேண்டும் - அநுமனாகவே அமைதல் வேண்டும்.

இதுமுதல் ஏழு செய்யுட்கள் மாலியவான் கூற்று. இது 8-ஆம் செய்யுளால் விளங்கும். மாலியவான்; இவன் வரலாற்றை 733-ஆம் செய்யுளின் விளக்கத்திற் காண்க. இவன் இராவணனுக்கு எல்லா இடங்களிலும் நல்லுபதேசம் செய்து வந்தவன். உலகுக்கெல்லாம் காரணன்; 'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' முதலிய கம்பநாட்டாழ்வார் அமைத்த கடவுள் வாழ்த்துச் செய்யுட்களாலும், பிறவற்றாலும், பரம்பொருளே என்பது குறிக்கப் பெற்றது; அப்பரம் பொருளே இராமபிரானாக அவதரித்து உள்ளமையையும் அச் செய்யுட்கள் கூறும். அப் பரம் பொருளை இராமபிரானாகக் கண்ட தன்மை அதாவது பிரம ஞானம், அநுமனிடம் அமைந்திருப்பதால் அவனே மருத்து மலையைக் கொணரும் ஆற்றல் பெற்றவனாக வேண்டும் என்பது மாலியவான் கண்டது. பிரமத்தை அறிந்தவர் அதற்குரிய அளவிலா ஆற்றலும் பெற்றவராதல் வேண்டுமென்பது வெளிப்படை. இவ்வரிய உண்மையை நம் ஆசிரியர் உதாகரித்த இடம் அறிந்து போற்றற்குரியது. மேரு பிற்படப் பாய்ந்து மருத்து மலையை அடைந்தது; (மருந்து மலைப். 12) சில சுவடிகளில் இச் செய்யுள் இடம் மாறியுள்ளது.

பி - ம். 1. விளமப்பிற்ருவி; பிற்பட வெழுந்து போகி.

3. யாகவேண்டும்,

2777. நீரினைக் கடக்க வாங்கி
யிலங்கையா நின்ற குன்றைப்
பாரினிற் கிழிய வீசி
னுருளர் பிழைக்கற் பாலார்
போரினிப் பொருவ தெங்கே
போயின வநுமன் பொன்மா
மேருவைக் கொணர்ந்திவ் வூர்மே
லிடுமெனின் விலக்க லாமோ.

இலங்கையா நின்ற குன்றை - இலங்கையாக அமைந்த மலையை, நீரினை கடக்க வாங்கி - (அது நிற்கும்) கடலை விட்டுப் பிரியுமாறு எடுத்து, பாரினில் கிழிய வீசின் - பூமியில் அக் குன்று உடையுமாறு வீசி (ஒருவர்) எறிந்தால், பிழைக்கல் பாலார் ஆருளர் - (அதனின்று) தப்பிக் கொள்ளத்தக்கவர் யார் இருக்கின்றனர்? போயின அநுமன் - சஞ்சீவி மலையைக் கொணரச் சென்ற அநுமன், பொன் மாமேருவை கொணர்ந்து - பொன் மயமான பெரிய மேரு மலையைக் கொண்டு, இ ஊர்மேல் இடும் எனின் - இந்த ஊரின்மீது இடுவானென்றால், விலக்கல் ஆமோ - அதைத் தடுத்தல் இயலுமோ? (இவ்வாறிருக்க), இனி போர் பொருவது எங்கே - இனி இராம இலக்குவர்மீது போர் புரிவது எங்கு நடக்கப் போகிறது?

இலங்கையாம் குன்று - திரிகூட மலைமீது அமைந்ததாதலாலும், குன்றே நகரமாகவும் நாடாகவும் இருந்ததாலும் என்க; இலங்கை வெற்பு என்று சுந்தர. 91 கூறுவதும் காண்க. இலங்கையைப் பெயர்த்து எறிவதென்பது; (சுந்தர. 328, 330) முதலியன,

பி - ம். 1. கிடக்க வாங்கி, கடக்க வோங்கி; விலங்கையாய் நின்ற; நின்ற மூதூர்.
2. பரசினைச் சுழிக்க வீசில்; பாரினைக் கழிக்க வீசின்.
3. வநுமன் தான் பொன்.
4. வூரிலிடு மெனின் விலக்கலாமோ. 3

2778. முறைகெட வென்று வேண்டின்
நினைத்ததே முடிப்பன் முன்பின்
குறைவிலாக் குணங்கட் காங்கோர்
கோதிலர் வேதங் கூறும்
இறைவர்கண் மூவ ரென்ப
தெண்ணிலா ரெண்ண மேதான்
அறைகழ லநும னேடும்
நால்வரே முதல்வ ரம்மா.

அநுமன் - (அநுமன்), முறைகெட என்று வேண்டின் - (உலகப் படைப்பின்) முறை மாற வேண்டுமென்று விரும்பினால், நினைத்ததே முன்பின் முடிப்பன் - தான் எண்ணியதையே தன மெய் வலியால் செய்து முடிப்பான்; குறைவு- குறைபாடும், இலா - (சிறிதும்) இல்லாத, குணங்கட்கு ஓர் கோதிலர் - குணங்களைக் கூறுவதில் யாதொரு விதமான குற்றமுமில்லாதவரும், வேதம் கூறும் - வேதங்கள் கூறும், இறைவர்கள் - தேவர்களும், மூவர் என்பது - மூன்று பேர்கள் என்பது, எண்ணிலார் எண்ணமே தான் - ஆராயாதவர் கருதும் எண்ணமே ஆகும்; (அவ்விறைவர்), முதல்வர் - அம் மூலக்கடவுளர், அறை கழல் அநுமனோடும் நால்வா - ஒலிக்கின்ற வீரக் கழல் அணிந்த அநுமனோடும், நால்வர் ஆவர், அம்மா - (இது) வியப்பு. ஏ; ஆங்கு; அசை.

அநுமனோடும் நால்வர்; (ஒப்பு): 'தேவரு முனிவருந் தேடுந் தேவர்கள், மூவரி னல்வரா முனிவந் தெய்தினன்' (அயோத்தி. மந்திரப். 7). முன்பு - மெய் வலிமை; 'முன்பாலுடல் சினஞ் செருக்கி' (குறிஞ்சிப். 159) குணங்கட்கு, உருபு மயக்கம். அநுமனை இங்கு முதற்றேவர் மூவரோடு ஒன்று சேர்த்துக் கூறியது ஆசிரியர்க்கு அவன்பாலுள்ள பெரு மதிப்பைக் காட்டியதாகும்.

பி - ம். 1. வேண்டின் முன்பு; முறைகெட வெவ்வனினேர்கள் முந்தையோர் மூன்றுசெல் முடிப்பன் முன்னிற்; நினைந்தே முடிப்பன்.
2. குறையிலை குணங்கட்கென்றே கோளிலா வேதங்: குறையிலை யிருவரின்னும்; குணங்கட்கோர் கோதிலர்.
4. முதல்வரோர் நால்வரம்மா.

2779 நங்கிளை யுலந்த தெல்லா முய்ந்திட நணுகு மன்றே
வெங்கொடுந் தீமை தன்னால் வேலையி னிட்டி லோமேல்
இங்குள வெல்லா மாடற் கினிவரு மிடையூ றில்லை
பங்கயத் தண்ணன் மீளாப் படைபழு துற்ற பண்பால்.

'(இன்னும்), உலந்தது நம் கிளை எல்லாம் - (போரில்) இறந்து போன நம் சுற்றத்தார் எல்லாம், வெம் கொடும் தீமை தன்னால் - மிகக் கொடிய தீமையினால், வேலையின் இட்டிலோமேல் - கடலில் எறிந்திராதிருந்தோமாகில், உய்ந்திட நணுகும் அன்றே - (உயிர்) பிழைக்கலாகும் அல்லவோ? பங்கயத்து அண்ணல் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பெரியோனான பிரமதேவனின், மீளா படை - மீட்க முடியாத படையான பிரமாத்திரமும், பழுது உற்ற பண்பால் - வீணான தன்மையால், இனி - இனிமேல், இங்கு உள எல்லாம் - இங்கு உள்ள யாவும், மாள்தற்கு வரும் இடையூறு இல்லை - இறப்பதைத் தடுக்க வரும் இடையூறு கிடையாது.'

இறந்த அசுரப் படையினரைக் கடலில் இட்டது; (சீதை களங் காண். 2) இறந்த அரக்கர் உடலைக் கடலில் இட்டது 'வெங்கொடுந் தீமை' என்று மாலியவான் கருதினான்; அவ்வாறு செய்ததால் இறந்த வானரர் சஞ்சீவியால் பிழைத்தது போல, இறந்த அரக்கரும் உயிர் பெற்றிருப்பாரே என்று அவன் அங்கலாய்த்தான் பிரமாஸ்திரமே பழுதுபட்டபின் அரக்கர் படையைக் காக்க வழி யில்லை யென்றும் அவன் கருதினான்.

பா-ம். 1. நம் படை வியந்ததெல்லாம்; உலந்தேயும்; நயந்திட நணுகு; நண்ணுமன்றே.
3. இங்குளரெல்லாம்; மாண்டற்கினிவரு.
4. படை பழுதான பண்பால். 5

2780. இறந்தவ ரிறந்து தீர வினியொரு பிறவி வந்து
பிறந்தன மாகி யுள்ளோ முய்ந்தனம் பிழைக்கும் பெற்றி
மறந்தன மெனினு மின்னஞ் சனகியை மரபி னீந்தே
அறந்தரு சிந்தை யோரை யடைக்கலம் புகுது மைய.

'ஐய - ஐயனே! இறந்தவர் இறந்து தீர - (போரில்) இறந்தவர் நீங்க, இனி ஒரு பிறவி வந்து பிறந்தனம் ஆகி உள்ளோம் உய்ந்

தனம் - மற்றொரு பிறவி பெற்றுப் பிறந்தவர்களாக உள்ளோமாகிய நாம் (தப்பிப்) பிழைத்தோம் ; பிழைக்கும் பெற்றி மறந்தனம்-உயிர் வாழும் தன்மையை நாம் மறந்தவர்களாயினோம் ; எனினும் - நாம் அவ்வாறு ஆயினும், இன்னம் - இனியாவது, சனகியை - சானகிப் பிராட்டியை, மரபின் ஈந்தே - முறைப்படி கொடுத்து, அறம்தரு சிந்தையோரை - தருமத்தையேக் கருதுகின்ற மனமுடைய இராம லக்ஷ்மணரிடம், அடைக்கலம் புகுதும் - (நாம்) சரணமடைவோம்.

'பிழைக்கும் பெற்றி மறந்தனம் நாம் பிழைக்க வழியறியாமல் திகைக்கிறோம் என்றபடி. இன்னம், என்றதால் காலதாமத மாகினும் நாம் காக்கப்படுவோம் என்றது குறிக்கப் பெற்றது. அறம் தரு சிந்தையோரை என்ற பன்மையால் இராமபிரான் இலக்குவன் இருவரும் குறிக்கப் பெற்றனர்.

பி - ம். 1. இறந்தன ரிறந்து ; இறந்து தீர்க.

2. மாகினுள்ளோம் ; பிறக்கும் பெற்றி.

3. மறிந்தில ராகலின்னஞ் ; மறந்திலமெனினு மின்னஞ் ; மின்னனுள் சனகியை மரபி னீந்தவ ; மாருமீய்ந்த.

4. சிந்தையோனை. 8

2781. வாலியை வாளி யொன்றால்
வானிடை வைத்து வாரி
வேலையை வென்று கும்ப
கருணனை வீட்டி னானை
ஆலியின் மொக்கு ளன்ன
வரக்கரோ வமரின் வெல்வார்
சூலியைப் பொருப்பி னோடுந்
தூக்கிய விசயத் தோளாய்.

'சூலியை - சூலப் படையைக் கொண்ட சிவபிரானை, பொருப்பி னோடும் - (அவனுக்குரிய) கயிலாய மலையோடும், தூக்கிய - (பெயர்த் துச்) சுமந்த, விசய - வெற்றியுள்ள, தோளாய் - தோள்களை உடை யாய்! வாளி ஒன்றால் - ஓர் அம்பினால், வாலியை வானிடை வைத்து - வாலியைக் கொன்று, வாரி வேலையை - நீர் நிறைந்த கடலை, வென்று - வெற்றி கொண்டு, கும்பகருணனை வீட்டினானை - கும்பகருணனைக் கொன்றவனான இராமபிரானை, ஆலியின் மொக்

குள் அன்ன அரக்கரோ - ஆலாங்கட்டியில் நீர்க்குமிழி போன்ற (அற்ப ஆயுளையுடைய) அரக்கர்களோ, அமரின் வெல்வார் - (போரில்) வெல்பவராவார். (ஆகார் என்றபடி).

வானிடை வைத்தல்; மங்கல வழக்கு. வார் - நீர்; வெள்ளமும் ஆம். வீட்டுதல் - அழித்தல். அரக்கருக்கு ஆலியின் மொக்குள்; ஆலி - மழைத் துளியும் ஆம்; 'படுமழை மொக்குளில்' (நாலடி. 27) கும்பகருணனை வீட்டினவரை இராவணனும் வெல்லமாட்டாமை; 'என்னைவென் றுளரெனி லிலங்கை காவல, உன்னைவென் றுயருத லுண்மை' (யுத்த. 1300) என்ற செய்யுளால் அறிக. இச் செய்யுள் சில சுவடிகளில், மறிகடல் (8) என்ற பாடலின் பின்னும், வேறு சிலவற்றில் 'கட்டுரை' (10) என்ற பாடலின் பின்னும் காணப் பெறுகிறது.

பி - ப். 1. வாளியென்றால்; வைத்து முன்னீர்.
2. வேலையை யெரித்துக்.
3. வரக்கரோ வல்லரென்றான்;
4. துளக்கிய விசயந் தோளாய்; வயிரத் தோளாய்.

2782. மறிகடல் குடித்து வானை
மண்ணொடும் பறிக்க வல்ல
எறிபடை யரக்க ரெல்லா
மிறந்தன ரிலங்கை யூருஞ்
சிறுவனு நீயு மல்லால்
யாருள ரொருவர் தீர்ந்தார்
வெறிதுநம் வென்றி யென்றான்
மாலிமேல் விளைவ தோர்வான்.

மேல் விளைவது ஓர்வான் - மேலே உண்டாகப் போவதை உணர்பவனான, மாலி - மாலியவான், (மேலும்), 'மறி கடல் குடித்து - கிளர் தலையுடைய கடல் நீரைப் பருகி, வானை மண்ணொடும் பறிக்க வல்ல - வானத்தையும் நிலத்தையும் பெயர்த்தெடுக்க வல்ல, எறி படை - வீசும் ஆயுதங்களை யுடைய, அரக்கர் எல்லாம் - அரக்கர் (தலைவர்) யாவரும், இறந்தனர் - மாண்டொழிந்தனர்; தீர்ந்தார் - (இறப்பிலிருந்து இப்பொழுது) நீங்கினவர், இலங்கை ஊரும் சிறு

வனும் நீயும் அல்லால் - இலங்கை நகரமும் (இந்திரசித்தான உன்) மகனும் நீயும் அன்றி, ஒருவர் யார் உளர் - வேறு யாவர் உள்ளவர்? (ஒருவரும் இலர் என்றபடி); நம் வென்றி - நம்முடைய வெற்றி, வெறிது - வீண்', என்றான் - என்று கூறினான்.

மறிதல் - கிளர்தல்; மறிகடல்; (சுந்தர. 767); 'மறிகடல் போன்று' (திவ் - இயற் - திருவிருத். 57). அரக்கர் பூதங்களை நிலைகலக்குவர் என்றது; சுந்தர. 767 செய்யுளின் விளக்கவுரை காண்க. அரக்கர் இறந்தனர்; இங்கு அரக்கர் தலைவர் குறிக்கப் பட்டனர் என்க. தீர்தல் - நீங்குதல்; 'தீர்கிலேன் ஞானதைய'; 'திருநகர்த் தீர்ந்த தன்மை' (அயோத்தி. 665, 668); இங்கு, இறப் பினின்று நீங்கினார் என்ற பொருளில் வந்தது. 'தீர்ந்தார் ஒருவர் யாருளர்' என்றமையால், 'இராவணனும் அவன் மகனும், நகரமும் அழிந்தே தீரும்' என்று மாலியவான் தான் கருதியதைக் கூறினன் என்றபடி. நம் வென்றி - 'இதுகாறும் நாம் பெற்ற வெற்றி' என்றும், 'இனி இராமபிரானை வெல்வதாகக் கருதும் வெற்றி' என்றும் இரு காலங்களுக்கும் ஒட்டக் கருதுமாறு பொருள் கொள்ளலாம். வெறிது - வீண்; பயனின்மை. (கலி. 72, 1 - 7); (மருதம். 7 - 17); (பெருங் 3 - 2 - 28).

பி - ம். 1. வானமண்ணோடு; மண்ணொடு மறைக்க; மண்ணோடு மறிக்க.
2. இலங்கையூரில்.
4. வறிதுநம்; மேல்வருவ தோர்வான்; வினைவதோரான். 8

இதன்பின் ஓர் அதிகப் பாடல்:—

என்றுமா லியவான் கூறப்
பிறையெயிற் றெழிலி நாப்பண்
மின்றெரிந் தென்ன நக்கு
வெருவர வுரப்பிப் பேழ்வாய்
ஒன்றினென் றசனி யென்ன
வுருத்துநீ யுரைத்த மாற்றம்
நன்றுநன் றென்று சீறி
யுரைத்தன னலத்தை யோரான்.

## இராவணன் வீரவாதம் பேசுதல்

2783. கட்டுரை யதனைக் கேளாக்
கண்ணெரி கதுவ நோக்கிப்
பட்டன ரரக்க ரென்னிற்
படைக்கலம் படைத்த வெல்லாங்
கெட்டன வெனினும் வாழ்க்கை
கெடாதுநற் கிளிய னாளை
விட்டிட வெண்ணி யோநான்
பிடித்தது வேட்கை வீய.

கட்டுரை அதனைக் கேளா - (மாலியவான் கூறிய) உறுதி மொழிகளைக் கொண்ட அப் பேச்சினைக் கேட்டு, (இராவணன்) கண் எரி - தன் கண்களிலிருந்து எழுந்த நெருப்பு, கதுவ (மாலியைப்) பற்றுமாறு, நோக்கி - பார்த்து, 'அரக்கர் பட்டனர் என்னின் - அரக்கர்கள் இறந்து பட்டார்கள் என்றாலும், படைத்த படைக் கலம் எல்லாம் கெட்டன எனினும் - (யாம்) பெற்ற ஆயுதங்கள் யாவும் அழிந்தன என்றாலும், நல் கிளி அனாளை - நல்ல கிளி போன்ற சீதையை, நான் பிடித்தது - நான் பற்றியது, வேட்கை வீய - என் ஆசை கெட, வாழ்க்கை கெடாது - என் உயிர் வாழ்க்கை கெடாமல், விட்டிட எண்ணியோ - (கை) விட்டுவிட நினைத்தோ? (அன்றே என்றபடி).

எரிகதுவ நோக்கி; 'மாலி தன்னை யெரியெழ நோக்கி' (யுத்த. 901) 'வாழ்க்கை கெடாது நற்கிளியனாளை விட்டிட வெண்ணியோ நான் பிடித்தது' என்றதில் அமைந்த அமங்கலக் கருத்தை நோக்குக; இன்னும் இராவணன், 'நாசம் வந்துற்றபோது நல்ல தோர் பகையைப் பெற்றேன்' (யுத்த. 1241) என்று முன் மாலிய வானிடம் கூறியது காண்க. மற்றும் 'மீதெழு மொக்குளன்ன யாக்கையை விடுவதல்லால், சீதையை விடுவதுண்டோ விருபது திண்டோளுண்டாய்' என்று பின்னும் இக் கருத்தை இராவணன் இந்திரசித்திடம் (இந்திரசித்து வதைப். 9) கூறுவதும் காண்க. ஆரணிய. 25, 1003, 1094. கிளி பிராட்டியைக் கிளி என்றது;

என்று பிராட்டியைக் கூறியதற்கொப்ப, பிடித்தது என்று கூறிய பொருத்தம் காண்க. வேட்கை - அவத்தை பத்தினுள் ஒன்ருன காம விருப்பம் (நம்பியகப் 36, உரை).

பி - ம். 1, யிதனைக் கேளா,
2. படைத்த தெல்லாம்,
3. வென்னில் யாக்கை கெடாதெனிற் கிளியனுளை ; கெடாத நற்கிளி,
9
4. வேட்டை விர.

2784. மைந்தனென் மற்றை யோரே
னஞ்சினிர் வாழ்க்கை வேட்டீர்
உய்ந்துநீர் போவீர் நாளை
யூழிவெந் தீயி னோங்கிச்
சிந்தினென் மனித ரோடு
குரங்கினைத் தீர்ப்பெ னென்ருன்
வெந்திற லரக்கர் வேந்தன்
மகனிவை விளம்ப லுற்ருன்.

வெம் திறல் அரக்கர் வேந்தன் - கொடிய திறல் வாய்ந்த அரக்கர்களுக்கு மன்னனுன இராவணன், (முன் நின்ருேரை நோக்கி), 'மைந்தன் என் - மைந்தனுல (இந்திரசித்தால்) பயனென்ன? மற்றையோர் என் - பிறராலும் பயன் என்ன? அஞ்சினிர் - நீவிர் யாவரும் (பகைவனுக்கு) அஞ்சினீர்கள்; வாழ்க்கை வேட்டீர்-உயிர் வாழ்க்கையை விரும்பினீர், நீர் - (அப்படிப்பட்ட) நீவிர், உய்ந்து போவீர் - உயிர் பிழைத்துப் போவீராக, நாளை - நாளையே, (யான்) ஊழி வெம் தீயின் ஓங்கி - ஊழிக்காலத்துத் தோன்றும் கொடிய தீயைப் போல மேலெழுந்து, மனிதரோடு குரங்கினை - மனிதர்களையும் குரங்குகளையும், சிந்தினென் - சிதறவடித்து, தீர்ப்பென் - ஒழிப்பேன்' என்ருன் - என்று கூறினன்; (அதனைக் கேட்ட) மகன்-மகனுன இந்திரசித்து, இவை - (பின் வரும்) இச் சொற்களை, விளம்பல் உற்ருன் - சொல்லலானுன்.

இங்குக் கூறிய வண்ணமே கும்பகருணன் அறவுரை கூற, அது கேட்ட இராவணன் அவனை மறுத்துத் தான் போர்க்கெழுவ

தாகக் கூறியது காண்க. (யுத்த. 1295 - 7) சிந்துதல் - சிதறுதல்; அழித்தலும் ஆம். வேந்தன் மகன் என்று கூட்டிப் பொருளுரைத்தலும் ஆம்.

பி - ம். 1. மைந்தரென் ; மற்றுளாரென்; எஞ்சினிர் வாழ்க்கை ; வாழ்வு வேட்டீர் ; வாழ்வு வேண்டில்.
2. உய்ந்துநீர் போமின், உய்ந்தனிர் போவிர் ; உய்ந்துநீர் போவீர்,
3. சிந்தனை மனிதர், சிந்திய மனிதர் , மனித்தரோடக் ; தீப்பெனென்றுன்; தீர்வனென்றுன் ; சிதைப்பனென்றுன், செருப்பனென்றுன்,
4. காண்பினென்றுன் மகனிவை.

## இந்திரசித்து மறுமொழி

2785. உளதுநா னுணர்த்தற் பால
வுணர்ந்தனை கோட லுண்டேல்
தளமலர் கிழவன் றந்த
படைக்கலந் தழலிற் சேர்த்தி
அளவில தமைய விட்ட
திராமனை நீக்கி யன்றால்
விளைவில தனையன் மேனித்
தீண்டின்றி மீண்ட தம்மா.

(இந்திரசித்து, தன் தந்தையை நோக்கி), உணர்ந்தனை கோடல் உண்டேல் - (நீ) மனதிற்கொண்டு ஏற்றுக் கொள்ளுதல் இயலுமானால், நான் உணர்த்தல் பால - நான் தெரிவிக்கத் தக்கவை, உளது - இருக்கின்றன; (அவை யாவன), தளம் மலர் கிழவன் - இதழ்களையுடைய தாமரை மலர்க்கு உரியனான பிரமன், தந்த - அளித்த, படைக்கலம் - அத்திரத்தை, தழலிற் சேர்த்தி - நெருப்பில் அமைய - அமைத்து, அளவிலது - (ஆற்றலில்) அளவற்றதாக, விட்டது - (யான்) விட்ட அந்தப் பிரமாத்திரம், பொருந்த, இராமனை நீக்கி அன்று - இராமனை நீக்கிப் (பிறர் மீது மட்டும்) விட்டது அன்று; (அவனையும் உட்படுத்தியதே ஆகும்); (அவ்வாறிருக்க அவ் வத்திரம்) விளைவிலது - பயனற்றதாகி, அனையன் மேனி தீண்டின்றி - அவ்விராமனை மேனியைத் தீண்டுதல் (கூட) இல்லாமல், மீண்டது - திரும்பியது; அம்மா - (இது) பெரு வியப்பாகும். ஆல் - அசை.

உணர்ந்தனை கோடல் உண்டேல் என்றது, இராவணனின் வெகுளி நிலையை உன்னிக் கூறியது. மலர்க் கிழவன் தந்த படைக் கலம் - பிரமாத்திரம். படைக்கலம் தழலிற் சேர்த்தல். பிரமாத்திரப் படலம் *164 - 166.* பிரமாத்திரம் இராமபிரானைக் கட்டுப்படுத்தாமல் நின்றதைக் கண்டு இந்திரசித்து வியந்து கூறியதாகும் இது.

பி - ம். 1. பாலதுணர்ந்தனை,

2. சரப்படை தழலிற்; சாற்றி, சார்த்தி, சாத்தி,

3. அளவிலவமைய; நீக்கியென்றால்; நீக்குவன்றால்; நீக்கியவருள்வினை

4. நின்டில மீண்ட; நின்டின்றி யிழந்ததம்மா; மீண்டதன்றே. 11

2786. மானிட னல்லன் றொல்லை
வானவ னல்லன் மற்றும்
மேனிவர் முனிவ னல்லன்
வீடணன் மெய்யிற் சொன்ன
யானென தெண்ண றீர்ந்தா
ரெண்ணுறு மொருவ னென்றே
தேனகு தெரியன் மன்ன
சேகறத் தெரிந்த தன்றே.

தேன் நகு தெரியல் மன்ன - தேன் மலர் மாலையை அணிந்த மன்ன! மானிடன் அல்லன் - (அவ்விராமன்) மானிட குலத்தைச் சார்ந்தவன் அல்லன்; தொல்லை - பழமையான, வானவன் அல்லன் - வானவர் மரபைச் சேர்ந்தவனுமல்லன்; மற்றும் - அல்லாமலும், மேல் நிவர் முனிவன் அல்லன் - மேன்மை மிக்க முனிவனுமல்லன்; (ஆனால்) வீடணன் - வீடணன், மெய்யில் - உண்மையில், சொன்ன - கூறிய, யான் எனது எண்ணல் தீர்ந்தார் - யான் (என்றும்) எனது (என்றும்) நினைப்பதை விட்டு நீங்கியவர், எண்ணுறும் - (உள்ளத்தில்) நினைக்கும், ஒருவன் என்றே - ஒப்பற்றவனான, (பரம்பொருள்) என்றே, சேகு அற - குற்றம் நீங்கி, தெரிந்தது - அறிய வந்தது. அன்று, ஏ, அசைகள்.

நிவர்தல் - ஓங்குதல். முனிவன், மானிடன் வானவன் என்பன போல சாதியொருமை வீடணன் சொல்லியது: (யுத்த. *122*) யான் எனது எண்ணல்; அகங்கார மமகார எண்ணங்களை உடைத்தாதல். சேகு - குற்றம்; ஐயமும் ஆம்; 'சேகறத்

தெருட்டி' (யுத்த. 1332) இந்திரசித்து இராமபிரானை பரம்பொருளே என்று இங்கு உணர்ந்தது கூறினன் என்க,

பி - ம். 1. மானுடனல்லன, மானுயலல்லன்,
2. மேனிமிர்முனிவ, மேனிமிர் முனைவ,
3. ஏனவனென்னிற் ; யானெனதென்னில் தேனுறு தெரியல்,
4. சிக்குறத் தெரிந்தநன்றே ; சிக்கிறந் தெரிந்ததன்றே.

2787. அனையது வேறு நிற்க
வன்னது பகர்த லாண்மை
வினையெனி னன்று நின்று
வீழ்ந்தது வீழ்க வீர
இனையனீ மூண்டி யான்போய்
நிகும்பிலை விரைவி னெய்தித்
துனியறு வேள்வி வல்லை
யியற்றினான் முடியுந் துன்பம்.

'அனையது - அப்படிப்பட்ட உண்மை, வேறு - தனியே, நிற்க - கிடக்கட்டும்; அன்னது பகர்தல் - அதனைச் சொல்லுதல், ஆண்மை வினை எனின் - வீரமான காரியம் என்றால்,' அன்று - (அஃது) அன்று; (மேலும்) நின்று வீழ்ந்தது வீழ்க - இருந்து அழிந்தது அழிந்ததாகுக; வீர! நீ இனையல் - வீரமுடையோய்! இவற்றிற்கு நீ வருந்துதல் வேண்டா; யான் விரைவின் நிகும்பிலை மூண்டுபோய் எய்தி - யான் முனைந்துபோய் விரைவில் நிகும்பிலையைச் சென்றடைந்து, வல்லை - விரைவில், துனி அறு வேள்வி இயற்றினால் - குற்றமற்ற வேள்வியை முடித்தால், துன்பம் முடியும் - (இனி வரலாகும்) துன்பங்களெல்லாம் ஒழிந்துவிடும்.

நிகும்பிலை, நிகும்பலை என்றும் கூறப்பெறும். இலங்கை நகர்க்கு வெளியேயுள்ள ஒரு கோயிலிடம். அடுத்த படலம் காண்க. துனி - துன்பம். 'இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்' (தொல். பொ. 303).

சில சுவடிகளில் இச் செய்யுளுடன் களியாட்டுப் படலம் முற்றும்.

பா - ம். 1. அனையது பிறவும், அனையது வென்ற; வேறு நீக்கி நந்துத லாண்மை; புரிபுலாண்மை; பகரினுண்மை,
2. வினையென; வினையன்வன்று நின்று; வீழ்ந்தவர் விழ்க விர,
3. இனையது பூண்டியான்; இனையது மூண்டுநான்; விறலின் னெய்தி,
4. தொடங்கினுன் முடியும். 13

2788. அன்னது நல்ல தேயா
லமைத்தியென் றரக்கன் சொன்னுன்
நன்மக னும்பி கூற
நண்ணலார் கண்டு நண்ணி
முன்னிய வேள்வி முற்ரு
வகைசெரு முயல்வ ரென்ன
என்னவ ரெய்தா வண்ண
மியற்றலா முறுதீ யென்ருன்

(இந்திரசித்து கூறியவற்றைக் கேட்ட) அரக்கன் - இராவணன், 'அன்னது நல்லதே - அது நல்லதே; அமைத்தி - (அப்படியே) செய்வாயாக,' என்று சொன்னுன் - என்று கூறினுன்; (அதைக் கேட்ட), நன் மகன் - நல்ல மகனை இந்திரசித்து, (இராவணனை நோக்கி), 'உம்பி கூற - உன் தம்பியான வீடணன் சொல்லிக் கொடுக்க, நண்ணலார் - (நம்) பகைவர் (என்னைப்) பார்த்து, நண்ணி - (நான் அடைந்த நிகும்பிலையை) நெருங்கி, முன்னிய - நான் செய்யக் கருதிய, வேள்வி - யாகம், முற்ரு வகை - முடியாத வகையில், செரு முயல்வர் - போர் (செய்ய) முயல்வரே,' என்ன - என்று கூற, (இராவணன்), அவர் எய்தா வண்ணம் - அப் பகைவர் (அங்கு) வராதபடி, என் உறுதி இயற்றலாம் என்ருன் - எந்த உறுதியான செயலைச் செய்யலாம்?' என்று வினவினுன். ஆல் - அசை.

சில சுவடிகளில் இச் செய்யுள் முதல் மாயா சீதைப் படலமாகும்.

பா - ம். 1. அன்னது நலத்ததேயால்; அமைதியென்றரக்கன்,
2. நன்னெறி நம்பிகூற; நன்னெறியியற்றும் போதினனுகு வானின்ன,
3. செருமுயல்வரானுல், முயல்வனென்ருன், முயல்வரென்ருன்,
4. அன்னவரெய்தா; முயல்தியென்ருன்; வகையென்ருன்; முபாய மென்ருன். 14

## இந்திரசித்து உபாயம் கூறுதல்

2789. சானகி யுருவ மாகச்
சமைத்தவ டன்மை கண்ட
வானுய ரநுமன் முன்னே
வாளினுற் கொன்று மாற்றி
யானெடுஞ் சேனை யோடு
மயோத்திமே லெழுந்தே னென்னப்
போனபின் புரிவ தொன்றுந்
தெரிகிலர் துன்பம் பூண்பார்.

(இந்திரசித்து இராவணனை நோக்கி,) 'சானகி உருவமாக சமைத்து - சானகியின் உருவமாக (மாயையினுல் ஓர் உருவம்) ஆக்கி (அதனை), அவள் தன்மை கண்ட - அவள் இயல்புகளை யெல்லாம் நேரில் கண்டுள்ள, வான் உயர் அநுமன் முன்னே - வான் மட்டும் உயர்ந்துள்ள (புகழமைந்த) அநுமன் (கண்) முன்னே, வாளினுல் கொன்று - என் வாளினுல் கொன்று, மாற்றி - உயிரைப் போக்கி, யான் - நான், நெடும் சேனையோடும் அயோத்திமேல் எழுந்தேன் என்ன - என் பெரிய சேனைகளுடன் அயோத்தியை(த் தாக்கி) அதன்மீது சென்றேன் என்று சொல்லி, போன பின்-(அவ்வாறே) அகன்ற பிறகு, (இராம இலக்குவர் முதலியோர்) துன்பம் பூண்பார் - துன்பங் கொண்டு, புரிவது ஒன்றும் தெரிகிலர் - செய்வது ஒன்று தெரியாதவராவர்.

இது முதல் 3 செய்யுட்களில் இந்திரசித்து, பகைவர் நிகும்பிலை வேள்வி இயற்றப் பெறுவதை அறிந்து தடை செய்யாதவாறு தான் செய்ய நினைத்த சூழ்ச்சியைத் தன் தந்தையிடம் விளக்கு கின்ருன். அவள் தன்மை கண்ட அநுமன்; முன் அசோக வனத்தில் அவன் புகுந்து இயற்றியவற்றைக் குறித்தது. மாற்று தல் - உயிரை மாற்றுதல். சானகி உருவைக் கொல்லுதல், அவர் களின்மேல் முயற்சிகளைக் கெடுப்பதற்கும், அயோத்திமேற் செல்லு தல் அவர்களையும் அப்பாற் படுத்தற்கும் ஆம். அடுத்த பாடல் களையும் காண்க.

பி - ம். 1. சானகி வடிவமாக,
2. வாளியிற் கொன்று, வாளினுலறுத்து மாற்றி,
3. லெழுகே னென்னப்,
4. தொன்று மிலராவர். 15

2790. இத்தலைச் சீதை மாண்டாள்
பயனிவ ணில்லை யென்பார்
அத்தலைத் தம்பி மாருந்
தாயரு மடுத்து ளோரும்
உத்தம நகரு மாளு
மென்பதோ ரச்ச மூன்றப்
பொத்திய துன்பத் தோடுஞ்
சேனையுந் தாமும் போவார்.

இ தலை - இவ்விடத்தில், 'சீதை மாண்டாள் - சீதை இறந்தாள்; இவண் பயன் இல்லை - இங்குத் (தங்குவதில்) இனிப் பயன் இல்லை,' என்பார் - என்று சொல்லி, அ தலை - அவ்விடத்தில், தம்பிமாரும் தாயரும் அடுத்துளோரும் - பரதன் சத்துருக்கனுகிய சகோதரரும அன்னையர் மூவரும் உறவினர்களும், (மற்றும்) உத்தம நகரும் - உயர்வுமிக்க நகரமான அயோத்தியும், மாளும் - அழியும், என்பது ஓர் அச்சம் ஊன்ற - என்ற ஒரு பயம் மனத்தில் ஊன்றி நிற்க, பொத்திய துன்பத்தோடும் - நிறைந்த துன்பத்தோடும், சேனையும் தாமும் - சேனைகளோடு தாமும், போவார் - திரும்பிப் போவார்.

மாண்டாள், மாளும் என்று கால வேறுபாடு தோன்றக் கூறிய நயம் காண்க. அச்சம் ஊன்றல் - அச்சம் உள்ளத்தில் பதிதல். பொத்துதல் - நிறைதல் மூடுண்டல் எனினும் ஆம். 'வான்மேற் பொத்திய சூழ' (ஆரணிய. 461).

பி - ப். 1. பயனிவை யில்லை ; இல்லை யென்னுர்,
2. தாயருமறிந்துள்ளாரும்.
3. உந்தம நகருளோரும், துயரமூன்ற, துன்பமூன்ற, துனுக்கமூன்றி,
4. பொத்திய வருத்தத்தோடுஞ் ; பொத்திய துன்பமுள ; பொத்துயர் தூண்டத் தாழார் சேனையுந் தாமும். 16

2791. போகில ரென்ற போது
மநுமனை யாண்டுப் போக்கி
ஆகிய தறிந்தா லன்றி
யருந்துய ராற்ற லாற்ரூர்
ஏகிய கரும முற்றியா
னிவண் விரைவி னெய்தி
வேகவெம் படையிற் கொன்று
தருகுவன் வென்றி யென்ருன்.

'போகிலர் என்ற போதும் - தாமே அயோத்திக்குச் செல்ல வில்லை' என்ருலும், அநுமனை ஆண்டு போக்கி - அநுமனை அவ் வயோத்திக்கு அனுப்பி, ஆகியது - அங்கு நிகழ்ந்ததை, அறிந்தால் அன்றி - தெரிந்து கொண்டாலல்லாமல், அரும் துயர் ஆற்றல் ஆற்ரூர் - (தாம் நுகரும்) கொடிய துயரத்தைத் தாங்கவியலாதவர் ஆவர்; (இஃது இங்ஙனம் இவ்வாருக), யான் - நான், ஏகிய கருமம் முற்றி - நிகும்பிலேக்குச் சென்ற வேள்விச் செயலே முடித்துக் கொண்டு, இவண் விரைவின் எய்தி - இங்கு வேகமாகத் திரும்பி, வேக வெம் படையில் கொன்று - (பகைவரை) வேகமாகச் செல்லும் கொடிய படைகளினுல் கொன்று, வென்றி தருகுவன் - (உனக்கு) வெற்றியை அளிப்பேன்', என்ருன் - என்று இந்திரசித்து இராவணனிடம் கூறினுன்.

பி - ம். 1. போகலர்.
3. ய்ானவண் விரைவின்.
4. படையாற் கொன்று ; வெற்றியென்ருன். 17

## இப்பால் வானரரின் செயல்

2792. அன்னது புரித னன்றென்
றரக்கனு மமைய வஞ்சப்
பொன்னுரு வமைக்கு மாய
மியற்றுவான் மைந்தன் போனுன்
இன்னதித் தலையை தாக
விராமனுக் கிரவி செம்மல்
தொன்னக ரதனை வல்லைக்
கடிகெடச் சுடுது மென்ருன்.

'அன்னது புரிதல் - அவ்வாறு செய்தல், நன்று என்று - நல்லது என்று, அரக்கனும் அமைய - இராவணனும் உடன்பட, மைந்தன் - மகனான இந்திரசித்து, பொன் உரு அமைக்கும் வஞ்ச மாயம் இயற்றுவான் போனான் - அழகிய (பிராட்டியின்) உருவை அமைக்கும் வஞ்சனையான மாயத்தைச் செய்யச் சென்றான்; இ தலை - இந்தப் புறத்தில், இன்னது ஆக - இத்தகைய செயல் நிகழ, இராமனுக்கு - இராம்பிரானுக்கு, இரவி செம்மல் - கதிரவன் மகனான சுக்கிரீவன், 'தொல் நகர் அதனை - பழமையான இலங்கையை, கடி - காவல், கெட - அழியுமாறு, வல்லை - விரைவில், சுடுதும் - எரிப்போம், என்றான் - என்று கூறினான்.

அமைதல் - உடன்படுதல்; 'கெழு தகைமை செய்தாங் கமையாக் கடை' (குறள். 803) வஞ்ச உரு, என்றும் வஞ்ச மாயம் என்னும் கூட்டலும் ஆம். இலங்கையைத் தொன்னகர் என்றது; 'தொன்மாவிலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை' (சிறுபா. 119, 20) என்பதனாலும் அறிக. கடி - காவல். சுக்கிரீவன் இலங்கையைக் கொளுத்த அநுமதி வேண்டினன் என்க,

பி - ம். 1. புரிவை நன்று ; அரக்கனுமருள ; வஞ்சொல்.
2. பொன்னுருக்குவமை ; னமைந்து போனான்.
3. தலையவாக.
4. தொன்னகரிதனை ; கடிதினிற் சுடுதும். 18

2793. அத்தொழில் புரித னன்றென்
றண்ணலு மறைய வெண்ணித்
தத்தின னிலங்கை மூதூர்க்
கோபுரத் தும்பர்ச் சார்ந்தான்
பத்துடை யேழு சான்ற
வானர குழுவும் பற்றிக்
கைத்தலத் தோரோர் கொள்ளி
யெடுத்ததெவ் வுலகுங் காண.

அண்ணலும் - இராமபிரானும், அ தொழில் புரிதல் நன்று என்று - அச் செயலைச் செய்தல் ஏற்றதே என்று, அறைய - சொல்ல, (சுக்கிரீவன்) எண்ணி - ஆராய்ந்து, தத்தினன் - தாவி, இலங்கை

மூதூர் கோபுரத்து உம்பர் - இலங்கையாகிய பழைய நகரத்தின் கோபுரத்தின்மீது, சார்ந்தான் - அடைந்தான்; (அப்பொழுது) பத்து உடை ஏழு சான்ற - எழுபது (வெள்ளம்) என்று மிகுந்த, வானர குழுவும் - வானரங்களாகிய கூட்டமும், எ உலகும் காண - எல்லா உலகங்களும் காணுமாறு, கை தலத்து - (தத்தம்) கைகளில், ஓரோர் கொள்ளி - ஒவ்வொரு கொள்ளிக் கட்டையை, பற்றி எடுத்தது - பிடித்து எடுத்தது.

இராமபிரான் சுக்கிரீவனின் வேண்டுகோளுக்கிசைய, சுக்கிரீவன் நகரத்தின் கோபுர உச்சியில் தாவி நின்றான். எழுபது வெள்ளம் சேனைகளும், ஒவ்வொருவர் ஒவ்வொரு கொள்ளிக் கட்டையுடன் அச் சுக்கிரீவனைச் சார்ந்தன என்க. பத்துடை ஏழு; 'ஏற்ற வெள்ள மெழுபதி னிற்றவென், றூற்றலாள ரறிவின மைத்ததோர், மாற்ற முண்டது வல்லது மற்றுமோர், ஈற்று முண்டென் றிசைத்திடற் கொண்ணுமோ' (கிட்கிந்தா. 724) என்று சுக்கிரீவன் கூறியபடி வானர சைனியம் எழுபது வெள்ளம் என்றே கொள்ளற்பாலது: பிரமாத்திரம் முதலியவற்றால் இறந்தவர் யாவரும் மருத்துவ மலையால் உயிர் பெற்றனராதலால் இக் கணக்கு குறையாததாயிற்று என்க. அன்றி, 'வீரிய விதியி னெய்திப் பதினெழு வெள்ளத் தோடும், மாருதி மேலை வாயி லுழிஞைமேல் வருவதானான், ஆரிய னமைந்த வெள்ள மத்தனை யோடும் வெற்றிச், சூரியன் மைந்தன் றன்னைப் பிரியல னிற்கச் சொன்னான்' என்ற யுத்த. 889-ஆம் செய்யுளின்படி, சுக்கிரீவனிடம் அமைந்த சேனை பதினேழு வெள்ளமாக, அவர்களோடு நகரைக் கொளுத்த 'கோபுரத்தும்பர்ச் சாந்தான்' என்று கூறுவதும் ஆம். இவ்வாறு உண்மைக்கு மாறுபடாமல் இரட்டுற மொழிந்து செல்லும் ஆற்றல் அருட் கவிஞராகிய கம்பநாட்டாழ்வார்க்கே ஏற்றதாம். பகைவரூரை எரி கொளுவித்தல், உழபுல வஞ்சியாகும்; (பு. வெ. மாலை. 49); எரி பரந்தெடுத்த செற்றம் (தொல். புறத்திணை. 63). வானரர் ஊரைச் சுட்டமை மேல் 21, 22-ஆம் செய்யுட்களில் காண்க. 'குரங்கின் கையிற் கொள்ளி கொடுத்தாற் போல' என்ற பழமொழியும் இங்கு நினைவுக்கு வரலாம்.

பி - ம். 1. அருளினனிராமனண்ணல்! ; இராமனுமிசையவண்ணல்.
2. கோபுரஞ் சார்ந்தான்; சார்ந்தார்.
3. பத்துடனேழுவாளரப் பரவை பற்றி, பரப்பைப் பற்றி.
4. கைத்தலத்தாலோர் கொள்ளி,

## வேறு

2794. எண்ணில கோடிப் பல்கவி யாவும்
மண்ணுறு காவற் றிண்மதில் தாவி
வெண்ணிற மேக மின்னினை வீசி
நண்ணின போல்வ தொன்னகர் நாண.

எண் இல - எண்ணற்றவையான, பல் கோடி - பல கோடி, கவி யாவும் - வானரங்கள் எல்லாம், மண் உறு - மண்ணினால் அமைய லுற்றதும், காவல் - காவல்களை யுடையனவுமான, திண் மதில் தாவி - வலிய மதில்களின்மீது தாவிப் பாய்ந்து, தொல் நகர் நாண - பழமையான அந்த இலங்கை நகர் நாணமுறும்படி, வெண்ணிற மேகம் - வெண்மை நிறத்தையுடைய மேகங்கள், மின்னினை வீசி - மின்னல்களை வீசிக் கொண்டு, நண்ணின போல்வ - நெருங்கின போல்வனவாயின.

வானரர்களுக்கு வெண்ணிற மேகங்களும், அவர்களின் கைகளிலுள்ள கொள்ளிக் கட்டைகட்கு மின்களும் உவமைகள். கவி, மேகம் போல்வ என இயைக்க.

பா - ம். 1. எண்ணின கோடிப், எண்ணுறு ; பலபடை யாவும்.
3. மின்னினம்.
4. போலத் தொன்னகர் ; தொன்னகர் நண்ண ; தொன்னகர் காண ; தொன்னகர்தாம. 20

2795. ஆசைக டோறு மள்ளின கொள்ளி
மாசறு தானை மர்க்கட வெள்ளம்
நாசமிவ் வூருக் குண்டென நள்ளின்
வீசின வானின் மீன்விழ லென்ன.

வெள்ளம் - வெள்ளக் கணக்கான, மர்க்கட மாசு அறு தானை - குரங்குகளாலான குற்றமற்ற படை, ஆசைகள் தோறும் - திசைகள் தோறும், கொள்ளி அள்ளின - கொள்ளிக் கட்டைகளை அள்ளி, நள்ளின் - நள்ளிரவில், 'இ ஊருக்கு நாசம் உண்டு என - இந்த நகருக்கு அழிவு உண்டு' என்று குறிக்க, வானின் மீன் விழல்

என்ன - வானத்திலிருந்து நக்ஷத்திரங்கள் விழுதலை போல, வீசின - (அக் கொள்ளிகளை) வீசின.

மர்க்கடம் ; மார்க்கடம் என்பதன் விகாரம். மார்க்கட வெள்ளம் - குரங்குகளின் கூட்டம் என்றும் ஆம். வீசி எறியப்பெற்ற கொள்ளிக் கட்டைகள் வானத்திலிருந்து விழும் நக்ஷத்திரங்களை ஒத்தன. வானமீன் விழுதல் உற்பாதம்.

பி - ம். 2. காசறுதானை கார்கடல் வெள்ளம் ; மாசறுநாமம் ; காசறு விரர் கடாவிட விழ்வ ; கானகமர்க்கடம்.

3. குண்டெடன நாளின்.

4. விழலன்ன ; விழுமென்ன. 21

2796. வஞ்சனை மன்னன் வாழு மிலங்கைக்
குஞ்சர மன்னர் வீசிய கொள்ளி
அஞ்சன வண்ண னுழியி லேவுஞ்
செஞ்சர மென்னச் சென்றது மேன்மேல்.

குஞ்சரம் அன்னார் - யானை போன்ற வானரர், வஞ்சனை மன்னன் வாழும் இலங்கை - வஞ்சனை புரிகிற மன்னனான இராவணன் வாழ்கிற இலங்கையிலே, வீசிய - எறிந்த, கொள்ளி - கொள்ளிக் கட்டைகள், அஞ்சன வண்ணன் - மை நிறத்தனான இராமபிரான், ஆழியில் - கடல் மீது, ஏவும் - செலுத்திய, செம் சரம் என்ன - சிவந்த (நெருப்பு) அத்திரம்போல, மேன் மேல் சென்றது - மேலும் மேலும் சென்றன.

ஏவும், சென்றது, இவை வழுவமைதிகள். இலங்கையைக் கடலாகவும், கொள்ளிகளை அத்திரங்களாகவும் வருணித்தார்.

பி - ம். 1. வஞ்சனையாளன், வஞ்சனை யன்னவர்.

2. குஞ்சர மன்னவர்.

3. னுழியி லெய்யும்.

4. சென்றது மென்மேல், சென்றன வென்மேல். 22

2797. கையக லிஞ்சிக் காவல் கலங்கச்
செய்ய கொழுந்தீச் சென்று நெருங்க
ஐய னெடுங்கா ராழியை யம்பால்
எய்ய வெரிந்தா லொத்த திலங்கை.

கை அகல் இஞ்சி காவல் கலங்க - இடமகன்ற கோட்டை மதிலின் காவலாளர்கள் கலங்குமாறு, செய்ய - சிவந்த, கொழு தீ - கொழுவிய நெருப்பானது, சென்று நெருங்க - போய் அணுக, இலங்கை - இலங்கை நகரமானது, ஐயன் - இராமபிரான், நெடு கார் ஆழியை - நீண்ட கரிய கடலை, அம்பால் எய்ய - தன் அஸ்திரத்தால் எய்ய, எரிந்தால் ஒத்தது - எரிந்தது போன்றது.

முன் செய்யுளும் இதுவும் வருணன் அடைக்கலப் படலக் கருத்துக்களைப் பின்பற்றி எழுந்தன. முன் செய்யுளில் கொள்ளிகள் சென்ற தன்மையைக் கூறி, இச் செய்யுளில் நகரம் எரிந்தமையைக் கூறினார். கை - இடம். (சூடா.)

பி - ம். 1. கைமதிலிஞ்சிக் ; கலங்கிச்.
2. செய்ய கொளுந்திச். 23

2798 பரற்றுறு பல்பழு வத்தெரி பற்ற
நிரற்றுறு பல்பற வைக்குலம் யாவும்
உரற்றின விண்ணி னொலித்தெழும் வண்ணம்
அரற்றி யெழுந்த தடங்க விலங்கை.

பரல் துறு பல் பழுவத்து எரி பற்ற - பரற்கள் நெருங்கியுள்ள பல காடுகளில் நெருப்பு பற்றிக்கொள்ள, நிரல் துறு பல் பறவை குலம் - வரிசையாக நெருங்கி வாழ்கின்ற பல பறவைக் கூட்டங்கள், யாவும் உரற்றின - முழக்கஞ் செய்தனவாய், விண்ணில் - வானத்தில், ஒலித்து எழும் வண்ணம் - ஒலித்துக் கொண்டு எழுந்தது போல, இலங்கை - இலங்கை நகர மக்கள் அடங்க - யாவரும், அரற்றி - புலம்பிக் கொண்டு, எழுந்த - எழுந்தனர்.

சோலைகளில் நெருப்புப் பற்ற, பறவைகள் ஒலித்துக்கொண்டு வானத்தில் எழுந்தன; அதே சமயத்தில் நகரத்தில் நெருப்பு பற்ற நகர மக்களாகிய அரக்கர் அரற்றிக் கொண்டு வானத்தில் எழுந்தனர், உடனிகழ்ச்சியணி. பரல் - பருக்கைகள்; நகர் மலைமீது அமைந்துள்ளதாகலின் சோலைகள் பரல்கள் நிறைந்துள்ளன. துறுதல் - நெருங்குதல்; 'துறுமலரவிழ் குழலாய்' (சிலப். 7 - 42). பழுவம் - காடு; 'பழுவந் தோன்றிற் றவணே' (சீவக. 1414); பழுமரம் என்று பாடங்கொண்டு ஆலமரம் என்று பொருள் கூறுவாரும் உளர். உரற்றுதல் - முழங்குதல்; 'உரற்றிய ஓசை' (ஆரணிய. 1108) அடங்க - முழுவதும்.

பி - ம். 1. தொல்பழுவத்தெரி; 'பழுமரத்தெரி.

2. பறவிரற்றுறுவைகுல நீளம்; பறவைக்குலமெல்லாம்.

3. தெழும்வாளின். 24

### இராமசரத்தாற் கோபுரம் விழுதல்

2799. மூவுல கத்தவ ரும்முத லோரும்
ஏவல் வலத்தொழில் வீர விராமன்
தீவ மெனச்சில வாளி செலுத்தக்
கோவுர முற்றும் விழுந்தது குன்றின்.

மூ உலகத்தவரும் - மூன்று உலகங்களிலுள்ளவர்களையும், முதலோரும் - முதல்வரான தெய்வங்களையும், ஏவல் வல தொழில் - ஏவல் கொள்ளக்கூடிய வலிய தொழிலையுடைய, வீரன் இராமன் - வீரனாகிய இராமன், தீவம் என - விளக்குகளைப்போன்ற, சில வாளி செலுத்த - சில அம்புகளை எய்ய, கோவுரம் முற்றும் - (அங்கிருந்த) கோபுரம் முழுமையும், குன்றின் விழுந்தது - (பெயர்ந்து) குன்றின் மீது விழுந்தது.

இதனில் இராமபிரானும் அச் சமயம் சில அம்புகளைச் செலுத்த, அங்கு நின்ற கோபுரம் உடைந்து வீழ்ந்தது என்க. தீவம், கோவுரம்; தீபம், கோபுரம் என்பன எதுகை நோக்கித் திரிந்தன.

பி - ம். 1. மூவுலகத்தேவரும்.
2. மேவின விற்றொழில்.
3. தீபமெனச்சில.
4. கோபுர முற்றும்; முறிந்தது குன்றின்; இரிந்தது குன்றின். 25

## அநுமன் இலங்கைக்குத் திரும்புதல்

2800. இத்தலை யின்ன நிகழ்ந்திடு மெல்லைக்
கைத்தலை யிற்கொடு காலி னெழுந்தான்
உய்த்த பெருங்கிரி மேருவி னுப்பால்
வைத்த நெடுந்தகை மாருதி வந்தான்.

இ தலை - இந்த இடத்தில், இன்ன - இப்படிப்பட்டவை, நிகழ்ந்திடும் எல்லை - நிகழ்ந்து வரும்போது, உய்த்த பெருங்கிரி - (முன்பு) கொண்டு வந்த பெரிய மருத்து மலையை, கை தலையின் கொடு - கையினிடத்தில் கொண்டு, காலின் - காற்றைப் போல, எழுந்தான் - எழுந்து, மேருவின் உப்பால் - மேருவுக்கு அப்புறத்திலே, வைத்த - திரும்பவும் கொண்டுபோய் வைத்த, நெடுதகை மாருதி - பெரிய தகுதிகளையுடைய அநுமன், வந்தான் - திரும்பி வந்தான்.

உப்பால் - அப்பால். கைத் தலையின் கொடு: காலினெழுந்தான் என்பது நயம். கைத்தலை கொடு எழுந்தான் என்பதற்கு, கைகளைத் தலைமேற் கூப்பிக்கொண்டும் காலினாலே நடந்தும் என்று பொருள் கொண்டு, வந்தான் என்பதனோடு முடிக்கலும் ஆம்.

பி - ம். 1. நிகழ்ந்திடும் வேலை, மேல்வை.
3. அந்த பெருங்கிரி; உய்த்த நெடுங்கிரி; மேருவினப்பால்.
4. வைத்து நெடுந்தகை; வைத்த நெடுங்சிரி. 26

2801. அறையர வக்கழன் மாருதி யார்த்தான்
உறையர வஞ்சிறை யுற்றுள தவ்வூர்
சிறையர வக்கலு முன்கொடு சீறும்
இறையர வக்குல மொத்த திலங்கை.

அறை அரவம் கழல் மாருதி - ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த மாருதி, (இலங்கையைக் கண்டவுடன்) ஆர்த்தான் - ஆரவாரித்தான்;

அ ஊர் - அந்த இலங்கைப்பதி, உறை அரவம் - செறிந்த அந்த ஆர்ப்பை, சிறை உற்றுளது - (தன்னுள்) அடக்கிக் கொண்டது; (அப்பொழுது) இலங்கை - இலங்கை நகரமானது, சிறை - தன் சிறகுகளால், அரவம் கலுழன் - ஒலியைச் செய்கின்ற கருடனால், கொடு - கொள்ளப் பெற்று, சீறும் - சீறுகின்ற, இறை - சிதறின, அரவம் குலம் ஒத்தது - பாம்புக் கூட்டத்தை ஒத்தது.

பி - ம். 2. உறையர வஞ்செவி.

3. தனிசிறும். 27

## அநுமன் மேற்றிசை வாயிலைச் சேர அங்கு இந்திரசித்து வந்தடைதல்

2802. மேற்றிசை வாயிலை மேவிய வெங்கட்
காற்றின் மகன்றனை வந்து கலந்தான்
மாற்றலின் மாயை வகுக்கும் வலத்தான்
கூற்றையும் வென்றுயர் வட்டணை கொண்டான்.

மேல் திசை வாயிலை - மேலைத் திசையிலுள்ள (கோட்டை) வாயிலை, மேவிய - வந்தடைந்த, காற்றின் மகன்தனை - வாயு தேவனின் மகனான மாருதியை, மாற்றல் இல் - (எவராலும்) மாற்றுதல் இயலாத, மாயை வகுக்கும் வலத்தான் - மாயைகளை உண்டாக்கும் வலிமையுடையவனும், கூற்றையும் வென்று - இயமனையும் வெற்றிகொண்டு, உயர் வட்டணை கொண்டான் - உயர்ந்த சுற்றல் கண்ட இந்திரசித்து, வந்து கலந்தான் - (தானும் அங்கு) வந்து கூடினான்,

வட்டணை - சுற்றல்; வட்டணை செய்தல் - சுழற்றுதல். வட்டணை கொண்டான் காற்றின் மகன்றனை வந்து கலந்தான் என்றியைக்க.

பி - ம். 1. மேவிய வன்கண்.

3. வகுத்த மணத்தான்.

4. வென்றுறு வட்டணை; வென்றெரு வட்டணை; வெங்குய வட்டணை. 28

## மாயா சீதையுடன் வந்த இந்திரசித்து கூறுதல்

2803. சானகி யாம்வகை கொண்டு சமைத்தோர்
மானனை யாளை வடிக்குழல் பற்றூ
ஊனது வாளொரு கைக்கொ டுருத்தான்
ஆனவ னந்நிலை யின்ன தறைந்தான்.

சானகி ஆம் வகை கொண்டு சமைத்து - சீதாப் பிராட்டியாக ஆகும் முறையில் மனத்திற் கொண்டு ஓர் உருவமைத்து, ஓர் மான் அனையாளை - ஒப்பற்ற மான் போன்ற அவளை, வடி குழல் பற்றூ - தேன் நிறைந்த கூந்தலைப் பற்றிப் (பிடித்துக் கொண்டு), ஊன் நது வாள் ஒரு கைகொடு - மாமிசம் விளங்குகிற வாள் (ஒன்றை) ஒரு கையில் கொண்டு, உருத்தான் ஆனவன் - கோபித்தவனான அவன், அ நிலை - அந்த நிலையில், இன்னது - இதனை, அறைந்தான் - சொன்னான்.

இடக் கையில் கூந்தலைப் பற்றி வலக்கையில் வாளை ஏந்திக் கூறினன் என்க. வடி - தேன். 'வடிமலர் வள்ளம்' (சூளா. இரத. 45); 'வடிகொள் பொழிலின்' (தேவா. 116 - 3). அ நிலை - அவளை வெட்டப் போகும் தருணத்தில்.

பி - ம். 1. யாமவை கொண்டு : சமைத்த சமைத்தான்,
3. கொடுருத்தே ; கொடுவந்தான்.
4. ஆனவ னின்னன சொற்க ளறைந்தான்.



## அது கண்ட அநுமன் நிலை

2804. வந்திவள் காரண மாக மலைந்தீர்
எந்தை யிகழ்ந்தன னியானிவ ளாவி
சிந்துவ னென்று செறுத்துரை செய்தான்
அந்தமின் மாருதி யஞ்சி யயர்ந்தான்.

(அநுமனை நோக்கி, இந்திரசித்து), 'இவள் காரணமாக - இவள் பொருட்டாக, வந்து - இங்கே வந்து, மலைந்தீர் - போரிட்டீர்கள் ; எந்தை இகழ்ந்தனன் - என் தந்தை இதனில் அலட்சியமாக இருந்து விட்டான் ; 'இவள் ஆவி யான் சிந்துவன் - இவள் உயிரை யான் நீக்குவேன்' என்று - என்று, செறுத்து - கோபித்து, உரை செய்

தான் - சொன்னான்; அந்தம் இல் மாருதி - அழிவில்லாத மாருதி, (அச்சொற்களைக் கேட்டு) அஞ்சி - பயந்து, அயர்ந்தான் - மனச் சோர்வடைந்தான்.

இகழ்ந்தனன் - பொருட்படுத்தினானல்லன். செறுதல் - சினத்தல்; வெறுத்தலும் ஆம். அந்தமில் மாருதி; (சுந்தர. 561); உயுத்த - மருத்துமலைப் 114; (உந்தர. அநுமப். 34 - 40). 30

2805. கண்டவ ளேயிவ ளென்பது கண்டான்
விண்டது போலுநம் வாழ்வென வெந்தான்
கொண்டிடைத் தீர்வதோர் கோளறி கில்லான்
உண்டு யிரோவென வாயு முலர்ந்தான்.

(அப்பொழுது அநுமன்), இவள் கண்டவளே என்பது கண்டான் - இவள் (முன்பு அசோக வனத்தில் தன்னால்) காணப் பெற்றவளே, என்பதை உணர்ந்தான்; 'நம் வாழ்வு விண்டது போலும் என வெந்தான் - 'நம் உலக வாழ்வு (இதனோடு) தீர்ந்தது போலும் என்றெண்ணி (உள்ளம்) வெதும்பினான்; இடை கொண்டு தீர்வது ஓர் கோள் அறிகில்லான் - இவ்விடை யீட்டைக் கொண்டு விலகுவதான ஒரு வழி அவன் அறிய முடியாதவனானான்; உயிர் உண்டோ என - (உடலில்) உயிர் இருக்கிறதோ என்று ஐயுறும்படி, வாயும் உலர்ந்தான் - வாயும் காய்ந்து போனான்.

இது மாயையா யிருக்கலாமோ என்ற எண்ணம் அநுமன் உள்ளத்தில் ஒரு கணநேரம் தோன்றியிருத்தல் வேண்டும்; ஆகை யால் சற்று ஆராய்ந்து 'கண்டவளே இவள்' என்பது கண்ட வனானான். கண்டான் - நிச்சயித்து; பிரத்யக்ஷ அநுமானத்தால் உறுதி கொண்டான். விண்டது; விள், பகுதி - உடைதல்; வெடித்தல்; மாறுபடுதல் என்ற பலபொருள் கொள்வது. வாயும் உலர்ந்தது என்று நீர்ப்பசையுள்ள உறுப்பும் உலர்ந்ததைக் கூறிய தால், அவன் உடல் வெதும்பின நிலை நன்கு காட்டப் பெற்றது.

பி - ம். 1. என்பது கொண்டான்.
2. விண்டது போயநம்; போக நம்வாழ்வு; வாழ்வென வேர்த்தான்; வாழ்வெனவேதான்.
3. கொண்டிடை போவதோர்.
4. நாவு முலர்ந்தான். 31

## அநுமன் இந்திரசித்தை இரந்து வேண்டல்

2806. யாது மினிச்செயல் வேறிலை யென்னுல்
நீதி யுரைப்பது நேரென வோராக்
கோதில் குலத்தொரு நீகுண மிக்காய்
மாதை யொறுத்தல் வசைத்திற மன்றே

(அப்பொழுது அநுமன் தனக்குள்), 'இனி செயல் என்னுல் வேறு யாதும் இலை - இனி, (இரந்து வேண்டுவதன்றி) என்னுல் செய்யக்கூடியது வேறு எதுவும் இன்று; நீதி உரைப்பது நேர் - அறநீதியைச் சொல்வது நேர்மையாகும்;' என ஓரா - என ஆராய்ந்து, (இந்திரசித்தைப் பார்த்து) 'கோது இல் குலத்து ஒரு நீ - குற்றமற்ற (அந்தணர்) குலத்திற் பிறந்த ஒப்பற்ற நீ, குணம் மிக்காய் - (நற்) குணங்களை மிகுதியும் கொண்டவனுவாய்; (ஆகவே நீ), மாதை ஒறுத்தல் - பெண்ணின் (உயிரை) ஒழித்தல், வசைத் திறம் - பழியின் வகையாகும', அன்றே - அல்லவோ?

இந்திரசித்தின் குலத்திற்கும் குணத்திற்கும் தகாத செயலாகும பெண்கொலை என்றுகூறி இந்திரசித்தை அச்செயலினின்று அகற்ற முயன்றனன் அநுமன், இராவணன் பிரமன்வழிப் பிறந்தவன் என்பது நூலிற் பலவிடங்களிலும் காணக் கிடப்பதாகும். 33-ஆம் செய்யுளையும் காண்க. 'யாதும் செயல் வேறு இலை' என்றதால் ஸாம வழியேயன்றித் தான, பேத, தண்ட மார்க்கங்கள் பயன்படா என்று அவன் கண்டான். மாதை ஒறுத்தல் வசைத்திறன்; பால. தாடகை வதைப். 53-61; ஒறுத்தல் - அழித்தல்; வெறுத்தலும் ஆம். இங்கே கொல்லுதல் என்ற பொருளில் வந்தது.

பி - ம். 1. செயலில்லென வென்னுல்; வென்னு; லென்னு.
2. நீரெனவேராளக், நன்றென்நேரா, நீர்மைய தென்னுக்.
3. நுணத்தொருநீ நுலமிக்காய்; குணமிக்கோய்.
4. வதைத்தல், வசைத்திறமென்ருன். 32

2807. நான்முக னுக்கொரு நால்வரின் வந்தாய்
நூன்முக முற்று நுணங்க வுணர்ந்தாய்
பான்முக முற்ற பெரும்பழி யன்றே
மான்முக முற்றொரு மாதை வதைத்தால்.

'நான்முகனுக்கு - பிரமதேவனுக்கு, ஒரு நால்வரின் வந்தாய் - ஒப்பற்ற நான்காம் தலைமுறையினனாகத் தோன்றினாய்; நான்முகம் முற்றும் - நூல்களின் சிறந்த பகுதிகளை நீ முற்றிலும் நுணங்க உணர்ந்தாய் - நுட்பமாக அறிந்துள்ளாய்; மான் முகம் உற்ற ஒரு மாதை வதைத்தால் - மானின் (பார்வைப்) போன்ற (பார்வையுடைய) முகத்தைப் பெற்ற ஒரு பெண்ணைக் கொன்றால், பால் முகம் உற்ற பெரும் பழி அன்றோ - அது (தீய) பகுதிகளுள் முதன்மை பெற்ற பெரும் பழி அன்றோ.

நால்வரின் - நான்காம் தலைமுறையில்; பிரமன், புலஸ்தியன், விச்சரவஸ், இராவணன், இந்திரசித்து என்பது வமிசாவளியாகும்; இராவணன 'நான்முகன், மைந்தன், மகன், மைந்தன்', (சுந்தர. 483); இன்னும் உத்தர. திருவோலக். 17 முதலியன காண்க. நான்முகம் - பாயிரமும் ஆம், நுணங்க - நுட்பமாக; நுணங்கிய கேள்வியரல்லார்; (குறள். 419); பால், குலம், குணம் என்ற பொருள்களில் கொண்டும் பொருள் கூறலாம். மான்: இங்கு அதன் பார்வையைக் குறித்தது. நான்முகம் முற்று நுணங்க வுணர்ந்தாய் என்பதற்கு, நூல்களின் வழியே முழு அறிவையும் நுணுக்கமாக அடைந்தாய் என்பாரும் உளர். மான் முகம் உற்று ஒரு மாதை வதைத்தல் என்று கொண்டு, மயக்கங்கொண்டு நல்லது தீயது உணராமல் பெண்கொலை புரிதல் எனலும் ஆம்.

பி - ம். 2. வதைத்தல். 33

2808. என்வயி னல்கினை யேகினை யென்றால்
நின்வய மாமுல கியாவையு நீநின்
அன்வய மேது மறிந்திலை யையா
புன்மை தொடங்கல் புகழ்க்கழி வென்றான்.

'ஐயா - ஐயனே! என் வயின் நல்கினை ஏகினை என்றால் - என்னிடம் (இரக்கங் கொண்டு, நான் விரும்பியதை எனக்குக்) கொடுத்துச் சென்றனை என்றால், உலகு யாவையும் - எல்லா உலகங்களும், நின்வயம் ஆம் - உன் வசமாகிவிடும்; நீ - நீ, நின் அன்வயம் ஏதும் அறிந்திலை; உன் மரபின் (பெருமை) எதனையும் உணர்ந்தாயில்லை; புன்மை தொடங்கல் - அற்பமான செயலைச் செய்யத் தொடங்குதல், புகழ்க்கு அழிவு - உன் புகழ்க்கு அழிவை

உண்டாக்குவதாகும்'; என்முன் - என்று அநுமன் இந்திரசித்தினிடம் கூறினன்.

'என் வயின் நல்கினை ஏகுதி' என்பதற்கு 'எந்தை இகழ்ந்தனன்' (30) என்றமையால், 'உன் தந்தை வெறுத்த காரணத்தால், பிராட்டியை, என் வயம் அளித்துவிட்டுப் போ' என்று கூறினனுமாம். அனவயம் - குலம்; மரபு: (மருந்துமலைப். 92); அன்வயம், பொருத்தமும் ஆம்; 'இவை யந்நுவயமின்ருயிருந்தும்' (மணி. 27, 30).

பி - ம். 1. ஏகுதி யென்முல்: நீயேகுதி யாகில்.

2. மூவுலகும் நிற்கும்.

3. அன்வயமோன்று மறிந்திலையையா.

4. புகழ்க்கிழிவன்ருே; பகழ்க்கிழிவாமால்; புகழ்க்கழிவன்ருே. 34

2809 மண்குலை கின்றது வான நடுங்கிக்
கண்குலை கின்றது காணுதி கண்ணுல்
எண்குலை கின்ற திரங்க றுறந்தாய்
பெண்கொலை செய்தல் பெரும்பழி யன்ருே.

'மண் குலைகின்றது - (நீ செய்யும் கொடும் செயலைக் கண்டு) பூவுலகிலுள்ளா ரெல்லோரும் நடுங்குகின்றனர்; வானம் - வானுலகத்தார், நடுங்கி - (அச்சத்தால்) நடுங்கி, கண் குலைகின்றது - கண்கள் கூச்சமடைகின்றன; கண்ணுல் - (இவற்றை) உன் கண்களால், காணுதி - காண்பாய்; எண் - (என்) எண்ணமும், குலைகின்றது - நடுங்குகின்றது; இரங்கல் துறந்தாய் - (உள்ளத்தினல்) இரக்கப்படுதலை விட்டுவிட்டாய்; பெண் கொலை செய்தல் - பெண்ணைக் கொல்லுதல், பெரு பழி அன்ருே - மிகப் பெரிய பாவம் அன்ருே?.

மண், வானம் இவற்றை இடப்பெயர்களாகவே கொள்ளுதலும் ஆம்.

பி - ம். 1. வானும் நடுங்கிக், நடுங்க.

3. என்குலை நெஞ்சி லிரங்க றுறந்தாய்; எண்கலை நெஞ்சிலிரங்கல் துறந்தாய்.

4. செய்கை பெரும்பழி; பெரும்பழியென்ருன். 35

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

என்றனன் மாருதி யிந்திர சித்தும்
ஒன்றுரை கேளென தெந்தையு மூரும்
பொன்றுத நீருமி திற்புக ழுண்டே
நன்றுரை யென்றுபி னக்குரை செய்தான்.

## இந்திரசித்தின் மறுமாற்றமும் செயலும்

2810. எந்தையு மிந்த விலங்கையு ளோரும்
உய்ந்திட வானவ ரியாவரு மோடச்
சிந்துவென் வாளினி லென்று செயிர்த்தான்
இந்திர சித்தவ னின்ன விசைத்தான்.

(இவற்றைக் கேட்டும்), இந்திரசித்து அவன் - இந்திரசித்தன் (அநுமனை நோக்கி), 'எந்தையும் - என் தந்தையும், இந்த இலங்கையுளோரும் - இந்த இலங்காபுரியில் உள்ளவர்களும், உய்ந்திட - நல்வாழ்வு பெறவும், வானவர் யாவரும் ஓட - தேவர்கள் அனைவரும் (அஞ்சி) ஓட்டமெடுக்கவும், வாளினில் சிந்துவென் - வாளினால் (இவனைக் கொல்வேன்' என்று - என்று சொல்லி, செயிர்த்தான் - கோபித்து, இன்ன இசைத்தான் - இச் சொற்களைக் கூறினான்.

இந்திரசித்தவன் ; அவன் ; பகுதிப்பொருள் விகுதி. செயிர்த்தல் - சினத்தல் ; இன்ன இசைத்தான் - இசைத்தவை மேல்வரும் செய்யுட்களில் காண்க. எந்தை முதலியோர் உய்தலும், வானவர் ஓடலும் ; பிராட்டி இறந்ததால் இராமன் முதலியோர் இலங்கையைக் கைவிட்டுத் திரும்புதலால் என்று அவன் கருதினான் என்பதைக் குறித்துச் சொன்னது.

பி - ம். 1. எந்தையுகழ்ந்த விலங்கிழை தன்னை. 36

இச்செய்யுள் பல சுவடிகளில் பின்வருமாறு மாறி அமைந்துள்ளது :

எந்தை யுவந்த விலங்கிழை மானைத்
தந்தன னென்று தரும்புக ழுண்டே
சிந்துவன் வாளினி லென்று செயிர்த்தான்
இந்திர சித்திய வின்னன சொன்னான்.

சில சுவடிகளில் பின்வருமாறும் இச்செய்யுள் காண்கிறது :

எந்தை யுமிந்த விலங்கையு ளோரும்
முந்துயர் கின்ற திலுமுயர் வுண்டோ
முந்தையர் வானவர் யாவரு மொப்பி
விந்திர சித்தவ னின்னன சொன்னான்.

2811. போமி னடாவிவள் போயினள் போலாம்
ஆமெனி லின்னு மயோத்தியை யண்மிக்
காமின தின்று கனற்கரி யாக
வேமது செய்தினி மீள்குவெ னென்றான்.

மேலும் இந்திரசித்து குரங்குகளைப் பார்த்து : அடா - குரங்குகளே; இவள் போயினள் போலாம் - இச்சீதை இறந்து பட்டவள் ஆயினள் ஆகும், ஆம் எனில் - இயலுமானால், இன்னும் - இனியும், அயோத்தியை அண்மி - அயோத்திநகரை அடைந்து, காமின் - காத்துக் கொள்ளுங்கள், அது - அந்நகரம், இன்று - இன்று, கனல் கரிஆக - அனல் எரித்த கரியாகுமாறு, வேம் அதுசெய்து - வெந்தொழியும் செயலைப்புரிந்து, இனி - இப்போதே, மீள்குவேன் - திரும்புவேன், என்றான் - என்று பகர்ந்தான்.

முன் தன் தந்தையிடம் இந்திரசித்து திட்டமிட்டுக் கூறியதன் இரண்டாம் பகுதியை (16-ஆம் செய்யுள்) தான் செய்யப்போவதாக அநுமனிடம் இங்குக் கூறுகின்றான். அடா, இகழ்ச்சிக் குறிப்பு : 'நில்லடா' என்றதுபோல; (ஆரணிய. 311); போயினள் போலாம்; போல் : ஒப்பில் போலி. ஆமெனில், என்றது 'வேண்டுமானால்' என்ற பொருளில் உதாசீனமாகக் கூறியது என்றும் ஆம். கனல் கரியாக; கரியாக, ஊரை எறித்ததற்குச் சான்றாக : 'இந்திரனே சாலும் கரி' (குறள். 25); நெருப்பினால் ஊரைக் கரியாக்கி என்னும் பொருள் தொனிப்பது காண்க. வேமது - வேகும் செயல்.

பி - ம். 1. போமி னடாவினை போயது போலாம், இன்னமயோத்தியை.
2. அயோத்தியை நண்ணிக்.
3. காமினெடா கனலாய்க் கரியாக ; கலங்கரியாக வேமிது.
4. வேமின், வெமினெடாவினி, வேமது செய்கென வென்றான், வேமி னெடாவினி மீள்குவதன்றே, வேமது மெய்யினி மீள்கிலதன்றே.

2812. தம்பியர் தம்மொடு தாயரு மாயோர்
உம்பர் விலக்கிடி னும்மினி யுய்யார்
வெம்பு சுடுங்கனல் வீசிடு மென்கை
அம்புக ளோடு மவிந்தன ரம்மா.

'தம்பியர் தம்மொடு - தம்பிமார்களான (பரத சத்துருக்கன ரோடு), தாயரும் ஆயோர் - (கோசலை, கைகேயி, சுமித்திரை) ஆகிய தாய்மார்கள், 'உம்பர் விலக்கிடினும் - தேவர்கள் வந்து தடுத்தாலும், இனி - இனிமேல், உய்யார் - உயிர் வாழமாட்டார்; வெம்பு சுடு கனல் - உக்கிரமான கொடிய நெருப்பை, வீசிடும் என் கை அம்புகளோடும் - வாரி இறைக்கும் என் கையிலிருந்து புறப் படும் அம்புகளால், அவிந்தனர் - (உறுதியாய்) அழிந்து தீர்வர்; அம்மா - வியப்பு.

அயோத்தியில் தான் நிகழ்த்தவிருக்கும் கொடுமைகளை இந்திரசித்து விளக்குகின்றான். உம்பர் - தேவர். அம்புகள் கனல் வீசிடும் என்க. அம்புகளோடும் மடிந்தனர் என்றதை உடனிகழ்ச் சிப் பொருளிலும் அமைக்கலாம். அவிந்தனர்; துணிவு பற்றிய காலவழுவமைதி. அவிதல் - அழிதல்; சாதல்: 'அவியினும் வாழினுமென்' (குறள். 42). வெம்புதல் - உக்கிரமாதல்; 'வெம்பின் செருவின் வந்து' (நிரும்பி. 96).

பி - ம். 1. தாயொடுமாயோர்; மாவோர்.
2. இவருய்யார்.
4. அம்புக ளொன்று மறிந்நில வம்மா, அறிந்தில ரம்மா, மவிந்துள ரம்மா. 38

2813. இப்பொழு தேகடி தேகுவ னியானிப்
புட்பக மான மதிற்புக நின்றேன்
தப்புவ ரேயவர் தாமினி யென்கை
வெப்புறு வாளிக ளின்று விரைந்தால்.

' இப்பொழுதே-இக் கணமே, யான் இ புட்பக மானம் அதில் - யான் இப் புட்பக விமானத்தில், புக - நுழைந்து ஏற, நின்றேன் - நிற்கிறேன்; கடிது - விரைவாக, ஏகுவன் - (அயோத்திக்குச்) செல் வேன்; என் கை - என் கையிலிருந்து, வெப்பு உறு வாளிகள் - வெப்பமுற்ற அம்புகள், இன்று விரைந்தால் - இன்று விரைவாக

அவர்கள்மீது சென்றால், இனி அவர் தாம் தப்புவரே - இனி அத் தாயரும் தம்பியரும் (அவ்வாளிகளினின்று) அப்பால் போவரோ? (தப்பார் என்றபடி).

இன்று விரைந்தால், என்பதை, இன்று தான் விரைந்து அயோத்திக்குச் சென்றால் என்றும் பொருள்படக் கூறலாம். புட்பக விமானம் - இராவணன் குபேரனிடமிருந்து பெற்ற தெய்விகத் தன்மை பொருந்திய வானவூர்தி.

பி - ம். 1. எய்துவனியானிப்.

2. மிசைபுக நின்றேன், மிசைப் பொலிகின்றேன்; மதிழ்க்கொடு நின்றேன்; மானத்திற்கொடு நின்றேன்.

3. அவர் சங்கை யிலாவென்; தாமெனி னென்கை; தாமெனி னிலங்கை.

4. வாளிகளோடும் விரைந்தால்; வாளிகளோடி; விளைத்தால். 39

## இந்திரசித்து மாயாசீதையை வெட்டிக் கொன்றுவிட்டு மேலே புறப்படுதல்

2814. ஆளுடை யாயரு ளாயரு ளாயென்
றேழை வழங்குறு சொல்லி னிரங்கான்
வாளி னெறிந்தனன் மாகடல் போலும்
நீளுறு சேனையி னோடு நிமிர்ந்தான்.

(இவ்வாறு அவன் சொல்லவும்), ‘ஆளுடையாய் - என்னை ஆள்பவனே! அருளாய் - (என்மீது) அருள் புரிவாயாக; அருளாய் - அருள் புரிவாயாக’ என்று - என்று, ஏழை - எளியளாகிய (மாயா) சீதை, வழங்கு உறு சொல்லின் - முறையிடும் சொற்களுக்கு, இரங்கான - மனமிரங்காதவனாய், வாளின் - (தன் கை) வாளினால், எறிந்தனன் - வீசி, மா கடல் போலும் நீள் உறு சேனையினோடும் - கரிய கடல் போன்று விரிந்த சேனையோடு, நிமிர்ந்தான் - (விமானத்தின் மீதேறிச்) சென்றான்.

ஏழை - எளிமைக் குணமுடையவள் என்ற பொருளில் பெண்ணைக் குறித்தது. நிமிர்தல் - உயர்தல்; இங்கு மேலே செல்லுதலைக் குறித்தது.

பி - ம். 2. ஏழையயஎன்புறு சொல்லி னிரங்க; ஏழை வணங்குறு.

3. மால்கடல் போலும்.

4. ஊடு நிமிர்ந்தான். 40

## இவை கண்ட மாருதி மூர்ச்சித்தல்

2815. தென்றிசை நின்று வடாது திசைக்கண்
பொன்றிகழ் புட்பக மேல்கொடு போனான்
ஒன்று முணர்ந்திலன் மாருதி யுக்கான்
வென்றி நெடுங்கிரி போல விழுந்தான்.

தென் திசை நின்று - தெற்குத் திக்கிலிருந்து, வடாது திசைக்கண் - வடதிசையி னிடத்தை (நோக்கி), பொன் திகழ் புட்பகம் மேல் கொடு - பொன் விளங்குகின்ற புட்பகத்தின்மீது ஏறிக்கொண்டு, போனான் - (இந்திரசித்து) போனான்; மாருதி - அநுமன், ஒன்றும் உணர்ந்திலன் - ஒருவித உணர்ச்சியும் உணராதவனாக ஆகி, உக்கான் - (மனம்) கரைந்து தேய்ந்து, வென்றி நெடு கிரிபோல - வெற்றியையுடைய நீண்ட மலைபோன்று, விழுந்தான் - தரையில் விழுந்தான்.

வடாது - வடக்குள்ளது; 'வடாஅது பனிபடு நெடுவரை' (புறநா. 6); 'வடாதுந் தெனாதும் பராசர் வகுத்த நேமி' (பாரத. பதின் மூன்று. 80). உகுதல்-கரைந்து தேய்தல்; 'உக்குவிடு மென்னுயிர்' (கலித். 138). பொன்திகழ் புட்பகம் என்றதால், புட்பகம் பொன் மயமானது என்பது புலப்படுகிறது; பொன், அழகும் ஆம்.

பி - ம். 1. வடாது திசையின்கண்.
2. பொன்றிணி.
3. மாருதியுட்கா.
4. யென்ன விழுந்தான். 41

## இந்திரசித்து நிகும்பிலை சேர்தலும் அநுமன் புலம்புதலும்

2816. போயவன் மாறி நிகும்பிலை புக்கான்
தூயவ னெஞ்சு துயர்ந்து சுருண்டான்
ஓய்வொடு நெஞ்ச மொடுங்க வுலர்ந்தான்
ஆயின வின்னன பன்னி யழிந்தான்.

போயவன் - (வடக்கு நோக்கிப் போவதாகச் சொல்லிப்) போனவன், மாறி - அவ் வழியினின்று வேருகச் சென்று, நிகும்பிலை புக்கான் - நிகும்பிலை என்னும் இடத்துள் நுழைந்தான்; (இஃது இவ்வாருக), தூயவன் - தூய உள்ளத்தினனுன அநுமன், நெஞ்சு துயர்ந்து - மனம் வருந்தி, சுருண்டான் - உடல் சுருண்டவனுனன்; (அவன்), நெஞ்சம் - மனம், ஓய்வொடு ஒடுங்க - தளர்வொடு சுருங்க, உலர்ந்தான் ஆயினன் - உடலும் உலர்ந்து காய்பவனுனன்; (இவ்வாருகி), இன்னன - இப்படிப்பட்டவற்றை, பன்னி - சொல்லி, அழிந்தான் - சோர்ந்தான்.

நிகும்பிலை - இலங்கையில் புறத்திலேயுள்ள ஒரு கோயிலிடம்; 'காளி நகரம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு; அதன் தன்மை முதலியவற்றை அடுத்த படலத்திற் காணலாம். துயர்தல் - துயர முறுதல். ஓய்வு - தளர்வு. இன்னன பன்னி; இவற்றை அடுத்த பாடலிற் காண்க.

பி-ம். 1. போயவன் மாற; மற்ற.

2. தூயவ னுவி தொலைந்து சுருண்டான்; சுருண்டு விழுந்தான்; சுருண்டு சுருண்டு.

3. ஓய்வொரு; ஓய்வரு; வொருங்க வுணர்ந்தான்.

4. இன்னன சொல்வான். 42

## வேறு

2817. அன்னமே யென்னும் பெண்ணி
னருங்குலக் கலமே யென்னும்
என்னமே யென்னுந் தெய்வ
மில்லையோ யாது மென்னும்
சின்னமே செய்யக் கண்டுந்
தீவினை நெஞ்ச மாவி
பின்னமே யாய தில்லை
யென்னும்பே ராற்றல் பேர்ந்தான்.

பேர் ஆற்றல் - தன் பெரிய ஆற்றல், பேர்ந்தான் - அழிந்து நின்றவனுன அநுமன், (பிராட்டியைக் கருதி), 'அன்னமே - அன்னப் பறவையே!' என்னும் - என்று அழைப்பான்;

'என் அம்மே என்னும் - என் அன்னையே!' என்று விளிப்பான்; பெண்ணின் அரு குல கலமே என்னும் - பெண்களின் அருமையான அழகிய ஆபரணமே!' என்று கூறுவான்; 'தெய்வம் யாதும் இல்லையோ - தெய்வம் எதுவும் இல்லையோ?' என்னும் - என்று கூறுவான்; 'சின்னமே செய்ய கண்டும்-(உன்னைத்) துண்டங்களாகப் பிளக்கப் பார்த்தும், தீவினை நெஞ்சம் ஆவி பின்னமே ஆயது இல்லை என்னும் - பாவம் மிக்க என் நெஞ்சும் உயிரும் உடைந்து போகவில்லையே!' என்று கூறுவான்.

இச் செய்யுளில் அநுமன் தன் அடக்க முடியாத அங்கலாய்ப்பைப் புலப்படுத்தியதை ஆசிரியர் அமைக்கின்றார். பிராட்டிக்கு அன்னம்; அயோத்தி. 515, 1162; ஆரணிய. 39, 213, 791, 872, 909. குலம் - குடி என்ற பொருள் கொண்டு, பெண் குடியின் அருங்கலமே என்பதும் ஆம்; குலம் - அழகு; கலம் - அணிகலம். பிராட்டிக்குக் கலம்; பால. 832; ஆரணிய. 1344. என் அம்மே, என்றது என்னமே என்றாயிற்று. தெய்வம் இல்லையோ என்பதற்கு ஒப்பு: 'தெய்வமு முண்டுகொ றெய்வமு முண்டு கொல்' (சிலப். 19, 57). சின்னம் - துண்டு; 'வாளி.... சின்னமாக வீர்ந்திட' (திருவாலவா. 36, 8). பின்னம் - பிளவு. அநுமன் துயரத்தின் ஆழம் இங்குக் காட்டப்பெற்றது.

பி - ம். 1. அருங்கலக் குலமே யென்னும்.

3. நெஞ்சம் பாவி.

4. யானதில்லை; ஆற்றல் தேர்ந்தான். 43

2818. எழுந்தவன் மேலே பாய
வெண்ணும்பே ரிடரிற் றள்ளி
விழுந்துவெய் துயிர்த்து விம்மி
வீங்கும்போய் மெலியும் வெந்தீக்
கொழுந்துக வுயிர்க்கு மியாக்கை
குலைவுறுந் தலையே கொண்டுற்
றழுந்தரை தன்னைப் பின்னு
மினையன வுரைப்ப தானான்.

(அப்பொழுது), அவன் - அந்த அநுமன், எழுந்து மேலே பாய எண்ணும் - (ஒரு சமயம்), நின்றவிடத்திலிருந்து மேலே எழுந்து பாய எண்ணுவான்; பேர் இடரில் தள்ளி விழுந்து - தான் பெருத்த துன்பத்துள் தள்ளி வீழ்த்தப்பட்டவனாக விழுந்து, வெய்து உயிர்த்து - வெப்பமாகப் பெருமூச்சு விட்டு, விம்மி - திணறி, வீங்கும் - உடல் பருப்பான்; போய் மெலியும் - சென்று மெலிவடைவான்; வெம் தீ கொழுந்து உக உயிர்க்கும் - கொடிய நெருப்பின் சுவாலை நுனி உதிருமாறு பெருமூச்சு விடுவான்; யாக்கை குலைவு உறும் - தன் உடல் குலைந்து போவான்; தரை தன்னை - பூமியை, தலையே கொண்டு உற்று உழும் - தலையினாலே நன்றாக உழுவான்; பின்னும் - மேலும், இனையன - இச் சொற்களை, உரைப்பதானான் - சொல்லலுற்றான்.

இச் செய்யுள் சீதை வெட்டப்பட்டு இறந்ததைக் கண்ட துயரால் அநுமன் செய்த செயல்களைச் சித்திரிப்பதாம். தரையை உழுதல் - ஆழ மோதிக் கொள்ளுதல். அவன் உரைத்தவற்றை பின் வரும் ஏழு செய்யுட்களில் காண்க.

பி - ம். 1. பேரிடரைந் தள்ளி.
2. வெய்துயிர்ப்ப மேனிவிங்கும்.
3. கொழுந்துகளுயிர்க்கும்.
4. பின்னையினையன. 44

## அநுமன் இரங்கிக் கூறுதல்

2819. முடிந்தது நந்த மெண்ண
மூவுல கிற்குங் கங்குல்
விடிந்ததென் றிருந்தேன் மீள
வெந்துய ரிருளின் வெள்ளம்
படிந்தது வினையச் செய்கை
பயந்தது பாவி வாளால்
தடிந்தனன் றிருவை யந்தோ
தவிர்ந்தது தரும மம்மா.

'நம்தம் எண்ணம் முடிந்தது - நாம் கருதிய கருத்து முடிந்தது; மூவுலகிற்கும் கங்குல் விடிந்தது - மூன்று உலகங்களுக்கும் இரவு

விடிந்தது', என்று இருந்தேன்-என்று எண்ணியிருந்தேன்; வெம் துயர் இருளின் வெள்ளம் மீள படிந்தது - கொடிய துயரைத் தரும் இருளின் தொகுதி மறுபடியும் படிந்துவிட்டது; வினைய செய்கை-மாயையின் காரியம், பயந்தது-பலித்தது; அந்தோ - ஐயோ! பாவி - பாவியான இந்திரசித்து, திருவை - இலக்குமியான பிராட்டியை' வாளால் - தன் வாளினால், தடிந்தனன் - வெட்டி விட்டனன்; தருமம் தவிர்ந்தது - தருமம் நீங்கிற்று; அம்மா - வியப்பு.

அந்தோ, இரக்கக் குறிப்பு; அம்மா, வியப்புச் சொல். எண்ணம், இராவணனைக் கொன்று பிராட்டியை மீட்டல். கங்குல் ......விடிந்தது; 'போக்கிலா, இருளுடை வைகலே மிரவி தோன்றினாய்' (ஆரணிய. 133) என்று தண்டகாரணிய முனிவர் இராமபிரானிடை முறையிட்டுக் கொண்டதை ஒட்டி, அரக்கரால் விளைந்துள்ள பாவ இருளை, இராமபிரானாகிய கதிரவன் வெருட்டு வானென்றது கருத்து. இந்திரசித்தின் கொடுஞ் செயலால் அழிந் ததைக் குறித்து அநுமன் அங்கலாய்த்தான் என்க. வினையச் செய்கை; வினையத்தினால் விளைந்த செய்கை; வினையம் - சூழ்ச்சி, கொடுஞ் செயலும் ஆம்; 'இனம்வள ரைவர்கள் செய்யும் வினயங் கள் செற்று' (தேவா. 222, 7).

பி - ம். 1. முடிந்தன வெண்ணமெல்லாம் மூவுல கிருளுங்......; முடிந்தநம் மெண்ணம், நம்மெண்ணும்; மூவுலகிற்கு மூடி, மூவுலகிற்கு மூடம்.
3. அடர்ந்தது வினையின் செய்கை; வஞ்சகப் படிறன் வாளால்.
4. தருமமும் தவிர்ந்த தம்மா. 45

2820. பெருஞ்சிறைக் கற்பி னாளைப்
பெண்ணினைக் கண்முன் கொல்ல
இருஞ்சிற கற்ற புட்போ
லியாதுமொன் றியற்ற லாற்றேன்
பருஞ்சிறை யழுந்து கின்றே
னெம்பிரான் றேவி பட்ட
அருஞ்சிறை மீட்ட வண்ண
மழகிது போலு மம்மா.

'பெரு சிறை கற்பினாளை - பெரிய தற்காப்பாகிய கற்பிற் சிறந் தவளை, பெண்ணினை - பெண்மை என்னும் எளிமையுடையவளை,

கண்முன் - (என்) கண்களுக்கெதிரே, கொல்ல - (இந்திரசித்து) கொல்ல, இரு சிறகு அற்ற புட்போல் - பெரிய சிறகுகளை இழந்த பறவையைப்போல், யாதும்ஒன்று இயற்றல் ஆற்றேன் - ஏதொன்றை யும் செய்யத் தகுதியற்றவனானேன்; பரு சிறை அழுந்துகின்றேன் - பெரிய சிறையில் ஆழ்ந்து விட்டவனானேன்; எம்பிரான் தேவி - என் தலைவனான இராமபிரான் தேவி, பட்ட - அகப்பட்ட, அரு சிறை மீட்ட வண்ணம் அழகிது போலும் - அரிய சிறையிலிருந்த (யான்) விடுவித்த முறை மிக அழகாயிற்று போலும். அம்மா - வியப்பு.

பெண் என்றது அவளது வலிவற்ற நிலையைக் குறித்துக் கூறியது; 'பெண்டனி யொருத்தி தன்னைப் பேதைவா ளரக்கன் பற்றிக், கொண்டனன்' (ஆரணிய. 1008) என்பது காண்க. பெருஞ்சிறைக் கற்பினாளை, என்றதற்கு, ஆரணிய காண்டத்தில், சடாயு, 'பொருஞ்சிறை யற்றதேயூவை கற்பெனும், இருஞ்சிறை யருதென விடரி னீங்கினான்' (948) என்று கூறியது காண்க; 'கற்பென்னும் பெருந் தற்காப்புடைய பிராட்டியை' என்று கூறியதும் காண்க. பெருஞ்சிறை: (அயோத். 24); 'பருஞ் சிறை யழுந்துகின்றேன் - இப்போது பரிவுடனே இறைப்பொழுது அழுதேன்' என்பது பழையவுரை,

பி - ம். 1. கண்ணிற் கொல்ல.
2. சிறகிற்ற புட்போல்.
3. இருஞ்சிறை யழுந்துகின்றேன்.
4. அழகிது பெரிதின்றம்மா. 46

2821. பாதக வரக்கன் றெய்வப்
பத்தினி தவத்து ளாளைப்
பேதையைக் குலத்தின் வந்த
பிழைப்பிலா தாளைப் பெண்ணைச்
சீதையைத் திருவைத் தீண்டிச்
சிறைவைத்த தீயோன் சேயே
காதவுங் கண்டு நின்ற
கருமமே கருணைத் தம்மா.

'தெய்வ பத்தினி-தெய்வத்தன்மை பொருந்திய பத்தினியான, தவத்துளாளை-(கணவனையே தியானிக்கும்) தவத்துள் நின்றவளை, பேதையை-பேதைக் குணமுடையவளை, குலத்தின் வந்த-உயர்ந்த குலத்தில் தோன்றிய, பிழைப்பு இலாதாளை-(தவறு) எதுவும் இல்லாதவளை, பெண்ணை-பெண்பாலானவளை, சீதையை-சீதாப்பிராட்டியை, திருவை-இலக்குமியானவளை, தீண்டி-நெருங்கி, சிறை வைத்த-சிறையில் வைத்த, தீயோன்-கொடியோனும், பாதக அரக்கன்-பாவ குணம் நிறைந்த அரக்கனுமான இராவணனின், சேயே-மகனே, காதவும்-கொல்லவும், கண்டு-கண்களாற் பார்த்து, நின்ற-(செயலொன்றுமின்றி) நின்ற, கருமமே-காரியமே, கருணைத்து-கருணையுடையது! அம்மா-வியப்பு.

பிராட்டி தெய்வ பத்தினி. ஆரணிய. 280, 620, 835, 898; கிட்கிந்தா. 205, 811, 205, 224, 761. காதுதல்-கொல்லுதல்; வெட்டுதலும் ஆம். கருணைத்து என்பது பிற குறிப்பு.

பி-ம். 2. குலத்தில் வந்தவறம் பிழைத்திலாளைத்.

3. சீதையை நீண்ட சில்லரித் தடங்கண்ணாளை; யிண்டிச் சில்லரித் தடங் கண்ணாளை, நீண்டிச் சிறைவைத்த வரக்கன்றனே.

4. தருமமே கருணைத்தம்மா; பெருமைத்தம்மா; கருணைத்தாமால். 47

2822. கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக்
காகுத்தன் றூத னாகிச்
சொல்விக்க வந்து போனே
னுய்விலித் துயர்செய் தாரை
வெல்விக்க வன்று நின்னை
மீட்பிக்க வன்று வெய்திற்
கொல்விக்க வந்தே னன்றே
கொடும்பழி கூட்டிக் கொண்டேன்.

'கல்விக்கு நிமிர்ந்த-எல்லாவிதக் கல்விகளுக்கும் எட்டமுடியாது உயர்ந்த, கீர்த்தி-புகழினையுடைய, காகுத்தன் தூதனாகி-(முன்பு) காகுத்தன் வமிசத்திற்றோன்றிய இராமபிரான் அனுப்பிய தூதனாகி, சொல்விக்க வந்து போனேன்-(உலகத்தார் இராம தூதன் என்று) சொல்லும்படி வந்து திரும்பினேன்; (இப்

பொழுதோ நான் வந்தது), ஓய்வில் இ துயர் செய்தாரை - ஓயாத இந்தத் துயரம் செய்த அரக்கரை, வெல்விக்க அன்று - இராம லக்குவரைக் கொண்டு தோற்கடிக்கவும் அன்று; நின்னை மீட்பிக்க அன்று - (பிராட்டியான) உன்னைச் சிறையினின்று விடுவிக்கவும் அன்று; (பின்பு ஏன் வந்தேன் எனின்), வெய்தில் - கொடுமையாக, கொல்விக்க வந்தேன் அன்றே - (உன்னைக் கொடிய அரக்கனால்) கொல்விக்க வந்தேன் அல்லனோ? (இவ்வாறு) கொடும் பழி கூட்டிக் கொண்டேன் - என் செயல்களால் கொடிய பழியை எனக்கு உண்டாக்கிக் கொண்டேன்.

இச் செய்யுளில் அநுமன் தன்னால் ஒன்றும் இயலாமற் போனதை எண்ணி மிகவும் நொந்து கூறிக் கொள்கின்றனன். கல்விக்கு நிமிர்ந்த; கல்வியால் எட்ட முடியாத; கல்வியால் நிமிர்ந்த கீர்த்தி எனலுமாம்; (ஒப்பு): 'தன்னுயகன் புகழென நிமிர்ந்தான்' (சுந்தர. 1020). காகுத்தன் - ககுத்த வமிசத்தில் உதித்ததால் இராம பிரானுக்குக் காகுத்தன் என்ற பெயர் வந்தது; (பால. 422, 553). இவனைப் பற்றிப் பாலகாண்டம், 'தான்றனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்து, வான்றருகிற் றிகொலெனக் குறையிரப்ப வரங் கொடுத்தாங், கேன்றெடுத்த சிலையினனு யிகல்புரிந்த விவர் குலத்தோர், தோன்றலைப் பண்டிந்திரனே கொல்லேறுச் சுமந்தான் காண்' (727) 'என்று கூறுவது காண்க. சொல்விக்க வந்து போனேன் - தூதனுப்பிய சொல்லைச் சொல்லிப் போனேன் என்றும் பொருள் கூறுவர். 'இராம தூதனென்று உலகத்தாரைக் கொண்டு சொல்விக்க வந்து போனவனொழியப் பின் ஒன்றுக்கும் உறுப்பானவன் அல்லன் என்னும் பேர் பெற்றேன்' என்பது பழையவுரை. நான்காமடியில் 'நன்றே கொடும்பழிக் கூட்டிக் கொண்டேன்' என்றும் கூட்டிக் கொள்ளலாம்.

பா-ம். 1. மிருந்த கீர்த்தி; சீர்த்தி.

2. சொல்விக்க வந்து போந்தே னதலின் றுயர் செய்தேன்; னேய்வுறு துயர் செய்தாரை; ஆதலிற்றுயர்கள் செய்தேன்; ஆயவித்துயர் செய்தாரை.

3. வந்து நின்னை, வந்தேனுன்னை.

4. வந்தேனென்று, வந்தனென்றே; நெடும்பழி.



இச் செய்யுள் இரண்டு சுவடிகளில் இல்லை.

2823. வஞ்சியை யெங்குங் காணு
துயிரினை மறந்தா னென்னச்
செஞ்சிலை யுரவோன் தேடித்
திரிகின்ரு னுள்ளந் தேற
அஞ்சொலா ளிருந்தாள் கண்டே
னென்றயா னரக்கன் கொல்லத்
துஞ்சினு ளென்றுஞ் சொல்லத்
தோன்றினேன் ரேற்ற மீதால்.

'செம் சிலை உரவோன் - செம்மையான வில்லை ஏந்திய வலிமை மிக்க இராமபிரான், 'வஞ்சியை - வஞ்சிக் கொடி போன்ற நும்மை, எங்கும் காணுது - எவ்விடத்தும் காண முடியாமல், உயிரினை மறந்தான் என்ன - தன் உயிரையே மறந்து நின்றவன் என்று சொல்லுமாறு, (தன்னை மறந்து), தேடி திரிகின்ருன் - (அவளைத்) தேடி அலைகின்ற அவனுடைய, உள்ளம் தேற - மனம் தேறும்படி, 'அம் சொலாள் இருந்தாள் கண்டேன் என்ற யானே - அழகிய பேச்சினை யுடைய பிராட்டி, (உயிருடன்) இருக்கின்ருள்; (அவளைக் கண்களாற்) கண்டேன்' என்று கூறிய யானே, 'அரக்கன் கொல்ல துஞ்சினுள் - அரக்கனான இந்திரசித்து கொல்ல இறந்தாள்' என்றும் சொல்லத் தோன்றினேன் - என்றும் அறிவிக்கப் பிறந்தேனே! தோற்றம் ஈது-நான் பிறந்ததால் (பெற்ற பயன்) இதுவே போலும்! ஆல் - அசை.

இச் செய்யுட் கருத்துடன் சுமந்திரன் இராமபிரானைப் பிரிந்து சென்று தசரதனிடம் அவன் மகன் பிரிந்தானென்று எவ்வாறு கூறுவது என்று கருதிய பகுதியை ஒப்பிடுக; (அயோத்தி. 554-560). முதன் முதலாகப் பிராட்டியை அசோக வனத்தில் கண்டபோது, 'வீடினதன்றறன் யானும் வீகலேன்' (சுந்தர. 396) என்று மகிழ்ச்சி கொண்டு ஆடிப் பாடியவனும், பின்பு இராமபிரானிடம் சென்று தான் பிராட்டியைக் கண்ட தன்மையைக் கூறும்போது 'என்குலம் எனக்குத் தந்தாள்' (சுந்தர. 1272) என்று பெருமிதங் கொண்டவனுமான அநுமன் இங்குக் காட்டும் அவலம் கூர்ந்து கருதற்பாலது. இச் செய்யுளில் சுட்டப்பட்ட இராமபிரான் துயர நிலை, 'தண்டலி னெடுந்திசை மூன்றுந் தாவினர், கண்டிலர் மடந்தையை யென்னுங் கட்டுரை, உண்டுயி ரகத்தென் வொறுக்கவும் .....' (சுந்தர. 1259) என்றதாகும். தேடித் திரிகின்ருன்; மனத்தினுல் தேடியதைக்

குறித்தது. அஞ்சொலாள், 'இருந்தாள் கண்டேன்' என்று சொல்லுமுன், குறிப்பினால் அதனை அறிந்த இராமபிரான், 'விளைந்த துன்னினான்'; 'வீங்கின தோள்புனற் கண்கள் விம்மின, நீங்கிய தருந்துயர் காத னீண்டதே' (சுந்தர. 1268) என்ற பகுதிகளால் அவன் உள்ள நிலை விளங்கும்; 'துஞ்சினாள்' என்றதைக் கேட்ட அவன் நிலையும் செயலும் பின்னர்க் கூறப்பெறும்.

பி - ம். 1. காணாத்துயரிடை; வஞ்சியைப் பிரிந்து காணாத் துயரிடை; காணாத துயரினை, உயிரிடை மரந்தானெனனச் மறைத்தான் வல்லே.

2. நாடித் திரிகின்றான்; ஓடித் திரிகின்றான்.

3. கண்டேனென்றனன்.

4. தோற்றந் தீர்ந்தேன்; தோற்றத் தீயேன். 48

2824. அருங்கடல் கடந்தீவ் வூரை
யள்ளெரி மடுத்து வெள்ளக்
கருங்கடல் கட்டி மேருக்
கடந்தொரு மருந்து காட்டி
குரங்கினி யுன்னோ டொப்பா
ரில்லெனக் களிப்புக் கொண்டேன்
பெருங்கடற் கோட்டத் தேய்வை
யொத்ததென் னடிமைப் பெற்றி

'அரு கடல் கடந்து - கடப்பதற்கு அருமையான கடலைத் தாண்டி, இ ஊரை அள் எரி மடுத்து - இந்த ஊரைச் செறிந்த நெருப்பினால் கொளுத்தி, வெள்ள கரு கடல் கட்டி - நீர் நிறைந்த கரிய கடலுக்கு அணை கட்டுவதில் உதவி, மேரு கடந்து - மேரு மலையையும் தாண்டி, ஒரு மருந்து காட்டி - சஞ்சீவி என்னும் ஒப்பற்ற மருந்தைக் கொண்டுவந்து காட்டி, 'உன்னோடு ஒப்பார் குரங்கு இனி இல்' என - (பிறர் என்னைச் சுட்டி) உன்னோடு ஒத்த குரங்கு இனி (உலகில்) இல்லை' என்று சொல்ல, களிப்பு கொண்டேன் - மகிழ்ச்சி யடைந்தேன்; (ஆனால், இப்பொழுது) என் அடிமை பெற்றி - (இராமபிரான்பால் நான் கொண்ட என்) தொண்டின் தன்மை, பெரு கடல் - பெரிய கடலிலே, கோட்டம் தேய்வை ஒத்தது - கோஷ்டத்தைத் தேய்த்ததை ஒத்ததாகி விட்டது.

கடல் தாண்டல், இலங்கைக்கு எரியூட்டல், சேது கட்டல், மருத்துவமலை காட்டல் என்ற அரிய செயல்களெல்லாம், கடலிலே தேய்த்த கோஷ்டம் போல், இப்பொழுது வீணாயின என்கின்றனன் அநுமன். பிற செயல்களெல்லாம் அவனுக்கே உரியன; கடல் கட்டுதல் பிறருக்கும் உரியதாயினும் அதனிற் றான்கொண்ட பெரு முயற்சியால் அதனைத் தன்னதாக்கிக் கூறுகின்றான். அள் - செறிவு (திவா). அள்ளுதல், எற்றுதலும் ஆம். எரி மடுத்தல்- தீ மூட்டுதல்; 'கொலைஞருலையேற்றித் தீ மடுப்ப' (நாலடி. 331). மருத்துவமலை மேருவுக்கும் அப்பாற்பட்டது; (மருத்துமலைப். 47). மருந்து, கண்ட பொழுதே இறந்தவர் உயிர் பெற்றனராதலின், 'மருந்து காட்டி' என்றார். உன்னோ டொப்பாரில்; 'மாருதியொப்பார் வேறிலை' (கிட்கிந்தா. 985); 'ஒப்புறி னொப்பார் நும்மல தில்லீர்' (கிட்கிந்தா. 987); 'தன்பெருங் குணத்தாற் றன்னைத் தானல தொப்பிலா தான்' (கிட்கிந்தா. 52). கடலிற் கோட்டம் தேய்த்தல்; 'கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கருமமன்றால்' (யுத்த. 1350) கோட்டம்; கோஷ்டம் - ஒருவகை வாசனைப் பண்டம்.

பி - .ம் 1. யள்ளெரியூட்டி; எரிபடுத்து வெய்யோர்; படுத்து வெள்ளக்; மடுத்து நீசக்.

2. கருங்கடல்கட்டு; கடந்து.

3. என்னோடொப்பதில்லென; குரங்கினோடொப்பார் யாருமில்லெனக்.

4. தேய்த்ததொத்தது; தேய்த்ததாயது. 50

2825. விண்டுநின் றாக்கை சிந்தப்
புல்லுயிர் விட்டி லாதேன்
கொண்டுநின் றானைக் கொல்லக்
கூசினே னெதிரே கொல்லக்
கண்டுநின் றேன்மற் றின்னுங்
கைகளாற் கனிகள் வெவ்வே
றுண்டுநின் றுய்ய வல்லே
னெளியனோ வொருவ னுள்ளேன்.

'(இந்திரசித்து), விண்டு நின்று - பகைத்து நின்று, ஆக்கை- (பிராட்டியின்) உடலை, சிந்த - வெட்ட, புல் உயிர் விட்டிலாதேன் -

என் அற்ப உயிரை விட்டிடாதவனுன யான், கொண்டு நின்ருனை - (பிராட்டியைப் பற்றிக்) கொண்டு நின்ற அவனை, கொல்ல கூசினேன்-கொல்வதற்குத் தயங்கினேன்; எதிரே கொல்ல கண்டும் நின்றேன் - (என் கண்களுக்கு) எதிரே (அவன் அவளைக் கொல்லப் பார்த்தும் (வாளா) நின்றேன்; இன்னும் - இனியும், கைகளால் வெவ்வேறு கனிகள் உண்டு - என் கைகளால் வெவ்வேருன பழங்களைப் பறித்துத் தின்று, நின்று - நிலைத்து, உய்ய வல்லேன் - பிழைக்க வல்லவனுன, (யான்), ஒருவன் உள்ளேன் - ஒருவன் (உயிருடன்) இருக்கின்றேன்! எளியனே - யான் எளியனே?' மற்று - அசை.

பிராட்டியைக் கொன்ற அரக்கனைக் கொல்லாமல்விட்ட தன் கோழைத் தன்மையைக் குறித்துத் தன்னை மிக இகழ்ந்து கூறியது இச் செய்யுள். விண்டு - பகைத்து; (சீவக. 418 உரை).

பி - ம். 1. சிந்திப் புல்லுயிர்.

3. நின்றேனே நன்றென்கையினிற் கலந்தின வெண்சோறு; நின்றேன் கைதன்னல் கலத்துமென்றென்ன; என்றன் கைகளாற் கலந்து வெண்சோறு; கண்டுமகன்று.

4. வொருவனம்மா. 51

## அநுமன் தான் மேற்கொள்ள வேண்டுவது பற்றிக் கருதுதல்

2826. என்னநின் றிரங்கிக் கள்வ
னயோத்திமே லெழுவெ னென்று
சொன்னது முண்டு போன
சுவடுண்டு தொடர்ந்து செல்லின்
மன்னனிங் குற்ற தன்மை
யுணர்கிலன் வருவ தோரேன்
பின்னினி முடிப்ப தியாதென்
றிரங்கினு னுணர்வு பெற்ருன்.

என்ன - என்று கூறி, நின்று இரங்கி - அநுமன் தான் நின்ற விடத்திலேயே நின்று மனமிரங்கிப் பின், 'கள்வன் - கள்ளத்

தன்மை பூண்ட இந்திரசித்து, 'அயோத்திமேல் எழுவன் என்று - அயோத்திமீது படையெடுப்பேன்' என்று, சொன்னதும் உண்டு - பேசியதும் உண்டு; போன சுவடு உண்டு - (அத்திசை நோக்கி) அவன் சென்ற அடையாளமும் உண்டு; தொடர்ந்து செல்லின் - (அவனைப்) பின்பற்றி யானும் (அயோத்திக்குப்) போவேனாயின், இங்கு உற்ற தன்மை - (சீதை வதையுண்டதான) இங்கு நிகழ்ந்த தன்மைகளை, மன்னன் உணர்கிலன் - மன்னனான இராமபிரான் அறிவானல்லன்; (ஆகவே), வருவது ஒரேன் - (இனி) விளைவது (யாதென்று) அறியமுடியாதவனாயிருக்கின்றேன்; இனி, முடிப்பது யாது - இனிமேல் யான் செய்து முடிக்க வேண்டியது யாது?' என்று - என்றெண்ணி, இரங்கினான் - மனம் (மயங்கி) வருந்தி, பின் உணர்வு பெற்றான் - பிறகு திட உணர்ச்சி பெற்றான்.

முன் செய்யுள் வரையில் அநுமன் கொண்ட எளிமையையும் அவலத்தையும் கூறி, இதனில் அவன் முதலில் மயங்கிய மருட்சியையும் பின்பெற்ற தேர்ச்சியையும் கூறுகின்றார். வருவதோரேன் என்றது மருட்சி. உணர்வு பெற்றதன் பயன் மேல்வரும் பாடல்களால் தெரியலாகும்.

பி - ம். 2. சொன்ன சொலுண்டு போன சுவடுண்டு; தொடர்ந்து சொல்லின்; தொடர்ந்து செல்ல.

3. உணர்ந்திலன்; வருவதோராள்.

4. பின்னிது உணர்வு போந்தான். 52

## அநுமன் இராமபிரானிடம் நடந்தவற்றை அறிவிக்கச் செல்லல்

2827. உற்றதை யுணர்த்திப் பின்னை
யுலகுடை யொருவ னோடும்
இற்றுறி னிற்று மாள்வ
னன்றெனி னெண்ண மெண்ணிச்
சொற்றது செய்வன் வேறோர்
பிறிதிலென் றுணிவி தென்னாப்
பொற்றடந் தோளான் வீரன்
பொன்னடி மருங்கிற் போனான்.

பொன் தடம் தோளான் - பொன் போன்றனவும் அகன்றனவுமான தோள்களையுடைய மாருதி, 'உற்றதை உலகுடை ஒருவனோடும் உணர்த்தி - (இங்கு) நடந்தவற்றை உலகங்களையெல்லாம் உடையவனான இராமபிரானுக்குச் சொல்லி, பின்னை - பிறகு, இற்றுறின் - இறந்துபடுவனேல், இற்று மாள்வன் - யானும் உயிரிற்று இறப்பேன்; அன்று எனின் - அப்படி இல்லையானால், எண்ணம் எண்ணி - அப்பெருமான் (தான் செய்ய வேண்டிய) ஒரு கருத்தைக் கருதி, சொற்றது - (எனக்குக் கட்டளையிட்டுச்) சொன்னதை, செய்வன் - செய்து முடிப்பேன்; வேறு ஓர் பிறிது இல் - (இவற்றை அன்றி) மாறுதலான பிறிது ஒன்றும் செய்ய வேண்டுவதில்லேன், என் துணிவு இது - என் தீர்மானம் இதுவே ஆகும்', என்னா - என்று (முடிவு செய்து), வீரன் பொன்னடி மருங்கின் போனான் - வீரனான இராமபிரானின் அழகிய திருவடியின் பக்கத்தில் போனான்.

இற்றுறின், என்றமையால் இந்தத் துக்கத்தினால் இராமபிரான் இறந்துபடுதலும் ஆம் என்று கருதினான் என்க. எண்ணம் எண்ணி சொற்றது என்றது நன்கு ஆராய்ந்து கூறியது என்பதாம்.

பி - ம். 2. இற்றிடிலிற்று; இற்றுறினின்று; என்னையேவி.

3. பிறிதில்லை துணிவதென்றால்; பிறிதில துணிவிதென்னா; துணிவிற்றென்னாப்; தொடர்வரென்னாப்.

53

2828. சிங்கவே றனைய வீரன்
செறிகழற் பாதஞ் சேர்ந்தான்
அங்கமு மனமுங் கண்ணு
மாவியு மலக்க ணுற்றான்
பொங்கிய பொருமல் வீங்கி
யுயிர்ப்பொடு புரத்தைப் போர்ப்ப
வெங்கனீ ரருவி சோர
மால்வரை யென்ன விழ்ந்தான்.

(அநுமன்), சிங்க ஏறு அனைய வீரன் - ஆண் சிங்கம் போன்ற வீரனான இராமபிரானின், கழல் செறி பாதம் சேர்ந்தான் - வீரக் கழல் செறிந்த திருவடிகளைச் சேர்ந்து, அங்கமும் மனமும்

கண்ணும் ஆவியும் - கைகால்களும், உள்ளமும், கண்ணும், உயிரும், அலக்கண் உற்றான் - துன்பம் நிறைந்தவனாகி, பொங்கிய பொருமல் - பொங்கியெழுந்த துயரானது, உயிர்ப்பொடு - பெருமூச்சொடு, வீங்கி - அதிகமாக, புரத்தை - உடலை, போர்ப்ப - மூட, வெம் கண் நீர் அருவி சோர - வெப்பம் மிக்க கண்ணீர் அருவி போல ஒழுக, மால்வரை என்ன - பெரிய மலை (வீழ்ந்தது) என்று சொல்லும்படி, வீழ்ந்தான் - தரையிலே விழுந்தான்.

'கண்ணுமாவி - வருந்துமாவி' என்பது பழையவுரை. புரம் - உடல்; 'அயன் புரமெனப் பொலிந்தான்' (பாகவத. மாயாவனம். 16); தோலும், ஆம். அநுமன் இராமபிரானை அடைந்து, அவன் முன் வாய் பேச இயலாமல் தரையில் வீழ்ந்தான். இதுவும் அடுத்த செய்யுளும் அந்தாதித் தொடை.

பி - ம். 2. அங்கவன் மனமும்.
3. உயிர்ப்பொடும்; புறத்தைப் போர்ப்ப.
4. அருவிசிந்த. 54

## இராமபிரானுக்கு அநுமன் செய்தி தெரிவித்தல்

2829. வீழ்ந்தவன் றன்னை வீரன்
விளைந்தது விளம்பு கென்னாத்
தாழ்ந்திரு தடக்கை பற்றி
யெடுக்கவுந் தரிக்க லாதான்
ஆழ்ந்தெழு துன்பத் தானை
யரக்கன்சே யயில்கொள் வாளால்
போழ்ந்தன னென்னக் கூறிப்
புரண்டனன் பொருமு கின்றான்.

வீரன் - இராமபிரான், தாழ்ந்து - தரையில் குனிந்து, வீழ்ந்தவன் தன்னை - விழுந்தவனாகிய அநுமனை, இரு தட கை பற்றி - அவன் இரு கரங்களையும் பிடித்துக்கொண்டு, 'விளைந்தது விளம்புக என்னா - நடந்ததைச் சொல்வாய்' என்று (சொல்லிக் கொண்டு), எடுக்கவும் - தூக்கவும், தரிக்கலாதான் - (தான் அடைந்த துன்பத்தைத்) தரிக்க இயலாதவனான அநுமன்,

'ஆழ்ந்து எழு துன்பத்தானை - நன்ருகப் பதிந்து எழுகின்ற துன்பம் நிறைந்த தேவியை, அரக்கன் சேய் - இராவண குமாரனை இந்திரசித்து, அயில் கொள் வாளால் - கூர்மை கொண்ட வாளினால், போழ்ந்தனன் - பிளந்துவிட்டான்,' என்ன - என்று, கூறி - சொல்லி, புரண்டனன் பொருமுகின்ருன் - (தரையில் விழுந்து) புரண்டு விம்முவானாயினன்.

இப்பகுதியிலுள்ள செய்யுட்களில் இராமபிரான் வீரன் என்றே அழைக்கப்படுதல் காண்க. மேல்வரும் செய்யுட்களில் அவன் துயரம் கூறப்படுவது, அத்தகைய வீரனையும் அலைத்தது என்று நாம் அறியவேண்டி இவ்வாறு ஆசிரியர் கூறினர் என்று கொள்ளலாம். தடக்கை பற்றி எடுக்கவும் தரிக்கிலாதான் என்றும் கூட்டிப் பொருளுரைக்கலாம். போழ்தல் - பிளத்தல். பொருமுகின்ருன் என்றது அநுமனை.

பி - ம். 2. தாழ்ந்தனன் றடக்கை.

3. ஆழ்ந்தழி துன்பத்தான்; யரக்கனின் னயில்கொள்; யரக்கன்றன் னயில்கொள்.

4. போழ்ந்தன கூரு யென்னப் புரண்டனன்; என்றுகூறப் புரண்டனன். 55

## இராமபிரான் பட்ட துயரம்

2830. துடித்தில னுயிர்ப்பு மில்ல
னிமைத்திலன் றுள்ளிக் கண்ணீர்
பொடித்தில னியாது மொன்றும்
புகன்றிலன் பொருமி யுள்ளம்
வெடித்திலன் விம்மிப் பாரின்
வீழ்ந்திலன் வியர்த்தா னல்லன்
அடுத்துள துன்ப மியாவு
மறிந்தில ரமர ரேயும்.

(இச் சொற்களைக் கேட்டு இராமபிரான்), துடித்திலன் - உடலோ உள்ளமோ துடிப்புறவில்லை; உயிர்ப்பும் இல்லன் - மூச்சு விடுதலும் இல்லாதவனானான்; இமைத்திலன் - (அவன்) கண்களைக் கொட்டவில்லை; கண்ணீர் துள்ளி பொடித்திலன் - கண்ணீர்த் துளிகளைத் தோற்றுவிக்கவுமில்லை; யாதும் ஒன்றும் புகன்றிலன் -

யாதொரு பேச்சையும் அவன் பேசவில்லை; உள்ளம் பொருமி வெடித்திலன் - மனம் விம்மி அது வெடிக்கப் பெற்றானுமில்லை; விம்மி பாரின் வீழ்ந்திலன் - தேம்பியழுது பூமியில் விழவில்லை; வியர்த்தான் அல்லன் - வியர்வை பெற்றவனும் அல்லன்; (இவ்வாறு அப்பொழுது இராமபிரானை), அடுத்து உள துன்பம் யாவும் - நெருங்கியுள்ள துன்பம் யாவற்றையும், அமரரேயும் - தேவர்கள் கூட, அறிந்திலர் - அறிந்தாரல்லர்.

2832ஆம் செய்யுளில், 'சித்திரத் தன்மையுற்ற' என்று கூறுதற்கு இயைய, இச்செய்யுளில் துயரால் இராமபிரான் எல்லா வித உணர்ச்சிகளையும் இழந்த தன்மை விரித்துரைக்கப்பெற்றது. துளி - துள்ளி என்றாயிற்று; (யுத்த. 715) காண்க. யாதும், செய்தியின் தன்மையையும், ஒன்றும் செய்திகளின் எண்ணையும் சுட்டின. பொருமுதல், விம்முதல்; ஒரு பொருளன. துன்பத்தின் மெய்ப்பாடுகள் இங்கு எதிர்மறையால் கூறப்பெற்றன. அமரர்; எங்கும் நடக்கும் எதையும் அறியக்கூடிய ஆற்றலுடையவர்; அவர்களாலேனும் அறியமுடியவில்லை என்றபடியால், துன்பத்தின் உச்ச நிலை கூறப்பெற்றது.

இங்கு, 'உரைத்தில னென்றுந் தன்னை யுணர்ந்தில னுயிரு மோடக், கரைத்திலன் கண்ணினீரைக் கண்டிலன் யாதுங் கண்ணால்,' என்று தொடங்கும் (யுத்த. 2151) செய்யுளை ஒப்பிடுக.

பா - ம். 1. உயிர்ப்பு மில்லை.

2. பொருமியொன்றும்.

3. விளிந்தா னல்லன்; வெருண்டானல்லன்.

4. அடுத்துளான் றன்னை யொன்று மறிந்தில னமலனேயும். 56

2831. சொற்றது கேட்ட லோடுந்
துணுக்குற வுணர்வு சோர
நற்பெரு வாடை யுற்ற
மரங்களி னடுக்க மெய்தாக்

கற்பக மனைய வள்ளல்
கருங்கழற் கமலக் கான்மேல்
வெற்பின மென்ன வீழ்ந்தார்
வானர வீர ரெல்லாம்.

வானர வீரர் எல்லாம் - வானர வீரர்கள் யாவரும், சொற்றது - (அநுமன் இராமபிரானிடம்) கூறிய செய்தியை, கேட்டலோடும் - கேட்டவுடனே, துணுக்கு உற - திடுக்கடைய, உணர்வு சோர - உணர்ச்சி அழிய, நல் பெரு வாடை உற்ற - நல்ல பெரிய வாடைக் காற்று வீசப்பெற்ற, மரங்களின் - மரங்களைப்போல, நடுக்கம் எய்தா - நடுக்கம் அடைந்து, கற்பகம் அனைய வள்ளல் - (கொடையில்) கற்பகம் போன்ற வள்ளலின், கரு கழல் கமல கால்மேல் - வலிமையுள்ள வீரக்கழல் அணிந்த (இராமபிரானின்) தாமரை போன்ற திருவடிகளின்மீது, வெற்பு இனம் என்ன - மலைக் கூட்டம் என்னுமாறு, வீழ்ந்தார் - விழுந்தார்கள்.

வானர வீரர், கேட்டலோடு, வள்ளல் கால்மேல் வீழ்ந்தார் என இயைக்க. இச்செய்யுளில் பிராட்டி வெட்டுண்டாள் என்னும் துயரச் செய்தி கேட்ட வானர வீரர் செயல் கூறப்பெற்றது. அநுமன் கூறிய ஒரு செய்தி இராமபிரானுக்கு உணர்ச்சியற்ற நிலைமையையும், வானரர்க்குச் சோர்வையும் அளித்தன என்று வெவ்வேறான விளைவுகளை அவ்விருதரத்தார்க்கும் ஊட்டிய அரிய செய்தி கூறப்பெறும் முறையும், வரிசையும் உற்று நோக்கற் குரியனவாம். வாடையுற்ற மரம் நடுங்குதல் இயல்பு. கற்பகம் கேட்டதை அளிக்கும் அரிய தெய்வமரமாம். அதைப் போலக் கொடையிற் சிறந்த இராமபிரான் இப்பொழுது உணர்ச்சியற்று நிற்பதை உணராமல் அவன்பால், தம் துயரத் தீர்வை நாடி வீரர்கள் அவனடிகளில் வீழ்ந்து பயன் பெறுதவராயினர் என்று உணர்த்த இவ்வாறு உவமையளித்தனர் என்க. கரு - கழல் - வலிய கழல்; கருமை - வலிமை; (புறநா. 21). வள்ளல்; இராமபிரான். (வானரர்) வீழ்தலுக்கு, வெற்பினம் வீழ்தல்; 2828.

பி - ம். 1. சொற்பதங் கேட்டபோதுங்; கேட்டபோது; துணுக்குரு.
3. கமலத்தாள்மேல்.

## இராமபிரான் மூர்ச்சையடைதல்

2832. சித்திரத் தன்மை யுற்ற
சேவக னுணர்வு தீர்ந்தான்
வித்தகர் வதன நோக்கா
னிளையவன் வினவப் பேசான்
பித்தரு மிறைபொ றுத
பேரபி மான மென்னும்
சத்திர மார்பிற் றைக்க
வுயிரில னென்னச் சாய்ந்தான்.

(இவ்வாறு வானரர் வீழ்ந்த நிலையில்), சித்திரம் தன்மை உற்ற சேவகன்-சித்திரத்தை ஒத்து உயிர்பெறாத தன்மையை அடைந்த வீரனான இராமபிரான், உணர்வு தீர்ந்தான் - உணர்ச்சி நீங்கின வனானான்; வித்தகர் வதனம் நோக்கான் - சிறந்த அறிவினரான தன் நண்பர்களுடைய முகத்தை அவன் காணவில்லை; இளையவன் வினவ - இலக்குவன் (ஏன்)? என்று வினவவும், பேசான் - அவ னுடன் பேசாதவனானான்; பித்தரும் - (தன் நிலைமை இழந்த) பைத்தியக்காரர்கூட, இறை - சிறிதளவேனும், பொறாத - தாங்க மாட்டாத, பேர் அபிமானம் என்னும் சத்திரம் - பெரிய பற்று என்னும் படை, மார்பில் தைக்க - மார்பில் ஊன்றிப் புதைய, உயிரிலன் என்ன - பிணமானவன் என்று சொல்லுமாறு, சாய்ந் தான் - விழுந்தான்.

சித்திரத் தன்மை - உயிர்பெறாத் தன்மை; 'சித்திரம் உயிர் பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்' (பால. நகரப். 135) என்பது காண்க. இச் செய்யுளுடன், 'உயிர்த்தி லன்றொரு நாழிகை யுணர்ந்தில னென்றும், வியர்த்தி லன்னுடல் விழித்திலன் கண் ணிணை விண்ணோர், அயிர்த்தனன் கொலென் றஞ்சின ரங்கையுந் தாளும், பெயர்த்தி லன்னுயிர் பிரிந்திலன் கருணையாற் பிறந்தான்' என்ற (யுத்த. 2574) செய்யுளை ஒப்பிடுக. வதனம் - முகம். அபி மானம் - பற்று; பிராட்டிபால் இராமபிரான் கொண்ட அபிமானம், அவள் இறந்தாள் என்றதைக் கேட்டதும், சத்திரமாக மாறி அவன் மார்பில் தைத்தது எனக; 'பிரிந்த வேதுகொல் பேரபி மானங்கொல், தெரிந்ததில்லை' என்றதுங் காண்க. (ஆரணிய. 1047). பித்தரும் இறை பொறாத என்றதனால், பித்தர் உணர்ச்சி தடுமாறி

யவர் ஆதலின், எவ்வகைத் துயரையும் எளிதிற் பொறுப்பர் என்பது சுட்டப் பெற்றது. அபிமானம் வித்தகரையும் அடக்கி யாளும் என்று கொண்டு அபிமானத்தின் சிறப்பைக் கூறியதாகவும் கொள்ளலாம். சத்திரம் - கைப்படை; கத்தி என்று கொள்ளப் பெற்றது; சஸ்திரம் என்ற வட சொல்லின் திரிபு.

பி - ம். 1. செங்கணானுணர்வு,

4. என்னச் சார்ந்தான். 58

## இலக்குவனும் துயரடைதல்

2833. நாயகன் றன்மை கண்டுந்
தமக்குற்ற நாணம் பார்த்தும்
ஆயின கரும மீள
வழிவுற்ற வதனைப் பார்த்தும்
வாயொடு மனமுங் கண்ணு
மியாக்கையு மயர்ந்து சாம்பித்
தாயினை யிழந்த கன்றிற்
றம்பியுந் தலத்த னானான்.

தம்பியும் - இலக்குவனும், நாயகன் தன்மை கண்டும் - தன் தலைவனான இராமபிரானின் மூர்ச்சையுற்ற நிலையைப் பார்த்தும், தமக்கு உற்ற நாணம் பார்த்தும் - தனக்கும் தன்னைச் சேர்ந்தார்க்கும் உண்டான இகழ்ச்சியைக் கண்டும், ஆயின கருமம் - நன்னிலை அடைந்த காரியம், மீள - மறுபடியும், அழிவுற்ற அதனை பார்த்தும் - அழிவுபட்ட தன்மையை நோக்கியும், வாயொடு மனமும் கண்ணும் யாக்கையும் - வாய், மனம், கண், உடல் ஆகியவை, அயர்ந்து - சோர்ந்து, சாம்பி - உணர்வழிந்து, தாயினை இழந்த கன்றின் - தாயை இழக்கக் கொடுத்த கன்றைப் போல், தலத்தன் ஆனான் - தரையில் வீழ்ந்தான்,

கருமம் - எடுத்துக்கொண்ட போர்க் காரியம்; ஆயின கருமம் - கைகூடி வந்த காரியம். ஆயின தருமம் என்றும் பிரதிபேதம் காணப்படுகிறது. வாயொடு......யாக்கையும் அயர்தல்; (ஒப்பு):

'அங்கமு மனமுங் கண்ணு மாவியு மலக்க ணுற்ருன்' (யுத்த. 2829). சாம்புதல் - உணர்வழிதல்; 'சாதல் காப்பவரு மென் றவத்திற் சாம்பினுர்' (சுந்தர. 509). தாயினை இழந்த கன்று: தாய்; இங்கு இராமபிராணைக் குறிக்கும்; பிராட்டியைக் குறிக்கும் எனவும் கருதலாம். பின்வரும் 2836-ஆம் செய்யுளால் இலக்குவன் தரையில் விழுந்தனனே யன்றி மூர்ச்சையுற்றவனுகவில்லை என்பது விளங்கும்.

பி - ம். 1. தனக்குற்ற நாணம்; வானரர் நடுக்கம் பார்த்தும்.

2. ஆயின தருமம்; அழிவுற்ற திறத்தைக் கண்டும்.

3. மறந்து சாம்பித்; மறந்து சாய்ந்த; மயங்கிச் சாம்பி; மயர்ந்து வாய்ந்த.

4. தலத்ததானுன். 59

## வீடணன் கொண்ட ஐயம்

2834. தொல்லைய துணரத் தக்க
வீடணன் றுளக்க முற்ருன்
எல்லையி றுன்ப மூன்ற
விடையொன்றுந் தெரிகி லாதான்
வெல்லவு மரிது நாச
மிவடனுல் விளைந்த தென்னுக்
கொல்வது மடுக்கு மென்று
மனத்தினோ ரையங் கொண்டான்.

தொல்லையது உணர தக்க வீடணன் - நெடுந்தூர நிகழ்ச்சிகளை அறிய வல்லமைகொண்ட வீடணன், துளக்கம் உற்ருன் - நடுங்கி, எல்லை இல் துன்பம் ஊன்ற - அளவற்ற துன்பம் தன் உள்ளத்திலே பதிய, இடை ஒன்றும் தெரிகிலாதான் - காரணம் ஒன்றையும் அறியக் கூடாதவனுகி, (ஒருவிதமாக), 'வெல்லவும் அரிது - (இந்திரசித்து) இராமபிரானுதியரை வெல்லுதலும் அரிது; இவள் தனுல் நாசம் விளைந்தது - இவளால் (அரக்கர் குலத்துக்கு) நாசம் உண்டாயிற்று; என்னு - என்றெண்ணி, கொல்வதும் - பிராட்டியை கொல்வதும், அடுக்கும் - இயைந்திருக்கும்' என்று - என்றெண்ணி, மனத்தின் ஓர் ஐயம் கொண்டான் - உள்ளத்தில் ஒரு சந்தேகத்தையும் கொண்டான்.

வீடணன் சிறந்த ஞானியாதலின், இராமனைப் போன்று பிராட்டிபால் அபிமானமும் தமையனபால் அன்பும் ஆகிய பற்றுக் களாகிய மயக்கத்தால் மூடப்படாதிருந்தும், இந்திரசித்தின் கொடுமையை ஆராய்ந்து, பிராட்டியை அவன் கொன்றிருக்கக் கூடும் என்ற ஐய நிலையை அப்பொழுது அடைந்தான் என்றனர். வீடணனின் அறிவையும் மீறி நின்றது துயரம் என்று காட்டப் பெற்றது. இச் சூழ்ச்சியாலுண்டான மயக்கம் இறுதியில் வீடணனாலேயே விடுவிக்கப் பெறப் போவதால், இங்கு அவன் கொண்டது ஐயமே என்று காட்டினர். தொல்லையது உணரத்தக்க வீடணன்; 'உம்பர் மந்திரிக்கு மேலா லொருமுழ முயர்ந்த ஞானத்தம்பி' (யுத்த. 765) என்று மாலியவான் கூறியமை காண்க; இன்னும் யுத்த. 305, 714; அதிகாயன் வதை. 87 முதலியனவும் காண்க. இடை - காரணம்; 'இடை தெரிவரியது' (நாட். கலியாண. 144). 'வெல்லவுமரிது...... விளைந்தது' என்றவை இந்திரசித்தின் கருத்தாக வீடணன் கொண்டவை.

பி-ம். 1. தொல்லையி லுணர்வு குன்ற விடணன்.
2. துன்பமுற்ற; தெரிக்கிலாதான்.
3. வெல்லுமதரிது; விளைந்ததென்றே.
4. கொல்லவு மடுக்கு. 60

## வீடணன் செய்த உபசாரத்தால் இராமபிரான் மூர்ச்சை தெளிதல்

2835. சீதநீர் முகத்தி னப்பிச்
சேவகன் மேனி தீண்டிப்
போதம்வந் தெய்தற் பால
யாவையும் புரிந்து பொற்பூம்
பாதமுங் கையு மெய்யும்
பற்றினன் வருட லோடும்
வேதமுங் காணு வள்ளல்
விழித்தனன் கண்ணை மெல்ல.

(வீடணன்), சேவகன் முகத்தின் - வீரனான இராமபிரானின் முகத்தில், சீத நீர் அப்பி - குளிர்ந்த நீரை அப்பி, மேனி தீண்டி -

அவன் உடலைத் தொட்டு, போதம் வந்து எய்தல் பால யாவையும் புரிந்து - உணர்ச்சி வந்து அடைதற்குரிய எல்லாச் சைத்தியோபசாரங்களையும் செய்து, பொன் பூம் பாதமும் கையும் மெய்யும் - அழகிய மிருதுவான திருவடிகளையும் கரங்களையும் உடலையும், பற்றினன் வருடலோடும் - (கைகளால்) பிடித்துத் தடவவும், வேதமும் காணு வள்ளல் - வேதமும் கண்டறியாத வள்ளலான பிரான், கண்ணை மெல்ல விழித்தனன் - தன் கண்களை மெதுவாக விழித்தான்.

சீதநீர் முகத்தில் அப்பல் முதலியவை சைத்தியோபசாரம் எனப்படும். (அனந்தல் நீக்க), அடி வருடல்; (பால. 721); (அயோத்தி. 142). சீதம் - குளிர்ச்சி. வருடல் - தடவுதல். வேதமும் காணு வள்ளல்: 'தள்ளரு மறைகளு மருளுந் தன்மையான்' (யுத்த. 204). இங்குக் கூறப்பெற்ற வுபசாரங்களைச் செய்தவன் இலக்குவன் என்பாரும் உளர். இச் சைத்தியோபசாரம் அப்பொழுது துயரடைந்து அங்கு வந்த தேவர்களாற் செய்யப் பெற்றதென்று மூலநூல் கூறும்.

பி - ம். 2. புரிந்து பூம்பொற்; புரிந்து பொன்போல்.

3. மெய்யும் கையும்.

4. விழித்தனனுயிர்ப்பு வீங்க. 81

## இலக்குவன் இராமபிரானைத் தேற்றியது

2836. ஊற்றுவார் கண்ணீ ரோடு
முள்ளழிந் துற்ற தெண்ணி
ஆற்றுவா னல்ல ஞகி
யயர்கின்ரு னெனினு மையன்
மாற்றுவா னல்லன் மான
முயிருக வருந்து மென்னுத்
தேற்றுவா னினைந்து தம்பி
யிவையிவை செப்ப லுற்ருன்.

(இஃது இவ்வாருக, தரையில் விழுந்த இலக்குவன்), ஊற்று வார் கண்ணீரோடும் - ஊற்றுகின்ற நீண்ட கண்ணீரோடும், உள் அழிந்து - மனம் அழிந்து, உற்றது எண்ணி - நடந்ததை எண்ணி,

ஆற்றுவான் அல்லன் ஆகி - தன்னை ஆற்றிக்கொள்ள முடியாதவனாகி, அயர்கின்றான் எனினும் - தான் சோர்வடைகின்றனனாகிலும், 'ஐயன் - இராமபிரான், மானம் மாற்றுவான் அல்லன் - தனக்குண்டான அபிமானத்தை மாற்றக்கூடியவன் அல்லன்; உயிர் உக வருந்தும் - உயிர் சிந்துமாறு வருந்துவான்', என்று - என்றெண்ணி, தேற்றுவான நினைந்து - அப் பெருமானைத் தேற்ற எண்ணி, தம்பி - இலக்குவன், இவை இவை - இன்ன இன்னவற்றை, செப்பல் உற்றான் - (அப் பெருமானுக்குச்) சொல்லத் தொடங்கினான்.

முதல் இரண்டு அடிகளையும் இராமபிரானுக்கே பொருந்தப் பொருள் கூறலும் ஆம். மானம் - அபிமானம்; (58-ஆம் செய்யுள்); அவமானமும் ஆம். இச் செய்யுளால் தலத்தனை தம்பி எழுந்தனன் என்பது காணக் கிடக்கின்றது. முதல் இரண்டடிகளால் இலக்குவன் நிலையும் அவன் அதனைப் பொருட்படுத்தாமல் சமாளித்துக் கொண்டு அண்ணனைத் தேற்றத் தொடங்கியதும் கூறப் பெற்றது. இவையிவை: பின்வரும் ஏழு செய்யுட்களில் கூறப் பெறுபவை.

பா - ம். 1. ஊற்றிவார்; கண்ணிறேடும்.

2. அயர்கின்றான் போலுமையன். 62

2837. முடியுநாட் டானே வந்து
முற்றினாற் றுன்ப முந்நீர்
படியுமாஞ் சிறியோர் தன்மை
நினக்கிது பழியிற் றாமால்
குடியுமா சுண்ட தென்னி
னறத்தொடு முலகைக் கொன்று
கடியுமா றன்றிச் சோர்ந்து
கழிதியோ கருத்தி லார்போல்.

'முடியும் நாள் - அழியும் காலம், தானே வந்து முற்றினால் - தானாகவே வந்து நேர்ந்தால், துன்பம் முந்நீர் படியுமாம் - துன்பமாகிய கடலுள் தாழும், சிறியோர் தன்மை - (இஃது) அற்பர்களின் தன்மையாகும்; (ஆனால்), இது - இவ்வாறு ஆவது, நினக்கு பழியிற்று ஆம் - உனக்குப் பழியுடைத்தாகும்; குடியும் - குலமும், மாசு உண்டது என்னின் - குற்றப்பட்டது என்னின், அறத்தொடும்

உலகை கொன்று கடியுமாறு அன்றி - அறத்தையும் உலகத்தையும் அழித்து நீக்குவதல்லாமல், கருத்திலார் போல் - யோசனையற்றவர் போல், சோர்ந்து கழிதியோ - மனம் சோர்ந்து கழிவாயோ. ஆல் : அசை.

துன்பம் எவ்வளவு நேருமானாலும், மனம் அழியாமல், குற்றம் இழைத்தவரைத் தண்டித்தலே ஆண்மைக்கு அழகு என்ற அறத்தை இலக்குவன் இங்குக் கூறுகின்றான். 'சிறியோர் தன்மை துன்பத்துள் படிவது; நீ படிவது பழியாகும்' என்று கூறினன் ஆம். 'மனைவியை அந்நியன் தொட்டுக் கொன்றான்' என்பது குடியைச் சாரும் மாசு ஆகும். இதன்பின் 65-ஆம் செய்யுளில் கூறியவற்றையும் காண்க. அயோத்தி. நகர் நீங்கு படலம் 115, 128 செய்யுட்களையும் ஒப்பிடுக. கடிதல் - நீக்குதல். அறத்தை அழித்தல் வேண்டுமென்று இலக்குவன் இங்குக் கூறியதுடன் வான்மீகம் யுத்த காண்டம் 68-ஆம் ஸர்க்கத்தில் கூறப்பெற்றுள்ளனவற்றை ஒப்பிட்டுக் காண அப் பகுதி கீழே தரப் பெறுகின்றது.

பி - ம். 1. முற்றுநாட்டுன்ப முன்னிப்;
2. உனக்கிது பழியிற்.
3. யற்றதோர் கொள்கைக் கோன்று ; மூலகைக் கொண்டு.
4. கழியுமோ. 63

## இலக்குவன் இராமபிரானைத் தேற்றுதல்

"பிறகு, மிகவுந் துயரமடைந்த இலட்சுமணர், அவ்விராமரைத் தமது கைகளால் தழுவிக் கொண்டு, அஸ்வஸ்தராயிருந்த அவரை நோக்கி, காரணத்துடனும் அர்த்தத்துடனுங் கூடிய வார்த்தைகளைப் பின்வருமாறு சொல்லலானார் :—

"பெரியவரே! பித்ருவசந பாலநமாகிற நல்வழியில் நடந்து, ஐம்புல வாசையை அடக்கியுள்ள தங்களை, பயனற்ற தருமமானது அநர்த்தத்தினின்றும் பாதுகாக்க வல்லமை யற்றதே. ஸ்தாவர ஜங்கமங்களான பொருள்கள் கண்ணுக்குப் புலனாவது போலத் தருமமென்பது கண்ணுக்குக் காணாத பொருளாயிருத்தலால், அது இல்லையென்றே எனக்குத் தோன்றுகின்றது. தர்மமென்று ஒரு பதார்த்த மிருக்குமாயின், அது ஸ்தாவரமாகவாவது ஜங்கமமாக

வாவது கண்ணுக்குப் புலனாக வேண்டியிருக்க, இந்தத் தர்மம் அவ்வாறு பிரதியட்சமாக வில்லையே: மேலும், தர்மமென்று ஒன்று உண்டாயின், தங்களைப் போன்றவர்கள், இவ்விதமாகத் துக்கமனுபவிக்கவே மாட்டார்கள். அன்றியும், அதர்மமென்பது நிச்சயமாக இருக்கும் பட்சத்தில், இராவணன் பெருந் துன்பத்தையடைந்திருக்க வேண்டும்; அவ்வாறே, தர்மமென்பது நிச்சயமாக இருக்கும் பட்சத்தில், தர்மத்தையே மேற்கொண்டுள்ள தாங்களும் இவ்விதமாக வியசனமடைந்திருக்க மாட்டீர்கள். இராவணன் துக்கப்படாமையையும் தர்மிஷ்டரான தாங்கள் துக்கப்படுவதையும் சீர்தூக்கிப் பார்த்தால், தர்மம் அதர்மமாகவும், அதர்மம் தர்மமாகவும் காணப்படுகின்றன. இவ்வாறு இவை ஒன்றுக்கொன்று மாருக இருக்கின்றன. தர்மத்தினுல் அதன் பயனுகிய நன்மையும், அதர்மத்தினுல் அதன் பயனுகிய தீமையும் விளையுமென்று தாங்கள் எண்ணுவீர்களேயாஞல், அது சரியன்று; எவரிடத்தில் அதர்மம் குடி கொண்டிருக்கின்றதோ அவர் துக்கத்தையும், எவரிடத்தில் தர்மம் குடிகொண்டிருக்கின்றதோ அவர் இன்பத்தையும் அடைந்தாரேயானுல், அப்போது தர்மத்தில் நடப்பவர்கட்குத் தருமத்தின் பயனுக இன்பமுண்டாகுமென்றும், அதர்மத்தில் நடப்பவர்கட்கு அதர்மத்தின் பயனுகத் துன்பமுண்டாகுமென்றும் உறுதியாக ஏற்படும். இப்போது, அதர்மத்தை மேற்கொண்டிருப்பவர்க்கு நன்மை பெருகுவதையும், தர்ம வழியிலேயே ஒழுகுபவர்க்குத் துயரம் பெருகுவதையும் காண்கின்றபடியால், தர்மத்தினுல் நன்மையும், அதர்மத்தினுல் தீமையும் விளையுமென்று கூறுகின்ற சொற்கள் பொருளற்றனவே. இராகவரே! பாவச் செயல் புரிகின்றவர்கள் அதர்மத்தாற் கொல்லப் படுகின்றூர்களென்போமானுல், தர்மமும் அதர்மமும் தொழில் வடிவமாக இருத்தலாலும், தொழில்கள் யாவும் க்ஷணிகமென்பது கொள்கையாதலாலும், க்ஷணத்திலேயே நசிப்பனவான அந்தத் தர்மமும் அதர்மமும், எவ்வாறு பயனளிக்க வல்லனவாகும்? இனி, தர்மத்தினுலும், விதியென்பது ஒன்று தோன்றி அது பயனளிக்கின்றதென்போமானுல், அப்போது, தருமா தருமங்களின் பயனை நடத்துவிப்பதான விதியைத்தான் நன்மை தீமைகள் சேர்ந்தனவாகும். சத்துருக்களை யழியச் செய்பவரே! அனுமானத்தினுலேனும், பிரத்தியக்ஷத்தினுலேனும் காணப்படாததாய், இல்லை யென்றே சொல்லக்

கூடியதான அபூர்வமென்று பெயர் பெற்ற தர்மத்தினுல் ஒருவன் பேறு பெறுகின்ருனென்று சொல்வதுதான் எவ்வாறு சாத்திய மாகும்? ஸத்துக்களுட் சிறந்தவரே! தர்மமென்பது ஒன்று நிச்சயமாக இருந்தால், தங்களுக்குத் துக்கம் ஒன்றும் வந்தே யிருக்கக் கூடாது. எப்பொழுது இவ்விதமான துக்கம் தங்களை அணுகிற்ருே, அப்பொழுது தர்மமென்பது ஒன்று உண்டென்பது பொருத்தமாக மாட்டாது. இனி, வலியற்றதும் தானுகவே ஒரு காரியத்தை நிறைவேற்றுவிக்குந் திறமை யில்லாததுமான தர்ம மென்பது, தான் பயனை விளைவிக்கின்றபோது, தகுதியான வலிமையை யெதிர்பார்க்கின்றதென்ருல், வலிமையற்றதும் தானுகவே பயனை விளைக்குந் திறமில்லாததுமான அந்தத் தர்மத்தை அநுஷ்டிக்க வேண்டுவதில்லை யென்பது, எனது எண்ணம். காரியத்தைச் சாதிக்கின்ற விஷயத்தில், தருமமானது வலிமைக்கு உட்பட்டு நின்று பயனை விளைவிக்கின்றதென்ருல், தருமத்தைப் பிரதானமாகக் கொள்ளாமல் தருமத்திலிருந்தது போலப் பலத்துக்குப் பிராதானியங் கொடுத்து நடவுங்கள். பகைவரைத் தவிக்கச் செய்பவரே! மெய்ம்மை யென்பது ஒரு தர்மமானுல், தங்களுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதாக முதலிற் சொல்லி, பிறகு அதைப் பொய்யாக்கித் தயையின்றித் தங்களைக் காட்டுக்கு அனுப்பிய தந்தையை, ஏன் தாங்கள் தண்டித்திருக்கக் கூடாது? எப்பொழுதும் ஒரு க்ஷத்ரியன் தர்மத்தைத்தான் செய்ய வேண்டுமென்பது கோட்பாடானுல், இந்திரன் விசுவரூபனென்னும் முனிவனைக் கொன்று யாகம் பண்ணி யிருப்பானே? முனிவனைக் கொல்லாமலே யாகஞ் செய்திருப்பானன்ருே! அன்றி, ஒரு க்ஷத்ரியன் அதர்மத்தையே செய்ய வேண்டுமென்பது கோட்பாடானுல், முனிவனைக் கொன்று யாகஞ் செய்திருக்க மாட்டான்; முனிவனது கொலையை மாத்திரஞ் செய்திருப்பான். க்ஷத்ரியனுன தேவேந்திரன் முனிவனது கொலையையும் யாகத்தையும் செய்த தனுல், மனிதனுன க்ஷத்ரியனும் காலத்துக்குத் தக்கபடி தருமம் அதருமம் என்னும் இரண்டையும் மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததேயாம். இராகவரே! தர்மமும் அதர்மமும் தனியே ஒரு நியமமாக மேற்கொள்ளப் படுமாயின், அவை செய்பவனை நாசஞ் செய்யும். ஆகவே, தர்மத்தையும் அதர்மத்தையும் ஒரு நியதியாகக் கொள்ளாமல், அந்த அந்தக் காலத்துக்குத் தக்கபடி

மனிதன் செய்ய வேண்டும். அருள் செய்யத் தக்கவரே! இவ்வாறு செய்வதுதான் முறைமையாகுமென்பது எனது கொள்கை. தர்மத்திற்கு முதற் காரணமாகிய பொருளை, இராச்சியத்தை, உபேக்ஷித்துவிட்ட தாங்கள், முன்னமே அதனை வெட்டியெறிந்தீர்கள். மலைகளிலிருந்து ஆறுகள் பெருகுவன போல, யாகம் தானம் முதலிய நற்காரியங்களெல்லாம், பலவிடங்களிலிருந்து வந்து குவிந்து வளரும் பொருளால்தான் கைகூடும். பொருளில்லாமல் ஒளி குறைந்த புருஷனுடைய காரியங்களெல்லாம் கோடைக் காலத்திலே அற்ப நதிகள் போல வறண்டு விடும். முதலிற் சுகமாக விருந்து தனக்குக் கிட்டிய பொருளைக் கைவிட்ட புருஷன் பிறகு சுகத்திலுள்ள விருப்பத்தினுல் தீய வழியினுலும் பொருளைத் தேடுகின்றுன்; அவ்வழியால் அவனுக்குப் பெருங் குற்றம் உண்டாகி விடுகின்றது. எவனுக்குப் பொருளிருக்கின்றதோ அவனுக்குத் தான் நண்பர்கள்; எவனுக்குப் பொருளிருக்கின்றதோ, அவனுக்குத்தான் பந்துக்கள்; எவன் பணக்காரனே, அவன்தான் இவ்வுலகத்தில் மனிதனுவான்; எவன் கையில் திரவிய மிருக்கின்றதோ, அவன்தான் பண்டிதன்; எவன் பணக்காரனே, அவன்தான் வல்லமையுள்ளவன்; எவன் பொருளுள்ளவனே, அவன்தான் மகா புத்திமான்; எவனிடம் தனமிருக்கின்றதோ, அவன்தான் பாக்கியவான்; எவன் பணக்காரனே, அவன்தான் பெருங்குணவான்; திரவியத்தைக் கைவிடும் பட்சத்தில், நான் முன்பு சொன்னவற்றிற்கு மாருன நண்பரில்லாமை முதலிய பெருங்குறைகள் தோன்றும். வீரரே! எந்தக் குணத்தைக்கண்டு, கிட்டிய இராச்சியத்தைத் தாங்கள் கைவிட்டீர்களோ, அது எனக்கு விளங்கவில்லை. எவனிடம் திரவியமிருக்கின்றதோ, அவனுக்குத்தான் தர்மமும், காமமும் அனுகூலமாகும். திரவியமில்லாதவன், அதனைத் தேடுவதிலேயே தனது காலத்தைக் கழிக்கவேண்டியவனுகையால், அவன், வேறொரு பிரயோசனத்தையும் தேடிக்கொள்ள முடியாதவனுகின்றுன். வேந்தரே! எதிரிலிருக்கும் செல்வத்தை உபேட்சித்தவர்கட்கு சந்தோஷம், சுகம், செருக்கு, தருமம், கோபம், ஸமம், தமம் ஆகிய இவ்வுலக வின்பமே கிட்டாது, மேகம் மூடிய நாட்களில் சூரியன் முதலிய கிரகங்கள் காணப்படாமற் போவது போல், சுகத்திற்குக் காரணமான அப்

பொருள்கள் தங்களிடத்திற் காணுமற் போய்விடும். காட்டுக்கு ஓட்டப்பட்ட தாங்கள், பிதிருவாக்கிய பரிபாலனமாகிய தர்மத்தைப் பரிபாலனஞ் செய்துவருகையில், தங்களுடைய உயிரினும் மேலான மனைவியை அரக்கன் தூக்கிக்கொண்டு போனுன். இந்தத் துக்கம் போதாதென்று இந்திரசித்து இதற்கு மேலான துக்கத்தை இன்றைக்கு உண்டாக்கி வைத்தான்; அந்தத் துக்கத்தை நான் இன்று எனது காரியத்தால் அகற்றுகின்றேன். ஆகையால், இராகவரே! எழுந்திருங்கள். புருஷ சிங்கமே! புஜபல பராக்கிரமமுள்ளவரே! உறுதியான நோன்பு புரிகின்றவரே! தங்களை மகாத்துமாவென்றும், பரமாத்துமாவென்றும் ஏன் தாங்கள அறிந்துகொள்ளவில்லை? குற்றமற்றவரே! தங்களுக்கு நன்மையை விளைக்க வேண்டுமென்றே ஜநநமெடுத்துத் தங்களை அடுத்திருக்கும் நான், சீதாதேவி வதைக்கப்பட்டதைப் பார்த்துக் கோபங் கொண்டேனுகையால், யானைகள், தேர்கள், அரக்க வீரர்கள் என்ற இவர்களுடன் கூடிய இவ்விலங்கையையே எனது பாணத்திஞல் அழித்துவிடுகின்றேன்; தேற்றிக் கொள்ளுங்கள்" என்றூர்.

—வான்மீகி ராமாயணம் யுத்தகாண்டம்; 83-ஆவது ஸர்க்கம்.

2838. தையலைத் துணையி லாளைத் தவத்தியைத் தருமக் கற்பின்
தெய்வதந் தன்னை மற்றுன் றேவியைத் திருவைத் தீண்டி
வெய்யவன் கொன்று னென்றுல் வேதனை யுழப்ப
[தின்னம்
உய்யவோ கருணை யாலோ தருமத்தோ டுறவு முண்டோ.

" தையலை - (வலிமையற்ற) பெண்ணை, துணை இலாளை - உதவியற்றிருந்தவளை, தவத்தியை - தவநிலையில் நின்றவளை, தரும கற்பின் தெய்வதம் தன்னை - அறநூல்களிற் கூறப்பெறும் கற்பின் தெய்வத்தை, மற்று - மேலும், உன் தேவியை - உன் பத்தினியை, திருவை - இலக்குமியானவளை, தீண்டி - தொட்டு, வெய்யவன் - கொடிய அரக்கன், கொன்றுன் என்றுல் - கொன்றுன் என்று ஒருவர் சொல்லக் கேட்டால், வேதனை உழப்பது - துன்பத்துள் வருந்துவது, இன்னம் உய்யவோ - இனியும் உயிர் பிழைத்திருக்கவோ? கருணையாலோ - (இக்கொடுமை புரிந்த பகைவனிடம் கொண்ட) கருணையாலோ? தருமத்தோடு உறவும் உண்டோ - அறத்தோடு (இன்னும) உறவு கொண்டதனுலோ?

பிராட்டியின் எளிய நிலை இங்கு, மிக உருக்கமாக வருணிக்கப் பட்டுள்ளமை காணத்தகும். தருமக்கற்பின் தெய்வம் - பிராட்டி, திரு - இலக்குமி; பிராட்டியைத் திரு என்றது; கிட்கிந்தா. 811; 205; 224; 761. தெய்வதம் - தெய்வம். தருமத்தோடுறவு முண்டோ, என்பது, 'இனித் தன்மம் பார்க்க வேண்டாம்' என்ற பொருளது என்பது பழையவுரை.

பி - ம், 2. யுன்றன் றேவியைத்.

3. உழப்ப தெல்லாம்.

4. உய்யவோ வெளிமைதாறே; உய்யவோ வெளிமையாலோ. 64

2839. அரக்கரென் னமரர் தாமெ னந்தணர் தாமெ னந்தக்
குருக்களென் முனிவர் தாமென் வேதத்தின் கொள்கை [தானென்
செருக்கினர் வலிய ராகி நெறிநின்றார் சிதைவ ராகின்
இருக்குமி தென்னு மிம்மூன் றுலகையு மெரிம டாதே.

'அரக்கர் என் - அரக்கரானால் என்ன? அமரர் தாம் என் - தேவர்களாயினும் என்ன? அந்தணர் தாம் என் - அந்தணராயினு மென்ன? அந்த குருக்கள் என் - குறித்து பேசக்கூடிய ஆசார்யர் களாயினும் என்ன? முனிவர் தாம் என் - முனிவர்களாயினும் என்ன? வேதத்தின் கொள்கை தான் என் - வேதக்கருத்தே எனினும் என்ன? செருக்கினர் - (பகைவர்) ஆணவம் மிகுந்தவ ராய், வலியர் ஆகி - வலிமை பெற்றவராகவும் ஆகி, (அதன் காரணமாக அவர்களால்), நெறி நின்றார் சிதைவராகின் - (அற) நெறியிலே நின்றவர்கள் அழிவராகில், (அப்பொழுது), இம்மூன்று உலகையும் எரி மடாதே - இந்த (மேல், நடு, கீழ்) என்ற மூன்று உலகங்களுக்கும் நெருப்பை மூட்டாமல், இருக்கும் இது - (வாளா) இருக்கும் இச் செய்கை, என் ஆம் - எவ்வாறு ஆகும்?

இச் செய்யுளில், கொடியவர் தம் அகங்காரத்தாலும் வலிமை யாலும் அறத்தில் நின்றவரை வதைக்க நேர்ந்தால், அப்பொழுது ஒன்றையும் ஆராயாமல் மூவுலகங்களையும் கொளுத்திவிட வேண்டு மென்று இலக்குவன் கூறி, இராமபிரானைச் சோம்பியிராமல் தொழி லில் முனைய வற்புறுத்துகின்றான். முன் இராமபிரானை வனஞ் செல்லக் கைகேயி ஏவியதைக் கேட்ட இலக்குவன் 'விண்ணாட்டவர்

பண்ணவர் விஞ்சையர் நாகர் மற்றும், எண்ணுட்டவர் யாவரு நிற்க வொர் மூவராகி, மண்ணுட்டுநர் காக்குநர் நீக்குநர் வந்த போதும், பெண்ணுட்ட மொட்டே னினிப் பேருலகத்து ளென்னு' (அயோத்தி. 417) என்றபோது காட்டிய சீற்றம் இங்கும் அவனிடம் காணப் படுவது காண்க. குருக்கள் முதலியோரையும் வேதத்தின் கொள்கையையும் இலக்குவன் இகழ்ந்தமை; (ஒப்பு): 'கோவியற் றருமம் நீங்கக் கொடுமையோ டுறவு கூடிப், பாவியர்க் கேற்ற செய்யக் கருதுவல் பழியும் பாரேன்' (கிட்கிந்தா. 621). இம்மூன் றுலகையு மெரிம டாதே; ஒருவர்மீது கொண்ட கோபத்தால் உலகை அழிக்கத் துணிதல்; ஆரணிய. 1008—1011 செய்யுட் களால் இராமபிரான் கோபங்கொண்டு கூறியவை காண்க.

பி - ம். 3. வலியராக்கி ; செருக்கினர்......பிதைவரென்றால் ; பிதைவராகின்.
4. இருக்குமதென்றே ; எரிமடாமல் ; எரிமடாதே, எரிபடாதே. 65

2840. முழுவதே ழுலக மின்ன
முறைமுறை செய்கை மேன்மூண்
டெழுவதே யமர ரின்ன
மிருப்பதே யறமுண் டென்று
தொழுவதே மேக மாரி
சொரிவதே சோர்ந்து நாம்வீழ்ந்
தழுவதே நன்று நந்தம்
விற்றொழி லாற்ற லம்மா.

ஏழ் உலகம் முழுவதும் - ஏழு உலகங்கள் யாவும், இன்னம் - இன்னும், முறைமுறை - ஒழுங்காக, செய்கைமேல் - (தான் தான்) செய்யும் தொழிலின்மீது, மூண்டு எழுவதே-திரும்பவும் எழுவதா? இன்னம் அமரர் இருப்பதே - இனியும் தேவர்கள் (வாழ்ந்து) இருப்பதா? அறம் உண்டு என்று தொழுவதே - தருமம் இருக் கிறது என்று கொண்டு அதை வணங்குவதா? மேகம் மாரி சொரிவதே - இனியும் மேகம் மழையைச் சொரிவதாவதா? நாம் சோர்ந்து வீழ்ந்து அழுவதே - நாம் சோர்வடைந்து விழுந்து அழுவதா? நம் தம் வில் தொழில் ஆற்றல் நன்று - நம்முடைய வில்தொழிலில் வலிமை மிக நன்றாயிருக்கிறது! அம்மா - வியப்பு.

நம் கையில் வில்லை வைத்திருந்தும், நம் ஆற்றலில் நமக்கு நம்பிக்கையிருந்தும் நாம் சோர்ந்து அழலாகாது என்றும், உலகத்தில் இனிச் செய்கைகள் நடைபெறுதபடி, அறத்தை மதிக்காமல், நாம் நடந்துகொள்ளவேண்டுமென்று இலக்குவன் இராமபிரானிடம் கூறுகின்றான். மேகம் மாரி சொரிவதே, என்றதால் இனி உலகில் அறத்தின் விளைவு இல்லாதபடி அழிக்க வேண்டுமென்பது அவனுடைய கோள். இச்செய்யுளில் ஏகார வினக்கள் எதிர்மறைப் பொருள் காட்டி நின்றன. 'இன்னும் எல்லா லோகமும் அழியாமலிருக்கின்றனவே என்று சீற்றமானார் இளவல்' என்பது பழையவுரை.

பி-ம். 1. முறைநெறிசெய்கை, ஏழுலகோ டின்னமுறை செய்கை மேன்மேல் மூண்டு.
2. எழுவதென் னமர ரின்ன மிருப்பதென்.
3. தொழுவதென் மேக வாரி சுரப்பதென்.
4. அழுவதென். 66

2841. புக்கிவ்வூ ரிமைப்பின் முன்னம்
பொடிபடுத் தரக்கன் போன
திக்கெலாஞ் சுட்டு வானோ
ருலகெலாந் தீய்த்துத் தீர்க்கத்
தக்கநாங் கண்ணீ ராற்றித்
தலைசுமந் திருகை நாற்றித்
துக்கமே யுழப்ப மென்றாற்
சிறுமையாய்த் தோன்று மன்றே.

'இ ஊர் புக்கு - இந்த இலங்கை என்று ஊரினுள் புகுந்து, இமைப்பின் முன்னம் பொடிபடுத்து - கண்ணிமைக்கும் நேரத்திற்குள் (இதனைச் சாம்பற்) பொடியாக்கி, அரக்கன் போன திக்கெலாம் சுட்டு - (இந்திரசித்தான) அரக்கன் போன திசைகளையெல்லாம் கொளுத்தி, வானோர் உலகெலாம் தீய்த்து - தேவர் உலகங்களையும் பொசுக்கி, தீர்க்கத்தக்க நாம் - ஒழிக்கத்தக்க யாம், கண்ணீர் ஆற்றி - கண்ணீரைப் பெருக்கி, இரு கை தலை சுமந்து - இரண்டு கைகள் தலையைச் சுமந்து நிற்க, நாற்றி - அத்தலையை தொங்கவிட்டுக்கொண்டும், துக்கமே உழப்பம் என்றால் - துக்கத்

தையே நுகர்வேம் என்றால், சிறுமையாய் தோன்றும் அன்றே - (மிக) எளிமையாய் (உலகுக்குத்) தோன்றும் அன்றோ?

'தலை சுமந்திருகை நாற்றி' யுத்த. 938. வானோருலகெலாந் தீப்பது; அவர்கள் இக்கொடுமைக்கு உடந்தையாய் இருந்தது கருதி. ஆற்றுதல் - பெருக்குதல் (பிங்.).

பி - ம். 1. அரக்கர் போன.

2. தீய்த்துத்தீரத்; உலகையுந் தீய்த்து.

3. தலை சுமந்திருந்து தாவித்; தக்க நாங்கைகளூற்றித் தலைசுமந்திருந்து தாழ்விற்.

4. துக்கமாயழைப்ப தெல்லாம் சிறுமையிற்; சிறுமையாய்ச் சொல்லு மன்றே.

2842. அங்குமிவ் வறமே நோக்கி
யரசிழந் தடவி யெய்தி
மங்கையை வஞ்சன் பற்ற
வரம்பழி யாது வாழ்ந்தேம்
இங்குமித் துன்ப மெய்தி
யிருத்துமே லெளிமை நோக்கிப்
பொங்குவன் றளையிற் பூட்டி
யாட்செயப் புகல்வ ரன்றே.

"அங்கும் - அயோத்தியிலும், இ அறமே நோக்கி - இந்தத் தருமத்தையே பார்த்து, அரசு இழந்து - (தனக்குரிய) அரசாட்சியை இழந்து, அடவி எய்தி - காட்டை அடைந்து, மங்கையை - பிராட்டியை, வஞ்சன் - வஞ்சனை நிறைந்த இராவணன், பற்ற - பிடித்துக்கொள்ள, வரம்பு அழியாது - (அறத்தின்) எல்லையைக் கடவாமல், வாழ்ந்தேம் - வாழ்ந்தோம்; இங்கும் - (பிராட்டியை வெட்டிக் கொன்ற இடமாகிய) இவ்விலங்கையிலும், இ துன்பம் எய்தி - இந்தத் துன்பத்தை அடைந்து (வாளா) இருத்துமேல் - இருப்போமானால், எளிமை நோக்கி - நம் எளிய நிலையைக் கண்டு, பொங்குவன் தளையில் - விளங்குகின்ற வலிய விலங்குகளில், பூட்டி - நம்மை மாட்டுவித்து, ஆள் செய புகல்வர் அன்றே - (தம்) அடிமைத் தொழில் புரியச் சொல்வர் அன்றோ?

அங்கும் - அயோத்தியிலும்; கைகேயி தசரதனிடம் வரம் பெற்ற காலத்திலும். வரம்பு அழியாது - வரம்புக்கு உட்பட்டு, எளிமை - ஏழ்மை; துணையற்ற நிலைமை. பொங்கு - தம் உற்சாகத்திற்குக் காரணமான என்றும் கூறுவர். தளை - விலங்கு. ஆட்செய்தல் - தளையிற்பூட்டி என்றது; சிறையிலடைத்து என்னும் பொருள்படும். ஆட்செய்தல் - தொண்டியற்றல்; 'ஆட்செய் தாழிப் பிரானைச் சேர்ந்தவன்' (திருவாய். 4, 10, 11).

பி - ம். 2. பற்றிவரம் பழியாது.

4. பொங்குவெம்; பொங்குவான்; புரிவரன்றே; புகல்வனன்றே. 68

2843. மன்றலங் கோதை யாளைத்
தம்மெதிர் கொணர்ந்து வாளின்
கொன்றவர் தம்மைக் கொல்லுங்
கோளிலா நாணங் கூரப்
பொன்றின ரென்ப ராவி
போக்கினுற் பொதுமை பார்க்கின்
அன்றிது கரும மென்னீ
யயர்கின்ற தறிவி லார்போல்.

'ஆவி போக்கினுல் - நாம் (துயரம் தாங்கமாட்டாமல்) உயிரைப் போக்கிக் கொள்வோமானுல், 'மன்றல் அம் கோதை யாளை - மணம்மிக்க அழகிய கூந்தலுடைய மனைவியை, தம் எதிர் கொணர்ந்து - தமக்கு எதிரிலேயே கொண்டு வந்து, வாளின் கொன்றவர் தம்மை - வாளினுல் (வீசிக்) கொன்றவரை, கொல்லும் கோள் இலா - திரும்பக் கொல்லும் வலிமையில்லாத, நாணம் - வெட்கம், கூர - மிக, பொன்றினர் - இறந்தார்கள்', என்பர் - என்று உலகத்தார் கூறுவர்; பொதுமை பார்க்கின் - பொதுத் தன்மையை நோக்கினுல், இது கருமம் அன்று - இது (பொன்றுதல்) காரியம் அன்று; அறிவிலார் போல் - அறிவில்லாதவரைப் போல, நீ அயர்கின்றது என் - நீங்கள் சோகமுறுவது ஏன்?

'முடியுநாள்' என்று தொடங்கும் செய்யுள் முதல் இச் செய்யுள் முடிய ஒரு தொடர்; அடுத்த செய்யுளில், 'இளவல் கூற' என்றதுடன் முடியும். இச் செய்யுட்களால் மானமும், பழிக்குப் பழி வாங்கும் விருப்பமும், அஞ்சாமையும் புலப்படுவன காண்க.

அறத்தின்பால் அவன் கொண்ட உறுதியைவிட அண்ணன் பெருமையின்பால் அவன் கொண்ட மனப்பான்மை புலப்படுவதை இங்கு நாம் காண்கிறோம். கோள் - வலிமை; (பிங்.). பொதுமை பார்க்கின் - சாமானியமாகப் பார்க்கின் என்ற பொருளும் கொள்ள லாம்; (கிட்கிந்தா. 758).

பி - ம். 1. நம்மெதிர்.
2. கோளிலர்.
3. போக்கினர்.
4. அன்றிது தருமமென்னி ரயர்கின்றி ரறிவிலார்போல்; தருமமெண்ணி; அயர்கின்றிரறிவிலிர். 69

## அது கேட்ட சுக்கிரீவன் துணிவும் கூற்றும்

2844. அனையன இளவல் கூற
வருக்கன்சே யயர்கின் றனோர்
கனவுகண் டனனே யென்னக்
கதுமென வெழுந்து காணும்
வினையினி யுண்டே வல்லை
விளக்கின்வீழ் விட்டி லென்ன
மனையிடை யரக்கன் மார்பிற்
குதித்தும் நாம் வம்மினென்றான்.

இளவல் - இலக்குவன், அனையன - அத்தகைய சொற்களை, கூற - சொல்ல, அயர்கின்றான் - சோர்ந்து கிடந்தவனான, அருக்கன் சேய் - சூரிய குமாரனான சுக்கிரீவன், ஓர் கனவு கண்டனனே என்ன - ஒரு கனவு கண்டவனே என்று சொல்லுமாறு, கதும் என எழுந்து - சரேரென்று எழுந்து, வல்லை - விரைவாக, ‘விளக்கின் வீழ் விட்டில் என்ன - விளக்கிலே விழுகின்ற விட்டிற்பூச்சி என்று சொல்லுமாறு, மனை - பத்தினியாகிய பிராட்டியை, இடை - துன் புறுத்தல் செய்த, அரக்கன் - அரக்கனான இராவணன், மார்பில்- மார்பிலே, நாம் குதித்தும் - நாம் குதிப்போம்; வம்மின் -வாருங்கள்; காணும் வினை இனி உண்டோ - நாம் கருதும் காரியம் (இதுவன்றி) இனி (வேறு) உண்டோ?’ என்றான் - என்று (வானரர்களை நோக்கிக்) கூறினான்.

அயர்கின்றான் அருக்கன் சேய் என்றமையால், அநுமன் சொற்கேட்டு சுக்கிரீவன் உட்பட அங்கிருந்த அனைவரும் சோர்ந்திருந்தனர் என்பதாம். 'விளக்கில் வீழ் விட்டிலென்ன மனையிடையரக்கன்' என்றது, 'விளக்கில் வீழும் விட்டிலைப்போல் மனையாகிய பிராட்டியிடத்து அவசரப்பட்டு இடைதல் செய்வித்த அரக்கன்' என்பது பழையவுரை.

பி-ம். 1. அனையவனன்ன கூற; அருக்கன் சேயாகி நின்றேன்.

3. யுண்டோ வல்லை.

4. மனையுறையரக்கர்; குறிக்குநாம், குத்துமால், குத்துநாம். 70

2845. இலங்கையை யிடந்து வெங்க
ணிராக்கத ரென்கின் றாரைப்
பொலங்குழை மகளி ரோடும்
பானுகர் புதல்வ ரோடும்
குலங்களோ டடங்கக் கொன்று
கொடுந்தொழில் குறித்து நம்மேல்
விலங்குவா ரென்னிற் றேவர்
விண்ணையு நிலத்து வீழ்த்தும்.

(மேலும் சுக்கிரீவன்), 'இலங்கையை இடந்து - இலங்கைத் தீவைப் பெயர்த்து, வெம் கண் இராக்கதர் என்கின்றாரை - கொடிய கண்களையுடைய அரக்கர் என்றவரை, பொலம் குழை மகளிரோடும் - (அவர்களுடைய) பொன்னாலான குண்டலங்கள் பூண்ட பெண்பாலர்களோடும், பால் நுகர் புதல்வரோடும் - பால் பருகும் குழந்தைகளோடும், (அவர்கள் யாவரையும்) குலங்களோடு அடங்க கொன்று - அவர்களின் குலங்கள் முழுமையும் கொன்று, (பின்பு அவர்கள்) கொடு தொழில் குறித்து - நாம் செய்யும் கொடிய வினைகளுக்காக, நம் மேல் விலங்குவார் தேவர் என்னில் - நம்மீது தேவர்கள் (வந்து) குறுக்கிடுவர் என்றாலும், விண்ணையும் - (அத் தேவர்களுடைய) விண்ணுலகத்தையும், நிலத்து - பூமியில், வீழ்த்தும் - தள்ளுவோம்'.

இச் செய்யுள் சுக்கிரீவன் கூற்று. இடத்தல் - பெயர்த்தல், பானுகர் புதல்வர் - பச்சைக் குழந்தைகள். அடங்க - அடங்குமாறு எனினும் ஆம். விலங்குதல் - குறுக்கிடுதல்; தடுத்தலும் ஆம்.

'ஆறுகெட விலங்கிய வழலவி ராரிடை' (கலித். 2); 'விலங்குந் ரிங்கில்லை வென்வேலோய்' (புற. வெ. 12, 19). அரக்கர்க்காகத் தேவர் குறுக்கிடினும் அவருலகத்தைத் தகர்ப்போம் என்றனன்.

பி - ம். 2. அவருடைப் புதல்வரோடும்,

4. விலங்குவரென்னிற்; விலங்குவ தென்னிற்; விண்ணையு மண்ணில் விழ்த்தும். 71

## சுக்கிரீவன் செயல்

2846. அறங்கெடச் செய்து மென்ப
தமைந்தன மாகி னைய
புறங்கிடந் துழப்ப தென்னே
பொருதினிப் புவன மூன்றும்
கறங்கெனத் திரிந்து தேவர்
குலங்களைக் கட்டு மென்னு
மறங்கிளர் வயிரத் தோளா
னிலங்கைமேல் வாவ லுற்றான்.

மறம் கிளர் வயிரம் தோளான் - வீரம் விளங்குகின்ற வயிரம் போன்ற (வலிய) தோளை உடையனான சுக்கிரீவன், (இராமபிரானை நோக்கி), 'ஐய - ஐயனே! அறம் கெட செய்தும் என்பது - தருமத்தைக் கெடுத்துவிடுவோம் என்பதனில், அமைந்தனம் ஆகின் - நாம் அமைந்து விட்டோமானால், புறம் கிடந்து - வெளியிலே கிடந்து, உழப்பது என்னே - வருந்துவது ஏன்? இனி - இனிமேல், புவனம் மூன்றும் பொருது - உலகங்கள் மூன்றின்மீதும் போரிட்டு, கறங்கு என திரிந்து - காற்றாடி என்று சொல்லுமாறு திரிந்து, தேவர் குலங்களை கட்டும் - தேவ வமிசங்களைக் களைந்தெறிவோம்', என்னா - என்று சொல்லிக்கொண்டு, இலங்கைமேல் வாவல் உற்றான் - இலங்கைமீது தாவத் தொடங்கினான்.

இந்திரசித்து மாயா சீதையை வதைக்கத் தொடங்கும்போது, வானரர்கள் வீசிய கொள்ளிகளால் இலங்கை எரியத் தொடங்கியதும், இராமசரத்தால் கோபுரமிற்று வீழ்ந்த செய்தியும் கூறப்பெற்றன. அங்கிலையில் மாயா சீதையின் வதையும், அதனைக் கண்ட அநுமன் இராமபிரானிடம் கூறியனவும் பின் நிகழ்ந்தன; ஆகவே இந் நிகழ்ச்சிகளெல்லாம் இலங்கையின்

புறத்திலே (அருகிலே) நிகழ்ந்தவை; அங்கிருந்து சுக்கிரீவன் இலங்கையின்மீது வாவலுற்றான் என்க. 'அறங்கெடச் செய்தல், புவன மூன்றும் பொருதல், தேவர் குலங்களைக் கட்டல் ஆகியவை இலக்குவன் கூற்றினின்று சுக்கிரீவன் ஏற்றுக் கொண்டவையாம். உழப்பது - வருந்துவது, கறங்கு - காற்றாடி; 'கண்ணொடு மனஞ் சுழல் கறங்கு போலவன், மண்ணிடை விழுந்தனன் வானின் னும்பரார்' (அயோத்தி. 1115). கட்டல் - களை பிடுங்குதல்; பறித் தலும் ஆம். மறம் - வீரம்; (ஆரணிய. 492; 635). வாவல் - தாண்டுகை; (பிங்.).

பி - ம். 1. செய்துமென்றே; யறிந்தனமாகி; மாகிலைய.

2. உழைப்பதென்னிப் பொழுதிறைப்; உழைப்பதெண்ணிப்.

3. குலங்களும் கட்டும். 72

## அப்பொழுது அநுமன் மற்றொன்று அறிவித்தல்

2847. மற்றைய வீர ரெல்லா
மன்னனின் முன்னந் தாவி
எற்றுது மரக்கர் தம்மை
யில்லொடு மெடுத்தென் றேகல்
உற்றன ருறுத லோடு
முணர்த்துவ துளதென் றுன்னுச்
சொற்றன னநுமன் வஞ்ச
னயோத்திமேற் போன சூழ்ச்சி.

(சுக்கிரீவன் வாவலுற), மற்றைய - பிற, வீரர் எல்லாம் - வானர வீரர் யாவரும், 'மன்னனின் முன்னம் தாவி - எம் மன்னனான சுக்கிரீவனுக்கு முன்பே (இலங்கைமீது) தாவி, அரக்கர் தம்மை - அரக்கர்களை, இல்லொடும் எடுத்து - அவர்களின் வீடுகளோடும் தூக்கி, எற்றுதும் - எறிவோம்', என்று - என்று சொல்லிக் கொண்டு, ஏகல் உற்றனர் - செல்லத் தொடங்கினார்கள்; உறுதலோடும் - (அவ்வாறு அவர்கள்) தொடங்கினபோது, அநுமன் - அநுமன், 'உணர்த்துவது உளது என்று உன்னா - தெரிவிக்க வேண்டுவது (இன்னும்) இருக்கிறது' என்று எண்ணி, வஞ்சன் அயோத்திமேல் போன சூழ்ச்சி சொற்றனன் - வஞ்சகனான இந்திர

சித்து அயோத்திமீது (படையெடுத்துச்) சென்ற (அவன்) எண்ணத்தை (இராமபிரானிடம்) சொன்னான்.

இலக்குவன் சொற்கேட்டுச் சுக்கிரீவனும் வானரரும் இலங்கை மீது வாவலுற்றமையையும், அவர்களின் கடமையுணர்ச்சியையும் பக்தியையும் இச்செய்யுள் புலப்படுத்துகின்றது. இல் - மனைவியரும் ஆம். 'வஞ்சன்...சூழ்ச்சி' கவிக்கூற்று. சூழ்ச்சி - தந்திரமும் ஆம்; ஆனால் தந்திரமென்பது அப்பொழுது அநுமன் அறியாதாதலின், எண்ணம் என்று பொருள் கூறப்பெற்றது.

பி - ம். 1. முன்னைமாவி, முன்னம்வாரி.
2. எயிலொடு மெடுத்து; மெடுத்நின்றேகல்.
4. நியோனயோத்நிமேல். 73

## இது கேட்ட இராமபிரான் நிலை

2848. தாயருந் தம்பி மாருந்
தவம்புரி நகரஞ் சாரப்
போயின னென்ற மாற்றஞ்
செவித்துளை புகுத லோடும்
மேயின வடுவி னின்ற
வேதனை கனைய வெந்த
தீயிடைத் தணிந்த தென்னச்
சீதைபாற் றுயரந் தீர்ந்தான்.

' தாயரும் தம்பிமாரும் - தன் தாய்மார்களும் தம்பியரும், தவம் புரி நகரம் சார - தன் திரும்புகையை நோக்கித் தவம் புரிந்து கொண்டிருந்த (அயோத்தி) நகரத்தை அடைய, போயினன் - (இந்திரசித்து) போனான்', என்ற மாற்றம் செவி துளை புகுதலோடும் - என்ற சொல் தன் செவித் துவாரங்களுள் நுழைந்தவுடனே, மேயின வடுவின் நின்ற வேதனை - பொருந்தின புண் வாயில் நின்ற ஒரு துன்பம், கனைய வெந்த தீயிடை தணிந்தது என்ன - மிகவும் வெந்த நெருப்பிலே தணிந்துவிட்டது என்று சொல்லுமாறு, சீதை பால் துயரம் தீர்ந்தான் - சீதைபொருட்டுக் கொண்டிருந்த துன்பத்தினின்று விடுபட்டவனானான்.

வடு - புண் வாய்; 'தாழ் வடுப்புண்' (பு. வெ. 10, 11); 'வாளால் அறுத்துச் சுடினும்' என்ற பெருமாள் திருமொழிப் பகுதியால் சுடுதல் ஒரு சிகிச்சையாதல் இங்குக் கருதத்தக்கது. 'ஆணிக்காணி யெதிர்செலக் கடாயது' (சுந்தர. 1002) போல ஒரு மெய்ப்பாடு மற்றொன்றினால் தீர்ந்தது என்பதற்கு இஃது ஒரு சான்று என்க. 'மேயின னறிவு நின்ற வேதனை களைய வெந்த தீயிடை தணிந்ததென்ன' என்ற பாடங் கொண்டு, 'உலகத்திற் பொருந்தின ஒருவன் அறிவு கெடும்படி உடலிலே வந்த ஒரு வியாதியானது, அவனுடலைக் களைய வந்த தீயானது உடலேறப்பற்றினாலெப்படி அந்த வேதனை அதிகமாகி முன்னுள்ள நோய் தணியும்; அது ஒத்தது' என்று பழையவுரை பகர்கின்றது. கனைதல் - நெருங்குதல்; மிகுதலும் ஆம்; 'கனைதுளி சிதறென' (கலித். 16, 7); 'காமங் கனைந்தெழ' (பரிபா. 10, 63). பிராட்டி வெட்டுண்டாள் என்ற செய்தி கேட்டதும் 'துடித்தில னுயிர்ப்புமில்லன்' (2830) என்றபடி உணர்வை இழந்து நின்ற இராமன், இப்பொழுது புதுச் செய்தி கேட்டதும் முன் நின்ற துயரை இழந்தான் என்றனர். அடுத்த செய்யுளில் இராமபிரான் அப்பொழுது பெற்ற மெய்ப்பாடு கோபமும் நடுக்கமும் என்று கூறப்பெறுகிறது; ஆனால் அதன் பின் வரும் நான்கு பாடல்கள் அவன் துயர் நிலையையும் கவலையையும் காட்டுவதாக அமைகின்றன. இவற்றால் இராமபிரான் அப்பொழுது பலவகை மெய்ப்பாடுகளை ஒன்றன்மேலொன்றாகப் பெற்றனன் என்பது அறிதற்பாலது.

பி - ம். 1. தவம் புரிந்தோரும் சாரப்; சேரப்.

3. வடுவினுற்ற வேதனை; வடியினின்ற வேதனை; வேதனைக்கமைய வெந்த; வேதனைக்கிடையே வெந்த; மேயின வடியிலுற்ற வேதனை; வேதனையமைய வெய்ய.

4. தீயிடைக் குளித்ததென்ன; துன்பந் தீர்ந்தான். 74

2849. அழுந்திய பாலின் வெள்ளத் தாழிநின் றனந்தர் நீங்கி
எழுந்தன னென்னத் -துன்பக் கடலினின் றேறி யாருக்
கொழுந்துறு கோபத் தீயு நடுக்கமு மனத்தைக் கூட
உழுந்துருள் பொழுதுந் தாழா விரைவினன் மறுக்க
[முற்றான்.

பாலின் அழுந்திய வெள்ளத்து ஆழி நின்று - பாலினாலாகிய ஆழமான பெருக்கையுடைய கடலிலிருந்து, (திருமால்), அனந்தர் நீங்கி - (தன் யோக) நித்திரையினின்று நீங்கி, எழுந்தனன் என்ன - எழுந்தனன் என்று சொல்லும்படி, துன்பக் கடலின் நின்று ஏறி - (பிராட்டி வதையுண்டாள் என்ற செய்தி கேட்டதால் விளைந்த) துன்பமென்னும் கடலினின்று ஏறி வெளிவந்து, ஆறு - தணிதல் இல்லாத, கொழுந்து உறு கோபம் தீயும்-கொழுந்தினைக் கொண்ட கோபமாகிய தீயும், நடுக்கமும் - அதனால் உண்டான உடல் நடுக்கமும், மனத்தைகூட - அவன் மனத்திலே சேர, உழுந்து உருள் பொழுதும் தாழா விரைவினன் - ஓர் உழுந்து உருளுவதற்கு வேண்டும் சிறிது பொழுதுகூட ஓய்ந்திராத வேகத்தையுடைய இராமபிரான், மறுக்கம் உற்றான் - (அப்பொழுது) மனக்கலக்கம் கொண்டான்.

திருப்பாற்கடல் ஆழ்ந்த வெள்ளத்தை யுடையது; பால காண்டத்தில், திருவவதாரப் படலத்தில் தேவர்கள் திருப்பாற் கடலில் சென்று முறையிடத் திருமால் தோன்றி வரனளித்த வர லாறு இங்கு நினைவூட்டப் பெறுகின்றது. இயல்பாய்ப் பாற்கடலில் உறங்குபவன் உலகத்தில் துன்பம் நேருவதை அறிந்தவுடன் எழுந்து சிறிதும் தாழ்க்காமல் செயலில் ஈடுபடும் தன்மையை யுடையவன், இன்று துன்பக் கடலிலிருந்து எழுந்து செயலிற் படாமல் மறுக்கமடைந்தான் என்க. அனந்தர் - உறக்கம்; இங்கு இறைவன் கொள்ளும் யோக நித்திரையைக் குறித்தது. அனந்தர்க் குத் துன்பக்கடல். நடுக்கம், கோபத்தின் விளைவு. மறுக்கம் - கலக்கம். இச் செய்யுள் ஆராயத் தக்கது. உழுந்துருள் போழ் தின் மீள்தல்; 'உழுந்துருள் பொழுதின் மீள்வே னொருகண மேனுந் தாழேன்' (சீகாளத்திப். கண்ணப்பச். 105).

பி - ம். 3. தீயினேடுமுள்; தீயினடுக்கும்.
4. தாழாவிளையினன். 75

இராமபிரான் வருந்தியது

2850. தீருமிச் சீதை யோடு மென்கில தென்றன் றீமை
வேரொடு முடிப்ப தாக விளைந்தது வேறு மின்னும்
ஆரொடுந் தொடரு மென்ப தறிகிலே னிதனை யைய
பேரிட வவதி யுண்டோ வெம்பியர் பிழைக்கின் றாரோ.

(இராமபிரான் வீடணனை நோக்கி), 'ஐய - ஐயனே! என்றன் தீமை - என்னுடைய கொடுமை, இ சீதையோடு தீரும் என்கிலது - இந்தச் சீதையோடு ஒழிந்து போகும் என்று ஆகாமல், வேரொடும் முடிப்பதாக விளைந்தது - மூலத்தோடு ஒழிப்பதாக ஆகிவிட்டது; இன்னும் வேறு ஆரொடும் தொடரும் என்பது அறிகிலேன் - இன்னும் வேறு எவருடன் தொடரும் என்பதை யான் அறியவில்லை; இதனை பேரிட அவதி உண்டோ - இத் துன்பத்தைப் பெயர்த்துவிட ஒரு (கால) எல்லை உளதோ? எம்பியர் பிழைக்கின்றரோ - என் தம்பியர் (இத் தீமைக் காலத்திநின்று) தப்பிப் பிழைப்பரோ?

தீமை என்றது தீய காலத்தைச் சுட்டியது. வேர், இங்குத் தம்பியரையும் தாய்மாரையும் குறித்தது. பேரிட - பெயர்த்துவிட. இச் செய்யுள் இலக்குவனை, அன்றி, அநுமனை நோக்கிக் கூறினதாகவும் கூறுவர்.

பா - ம். 2. வேரோடு முளைப்பதாக; வேறுமென்று; வேறுமின்னம்,
3. அறிந்திலனதனை,
4. பேருறுமவதி; பேரிட வரியதுண்டோ; பேரிட வுலகுமுண்டோ. 76

2851. நினைவதன் முன்னஞ் செல்லு
மானத்தி னெடிது போனன்
வினையொரு கணத்தின் முற்றி
மீள்கின்றான் வினையேன் வந்த
மனைபொடி பட்ட தங்கு
மாண்டது தார மீண்டும்
எனையன தொடரு கின்ற
துணர்கிலே னிறப்புங் காணேன்.

(மேலும் அவன்), 'நினைவதன் முன்னம் நெடிது செல்லும் - நினைவுக்கு முன்னே வெகுதூரம் விரைந்து செல்லுகிற, மானத்தின் - விமானத்தின்மீதேறி, போனன் - போன இந்திரசித்து, ஒரு கணத்தின் - ஒரு கணத்திலே, வினை முற்றி - (தான் மேற்கொண்ட) காரியத்தை முடித்துக் கொண்டு, மீள்கின்றான் - திரும்பி விடுவான்; அங்கு - அயோத்தியில், வினையேன் வந்த மனை - கொடிய வினைகளை இயற்றிய நான் பிறந்த வீடு, பொடி பட்டது - தூளாயிற்று;

ஈண்டும் - இங்கும், தாரம் - மனைவி, மாண்டது - மாண்டனள்; எனையன - எவை, தொடருகின்ற உணர்கிலேன் - மேலே வரப் போகின்றன என்பதை என்னால் உணர முடியவில்லை; இறப்பும் காணேன் - சாவையும் நான் காணவில்லை.

நினைவின் முன் செல்லுதல்; மனோ வேகத்துக்கு விஞ்சிய விரைவுடன் செல்லுதல். மானம், விமானம் என்றதன் முதற் குறை. வந்த மனை - பிறந்த மனை. இறப்பும் காணேன்; (ஒப்பு): 'யானவியற்றே னிறக்கலாதேன்' (யுத்த. மாயா சனகப். 1608) மீள்கின்றாள்; காலவழுவமைதி.

பி - ம். 1. முன்பு செல்லு மானத்து னேடிது; னெடிது சென்றுன், நின்றுன், செல்வான்,

3. பொடிபட்ட நிங்கு; பட்டதாங்கு; மாண்டன தாரம்; மாண்டதன் சிதை மீண்டு,

4. தொடங்குமென்பது; தொடர்கின்ற துணர்கிலேன். 77

2852. தாதைக்குஞ் சடாயு வான
தந்தைக்குந் தமிய ளாய
சீதைக்குங் கூற்றங் காட்டித்
தீர்ந்தில தொருவன் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற
தாயர்க்கும் பிழைப் பில்லாத
காதற்றம் பியர்க்கு மூர்க்கு
நாட்டிற்குங் காட்டிற் றன்றே.

ஒருவன் தீமை - (பாதகத்தில்) ஒப்பற்றவனான என் தீமை, தாதைக்கும் - என் தந்தையான தசரதனுக்கும், சடாயுவான தந்தைக் கும் - சடாயுவான தந்தைக்கும், தமியளாய சீதைக்கும் - துணை யற்றுத் தனியாயிருந்த சீதைக்கும், கூற்றம் காட்டி - இயமனைத் தோற்றுவித்து, தீர்ந்திலது - (அதனோடு) ஒழியவில்லை; (இன்னும்), பேதைப் பெண் பிறந்து - அறியாமையையுடைய பெண்ணாகப் பிறந்து, பெற்ற தாயர்க்கும் - (என்னைப்) பெற்ற தாய்மார்க்கும், பிழைப்பு இல்லாத - குற்றமில்லாத, காதல் தம்பியர்க்கும் - அன்பு

நிறைந்த இளைய சகோதரருக்கும், ஊர்க்கும் - (என்) ஊரான அயோத்திக்கும், நாட்டிற்கும் - கோசல நாட்டிற்கும், காட்டிற்று - (அக் கூற்றத்தைத்) தோற்றுவித்து. அன்று, ஏ ; அசைகள்.

என் தீமை தன்னியல்பிலே தாதைக்கும், சடாயுவுக்கும், சீதைக்கும் கூற்றம் காட்டி, பெண்ணாகப் பிறந்து அவள் வாயிலாக, என் தாயர், தம்பியர், ஊர், நாடு இவற்றிற்கும் கூற்றம் காட்டியது என்கின்றான் இராமபிரான். இச் செய்யுட் பாடம் ஆராயத் தக்கது. 'பெண்பெற்றா யதனாற்பெற்றா யாரிவர்நின் பேறுபெற்றார்' என்று மாயா சனகப் படலத்தில் (1065) பிராட்டி தன்னை வெறுத்துக் கூறியதைக் காண்க. 'பேதைப் பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும்' என்பதற்குத் தாம் பேதைப் பெண்களாகத் தோன்றி எங்களைப் பெற்றெடுத்த தாயர்க்கும்' என்றும், கூறலும் ஆம்.

பி - ம். 1. சடாயுவான தாதைக்கும்.
2. காட்டித் தவிர்ந்திலது ; காட்டத் தீர்கிலது.
3. பேதைக்கன்பெழுந்து பெற்ற தாயர்க்கும்.
4. நாட்டுக்கும்.

76

2853. உற்றதொன் றுணர கில்லா
ருணர்ந்துவந் துருத்தா ரேனும்
வெற்றிவெம் பாசம் வீசி
விசித்தவன் கொன்று வீழ்த்தால்
மற்றைவெம் புள்ளின் வேந்தன்
வருகிலன் மருத்து நல்கக்
கொற்றமா ருதியங் கில்லை
யாருயிர் கொடுக்கற் பாலார்.

"உற்றது ஒன்று உணர கில்லார் - நடந்த எதையும் அறியும் ஆற்றலற்றவராகிய பரத சத்துருக்கனர், உணர்ந்து வந்து - (நடந்தவற்றை) அறிந்து வந்து, உருத்தாரேனும் - (இந்திரசித்தின் மீது) கோபித்தார் என்றாலும், அவன் - அந்த இந்திரசித்து, வெற்றி வெம் பாசம் - (தனக்கு) வெற்றியைத் தருகிற நாக பாசத்தை, வீசி விசித்து கொன்று வீழ்த்தால் - வீசிக் கட்டிக்

கொன்று தள்ளினல், வெம் புள்ளின் வேந்தன் - (அச்சமயத்தில்) கொடிய பறவைகளின் மன்னனுன கருடன், வருகிலன் - தோன்ற மாட்டானே! மருந்து நல்க - (சஞ்சீவி) மருந்தை அளிக்க, கொற்ற மாருதி அங்கு இல்லை - வெற்றியையுடைய மாருதி அங்கில்லையே! உயிர் கொடுக்கற்பாலார் யார் - (அவர்களுக்கு) இறந்த உயிரை (மீட்டுக்) கொடுக்கத்தக்கவர் (வேறு) யார் உளர்? மற்று, ஐ அசைகள்.

உணரகில்லார்; கில், ஆற்றலுணர்த்தும் இடைநிலை. உற்றது - இலங்கையில் நடந்தனவும், பிறகு இந்திரசித்து அயோத்திக்குச் சென்றதுமானவை. உருத்தல் - கோபித்தல்; இங்குப் போரிடுதல். பாசம் - நாகபாசம். பின்பு கருடனையும் அநுமனையும் இராமபிரான் நினைத்தலால் பாசம் என்ற சொல்லால் பிரமாத்திரத்தையும் குறித்தவனுகும். புள்ளின் வேந்தன் - கருடாழ்வான்; நாகபாசப்படலம் காண்க. மருந்து - சஞ்சீவி; மருத்துமலைப் படலம் காண்க. 'அனுமனுமுளனே நும்பால்' என்று முன் பிராட்டி அரற்றியது இங்கு நினைக்கற்பாலதாம் (யுத்த. 1611).

பி - ம். 1. உணர்கிலாதாரறிந்து.
2. வெய்யவன் கொன்று.
3. மற்றையவெம்.
4. மாருதியுமாங் கில்லை. 79

## இராமபிரான் அயோத்தி செல்ல எண்ணியது

2854. மாகமா நகரஞ் சார
வல்லையின் வயிரத் தோளாய்
ஏகுவா னுபாய முண்டே
லியம்புதி நின்ற வெல்லாம்
சாகமற் றிலங்கைப் போருந்
தவிர்கவச் சமுக்கன் கண்கள்
காகமுண் டதற்பின் மீண்டு
முடிப்பனென் கருத்தை யென்ருன்.

'வயிரம் தோளாய் - வயிரம் போன்ற தோள்களையுடைய வனே ? மாக மா நகரம் - பெரிய அயோத்தி நகரத்தை, வல்லையின் சார - விரைவில் அடைய, ஏகுவான் - செல்வதற்கு, உபாயம் உண்டேல் - வழியுண்டானால், இயம்புதி - சொல்வாயாக ; நின்ற எல்லாம் சாக - இனி யான் நடத்தவேண்டி எஞ்சி நின்ற எல்லாம் அழியட்டும் ; இலங்கை போரும் தவிர்க - இலங்கைமீது யாம் தொடுத்த போரும் நீங்கட்டும் ; அ சழக்கன் - அந்தத் தீயவனை இந்திரசித்தினது, கண்கள் - கண்களை, காகம் உண்டதற்பின் - காகங்கள் தோண்டி எடுத்து உண்டபிறகு, மீண்டு - இங்கே திரும்பிவந்து, என் கருத்தை எல்லாம் முடிப்பன் - என் எண்ணங் கள் யாவற்றையும் செய்து முடிப்பேன்.

குகன், பரதன், வசிட்டன் ஆகியோர் வேண்டவும் பதினன்கு ஆண்டு முடியுமுன் அயோத்திக்குத் திரும்ப இசையாதவனும், வன வாச காலத்தில் நண்பர்களின் நகரங்களிலும் புக விரும்பாதவனு மான இராமபிரான், இந்திரசித்து செய்த மாய வஞ்சனையால் மருண்டு உடனே நகருக்குச் செல்ல எண்ணியதைக் காணும்போது, அப்பெருமான் நிலையைக்கண்டு நாம் இரங்கவே வேண்டி வருகிறது. வயிரத்தோளாய் என்றது வீடணனை நோக்கியே கூறியதாகக் கொள்ளப்பெற்றது ; அநுமனிடம் கூறியதாகவும் கொள்ளலாம். நின்றவெல்லாம் சாக'; உலகில் நின்றனவெல்லாம் அழிக, என்ற லும் ஆம். சழக்கன் - தீயவன் ; 'சழக்கனே னுனைச் சார்ந்திலேன்' (திருவாச. 30-2). கண்களைக் காகமுண்ணல் ; ஆரணிய. 449 ; சுந்தர. 621, 666 ; சூளா. 15 ; தக்க. 562. வல்லையின் என்றதற்கு நீ வல்லவனு வாயாயின் என்று பொருள்கொண்டு, 'சார வல்லையின், வயிரத்தோளாய், ஏகுவா னுபாய முண்டே லியம்புதி' என்றதை இராமபிரான் அநுமனை நோக்கியே வினவினன் என்றும், அதற்கு விடையாகவே 'அக்கணத்தநுமன்' என்ற செய்யுளில் உள்ள செய்தி அமைந்தது எனக் கொள்ளலும் ஆம் ; ஆனல் முன் செய்யுளில் மாருதியைப் படர்க்கையில் வைத்ததால், நடந்த நிகழ்ச்சிகளால் மறுகிக் கிடக்கும் அவனை வினவுவதில், நிதானம் தவருமல் நின்றவனும், மந்திரத்திற்கு உரியவனுமான வீடணனை விளித்ததாகவே கொள்ளப் பெற்றது.

பி - ம். 1. மாகவாகாயஞ் செல்ல ; மாகவானகரஞ் செல்ல ; வல்லிசை வயிரத் தோளாய்.

2. நின்றதெல்லாஞ்.

## இலக்குவன் கூற்று

2855. அவ்விடத் திளவ லைய பரதனை யமரிற் ருக்க
எவ்விடற் குரியான் போன விந்திரசித்தே யன்று
தெவ்விடத் தமையின் மும்மை யுலகமுந் தீந்த ருவோ
வெவ்விடர்க் கடலின் வைகல் கேளென விளம்ப லுற்ருன்.

அவ்விடத்து - அப்பொழுது, இளவல் - இலக்குவன் (இராமபிரானை நோக்கி), 'ஐய - ஐயனே! பரதனை அமரில் தாக்க - பரதனைப் போரில் எதிர்க்க, போன இந்திரசித்து - அயோத்திக்குச் சென்ற இந்திரசித்து, எவ்விடற்கு உரியானே அன்று - அம்புகளை விடுதற்கு உரியவனே அல்லன்; (அப்பரதன்), தெவ் இடத்து அமையின் - பகையிடத்துப் பொருந்துவாளுயின், மும்மை உலகமும் - மூன்று உலகங்களும், தீந்து - நெருப்புப் பட்டு, அருவோ - அற்றுப் போய்விடாவோ? வெம்மை இடர் கடலின் வைகல் - (ஆதலின்), கொடிய துன்பக் கடலுள் தங்கவேண்டா; கேள் - இன்னும் நான் கூறுவதைக் கேட்பாயாக' என - என்று கூறி, விளம்பல் உற்ருன் - பேசத் தொடங்கினுன்.

இதுவும் அடுத்த செய்யுளும் பரதன் ஆற்றலை இலக்குவன் இராமபிரானுக்குக் கூறி, அவன் அச்சத்தைத் தீர்க்க உதவுவனவாக அமைந்துள்ளன. எவ் விடல் - அம்பு தூண்டல்; 'எவ்விடத் துணிக்க' (கிட்கிந்தா. 236 உரை காண்க). தெவ் - பகைமை; இச்செய்யுள் கிட்கிந்தா. 236-ஆம் செய்யுளை ஒத்து அமைந்திருத்தல் காண்க. 'தெவ்விடத்தேவரே' என்று பாடங்கொண்டு, தெவ் இடத்து ஏவரே எனப் பதப் பிரிவு செய்து, 'சத்துராதிகள் இந்தப் பூமியிலே யார்தான் உண்டென்று வினு' என்பது பழையவுரை.

பி - ம். 1. அமரினுர்க்க; அமரினேர்க, அமரின் வெல்ல.
2. இந்திரசித்தேயாகில், இந்திரசித்தேவென்று.
3. தெவ்விடக் கிமைப்பின்; தெவ்விடந்தேவரே. 81

2856. தீக்கொண்ட வஞ்சன் வீசத்
திசைமுகன் பாசந் தீண்டி
வீக்குண்டு வீழ யானே
பரதனும் வெய்ய கூற்றைக்
கூய்க்கொண்டு குத்துண் டன்னன்
குலத்தொடு நிலத்த னாதல்
போய்க்கண்டு கோடி யன்றே
யென்றனன் புழுங்கு கின்றான்.

புழுங்குகின்றான் - மனம் மிகவும் நொந்து நின்றவனான இலக்குவன், (மேலும், இராமபிரானிடம்), ' தீ கொண்ட வஞ்சன் - தீய எண்ணங்களைக் கொண்ட வஞ்சனைகள் இயற்றுகின்ற இந்திர சித்து, திசை முகன் பாசம் - பிரமாஸ்திரத்தை, வீச - எறிய, தீண்டி - (அது என்னைத்) தீண்டி, வீக்குண்டு வீழ - கட்டப்பெற்று விழ, பரதனும் யானே - (இலக்குவனாகிய நான்) பரதாழ்வானவேனோ? (அல்லன் என்றபடி), வெய்ய கூற்றை - கொடிய இயமனை, கூய்க்கொண்டு - (வா என்றழைத்துக்) கூவிக்கொண்டு, குத்துண்டு - அவனால் குத்தப்பெற்று, அன்னான் - அந்த இந்திர சித்து, குலத்தொடு - பரிவாரங்களோடு, நிலத்தன் ஆதல் - தரையில் உயிர் துறந்து வீழ்பவனாக ஆதலை, போய் - நீயே சென்று, கண்டு கோடி - கண்டு கொள்வாயாக'; என்றனன் - என்று சொன்னான். அன்று, ஏ : அசைகள்.

பாசம் தீண்டி வீச என்றும் அன்வயிக்கலாம். யானே பரதனும் என்றமையால், பாசத்துக்கு உட்படாத ஆற்றலுடையவன் பரதன் என்பதாயிற்று. கூற்றத்தைக் கூவுதல்; 'கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்' (குறள். 894); நிலத்தனாதல் - மண்ணோடு மண்ணாதல் என்ற பொருளும் தொனித்தல் காண்க. இங்கு இந்திர சித்தைக் கூவி அழைத்தவனாகவும், பரதனைக் கூற்றாகவும் கொண்டார்.

பி - ம். 1. கஞ்சத் திசைமுகன்.
2. வீக்கொண்டு விழ்க; பரதனும் வெய்யக்.
3. கொடுத்துண்டன்றான்.
4. கோடியென்றான் மனமது புழுங்குகின்றான். 02

## அநுமன் வேண்டுகோள்

2857. அக்கணத் தநும னின்ரு னையவென் ருேளி னுகக்
கைத்துணைத் தலத்தே யாக வேறுதிர் காற்றுந் தாழ
விக்கணத் தயோத்திமூதூ ரெய்துவெ னிடமுண் டென்னில்
திக்கனைத் தினிலுஞ் செல்வெ னியானே போய்ப் பகையுந்
[தீர்வென்.

(இவ்வாறு இலக்குவன் கூற), அ கணத்து - அப்பொழுது, நின்ருன் - (அங்கு) நின்றிருந்தவனுன, அநுமன் - அநுமன், (இராமபிரானை நோக்கி), 'ஐய - ஐயனே! என் தோளின் ஆக - என் தோள்களின் மீதாவது, துணை கை தலத்தே ஆக - இரண்டு கைத்தலங்களிலாவது, ஏறுதிர் - (நீவிர் இருவிரும்) ஏறுவீர்களாக; காற்றும் தாழ - காற்றின் விரைவும் பிந்த, அயோத்தி மூதூர் - அயோத்தி என்னும் பழைய நகரை, இ கணத்து - இந்தக் கணத்திலேயே, எய்துவென் - (யான்) அடைவேன்; இடம் உண்டு என்னில் - சந்தர்ப்பம் இருக்கும் என்ருல், திக்கு அனைத்தினிலும் செல்வென் - எல்லாத் திசைகளிலும் செல்லுவேன்; (அல்லது), யானே போய் பகையும் தீர்வென் - யான் மட்டுமே சென்று பகைவனையும் ஒழிப்பேன்.

'ஏகுவானுபாய முண்டே லியம்புதி' (80) என்றதற்கு விடையாக அநுமன் கூறுவது இச்செய்யுள். துணை இரண்டு. ஏறுதிர் என்று பன்மை இராமபிரானையும், இலக்குவனையும் நோக்கிக் கூறியது. காற்றுந் தாழ; வேகத்துக்குக் காற்றைக் காட்டுதல் மரபு; 'கடுகிய தூதருங் காலிற் காலிற் சென்று' (பால. 821); ஆரணிய. 795, 975; முதலியனவும் காண்க. இடம் - சந்தர்ப்பம்; 'நாடொறு மிடம்பெருமல்' (திருவால. 35, 8).

பி - ம். 1. ருேளினுதல், ருேளிலாக, ருேளின்மீது.
2. தனுவியினேடும், தனுவைத்தைய; தலந்தேயாதல்; காலந்தாழாது
3. எய்தினென்.
4. செல்வேன் யானே.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எழுபது வெள்ளத் தோடு மிலங்கையை யிடந்தென் ருேண்மேல்
தழுவுற வைத்தின் றேகென் றுரைத்தியேற் சமைவென் றக்கோய்
பொழுதிறை தாழ்ப்ப தென்னே புட்பகம் போதன் முன்னங்
குழுவொடுங் கொண்டு போவென் கணத்தொடு குதிப்பென் [கூற்றின்.

2858. கொல்லவந் தானை நீதி
கூறினென் விலக்கிக் கொள்வான்
சொல்லவுஞ் சொல்லி நின்றேன்
கொன்றபின் றுன்ப மென்னை
வெல்லவுந் தரையின் வீழ்வுற்
றுணர்ந்திலென் விரைந்து போனுன்
இல்லையென் றுளதேற் றீயோன்
பிழைக்குமோ விழுக்க முற்றேன்.

'கொல்ல வந்தானை - பிராட்டியைக் கொல்ல வந்த இந்திர சித்தை, விலக்கி - அச் செயலினின்று விலக்கி, கொள்வான் - என் பக்கம் திருப்பிக் கொள்ளும் பொருட்டு, நீதி கூறினென் - நன்னெறி களை எடுத்துக் கூறினேன்; சொல்லவும் சொல்லி நின்றேன் - இதமான மொழிகளைப் பேசிக்கொண்டும் நின்றேன்; கொன்ற பின் - அவன் அவரைக் கொன்றபிறகு, துன்பம் என்னை வெல்லவும் - துன்பம் என்னைத் தன் வயப்படுத்தவும், தரையின் வீழ்வுற்று உணர்ந்திலென் - நான் தரையில் விழுந்து உணர்ச்சியை உணர மாட்டாதவனுனேன்; விரைந்து போனுன் - அவன் மிக விரைந்து சென்று விட்டான்; இழுக்கம் உற்றேன் - (நான்) தவறினேன்; இல்லை என்று உளதேல் - (நான் அவ்வாறு இழுக்கமுற்று) இல்லை யென்றிருந்திருக்குமாயின், தீயோன் பிழைக்குமோ - அக் கொடி யோன் உயிரோடு பிழைத்துப் போயிருப்பானே ?

இச் செய்யுளில் இந்திரசித்தைத் தான் கொல்லாமல் விட்ட தற்குக் காரணத்தைக் கூறுகின்ருன். இழுக்கமுற்ருன் என்று பாடங்கொண்டு, இந்திரசித்து என்று பொருள் காணலும் அமை யும். இல்லையென்றுளதேல்; 'நான் வீழ்வுற்றுணர்ந்திலேன்' என்றது இல்லாமலிருந்திருக்குமாயின், எனக் கொள்க.

பி - ம். 2. சொல்லலுஞ் ; றுன்ப முற்றென்.

3. வெல்லவெந்நுரையின்.

4. இல்லையென்றுளனேற் ; இழுக்கமுற்றேன். 84

2859. மனத்தின்முன் செல்லு மானம்
போயது வழிய தாக
நினைப்பின்மு னயோத்தி யெய்தி
வருநெறி பார்த்து நிற்பென்
இனிச்சில தாழ்ப்ப தென்னே
யேறுதி ரிரண்டு தோளும்
புனத்துழாய் மாலை மார்பீர்
புட்பகம் போதன் முன்னம்.

'புனம் துழாய் மாலை மார்பீர் - புனத்தில் விளைகின்ற திருத்துழாய் மாலைகளை அணிந்த மார்புகளை உடையவர்களே! மனத்தின் முன் செல்லும் மானம் - மனம் செல்வதற்கு முன்னே செல்லும் விரைவினையுடைய (இந்திரசித்தின்) விமானம், போயது - சென்ற வழியே, வழியது ஆக - யான் செல்வதற்கு உரிய வழியாக, (யான்) நினைப்பின் முன் - எண்ணுதற்கு முன்பாகவே, அயோத்தி எய்தி - அயோத்தியை அடைந்து, வரும் நெறி - அவன் வரும் வழியை, பார்த்து - எதிர் நோக்கி, நிற்பென் - நிற்பேன்; இனி சில தாழ்ப்பது என்னே - இனிமேல் சிறிது நேரம் தாழ்ப்பது எதன் பொருட்டு? புட்பகம் போதல் முன்னம் - புட்பக விமானம் அங்குப் போதலுக்கு முன்பாக, இரண்டு தோளும் ஏறுதிர் - (என்) இரண்டு தோள்களில் (நீவிர் இருவீரும்) ஏறுங்கள்.

இந்திரசித்து புட்பகம் மீது வந்தனன் என்பது இப் படலம் 43-ஆம் செய்யுளாலும் காண்க. மனத்தின் முன் செல்லுதல்; 'மனத்திற் செல்லு மொய்விசும் போடமாக' (அயோத்தி. 1064); 'உதித்தெழு மூதையுள்ள மென்றிவை யுருவச் செல்லும்' (ஆரணிய. 795). இராமபிரான் துழாய் மாலையன்; (அயோத்தி. 258, 275).

பி - ம் 1. போனது வழியதாக ; வழியதாக்கி.

2. னயோத்தி புக்கு ; பார்த்து நிற்பின்.

3. தாழ்ப்பதென்னை ; சில பகர்வதென்னை. 85

## வீடணனின் ஐயமும் துணிவும்

2860. ஏறுதி ரென்ன வீர
ரெழுதலு மிறைஞ்சி யீண்டுக்
கூறுவ துளது துன்பங்
கோளுறக் குலுங்கி யுள்ளம்
தேறுவ தரிது செய்கை
மயங்கினன் றிகைத்து நின்றேன்
ஆறின னதனை யைய
மாயமென் றயிர்க்கின் றேனுல்.

ஏறுதிர் என்ன - (அநுமன் தன் தோள்களின்மீது) ஏறி யருளுங்கள என்று சொன்னதைக் கேட்டு, வீரர் எழுதலும் - வீரர்களான இராமலக்ஷ்மணர்கள் (அதன் பொருட்டு) எழவும், (வீடணன்), இறைஞ்சி - அவர்களை வணங்கி, 'ஈண்டு கூறுவது உளது - இங்கு யான் கூற வேண்டுவது இருக்கின்றது; துன்பம் கோள் உற - துன்பம் என்னைப் பிடித்துக் கொள்ள, குலுங்கி - (மனம்) கலங்கி, உள்ளம் தேறுவது அரிது - மனம் தெளிவது அரிது; (ஆதலால், அந் நிலையில் இருந்த யான்), செய்கை மயங்கினன் திகைத்து நின்றேன் - செயல் (இன்னதென்று அறியாமல்) மயங்கி, திகைப்படைந்து நின்றேன்; ஐய! ஐயனே! அதனை ஆறினன் - அந்த மயக்க நிலையினின்று அமைதி பெற்றேன்; மாயம் என்று அயிர்க்கின்றேன் - (நடந்தவையெல்லாம்) மாயம் என்று ஐயுறுகின்றேன்; ஆல், அசை.

இது முதல் மூன்று செய்யுட்கள் வீடணன் கூற்று; 88-ஆவது செய்யுளில், 'வீடணன் விளம்ப' என்று கூறியது காண்க. துன்பத்துள் ஆழ்ந்த உள்ளத்தின் நிலை இங்கு நன்கு விவரிக்கப் பெற்றுளளது; அந்நிலை மாறியபின் உண்மை புலப்பட்டமையும் இங்குக் கூறப்பெற்றமை குறிக்கத் தக்கது. இங்கு வீடணன் முன் மாயமான் கண்ட இலக்குவன், 'மாயம்மென லன்றி மனக்கொளவே ஏயும்'; என்றதை நினைப்பூட்டுகின்றது. வீடணன் ஐயுற்றதற்குக் காரணம் அடுத்த செய்யுளில் கூறப் பெறுவது காண்க.

ப-ம். 1. ஏறுதுமென்னு.
3. தேறுதலரிது; தேறுதலருமை; மறந்தனன்.
4. ஆறினனிதனையையா.

2861. பத்தினி தன்னைத் தீண்டிப்
பாதகன் படுத்த போது
முத்திறத் துலகும் வெந்து
சாம்பராய் முடியு மன்றே
அத்திற மான தேனு
மயோத்திமேற் போன தன்மை
சித்திர மிதனை யெல்லாந்
தெரியலாஞ் சிறிது போழ்தின்.

'பத்தினி தன்னை - கற்புக்கரசியாகிய பிராட்டியை, தீண்டி - கையினால் தொட்டு, பாதகன் - பாவியான இந்திரசித்து, படுத்த போது - கொன்ற போது, மு திறத்து உலகும் - மூன்று வகையான உலகங்களும், வெந்து சாம்பராய் முடியும் அன்றே - வெந்து சாம் பாராக முடிவடையும் அன்றோ? அத்திறம் ஆன தேனும் - அவ் வகையில் நடந்தது என்றாலும், அயோத்திமேல் போன தன்மை - அயோத்திமீது அவன் சென்றான் என்ற வார்த்தை, சித்திரம் - பொய்; இதனை எல்லாம் - இவற்றை யெல்லாம், சிறிது போழ்தின் தெரியல் ஆம் - சிறிது நேரத்தில் நாம் அறிதல் கூடும்.

பிராட்டியைப் பத்தினி என்றல்; ஆரணிய. 889; சுந்தர. 321, 404, 1269; பத்தினியைத் தீண்டலினால் உலகுக்கு விளையும் தீமைகள்: 'தீண்டில னென்னும் வாய்மை திசைமுகன் செய்த முட்டை, கீண்டில தனந்த னுச்சி கிழிந்தில தெழுந்து வேலை, மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதஞ் செய்கை, மாண்டில வென்னுந் தன்மை வாய்மையா னுணர்தி மன்னோ' (சுந்தர. 1277). சித்திரம் - பொய்; 'சித்திரமிக் கனவில் வாழ்வென' (கந்தரலங். 50); ஆச்சரியமும் ஆம்; 'சித்திரமிங் கிதுவொப்ப தெங்குண்டு' (பால. 773): சித்திரம் - தந்திரமும் ஆம். தன்மை - வார்த்தை.

பி - ம். 1. பாதகன் கொன்றபோது.
2. சாம்பராய் முற்றுமன்றே.
3. போன வார்த்தை.
4. மதனையெல்லாந்; தெரிக்கலான் சிறிது போழ்தில்.

## வீடணன் உண்மையறியச் செல்லுதல்

2862. இமையிடை யாக யான்போ
யேந்திழை யிருக்கை யெய்தி
அமைவுற நோக்கி யுற்ற
தறிந்துவந் தறைந்த பின்னர்ச்
சமைவது செய்வ தென்று
விடணன் விளம்பத் தக்க
தமைகவென் றிராமன் சொன்னு
னந்தரத் தவனும் சென்ருன்.

'இமை இடை ஆக - கணப் பொழுதில், யான் ஏந்திழை இருக்கை போய் எய்தி - யான் ஏந்திழையாளான பிராட்டி இருக்கும் இடத்தைச் சென்று அடைந்து, அமைவு உற - நிதானமாக, நோக்கி - பார்த்து, உற்றது அறிந்து வந்து - நடந்ததைத் தெரிந்து கொண்டு திரும்பி, அறைந்த பின்னர் - கூறிய பிறகு, சமைவது - ஏற்றதை, செய்வது என்று - செய்வது (ஆகும்)' என்று, வீடணன் விளம்ப - வீடணன் சொல்ல, இராமன் 'தக்கது அமைக என்று சொன்னுன் - இராமபிரானும் (செய்யத் தக்கது) ஆவதாகுக' என்று கூறினுன்; அவனும் அந்தரத்து சென்ருன் - வீடணனும் வான வழியே சென்ருன்.

இடை - சமயம்; 'உடையோர் போல விடையின்று குறுகி' (புறநா. 54). இமை - கண்ணிமை தானுக இயங்கும் நேரம்; கண நேரம். ஏந்திழை - அழகிய ஆபரணம் அணியும் பெண். அமைவுற நோக்குதல் - ஏற்ற முறையில் பார்த்தல் எனினும் ஆம். சமைவது - பொருந்துவது; (யுத்த. 920).

பி - ம். 1. இடையிடைப் பொழுதின்; இமையிடையாகி யான் சென்றேந்திழை.
2. தமைந்த பின்னர்.
4. தவனுஞ் சென்ருன்.

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

கண்டுதன் கருத்திற்கொண்ட கவலையைக் கடந்தங் காவி
உண்டெனத் தெளிந்து தேறும் வீடண னுற்ற தெல்லாம்
கொண்டுதன் னகத்தி லுன்னிக் குலவிய வுவகை தூண்டத்
தொண்டைவாய் மயிலன் னாளை மனத்தொடுந் தொழுது
[நின்றான்'

**வீடணன் கண்ட பிராட்டியின் நிலை**

2863. வண்டின துருவங் கொண்டான்
மானவன் மனத்திற் போனான்
தண்டலை யிருக்கை தன்னைப்
பொருக்கெனச் சார்ந்து தானே
கண்டன னென்ப மன்னோ
கண்களாற் கருத்தா லாவி
உண்டிலை யென்னச் செய்த
வோவிய மொக்கின் றாளை.

(தான் சொல்லியவாறே, வீடணன்), வண்டினது உருவம் கொண்டான் - ஒரு வண்டின உருவத்தை ஏற்று, மானவன் - இராமபிரானுடைய, மனத்தின் - மனத்தினைப் போல, போனான் - சென்று, தண்டலை இருக்கை தன்னை - அசோகவனம் என்ற சோலையில் அப் பிராட்டி இருக்கும் இடத்தை, பொருக்கென - சரேரென்று, சார்ந்து - அடைந்து, ஆவி உண்டு இலை என்ன - உயிர் உண்டோ இல்லையோ என்னும்படி, செய்த - செய்யப் பெற்ற, ஓவியம் ஒக்கின்றாளை - சித்திரம் ஒக்கின்ற பிராட்டியை, கண்களால் கருத்தால் தானே கண்டனன் - தன் கண்களாலும் கருத்தினாலும் தானே பார்த்தனன். என்ப, மன், ஓ - அசைகள்.

மானவன் - பெருமை பொருந்தியவன் ; இராமபிரானை மானவன் என்றல் ; பால. 785 ; அயோத்தி. 301 ; ஆரணிய. 1187 ; கிட்கிந்தா. 78 ; சுந்தர. 692. இங்கு இராமன் மனம் வீடணனுக்கு உவமை ; அவன் செலவுக்கு உவமையாகவும் கொள்வர். அநுமன் இலங்கையுட் புகுந்து போனதை, 'பொறிவரி வண்டிற் போனான்' என்று உவமையாகக் கூறப் பெற்றது இங்கு நினைதற்குரியது. தண்டலை - சோலை ; இங்கு அசோகவனம். கண்களாற் காண்டல் ; "கண்டனென்......கண்களால்' (சுந்தர. 216 ; 630 ; 1269). கருத்

தால் காண்டல் - கண்கள் புறத்தையும் கருத்தின் அகத்தையும் காட்டுமாதலின் பிராட்டியின் உருவையும் அவள் மனநிலையையும் கண்டமையை இவ்வாறு கூறுகின்றனர். உண்டிலை யென்ன; ஆவி உண்டோ இல்லையோ என்று ஐயுறும் நிலையில் அமைந்தமை கூறியது. பிராட்டிக்கு ஓவியம்; பால. 606; ஆரணிய. 41; சுந்தர. 340.

பி - ம். 1. வண்டன; வானவன் மனத்திற்.
3. கருத்திலாவி.
4. யென்ன நின்ற. 89

2864. தீர்ப்பது துன்பம் யானென்
னுயிரொடென் றுணர்ந்த சிந்தை
பேர்ப்பன வின்சொ லாளத்
திரிசடை பேசப் பேர்ந்தாள்
கார்ப்பெரு மேகம் வந்து
கடையுகங் கலந்த தன்ன
ஆர்ப்பொலி யமுத மாக
வாருயி ராற்றி னளை.

'யான் என் துன்பம் தீர்ப்பது உயிரொடு என்று உணர்ந்த - யான் என்னுடைய துன்பத்தைத் தீர்ப்பது (என்) உயிரைத் தீர்ப்பதோடுதான் என்று நினைத்த, சிந்தை - மனத்தை, பேர்ப்பன - மாற்றுவனவான, இன் சொலாள் - இனிய சொற்களைப் பேசுபவளாகிய, அ திரிசடை - அந்தத் திரிசடையானவள், பேச - தன்னிடம் பேச, பேர்ந்தாள் - (அத்துயர மனத்தை) மாற்றிக் கொண்டு, கடை யுகம் - கடைசி யுகத்தில், கார் பெரு மேகம் வந்து - கரிய பெரிய மேகம் வந்து, கலந்தது அன்ன - ஒன்று கூடியது போன்ற, ஆர்ப்பு ஒலி - (வானரர்கள் இட்ட) பெருமுழக்கமான ஒலி, அமுதமாக - (தனக்கு) அமுதமாக அமைய, ஆருயிர் ஆற்றினளை - தன் அரிய உயிரைச் சாந்தப்படுத்திய (பிராட்டியை).

இச் செய்யுள் சீதை களங்காண் படலச் செய்தியைத் தன்கட் கொண்டு கூறுவதாம். பிரமாத்திரத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவனைக் கண்டு மூர்ச்சித்த இராமபிரானை, இராவணன் ஏவலினால் வானத்தில் புட்பக விமானத்தில் வந்து கண்ட தேவி, தன் உயிரைவிடத் துணியத் திரிசடை நன்மொழிகளால் மாற்றிய செய்தியை இச் செய்யுளின் முதலிரண்டடிகளால் கூறி, இவ்வாறு

தன் மனம் மாறிய நிலையில், மருத்து மலையின் வருகையால் இறந்தவர் யாவரும் எழ, அதைக் கண்ட வானரர்கள் எழுப்பிய ஆர்ப்பொலி (களியாட்டுப். 18, 19) பிராட்டியின் செவிகளுள் அமுதமாக மாறிற்று என்பது இங்குக் கூறப்பெற்றது. திரிசடை இன்சொலாள் ; ' இன் சொலால் திருந்தினாள் ' (சுந்தர. 359). கார்ப் பெரு......கலந்தென்ன என்றது வானரரின் ஆர்ப்பொலியைக் குறித்தது. இச்செய்யுள் முன் செய்யுளிலுள்ள ' கண்டனன் ' என்றதோடு இயைந்து முடிவது காண்க.

பி-ம். 1. யானென்றுயிரோ ; உணர்ந்து சிந்தை.
2. போர்ப்பனசெஞ், பேர்ப்பனசெஞ் : சொலன்னே ; போந்தாள்.
3. கலந்ததென்ன, கலந்தவந்த, கலந்த பின்னர். 90

## வீடணன் உண்மை காண்டல்

2865. வஞ்சனை யென்ப துன்னி
வானுய ருவகை வைகும்
நெஞ்சின னாகி யுள்ளந்
தள்ளுற லொழிந்து நின்றான்
வெஞ்சிலை மைந்தன் போனா
னிகும்பிலை வேள்வி யானென்
றெஞ்சலி லரக்கர் சேனை
யெழுந்தெழுந் தேகக் கண்டான்.

வெம் சிலை மைந்தன் - கொடிய வில்லை உடைய இந்திரசித்து, நிகும்பிலை வேள்வியான் - நிகும்பிலையில் வேள்வி செய்பவனாகி, போனான் என்று - சென்றனன் என்று உணர்ந்து, எஞ்சல் இல் அரக்கர் சேனை - குறைவு இல்லாத அரக்கர் சேனைகள், எழுந்து எழுந்து ஏக கண்டான் - (ஒன்றன்பின் ஒன்றாக) எழுந்து எழுந்து செல்வதைப் பார்த்து, வஞ்சனை என்பது உன்னி - (சீதையைக் கோறல் முதலியன) மாயம் என்று அறிந்து, உள்ளம் தள்ளுறல் ஒழிந்து - உள்ளம் துயரினால் தடுமாறுதல் நீங்கி, வான் உயர் உவகை வைகும் நெஞ்சினன் ஆகி - ஆகாயம் வரை உயரும் மகிழ்ச்சி தங்கும் நெஞ்சை உடையவனாகி, நின்றான் - (வீடணன்) நின்றான்.

வானுயருவகை - வானத்தைத் தொடும்படி உயர்ந்த உவகை. தள்ளுறல் - குன்றுதலும் ஆம், பிராட்டி உயிரோடு இருந்ததை

யும், மைந்தன் நிகும்பிலை போனனென்று சேனைகள் எழுந்து சென்றதையும் கண்டவனுக்கு நிகழ்ந்தவை யாவையும் வஞ்சனை என்பது புலப்பட்டது.

பி - ம். 4. அரக்கன் சேனை ; க்டிதெழுந்தேகக். 91

## வீடணன் மீண்டு, இராமபிரானிடம் உண்மை தெரிவித்தல்

2866. வேள்விக்கு வேண்டற் பால
கலப்பையும் விறகு நெய்யும்
ஆழ்விக்குந் தாழ்வி லென்னும்
வானவர் மறுக்கங் கண்டான்
சூழ்வித்த வண்ண மீதோ
நன்றெனத் துணிவு கொண்டான்
தாழ்வித்த முடியன் வீரன்
றாமரைச் சரணந் தாழ்ந்தான்.

(வீடணன்), 'வேள்விக்கு - யாகத்திற்கு, வேண்டல்பால - இன்றியமையாத, கலப்பையும் விறகும் நெய்யும் - கலப்பை விறகு நெய் முதலியன எல்லாம், தாழ்வில் - தாழ்ந்த நிலையில், ஆழ்விக்கும் - (நம்மை) ஆழ்ந்திருக்கச் செய்யும்', என்னும் - என்று கூறும், வானவர் மறுக்கம் கண்டான் - தேவர்களின் மயக்கத்தைப் பார்த்தான்; சூழ்வித்த - வஞ்சனை ஆக்கிய, வண்ணம் - தன்மை, ஈதோ - இதுவோ! நன்று - இது நன்றாயிருக்கிறது!' என - என்று, துணிவு கொண்டான் - மனத்தில் திடம் கொண்டான்; (இந்த அறிவுடன் திரும்பி), வீரன் தாமரை சரணம் - வீரனான இராமபிரானின் தாமரை போன்ற திருவடிகளில், தாழ்வித்த முடியன் - வணக்கிய தலையுடையவனாய், தாழ்ந்தான் - வணங்கினான்.

இச் செய்யுள் யுத்த. 2585-ஆம் செய்யுட்போல, சொல்லமைதி பெற்றிருப்பது காண்க. கலப்பை, வேள்வி நிலம் பண்படுத்த உதவுவது. விறகு - சமித்து, இவற்றைக் கண்ட தேவர், தம்மை நீடுழி தாழ்வில் ஆழ்விக்கும் என்று அவ் வேள்வியின் பயனை உணராதவர் என்க.

பி - ம். 1. தருப்பையும் ; வாழ்விக்கும் : மாள்விக்கும்.
2. தப்பிலன்ன ; மறுக்கலங் கேட்டான்.
4. தாழ்விக்கும், சரணஞ் சரர்ந்தான். 92

2867. இருந்தன டேவி யானே
யெதிர்ந்தன னென்க ணார
அருந்ததி கற்பி னாளுக்
கழிவுண்டோ வரக்க னம்மை
வருந்திட மாயஞ் செய்து
நிகும்பிலை மருங்கு புக்கான்
முருங்கழல் வேள்வி முற்றி
முதலற முடிக்க மூண்டான்.

(வீடணன் இராமபிரானிடம்), 'தேவி இருந்தனள் - தேவி (துன்பமின்றி) இருப்பதை, யானே என் கண் ஆர எதிர்ந்தனன் - யானே என் கண்கள் நிரம்பப் பார்த்தேன்; அருந்ததி கற்பினாளுக்கு அழிவு உண்டோ - அருந்ததியை ஒத்த கற்புடைய தேவிக்கு அழிவும் உண்டாமோ? அரக்கன் - அரக்கனான இந்திரசித்து, நம்மை வருந்திட - நம்மை வருத்தும்படியான, மாயம் செய்து - வஞ்சனையைச் செய்துவிட்டு, முருங்கு அழல் வேள்வி முற்றி - நெருங்குகின்ற நெருப்பினிலே செய்யும் யாகத்தைச்செய்து முடித்து, முதல் அற முடிக்க மூண்டான் - நம் மூலமும் கெட அழிக்குமாறு மனத்தில் ஊக்கங்கொண்டு முற்பட்டு, நிகும்பிலை மருங்கு - நிகும்பிலை என்னும் இடத்தின் அருகு, புக்கான் - புகுந்தான்.

இச் செய்யுள் குளகமாம்; அடுத்த செய்யுளிலுள்ள 'என்றலும்' என்பதனோடு முடியும். எதிர்தல் - எதிரிகளால். பிராட்டிக்கு அருந்ததி; ஆரணிய. 822, 994; கிட்கிந்தா. 843; அருந்ததிக் கற்பினாள், 468. நம்மை வருந்திட; வேற்றுமை மயக்கம். மூள்தல் - ஊக்கத்துடன் முற்படுதல்.

பி - ம். 1. யானே கண்டனென் கண்களால்.
2. வரக்கன் மைந்தன்.
3. மருங்கிற் புக்கு.
4. முருங்கெரி வேள்வி; முடிக்க மூண்டான். 93

2868. என்றலு முலக மேழு
மேழுமாந் தீவு மெல்லை
ஒன்றிய கடல்க ளேழு
மொருங்கெழுந் தார்க்கு மோதை

அன்றென வாகு மென்ன
வமரரு மயிர்க்க வார்த்துக்
குன்றின மிடியத் துள்ளி
யாடின குரக்கின் கூட்டம்.

என்றலும் - (வீடணன்) இவ்வாறு கூறவும், குரக்கின் கூட்டம் - வானரர் கூட்டம், உலகம் ஏழும் - ஏழு உலகங்களும், ஏழு மா தீவும் - ஏழு பெரிய தீவுகளும், எல்லை ஒன்றிய கடல்கள் ஏழும் - தம் எல்லைப் புறங்கள் ஒன்றோடு ஒன்று ஒட்டிய ஏழு கடல்களும், ஒருங்கு எழுந்து - ஒருமித்துத் தோன்றி, ஆர்க்கும் ஓதை அன்று ஆகும் என்ன - முழங்கும் ஒலி உண்டாகும் யுக முடிவுத் தினத்தது என்று சொல்லி, அமரரும் அயிர்க்க - தேவர்களும் ஐயங்கொள்ள, ஆர்த்து - முழங்கி, குன்று இனம் இடிய - குன்றுத் தொகுதிகள் இடிந்து போகுமாறு, துள்ளி ஆடின - துள்ளிக் குதித்து ஆடின.

குரங்குக் கூட்டம் ஆர்த்து ஆடின என்க. ஏழு உலகம் - கீழ் ஏழு, மேலேழு என்னும் உலகங்கள். ஏழு தீவுகள்: நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், இலாங்கலி, பூகம் என்பன. கடல் ஏழு: உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு. இக் கடல்கள் தம் எல்லைகளில் ஒன்றியிருக்கும் என்று இங்குக் கூறப் பெற்றது; அதாவது, அவை இடையீடின்றித் தொடர்ந்திருக்கும் என்பதாம். ஒருங்கு எழுந்து ஆர்க்கும் ஓதை அன்று, என்பது யுகாந்த முடிவைச் சுட்டியதாகும்.

பி - ம். 1. மீயற்றின வெல்லையாக; மேத்தின வெல்லையாக.
2. மூடனெழுந்தார்க்கு மோதை, கடல்களெல்லா முடனெழுந்.
3. லாகுமென்ன.
4. குரங்கின் கூட்டம்.



சில சுவடிகளில் இங்கு இப் படலம் முடியாமல், நிகும்பலைப் படலத்தின் இரண்டாவது செய்யுளுடன் முடியும்.

மாயாசீதைப் படலம் முற்றும்.

இதைக்குறித்து முதனூல் கூறும் பகுதி இதன் அடுத்த படலத்தில் சேர்க்கப்படும்.

---

# 26. நிகும்பிலை யாகப் படலம்

இராமபிரான் முதலியோரை வெல்வதற்கேற்ற ஆற்றலைப் பெற, இந்திரசித்து நிகும்பிலை என்றவிடத்தில் செய்யத் தொடங்கிய வேள்வியை இலக்குவன் தடுத்தழித்த வரலாற்றைக் கூறும் படலம் என விரியும். இப் படலம் நிகும்பலைப் படலமென்றும் நிகும்பிலைப் படலமென்றும், நிகும்பலை யாக சங்காரப் படலமென்றும் சுவடிகளில் கூறப்பெறும்.

### வீடணன் முதலியோரை இராமபிரான் புகழ்தல்

2869. வீரனு மையந் தீர்ந்தான்
வீடணன் றன்னை மெய்யோ
டார்வமு முயிரு மொன்ற
வழுந்துறத் தழுவி யைய
தீர்வது பொருளோ துன்பம்
நீயுளை தெய்வ முண்டு
மாருதி யுளனுஞ் செய்த
தவமுண்டு வலியு முண்டால்.

வீரனும் - இராமபிரானும், ஐயம் தீர்ந்தான் - தான் கொண்ட ஐயத்தினின்று நீங்கினவனாய், வீடணன் தன்னை - வீடணனை, மெய்யோடு - தன் உடலோடு, ஆர்வமும் உயிரும் ஒன்ற - (இருவர்) அன்பும் உயிரும் ஒன்றுமாறு, அழுந்துற தழுவி -(உடலோடு உடல்) அழுந்தும்படி அணைத்து, (அவனை நோக்கி), 'ஐய-ஐயனே! நீ உளை - நீ இருக்கின்றாய்; தெய்வம் உண்டு - தெய்வமும் இருக்கிறது; மாருதி உளன் - அநுமன் இருக்கின்றான்; நாம் செய்த தவம் உண்டு - யாம் இயற்றிய தவமும் இருக்கிறது; வலியும் உண்டு - நமது வலிமையும் இருக்கிறது; (இவையெல்லாம் இருக்க), துன்பம் தீர்வது பொருளோ - நமக்கு உண்டாகும் துன்பங்கள் நீங்கும் என்பது ஒரு பொருட்டோ?' (இல்லை, என்றபடி). ஆல் - அசை.

சில சுவடிகளில் இச் செய்யுளும் அடுத்ததும் முன் படலத்தின் இறுதிச் செய்யுள்களாக அமைந்துள்ளன. ஐயம், பிராட்டியை

இந்திரசித்து கொன்று விட்டனனே என்ற ஐயம். இராமபிரான் உள்பட யாவரும் இந்திரசித்தின் செயலை உண்மையென்று கருதி வருந்தியிருந்த போது, வீடணன் தன் அறிவினால் அச் செயலில் ஐயமுற்று மாற்றுருவம் கொண்டு நகர் புகுந்து உண்மையறிந்து புகன்றமையால் ஐயன் ஐயம் நீங்கி அவனை அழுந்தப் புல்லிப் புகழ்ந்தனன் என்க. பொருளோ - காரியமா.

பி - ம். 3. நீயுண்டு தெய்வமுண்டு,
4. மாருதியுண்டு நாஞ்செய்த, மாருதியன்றி நாஞ்செய்த, மறையுமுண்டால். 1

## இந்திரசித்தின் யாகத்தைத் தடுக்கும்படி இலக்குவனை யனுப்புமாறு இராமபிரானை வீடணன் வேண்டுதல்

2870. என்றலு மிறைஞ்சி யாக
முடியுமே லியாரும் வெல்லார்
வென்றியு மரக்கர் மாடே
விடையரு ளிளவ லோடும்
சென்றவ னாவியுண்டு வேள்வியுஞ்
சிதைப்பெ னென்றான்
நன்றது புரிதி ரென்று
நாயகன் நவில்வ தானான்.

என்றலும் - (இவ்வாறு இராமபிரான்) கூற, (வீடணன்), இறைஞ்சி - அப்பிரானின் திருவடிகளில் வணங்கி, 'யாகம் முடியுமேல் - (இந்திரசித்து தொடங்கும்) வேள்வி முற்றுப் பெறுமானால், யாரும் - எவரும், வெல்லார் - (அவ்விந்திரசித்தை) வெல்லமாட்டாதவராவர்; அரக்கர் மாடே வென்றியும் - அரக்கர் பக்கமே வெற்றியும் (அமையும்); (ஆதலால்), இளவலோடும் சென்று - நான் இலக்குவனுடன் சென்று, அவன் ஆவி உண்டு - அவ் இந்திரசித்தின் உயிரைக் கொன்று, வேள்வியும் சிதைப்பென் - அவன் செய்யும் வேள்வியையும் அழிப்பேன்; விடை அருள் - விடை தருக', என்றான் - என்று விண்ணப்பித்தான்; நாயகன் - இராமபிரானும், 'நன்று, அது புரிதிர் - நல்லது; அதனைச் செய்யுங்கள்', என்று நவில்வது ஆனான் - என்று கூறினான்.

சில சுவடிகளில் இச் செய்யுள் மாயா சீதைப் படலத்தின் இறுதிச் செய்யுளாகவும், வேறு சிலவற்றுள் இப் படலத்தின் முதற் செய்யுளாகவும் அமைந்துள்ளது. முன்பு யுத்தகாண்டம் 2788ஆம் செய்யுளில் நிகும்பிலை வேள்வியைப் பற்றி இந்திரசித்து, 'யான் போய் நிகும்பிலை விரைவி னெய்தித், துனி யறு வேள்வி வல்லைத் தொடங்கினுன் முடியும் துன்பம்' என்றும் ஷை படலம் 96-ஆம் செய்யுளில் வீடணன், 'முருங்கழல் வேள்வி முற்றி முதலற முடிக்க மூண்டான்' என்றும் குறிப்பாகக் கூறியதை இங்கு வீடணன் விளக்கிக் கூறுகின்றுன். யாரும் என்றமையால், இராமபிரானையும் உள்ளிட்டுக் கூறினன் என்க. ஆவியுண்டலை முதலிற் கூறியது, அவன் ஆவி உள்ளமட்டும் வேள்வியைச் சிதைக்கவொட்டான் என்பதைக் குறிக்க என்க. வீடணன், 'சிதைப்பென்' என்று ஒருமையில் கூற, இராமபிரான் 'புரிதிர்' என்று பன்மையில் விடையளித்ததன் நயம் ஓர்க.

பி - ம். 1. முடியுமே லாரும்.

2. அரக்கர் மேற்றே.

3. சிதைக்க வென்றுன். 2

## இராமபிரான் இலக்குவனுக்கு இந்திரசித்தின்மீது போர் புரிதற்கு ஏற்ற முறைகளை உபதேசித்தல்

2871. தம்பியைத் தழுவி யையன்
 தாமரைத் தவிசின் மேலான்
வெம்படை தொடுக்கு மாயின்
 விலக்கும தன்றி வீர
அம்புநீ துரப்பா யல்லை
 யனையது துரந்த காலை
உம்பரு முலகு மெல்லாம்
 விளியுமஃ தொழிதி யென்றுன்.

(மேலும்), ஐயன் - இராமபிரான், தம்பியைத் தழுவி - இலக்குவனைத் தன்னுடன் அணைத்துக் கொண்டு (அவனை நோக்கி), 'வீர - வீரனே! தாமரை தவிசின் மேலான் - தாமரை ஆசனத்தின் மேல் வீற்றிருப்பவனுன பிரமனின், வெம் படை - கொடிய (பிரம)

அத்திரத்தை, தொடுக்குமாயின் - (அவ் இந்திரசித்து, வில்லில் பூட்டி) விடுவானுனல், விலக்கும் அது அன்றி - (அப் பிரமாத்திரத்தைத்) தடுக்கும் காரணத்துக்காக அல்லாமல், அம்பு - (அப் பிரமாத்திரமென்கிற) அம்பை, நீ - நீயாக (முதலில்), துரப்பாய் அல்லே - விடலாகாது; அனையது - அவ் அத்திரம், துரந்த காலே - விடப்படும்போது, உம்பரும் உலகும் எல்லாம் - தேவர்கள் உலகங்கள் என்ற யாவும், விளியும் - அழிந்துபோம்; (ஆகையால்), அஃது - அச் செயலே, ஒழிதி - நீக்கிவிடு', என்முன் - என்று கூறினன்.

முன்னம் பிரமாத்திரப் படலத்தில் (80) இலக்குவன், 'அயன் படையெடுப்பல் என்றிசைக்க', என்றும், இராமபிரான், 'அந்தணன் படைக்கலம் தொடுக்க வவ்வுலக, மூன்றையுஞ் சுடுமொருவனுன் முடிகலது' (81) என்றும் கூறியவை இங்குக் கருதற்குரியது. இராமபிரான் அறப்போர் புரிபவனுதலின் தற்காப்புக்கே யன்றி பிரமாத்திரம் விடத்தகாது என்று தம்பியை எச்சரித்தனனும். இலக்குவனுக்கு இராமபிரான் இங்கு உபதேசித்ததாகக் கூறப்படும் செய்தி வான்மீகத்தில் இல்லே. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லே. சில சுவடிகளில் இச் செய்யுள் இப் படலத்தின் முதற் செய்யுளாகும்.

பி - ம். 1. தவிசின் மேலோன்.

2. மாகில் விலக்குவ தன்றி வெய்தின். விலக்குத லன்றி வீர, விலக்குவான் பொருட்டால்.

3. யனையது கடந்த காலே, யனையது நடந்த காலே.

4. தொழிநீ யென்முன். 3

2872. முக்கணுன் படையு மாழி
முதலவன் படையு முன்னின்
ஞெக்கவே விடுமே விட்டா
லவற்றையும் மவற்றி னேயத்
தக்கவா றியற்றி மற்றுன்
சிலேவலித் தருக்கி னலே
புக்கவ னுவி கொண்டு
போதுதீ புகழின் மிக்கோய்.

(மேலும் இலக்குவனை நோக்கி, இராமபிரான்), 'புகழின் மிக்கோய் - புகழினால் சிறந்தவனே! முக்கணான் படையும் - முக்கண்ணன சிவபிரானுக்குரிய பாசுபத அத்திரமும், ஆழி முதலவன் படையும் - சக்கரம் தரித்த முதற் கடவுளான திருமாலுக்குரிய நாராயண அத்திரமும், முன் நின்று ஒக்கவே விடுமே - உன் முன்னே நின்று அவன் ஒருமித்து விடுவான்; விட்டால் - (அவ்வாறு அவன்) விடுவானானால், அவற்றையும் - அந்த அத்திரங்களையும், ஓய தக்கவாறு - (பயனற்று) ஓய்ந்து போகுமாறு, அவற்றின் இயற்றி - அந்தப் பாசுபதாத்திரத்தாலும் நாராயணாத்திரத்தாலும் (தடுத்தலைச்) செய்வாய்; மற்று - பிறகும், உன் சிலை வலி தருக்கினாலே - உன் வில் வலிமையின் திறமையினாலே, புக்கு - போரினுள் புகுந்து, அவன் ஆவி கொண்டு - அவன் உயிரைப் போக்கி, போதுதி - திரும்புவாயாக.

பாசுபதாத்திரம், நாராயணாத்திரம் போன்றவற்றால் இந்திரசித்தைக் கொல்ல வேண்டா வென்பது இராமபிரானின் கருத்து. மற்று, அசையும் ஆம். தக்கவாறு என்பதை இயற்றி என்பதோடும் இயைக்கலாம். தருக்கு - வலிமை, திறமை; 'எதிர்செயுந் தருக்கிலாமையின்' (பால. தாடகை. 40).

பி - ம். 2. அவற்றினு லவற்றை யோய்த்து, அவற்றாலோயத்.
4. புக்கவ னுவி யுண்டு; புகழு மதலாய். 4

2873. வல்லன மாய விஞ்சை
வருத்தன வறிந்து மாளக்
கல்லுதி தரும மென்னுங்
கண்ணகன் கருத்தைக் கண்டு
பல்பெரும் போருஞ் செய்து
வருந்தின வற்றம் பார்த்துக்
கொல்லுதி யமரர் தங்கள்
கூற்றினைக் கூற்ற மொப்பாய்.

'கூற்றம் ஒப்பாய் - இயமனை ஒப்பவனே! அமரர் தங்கள் கூற்றினை - தேவர்களுக்குக் கூற்றுவன் போன்ற அவ் இந்திரசித்தை, (அவன்), மாய விஞ்சை வல்லன வருத்தன - மாய வித்தைகள் வலிமையுள்ளன இயற்றியவற்றை, அறிந்து - தெரிந்து கொண்டு, மாள - அம் மாயங்கள் அழியுமாறு, கல்லுதி - அவற்றை

அகழ்ந்தெடுப்பாய்; தருமம் என்னும் - அறம் என்கின்ற, கண் அகன் கருத்தை கண்டு - இடமகன்ற கருத்துக்களை ஆராய்ந்து தேர்ந்து, பல் பெரும் போரும் செய்து - பல பெரிய போர்களையும் செய்து, வருந்தின அற்றம் பார்த்து - (அவன்) சோர்ந்த நேரம் பார்த்து, கொல்லுதி - அவனை மாய்ப்பாய்.

இராமபிரான் இந்திரசித்தின் மாயைகளை யெல்லாம் முற்றிலும் அறிந்தவனாதலின் அவற்றை, 'அறிந்து மாளக் கல்லுதி' என்றான். போரியற்றுவதில் வஞ்சகன்பாலும் தருமமறிந்து செய்ய வேண்டு மென்பதை இங்கும் வற்புறுத்தியது காண்க. இராமபிரானின் அறநெறிக்கு இது மிகப் பெரியதொரு சான்றாகும். அற்றம் - சோர்வு, 'அற்றம் பார்க்கும் பசப்பு' (குறள். 1186). 'கூற்ற மொப்பாய் கூற்றினைக் கொல்லுதி' என்றது நயம்.

பி - ம். 1. வல்லது மாயை விஞ்சை; வகுப்பதறிந்து.
2. கருத்துக் கொண்டு, கருத்தின் கொண்டாய்.
3. பல்பல போருஞ் செய்து வருந்தலை யற்றம் பார்த்து.
4. கொல்லுதி சீர்மைத்தாக மேனின்ற குற்றமற்றாய்; கூற்றினுக் கூற்ற மொப்பாய். 5

2874. பதைத்தவன் வெம்மை யோடிப்
பல்பெரும் பகழி மாரி
விதைப்பன விதையா நின்று
விலக்கினு மெலிவு மிக்கால்
உதைப்பன சிலையின் வாளி
மருமத்தைக் கருதி யோட்டி
வதைத்தொழில் புரிதி சாப
நூனெறி மறப்பி லாதாய்.

'சாப நூல் நெறி மறப்பிலாதாய் - தனுர் வேத வழிகளில் மறப்பற்ற இலக்குவ! அவன் - அவ் இந்திரசித்து, பதைத்து - பதற்றமடைந்து, வெம்மை ஓடி - சினம் மிகுந்து, பல் பெரும் பகழி மாரி விதைப்பன - நீ எய்கின்ற பல பெரிய அம்புமழை அவன்மீது விதைக்கக் கூடியவற்றை, விதையா நின்று விலக்கினும் - தன்மீது பாயாவண்ணம் நின்று தப்பினாலும், மெலிவு மிக்கால் - அவன் சோர்வு மிகும் நேரத்தில், சிலையின் உதைப்பன வாளி - உன் வில்லி

னின்று எய்யப்பெறும் அம்புகளை, மருமத்தை கருதி ஓட்டி - அவன் உயிர் நிலையை நோக்கிச் செலுத்தி, வதை தொழில் புரிதி - அவனைக் கொல்லும் செயலைச் செய்வாயாக.

சாபநூல் - தநுர் வேதம். வெம்மை - கோபம்; ஆகுபெயர். விதைத்தல் - ஊன்றுதல். மெலிவு - ஓய்வு. முன் செய்யுளில் 'அற்றம் பார்த்து' என்று கூறியதும் இக் கருத்துக் கொண்டேயாம். மருமம் - உயிர்நிலை; 'எங்கு மருமத்திடைக் குளிப்ப' (பு. வெ. 7 - 23); மார்பும் ஆம்; 'மருமத்தி னெறிவேல்' (பால. கையடைப். 11).

பி - ம். 1. வெம்மையாடிப்; பல்பல போருஞ் செய்து.
2. விதைத்தவன் விதையா நின்று, விதைத்துமுன், விலக்கினை மெலிவு மிதால்.
3. உதைத்தவன் சிலையின்; கருநியோடி, கிழியவோட்டி, கழிவவோட்டி.
4. சாய நூனெறி. 6

2875. தொடுப்பதன் முன்னம் வாளி
தொடுத்தவை துறைக டோறும்
தடுப்பன தடுத்தி யெண்ணங்
குறிப்பினு லுணர்ந்து தக்க
கடுப்பினு மளவிலாத கதியினுங்
கணைகள் காற்றின்
விடுப்பன வவற்றை நோக்கி
விடுதியால் விரகின் மிக்காய்.

'விரகின் மிக்காய் - உபாயம் மிக்கவனே! (அவன்), வாளி தொடுப்பதன் முன்னம் - அம்பை (வில்லில்) பூட்டுதற்கு முன்னமேயே, தொடுத்து - (நீ உன் அம்பினைப்) பூட்டி, அவை - பகைவனின் அவ் அம்புகளை, துறைகள் தோறும் - அவை விடுக்கப் படும் வழிகள் தோறும், தடுப்பன தடுத்தி - தடுக்கப்படுமவற்றை (அத் துறைகளிலேயே) தடுப்பாயாக; அளவிலாத கடுப்பினும் - அளவு சொல்ல முடியாத வேகத்தோடும், காற்றின் கதியினும் - காற்றின் விரைவை யொத்த விரைவினும், விடுப்பன கணைகள் - (அவன்) விடுவனவாகிய அம்புகளை, எண்ணம் குறிப்பினால்

உணர்ந்து-பகைவனின் கருத்தைக் குறிப்பினால் தெரிந்துகொண்டு, அவற்றை நோக்கி - அவற்றைப் பார்த்து, தக்க - அவற்றை விலக்கத்தக்கவாறு (எதிர் அம்புகளை), விடுதி - விடுவாயாக. ஆல் : அசை.

துறைகள் தோறும் தடுப்பன தடுத்தி என்றதால், எதிரி அம்பு எய்யும் முறைகளை அறிந்து அம் முறைகளிலே அவற்றைத் தடுக்க வேண்டும் என்று கூறியவாறும். எண்ணம் குறிப்பினால் உணர்தல் : (ஒப்பு) ; 'என் குறிப்பின் வழி நிற்றி' (ஆரணிய. 754). கடுப்பு - வேகம் ; 'மண்டு கடுப்பினிற் படரும் வாம்பரி' (சேது. கத்துரு. 15). கதி - விரைவு ; 'கதிகெழு களிறு' (கந்தபு. திக். 35). விரகு - உபாயம் ; சாமர்த்தியம் ; தந்திரம் - விவேகம்.

பி - ம். 2. எண்ணிக் குறிப்பினால், எண்ணுங் குறிப்பினால்; குறிப்பினா லுணரத்தக்க.

3. கடுப்பினும் விளம்பு மாற்றக் கதியினுங் கணைகளாற்றின் ; கணைக ளாற்றின் ; கடுப்பினும் விளியு மாற்றக் கதியினும் ; விளைவு மாறக் ; கதியெனும்.

4. வெகுளிமிக்காய், விரைவிலாதாய். 7

## இராமபிரான் இலக்குவனுக்குப் போர்க்கருவிகள் அளித்தல்

2876. என்பன முதலு பாய
 மியாவையு மியம்பி யேற்ற
முன்பனை நோக்கி யைய
 மூவகை யுலகுந் தானாய்த்
தன்பெருந் தன்மை தானு
 மறிகிலா வொருவன் தாங்கும்
வன்பெருஞ் சிலையீ தாகும்
 வாங்குதி வலமுங் கொள்வாய்.

என்பன முதல் - முன்னே கூறப்பெற்றன முதலான, உபாயம் யாவையும் இயம்பி - போர் முறைகள் யாவற்றையும் கூறி, ஏற்ற - அவற்றை ஏற்றுக் கொண்ட, முன்பனை - வலிமையுடைய இலக்கு வனை, நோக்கி - (கருணையுடன்) பார்த்து, 'ஐய - ஐயனே ! ஈது - இவ் வில், மூவகை உலகும் தானாய் - மூன்றுவகை உலகங்களும் தானே யாக நிற்பவனும், தன் பெருந் தன்மை தானும் அறிகிலா ஒருவன் - தன்பெருமையைத் தானும் தெரிந்துகொள்ள மாட்டாத ஒப்பற்ற

திருமால், தாங்கும் - பிடிக்கும், வன் பெரும் சிலை ஆகும் - வலிய பெரிய வில்லாகும்; வாங்குதி-(என்னிடமிருந்து இதனைப்) பெற்றுக் கொள்வாய்; வலமும் கொள்வாய் - வெற்றியையும் அடைவாய்.

இச்செய்யுள் இப்படலம் 10ம் செய்யுளிலுள்ள, 'பலவும் சொல்லித் தழுவினன்' என்பதனோடு முடியும். முதலடியில், 'யாவும் யாவையுமியம்பி' என்று கொண்டு, 'உபாயங்களையும் அவற்றிற்குரிய மந்திரங்களையும் சொல்லி' என்றும் பொருள் கூறுவர். முன்பு-வலிமை; அதனையுடையவன் முன்பன்; 'முன்பாலுடல் சினஞ் செருக்கி' (குறிஞ்சிப். 159). 'தன் பெருந்தன்மை தானுமறிகிலா வொருவன் - திருமால்; 'உன்னையொன்று முணர்ந்திலே போலு மாலுரவோய்' (யுத்த. மீட்சிப். 113); 'தனக்குந் தான்றன்மை யறிவரியானை'; நம்மாழ்வார்; (ஒப்பு): தன் பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ' (திருவா. திருச்சாழ. 19). வன்பெருஞ் சிலை; இது தமிழ் முனிவர் கொடுத்தது; அடுத்த செய்யுள் காண்க. வலம் - வெற்றி; 'வலந்தரிய வேந்திய வாள்' (பு. வெ. 9, 35). வலங்கொள்ளுதல் - பிரதக்ஷிணம் செய்தலுமாம்.

பி - ம். 1. என்பன முதலன வான வரவையும், முதல வாய, முதல யாவும் யாவையும்; மியம்பி யேக.
2. யுலகுந் தானுத்.
3. தன்மைத்தானும்.
4. சிலையிதாகும், சிலையிதொன்றே வணங்குதி வலமுங் கொண்டே, யிதொன்றே. 8

2877. இச்சிலை யியற்கை மேனாள்
தமிழ்முனி யியம்பிற் றெல்லாம்
அச்செனக் கேட்டா யன்றே
யாயிர மௌலி யண்ணல்
மெய்ச்சிலை விரிஞ்சன் மூட்டும்
வேள்வியின் வேட்டுப் பெற்ற
கைச்சிலை யென்று தானே
கொடுத்தனன் கவசத் தோடும்.

'இ சிலை இயற்கை - இந்த வில்லின் தன்மையை (ப் பற்றி) மேல் நாள் - முன்னே, தமிழ் முனி இயம்பிற்று எல்லாம் - தமிழ்

முனிவரான அகத்தியர் கூறியவை யாவற்றையும், அச்சு என - உண்மையாக, கேட்டாய் - நீ (அருகில் நின்று) கேட்டனை; அன்றே - அன்ரோ? (இஃது), ஆயிரம் மௌலி அண்ணல் - ஆயிரம் திருமுடிகளையுடைய பெரியோனான திருமாலின், மெய் சிலை - மெய்ம்மையான வில்லாகும்; (பின்னும் இது), விரிஞ்சன் மூட்டும் வேள்வியின் - பிரமன் இயற்றிய வேள்வியில், வேட்டு - ஓமம் முதலியன செய்து, பெற்ற கைசிலை - அடைந்த கையில் பிடிக்கத்தக்க வில்லாகும்', என்று - என்று சொல்லி, கவசத் தோடும் தானே கொடுத்தனன் - கவசம் ஒன்றனோடு தன் கைகளாலேயே (அவ் வில்லைக்) கொடுத்தான்.

இராமபிரான் இலக்குவனுக்குக் கொடுத்த சிலையின் வரலாறு இங்குக் கூறப் பெற்றது. இதன் வரலாறு ஆரணிய காண்டம் 172, யுத்த காண்டம் 88 ஆகிய செய்யுட்களிலும் அவற்றின் உரை விளக்கங்களிலும் காண்க. தமிழ் முனி - அகத்தியன்; (ஆரணிய. 153, 158, 164). ஆயிர மௌலி அண்ணல் - திருமால்; (அயோத்தி. 121, 129); 'ஸஹஸ்ர சீரிஷா புருஷ' என்ற புருஷ சூக்த வாக்கியமும் காண்க. விரிஞ்சன் - நான்முகன்; இவன் விரிஞ்சி என்றும் அழைக்கப் பெறுவான். திருமாலின் சிலையை நான்முகன் தான் இயற்றிய வேள்வியிற் பெற்றுப் பின்பு அகத்தியன்பால் கொடுத்திருந்தனன் என்பது இங்குக் கூறப்பெற்றதாகும். அச்சு - அதிசயம், நன்றாக, உண்மையாக என்பன ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்புக்கள். கவசமும் அகத்தியர் அளித்ததெனச் சிலர் கொள்வர்; ஆரணிய. 173-ஆம் செய்யுளின் விசேடக் குறிப்பைக் காண்க.

பி - ம். 2. கேட்டி யன்றே யாயிர நாமத் தண்ணல்; அச்சேனக் கோடியன்றே.
3. விரிஞ்சன்றானே வேள்வியின்.
4. கைச்சிலை யொன்று; கோடியென்று கொடுத்தனன். 9

2878. ஆணியிவ் வுலகுக் கான
வாழியான் புறத்தி னார்த்த
தூணியுங் கொடுத்து மற்று
முறுதிகள் பலவுஞ் சொல்லித்
தாணுவின் றேற்றத் தானைத்
தழுவினன் தழுவ லோடும்
சேணுயர் விசும்பிற் றேவர்
தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்.

இவ் உலகுக்கு ஆணி ஆன ஆழியான் - இந்த உலகுக்கு அச்சாணி ஆகி விளங்கும் சக்கரப் படையை உடைய திருமாலான இராமபிரான், புறத்தின் ஆர்த்த தூணியும் கொடுத்து - தன் முதுகில் கட்டியிருந்த புட்டிலையும் (இலக்குவற்குக்) கொடுத்து, மற்றும் - மேலும், உறுதிகள் பலவும் சொல்லி - பல உறுதிப் பொருள்களையும் கூறி, தாணுவின் தோற்றத்தானை - மலையைப் போன்ற தோற்றமுடைய இலக்குவனை, தழுவினன் - தழுவிக் கொண்டான்; தழுவலோடும் - (அவ்வாறு) தழுவிக்கொள்ள, சேண் உயர் - மிகவும் உயர்ந்த, விசும்பில் தேவர் - வானத்திலுள்ள தேவர்கள், 'எம் சிறுமை தீர்ந்தது என்றார் - எங்கள் எளிமை நீங்கிற்று' என்று கூறினார்கள்.

ஆணி: அச்சாணி; (குறள். 667); அநுமனை ஆணியென்றது கிட்கிந்தா. 62; சுந்தர. 28, 591 செய்யுட்களிற் காண்க. ஆணி என்பதனை ஆழி என்பதனோடு கூட்டியும் பொருள் உரைப்பர். தாணு - மலை (பிங்.); வட மேருவைக் குறித்தது ஆம்; சிவபெருமானையும் தாணு என்பர்; இலக்குவனைச் சிவபெருமானுடன் ஒப்பிட்டமை; (அயோத்தி. 431); அடுத்த செய்யுளும் காண்க. சேண் உயர்: ஒரு பொருட் பன்மொழி. சிறுமை: குறைபாடு, வறுமை, துன்பம் எனப் பல பொருள் குறிக்கும்.

பி - ம். 1. வுலகுக்காய; புறத்தினார்க்கும், ஆத்த, ஆர்க்க.
2. மற்ற வுறுதிகள்.
3. தாணுவி னூற்றலானை.

## இலக்குவன் போர்மேற் செல்லல்

2879. மங்கலந் தேவர் கூற வானவ மகளிர் வாழ்த்திப்
பங்கமி லாசி கூறிப் பலாண்டிசை பரவப் பாகத்
திங்களின் மௌலி யண்ண றிரிபுரந் தீக்கச் சீறிப்
பொங்கின னென்னத் தோன்றிப் பொலிந்தனன் [போர்மேற் போவான்.

போர் மேல் போவான் - இந்திரசித்தின்மீது தொடுக்கும் போர் மீது செல்பவனான இலக்குவன், தேவர் மங்கலம் கூற - தேவர்கள் மங்கல வாழ்த்துக்களை கூறவும், வானவ மகளிர் - தேவப் பெண்டிர்

பங்கம் இல் ஆசி கூறி வாழ்த்தி பலாண்டிசை பரவ - குறைவற்ற முறையில் ஆசிகளைக் கூறி வாழ்த்திப் பல்லாண்டுப் பாடல்களைப் பாடிப் புகழவும், பாக திங்களின் மௌலி அண்ணல் - பிறைச் சந்திரனைச் சூடிய திரு முடியைக் கொண்ட பெரியோனான சிவபிரான், திரபுரம் தீக்க - திரபுரங்களை நெருப்பிட்டழிக்கும் பொருட்டு, சீறி - கோபித்து, பொங்கினன் என்ன - பொங்கி எழுந்தான் என்னும்படி, தோன்றி - காணப்பெற்று, பொலிந்தனன் - விளங்கினான்.

'தீர்ந்தது எம் சிறுமை' (2879) என்று கூறிய தேவர்களும் அவர்கள் பெண்பாலரும் இலக்குவன் போருக்கெழுந்தபோது ஆசிகூறி, பல்லாண்டு பாடி வாழ்த்திய செய்தி இங்குக் கூறப் பெற்றது. சிவபெருமான் திரிபுரங்களை எரித்த வரலாறு சுந்தர. 452, 991, 1003, 1145, 1171, 1178 செய்யுட்களிலும் பிற காண்டங்களில் பல்வேறிடங்களிலும் கம்பநாட்டாழ்வாரால் சுட்டப்பெற்றுள்ளமை காண்க. இலக்குவனைச் சிவபிரானோடு ஒப்பிட்டமை; 'முற்று மதியம் மிலைந்,தான்முனிந் தானை யன்னான்' (அயோத்தி. 431); 'ஊழியி னுருத்திர னுருவு கொண்டுதான், ஏழுய ருலகமும் எரிக்கின்றானென, வாழி வரிசிலைத் தம்பி மாப்படைக், கூழையி னெற்றிநின் றானைக் கூடினான்' (யுத்த. 1073).

பி - ம். 1. கூறிவானவர்; மகளிர் வாழ்த்தப்.
2. கூறப்பலா ; பரவப் பாதித்.
3. மோலியண்ணல் ; எரியச்சிறிப்.
4. பகைமேற்போவான் ; பகைமேற் கொண்டான். 11

2880. மாருதி முதல்வ ராய வானரத் தலைவ ரோடும்
வீரநீ சேறி யென்று விடைகொடுத் தருளும் வேலை
ஆரியன் கமல பாத மகத்தினும் புறத்து மாகச்
சீரிய சென்னி சேர்த்துச் சென்றனன் தருமச் செல்வன்.

'வீர - வீரனே! மாருதி முதல்வர் ஆய வானரத் தலைவரோடும் - மாருதி முதல்வரான வானரப் படைத் தலைவரோடும், நீ சேறி - நீ போர்க்களத்தை (நிகும்பிலையை) அடைவாயாக', என்று - என்று கூறி, விடை கொடுத்து அருளும் வேலை - விடையளித்தருளின போது, தருமச் செல்வன் - அறத்தையே செல்வமாகக் கருதும் இயல்பினையுடைய இலக்குவன், ஆரியன் கமல பாதம் -

இராமபிரானின் தாமரை போன்ற திருவடிகளில்; அகத்தினும் புறத்துமாக - உள்ளிலும் வெளியிலுமாக, சீரிய சென்னி சேர்த்து - சிறந்த தலையைச் சேர்த்து, சென்றனன் - புறப்பட்டான்.

இங்குக் கூறியவாறே இராமபிரான் இலக்குவனிடம் மாருதி முதலியோரைக் கூட்டிக் கொண்டு போகச் சொன்னதாக முதனூலும் கூறும். அகத்தினும் புறத்தினும் சென்னி சேர்த்தனன் என்றமை அவனது களங்கமற்ற பக்தியைக் காட்டுவதாம். தருமச் செல்வன்; இங்கு இலக்குவனைக் குறித்தது.

பி - ம். 2. விரந் சென்று.

3. அகத்துந்தன் புறந்துமாகச்.

4. சென்னி தன்னின்மேல் சேர்த்தனன்; சென்னி தன்னிற் சேர்த்தி. 12

2881. பொலங்கொண்ட லனைய மேனிப்
புரவலன் பொருமிக் கண்ணீர்
நிலங்கொண்டு படர நின்று
நெஞ்சழி வானைத் தம்பி
வலங்கொண்டு வயிர வல்வி
லிடங்கொண்டு வஞ்சன் மேலே
சலங்கொண்டு கடிது சென்றான்
றலைகொண்டு வருவெ னென்றே.

பொலம் கொண்டல் அனைய மேனி புரவலன் - அழகிய மேகம் போன்ற திருமேனியையுடைய மன்னனான இராமபிரான், பொருமி - (இலக்குவனைப் பிரிய நேர்ந்தமையைக் குறித்து வருந்தி) விம்மி, கண்ணீர் நிலம் கொண்டு படர நின்று - கண்ணீர் பூமியிலே விழுந்து பரவுமாறு நின்று, நெஞ்சு அழிவானை - உள்ளம் அழிந்து நிற்பவனாகிய இராமபிரானை, தம்பி - இலக்குவன், வலம் கொண்டு - பிரதக்ஷிணமாக வந்தும், வயிர வல் வில் இடம் கொண்டு - (இராமபிரானிடமிருந்து அடைந்த) வயிரம் போன்று அழுத்தமான வில்லை இடக்கையிற் கொண்டும், வஞ்சன் மேலே சலம் கொண்டு - மாயாவியான இந்திரசித்தின்மீது கோபத்தைக் கொண்டும், 'தலை கொண்டு வருவென் - அவன் தலையை வெட்டிக் கொண்டு வருவேன்' என்று (வஞ்சினம்) கூறிக் கொண்டும், கடிது சென்றான் - விரைவாக (நிகும்பிலைமீது) படர்ந்தான். ஏ, அசை.

பொலம் - அழகு (திவா.); 'பொலந்தேர்ப் பொறைய (பதிற்றுப். 84' 6). கொண்டல், இராமபிரானின் மேனிக்கு உவமை. பொருமிக் கண்ணீர் படர நின்றது, இலக்குவன்பால் இராமபிரான் கொண்ட அன்பினால் விளைந்தது; அடுத்த செய்யுளும் காண்க. வலங்கொண்டு இடங்கொண்டு; முரண்தொடை. வலம் கொள்ளுதல் - வலப்புறமாகச் சூழ்தல்; பிரதக்ஷிணம் செய்தல். இடம் - இடக்கையில். சலம் - தணியாக் கோபம்; 'உவகையும் சலம்வரிற் குமைக்கும்' (ஆரணிய. 693) முதலியன காண்க; சலம் - மாறுபாடு என்பர் நச்சினார்க்கினியர்; மதுரைக். 117 உரை. தலை கொண்டு வருதல் - புறத்துறை.

பி - ம். 1. புங்கவன் பொருமிக்.

4. தருவனென்றே; வருவேனென்று, வருவேனென்ன. 13

## இலக்குவனைப் பிரிந்த இராமபிரான்நிலை

2882. தான்பிரி கின்றி லாத
தம்பிவெங் கடுப்பிற் செல்லா
வூன்பிரி கின்றி லாத
வுயிரென மறைத லோடும்
வான்பெரு வேள்வி காக்க
வளர்கின்ற பருவ நாளில்
தான்பிரிந் தேகக் கண்ட
தயரதன் றன்னை யொத்தான்.

தான் பிரிகின்றிலாத தம்பி - (எக் காலத்தும் தன்னைவிட்டு நெடு நேரம்) பிரிந்திராத தம்பியான இலக்குவன், ஊன் பிரிகின்றிலாத உயிர் என - உடலைவிட்டுப் பிரிதல் இல்லாத உயிர் என்று சொல்லுமாறு, வெம் கடுப்பின் செல்லா - கொடிய வேகத்தோடும் போய், மறைதலோடும் - மறைய, (இராமபிரான்) வளர்கின்ற பருவ நாளில் - தான் வளர்கின்ற பிராயமுடையவனாக இருக்கும் காலத்தில், வான் பெரு வேள்வி காக்க - (விசுவாமித்திரர் இயற்றிய) மிகப் பெரிய வேள்வியைக் காக்கும் பொருட்டு, தான் பிரிந்து ஏக கண்ட - தான் (தன்னைவிட்டுப்) பிரிந்து செல்லப் பார்த்த, தயரதன் தன்னை ஒத்தான் - (தந்தையாகிய) தயரதனை ஒத்தவனானான்.

முன் செய்யுளில் 'புரவலன் பொருமிக் கண்ணீர், நிலங் கொண்டு படர நின்று நெஞ்சழிவான்' என்றமைக்குக் காரணம் இங்குக் கூறுகின்றார். ஊன் இங்கு இராமபிரானும், உயிர் இலக்குவனுமாகக் கொள்க; பிரிதலும் மறைதலும் உயிர்க்கே உண்டு ஆதலால்: இலக்குவன் இராமபிரானின் உயிர் என்றமை; அயோத்தி. நகர்நீங்கு. 238, 1091; ஆரணிய. 802, 1095, 1097, 1099; சுந்தர. 39. 'வேள்வி காக்கப் பிரிந்தேகக் கண்ட தயரதன் நிலை' பால. கையடைப்படலம் 338 முதலிய செய்யுட்களிற் காண்க. இராமபிரானுக்குத் தயரதன்; உவமை நயம் ஓர்க, அங்கு இராமன் தயரதனைப் பிரிந்தது முனிவரின் அற வேள்வியைக் காக்க,; இங்கு இலக்குவன் இராமபிரானைப் பிரிந்தது அரக்கனின் மற வேள்வியை அழிக்க; ஈரிடங்களிலும் பிரிவுத் துயரம் ஒன்றே. இராமபிரான் இலக்குவனைக் குமரனாகக் கருதியது. (யுத்த. 787).

இச் செய்யுளுடன் மாயா சீதைப் படலம் முற்றும் என்று ஒரு சுவடி வகுக்கும்.

பி - ம். 1. கான்பிரிகின்றிலாத; கடுப்பிற் செல்வன், செல்வான், செல்ல.
2. ஊன்பிரிவுடைய; ஊன்பிரிவுடையதான வுயிரென; பிரிவுடையதாக, வுயிரொடு மறைதலோடும்; உலாவலோடும்.
3. வேள்விக்காக; காக்கவருகின்ற; பருவமாலைத்.
4. தான்பிரிகின்றநாளின் தசரதன்றன்னை யொத்தான்; பிரிகின்றநாளத்; தன்மையொத்தான். 14

## வேறு

## வானரர்களும் இலக்குவனுடன் நிகும்பிலையை யடைதல்

2883. சேனுபதி யேமுதல் சேவகர்தாம்
ஆனுர்நிமிர் கொள்ளிகொ ளங்கையினுர்
கானுர்நெறி யும்மலை யுங்கழியப்
போனுர்க ணிகும்பிலை புக்கனரால்.

சேனுபதியே முதல் சேவகர் - நீலன் முதலான வீரர்கள், தாம் நிமிர் கொள்ளி கொள் அங்கையினுர் ஆனுர் - தாங்கள் மேலோங்கி எரிகின்ற கொள்ளிக் கட்டைகளைக் அகங்கைகளில் பிடித்தவர்

களாக ஆகி, கான் ஆர் - காடுகள் செறிந்த, நெறியும் - வழிகளும், மலையும் - மலைகளும், கழிய - நீங்க, போனார்கள் - போய், நிகும்பிலை புக்கனர் - நிகும்பிலை என்ற இடத்துள் புகுந்தார்கள். ஆல் - அசை.

சேனாபதி - நீலன்; (யுத்த. 1025) உரைபார்க்க. சேவகர் - வீரர். வானரர் கொள்ளி கொள்கையினர் ஆதல் - (யுத்த. 2796). நிகும்பிலையில் ஒரு கோயிலும் ஆலமரமும் இருந்தன என்று முதனூல் கூறும். அக்ம்+கை - அங்கை.

பி - ம். 1. சேவகனர்.

2. கொள்ளியினங்கையினர்.

3. கானர் மலையுந் நெறியுங்கழியப்; கறியுங்கழியப்; கிழியப். 15

## அரக்கர் படைப் பரப்பு

2884. உண்டாயதொ ராலுல குள்ளொருவன்
கொண்டானுறை கின்றது போற்குலவி
விண்டானும் விழுங்க விரிந்ததனைக்
கண்டார வரக்கர் கருங்கடலே.

உலகு - உலகங்களை யெல்லாம், ஒருவன் - ஒப்பற்ற திருமால், உள் கொண்டான் - தன் திருவுந்தியுள் அடக்கி, உறைகின்றது போல் - (தான்) தங்கியிருப்பதுபோன்ற, ஓர் ஆல் உண்டு ஆயது - (இலகளைக்கொண்ட ஓர் ஆலமரம்) அங்கு உளதாயது; (அங்கு), அ அரக்கர் கருங்கடல் - அந்த அரக்கர் சேனையாகிய கரிய கடல், குலவி - விளங்கி, விண் தானும் விழுங்க - வானத்தையும் விழுங்குமாறு, விரிந்ததனை கண்டார் - விரிந்து நின்ற (அவ் ஆலமரத்தை) இலக்குவன் முதலியோர் கண்டனர். ஏ, அசை.

முதனூலில் யுத்தகாண்டம் எண்பத்தைந்தாம் சருக்கத்தில் 'நிகும்பிலை என்னும் ஆலமரத்தடி' என்று கூறப்பெற்றிருப்பதால் அங்கு ஓர் ஆலமரம் உள்ளமை பெறப்படும். கருங்கடல் போன்ற சேனை அதன் கீழ்த் தங்கக் கூடியதாயிருந்தமையின், அதன் இலைகள் திருமால் சயனித்த இலைபோல் அகன்று நீண்டு இருந்தமை கூறப் பெற்றது என்க. (ஒப்பு): 'அரிதனி துயின்ற தோரிலையில்' என்ற தக்கயாகப்பரணி (146)ம் பகுதியையும், 'மகாவிட்டுணு

பதினாலு லோகமும் அமுது செய்தருளிப் பள்ளிகொள்ளும் பாற் கடற் பரப்புப் போதாமல் வந்து உறங்கும்படி விரிந்த இலையை யுடையது' என்ற அதன் உரையையும் காண்க. அந் நூலின் 148-ஆம் கண்ணியையும், அதற்கு ஒப்புமை காட்டிய பாசவதைப். 163-ஆம் கண்ணியையும் காண்க.

ஸ்ரீமத் கம்பராமாயண வசனம் என்ற நூலில் இச் செய்யுளுக் குப் பின் வருமாறு பொருள் வரையப் பெற்றுள்ளது :—'ஒரு ஆலிலையின்மீது உலகங்களைத் தமக்குள்ளே ஒடுக்கின ஒரு காரண வஸ்துவானவர் சயனித்துக் கொண்டிருக்கிறது போல, இந்திரஜித் திருக்கின்றதையும், அந்த வஸ்துவின் திருமேனி சுற்றிலுமிருந்த ஆலிலையைப் போல ராக்ஷசக் கருங்கடல் சூழ்ந்திருந்தனன்'.

இச் செய்யுளுக்குரிய ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்கள் :— 'நிகும்பலையிலுள்ள ஆலமரத்துக்குத் திருமாலது ஆலமரம்;...... நிகும்பலையில் மத்தியில் வடவிருக்கம் போல ஓர் ஆல் நிற்கும்'.

பி - ம். 1. உண்டாகியதே யுலகுள்ளொருவன் ; குண்டபிரான்.
2. போற்குவியா.
3. விண்டாலம் விழுங்க விரிந்ததனை.
4. கருங்கடலை, பெருங்கடலை, பெருங்கடலே. 16

2885. நேமிப்பெயர் யூக நிரைத்துநெடுஞ்
சேமத்தது நின்றது தீவினையோன்
ஓமத்தனல் வெவ்வட வைக்குடனே
பாமக்கட னின்றதொர் பான்மையதை.

நேமி பெயர் யூகம் நிரைத்து - சக்கரம் என்ற பெயரையுடைய அணிவகுப்பை இயற்றி, நெடும் சேமத்து அது நின்றது - நீண்ட பாதுகாவலைச் செய்யும் அப்படை நின்ற தன்மையானது, தீவினை யோன்-கொடுஞ் செயலையுடைய இந்திரசித்து, (இயற்றும்) ஓமத்து அனல் - ஓமத்தில் எழுந்த தீ, வெவ் வடவைக்குடன் - கொடிய வடவைக் கனலோடு, பாம கடல் - பரந்த கருங்கடல், நின்றதொர் பான்மையதை - நின்ற தன்மையை (கண்டார்).

இந்திரசித்து வேள்வியில் எழுப்பிய ஓமக்கனல் வடவைத் தீக்கும். சேமப்படை சூழ்ந்து நின்றமை பரந்த கருங்கடலுக்கும்

உவமை. யூகம் - வியூகம்; அணிவகுப்பு; சக்கராயுத உருவத்தில் அமைக்கப் பெறும் அணிவகுப்பு சக்கரவியூகம் எனப்பெறும். நிரைத்தல் - வரிசைபட அமைத்தல். சேமம் - பாதுகாவல். வேள்வி இடத்தைச் சூழ்ந்து கடல்போல் பரந்த படை நின்றது என்க. பாமக் கடல் - 'பாமைக் கடல்: பரந்த கருங்கடல் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு; 'பாமமா கடல்' (பால. அரசியற். 7; கார்முகப். 378) பாமம் - ஆழமும் ஆம். இதுமுதல் நான்கு செய்யுட்களுக்கும் முன் செய்யுளில் வந்த 'கண்டார்' என்பதே முடிவாகும்.

பி - ம். 1. யூபநிரைத்து; யுற்றுநிரைத்த.
2. சேமத்துறை நின்றது; நீவினையான்.
3. ஓமக்கனல்; ஓமக்கடல்.
4. பரமைக் கடல்; பாமமா கடல், பான்மையதே. 17

2886. காராயின காய்கரி தேர்பரிமாத்
தாராயிர கோடி தழீஇயதுதான்
நீராழியொ டாழி நிறீஇயதுபோல்
ஓராயிர மியோசனை யுள்ளதனை.

கார் ஆயின - மேகத்தை ஒத்தனவாகிய, காய் - கோபிக்கும் இயல்பையுடைய, கரி - யானைகளும், தேர் - தேர்களும், பரிமா - குதிரைகளும், தார் - காலாட் படைகளும், ஆயிர கோடி தழீஇயது - ஆயிரங்கோடிகளாகச் சேர்ந்து நின்ற தன்மை, நீர் ஆழியொடு ஆழி நிறீஇயது போல் - நீர்க்கடலோடு வேறு கடல்கள் (கலந்து) அமைக்கப்பெற்றன போல், ஓராயிரம் யோசனை உள்ளதனை - ஓர் ஆயிர யோசனை தூரம் பரந்து நின்றதை (இலக்குவன் முதலியோர் கண்டனர்.) தான்: அசை.

கரிகள் மேகத்தை ஒத்தனவாயிருந்தன என்க. தார் - கொடிப் படை; 'தாரொடு பொலிந்த......புரிசை' (மலைபடு. 227); இங்கு, தார் காலாட் படையைக் குறித்து நின்றது. ஓமம் செய்யும் இடத்தைச் சூழ்ந்து நின்ற நாற்படைகளின் அளவையும் பரப்பையும் சுட்டினர். 'நீராழியொடாழி' என்றமையால் பால், தேன், முதலிய கடல்களைச் சுட்டியவாறும். ஆழி - கரையும் ஆம்.

பி - ம். 1. வெங்கர்தேர் ; தேர்கலிமா ; காராயின வெங்காய் கரிதேர் கலியாட் (டாராயிர), வெங்கரிதேர் கலியாட் பரியாள்.
2. டாராயின கோடி தழியெள போர் ; தாராயினகோடி.
3. நிறியனபோல்.
4. ராயிரமால் புடையுள்ளதனை. 18

2887. பொற்றேர்பரி மாகரி மாபொருதார்
எற்றேபடை வீரரை யெண்ணிலமால்
உற்றேவிய யூக முலோகமுடைச்
சுற்றுயிர மூடு சுலாயதனை.

பொருதார் - போரிடும் முன்னணிப் படையில், பொன் தேர் - பொன்னாலாகிய தேர்களும், பரிமா - குதிரைகளும், கரிமா - யானைகளும், எற்றே - எவ்வளவு ஆவன! (கூற முடியாது என்றபடி); படை வீரரை எண்ணிலம் - காலாட் படை வீரர்களைக் கணக்கிட்டோமில்லை; உற்று - இந் நால்வகைப் படைகளும் அமையுமாறு, ஏவிய யூகம் - இந்திரசித்தினால் ஏவப் பெற்ற வியூகம், உலோகம் சுற்று உடை ஆயிரம் ஊடு சுலாயதனை - உலகத்தைச் சுற்றி அமைந்த கடல்களோடு சூழ்ந்திருந்ததைக் (கண்டார்கள்). ஆல், அசை.

தார் - முன்னணிப் படை; (18-ஆம் செய்யுள்). உலோகம்; லோகம் என்ற வடசொல்லின் திரிபு. சுற்று - உலகத்தைச் சுற்றியுள்ள கடலைக் குறித்தது; சுலாயது; சுலவுதல்-சுழலுதல்; சுற்றுதல்; 'அரவூறு சுலாய்மலை தேய்க்கும்' (திவ். திருவாய். 7, 4, 2); 'உற்றேவிய.....சுலாயது' என்றது, சதுரங்க சேனையும் அணிவகுப்பாக உலகச் சுற்றெல்லாம் சுற்றினது' என்பது பழையவுரை.

பி - ம். 1. கரிமா பொருகால்; புரிமால்கரி மாபொருதேர் ; மாபெருகார்.
2. யெண்ணிலவால்.
3. யூப முலோகமுடைச் ; லோகமுடன், முலோகமுடற்.
4. சுற்றுயிரம், சுற்றுயது ; கோடி, சுலாயவே ; மூண்டு சுலாயதனை. 19

2888. வண்ணக்கரு மேனியின் மேன்மழைவாழ்
விண்ணைத்தொடு செம்மயிர் வீசுதலால்
அண்ணற்கரி யானன லம்படைவெம்
பண்ணைக்கடல் போல்வதொர் பான்மையதை.

கரு வண்ண மேனியின் மேல்-கரிய நிற (அரக்கர்) உடல்களின் மீது, மழை வாழ் விண்ணை தொடு செம்மயிர் வீசுதலால்-மேகங்கள் வாழ்கின்ற வானைத் தொடும் (அவர்களின்) சிவந்த தலை மயிர்கள் வீசுவதால், கரியான் அண்ணல் - கரிய நிறத்தையுடைய பெரியோனான இராம்பிரான் (விட்ட), அனல் அம் படை-நெருப்பு அம்பு (ஆக்னேயாஸ்திரம்) பட்ட, வெம் பண்ணைக் கடல் போல்வது ஓர் பான்மையதை - கொடிய தன்மையையுடைய தொகுதியான கடலை ஒத்து நின்ற ஒரு தன்மையைக் (கண்டார்கள்).

மேனியும் குஞ்சியும் கருங் கடலையும் அதன்மீதுபட்ட ஆக்னேயாஸ்திரத்தையும் ஒத்தன. அனலம் படை - ஆக்னேயாஸ்திரம். இராமபிரான் கடல்மீது அஸ்திரம் விட்டது ; யுத்த. 547-8.

பி - ம். 3. படைவேம் ; படவெம்.
4. நின்றதொர் ; பான்மையதே. 20

## அரக்கர் படை ஒலிகுன்றியிருத்தல்

2889. வழங்காசிலை நாணொலி வானில்வரும்
பழங்கார்முக மொத்த பணைக்குலமும்
தழங்காகடல் வாழ்வன போல்தகைசால்
முழங்காமுகி லொத்தன மாமுரசே.

சிலை - அரக்கர்களின் கைகளிலிருந்த விற்கள், நாண் ஒலி வழங்கா - தம் நாண்களில் ஒலி முழங்காதனவாய், வானில் வரும் பழம் கார்முகம் ஒத்த - வானத்தில் தோன்றும் பழமையான இந்திரதனுசை ஒத்தன, பணை குலமும் கடல் வாழ்வனபோல் தழங்கா - பணையென்னும் வாத்தியக் கூட்டங்களும் கடல் நீரில் அமிழ்ந்தனபோல முழங்கவில்லை; தகைசால் மாமுரசு முழங்கா முகில் ஒத்தன - இயல்புமிக்க பெரிய முரசுகளும் ஒலிக்காத மேகங்கள் போன்றிருந்தன. ஏ - அசை.

பகைவர்க்குத் தெரியாமல் வேள்வி நடத்தினமையால் போர் வீரர்கள் எவ்வித முழக்கமும் செய்யலாகாது என்று இந்திரசித்து

கட்டளையிட்டிருந்தான் என்க. வானில் வரும் கார்முகம் - இந்திர வில். பணை - பெரிய முரசு; 'வியன்பணை யுருமென வதிர்பட்டு' (பதிற்றுப். 39, 5). பணிக்குலம் என்று பாடங்கொண்டு 'சங்குகளின் தொகுதி' என்றும், 'நாக பாசங்கள்' என்றும் சிலர் பொருள் கூறுவர். 'பணைவேறு; முரசம் வேறு' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. 'தழங்கா கடல் - இராமபிரான் ஆணையால் கடல் சத்தியா திருந்தது; சேது புராணம்; தேவையுலா' என்பதும் ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு; அடுத்த செய்யுளும் காண்க. இதன்படி பணைக் குலமும் தழங்கா கடல்போல் வாழ்வன என அந்வயப் படுத்தலும் ஆம். 'வழங்கா சிலை, தழங்கா கடல்; முழங்கா முகில்' என்பன வற்றின் பொருள் நயம் ஓர்க.

பி - ம். 1. வழங்கார் சிலை; வானிழேடும்.

2. பணிக்குலமும்.

3. தழங்கார் ! போற்றகைநாள்.

4. மும்முரசே, வான்முரசே. 21

## வானரசேனை செய்த முழக்கமும் விளைத்த பூசலும்

2890. வலியான விராகவன் வாய்மொழியால்
சலியாத நெடுங்கடல் தானெனலாய்
ஒலியாதுறு சேனையை யுற்றொருநாள்
மெலியாதவ ரார்த்தனர் விண்கிழிய.

வலியான - வலிமை மிக்க, இராகவன் வாய்மொழியால் - இராம பிரானின் கட்டளையால், சலியாத - அசையாத, நெடும் கடல்தான் எனல் ஆய் - நீண்ட கடலே என்று சொல்லுதல் போல அமைந்து, ஒரு நாள் மெலியாதவர் - ஒரு நாளும் மெலிவு என்பதை அறியாதவ ரான வானரப் படையினர், ஒலியாது உறு சேனையை உற்று - ஒலி செய்யாமல் நின்ற அரக்கர் படையை நெருங்கி, விண் கிழிய - வானம் கிழியுமாறு, ஆர்த்தனர் - முழக்கம் செய்தனர்.

இராகவன் வாய் மொழியால் கடல் ஒலியாதுற்றது; தேவை யுலா 14-ஆம் கண்ணிக்கு 'ஏகாந்தராமம் என்பது இராமேசு வரத்திலுள்ள ஓரிடம்; இராமர் இராவண சங்காரத்திற்குரிய காரியங்களைப் பலருடன் ஆலோசித்துக் கொண்டிருக்கையிற் கடல்

முழக்கம் ஒருவர் பேசியது ஒருவர்க்குக் கேளாமலிருக்கும்படி செய்தமையின் அவர் கோபிக்க, உடனே கடல் ஓசையின்றி அடங்கினதால், அவ்விடத்திற்கு ஏகாந்தராமமென்றும் ஏகாந்தராம நகரம் என்றும் அங்கு எழுந்தருளியிருக்கும் இராமபிரானுக்கு ஏகாந்தராமனென்றும் பெயர்கள் உண்டாயின' என்றும் ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்புரை வரைதல் காண்க. 'மாயோனடக்கும், நெடுங்கடல் போலடங்கி நிற்க' என்ற இந் நூலின் 91-ஆம் கண்ணியையும் காண்க. இந்திரசித்தின் ஆணையால் சேனை ஒலியடங்கி நின்றதற்கு இராமபிரான் ஆணையால் கடல் ஒலியடங்கியிருந்தமை ஒப்பு.

பி-ம். 1. வலியாய விராகவன், வலியானவ் ; வாய்மொழியாம்.

2. தானெனலான்.

3. ஒலியாதுயர் சேனையை, ஒலியாவொரு. 22

2891. ஆர்த்தாரெதி ரார்த்த வரக்கர்குலம்
போர்த்தார் முரசங்கள் புடைத்தபுகத்
தூர்த்தாரிவர் கற்படை சூன்முகிலின்
நீர்த்தாரையி னம்பவர் நீட்டினரால்.

ஆர்த்தார் - வானர வீரர் முழங்கினார்கள்; அரக்கர் குலம் எதிர் ஆர்த்த - அரக்கர் கூட்டங்கள் எதிர்த்து முழங்கின; தார் போர் முரசங்கள் - மாலைசூடிய போர் முரசங்கள், புடைத்த - அடிக்கப் பெற்றன; இவர் - இவ் வானரப் படையினர், கல் படை - கற்களாகிய (தம்) ஆயுதங்களினால், புக - (அரக்கர் சேனையுள் அக் கற்கள்) நுழைய, தூர்த்தார் - நிரப்பினார்கள்; அவர் - அவ்வரக்கர்கள், சூல் முகிலின் நீர் தாரையின் - கருக்கொண்ட முகிலினின்று சொரியும் நீர் ஒழுங்கைப் போல, அம்பு நீட்டினர் - அம்புகளைச் செலுத்தினார்கள்; ஆல்: அசை.

பி-ப். 1. அரக்கர்வலம், அரக்கர்களும்.

2. புடைத்தனவால், புடைக்கமுகந்.

4. னம்புகணீட்டினரால். 23

2892. மின்னும்படை வீசலின் வெம்படைமேல்
பன்னுங்கவி சேனை படிந்துளதால்
துன்னுந்துறை நீர்நிறை வாவிதொடர்ந்
தன்னங்கள் படிந்தன வாமெனலாய்.

வெம் படை - கொடிய அரக்கர் சேனை, மின்னும் படை வீசலின் - ஒளி வீசுகின்ற ஆயுதங்களை வீசுதலினால், (அவ்வாயுதங்கள்), பன்னும் - சொல்லப்படுகின்றன, கவி சேனை மேல் - வானரப் படைமீது, துன்னும் துறை நீர் நிறை வாவி - நெருங்கிய துறைகளையுடைய நீர் நிறைந்த குளத்திலே, தொடர்ந்து - வரிசையாக, அன்னங்கள் படிந்தன ஆம் எனலாய் - அன்னங்கள் தங்கின என்று சொல்லத்தக்கதாய், படிந்துளது - படிந்திருந்தன. ஆல் : அசை.

அரக்கர் வீசிய படைகள் வானரர்மீது படிந்துள்ள தன்மை, வாவித்துறைகளில் அன்னங்கள் தங்கினபோலக் காணப்பட்டன. வானரர் படை, வாவி ; படிந்த ஆயுதங்கள், அன்னங்கள்.

பி - ம். 1. வீசினர் வெம்பகைமேல் ; பகைபோய் ; வீசிய வெம்படை ; விகென வெம்படை, வீயெனவெம்படை.
2. கவிமீது ; சேனை பரந்துளதால். படிந்துளவால்.
3. நீர்த்துறை வாவி.
4. படிந்துளவாமெனலாம் ; மெனலான். 24

2893. வில்லும்மழு வும்மெழு வும்மிடலோர்
பல்லுந்தலை யும்முட லும்படியில்
செல்லும்படி சிந்தின சென்றனவால்
கல்லும்மர முங்கர முங்கதுவ.

கல்லும் மரமும் கரமும் - வானவர் வீசிய கற்களும், மரங்களும், அவர்களுடைய கைகளும், கதுவ சென்றன - அரக்கர்களைப் பற்றச் சென்றன; (அவற்றால்), மிடலோர் - வலிமை வாய்ந்த அரக்கர்கள், (பிடித்த), வில்லும் மழுவும் எழுவும் - விற்களும் கோடாலிகளும் வளைதடிகளும், பல்லும் தலையும் உடலும் - (அன்றி), அவர்களுடைய பற்களும், தலைகளும், உடல்களும்; படியில் செல்லும்படி சிந்தின - தரைமீது விழும்படி சிந்தின. ஆல் : அசை.

கல்லும் மரமும் வீசினவர் வானரர் என்க. அரக்கர்களின் படைக்கலங்களும் உடலுறுப்புக்களும் சிந்தின. முன் செய்யுளில் அரக்கர் வீசிய படைக்கலங்களின் தோற்றத்தைக் கூறி, இங்கு, வாநரர் வீசிய கற்கள் முதலியவற்றினுல் விளைந்தவற்றைக் கூறினுர்.

பி-ம். 1. எழுவும்மடலோர் ; வும்விடுவோர்.
2. உடலும்படையில்.
3. செல்லும்பொறி சிந்தின ; சிந்தினவால்.
4. கல்லுமலையும் ; சரமுங் கதுவ. 25

2894. வாலுந்தலை யும்முட லும்வயிறும்
காலுங்கர முந்தரை கண்டனவால்
கோலும்மழு வும்மெழு வுங்கொழுவும்
வேலுங்கணை யும்வளை யும்விசிற.

(அரக்கர்கள்), கோலும் - தண்டாயுதங்களையும், மழுவும் - கோடாலிகளையும், எழுவும்-வளை தடிகளையும், கொழுவும் - கொழுக்களையும், வேலும் - வேலாயுதங்களையும், கணையும் - அம்புகளையும், வளையும் - வளையங்களையும், விசிற - வீசி எறிய, (வானவர்களின்) வாலும், தலையும், உடலும், வயிறும், காலும், கரமும், தரை கண்டன - வால்கள், தலைகள், உடல்கள், வயிறுகள், கால்கள், கைகள் என்றவை (உடல்களிலிருந்து) பிரிந்து தரையில் விழுந்தன. ஆல் : அசை.

முன் செய்யுளில் வானரர்களின் செயல்களால் அரக்கர் உடல்களுக்கு நிகழ்ந்தவற்றைக் கூறி, இச்செய்யுளால் வானரர்கள் அரக்கரின் செயல்களால் பட்டவற்றைக் கூறினுர் என்க. கொழு - உலோகக் கோல்; ஏர்க்காறு எனலும் ஆம். வளை - சக்கராயுதமும் ஆம். வளை - பாராவளை என்பாரும் உளர்.

பி-ம். 1. உடலுந் தலையும் ; வயிறுமுடலும்.
2. கரை கண்டிலவால்.
3. கொழுவு மெழுவும். 26

## வீடணன் கூற்று

2895. வென்றிப்படை வீரனை வீடணன்நீ
நின்றிக்கடை தாழுதல் நீதியதோ
சென்றிக்கடி வேள்வி சிதைத்திலையேல்
என்றிக்கடல் வெல்குது மியாமெனலும்.

(இவ்வாறு போர் நிகழ்ந்துகொண்டிருக்க), வீடணன் - வீடணன், வென்றி படை வீரனை - வெற்றி பெற்று வரும் படைகளையுடைய வீரனான இலக்குவனை நோக்கி, 'இ கடை - இவ்விடத்து, நீ நின்று தாழுதல் நீதியதோ - நீ (வெறுமனே) நின்று காலம் போக்குதல் நீதியாகுமோ; கடி இ வேள்வி - காவலையுடைய இந்த வேள்வியை, சென்று சிதைத்திலையேல் - போய் அழிக்காவிடில், யாம் என்று இ கடல் வெல்குதும் - யாம் எப்பொழுது இந்தக் கடல்போன்ற சேனையை வெல்லப் போகிறோம்?' எனலும் - என்று சொன்னபோது.

இச்செய்யுள் 2898-ஆம் செய்யுளிலுள்ள புக்கான் என்பதனோடு இயையும். போரை நீடிக்கவிட்டிடின் இந்திரசித்து வேள்வியை முடித்துவிடுவான் என்று கருதி வீடணன் இலக்குவனை வேள்வியைச் சிதைக்க ஊக்கினான் என்க.

பா - ம். 1. வென்றிச்சிலை வீரனை.
4. வெல்லுதும் யாமெனலும்.



## வானத்திற் பலரும் சூழ்தல்

2896. தேவாதிய ருந்திசை நான்முகனும்
மூவாமுத லீசனு மூவுலகின்
கோவாகிய கொற்றவ னும்முதலோர்
மேவாதவ ரில்லை விசும்புறைவோர்.

தேவாதியரும் - தேவர் முதலான பதினெண்கணத்தவரும், நால் திசை முகனும் - நான்கு திசைகளையும் நோக்கும் முகங்களை

யுடைய பிரமனும், மூவா முதல் ஈசனும் - மூத்தலில்லாத முதல்வரான சிவபிரானும், மூ உலகின் கோவாகிய கொற்றவனும் - மூன்று உலகங்களுக்கும் இறைவனான திருமாலும், முதலோர் விசும்பு உறைவோர் - முதலோரான வானவாசிகள் அனைவருள்ளும், மேவாதவர் இல்லை - (போரினைப் பார்க்க வானத்தில்) வந்து பொருந்தாதவர் இல்லை. (அனைவரும் வந்து கூடினர் என்றபடி).

மூவா முதல் ஈசன் என்பதற்குத் திருமாலென்றும், மூவுலகின் கோவாகிய கொற்றவனும் என்பதற்கு இந்திரன் என்றும் சிலர் பொருள் கூறுவர். தேவாதியர் - தேவர் முதலானவர்; இவர் பதினென் கணத்தவர் என்பர்.

பி - ம். 1. தேவாசுர ருந்நிசை.
3. நும்முதலாய், னும்முதலாம்.
4. விசும்பிடையே, விசும்புறைவார். 28

## இருபுறங்களிலும் படைகள் நிற்றல்

2897. பல்லார்படை நின்றது பல்லணியாய்
பல்லார்படை நின்றது பல்பிறைவெண்
பல்லார்படை நின்றது பல்லியமும்
பல்லார்படை நின்றது பல்படையே.

பல்லார் படை - பலர்களாயுள்ள வானரர்களின் படை, நின்றது - (போருக்கு முனைந்து) நின்றது; வெண்பிறை பல் பல்லார் படை - வெண்மையான பிறைச் சந்திரனை ஒத்த வக்கிரப் பற்களையுடைய பலரான அரக்கர் படை, நின்றது - (போருக்கு முனைந்து) நின்றது; பல்லார் படை பல்லியமும் நின்றது - அவ்வரக்கரின் பலராலான படைகளில் போர் இசைக் கருவிகளும் முழங்கின; பல் படையே - (அவர்க்கு எதிரே) பல படைகளான வானரங்களும், பல் ஆர் படை நின்றது - பற்களே தம் நிறைந்த ஆயுதங்களாகக் கொண்டு நின்றன.

இச் செய்யுளுக்கு அரக்கர்களின் நால்வகைப் படைகளின் நிலை கூறப்பட்டதெனப் பொருள் கூறுவாருமுளர். இச் செய்யுளால் இதுகாறும் ஒலி செய்யாது நின்ற அரக்கர் படை போருக்கு

முனைந்து தம் வாத்தியங்களை முழங்கச் செய்தன என்பது தெரிய வருகிறது. சில சுவடிகளுள் இச் செய்யுள் முன்னும், முன் செய்யுள் பின்னுமாக அமைந்துள்ளன. இதனில், யமகம் என்னும் சொல்லணி அமைந்துள்ளமை காண்க.

பி - ம். 1. பல்லணியால், பலவிதமாய்.

3. நின்றது பாகனெடும். 29

### இலக்குவன் போர் புரிதல்

2898. அக்காலை யிலக்குவ னப்படையுள்
புக்கானயி லம்பு பொழிந்தனனுல்
உக்கார வரக்கர்த மூரொழியப்
புக்கார்நம னுருறை தென்புலமே.

அக் காலை - அப்பொழுது, இலக்குவன் - இலக்குவன், அ படையுள் புக்கான் - அந்த அரக்கர் சேனையுள் புகுந்து, அயில் அம்பு பொழிந்தனன் - கூர்மையான அம்புகளை மழைபோல் சொரிந்தான்; (அதனால்), அவ் அரக்கர் உக்கார் - அந்த அரக்கர்கள் உயிர் சிந்தினர்; (அவர்கள்), தம் ஊர் ஒழிய - தம் சொந்த ஊரான இலங்கையை விட்டு, நமனுர் உறை தென்புலம் புக்கார் - இயமன் வாழும் தெற்கு உலகை அடைந்தார்கள். ஆல், ஏ : அசைகள்.

அயில் - கூர்மை; இரும்பும் ஆம்; அம்பின் நுனியில் இரும்பு அமைப்பதும் உண்டு. தென்புலம் - வைவஸ்வத நகரம்.

பி - ம். 3. உக்கார்களரக்கர், உக்காரவரக்கரும்.

4. புலமேல். 30

2899. தேருமத மாகரி தேர்பரிமா
நூருயிர கோடியின் நூழில்படச்
சேருர்குரு திக்கட லில்திடரில்
கூருயுக வாவி குறைத்தனனுல்.

(மேலும் இலக்குவன்), தேரு - தெளிவற்ற, மதம் மா கரி - மதங் கொண்ட பெரிய யானைகளும், தேர் - தேர்களும், பரிமா - குதிரை

களும், நூறுயிர கோடியின் - நூறுயிர கோடிக்கணக்காக, நூழில் பட - கொன்று குவிக்கப்படவும், (அதனால் உண்டான), சேறு ஆர் குருதி கடலில் - சேறு மிகுந்த இரத்தக் கடலில், திடரில் கூறுய் உக - மேட்டிடங்கள் போல துண்டங்களாகச் சிந்துமாறு, ஆவி - அரக்கர்களின் உயிர்களை, குறைத்தனன் - அழித்தான். ஆல் : அசை.

நூறுயிர கோடி - அளவற்ற தன்மையைக் குறித்தது. நூழில் - கொன்று குவிக்கை. 'ஒள்வாள் வீசிய நூழிலும்' (தொல். பொ. 72); பு. வெ. 7, 15; புறநா. 309 - 10ம் காண்க. குருதி கடலாகப் பெருக, அவர்களின் உடற் கூறுகள் திட்டுக் களாயின என்க. முன் செய்யுளில் உள்ள, 'இலக்குவன்' என்பதையே இங்கு எழுவாயாகக் கருதுக.

பி - ம். 2. நூறுயிர மாயிர நூழில்படச்.
3. திடராய்க.
4. வாளிகுறைத்தனனால்; வாவி குறைந்தனனால். 31

2900. வாமக்கரி தாளழி வார்குழிவன்
தீமொய்த்த வரக்கர்கள் செம்மயிரின்
தாமத்தலை புக்க தழங்கெரியின்
ஓமத்தை நிகர்த்த வுலப்பிலவால்.

வாமம் - அழகிய, கரி - யானைகள், தாள் - முன்னங்கால்களால், அழி - தோண்டிய, வார் - நீண்ட, குழி - குழிகளிலே, வன் - வலிமை வாய்ந்த, அரக்கர்கள் - அரக்கர்களின், தீ மொய்த்த செம் மயிரின் - தீப் போன்ற நெருங்கிய சிவந்த மயிரினையுடைய, உலப்பு இல தாம தலை புக்க - அளவற்ற மாலை சூடிய தலைகள் புகுந்தவை, தழங்கு எரியின் ஓமத்தை நிகர்த்த - முழங்குகின்ற நெருப்பினை உடைய ஓமகுண்டங்களை ஒத்தன. ஆல், அசை.

போர்க்களத்தில் யானைகள் தம் கால்களால் குழித்த குழி களில், இலக்குவன் அம்புகளால் வெட்டுண்டு விழுந்த அரக்கர் தலைகள், அவர்களின் செம்பட்டை மயிர்களால் நெருப்பெரியும் ஓம

குண்டங்களை ஒத்தன. மொய்த்தல் - நெருங்குதல். தழங்குதல் - முழங்குதல்; 'தழங்குகுரன் முரசமொடு' (அகநா. 24).

பி - ம். 1. தானழிவார், தானிழிவார்.
2. நிமந்த வரக்கர்கள்.
3. தாமத்தலையுக்க.
4. நிகர்ப்ப; வுலப்பிலதால். 32

2901. சிலையின்கணை யூடு திறந்தனதிண்
கொலைவெங் களிமால்கரி செம்புனல்கொண்
டுலைவின்று கிடந்தன வொத்துளவால்
மலையுஞ்சுனை யும்வயி றும்முடலும்.

சிலையின் கணை - இலக்குவன் பிடித்த வில்லினின்று எழுந்த அம்புகள், திண் கொலை வெம் களி மால் கரி - வலிய கொலை செய்யும் இயல்பையுடைய கொடிய மதம்கொண்ட பெரிய யானைகளை, ஊடு திறந்தன - உள்ளே பிளந்தனவாக, செம்புனல் கொண்டு - (அவை) குருதி வடிய, உலைவின்று கிடந்தன - அசையாமல் கிடந்தன; (அவற்றின்) உடலும் வயிறும் - அவ் யானைகளின் உடல்களும் வயிறுகளும், மலையும் சுனையும் ஒத்துள - மலையையும் (ஆங்குள்ள) நீர்ச் சுனைகளையும் ஒத்திருந்தன. ஆல் - அசை.

இலக்குவன் பாணங்களால் அரக்கர் யானைகள் இரத்தம் சொரியக் கீழே விழுந்து அசைய முடியாமல் கிடந்தன. அவற்றின் உடல்கள் கற்பாறைகளைப் போலவும், வயிறுகள் சுனைகள் போலவும் இருந்தன. களி - யானை மதம்; 'கால வேகங் களி மயக் குற்றென' (மணி. 4; 44). செம்புனல் - குருதி; உலைவு - அலைவு.

பி - ம். 1. சிறந்தனதன்; நிரிந்தனதிண். 33
2. வெங்குல மாக்கரி; செம்புனல்தோய்.

2902. விற்றொத்திய வெங்கணை யெண்கின்வியன்
பற்றொத்திய போற்படி யப்பலவும்
முற்றச்சுடர் மின்மினி மொய்த்துளவன்
புற்றொத்த முடித்தலை பூழியன.

பூழியன - புழுதியிற் கிடந்தனவான, முடி தலை - கிரீடங்களைக் கொண்ட (அரக்கத் தலைவர்களின்) தலைகள், வில் தொத்திய - இலக்குவனின் வில்லினின்று படர்ந்த, வெம் கணை பலவும் - கொடிய அம்புகள் பலவும், எண்கின் - கரடியின், வியன் - பெரிய, பல் தொத்திய போல் - பற்கள் பதிந்தன போல், படிய - (அரக்கர் கள்மீது) படிய, சுடர் மின்மினி முற்ற - ஒளிமிக்க மின்மினிப் பூச்சி கள் முழுவதும், மொய்த்து உள - மேலே மொய்த்துக் கொண்டிருக் கும், வன் புற்று ஒத்த - வலிய பாம்புப் புற்றை ஒத்தன.

கணை, படிய தலைகள், பூழியன, என்று அந்வயிக்க. எண்கின் பல், கணைக்கு ஒப்பு; தலை, புற்றுக்கு ஒப்பு. 'அம்பினால் அற்று விழுந்த மகுடத்தில் மாணிக்கம் ஒளி விடுகிறது, புற்றைச் சூழ்ந்த மின்மினி ஒத்தது' என்பது பழையவுரை. 'சில பாணங்கள் பட்டு உதிர்ந்த பற்கள் மின்மினிப் பூச்சிக்கு ஒப்பாயிருந்ததுகள்; அறுந்து விழுந்த தலைகள் அம்பு தைத்திருப்பதனால் பாம்புள்ள புற்றுக்களை யொத்துப் பூமியிற் கிடந்துள்ளன' என்பது ஸ்ரீ கம்பராமாயண வசனம். மின்மினி மொய்த்த புற்று; 'மின் மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்' (அகநா. 72, 3).

பா - ம். 1. வெங்கணை மின்னவியன, விட்டவியன், யெண்கினவன், யெண் ணவியன்.

2. பற்றொத்திய வோடிய பற்பலவும், போற்பொடியா பலவும், பல பலனும்.

3. முற்றொத்திய மிம்மினி.

4. பூமியினே, பூமியன.

34

2903. படுமாரி நெடுங்கணை பாய்தலினால்
விடுமாறுதி ரப்புனல் வீழ்வனவால்
தடுமாறுநெ டுங்கொடி தாழ்கடல்வாய்
நெடுபாமுகில் வீழ்வ நிகர்த்தனவால்.

நெடும் கணை - (இலக்குவனின் வில்லினின்று எழுந்த) நீண்ட அம்புகள், படு மாரி பாய்தலினால் - சொரியும் மழைபோல் (அரக் கரின் உடல்களில்) பாய்தலினால், விடும் உதிரம் புனல் ஆறு வீழ்வன - (அவ் உடல்களினின்று) வெளிப்படும் இரத்தமாகிய நீர்ப் பெருக்குக்கள் ஆறுபோல் (தரையில்) வீழ்வனவாயின; தடு மாறும் நெடும் கொடி - அப்பெருக்கில் நிற்கமாட்டாமல் தத்தளிக்

கும் அரக்கர் கொடிகள், தாழ் கடல் வாய் - ஆழ்ந்த கடலிலே, நெடு மா முகில் வீழ்வ - நீண்ட கரிய மேகம் விழுவதை, நிகர்த்தன - ஒத்தன. ஈரிடத்தும் ஆல்: அசை.

கணை மாரிக்கு ஒப்பு; கடல், குருதி வெள்ளத்துக்கும், கொடி முகிலுக்கும் ஒப்பு. உடலிலிருந்து பெருகும் இரத்த ஆற்றிலே கொடிகள் புகும் தோற்றம், கடலிலே மேகம் வீழ்வதை ஒத்தது என்று கூறப்பெற்றது. படுமாரி; படுதல்-விழுதல். மாரி பாய்ந்து, ஆறு உண்டாகி, கடலாகத் தோற்றுவது இங்கு நயம்.

இச் செய்யுளினுடையவும் அடுத்த செய்யுளினுடையவும் மூலங்கள் சோதிக்கப்பட வேண்டுமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 2. விடுமால் வீழ்வனவன்; வீழ்வனமின். 35

2904. மின்னார்கணை தாளற வீசவிழுந்
தன்னாருதி ரத்து ளழுந்துவதால்
ஒன்னார்முழு வெண்குடை யொத்தனவால்
செந்நாகம் விழுங்கிய திங்களினை.

மின் ஆர் கணை - ஒளிமிக்க (இலக்குவனின்) அம்புகள், வீச - பாய, ஒன்னார் முழு வெண்குடை - பகைவர்களின் முழுமையான வெண் குடைகள், தாள் அற - காம்புகள் அற்றுப்போக, விழுந்து - அவை (ஒடிந்து) விழுந்து, அன்னார் - அவ்வரக்கரின், உதிரத்துள் - (கீழே விழுந்து பெருகிக் கிடந்த) இரத்தத்துள், அழுந்துவதால் - ஆழ்ந்து போவதால், (அக் குடைகள்), செம் நாகம் விழுங்கிய - கேது என்னும் சிவந்த பாம்பு விழுங்கிய, திங்களினை ஒத்தன - சந்திரனைப் போன்றிருந்தன. ஆல்: அசை.

வெண் குடைக்குத் திங்களும், இரத்தப் பெருக்குக்குச் செந் நாகமும் உவமைகள். முன் செய்யுளில் கொடி இரத்தப் பெருக்கில் தடுமாறுவதைக் கூறி, இதனில் குடை இரத்தத்துள் மூழ்கு வதைக் கூறினார். செந் நாகம் - கேது. 'செந்நாகமொடு கரு நாகத்தின் செய்கை பெற்று' (கந்தபு. மகாசாத்தா. 25). இது முதல் பாடல்கள் சுவடிகளில் முன் பின்னாக முறை மாறியுள்ளன.

பி - ம். 1. அழுந்துளதால், அழுந்துதலால்.
3. யொத்துளவால். 36

2905 கொடுநீள்கரி கையொடு தாள்குறையப்
படுநீள்குரு திப்படர் கின்றனவால்
அடுநீளுயி ரின்மையி னாழ்கிலவால்
நெடுநீரிடை வங்கம் நிகர்த்தனவால்.

கொடு - கொடிய, நீள் - நீண்ட, கரி - யானைகள், கையொடு தாள் குறைய - தம் துதிக்கைகளும் கால்களும் (இலக்குவன் அம்புகளால்) வெட்டப்பட, படு நீள் குருதி - (உடல்களிலிருந்து) ஊற்றிய நீண்ட இரத்தப் பெருக்கில், படர்கின்றன - செல்லுகின்றவை, அடு நீள் உயிர் இன்மையின் - (நீருள்) அமுக்குதற்கு நீண்ட உயிர் இல்லாமையால் (உயிரற்றனவாக ஆகிவிட்டமையில்), ஆழ்கில - முழுகிப் போகாமல், நெடு நீர் இடை - நீண்ட கடலினிடையில் (மிதக்கும்), வங்கம் - கப்பல்களை, நிகர்த்தன - ஒத்தன.

யானைகளின் துதிக்கைகளும் கால்களும் துண்டிக்கப் பட்டு உயிரற்றனவாய்க் குருதி ஆற்றில் மிதந்தன; அவை கடலில் மிதக்கும் கப்பல்களை ஒத்தன என்பது கூறப் பெற்றது. நீள் கரி - உயரமான கரி எனலும் ஆம். அடுதல் - அமுக்குதல்; 'எடுத்தான் புயந்தன்னை யடுத்தார் மருதரை' (தேவாரம். 447, 8). உயிரற்ற பொருள்கள் மிதக்கும் என்பது வெளிப்படை. நெடு நீரிடை இடங்கர் என்ற பாடமும் கொள்ளத்தக்கது. ஆல், மூன்றிடங்களிலும் அசை.

பி - ம். 1. கொடுநீள் சுரிகையொடு ; தாளொடுகை.
2. படிநீர் ; குருதிப் பரவைக்கிடையே.
3. இடுநீளுயிர் ; இன்மைய நீக்கிலவால்.
4. நெடுநீரினிடங்கர் நிகர்த்தனவால். 37

2906. கரியுண்ட களத்திடை யுற்றனகான்
நரியுண்டி யுகப்பன நட்டனவால்
இரியுண்டவ ரின்னிய மிட்டிடலால்
மரியுண்ட வுடற்பொறை மானினவால்.

கரி உண்ட - கரியாகி எரிந்து போன, களத்திடை - (நிகும்பிலைப்) போர்க் களத்தில், கான் நரி - காட்டு நரிகள், உண்டி உகப்பன - (பிண மாமிச) உணவை விரும்பினவையாய், உற்றன நட்டன -

உற்று நடுவில் நின்றன; இரி உண்டவர் - (களத்தினின்று) ஓடியவர், இன்னியம் - (தங்களிடமிருந்த) இனிய வாத்தியங்களை, இட்டிடலால் - (கீழே) போட்டுவிடலால், மரி உண்ட - இறந்த, உடற்பொறை - உடல்களாகிய பாரங்களை, மானின - (அந்தவாத்தியங்கள்) ஒத்தனவாயின. ஈரிடங்களிலும் ஆல்: அசை.

மக்கள் உடல்களோடு, அரக்க வீரர்கள் விட்டுச் சென்ற இசைக் கருவிகளும் உடல்கள் போன்றிருந்தமையால், அவற்றையும் தின்னலாம் என்று அங்கே நரிகள் புகுந்தன என்க. பின் இரண்டடிகளுக்கு, 'நரிப்படைக்கு அஞ்சினவன் எப்படிச் செத்தவன் போலக் கிடப்பானோ அப்படிக் கிடந்தது' என்று பழையவுரை பொருள் கூறும். இச் செய்யுள் இன்னும் சோதிக்கத்தக்கதெனத் தோன்றுகிறது. மானின - ஒத்தன. உடற்பொறை - உடல்.

பி - ம். 1. யுற்றனகார், யற்றனகார், யிட்டனகார்.

2. நரியுண்டை யகப்பட நண்ணினவால்.

3. இரியுண்டிட ரின்னிய மிட்டிடரால்; இரியுண்டிடை; விட்டிடலால், விட்டிலதால்.

4. வரியுண்ட வுடற்பொறை மாளினவால். 38

2907. வாயிற்கனல் வெங்கடு வாளியினம்
பாயப்பரு மக்குலம் வேவனவால்
வேயுற்ற நெடுங்கிரி மீவெயிலாம்
தீயுற்றன போன்ற சினக்கரியே.

வாயில் வெம் கடு கனல் வாளி இனம் - முகத்தில் கொடிய நெருப்பைக் கொண்டுள்ள (ஆக்னேய) அத்திரத் தொகுதி, சின கரி பாய - வெகுளும் யானைகள்மீது பாய, பருமம் குலம்-(அவ் யானைகளின் மீதுள்ள கழுத்து மெத்தைத் தொகுதிகள், வேவன - அந் நெருப்பில் எரிவன, வேய் உற்ற நெடுகிரி மீ - மூங்கில் விளைந்த நீண்ட மலைமீது, வெயில் ஆம் தீ உற்றன போன்ற - வெப்பமான நெருப்புப் பட்டெரிந்தனபோலத் தோன்றின. ஆல், ஏ: அசைகள்.

ஆக்னேயஸ்திரங்கள் யானைப் பருமங்களை எரிய வைத்தமை, நீண்ட மலைமீதுள்ள மூங்கிற் காட்டை நெருப்பு பிடித்துக்

கொண்டது போன்றிருந்தது என்றார். வாயிற் கனல் வாளி - ஆக்னேயாஸ்திரம். பருமம் - யானைக் கழுத்து மெத்தை; 'அவ்வி யானை .... புனை பூண் பருமத்து' (கலித். 97, 4); முதுகிலிடும் அலங்கார விரிப்பு, அல்லது போர்வை எனலும் ஆம்; 'பருமம் புறம்கௌவி மின்ன' (திருவிளை. மாயப்பசு. 14).

பி - ம். 1. வாயிற்கடு வெங்கனல் வாளி, கொலைவெங்கடு வாளி.
2. மேவனபோல்.
3. பேயொப்பன நடிப்பன.
4. நீயொத்தன வொத்த. நீ மொய்த்திடு நீப நிகர்த்தனவால். 39

2908. அலைவேலை யரக்கரை யெண்கினுகிர்
தலைமேன்முடி யைத்தரை தள்ளுதலால்
மலைமேலுயர் புற்றினை வள்ளுகிரால்
நிலைபேர மறிப்ப நிகர்த்தனவால்.

அலை வேலை அரக்கரை - அலை வீசும் கடல்போன்ற அரக்கர்களின், தலைமேல் முடியை - தலைமீதுள்ள கிரீடங்களை, எண்கின் உகிர் - கரடிப்படைகளின் நகங்கள், தரை தள்ளுதலால் - தரையில் பெயர்த்துத் தள்ளுதலால், மலைமேல் உயர் புற்றினை - மலைமீது உயர்ந்து வளர்ந்துள்ள புற்றுக்களை, வள் உகிரால் - (கரடிகள்) தம் வன்மை மிக்க நகங்களால், நிலை பேர - நிலை பெயரும்படி, மறிப்ப - பெயர்ப்பதை, நிகர்த்தன - ஒத்திருந்தன. ஆல்: அசை.

அலை வேலை அரக்கர் - அலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வருவது போல் வரிசை வரிசையாக வருகின்ற, கடல் போன்ற அரக்கர் சேனையை என்றபடி. எண்கு - சாம்பன் தலைமையின்கீழ் வந்த கரடிப் படை. தலைமேல் முடியைத் தள்ளுதல், தலையைப் பிளந்து குருதியைக் குடிக்கும் இயல்பு கரடிக்குள்ளமையைக் குறித்தது. மலை அரக்கர்க்கும் முடி புற்றிற்கும் ஒப்பு. கரடி கறையானுக்காகப் புற்றினைப் பெயர்த்துத் தள்ளுதல் இயல்பு. 'அரக்கர் மணி முடியைப் பிடுங்கி இரத்தபானம் பண்ணுகிற கரடி மலைமேற் புற்றைத் தள்ளி அதனுள்ளிருந்த பாம்புகளைப் புழுக்களைத் தின்ப தொத்தது' என்பது பழையவுரை. (34-ஆம் செய்யுளும் இச் செய்யுளும் எண்கின் தொழிலைக் கூறுகின்றன.) இவற்றுள் ஒன்று அதிகப் பாடலாக இருக்கக்கூடும் என்று நினைக்க இடம் தரு

கின்றது. எனினும் கிடைத்த சுவடிகளிலெல்லாம் காணப் படுவதால் இவை இரண்டும் இங்குப் பாடமாகக் கொள்ளப் பெறுகின்றன.

பி - ம். 1. யரக்கரை, யங்கனுகி; யெண்கனுகி, யெண்கனுகிர், மயண்கிரை.
2. தலைமேவு முடித்தலை தள்ளுதலால், தள்ளுதருன், தள்ளுவதால். 40

2909. மாவாளிகண் மாமழை போல்வரலால்
மாவாளிகள் போர்தெறு மாமறவோர்
மாவாளிகள் வன்றலை யின்றலைவாழ்
மாவாளிக ளோடு மறிந்தனரால்.

மா - பெரிய, வாளிகள் - அம்புகள், மா - கரிய, மழைபோல் - மழைபோன்று, வரலால் - (இலக்குவனின் வில்லினின்று எழுந்து) வந்ததால், மா - பெரிய, ஆளிகள் - யாளிகளை, போர் - போரில், தெறும் - கொல்லுகின்ற, மா - சிறந்த, மறவோர் - (அரக்கக் காலாள்) வீரர்களும், மா ஆளிகள் - விலங்குகளான (யானைகளையும் குதிரைகளையும் நடத்தும்) யானை வீரர், குதிரை வீரர் ஆகிய இரு வகையினரின், வன் தலையின் தலை வாழ் - திண்ணிய தலைகளில் (சூட்டப் பெற்ற மலர்களில்) வாழ்கின்ற, மா - கரிய, அளிகளோடு - வண்டுகளோடும், மறிந்தனர் - இறந்து பட்டனர். ஆல், அசை.

மறவர், ஆளிகள், அளிகளோடு மறிந்தனர் என்று அந்வயிக்க. இச் செய்யுளில் யமகம் என்னும் சொல்லணி அமைந்திருத்தல் காண்க. மா, பல பொருளில் வரும் திரிசொல், ஆளி - சிங்க வகையைச் சார்ந்த ஒரு கொடிய விலங்கு; நூல்களிலும் சிற்பங்களிலும் காணப்பெறுவது; அத்தியானை எனவும்படும். நாலாம் அடியில் அளிகள், ஆளிகள் என நீண்டது விகாரம்.

பி - ம். 2. போர்தொறு மாமறவோர்.
3. யின்றலையால், யின்றிலவாய். 41

2910. அங்கங்கிழி யத்துணி பட்டதனல்
அங்கங்கிழி குற்ற வமர்த் தலைவர்
அங்கங்கிழி செம்புனல் பம்பவலைந்
தங்கங்க ணிரம்பி யலம்பியவால்.

அங்கு அங்கு இழி குற்ற அமர் தலைவர் - ஆங்காங்கு தோல்வி யடைந்த போர்த் தலைவர்கள், அங்கம் - தம் உடல் உறுப்புக்கள், கிழிய - கிழிந்து போக, துணிபட்டதனால் - வெட்டப்பட்டதனால், அம் கங்கு - அழகிய பருந்துகள், இழி செம்புனல் - சோர்ந்து வடிகின்ற குருதி, பம்ப - பரவ, அலைந்து - (அப் பிணக் காட்டிலே அங்குமிங்கும்) சென்று, அம் கம் கள் நிரம்பி - அழகிய தம் தலைகள் முழுமையும் நிறைந்து, அலம்பிய - (தம்மை அக் குருதி யில்) கழுவிக்கொண்டன. ஆல் : அசை.

இச் செய்யுளிலும் யமகம் வந்துள்ளமை காண்க. இது பல சுவடிகளிற் பலவாறு மாறியமைந்துள்ளது. மூலம் ஆராய வேண்டு மென்பர் ஸ்ரீ ஐயர் அவர்கள். அங்கம் - உறுப்பு. கங்கு - பருந்து. கம் - தலை. போர் வீரர்களின் அங்கங்களினின்று ஓடிய குருதிப் பெருக்கில் பருந்துகள் தலை மூழ்குமாறு அலைந்தன என்பது குறிப்பு. இச்செய்யுளோடு 2916ஆம் செய்யுளையும் ஒப்பிட்டுக் கொள்க.

பி - ம். 1. அங்கங்க மிகத்துனை பட்டதனுல் ; மிகத்துணிபட்டதனுல்.

3. அங்கங்கழி ; செம்புனலங்கமமைந்து ! பம்பவமைத்து.

4. அங்கங்க ணிரம்பி யலம்பியதால். 42

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

நாறுகிய வெள்ள நுனித்தகணக்
காறுதன சேனை யரக்கருடற்
கேறுதன வில்லை யிலக்குவன்வில்
தூறுநெடு வாளி துரந்திடவே.

## இலக்குவன் போர்ச் சிறப்பு

2911. வன்றுணையை வார்கணை மாரியினுல்
மூன்றுதையோர் தேர்கொடு மொய்பலதேர்ப்
பின்றுவெதிர் தானவர் பேரணியைக்
கொன்றுனென வெய்து குறைத்தனனுல்.

(இலக்குவன்), தாதை முன் ஓர் தேர் கொடு - தந்தையான தயரதன் முன்னொரு காலத்தில் ஒரு தேரைக் கொண்டு, மொய்

பல தேர் பின்று எதிர் தானவர் பேரணியை - நெருங்கிய பல தேர்களைக் கொண்டு, பின் வாங்காது எதிர்த்து நின்ற அசுரர்களின் பெரும் அணிகளை, கொன்றான் என் - கொன்றதுபோல என்று உலகம் கூறும்படி, வன் தானையை - தன்னை எதிர்த்து நின்ற வலிய அரக்கர் படைகளை, வார் கணை மாரியினால் - தான் கொண்ட நீண்ட அம்புகளாகிய மழையினால், எய்து - செலுத்தி, (அவற்றினை) குறைத்தனன் - குறையச் செய்தான். ஆல் : அசை.

இலக்குவன் தன் கணைகளால் அரக்கர் தானையைக் குறைத்ததற்கு, தயரதன் ஒரு தேர் கொண்டு அவுணர் தேர் பலவற்றை அழித்தது உவமை. தயரதன் ஒரு தேர்கொண்டு அவுணரின் பத்துத் தேர்களை அழித்தமை. 'வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேன்' (அயோத்தி. மந்திரப். 21); இங்குச் சம்பரன் பத்து வடிவங்கொண்டு பத்துத் தேர்களில் வந்தான் என்னும் வரலாறு கருதத்தக்கது; இன்னும், 'பொருதேர்க ளீரைந்தி னீரைவர் போர்பண், டொருதேரால் வென்ற வுரவோன்' (குலோத். உலா. 9); 'ஒருதேரா லையிரண்டு தேரோட்டி யும்பர், வருதேரால் வான் பகையை மாய்த்தோன்' (இராச. உலா. 11) என்ற பகுதிகளையும் காண்க.

பி - ம். 1. வன்றானையர், வார்கணை வாரியினால்.
2. அன்றுயிர மோலியனந்தனெழாப், யனந்தனமர்.
3. தாரணி பேரணியைக்.
4. குறித்ததனால், குறைந்ததனால். 43

## வேறு

## இந்திரசித்தின் வேள்வி கெடுதல்

2912. மலைகளு மழைகளும் வான மீன்களும்
அலையவெங் கால்பொர வழிந்த வாமென
உலையவெங் கனல்பொதி யோம முற்றவால்
தலைகளு முடல்களுஞ் சரங்க டாவின.

வெம் கால் பொர - கொடிய (பெரும் ஊழிக்) காற்று மோத, மலைகளும் மழைகளும் வான மீன்களும் அலைய - மலைகள் மேகங்கள் வானத்திலுள்ள நக்ஷத்திரங்கள் முதலியன தம் இடங்களினின்று

பெயர, அழிந்தவாம் என - (உலகம்) அழிந்துபோயின என்று சொல்லுமாறு, சரங்கள் தாவின தலைகளும் உடல்களும் - இலக்குவனின் சரங்கள் பாய்ந்த அரக்கர் தலைகளும் உடல்களும், உலைய - வருத்தமுற, வெம் கனல பொதி ஓமம் உற்ற - கொடிய நெருப்பு நிறைந்த ஓமகுண்டத்தை அடைந்தன. ஆல்: அசை.

சரங்கள் அரக்கர் தலைகளுடனும், உடல்களுடனும் ஓம குண்டத்தை அடைந்தன என்க. சரங்கள் தலைகளையும் உடல் களையும் அழித்துச் சென்றமை, ஊழிக்காற்று மலைகள் முதலிய வற்றை அழித்தற்கு ஒப்பு.

பி - ம். 1. மலைகளு மரங்களும.
2. கால்வழி யழிந்ததாமென, வழிந்ததாமென.
3. உலைகொள் கனல், கனலெழு மோம; பொழி யோமம்; உலைய வெங்கனல் பொதியு மொத்தவால்.
4. சரமுந்தாவுவ, சரமுந்தாவின, சரமுந்தள்ளுற. 44

2913. வாரண மனையவன் றுணிப்ப வான்படர்
தாரணி முடிப்பெருந் தலைக டாக்கலால்
ஆரண மந்திர மமைய வோதிய
பூரண மணிக்குட முடைந்து போயதால்.

வாரணம் அனையவன் - யானைபோன்ற இலக்குவன், துணிப்ப - அறுப்ப, வான் படர் - வானத்திற் படர்வனவான, தார் அணி - மாலைகள் அணிந்த, முடி பெரும் தலைகள் - முடிகளையுடைய பெரிய (அரக்கர்களின்) தலைகள், தாக்கலால் - சென்று மோதுதலால், (வேள்வியில் அமைந்த), ஆரண மந்திரம் அமைய ஓதிய - வேத மந்திரங்கள் பொருந்துமாறு ஓதப்பெற்ற, மணி பூரண குடம் - இரத்தினங்களால் அமைந்த நீர் நிறைந்த குடம், உடைந்து போயது - உடைந்து போயிற்று. ஆல்: அசை.

இலக்குவனுக்கு யானை; ஆரணிய. 45, 1088. ஆரணம் - வேதம். பூரணகுடம் - பூரண கும்பம். இலக்குவன் அம்புகளால் வெட்டப்பட்ட அரக்கர் தலைகள் வானவழியே சென்று பூரண கும்பங்களின்மீது விழுந்து அழிந்தன.

பி - ம். 1. றுணிந்த வான்படர், றுணிக்க வான்றொடர்.
4. பூரணபொற்குட முடைந்து; போனவால். 45

2914. தாறுகொள் மதகரி சுமந்து தாமரை
சீறிய முகத்தலை யுருட்டிச் செந்நிறத்
தூறுகள் சொரிந்தபே ருதிரத் தோங்கலை
யாறுகள் முருங்கன லவியச் சென்றவால்.

தாறு கொள் மதகரி சுமந்து - அங்குசத்தால் ஏவுண்ணும் மதங்கொண்ட யானைகளைச் சுமந்துகொண்டும், தாமரை சீறிய முகம் தலை உருட்டி - தாமரை (ஒவ்வாமையால்) கோபித்த முகங்களையும் தலைகளையும் உருட்டிக்கொண்டு, ஊறுகள் சொரிந்த- புண்களிலிருந்து கொட்டிய, செம நிறத்து - சிவந்த நிறத்தை யுடைய, உதிரத்து ஓங்கு அலை பேர் ஆறுகள் - இரத்தத்தினு லாகிய ஓங்கி வீசும் அலைகளையுடைய பெரிய ஆறுகள், முருங்கு அனல் அவிய - ஓமகுண்டத்தில் (யாவரையும்) அழிக்கவல்ல நெருப்பு அவியும்படி, சென்ற - ஓடின. ஆல் : அசை.

இரத்தப் பெருக்கு ஓம நெருப்பை அவித்தது என்பது கூறப்பெற்றது. தாமரை சீறிய முகம் என்றதால் அழகற்ற முகம் என்பதாயிற்று. ஊறு - புண். முருங்குதல் - அழித்தல்; 'முருங் கெரியிற் புக' (பால. கார்முக. 30).

பி - ம். 1. சுமந்த தாமரை.
2. சீறிய நெடுந்தலை.
3. செறிந்த பேருதிரம்.
4. யாறுகண் முருங்கனல்.

46

2915. தெரிகணை விசும்பிடைத் துமிப்பச் செம்மயிர்
வரிகழ லரக்கர்தந் தடக்கை வாளொடும்
உருமென வீழ்தலு மனலுக் கோக்கிய
எருமைகண் மறிந்தன மறியு மீர்ந்தவால்.

தெரி கணை - (இலக்குவன்) தேர்ந்தெடுத்து வீசிய அம்புகள், விசும்பு இடை - வான் வெளியில். செம்மயிர் வரி கழல் - சிவந்த தலைமயிரையும் கோடுகளமைந்த வீரக் கழல் கட்டிய (கால்களையு முடைய), அரக்கர் தம் தடக்கை - அரக்கர்களின் அகன்ற கைகளை

யும், வாளொடும் - (கைகள், அவற்றில் பிடித்த) வாள்களோடும், துமிப்ப - அறுக்க, உரும் என வீழ்தலும் - (அவை) இடிகள் என்று சொல்லும்படி விழவும், (அவற்றால்), அனலுக்கு ஒக்கிய - (வேள்வி) நெருப்பிற்குப் பலியாக வரைந்து வைத்த, எருமைகள் மறிந்தன - எருமைக் கடாக்கள் இறந்தன; மறியும் ஈர்ந்த - ஆட்டுக் குட்டிகளும் பிளவுண்டன. ஆல்: அசை.

எருமைகளும் மறிகளும் வேள்வியில் பலியாக இடப்படக் கட்டிவைக்கப் பெற்றன. மாயத்தால் வானத்தில் எழுந்த அரக்கர்கள்மீது இலக்குவன் சரங்களைவிட, அவை அவ்வரக்கர்களின் கைகளை வெட்ட, அவை தாம் பிடித்த வாளோடு துண்டிக்கப் பெற்று வீழ்ந்தன; வழியில் நின்ற எருமைகளும் மறிகளும் அவ் வாள்களால் வெட்டப்பட்டன என்பது இங்குக் கூறப்பெற்றது. துமித்தல் - வெட்டுதல்; அறுத்தல். 'கொடுங்காற் புன்னைக் கோடுதுமித் தியற்றிய' (பெரும்பாண். 266); 'வேளாப்பார்ப்பான் வாளரந் துமித்த' (அகநா. 24). ஒக்குதல்: வரைந்து வைத்தல் 'நிணப்பலியோக்குவல்' (திருக்கோ. 235). மறி: ஓர் இளமைப் பெயர்.

பி - ம். 1. துணிப்பச் செம்மயிர், துணிந்த, துணிக்க, துணித்துச்; சுமந்து.
3. விழுந்தலினனலுக் கொற்றிய, அனலினேக்கிய; மறலித்தோச்சிய.
4. மறிந்தென; குறியுமீர்ந்தவால், குறிப்புமீய்ந்தவால், குறிலும் விழ்ந்தவால்.



2916. அங்கடங் கழிந்தபே ரருவிக் குன்றினின்
அங்கடங் கிழிந்துக வழிந்த வாடவர்
அங்கடங் கலும்படர் குருதி யாழியின்
அங்கடங் கினர்தொடர் பகழி யஞ்சினர்.

அம் - அழகிய, கடம் - கன்னங்களினின்று, கழிந்த - நீங்கி ஒழுகுகின்ற, பேர் அருவிக் குன்றினின் - மிக அருவிகளையுடைய மலைபோன்ற யானையைப்போன்ற, அழிந்த ஆடவர் - மனமுடைந்த அரக்க வீரர்கள், ஆம் கடம் கிழிந்து உக - தம் கன்னங்களும் கிழிந்து சிந்த, தொடர் பகழி - (தம்மீது) தொடர்ந்துவரும் (இலக்குவன்) அம்புகளுக்கு, அஞ்சினர் - பயந்தவராய், அங்கு அடங்கலும் - அக்களம் முழுமையும், படர் குருதி ஆழியின் அங்கண் -

பரவிக்கிடந்த இரத்தக் கடலாகிய அவ்விடத்து, தங்கினர் - (தம்மை மறைத்துக்கொண்டு) தங்கலாயினர்.

யானை போன்று உடல்களைப் பெற்றவரும், அவ் யானைகளின் மதப் பெருக்குப்போலக் கன்னங்கள் கிழிந்து அவற்றினின்று ஒழுகுகின்ற குருதிப் பெருக்கை யுடையவருமான அரக்கர், தொடர்ந்து வரும் அம்புகளுக்கு அஞ்சிப் போர்க்களத்தைச் சூழ்ந்து நிற்கும் இரத்தக் கடலுள் தங்கினர் என்றவாறு. கடம் - கன்னம்; வடசொல். இரண்டாமடியில் கடம் - உடலும்ஆழ்; ஆம் கடம் அங்கடம் என்று குறுகிற்று. அழிதல்-ஊக்கம் குன்றுதல். ஆடவர், இங்கு வீரர். அடங்கலும் - முழுதும்; 'திக்கடங்கலும்' (திருவிளை. திருநகரங்கண். 13). குருதியாழி - இருபெயரொட்டு. அங்கண் தங்கினர் - அங்கடங்கினர். இச் செய்யுளிலும் யமகம் என்ற சொல்லணி அமைந்திருத்தல் காண்க. இச்செய்யுளை முன் 2910ஆம் செய்யுளோடு ஒப்பிட்டுக்கொள்க.

பி - ம். 1. கழித்தவர் பேரருவி, களித்த, கிழிந்த; குன்றிவின்று.
2. கழித்த நலித்த வாடவர், கிழிந்தில ரழிந்த, கழிந்த.
3. வாளிழந்த, அங்கடங்கடங்கலுங் குருதி; கலிப்படர் குருதி.
4. அங்கடர்ந்திழிபடர், அங்கடங்கிழிபடர், அங்கடங்கழிபடப்; பகையை யஞ்சிலார், பழியினஞ்சலால். 48

2917. காறலைக் கரத்தொடுந் துணியக் காய்கதிர்க்
கோறலைத் தலையுற மறுக்கங் கூடினர்
வேறலத் தூன்றினர் துளங்கு மெய்யினர்
நாறலைக் குடலினர் பலரு நண்ணினர்.

(அரக்கர்கள்), காய் கதிர் கோல் - காய்கின்றனவும் ஒளிவீசுகின்றனவுமான அம்புகள், தலை தலை உற - இடங்கள் தோறும் பதிய, (அதனால்), கால், தலை. கரத்தொடும் துணிய - கால்களும் தலைகளும் கைகளும் அறுபட, மறுக்கம் கூடினர் - மயக்கமுற்று, வேல் தலத்து ஊன்றினர் - தங்கள் வேல்களைத் தரையில் ஊன்றி, துளங்கும் மெய்யினர் - நடுங்கும் உடலுடையராய், நாறு அலை குடலினர் - (வெளியிலே) தோன்றுகின்றனவும் அலைந்துகொண்

டிருக்கின்றனவுமான குடலினராய், பலரும் நண்ணினர் - பல் பேர்களும் ஓரிடத்தில் கூடினர்கள்.

காய் கதிர் கோல் - ஆக்னேயாஸ்திர மாகலாம். துளங்குதல்- நடுங்குதல். நாறுதல் - தோன்றுதல். 'நாறலைக் குடர், நான்ற தலைய குடர்' என்பது பழையவுரை. இச் செய்யுளின் மூலம் இன்னும் ஆராய்தற்குரியது.

பி - ம் 1. காறலைத் தலத்தொடுந்; துணிந்தழியக் காய்கதிர்க்; கால்கரத் தொடுதலையற்றகால்; காய்கணை.

2. தலையற ; வருக்கங்கூட்டினர்.

3. விளங்கு மெய்யினர் ; விளங்கு மேனியர்.

4. குடரினர் பலரு, குடலவர் பலரு, நண்ணினர். 49

2918. பொங்குடற் றுணிந்ததம் புதல்வர்ப் போக்கிலார்
தொங்குடற் றோண்மிசை யிருந்து சோர்வுற
அங்குடற் றம்பியைத் தழுவி யண்மினர்
தங்குடர் முதுகிடைச் சரியத் தள்ளுவார்.

பொங்கு உடல் துணிந்த தம் புதல்வர் - பருத்த உடல்கள் துண்டிக்கப்பட்ட தம் புதல்வர்களை, போக்கிலார் - கைவிட மாட்டாத சில அரக்கர்கள், தோள்மிசை தொங்கு உடல் இருந்து - (தாம் அவர்களைச் சுமத்தலால்) தோள்மீது தொங்குகிற (அம் மக்களின்) உடல்கள் தங்கி, சோர்வு உற-(அதனால்) களைப்படையவும், தம் குடர் முதுகிடை சரிய தள்ளுவார் - தங்கள் குடல்கள் முதுகுப் பக்கமாய்ச் சரிந்து விழ, அதைத்தள்ளுவாராய், அங்கு உடல் தம்பியை அண்மி தழுவினர் - அங்குப் போரிடுகின்ற இலக்குவனை நெருங்கிச் சூழ்ந்துகொண்டனர்.

உடல் தம்பி ; உடலுதல் - மாறுபடுதல் ; போரிடுதல். தழுவுதல் - சூழ்ந்து நிற்றல். தனயரோடு கூடிப் போரிட்ட தந்தையர் செயல் கூறப்பட்டது தள்ளுதல்-விழுதலும் ஆம். 'குடர் சொரிந்த பிள்ளைகளைத் தோளிலே போட்டுக்கொண்டு போகிறபேர் தங்கள் குடலைத் தள்ளச் சொல்லுகிறுர்' என்பது பழையவுரை. குடர் - குடல்; போலி

பி - ம். 1. பொங்கடறுணிந்து ; பொருங்குடல் ; போக்கினர்.

2. தொங்கிடைத் தோண்மிசை ; தொங்குடைத் தோண்மிசை ; தொங்கடற் றோண்மிசை ; சுருங்குடற் றோண்மிசையிருந்து ; சுமந்து சோர்வுற.

3. அருங்கடற் றம்பியை ; அன்பினரவர்.

4. சொரியத் தள்ளுவார். 50

2919. மூடிய நெய்யொடு நறவ முற்றிய
சாடிகள் பொரியொடு தகர்ந்து தள்ளுறக்
கோடிகள் பலபல குழாங்கு ழாங்களாய்
ஆடின வறுகுறை யரக்க ராக்கையே.

நெய்யொடு - நெய்யோடும், நறவம் - கள்ளும், பொரியொடு - பொரியும், முற்றிய - நிரம்பிய, மூடிய - மூடியிட்ட, சாடிகள் - சாடிகளென்னும் கலன்கள், தகர்ந்து தள்ளுற - உடைந்து வீழும்படி, அறு அரக்கர் குறை ஆக்கை - சரங்களால் அறுபட்டுக் குறையுடல்களான அரக்கர்களின் கவந்தங்கள், பலபல கோடிகள் - பற்பல கோடிக்கணக்கானவையாய், குழாம் குழாங்களாய் ஆடின - கூட்டம் கூட்டமாய் ஆடின. ஏ : அசை.

குறை ஆக்கை - கவந்தம். பல கோடிக் கவந்தங்கள் குழாம் குழாங்களாய் ஆடினமையால், நெய், கள், பொரி, ஆகியவை வைத்திருந்த குடங்கள் தகர்ந்து தள்ளுற்றன.

பி - ம். 1. தூடிய நெய்யொடு.

2. சாடிகளங்கியிற் சரிதல் போலவே ; காடிகள் பொரியொடு கரந்து காய்தலால்.

3. பலபடும் குழாங் குழாங்களாய் ; பலபடு குழாம்.

4. இறுக்கு மாக்கையே, மறுகு மாக்கையே, மறுகு மாக்கைகள். 51

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

சிரநிரை யறுத்தவ ருடலைச் சிந்திமற்
றுரநிரை யறுத்தவ ரொளிரும் வெம்படைக்
கரநிரை யறுத்தவல் லரக்கர் காலெனுந்
தரநிரை யறுப்பதங் கிலக்கு வன்சரம்.

2920. காலெனக் கடுவெனக் கலிங்கக் கம்மியர்
நூலென வுடற்பொறை தொடர்ந்த நோயெனப்
பாலுறு பிரையெனக் கலந்து பன்முறை
மேலுறு சேனையைத் துணித்து வீழ்த்தினன்.

(இவ்வாறு இலக்குவன்), கால் என - காற்று என்வும், கடு என - விஷம் எனவும், கலிங்கம் கம்மியர் நூல் என - புடைவை நெய்வோர் கையிலுள்ள நூல் எனவும், உடல்பொறை தொடர்ந்த நோய் என - உடலில் தாக்கிப் பரந்த நோய் எனவும், பால் உறு பிரை என - பாலை அடைந்த பிரை எனவும் (சொல்லும்படி), பல் முறை மேல் உறு சேனையை - பலதடவை தன்மேலே வந்து தாக்கிய படை வீரர்களுடன், கலந்து - கூடி, துணித்து வீழ்த்தினன் - அவ்வீரரைப் பலமுறை வெட்டித் தள்ளினன்.

'கலிங்கக் கம்மியர் - புடவை நெய்யும் கைக்கோளர்; மேலுறு சேனை என்றதனுல், காலென வென்றது முதலாக அரக்கர் பேரில் ஏற்றினும் ஆம்; இளையபெருமாள் பேரிலேயாகிலும் ஏற்றிக் கொள்க' என்பது பழையவுரை. கால் முதலியன புகும்பொழுது சிறிய இடத்திற் புகுமாயினும், பின்பு எங்கும் பரவி அழிக்கும் தன்மை யுடையனவாதல் போல, இலக்குவன் ஓரிடத்தில் புகுந்து சேனை முழுவதையும் நாசப்படுத்தினன் என்க. உடற்பொறை; 38.

பி - ம். 1. கலங்கிக் கம்மியர், கலங்கக் கம்மியர்.
2. உயிர்ப்பொறை தொடர்ந்து; நோவெனப்.
3. பாலுறு மோரெனக்.
4. வேலுறு சேனையைத்; தகைத்து விட்டினன். 52

## இந்திரசித்து இவற்றைக் காண்டல்

2921. கண்டனன் றிசைதொறும் நோக்கிக் கண்ணகன்
மண்டல மறிகட லன்ன மாப்படை
விண்டெரி கால்பொர மறிந்து வீற்றுறும்
தண்டலை யாமெனக் கிடந்த தன்மையை.

(இந்திரசித்து), திசைதொறும் நோக்கி - ஒவ்வொரு திசையையும் பார்த்து, கண் அகன் மண் தலம் - இடமகன்ற பூமியிலே,

மறி கடல் அன்ன - மடங்கிவிழும் அலைகளையுடைய கடல்போன்ற, மா படை - தன் பெரிய சேனை, விண்டு எரி கால் பொர - பகைத்து எரிகின்ற காற்று மோத, மறிந்து வீற்று உறும் தண்டலை ஆம் என - கீழ்மேலாகித் துண்டாடப் பெறும் குளிர்ந்த சோலை போல, கிடந்த தன்மையை - (சின்னாபின்னப்பட்டுக்) கிடந்த தன்மையை - கண்டனன் - பார்த்தான்.

மண்டலம், என்ற சொல்லுக்கே 'பூமி' என்ற பொருள் உண்டு; 'மண்டலந்தனை...... குளிரவே வைத்தோன்' (பாரத. குருகுல. 3); மறிதல், கிளர்தலும் ஆம்; 'மறிகடல் போன்று' (திவ். இயற். திருவிருத். 57); கீழ்மேலாதலும் ஆம். விண்டு எறி கால்; விண்டு, விள் பகுதி; விள்ளுதல் - பகைத்தல், விண்தெறி எனப் பிரித்தலும் ஆம்.

பி - ம். 1. திசைதொறு நெருக்கிக்.

3. விண்டெறி கால்பட மறிந்து விற்றுறு; விண்டொடர் கால்; மறிந்து விழ்ந்தனன்; மறிந்து வீற்றிருந்; தன்மையே. 53

2922. மிடலின்வெங் கடகரிப் பிணத்தின் விண்டொடும்
திடலும்வெம் புரவியுந் தேருஞ் சிந்திய
உடலும்வன் தலைகளு முதிரத் தோங்கலைக்
கடலுமல் லாதிடை யொன்றுங் கண்டிலன்.

(அவன்), மிடலின் - வலிமையையுடைய, கடம் வெம் கரி பிணத்தின் - மதப் பெருக்கையும் வெப்பமான சினத்தையும் கொண்டிருந்த யானைகளின் பிணங்கள் நிறைந்த, விண் தொடும் திடலும் - வானத்தைத் தொடும் மேட்டிடங்களும், வெம் புரவியும் தேரும் - கொடிய குதிரைகளும் தேர்களும், சிந்திய உடலும் வன் தலைகளும், ஓங்கு அலை உதிரத்து கடலும் அல்லாது - (காலாட்களின்) சிதறிய உடல்களும், வலிய தலைகளும் ஆகியவற்றை வீசுகிற அலைகளைக் கொண்ட குருதிக் கடல்களே அல்லாமல், (தன்கண் முன்னே உள்ள) இடை - இடைவெளியிலே, ஒன்றும் கண்டிலன் - வேறு ஒன்றையும் அவன் பார்க்கவில்லை.

இந்திரசித்தின் கண்களில் நால்வகைப் படைகளின் அழிவே யன்றி வேறெதுவும் படவில்லை என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. விண்டொடு.
2. திடரும் ; தேருமெஞ்சினர், சிந்தினர்.
3. முதிரத் தோங்கிய.
4. கடலுமல் லாவிடை. 54

2923. நூறுநூ றுயிர கோடி நோன்கழல்
மாறுபோ ரரக்கரை யொருவன் வாட்கணை
கூறுகூ றுக்கிய குவையுஞ் சோரியின்
ஆறுமே யன்றியோ ராக்கை கண்டிலன்.

(அன்றியும், அவ்விந்திரசித்து), நூறு நூறு ஆயிர கோடி - மிகக் கணக்கற்ற, நோன் கழல் - வலிய கழல்களைக் கட்டியவரும், மாறு போர் - பகைமையுடன் போரிடுபவருமான, அரக்கரை - (தன்னுடன் வந்த) அரக்க வீரர்களை, ஒருவன் - இலக்குவனுடைய, வாள் கணை - கூரிய அம்புகளினால், கூறு கூறு ஆக்கிய குவையும் - துண்டு துண்டுகளாக்கிய குவியல்களையும், சோரியின் ஆறுமே அன்றி - குருதியின் ஆற்றையுமே அல்லாமல், ஓர் யாக்கை கண்டிலன் - முழுமையான ஓர் உடலை அவன் பார்க்கவில்லை.

'சின்ன பின்னப்படாது பாகமான உடல் கண்டானில்லை' என்பது பழையவுரை. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. கோடி நுண்டுகள்.
2. மாறில் போரரக்கரை.
3. குவையின் சோரியின், கூறு நூறுயின குவையும்.
4. வேறரக்கன் கண்டிலன். 55

எஞ்சிய அரக்கர்களின் நிலைமையும், இந்திரசித்தின் வெகுளியும் கூற்றும்

2924. நஞ்சினும் வெய்யவர் நடுங்கி நாவுலர்ந்
தஞ்சினர் சிலர்சில ரடைகின் றூர்சிலர்
வெஞ்சின வீரர்கள் மீண்டி லாதவர்
துஞ்சினர் துணையில ரெனத்து எங்கினர்.

சிலர் நஞ்சினும் வெய்யவர் - (உயிருடனிருந்த அரக்கர்களுள்) சிலர் விடத்தைக் காட்டிலும் கொடியவரானவர், நடுங்கி - (இலக்குவன் கணைக்கு முன் நிற்கமாட்டாமல்) உடல் நடுங்கி, நா உலர்ந்து அஞ்சினர் - நாவும் நீர்ப்பசை அற்று அச்சமுடையவராயினர்; சிலர் - வேறு சிலர், அடைகின்றார் - இந்திரசித்தின் இடத்தை அடைந்தார்கள்; சிலர் வெஞ்சின வீரர்கள் - சில கொடிய சினங்கொண்ட வீரர்கள், மீண்டிலாதவர் - தாம் நின்ற இடத்தைவிட்டுத் திரும்பி வாழ முடியாதவரானவர், துணை இலர் என துளங்கினர் - தாம் 'துணையற்றவர் ஆனேமென்றெண்ணி நடுங்கினவராய், துஞ்சினர் - நின்ற இடத்திலேயே இறந்தனர்.

இச் செய்யுள் அம்பினால் அடிபட்டு இறவாதவர் நிலை கூறுவதாயிற்று.

பா - ம். 2. ரடைகின்றார் பலர்.

4. தொலைவிலாரெனத்; தொடங்கினர், தோன்றினர். 56

2925. ஓமவெங் கனலவிந் துழைக்க லப்பையும்
காமர்வண் டருப்பையும் பிறவுங் கட்டற
நாமமந் திரத்தொழின் மறந்து நந்துறு
தூமவெங் கனலெனப் பொலிந்து தோன்றினான்.

(அப்பொழுது), ஓம வெம் கனல் அவிந்து - ஓமகுண்டத்தில் எரியும் கொடிய நெருப்பு அவிந்து, உழை - அருகிலுள்ள, கலப்பையும் - உபகரணங்களும், காமர் - அழகிய, வண் தருப்பையும் பிறவும் - வளமை மிக்க தருப்பையும் மற்றனவும், கட்டு அற - நிலைகுலைய, நாமம் - அச்சத்தைத் தரும், மந்திரத் தொழில் மறந்து - மந்திரங்களை உச்சரிக்கும் வேலையையும் (அந்தணர்களும் தானும் மயக்கத்தால்) மறந்து, (இக்காரணங்களால் இந்திரசித்து வெகுண்டு), நந்து உறு தூம வெம் கனல் என - வளர்தலுற்ற, புகையோடு கூடிய கொடிய நெருப்பு என்று சொல்லும்படி, பொலிந்து தோன்றினான் - விளங்கித் தோன்றலானான்.

கலப்பை - ஒன்றற்கமைந்த உறுப்புக்கள்; உபகரணங்கள்; 'ஆயதற்குரியன கலப்பை யாவையும்'; (பால. திருவவ. 85); 'வரைமுதற் கலப்பைகள் மாடு நாட்டி' (கிட்கிந்தா. 528); 'காசில்

போகக் கலப்பை' (சீவக. 864). கட்டறுதல் - நிலைகுலைதல். நாம மந்திரம், தேவர் முதலியோரை வேள்விக்கு வருமாறு பெயர் சொல்லி அழைக்கும் மந்திரம் எனலும் ஆம். மந்திரத் தொழில் - ஜபித்தல். நந்துதல் - வளர்தல். 'பெரியவர் கேண்மை பிறை போல......நந்தும்' (நாலடி. 125.)

பி - ம். 1. கனலவிந்துறுங்.

2. காமர்வண்டிரவியக் குலமும் கட்டற; வண்டருப்பையின் குலமும், காமர்வண் மண்டிலப் பயக்குலமுங் கட்டற.

3. வாம மந்திரத், மறந்து மறந்தவன்; மறந்து மறந்தானகுந்; மறந்து மற்றவன், மறந்து நன்குறும். 57

2926. அக்கணத் தடுகளத் தப்பு மாரியால்
உக்கவ ரொழிதர வுயிரு ளோரெலாம்
தொக்கன ரரக்கனைச் சூழ்ந்து சுற்றுறப்
புக்கது கவிப்பெருஞ் சேனைப் போர்க்கடல்.

அக்கணத்து - அப்பொழுது, அடு களத்து-போர்க்களத்தில், அம்பு மாரியால் - (இலக்குவன் பெய்த) அம்பு மழையால், உக்கவர் ஒழிதர - இறந்தவர் நீங்க, உயிர் உளோர் எலாம் - உயிரோடிருந்த அரக்கர் யாவரும், அரக்கனை சுற்றுற சூழ்ந்து தொக்கனர் - இந்திர சித்தைச் சுற்றிச் சூழ்ந்து கூடினர்; (அதைக் கண்ட), கவி போர் பெரும் சேனை கடல் - வானரர்களின் போரிடும் பெரிய சேனைக் கடலானது, புக்கது - (அந்த இடத்தினுள்) புகுந்தது.

அக் கணத்து; தன் வேள்வி கலைந்தது கண்ட இந்திரசித்து, 'வெங்கனலெனப் பொலிந்து தோன்றி,' நின்ற கணத்து. அம்பு + மாரி - அப்புமாரி. உகுதல் - அழிதல்.

பி - ம். 1. அம்பு மாரியால்.

3. சூழ்ந்து சுற்றினர். 58

2927. ஆயிர கோடியி னளவி லப்படை
ஏயெனு மாத்திரத் திற்ற தென்பதும்
தூயவன் சிலைவலித் தொழிலுந் துன்பமும்
மேயின வெகுளியுஞ் சினர வெம்பினன்.

ஆயிரம் கோடியின் அளவில் அப் படை - ஆயிரம் கோடி என்று சொல்லத்தக்க கணக்கற்ற அந்தச் சேனை, ஏ எனும் மாத்திரத்து - மிக நுட்ப நேரத்திலே, இற்றது என்பதும் - அழிந்தது என்ற செய்தியும், தூயவன் சிலை வலி தொழிலும் - தூய்மையுள்ள இலக்குவனின் வில்லினது வலிமை நிறைந்த தொழிலும், (இந்திரசித்தின்) துன்பமும் - வருத்தத்தையும், ஏயின - பொருந்திய, வெகுளியும் - கோபத்தையும், கிளர - தூண்டிவிட, வெம்பினன் - (அவன்) மனம் புழுங்கினன்.

ஏ எனும் மாத்திரத்து - ஏ, என்று சொல்வதற்கு முன்; அதாவது, மிகக் குறைந்த நேரத்தில், தூய வன் சிலை என்று பிரித்துக் கோடலும் ஆம். துன்பமும் வெகுளியும் ஒருங்கே இந்திரசித்திடம் தோன்றின என்பதாம். கிளர்தல் - மேன்மேல் வளர்தலும் ஆம்; (திவ். திருவாய். 4, 9, 4).

பி - ம். 1. ஆயிர மாருடை யாழியோன் படை, கோடியென்றடைந்தவப் படை; ஆயிர முகமுடையாழி மரப்படை; ஆயிர கோடியி னளவுருப் படை; ஆயிரமலருடையாழிமாப் படை.

2. ஏயெனு மளவினி னழிந்த தென்பதும்.

4. கிளம்ப வெம்பினன். 59

2928. மெய்குலைந் திருநில மடந்தை விம்முறச்
செய்கொலைத் தொழிலையுஞ் சென்ற தீயவர்
மொய்குலத் திறுதியு முனிவர் கண்டவர்
கைகுலைக் கின்றதுங் கண்ணி னேக்கினன்.

(இந்திரசித்து), இரு நில மடந்தை - பெரிய 'உலகமாகிய தாய், மெய் குலைந்து - உடல் நிலைகெட்டு, விம்முற - விம்மலையடையும்படி, கொலை செய் தொழிலையும் - (அரக்கர்களை இலக்குவன்) கொலை செய்யும் வேலைகளையும், சென்ற - போர்புரியச் சென்ற, தீயவர் - கொடியவரான அரக்கரின், மொய் குலத்து இறுதியும் - நெருக்கமான குலம் அற்றுப்போதலையும், கண்டவர் முனிவர் - கண்ணுற்ற (அரக்க) முனிவர்கள், கை குலைக்கின்றதும் - கைகளை அசைப்பதையும், கண்ணின் நோக்கினன் - தன் கண்களால் கண்டான்.

முனிவர், இங்கு, நிகும்பிலை யாகம் நடத்தி வைக்கும் அரக்க முனிவர்களைக் குறித்ததாம். கண்டவர் முனிவர் என மாற்றிக் கொள்க. குலைத்தல் - அசைத்தல். வேள்விக்காலத்தில் வேறொன் றும் பேச முடியாதவராயிருத்தலின், தம் அச்சத்தைக் காட்ட கைகுலைத்தனர் என்க. 'கைக்குலைத்தல், துக்கக் குறிப்பு' என்பது ஐயரவர்களின் குறிப்பாகும். கண்ணின் நோக்குதல்; இஃது ஆசிரியர் விரும்பிக் கையாளும் ஒரு முறையாகும்; (சுந்தர. *216*, *630*, *1269*).

பி - ம். 1. மெய்குலைத்து.

2. செய்கை நியவான்.

3. முனிவர் கண்டனர்; வானவர் கண்டிலர்; முனிவர் கண்டிலர். 60

## இந்திரசித்து வருந்திக் கூறுதல்

2929. மானமும் பாழ்பட வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட முடிவி லாமுரண்
சேனையும் பாழ்படச் சிறந்த மந்திரத்
தேனையும் பாழ்பட வினைய செப்பினன்.

(இந்திரசித்து), 'மானமும் பாழ்பட - தன் மானம் பாழாகவும், வகுத்த - தான் மேற்கொண்ட, வேள்வியில் மோனமும்-யாகத்தில் கொண்டிருந்த பேசா விரதமும், பாழ்பட - அழியவும், முரண் முடிவு இலா சேனையும் பாழ்பட - வலிமையில் எல்லையற்ற தன் சேனையும் பாழ்படவும், சிறந்த மந்திரத்து ஏனையும்-பாழ்பட சிறந்த மந்திரங்களின் இசை விகற்பங்கள் கெடவும் (கண்டு), இனைய செப்பினன் - (பின்வரும்) இவற்றைச் சொல்லலானான்.

மந்திரம் என்பதற்கு எண்ணங்கள் என்றும், ஏனையும், என்பதற்கு எல்லாமும் என்றும் பொருள் கொண்டு, இந்திரசித்து தான் கொண்டிருந்த எண்ணங்கள் யாவும் பாழ்பட்டமையை உணர்ந்து செப்பினன் எனலும் ஆம். (திவா). ஏனை - இசைவி கற்பம்.

திவா.) ஏனை, எனை என்பதன் நீட்டல் விகாரமாகவும் கொள்ளலாம். ஏனை - எல்லாம் எனலும் ஆம். அடுத்த செய்யுள் முதல் நான்கு கவிகள் இந்திரசித்து கூறியவை.

பி - ம். 3. சிதைந்த மந்திரத் ; சிந்தை மந்திரத் ; சிந்தி மந்திரத்.

4. (மந்திரக்) கோனையும் ; வினைய கூற்றுன் ; ஏனவும் பாழ்பட. 61

2930. வெள்ளமை யைந்துடன் விரிந்த சேனையின்
உள்ளதக் குரோணியீ ரைந்தொ டோயுமால்
எள்ளரும் வேள்வியின் றினிதி யற்றுதல்
பிள்ளைமை யனையது சிதைந்து பேர்ந்ததால்.

(இந்திரசித்து), 'ஐ ஐந்து வெள்ளம் உடன் விரிந்த சேனையின்- இருபத்தைந்து வெள்ளம் என்ற எண்ணிக்கையுடன் பரந்த என் சேனையில், உள்ளது-எஞ்சியது, ஈரைந்து அக்குரோணி ஓடு ஓயும்- பத்து அக்குரோணிகளேயாகும்; எள் அரும் வேள்வி-இகழ்தற்கு அரிய (இவ்) வேள்வியும், சிதைந்து பேர்ந்தது - உடைந்து தீர்ந்தது; (இவ்வேள்வியை மேலும்), இன்று இனிது இயற்றுதல் பிள்ளைமை அனையது - இன்று நன்றாகச் செய்ய முயலுதல் சிறு பிள்ளைத்தனமாகும். ஈரிடங்களிலும் ஆல், அசைகள்.

அக்குரோணி, வெள்ளம் என்பன படைகளைக் குறிக்கும் பேரெண்களைக் குறிப்பன. வேள்விக்கு வந்த குறைகளையும், அதனைக் காக்க வந்த படைகளின் நாசத்தையும் கண்டு, 'இனி, வேள்வி இயற்றுதற்கு உரியதன்று' என்று இந்திரசித்து தனக்குள்ளே சொல்லிக் கொண்டான். பிள்ளைமை - இளமையின் அறியாமை; சிறுபிள்ளைத்தனம்; 'பிள்ளைமை காதல் கூர' (சீவக. 2529).

பி - ம். 1. விரிந்த வேலையின்.

2. குரோணி யொன்றே டொன்பதாய் ; ஏயுமால்.

3. வேள்விநின் றினிதி.

4. போந்ததால், பேர்வதால்.

2931. தொடங்கிய வேள்வியின் றூம வெங்கனல்
அடங்கிய தவிந்துள தமையு மாமன்றே
இடங்கொடு வெஞ்செரு வென்றி யின்றெனக்
கடங்கிய தென்பதற் கேது வாகுமால்.

'(இன்னும்), தொடங்கிய - (யான் இயற்றத்) தொடங்கிய, வேள்வியின் - வேள்வியில் (எரிக்கப் பெற்ற), தூமம் வெம் கனல் - புகையோடு கூடிய வெப்பமான (வேள்வி) நெருப்பு, அடங்கியது அவிந்துளது - குறைந்து அணைந்து விட்டது' (என்பது), அமையும் ஆம் - அமைந்து விட்டது ஆம்; அன்றே - அல்லவா? (அவ்வாறுனது), இடங்கொடு வெம் செரு வென்றி - அகன்ற கொடிய போர்களிலே வெற்றியென்பது, எனக்கு இன்று அடங்கியது என்பதற்கு ஏது ஆகும் - எனக்கு இப்பொழுது இல்லாமல் போயிற்று என்பதற்கு (இந் நிகழ்ச்சி) குறிப்பாகும். ஆல்: அசை.

'வேள்வி நெருப்பு அடங்கி அவிவது ஒரு பெரிய உற்பாதமாகும்; அவ்வாறுனது, இதுவரை தனக்கிருந்த வெற்றிக் காலம் அழிந்து தோல்விக் காலம் தொடங்கி விட்டது என்பதைக் குறிப்பதாகும்' என்று கருதினன் இந்திரசித்து என்க.

பி - ம் 1. ஈம வெங்கனல்.
2. தமைந்துள தமையு; அடங்கிடா தவிந்துள.
3. இடக்கொடு; விடங்கொள் வெஞ்செருத் தொழில்; வெஞ்செருத் தொழில்வென்ற நாளொடு; வெஞ்சிலைத் தொழில்; வென்றியின்றெரு
4. மடங்கிய தென்பதற்கேது வாய்மையால்; கேதுவானதால்.

63

2932. ஆங்கது கிடக்கநான் மனிசர்க் காற்றலென்
நீங்கினே னென்பதோ ரிழிவு நேருற
வீங்குநின் றியாவரு மியம்ப வென்குலத்
தோங்குபே ராற்றலு மொளியு மொல்குமால்.

'ஆங்கு அது கிடக்க - அவ்விடத்தில் அஃது இருக்கட்டும்; நான் மனிசர்க்கு ஆற்றலென நீங்கினென் - யான் (எளிய) மனிதர்கட்கு முன்னே (நிற்க) வலியற்றுக் (களத்தைவிட்டு) நீங்கினேன்', என்பது ஓர் இழிவு நேர் உற - என்பதான ஒரு குற்றம்

நேராக எனக்கு உண்டாகும்படி, யாவரும் ஈங்கு நின்று இயம்ப - எல்லோரும் இங்கு இருந்து சொல்ல, என்குலத்து ஓங்கு பேர் ஆற்றலும் ஒளியும் ஒல்கும் - என் குலத்துக்கு (இதுகாறும் இருந்து வந்த) மிக உயர்ந்த வலிமையும் புகழும் கெடும். ஆல் - அசை.

ஆங்கு அது கிடக்க என்றது, முன் செய்யுளில் கூறப்பெற்ற செய்தியைக் குறித்தது. அதைவிடக் கொடியது தனக்கு வந்த இழிவால், தன் குலத்துக்கே உண்டாகும் பழி என்ற அவன் கருத்து இச் செய்யுளில் குறிக்கப் பெற்றது. மனிசர்; இழிவினுற் கூறியது. ஒளி - புகழ்; 'ஒளியு மாற்றலுமோம்பா வீகையும்' (பு. வெ. 9, 1). ஒளி, பெருமையும் ஆம். ஒல்குதல் - கெடுதல்; 'ஒல்கிய வெழில் வேழம்' (கலித். 8); ஒல்குதல், சுருங்குதலும் ஆம்.

பி - ம். 1. அங்கது கிடக்கநான் மனிதர்க் காற்றலன்; கிடக்கத் தான் மனிதர்க்.

2. சிங்கினை னென்பதோ ரெளிமை தேய்வுற; எளிமை தேருரை.

3. இங்குநின் றிவையிவை நினைவ தென்னினி; நினைக்கி லென்னினி.

4. பொங்குபோ ராற்றவென் றேனும் போனவே; ஒளியும் போனதோ; போரான வென்றேனும் போனவோ. 64

2933. மந்திர வேள்விபோய் மடிந்த தாமெனச்
சிந்தையி னினைந்துநொந் திருந்து தேய்வுறல்
அந்தரத் தமரர்தா மனிதர்க் காற்றலன்
இந்திரர்க் கேயிவன் வலியென் றேசவோ.

(மேலும்), 'மந்திர வேள்வி - மந்திர விதிப்படி செய்யப் பெறும் இவ் வேள்வி, போய் மடிந்தது ஆம் என - அழிந்து போனது ஆம் என்று, சிந்தையின் நினைந்து நொந்து இருந்து தேய்வு உறல் - மனத்தில் எண்ணி வருந்தி இருந்து அழிவு அடைதல், அந்தரத்து அமரர் தாம் - வானத்திலுள்ள தேவர்கள், 'இவன் மனிதர்க்கு ஆற்றலன்; வலி இந்திரர்க்கே - இந்த இந்திரசித்து மானிடர்க்கு (முன் நிற்க) வலிமையற்றவன்; (இவனுடைய) வலிமையெல்லாம் தேவர்களை வெல்வதற்கே (போலும்)' என்று ஏசவோ - என்று (என்னை) இகழ்ந்து பேசவே தானோ?'

தனக்குண்டான இழிவை நினைத்து வருந்துவது தேவர்கள் இகழ்வதற்கிடமாகும் என்றெண்ணி இந்திரசித்து வருந்தினன் என்க. இருந்து என்ற சொல்லால், மடிந்திருத்தலாகாதென்று அவன் கருதினன் ஆவான். இந்திரர் - தேவர்; 'இந்திரர் அமிழ்த மியைவதாயினும்' (புறநா. 182); 'இந்திர குமரரின் யாங்காண் குவமோ' (சிலப். 16, 172). 'இந்திரர்க்கும் புகழ்வரிதே' (சீவக. 173). 62-ஆம் செய்யுள் முதல் இது முடிய ஒரு தொடர்; அடுத்த செய்யுளில் 'என்று' என்றதுடன் முடிவுறும்.

பி - ம். 2. இருந்து தேய்வுற.

3. அந்தரத்தமரரும்.

4. இந்திரர்க் கோயிவன், இந்திரற் குளிவன்; இத்திரற் கேயிவன். 65

## வாநர வீரர் மேலும் அரக்கரை அழித்தல்

2934. என்றவன் பகர்கின்ற வெல்லை யின்னிரும்
குன்றொடு மரங்களும் பிணத்தின் கூட்டமும்
பொன்றின கரிகளுங் கவிகள் போக்கின
சென்றன பெரும்படை யிரிந்து சிந்தின.

என்று அவன் பகர்கின்ற எல்லையின் - என்று, இவ்வாறு அவன் (தனக்குள்) சொல்லி வருந்துகின்ற போது, கவிகள் - வானரங்கள், இரும் குன்றொடு - பெரிய குன்றுகளையும், மரங்களும் - மரங்களையும், பிணத்தின் கூட்டமும் - அரக்கர் பிணங்களின் தொகுதிகளையும், பொன்றின கரிகளும் - இறந்து கிடந்த யானைகளையும், போக்கின - (அரக்கர் படைமீது) வீசின; (அதனால்), பெரும் படை - அரக்கரின் பெரிய சேனை, இரிந்து - (தாம் நின்ற இடத்தைவிட்டு) நீங்கி, சிந்தின - சிதறி, சென்றன - (அப்பால்) ஓடின.

என்று, என்பதை முன் செய்யுளோடு கூட்டிப் பொருள் காண்க. பொன்றுதல் - இறத்தல். சிந்தின, முற்றெச்சம்.

பி - ம். 1. என்றின்ன பகர்கின்ற; என்றதவன் பகர்கின்ற; வெல்லை வல்விசைக்.

2. குன்றமும்.

4. சிந்திட.

66

2935. ஒதுங்கின ரொருவர்கீ ழொருவர் புக்குறப்
பதுங்கினர் நடுங்கினர் பகழி பாய்தலின்
பிதுங்கினர் குடருடல் பிளவு பட்டனர்
மதம்புலர் களிறெனச் சீற்ற மாற்றினர்.

(இவ்வாறு வானரர் செயலால் ஓடினவர் போக எஞ்சி நின்ற அரக்கர்), ஒருவர் கீழ் ஒருவர் ஒதுங்கினர் - (பலர்) ஒருவர்க்குக் கீழ் மற்றொருவர் புகுந்து கொண்டு, புக்குற பதுங்கினர் - தம்மை மறைத்துக் கொண்டு பதுங்கிக் கொண்டார்கள்; (இன்னும் பலர்), பகழி பாய்தலின் நடுங்கினர் - (இலக்குவன் எய்த) அம்புகள் (தம் மீது) பாய்தலினால் நடுக்கமடைந்தனர்; குடர் பிதுங்கினர் - (பலர்) தம் குடல்கள் பிதுங்கலுற்றனர்; உடல் பிளவு பட்டனர் - (வேறு பலர் தம்) உடல்கள் பிளக்கப் பெற்றார்கள்; மதம் புலர் களிறு என சீற்றம் மாற்றினர் - மதம் காய்ந்து போன யானைகளைப் போல (அனைவரும்) கோபம் நீங்கினவரானார்கள்.

மதம், இங்கு அரக்கரின் வீரத்திற்கு உவமை. சீற்றம் ஆற்றினர் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. ஒருவர் போக்குற.
4. மாறினர். 67

2936. வீரன்வெங் கணையொடுங் கவிகள் வீசிய
கார்வரை யரக்கர்தங் கடலின் வீழ்ந்தன
போர்நெடுங் கால்பொரப் பொழியு மாமழைத்
தாரையு மேகமும் படிந்த தன்மைய.

வீரன் - வீரனான இலக்குவனின், வெம் கணையொடும் - கொடிய அம்புகளோடு, கவிகள் - வானரங்கள், வீசிய கார் வரை - வீசி எறிந்த கரிய மலைகள், அரக்கர் தம் கடலில் - அரக்கர்களாகிய கடலில், வீழ்ந்தன - விழுந்தவை, போர் நெடும் கால் பொர - மோதுகிற நீண்ட காற்று வீச, பொழியும் மாமழை தாரையும் - சொரியும் கரிய மழைத் தாரைகளும், மேகமும் - மேகங்களும், படிந்த தன்மைய - (கடலில்) வீழ்ந்து படிந்த தன்மையை ஒத்தன.

மழைத்தாரை அம்புகளின் தாரைக்கும், மேகங்கள் குன்றுகளுக்கும் ஒப்பு. 'கடலில்' என்பதை படிந்த தன்மைய என்பதற்கும் சேர்க்க. போர் நெடுங்கால் - ஊழிக்காற்று எனலாம்.

பா - ம். 1. முதல்வர் வீசிய.
2. யரக்கர் வெங்கடலின் விழ்ந்தன ; வீழ்வன.
3. பொழிய மாமழைத்.
4. படியுந் தன்மைய. 68

## அநுமனின் செயலும் கூற்றும்

2937. திரைக்கடற் பெரும்படை யிரிந்து சிந்திட
மரத்தினிற் புடைத்தடர்த் 'துருத்த மாருதி
அரக்கனுக் கணித்தென வணுகி யன்னவன்
உரக்கதஞ் சிறப்பன மாற்றங் கூறுவான்.

(அப்பொழுது), திரை கடல் பெரும் படை - அலைகள் வீசும் கடல்போன்ற பெரிய (அரக்கர்சேனை), இரிந்து சிந்திட - (களத்தை) நீங்கிச் சிதறும்படி, மரத்தினில் - மரங்களினால், புடைத்து அடர்த்து உருத்த - அடித்துப் போரிட்டுப் பெருங் கோபங் கொண்ட, மாருதி - அநுமன், அரக்கனுக்கு அணித்து என அணுகி - அரக்கனாகிய இந்திரசித்துக்கு அண்மையில் அடைந்து, அன்னவன் - அவ் இந்திரசித்தினுடைய, உரம் கதம் சிறப்பன - வலிய சினம் (மேலும்) மிகுமாறு, மாற்றம் கூறுவான் - சொற்களைப் பேசுவான்.

உரம் கதம் சிறப்பன என்றமையால், இயல்பிலேயே வலிமையுற்ற அவனுடைய கோபம் மேலும் ஓங்குமாறு என்று பொருள் கொளலாயிற்று. உரத்தல் - கடுமையாதல் : மிகுதல். உருத்தல் - பெருங்கோபங் கொள்ளுதல் ; 'ஒருபக லெல்லா முருத்தெழுந்த' (கலித். 39, 23). இது முதல் 10 கவிகள் அநுமன் இந்திரசித்தை இகழ்ந்து கூறுவனவாகும்.

பா - ம். 2. புடைத்தரைத் துதிர்த்த மாருதி.
4. உரைக்கத முறுவதோர் மாற்ற மோதினன் ; அரக்கதஞ் சிறப்பன, வரைக்கதன் திறப்பன ; அவர்க்கதன் சிறப்பென, அரக்கன் தன் சிறப்பதோர். 69

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

நானுனை யிரந்து கூறும் நயமொழி யொன்றுங் கேளாய்
சானகி தன்னை வாளாற் றடிந்ததோ தனதன் றந்த
மானமேற் சேனை யோடும் வடதிசை நோக்கி மீது
போனதோ கோடி கோடி வஞ்சமும் பொய்யும் வல்லாய்.

வேறு

2938. தடந்திரைப் பரவை யன்ன
சக்கர யூகம் புக்குக்
கிடந்தது கண்ட துண்டே
நாணொலி கேட்டி லாயோ
தொடர்ந்துபோ யயோத்தி தன்னைக்
கிளையொடுந் துணிய நூறி
நடந்ததெப் பொழுது வேள்வி
முடிந்ததே கரும நன்றே.

(அநுமன் இந்திரசித்தை நோக்கி), 'தடம் திரை பரவை அன்ன - அகன்றதும் அலைகள் நிரம்பியதுமான கடல் போன்ற, சக்கர யூகம் புக்கு கிடந்தது - சக்கரவியூகத்தினுள் நீ புகுந்து மறைந்திருந்ததை, கண்டது உண்டே - நாங்கள் கண்டு விட்டோமே! நாண் ஒலி கேட்டிலாயோ - நாண் தெறித்த ஒலி கேட்டிலையோ? தொடர்ந்து போய் - தொடர்ந்து சென்று, அயோத்தி தன்னை - அயோத்தி நகரை, கிளையொடும் - (எங்கள் இராமபிரானின்) சுற்றத்தாரோடும், துணிய - வெட்டுண்ண, நூறி - அழித்து, நடந்தது - திரும்பியது, எப்பொழுது - எச்சமயத்தில்? வேள்வி கருமம் நன்றே முடிந்ததே - வேள்வியாகிய செயல் நன்கு முடிந்ததோ?

யூகம், வியூகம் என்பதன் குறை; சக்கரவியூகம்; 'நேமிப் பெயர் யூகம் (2885). 'கிடந்தது கண்டதுண்டே' என்றதற்கு நீ மறைந்து கிடந்ததால் அடைந்த பயன் யாது? என்றும், இன்னும் வேறு வகைகளிலும் பொருள் கொள்ளலாம். நாணொலி கேட்டிலாயோ என்றதால், வீரனாயிருந்தால் போருக்கு எழுந் திருக்கலாமே, என்றதாம். துணித்தல் - துண்டமாக்குதல். நூறு தல் - அழித்தல். முடிந்ததே; நன்றே; என்றும் இரு வினை

களாகப் பிரித்தும் பொருள் கூறலாம். கண்டதுண்டோ, கேட்டிலாயோ! என்பதனுள் அமைந்துள்ள நயம் ஓர்க.

பி - ம். 1. சக்கர யூகம் மற்றுக்; சக்கர யூபம் புக்கு.
2. கண்டதுண்டோ; கேட்டிலோமே, கேட்டிலாமோ?
3. துணிப்பனின்றே.
4. கடந்ததெப் பொழுது; முடித்ததே கரும நன்றே. 70

2939. ஏந்தகன் ஞால மெல்லா
மினிதுறைந் திவரத் தாங்கும்
பாந்தளிற் பெரிய திண்டோட்
பரதனைப் பழியிற் றீர்ந்த
வேந்தனைக் கண்டு நீநின்
வில்வலங் காட்டி மீண்டு
போந்ததோ வுயிருங் கொண்டே
போனவை பொருந்திற் றம்மா.

'இனிது உறைந்து - நன்றாகத் தங்கி, ஏந்து அகல் ஞாலம் எல்லாம் - மிகவும் அகன்ற உலகத்தை எல்லாம், இவர - பொருந்தும் முறையில், தாங்கும் - தாங்கிவரும், பாந்தளின் - ஆதிசேடன் என்னும் பாம்பைவிட, பெரிய திண் தோள் பரதனை - பெரிய வலிய தோள்களையுடைய பரதாழ்வானை, பழியின் தீர்ந்த வேந்தனை - குற்றங்களினின்று விடுபட்ட மன்னனை, நீ கண்டு - நீ பார்த்து, நின் வில் வலம் காட்டி - உன் வில்லின் வலிமையை (அவனிடம்) காட்டி, மீண்டு உயிரும் கொண்டே போந்ததோ - திரும்பி உயிருடன் வந்தாயோ? போனவை பொருந்திற்று அம்மா - நீ சென்றதாகச் சொன்னது மிகவும் பொருந்தியது! (முழுப் பொய்யானது); ஆச்சரியம்!

அயோத்தியில் புகுந்து தான் செய்யப் போவதாகக் கூறிய வஞ்சனை மொழிகளை முன் மாயாசனகப் படலம் 39, 41 செய்யுட்களிற் காண்க. ஏந்துதல் - மிகுதல், (தொல். பொ. 543 உரை); சுமத்தல் என்ற பொருளும் ஏற்கும். இவர்தல் - பொருந்துதல்; 'மாதிவர் பாகன்' (திருவாச. 43, 1). பரதன் தோளுக்கு ஆதி

சேடன்; உருவத்தாலும் வலிமையாலும் பரதன் ஆதிசேட னுடன் ஒத்திருத்தலோடு, புவியைத் தாங்கும் தன்மையிலும் ஒத்திருந்தமை உணரத்தக்கது. போனவை பொருந்திற்றம்மா என்றதால், அநுமன் இந்திரசித்தின் வஞ்சனையைச் சுட்டி இகழ்ந்தமை கூறப்பெற்றது.

பி - ம். 1. ஏந்தின ஞாலமெல்லாம்; இனிதுறைந்தியற்கை தாங்கும்; யவரைத் தாங்கும்; விசையிற்றுங்கும்.

2. பழி தீர்ந்த.

3. நீர்நும் வில்வலி காட்டி, நீர்நும் மிகுவலி.

4. போந்ததே யளவையன்றே போனவை பொருந்திற்றன்றே; யாயி னும் புதுமைத்தன்றே. 71

2940. அம்பரத் தமைந்த வல்விற்
சம்பர னுவி வாங்கி
உம்பருக் குதவி செய்த
வொருவனுக் குதயஞ் செய்த
நம்பியர் முதல்வ ரான
மூவர்க்கு நால்வ னான
தம்பியைக் கண்டு நின்றன்
றனுவலங் காட்டிற் றுண்டோ.

'அம்பரத்து அமைந்த - வானத்தில் (இந்திரனோடு போருக்கு) அமைந்த, வல்வில் சம்பரன்-வலிய வில்லினையுடைய சம்பராசுர னின், ஆவி-உயிரை, வாங்கி - போக்கி, உம்பருக்கு உதவி செய்த - தேவர்களுக்கு உதவி அளித்த, ஒருவனுக்கு - ஒப்பற்ற தயரத மன்னனுக்கு, உதயம் செய்த - பிறந்த, நம்பியர் - (குணங்களால்) பூரணரும், முதல்வரான - முதல்வருமான, மூவர்க்கு - மூத்தவர் களான மூன்று தமையன்மார்களுக்கு (ப் பின்னே தோன்றிய), நால்வனான தம்பியை - நாலாமவனான சத்துருக்கனனை, கண்டு - பார்த்து, நின்தன் - உன்னுடைய, தனுவலம் காட்டிற்று உண்டோ-வில் வலத்தை (அவனுக்குத்) தெரிவித்தது உண்டோ?

சம்பரனைத் தயரதன் தொலைத்தது; 'குன்றளிக்குங் குல மணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீகொண், டன்றளித்த வரசன்றோ புரந்தரனின் றுள்கின்ற தரச வென்றான்'; (பால. கையடைப். 8) என்ற விசுவாமித்திரர் வாக்கால் அறிக'

இன்னும், அயோத்தி. மந்தரை சூழ்ச். 81; பள்ளி படை. 53; திருவடிசூட்டு. 63; ஆரணிய. 199; யுத்த. 93 காண்க. வல்வில் - ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பை யெய்யும் விற்றொழில். (புற. 150) அடிக் குறிப்பு. உதயம் செய்தல்- பிறத்தல். தயரதனின் பல சிறப்புக்களுள் அவன் சம்பரனை வென்றதைச் சுட்டி, அன்னவன் மைந்தன் என்று கூறியது நயம். முதல்வர், மூத்தவர் என்ற பொருளில் வந்தது. நால்வனுன தம்பி - நாலாவது மகனுன தம்பி என்க.

பி - ம். 1. அம்பியையந்தமைந்த, அம்புயத்தமைந்த.

3. நம்பியாம் முதல்வ, நம்பியை முதல்வரான, நம்பிதன் தம்பிமார்கள்.

4. கண்டதுண்டோ வவனெடுந் தாக்கினிரோ. 72

2941. தீயொத்த வயிர வாளி
யுடலுறச் சிவந்த சோரி
காயத்தின் செவியி னூடும்
வாயினுங் கண்க ளூடும்
பாயப்போ யிலங்கை புக்கு
வஞ்சனை பரப்பச் செய்யும்
மாயப்போ ராற்ற லெல்லா
மின்றொடு மாளு மன்றே.

'தீ ஒத்த வயிர வாளி - (இலக்குவனின்) நெருப்பை ஒத்ததும் வயிரம் போன்றதுமான அம்புகள், உடல் உற - உன் உடலைப் பொருந்த, காயத்தின் - (அதனுல் உன் உடலில் உண்டான) காயங்களினின்று (பொழிந்த), சிவந்த சோரி - சிவந்த குருதி யானது, செவியின் ஊடும் - உன் காதுகள் வழியாகவும், வாயினும்- வாயின வழியாகவும், கண்கள் ஊடும் - கண்களின் வழியாகவும், பாய - புறத்திலே பாய்ந்து புறப்பட, இலங்கை போய் புக்கு - (நீ) இலங்கைக்குச் சென்று அதனுள் புகுந்துகொண்டு, வஞ்சனை பரப்ப செய்யும் மாயப் போர் ஆற்றல் எல்லாம்-வஞ்சனைகளை பரப்பு வதற்காக நீ செய்யும் மாயப் போர்களை இயற்றும் உன் ஆற்றல் களெல்லாம், இன்றொடு மாளும் - இன்றோடு முடியும். அன்று, ஏ, அசைகள்.

'நீ இனி மாயப் போர் செய்ய இயலாதபடி உன்னைக் கொல்வோம்' என்று அநுமன் இந்திரசித்திடம் கூறினான் என்க. இலங்கை புக்கு என்றமையில், தந்தை முதலியோரிடம் ஆராய்ந்து என்பதும் தொனிப்பது காண்க.

பி - ம். 1. சிவந்த சோதி.

2. காயத்தும் செவியினூடும் வாயினுங் கண்கடானும்.

3. இலங்கை யெய்து; இலங்கை புக்கும்; பரப்பிச் செய்யும், பலவுஞ் செய்யும்.

4. மடியுமன்றே, முடியுமன்றே. 73

2942. பாசமோ மலரின் மேலான்
பெரும்படைக் கலமோ பண்டை
ஈசனார் படையோ மாயோ
னேமியோ யாதோ வின்னும்
வீசநீர் விரும்பு கின்றீ
ரதற்குநாம் வெருவிச் சாலக்
கூசினேம் போதும் நும்மை
கூற்றினார் குறுக வந்தார்.

'பாசமோ - நாக பாசமோ? மலரின் மேலான் பெரும்படைகலமோ - பிரமாத்திரமோ? ஈசனார் பண்டை படையோ - பாசுபதாஸ்திரமோ? மாயோன் நேமியோ - திருமாலுக்குரிய சக்கரப் படையோ? இன்னும் நீர் யாதோ வீச விரும்புகின்றீர் - இன்னும் நீ எம்மீது எதனை வீச விரும்புகின்றாய்? அதற்கு நாம் சால வெருவி கூசினேம் - அதற்கு நாங்கள் மிகவும் அஞ்சுகின்றோம்! (அஞ்ச வில்லை என்றபடி); போதும் - (உன் இந்திரசாலங்கள் எல்லாம்) போதுமானவை; நும்மை கூற்றினார் குறுக வந்தார் - இயமன் (இலக்குவன் உருவத்தில்) உங்கள் யாவரையும் (கொல்ல) நெருங்கி வந்துவிட்டான்.

நாகபாசம், பிரமாத்திரம் ஆகியவை முன்பே வீசப் பெற்றன! இனி வீசப் போவது யாது? அவை செய்யப்போவதுதான் யாது?

என்று அநுமன் இகழ்ந்து வினவுகின்றான். 'வெருவிச் சாலக் கூசினோம்' என்றது குறிப்பு மொழி; கூசமாட்டோம் என்றபடி. நும், என்றது இராவணன் முதலியோரை.

பி-ம். 2. இன்னம்.
3. விரும்புகின்றற்கு நாம்.
4. கூசினோம் போதும் போதும். 74

2943 வரங்களி ருடைய வாறு
மாயங்கள் வல்ல வாறும்
பரங்கொள் வா னவரிற்றெய்வப்
படைக்கலம் படைத்த வாறும்
உரங்களு நின்ற வன்றே
யும்மைநா முயிரி னோடுஞ்
சிரங்கொளத் துணிந்த தன்ன
துண்டது திறம்பி னோமோ.

'நீர் வரங்கள் உடையவாறும் - நீங்கள் (தேவர்கள்பால்) பெற்ற வரங்களை உடைமையையும், மாயங்கள் வல்லவாறும்-மாயச் செயல்களைச் செய்வதில் வல்லமை பெற்றமையையும், பரம்கொள் வானவரின் - மேன்மை கொண்ட தேவர்களிடமிருந்து, தெய்வ படைக்கலம் படைத்தவாறும் - தெய்வத் தன்மை வாய்ந்த படைக் கலங்களை நீங்கள் பெற்றுள்ளமையும், உரங்களும்-உங்கள் வலிமை களும், நின்றவன்றே - (உங்களிடம்) நிலையாய் நிற்பனவல்லா? (அப்படியிருந்தும்), நாம் உம்மை 'உயிரினோடும் சிரம் கொள துணிந்தது அன்னது உண்டு - நாங்கள் 'உங்களை நீங்கள் உயிருட னிருக்கும் போதே உங்கள் தலைகளைக் கொள்ள தீர்மானித்தது உண்டு; அது திறம்பினோமோ - அதனிலிருந்து மாறினோமோ? (இல்லையே, என்றபடி).

'இத்தனை வரங்கள் முதலியனவும் உண்டென்பதும் அறிந்தும் இன்று உங்களைக் கொல்ல வந்தோம்; அதுவும் இன்று தப்பாமற் கொல்லுவோம் என்பது பொருள்' என்பது பழையவுரை. பரம் - மேன்மை; திவ்வியம் எனலும் ஆம். வானவரிற் படைக்கலம்

படைத்தவாறு, வெற்றியால் என்க. கண்டது என்ற பொருளில் வந்தது. திறம்புதல் - மாறுதல்.

பா - ம். 1. வரங்களுமுடையவாறும்.

2. பரங்கொள்வான் வரிவிற்றெய்வப் ; வரிவிற்பெற்ற.

3. உரங்களு நின்றதன்றே ; உரங்களோடுன்னியன்றே, உரங்களோ டெண்ணியன்றே.

4. சிரங்கொளத் துணிந்ததன்ன துண்டது திறம்பினேமோ ; துணிந்த தன்று ; திறம்பினேமே. 75

2944. விடந்துடிக் கின்ற கண்டத்
தண்ணலும் விரிஞ்சன் றானும்
படந்துடிக் கின்ற நாகப்
பாற்கடற் பள்ளி யானுஞ்
சடந்துடிக் கிலராய் வந்து
தாங்கினுஞ் சாத றிண்ணம்
இடந்துடிக் கின்ற துண்டே
யிருத்திரோ வியம்பு வீரே.

விடம் துடிக்கின்ற கண்டத்து அண்ணலும் - விடம் மின்னுகின்ற ஸ்ரீ கண்டத்தையுடைய சிவபெருமானும், விரிஞ்சன் தானும் - பிரமனும், பால் கடல் படம் துடிக்கின்ற நாக பள்ளியானும் - திருப்பாற்கடலில் படம் சலிக்கின்ற ஆதிசேடன்மீது பள்ளிகொண்டுள்ள திருமாலும், சடம் துடிக்கிலராய் வந்து தாங்கினும் - உடல் நடுக்கம் அற்றவராய் (உங்களுக்கு உதவி செய்ய வந்து உன்னைத்) தாங்கினாலும், சாதல் திண்ணம் - நீ இறத்தல் உறுதியானது; இடம் துடிக்கின்றது உண்டே - உன் இடக்கண், புயம் முதலியன துடிக்கின்றனவன்றோ! இருத்திரோ - நீங்கள் இனி உயிருடன் இருப்பாயோ? இயம்புவீர்-சொல். ஏ, அசை.

நீர் என்பதை இகழ்ச்சிக் குறிப்பாகக் கொள்க; குலத்தைக் கூட்டி உரைத்ததாகவும் கொள்க. கண்டம் - கழுத்து. விரிஞ்சன் - பிரமன். துடிக்கின்றது - (முதலடியில்) மின்னுகின்றது என்ற

பொருளைத் தந்தது. நாகம், இங்கு சேடன். சடம் - உடல்; ஜடம் என்ற வட சொல்லின் திரிபு; 'சடங்கொள் சீவரப் போர்வையர்' (தேவா. 805, 10). இங்கு அநுமன் கூறியது பால காண்டம் கையடைப் படலத்தில் தயரதன் 'தொடையூற்றுந் தேன்றுளிக்கும்' என்று தொடங்கும் பாடலைச் சொல்லிக் கௌசிக முனிவரின் வேண்டுகோளை மறுத்த இடத்தை நினைப்பூட்டுகின்றது. இடம் துடிப்பது ஆண்களுக்குத் தீய சகுனம் எனபது இந்நூலிற் பல விடங்களிலும் கூறப்பெற்றுள்ளது இருத்திரோ, என்பதற்கு உயிருடன் இருக்கப் போகிறீரோ, எனவும் கொள்க.

பி - ம். 4. வென்னிருந் தெழுகிலீரோ. 76

2945. கொல்வனென் றுன்னைத் தானே
குறித்தொரு சூளுங் கொண்ட
வில்லிவந் தருகு சார்ந்துன்
சேனையை முழுதும் வீட்டி
வல்லைநீ பொருவா யென்று
விளிக்கின்றான் வரிவி ஞணின்
ஒல்லொலி யைய செய்யு
மோமத்துக் குறுப்பொன் றாமோ.

'குறித்து-(உன்னைக்) குறித்து', உன்னை தானே கொல்வன் என்று - 'உன்னைத் தானே கொல்வன்' என்று, ஒரு சூளுங் கொண்ட - ஒரு சபதமும் செய்த, வில்லி - வில்லை ஆளுவதில் வல்ல இலக்குவன், வந்து அருகு சார்ந்து - (இங்கு) வந்து (உன்) அருகிலும் நெருங்கி, உன் சேனையை முழுதும் வீட்டி - உன் படைகளை முற்றிலும் அழித்து, 'வல்லை நீ பொருவாய் என்று - 'விரைவில் நீ வந்து போரிடுவாய்' என்று, விளிக்கின்றான் - உன்னை அழைக்கின்றான்; ஐய - இந்திரசித்தே, வில் நாணின் ஒல் ஒலி - அவன் வில் நாணினின்று எழும் ஒல்லென்ற ஓசை, செய்யும ஓமத்தும் - நீ செய்யும் வேள்வி ஓமத்திற்கு, உறுப்பு ஒன்று ஆமோ - ஓர் அங்கம் என்று எண்ணினாயோ?

'நீ யாகம் செய்கிறதற்கு ஒருவன் சிறு நாணிலி செய்து கொண்டு இருக்கவென்று வரம் பெற்றாயோ' வென்று பரிகாச வசனம்' என்பது பழையவுரை. சூள் கொள்ளுதல்; (பரிபா. 8, 56, 63, 61). இலக்குவன் சூளுரைத்தது? விளித்தல் - கூப்பிடுதல்.

பி - ம். 1. தானே யென்றெடு சபதங் கொண்ட.

2. சார்ந்து சேனையை.

3. வல்லையே வாவாவென்று; வல்லநீ, வல்லையேல்.

4. மோமத்துக்குறுப்புண்டாமே; குறுப்பொன்றுமே. 77

2946. மூவகை யுலகுங் காக்கு
முதலவன் றம்பி பூசல்
தேவர்கண் முனிவர் மற்றுந்
திறத்திறத் துலகஞ் சேர்ந்தார்
யாவருங் காண நின்றா
ரினியிறை தாழ்ப்ப தென்னே
சாவது சரத மன்றே
வென்றனன் றருமங் காப்பான்.

தருமம் காப்பான் - அறத்தைக் காப்பவனாகிய அநுமன், (மேலும் இந்திரசித்தை நோக்கி), 'மூவகை உலகும் காக்கும் முதலவன் தம்பி - மூன்று வகையான உலகங்களையும் காக்கும் முதன்மை மூர்த்தியான திருமாலின் அவதாரமான இராமபிரானின் இளையவனான இலக்குவன், (இடும்), பூசல் காண - போரினைப் பார்க்க, தேவர்கள், முனிவர், மற்றும் திறத்திறத்து உலகம் சேர்ந் தார் யாவரும் - தேவர்கள், இருடிகள், இன்னும் வகை வகையான உலகங்களில் வாழ்பவர் ஆகியோர் யாவரும், நின்றார் - (வந்து கூடி) நின்றார்கள்; இனி இறை தாழ்ப்பது என்னே - இனிமேலும் நீ சிறிதளவும் தாமதிப்பது ஏன்? சாவது சரதம் அன்றே — நீ இறப் பது நிச்சயம் அல்லவா?' என்றனன் - என்று கூறினான்.

தருமம் காப்பான் - (ஆசாரியான்) அநுமன் என்பது ஸ்ரீ ஐய ரவர்களின் குறிப்பு. இவ்வாறு அநுமன் கூறி வேள்வி முயன் றிருந்த இந்திரசித்தினைப் போருக்கு அழைத்தனன் என்க. திறத் திறத்துலகம் - மேலேழு கீழேழு என்ற பலவகை உலகங்கள்.

இறை - சிறிது நேரம். சரதம் - நிச்சயம். இராமபிரானை, திருமாலே என்று ஆசிரியர் இந் நூலிற் பற்பல இடங்களில் வலியுறுத்துதல் ஆங்காங்கே காண்க. காத்தற் கடவுள் திருமால் என்பது இங்குச் சுட்டப்பெற்றது. அநுமனைத் தருமங் காப்பான் என்றமை; கிட்கிந்தா. 73; சுந்தர. 720, 774, 803; 1041.

பி - ம். 1. மூவகை வினையினின்ற முழுமுதற் றலைவன் மூன்றுந், றலைவர் மூன்றுந்.
2. துலகஞ் சார்ந்தார்.
3. தாழ்ப்பதென்ன, என்னே.
4. தருமம் போல்வான். 78

## இந்திரசித்து கூறிய மாற்றம்

2947. அன்னவா சகங்கள் கேளா
வனலுயிர்த் தலங்கற் றோளான்
மின்னகு பகுவா யூடு
வெயிலுக நகைபோய் வீங்க
முன்னரே வந்திம் மாற்ற
மாற்றலின் மொழிந்த வாறே
தென்னதோ நீயிரென்னை யிகழ்ந்ததென்
றினைய சொன்னான்.

அலங்கல் தோளான் - மாலைகளை யணிந்த தோள்களையுடைய இந்திரசித்து, அன்ன வாசகங்கள் கேளா - (அநுமன் கூறிய) அந்த வார்த்தைகளைக் கேட்டு, அனல் உயிர்த்து - நெருப்புப் போன்று பெருமூச்செறிந்து, மின் நகு பகு வாய் ஊடு - மின்னலைப் போன்று ஒளி வீசும் தன் பிளந்த வாயின் வழியே, வெயில் உக - வெப்பக் காற்றுச் சிந்த, நகை போய் வீங்க - சிரிப்புத்தோன்றி மிக, (அநுமனை நோக்கி), 'முன்னர் வந்து - என் எதிரில் தோன்றி, இ மாற்றம் - இச் சொற்களை, ஆற்றலின் மொழிந்த ஆறு ஏது - வலிமையுடன் பேசிய தன்மை யாது? நீயிர் என்னை இகழ்ந்தது என்னதோ - நீங்கள் என்னை இகழ்வாகக் கருதியது ஏனோ?' என்று இனைய சொன்னான் - என்று கூறி, இப்படிப்பட்ட (இனி வரும்) சொற்களைக் கூறினான். முன்னரே; ஏ, அசை.

இங்கு இந்திரசித்துக்கு வந்த வீர நகை எள்ளுதல் பற்றியது என்க. முன்னரே வந்து, என்றதனுல், 'என்முன் வர அஞ்ச வேண்டியிருக்க. அவ்வாறு வந்ததோடு என்னை இகழ்ந்து பேசவும் துணிந்தமை குறித்து' ஆம் என்க.

பி - ம். 1. தலங்கற் பொற்றேள்.

3. நகையுக வெயில்போய் ; விங்கு.

3. மாற்ற மொழிகின்றிர் மொழிந்த மாற்றம் ; ஆற்றலான் மொழிந்த வாற(து), முன்னும் வந்திரந்த மாற்ற மாற்றலன் மொழிந்தவாறே.

4. நீங்களென்னை யிகழ்ந்தது. 79

2948. மூண்டபோர் தோறும் பட்டு
முடிந்தநீர் முறையிற் றீர்ந்து
மீண்டபோ ததனை யெல்லாம்
மறத்திரோ விளிதல் வேண்டி
ஈண்டவா வென்னு நின்றீ
ரித்தனை பேரும் பட்டு
மாண்டபோ துயிர்தந் தீயு
மருந்து வைத்தனிரோ மான.

(இந்திரசித்து அநுமனை நோக்கி), 'மூண்ட போர்தோறும் - எழுந்த போர்களிலெல்லாம், பட்டு முடிந்த நீர் - அழிந்து இறந்த நீங்கள், முறையில் தீர்ந்து - (இறந்தவர் பிறவார் என்ற) நியதியினின்று மாறி, மீண்ட போது - உயிர் பெற்றுப் பிழைத்தபோது, அதனை எல்லாம் மறத்திரோ - அவற்றை எல்லாம் மறந்தீர்களோ? இத்தனை பேரும் பட்டு மாண்டபோது - இத்தனை வானரர்களும் பிறரும் என்னால் அடிபட்டு இறக்கும்போது, உயிர் தந்து ஈயும் மருந்து வைத்தனிர் மான - (போன) உயிரை (மீட்பித்துக்) கொடுக்கும் சஞ்சீவி மருந்தினைக் கையில் கொண்டுள்ளீர் போல, விளிதல் வேண்டி - நீர் சாவதை விரும்பி, ஈண்ட வா - 'நெருங்கி வா', என்னு நின்றீர் - என்று சொல்லிக்கொண்டு நிற்கிறீர். ஓ, அசை.

'மருந்து வைத்தனிரோ: பட்டபோது அருந்த முந்தாணியிலே மருந்து முடித்துக்கொண்டு வந்தீர்களோ' எனப் பொருள் என்பது பழையவுரை. 'ஈண்ட வா - இங்கே வா', எனலும் ஆம். முறை - செத்தவர் செத்தவரே என்பது முறை; அதனின்று தீர்தல் - இறந்தவர் பிழைத்தல் என்பது விளிதல் - சாதல். உயிர் தந்தீயு மருந்து - சஞ்சீவி. மான, உவம வாசகம். வைத்தனிரோ மாண, என்று பாடங் கொண்டு, மாண்புமிக வைத்துளீரோ என்றும் பொருள் கொள்வர்.

பி - ம். 2. மறத்திரே.

3. ஈண்டவொட்டென்று நின்றுயித்தனை விருமின்னம்.

4. வைத்தனேயோ மான : மாண. 80

2949. இலக்குவ னாக மற்றை
யிராமனே யாக வீண்டு
விலக்குவ ரெல்லாம் வந்து
விலக்குக குரங்கு வெள்ளம்
குலக்குல மாக மாளுங்
கொற்றமு மனிதர் கொள்ளும்
அலக்கணு முனிவர் தாமு
மமரருங் காண்ப ரன்றே.

'இலக்குவன் ஆக - இலக்குவன் ஆகட்டும்; மற்றை - அன்றி, இராமனே ஆக - இராமனாகவே ஆகட்டும்; ஈண்டு - இங்கு, விலக்குவர் எல்லாம் வந்து விலக்குக - தடுப்பவர் யாவரும் வந்து விலக்கட்டும்; குலம் குலமாக - கூட்டம் கூட்டமாக, குரங்கு வெள்ளம் - குரங்குக் கூட்டம், மாளும் - சாதற்கேதுவான, கொற்றமும் - என் வீரத்தையும், மனிதர் கொள்ளும் அலக்கணும் - (இராம இலக்குவரான) மானிடர்கள் அடையுந் துன்பத்தையும், அமரரும் முனிவர் தாமும் - தேவர்களும் முனிவர்களும், காண்பர் - காண்பார்கள், அன்றே - அல்லவா?

முன் 2946ஆம் செய்யுளில் 'தேவர்கண் முனிவர் மற்றும் இயத்திறம் உலகம் சேர்ந்தார் யாவரும் காண நின்றார்' என்ற

அநுமன் சொல்லுக்கு எதிராக இந்திரசித்தின் கூற்று அமைந்துள்ளமை காண்க.

பி - ம். 1. யாக மீண்டு.

2. விலக்கினுங் குரக்கு வெள்ளம்; விலக்குறக் குரங்கு; வலக்கினுங் குரங்கின், குரக்கின் வெள்ளம்.

3. கொற்றம் நீங்கக் கொள்ளும்.

4. தம்மோடமரருங்; காண்பரின்றே. 81

2950. யானுடை வில்லு மென்பொற்
றோள்களு மிருக்க வின்னும்
ஊனுடை யுயிர்க ளியாவு
முய்யுமோ வொழிப்பி லாமல்
கூனுடைக் குரங்கி னோடு
மனிதரைக் கொன்று சென்றவ்
வானிடைத் தொடர்ந்துங் கொல்வென்
மருந்தினு முய்ய மாட்டீர்.

'யானுடை வில்லும் - என்னுடைய வில்லும், என் பொன் தோள்களும் - என் அழகிய தோள்களும், இன்னும் இருக்க - இனியும் (நல்லபடியாய்) இருக்க, ஊன் உடை உயிர்கள் யாவும் - மாமிசத்தை உடைய உயிர்ப் பிராணிகள் எல்லாம், ஒழிப்பு இலாமல் - ஒழிவதே அல்லாமல், உய்யுமோ - பிழைக்குமோ? கூன் உடை குரங்கினோடு - கூனலை உடைய குரங்குகளோடு, மனிதரை - (இரு) மனிதர்களை, கொன்று - இங்குக் கொன்று, (கொன்றபின் அவர்கள் வானிடைத் தேவர்களாக மாறிச் செல்வார்களாயினும்), அ வானிடை சென்று தொடர்ந்தும் கொல்வென் - அந்த வானத்தினிடையே சென்று (அவ்வுயிர்களைப்) பின்பற்றியும் கொல்வேன்; மருந்தினும் - சஞ்சீவியினாலும், உய்ய மாட்டீர் - நீவிர் பிழைக்க மாட்டீர்கள்.

'வானினும் தொடர்ந்து உயிரையும் கொல்வன் என உயிர் எச்சமாகக் கொள்க' என்பது பழையவுரை. இவ்வுரையின்படி

உயிரோடு கூடிய உடலை இங்குக் கொன்று, உயிரை வானுலகுக்கும் சென்று கொல்வேன் என்றும் கூறியதாகக் கொள்ளலாம்.

பி - ம். 1. மிருப்ப வின்னும்.
2. முய்யுமோ வுயிருனுமே ; முய்யுமோ கமுகுனுமே ; வெளிப்பிலாமல்.
3. குரக்கினேடும் ; கொன்றுநின்றவ்.
4. வானினுந் தொடர்ந்து ; கொல்வன் ; கொல்வான். 82

2951. வேட்கின்ற வேள்வி யின்று
பிழைத்தது வென்றே மென்று
கேட்கின்ற வீர மெல்லாங்
கிளத்துவீர் கிளத்தல் வேண்டா
தாழ்க்கின்ற தில்லை யும்மைத்
தனித்தனித் தலைகள் பாறச்
சூழ்க்கின்ற வீர மென்கைச்
சரங்களாய்த் தோன்று மன்றே.

'இன்று வேட்கின்ற வேள்வி பிழைத்தது; வென்றேம் என்று - இன்று (இவ் இந்திரசித்து) இயற்றுகின்ற வேள்வி தவறிற்று; யாம் வெற்றி அடைந்துவிட்டோம்' என்று, கேட்கின்ற வீரம் எல்லாம்-கேட்கின்ற வீரப்பேச்சுக்களை யெல்லாம், கிளத்துவீர் - சொல்லிக்கொண் டிருக்கிறீர்கள்; கிளத்தல் வேண்டா - அவ்வாறு பேசுதல் வேண்டா; உம்மை - உங்களை, தனி தனி - தனித்தனியாக, தலைகள் பாற - தலைகள் அடியற்றுப் போக, சூழ்க்கின்ற வீரம் - நான் எண்ணுகின்ற என் வீரம், என் கை சரங்களாய் தோன்றும் - என் கையிலிருந்து எழும் அம்புகளாகக் காணப்படும்; தாழ்க்கின்றது இல்லை - (இனி, இச் செயலில் யான்) தாமதிப்பதில்லை. அன்று, ஏ : அசைகள்.

கிளத்துவீர் - நீவிர் கிளத்தும் பேச்சுக்களை என்றும் பொருள் கொள்ளலாம். பாறுதல் - அடிசிதறுதல்; 'பாறிய சிதாரேன்' (புறநா. 150); சிதறுதலும் ஆம்; 'ஆலி வானிற் காலொடு பாறி' (அகநா. 9). சூழ்த்தல்: பிறவினை; கருதச் செய்கின்ற என்ற

பொருளில் அமைந்தது. வீரம் சரங்களாய்த் தோன்றும் என்றதிலுள்ள நயம் ஓர்க. 'டகரத்திற்கு முகரம் எதுகை' என்பது இச் செய்யுளைப்பற்றிய ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. இச் செய்யுளில் 'வீரம் கிளத்தல் வேண்டா' என்றமையால், 'உங்கள் வாய் வீரம் வேண்டா' என்றும், 'வீரம் சரங்களாய்த் தோன்றும்' என்றமையால் 'யான் செயல் வீரன்' என்றும் இந்திரசித்து கூறினான் ஆம்; அடுத்த செய்யுளையும் காண்க.

பி - ம். 1. வேள்வி யன்றோ; வேறுமின்று.

2. கிளத்துதல் கிளத்தலம்மா; கிளர்த்துதல் கிளர்த்தலம்மா.

3. தாட்கின்றதில்லை நும்மை, தலைகள் சிந்த, தலைகள் தள்ளச்.

4. சூட்கின்ற விதியாற் செய்கை தொடங்குமின் றுணிந்த தெல்லாம். 83

2952 மற்றெலா நும்மைப் போல
வாயினுற் சொல்ல மாட்டேன்
வெற்றிதான் முன்னுந் தந்தீர்
விரைவது வெல்லற் கொல்லா
உற்றுநா னுருத்த காலத்
தொருமுறை யெதிரே நிற்கக்
கிற்றிரோ வின்னு மாண்டு
கிடத்திரோ நடத்தி ரோதான்.

'நும்மை போல எலாம் வாயினுல் சொல்ல மாட்டேன் - நீங்கள் செய்வதுபோல எல்லாவற்றையும் என வாயினுல் பேச மாட்டேன்; முன்னும் வெற்றிதான் தந்தீர் - முன்னே நடந்த போர்களிலும் எனக்கே வெற்றி உண்டாக்கினீர்கள்; (நீங்கள் தோற்றீர்கள் என்றபடி); விரைவது வெல்லற்கு ஒல்லா - விரைந்து தொழில்செய்வது வெற்றி பெறுதற்கு ஆகாது; நான் உற்று ஒருமுறை உருத்த காலத்து - நான் ஒருதடவை மிகவும் கோபித்த போது, எதிரே நிற்க கிற்றிரோ - என் எதிரே நிற்கவும் மாட்டுவீரோ; இன்னும் மாண்டு கிடத்திரோ நடத்திரோ - மற்றொருமுறை இறந்து கிடக்க (நினைத்தீரோ)? அன்றி, (அப்பால்) நடந்து (தப்புவீரோ). மற்று, தான்: அசைகள்.

'முன்னும் தந்தீர்' என்றதற்குப் பதிலாய் 'இரண்டுந் தந்தீர்', 'மூன்றுந் தந்தீர்' என்று சில சுவடிகளிற் காணப் பெறுவது கொண்டு சுந்தரகாண்டத்தில் அநுமன்மீதும், இக் காண்டத்தில் இலக்குவன்மீது நாகபாசத்தாலும் பிரமாத்திரத் தாலும் இந்திரசித்து தான்கொண்ட வெற்றியைக் குறித்தனன் என்பர் சிலர். 'விரைவது' என்ற சொல்லை இந்திரசித்து அநுமன் முதலியோரைக் குறித்து, 'ஏதோ வெற்றிபோல் தோன்றுவதைக் கொண்டு அவசரப்பட்டு என்னை இகழவேண்டா' என்று எச்சரித்ததாகக் கொள்க. உறுதல் - மிகுதல்; 'பல் லெலா முறத்தோன்றும் பகுவாயாள்' ஆரணிய. 356. கிற்றல் - செய்யுந்திறமை கொள்ளுதல். இன்னும் மாண்டு என்று சுட்டியது, நாகாத்திரத்தாலும் பிரமாத்திரத்தாலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் குறித்து என்க.

பி - ம். 1. வாக்கினுற் சொல்ல.

2. மூன்றுந் தந்தீர்; இரண்டுந் தந்தீர்; விரைவது வெல்லக் கொல்லாம், விரைவதென்னை கொல்லாம்; வினைவது விளம்பவிவர்.

3. உற்றநானுருத்த; முற்ற நானுருத்த; யெதிரே நிற்ப.

4. கற்றிரோ; வின்றுமாண்டு கடத்திரே நடத்திரோதான்; முற்றிக் கிடத்திரோ; கடத்திரோதான். 84

இதன்பின் ஒரு சுவடியில் ஓர் அதிகப்பாடல்:—

சூரெலாந் திரண்ட பொற்றேரூட் டாபதற் கிளைய தோன்றல்
நீரெலா மறந்தீர் போலும் யானசெரு வேற்று நின்று
காரெலாஞ் சொரிவ தென்னும் கணைகளாற் கவியின் வெள்ளம்
பேரெலா மடிந்து நூறி யிறத்தலு மிருகாற் பெற்றீர்.

## இந்திரசித்து போருக்கெழுதல்

2953. நீன்மின்க ணின்மி னென்னு
நெருப்பெழ விழித்து நீண்ட
வின்மின்கொள் கவச மிட்டான்
வீக்கினுன் றூணி வீரப்
பொன்மின்கொள் கோதை கையிற்
பூட்டினுன் பொறுத்தான் போர்வில்
என்மின்கொள் வயிரத் திண்டே
ரேறினு னெறிந்தா ணுணி.

(இவ்வாறு சொல்லி, மேலும் அநுமனை நோக்கி, இந்திரசித்து), 'நின்மின்கள் நின்மின்' என்னு - 'நில்லுங்கள் நில்லுங்கள்' என்று கூறி, நெருப்பு எழ விழித்து - நெருப்பு புறப்படுமாறு கண்களை விழித்து, நீண்ட வில் மின்கொள் கவசம் இட்டான் - மிக்க ஒளிகொண்ட கவசத்தை இட்டுக்கொண்டு, தூணி வீக்கினன் - அம்புப் புட்டிலைக் கட்டிக்கொண்டு, வீர - வீரத்தன்மை பெற்றதும், பொன் மின்கொள் கோதை - பொன்போன்று ஒளி கொண்ட விரல் புட்டிலை, கையில் பூட்டினன் - கைவிரல்களிற் பூட்டி, போர்வில் பொறுத்தான் - போர்க்குரிய வில்லைத் தாங்கி, எல் - சூரியனுடைய, மின்கொள் - ஒளியைக் கொள்கிற, வயிரம் திண் தேர் ஏறினன் - வயிரம்போன்ற வலிய தேர்மீது ஏறி, நாணி எறிந்தான் - வில்லின் நாணைத் தெறித்தான்.

இட்டான் முதலிய முற்றுக்கள் எச்சமாக்கப் பெற்றன. வில் மின் - ஒரு பொருள் பல சொல்; மிகுதியைக் காட்டிற்று. கவசம்- உடலுக்கு இடுவது. கோதை - வில்லாளர் கையிற் பூணும் தோலுறை.

பி - ம். 2. மின்மின்கொள் கவசம். 85

## தேவர் கலங்கியது

2954. ஊதினன் சங்கம் வானத்
தொண்டொடி மகளி ரொண்கண்
மோதினர் கணத்தின் முன்னே
முழுவது முருக்கி முற்றக்
காதினு னென்ன வானோர்
கலங்கினர் கயிலை யானும்
போதினுன் றனு மின்று
புகுந்தது பெரும்போ ரென்றார்.

சங்கம் ஊதினன் - இந்திரசித்து தன் சங்கினை ஊதினன்; (அதைக் கேட்ட) வானத்து ஒண் தொடி மகளிர் - வானுலகிலுள்ள ஒளிவீசும் வளையல்களணிந்த தேவமாதர்கள், ஒண் கண் மோதினர் - தம் ஒளிமிக்க கண்களில் (கைகளால்) மோதிக் கொண்டனர்;

வானோர் - தேவர்கள், 'கணத்தின் முன்னே - ஒரு கண நேரத்துள்ளே, முழுவதும் முருக்கி முற்ற காதினான் - எல்லாவற்றையும் அழித்து முற்றிலும் கொன்றான்' என்ன - என்று, கலங்கினார் - மனக் கலக்கமடைந்தனர்; கயிலையானும் - சிவபெருமானும், போதினான் தானும் - மலரவனும், 'இன்று பெரும்போர் புகுந்தது - இன்று பெரிய போர் தொடங்கிற்று', என்றார் - என்று சொன்னார்கள்.

போரின் தொடக்கத்தை அறிவிக்கச் சங்கம் ஊதுதல் மரபு. வானமகளிர் - அரம்பையர். கண்மோதுதல், அச்சத்தால் என்க. முருக்குதல் - அழித்தல்; 'விறல்வேன் மன்னர் மன்னெயில் முருக்கி' (சிறுபாண். 247). காதுதல் - கொல்லுதல்; 'காது வெஞ்சினக் களியினர்' (சுந்தர. 234). போது - தாமரைப் போது. 'இன்று புகுந்தது பெரும்போர்'; (ஒப்பு): 'இன்று வலிது போரென்றான்' (யுத்த. 1964).

பி - ம் 1. ஊதினன்; மகளிருண்கண்.

2. முருங்கமுற்ற, முருங்கமுற்றி, ஒருங்கமுற்றக், முருகமுற்றிக்.

3. காதினனென; வானோர் முனிவரும்.

4. வல்லே புகுந்தது; எல்லை புகுந்தது.

86

## கலங்கிய வானவர் பின்பு தேறியது

2955. இழைத்தபே ரியாகந் தானே
யாஞ்செய்த தவத்தி னாலே
பிழைத்தது பிழைத்த லாலே
யிவனினிப் பிழைக்க லாற்றான்
அழைத்தது விதியே யாகு
மிலக்குவ னம்பி னாலே
உழைத்தது காண்கின் றேமென்
றேங்கினா ரும்ப ரெல்லாம்.

உம்பர் எல்லாம் - வானவர் யாவரும்; (பிறகு), 'யாம் செய்த தவத்தினாலே - யாம் (முன்) இயற்றிய தவத்தினாலே, (அதன் பயனாக), இழைத்த - (இந்திரசித்து) இயற்றிய, பேர் யாகம் - பெரிய யாகமானது, பிழைத்தது - (நிறைவேறாமல்) தவறிற்று;

பிழைத்தலாலே - (அவ்வாறு) தவறியதாலே, இனி இவன் பிழைக்கல் ஆற்ருன் - இனிமேல் இந்த இந்திரசித்து உயிர் பிழைக்கமாட்டான்; அழைத்தது விதியே ஆகும் - (இலக்குவனை) இங்கு வரச் செய்தது இவன் விதியின் பயனே ஆகும்; இலக்குவன் அம்பினுலே உழைத்தது காண்கின்றேம் - இவன் இலக்குவன் எய்யும் அம்பினுல் வருந்துவதைக் காணப்போகின்றேம்', என்று ஓங்கினர் - (என்ற எண்ணங்கொண்டு) மகிழ்ச்சியால் உயர்ந்தார்கள். தான், ஏ அசைகள்.

வீடணர் இராமபிரானிடம், 'இந்திரசித்து இப்பொழுது சேனையுடன் நிகும்பிலை .சென்றிருக்கின்றுன்; அவன் அவ்விடத்தில் தனது ஹோமகாரியத்தை முடித்துவிட்டுத் திரும்புவானேயானுல் நாம் எல்லோரும் மாய்ந்தோமென்றே எண்ணுங்கள்; மகாபாகுவே! 'ஆனுல் எவனுயினும் ஒரு பகைவன், நீ ஹோமத்தை முடித்துவிட்டு நிகும்பலையென்னும் ஆலமரத்தடியைச் சேர்வதற்கு முன்னமே படைக்கலமேந்திய உன்னைக் கொல்ல முயல்வானேயானுல், அவன்தான் உன்னைக் கொல்லத்தக்கவன்' என்று பிரமதேவர் முன்னெரு காலத்தில் அவனை நோக்கி வாக்களித்திருக்கிறுர்' என்று கூறியதாக வான்மீகம் (யுத்த. சர்க். 85) கூறும். இச் செய்தியை அறிந்த தேவர்கள் மகிழ்ந்தனர் என்க. 'பிழைத்தலாலே பிழைக்கலாற்ருன்' என்பது சொல்நயம். உழைத்தல் - வருந்தல்; 'வலையிற்பட் டுழைக்கின்றேற்கு' (திவ். திருமாலை. 36).

பி - ம். 1. யாஞ்செய்மா தவத்தினுலே.

2. பிழைத்த தேனும் வானரம் பிழைக்கலாற்ரு.

3. பிழைத்தது விதுவே; விதியே கொல்லென் றஞ்சினு ரம்பி னேடும்; அம்பினேரும்.

4. உழைத்தது காண்கின் றேமென் றுணங்கினு ரும்ப ருள்ளார்; ரேமென்று வணங்கினர்.



## போர்

2956. நாண்டொழி லோசை வீசிச்
செவிதொறு நடத்த லோடும்
ஆண்டொழின் மறந்து கையி
னடுக்கிய மரனுங் கல்லும்

மீண்டன மறிந்து சோர
விழுந்தன விழுந்த மெய்யே
மாண்டன மென்றே யுன்னி
யிரிந்தன குரங்கின் மாலே.

நாண் தொழில் ஓசை - (இந்திரசித்து தன் வில்லின்) நாணைத் தொழிற்படுத்திய ஒலி, வீசி - பரந்து, செவிதோறும் நடத்தலோடும் - (வானரப் படைகளின்) காதுகள் தோறும் பட்டவுடனே, குரங்கின் மாலே - அவ்வானரங்களின் வரிசைகள், ஆண்தொழில் மறந்து - தங்கள் வீரத்தை மறந்து, கையின் அடுக்கிய மரனும் கல்லும் - (பகைவர்மீது வீசும்பொருட்டுத்) தம் கைகளில் அடுக்கி வைத்திருந்த மரங்களும் கல்லும், மீண்டன மறிந்து சோர - திரும்பவும் (நிலத்தை நோக்கி)த் திரும்பி நழுவ, விழுந்தன - தாமும் விழுந்தன ; விழுந்த - இவ்வாறு விழுந்தவை, 'மெய்யே மாண்டனம் - உண்மையாக யாம் இறந்தவர்களாவோம்' என்றே உன்னி-என்றே உறுதியாக எண்ணி, இரிந்தன - (எழுந்து) ஓடின.

இந்திரசித்தின் நாணொலி கேட்ட வானரர்களின் செயல் கூறப்பெற்றது, 'செத்தாற்போலப் பயந்து விழுந்தது வானரம்' என்பது பழையவுரை. இச் செய்யுட்கு, ஒப்பு : 'அவ்வழி யிராவண னமரரஞ்சத்தன், வெவ்விழி நெருப்புக வில்லி ஞணிஃனச் செவ் வழிக் கோதையிற் றெறிக்கச் சிந்தின, எவ்வழி மருங்கினு மிரிந்த வானரம்' (யுத்த. 1078).

பி - ம். 1. நாண்டொழி லாசைவிச, லோதை வீச.
2. ஆண்டொழிலுடனே.
3. மீண்டென ; வேண்டின மறந்து சிந்தி விளிந்தது ; விழ்ந்தன விழ்ந்த மெய்மை; விழ்ந்தன விழ மென்மேல்.
4. மாண்டன மெனவே ; இரிந்தது ; கவியின் மாலே.

88

## அநுமன் போரிடல்

2957. படைப்பெருந் தலைவர் நின்று
ரல்லவ ரிறுதி பற்றும்
அடைப்பருங் காலக் காற்று
லாற்றல தாகிக் கீறிப்

புடைத்திரிந் தோடும் வேலைப்
புனலெனை விரிய லுற்றார்
கிடைத்தபே ரநும னுண்டோர்
நெடுங்கிரி கிழித்துக் கொண்டான்.

பெரும்படை தலைவர் நின்றார் - (நாணெலி கேட்டவர்களுள்) பெரிய படைத்தலைவர்கள் (ஓடாமல் களத்திலே) நின்றார்கள்; அல்லவர் - (தலைவர்) அல்லாத சேனுவீரர்கள், இறுதி பற்றும்- உலக இறுதியைப் பற்றுவதும், அடைப்பு அரும் - தடுப்பதற்கு அருமையானதுமான, கால காற்றால் - ஊழிக் காலக் காற்றினால், ஆற்றலது ஆகி - தாங்கமுடியாதது ஆகி, கீறி - கிழித்துக் கொண்டு, புடைத்து - மோதிக்கொண்டு, இரிந்து ஓடும் - நிலை கெட்டு ஓடுகிற, வேலை புனல் என - கடல்நீர் என்னுமாறு, இரிய லுற்றார் - அச்சத்தால் நிலைகேடடையலுற்றனர்; கிடைத்த - அருகில் நின்ற, பேர் அநுமன் - பெரிய மாருதி, ஆண்டு - அப் பொழுது, ஓர் நெடு கிரி - பெரிய மலையொன்றை, கிழித்துக் கொண் டான் - (தரையினின்று) பெயர்த்தெடுத்துக் கொண்டான்.

இறுதி பற்றும் காலம், அடைப்பரும் காலம் என இயைக்க; இஃது ஊழிக்காற்று. நாணெலிக்குக் காற்றும், வானரருக்குப் புனலும் உவமை. கிடைத்தல் - நெருங்குதல்; 'கிடந்தானைக் கிடைத்திரு தடங்கை கூப்பினன்' (கிட்கிந்தா. 575); திருவிளை. தருமி. 42ம் காண்க.

பி - ம். 1. இறுதி பற்றி, இறுதி மற்றும்.

2. அடைப்பெருங் காலக்காற்றால்; காற்று லாற லாருகக் கீறி; ஆற்றல வாகி.

3. உடைத்திரிந்து.

4. போரநுமன்; கிரிபிடிங்கிக் கொண்டான். 89

2958. நில்லடா நில்லு நில்லு
நீயடா வாசி பேசிக்
கல்லலெடா நின்ற தென்னே
போர்க்களத் தமரர் காணக்

கொல்லலா மென்றோ நன்று
குரங்கென்றாற் கூடு மன்றே
நல்லைபோர் வாவா வென்றான்
நமனுக்கும் நமனாய் நின்றான்.

(அநுமன் மலையைத் தூக்கி நின்றமை கண்ட), நமனுக்கும் நமனாய் நின்றான் - கூற்றுவனுக்கும் கூற்றுவனாய் நின்ற இந்திரசித்து, (அநுமனை நோக்கி), 'நில்லடா, நில்லு, நில்லு - நில் அடா! நில், நில்; அடா - அடே!, நீ வாசி பேசி - நீ நன்றாகப் பேசி, கல் எடா நின்றது என்னே! - மலையை எடுத்து நின்றது ஏன்? போர் களத்து - போரிடும் களத்திலே, அமரர் காண - தேவர்கள் காணுமாறு, கொல்லலாம் என்றோ - என்னைக் கொன்றுவிடலாம் என்று எண்ணியோ? நன்று - நல்லது; குரங்கு என்றால் கூடும் அன்றே - உன்னைக் குரங்கு என்று கூறுதல் தகும் அல்லவா? போர் நல்லை - நீ போரிடுவதில் நல்லவன்; வா, வா - வா, வா', என்றான் - என்று கூறினான்.

வாசி - விசேடம். நல்லை - நீ நல்லவன் என்றுங் கொள்ளலாம். கூடும் - தகும். குரங்குடன் போரிடுதல் தன்னிலைக்கு இழிவு என்றாலும், அநுமன் போருக்கு நல்லனாதலின் தான் அவனுடன் போர் புரியக்கூடும் என்று இந்திரசித்து கூறுகின்றான்.

பி - ம். 1. நீயெடா; நில்லடா நில்லு நீயடா வாசி பேசிக்; வாசி கூறிக்
2. அடாநின்ற; நின்றதென்னைப் போர்க்களத்து.
3. என்றேமுன்னி; என்றேநின்று, என்றே நன்று
4. நல்லையே பொர; நல்ல போர் வா வா; நல்லையே பொரவா வென்றான்.

90

2959. வில்லெடுத் துருத்து நின்ற
வீரருள் வீரன் நேரே
கல்லெடுத் தெறிய நின்ற
வநுமனைக் கண்ணி னோக்கி
மல்லெடுத் துயர்ந்த தோளாற்
கென்கொலாம் வருவ தென்னாச்
சொல்லெடுத் தமரர் சொன்னார்
தாதையுந் துணுக்க முற்றான்.

வில் எடுத்து - வில்லை எடுத்துக்கொண்டு, உருத்து நின்ற- கோபித்து நின்ற, வீரருள் வீரன் - வீரர்களுக்குள் வீரனான இந்திரசித்துக்கு, நேரே - எதிரே, கல் எடுத்து எறிய நின்ற அநுமனை-மலையைப் பிடுங்கி (இந்திரசித்துமீது) வீச நின்ற அநுமனை, அமரர் - தேவர்கள், கண்ணின் நோக்கி-கண்களாற் பார்த்து, 'மல் எடுத்து உயர்ந்த தோளாற்கு-வலிமை ஓங்கி உயர்ந்த தோள்களையுடைய அநுமனுக்கு, என் கொல் வருவது ஆம் - எதுதான் நிகழுமோ?' என்னா-என்று, சொல் எடுத்து சொன்னார்- சொற்களால் எடுத்துப் பேசினார்கள்; தாதையும் - (அநுமன் தாதையான) வாயுவும், துணுக்கம் உற்றான் - நடுங்கினான்.

தேவர்கள் இந்திரசித்தின் வலிமையை நன்கு அறிவார்களான மையின், அநுமனைக் குறித்து அவர்கள் அஞ்சினார்கள் என்க. துணுக்கம் - நடுக்கம்; கிட்கிந்தா. 413, 537.

பி - ம். 1. வீரன் முன்னே; வீரனோடு.

2. வந்தவநுமனை.

3. தமைந்த தோளார்க்கு; வலிய தென்னா. 91

அநுமன் மலையை வீசியதும் அதனை அரக்கன் அழித்ததும்

2960. வீசினன் வயிரக் குன்றம்
வெம்பொறிக் குலங்கள் விண்ணின்
ஆசையி னிமிர்ந்து செல்ல
வாயிர முருமொன் றாகப்
பூசின பிழம்பி தென்னா
வருமதன் புரிவை நோக்கிக்
கூசின வுலக மெல்லாங்
குலைந்ததவ் வரக்கர் கூட்டம்.

(அப்போது அநுமன்), விண்ணின் - வானத்திலும், ஆசை யின் - திக்குகளிலும், வெம்பொறி குலங்கள் நிமிர்ந்து செல்ல- (தன்னிடமிருந்து எழும்) வெப்பமான நெருப்புப் பொறிக் கூட்டங் கள் நிமிர்ந்து போகுமாறு, வயிரம் குன்றம் வீசினன் - வயிரம்

போன்ற வலிய மலையை வீசியெறிந்தான்; ஆயிரம் உரும் - ஆயிரம் இடிகள், ஒன்ருக பூசின பிழம்பு இது என்ன - ஒருமிக்கச் சேர்ந்த திரளாகும் இது என்று (சொல்லுமாறு), வரும்-வருகிற, அதன் புரிவை நோக்கி - அதன் செயலைப் பார்த்து, உலகம் எல்லாம் கூசின - உலகங்கள் யாவும் கூச்சமடைந்தன; அரக்கர் கூட்டம் குலைந்தது - அரக்கர்களின் கூட்டமும் நிலைகெட்டது.

ஆசை - திக்கு. எறிந்த வேகத்தால் - நெருப்புப் பொறிகள் எழுந்தன என்க. உரும் - இடி. பிழம்பு - திரட்சி; 'கடுந்தழற் பிழம்பன்ன' (திருவாசக. 29, 7). புரிவு - செயல். குலைதல் - நிலை கெடல்; பால. வரைக். 62; மனங்குழைதலும் ஆம்.

பி - ம். 1. குன்றை; வெறிபொறிக் குலங்கள்.
2. உருவொன்ருக.
3. பூசின பிளப்பி; பிழம்பினென்ன; பிழம்பிதென்ன; அன்னதின் புரிவை.
4. குலைந்தன ரரக்கர், 92

2961. குண்டல நெடுவில் வீச
மேருவிற் குவிந்த தோளான்
அண்டமுங் குலுங்க வார்த்து
மாருதி யசனி யஞ்ச
விண்டலத் தெறிந்த குன்றம்
வெறுந்துக ளாகி வீழக்
கண்டன னெய்த தன்மை
கண்டில ரிமைப்பில் கண்ணர்.

மாருதி - அநுமன், அசனி அஞ்ச - இடியும் அஞ்சுமாறு, விண் தலத்து எறிந்த குன்றம் - வானத்தின்மீது வீசிய மலையை, மேருவின் குவிந்த தோளான் - மேருவைப்போல உருண்டு திரண்ட தோளையுடையவனை இந்திரசித்து, குண்டலம் நெடு வில் வீச - தன் குண்டலங்கள் நீண்ட ஒளியை வீச, அண்டமும் குலுங்க - அண்டங்கள் அசையுமாறு, ஆர்த்து - பேரொலி செய்து, வெறும் துகளாகி வீழ கண்டனன் - வெறும் புழுதிகளாகித் தரையில் விழச்செய்தான்; இமைப்பில் கண்ணர் - இமைத்தலைச்

செய்யாத கண்களையுடைய தேவர்கள், எய்த தன்மை கண்டிலர் - அவன் அம்பு எய்ததைக் காணவில்லை.

குண்டலம் வில் வீசுதல்; 'மின்னிரண் டனையகுண் டலங்கள் வில்லிட' (கிட்கிந்தா. 824). 'எறிந்த குன்றம் துகளாக வீழக் கண்டனன்; கணுற்றார் கண்டிலர்' என்பவையெல்லாம் இந்திரசித்தின் வில்லின் விரைவு காட்டக் கூறப்பெற்றது; (ஒப்பு): 'கையால், எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்' (பால. கார்முகப். 35). துகளாக்கினவன், இந்திரசித்து; இச்சொல் பொருளில் வருவிக்கப்பெற்றது. 'குண்டல..........தோளான்' என்பதை மாருதிக்கே உரியதாக்கிப் பொருள் உரைத்தலும் ஆம்.

பா - ம். 1. நெடுவில் விசி.

2. நடுங்க வார்த்து, ஆர்த்த மாருதி.

3. வெறுந்துக ளாக்கி.

4. கண்டன ரிமைப்பில் கண்ணுர். 93

2962. மாறொரு குன்றம் வாங்கி
மறுகுவான் மார்பிற் றோளில்
காறரு காலிற் கையிற்
கழுத்தினி னுதலிற் கண்ணின்
ஏறின வென்ப மன்னோ
வெரிமுகக் கடவுள் வெம்மை
சீறிய பகழி மாரி
தீக்கடு விடத்திற் றோய்ந்த.

மாறு ஒரு - மற்றொரு, குன்றம் - மலையை, வாங்கி - (நிலத்தினின்று) பெயர்த்து, மறுகுவான் - (அதனை வீசுமுன் அதனுடன்) சுழல்பவனான மாருதியின், மார்பில் தோளில் - மார்பிலும் தோளிலும், கால் தரு காலில் - காற்றை எழுப்புகிற கால்களிலும், கையில் கழுத்தினில் நுதலில் கண்ணின் - கை முதலாகக் கண் ஈறாகச் சொல்லப்படுகிற உறுப்புக்களிலும், தீ கடு விடத்தில் தோய்ந்த - நெருப்பை ஒத்த கொடிய விடத்தில் தோய்ந்தனவும், முக எரி கடவுள் வெம்மை சீறிய - முகத்தில் அக்கினிக் கடவுளின் வெப்பம்

சிறியனவுமான, பகழி மாரி - (இந்திரசித்து எய்த) அம்பு மழை, ஏறின - பாய்ந்தன, என்ப - என்று கூறுவர். மன், ஓ, அசைகள்.

மறுகுதல் - சுழலுதல். கால் தரு கால் - தன் செயலின் வேகத்தால் காற்றை எழுப்பும் கால். கடு, உரிச்சொல்; மிகுதிப் பொருளது. கடு, விடமும் ஆம். மாருதி மற்றொரு மலையைப் பிடுங்கி அதனை எறியுமுன், அவன் அங்கங்களிலெல்லாம் பாயுமாறு அம்புகளை அரக்கன் வீசினன் என்க.

பி - ம். 1. வயிர மார்பிற்,

2. தாறுறு காலில், காறுறு காலின்; காரெடு கையிற் காலிற் கழுத்தினி னுதலிற் கண்ணுற்று.

3. எரிமுதற் கடவுள்.

4. விடத்திற் றேய்த்த ; ரேய்த்த. 94

## அம்பினலடிபட்ட அநுமன் தோற்றம்

2963. வெதிரொத்த சிகரக் குன்றின்
மருங்குற விளங்க லானும்
எதிரொத்த விருளைச் சீறி
யெழுகின்ற வியற்கை யானும்
கதிரொத்த பகழிக் கற்றை
கதிரொளி காட்ட லானும்
உதிரத்தின் செம்மை யானு
முதிக்கின்ற கதிரோ னொத்தான்.

(அப்பொழுது அநுமன்), வெதிர் - மூங்கிற் காடுகள், ஒத்த - பொருந்தி வளர்ந்த, சிகர குன்றின் - உச்சியையுடைய மலையை, மருங்கு உற - அருகே பொருந்த, விளங்கலானும் - விளங்குகின்றமையாலும், எதிர் ஒத்த இருளை - தன் முன்னே தோன்றியுள்ள அரக்கராகிய இருளை, சீறி எழுகின்ற - கோபித்து எழுகின்ற, இயற்கையானும் - தன்மையாலும், கதிர் ஒத்த பகழி கற்றை - ஒளிக் கதிர்கள் பொருந்திய அம்புக் கூட்டங்கள், கதிர் ஒளி காட்டலானும் - வெயிலின் ஒளியைத் தோற்றுவித்தலாலும், உதிரத்தின் செம்மையானும் - தன் உடலிலிருந்து ஊற்றும்

குருதியின் செந்நிறத்தாலும், உதிக்கின்ற கதிரோன் ஒத்தான் - உதயசூரியன் போன்றவனானான்.

அநுமன் மூங்கில் குன்றொன்றன் மருங்கிலும், சூரியன் உதயகிரியிலும் நின்றமை ஒற்றுமை. அநும்ன் பகைவராகிய இருளை ஒழிக்கின்றான்; கதிரவனும் இரவின் இருளை ஒழிக்கின்றான்; அவன் உடலில் தைத்திருக்கும் பகழிக் கற்றைகள், கதிரவன் காட்டும் கதிரொளிக் கற்றைகளுக்கு ஒற்றுமை; உதயசூரியன் செம்மையும் உதிரத்தின் செம்மையும் ஒற்றுமை; இவ்வாறு அநுமன் உதயசூரியனை ஒத்தான் என்று கூறப்பெற்றது. இன்னலில் ஆழ்ந்த காலத்தும் அநுமன் கம்பீரமான தோற்றங் காட்டினமையை ஆசிரியர் அமைக்கும்விதம் போற்றற்குரியது. ஒத்த என்ற சொல் ஒத்து வளர்ந்த என்ற பொருளில் வந்தது. அநுமன் எழுவாய், வருவித்துக் கொள்க. 'அநுமன் கையிலெடுத்த மலை மூங்கில் பொருந்தியது' என்பது பழையவுரை. அநுமனுக்குச் சூரியன்; சுந்தர. 30, 957.

பி - ம். 1. குன்ற மருங்குற.

2. இருளைக் கீறி.

3. கானொளி காட்டலானும்; தானொளி காட்டலானும்; கானொளி காட்டலாலும்.

4. முதிர்கின்ற கதிரோனொத்தான். 95

## இந்திரசித்து இலக்குவனை நாடியது

2964. ஆயவ னயர்த லோடு மங்கதன் முதல்வ ரானோர்
காய்சினந் திருகி வந்து கலந்துளார் தம்மைக் காணு
நீயிர்கள் நின்மின் நின்மி னிருமுறை நெடிய வானில்
போயவ னெங்கே நின்றா னென்றனன் பொருட்
[செயாதான்.

ஆயவன் - அத்தகைய அநுமன், அயர்தலோடும் - சோர்வடைந்தபோது, அங்கதன் முதல்வரானோர் - அங்கதன் முதலியோர், காய் சினம் திருகி - எரிக்கவல்ல சினத்தால் திருகுண்டு, வந்து கலந்துளார் தம்மை காணு - அங்கு (தன்னை எதிர்க்க)

வந்து சேர்ந்துகொண்ட அவர்களைப் பார்த்து, பொருள் செயாதான் - பொருள்படுத்தாத இந்திரசித்து (அவர்களை நோக்கி), 'நீயிர்கள் நின்மின் நின்மின் - நீங்கள் நில்லுங்கள் நில்லுங்கள்; இருமுறை - (நாகபாசம், பிரமாத்திரம் என்ற அத்திரங்களை நான் எய்த) இரண்டு தடவைகளிலும், நெடிய வானில் போயவன் - இறந்துபோனவன், எங்கே நின்றான் - (இப்பொழுது) எங்கே இருக்கின்றான்?' என்றனன் - என்று வினவினான்.

அநுமன் சோர்ந்தபோது, அங்கு இந்திரசித்தை எதிர்க்கவந்த அங்கதன் முதலினோரை அவன் பொருட்படுத்தாமல், 'இலக்குவன் எங்கே' என்று வினவினன் என்க. வானில் போயவன் - இறந்துபட்டவன்; குறிப்புமொழி.

பி - ம். 1. முதல்வரான.

2. கலந்தனர் கதிரோன் பெற்ற; தம்மைக் காணுன்.

3. நீர்க ளின்மின்; தூயசுக் கிரீவன் வந்து தோன்றினன் தோன்றக் கண்டு.

4. தீயவ னவரை நோக்கிக் கனலெனச் சினந்து சொன்னான்; சினத்துச் சொன்னான். 96

2965. வெம்பினர் பின்னு மேன்மேற்
சேறலும் வெகுண்டு சீயம்
தும்பியைத் தொடர்வ தல்லாற்
குரங்கினைத் தொடர்வ துண்டோ
அம்பினை மாட்டி யென்னே
சிறிதுபோ ராற்ற வல்லான்
தம்பியைக் காட்டித் தாரீர்
சாதிரோ சலத்தி னென்றான்.

வெம்பினர் - (இச் சொற்களைக் கேட்டுப் பின்னும்) கோபித்தவரான அங்கதன் முதலானோர், பின்னும் - பிறகும், மேன்மேல் சேறலும் - அவனிருந்த இடத்தை நோக்கி மேலும் மேலும் நெருங்கவும், (அவன்), வெகுண்டு - கோபித்து, 'சீயம் - சிங்கமானது, தும்பியை தொடர்வது அல்லால் - யானையை வேட்டையாட அதனைத் தொடருமேயன்றி, குரங்கினை தொடர்வது உண்டோ - குரங்கை

வேட்டையாடப் பின்பற்றுவது உண்டோ? அம்பினை மாட்டி என்னை - (நும்மீது) அம்புகளைச் செலுத்தி ஆவதென்ன? சலத்தில் சாதிரோ - கோபத்தால் நீங்கள் சாகக்கடவீரோ? (வேண்டா); சிறிது போர் ஆற்ற வல்லான் தம்பியை - சிறிதளவேனும் என் முன் போர் செய்யவல்ல இளைஞனை இலக்குவனை, காட்டி தாரீர் - (அவன் இருக்கும் இடத்தை எனக்குக்) காட்டிக் கொடுங்கள்', என்றான் - என்று கூறினான்.

'சீயம் தும்பியை .....தொடர்வ துண்டோ' என்று கூறியது அவன் பெருமிதத்தைக் காட்டிற்று. 'சிறிது போராற்ற வல்லான்' என்றது இராமபிரானைக் குறித்தது என்றும் கொள்ளலாம். 'சலத்தின்' என்பது இந்திரசித்தின் சலத்தின் என்றேனும், அங்கதன் முதலாயினோர் சலத்தின் என்றேனும் கொள்க. சலம் - தணியாக்கோபம்; ஆரணிய. 794.

பி - ம். 1. வெம்பின செருவின் வந்து மேவினும்.

2. குரங்கினைச் சுளிவ துண்டோ.

4. சவத்தி னென்றான், சலத்தில் நின்றான். 

2966. அனுமனைக் கண்டி லீரோ வவனிலும் வலியி ரோவென்
தனுவுள தன்றே தோளி னவ்வலி தவிர்ந்த துண்டோ
இனிமுனை நீர லீரோ வெவ்வலி யீட்டி வந்தீர்
மனிதரைக் காட்டி நுந்த மலைதொறும் வழிக்கொ ளீரே.

(மேலும் அவன் அவர்களை நோக்கி), 'அநுமனை கண்டிலீரோ - அநுமன் இப்பொழுது சோர்ந்து கிடக்கும் நிலையை நீவிர் காணவில்லையோ? அவனிலும் வலியிரோ - அவனைக்காட்டிலும் நீவிர் அதிக வலிமை பெற்றவர்களோ? என் தனு உளது அன்றே - என் வில் (இன்னும் என்னிடம்) இருக்கிறது அன்றே? தோளின் அ வலி தவிர்ந்தது உண்டோ - என் தோளின் (அதற்கு முன்னிருந்த) அந்த வலிமை (இப்பொழுது) நீங்கிற்றுண்டோ? இனி முன்னை நீர் அலீரோ - இனியும் நீங்கள் முன்புள்ள நிலையினர் அல்லீரோ? எ வலி ஈட்டி வந்தீர் - (இப்பொழுது புதுமையாக) எந்த வலிமையைச் சம்பாதித்து வந்தீர்? (ஆகையால் வீணே

என்னை எதிர்த்துச் சாகாமல்), மனிதரை காட்டி - (இராம இலக்குவர் என்ற) மனிதர்கள் இருக்கும் இடத்தை எனக்குக் காட்டி, நும் தம் மலைதொறும் வழிகொளீர் - நுமக்கு இருப்பிடமான மலைகளுக்குச் சென்றுவிடுங்கள், ஏ : அசை.

இச் செய்யுளிலும் இந்திரசித்து 'வாநரர்களைப் பொருட்படுத்தாமல் பேசுகின்றான். 'முனை நீரலீரோ' என்றமையால் முன் தோற்றொழிந்ததை நினைவுபடுத்திக்கொள்ளுங்கள் என்று கூறியவாறுமாம். வழிக்கொள்தல் - பயணப்படுதல்; 'இசைவலான் ...... இருள்வழிக் கொண்டான்' (திருவிளை. விறகு. 48). அநுமன், எதுகை நோக்கி அனுமன் என்றெழுதப்பெற்றது.

பி - ம். 2. தோளு மவையல தவிர்ந்த துண்டோ, இவையல தவிர்ந்த துண்டோ.
3. இனுமுனை, இனமுன் நீர ; எனதமர்க் காற்றுவிரோ.
4. மலையிடை ; வழிக்கொளீரோ. 98

## வாநரர்கள் போரிட்டு ஓய்தல்

2967. என்றவ னிளவ றன்மே லெழுகின்ற வியற்கை நோக்கிக்
குன்றமு மரமும் வீசிக் குறுகினர் குழாங்க டோறும்
சென்றன பகழி மாரி மேருவை யுருவித் தீர்வ
ஒன்றல கோடி கோடி யுலைந்தனர் வலியு மோய்ந்தார்.

என்று அவன் - இவ்வாறு சொல்லி அவன், இளவல் தன் மேல் எழுகின்ற இயற்கை நோக்கி - இலக்குவன்மீது போருக்கு எழுகின்ற (இந்திரசித்தின்) தன்மையை (அங்கதன் முதலியோர்) பார்த்து, குன்றமும் மரமும் வீசி குறுகினர் - மலைகளையும் மரங்களையும் (அவன்மீது) வீசிக்கொண்டு நெருங்கினரான, குழாங்கள் தோறும் - வாநரர்களின் கூட்டந்தோறும், மேருவை உருவி தீர்வ - மேருமலையை உருவிக்கொண்டு (அப்பால்) செல்லத்தக்க, பகழி மாரி - (இந்திரசித்து எய்த) அம்பு மழை, ஒன்று அல கோடி கோடி - ஓர் அம்பு அன்று ; கோடி கோடியானவை, சென்றன - அவர்கள்மீது பாய்ந்தன ; (அவற்றால்), உலைந்தனர் -

(அவ்வானரர்கள்) வருந்தினர்; வலியும் ஓய்ந்தார் - (அவர்கள் தம்) வலிமையும் ஓய்ந்தனர்.

குறுகினர் என்றமையால் வானரவீரர் இந்திரசித்தினிடம் அஞ்சாமல் அவனை எதிர்த்தனர் என்க. உளைதல் - மனம் வருந்துதல்; 'உளையச் சொன்னான்' (பால. கையடை. 10). மேருவை உருவித் தீர்வ பகழி மாரி என்று மாற்றுக.

பி - ம். 1. என்றுரைத் திளவ.

2. கல்லும் வீசின குழாங்க, குழாங்களோடும், கல்லும் வீசினர் குழாங்க.

3. யுளைத்தனர்; உளைந்தன வலியு மோய்ந்த. 38

## இளையபெருமாள் போரில் மூளுதல்

2968. படுகின்ற தன்றே வுன்றன் பெரும்படை பகழி மாரி
விடுகின்ற தன்றே வென்றி யரக்கனுங் காள மேகம்
இடுகின்ற வேள்வி மாண்ட தினியிவன் பிழைப்பு ருமே
முடுகென்றா னரக்கன் தம்பி நம்பியுஞ் சென்று
[மூண்டான்.

(இவ்வாறு வானரர்கள் ஓய்ந்துபோக), அரக்கன் தம்பி - (இராவணனின்) தம்பியான வீடணன், (இலக்குவனை நோக்கி), 'உன் தன் பெரும் படை படுகின்றது - உன்னுடைய பெரிய வானரப்படை அழிகின்றது; அன்றே - அல்லவா? வென்றி அரக்கன் ஆம் காளமேகம் - வெற்றியையுடைய அரக்கனாகிய கரிய மேகம் (போன்ற இந்திரசித்து), பகழி மாரி விடுகின்றது - அம்பு மழையைப் பொழிகின்றது; அன்றே - அல்லவா? இடுகின்ற வேள்வி மாண்டது - அவன் இயற்றுகின்ற வேள்வி அழிந்தது; இனி இவன் பிழைப்பு உருமே முடுகு - இனி இவ் இந்திரசித்து உயிர் வாழாதபடி அவனை நெருக்குக', என்றான் - என்று கூறினான்; நம்பியும் - ஆடவர்களுட் சிறந்த இலக்குவனும், சென்று - சென்று, மூண்டான் - (போரில்) முயன்றான்.

முடுகுதல் - நெருங்குதல்; விரைந்து செல்லுதலுமாம். மூள்தல் - 'முதலற முடிக்க மூண்டான்' (யுத்த. 2867). வேள்வி

அழிந்தது; இவனையும் அழிக்கவேண்டும்' என்றான் வீடணன் என்க.

பி - ம். 1. மற்றுன் பெரும்படை.

2. மற்றிவ் வரக்கன்.

3. அடுகின்ற வேள்வி; அரக்கனைத் தொலைக்க நீயே. 100

## வேறு

## இலக்குவன் அநுமன் தோள்மீது ஆரோகணித்தல்

2969. வந்தானெடுந் தகைமாருதி மயங்காமுக மலர்ந்தான்
எந்தாய்கடி தேருயென திருதோண்மிசை யென்றான்
அந்தாகவென் றுவந்தையனு மமைவாயின னிமையோர்
சிந்தாகுலங் களைந்தாரவன் நெடுஞ்சாரிகை திரிந்தான்.

(அப்பொழுது), நெடு தகை மாருதி - மிக்க தகுதியையுடைய மாருதி, மயங்கா முகம் மலர்ந்தான் - (முன் சோர்வடைந்திருந்த) தன் முகம் மயங்காமல் மலர்ச்சி யடைந்தவனாய், வந்தான் - (இலக்குவன் நின்ற இடம்) வந்து, 'எந்தாய் - என் அப்பனே! எனது இரு தோள்மிசை கடிது ஏறாய் என்றான் - என்னுடைய இரண்டு தோளகளின்மீதும் விரைவில் ஏறியருள்க' என்று விண்ணப்பித்தான்; ஐயனும் - (அதற்கு) இலக்குவனும், 'அந்தாக - அப்படியே ஆகுக', என்று உவந்து அமைவு ஆயினன் - என்று மகிழ்ந்து (அதற்கு) இணங்கினான்; இமையோர் சிந்தாகுலம் களைந்தார் - தேவர்கள் மனத்துன்பத்தை நீக்கினார்கள்; அவன் - அநுமன் (இலக்குவனைச் சுமந்துக்கொண்டு), நெடும் சாரிகை திரிந்தான் - நீண்ட சாரிகை திரியலானான்.

தகை - தகுதியுடைமை. 'அந்தாக - அப்படியே'; தெலுங்குச் சொல் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் உரை. கன்னடத்திலும் வழங்குவது என்பர்; அது ஆக என்பது அந்தாக என ஆயிற்று என்றும் கூறுவர். அமைவாயினன் - அநுமன்மீது ஏறிக்

கொண்டான் எனலும் ஆம். சாரிகை, சாரி; வட்டமாய் ஒடுகை; 'நெடுஞ்சாரி நிலந் திரிந்த' (கிட்கிந்தா. 272); சாரி: இடசாரி வல சாரி என இருவகைப்படும்.

பி-ம். 2. கடிதுயர்வாயென திருதோள்.

3. அந்தாவரவு வந்து, இந்தா வென்று வந்து.

4. சிந்தாகுலந் துறந்தா ரவன்; பெருஞ்சாரிகை. 101

## இலக்குவன் இந்திரசித்துப் போர்

2970. காராயிர முடனுகிய தெனலாகிய கரியோன்
ஓராயிரம் பரிபூண்டதொ ருயர்தேர்மிசை யுயர்ந்தான்
நேராயின ரிருவோர்களு நெடுமாருதி நிமிர்ந்தான்
பேராயிர முடையானெனத் திசையெங்கணும்
[பெயர்ந்தான்.

ஆயிரம் கார் உடன் ஆகியது எனல் ஆகிய கரியோன் - ஆயிரம் மேகங்கள் ஒன்றுகூடின என்று சொல்லத்தக்க கரிய நிறத்தை யுடைய இந்திரசித்து, ஓர் ஆயிரம் பரி பூண்டது ஓர் உயர் தேர் மிசை உயர்ந்தான் - ஓர் ஆயிரம் குதிரைகள் பூண்ட ஓர் உயர்ந்த தேரின்மீது ஏறிக்கொண்டான்; இருவோர்களும் நேர் ஆயினர் - இந்திரசித்தும் இலக்குவனும் ஒருவர் எதிர் மற்றொருவர் ஆயினர்; (அப்பொழுது), நெடு மாருதி - (உருவத்தால்) நீண்ட அநுமன், நிமிர்ந்தான் - நிமிர்ந்து நின்று, ஆயிரம் பேர் உடையான் என - ஸஹஸ்ர நாமமுடைய திரிவிக்கிரமன் என்னும்படி, திசை எங்கணும பெயர்ந்தான் - எல்லாத் திசைகளிலும் சரித்தான்.

கரியோன், யானைகளை உடையன் என்பாரும் உளர். பேரா யிரம் உடையான் - திருமால்; 'அமலத் தொல்பெய ராயிரத் தாழியான்' (ஆரணிய. 376). இங்குத் திரிவிக்கிரமனைச் சுட்டியது அவன் உயர்வும் பருமனும் கருதி. மாருதிக்குத் திரிவிக்கிரமன்; 'ஏழிஞே டேழுநாடு மளந்தவ னெனலு மானன்' (சுந்தர. 756).

பி-ம். 1. முடனுயின வெனலாயின.

2. தேர்மிசை யுருத்தான்.

3. மாருதி நிமிரும். 102

2971. தீயொப்பன வுருமொப்பன வுயிர்வேட்டன திரியும்
பேயொப்பன பசியொப்பன பிணியொப்பன பிழையா
மாயக்கொடு வினையொப்பன மழுவொப்பன கழுதின்
தாயொப்பன சிலவாளிகள் துரந்தான்றுயில் றுறந்தான்.

துயில் துறந்தான் - தூக்கத்தை விட்டவனாகிய இலக்குவன், (இந்திசித்தின்மீது), தீ ஒப்பன - நெருப்பை ஒப்பனவும், உரும் ஒப்பன - இடியை ஒப்பனவும், உயிர் வேட்டன - (தாம் ஏறிக் கொண்டு) உயிர்ப் பிராணிகளை விரும்பி, திரியும் பேய் ஒப்பன - (எங்கும்) அலையும் பேய்களை ஒப்பனவும், பசி ஒப்பன - (கொடுமையால்) பசியை ஒப்பனவும், பிணி ஒப்பன - நோயை ஒப்பனவும், பிழையா - (தன்பயனில்) தவறா, கொடு மாய வினை ஒப்பன - கொடிய மாயங்களாலாகிய வினைகளை ஒப்பனவும், மழு ஒப்பன - மழு என்னும் ஒருவகைக் கருவியை ஒப்பனவும், கழுதின் தாய் ஒப்பன - கழுது என்னும் ஒருவகைப் பேய்களின் தாய் ஒப்பனவுமான, சில வாளிகள் - அம்புகளை, துரந்தான் - செலுத்தினான்.

போரில் அம்புகளால் விளையும் இன்னல்களை உவமை மூலமாகத் தொகுத்தமைத்த அழகிய செய்யுள் இது. துயில் துறந்தான் - இலக்குவன்; அயோத். 670; 1045; ஆரணிய. 1034; அயோத்தியா காண்டத்தில் (குகப் படலம் 23). 'துயிலெனு மணங்கு வந்து தோன்றலு மவளை நாமே, எயிறுடை யயோத்தி மூதூரெய்து, நாளெய்து கென்றான்' என்றதும், யுத்த காண்டம் (447) இல் இராமபிரான் வீடணனுக்கு மோலி அளிக்க இலக்குவனுக்கு கட்டளையிட்டபோது, 'துஞ்சலின் நயனத்தைய' என்றதும் இங்குக் கருதத்தக்கன: இன்னும், யுத்த. 820, 2689ம் காண்க. மாயவினை - பிரகிருதி மயமான ஊழ்வினை என்பர். பிணி, துன்புறுத்தலிலும், மனம் சலிப்பதிலும் ஒத்தன என்க. கழுது - ஒருவகைப் பேய்; 'கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப' (மதுரைக். 633); துறந்தான் துரந்தான் என்பது ஒரு நயம்.

பி - ம். 1. உயிர் வேட்டன, வேட்பன; உணவேட்டன.
2. பசியொப்பன.
3. மனமொப்பன; கழுகின்.
4. பேயொத்தன சில வாளிகள்; வெங்கணை துரந்தான்; துயில்பிரிந்தான்.

2972 அவ்வம்பினை யவ்வம்பினி னறுத்தானிக லரக்கன்
எவ்வம்பினி யுலகத்துள தென்னும்படி யெய்தான்
எவ்வம்பர மெவ்வெண்டிசை யெவ்வேலைகள் பிறவும்
வவ்வுங்கடை யுகமாமழை பொழிகின்றது மான.

இகல் அரக்கன் - வலிமைமிக்க இந்திரசித்து, அ அம்பினை - (இலக்குவன் விட்ட) அந்த அம்பை, அ அம்பினில் - அதற்கேற்ற அம்பினால், அறுத்தான் - வெட்டி வீழ்த்தினான்; (அன்றியும்), எ அம்பரம் - ஆகாயம் முழுமையும், எ எண்திசை - எட்டுத் திக்குகள் எல்லாவற்றையும், எ வேலைகள் - சமுத்திரங்கள் யாவற்றையும், பிறவும் - பிறவற்றையும், வவ்வும் - பற்றி அழிக்கும், கடை யுகம் மா மழை - கடைசி யுகாந்தப் பெரிய மழை, பொழிகின்றது - கொட்டுகின்றது, மான - போலவும், உலகத்து எ அம்பு இனி உளது என்னும்படி - இதற்குமேல் உலகத்தில் சிறந்தது வேறு எந்த அம்பு உளது? என்று சொல்லும்படியும், எய்தான் - இலக்குவன் மீது அம்புகளை வீசினான்.

அவ்வம்பினை அவ்வம்பினில் அறுத்தான், என்றமையால் இலக்குவன் எய்த அதே அஸ்திரத்தாலும், அன்றி, மாற்று அஸ்திரத்தாலும் அழித்தான் என்பது தெரிவிக்கப் பெற்றது. இகல் - பகையும் ஆம்; அம்பரம் - ஆகாயம். கடையுக மாமழை உலகமெல்லாவற்றையும் அழிக்கும் என்பது ஐதிகம்; 'அருங் கடை யுகந்தனி லசனி மாமழை, கருங்கடல் கிளர்ந்தென' (அயோத். 1014); 'கல்லார் மழை கணமாமுகில் கடைநாள் விழுவன போல, எல்லாமொரு தொடையாவுட னெய்தார்வினை செய்தார்' (ஆரணிய. 450); என்ற இடங்களிலும் இன்னும் பலவிடங்களில் இந்நூலில் வருவனவற்றைக் காண்க. 'எவ்வம்பினி யுலகத் துளது' என்றதால் இந்திரசித்தன் அம்புக்கு இணையின் றென்றபடி.

பி. ம். 1. அவ்வம்பையும் அடலம்பினி னறுத்தான்; அட லரக்கன்.
3. வெவ்வம்பரம் வையந்திசைமலை.
4. வையங்கடை; மானம்.

2973. ஆயோனெடுங் குருவிக்குல மென்னுஞ்சில வம்பால்
போயோடிடத் துரந்தான் அவை பொறியோவென மறியத்
தூயோனுமத் துணைவாளிகள் தொடுத்தானவை
[தடுத்தான்
தீயோனுமக் கணத்தாயிரம் நெடுஞ்சாரிகை திரிந்தான்.

(மேலும்), ஆயோன்-அந்த இந்திரசித்து, குருவிக் குலம் என்னும் சில நெடும் அம்பால் - குருவிக் கூட்டங்கள் என்று சொல்லப்படும் சில நீண்ட அம்புகளை, போய் ஓடிட - சென்று இலக்குவன் மீது பாயுமாறு, துரந்தான் - எய்தான்; அவை - அந்த அம்புகளை, தூயோனும் - இலக்குவனும், பொறியோ என - துகள்களோ என்னும்படி, மறிய - அறுபடும்படி, அ - சிறந்த, துணை வாளிகள் தொடுத்தான் - இரண்டு அம்புகளை எய்து, அவை தடுத்தான் - (அந்த இந்திரசித்து துரந்த) அம்புகளை தடுத்தான்; தீயோனும் - கொடிய இந்திரசித்தும், அக்கணத்து - அதே நேரத்தில், ஆயிரம் நெடும் சாரிகை திரிந்தான் - (தன் தேர்) ஆயிரக்கணக்கான சாரிகள் செல்லும்படி சுழன்றான்.

குருவிக்குல மென்னுஞ்சில அம்பு; 'கடுங்கணை ..எண்ணருங் குன்றிற் குரீஇயினம் போன்றவே' (களவழி. 8); அன்றி, குருவிக் கூட்டம்போல் பல ஒன்றுகூடிப் பாயும் அம்புகள் எனினும் ஆம். பொறி - நெருப்புப் பொறி தோன்றினவுடனே மறையும் இயல்பினது. மறிதல் - முதுகிடுதலும் ஆம். தூயோன், தீயோன் என்பன வெளிப்படை. அ என்பது உலகறி சுட்டு; இங்குச் சிறப்பினை உணர்த்திற்று. துணை - இரண்டு. சாரிகை திரிதல்; ஆரணிய. 37; கிட்கிந்தா. 803; சுந்தர. 803; சூளா. 1367; சீவக. 2271.

பி-ம். 1. மென்பானென வம்பால், மெனலாயின வம்பால், எனலாஞ்சில வம்பால்.
2. போயோவிடத்; மறியாத், சிதறி, மறையத்.
3. துணித்தான்.



2974. கல்லுந்நெடு மலையும்பல மரமுங் கடைகாணும்
புல்லுஞ்சிறு கொடியும் மிடைதெரியா வகைபுரியச்
செல்லுந்நெறி தொறுஞ்சென்றன தெறுங்கால்புரை
[மறவோன்
சில்லின்முதிர் தேருஞ்சின வயமாருதி தாளும்.

தெறும் - கொல்லுகின்ற, கால் புரை - சண்டமாருதத்தை ஒத்த, மறவோன் - வீரனான இந்திரசித்தின், முதிர் சில்லின் தேரும் - முதிர்ந்த காலையுடைய தேரும், சின வயம் மாருதி தாளும் - கோபங்கொண்டவனும் வெற்றியை உடையவனுமான மாருதியின் கால்களும், கல்லும் - சிறிய மலைகளையும், நெடு மலையும் - பெரு மலைகளையும், பல மரமும் - பலவகைப்பட்ட மரங்களையும், கடை காணும் புல்லும் - (உயிர்ப் பொருள்களுள்) கடைசியில் வைத்து எண்ணப்படுகிற புல்லையும், சிறு கொடியும் - சிறிய கொடிகளையும், இடை தெரியா வகை புரிய - (இவற்றுள்) வேற்றுமை தெரியாதபடி எல்லாவற்றையும் (துகளாக்கிக் கொண்டு), செல்லும் நெறி தொறும் சென்றன - போகும் இடமெல்லாம் போயின.

இந்திரசித்தன் செய்த சாரிகளுக்கு ஒத்த சாரிகளை அநுமனும் செய்தானாதலின் தேர்க்காலாலும், மாருதியின் காலாலும் அங்கு நிகழ்ந்தவற்றை இச் செய்யுளில் கூறுகின்றார். கல், கற்பாறைகளும் ஆம். கடைகாணும் புல்லும் கொடியும் என்றமை அவை ஒருயிர்ப் பொருள்களானமை பற்றியாம். இடை தெரிதல்; வேற்றுமை அறிதல். கால் - காற்று; தெறுங்கால் என்றமையால் சண்டமாருதம் எனப்பட்டது. சில்லி - தேர்க்கால் உருளை எனினும் ஆம்; 'வெள்ளிச் சில்லிபுக் குற்றது' (பால. கடிமண. 71). வயம் - வெற்றி; 'வலம்புரி வயநேமியவை' (பரிபா. 15, 59); வலியும் ஆம். தேர் சென்ற வழியே தாளும் சென்றமை இங்கு நோக்கத்தக்கது.

பி - ம். 1. மரனும் பலமலையும் கடைகாணும்; இடைகாணும்.
2. சிறுபொடியும்.
3. முறைசென்றன; தெறுகால் புரையும்.
4. மல்லின்முதிர்; சில்லும்முதிர்; தேருங்கவி; மாருதி காலும். 106

2975. இருவீரரு மிவனின்னவ னிவனின்னவ னென்னச்
செருவீரரு மறியாவகை திரிந்தார்கணை சொரிந்தார்
ஒருவீரரு மிவரொக்கில ரெனவானவ ருவந்தார்
பொருவீரையும் பொருவீரையும் பொருதாலெனப்
[பொருதார்.

இரு வீரரும் - இந்திரசித்து இலக்குவன் என்ற இரண்டு வீரர்களும், 'இவன் இன்னவன், இவன் இன்னவன் என்ன - இவன் யாவன், இவன் யாவன்' என்று வேற்றுமை யறிந்துசொல்ல, செரு வீரரும் - (இரு பக்கங்களிலும் நின்ற) போர் வீரர்களும், அறியா வகை - வேற்றுமை அறிந்துகொள்ள முடியாதபடி, திரிந்தார் - திரிந்து, கணை சொரிந்தார் - ஒருவர்மீது மற்றொருவர் அம்புகளைச் சொரிந்தார்கள்; பொரு வீரையும் - ஒரு மோதுகின்ற கடலும், பொரு வீரையும் - (மற்றொரு) மோதுகின்ற கடலும், பொருதால் என-போரிட்டனபோல, பொருதார்-அவ்விருவரும் சண்டையிட்டனர்; வானவரும் - தேவர்களும், 'ஒரு வீரரும் இவர் ஒக்கு இலர் - (உலகில் வேறு எந்த) ஒரு வீரரும் இவருக்குச் சமானமானவர் இலர்', என உவந்தார் - என்று சொல்லி மகிழ்ந்தார்கள்.

கடலொடு கடல் பொருதது போல் இருவரும் போரிட்டனர்; அவ்வாறு கடல் நீர்கள் ஒன்றோடொன்று மோதும்போது இன்னது இன்னது என்று அறிய முடியாதபடி அவை கலக்குமாப் போல, இவர்களை நெருக்கத்தாலும் விசையாலும் பிறர் கண்டறியாதபடி ஆயிற்று என்றனர். வீரை - கடல்.

பி - ம். 1. இன்னனென்றிமையாத்.
2 இருவீரருந் தெரியா.
3. மிவர் சேர்கிலர்; மிவர் நேர்கிலர்.



2976. விண்செல்கில செல்கின்றன விசிகம்மென விமையோர்
கண்செல்கில மனஞ்செல்கில கணிதமுறு மெனினோர்
எண்செல்கில நெடுங்காலவன் இடைசெல்கில னுடன்மேற்
புண்செய்வன வல்லாலொரு பொருள்செய்வன தெரியா.

'விசிகம் - (அவர்கள் ஒருவர்மீதொருவர் விடும்) அம்புகள், செல்கின்றன - (புறப்பட்டுப்) போகுமவை, விண் செல்கில-வானத்திற் செல்லவில்லை', என - என்று கூறி, இமையோர் - தேவர்கள், கண் செல்கில் - தம் கண்கள் அவற்றைக் காணமுடியாமலும், மனம் செல்கில - மனமும் அவற்றை நினைக்க முடியாமலும், கணித முறும் எனின் - ஒரு கணக்குக்கு அகப்படும் என்றால், ஓர் எண்

செல்கில - (எந்த) ஒரு எண்ணிக்கையிலுள்ளும் அடங்காததாகவும் (ஆயினர்); இடை நெடும் காலவன் செல்கிலன் - அவ்விருவருக்கும் நடுவே நீண்ட வாயுபகவானும் போகக்கூடாதவனானான்; உடன் மேல் புண் செய்வன அல்லால் - அவ்விருவரின் உடல்களின்மேல் (அவ்வம்புகளால்) புண்கள் ஏற்படுகின்றனவே அல்லாமல், ஒரு பொருள் செய்வன தெரியா - வேறு எப்பொருளையும் செய்வனவாக அறியக்கூடவில்லை.

விசிகம் - அம்பு. 'புண் செய்வது தெரிந்து எண்ணுகிறோமென்றால் நெஞ்சு புண்ணாகிறதொழிய எண்ணப்படாது' என்பது பழையவுரை.

பி - ம். 1. விண்செல்வன செல்கின்றன; செல்கில செல்கின்றில, செல்கின்றன பறவைகள்; விசிகமெனிவிமையோர்.
2. எனிலோர். எனலோர்.
3. இடைசெல்கில னுடனே.
4. புண்செல்வன வல்லாரொரு; பொருள் செல்வன தெரியா. 188

2977. எரிந்தேறின திசையாவையும் மிடியாமெனப் பொடியாய்
நெரிந்தேறின நெடுநாணொலி படர்வானிறை யுருமின்
சொரிந்தேறின சுடுவெங்கணை தொடுந்தாரகை முழுதும்
கரிந்தேறின வுலகியாவையுங் கனல்வெம்புகை கதுவ.

நெடு நாண் ஒலி - (இருவரும் தங்கள் விற்களின்) நீண்ட நாண்களை (இழுத்துண்டாக்கிய குணத்) தொனியானது, இடி ஆம் என - இடி என்று சொல்லும்படி ஆகி, திசை யாவையும் - எல்லாத் திக்குகளும், பொடியாய் நெரிந்து ஏறின - பொடியாக நொறுங்கிப் போய், எரிந்து ஏறின - எரிந்தும் போயின; சுடு வெம் கணை - (அவர்களின்) நெருப்பு மயமான கொடிய அம்புகள், படர் வான் நிறை உருமின் - பரவியுள்ள வானத்தில் நிறைந்துள்ள இடியைப் போல, சொரிந்து ஏறின - எல்லா இடங்களிலும் சொரிந்து இடித்தன; உலகு யாவையும் - எல்லா உலகங்களையும், கனல் - நெருப்பினுடைய, வெம் புகை - வெம்மை நிறைந்த புகை, கதுவ - பற்றிக்

கொள்ள, தொடும் தாரகை - (வானத்தில்) நெருங்கியுள்ள நக்ஷத்திரங்கள் யாவும், முழுதும் கரிந்து ஏறின - முற்றிலும் கரிந்து போயின.

ஏறின, துணைவினையாகக் கொள்ளப்பெற்றன. நாணொலியாலும் சுடுகணையாலும் நிகழ்ந்தவை இங்குக் கூறப்பெற்றன.

பி - ம். 1. மலையாவையும் பொடியாய். மலையாவையும் இடியார்; இடியாமெனவிடியா; இடியாமென விமையா.

2. படவானிறை; உருமுஞ், உருமேல்.

3. சொரிந்தேறின துரந்தேறின சுடுவெங்கணை முழுதுங். 109

2978. வெடிக்கின்றன திசையாவையும் விழுகின்றென விடிவந்
தீடிக்கின்றன சிலைநாணொலி யிருவாய்களு மெதிராக்
கடிக்கின்றன கனல்வெங்கணை கலிவானுற விசைமேல்
பொடிக்கின்றன பொறிவெங்கன லிவைகண்டனர்
[புலவோர்.

இடி வந்து விழுகின்றென - இடிகள் வந்து விழுகின்றவை போல, சிலை நாண் ஒலி - வில்லின் நாணை இழுப்பதால் உண்டான ஒலி, இடிக்கின்றன - முழக்கத்தைச் செய்கின்றன; (அதனால்), திசை யாவையும் வெடிக்கின்றன - திக்குகள் எல்லாம் வெடித்துப் போகின்றன; இரு வாய்களும் - இருவர் அம்புகளின் வாய்களும், எதிரா - ஒன்றை ஒன்று எதிர்த்து நின்று, கடிக்கின்றன - உராய்க்கின்றன; கனல் வெம் கணை - நெருப்பைக் கக்கும் கொடிய பாணங்கள், கலி வான் உற - பெருத்த விண்ணை அடைய, விசை மேல் - (அவற்றின்) வேகத்தின் காரணமாக, வெங்கனல் பொறி - கொடிய நெருப்புப் பொறிகள், பொடிக்கின்றன - பொடிகளாகத் தெறிக்கின்றன; இவை - இவற்றை, புலவோர் - தேவர்கள், கண்டனர் - பார்த்தார்கள்.

இதுவும் முந்தின செய்யுளும் சொற்போக்கிலும் பொருளிலும் ஒன்றே போலிருத்தல் காணத்தகுந்தது. பொறி பொடிக்கின்றன என மாற்றுக. 'கலிவான், பெருத்த வான்' என்பது

பழையவுரை. கலித்தல் - பெருகுதல்; செய்யார் தோஞ் தெருமரல் கலிப்ப' (பொருந. 134). பொடித்தல் - தோற்றுவித்தலும் ஆம். புலவர் - தேவர்; (திவா.); ஆரணிய. 187, 188, 1143.

பி - ம். 1. மலை நின்றன, விழுகின்றன, விழவந்து.
2. சிறுநாணொலி; மெதிரக், மெதிர்ப்பக்.
3. விசைபோய்.
4. லது கண்டனர். 110

2979. கடல்வற்றின மலையுக்கன பருதிக்கனல் கதுவுற்
றுடல்பற்றின மரமுற்றன கனல்பற்றின வுதிரம்
சுடர்பற்றின சுறுமிக்கது துணிபட்டுதிர் கணையின்
திடர்பட்டது பரவைக்குழி திரியுற்றது புவனம்.

(இருவரும் ஒருவர் மீதொருவர் வீசிய பாணங்களால்), கடல் வற்றின - கடல்கள் வற்றிப் போயின; மலை உக்கன - மலைகள் பிளந்து போயின; பருதி உடல் - சூரியனது உடல், கனல் கதுவுற்று - நெருப்புப் பற்றப் பெற்று, பற்றின - பற்றியெரிந்தது; கனல் பற்றின - நெருப்புப் பிடித்துக்கொண்ட, மரம் உற்றன - மரங்கள் எரியுற்றன; உதிரம் - இரத்தங்கள், சுடர் பற்றின - ஒளி பெற்றனவாய், சுறு மிக்கது - சுறு நாற்றம் மிகுதியாயிற்று; துணிபட்டு - ஒடிக்கப்பட்டு, உதிர் - கீழே விழுகின்ற, கணையின் - அம்புகளாலே, பரவை குழி - கடலாகிய பள்ளம், திடர் பட்டது - மேடாயிற்று; புவனம் - பூமி, திரியுற்றது - அலையலாயிற்று.

உகுதல் - சிந்துதலும் ஆம். சூரிய மண்டலம் வரையில் பாணங்கள் சென்றன என்று கூறக் கதிரவன் உடல் கனல் பற்றியது எனக் கூறப்பெற்றது; மரமும் கனலுற்று அழிந்தன என்க. சுறு - மயிர் முதலியன பொசுங்குதலால் உண்டாகும் நாற்றம்; 'கூந்தலின் சுறு நாறுகின்றது' (யுத்த. 24.). பரவைக்குழி; இருபெயரொட்டு,

பி - ம். 1. கடல்வற்றின பொறியுக்கன; பருவக்கனல் பருகுற்று; பருதிக்கனல் பருகுற்.
2. உடல் வற்றின; மரமுற்றின; கனல் பட்டன, அனல் பட்டன.
3. சுடர் வற்றின; சுறவுக்கன; கலையின்.
4. திடருற்றது; திரிவுற்றன, திரியுற்றன. 111

2980. எரிகின்றன வயில்வெங்கணை யிருசேனையு மிரியத்
திரிகின்றன புடைநின்றில திசைசென்றன சிதறிக்
கரிபொன்றின பரிமங்கின கவிசிந்தின கடல்போல்
சொரிகின்றன பொருசெம்புனல் தொலைகின்றன
[கொலையால்.

எரிகின்றன அயில் வெம் கணை - நெருப்பை வீசுகின்ற கூரிய வெம்மை மிக்க அம்புகளால், இரு சேனையும் இரிய - இரு பக்கப் படைகளும் தம் இடங்களை விட்டு நீங்க, திரிகின்றன - நாலா பக்கங்களிலும்) அவை திரிகின்றன; புடை நின்றில-அவை அருகில் கூட நிற்கவில்லை; சிதறி திசை சென்றன - (அவை) சிதறிப் போய் பல திசைகளுக்கும் ஓடின; கரி பொன்றின - யானைகள் இறந்தன; பரி மங்கின - குதிரைகள் அழிந்தன; கவி - குரங்குகள், சிந்தின - ஓட்டமெடுத்தன; பொரு செம் புனல்-போர் செய்தலால் உண்டான குருதி, கடல் போல் சொரிகின்றன - கடல் நீரைப் போலப் பொழிந்தன; கொலையால் தொலைகின்றனர் - பல கொல்லப்பட்டு அழிகின்றன.

பி - ம். 1. விருவெங்கணை; விரிவெங்கணை; யிவையாவையுமிரியத்.
2. இடைநின்றில.
4. தொலைகின்றனர்.

112

## இலக்குவனின் சரங்கள்

2981. புரிந்தோடின புகைந்தோடின பொறிந்தோடின
[புகைபோய்
எரிந்தோடின கரிந்தோடின இடமோடின வலமே
திரிந்தோடின செறிந்தோடின விரிந்தோடின திசைமேல்
சரிந்தோடின கருங்கோளரிக் கிளையான்விடு சரமே.

கரும் கோளரிக்கு - கரிய சிங்கமான இராமபிரானுக்கு, இளையான் - இளைய சகோதரனை இலக்குவன், விடு சரம் - விட்ட அம்புகளில், புரிந்து ஓடின - (சில) புரிமுறுக்குக் கொண்டு சென்றன; புகைந்து ஓடின - (சில) புகையைப் பரப்பிக்கொண்டு சென்றன, பொறிந்து ஓடின - (சில) தீச்சுடர்களைச் சிதறிக்கொண்டு சென்றன; புகை போய் - (சில) புகை நீங்கி, எரிந்து ஓடின - சுவாலை வீசிக்

கொண்டு சென்றன; கரிந்து ஓடின - சில கரிக்கட்டைகளாகி ஓடின; (சில) இடம் ஓடின - இடப்பக்கமாக ஓடின; (வேறு சில) வலமே திரிந்து ஓடின - வலப்பக்கமாகவே திரும்பிச் சென்றன; செறிந்து ஓடின - (சில ஒன்றோடொன்று) நெருங்கிச் சென்றன; விரிந்து ஓடின - (நெருக்கமாய் விடப்பட்டவை சில) அகன்று சென்றன; திசைமேல் சரிந்து ஓடின - சில அம்புகள் திசைகளில் சரிந்து சென்றன.

கரும் கோளரி - இராமபிரான்; கோளரி - சிங்கம்; இராமபிரானுக்குச் சிங்கம்; அயோத்யா. 664; ஆரணிய. 96, 426, 436. பொறிதல் - தீச்சுடர் சிதறுதல்; 'பொறிந்தெழு கண்ணினன்' (யுத்த. 1459). 'பொறிந்தோடினது அனல் சிந்தினது' என்பது பழையவுரை.

பி - ம். 1. பொறிந்தோடின புகைந்தோடின; பொரிந்தோடின.
2. எரிந்தோடின விரிந்தோடின; எரிந்தோடின விடமோடின; எதிர்ந்தோடின.
3. விரிந்தோடின செறிந்தோடின திசைமேல்.
4. விரிந்தோடின; விடு விசிகம். 113

## இந்திரசித்தின் சரங்கள்

2982. நீரொத்தன நெருப்பொத்தன பொருப்பொத்தன நிமிரும்
காரொத்தன வுருமொத்தன கடலொத்தன கதிரோன்
தேரொத்தன விடைமேலவன் சிரமொத்தன வுலகின்
வேரொத்தன செருவொத்திக லரக்கன்விடு விசிகம்.

இகல் அரக்கன் - வலிமை மிக்க அரக்கனான இந்திரசித்து, செரு ஒத்து - போரில் (இலக்குவனுக்கு) ஒத்து நின்று, விடு விசிகம் - விட்ட அம்புகளுள், நீர் ஒத்தன - நீர்ப் பிரளயத்தை ஒத்தன சில; நெருப்பு ஒத்தன - (ஊழித்) தீயை ஒத்தன சில; பொருப்பு ஒத்தன - (அளவில்) மலைகளை ஒத்தன சில; நிமிரும் கார் ஒத்தன - வானத்திலே நிமிர்ந்து செல்லும் மேகத்தை ஒத்தன சில; உரும் ஒத்தன - இடிகளை ஒத்தன சில; கடல் ஒத்தன - சில (பரப்பில்) கடல்களை ஒத்தன; கதிரோன் தேரொத்தன - சில அம்புகள் சூரியனின் தேர் போன்றிருந்தன; விடை மேலவன் சிரம் ஒத்தன - சில

இடப வாகனனுன சிவபெருமானின் ஐந்து தலைகளை ஒத்திருந்தன; உலகின் வேர் ஒத்தன - சில உலகத்தின் வேரான மேரு மலையைப் போன்றிருந்தன.

'நீரொத்தன - சலப்பிரளயமொத்தன; கதிரோன் தேரொத்தன - விசையினுல் ஒற்றையாழித் தேரை ஒத்தன. உலகின் வேரொத்தன - பூமி வேரூன்றினது ஒத்தது' இவை பழையவுரை. இங்குக் கூறப்பெற்ற உவமைகளை உருவம், வண்ணம், செயல், பயன் ஆகிய நால்வகைகளிலும் உவமை காணலாம். விடை மேலவன் - சிவபிரான். சிரம்-ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து சிரங்கள். உலகின் வேர்; அசைக்க முடியாத தன்மையைக் குறித்தது எனலும் ஆம். இச் செய்யுளுக்கு ஜலமுகாஸ்திரங்கள், அக்கினியாஸ்திரங்கள், பர்வதாஸ்திரங்கள், மேகாஸ்திரங்கள், இடியாஸ்திரங்கள், சமுத்திராஸ்திரங்கள், சூரியாஸ்திரங்கள், சிவபிரானின் பஞ்சமுகாஸ்திரங்கள், மேருமுகாஸ்திரங்கள் ஆகியவற்றை இந்திரசித்து விட்டனன் என்றும் கூறுவர். வேர் - வேர்வை என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 3. தேரொத்தன விடைமேலவர் சிரிப்பொத்தன வுலகின்; விடைவல்லவன் சினமொத்தன வுலகின்.

4. வாயொத்தன நிருதன்; விறன்மேதகு நிருதன்; திறல் மேதகு நிருதன்; சரமே. 114

## இருவர் சரங்கள்

2983. ஏமத்தடங் கவசத்திக லகலத்தன விருவோர்
வாமப்பெருந் தோண்மேலன வதனத்தன வயிரத்
தாமத்துணை குறங்கோடிரு சரணத்தன தத்தம்
காமக்குல மடமங்கையர் கடைக்கண்ணெனக் கணைகள்.

காம குல மட மங்கையர் கடைக்கண் என - தம்மால் விரும்பப் படுகின்ற சிறந்த மடப்பம் பொருந்திய காதல் மங்கையரின் கடைக் கண் என்று சொல்லத்தக்க (ஊடுருவிப் பாயவல்ல), தம்தம் கணைகள் - (இலக்குவன் இந்திரசித்து என்ற இருவரும்) தாம் தாம் செலுத்திய அம்புகள், இருவோர் ஏமம் தடம் கவசத்து இகல்

அகலத்தன - அவ்விருவர்களின் பாதுகாவலாக அமைந்த அகன்ற கவசமணிந்த வலிய மார்புகளிலே பாய்ந்தன ; வாமம் பெரும் தோள் மேலன - அவர்களின் அழகிய பெரிய தோள்களின் மேலே சென்றன ; வதனத்தன - முகங்களிலே பதிந்தன ; வயிரம் - வைரம் போன்று வலிய, தாம - அழகிய, துணை குறங்கோடு - இரண்டு துடைகளுடனே, சரணத்தன - பாதங்களிலே பாய்ந்தன.

ஏமம் - காவல் ; 'எல்லா வுயிர்க்கு மேமமாகிய' (பு. நா. 1:11). அகலம் - மார்பு. வாமம் - அழகு. குறங்கு - துடை. வயிரத் தாமம் - இரத்தினமாலை என்றும் பொருள் கூறுவர். மங்கையர் கடைக்கண் அம்புக்கு ; 'நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலும், அம்புகொண் டரசர் மீண்டார்', (சீவக. 439) ; பு. வெ. 84ம் காண்க.

பி - ம். 1. கவசத்தினி னிகலார்த்தன விருவோர் ; கவசத்திகல், கவ்சத்தன விருவோர்; ஏமத்திருகவசத்தன வொருவோரென.

2. வாமப் பொருந் ; வயிரத்த, உயிர்த்த.

3. தாமத்தன மார்பத்தன. 115

2984. எந்நாளினி னெத்தேவர்க ளெத்தானவ ரெவரே
அன்னார்செரு வொத்தாரென விமையோரெடுத் தார்த்தார்
பொன்னார்சிலை யிருகால்களு மொருகால்பொறை யுயிரா
முன்னாளினி லிரண்டாம்பிறை முளைத்தாலென வளைத்தார்.

பொன் ஆர் சிலை - பொன் மயமான தம் சிறந்த விற்களை, பொறை உயிரா - பாரம் நீங்குமாறு, முன் நாளினில் - பூர்வபட்சத்தில், இரண்டாம் பிறை முளைத்தால் என - இரண்டாம் பிறைச் சந்திரன் முளைத்தது போல, இரு கால்களும் - இரண்டு முனைகளையும், ஒரு கால் வளைத்தார் - (இலக்குவனும் இந்திரசித்தும்) ஒரே சமயத்தில் வளைத்தார்கள் ; (அப்பொழுது), இமையோர் - தேவர்கள், 'எ நாளினின் - எந்தக் காலத்தில், எ தேவர்கள் - எந்தத் தேவர்கள், எ தானவர் - எந்த அசுரர், எவரே - (வேறு) யாரே, அன்னார் செரு - அந்த இருவருடைய போரை, ஒத்தார் - ஒத்துப் போரிட்டனர்' ; என - என்று, எடுத்து உரைத்தார் - வாய்விட்டுப் பேசினார்கள்.

ஒருகால் இரு கால்களும் வளைத்தல்: 'வரையென் றொருகா லிருகால் வளைய நிமிர்த்து' (திருக்கோ. 152). இரண்டாம் பிறை; பூர்வ பக்ஷம் திருதியையிலும் அபர பக்ஷம் திரயோதசியிலும் காணப்படும் பிறை என்றும் சிலர் கூறுவர். வில்லுக்கு இரண்டாம் பிறை. பொறை உயிர்த்தல் - சுமை இறக்குதல்; 'துறை துறை தோறும் பொறையுயிர்த் தொழுகி' (பொருந. 239). இங்கு, அம்புகளை வெளிப்படுத்துதலைக் குறித்தது. எடுத்தார்த்தல், உரக்க உரைத்தல்.

பி - ம். 1. தானவர் முதலோர்.

2. இன்னுர்செரு விளைத்தாரென விமையோரெடுத் தழைத்தார்; செரு வளைத்தாரென.

4. இருனுட்பிறந்த வம்மானை; முளைத்தாமென விளைத்தார். 116

2985. வேகின்றன வுலகிங்கிவர் விடுகின்ற விசிகம்
போகின்றன கடல்வெந்தன விமையோர்களும் புலர்ந்தார்
ஆகின்றதொ ரழிகாலமி தாமன்றென வயிர்த்தார்
நோகின்றன திசையானைகள் செவிநாணொலி நுழைய.

இங்கு - இப் போரில், இவர் - இலக்குவ இந்திரசித்தர், விடுகின்ற விசிகம் - விடுகின்றனவான அம்புகள், போகின்றன - பாய்ந்து, (அதனால்), உலகு வேகின்றன - உலகங்கள் வெந்தொழிகின்றன; கடல் வெந்தன - கடல்களும் நெருப்பால் வெந்தன; இமையோர்களும் - தேவர்கள்கூட, புலர்ந்தார் - நாவுலர்ந்தனர்; (அவர்கள்), அன்று - அப்பொழுது, 'ஓர் அழிகாலம் இது ஆகின்றது ஆம் என - உலகுக்கு இணையற்ற அழிவுக் காலமாக இது வந்து விட்டதென்று', அயிர்த்தார் - சந்தேகமுற்றார்கள்; நாண் ஒலி செவி நுழைய - (இருவர் விற்களின்) நாண்களினின்று எழும் ஓசை செவிகளுள் புக, திசை யானைகள் - திக்குக் கஜங்கள், நோகின்றன - வருந்தின.

புலர்தல் - உலர்தல்; 'புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து' (சிலப், 5, 198); தளர்தலும் ஆம். ஆகின்றதொ ரழிகாலமி

தாமன்றென இமையோர்களும் அயிர்த்தார்; (ஒப்பு); 'இறுதிக் காலம், அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்' (பால. கையடைப். 13).

பி-ம். 1. வுலகங்கவர், வுலகங்கிளர்.

2. சுடர்கின்றன ! சுடர்வெந்தன, விமையோர்களும் புகழ்ந்தார்; புலர்ந்தார்.

4. சிலை நாணெறி நுழைய. 117

2986. மீனுக்கது நெடுவானகம் வெயிலுக்கது சுடரும்
மானுக்கது முழுவெண்மதி மழையுக்கது வானம்
தானுக்கது குலமால்வரை தரையுக்கது தகைசால்
ஊனுக்கதெவ் வுலகத்தினு முளதாகிய வுயிரே.

(இவர்களின் அம்புகளால்), நெடு வானகம் - நீண்ட வானம், மீன் - நக்ஷத்திரங்களை, உக்கது - சிந்திற்று; சுடரும் - சூரியனும், வெயில் உக்கது - தன்னிடமுள்ள வெப்பத்தைக் கக்கியது; வெண் முழுமதி - வெண்மையான பூர்ண சந்திரன், மான் உக்கது - தன்னிடத்திலுள்ள மானை இழந்தது; வானம் மழை உக்கது - ஆகாயம் தன்னிடமுள்ள மேகங்களையும் சிந்தியது; குல மால் வரை - சிறந்த பெரிய மலையான மேரு, தான் உக்கது - தானே பொடிப் பொடி யாயிற்று; தகைசால் தரை - சிறப்புமிக்க பூமி, உக்கது - சிதறிற்று; எ உலகத்தினும் உளதாகிய உயிரே - எல்லா உலகங்களிலும் உள்ள உயிர்கள் எல்லாம், ஊன் உக்கது - மாமிசமாகிய தங்கள் உடல்களை யெல்லாம் இழந்தன.

குலமால்வரை - அஷ்டகுல மலைகளும் ஆம்.

பி-ம். 1. உக்கன.

2. மழையுக்கன.

3. தலையுக்கது தகைசால்.

4. ஊனுக்கன வுயிருக்கன வுலகத்தினி லெங்கும்; ஊனுக்கது முயிரோடு; வுலகத்தினுளவரும்; வுலகத்தி லெவ்வுயிரும். 118

2887. அக்காலையி னயில்வெங்கணை யையைந்துபுக் கழுந்தத்
திக்காசற வென்றான்மக னிளங்கோவுடற் செறித்தான்
கைக்கார்முகம் வளையச்சில கனல்வெங்கணை கவசம்
புக்காகமுங் கழன்றோடிட விளங்கோளரி பொழிந்தான்.

அக் காலையில் - அப்பொழுது, திக்கு - எட்டுத் திக்குகளையும், ஆசு அற - குற்றம் நீங்க, வென்றான் - வென்ற இராவணனின், மகன் - மகனான இந்திரசித்து, அயில் ஐ ஐந்து வெம் கணை - கூரிய இருபத்தைந்து வெப்பமான அம்புகளை, இளங்கோ உடல் புக்கு அழுந்த - இலக்குவனின் உடலின் புகுந்து உள்ளே செல்லும்படி, செறித்தான் - அழுத்தினான்; இளம் கோளரி - இளம் சிங்கமான இலக்குவனும், ஆகமும் புக்கு - (இந்திரசித்தின்) உடலினுள்ளும் புகுந்து, கவசம் கழன்று ஓடிட - (பூண்டிருந்த) கவசமும் கழன்று அப்பால் போகுமாறு, (தன்) கை கார்முகம் வளைய - கையிலுள்ள வில் வளைய, சில கனல் வெம் கணை - சில நெருப்புமயமான கொடிய அம்புகளை, பொழிந்தான் - சிந்தினான்.

இளங்கோ, இளங்கோளரி, இரண்டும் இலக்குவனைக் குறிப்பன. இலக்குவன், இளங்கோ; (ஆரணிய. *358*); இலக்குவன், கோளரி; (ஆரணிய. *1068*, *1078*, *1083*).

பி - ம். 3. கதிர்வெங்கணை, கனல் வெஞ்சரம்.
4. கழன்றுடி.



2988. தெரிந்தான்சில சுடர்வெங்கணை தேவேந்திரன் சினமா
இரிந்தோடிடத் துரந்தோடின விமையோரையு முன்னாள்
அரிந்தோடின வெரிந்தோடின யவைகோத்தட லரக்கன்
சொரிந்தானுயர் நெடுமாருதி தோண்மேலினிற் றோன்ற.

அடல் அரக்கன் - வலிமை மிக்க இந்திரசித்து, முன் நாள் - முன்னொரு பொழுது, தேவேந்திரன் - தேவேந்திரனுடைய, சினமா - கோபம் மிக்க ஐராவதமென்னும் யானை, இரிந்து ஓடிட - அச்சத்தால் நிலைகெட்டு ஓடிடுமாறு, துரந்து - (தன் வில்லை விட்டு) நீங்கி, ஓடின - சென்றனவும், இமையோரையும் - தேவர்களையும, அரிந்து - வெட்டி, ஓடின - சென்றனவும், எரிந்து ஓடின - நெருப்பைக் கக்கிக்

கொண்டு சென்றனவும் ஆன, சில சுடர் வெம் கணை அவை - சில ஒளி பொருந்திய கொடிய அம்புகளை, கோத்து - தன் வில்லிற் கோத்து, உயர் நெடு மாருதி தோள் மேலினில் - உயர்ந்த நீண்ட அநுமனின் தோள்மீது, தோன்ற - (அவ்வம்புகள்) விளங்க, தெரிந்தான சொரிந்தான் - தெரிந்து சொரிந்தனன்.

அரக்கன் தோள்மேல் சொரிந்தான் என இயைக்க. எரிந் தோடின, எரித்தோடின என்பதன் விகாரமாகவும் கொள்ளலாம். தேவேந்திரன் மா - ஐராவதம். இந்திரசித்து தேவேந்திரனையும் தேவர்களையும் வென்ற வரலாற்றை உத்தர காண்டம் திக்கு விஜயப் படலத்திற் காண்க. உயர் நெடு மாருதி; மாருதியின் உயரத்தையும் அகலத்தையும் தெரிவித்தது.

பி - ம். 1. தெரிந்தானடர் சுடர் வெங்கணை, தொடர்ந்தோடின ; தெய்வேந் திரன் சினமா ; தேர் பூண்டன சினமா.

2. இமையோரையு மன்னுள்.

3. இரிந்தோடின ; வரிந்தோடுவ ; எரிந்தோடுறும்; விவை கோத்த.

4. சொரிந்தானவை... ...தோள்புக்கன தோன்று. 120

2989. குருதிப்புனல் சொரியும்முயர் குன்றென்னும வநுமன்
பருதித்திற நிறமொத்த யிளங்கோளரி பார்த்தான்
ஒருதிக்கினும் பெயராவகை யவன்றேரினை யுதிர்த்தான்
பொருதிக்கணம் வென்றேனெனச் சரமாரிகள்
[பொழிந்தான்.

குருதி புனல் சொரியும் - இரத்தம் சொரியும், உயர் குன்று என்னும் - உயர்ந்த மலையென்று கூறத்தக்க, அ அநுமன் - அந்த அநுமனின், நிறம் பருதி ஒத்த திறம் - நிறம் சூரியனை ஒத் துள்ள தன்மையை, இளம் கோளரி பார்த்தான் - இளஞ் சிங்கம் போன்ற இலக்குவன் பார்த்து, அவன் தேரினை - இந்திரசித்து ஏறி யிருந்த தேரை, ஒரு திக்கினும் பெயரா வகை - ஒரு திசையில் போக வொட்டாதபடி, உதிர்த்தான் - வீழ்த்தி, 'இக்கணம் பொருது வென்றேன் - இக் கணமே நான் (இவனைப்) போரிட்டு வென்றேன்' என - என்று சொல்லிக் கொண்டு, சரமாரிகள் - அம்பு மழைகளை, பொழிந்தான் - கொட்டினன்.

இலக்குவன் வாகனுன அநுமனே இந்திரசித்து குருதி பெருகச் செய்ய, இந்திரசித்தின் வாகனமான தேரை இலக்குவன் சிதைத்தான் என்க. பார்த்தான், உதிர்த்தான் முற்றெச்சங்கள். இளங்கோளரி; 2389 செய்யுள் உரை விளக்கம் காண்க. அநுமனுக்குச் சூரியன்; (சுந்தர. 30, 957). உதிர்த்தல் - வீழ்த்துதல்; 'குயில்குடைந் துதிர்த்த புதுப்பூஞ் செம்மல்' (சிறுபாண். 4)

பி - ம். 1. குருதிப்புனல் சொரியக்குணங் குனிப்பில்லவன் குணபால்.
2. பருதிப்படி பொலிவுற்றதை; பருதிப்படி மெலிகின்றவை.
4. வென்றனெனச். 121

2990. அத்தேரழிந் தது நோக்கிய விமையோரெடுத் தார்த்தார்
முத்தேவரு முவந்தாரவ னுருமேறென முனிந்தான்
தத்தாவொரு தடந்தேரினைத் தொடர்ந்தான்சரந் தலைமேல்
பத்தேவின னவைபாய்தலி னிளங்கோளரி பதைத்தான்.

அ தேர் அழிந்தது நோக்கிய இமையோர் - (இந்திரசித்தின்) அந்தத் தேர் அழிந்து போனதைப் பார்த்த தேவர்கள், எடுத்து ஆர்த்தார் - வாய்விட்டு ஆரவாரித்தார்கள்; மு தேவரும் - திருமால், சிவபிரான், நான்முகன் ஆகிய மூன்று தேவர்களும், உவந்தார் - மகிழ்ந்தார்கள்; அவன் - (அவற்றைக் கண்ட) இந்திரசித்து, உரும் ஏறு என - இடியேறு என்னும்படி, முனிந்தான் - கோபித்து, ஒரு தடம் தேரினை தத்தா தொடர்ந்தான் - ஓர் அகன்ற தேரின்மீது பாய்ந்தேறி (இலக்குவன் நின்றவிடத்தை நோக்கித்) தொடர்ந்து சென்று, தலைமேல் பத்து சரம் ஏவினன் - (இலக்குவன்) தலை நோக்கிப் பத்து அம்புகளை எய்தான்; அவை பாய்தலின் - அச்சரங்கள் தன் தலைமீது பாய்ந்ததனுல், இளங்கோளரி - இளைய சிங்கம் போன்ற இலக்குவன், பதைத்தான் - வருந்தினுன்.

பதைத்தல்-துடித்தல். எடுத்தார்த்தல்; இப்படலம் 116-ஆம் செய்யுள் காண்க. தத்துதல் - தாவியேறுதல்; 'எற்றுப்பிணரெருத்திற் றத்துபு' (கலித். 103, 34); தத்தா - தத்தி. தேரினைத் தொடர்ந்தான்: வேற்றுமை மயக்கம். இளங்கோளரி: முன் 2989.

பி - ம். 1. அத்தேரழிந் திடநோக்கினர் ; அழிந்திட நோக்கிய.
2. உவந்தார்முதல் ; முனிந்தே.
3. சரந்தெரிந்தே.
4. பாய்தலு மிளங்கோளரி. 122

2991. பதைத்தானுட னிலைத்தான்சில பகுவாயயிற் பகழி
விதைத்தானவை விலக்காதமுன் விடைமேல்வரு விமலன்
மதத்தாலெதிர் வருகாலனை யொருகாலுற மருமத்
துதைத்தானெனத் தனித்தோர்கணை யவன்மார்பினி
[லுதைத்தான்.

உடல் பதைத்தான் - (இலக்குவன் இந்திரசித்து தன் தலைமீது பொத்திய பாணங்களால்) உடல் நடுங்கினான்; நிலைத்தான் - (பிறகு நடுக்கத்தினின்று நீங்கி) நிலைப்பட்டு, பகுவாய் அயில் சில பகழி விதைத்தான் - (இந்திரசித்தின்மீது) பிளந்த வாயையுடைய கூரிய சில அம்புகளைத் தூவினான்; அவை விலக்காதமுன் - அவற்றைத் (அவ் விந்திரசித்து) தடுப்பதற்கு முன்னே, விடைமேல் வரு விமலன் - இடப வாகனத்தின்மீது வரும் சிவபிரான், மதத்தால் - தன் ஆணவத்தால், எதிர் வரு காலனை - (தன்னை) எதிர்த்து வரும் இயமனை, ஒருகால் மருமத்து உற - தம் ஒரு கால் அவன் மார்பில் பொருந்த, உதைத்தான் என - உதைத்ததுபோல, அவன் மார்பினில் - இந்திரசித்தின் மார்பினில், தனித்து ஓர் கணை உதைத்தான் - தனித்ததான ஒப்பற்ற ஓர் அம்பைச் செலுத்தினான்.

முன் செய்யுளுடன் இது அந்தாதித் தொடரில் அமைந்துள்ளமை போரின் விரைவினை அறிவுறுத்துகின்றது. பகுவாய் பகழி - இதனை அர்த்த சந்திர பாணம் என்பர். விதைத்தல் - ஊன்றுதல். விடைமேல் வரு விமலன் - சிவபிரான். இயமனைச் சிவபிரான் உதைத்தமை, மார்க்கண்டேயன் பொருட்டு; இவ் வரலாறு யாவரும் அறிந்ததொன்றே. இளைய பெருமான் இந்திரசித்தின் மார்பினில் இலக்குவன் செலுத்திய அம்புக்கு, இயமன் மார்பில் சிவபிரான் காலால் விடுத்த உதை ஒப்பு. இலக்குவ

னுக்குச் சிவபிரான்; அயோத். 431; ஆரணிய. 1090. உதைத்தல்; முன்னது, காலாலெற்றுதல்; 'கூற்றன்றை யுதைத்தாய் போற்றி' (தேவா. 966, 1); பின்னது செலுத்துதல்; 'இச் சிலை யுதைத்தகோற் கிலக்கம்' (பால. கார்முகப். 10).

பி - ம். 1. உடல்தரித்தான் சிலை; மதித்தானென.

2. விதைத்தானவன் விடைமேல்வரு; சடையோன்; வரு நெடியோன்.

3. மதத்தானென, மதித்தானென.

4. உதைத்தாலெனத்; மார்பிடை யுய்த்தான்; யுறுத்தான். 123

2992. கவசத்தையும் நெடுமார்பையுங்
கடந்தக்கணை கழிய
அவசத்தொழி லடைந்தானதற்
கிமையோரெடுத் தார்த்தார்
திவசத்தெழு கதிரோனெனத்
தெரிகின்றதோர் கணையால்
துவசத்தையும் துணித்தேயவன்
மணித்தோளையுந் துளைத்தான்.

அ கணை - (இலக்குவன் விடுத்த) அந்த அம்பு, கவசத்தையும் - இந்திரசித்து பூண்டிருந்த கவசத்தையும், நெடு மார்பையும் - அகன்ற மார்பையும், கடந்து கழிய - (தைத்து) அப்பாற் சென்று நீங்க, (இந்திரசித்து), அவச தொழில் அடைந்தான் - தன் வசமிழந்த நிலையை அடைந்தான்; அதற்கு - அந்நிகழ்ச்சிக்காக, இமையோர் எடுத்து ஆர்த்தார் - தேவர்கள் உரக்க ஆரவாரித்தார்கள்; (அப்பொழுது இலக்குவன்), திவசத்து எழு கதிரோன என - பகலில் (உச்சியில்) தோன்றுகிற சூரியனே என்னும்படி, தெரிகின்றது ஓர் கணையால் - காண்கின்ற,தான ஓர் அம்பினல், அவன் துவசத்தையும் துணித்து - இந்திரசித்தினுடைய கொடியையும் அறுத்து, மணி தோளையும் துளைத்தான் - நீலமணி போன்ற (உறுதியான) அவன் தோள்களையும் அறுத்துத் தள்ளினன். துணித்தே; ஏ : அசை.

எடுத்தார்த்தல் ; முன் 120-ஆம் செய்யுளைக் காண்க. திவசம்-நாளும் ஆம்; அப் பொருளில் உதய சூரியனைக் குறிக்கும். மணி, அழகும் ஆம்.

பி - ம். 1. கழன்றக்கணை கழிய.

3. சுடரோனென ; திரிகின்றநேரர்.

4. துணித்தானவன் ; மணித்தோள்களை. 124

2993. உள்ளாடிய வுதிரப்புனல்
கொழுந்தீயென வொழுகத்
தள்ளாடிய வடமேருவிற்
சலித்தானுட றரித்தான்
புள்ளாடிய கடும்போர்க்கணை
துரந்தானவை சுடர்போய்
விள்ளாநெடுங் கவசத்திடை
நுழையாதுக வெகுண்டான்.

(இலக்குவன் விடுத்த அம்பு பாய்ந்ததனால், இந்திரசித்தின்), உள் ஆடிய - உடலினுள்ளே ஓடிக்கொண்டிருந்த, உதிரம் புனல் - குருதிநீர், கொழு தீ என ஒழுக - கொழுவிய நெருப்பு என்னுமாறு உடல்மீது வழிய, தள்ளாடிய வடமேருவின் - (நிலை நிற்கமாட்டாமல் அங்குமிங்கும்) அசைந்த வட மேருவைப்போல, உடல் சலித்தான் - உடல் சோர்ந்து, தரித்தான் - (பிறகு) ஊன்றி நின்றான் ; (பிறகு அவன், இலக்குவன்மீது), புள் ஆடிய கடும் போர் கணை துரந்தான் - (ஊனுக்காகப்) பறவைகள் சுழலும் கொடிய போர் அம்புகளை எய்தான் ; அவை - அவ்வம்புகள், சுடர் போய் விள்ளா - ஒளிக் கிரணங்கள் அழிந்து நீங்காத, நெடு கவசத்து இடை - (இலக்குவனின்) நீண்ட கவசத்தில், நுழையாது - புகமாட்டாமல், உக - சிந்திப் போக (அது கண்டு அவன்), வெகுண்டான் - மிகவும் கோபங் கொண்டான்.

குருதிக்குத் தீ உவமை, நிறத்தாலும் வெம்மையாலும் என்க. வடமேரு, இந்திரசித்தின் உடலுக்குப் பருமனாலும் வலிமையாலும்

என்க. இந்திரசித்தின் அம்புகள் இலக்குவன் கவசத்தைப் பிளக்க இயலவில்லை என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. எழுந்தீயினெ டுமிழ்ந்தான்.
2. சலித்தானுடன் தரித்தான்.
3. தோள்ளாயிரம்; துறைபோம்; துறைபோய், சுடர்போல். 125

2994. மறித்தாயிரம் வடிவெங்கணை
மருமத்தினை மதியாக்
குறித்தாயிரம் பரித்தேரவன்
விடுத்தானவை குறிபார்த்
திறுத்தானெடுஞ் சரத்தாலொரு
தனிநாயகற் கிளையோன்
செறித்தானுடல் சிலபொற்கணை
சிலைநாணறத் தெரித்தான்.

ஆயிரம் பரி தேரவன் - ஆயிரம் குதிரைகள் கட்டிய தேரின் மீது நின்ற இந்திரசித்து, மறித்து - திரும்பவும், மதியா - ஆராய்ந்து, ஆயிரம் வடி வெங்கணை - ஆயிரம் கூரிய கொடிய அம்புகளை, மருமத்தினை குறித்து - (இலக்குவன்) உயிர்நிலையை குறித்து, விடுத்தான் - செலுத்தினான்; தனி நாயகற்கு இளையோன் - ஒப்பற்ற (உலகத்) தலைவனான இராமபிரானுக்கு இளையோனான இலக்குவன், அவை குறிபார்த்து - அவ்வாயிரம் அம்புகளைக் குறிபார்த்து, ஒரு நெடும் சரத்தால் - ஒரு நீண்ட அம்பால், இறுத்தான் - முறித்தெறிந்து, சிலை நாணற - இந்திரசித்தின் வில்லின் நாண் அறும்படி, பொன் சில கணை - பொன் போன்ற சில அம்புகளை, தெரித்தான் - ஆராய்ந்து, உடல் செறித்தான் - அவன் உடலிலே ஊன்றச் செலுத்தினான்.

'சிலை நாணற என்றது, இந்திரசித்து, இளைய பெருமான் வில் அறுமோ என்று அம்பு ஏவினன்' என்பது பழையவுரை. மருமம்: உயிர்நிலை; 'மருமத்துள் எறிவேல் பாய்ந்த' (பால. கையடைப். 11); மார்பும் ஆம். மதித்தல் - எண்ணுதல். அப்பொழுது மேகநாதன் ஏறியிருந்த தேரினில் ஆயிரம் குதிரைகள்

கட்டியிருந்தன என்க. ஒரு என்பதன் சரத்தால் என்று கூட்டப் பெற்றது. தெரித்தான் : முற்றெச்சமாகக் கொள்ளப்பெற்றது.

பி - ம். 1. மறுத்தாயிரம் ; மருயத்துளை, மருமங்களை.

2. துரந்தானவை ; குறியால், குறியாத்.

3. தறித்தான் ; கிளையான்.

4. செறித்தானுதை சில பொற்களை சில நானுறத் தெரிந்தான் ; நானுறற் றெரித்தான் ; நாணையுந் தெரித்தான்; தெறித்தான். 126

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

விடுவாளிகள் கடிதோடுவ விற்ருகுவ வீயா
நெடுநாணிடை சிதையாதவர் நேரேவிய விசிகம்
தொடுகார்விசை நுழையாவெதிர் மீளாதிடை சோரா
எடுபாணமு மழியாமுது கிடுதூணியை யறுத்தான்.

## இந்திரசித்து சலித்தலும் அதனை இலக்குவன் அறிதலும்

2995. வில்லிங்கிது நெடுமால்சிவ
னெனுமேலவர் தனுவே
கொல்லென்றுகொண் டயிர்த்தானெடுங்
கவசத்தையுங் குலையாச்
செல்லுங்கொடுங் கணையாவையுஞ்
சிதையாமையுந் தெரிந்தான்
வெல்லுந்தர மில்லாமையு
மறிந்தானக மெலிந்தான்.

(இந்திரசித்து), 'இங்கு இது வில் - இங்கு (இலக்குவன் கையிலுள்ள) இவ்வில், நெடுமால் சிவன் எனும் - திருமால், சிவபிரான் என்ற, மேலவர் - உயர்ந்தோர்களின், தனுவே கொல் - வில்தானோ?' என்று கொண்டு - என்று எண்ணி, அயிர்த்தான் - ஐயங்கொண்டான் ; (அன்றியும்), நெடும் கவசத்தையும் - (தன்னுடைய) நீண்ட கவசத்தைக் கூட, குலையா - சிதைத்து, செல்லும் - அப்பாலே ஏகும், கொடும் கணை யாவையும் - கொடிய அம்புகள் எல்லாம், சிதையாமையும் - (தான் யாது செய்தும்) அழியாமையையும், தெரிந்தான் - தெரிந்துகொண்டான் ; (தான்)

வெல்லும் தரம் இல்லாமையும் - தான் வெல்லுதற்கு தன்மை இல்லாமையையும், அறிந்தான் - அறிந்துகொண்டான்; (இவற்ருல்) அகம் மெலிந்தான் - மனம் மெலிவடைந்தான்.

வில், கணை இவற்றின் தன்மைகளை அறிந்து, தான் வெல்ல முடியாமையை உணர்ந்து இந்திரசித்து உள்ளம் சோர்ந்தான் என்க. திருமாலின் வில் சார்ங்கம்; சிவபிரானின் வில், பிநாகம்.

பி - ம். 1. னயன்மேலவர்; தனுமேல்.

2. கவசத்தையுங் கொலையாற்

3. செல்லுங்கடும்.

4. மல்லாமையு மறிந்தான்; அறமெலிந்தான். 127

2996. அத்தன்மையை யறிந்தானவன்
சிறுதாதையு மணுகா
முத்தன்முக நோக்காவொரு
மொழிகேளென மொழிவான்
எத்தன்மையு மிமையோர்களை
வென்ருனிகல் வென்ருய்
பித்தன்மகன் றளர்ந்தானினிப்
பிழையானெனப் பகர்ந்தான்.

அவன் - அந்த இந்திரசித்தின், சிறு தாதையும் - சிற்றப்பனை வீடணனும், அ தன்மையை அறிந்து - (இந்திரசித்து அகம் மெலிந்த) அந்த நிலையை அறிந்து, முத்தன் - முத்தனை இளைய பெருமானை, அணுகா - நெருங்கி, முகம் நோக்கா - அவன் முகத்தை பார்த்து, 'ஒரு மொழி கேள்' என - ஒரு சொல் (நான் பேசக்) கேட்பாயாக என்று, மொழிவான் - மேலும் சொல்லத் தொடங்கி எத்தன்மையும் இமையோர்களை வென்ருன் - எப்படிபபட்ட தன்மையுள்ளவர்களான தேவர்களையும் வென்றவனை (இவனை), இகல் - போரில், வென்ருய் - நீ வென்று விட்டாய்; பித்தன் மகன் - இராவணனின் மகனை இவன், தளர்ந்தான் - (மனம்) சோர்ந்து விட்டான்; இனி பிழையான் - இனி அவன் உயிரோடிருக்க மாட்டான்' என - என்று, பகர்ந்தான் - சொன்னுன்.

இகல் - பகைமையும் ஆம். முத்தன - முத்தியருளுபவன் என்ற பொருளில் இலக்குவனைக் குறித்தது.

பி - ம். 2. மொழிந்தான்.
3. இகல் கண்டாய் ; அடல் கொண்டான்.
4. பித்தன் மனந். 128

## மேலும் இருவரும் போர்புரிதல்

2997. கூற்றின்படி கொதிக்கின்றவக்
கொலைவாளெயிற் றரக்கன்
ஏற்றுஞ்சிலை நெடுநாணொலி
யுலகேழினு மெய்தச்
சீற்றந்தலைத் தலைசென்றுற
விதுதீரெனத் தெரியாக்
காற்றின்படை தொடுத்தானவ
னதுவேகொடு காத்தான்.

கூற்றின்படி - இயமனைப் போல, கொதிக்கின்ற - மனக் கொதிப்பைக் கொண்ட, அ - அந்த, வாள் எயிறு - கூரிய பற்களை யுடைய, கொலை அரக்கன் - உயிர்க் கொலை புரியும் அரக்கனான இந்திரசித்து, (அப்பொழுது), சிலை - தன் வில்லில், ஏற்றும் நெடு நாண் ஒலி - ஏற்றிய நீண்ட நாணில் உண்டான குணத்துவனி யானது, ஏழு உலகினும் எய்த - ஏழு உலகங்களையும் அடைய, சீற்றம் - கோபம், தலை தலை சென்று உற - தலைக்கு மேல் போய்ப் பொருந்த, 'இது தீர் - இதனை அவி', என - என்று சொல்லி, காற்றின் படை தெரியா - வாயு அஸ்திரத்தைத் தெரிந்து, தொடுத்தான் - (நாணில் வைத்து) விடுத்தான்; அவன் - இலக்குவன், அதுவே கொடு - வாயு அஸ்திரத்தையே கொண்டு காத்தான் - (அதனைத்) தடுத்தான்.

படி - உவமை; 'படியொருவ ரில்லாப் படியார் போலும்' (தேவா. 44, 7) உவம உருபும் ஆம். கொலை எயிறு எனவும்

கூட்டலாம். தெரிதல் - ஆராய்ந்தறிதல். காற்று - வாயுதேவன். காத்தல்; தன்னைக் காக்கும் வகையில் எதிரியின் அஸ்திரத்தை அழித்தல்.

பி - ப். 1. கூற்றின்படி கொடுத்தானறக்; தனை யொக்கின்றவக்; கூற்றின்படை
3. தெரியக்.
4. காற்றின்படை துரந்தான். 129

2998. அனலின்படை தொடுத்தானவ
னதுவேகொடு தடுத்தான்
புனலின்படை தொடுத்தானவ
னதுவேகொடு பொறுத்தான்
கனவெங்கதி ரவன்வெம்படை
துரந்தான் மனங்கரியான்
சினவெந்திற விளங்கோளரி
யதுவேகொடு தீர்த்தான்.

அவன் - அவ்விந்திரசித்து, அனலின் படை தொடுத்தான் - அக்னி அஸ்திரத்தை எய்தான்; அதுவே கொடு தடுத்தான் - அதைக்கொண்டே (ஆக்னேயாஸ்திரத்தாலேயே) அதனை (இலக்குவன்) தடுத்தான்; அவன் புனலின் படை தொடுத்தான் - அவ்விந்திரசித்து வருணனின் அஸ்திரத்தை வில்லில் பூட்டி விடுத்தான்; அதுவே கொடு பொறுத்தான் - அவ்வஸ்திரத்தை விடுத்தே அது தன்னிடம் வராதபடி (இலக்குவன்) தடுத்துக் கொண்டான்; மனம் கரியான் - கரிய மனம்கொண்ட இந்திரசித்து, கன வெம் கதிரவன் - மிக வெப்பமான சூரியனின், வெம் படை - கொடிய அஸ்திரத்தை, துரந்தான் - அவன் விடுத்தான்; (அதனை), சின வெம் திறல் இளம் கோளரி - கோபங்கொண்ட கொடிய வலிமையுடைய இளைய சிங்கமான இலக்குவன், அதுவே கொடு - அந்த சூரியாஸ்திரத்தையே கொண்டு, தீர்த்தான் - அழித்தான்.

அனலின் படை - ஆக்னேயாஸ்திரம். புனலின் படை - வாருணாஸ்திரம். கதிரவன் படை-சூரியாஸ்திரம். இவ்வஸ்திரங்கள் அவ்வவற்றிற்குரிய தேவதையின் மந்திரங்களை ஜபிப்பதனாலே அந்த அந்த அஸ்திரத்தில் அத்தேவதை தன் வலிமையைச் செலுத்தித்

தொழில்படும் என்பது கருத்து. பாலகாண்டம் வேள்விப் படலத்தில் கோசிகர் இராமபிரானுக்கு அஸ்திரங்களை வழங்கிய செய்தியையும் அப்பொழுது அப்படைகள் கூறியவற்றையும் காண்க; (செய்யுட்கள் 1—30) இப்படைகள் ஒத்த படைகளாலும், அவற்றின் முரண் படைகளாலும் அழியும். இங்கு ஒத்த படைகளால் அழிப்புண்ட தன்மை கூறப்பெற்றது. இளங்கோளரி - இலக்குவன்; இப் படலம் 2987-ஆம் செய்யுட்களைக் காண்க.

பா - ம். 1. ஈதுவேகொடு காத்தான்; மடித்தான், தவிர்த்தான்.

2. தொடுந்தார்க் கவுமதுமே.

3. கனல் வெங்கதிரவன்; மனங்கரியோன்; மனங்களியான்; மனங் கரிவான். 130

## இருவரும் பிரமாத்திரம் விடுதலும் இலக்குவன் வெற்றி பெறுதலும்

2999. இதுகாத்திகொ லென்னுவெடுத்
திசிகப்படை யெய்தான்
அதுகாப்பதற் கதுவேயள
வென்னுத்தொடுத் தமைந்தான்
செதுகாப்படை தொடுப்பேனென
நினைந்தான் திசைமுகத்தான்
முதுமாப்படை துரந்தேனினி
முடிந்தாயென மொழிந்தான்.

(அதன்மேல் இந்திரசித்து இலக்குவனை நோக்கி), 'இது காத்தி கொல் - இதனையும் தடுப்பாய் போலும்' என்னு - என்று சொல்லி, இசிகப்படை எடுத்து எய்தான் - இசிகம் என்ற ஒரு வகைப் படையை எடுத்து வீசினன்; அது காப்பதற்கு - 'அதைத் தடுப்பதற்கு, அதுவே அளவு - அப்படையே போதிய தாகும்', என்னு - என்று (இலக்குவன்) எண்ணி, தொடுத்து - (மற்றோர் இசிகப்படையை) அம்பில் தொடுத்து (எய்து), அமைந் தான் - இருந்தான்; (அதன்மேல் இந்திரசித்து), 'செதுகா படை தொடுப்பேன் - தவறுதலில்லாத படையைத் தொடுப்பேன்', என நினைந்தான் - என்றெண்ணி, 'திசை முகத்தான் முது மா படை துரந்தேன் - நான்முகனுக்குரிய பழமையான பெரிய பிரமாத்

திரத்தை விட்டேன், இனி முடிந்தாய்-இனி நீ இறந்தாய்', என மொழிந்தான் - என்று சொன்னான்.

கொல் - ஐயம்; வினாவும் ஆம். இசிகப்படை: இஷீகம், நாகம் என்பது பழையவுரை. இஷீகாஸ்திரம், சமுத்ராஸ்திரம் என்பாரும் உளர். அமைதல் - அடங்குதல். செதுகுதல் - தவறுதல்; அழிதலும் ஆம். திசைமுகத்தான் படை - பிரமாத்திரம். துரந்தேன் என்றமையால், அப்படையை அவன் விடுத்துவிட்டான் என்பது புலனாகிறது.

பி - ம். 2. தமைத்தான், தறுத்தான்.
3. செதுகாப்படை துரவேனென...... முகத்தோன்.
4. முதுகாப்படை; துரந்தானினி. 131

3000. வானின்றலை நிலைநின்றவர் மழுவாளியும் மலரோன்
தானும்முனி வரரும்பிற தவத்தோர்களு மறத்தோர்
கோனும்பிற பிறதேவர்கள் குழுவும்மனங் குலைந்தார்
ஊனம்மினி யிலதாகுக விளங்கோக்கென வுரைத்தார்.

(இந்திரசித்து பிரமாத்திரம் விடுத்தது கண்டு), வானின்தலை - வானத்திடத்து, நிலை நின்றவர் - நிலையாக இருந்தவரான, மழுஆளியும் - மழுவென்னும் படையையுடைய சிவபெருமானும், மலரோன் தானும் - பிரமனும், முனிவரரும் - முனிச் சிரேஷ்டர்களும், பிற தவத்தோர்களும் - (அவர்களல்லாது) வேறு தவம் புரிபவர்களும், அறத்தோர் கோனும் - அறம் செய்து சுவர்க்கம் புக்கோர்களுக்கு அரசனான இந்திரனும், பிறபிற - வேறுவேறு, தேவர்கள் குழுவும் - தேவ கூட்டத்தினர்களும், மனம் குலைந்தார் - உள்ளங் கலங்கி, 'இளம் கோக்கு இனி ஊனம் இலது ஆகுக-இளவரசனான இலக்குவனுக்கு இனி குறையில்லாமல் ஆகுக' என - என்று, உரைத்தார் - வாழ்த்துக் கூறினார்கள்.

வானின் தலைநிலை நின்றவர் - அந்தர மார்க்கத்தில் நின்றவர் எனினும் ஆம். முனிவர்களுள் தேவ முனிவர், பிரம முனிவர் போன்று பல பிரிவினர் உளர். அறத்தோர்கோன் - இந்திரன்; அறத்தோர் - அறம் செய்து சுவர்க்கம் புக்கோர்; ' அறம்செய்தான

சுவர்க்கம் புகும்' என்பதனைக் காண்க. பிறபிற தேவர்; பதினெண் கணத்தினரும் ஆம். அவர்கள் இலக்குவனுக்கு ஏதம் வருமென்றஞ்சி ஆசீர்வதித்தனர் என்க.

பி - ம். 1. வானின்றலை நின்றூர்களும்; நின்றூர்முழு.

2. முனிவோரும்; அறந்தோர்களுந் தவத்தோர்.

4. ஊனம்மினி வுளதாகுமிவ். 132

3001. ஊழிக்கடை யிறுமத்தலை யுலகியாவையு முண்ணும்
ஆழிப்பெருங் கனறன்னொரு சுடரென்னவு மாகாப்
பாழிச்சிகை பரப்பித்தனி படர்கின்றது பார்த்தான்
ஆழித்தனி முதனாயகற் கிளையானது மதித்தான்.

கடை ஊழி இறும் அதலை - கடைசி ஊழிக்காலம் முடியும் அக்காலத்து, உலகு யாவையும் உண்ணும் - எல்லா உலகங்களையும் உண்கிற, ஆழி பெரும் கனல் - கடலினிடத்திலுள்ள பெரிய வடவைக்கனல், தன் ஒரு சுடர்- பிரமாத்திரத்தின் ஒரு சுடருக்குச் சமானமாகும், என்னவும் ஆகா - என்று சொல்லவும் கூடாதபடி அவ்வளவு ஒளியுடன், பாழி சிகை - தன் வலிய சுவாலைகளை, பரப்பி-(எங்கும்) பரப்பிக்கொண்டு, தனி - ஒப்பற்றதாய், படர்கின்றது - (பிரமாத்திரம்) வருவதை, ஆழி தனி முதல் நாயகற்கு இளையான் - சக்கரப் படையையுடைய ஒப்பற்ற ஆதி நாயகனான இராமபிரானுக்கு இளையவனான இலக்குவன், பார்த்தான்-பார்த்து, அது மதித்தான் - அதன் பெருமையை உணர்ந்தான்.

ஆழிப் பெரும் கனல் - வடவைக் கனல். 'தன்னொடு சுடர்' என்று பாடங் கொண்டு, 'வடவையோடு சூரியன் என்றும்' பொருள் கூறுவர்.

பி - ம். 1. யிறுதித்தலை.

2. சுடரென்னவு மாகப், சுடரென்னவுமதர்ப்பப்.

3. பாழித்திசை; விரியத்தனி.

4. இளையாரபினிவை, இளையானிது. 133

3002. மாட்டானிவன் மலரோன்படை
முதற்போதுதன் வலத்தால்
மீட்டானலன் தடுத்தானலன்
முடிந்தானென விட்டான்
காட்டாதினிக் கரந்தாலது
கருமம்மல தென்னுத்
தாட்டாமரை மலரோன்படை
தொடுப்பேனெனச் சமைந்தான்.

(இந்திரசித்து) 'இவன் மலரோன் படைமாட்டான்-இவ்விலக்குவன் பிரமாத்திரத்திற்கு எதிர் நிற்க இயலாதவன்; முதற் போது-முதல் தடவை (நாம் அப்படையை விடுத்தபோது), தன் வலத்தால் மீட்டானலன்-தன் வலிமையால் அதைத் திருப்பி விடவுமில்லை; தடுத்தான் அலன்-அதைத் தடுக்கவுமில்லை; முடிந்தான்-(இப்பொழுது இவன்) இறந்தவனேயாவான்' என-என்றெண்ணி, விட்டான்-அவ்வத்திரத்தை (இலக்குவன்மீது) விசினன்; (அதைக் கண்ட இலக்குவன்), 'காட்டாது-(நம் வலிமையை இவனிடம்) தோற்றுவியாமல், இனி கரந்தால்-நாம் இனி மறைந்திருந்தால், அது கருமம் அலது-அவ்வாறிருப்பது காரியமாகாது'; என்னு-என்று கருதி,' தாள் தாமரை மலரோன்-(நீண்ட) தாளிணையுடைய தாமரை மலரில் வீற்றிருப்பவனாகிய பிரமனின், படை-அத்திரத்தை, தொடுப்பேன்-(வில்லில்) பூட்டி (அவன்மீது) விடுவேன்', என சமைந்தான்-என்று முடிவு செய்தான்.

முதலிரண்டடிகளும் இந்திரசித்தின் உட்கோள் என்று இலக்குவன் கருதியதும் ஆம். கரத்தல்-வலிமை தோற்றாது இருத்தல். கருமம்-ஏற்ற கருமம் என்ற பொருளில் வந்தது. சமைதல்-உடன்படல்.

பி-ம். 1. மாட்டானினி, மாட்டானிகல், மாட்டாதவன்.
2. மீட்டாவகை தொடுத்தேன்; விட்டாவகை; முற்போதுதன்.
3. கரந்தில்லது, கரந்தல்லது; தாழ்த்தாலிது கருமம்பல, அலவனென்னுத்.
4. முதலோன்படை.

3003. நன்றாகுக வுலகுக்கென முதலோன்மொழி நவின்றான்
பின்றாதவ னுயிர்மேற்செல வொழிகென்பது பிடித்தான்
ஒன்றாதவிம் மலரோன்படை தனைமாய்க்கவென்
[றுரைத்தான்
நின்றானது துரந்தானவன் நலம்வானவர் நினைந்தார்.

'உலகுக்கு நன்றாகுக-(இச்செயல்) உலகுக்கு நன்மை விளைவிப்பதாகுக', என - என்று, முதலோன் மொழி - கடவுளின் வாக்கான வேதமந்திரத்தை, நவின்றான் - (இலக்குவன்) சொல்லி, 'பின்றாதவன் - பின்வாங்காதவனான இந்திரசித்தின், உயிர் மேல் செலவு ஒழிக - உயிர்மீது போவதையும் நீக்குக', என்பது பிடித்தான் - என்ற எண்ணத்தையும் கொண்டு, 'ஒன்றாத இ மலரோன் படை தனை மாய்க்க - (இந்திரசித்தால் விடப்பெற்ற) பிரமனின் (உலக நன்மைக்குப்) பொருந்தாத இந்த அத்திரத்தை மட்டும் அழிக்க' என்று உரைத்தான் - என்று பணித்து, நின்றான் - நின்று, அது துரந்தான் - அப்பிரமாத்திரத்தைத் தான் விடுத்தான்; வானவர் அவன் நலம் நினைந்தார் - தேவர்கள் அவ்விலக்குவன் செய்த நன்மையை எண்ணி (வியந்தனர்).

முதலோன் மொழி - வேதம், 'அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ' (ஆரணிய. 60) என்றதையும், பெரிய திருமொழி. 2, 7; 10; 9, 4; 2 பாசுரங்களையும் காண்க. 'உலகெலாம் வாழ்க' என்ற பொருள் கொண்ட வேதவசனத்தைக் குறிப்பதாம். உலகை அழிக்கவல்ல பிரமாத்திரத்தை ஏவும்போது, 'நன்றாக உலகு' என்றுரைத்ததும், அதனை ஒட்டி அவ்வம்புக்குக் கூறியனவும் இலக்குவனின் உயர் பண்புகளைக் காட்டுவனவாம். நவின்றான், என்பதை வினையாலணையும் பெயராகக் கொண்டு, 'வேதாத்யாயனம் செய்தவனாகிய இலக்குவன்' என்று பொருள் கொள்ளலும் ஆம். இந்திரசித்தின் உயிரையும் கவரலாகாதெனப் படைக்கும் பான்மை மிகவும் வியக்கத்தக்கது. முன் பால காண்டம் வேள்விப் படலத்தில் படைகள், 'வீரநீ விதியி னெம்மை ஏவின செய்து நிற்றும்' என்று கூறியபடி, தெய்வப்படைகள் எய்வோனின் ஸங்கல்பப்படியே நடப்பன என்பது கருதத்தக்கது. முதலோன் படை - பிரமாத்திரம். வானவர் நினைந்தார் என்றது அவர்கள் இலக்குவனின் கருணையை வியந்தமையைக் குறிக்கும்; அவன்

நலம் என்பதை அவனுடைய நன்மையை, என்றும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 2. பின்ருதவருயிர் மேல்விடலொழி; வொழிகென்பதுபேசி; பின்ருத பல்லுயிர்மேற் செலப்பிடியேல்.

3. ஒன்ருகவிம், ஒன்ருதவம், ஒன்றதவிம் முதலோன்படை; ஒன்ருகவிம் முதலோன் படைதீர்ப்பாயெனத் தெரிந்தான்.

4. இவன் வலம் வானவர். 135

3004. தான்விட்டது மலரோன்படை யெனின்மற்றிடை தருமோ
வான்விட்டது மண்விட்டது மறவோனுட லிறுமோ
தேன்விட்டுகு மலரோன்படை தீர்ப்பாயெனத் தீர்ந்தான்
ஊன்விட்டவ னறம்விட்டில னெனவானவ ருவந்தார்.

'தேன் விட்டு உகு மலரோன் படை - '(இந்திரசித்து விடுத்த) தேனை வெளிப்படுத்திச் சிந்தும் தாமரை மலர்மீது எழுந்தருளி யுள்ள பிரமனின் அஸ்திரத்தை, தீர்ப்பாய் - ஒழிப்பாய்' என - என்று சொல்லி, தீர்ந்தான் - விடுத்த இலக்குவன், தான் விட்டதும் - தான் விடுத்ததும், மலரோன் படை எனின் - பிரமாத்திரமே யானாலும், இடை தருமோ - (தனக்கு இட்ட கட்டளையினின்றும்) பின்வாங்குமோ? வான் விட்டதும் - வானத்தை (அழிக்காமல் அதனை) விட்டதும், மண் விட்டதும் - பூமியை (அழிக்காமல்) விட்டதுமான அது, மறவோன் உடல் இறுமோ - கொடியோனை இந்திரசித்தின் உடலை மட்டும் அழிக்குமோ? (அழிக்காது என்றபடி); ஊன் விட்டவன் - ஊனமான செயல்களினின்று நீங்கின இலக்குவன், அறம் விட்டிலன் - (தன்னை அழிக்கப் பகைவன் முயன்றபோதும்) அறத்தை விட்டானில்லை', என - என்று, வானவர் - தேவர்கள், உவந்தார் - மகிழ்ந்தார்கள்.

இச் செய்யுள் வானவர் இலக்குவனின் கருணையை வியந்ததாம். பிரமாத்திரம் மிகக் கொடியது; அஃது உலகம் மூன்றையுமே அழித்துவிடும் ஆற்றல் வாய்ந்தது; 'ஈன்ற வந்தணன் படைக் கலந் தொடுக்கலிவ் வுலக, மூன்றை யுஞ்சுடு மொருவனுன் முடிகல தென்ருன்' (யுத்த. 2455). அத்தகைய கொடிய அத்திரம் பகைவனையும் கொல்லலாகாதென்று பணிந்த இலக்குவன் கருணையைப் பாராட்டினர் என்க. இடைதருதல்; இடைதல்-பின்னிடுதல்;

தாழ்தலுமாம். தீர்த்தல் - விடுதல்; 'தீர்தலுந் தீர்த்தலும் விடற் பொருட்டாகும்' (தொல். சொல். 318). ஊன்; ஊனம் - தாழ்வானவை. மற்று - வினைமாற்று.

பி - ம். 1. விட்டன மலரோன், விட்டவம் மலரோன்; முதலோன்படை; யென மற்றிடை, மற்றிவை.

2. வான்விட்டவு மண்விட்டவு மறவோனுடலிறுமோ; மறவோனுடன்; விறுமே.

3. தேன்விட்டிடு மலரோன், தேன்விட்டுயர்; நீர்ப்பானென, நீய்ப்பாயென; தெரிந்தான்.

4. வானவ ருரைப்பார். 136

3005. உருமேறுவந் தெதிர்த்தாலத
னெதிரேநெருப் புய்த்தால்
வருமாங்கது தவிர்ந்தாலென
மறவோன்படை மாயத்
திருமால்தனக் கிளையான்படை
யுலகேழையுந் தீய்க்கும்
அருமாகன லெனநின்றது
விசும்பெங்கணு மாகி.

உரும் ஏறு - இடியேறு, வந்து எதிர்த்தால் - தோன்றி ஒருவரை எதிர்த்தபோது, அதன் எதிரே நெருப்பு உய்த்தால் - அவ் இடிக்கு எதிராக நெருப்பொன்றைச் செலுத்தினால், ஆங்கு வரும் அது தவிர்ந்தால் என - அங்கு வருகின்ற இடி (அந்த நெருப்பால்) நீங்கிவிட்டது என்று சொல்லுமாறு, மறவோன் படை - இந்திரசித்தின் அத்திரம், மாய - அழிய, திருமால் தனக்கு இளையான் படை - இராமபிரானுக்கு இளையவனான இலக்குவன் விடுத்த பிரமாத்திரம், விசும்பு எங்கணும் ஆகி - வானம் எல்லாம் மூடிக்கொண்டு, உலகு ஏழையும் தீய்க்கும் அரு மா கனல் என நின்றது - ஏழு உலகங்களையும் கொளுத்தும் அரிய பெரிய நெருப்புப் பிழம்பு என்று சொல்லும்படி (வானத்திலே) நின்றது.

இந்திரசித்தின் படை இடியேற்றுக்கும், இலக்குவன் படை நெருப்புக்கும் உவமை. திருமால் - இராமன்; அயோத்தி. 237; 278; ஆரணிய. 31 முதலியன. கிட்கிந்தா. 96, 152, 153, 304, 146,

382 முதலியன; சுந்தர. 395 முதலியன. மறவோன் - கொடியோன்; இந்திரசித்து.

பி - ம். 1. உருமேறு வந்திழிந்தாலென; வந்திடும்போ ததற்கெதிரே வொளி யுய்த்தால்.

2. தவிர்ந்தாலென; மலரோன்படை மாய.

3. நீய்க்க; யுலகியாவையும் நீய்க்கும்.

4. நின்றது வானெங்கணுமாகி. 137

## இலக்குவன் தன் பிரமாத்திரத்தின் வேகத்தைக் குறைத்தல்

3006. படையங்கது படராவகை
பகலோன்குல மருமான்
இடையொன்றது தடுக்கும்படி
செந்தீயுக வெய்தான்
தொடையொன்றினைக் கணைமீமிசைத்
துறுவாயினி யென்றான்
விடமொன்றுகொண் டொன்றீர்ந்தது
போறீர்ந்தது வேகம்.

பகலோன் குல மருமான் - சூரிய குல வழித்தோன்றலாகிய இலக்குவன், அங்கு படை அது படரா வகை - வானத்திலே தான் (முன் விட்ட) அத்திரம் மேலும் படராதபடி, தொடை ஒன்றினை - (மற்றொரு அம்பை), 'கணைமீமிசை - (வானத்தில் நின்ற தன்) அத்திரத்தின்மீது, இனி - இனி, துறுவாய் - அமுக்கு வாய்', என்றான் - என்று கூறி, அது ஒன்று இடை தடுக்கும்படி - (வானத்தில் நெருப்பாகப் படர்ந்து நின்ற) அந்த அத்திரத்தை இடையே தடுக்குமாறு, செந் தீ உக - சிவந்த நெருப்பு ஒழுக, எய்தான் - விட்டான்; ஒன்று விடம் கொண்டு - ஒரு விடம் கொண்டு, ஒன்று ஈர்ந்தது போல் - பிறிதொரு விடம் இழுக்கப் பட்டது போல, வேகம் தீர்ந்தது - புதுப்படையால் முன்படையின் வேகம் குறைந்தது.

மருமான் - வழித்தோன்றல். துறுதல் - அமுக்குதல்; நெருக் குதலும் ஆம். தொடை, பின்னேவிய அம்பையும்; கணை, முன்னே

ஏவிய பிரமாத்திரத்தையும் குறித்தன. 'விஷப் பிரதிவிஷம்'; 'முள்ளை முள்ளால் களைதல்' என்ற பழமொழிகள் இங்கு நினைத்தற்குரியன. இலக்குவன் விடுத்த பிரமாத்திரம் இந்திரசித்தின் அத்திரத்தை அழித்து, தான் வானத்தில் நெருப்பாகப் பரவத் தொடங்க, அதன் வேகத்தைப் பிறிதொரு அம்பினால் இலக்குவன் அடக்கினன் என்க.

பி - ம். 2. உடையென் றெடுத்தொடுக்கும்படி யதனாலுறு களிற்றை.

3. இடையொான் றணைப்பவன்போ லமைத்திருவாயினியென்றான்.

4. விடமென்றெரு 138

இப்பாடல் ஒரு சுவடியில் பின்வருமாறு காண்கிறது :—

படையங்கது படராவகை பகலோன்குல மருமான்
உடையோனெடுத் தொடுக்கும்படி யதனா லுறுகளிற்றை
யிடையொான் றமைப்பனபோலிமைத்தி றுவாயினியென்றான்
விடமொன்று கண்டொன் றீய்ந்ததுபோன் றீய்ந்ததுவேகம்

## சிவபெருமான் இராம இலக்குவரின் உண்மை நிலையைத் தேவர்களுக்குத் தெரிவித்தல்

3007. விண்ணோரது கண்டார்வய
வீரர்க்கினி மேன்மேல்
ஒண்ணாதன வுளவோவென
மனந்தேறின ருவந்தார்
கண்ணார்நுதற் பெருமானிவர்க்
கரிதோவெனக் கடைபார்த்
தெண்ணாதிவை பகர்ந்தீர்பொருள்
கேளீரென விசைத்தான்.

அது - (இலக்குவன் தான் விடுத்த பிரமாத்திரத்தின் வேகத்தை ஒடுக்கிய) அச் செயலை, விண்ணோர் - தேவர்கள், கண்டார் - பார்த்து, 'வய வீரர்க்கு - வெற்றியை உடைய இராம இலக்குவர்க்கு, இனி - இனி, மேல்மேல் ஒண்ணாதன உளவோ.

இதன் பிறகு மேன்மேல் பொருந்தாதவை உண்டோ? (இல்லை); என - என்றெண்ணி, மனம் தேறினர் உவந்தார் - மனந்தேறி மகிழ்ந்தார்கள்; (அப்பொழுது), நுதல் கண் ஆர் பெருமான் - நெற்றியிலே நிறைந்த கண்ணை உடைய சிவபெருமான், (தேவர்களை நோக்கி), 'இவர்க்கு அரிதோ என - (இச் செயல்கள்) இவ்விராம இலக்குவர்க்கு அரியனவோ என்று, கடை பார்த்து எண்ணாது - முடிவு வரையில் கண்டு நினையாமல், இவை பகர்ந்தீர் - இச் சொற்களைச் சொன்னீர்கள்; பொருள் கேளீர் - உண்மையைக் கேளுங்கள்' என - என்று கூறி, இசைத்தான் - மேலே சொல்லத் தொடங்கினான்.

இராமபிரான் பெருமைகளைச் சிவபிரான் தேவர்களுக்குக் கூறி அவர்களின் ஐயங்களைத் தீர்க்கும் இடங்களை இக்காண்டத்தில் மேலும் பலவிடங்களிற் காணலாம். கடைபார்த்து எண்ணுதல் - கண்ணிற் கண்டதோடு நிற்காமல், முற்றிலும் கண்டு தெளிதல். பொருள் - உண்மைக் கருத்து; 'வேதங்கண்ணிய தவமெலாம்' **யுத்த.** 130. சிவபெருமான் கூறுவன மேலே நான்கு செய்யுட்களில் அமையும்.

பி - ம். 1. விண்ணாரது; விரற்கினி.
3. கண்ணாநுதல்; அவர்க்கரிதோ; இவற்கு.
4. கேணீர்; விசைப்பான்.

139

**3008.** நாராயண நரரென்றிவ ருளராய்நமக் கெல்லாம்
வேராய்முழு முதற்காரணப் பொருளாய்வினை கடந்தோர்
ஆராயினுந் தெரியாததோர் நெடுமாயையி னகத்தார்
பாராயண மறைநான்கையுங் கடந்தாரிவர் பழையோர்.

இவர் - இவ்விராம இலக்குவர், நாராயண நரர் என்று - நாராயணர் என்றும் நரர் என்றும், உளராய் - (பெயர்களைப்பெற்று) உளராகி, நமக்கு எல்லாம் வேராய் - (தேவர்களாகிய) நமக்கு எல்லாம் மூலமாய், முழுமுதல் காரண பொருளாய் - உலகத்தில் எல்லாவற்றிற்கும் முழுமுதற் காரணவஸ்துவாய், வினை கடந்தோர் ஆராயினும் - நல்வினை தீவினைகளினின்று விடுபட்டவர் எவரேயாயினும் (அவர்க்கும்), தெரியாதது ஓர் - அறியலாகாததொரு,

நெடு மாயையின் அகத்தார் - மிகப் பெரிய மாயையின் உள்ளே யிருப்பவர்; பாராயண மறை நான்கையும் கடந்தார் - ஓதப்பெறும் நான்கு வேதங்களுக்கும் அப்பாலானவர்; இவர் பழையோர் - இவர் மிகப் பழமையானவர்.

நாராயண நரர்: தருமப் பிரசாபதிக்கு மூர்த்தா தேவியிடம் உதித்த திருமாலின் அவதார விசேடம்: 'முருகு விம்மிய முளரி வாண் முகத்தெழின் மூர்த்தி, 'நரனெ டோங்குநா ராயணன் றனையுயிர்த் தனளால்' (பாகவ. 4-ஆம் கந்த. 1, 33); அவர்களுள் நாராயணன் இராமபிரானாகவும், நரன் இலக்குவனாகவும், அவ தரித்தனர் என்று இங்குச் சிவபெருமான் கூறுகின்றார். அவர் களே பின்பு கண்ணனாகவும், அருச்சனனாகவும் தோன்றினர் என்று பாகவதம் கூறும். வேர் - மூலம். முதற் காரணம், துணைக் காரணம் என்ற இரண்டனுள் கடவுளே உலகின் முதற் காரணம் என்பது கூறப்பெற்றது. வினைகடந்தோர்க்கே தெரியாதவர் எனின், பிறர்க்குக் கூறவேண்டுவதில்லை என்றவாறு. மாயையின் அகத்தார் - இறைவர் மாயையால் மூடப்பெற்று உலகத்தார் கண்களுக்குத் தெரியாத தன்மை கூறப்பெற்றது. பாராயணம் - நியமமாக ஓதுகை. பழையோர் - புராண புருஷர்.

2. வினை கடிந்தோர்,

4. கடந்தார் சில பழையார். 140

3009. அறத்தாறழி வுளதாமென மறிவுந்தொடர்ந் தணுகாப்
புறத்தார்புகுந் தகத்தாரெனப் பிறந்தன்னது புரப்பார்
மறத்தார்குல முதல்வேரற மாய்ப்பானிவண் வந்தார்
திறத்தாலது தெரிந்தியாவருந் தெரியாவகை திரிவார்.

(இந்த இராம இலக்குவர்கள்), அறிவும் தொடர்ந்து அணுகா புறத்தார் - அறிவுகூடப் பின் தொடர்ந்து நாடியும் நெருங்க முடியாத அப்பாலுள்ளவர்கள்; அறத்து ஆறு - அறநெறி, அழிவு உளது ஆம் என - அழிவுற்றது என்று, புகுந்து - உலகத் தினுள் புகுந்து, அகத்தார் என பிறந்து - (இவ்வுலகத்து) உட் பட்டவர் என்று சொல்லுமாறு தோன்றி, அன்னது - அந்த அறத்தை, புரப்பார் - காப்பவர் ஆனார்கள்; மறத்தார் - பாவி களின், குலம் - கூட்டம், முதல் வேர் அற - மூலவேர் அற்றுப்

போமாறு, மாய்ப்பான் - அவர்களைக் கொல்லும்பொருட்டு. இவண் - இவ்வுலகில், வந்தார் - வந்தவதரித்தார்கள்; யாவரும் - எவரும், திறத்தால் - தம் ஆற்றலால், அது - அந்த இரகசியத்தை, தெரிந்து தெரியாவகை - அறிந்தும் அறியாவகையிலே, திரிவார் - (இவர்கள் இவ்வுலகில்) நடமாடுகின்றனர்கள்.

இச் செய்யுளில் சிவபிரான், இராமவதாரத்தின் இரகசியத்தைத் தேவர்கள் நன்கு உணரும் வண்ணம் கூறுகின்றார். இராம இலக்குவர் அறிவுக்கு அப்பாற்பட்டவரென்றும், உலகில் அறம் அழியக் காரணமான, பாவிகளைக் கொன்று அறத்தைக் காக்கும் பொருட்டு, அவர்கள் அவதாரம் செய்தனர் என்றும், அவ்வவதாரத்தில் அவர்களை அறிவதும் இயலாது என்றும் இங்குக் கூறப்பெற்றது. அறிவும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு. அன்னது புரத்தல் - அறத்தை புரத்தல்.

பி - ம். 1. மெனிலறிவும்.
2. புறத்தாரிவரத்; புகுந்தன்னது புரப்பார்.
3. மறந்தார் முதற்குலம்.
4. திறத்தாலவை.

141

இங்கோரதிகப் பாடல் :—

அருவாகியு முருவாகியு மழியாமுழு முதலாம்
கருவாகியு மெமையாளுறு கருணாகர வடிவாம்
பொருளாகியு மிருளாகியு மொளியாகியும் பொலியும்
திருமார்பின னெடுமாயையை யாரேதெரிந் தறிவார்.

3010. உயிர்தோறுமுற் றுளன்தோத்திரத்
தொருவன்னென வுரைக்கும்
அயிராநிலை யுடையானிவ
னவனிவ்வுல கனைத்தும்
தயிர்தோய்பிரை யெனலாம்வகை
கலந்தேறிய தலைவன்
பயிராததொர் பொருளின்னதென்
றுணர்வீரிது பரமால்.

'இவன் - இந்த இலக்குவன், உயிர்தோறும் - உயிர்கள் தோறும், உற்று - பொருந்தி, உளன் - இருப்பவன்; தோத்திரத்து ஒருவன் - புகழ்தற்கு உரிய ஒப்பற்ற ஒருவனுவான், 'என - என்று, உரைக்கும் - சொல்லப்படுகின்ற, அயிராநிலை உடையான் - ஐயத்துக்கு இடமில்லாத நிலையை உடையவன்; அவன் - அந்த இராம பிரான், தயிர் தோய் பிரை எனல் ஆம் வகை - தயிர் தோய்தற்குக் காரணமான பிரை மோர் என்று சொல்லத்தகும் வகையில், இ உலகு அனைத்தும் கலந்து ஏறிய தலைவன் - இந்த உலகப் பொருள்கள் யாவற்றிலும் கலந்திருக்கக் கூடிய தலைவனுவான்; இன்னது இது பயிராதது ஓர் பொருள் - இன்னது இது என்று இசைக்க முடியாத ஒரு பொருளாகும்; என்று உணர்வீர் - என்று அறிந்து கொள்ளுங்கள்; இது பரம் - இது மிக்க மேலான விடயமாகும். ஆல்: அசை.

இராம இலக்குவரை நாரண நரர் என்று கூறி, நலிந்த காலத்தில் உலகை நிலைநிறுத்த அவர்கள் தோன்றினர் என்றும், அவர்களின் உண்மை நிலையை அறிதல் இயலாத காரியமென்றும் முன் செய்யுட்களில் கூறி, இங்கு நரனுன இலக்குவன் உயிர் தோறும் தோயும் தெய்வமென்றும், நாரணனு இராமன் தயிர்தோய் பிரை போல் தன் சேர்க்கையால் உலகத்தையெல்லாம் ஆட் கொண்டவன் என்பதையும் கூறினுர். தயிர் தோய் பிரை - பால் தயிராவதற்குக் காரணமான மோர்ப்பிரை. 'பயிராததோர் பொருள் - அருவருப்பில்லாததோர் பொருள்' என்பது பழையவுரை. பரம் - பரமார்த்தம், என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. உயிர்தோறும் முளன்; கோத்திரத் தொருவன்.

2. யுடையானென; னிவனவ னிவனுலகியாவையும்; இவனுலகியாவையு மனைத்துந்; வுரைத்தற்.

4. அறிவீரிது பரமால், உணரிரிது பரமால். 142

3011. நெடும்பாற்கடற் கிடந்தாரும்பண்
டிவர்நீர்குறை நேர
விடும்பாக்கிய முடையார்களைக்
குலத்தோடற வீட்டி

இடும்பாக்கியத் தறங்காப்பதற்
கியைந்தாரென விதெலாம்
அடும்பாக்கிய தொடைச்செஞ்சடை
முதலோன் பணித்தமைத்தான்.

'பண்டு - முன்பு, நீர் குறை நேர - நீவிர் நும் குறைகளைச் சொல்லிக்கொள்ள, (அப்பொழுது), நெடும் பால் கடல் கிடந்தாரும் இவர் - நீண்ட பாற்கடலில் சயனித்தருளியிருந்தவரும் இவரே யாவர்; விடும் பாக்கியம் உடையார்களை - பாக்கியம் இல்லாத அரக்கர்களை, குலத்தோடு அற வீட்டி - அவர் தம் குலத்தோடு முற்றிலும் அழித்து, பாக்கியம் இடும் அறம் - பாக்கியத்தை அளிக்கிற அறத்தை, காப்பதற்கு இயைந்தார் - (நம் வேண்டுகோளால்) காப்பதற்கு ஒத்துக் கொண்டார்' என - என்று, அடும்பு ஆக்கிய தொடை - அடும்பினுல் அமைந்த மாலையை, செம் சடை முதலோன் - சிவந்த சடையில் தரித்த சிவபெருமானுன கடவுள், இது எலாம் பணித்து அமைத்தான் - இவற்றையெல்லாம் அருளிச் செய்தான்.

நெடும் பாற்கடற் கிடந்தாரும் என்றமையால், இலக்குவற்கு இராமபிரானேடு ஒத்த ஏற்றம் கூறி, ஒரே திருமால் இரு கூறுகளாக இராம இலக்குவராயினர் என அமைத்தார் என்க. திருப்பாற் கடலில் திருமாலிடம் தேவர் முறையிட்டதும் இறைவன் திருவருளும்; பால. திருவவதாரப். 201, 203, 212, 215. விடும் பாக்கியமுடையவர் - பாக்கியம் விடுதலையுடையவர். குறைநேர, இயைந்தார் என இயைக்க. அடும்பாக்கியத்துடை என்று கொண்டு, ஸம்ஹாரம் செய்யும் சிறப்பை உடைய சிவபெருமான் என்றும் பொருள் கூறுவர். அடும்பு - ஒருவகைக் கொடி; அடம்பு எனவும் படும்; அடும்பு சிவபிரான் சடையில் தரிப்பது; தேவாரமும் முல்லையந்தாதியும் காண்க. பணித்தல் - அருளுதல்; 'வாய்திறந்தொன்று பணித்த துண்டு' (திவ். பெரியதிரு. 2, 8, 9).

பி - ம். 1. நாங்குறைநேர; பண்டிவர் நீர்ங்குறைநேர.
2. தவத்தோரட்ட வீட்டி.
3. கிசைந்தாரென.
4. பணித்துறைத்தான்; பணித்தமைந்தான்; அடும்பாக்கியத் துடைச்.

## தேவர்கள் சிவபெருமானைப் புகழ்ந்து தொழல்

3012. அறிந்தேயிருந் தறியேமவ
நெடுமாயையி னயர்ந்தேம்
பிறிந்தேமினி முழுதையமும்
பெருமானுரை பிடித்தேம்
எறிந்தேம்பகை முழுதும்மினி
திருந்தேமிடர் கடந்தேம்
செறிந்தோர்வினைப் பகைவாவெனத்
தொழுதார்நெடுந் தேவர்.

(சிவபிரான் கூறியவற்றைக் கேட்ட) நெடு தேவர் - பெரிய தேவர்கள், (அச் சிவபிரானை நோக்கி), 'வினை செறிந்தோர் பகைவா - மிக்க தீவினை உடையவர்க்குப் பகைவனானவனே! அறிந்தே இருந்து - (அவன் உண்மைகளை) உணர்ந்திருந்தும், நெடுமாயையின் - நெடியமாயையினாலே, அறியேம் - அறியாதவர் களாகி, அயர்ந்தேம் - சோர்வடைந்தோம்; இனி முழுது ஐயமும் பிறிந்தேம் - இனிமேல் முழு ஐயங்களினின்றும் விடுபட்டோம்; பெருமான் உரை பிடித்தேம் - பெருமானாராகிய நும் கூற்றை உறு தியாகக் கொண்டோம்; பகை முழுதும் எறிந்தேம் - (இலக்குவனை உள்ளபடி யாம் உணர்ந்ததால்) பகைமை யாவற்றையும் ஒழித் தேமாவோம; இனிது இருந்தேம் - இனிமையுடன் வாழ்ந்தோம்; இடர் கடந்தேம - இனித் துன்பங்களைத் தாண்டினோம்,' என - என்று சொல்லி, தொழுதார் - அச்சிவபிரானை வணங்கினார்கள்.

மாயையால் அறிவு மழுங்கிற்று என்றனர் என்க; அயர்ப் போம் - கால வழுவமைதி. பிறிந்தேம், எதுகை நோக்கி ரகரம் றகரமாயிற்று. பெருமான் - இங்குச் சிவபெருமான். செறிவு - நெருக்கம், வினை செறிந்தோர் - அறப்பாவிகள். பிடித்தல் - உறுதி யாகக் கொள்ளல்; 'பின்னை நின்றது செய்குவெ னென்பது பிடித்தான்' (சுந்தர. 468).

பி - ம். 1. அயிர்ப்போம், அயர்ப்பேம், அயர்ப்பால்.

2. பிறிந்தேமினி; பெருமானுன்னுரை பிடித்தோம்.

3. எறிந்தோம்வகை; மிடர் கடிந்தேம்; இனியிருந்தோம்; இனித் தீர்ந்தோம்,

இதன்பின் ஓர் அதிகப் பாடல்:—

ஈதிங்கவை நெடுவானிடை நிகழ்கின்ற திப்பாலில்
காதுங்கொலை யரக்கன்னது கண்டான்றகை மலர்மேல்
போதன்றரு படைபோக்கினன் போலாமெனப் புகைந்தான்
ஏதிங்கிவன் வலிநன்றுமற் றிதுகாண்பெனென் றிசைப்பான்.

## இந்திரசித்து இலக்குவன்மீது பல படைகளை ஏவ, யாவும் அழிதல்

3013. மாயோனெடும் படைவாங்கிய
வளைவாளெயிற் றரக்கன்
நீயேயிது தடுப்பாயெனி
னினக்காரெதிர் நிற்பார்
போயேவிசும் படைவாயிது
பிழையாதெனப் புகலாத்
தூயோன்மிசை யுலகியாவையுந்
தடுமாறிடத் துரந்தான்.

மாயோன் நெடும் படை வாங்கிய - திருமாலின் நீண்ட அத்திரமான நாராயணாஸ்திரத்தை எடுத்தவனான, (அப்போது), வளை வாள் எயிறு அரக்கன் - வளைந்த கூரிய பற்களை உடைய அரக்கனான இந்திரசித்து (இலக்குவனை நோக்கி), 'நீயே இது தடுப்பாய் எனின் - நீயே இப் படையைத் தடுத்து விடுவாயே ஆனால், நினக்கு எதிர் நிற்பார் ஆர் - உனக்கு எதிரில் (உன்னைப் பகைத்து) நிற்பவர் யார்? (ஆனால் இதனால்), விசும்பு போயே அடைவாய் - நீ வானம் சென்றே சேர்வாய்; இது பிழையாது - இவ்வம்பு தன் குறியில் தப்பாது,' என புகலா - என்று சொல்லி, உலகு யாவையும் தடுமாறிட - உலகங்கள் எல்லாம் நிலை தடுமாற, தூயோன் மிசை - தூய்மையனான இலக்குவன் மீது, துரந்தான் - (அப் படையை) விடுத்தான்.

மாயோன் படை - நாராயணாஸ்திரம். விசும்படைதல் - இறத்தல்; மங்கல வழக்கு. இது பிழையாது; விசும்படைதல் பிழையாது எனினும் ஆம்.

பி - ம். 2. நீயோவிது தடுத்தாய் ; உனக்காரமர் ; எதிர்நிகர்ப்பார்.
3. போயோவிசும்பு ; விசும்பிடை வாயிது.
4. தாயோன்மிசை. 145

இங்கோர் அதிகப் பாடல் :—

உமைபற்றிய பாகன்முத லிமையோர் பலவுருவம்
சமைவுற்றது தானல்ல தோர்பொருள்வேறில தெனவே
அமைவுற்றது பகிரண்டமு மழிகாலமி தெனவே
குமைவுற்றிட வடவைப்பொறி கொழிக்கின்ற தெவ்வுலகும்.

3014. சேமித்தன ரிமையோர்தமைச்
சிரத்தேந்திய கரத்தார்
ஆமித்தொழில் பிறரியாவரு
மடைந்தார்பழு தடையாக்
காமிப்பது முடிவிப்பது
படர்கின்றது கண்டான்
நேமித்தனி யரிதானென
நினைந்தானெதிர் நடந்தான்.

(அந் நாராயணாஸ்திரம் இலக்குவனை நோக்கி வர), இமையோர் - இமைக்கும் இயல்பினர் அல்லாத தேவர்கள், சிரத்து ஏந்திய கரத்தார் - தம் தலைகளமீது தூக்கிய கைகளை யுடையவராய், தமை சேமித்தனர் - (அந்த அஸ்திரத்தினின்று) தம்மைக் காத்துக் கொண்டனர் ; பிறர் யாவரும் - (தேவர்கள் அல்லாத) பிறர் எல்லோரும், ஆம் இத் தொழில் அடைந்தார் - தம்மைக் காப்பதான (சிரத்து ஏந்திய கரத்தர் ஆகிய) இத் தொழிலைச் செய்து தம்மைக் காத்துக் கொண்டனர் ; பழுது அடையா - தான் பழுது அடையாததும், காமிப்பது முடிவிப்பது - விரும்புவதை (விரும்பிய வண்ணமே) முடிவிப்பதுமான அந் நாராயணாஸ்திரம், படர்கின்றது - தன் மீது படர்ந்து வருவதை, கண்டான் - (இலக்குவன்) பார்த்து, நேமி தனி அரி தான் என நினைந்தான் - சக்கராயுதத்தை யுடைய ஒப்பற்ற திருமாலை தானாக நினைத்து, எதிர் நடந்தான் - அதற்கு எதிரே நடந்து சென்றான்.

முன்பு முதற் போரில் அமர்க்களத்தில் அயர்ந்து விழுந்த இலக்குவனை இராவணன் தன் இருபது கைகளாலும் வாரி எடுக்க

 

முயன்றபோது, இலக்குவன், 'அம்பரஞ் செம்பொன், உடுத்த நாயகன் ருனென வுணர்தலின்... இராவணன் தோள்களுக் கெழுந் திலன்' (யுத்த. 1165) என்று கூறப்பெற்றமை இங்கு நினைக்கத் தகும். நாராயணாஸ்திரத்துக்கு முன் தன்னையே நாராயணனாக நினைத்தனன் என்க. அதன் விளைவு அடுத்த செய்யுளிற் காணப்பெறும். காமிப்பது முடிவிப்பது - விரும்புவதைத் தர வல்லது.

பி - ம் 1. சேமத்தினர்; இமையோர்களுஞ்; கரத்தால்.
2. ஆமத்தொழில்; பிறரியாவரு மமைந்தார்; அமைந்தார்.
3. காமித்தது முடிவிப்பது படருற்றது கண்டான்; படர்விப்பது கண்டான்; படவுற்றிது; படிகின்றது; கண்டார்.
4. நாமத்தனி; நினைந்தானது நயத்தான்; நினைத்தார் துயில் துறந்தார். 146

3015. தீக்குமினி யுலகேழையு
மெனச்சேறலுந் தெரிந்தான்
நீக்குந்தர மல்லாமுழு
முதற்றனென நினைந்தான்
மீச்சென்றில தயல்சென்றது
விலங்காவலங் கொடுமேல்
போய்த்தங்கது கனன்மாண்டது
புகைவீய்ந்தது பொதுவே.

இனி உலகு ஏழையும் தீக்கும் என - இனி ஏழு உலகங்களையும் பொசுக்கி விடும் என்று சொல்லுமாறு, சேறலும் - அந்த அஸ்திரம் தன்னை நோக்கி வருதலையும், தெரிந்தான் - தெரிந்துகொண்டான்; தான் - தான், நீக்கும் தரம் அல்லா - (எதனாலும்) ஒழிக்கும் தன்மை அல்லாத, முழுமுதற்றன் என - முற்றிலும் முழுமையான (முழுமுதற் கடவுள்) என்று, நினைந்தான் - தன்னைத் தியானித்துக் கொண்டான்; மீ சென்றிலது - இலக்குவன்மீது அது பாயாமல், விலங்கா - விலகி, அயல் சென்றது - பக்கத்திடத்தே போய், அங்கு - அவ் விடத்தே, அது - அப் பாணம், வலம் கொடு - வலம் சூழ்ந்து, மேல் போய்த்து - மேலே சென்றது; பொதுவே - பொதுவாக (எல்லார்க்கும் நன்மை செய்வதாக), கனல் மாண்டது - தன் நெருப்பு அவிந்து, புகை வீய்ந்தது - புகையும் நீங்கிற்று.

தன் சுய நிலையை இலக்குவன் தான் தியானத்தால் பெற்று நின்றபோது, நாராயணாஸ்திரம் தன் மூலத்தைத் தான் அழிக்க இயலாமல் தன் வலியொடுங்கிக் கொடுமை நீங்கி இலக்குவனை வலம் வந்து அப்பால் போயிற்றென்பது பொருள். இராமாயணத்தில் அதன் மூல பாத்திரம் ஒன்று தன் கடவுட்டன்மையைப் புலப்படுத்திய சில இடங்களுள் இஃதொன்று. முழு முதலோனுக்கு அழிவில்லை என்பது இரண்டாமடியிற் குறித்த பொருள். 'மீயச் சென்றில - இளைய பெருமாள் பேரிலே செல்லவில்லை; பொதுவே - சகலருக்கும் நன்மை செய்தது' என்பன பழையவுரை. போய்த்து - போயிற்று; 'இன்றே யின்றிப் போய்த்தோ தான்' (திருவா. 496).

பி - ம். 1. தீக்கின்றதிவ்; மெனச் செல்வதுந்.

2. முதலோனென, முதருனென.

3. விக்கின்றில தயல்.

4. போய்ச்சங்கது. 147

3016. ஏத்தாடின ரிமையோர்களும்
கவியின்குல மெல்லாம்
கூத்தாடின ரரமங்கையர்
குனிந்தாடினர் தவத்தோர்
காத்தாயுல கனைத்துமெனக்
களித்தாடினர் கமலம்
பூத்தானுமம் மழுவாளியும்
முழுவாய்கொடு புகழ்ந்தார்.

(இலக்குவனால் நாராயணாஸ்திரம் பழுதுற்றமை கண்டு), இமையோர்களும் ஏத்தாடினர் - தேவர்களும் ஏத்தி ஆடினார்கள்; கவியின் குலம் எல்லாம்-வானரக் கூட்டத்தார் யாவரும், கூத்தாடினர்- கூத்தாடினார்கள்; அர மங்கையர் குனிந்தாடினர் - தேவ மாதர்கள் குனிந்து (நாட்டியம்) ஆடினார்கள்; தவத்தோர் - முனிவர்கள், 'உலகு அனைத்தும் காத்தாய் என - எல்லா உலகங்களையும் காத்தனையே' என்று, களித்து ஆடினர் - மகிழ்ந்து கூத்தாடினார்கள்; கமலம் பூத்தானும் - தாமரையில் தோன்றிய நான்முகனும், அம்மழு ஆளியும்-கோடரிப் படையைக் கொண்ட அந்தச் சிவபெருமானும், முழு வாய் கொடு புகழ்ந்தார்-தம் வாயாரப் புகழ்ந்தார்கள்.

ஏத்தாடினர் - ஏத்தி ஆடினர்; ஏத்துதல் - புகழ்தல், இமையோர்களும்; உம், சிறப்பும்மை. அர மங்கை - அர மகள்; தேவ மாதர் (திருக்கோ. 371 உரை). குனித்தல் - உடல் வளைத்தல். பூத்தல் - தோன்றுதல்.

பி - ம். 1. ரிமையோர்குலம், ரிமையோர்புலம்; குலமெவரும்; யிருடியின்குல மெவரும்.

2. குனித்தாடினர், குனித்தாடினர் மறையுங்.

4. பூத்தானுடன்; புகழ்ந்தான். 148

## இந்திரசித்து பாசுபதாத்திரம் தொடுத்தல்

3017. அவனன்னது கண்டானிவ
னரோவென வயிர்த்தான்
இவனன்னது முதலேயுடை
யிறையோனென வியவா
எவனென்னினு நன்றாகுக
வினியெண்ணல னென்னாச்
சிவனின்படை தொடுத்தாருயிர்
முடிப்பேனெனத் தெரிந்தான்.

அவன் - இந்திரசித்து, அன்னது - நாராயணாஸ்திரம் பழுதானதை, கண்டான் - பார்த்து, 'இவன் ஆரோ என அயிர்த்தான் - இவ்விலக்குவன் யாரோ' என்று ஐயமுற்றான்; 'இவன் - இந்த இலக்குவன், அன்னது - அந்த நாராயணாஸ்திரத்தை, முதலே உடை இறையோன் - மூலமே உடைய நாராயணனோ' என வியவா - என்று வியந்து, (மேலும்), 'எவன் என்னினும் - யாரே ஆயினும், நன்று ஆகுக - (அப்படியே) நன்றாக அமைக; இனி - இனிமேல், எண்ணலன் - யான் ஆராய்வதில்லை; என்னா - என்று, சிவனின் படை - சிவபெருமானுக்குரிய பாசுபதாஸ்திரத்தை, தொடுத்து - விட்டு, ஆர் உயிர் முடிப்பேன் - அவன் அருமையான உயிரை ஒழிப்பேன்' என தெரிந்தான் - என்று அறிந்தான்.

முதலே உடை இறையோன் - இவ்வத்திரத்துக்கு மூலமாயுள்ள கடவுள்; நாராயணன். சிவனின் படை - பாசுபதாத்திரம்.

பசுபதி - சிவபிரான். உயிர் முடித்தல் - கொல்லுதல். அயிர்த்து, வியந்து, தெரிந்தான் என்க.

பி - ம். 2. இவனின்னது முதலோயுடை யிறையோவென ; வெனவென்று.
3. எவனெனின்னி ; யென்னல மென்றுச்.
4. சிவனன்படை தொடுப்பேனுயிர் ; தெரிந்தான். 149

3018. பார்ப்பான்தரு முலகியாவையு
மொருநாளொரு பகலே
தீர்ப்பான்படை தொடுப்பேனெனத்
தெரிந்தான்அது தெரியா
மீப்பாவிய விமையோர்குலம்
வெருவுற்றதிப் பொழுதே
மாய்ப்பானென வுலகியாவையு
மறுகுற்றன மயங்கா.

பார்ப்பான் தரும் - அந்தணனாகிய பிரமன் படைத்த, உலகு யாவையும் - உலகங்கள் எல்லாவற்றையும், ஒரு நாள் ஒரு பகலே - ஒரு நாளின் ஒரு பகல் பொழுதிலே, தீர்ப்பான் - அழிப்பவனாகிய சிவபிரானின், படை - அத்திரத்தை, தொடுப்பேன் என தெரிந்தான் - (வில்லில் இட்டு) எய்வேன்' என்று இந்திரசித்து அறிந்தான்; அது தெரியா - அதனை அறிந்து, மீ பாவிய - வானத்திலே பரவியிருந்த, இமையோர் குலம் - தேவர்களின் கூட்டம், வெருவுற்றது - அஞ்சிற்று; உலகு யாவையும் - எல்லா உலகங்களும், 'இப்பொழுதே மாய்ப்பான் என - இப்பொழுதே அழித்து விடுவனே' என்று, மயங்கா - மனம் திகைத்து, மறுகுற்றன - வருந்தின.

பார்ப்பான் - பிரமன்; 'பார்ப்பான் குண்டிகை யிருந்த நீரும்' (யுத்த. 591). தருதல் - படைத்தல்; 'தரும தேவதை ..... ..... தருதலாற் றருமதீர்த்தம்' (சேது. பு. சக்கர. 14) மீய்; ய், எதுகையின் பொருட்டு வந்தது.

பி - ம். 1. மொருகாலொடு.
2. மனத்தோடுறத் தெளியா, மறுகுற்றது.
3. வெருவுற்றதப்.
4. உயிர்யாவையும்; மயங்கி. 150

3019. தானேசிவன் தரப்பெற்றது தவநாள்பல வுழந்தேன்
நானேபிற ரறியாதது தந்தேனென நவின்றான்
ஆனாலிவ னுயிர்கோடலுக் கையமிலை யென்னா
ஏனாளுமி தானாலெதிர் தடையில்லதை யெடுத்தான்.

சிவன் தானே தரப் பெற்றது - இந்த அத்திரம் சிவபிரான் தன்னாலேயே எனக்குக் கொடுக்கப்பெற்றது; பல நாள் தவம் உழந்தேன் - இதன் பொருட்டு நான் பல காலம் தவம் இயற்றினேன்; (அச் சிவபிரான் என்னிடம்), 'பிறர் அறியாதது - இது பிறரால் அறியப்படாத அருமை கொண்டது; நானே தந்தேன் - நானாகவே அருளினேன்' என - என்று, நவின்றான் - கூறினான்; ஆனால் - இவ்வாறு இஃது அமையுமானால், இவன் உயிர் கோடலுக்கு ஐயம் இலை - இந்த இலக்குவனின் உயிர் கொள்ளுதலுக்கு ஐயம் இல்லை,' என்னா - என்று கூறி, 'ஏல் நாளும் - தக்க நாளும், இது ஆனால் - இதுவாக அமைகிறது என்றதனால், எதிர் தடை இல்லதை - எதிர் நின்று தடுக்கக் கூடியது இல்லாததான அந்த அத்திரத்தை, எடுத்தான் - தன் கையிலே எடுத்தான்.

இப் பாடலைக் கவனிக்க வேண்டும் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. பிறர் அறியாதது தந்தேன்' என்பதற்குப் பிறர் பலர் இதற்காகத் தவம் புரிந்தும் பெறாதது; உனக்குத் தந்தேன்' எனச் சிவபிரான் கூறியதாகச் சிலர் பொருள் அமைப்பர். ஏல்தல் - தகுதல்; 'ஏலாவிட ரொருவருற்றக்கால்' (நாலடி. 113). பிரமாத்திரம், நாராயணாத்திரம், பாசுபதாத்திரம் என்ற முறையில் முத் தேவர்க்கும் உரிய அத்திரங்கள் வருதல் காண்க. இக் கவி முற்றும் உள்ளத்திலே எண்ணியது என்பது பழையவுரைக் குறிப்பு. நான்காம் வரி, 'மேனாளுமி தனையே விடினெதிர் நிற்பவரில்லை' என்று பாடங்கொண்டு, முற்காலத்தும் இதனை எதிர்த்து நின்றவரில்லை' என்று இந்திர சித்து கருதினதாகச் சிலர் பொருள் கூறுவர்.

பி - ம். 1. நானே சிவன்; புலைவுழந்தே.
2. நானே பிறர்; எனச் சமைத்தான், சமைத்தேன்.
4. மேனாளினுமறனாலெதிர்தடை செய்தவர் மீளார்; மேனாளுமி தனையோ விடி னெதிர்நிற்பவரில்லை.

3020. மனத்தான்மலர் புனல்சாந்தமொ
டவிதூபமும் வகுத்தான்
நினைத்தானிவ னுயிர்கொண்டிவ
ணிமிர்வாயென நிமிர்த்தான்
சினத்தானெடுஞ் சிலைநாண்டடந்
தோண்மேலுறச் செலுத்தா
எனைத்தாயதோர் பொருளாலிடை
தடையில்லதை விட்டான்.

(முன் கூறியவாறு எண்ணி, அவன்), மலர் புனல் சாந்தமொடு அவி, தூபமும் - (அவ்வத்திரத்துக்குப் பூசைசெய்வதாக) பூ, நீர், சந்தனம், உணவு, தூபம் முதலியவற்றை, மனத்தால் நினைத்தான் வகுத்தான் - மானஸிகத்தால் கருதிச் செய்து அமைத்து, 'இவன் உயிர்கொண்டு இவண் நிமிர்வாய்' என - இந்த இலக்குவன் உயிரைக் கொன்று இங்குத் (திரும்பி நடப்பாய்') என்று சொல்லி, நிமிர்த்தான் - (அதனை) நேராகப் பிடித்து, நெடு சிலை நாண் - நீண்ட தன் வில்லின் நாணை, சினத்தால் - கோபத்தினால், தடம் தோள் மேல் - தன் அகன்ற தோளின்மீது, உற செலுத்தா - நன்றாகச் செலுத்தி, எனைத்து ஆயது ஓர் பொருளால் - எத்தகையதால் ஆன ஒரு பொருளாலும், இடை தடை இல்லதை - இடையிலே தடுத்தல் இல்லாத பாசுபத அத்திரத்தை, விட்டான் - இலக்குவன் விடுத்தான்.

பாசுபதத்திற்கு அவன் மானஸிகமாகச் செய்த பூசை இங்குக் குறிக்கப்பட்டது; இவ்வாறே 'பூவும் பூசிற வயினியுந் தீபமும் புகையும், தாவில் பாவனை யாற்கொடுத் தருச்சனை சமைத்தான்' (சுந்தர. 1034) என்று முன் அவன் நான்முகன் படைக்குச் செய்த பாவனைப் பூசை கூறப்பெற்றது காண்க. இங்கு நடந்தது ஆயுத பூசை. நிமிர்தல்-உயர்தல், நீளுதல், வளர்தல் என்ற பல பொருள் களிருப்பினும் இங்கு முதல் சொல்லுக்கு நடத்தல் என்ற பொருள் கூறப்பெற்றது. நாண்தோளுறச் செலுத்துதல், இழுப்பின் கடுமையைக்காட்டிற்று. இடை தடையில்லது என்றதால் எடுத்த காரியத்தை முடித்தேதீரும் இயல்பு கூறியவாருயிற்று.

பி - ம். 1. அவிதீபமும்.

2. உயிர்கொண்டன விமிர்வாயென நெஞ்சாற் ; கோடலை நிமிர்வாய்.

3. சிலைநாணிடந் தோள்மேல்.

4. விலைத்தூய் ; இலைத்தாயதொர் பொருளால் ; பொருளாலெதிர். 152

## அப்பொழுது நிகழ்ந்தவை

3021. சூலங்களு மழுவுஞ்சுடு கணையுங்கனற் சுடரும்
ஆலங்களு மரவங்களு மசனிக்குல மெவையும்
காலன்றன துருவங்களுங் கரும்பூதமும் பெரும்பேய்ச்
சாலங்களும் நிமிர்கின்றன வுலகெங்கணுந் தாமாய்.

(அவ்வாறு விடப்பட்ட பாசுபதாத்திரத்தால்), உலகு எங்கணும் - உலகின் எல்லாப் பகுதிகளிலும், சூலங்களும் - அநேக சூலாயுதங்களும், மழுவும் - மழுவாயுதங்களும், சுடு கணையும் - எரிக்கின்ற அம்புகளும், கனல் சுடரும் ஆலங்களும் - நெருப்பும் அக்கினியையும் விஷங்களும், அரவங்களும்-பாம்புகளும், அசனிக் குலம் எவையும் - இடித்தொகுதிகள் யாவும், காலன் தனது உருவங்களும் - இயமனுடைய பல உருவங்களும், கரும் பூதமும் - கரிய பூதங்களையும், பெரு பேய் சாலங்களும்-பெரிய பேய்க் கூட்டங்களும், தாம் ஆய் - அவையாகி, நிமிர்கின்றன - ஓங்குகின்றன ஆயின,

இது முதல் 3 செய்யுட்களில் ஒரு தொடராகிப் பாசுபதம் வெளியேறின போது அதனின்று உண்டானவை சொல்லப் பெறுகின்றன. அசனிக்குலம் - நீரிடி, நெருப்பிடி என்றவை. சாலம் - கூட்டம்.

பி - ம். 1. கறைச்சுடரும்.

2. அயில்வேல்களுமகனிக்குல ; குலத்தெவையும்.

4. நிமிர்கின்றது விசும்பின்கண் தானய் ; வுலகெங்கணுந்தானய். 153

3022. ஊழிக்கன லொருபாலத
னுடனேதொடர்ந் துடற்றும்
சூழிக்கொடுங் கடுங்காற்றத
னுடனேவரத் தூர்க்கும்

ஏழிற்குமப் புறத்தாயுள
பெரும்போர்க்கட லிழிந்தாங்
காழித்தலைக் கிடந்தாலென
நெடுந்தூங்கிரு ளடைய.

ஒரு பால் - ஒரு பக்கத்தில், ஊழி கனல் - யுகாந்த நெருப்பானது, உடனே - அந்த அத்திரத்தின் உடனே, தொடர்ந்து - அதைப் பின்பற்றி வந்து, உடற்றும் - துன்புறுத்தும்; ஏழிற்கும் அப்புறத்தாய் உள - (கடல்கள்) ஏழினுக்கும் அப்பால் புறத்தே உள்ள, பெரும் போர் கடல் - பெரிய போரைச் செய்யும் புறக்கடல், இழிந்த ஆங்கு - ஓரிடத்தில் இறங்கின போலவும், ஆழி தலை - (பெரும்புறக்) கடலின் ஓரத்திலே, கிடந்தால் என - கிடந்தது என்று சொல்லுமாறு அமைந்த, நெடு தூங்கு இருள் - நீண்டு தொங்கும் (பேர்) இருள், அடைய - உண்டாகவும், (மற்றொரு பக்கத்தில்) சூழி கொடும் கடும் காற்று - சூழ்ந்து வீசுகிற கொடிய கடுமையான காற்று, அதன உடனே வர - அந்த அத்திரத்தைத் தொடர்ந்து வர, தூர்க்கும் - (அஃது உலகை) அழிக்கும்.

இருளடையத் தூர்க்கும் என இயைக்கப்பெற்றது. உடற்றுதல் - துன்புறுத்தல்; உண்ணின் றுடற்றும் பசி' (குறள். 13). சூழிக் காற்று - சுழல் காற்று. தூர்த்தல் - மூடுதல்; அழித்தல். பெரும்புறக் கடலுக்குமப்பால் பேரிருள் மூடியிருக்கு மென்பது ஐதிகம். இவ்வத்திரத்தால் கனலும், காற்றும், இருளும் செறிந்தன என்க.

பி - ம். 1. கடுங்கொடுந்; காற்றதனயலே; காற்றிதனயலே; உடனே வரத் தொடங்கும்.
3. ஒழுக்கும்; பெரும் பாற்கட்லிழித் தாங்கு.
4. கடந்தாங்கென; கிடந்தாங்கணை; னகல. 154

3023. இரிந்தார்குல நெடுந்தேவர்க ளிருடிக்குலத் தெவரும்
பரிந்தாரிது பழுதாகில திறுவானெனும் பயத்தால்
நெரிந்தாங்கழி குரங்குற்றது பகருந்துணை நெடிதே
திரிந்தாரிரு சுடரோடுல கொருமூன்றுடன் திரிய.

'இது பழுது ஆகிலது - இவ்வத்திரம் பழுதாகாது; இறுவான் - (இலக்குவன்) அழிவான்' எனும் பயத்தால் - என்னும் அச்சத்தால், குலம் நெடு தேவர்கள் இரிந்தார் - சிறந்த பெரிய தேவர்கள் (யாவரும்) ஓடினார்கள்; இருடி குலத்து எவரும் பரிந்தார் - முனிவர் கூட்டத்து யாவரும் வருந்தினார்கள்; குரங்கு - குரங்குகள், ஆங்கு - அவ்விடத்தில், நெரிந்து - ஒன்றோடொன்று நெருங்கி, அழி உற்றது - அழிந்துபோன தன்மை, பகரும் துணை நெடிது - சொல்லும் அளவு மிகவும் பெரிதாயிற்று; இரு சுடரோடு - சூரிய சந்திரர்களான இரு சுடர்களோடு, ஒரு மூன்று உலகு உடன் திரிய - மூன்று உலகங்களும் ஒன்று சேர்ந்து திரிய, திரிந்தார் - (அங்குள்ளவர்கள்) அலைந்தார்கள். ஏ - அசை.

பி - ம். 1. பல நெடுந்தேவர்; இருடிக் குலத்தவரும்.
2. பரிந்தாரது பழுதாகியது; பழுதாகிலது; பிரிந்தாரிது.
3. நெரிந்தாங்கின்; நெடிதோ அதிர்ந்திடவே.
4. திரிந்தாரிருஞ். 155

## வீடணன் அஞ்சுதலும் இலக்குவன் நகைத்தலும்

3024. பார்த்தானெடுந் தகைவீடண
னுயிர்காலுறப் பயத்தால்
வேர்த்தானிது விலக்குந்தர
முளதோமுதல் வீரா
தீர்த்தாவென வழைத்தானதற்
கிளங்கோளரி சிரித்தான்
போர்த்தாரடர் கவிவீரரு
மவன்தாணிழல் புகுந்தார்.

நெடு தகை வீடணன் - பெரும் தகுதிகளையுடைய வீடணன், பார்த்தான் - (அவ்வத்திரம் சீறி வருதலையும் உலகங்கள் நிலை பெயர்தலையும்) கண்டு, பயத்தால் - அச்சத்தால், உயிர் கால் உற - மூச்சு வெளியே தள்ள, வேர்த்தான் - உடல் வியர்த்தான்; (அவன் இலக்குவனை நோக்கி), 'முதல் வீரா - மூலப் பொருளான வீர! தீர்த்தா - தூய்மையானவனே! இது விலக்கும் தரம் உளதோ - இப் பாசுபதாத்திரத்தைத் தடுக்கும் தன்மை உண்டோ?' என

அழைத்தான்-என்று(இலக்குவனை விளித்துக்)கேட்டான்; அதற்கு இளம் கோளரி சிரித்தான் - அவ் வினவைக் கேட்ட இளஞ்சிங்க மான இலக்குவன் (இகழ்ச்சியுடன்) நகைத்தான்; (அவன் வீரத்தைக் கண்டு) போர் தார் அடர் கவி வீரரும் - போர் மாலை நெருங்கிய வானரத் தலைவர்களும், அவன் - அவ் விலக்குவனின், தாள் நிழல் புகுந்தார் - திருவடி நிழலிலே சரணடைந்தனர்.

உயிர் காலுதல் - உயிர் சிந்துதல். 'முதல் வீர' இப் படலத்தில் இலக்குவனுக்கு முதன்மை அளிக்கப் பெற்றுள்ளமையைப் பலவிடங்களிலும் காண்கிறோம். தீர்த்தன் - தூயவன்; இப் பெயரால் இராமபிரான் அழைக்கப் பெற்றமை; பால. உலாவரு. 32; ஆரணிய. 547; கிட்கிந்தா. 201, 450; யுத்த. 446; தாள் நிழல் புகுதல் - சரணடைதல்.

பி-ம். 1. பார்த்தானெதிர் விடணன்; பார்த்தானது நெடு வீணனன்; உயிர் சால்வுறு விலக்குந் துணை;
2. விறல் வீரர்.
3. தீர்த்தாவென வுரைத்தான் கோளரி நகைத்தான்.
4. போர்த்தாருடல்; அடற்கவி; தாளிணை புகுந்தார். 158

## இலக்குவன் அபயமளித்தலும் அவன் துணிவும்

3025. அவயம்முனக் கவயம்மெனு
மனைவோரையு மஞ்சல்
கவயம்முமக் கென்றோளிணை
யெனக்கைத்தலங் கவித்தான்
உவயம்முறு முலகின்பய
முணர்ந்தேனினி [1]யொழியேன்
சிவனைம்முக முடையான்படை
தொடுப்பேனெனத் தெளிந்தான்.

(இலக்குவன்), 'உனக்கு அவயம் அவயம்' எனும் அனைவோரையும் - 'உனக்கு அடைக்கலம்; அடைக்கலம்' என்று கூறும் எல்லோரையும், 'அஞ்சல் - அஞ்சாதீர்; உமக்கு என் தோள் இணை கவயம் - உங்களுக்கு என் தோள்கள் இரண்டும்

கவசங்களாகும்' என - என்று சொல்லி, கை தலம் கவித்தான் - தன் கைத்தலத்தை (அவர்களை நோக்கி) அமர்த்தினான்; உவயம் உறும் - இரண்டாக அமையும், உலகின் - (விண், மண்) ஆகிய உலகங்களின், பயம் - அச்சத்தை, உணர்ந்தேன் - அறிந்தேன்; இனி ஒழியேன் - இனி நான் பின்வாங்க மாட்டேன்; ஐ முகம் உடையான் சிவன் படை - ஐந்து முகங்களையுடைய சிவபெருமானுக்குரிய அத்திரத்தை, தொடுப்பேன் - (மாருக, நானும்) வில்லில் அமைப்பேன்' என தெளிந்தான் - என்று மனத்தில் உறுதி செய்து கொண்டான்.

அபயம், அவயம் எனவும், கவசம், கவயம் எனவும் ஆயின. கைத்தலம் கவித்தல் - அபயம் கொடுக்கும்போது கையைக் கவித்துக் கூறுதல் மரபு. உபயம் - இரண்டு. ஐம்முகம் - ஸத்யோ ஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்பவை. சிவன் படை - பாசுபதாத்திரம்.

பி - ம். 1. அபையம்; அஞ்சேல், அஞ்சற்க.

2. அவயமுக் களித்தோமெனத் தன்கைத்தலத் தமைத்தான்.

3. உபயம், உவையம்; உணர்வான்.

4. சிவனின் மனம்; சிவையின். 157

## இலக்குவன் படை இந்திரசித்தின் படையை விழுங்குதல்

3026. அப்பொற்படை மனத்தால்நினைந்
தர்ச்சித்ததை யழிப்பாய்
இப்பொற்படை தனைமற்றொரு
தொழில்செய்கில யென்னாத்
துப்பொப்பதோர் கணைகூட்டினன்
றுரந்தானிடை தொடரா
எப்பொற்பெரும் படையும்புக
விழுங்குற்றதொ ரிமைப்பின்.

அ பொன் படை - அந்தப் பொலிவுள்ள அத்திரத்தை, மனத்தால் நினைந்து - மானஸிகமாகக் கருதி, அர்ச்சித்து - பூசனை புரிந்து, ' அதை அழிப்பாய் - இந்திரசித்து விடுத்த பாசுபதாத்

திரத்தை அழிப்பாய்; மற்று ஒரு தொழில் செய்கிலை - வேறு ஒரு அழிப்புத் தொழிலையும் செய்யாதே', என்னு - என்று கூறி, இ பொன் படைதனை - தான் எடுத்த பொலிவுள்ள இந்தப் பாசுபதத்தை, துப்பு ஒப்பது - (எதிரியின் படையின்) வலிமைக்கு ஒப்பதான, ஒர் கணை கூட்டினன் - ஒரு அம்பிலே கூட்டி, துரந்தான் - விடுத்தான்; (அது), இடை - (இந்திரசித்தின் படை நின்ற) இடத்தை, தொடரா - தொடர்ந்து நெருங்கி, எ பெரும் பொன் படையும் புக - எந்தப் பெரிய பிரகாசமுள்ள படையும் (தன்னுள்) அடங்க, ஒர் இமைப்பின் - ஒரு கணத்தில், விழுங்குற்றது - அதனை உண்டு விட்டது.

படையை மனத்தால் நினைந்து அர்ச்சிப்பது, இப் படலம் 3020 செய்யுள் உரை காண்க. மற்றொரு தொழில் செய்கிலை; ஒப்பு 3003-யும் காண்க. இலக்குவன் கருணை இங்கும் விளங்குவது காண்க. பொன் - பொலிவு; 'பொன்னர் வயற்பூம் புகலி' (தேவா. 72, 2). துப்பு - வலிமை; 'கெடலருந் துப்பின்' (அகநா. 105); 'துப்பொப்பதோர்கணை' என்றதற்கு இலக்குவன் மீது சீறி வந்த பாசுபதத்தின் வலிமைக்கு ஒத்த வலிமையைத் தன் கணையில் சேர்த்து' எனப் பொருள் கொள்ளப்பட்டது. 'எப்பொற் பெரும்படையும் புக விழுங்கிற்று' என்றது பாசுபதாத்திரம் எழுப்பிய கனல், காற்று (3026) முதலிய யாவையும் அடங்க எனினும் ஆம்.

பி - ம். 1. போர்ப்படை; நினைந்தமைந்தானிவை; அருச்சித்து வைத்து; அருச்சித்ததை யமைப்பாய்.
2. செயல் செய்யலை; மற்றொரு தொழில்.
3. துப்போர்ப்பதோர்; துறந்தானிவை; துரந்தானது.
4. எப்பொற்படை யெவையும்; போர்ப்படை யெவையும். 158

## அப்பொழுது நிகழ்ந்தவை

3027. விண்ணார்த்தது மண்ணார்த்தது
மேலோர்மணி முரசின்
கண்ணார்த்தது கடலார்த்தது
மழையார்த்தது கலையோர்

எண்ணார்த்தது மறையார்த்தது
விசயம்மென வியம்பும்
பெண்ணார்த்தன வறமார்த்தது
பிறரார்த்தது பெரிதோ.

(இந்திரசித்தின் படை அழிவுற்றது கண்டு), விண் ஆர்த்தது - வானவர் ஆர்த்தனர்; மண் ஆர்த்தது - மண்ணுலகினர் ஆர்த்தனர்; மேலோர் - தேவர்களின், மணி - அழகிய, முரசின் - துந்துமியின், கண் ஆர்த்தது - கண்கள் ஆர்ப்பரித்தன; கடல் ஆர்த்தது - கடல்கள் முழங்கின; மழை ஆர்த்தது - மேகங்களும் சப்தித்தன; கலையோர் எண் ஆர்த்தது - (கணித) சாத்திரிகளின் (சோதிடக் கணக்கிற்குரிய) எண்களும் ஆரவாரித்தன; மறை ஆர்த்தது - வேதங்கள் ஆர்த்தன; விசயம் என இயம்பும் பெண் - விசயலக்ஷ்மி என்னும் மாது, ஆர்த்தனள் - முழங்கினள்; அறம் ஆர்த்தது - அறம் முழங்கிற்று; பிறர் ஆர்த்தது பெரிதோ - ஏனையோர் முழங்கினதை(க் கூறுவது) ஒரு விசேடமோ?

முரசின் கண் - முரசின் அடிக்குமிடம்; 'கண் மகிழ்ந்து துடி விம்ம' (பு. வெ. 2, 8. கொளு). எண்கலை - சோதிடம், கணிதம் ஆம். விசயம் என இயம்பும் பெண் - விஜயலக்ஷ்மி; அஷ்ட லக்ஷ்மிகளுள் ஒருவர். பிற என்றதனால் உலகிலுள்ள பிற சர, அசரப் பொருள்களைக் குறித்ததாம்.

பி - ம். 1. விண்ணார்த்தன மண்ணார்த்தன; மேலார்மணி.
2. கலையொடு.
3. எண்ணார்த்தது கவியார்த்தது; மறையார்த்தன; மலையார்த்தது விசயம்.
4. அறமார்த்தது புறமார்த்தது; பெரிதால்.

159

## இலக்குவனைக் கண்டு இந்திரசித்து திகைத்தலும் வானரர் வியத்தல்

3028. இறுகாலையி னுலகியாவையு மவிப்பானிகற் படையை
மறுகாவகை புரிந்தானது வாங்கும்படி வல்லான்
தெறுகாலனிற் கொடியோனுமற் றதுகண்டகந் [திகைத்தான்
அறுகாவயக் கவிவீரரு மரியென்பதை யறிந்தார்.

இறு காலையின் - அழியும் காலமான (யுகாந்தத்தில்) உலகு யாவையும் - எல்லா உலகங்களையும், அவிப்பான் - அழிப்பவனான சிவபிரானின், இகல் படையை - வலிய பாசுபதாத்திரத்தை, வல்லான் - வலிமையிற் சிறந்த இலக்குவன், அது வாங்கும்படி - அந்த (எதிரியின்) அத்திரத்தை அழியும்படி, மறுகா வகை புரிந்தான் - மயங்காதபடி செய்தான்; அது கண்டு - அச் செயலைப் பார்த்து, தெறு காலனின் கொடியோனும் - (உலகை) அழிக்கும் இயமனைவிடக் கொடியவனான இந்திரசித்தும், அகம் திகைத்தான் - மனம் மயங்கினன்; அறுகா - குறையாத, வய கவி வீரரும் - வெற்றி பொருந்திய வானர வீரர்களும், அரி என்பதை - இலக்குவன் திருமாலே என்பதை, அறிந்தார் - தெரிந்து கொண்டார்கள். மற்று : அசை.

இறுதல் - அழிதல்; இறுகாலை - யுகாந்த அழிவு நேரம். இகல் படை - இங்குப் பாசுபதம். மறுகா வகை - ஐயமற எனலும் ஆம். வாங்குதல் - அழித்தல்; 'விண்ணு மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்' (திருவாச. 5, 9, 6) வல்லான் - இங்கு, இலக்குவன்; தெறுதல் - அழித்தல்; 'பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்' (கலித். 11.) அறுகா; அருகா என்றது எதுகை நோக்கித் திரிந்தது. முன் சிவபெருமான் தேவர்கட்கு இலக்குவன் அரி என்பதை அறிவித்தார் (3008, 12); இச் செய்யுளில் அவ்வுண்மையை வானர வீரர் அறிந்தது கூறப் பெற்றது.

பி - ம். 1. யாவையும விய்ப்பான்.
2. மறுகாவகை வலித்தானது, புரந்தான து; அவித்தானவை.
3. தெறுகாலினிக்; கொடியானு மற்றது.
4. அறுகால்வயக்; அறியாவயக்; அறுகாலையில் வய விரரும்; யரியென்னுமஃதறிந்தார்; மரியாம்வகை யறிந்தார். 160

## இந்திரசித்து மேலும் பொருதல்

3029. தெய்வப்படை பழுதுற்றது
வெனக்கூசுதல் சிதைவால்
எய்வித்தக முளதன்னது
பிழையாதென விசையாக்

கைவித்தக மதனுற்சில
கணைவித்தின னவையும்
மொய்வித்தகன் தடந்தோளினும்
நுதற்சூட்டினு மூழ்க.

(இந்திரசித்து பின்னும்), 'தெய்வப் படை பழுதுற்றது - சிவ பிரானுக்குரிய படையான பாசுபதம் பழுதடைந்தது, என-என்று, கூசுதல் - மனம் சுருங்குதல், சிதைவு - குறைவு; எய் வித்தகம் உளது - (அம்புகளை) எய்யும் அறிவு (என்னிடம்) இருக்கிறது; அன்னது பிழையாது-அவ்வறிவு'கெடாது', என இசையா-என்று (தனக்குள்ளே) சொல்லிக்கொண்டு, கை வித்தகம் அதனால் - கையின் சாமர்த்தியத்தால், சில கணை வித்தினன் - சில அம்பு களைத் தூவினன்; அவையும்- அவ்வம்புகளும், மொய் வித்தகன் - பெரிய ஞான உருவினனான இலக்குவனின், தடம் தோளினும் - பரந்த தோள்களிலும், நுதல் சூட்டினும் - நெற்றிப் பட்டத்திலும், மூழ்க - பதிய; ஆல், அசை.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். முதலிரண்டடிகள் இந்திரசித்து தனக்குள்ளே பேசிக் கொண்டவை. கூசுதல் - நாணுதல். சிதைவு - குறைவு. வித்தகம் - அறிவு. வித்துதல் - தூவுதல். மொய்வித்தகன் - இலக்குவன். மொய் - பெருமை; 'மொய் சிதைக்கு மொற்றுமையின்மை' (நான்மணிக். 23) நுதற் சூட்டு - நெற்றிப் பட்டம். சூட்டு, உச்சியும் ஆம். எய்வித்தகம் - தநுர்சாத்திர அறிவு.

பி - ம். 1. முழுதிற்றது; சிதையா, தெளியா.
2. முளவன்னது பிழையோடிவன; வுளவன்னது, உளவின்னது என்னிது பிழையா; பிழையோவென.
3. கணையுய்த்தனனவை.

161

3030 வெய்யோன்மகன் முதலாகிய
விறலோர்மிகு திறலோர்
கையோய்விலர் மலைமாரியி
னிருதக்கடல் கடப்பார்

உய்யாரென வடிவாளிகள்
சதகோடிக ளுய்த்தான்
செய்யோனயல் தனிநின்றதன்
சிறுதாதையைச் செறுத்தான்.

(இவ்வாறாக), வெய்யோன் மகன் முதலாகிய விறலோர் - சூரிய குமாரனான சுக்கிரீவன் முதலிய வெற்றி வீரர்கள், மிகு திறலோர் - மிகுந்த வலிமையுடையராய், கை ஓய்விலர் - கை ஓயாமல், மலை - மலைகளை, மாரியின் - மழையைப் போல, (வீசி), நிருத கடல்-அரக்கராகிய கடலை, கடப்பார் - தாண்டுவாராயினர்; (அவன்), உய்யார் என - (இவர்கள்) உயிர் பிழைக்க மாட்டார்கள் என்று, சத கோடிகள் வடி வாளிகள் - நூறு கோடிக் கணக்கில் கூரிய அம்புகளை, (அவ்விந்திரசித்து), உய்த்தான் - செலுத்தி, செய்யோன் - சிவந்த நிறத்தை உடைய இலக்குவனின், அயல் - பக்கத்திலே, தனி நின்ற - தனியே நின்ற, தன் சிறு தாதையை - தன் சிற்றப்பனான வீடணனை, செறுத்தான் - வெறுத்தான்.

வெய்யோன் மகன் - சூரியன் மகனான சுக்கிரீவன். கடப்பார் உய்யார் என்று கூட்டிப் பொருள் கூறுதலும் ஆம். உய்த்தான் - உய்த்தவன், இந்திரசித்து. செய்யோன் - இலக்குவன்; நிறத்தாலும் தன்மையாலும் செய்யோன் என்க. செறுத்தல் - வெறுத்தல் (திவா.)

பி - ம். 1. மிடலோர்மிகு திறலோர்; விறலோர்மிகு வெகுண்டோர்.
2. மழைமாரியின்.
3. உய்யோரரென; உய்வோரரென, உய்யோரரென.
4. வருகின்றதை சிறுதாதையைச்; சினந்தான்; வெறுத்தான். 163

வேறு

வீடணனை இந்திரசித்து இகழ்தல்

3031. முரட்டடந் தண்டு மேந்தி
மனிதரை முறைமை குன்றப்
பிரட்டரிற் புகழ்ந்து பேதை
யடியரிற் றொழுது பின்சென்

 

நிரட்டுறு முரச மென்ன
விசைத்ததே யிசைக்கின் ருயைப்
புரட்டுவன் தலையை யின்று
பழியென வொழிவன் போலாம்.

(இந்திரசித்து வீடணனை நோக்கி நீ), 'முரண் தடம் தண்டும் ஏந்தி - வலிய அகன்ற தண்டமொன்றைக் கையில் சுமந்து கொண்டு, முறைமை குன்ற - தகுதி குறைய, பிரட்டரின் - நெறியி னின்று வழுவினரைப் போல, மனிதரை புகழ்ந்து - மானிடர் களுக்கு ஏற்றங் கூறி, பேதை அடியரின் - அறிவற்ற அடிமையரைப் போல, தொழுது - வணங்கி, பின் சென்று - அவர்களைப் பின் பற்றி, இரட்டுறும் முரசம் என்ன - மாறிமாறி ஒலிக்கின்ற முரசம் என்னுமாறு, இசைத்ததே இசைக்கின்ருயை - சொன்ன தையே சொல்லிக் கொண்டிருக்கிற உன்னை, தலையை இன்று புரட்டுவன் - தலையை இன்று (வெட்டித்) தரையில் புரளச் செய் வேன்; பழி என ஒழிவன் - 'இது பழி' என்று (நான்) பின் வாங்கு கின்றேன்.

தண்டு தாங்குதல், அதிகாரப் பொறுப்பைப் புலப்படுத்தல் போலாம். தண்டு, தண்டாயுதமும் ஆம். பிரட்டர், பிரஷ்டர் என்ற வட சொல்லின் திரிபு - 'நெறியினின்று வழுவினவர்; 'பிரட்டரைக் காணு கண்' (திருவிசை. திருமாளி. 4, 3). இரட்டுறு முரசம் - மாறிமாறி அடிக்கும் முரசம்; 'ஓர்த் திசைக்கும் பறையே போல் நின்னெஞ்சம்' (கலித். 92, 21); 'ஓர்த்த திசைக்கும் பறை' என்ற பழமொழியும் காண்க. இரட்டுறு முரசம் வீடணனுக்கு. பழியெனவொழிவன் (ஒப்பு); 'யான் பழி மறுக்கின்' பழி என ஒழிவன் - வினைப் பொருளில் அமைந்ததாகவும் கொள்ளலாம். இச் செய்யுளுடன் 3035-ஆம் செய்யுட் கருத்தையும் ஒப்பிடுக. போலாம்; அசைநிலை.

பி - ம். 1. நீசரின் முறைமை கூறி.
2. அடியரிலிரந்து.
3. முரசமென்னு.
4. தலையை யொன்றே; பழியொடு மொழிவன்; பழியென்று மொழி யின் போலாம்.

3032. விழிபட முதல்வ ரெல்லாம்
வெதும்பின ரொதுங்கி வீழ்ந்து
வழிபட வுலக மூன்று
மடிப்பட வந்த தேனும்
அழிபடை தாங்க லாற்று
மாடவ ரியாண்டும் வெஃகாப்
பழிபட வந்த வாழ்வை
யாவரே நயக்கற் பாலார்.

'முதல்வர் எல்லாம் - முதற் றேவர்கள் எனப்பட்ட யாவரும், விழிபட - கண்கள் தம்மீது பட, (அச்சத்தால்) வெதும்பினர் - உள்ளம் வெம்மை யடைந்தவராகி, ஒதுங்கி வீழ்ந்து - வழிவிட்டு ஒதுங்கியும் தரையில் வீழ்ந்தும், வழிபட - வழிபாடு செய்யவும்; உலகம் மூன்றும் - மூன்று உலகங்களும், அடிப்பட - தாழும்படியும், வந்ததேனும் - (இவ்வாறு மிகுந்த ஐசுவரியம்) கிடைத்தாலும், யாண்டும் வெஃகா - எங்கும் விரும்பப்படாத, பழிபட வந்த வாழ்வை - பழியுண்டாகுமாறு கிடைத்த வாழ்வை, அழி படை தாங்கல் ஆற்றும் ஆடவர் யாவர் - தம்மை அழிக்கவரும் படைகளை எதிர்த்துத் தாங்குதலை ஆற்றக்கூடிய ஆண் மக்களுள் எவர், நயக்கல் பாலார் - விரும்புவர்? ஏ: அசை.

ஆடவர் யாவர் வாழ்வை நயக்கல் பாலார் என்றியைக்க. முதலிரண்டடிகளுள் பழியுடன் ஒருவர்க்கு வரக்கூடிய சிறந்த வாழ்வு விளக்கப்பட்டது. மூன்ருமடி வீரத் தன்மை வாய்ந்த ஆடவர் என்பதைக் குறித்தது. வீரர், இணையற்ற பெருஞ் செல்வத்தை விரும்பி, பழிபடும் செயலைச் செய்யார் என்று, வீடணன் இராமனை அண்டியதால் பெருஞ் சிறப்பு கிட்டும் என்றெண்ணிய அவன் செயலை இழித்து கூறியதாம். முதல்வர் - பிரமன், திருமால், சிவபிரான் ஆகிய மூவர் எனலும் ஆம். மூவர் அஞ்சவும் மூவுலகும் அடிப்படவும் கிட்டும் பெருமை வாய்த்தாலும், கோழையர் அல்லாதார் பழிபட வந்த வாழ்வை நயவார் என்றபடி. இச் செய்யுளுக்குப் பிறர் வேறு வகையாகவும் உரை கூறுவர். வீடணன் பழிபட வந்த வாழ்வை நயந்தனன் என்பது. இந்திரசித்து சாட்டிய குற்றமாகும். 'பழிமலைந் தெய்திய வாக்கத்தின் சான்றோர், கழிநல் குரவே தலை, (குறள் 657) என்ற குறட் கருத்து இங்கே தொனிப்பது காண்க. 'உன்னருட்கு இலக்காகு

முத்தேவரென்றும், கண்முன்னே வந்து நிற்பரென்றும் ஆம்; அழிபடை தாங்கலாற்று மாடவர் யாண்டும் வைகார் - யுத்தத்துக்கு உதவுஞ் சேவகர் ஒருவர் இங்கே இருக்கமாட்டார்கள்' என்பன பழையவுரை.

பி - ம். 1. ரொதுங்கி விழ; ரொதுங்க விழ்ந்து.
2. மடிதொழ வந்ததேனும்.
3. யாண்டும் வைகார், யாண்டும் வைக, யாண்டுமாகார்.
4. யாவரோ மயக்கற் பாலார், பகரற் பாலார். 165

3033. நீருள தனையு முள்ள
மீனென நிருத ரெல்லாம்
வேருள தனையும் வீவ
ரிராவண னோடு மீளார்
ஊருள தொருவ னின்றாய்
நீயுளை யுறைய நின்னோடு
ஆருள ரரக்கர் நிற்பா
ரரசுவீற் றிருக்க வையா.

'நீர் உள தனையும் மீன் உள்ள - நீர் இருக்கும் (காலம்) வரையில் மீன்களும் (உயிருடன்) வாழ்கின்றன, என - என்று சொல்லுமாறு, நிருதர் எல்லாம் - அரக்கர்கள் யாவரும், வேர் உள தனையும் - (அரக்கர்களுக்கு) வேர் (ஆன இராவணன்) உள்ளமட்டுமே (உளராவர்); (அப்படிக்கன்றி), இராவணனோடு வீவர் - இராவணன் அழிவதோடு (அவர்களும்) அழிவர்; மீளார் - (அவனுக்குப் பிறகு) உயிருடன் நிற்க மாட்டார்கள்; (அவ்வாறிருக்க), ஐயா - ஐயனே! ஊர் உளது - இலங்கை நகரம் இருக்கிறது; உறைய நீ உளை - அங்கு வசிக்க நீ இருக்கின்றாய்; அரசு வீற்றிருக்க - நீ அரசாள, ஒருவன் நின்றாய் - தனியான நீ மட்டும் எஞ்சி (உயிருடன்) நின்றாய்; நின்னோடு நிற்பார் அரக்கர் ஆர் உளர் - உன்னோடு நிற்பவரான அரக்கர் எவர் இருக்கின்றார்?

இச் செய்யுளில், இராவணன் தோற்று வீடணன் அரசாள நேரிட்டாலும், அரக்கர் யாவரும் அழிந்து விடுவாராதலால், இவனுக்கு அரசாட்சி புரிய நிருதர் இருக்கமாட்டார்' என்று

இந்திரசித்து கூறினன். இங்குத் தயரதன் கைகேசிக்குக் கூறிய 'வானோர் கொள்ளார் மண்ணவ ருய்யாரினி மற்றென், ஏனோர் செய்கை யாரொடு நீயிவ் வரசாள்வாய்' (அயோத்தி. கைகேசி சூழ்வினைப். 27) என்ற செய்யுள் நினைவுக்கு வரலாகும். 'நீருள தனையும் மீனுளது' ஒரு பழமொழி.

பி - ம். 1. நீருள தனையேயுள்ள, மீனினம்.

2. தனையும் வீய.

3. யுறைவ வுன்னோடு ; யுறையு நின்னோடு.

4. ஆருனராகி. 166

3034. முந்தைநா ளுலகந் தந்த
மூத்தவா னோர்கட் கெல்லாம்
தந்தையார் தந்தை யாரைச்
செருவிடைச் சாயத் தள்ளிக்
கந்தனார் தந்தை யாரைக்
கயிலையோ டொருகைக் கொண்ட
எந்தையா ரரசு செய்வ
திப்பெரும் பலங்கொண் டேயோ.

'முந்தைநாள் - முற்காலத்தில், உலகம் தந்த - உலகங்களைப் படைத்த, மூத்த - பிராயத்தில் முதிர்ந்த, வானோர்கட்கு எல்லாம் - தேவர்களுக்கு எல்லாம், தந்தையார் - தந்தையான நான்முகனின், தந்தையாரை - தந்தையான திருமாலை, செருவிடை - போரிலே, சாய தள்ளி - தோற்குமாறு முறியடித்து, கந்தனார் தந்தையாரை - முருகக் கடவுளின் தந்தையாரான சிவபெருமானை, கயிலையோடு ஒரு கை கொண்ட - (அவர் வீற்றிருக்கும்) கயிலை மலையுடன் ஒரு கையிலே தூக்கின, எந்தையார் - என் தந்தையான இராவணனார், அரசு செய்வது - இப்பொழுது (உலகங்களை) ஆட்சி புரிவது, இ பெரும் பலம் கொண்டேயோ - (நீ கொண்டுள்ள) இந்த மானிடர் வலிமைத் துணை கொண்டா? (இல்லையே!) என்றபடி.

உலகந்தந்த தந்தையார் - திருமால். இராவணன் திருமாலை வென்ற வரலாறு நூல்களில் இடம் பெறவில்லை ; எனினும், 'முழுவா னவரா யுலகமொரு மூன்றுங் காக்கு முதற்

றேவர், மழுவா ணேமி குலிசத்தின் வாய்மை துடைத்த வலி யானை' என்ற (சுந்தர. 311) பகுதியால் அவன் திருமாலின்மீது வெற்றி கொண்டமை தெரியவரும். கயிலையை இராவணன் எடுத்தமை, உத்தரகாண்டம், வரையெடுத்த படலத்தால் அறியலாம்.

பி-ம். 1. மூர்த்தி வானோர்; முழுமுத லிமையோர்க் கெல்லாம்.
4. பெரும்பயங் கொண்டேயோ. 167

3035. பனிமலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பனக் குலத்துக் கெல்லாம்
தனிமுதல் தலைவ னான
வுன்னைவந் தமரர் தாழ்வார்
மனிதருக் கடிமை யாய்நீ
யிராவணன் செல்வ மாள்வாய்
இனியுனக் கென்னோ மான
மெங்களோ டடங்கிற் றன்றே.

'(நீ எங்கள்பால் இருந்திருப்பாயானால்), பனி மலர் தவிசின் மேலோன் - குளிர்ந்த தாமரை மலர் ஆசனத்தின் மீதுள்ள நான் முகனின், பார்ப்பன குலத்துக்கு எல்லாம் - அந்தணர் குலத்துக்கு எல்லாம், தனி முதல் தலைவனான உன்னை - ஒப்பற்ற மூலத் தலைவனான உன்னை, அமரர் வந்து தாழ்வார் - தேவர்கள் வந்து வணங்குவர்; (அப்படியிருக்க), நீ - நீ, மனிதருக்கு அடிமையாய் - மனிதர்களுக்கு அடியவனாய், இராவணன் செல்வம் ஆள்வாய் - இராவணனுக்குரிய அரசச் செல்வத்தை ஆளப் போகின்றாய்; இனி உனக்கு மானம் என்னோ - (இவ்வாறாக) இனி உனக்கு மானம் உண்டென்பது ஏதோ? எங்களோடு அடங்கிற்று- (அந்த எம் குலத்துக்குரிய மானம்) எங்களோடு ஒடுங்கி விட்டது; அன்றே - அல்லவா?

வீடணன் நான்முகன் வமிசத்தினனாதலினும், அவ்வமிசத் தலைவனாக அவன் இருத்தலானும் அவனைப் 'பார்ப்பனக் குலத்துக் கெல்லாம் தனிமுதல் தலைவன்' என்றனன். அமரர் நான் முகனுக்குப் படிந்தவர் ஆதலால், அவர் வீடணனுக்குப் படிவர் என்றமை பொருந்தும். 163 ஆம் செய்யுள் முதல் இந்திரசித்து, இராவணன் அழிவையும் வீடணன் அரசியல் செய்வதையும் முன்

கூட்டி அமங்கலமாகப் பேசி வருவது காணத்தக்கது. மானம் - 'எஞ்ஞான்றும் தந்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும்' (குறள். அத். 97. பரி. உரை.)

பி - ம். 1. தவிசின் மேலான்.

2. தலைவனுறய்.

3. கடிமை செய்வா யிராவணன்; கடிமையானுய்; கடிமையாவாய்; செல்வமான.

4. இனிதுளதென்னமெந்தாய்; இனிதுனக்கு, இனிதுநின்; மெங்களோ டென்ன மெந்தாய்; அடங்கிற்றென்ருல், டடங்கிற்றன்ருல். 188

3036. சொல்வித்தும் பழித்து நுங்கை
மூக்கினைத் துணித்தோ ராலே
வெல்வித்தும் படைக்கை யுங்க
டமையனை யெங்க ளோடும்
கொல்வித்துந் தோற்று நின்ற
கூற்றினர் குலத்தை யெல்லாம்
வெல்வித்தும் வாழும் வாழ்வின்
வெறுமையே விழுமி தன்றே.

நுங்கை மூக்கினை துணித்தோராலே - உன் தங்கை மூக்கைத் துண்டித்தவர்களாலே, சொல்வித்தும் பழித்தும் வெல்வித்தும் - (எம்மீது) கொடுஞ் சொற்களைச் சொல்லச் செய்தும், பழிமொழி களைப் பேசச் செய்தும், வெற்றிகொள்ளச் செய்தும், உங்கள் படைக்கை தமையனை - ஆயுதங்களைக் கையிலேந்திய உங்கள் தமையனுன கும்பகருணனை, எங்களோடும் கொல்வித்தும் - எம்மைச் சேர்ந்தாரோடும் கொலையுண்ணச் செய்தும், தோற்று நின்ற கூற்றினர் குலத்தை எல்லாம் - (அரக்கராகிய எமக்குத்) தோற்று நின்ற இயமனைச் சேர்ந்தோர் யாவரையும், வெல்வித்தும் - எம்மை வெல்ல உதவியும், வாழும் வாழ்வின் - (இவ்வாறு செய்வ தால் பெற்று) வாழும் வாழ்வைக் காட்டிலும், வெறுமையே விழுமி தன்றே - வறுமையே சிறந்ததன்ருே?

பகைவர்களால் உறவினரைக் கொன்று பெறும் செல்வத் தினும் வறுமையே சிறந்தது என்று இந்திரசித்து வீடண

னிடம் இடித்துக் கூறுகின்ருன். தோற்று நின்ற கூற்றினர்; (உத்தர. திக்கு விஜயம். 71, 77) வெறுமை - வறுமை; வெறுமையிடத்தும்......மறுமை மனத்தாரேயாகி' (நாலடி. 329.)

பி - ம். 1. பழிதந்துங்கை; துணித்துப்போக்கி; துணிவித்தோர், துணிந்தோரால்.

2. எல்வித்தும், எங்களோடு.

3. கொல்வித்து; கூற்றனுர், கூற்றனேர்.

4. பெருமையே விழுமிதன்றே, வறுமையே, விழுமிதன்றே. 169

3037. எழுதியே ரணிந்த திண்டோ
ளிராவண னிராம னம்பால்
புழுதியே பாய லாகப்
புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்
தழுதியோ நீயுங் கூட
வார்த்தியோ யவனை வாழ்த்தித்
தொழுதியோ வென்னே செய்யத்
துணிந்தனை விசயத் தோளாய்.

'விசய தோளாய் - வெற்றி மிக்க தோளையுடையோனே! எழுதி ஏர் அணிந்த - சித்திரங்களை எழுதி அழகு பெற்ற, திண் தோள் இராவணன் - வலிய தோள்களையுடைய இராவணன், இராமன் அம்பால் - இராமனுடைய அம்பினலே, (அடிபட்டு) புழுதியே பாயலாக புரண்ட நாள் - புழுதியே (தான் படுக்கும்) பாயாக (அதனில் வீழ்ந்து) புரளும் அன்று, மேல் வீழ்ந்து புரண்டு அழுதியோ - அவன் உடல்மீது (நீயும் விழுந்து) புரண்டு அழுவாயோ? நீயும் கூட ஆர்த்தியோ - நீயும் அவனேடு கூச்சலிடுவாயோ? அவனை வாழ்த்தி தொழுதியோ - அன்றி (உன் தமையனைக் கொன்ற அந்த) இராமனை வாழ்த்தி வணங்குவாயோ? என்னே செய்ய துணிந்தனை - எதனைச் செய்ய நிச்சயித்துள்ளாய்?

விசய தோளாய் என்றது இகழ்ந்து கூறியது. ஆடவர் தோளில் எழுதுவதுண்டு என்பதற்கு மேற்கோள். நீயுங்கூட

ஆர்த்தியோ, என்பதற்கு வானரரோடு நீயும் மகிழ்ந்து கூறுவாயோ என்றும் பொருள் கொள்ளலாம். அவனை - இராமபிரானை, இச் செய்யுளிலும் இராவணன் இறப்பதான அமங்கலக் கருத்து கூறப் படுவது காண்க.

பி - ம். 2. பாயலாகிப்.

3. இவனை வாழ்த்திப்.

4. யாதோ செய்யத் துணிந்தது; யந்தோ செய்யத், யன்று செய்யத், யன்றே செய்ய. 170

3038. ஊனுடை யுடம்பி னீங்கி
மருந்தினு லுயிர்வந் தெய்தும்
மானிட ரிலங்கை வேந்தைக்
கொல்வரே நீயு மன்னுன்
தானுடைச் செல்வந் துய்க்கத்
தகுதியே சரத்தி னேடும்
வானிடைப் புகுதி யன்றே
யான்பழி மறக்கி லேனுல்.

'(இன்னும்), யான் பழி மறக்கிலேன் - யான் உன்னுல் குலத் திற்கு உண்டான பழியை மறக்காதவனுயிருக்கின்றேன்; (அவ் வாறிருக்க), ஊன் உடை உடம்பின் உயிர் நீங்கி - மாமிசமுடைய உடம்பினின்று உயிர் போகி, மருந்தினுல் வந்து எய்தும் - சஞ்சீவி யினுல் அதனைத் திரும்ப அடையும், மானிடர் - மனிதர்கள், இலங்கை வேந்தை கொல்வரே - இலங்கை மன்னரான என் தந்தையைக் கொல்லக் கூடியவராவரோ? அன்னுன் தான் உடை - அந்த இராவணனுடைய, செல்வம் துய்க்க - செல்வத்தை நுகர, நீயும் தகுதியே - நீயும் தகுதி உடையவன் ஆவாயோ? சரத்தி னேடும் - யான் உன் உடலிற் புகுத்தும் அம்புடனே, வான் இடை புகுதி அன்றே - வானத்திலே புகுவாய்' அல்லவா? என்ருன் - என்று கூறினுன். ஆல்: அசை.

இதுகாறும் இந்திரசித்து வீடணனை இகழ்ந்து கூறி, இச் செய்யுளில் அவன் இராவணனை இராமலக்குவர் இறக்கச் செய்வர் என்றும், தான் இலங்கையை ஆளலாமென்றும் கருதியவை கைகூடாவென்றும், அவனைத் தான் கொல்வது திண்ணம் என்றும் கூறுகின்ருன். 'யான் பழி மறக்கிலேன' என்றமை

யால் 'பழி தீர்ப்பது தன் கருத்து' என்பதை அவன் உறுதிப் படுத்தினுன் என்க. ஏகாரம் ஈரிடங்களிலும் தேற்றப் பொருளில் வந்தன. மானிடர் எளிதில் இறப்பெய்துவர் என்பதையும், மருந் தின் உதவியால் இழந்த உயிரைப் பெறும் எளிமை வாய்ந்தவர் என்றும் இகழ்ந்தவாறு. வானிடைப் புகுதல், இறத்தல் ; மங்கல வழக்கு.

பி - ம். 1. உடம்பு, நீங்கி; நிக்கி; மருந்தின்; மருந்தினின்; உயிர் பெற்றுய்யும்.

2. நீயு மன்னேன்.

3. தகுதியோ.

4. படுதியன்றே ; மறுக்கிலென்றுன் ; மறுக்கினென்ன. 171

## வீடணன் கூற்று

3039. அவ்வுரை யமையக் கேட்ட
வீடண னலங்கல் மௌலி
செவ்விதில் துளக்கித் தன்பால்
முறுவலுந் தெரிவ தாக்கி
வெவ்விது பாவஞ் சாலத்
தருமமே விழுமி தைய
இவ்வுரை கேட்டி யென்று
வினையன விளம்ப லுற்றுன்.

அ உரை - (இந்திரசித்து கூறிய) உரைகளை, அமைய கேட்ட- உள்ளத்தில் பதியுமாறு கேட்ட, வீடணன் - வீடணன், அலங்கல் மௌலி செவ்விதில் துளக்கி - மாலை சூடிய தன் தலைமுடியை நன்ருக அசைத்து, தன்பால் முறுவலும் தெரிவது ஆக்கி - தன் னிடம் புன்னகையும் விளங்கச்செய்து, 'ஐய - ஐயனே ! பாவம் வெவ்விது - பாவம் கொடியது ; தருமமே சால விழுமிது - அறமே மிகவும் சிறந்தது ; இ உரை கேட்டி - யான் கூறும் இச் சொற் களைக் கேட்பாயாக' என்று - என்று கூறி, இனையன - இப்படிப் பட்ட சொற்களை, விளம்பல் உற்றுன் - சொல்லலானுன்.

இது முதல் 174 ஆம் செய்யுள் முடிய வீடணன் இந்திர சித்துக் கூறிய அறிவுரைகள். அமையக் கேட்டல் - மனத்திற்

பொருந்துமாறு கேட்டல். மௌலி - கிரீடம்; இங்கு ஆகு பெயராய் அவன் முடியைச் சுட்டியது. துளக்கல் - அசைத்தல்; 'திருமுடி துளக்கி நோக்கி' (சீவக. 1881); 'தலை சாய்த்தது' என்று இதற்கு நச்சினார்க்கினியர் உரை கூறுவர். முறுவலும் தெரிவதாக்கியது. வீடணன் தன் சாந்தநிலையை விளக்கியதாம். பாவம், தருமம் இவற்றின் தன்மைகள் மேலே விரித்து கூறப் பெறுவன காண்க.

பி - ம். 2. செவ்வித் துளக்கி; மூரன் முறுவலுந், வீர முறுவலுந்.

3. விழுமிதம்மா.

4. பகரலுற்றான். 172

3040. அறந்துணை யாவ தல்லா
லருநர கமைய நல்கும்
மறந்துணை யாக மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்
துறந்திலேன் மெய்ம்மை யேதும்
பொய்ம்மையே துறப்ப தல்லால்
பிறந்திலே னிலங்கை வேந்தன்
பின்னவன் பிழைத்த போதே.

'(யான்), அறம் துணை ஆவது அல்லால் - தருமமே (எனக்குத்) துணையாகக் கொள்வது அல்லாமல், அரு நரகு அமைய நல்கும் - அருமையான நரகத்தை (எனக்கு நன்றாகப்) பொருந்துமாறு அமைக்கும், மறம் - பாவத்தை, துணை ஆக - துணையாகக் கொண்டு, மாயா பழியொடும் - என்றும் அழியாத பழியோடும், வாழ மாட்டேன் - நான் உயிர்வாழ விரும்பமாட்டேன்; பொய்மையே துறப்பது அல்லால் - பொய்யையே நான் நீக்குவதன்றி, மெய்மை ஏதும் துறந்திலேன் - உண்மை எதனையும் நான் விட்டவனல்லேன; இலங்கை வேந்தன் பிழைத்த போது - இலங்கைக்கு அரசனான இராவணன் (பிறன் மனைவியை விரும்புதலாகிய) பிழையைச் செய்தபோது, 'பின்னவன் - அவன் தம்பியாகிய யான், பிறந்திலேன் - அவ்வாறான பிறப்பை எடுக்காதவனானேன். ஏ : அசை.

இராவணன் பிழை செய்யாத மட்டும் அவன் தம்பியாயிருந்து, பிழை செய்தபின் தான் தம்பியல்லன் என்று வீடணன் கூறினான்

என்க. 'இன்றொடுந் தவிர்ந்ததன்றே யுடன் பிறப்பென்பது' (யுத்த. 1371) என்று கும்பகருணன் வீடணனை நோக்கிக் கூறுதலையும் கண்டு, உடன் பிறப்பு என்பது உடலைப் பற்றியதாக ஆகாமை உணர்க.

பி-ம். 1. யிகவல்லால்; நரகமே யமையதாக்கும்; தமையநல்க.

2. மாருப் பழியொடும்.

3. துறந்திலன் மெய்ம்மை; பொய்ம்மை நும்மதே மெய்ம்மை யெய்தும்.

4. பிறந்தில விலங்கை; பின்னவன் இறந்தபோதே. 173

3041. உண்டில னறவம் பொய்ம்மை
யுரைத்திலன் வலியா லொன்றும்
கொண்டிலன் மாய வஞ்சங்
குறித்தில னியாருங் குற்றம்
கண்டில ரென்பா லுண்டே
நீயிருங் காண்டி ரன்றே
பெண்டிரிற் றிறம்பி னுரைத்
துறந்தது பிழையிற் றுமோ.

'(யான்), நறவம் உண்டிலன் - கள் அருந்திேனனில்லை; பொய்மை உரைத்திலன் - பொய் உரைத்தேனில்லை; வலியால் ஒன்றும் கொண்டிலன் - வலிந்து எதையும் கவர்ந்து கொண்டதில்லை; மாய வஞ்சம் குறித்திலன் - மாயத் தன்மையோடு கூடிய வஞ்சனைச் செயல்களைக் கருதினேனில்லை; என்பால் யாரும் குற்றம் கண்டிலர் - என்னிடம் எவரும் பிழை கண்டிலர்; உண்டே - கண்டவர் உண்டோ? நீயிரும் காண்டிர் அன்றே - நீங்களும் இதன் உண்மையைக் கண்டிருக்கிறீர்கள் அல்லவோ! (இவ்வாறிருக்க), பெண்டிரின் - பெண்பாலரின் பொருட்டு, திறம்பினுரை - மாறுபட்டவரை, துறந்தது - விட்டு நீங்கியது, பிழையிற்று ஆமோ - தப்பாக ஆகுமோ?

'நிந்தனை நறவமு நெறியி லூன்களும், தந்தன கண்டிலென் றரும தானமும், வந்தனை நீதியும் பிறவு மாண்பமைந், தந்தண

ரில்லெனப் பொலிந்த தாம்ரோ' என்று (யுத்த. 403) மாருதி வீடணனின் தூய வாழ்க்கையைக் குறித்துக் கூறியதை நினைக்க. திறம்புதல் - மாறுபடுதல்; (அயோத். மந்தரை சூழ். 66) பெண்டிரிற் றிறம்பினுர் - இராவணன்.

பி - ம். 1. பொய்ம்மை யுணர்ந்திலன்.

2. யாதுங் குற்றம், எவருங் குற்றம்.

4. றிறம்பிறுனே; பிழையிற்றுமே. 174

3042. மூவகை யுலகு மேத்து
முதலவ னெவர்க்கு மூத்த
தேவர்தந் தேவன் றேவி
கற்பினிற் சிறந்து ளாளை
நோவன செய்தல் தீதென்
றுரைப்பநுன் ருதை சீறிப்
போவென வுரைக்கப் போந்தே
னரகதிற் பொருந்து வேனே.

'மூவகை உலகும் - மேல், நடு, கீழ் என்ற மூன்று வகைப்பட்ட உலகங்களில் உள்ள யாவரும், ஏத்தும் - புகழும், முதலவன் - முதற் கடவுளும், எவர்க்கும் மூத்த - யாவரினும் மேம்பட்ட, தேவர்தம் தேவன் - தேவர்களின் தேவனுன இராமபிரானின், தேவி - மனைவியும், கற்பினில் சிறந்துளாளை - கற்பினில் மேம்பட்டவளுமான (பிராட்டியை), நோவன செய்தல் - துன்புறுத்தல், தீது என்று உரைப்ப - 'கொடியது' என்று நான் சொல்ல, நுன் தாதை - உன் தந்தையான இராவணன், சீறி - மிகவும் சினந்து, 'போ என உரைக்க - என் முன்னின்று போவாயாக' என்று சொல்ல, போந்தேன் - யான் வெளியேறினேன்; நரகு அதில் பொருந்துவேனே - நான் நரகத்தைச் சேர்வேனே?'

இராவணன் வீடணனைப் போவென உரைத்தது; 'விழி யெதிர் நிற்றியேல் விளிதி என்றனன்' (யுத்த. 314). வீடணன்

இராமபிரானின் பரத்துவத்தை இங்கு இந்திரசித்தினிடமும் கூறுகின்றான்.

பி - ம். 1. யுலக மேத்து; யுலகந்தந்த முதல்வனே; முதல்வனே யெவர்க்கு மூந்த.

2. காவலன் றேவி யன்றே; கற்பினிற் பிறந்துளானை.

3. நோவது செய்தல்; நுந்தை சிறிப்.

4. போந்தேனென்று நரகத்தை பொருந்துவேனே; பொருந்தேனின்று

3043. வெம்மையிற் றரும நோக்கா வேட்டதே வேட்டு வீயும்
உம்மையே புகழும் பூண துறக்கமு முமக்கே யாக
செம்மையிற் பொருந்தி மேலோ ரொழுக்கினோ டறத்தைத் [தேறும்
எம்மையே பழியும் பூண நரகமு மெமக்கே யாக.

'வெம்மையில் - நுங்கள் கொடுமைத் தன்மையினாலே, தரும நோக்கா - அறத்தைக் கவனியாது, வேட்டதே வேட்டு - விரும்பியதையே விரும்பி, வீயும் - அழியும், உம்மையே - நும்மையே, புகழும் பூண - புகழும் வந்து சார்வதாகுக; துறக்கமும் உமக்கே ஆக - வீட்டு நிலையும் நுமக்கே அமைவதாகுக; செம்மையின் பொருந்தி - செம்மைக் குணத்தைப் பூண்டு, மேலோர் ஒழுக்கினோடு - சான்றோரின் ஒழுக்கத்தையும், அறத்தை - தருமத்தையும், தேறும் - நம்பும், எம்மையே - எங்களையே, பழியும் பூண - பழிச் சொல்லும் பொருந்துவதாகுக; எமக்கே நரகமும் ஆக - எங்களுக்கே நரகமும் அமைவது ஆகுக.

'நரகத்தைப் பொருந்துவேனோ?' என்று முன் செய்யுளில் கூறி, இவ்வடுத்த செய்யுளில் 'எமக்கே நரகமும் ஆக' என்று கூறுவதை நோக்கும்போது வீடணனுடைய மனநிலை நமக்குத் தெற்றென விளங்கும். 'அறம் துணையாயே நிற்பேன்; மறம் துணையாக நிற்கமாட்டேன்; நான் நரகை அடையேன்; பழியையும் பெறேன்' என்று வீடணன் திடமாக நம்பியிருந்தும், அரக்கர் உலகம் இந்திரசித்தின் வாயிலாகத் தன்னைப் பழிப்பது கேட்டுத் துறக்கம் நுமக்கும், நரகம் எனக்கும் அமையுமாயினும், நான் கொண்ட நிலையினின்று மாறேன்' என்று காட்ட இவ்வாறு கூறினன் என்க. அல்லது, முழுமையும் பிறிது கூறலாக

அமைத்தனன் எனினும் ஆம். அடுத்த செய்யுளைக் காண்க. 'வேட்டதே வேட்டு' என்றதால் இராவணனின் பிடிவாத குணம் சுட்டப்பெற்றது. தேறுதல்-நம்புதல்; 'தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்விதன்றால்' (கிட்கிந்தா. 268); தெளிதலும் ஆம்.

பி-ம். 1. மெய்மையில் தருமம் நோக்கீர்; வேட்டு விழும்.
2. அம்மையே; புகழும் பூண்க; சுவர்க்கமு முமக்கேயாக.
4. பழியும் பூண்க; நரகமே லெமக்காக, 176

3044. அறத்தினைப் பாவம் வெல்லா தென்னுமஃ தறிந்து நானே
திறத்தினு முறுமென் றெண்ணித் தேவர்க்குந் தேவைச் [சேர்ந்தேன்
புறத்தினிற் புகழே யாக பழியொடும் புணர்க போதச்
சிறப்பினிப் பெறுக தீர்க வென்றனன் சீற்ற மில்லான்.

சீற்றம் இல்லான் - கோபமில்லாதவனாகிய வீடணன், 'அறத்தினை பாவம் வெல்லாது - தருமத்தைப் பாவம் வெல்லாது', என்னும் அஃது அறிந்து - என்னும் அந்த உண்மையைத் தெரிந்து கொண்டு, திறத்தினும் உறும் என்று எண்ணி - நேர்மையோடும் பொருந்தும் என்று எண்ணி, தேவர்க்கும் தேவை - தேவர்களுக்குத் தேவனான இராமபிரானை, நானே சேர்ந்தேன் - நானாகவே வந்து அடைந்தேன்; (இவ்வாறு செய்தது), புறத்தினில்-உலகில், புகழே ஆக - புகழாகவே முடியட்டும்; பழியொடும் புணர்க - பழியோடும் சேர்க; இனி போத சிறப்பு பெறுக - இனி (எனக்கு) மிகச் சிறந்த நிலை அமைக; (அன்றி) தீர்க - அழிக' என்றனன் - என்று கூறினான்.

இறுதியாக, இச் செய்யுளில் தானாகவே தேர்ந்து செய்த இச் செயலால் விளைவது யாதாயினும் ஆகுக என்று கூறினான் என்க. 'வெல்வதும் பாவம் வெல்லாது'; ஆரணிய. 937; கிட்கிந்தா 720; சுந்தர. 405; திறம் - நேர்மை 'திறத்துழி யன்றி வஞ்சித் தெய்துதல்' ஆரணிய. 760.

பி-ம். 1. என்பதையறிந்து; தறிந்துஞானத்; தறிந்துயானே; தானே.
2. திறத்தினதுறும்; தேவர்க்குத் தேவைச்.
3. புறத்தினிப் புகழே; புணர்க போகச்; புணரப் போதக்.
4. சிறப்பினைப் பெறுக; பெறுக பெறுக வென்றனன் சிற்றந்தீர்ந்தான்; தீர்க்க, பெறுக போக; தக்காய்; சீற்றந்தீர்ந்தான். 177

## இந்திரசித்துக்கும் வீடணனுக்கும் போர்

3045. பெறுஞ்சிறப் பெல்லா மென்கைப்
 பிறைமுகப் ப்கழி பெற்றால்
இறுஞ்சிறப் பல்லா லப்பா
 லெங்கினிப் போவ தென்னுத்
தெறுஞ்சிறைக் கலுழ னன்ன
 வொருகணை தெரிந்து செம்பொன்
உறுஞ்சுடர்க் கழுத்தை நோக்கி
 நூக்கினு னுருமின் வெய்யோன்

(இவ்வாறு வீடணன் கூற), உருமின் வெய்யோன் - இடியை விடக் கொடியவனுன இந்திரசித்து, (வீடணனை நோக்கி), 'பெறும் சிறப்பு எல்லாம் - நீ அடையும் மேன்மைகள் யாவும், என் கை - என் கையிலிருந்து புறப்படும், பிறைமுக பகழி - பிறைச் சந்திரனைப் போன்ற (வடிவுள்ள) அம்பேயாகும்; பெற்றால் - அதனை நீ அடைந்தால், சிறப்பு இறும் - (உன்) சிறப்புக்கள் (எல்லாம்) அழியும், அல்லால் - (அவ்வாறு) அழிவதல்லால், இனி அப்பால் எங்கு போவது - இனி அப்பால் எங்குத் தப்பிப் போகக் கூடும்? என்னு - என்று சொல்லி, செம் பொன் உறும் சுடர் கழுத்தை நோக்கி - (வீடணனின்) செம்பொன்னை ஒத்த ஒளி வீசும் கழுத்தைக் குறித்து, தெறும் - சுடும், சிறை கலுழன் அன்ன - சிறகுகளையுடைய கருடன் போன்ற, ஒரு கணை - ஓர் அம்பை, தெரிந்து நூக்கினுன் - ஆராய்ந்து தூண்டினுன்.

மறச் செய்கையையுடைய இராவணனை விட்டு, அறச் செய்கையுடைய இராமபிரானை அடைந்தால் தனக்குச் சிறப் புண்டாகும் என்று கூறிய வீடணனை நோக்கி, 'என் கை அம்பால் இறப்பதே நீ அடையலாகும் சிறப்பு' என்று இகழ்ந்து கூறினன் இந்திரசித்து என்க. பிறைமுகப் பகழி - அர்த்த சந்திர பாணம் என்பது; இது பிறைத்தலையம்பு எனவும் படும்; 'பிறைத் தலையம்பிற் சென்னி பெருநிலத் திடுவல்' (சீவக. 1142); 'தெறு தல்-கொல்லுதலுமாம்; 'நீங்கிற் றெறூஉம்' (குறள். 1104); 'முள்ளி னெய்தெற விழுக்கிய' (மலைபடு. 501); கணைக்குக் கருடன்,

கழுத்துக்குப் பொன், அழகுக்கும் ஒளிக்கும் ஆம். நூக்குதல் - தூண்டுதல்; 'நூறுவாயென மாதலி நூக்கினன்' (இராவணன் வதைப். 174); எறிதலும் ஆம்; 'கைப்படையை நூக்கி' (தொல். பொ. 72. உரை).

பி - ம் 1. வாளியென்றால்.

2. இறுஞ் சிறப்பில்லையைய, சிறப்பல்லவப்பால்; போவை யென்னு; பெறுவதென்னுத்.

3. தொடுத்துச் செம்பொன்; தெறுகணை தெரிந்து.

4. அசனியொப்பான்; வெய்யான். 177

3046. அக்கணை யசனி யென்ன
வனலென்ன வால முண்ட
முக்கணன் சூல மென்ன
முடுகிய திறத்தை நோக்கி
இக்கணத் திற்று னிற்று
னென்கின்ற விமையோர் காணக்
கைக்கணை யொன்றால் வள்ள
லக்கணை கண்டங் கண்டான்.

அக்கணை - (இந்திரசித்து எய்த) அந்த அம்பு, அசனி என்ன - இடி என்னுமாறும், அனல் என்ன - நெருப்பு என்னுமாறும், ஆலம் உண்ட முக்கணன் சூலம் என்ன - விடத்தை உண்ட மூன்று கண்களையுடைய சிவபெருமானின் சூலம் என்னுமாறும், முடுகிய திறத்தை நோக்கி - விரைந்து வந்த தன்மையைப் பார்த்து, 'இ கணத்தில் தான் - இந்த கணத்திலேயே, இற்றான் (வீடணன்) - இறந்தான்' என்கின்ற - என்று கூறுகின்ற, இமையோர் - தேவர்கள், காண - கண்ணால் பார்க்குமாறு, வள்ளல் - வரையாது அளிக்கும் வள்ளலான இலக்குவன், கை கணை ஒன்றால் - தன் கை அம்பு ஒன்றினால், அ கணை - (இந்திரசித்து நூக்கிய) அந்த அம்புகளை, கண்டம் கண்டான் - துண்டமாக்கினான்.

பி - ம். 1. யசனியென்ன வன்றெனா ; அன்றவ னுல.

2. முடுகிய முடிவை.

3. இக்கண மிற்றன ; னென்கின்ற விடையே பெய்தான் ; என்பதன் னிடையே யின்டு பெய்தான்.

4. வள்ளலதனைக் கண்டங்கள் கண்டான் ; வள்ளல் கணைகளைக் ; ஐயனக்கணை. 178

3047. கோலொன்று துணித லோடுங்
கூற்றுக்குங் கூற்ற மன்னன்
வேலொன்று வாங்கி விட்டான்
வெயிலொன்று விழுவ தென்ன
நாலொன்று மூன்று மான
புவனங்கள் நடுங்க லோடும்
நூலொன்று வரிவி லானு
மதனையும் நுறுக்கி வீழ்த்தான்.

ஒன்று கோல் - ஒப்பற்ற (தன்) அம்பு, துணிதலோடும் - துணிபட்டபோது, கூற்றுக்கும் கூற்றம் அன்னான் - இயமனுக்கும் இயமனான இந்திரசித்து, வேல் ஒன்று - ஒரு வேலை, வாங்கி - எடுத்து, விட்டான் - வீடணன் மீது வீசினன் ; (அது) வெயில் ஒன்று - ஒரு சூரியன், விழுவது என்ன - விழுவதுபோல, (விழக் கண்ட), நால் ஒன்றும் மூன்றும் ஆன புவனங்கள் - ஏழு உலகங் களும், நடுங்கலோடும் - நடுநடுங்கவும், நூல் ஒன்று - தனுர் சாத் திரத்தோடு பொருந்திய, வரி - கட்டுக்கள் அமைந்த, விலானும் - வில்லை உடைய இலக்குவனும், அதனையும் - அந்த வேலையும், நுறுக்கி - பொடியாக்கி, வீழ்த்தான் - கீழே தள்ளினன்.

கோல் - அம்பு ; கிட்கிந்தா. 288 ; சுந்தர. 173, 758, 1178. துணிதல் - அறுதல். கூற்றுக்குங் கூற்றமன்னன் ; இங்கு, இந்திரசித்து. வெயில் - சூரியன் ; 'வெயிலிள் நிலவேபோல் விரி கதிரிடை வீச' (அயோத். வனம்புகு. 2 ;) ஏழு புவனங்கள் ; மேலுலகம் ஏழு, கீழுலகம் ஏழு என்பன. மேலுலகங்கள்; பூ, புவர், சுவர், ஜன, தப, மகா, சத்திய உலகங்கள் என்பன. கீழ் உலகங்கள்; அதல, விதல, சுதல, தராதல, இராசதல, மகாதல, பாதள உலகங்கள் என்பர். நூல் - தநுர் வேதம் ; நூலொன்று விலான் ;

'நூலேந்த கேள்வி' (சுந்தர. 42) என்பதுபோல. நுறுக்குதல் - பொடியாக்குதல்; (யுத்த. 2482).

பி - ம். 1. துணிதல் முன்னே ; துணித்தலோடும் ; கூற்றமன்ன, கூற்றமென்ன.

2. விழுந்ததென்னே, விழ்வதென்ன.

4. வரிவில் வல்லா னதனையும் ; நூலொன்று விதிவலானும். 179

## வீடணன் இந்திரசித்தின் தேரின் சாரதியையழித்தல்

3048. வேல்கொடு நம்மே லெய்தா
னென்றொரு வெகுளி பொங்கக்
கால்கொடு காலிற் கூடிக்
கைதொடர் கனகத் தண்டால்
கோல்கொளு மொருவ னோடுங்
கொடித்தடந் தேரிற் பூண்ட
பால்கொளும் புரவி யெல்லாம்
படுத்தினன் படியின் மேலே.

'நம்மை வேல்கொடு எய்தான் - நம்மீது (இவன்) வேல் கொண்டு வீசினன்', என்ற ஒரு வெகுளி பொங்க - என்ற ஒரு சினம் பொங்கியெழ (வீடணன்), கால்கொடு - காலினால், காலின் - காற்றுப்போல, கூடி - அவனை நெருங்கி, கை தொடர் கனக தண்டால் - கையில் பிடித்த பொன்னாலான தண்டாயுதத்தால், கொடி தடம் தேரில் - கொடிகட்டிய அகன்ற தேரினில், கோல் கொளும் ஒருவனோடும் - (கையில்) குதிரைச் சம்மட்டி பிடித்திருக்கும் சாரதியோடும், பூண்ட - அதனிற் கட்டிய, பால் கொளும் புரவி எல்லாம் - பாலைப்போன்று வெளுத்து விளங்கிய குதிரைகள் எல்லாவற்றையும், படியின் மேலே - தரையின்மீது, படுத்தினன் - வீழ்த்தினன்.

இலக்குவன் தன் கை அம்புகளால் இந்திரசித்தின் முயற்சிகளை வீணாக்க, வீடணன் தன் தண்டாயுதத்தால் அவன் ஏறியிருந்த தேரின் பாகனையும் குதிரைகளையும் கொன்று நீக்கினன் என்க, கால் - காற்று. தண்டு - தண்டாயுதம். கோல் - குதிரை

அடிக்கும் சம்மட்டி; (சூடா). படி - பூமி. படுத்துதல் - வீழ்த்துதல். பால்கொளும் புரவி; 'பால்புரை புரவி' (பொருந. 165).

பி - ம். 1. வேல்கொடு வெல்லலுற்ரு னென்றெரு; வெகுளிதோன்றக்; தோன்ரு.

2. காலொடு கரிவிற்! கால்கொண்டு; கால்கூட்டக் கடைதொடர்.

3. மவனெடுங் கொடித் தின்டேரிற்; அவனெடுந் தேரின்.

4. புரவிபாரிற்; பரப்பினுன் ருடிப்பும் மாற; ருடிப்பு மாற; புரவியோடும். 180

## இந்திரசித்து மேலும் அம்பு பொழிதல்

3049. அழிந்ததேர் மீது நின்ரு னுயிர கோடி யம்பு
பொழிந்தவன் ரேளின் மேலு மிலக்குவன் புயத்தின் [மேலும்
ஒழிந்தவ ருரத்தின் மேலு முதிரநீர் வாரி யாக
அழிந்திழிந் தோட நோக்கி யண்டமு மிரிய வார்த்தான்.

(அப்பொழுது இந்திரசித்து), அழிந்த தேர்மீது நின்ருன் - அழிந்துபோன தன் தேரின்மீது நின்று, ஆயிர கோடி அம்பு பொழிந்து - ஆயிர கோடி அம்புகளை (மழைபோல்) சிந்தி, அவன் தோளின் மேலும் - வீடணன் தோளின்மீதும், இலக்குவன் புயத்தின் மேலும் - இலக்குவனுடைய தோள்களின்மீதும், ஒழிந்தவர் - (அவர் நீங்கிய) பிறர்; உரத்தின் மேலும் - மார்பின்மீதும், உதிரநீர் - குருதி, வாரியாக - கடலாக, அழிந்து இழிந்து ஓட -(உடலை விட்டு) விலகி (உடலில்) இறங்கி (வழிந்து) ஓட, நோக்கி - (இந்திரசித்து) பார்த்து, அண்டமும் இரிய ஆர்த்தான் - அண்டமும் கெடடையுமாறு, ஆர்த்தான் - முழக்கமிட்டான்.

பி - ம். 1. நின்ருங்காயிரகோடி; கோடியம்பால்.

2. பொழிந்தனனநுமன் மேலும், மீதும்.

3. ஒழிந்தபேர்; முதரநிருவரியோத; வாரிசோரி; வாரியோதம்; யுகத்தின் மாரிபோல.

4. இழிந்தழிந்தோட; ஓடநூக்கி; பகிரண்டமிரிய வார்த்தான்!; அழிந்தழிந்தோட; மடிய வார்த்தான், 181

## இந்திரசித்து இறுதியில் இராவணனிடம் செல்லுதல்

3050. ஆர்த்தவ னனைய போதி
னழிவிலாத் தேர்கொண் டன்றிப்
போர்த்தொழில் புரிய லாகா
தென்பதோர் பொருளை யுன்னிப்
பார்த்தவ ரிமையா முன்னம்
விசும்பிடைப் பாய்ந்தா னென்னும்
வார்த்தையை நிறுத்திப் போனு
னிராவணன் மருங்கு சென்றான்.

ஆர்த்தவன் - இவ்வாறு முழக்கமிட்ட இந்திரசித்து, அனைய போதின் - அப்பொழுது, அழிவு இலா தேர் கொண்டன்றி - அழிவில்லாத (வேறு) தேர் கொண்டாலல்லாமல், போர்த் தொழில் புரியலாகாது - போர்ச் செயல் செய்தல் இயலாது, என்பது ஓர் பொருளை உன்னி - என்ற ஒரு கருத்தை எண்ணி, பார்த்தவர் - தன்னைக்கண்டவர், இமையா முன்னம் - கண்ணைக் கொட்டுவதற்குள், விசும்பிடை பாய்ந்தான் - வானத்திலே பாய்ந்து விட்டான், என்னும் வார்த்தையை நிறுத்தி - என்னும் சொல்லை (மட்டும்) வழங்க விட்டு, போனான்-அப்பால் போய், இராவணன் மருங்கு சென்றான் - இராவணன் பக்கத்தில் சென்றான்.

'இமையா முன்னம் விசும்பிடைப் பாய்ந்தான்' என்பது கண்டு நின்றவர் சொல்லியது. இதுவும் முந்தின செய்யுளும் அந்தாதித் தொடை.

பி - ம். 2. வெல்லலாகா வென்பதோர்.
3. காத்தவரிமையா ; கரந்தான் ; புக்கான்.
4. மருங்குபுக்கான். 182

## மாயா சீதை நிகும்பிலைப் படலங்களையொட்டி முதனூல் கூறுவது: ஸர்க்கம் 81—87.

மகராட்சதன் இராமபிரான் அம்புக்கிரையானது கண்டு, இராவணன் ஏவலால் இந்திரசித்து போருக்குப் புறப்பட்டான். புறப்படுமுன் நிருருதியைத் தேவதையாகவுடைய மந்திரங்களால் அக்கினியில் ஹோமம் பண்ணிப் போர் செய்யும் பொருட்டு வானத் தெழுந்தான். கடும்போர் நிகழவே இலக்குவன் பிரமாத்திரம் பிரயோகம் செய்தற்கு அண்ணனை உத்தரவு கேட்டான். இராம பிரான் அவன் வேண்டுகோளை மறுத்தான். இராமபிரானே அரக்கனைக் கொல்வதற்குப் பல வழிகளும் நாடினான்.

இந் நிலையில் மறைந்திருந்த இந்திரசித்து இரதத்தில் மாயா மயமான சீதையை உண்டுபண்ணி, அவளைக் கொல்ல விழைந்து வானரர் இருந்த இடம் நோக்கிச் சென்றான். அப்போது அநுமான் தேரில் பிராட்டி யிருப்பது கண்டு, அவள் அங்க அடையாளங் களால் அவளை மைதிலி யென்றே நினைந்து, வானர வீரர்களுடன் மேகநாதன் இருந்த இடத்தை நோக்கி ஓடினான். அங்கு இரா வணன் சீதாதேவியின் கூந்தலைப்பற்றி நின்றதைக் கண்ணுற்றுப் பெண் கொலை புரிய முன் வந்த அந்த அரக்கனைப் பலவாறு கடிந் துரைத்தான். பின்னர் அவன் இருந்த இடத்திற்கு ஓட அரக்கர் சேனை தடுத்தது. அப்போது இந்திரசித்துச் சீதையைக் கத்தி யால் வெட்டினான். பிறகுதான் சீதையைக் கொன்று விட்டதால் இனி இராம இலக்குவருடைய போர் முயற்சி வீணே என்று மொழிந்து சென்று நிகும்பிலை யென்ற இடத்தில் ஓர் பெரிய ஹோமம் செய்தான்.

இந் நிலையில் சீதையை இந்திரசித்து கொன்ற செய்தி இராம பிரானுக்கு எட்டவே, அவர் மூர்ச்சையாகி வீழ்ந்தார். இந்த அவச நிலையைக் கண்டு தம்பி இலக்குவன் தன் தமையனுரைப் பலவாறு தேற்றினன்: (இப் பகுதி முழுவதும் உரைப் பகுதியிலேயே அச்சிடப்பட்டுள்ளது).

இவ்வாறு இலக்குவன் இராமபிரானைத் தேற்றும் பொழுது வீடணன் நிகழ்ந்ததனைத்தும் வினவியறிந்து, 'இராவணன் சீதையை எக்காரணம் கொண்டும் கொல்லமாட்டான் என்றும்,

இந்திரசித்து நிகும்பிலையில் யாகம் செய்யச் சென்றிருக்கின்றான் என்றும், அந்த யாகம் முடிந்தால் அவனை யாரும் வெல்ல முடியாது என்றும் சொல்லி, இலக்குவனைக் கொண்டு யாகத்தை அழிக்க வேண்டும் என்றும் கூறினான். பின்னர் இராமபிரானைப் பார்த்து 'எவனாயினும் ஒரு பகைவன். நீ ஹோமத்தை முடித்து விட்டு நிகும்பிலை யென்னும் ஆலமரத்தடியைச் சேர்வதற்கு முன்னமே படைக்கலமேந்திய உன்னைக் கொல்ல முயல்வானேயானால், அவன் தான் இந்திர சத்துருவாகிய உன்னைக் கொல்லத்தக்கவன்' என்று பிரமதேவன் முன்னொரு காலத்தில் அவனை நோக்கி வாக்களித்திருக்கின்றார்' என்று பகர்ந்து, யாகத்தை அழிக்க இலக்குவனை ஏவுமாறு வேண்டினான். உடனே இராமபிரான் வாநர சேனையும் அநுமான் சாம்பன் வீடணன் என்ற இவர்களும் உடன்வர நிகும்பிலைக்குச் செல்லுமாறு இலக்குவனைப் பணித்தான். இலக்குவனும் உடனே வீடணன் உடன்வர அரக்கனை நோக்கிச் சென்றான். என்பது முதநூல்.

இனி, மாலியவான் சீதையை விட்டிடுமாறு இராவணனிடம் கூறுதலும், இராவணன் சினத்தலும், நிகும்பிலை யாகம் இனிது நிறைவேறுவதற்காக இந்திரசித்து மாயா சீதையை உண்டு பண்ணிக் கொல்லத் துணிதலும், குரங்குகள் கொள்ளிக் கட்டைகளைக் கையிற்கொண்டு இலங்கையைக் கொளுத்தலும், நான்கு உபாயங்களில் முதல் உபாயத்தை மேற்கொண்டு அநுமன் சமாதானமாக இந்திரசித்தினிடம் உரையாடலும், இந்திரசித்து ஒரே பிடியாக மாயாசீதையைக் கொல்லுதலும், அநுமனின் பிரலாபமும், அநுமன் வாயிலாகச் சீதை வதையைக் கேட்ட இராமபிரான் துயரமும், இலக்குவனுடைய தேறுதல் மொழிகளும், சுக்கிரீவன் இலங்கையின்மீது தாவுதலும், இந்திரசித்து அயோத்திக்குச் செல்வதாகக் கூறுதலும், அதுகேட்டு இராமபிரான் வருந்துதலும், பரதனை வெல்ல இந்திரசித்தால் இயலாது என்று இலக்குவன் கூறுதலும், அநுமனும் அயோத்திக்குச் செல்லப் புறப்படுதலும், இந்நிலையில் வீடணன் வண்டுருவங்கொண்டு அசோகவனம் சென்று பிராட்டியை நன்னிலையில் கண்டு மகிழ்ந்து இராமபிரான் முதலானவர்க்கு அறிவித்தலும் கம்பன் காவியம் கூறுவன.

---

# 27. இந்திரசித்து வதைப் படலம்

இலக்குவனால் இந்திரசித்து வதையுண்ட வரலாற்றைக் கூறும் படலம் என விரியும். சில சுவடிகளில் இப்படலம் நிகும்பிலை யாகப் படலத்தோடு சேர்ந்து காணப்பெறுகிறது.

## இராவணன் இந்திரசித்தை வினவுதல்

3051. விண்ணிடைக் கரந்தா னென்பார்
வஞ்சனை விளைக்கு மென்பார்
கண்ணிடைக் கலக்க நோக்கி
யையுற வுழக்குங் காலை
புண்ணுடை யாக்கைச் செந்நீ
ரிழிதரப் புக்கு நின்ற
எண்ணுடை மகனை நோக்கி
யிராவண னினைய சொன்னான்.

(இந்திரசித்து விசும்பிடைக் கரந்து போனதைக் கண்ட வானரர்), 'விண்ணிடை கரந்தான்' என்பார் - வானத்திடை சென்று மறைந்தான் என்பாராயும், வஞ்சனை விளைக்கும் என்பார் - வஞ்சனைச் செயலைச் செய்வான்' என்பாருமாகிய வானரர்கள், கண்ணிடை கலக்கம் நோக்கி - கண்ணினிடம் கலக்கம் உண்டாகப் பார்த்து, ஐயுறவு - சந்தேகம் கொண்டு, உழக்கும் காலை - இன்னலுறும் பொழுது, புண் உடை யாக்கை - புண்ணுண்டான உடலிலிருந்து, செந்நீர் இழிதர - இரத்தம் ஒழுக, புக்கு நின்ற - (தன் எதிரில்) புகுந்து நின்ற, எண் உடை மகனை - (மனத்தில் பலவித) எண்ணங்களையுடைய மகனை இந்திரசித்தைப் பார்த்து, இராவணன் இனைய சொன்னான் - இராவணன் இத்தகைய சொற்களைக் கூறினான்.

முன் படலத்தின் இறுதிச் செய்யுளில் 'விசும்பிடைக் கரந்தானென்னும், வார்த்தையை நிறுத்திப் போனா னிராவணன் மருங்கு சென்றான்' என்றதன் தொடர்பாக இச் செய்யுள் அமைந்துள்ளது. முதலிரண்டடிகள் வானரரின் நினைப்பையும்

சொல்லையும் விளக்கும். ஐயுறவு - ஐயம். உழத்தல் - துன்புறுத்தல். செந்நீர் - குருதி. எண் - மதிப்பும் ஆம்; எண்ணுடை மகன் - மதிக்கத்தக்க மகன். இங்கு இராவணன் தன் மகன் நிலையைக் குறிப்பினால் அறிந்து கூறினன் ஆம்.

பி - ம். 1. கரந்தானென்ன.

2. கண்ணுடைக் கலக்கம்; யகல நோக்கி.

3. புண்ணிடை யாக்கை; புழுங்கி நின்ற, புகுந்து நின்ற.

4. இனைய சொல்வான். 1

3052. தொடங்கிய வேள்வி முற்றுப்
பெற்றிலாத் தொழில் நின்றோள்மேல்
அடங்கிய வம்பே யென்னை
யறிவித்த தழிவி லியாக்கை
நடுங்கினை போலச் சாலத்
தளர்ந்தனை கலுழ னண்ணப்
படங்குறை யரவ மொத்தா
யுற்றது பகர்தி யென்றான்.

(இராவணன் இந்திரசித்தை நோக்கி), 'தொடங்கிய வேள்வி - (நீ) நிகும்பிலையில் செய்யத் தொடங்கிய யாகம், முற்றுப் பெற்றிலாத் தொழில்-முடிவு பெறாத செயலை, நின் தோள்மேல் அடங்கிய அம்பே என்னை அறிவித்தது - உன் தோள்மீது பொதிந்த அம்புக் குறிகளே எனக்குத் தெரிவித்தன; நடுங்கினை போல - நீ மிகவும் நடுங்கினாய் போல, அழிவு இல் யாக்கை - அழிதலில்லாத உன் உடல், சால தளர்ந்தனை - மிகவும் தளர்ந்துவிட்டாய்; கலுழன் நண்ண - கருடன் நெருங்க, படம் குறை அரவம் ஒத்தாய் - படம் ஒய்ந்த பாம்பை ஒத்தவனானாய்; உற்றது பகர்தி - நடந்ததைச் சொல்', என்றான் - என்று கூறினான்.

வேள்வி முற்றுப் பெறாமை அம்பே அறிவித்தது; (ஒப்பு); 'பொருதமை புண்ணே சொல்ல' முதலியன (சுந்தர. 1254). சில புறக் குறிகளால் நிகழ்ந்தது அறிதலுக்கு இஃது ஒரு சான்று. கருடனைக்கண்ட பாம்பு; 'மாகவெங் கலுழனே வருகின்றானென,

நாகமும் படமொளித் தொதுங்கி நையவே' (கிட்கிந்தா. 453); (ஆரணிய. 893) இன்னும் பெருங்கதை; 1, 44, 44-5; 3, 24, 175-76 காண்க.

பி - ம். 1. வேள்வி முற்றும், முற்றிப் பெற்றிலாத; முற்றப் பெற்றிலா; தொழிலுன்றேண் மேல்.

2. வம்பே தோன்ற வறைந்தன வயர்விலாக்கை; வம்பதேற வறைந்தன; வம்பிற்றேற, வம்புதோன்ற.

3. மனமுஞ் சாலத். 2

## இந்திரசித்து கூறிய விடை

3053. சூழ்வினை மாய மெல்லா
மும்பியே துடைக்கச் சுற்றி
வேள்வியைச் சிதைய நூற
வெகுளியா லெழுந்து பொங்கி
ஆள்வினை யாற்ற றன்னு
லமர்த்தொழி றொடங்கி யானும்
தாழ்விலாப் படைகண் மூன்றுந்
தொடுத்தனென் றடுத்து விட்டான்.

'சூழ் மாயம் வினை எல்லாம் - (நான்) சூழ்ந்து செய்த மாயமான செயல்களையெல்லாம், உம்பியே - உன் தம்பியான வீடணனே, துடைக்க - அழிக்கவும், சுற்றி - (இலக்குவன், நிகும்பிலையை) சூழ்ந்து கொண்டு, வேள்வியை சிதைய நூற - வேள்வியை (அது) கெடுமாறு அழிக்கவும், யானும் - (அதற்கு மாறாக) நானும், வெகுளியால் - கோபத்தினுல், எழுந்து - (நான் இருந்த நிலையினின்று) எழுந்து, பொங்கி - கோபித்து, ஆள்வினை ஆற்றல் தன்னுல் - முயற்சி நிறைந்த என் வலிமையால், அமர் தொழில் தொடங்கி - போர்த்தொழில் புரியத் தொடங்கி, தாழ்வு இலா படைகள் மூன்றும் - சிறுமை இல்லா (முத்தேவர்களுக்குரிய) மூன்று படைகளையும், தொடுத்தனென் - (வில்லில்) தொடுத்து விடுத்தேன்; (அவற்றை அவ்விலக்குவன்) தடுத்து விட்டான் - பயனற்றனவாகச் செய்துவிட்டான்.

தாழ்விலாப் படைகள் - பின்னடையாத பாணங்கள் எனினும் ஆம்; அவை பிருமாத்திரம், நாராயணாத்திரம், பாசுபதாத்திரம் என்பனவாகும். முன் படலம் காண்க.

பி - ம். 1. தொடக்கிச் சுற்றி, தொடங்கச் சுற்றி.
2. லெழுந்து விங்கி.
3. ஆழ்ளினை ; தொடங்கி யார்க்குந்.
4. மூன்றும் விடுத்தனன். 3

## இந்திரசித்து இலக்குவனைப் புகழ்தல்

3054. நிலஞ்செய்து விசும்புஞ் செய்த
நெடியவன் படைநின் றானை
வலஞ்செய்து போயிற் றென்றால்
மற்றினி வலிய துண்டோ
குலஞ்செய்த பாவத் தாலே
கொடும்பகை தேடிக் கொண்டாய்
சலஞ்செயி னுலக மூன்று
மிலக்குவன் முடிப்பன் றானே.

'நிலம் செய்து - பூலோகத்தைப் படைத்து, விசும்பும் செய்த - வானுலகத்தையும் படைத்த, நெடியவன் படை - பெரியோனான திருமாலின் அஸ்திரம், நின்றானை - (போர்க்களத்தில் வீரத்துடன்) நின்ற இலக்குவனை, வலம் செய்து போயிற்று என்றால் - சுற்றி வந்து திரும்பி விட்டது என்று கூறினால், இனி - இதனைவிட, வலியது மற்று உண்டோ - வலிமை பொருந்தியது வேறு உண்டோ? (இல்லை, என்றபடி); குலம் செய்த பாவத்தாலே - அரக்கர் குலம் (நெடுநாளாகச் செய்து சேமித்த) பாவத்தாலே, கொடும்பகை - கொடிய பகையை, தேடிக் கொண்டாய் - நீ தேடிக் கொண்டனை; இலக்குவன் சலம் செயின் - இலக்குவன் கோபங் கொண்டால், தானே உலகம் மூன்றும் முடிப்பன் - தான் ஒருவனே நின்று மூன்று உலகங்களையும் ஒழித்து விடுவான்.

நிகும்பிலைப் போரில் திருமால் படைமுன் இலக்குவன் நடந்து கொண்டமை முன் 3014ஆம் செய்யுளால் அறிக. ஓரிடத்தில்

சொல்லாதவொன்றினைப் பிறிதோரிடத்தில் சொல்லி முடித்தல் இவ்வாசிரியர் கையாளும் முறை என்பதற்கு இதுவோர் சான்று. 'உலகெலாம் தாமுள வாக்கலும்' என்றதால் நிலம் செய்ததும் விசும்பு செய்ததும் திருமாலேயாவன் என்பதறிக. குலம் - புலஸ்தியர் குலம் எனினும் ஆம். சலம் - கோபம்.

பி - ம். 1. நிலஞ் செய்த; விசும்பும் செய்து; நெடியமால்.
2. போனதென்றால்; போயிற்றன்றால்.
3. தேடிக் கொண்டோம்; வினையா லின்டோர் கொடும்பகை தேடிக் கொண்டாய்.
4. முடிக்குந்தானே. 4

3055. முட்டிய செருவின் முன்ன
முதலவன் படையை யென்மேல்
விட்டில னுலகை யஞ்சி
யாதலால் வென்று மீண்டேன்
கிட்டிய போதுங் காத்தா
னின்னமுங் கிளர வல்லான்
சுட்டிய வலியி னுலே
கோறலைத் துணிந்து நின்ருன்.

'முன்னம் முட்டிய செருவில் - முன்பு நெருங்கிய போரில், முதலவன் படையை - பிரமதேவன் படையை, உலகை அஞ்சி - (அழிந்து விடுமே என்று) உலகை எண்ணிப் பயந்து, என்மேல் விட்டிலன் - என்மீது (அவன்) விடவில்லை; ஆதலால் வென்று மீண்டேன் - ஆகையால் (அப்போரில்) வெற்றியடைந்து நான் திரும்பினேன்; கிட்டியபோதும்-(நான் அப்படையை அவர்கள் மீது வீச, அது அவர்களை) நெருங்கியபோதும், காத்தான் - தன்னைப் பாதுகாத்துக் கொண்டனன்; இன்னமும் கிளர வல்லான் - இனி மேலும் (தன் வலிமையில்) விளக்கமுற வல்லவன்; சுட்டிய வலியினுலே - (உலகத்தாரால்) சுட்டிச் சொல்லப் பெற்ற வலிமையாலே, கோறலை - (என்னைக்) கொல்லுதலை துணிந்து நின்ருன் - உள்ளத்தில் திடங்கொண்டு நின்ருன்.

முதலவன் - பிரமன்; 'முன்னவன்'; (ஆரணிய. 1056). முன்பு, பிரமாத்திரப் படலத்தில் இராமபிரானிடம் இலக்குவன் பிரமாத்

திரம் தொடுக்க விடை கொடுக்குமாறு வேண்ட, இராமபிரான் 'இவ்வுலகம் மூன்றையுஞ்சுடு மொருவனான் முடிகல தென்றான், சான்ற வன்னது தவிர்ந்தன னுணர்வுடைத் தம்பி' (81) என்றமை காண்க. கிட்டிய போதுங் காத்தமை, மருத்துவ மலையின் உதவியால் அனைவரையும் காத்தமையும் ஆம். கிளர்தல் - விளங்குதல்; மிகுதலும் ஆம். சுட்டிய - முன் செய்யுட்களில் தான் சுட்டிய எனினும் ஆம்.

பி - ம். 1. னெல்லா முதலவன் படையை முன்பா ; முன்பு.
2. விட்டிலருலகை ; யாதலால் மீண்டு போந்தேன்.
3. காத்தாரின்னமுங் ; கிளர வல்லார்.
4. துணிந்து நின்றார் ; துணித்து நின்றார்.

## இந்திரசித்து இராவணனுக்கு நீதி கூறல்

3056. ஆதலா லஞ்சி னேனென்
றருளலை யாசை தானச்
சீதைபால் விடுதி யாயி
னனையவர் சீற்றந் தீர்வர்
போதலும் புரிவர் செய்த
தீமையும் பொறுப்ப ருன்மேற்
காதலா லுரைத்தே னென்றா
னுலகெலாங் கலக்கி வென்றான்.

உலகெலாம் கலக்கி வென்றான் - உலகங்கள் யாவற்றையும் கலக்கி வென்றவனான இந்திரசித்து, 'ஆதலால் - இக் காரணங்களால், அ சீதைபால் ஆசை விடுதி ஆயின் - அந்தச் சீதையினிடம் கொண்டுள்ள ஆசையை விட்டுவிடுவாயானால், அனையவர் - இராம இலக்குவர், சீற்றம் தீர்வர் - சினம் நீங்குவர்; போதலும் புரிவர் - திரும்பிப் போதலையும் செய்வர்; செய்த தீமையும் பொறுப்பர் - நாம் இழைத்த தீங்குகளையும் பொறுத்துக் கொள்வர்; (இவற்றைச் சொல்லுதலால்) அஞ்சினேன் என்று அருளலை - யான் (அவர்களுக்கு) அஞ்சினேன் என்று நினைத்தருளல் வேண்டா; காதலால் உரைத்தேன் - (உன்மீது நான் கொண்ட) அன்பினால் உரைத்தேன்' என்றான் - என்று சொன்னான். தான், அசை.

இங்கு இந்திரசித்து கூறியவாறே, முன்பு வீடணன், கும்ப கருணன், மாலியவான் முதலியோர் கூறியுள்ளமை கவனித்தற் பாலது. அருளலை என்றது சினந்தருளலை என்றவாறு. உம்மைகள் எச்சப் பொருளன.

பி - ம். 2. அன்னவர் சிற்றந் தீர்வர்; சிற்றந் தீர்ந்து. 8

## இராவணன் கூற்று

3057. இயம்பலு மிலங்கை வேந்த
னெயிற்றிள நிலவு தோன்றப்
புயங்களுங் குலுங்க நக்குப்
போர்க்கினி யொழிதி போலாம்
மயங்கினை மனமு மஞ்சி
வருந்தினை வருந்த லைய
சயங்கொடு தருவெ னின்றே
மனிதரைத் தனுவொன் றாலே.

இயம்பலும் - (இவ்வாறு) இந்திரசித்து கூறலும், இலங்கை வேந்தன் - இலங்கையின் மன்னனான இராவணன், எயிறு இள நிலவு தோன்ற - பற்களின் இள நிலவு போன்ற ஒளி புலப்படுமாறும், புயங்களும் குலுங்க - தோள்களும் குலுங்குமாறும், நக்கு - நகைத்து, 'இனி போர்க்கு ஒழிதி போல் ஆம் - நீ இனி போர்க்குச் செல்வதினின்று விலகுவாய் போலும்; மனமும் மயங்கினை - உள்ளமும் கலங்கி நிற்கின்றாய்; அஞ்சி வருந்தினை - (இராமஇலக்குவரிடம்) அச்சங்கொண்டு வருத்தம் அடைந்தனை; ஐய! - ஐயனே! வருந்தல் - நீ வருந்தற்க; மனிதரை - மனிதர்களை, தனு ஒன்றாலே - என் ஒரு வில்லினாலே (வென்று), இன்றே - இன்றைத் தினமே, சயம் கொடு தருவென் - வெற்றி பெற்றுக் கொடுப்பேன்.

முன் கும்பகருணன், 'தையலை விட்டவன் சரணந் தாழ்ந்து நின், மையறு தம்பியோ டளவளாவுதல் உய்திறம்' என்று கூறிய போதும் இங்குக் கூறியவாறே 'அஞ்சினை, வெறிவிதுன் வீரம்'

(யுத்த. 1298, 1300) என்று கூறித் தான் போர்க்கெழுந்த செய்தி (93) இங்கு நினைத்தற்குரியது.

பி - ம். 1. நிலவு மெய்நப்; குலுங்க நக்கான்.

2. யொழி நீ போத.

3. மயங்கினை மனிதன்றன்னை யஞ்சலே.

4. மனிசரைத்.

3058. முன்னையோ ரிறந்தோ ரெல்லா
மிப்பகை முடிப்ப ரென்றும்
பின்னையோர் நின்றோ ரெல்லாம்
வென்றவர்ப் பெயர்வ ரென்றும்
உன்னைநீ யவரை வென்று
தருதியென் றுணர்ந்து மன்றால்
என்னையே நோக்கி யானிந்
நெடும்பகை தேடிக் கொண்டேன்.

'முன்னையோர் இறந்தோர் எல்லாம் - முன்பே (இப்போரில் ஈடுபட்டு) உயிரை இழந்தவர் யாவரும், இ பகை முடிப்பர் என்றும் - இந்தப் பகைவரான இராமஇலக்குவரை ஒழிப்பர் என்றும், பின்னையோர் நின்றோர் எல்லாம் - (இறவாமல்) பின்னே நின்றவர் யாவரும், அவர் வென்று - அவ்விராமஇலக்குவரை வென்று, பெயர்வர் என்றும் - திரும்புவர் என்றும், உன்னை - உன்னை, நீ அவரை வென்று தருதி என்று - நீ அவ்விருவரையும் வென்று வெற்றியைத் தருவாய் என்றும், உணர்ந்தும் அன்று - நான் தெரிந்து (இவற்றைச்) செய்தது அன்று; (பின்பு என் எனில்), என்னையே நோக்கி - என் (வலிமையை) எண்ணியே, இ நெடு பகை - இந்தப் பெரிய பகைவரை, தேடிக் கொண்டேன் - (நான்) தேடி அமைத்துக் கொண்டேன். ஆல், அசை.

நான் சீதையை எடுத்து வந்து இராமஇலக்குவரின் பகையைத் தேடிக் கொண்டது என் வலிமையைக் குறித்தே அன்றி, இப் போரில் இறந்த கும்பகருணன், அதிகாயன் முதலானோரையோ, நிற்கின்ற மகோதரன் முதலியோரையோ, அன்றி இந்திரசித்தாகிய

உன்னையோ நம்பி அன்று என்று, அனைவரையும் இராவணன் இகழ்ந்து கூறுகின்றான். 'நெடும்பகை தேடிக் கொண்டேன்'; (ஒப்பு); நாசம்வந் துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்' (யுத்த. 1241).

பா-ம். 2. பின்னையே ; நின்றாரெல்லாம் வென்றனர் ; பின்றலர் பெயர்வதென்று.
3. இன்னை நீ யவரை ; இன்ன நீ யவரை ; றுணர்ந்து மின்றால்.
4. நானிந் நெடும்பகை கொண்டதென்றான்; கொண்டதெல்லாம்; பகைக்கேன்ற தெல்லாம். 8

3059. பேதைமை யுரைத்தாய் பிள்ளா
யுலகெலாம் பெயரப் பேராக்
காதையென் புகழி னோடு
நிலைபெற வமரர் காண
மீதெழு மொக்கு ளன்ன
யாக்கையை விடுவ தல்லால்
சீதையை விடுவ துண்டோ
விருபது திண்டோ ளுண்டால்.

'பிள்ளாய் - மகனே! பேதைமை உரைத்தாய் - நீ அறியாமையால் இந்தப் பேச்சைப் பேசினாய்; உலகெலாம் பெயர - உலகங்கள் யாவையும் தம் நிலையினின்று மாறும் காலத்தும், என் புகழினோடு - என் புகழுடன், (என்) பேரா காதை - என் அழியாத சரித்திரப் பாடலும், நிலைபெற - நிலைபேறுடையுமாறு, அமரர் காண - தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்க, மீது எழு மொக்குள் அன்ன யாக்கையை - நீர்மீது எழுகின்ற கொப்புளம் போன்ற (சடுதியில் அழியும்) இவ்வுடலை, விடுவது அல்லால் - விட்டுவிடுவேனே அல்லாமல், இருபது தோள் உண்டு - எனக்கு இருபது தோள்கள் இருக்க, சீதையை விடுவது உண்டோ - சீதையை நான் கைவிடுதல் உண்டாகுமோ? (இல்லை, என்றபடி) ஆல், அசை.

இராவணனின் உள்ளத்தின் வலிமையைச் சித்திரிக்கும் உயர்ந்த பாடல்களுள் இஃது ஒன்றாம். உலகெலாம் பெயர்ந்தாலும், தன் கதையும் புகழும் பெயராதன என்பதை அவன் உணர்ந்திருந்தான் என்க. தன் மானம் நிரம்பியவனாதலின் தன் உயிரை விட்டாலும், சீதையை விடுவதில்லை என்று அவன்

கூறுகின்றான். அவனுக்குத் தன் புஜபலத்திலேயே சார்பும் நம்பிக்கையும் இருந்தனவேயன்றி, அவன் தன அறிவையோ, ஆன்மத் தூய்மையையோ கருதினவனல்லன் என்பது இங்கு நன்கு விளங்குகின்றது. ஆரணிய. 757-ல் 'மாரவேள் கொதிக்கு மம்பால் பொன்றலி னிராம னம்பாற் பொன்றலே புகழுண்டன்றோ' என்றமையாலும், பிராட்டியின் பொருட்டாக அவன இறப்பது திண்ணமென்ற எண்ணம் அவன் உள்ளத்தின் அடியில் நெடுநாளாக ஊன்றிக் கிடப்பதும் தெரியலாகும். காதை-கதை பொதிந்த பாட்டு. இச் செய்யுளுடன், 'தேவியை விடுதி யாயின் திறலது தீருமன்றே, ஆவியை விடுதலன்றி யல்லதொன் றுவதுண்டோ, தாவரும் பெருமை யம்மா நீயினித் தாழ்த்த தென்னே, காவல விடுதியின்றிக் கையறு கவலை நோய்தின்' என்ற (யுத்த. 1248) மகோதரன் கூற்றையும் ஒப்பிடுக. மீதெழு மொக்குளன்ன யாக்கை: 'விண்ணினீர் மொக்குளின் விளியு மாக்கை' (அயோத். 1154); இன்னும் நாலடி. 27; சீவக, 409; மேரு. 6 : 75 காண்க.

பி - ம். 1. பெயர்க்கப் பேரா.
2. நிலைபெற்றவமரர் காண.
3. வாக்கைகயை விடுவ
4. விருபது தோளுண்டாக; விருபது சிரமுடோ ளுண்டால். 9

3060. வென்றிலெ னென்ற போதும்
வேதமுள் ளளவு மியானும்
நின்றுளெ னன்றோ மற்றவ்
விராமன்பேர் நிற்கு மாயின்
பொன்றுத லொருகா லத்துத்
தவிருமோ பொதுமைத் தன்றோ
இன்றுளார் நாளை மாள்வர்
புகழுக்கு மிறுதி யுண்டோ.

'வென்றிலென் என்ற போதும்-(யான் இராமனிடம் இடும் போரில்) வெற்றி பெறவில்லை யென்றாலும், வேதம் உள்ளளவும்-வேதம் உலகில் வழங்கிவருமளவும், இராமன் பேர் நிற்கும் ஆயின்-

இராமனுடைய பெயர் நிலைக்கும் என்னின், யானும் நின்றுளென் அன்றோ -(என் பெயரும் நிலைக்கும் ஆதலால்) யானும் நிலைத்துளன் அல்லனோ? ஒரு காலத்து பொன்றுதல் தவிருமோ - (ஏதேனும்) ஒரு காலத்தில் சாதல் என்பது விலகுமோ? பொதுமைத்து அன்றோ - (சாவு) யாவர்க்கும் பொதுவாக உள்ளது அன்றோ? இன்றுளார் நாளை மாள்வர் - இன்றிருப்பர் நாளை இறப்பர்; (ஆனால்) புகழுக்கும் இறுதி உண்டோ - புகழுக்கும் சாவு என்பது உண்டோ? (இல்லை என்றபடி). மற்று, அசை.

இச் செய்யுளில் இராவணன் தான் உயிரைத் துறக்க அஞ்சவில்லையென்றும், ஆகவே போருக்குத் தானே செல்வனென்றும் கூறி இந்திரசித்தை அடக்குகின்றான். இராமன் பெயர் வேதம் உள்ளளவும் நிலைக்கும் என்பதும், அதையொட்டித் தன் பெயரும் நிலைக்கும் என்பதும் அவனுடைய கோளாகும். தான் அஞ்சாமல் போர் புரிந்திறப்பது தனக்குப் புகழேயாகும் என்றும் அவன் கருதினன் ஆவன். பின் இரண்டடிகள் சிறந்த நீதிகளாகும். புகழுக்கும்; உம்மை, உயர்வு சிறப்பு.

பா-ம். 2. நின்றவ னன்றோ.

3. லொருகா லத்துந். 10

3061. விட்டனென் சனகி தன்னை
யென்றலும் விண்ணோர் நண்ணிக்,
கட்டுவ தல்லா லென்னைப்
பொருளெனக் கருது வாரோ
பட்டனெ னென்ற போது
மெளிமையிற் படுகி லேன்யான்
எட்டினோ டிரண்டு மான
திசைகளை யெறிந்து வென்றேன்.

'சனகி தன்னை விட்டனென் என்றலும் - சானகியை யான் விட்டுவிட்டேன் என்று கேட்டவுடனே, விண்ணோர் - தேவர்கள், நண்ணி - (என்னை) நெருங்கி, என்னை கட்டுவது அல்லால் - என்னைப் பிணிப்பதல்லாமல், பொருள் என கருதுவாரோ-(என்னை) ஒரு பொருள் என்று எண்ணுவர்களோ? யான் பட்டனென் என்ற போதும் - (இராமன்பால் தோல்வியுற்று) நான் இறந்தேன்

என்ற காலத்தும், எளிமையிற் படுகிலேன் - எளிதில் இறந்துவிட மாட்டேன்; எட்டினோடு இரண்டும் ஆன திசைகள் -(யான்) பத்துத் திசைகளையும், எறிந்து வென்றேன் - அழித்து வெற்றியடைந்தேனவேன்.

இச் செய்யுளில் சானகியை விட்டு விட்டாலும் தனக்குப் பயனில்லை என்று இராவணன் கூறுகின்றான். 'சீதையை விடுவதுண்டோ? என்று சற்றுமுன் பேசினவனே இப்பொழுது இவ்வாறு பேசுகின்றான் என்னும்போது, அவன் மனம் ஒரு நிலையில் இல்லாமை புலப்படுவதைக் காண்கிறோம். எறிதல் - அழித்தல்; 'குறும் பெறிந்தன்று' (பு. வெ. 1 - 8).

பி - ம். 1. சீதை தன்னை.
2. கருதுவாரே.
3. என்னை யானெனக், படுகிலேனுன்.
4. எறிந்து கொன்டேன். 11

ஒரு சுவடியில் இதன்கீழ்ப் பின்வரும் அதிகப்பாடல்கள் காண்கின்றன :—

வட்டமா மதிமு கத்தெம் மங்கையை மூக்க றுத்த
கட்டமா னிடவர் தங்கள் கைவலி காட்டி னாலும்
இட்டநா ளெல்லை தன்னை யாவரே விலக்க வல்லார்
பட்டுநான் விழுந்தா லன்றிப் பாவையை விடுவ துண்டோ 1

பழுதிலா வடிவி னாளைப் பாலன்ன மொழியி னாளைத்
தழுவினா லன்றி யாசை தவிருமோ தவமி லாதாய்
முழுதும்வா னவரை வென்றேன் மூவரென்முன னினில்லார்
அழிவுதா னெனக்கு முண்டோ ஆணலாப் பேடி என்றான். 2

3062. சொல்லியென் பலவும் நீநின்
னிருக்கையைத் தொடர்ந்து தோளில்
புல்லிய பகழி வாங்கிப்
போர்த்தொழிற் சிரமம் போக்கி
எல்லியுங் கழித்தி யென்னா
வெழுந்தன னெழுந்து பேழ்வாய்
வல்லிய முனிந்தா லன்னான்
வருகதேர் விரைவி னென்றான்.

'பலவும் சொல்லி என் - பல சொற்களையும் பேசி யாது பயன்? நீ நின் இருக்கையை தொடர்ந்து - நீ உன் இருக்கையான (அரண் மனையை) நெருங்கி, தோளில் புல்லிய பகழி வாங்கி - தோளிற் பொதிந்த அம்புகளை எடுத்து, போர் தொழில் சிரமம் போக்கி- போர்த் தொழிலில் உண்டான வருத்தத்தை நீக்கி, எல்லியும் கழித்தி - இரவுப் பொழுதையும் கழிப்பாய்', என்று - என்று சொல்லி, எழுந்தான் -(தன் இருப்பிடத்திலிருந்து) எழுந்தான்; எழுந்து - அவ்வாறு எழுந்து, பேழ் வாய் - பிளந்த வாயையுடைய, வல்லியம் - புலி ஒன்று, முனிந்தால் அன்னான் - கோபித்துக் கொண்டது போன்ற அவ்விராவணன், 'வருக தேர் விரைவின் என்றான் - (என்) தேர் விரைவின் வருக' என்று கட்டளையிட்டான்.

தொடர்தல் - நெருங்குதல். புல்லிய பகழி - தைத்த அம்பு. சிரமம் - வருத்தம் (வடமொழி). சிரமம் - களைப்புமாம்; 'சிரம மெல்லாஞ் செல்லிருட் டீர்ந்து' (பெருங். இலாவாண, 9, 31). வல்லியம் - புலி.

பி - ம். 1. இருக்கையிற் றொடர்ந்து.

3. எயிற்றுப் பேழ்வாய்.

4. முனிந்த தென்ன வருகதேர் தருக வென்றான்; வருக வென்றான். 12

## இந்திரசித்து தானே பொருமாறு செல்ல இரதமேறுதல்

3063. எழுந்தவன் றன்னை நோக்கி
யிணையடி யிறைஞ்சி யெந்தாய்
ஒழிந்தருள் சீற்றம் சொன்ன
வுறுதியைப் பொறுத்தி யான்போய்க்
கழிந்தனெ னென்ற பின்னர்
நல்லவா காண்டி யென்று
மொழிந்தனன் தெய்வத் தேர்மே
லேறினன் முடிய லுற்றான்.

'எழுந்தவன் தன்னை - (இவ்வாறு) எழுந்த இராவணனை, முடியலுற்றான் - இறக்கும் நிலையை எய்திய இந்திரசித்து, நோக்கி- பார்த்து, இணை அடி இறைஞ்சி - அவனுடைய இரண்டு பாதங் களிலும் வணங்கி, 'எந்தாய் - என் தந்தையே! சீற்றம் ஒழிந்தருள்-

(என்மீதுகொண்ட) கோபம் நீங்கியருள்க; சொன்ன உறுதியை பொறுத்தி - செய்யத்தக்கது என்று நான் சொன்னவற்றைப் பொறுத்தருள்க; யான் போய் - யான் போருக்குச் சென்று, கழிந்தனென் - (அங்கு) மாண்டேன், என்ற பின்னர் - என்ற செய்தி (கேட்ட) பிறகு, நல்லவா காண்டி - (நான் சொன்ன வற்றில் உள்ள உண்மையை) நல்லபடி காண்பாய்' என்று மொழிந்தனன் - என்று சொல்லி, தெய்வ தேர்மேல் ஏறினன் - தெய்வத் தன்மை பொருந்திய (தன்) தேர்மீது ஏறினான்.

'சொன்ன உறுதியைப் பொறுத்தி' என்பதற்கு 'நீ கொண்ட உறுதியை நிலைநிறுத்திக் கொள்வாய்' என்றும் பொருள் கொள்வர். 'நல்லவா காண்டி' என்றதற்கு, 'பிராட்டியை இராம பிரானிடம் கொண்டு விட்டு விடுவதான நல்ல வழியைக் காண்' என்றும் பொருள் கொள்ளலாம். கும்பகருணன், இந்நிலையில் கூறியனவற்றை (யுத்த. 1299, 1301) இங்கு ஒப்பு நோக்குக. 'நல்லவா காண்டி - 'பிராட்டியை விட்டு நன்றாயிருப்பாய்' என்பது பழையவுரை.

பி - ம். 3. பின்னும் நல்லவர் காண்டி; மேலவை காண்டி.
4. மொழிந்துதன் றெய்வத். 13

## இந்திரசித்து போருக்குப் புறப்படுதல்

3064. படைக்கல விஞ்சை மற்றும்
படைத்தன பலவுந் தன்பால்
அடைக்கல மாகத் தேவ
ரளித்தன வெல்லாம் வாங்கிக்
கொடைத்தொழில் வேட்டோர்க் கெல்லாங்
கொடுத்தனன் கொடியோன் றன்னைக்
கடைக்கணுல் நோக்கி நோக்கி
யிருகணீர் கலுழப் போனுன்.

(அப்பொழுது இந்திரசித்து), தேவர் தன்பால் அடைக்கல மாக அளித்தன - தேவர்கள் தன்னிடம் அடைக்கலப் பொருள் களாகக் கொடுத்து வைத்த, படைக்கல விஞ்சை - போர்க்குரிய ஆயுதங்களைக் கையாளும் வித்தைகளையும், மற்றும் - பிறவும்,

படைத்தன பலவும் - அத் தேவர்கள் உண்டாக்கியனவுமான பலவற்றையும், எல்லாம் வாங்கி - (இவ்வாறுன) எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, கொடை தொழில் - தான் கொடுக்கும் தொழிலிலே, வேட்டோர்க்கெல்லாம் - விரும்பினவர் யாவர்க்கும், கொடுத்தனன் - (தானங்களைக்) கொடுத்து, கொடியோன் தன்னை - கொடியனான இராவணனை, கடை கண்ணால் - தன் கண்களின் ஓரங்களினால், நோக்கி நோக்கி - அடிக்கடி பார்த்து, இரு கண் - இரண்டு கண்களினின்றும், நீர் - கண்ணீர், கலுழ - சிந்த, போனான் - போர்மீது சென்றான்.

இந்திரசித்து யாத்ரா தானம் செய்துவிட்டுத் தன் தந்தையைப் பார்த்து வருந்திக் கொண்டே போர்க்களம் சென்றான் என்றார். 'அடைக்கல மென்ன வீச னளித்தன தேர்மே லாக்கி' என்று பாடங்கொண்டு, அவற்றையெல்லாம் தேர்மீது எடுத்துக் கொண்டு போனான் என்றும் பொருள் கூறுவர். 'அடைக்கலமாக வீச னளித்தன - சிவனும் தன்போல்வானென்று தனக்குரித்தாகிய ஆயுதங்களைப் பின்னொருவர் வலுவிலே யறியாதபடி அடைக்கலமாக வைத்த ஆயுதங்கள்' என்பது பழையவுரை. போர்க்குச் செல்லும்போது யாத்திராதானம் செய்வதுண்டு என்பது, 'அனைய தேரினை யருச்சனை வரன்முறை யாற்றி, இனைய ரென்பதோர் கணக்கிலார் மறையவ ரெவர்க்கும், வினையினன்னிதி முதலிய வளப்பரும் வெறுக்கை, நினையி னீண்டதோர் பெருங் கொடை யருங்கட னேர்ந்தான்' (யுத்த. தேரேறு படலம். 24) என்பதனாலும் தெளியவரும். இராவணனை இந்திரசித்து கடைக் கண்ணால் நோக்கி நோக்கிக் கலுழ்ந்தமை; தான் இனித் தந்தையைப் பார்க்கப் போவதில்லை என்றமையாலும் அவன்பால் கொண்ட அன்பாலும் இரக்கத்தாலும் என்க. இங்குப் பழையவுரை கூறுவதும் சுவையானது. 'கடைக்கண்ணால் நோக்கி, 'பிராட்டியை விட்டுவிடுகிறேன்' என்று அழைப்பானோ என்று பார்த்தான்' (பழையவுரை). கலுழ்தல் - சிந்துதல்.

பா - ம். 1. விச்சைமற்றும்; மற்றுப் படைத்தன.

2. அடைக்கல மென்ன விசனளித்தன தேர்மே லாக்கி: அளித்தன பலவும் வாங்கி.

3. கொடுத்தபின் கொடியோன் றன்னைக்.

4. நோக்கிப் பிரிவினாற் கலுழ்ந்து போனான்; பிரிவினிற் கலுழ்ந்து.

3065. இலங்கையி னிருத ரெல்லா
மெழுந்தனர் விரைவி னெய்தி
விலங்கலந் தோள நின்னைப்
பிரிகலம் விளிது மென்ன
வலங்கொடு தொடர்ந்தார் தம்மை
மன்னனைக் காமின் யாதும்
கலங்கலி ரின்றே சென்று
மனிதரைக் கடப்ப லென்ருன்.

(அவ்வாறு இந்திரசித்து தேரே றியபோது), இலங்கையின் நிருதர் எல்லாம் - இலங்கையிலுள்ள அரக்கர் எல்லோரும், எழுந்தனர் - எழுந்து, விரைவின் எய்தி - விரைவுடன் அத்தேரை அடைந்து, ' விலங்கல் அம் தோள - மலைபோன்ற அழகிய தோள்களை உடையோனே! நின்னை பிரிகலம் - உன்னை யாங்கள் பிரிய மாட்டோம்; விளிதும் - இறப்போம்' என்ன - என்று சொல்லிக் கொண்டு, வலங்கொடு தொடர்ந்தார் தம்மை - பிரதக்ஷணமாகத் தன்னைச் சூழ்ந்து தொடர்ந்து வருபவரை, (இந்திரசித்து), ' மன்னனை காமின் - அரசனைக் காப்பாற்றுங்கள்; யாதும் கலங்கலிர் - சிறிதும் கலக்கம் அடையாதீர்கள்; இன்றே சென்று - நான் இப்பொழுதே போய், மனிதரை கடப்பல் - மனிதர்களை வெல்வேன்', என்ருன் - என்று கூறினன்.

பி - ம். 1. அழிந்தனர் விரைவின்.
2. தோளா யுன்னைக்; தோளாய் நின்னை; விளிது மென்னு, என்று; யாதும் காமின்.
4. இனிமேற் சென்று; கடப்பேன்; கடிவ னென்ருன். 15

3066. வணங்குவார் வாழ்த்து வார்கள்
வடிவினை நோக்கித் தம்வாய்
உணங்குவா ருயிர்ப்பா ருள்ள
முருகுவார் வெருவ லுற்ற
கணங்குழை மகளி ரீண்டி
யிரைத்தவர் கடைக்க ணென்னும்
அணங்குறை நெடுவேல் பாயு
மமர்கடந் தரிதிற் போனுன்.

வெருவல் உற்ற - அச்சம் அடைந்த, கணம் குழை மகளிர் - திரண்ட குழைகளையுடைய மகளிர், ஈண்டி இரைத்தவர் - நெருங்கி ஒலித்துக்கொண்டவராய், வணங்குவார் - சிலர் வணங்கியும், வாழ்த்துவார்கள் - சிலர் வாழ்த்தியும், வடிவினை நோக்கி - இந்திர சித்தின மேனியை நோக்கி, தம் வாய் உணங்குவார் - தம் வாய் காய்ந்து போவாரும், உயிர்ப்பார் - பெருமூச்சு விடுவாரும், உள்ளம் உருகுவார் - மனம் உருகுபவருமாய் இருந்தவர்களின், கடைக்கண் என்னும் - கடைக்கண்கள் என்னும், அணங்கு உறை - அச்சம் உறைகின்றதும், பாயும் - பாய்கின்றதுமான, நெடுவேல் அமர் கடந்து - நீண்ட வேலாயுதங்களுடன் போர் செய்து வென்று, அரிதில் - மிகுந்த அருமையுடன், போனான் - அப்பாற் சென்றான்.

'கணங்குழை மகளிர் - இந்திரசித்தின் தேவிமார்' என்பது பழையவுரை. முன் செய்யுளில், 'இலங்கையின் நிருதரெல்லாம் எழுந்தனர்' என்று கூறியதுபோல, இங்கு 'இலங்கை மகளிர்' என்று கூறலாம். போர்க்களத்தில் படைக்கலங்களைக் கடப் பதற்கு முன்பே மகளிர் கண் எனும் வேல் அமர் கடந்தான் என்று சமற்காரமாகக் கூறினர். அணங்கு - அச்சம்; (சூடா). கண் என்னும் வேல்; 'கண்ணெனுங் காலவேல், குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்' (பால. 848).

பி - ம். 1. வாழ்த்து வார்தன்.

2. வெருவலுற்றுக், உருகுவா ராகி மேயும்

4. அணங்குடை, அணங்குலை.

16

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் அதிகப் பாடல் காண்கிறது:

சிறுதொழிற் குரிய ராகித் தீவினைக் குறவாய் நின்ற
எறிபடை யரக்க ரென்று மெண்ணிலா வெள்ளச் சேனை
மறிதிரைக் கடலின் போத வான்முர சியம்ப வல்லே
தெறுசினத் தரக்கன் வானோர் திகைத்துளங் குலையச்
[சென்றான்.

## இலக்குவன் இந்திரசித்தின் தேரொலி கேட்டல்

3067. ஏயின னின்ன னாக
 விலக்குவ னெடுத்த வில்லான்
சேயிரு விசும்பை நோக்கி
 வீடண தீயோ னப்பால்
போயின னாதல் வேண்டும்
 புரிந்தில னென்று மென்பான்
ஆயிரம் புரவி பூண்ட
 தேரின்பே ரரவங் கேட்டான்.

இன்னன் ஏயினன் ஆக - இவ்விந்திரசித்து (தன் எதிரினின்று) இவ்விதம் செல்ல, எடுத்த வில்லான் இலக்குவன் - தூக்கிய வில்லைப் பிடித்தவனான இலக்குவன், சேய் இரு விசும்பை நோக்கி - தூரத்திலுள்ள பெரிய வானத்தைப் பார்த்து, (வீடணனை நோக்கி), 'வீடண - வீடண! தீயோன்-கொடியவனான இந்திரசித்து, ஒன்றும் புரிந்திலன் - யாதொரு செயலையும் செய்தானில்லை; அப்பால் போயினன் ஆதல் வேண்டும் - (நம் வழியைவிட்டு) அப்புறம் சென்றவனாதல் வேண்டும்', என்பான் - என்று கூற, (அப்பொழுது) ஆயிரம் புரவி பூண்ட தேரின் - ஆயிரம் குதிரைகள் கட்டிய தேரின், பேர் அரவம் - பெரிய முழக்கத்தை, கேட்டான் - காதிற் கேட்டான்.

நிகும்பிலைப் படலத்தின் இறுதிச் செய்யுளில், 'பார்த்தவரிமையா முன்னம் விசும்பிடைப் படர்ந்தா னென்னும் வார்த்தையை நிறுத்திப் போனான்' (யுத்த. 3050) என்றபடி வானத்திற் சென்றவனை எதிர் நோக்கி நின்ற இலக்குவன் அவன் வராமையால் வீடணனிடம் இவ்வாறு கூறினன் என்க. ஏயினன் - ஏகினன்; ககர யகரப் போலி. இந்திரசித்து ஆயிரம் சிங்கங்கள் பூண்ட தேரில் வந்து முன் போரிட்டனன் என்பது: யுத்த. 2380-ஆம் செய்யுளில் கூறப் பெற்றது.

பி - ம். 1. எடுத்த வில்லன்.
2. விடண தீயோன்.
3. போயினனாத லொன்றும் புரிந்தில னுகு மென்பான்; ஒன்றுமென்னும்.
4. தேரின் பேரரவங் கேட்டான்.

வேறு

3068. குன்றிடை நெரிதர வடவரையின்
குவடுருள் குவதென முடுகுதொறும்
பொன்றிணி கொடியின திடியுருமி
னதிர்குரன் முரல்வது புனைமணியின்
மின்றிரள் சுடரது கடல்பருகும்
வடவனல் வெளியுற வருவதெனச்
சென்றது திசைதிசை யுலகிரியத்
திரிபுவ னமுமுறு தனியிரதம்.

திரி புவனமும் உறு தனி இரதம் - மூன்று உலகங்களுக்கும் செல்லத்தக்கதான ஒப்பற்ற அந்த இரதம், இடை - வழியினுள்ள, குன்று - குன்றுகள் எல்லாம், நெரிதர - பொடிப் பொடியாய் நெரிந்து போகுமாறும், பொன் திணி கொடியினது - பொன்னால் நிரப்பப் பெற்ற கொடிகளையுடைய, வடவரையின் குவடு - வடக்கே உள்ள மேரு மலையின் சிகரமொன்று, உருள்குவதென - உருளு கிறது என்று சொல்லுமாறும், முடுகு தொறும்-விரைந்து செல் லுந்தோறும், இடி உருமின் அதிர்குரல் முரல்வது - பேரிடியின் முழங்குகின்ற குரலை எழுப்புவதாயிருந்தது; புனை மணியின் மின் திரள் சுடரது - அலங்கரிக்கப் பெற்ற இரத்தினங்களின் மின்னலை ஒத்த ஒளித் திரள்களான ஒளியை வீசுவது; (அது) உலகு இரிய- உலகம் அஞ்சி ஓடும்படி, திசை திசை - பல திசைகளிலும், கடல் பருகும் வட அனல் வெளியுற வருவது என - கடல் நீரை மிகாமற் பருகும் இயல்பினையுடைய வடவைக்கனல் (அக்கடலை விட்டு) வெளியிலே வருகின்றது என்று சொல்லுமாறு, சென்றது - ஓடிற்று.

இரதம், முரல்வதாய், சுடரதாய், சென்றது என இயைக்க. முரல்தல் - கதறுதல் போல ஒலித்தல்; 'குடுமிக் கூகை குரா லொடு முரல' (மதுரைக். 170). வடவனல் - வடவாமுகாக்கினி என்பது.

பி - ம். 1. மகடுதொறும், முகடுதொறும்.
2. உருமெனதிர்குரல், பொரதிர்குரல்.
3. மின்றிணி விரிசுடர் கடல் பருகும்; மின்றிணி விரிகடல் பருகுறுமவ் மின்றிரி சுடரது.
4. திறனிரதம்.

3069. கடன்மறு கிடவுல குலையநெடுங்
கதிரிரி தரவெதிர் கவிகுலமும்
குடர்மறு கிடமலை குலையநிலங்
குழியொடு கிழிபட வழிபடரும்
இடமறு கியபொடி முடுகிடலு
மிருளுள தெனவெழு மிகலரவின்
படமறு கிடவெதிர் விரவியதவ்
விருள்பக லுறவரு பகையிரதம்.

கடல் மறுகிட - கடல்களெல்லாம் சுழலவும், உலகு உலைய - உலகங்களெல்லாம் அடுக்கழியவும், நெடும் கதிர் இரிதர - பெரிய சூரிய சந்திரர்கள தங்கள் நிலைகளினின்று மாறுபட்டோடவும், எதிர் - எதிரே நின்ற, கவி குலமும் - வானரக் கூட்டங்களும், குடர் மறுகிட - தம் குடல்கள் சிதையவும், மலை குலைய - (உயர்ந்த எட்டு) மலைகளும் நிலை தடுமாறவும், நிலம் குழியொடு கிழிபட - பூமியானது அதனிலுள்ள பள்ளங்களுடன் கிழிபட்டுப் போகவும், வழி படரும் இடம் மறுகிய பொடி - அத் தேர் செல்லும் இடங்களில், பலகாலும் திரிந்த துகள்கள், முடுகிடலும் - விரைவாகச் சென்று(அப்பிளப்புக்களை நிரப்புதலும்), இருள் உளது என - இருள் வந்து விட்டது என்று, எழும் - மேலே எழுகின்ற, இகல் அரவின் படம் மறுகிட - பகைமை கொண்ட பாம்பின் படம் அரைபட, அ இருள் - அந்த இருளும், பகல் உற - பகலாகும்படி (வெளிச்சத்தை யுடையதாய்) வரு - வருகிற, பகை இரதம் - பகைமையைக் கொண்ட அந்த இரதமானது, எதிர் விரவியது - எதிரிலே வந்தது.

இரதம், மறுகிட, குலைய, இரிதர, மறுகிட, குலைய, கிழிபட, மறுகிட, விரவியது என இயைக்க. மறுகுதல் - சிதைதல்; ‘மலிவன மறுகி’ (குறிஞ்சிப். 97). திரிதல், அரைபடல் எனினும் ஆம்; ‘நறுஞ் சாந்து மறுக’ (மதுரைக். 553); கவிகுலம்; வட சொற்கள் ஒற்று மிகாமல் புணர்ந்தன. நிலம் கிழிபட, (அக் கிழிகளில்) பொடி முடுகிட, இருளுளதென அரவுகள் எழுந்தன; இரதக் கால்கள் அவ்வரவின் படங்களை அரைத்தன என்க.

இங்குச் சந்தம், தனதன தனதன தனதனன என்பன இரட்டித்த சந்தக் குழிப்பு அமைந்துள்ளமை காண்க. குடர், போலி.

பி - ம். 1. உலகிடைய, நிலைகுலைய; நெடுங்கிரி யிரிதர; கவியினமும்.

2. நிலைகுலைய நிலம், உடல்குலை நிலம், நெடுங்குழியொடு; கிழிபட வுலகுலைய.

3. மறுகியபடி முடுகிடலும்.

4. பரவிய வண்பகலிருள் வருவன; விரவிருள் பகலுற வருவன. 19

## இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் போர் நிகழ்தல்.

3070. ஆர்த்தது நிருதர்த மனிகமுட
னமரரும் வெருவினர் கவிகுலமும்
வேர்த்தது வெருவலொ டலம்வரலால்
விடுகணை சிதறின னடுதொழிலோன்
தீர்த்தனு மவனெதிர் முடுகிநெடுந்
திசைசெவி டெறிதர விசைகெழுதிண்
போர்த்தொழில் புரிதலு முலகுகடும்
புகையொடு சிகையனல் பொதுளியதால்.

நிருதர் தம் அனிகம் - அரக்கர்களின் சேனை, உடன் ஆர்த்தது - ஒருமிக்கச் சேர்ந்து பேராரவாரம் செய்தது; அமரரும் வெருவினர் - (அதைக் கேட்ட) தேவர்களும் அஞ்சினார்கள்; கவி குலமும் - வானரக் கூட்டங்களும், வெருவலொடு - அச்சத்தோடு, அலம் வரலால் - மனஞ் சுழலுதலால், வேர்த்தது - உடல் வேர்த்தன; அடு தொழிலோன் - போர்ச் செயலை (இயற்கையாகக் கொண்ட) இந்திரசித்து, விடு கணை சிதறினன் - (தன் வில்லினின்று) விடப்பெற்ற அம்புகளைப் பொழிந்தான்; தீர்த்தனும் - தூயனான இலக்குவனும், அவன் எதிர் முடுகி - அவன் எதிரிலே விரைந்து சென்று, நெடு திசை - பெரிய (எட்டுத்) திக்குக்களும், செவிடு எறிதர - உரத்த சத்தத்தால் அலைவுற்று, விசை கெழு திண் போர் தொழில் புரிதலும் - வேகம் நிரம்பிய போர்த் தொழிலைச் செய்யவும், உலகு - உலகமெல்லாம், கடும் புகையொடு - கொடிய புகையொடு, சிகை அனல் - கொழுந்தோடு கூடிய நெருப்பு, பொதுளியது - மண்டிற்று. ஆல், அசை.

அனிகம் - சேனை; வடசொல்; அயோத். 971, 1095, 1116. கவிகுலம் (முன் செய்யுள்). அலம்வரல் - மனம் சுழலுதல்;

'வெறியோ டலம்வரும் யாய்' (ஐங். ஐம். 20). தீர்த்தன் - பரிசுத்தன்; 'புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்' (மணி. 5 - 98). செவிடெறிதல், செவிடு செல்லல், செவிடுபடுதல்; 'திசைகளோடு மலை செவிடெறிந்து' (யுத்த. 1997); 'செவிடு செல்லக் கிழிந்தன திசைகள்' (யுத்த. 2040) 'செவி செவிடு படுபு முடிகளதிர' (பரிபா. 2, 39). பொதுளுதல் - நெருங்குதல்; மண்டுதல்; தழைத்தலும் ஆம்; 'இருள்படப் பொதுளிய' (திருமுருகு. 10).

பி - ம். 1. ஆர்த்தன; முடன்றமரரும்.

2. வேர்த்தது தரையிடை; அலம் வரலும் விடுகணை; அடுதிறலோன், சிந்தின னடுதொழிலோன்.

3. முலகநெடும் புகையொடு. 20

## வீடணன் தூண்டுதலும் இலக்குவன் கடும்போர் புரிதலும்

3071. வீடண னமலனை விறல்கெழுபோர்
விடலையை யினியிடை விடலுளதேல்
சூடலை துறுமலர் வாகையெனத்
தொழுதன னவளவி லழகனுமக்
கோடணை வரிசிலை யுலகுலையக்
குலவரை பிதிர்பட நிலவரையில்
சேடனும் வெருவுற வுருமுறழ்திண்
தெறுகணை முறைமுறை சிதறினனால்.

(அப்பொழுது) வீடணன் - வீடணன், 'போர் விறல் கெழு விடலையை - (தான் முன் செய்த) போர்களில் வெற்றி மிக்க வீரனான இந்திரசித்தை, இனி - இனிமேல், இடை விடல் உளதேல் - போரின் இடையிலே தப்பிப் போக விடுதல் அமையுமானால், துறு வாகை மலர் சூடலை - நெருங்கிய வாகை மலர் மாலையை (நீ) சூடுவாயல்லை' என - என்று (இலக்குவனிடம்) சொல்லி, அமலனை - அழுக்கற்றவனாகிய இலக்குவனை, தொழுதனன் - வணங்கினான்; அ அளவில் - அவ்வாறு சொன்ன அளவில், அழகனும் - அழகிய திருமேனியையுடைய இலக்குவனும், அ கோடணை வரி சிலையை - அந்த முழக்கம் நிறைந்ததும் கட்டுக்கள் அமைந்ததுமான தன் வில்லில், உலகு உலைய - உலகங்களெல்லாம் நிலை கெடவும், குலவரை பிதிர்பட - எட்டுச் சிறந்தமலைகளும் (மணல்) உதிரவும், நிலவரையில் - பூமி

யில், சேடனும் வெருவுற - (அதனைச் சுமந்து கொண்டிருக்கும்) ஆதிசேடனும் அச்சமடையவும், உரும் உறழ் திண்தெறு கணை - இடியை ஒத்த வலிய (பகைவரைச்) சுடுகின்ற அம்புகளை, முறை முறை - வரிசை வரிசையாக, சிதறினன் - இறைத்தான். ஆல், அசை.

விறல் கெழு போர் விடலை என்றது இந்திரசித்தை; இவ்வாறு பகைவனைப் புகழ்ந்தது அவன் அரிய திறலை இலக்குவன உளங் கொளற்கு என்க. இடைவிடல் - முன் பிரமாத்திரப் படலத்திலும், பின் நிகும்பிலைப் படலத்தில் அவன் போக்குக் காட்டி வானத்தில் மறைந்து தப்பியதைச் சுட்டியது. வாகை சூடல்; வெற்றிக்குறி. துறுதல் - நெருங்குதல்; 'துறுமலரவிழ் குழலாய்' (சிலப். 7, 42). இலக்குவனை அழகன் என்றமை; அவன் மேனியழகோடு உள்ளத்தின் அழகையும் கொண்டு என்க. கோடணை, கோஷணை என்பதன் திரிபு; பெரு முழக்கம்; 'கோடணை போக்கி' (பெருங். உஞ்சைக். 49, 85). குலவரை - அஷ்ட குலாசலங்கள். பிதிர்படுதல் - உதிர்தல்; 'பிதிர்ந்து போயின பிறங்கல்களேழும்' (கந்த பு. முதனாட். 50). தெறுதல் - சுடுதல்; 'நீங்கிற் றெறூஉம்' (குறள். 1104). சிதறுதல் - இறைத்தல்; 'செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி' (திருமுருகு. 231).

பி - ம். 2. தொழுதன னளவிலதக்.
4. சிதறிடலும்.

21

## போர் நிகழ்ச்சி

3072. ஆயிர வளவின வயின்முகவா
யடுகணை யவன்விட விவன்விடவத்
தீயினு மெரிவன வுயிர்பருகச்
சிதறின கவிகளோ டினநிருதர்
போயின போயின திசைநிறையப்
புரள்பவர் முடிவிலர் பொருதிறலோர்
ஏயின ரொருவரை யொருவர்குறித்
தெரிகணை யிருமழை பொழிவனபோல்.

ஆயிரம் அளவின - ஆயிரம் என்ற அளவினையுடைய, அயின் முக வாய் அடு கணை - கூரிய முனை பொருந்திய கொல்லவல்ல

அம்புகளை, அவன் விட - இந்திரசித்து விட, இவன் விட - (அவ்வாறே) இலக்குவனும் எதிர்விட, அ தீயினும் எரிவன - அந்த (யுக முடிவில் எரியும்) நெருப்பைவிட எரியும் தன்மையுடைய அவை, உயிர் பருக - இருபக்கங்களிலும் உள்ளவர்களின் உயிர்களைக் குடிக்க, கவிகள் சிதறின ஓடின - வானரங்கள் நாலா பக்கங்களிலும் சிதறுண்டு ஓடின; நிருதர் - அரக்கர்களும், போயின போயின திசை - சென்ற சென்ற திசைகளிலெல்லாம், நிறைய - அத் திசைகள் நிறையும்படி, புரள்பவர் முடிவிலர் - (நெருப்பில் அகப்பட்டதால்) தரையிற் கிடந்து புரள்பவர் எண்ணிக்கையற்றவராயினர்; (அன்றியும்), பொருதிறலோர் - போர்த்திறம்வாய்ந்த அவ்விரு தலைவர்களும், ஒருவரை ஒருவர் குறித்து - ஒருவர் மற்றொருவரைக் குறி வைத்து, இரு மழை பொழிவன போல் - பெரிய மழைகளைப் பொழிவன போல, எரி கணை - நெருப்புச் சுவாலையுடன் கூடிய தங்கள் அம்புகளை, ஏயினர் - ஏவினார்கள்.

இந்திரசித்து, இலக்குவன் ஆகிய இரு வீரர்களும் பகைப் படைகளைத் தம் கணைகளால் அழித்ததோடு, ஒருவர் மற்றொருவரைக் குறி வைத்துப் பாணம் விட்டனர் என்பது கூறப் பெற்றது. அயில் முகம் - கூரிய முனை. அயில் - கூர்மை; 'ஆண் மகன் கையி லயில்வாள்' (நாலடி. 386); அயில், இரும்பும் ஆம். எரிகணை 'எரிகணை யிருமழை பொழ்வன போல்' என்று இங்குக் கூறியபடியே மூல நாலில் உவமை கூறப் பெற்றுள்ளது.

பி - ம். 1. அவன் முகன்வாய்; யவன்விடு கடுவிடமத்; விவன்விடலும்.
2. பருகக் கவிமுசு நிருத ரொடிவை சிதறிப்.
3. போயினதிசை திசையனனிறைய.
4. ஏயின வொருவரை; சொரிவனபோல். 22

3073. அற்றன வனல்விழி நிருதன்வழங்
கடுகணை யிடையிடை யடலரியின்
கொற்றவன் விடுகணை முடுகியவ
னுடல்பொதி குருதிகள் பருகினகொண்
டுற்றன வொளிகிளர் கவசநுழைந்
துறுசில தெறுசில வநுமனுடல்
புற்றிடை யரவென நுழையநெடும்
பொருசர மவனவை யுணர்கிலனால்.

அனல் விழி நிருதன் - நெருப்பைச் சிந்தும் விழிகளையுடைய அரக்கனான இந்திரசித்து, வழங்கு அடு கணை - செலுத்தின கொல்லும் இயல்பையுடைய அம்புகள், இடை இடை அற்றன - இடையிடையே (இலக்குவனின் கணைகளால் அறுப்புண்டு) அற்றுப் போயின; (ஆனால்), அடல் அரியின் கொற்றவன் - வலிமை மிக்க சிங்கத்தைப் போன்ற வெற்றியையுடைய இலக்குவன், விடு கணை - விட்ட அம்புகள், முடுகி - விரைந்து சென்று, அவன் உடல் பொதி குருதிகள் பருகின கொண்டு உற்றன - அவன் உடலிற் பொதிந்துள்ள இரத்தங்களைக் குடித்துக் கொண்டு, (அங்கே) பொருந்தின; நெடும் பொரு சரம் - (இந்திரசித்து விட்ட) நீண்ட, போர் புரியும் அம்புகள், ஒளி கிளர் கவசம் நுழைந்து உறுகில - ஒளி விளங்கும் (இலக்குவனின்) கவசத்துள் புகுந்து (அவனுக்கு ஊறு) புரியவில்லை; தெறுகில - (அவன் உடலைக்) கிழிக்கவுமில்லை; (ஆனால் அவை) அநுமன் உடல் - அநுமனின் உடலினுள், புற்றிடை அரவு என - புற்றினுட் புகும் பாம்புகள் என்னும்படி, நுழைய - புக, அவன் - அவ் அநுமன், அவை உணர்கிலன் - அவற்றை உணரவில்லை. ஆல்: அசை.

அநுமன் இலக்குவனைச் சுமந்து நின்றமையால் இந்திரசித்தின் சரங்கள் இலக்குவனின் கவசத்தைப் பிளக்கும் வலி பெறுவிடினும், அநுமனின் திருமேனியைப் பொத்து அவன் உடலுள் புகுந்தன; ஆனால் அநுமன் அவற்றைப் பொருட்படுத்தவில்லை என்பது கூறப் பெற்றது. புற்றிடை அரவு - அம்புக்கு உவமை.

பி - ம். 1. விடுமடுகணை; யிடையிடை யரியவிளங்.
4. புற்றுறையரவென.

23

3074. ஆயிடை யிளையவன் விடமனையா
னவனிடு கவசமு மழிவுபடத்
தூயின னயின்முக விசிகநெடுந்
துளைபட விழிகனல் சொரியமுனிந்
தேயின நிருதன தெரிகணைதா
மிடனில படுவன விடையிடைவந்
தோய்வுறு வனலது தெரிவுறலா
லூறின ரிமையவ ருவகையினால்.

ஆயிடை - அப்பொழுது, இளையவன் - இலக்குவன், விடம் அனையான் அவன் - விஷம் போன்றவனான அவ்விந்திரசித்து, இடு கவசமும் - (உடலில்) இட்டுள்ள கவசம், அழிவுபட - அழிந்து போகுமாறு, அயின் முக விசிகம் - கூரிய முனையையுடைய அம்பு களை, நெடு துளைபட -(அவன் உடலில்) பெரிய துளைகள் விழுமாறு, வீசினன் - வீசினான்; (அதனால்), விழி கனல் சொரிய- தன் விழிகள் நெருப்பைச் சொரிய, முனிந்து - கோபித்து, நிருதன் - அரக்க னுடைய, தெரி கணை ஏயின தாம் - தெரிந்து விடப்பட்ட அம்புகள், இடன் படுவன இல - குறித்த இடங்களில் படுவன அலவாய், வந்து இடையிடை ஓய்வு உறுவன - வந்து இடையிடையே நின்று போவனவாயின; அது தெரிவுறலால் - அது அறியப்படலால், இமையவர் உவகையினால் உரறினர் - தேவர்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரித்தனர்.

இலக்குவன் கணைகள் இந்திரசித்தின் உடலைத் துளைத்தன; ஆனால், இந்திரசித்தின் கணைகள் பயனற்றனவாயின என்று கூறப்பெற்றது. உரறுதல் - முழங்குதல்; 'உருமுரறு கருவிய பெருமலை பிறபட' (மலைபடு. 357).

பி - ம். 1. விடநினைவா னவனிடு.

2. ஏயினனிருதன்; நெடுந்திரள்பட; வழிபுனல் சொரிய முகந்து; விழியனல்.

3. தாளிடனில படுவன; மிடனிலை படுவன. 24

3075. வில்லினின் வலிதர லரிதெனலால்
வெயிலினு மனலுமி ழயில்விரைவில்
செல்லென மிடல்கொடு கடவினன்மற்
றதுதிசை முகன்மக னுதவியதால்
எல்லினும் வெளிபட வெதிர்வதுகண்
டிளையவ னெழுவகை முனிவரர்தம்
சொல்லினும் வலியதொர் சுடுகணையால்
நடுவிரு துணிபட வுடறினனால்.

(அப்பொழுது இந்திரசித்து) வில்லினின் - வில்லினால், வலி தரல் - (இலக்குவனை) வெல்லல், அரிது எனலால் - இயலாது ஆகையால், வெயிலினும் அனல் உமிழ் - வெயிலைக் காட்டிலும்

கொடிய அனலைக் கக்ருகிற, அயில் - வேலாயுதத்தை, 'விரைவில் செல் என-விரைவில் செல்வாயாக' என்று சொல்லி, மிடல் கொடு-வலிமையுடன், கடவினன் - செலுத்தினான்; அது - அந்த வேல், திசைமுகன் மகன் - நான்முகனின் மகனான புலத்தியன், உதவிய தால் - கொடுத்ததால், எல்லினும்-சூரியனைவிட, வெளிபட-வெளிச்சம் உண்டாக, எதிர்வது - தன்னை நோக்கி வருவதை, இளையவன் கண்டு-இலக்குவன் பார்த்து, எழு வகை முனிவர் தம்-ஏழு பிரிவினரான சிறந்த முனிவர்களின், சொல்லினும் - சாப வார்த்தையைக் காட்டிலும், வலியது ஓர் சுடு கணையால்-வல்லமை பெற்றதான ஒரு சுடுகின்ற அம்பினை, நடு - (இந்திரசித்தின் வில்லின்) இடையிலே, இரு துணிபட - அஃது இரண்டு துண்டுகளாக, உடறினன் - செலுத்தினான். மற்று, ஆல் : அசைகள்.

அயில் - வேல்; 'அயில்புரை நெடுங்கண்' (ஞானு. 33). திசைமுகன் மகன் - புலஸ்தியன்; சிவபிரான் என்று கூறுவாரும் உளர். இவற்றிற்கு ஆதாரம் கிடைக்கவில்லை. இவ்வாறு இந்திரசித்து இப் போரில் வேலாயுதம் உபயோகித்தனன் என்பதற்கும் மூல நூலில் ஆதாரமில்லை. முனிவர் சொல்லினும் கணை வலியது; (பால. 5) 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. 418); 'வைதா லன்ன வாளிகள்' (ஆரணிய. 736); சொல் - சாபச் சொல். எழுவகை முனிவர்; அத்திரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கீரஸர். கணையால் : வேற்றுமை மயக்கம். உடற்றுதல் - பிரயோகித்தல்; 'பலகோடி பாண முடற்றினன்' (பாரத. பதின்மூ. 24); இங்கு உடறினன் என்றாயிற்று.

பி - ம். 1. வில்லினின் வெல்லுதல்; வில்லினின் விறல் கொல்வதரியதென; வலிதா வருமையினல்; வெயிலினின் மிளிர்வதோரயில்.

2. சொல்லென மீடல்; முடுகினது முற்றிசை முகன் மகன்.

3. எல்லியை வெளிபட வருவதுகான்...... முனிவர்கடம்; முனிவர்தரும்.

4. உடலிருதுணிபட வுதவினனல்; வுரறினனல். 25

3076. ஆணியி னிளையவன் விசிகநுழைந்
தாயிர முடல்புக வழிபடுசெம்
சோணித நிலமுற வுலறிடவுந்
தொடுகணை விடுவன மிடல்கெழுதின்

பாணிகள் கடுகின முடுகிடலும்
 பகலவன் மருமக னடுகணையின்
தூணியை யுருமுறழ் பகழிகளால்
 துணிபட முறைமுறை சிதறினனால்.

ஆணியின் இளையவன் - (உலகுக்கு) அச்சாணிபோன்ற இளைய குமாரனான இலக்குவனுடைய, ஆயிரம் விசிகம் உடல் நுழைந்து புக - ஆயிரம் அம்புகள் (இந்திரசித்தின்) உடலினுள் நுழைந்து உட்புக, அழிபடு செம் சோணிதம்-(உடலிலிருந்து) இழிந்து விழும் சிவந்த குருதி, நிலம் உற - பூமியில் விழ, உலறிடவும் - அவன் (உடல்) வற்றிப்போக, (அதற்கு எதிராக), தொடு கணை விடுவன - வில்லில் தொடுத்த அம்புகளைச் செலுத்துவனவாகிய, மிடல் கெழு திண் பாணிகள் - வலிமை பொருந்திய (இந்திரசித்தின்) திண்ணிய கைகள், முடுகிடலும் - விரைந்து தொழிற்படலும், உரும் உறழ் - இடியை ஒத்த, கடுகின பகழிகளால் - விரைந்து செல்லும் (இந்திரசித்து தன்) அம்புகளால், பகலவன் மருமகன் - சூரியனின் வழித் தோன்றலான இலக்குவனின், அடு கணையின - கொல்லவல்ல அம்புகளையுடைய, தூணியை - அம்புப் புட்டிலை, துணிபட - பிளந்துபோக, முறை முறை - பலமுறைகள், சிதறினன் - (அவ்வம்புகளைத்) தூவினன். ஆல், அசை.

இந்திரசித்தின் உடல் உலறிட, அவன் இலக்குவன் தூணியைப் பகழிகளால் துணிபடச் சிதறினன் என்றியைக்க. 'ஆணி - பெருமாள்' என்பது பழையவுரை; அநுமனை 'ஆணி' என்றமை போல (கிட்கிந்தா. 62); (சுந்தர. 591). ஆணியின் விசிகம் நுழைந்து, என்று கொண்டு, ஆணி அறைந்தது போல அம்புகள் உடலினுள் புகுந்து என்று கொள்ளலும் ஆம். சோணிதம் - குருதி. உலறுதல் - வற்றுதல்; (அகநா. 19). இலக்குவனைப் பகலவன் மருமகன் என்றது அவனை 'மநுவின் கோமகன்' என்றது போல (கிட்கிந்தா. 659).

பி - ம். 1. ஆணியென்னிளையவன்; நிலையவன்; நிலையென; உடல்புக வழிவுபடும்.
2. ஒல்கிடவும் தொடுகணை; தொடுகணை தொடுவன.
3. எரிகணையின், அடுகணைவான்,
4. தூணியி னுருமுறழ். 29

3077. தேருள தெனினிவன் வலிதொலையா
னெனுமது தெரிவுற வுணருறுவான்
போருறு புரவிகள் படுகிலவால்
புனைபிணி துணிகில பொருகணையால்
சீரிது பெரிதித னிலைமையெனத்
தெரிபவ னொருசுடு தெறுகணையால்
சாரதி மலைபுரை தலையைநெடுந்
தரையிடை யிடுதலும் நிலைதிரிய.

'தேர் உளது எனின் - (இவனுடைய) தேர் (நன்னிலையில்) உள்ளது என்றால், இவன் வலி தொலையான் எனும் அது - இவன் தன் வலிமையில் கேடுறான்' என்ற அவ்வுண்மையை, தெரிவுற உணர்வு உறுவான் - விளக்கமுற அறிந்து கொள்ளும் அறிவைப் பெற்ற இலக்குவன், 'பொரு கணையால்-போரிடும் என் அம்புகளால், போர் உறு புரவிகள் படுகில - போரிலுற்ற (இத் தேரின்) புரவிகள் இறக்கவில்லை; புனை பிணி துணிகில - அவற்றின்மீது புனையப் பெற்ற கட்டுக்கள் பிளவுபடவுமில்லை; இது சீரிது - இது சிறப்பா யுள்ளது! இதன் நிலைமை பெரிது - இதன் நிலைமை பெரியதா யிருக்கிறது', என தெரிபவன் - என்று அறிந்துகொண்டு, (இலக்குவன்), சுடு - சுடுதற்குரிய, ஒரு தெறு கணையால்-கொல்லும் ஒரு அம்பினால், சாரதி - தேரோட்டியின், மலைபுரை தலையை - மலையை ஒத்த தலையை, நிலை திரிய - அதன் உரிய இடம் மாறி வேறாக, நெடும் தரையிடை - நீண்ட தரையிடத்தில், இடுதலும் - தள்ளியிட்டபோது; ஆல்: அசை.

இச் செய்யுள் குளகமாய் அடுத்த செய்யுளிலுள்ள (தேர்) போன்றது என்பததோடு முடியும். தேரின் தனிச் சிறப்பை இலக்குவன் உணர்ந்து, அதனை அழிப்பதில் முயலாமல் அதன் சாரதியைக் கொன்றான் என்று இச் செய்யுளில் கூறப்பெற்றது. புனைபிணி - புரவிகளுக்குரிய அலங்காரங்கள். தெறுதல் - கொல்லு தல்; நிலை திரிய என்பதனை இடுதலும் என்றதற்குப் பின்னேயும் கொண்டு பொருள் காணலாம்.

பி - ம். 1. வலிதொலையா திது; தெரிகுற வுணர்குறுவான்.

2. போரறு புரவிகள், போரரு புரவிகள், படுகில தன்பிணி துணிகில வதுபொரு; படுகிலதின், தன்பணி; புனைபிணி துறுகில.

3. தெறுசுடுகணையால்.

4. யிடுதலு முறை திரிய.

## வேறு

### பாகன் அழிந்த தேரின் நிலைமை

3078. உய்வினை யொருவன் றூண்டா
துலத்தலிற் றவத்தை நண்ணி
ஐவினை நலிய நைவா
னறிவிற்கு முவமை யாகி
மெய்வினை யமைந்த காமம்
விற்கின்ற விரகிற் றேராம்
பொய்வினை மகளிர் கற்பும்
போன்றதப் பொலம்பொற் றிண்டேர்.

(அப்பொழுது), அ பொலம் பொன் திண் தேர் - பொன்னாற் செய்த அழகிய அந்த வலிய தேரானது, தவத்தை நண்ணி - (ஒருவன்) தவநிலையை அடைந்து, ஐவினை நலிய - ஐந்து புலன் களாலும் நுகர்கின்ற செயல்கள் யாவதும் அழிவதற்கு, உய்வினை ஒருவன் - நல்வழியிற் செலுத்தும் ஓர் ஆசான், தூண்டாது - அம் மாணவனை நல்வழியிற் செல்லுமாறு தூண்டாமல், உலத்தலின் - (அவன்) இறந்ததனால், (வருந்துகின்ற மாணவனின்) அறிவிற்கும் - புத்திக்கும், உவமை ஆகி - உபமானமாகி, மெய்வினை அமைந்த காமம் - மெய்ச்செயல் பொருந்திய காமத்தை, விற்கின்ற - பணத்துக் குக் கொடுக்கின்ற, விரகிற்றோர் ஆம் பொய்வினை மகளிர் - உபாயத தினை யுடையவராகிய பொய்ச் செயல்களைச் செய்யும் வேசை மகளிரின், கற்பும் போன்றது - கற்பையும் போன்றதாயிற்று.

சாரதியற்ற தேரின் நிலை ஆசானற்ற இளந்துறவியின் அறிவுக்கும், பொய் மகளிரின் கற்பிற்கும் உவமையாகி ஒரு நிலை யில் நில்லாமல் தடுமாறலாயிற்று என்று கூறப் பெற்றது. 'உய்வினை யொருவன் தூண்டாது' என்பதைத் தேருக்கு ஆக்கி, 'உய்வினை யொருவன் உலத்தலின் என்பதற்குத் தூண்டும் செயலை உடைய சாரதி ஒருவன், தூண்டாது - தேரைச் செலுத் தாமல், உலத்தலின் - இறந்ததால்' என்றும் பொருள் கொள்ள லாம். உலத்திலின் தவத்தை என்று கூட்டி அழிதலில்லாத தவத்தை என்றும் பொருளமைக்கலாம். ஐவினை நலிய நைவான், என்றதற்கு, இந்திரியங்களின் செயல்கள் இவனை நலிவிக்க,

அதனால் நலிவான் என்றும் பொருள் கொள்க. ஓர் இளம் சீடன் தவ நிலையில் தன்னை நிறுத்தும் ஆசான் உள்ளவரையில் யாதொரு கேடுமின்றித் தவ நெறியில் நின்று, அவ்வாசான் விலகின மாத்திரத்தில் இந்திரிய நிக்ரகம் முற்றிலும் கைவரப் பெருதவனாதலின், அறிவுகெட்டு, நிலை தடுமாறுவான். அன்றியும், காமம் விற்கின்ற வேசையர் மனம் ஒரு நிலையுருமல் பலரிடத்தும் சஞ்சரிக்கும். இவ்விரண்டும் சாரதியற்ற தேர் நிலையுருமல் கண்டவிடம் சென்றமைக்கு உவமைகளாயின. உலத்தல் இல் தவம் என்று கூட்டி, அழிவில்லாத தவம் என்பாரும் உளர். மெய்வினைக் காமம் என்றதால் அதன் தூய தன்மையும், பொய் வினை மகளிர் அக் காமத்தை விற்கின்ற விரகிற்ருேர் என்றதால் அவர்களின் தூய்மையற்ற தன்மையும் கூறப் பெற்றன. பரத்தையர் கற்பு அழிவது தேர் அழிவதற்கு உவமையாம்.

பி - ம். 1. நைவினை யொருவன்; கைவினை யொருவன்; பயத்தைநண்ணி.

2. அறிவிற்குவமையாகி.

3. விரகிற் ருேலாப்; வினைவதோராப்.

4. கற்பே போன்றதப். 28

## இந்திரசித்து மேலும் போர் புரிதல்

3079. துள்ளுபாய் புரவித் தேரும்
முறைமுறை தானே தூண்டி
அள்ளினன் பறிக்குந் தன்பே
ராகமே யாவ மாக
வள்ளன்மே லநுமன் றன்மேற்
மற்றையோர் மற்றின் டோண்மேல்
உள்ளுறப் பகழி தூவி
யார்த்தன னெவரு முட்க.

(இந்திரசித்து), துள்ளு பாய் புரவி தேரும் - துள்ளிப் பாய்கின்ற குதிரைகள் கட்டிய தேரையும், தானே - தானாகவே, முறை முறை தூண்டி - அடிக்கடி செலுத்தி, தன் பேர் ஆகமே - தன் பெரிய உடலே, அள்ளினன் பறிக்கும் ஆவமாக - அம்புகளைக் கைகளால் வாரிப் பிடுங்கி யெடுக்கும் தூணியாகக் கொண்டு

எவரும் உட்க - எவரும் அஞ்சும்படி, வள்ளல் மேல் - வள்ளலான இலக்குவன் மீதும், அநுமன் தன்மேல் - (அவனைச் சுமந்து கொண்டிருந்த) அநுமன் மீதும்; மற்றையோர் மல் திண் தோள் மேல் - பிறரின் வலிய திண்ணிய தோள்கள் மீதும், உள் உற - (அவர் உடல்களின்) உள்ளே புக, பகழி தூவி - அம்புகளை வீசி, ஆர்த்தனன் - பெருமுழக்கஞ் செய்தான்.

இந்திரசித்து தானே தேரை ஓட்டிக்கொண்டு, தன்மீது பதிந்திருந்த அமபுகளை வாரிப்பறித்து அவற்றைக் கொண்டே பகைவர்களை அடித்தான் என்றனர்; ஒப்பு: 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்' (குறள். 774). துள்ளு புரவி, பாய் புரவி என இயைக்க. ஆவம் - தூணி. அள்ளினன் - முற்றெச்சம்

பி - ம். 1. துள்ளுவான் புரவித் திண்டேர்.

2. அள்ளினனம்புதன் பேராகமே; பறிக்குந்திண் பேராகமே.

3. மாத்திண்டோண்மேல்.

4. தூண்டி யார்த்தனன். 29

## தேவர் இந்திரசித்தின் திறனை வியத்தல்

3080. வீரரென் பார்கட் கெல்லாம்
முன்னிற்கும் வீரர் வீரன்
பேரரென் பார்க ளாகும்
பெற்றியிற் பெற்றித் தாமே
சூரரென் றுரைக்கற் பாலார்
துஞ்சும்போ துணர்விற் சோராத்
தீரரென் றமரர் பேசிச்
சிந்தினர் தெய்வப் பொற்பூ.

(இவன்), 'வீரன் என்பார்கட்கு எல்லாம் - வீரன் என்று சொல்லுபவர்க்குள், முன் நிற்கும் வீரர் வீரன் - முதற்கண் நிற்கும் மகா வீரனுவான்; பேரர் என்பார்கள் ஆகும் பெற்றியில் - பேர் பெற்றவர் என்னப்படுபவரிடத்து உண்டாகும் வீரப் பான்மையைப் போன்ற, பெற்றித்து ஆமோ - இயல்பினை யுடையதோ? (இவனுடைய வீரம்); துஞ்சும்போது - இறக்கும்

போதும், உணர்வில் சோரா - வீர உணர்ச்சியில் தளராத, தீரர் - தைரியமுடையவர், சூரர் என்று உரைக்கற்பாலர் - சூரர் என்று பகரத்தக்கவர்', என்று - என்று, அமரர் பேசி - தேவர் புகழ்ந்து கூறி, தெய்வம் பொன் பூ சிந்தினர் - தெய்வத்தன்மை வாய்ந்த பொற்பூவை யிறைத்தார்கள்.

பி - ப். 1. வீரனென்பார்கட் ; இனிமற்றிவ் வீரர் வீரன் ; மற்றவ் வீரன.
2. பேரெனென்பார்களாக; பேரென்பார்களாக, போரென்பார்களல்லாற்.
3. உணர்விற் சோராத் தீரன்.
4. தீரனென்றமரர் ; அமரர் செப்பிச் ; சிந்தினர். 30

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

அச்சென வாக முன்பின் றோன்றலு மருத மெய்யன்
தச்சன பகழி மாரிக் கெண்ணிலாத் தகவுந் தந்தீப்
பச்செனு மரத்த வாறு பெருகவும் பதையா நின்றான்
நிச்சயம் போரி னாற்ற லோய்வில னெஞ்சு மஞ்சான்.

## இளைய பெருமானும் அவன் ஆற்றலை வியத்தல்

3081. எய்தவன் பகழி யெல்லாம்
பறித்தீவ னென்மே லெய்யும்
கைதடு மாறா துள்ள
முயிரினுங் கலங்கா தியாக்கை
மொய்கணை கோடி கோடி
மொய்க்கவு மிளைப்பொன் றில்லான்
ஐயனு மிவனே டெஞ்சு
மாண்டொழி லாற்ற லென்றான்.

ஐயனும் - இலக்குவனும், (இந்திரசித்தின் ஆற்றலைக் கண்டு), 'எய்த-யான் விடுத்தனவான, வல் பகழி எல்லாம்-வலிய அம்புகள் எல்லாவற்றையும், இவன் பறித்து என்மேல் எய்யும் - இவ் இந்திரசித்து (தன் உடலிலிருந்து பறித்தெடுத்து) என்மீது (திரும்பவும்) விடுகிறான்; கை தடுமாறாது - கை (சிறிதும்) தடுமாற்றமடையாமல், உள்ளம் உயிரினும் கலங்காது - உள்ளம் உயிர் கலக்கமடையாதது போலத் தானும் கலங்காது, யாக்கை - உடலிலே

மொய் கணை - நெருங்கிய அம்புகள், கோடி கோடி மொய்க்கவும் - கோடி கோடியாக (உடலில்) நெருங்கியிருக்கவும், இளைப்பு ஒன்று இல்லான் - இளைப்பு என்ற ஒன்று தன்னிடம் வரப்பெறுதவனாய் நிற்கின்றான்; ஆண் தொழில் ஆற்றல் - வீர ஆற்றல், இவனோடு எஞ்சும் - இவனோடு ஒழிந்து விடும்' என்றான் - என்று கூறி வியந்தான்.

'ஐயனும் என்றது, பெருமாள் என்றும், இளவல் என்றும், ஐய' என்று வீடணன் விளித்ததென்றும் ஆம்' என்பது 'பழையவுரை. உயிரின்; இன், ஐந்தாம் வேற்றுமை ஒப்புமைப் பொருளது. எஞ்சுதல் - ஒழிதல்; (குறள். 582).

பி - ம். 1. எய்தனன்; பறித்தவன்.

2. உயிரினங் கலங்கா, உயிர் நின்று கலங்காது, உயிரின்றுங் கலங்காது.

3. மொய்க்கவும் முடிகின்றில்லான்; மொய்க்கவு மயர்ந்திலானென்று.

4. ஆற்ற வென்றான். 31

### வீடணன் கூற்று

3082. தேரினைக் கடாவி விண்மேற்
செல்லினுஞ் செல்லுஞ் செய்யும்
போரினைக் கடந்து மாயம்
புணர்க்கினும் புணர்க்கும் போயக்
காரினைக் கடந்து வஞ்சங்
கருதினுங் கருதும் காண்டி
வீரமெய்ப் பகலி னல்லால்
விளிகில னிருளின் வெய்யோன்.

(அப்பொழுது வீடணன் இலக்குவனை நோக்கி), 'வீர! - வீரனே! (இவன்) தேரினை கடாவி - தேரைச் செலுத்தி, விண் மேல் செல்லினும் செல்லும் - (பிறரறியாமல்) வானத்தின்மீது சென்றாலும் செல்லுவான்; செய்யும் போரினை கடந்து - தான் செய்யும் போரைக் கைவிட்டு, மாயம் புணர்க்கினும் போய் புணர்க்கும் - மாயச் செயல்களைச் செய்தாலும் போய் செய்வான்; அ காரினை கடந்து - அந்த மேகங்களைத் தாண்டி, வஞ்சம் கருதினும் கருதும் - வஞ்சனை இயற்ற எண்ணினாலும் எண்ணுவான்; காண்டி -

காண்பாயாக; வெய்யோன் - கொடியவனுன அவ் இந்திரசித்து, பகலின் அல்லால் - பகலிலே அன்றி, இருளின் - இருளிலே, விளிகிலன் - சாகான்; மெய் - இஃது உண்மையாகும்.

இது அடுத்த செய்யுளில் உள்ள 'இயம்ப' என்பதனேடு முடியும். வீடணன் இந்திரசித்தின் மாயச் செயல்களை எடுத்துக் காட்டியும், இரவு வந்தால் அவனை வெல்வதரிது என்பதைக் கூறியும், அப்பொழுதே அவனை முடித்துவிட வேண்டுமென்று இலக்குவனை இச்செய்யுளில் வற்புறுத்துகின்றுன். கடத்தல் - நீங்குதல்; 'பிறப்பிறப்பைக் கடந்தார்' (திருவாச. 5, 24).

பி - ப். 1. கடாவி வானிற்.

2. மாயை புணர்க்கினும்; புணர்க்குமம்பால்; புணர்க்குமப்பால்.

3. காரிகைக் கலந்து; கடந்தும் வஞ்சம்; கருதுங் காட்டி.

4. இருளின் வெல்வான். 32

## இலக்குவன் விடை

3083. என்றெடுத் திலங்கை வேந்த
னிளையவற் கியம்ப வின்றே
பொன்றுவ தல்லா லப்பா
லினியொரு போக்கு முண்டோ
சென்றுழிச் செல்லு மன்றே
தெறுகணை வலியில் தீர்ந்தான்
வென்றியிப் போதே கோடுங்
காணென விளம்பு மெல்லை.

(இவ்வாறு) இலங்கை வேந்தன் - இலங்கையின் இறைவனுன வீடணன், இளையவற்கு - இலக்குவனுக்கு, என்று - (இவ்வாறு) கூறி, எடுத்து இயம்ப - தெரிந்தெடுத்துச் சொல்ல, (இலக்குவன்), 'இன்றே பொன்றுவது அல்லால் - (இந்திரசித்து) இன்றைத் தினமே இறப்பது அன்றி, அப்பால் - பிறகு, இனி ஒரு போக்கும் உண்டோ - இனிமேல் வேறு செயல் உண்டோ? தெறு கணை - அழிக்கும் (என்) அம்பு, வலியில் தீர்ந்தான் - வலிமையில் (இப்பொழுதே) ஒடுங்கினவனுன இந்திரசித்து, சென்றுழி - போனவிட

மெல்லாம், செல்லும் அன்றே - செல்லும் அன்ரு? இப்போதே வென்றி கோடும் - இப்போதே வெற்றி கொள்வோம்; காண் - பார்ப்பாயாக' என - என்று, விளம்பும் எல்லே - சொன்ன போதே.

இது குளகமாக அடுத்த செய்யுளிலுள்ள 'உதித்தனன்' என்பதனேடு இயையும்.

பி-ம். 1. வேந்தற்கிளேயவற் கியம்ப; வேந்துக்...வின்னே, இயம்பவின்னே; இயம்ப வொன்றே.

2. பொன்றுவ தல்லாலன்றியினி.

3. தெரிகணே; வலியிற் றிர்ந்தால்.

4. வென்றியிப் பொழுதே; விளம்பலுற்ருன்; விளம்பும் வேலே. 33

## சூரியோதயம்

3084. செம்புனற் சோரிச் செக்கர்
திசையுறச் சேற லாலும்
அம்பென வுற்ற கொற்றத்
தாயிரங் கதிர்க ளாலும்
வெம்புபொற் றேரிற் ருேன்றுஞ்
சிறப்பினு மரக்கன் வெய்யோன்
உம்பரிற் சென்ருேனேடொத்
துதித்தன னருக்க னுப்பால்.

(இஃது இங்கு இங்ஙனமாக), உப்பால் - அப் பக்கத்திலே, அருக்கன் - சூரியன், செம்புனல் சோரி - (இந்திரசித்தின் உடலிலிருந்து வெளிப்பட்ட) செந்நீரான குருதி போன்ற, செக்கர் திசையுற - செவ்வானம் படர்ந்த (கீழ்த்) திசையைப் பொருந்த, சேறலாலும் - செல்லுதலாலும், அம்பென உற்ற - (ஒவ்வொரு கிரணமும்) ஒவ்வொரு அம்பு என்று சொல்லுமாறு அமைந்த, கொற்றம் - வெற்றியையுடைய, ஆயிரம் கதிர்களாலும் - தனக்குரிய ஆயிரக் கணக்கான கிரணங்களாலும், வெம்பு - வெப்பமடைகிற, பொன் தேரில் தோன்றும் சிறப்பினும் - பொன் தேரிலே தோன்றும் பெருமையாலும், அரக்கன் வெய்யோன் - அரக்கனுகிய கொடியன், உம்பரின் சென்ருேனேடு ஒத்து - வானத்தில் சென்றவனே ஒத்து, உதித்தனன் - உதயமானுன்.

இந்திரசித்துக்குச் சூரியன் உவமை கூறப் பெற்றது. உம்பரிற் சென்றானோடு ஒத்தனன் என்றமையால் சூரியோதயம் ஆகும்போது இந்திரசித்து வானத்தில் மறைந்தனன் என்பதாயிற்று; ஆனால் மேலே வரும் நான்கு செய்யுட்கள் அவனைத் தரையில் நின்றவனாகவே கூறுகின்றனவே யெனின், அங்குக் கூறப்பெறுவன ஒரு நொடியில் நிகழ்ந்துள்ளன என்று கொள்ள வேண்டியன.

பி - ம். 1. திசையுறச் செறிகை யாலும்.

2. அம்புடற்றுற்ற, அம்பரற்றுற்ற, அம்பெனத்துற்ற.

3. விசையினு மரக்கன், சிறப்பொடு மரக்கன், அரக்கன் மெய்யோடு.

4. உம்பரிற் செல்கின் றானைத்து; அருக்கனப்பால். 34

## வானவர் மகிழ்ச்சி

3085. விடிந்தது பொழுதும் வெய்யோன்
விளங்கின னுலக மீதா
விடுஞ்சுடர் விளக்க மென்ன
வரக்கரி னிருளும் வீயக்
கொடுஞ்சின மாயச் செய்கை
வலியொடுங் குறைந்து குன்ற
முடிந்தன ரரக்க ரென்ன
முழங்கின ரும்பர் முற்றும்.

உம்பர் முற்றும் - தேவர் அனைவரும், பொழுதும் விடிந்தது - பொழுது விடிந்துவிட்டது; சுடர் விடும் விளக்கம் என்ன - ஒளியை வீசும் விளக்கு என்னும்படியும், அரக்கரின் இருளும் வீய - அரக்கர் என்னும் இருளும் அழியுமாறும், வெய்யோன் - வெப்பத்தையுடைய கதிரவன், உலகம் மீதா விளங்கினன் - உலகின்மீது விளங்கலானான்; கொடுஞ் சின மாய செய்கை - கொடிய சினத்தினால் ஆகும் அரக்கர்களின் மாயச் செயல்கள், வலியொடும் குறைந்து குன்ற - அவர்களின் வலிமையோடும் குறைந்து தேய, அரக்கர் முடிந்தனர் என்ன - அரக்கர்கள் ஒழிந்தனர்" என்று, முழங்கினர் - முழக்கமிட்டார்கள்.

இருளும் வீய, விளக்கம் என்ன, வெய்யோன் விளங்கினன் என்றியைக்க. 'பகலி னல்லால் விளிகிலன் இருளின்' (யுத்த. 3082)

என்றபடி, பகற்காலம் தோன்றினமையால் அரக்கன் வீவன் என்று உம்பர் முழங்கினர் என்க. உம்பர் முற்றும் என்றமையால் பதினெண் கணத்தினர் அனைவரும் என்பது குறிக்கப் பெற்றது.

பி - ம். 1. விடிந்தது பொழுது ; உலக மீதாய்.
2. அரக்கரு மிருளும் வீய, அரக்கரினி ருளும் வீய.
3. குறைந்து நின்றான் ; கறைந்து குன்ற.
4. என்ன முழங்கின தும்பர் முற்றும். 35

## வீடணன் இந்திரசித்தை எச்சரித்தல்

3086. ஆரழி யாத சூலத் தண்ணல்தன் னருளி னீந்த
தேரழி யாத போதுஞ் சிலைகரத் திருந்த போதும்
போரழி யானிவ் வெய்யோன் புகழழி யாத பொற்றோள்
வீரவி தாணை யென்றான் வீடணன் விளைவ தோர்வான்.

(அப்பொழுது வீடணன் இலக்குவனை நோக்கி), 'புகழ் அழியாத பொன் தோள் வீர - புகழ் என்றும் நிலைபெற்றுள்ள அழகிய தோளையுடைய வீரனே! இ வெய்யோன் - இக் கொடியோனை இந்திரசித்து (அவனுக்கு), ஆர் அழியாத சூலத்து அண்ணல் - கூர்மை அழியாத சூலத்தை ஏந்தும் பெரியோனான சிவபெருமான், தன் அருளின் ஈந்த - தம் அருளினால் கொடுத்த, தேர் - தேரானது, அழியாத போதும் - அழியாத காலத்தும், கரத்து சிலை இருந்த போதும் - கையில் வில் நின்றிருந்த காலத்தும், போர் அழியான் - போரிற் சாகமாட்டான் ; இது ஆணை - இஃது விதி' (என்று), விளைவது ஓர்வான் வீடணன் - நடப்பதை (முன்கூட்டி) அறியும் ஆற்றல் அமைந்த வீடணன், என்றான் - என்று கூறினான்.

இதனால் சிவபிரானிடமிருந்து பெற்ற இந்திரசித்தின் தேரையும் அவன் பிடித்த வில்லையும் அழித்த பின்பே அவனை அழிக்க இயலும், என்றும், இதற்குக் காரணம் முன்பு ஏற்பட்ட வரன் என்றும் வீடணன் இலக்குவனுக்குக் கூறி அவற்றை முதலில்

அழிக்க வேண்டுமென்று வற்புறுத்தினன் என்க. இவ் வரன் யாரால் கொடுக்கப்பெற்ற தென்பது ஆராயற்பாலது. ஆர் - கூர்மை; 'ஆரெயி றழுந்தினர்' (சிலப். 5 : 124). சிவபெருமான், சூலத்தண்ணல் : 'சூலியின்னருட்டுறையின் முற்றினன்' (கிட்கிந்தா. 114). ஆணை, ஆஞ்ஞை என்றதன் திரிபு; கட்டளை எனினும் ஆம். வீடணன் வினைவதோர்தல்; இக் காண்டத்திற் பலவிடங் களிலும் காணலாம்.

பி - ம். 1. அந்தணாள்தன். 36

## இலக்குவன் இந்திரசித்தின் தேரைச் சிதைத்தது

3087. பச்சைவெம் புரவி வீயா பல்லியச் சில்லி பாரின்
நிச்சய மற்று நீங்கா வென்பது நினைந்து வில்லின்
விச்சையின் கணவ னுனன் வின்மையால் வயிர மிட்ட
அச்சினே டாழி வெவ்வே ருக்கின னுணி நீக்கி.

வில்லின் விச்சையின் கணவனுனன் - வில் வித்தைக்கு நாயகனுன இலக்குவன், பச்சை வெம் புரவி வீயா - (இந்திரசித்து ஏறியிருக்கும் தேரிற் கட்டிய) பசிய நிறமமைந்த கொடிய குதிரைகளும் சாகமாட்டா; பல்லியச் சில்லி - (அத்தேரின்) பல ஒலிகளையுடைய உருளைகளும், பாரின் - பூமியில், அற்று - அழிந்துபோய் நிச்சயம் நீங்கா - திண்ணமாய் ஒழியமாட்டா' என்பது நினைந்து - என்பதை எண்ணி, வின்மையால் - தன் வில்லின் திறமையால், ஆணி நீக்கி - ஆணிகளைப் பிரித் தப்புறப்படுத்தி, வயிரம் இட்ட அச்சினேடு ஆழி - வயிரம் பிடித்த (மரத்தாலான) அச்சையும் சக்கரங்களையும், வெவ்வேறு ஆக்கினன் - தனித்தனியே பிரித் தெறிந்தான். மற்று : அசை.

வில்லின் விச்சை - வில்லிலிருந்து அம்பெய்யும் கல்வி; விச்சை, வித்தை என்ற வடசொல்லின் திரிபு. வின்மை - வில் வன்மை. வில்லின் விச்சையின் கணவனுனன். கணவன் - தலைவன்; 'குழைமுக ஞானமென்னுங் குமரியைப் புணர்க்க லுற்ருர்' (சீவக. 368); என்பது போல. பச்சை வெம் புரவி - பால. கையடைப். 349; ஆரணிய. 414; சுந்தர. 107. ஆகிய இடங்

களில் சூரியனுடைய தேரின் குதிரைகள் பச்சை நிறமானவை என்று கூறப்பட்டுள்ளது. அவ்வாறே இந்திரசித்தின் தேரிற் கட்டிய குதிரைகளும் பச்சை நிறம் கொண்டவை போலும். பல்லியச் சில்லி; பல வாத்தியங்களின் ஒலியைச் செய்யும் சில்லி என்று பொருளுரைக்கப் பெற்றது. இங்கு வேறு பாடம் கிடைப்பின் நலமாகும். சில்லி - தேருருளை; 'வெள்ளிச் சில்லிபுக் குற்றது' (பால. கடிமணப். 71). அச்சு; தேரின் பகுதிகளுள் ஒன்று (பால. கடிமணப். 71); வயிரமிட்ட அச்சு; வயிரத்தால் இயன்ற; என்றும், வயிரம் பதித்த என்றும் கொள்ளலும் ஆம்; (ஒப்பு): 'வயிரத்தினுற்ற தட்டது' (பால. கடிமணப். 71). ஆணி அச்சாணியும் ஆம்; 'உழுவா ருலகத்தார்க் காணி' (குறள். 1032).

பா-ம். 1. பல்லியிற் சில்லி; சில்லி பாருள், யாருள்; சில்லிதானும்.

2. நிச்சயமன்றி நீங்காதென்பது; என்பதை நினைந்து.

3. விச்சையின் கணவனென; வன்மையால், வண்மையால்; வயிரமீட்ட.

4. அச்சினோடாணி; நாணை நீக்கி.

3088. மணிநெடுந் தேரின் கட்டு விட்டது மறித லோடும்
அணிநெடும் புரவி யெல்லா மாற்றல வான வன்றே
திணிநெடு மரமொன் றாழி வாண்மழுத் தாக்கச் சிந்திப்
பணைநெடு முதலு நீங்கப் பாங்குறும் பறவை போல.

மணி நெடு தேரின் - இரத்தினம் பதித்த நீண்ட தேரின், கட்டு விட்டு - கட்டுக் கோப்பு சிதைந்து, அது - அத்தேர், மறிதலோடும் - கீழ்மேலானதும், அணி நெடும் புரவி எல்லாம் - (அதிற் கட்டியிருந்த) அழகிய உயர்ந்த குதிரைகளெல்லாம், திணி நெடும் மரம் ஒன்று - வலிய நீண்ட ஒரு மரம், ஆழி வாள் மழு - சக்ராயுதம் போல் கூர்மையான ஒளி பொருந்திய கோடாலி, தாக்க - வெட்ட, சிந்தி - சிதறிப் போய், நெடு பணை - நீண்ட கிளைகளும், முதலும் - அடிமரமும், நீங்க - (வெவ்வேறாகப்) பிரிய, பாங்கு உறும் - பக்கங்களில் செல்லும், பறவை போல - பறவைகளைப் போல, ஆற்றல ஆன - வலிமையற்றனவாயின. அன்று, ஏ: அசைகள்.

கட்டுவிடுதல் - கட்டவிழ்தல். மறிதல் - நிலைகீழாதல்; 'மலை புரையானை மறிந்து' (பு. வெ. 7, 9). ஆழி வாண் மழு, வேறுபாடம்

கிடைத்தால் நலம். பறவைபோலப் புரவியெல்லாம் ஆற்றலவான என இயைக்க. வீடணன் கூறிய இரண்டனுள் ஒன்று ஒழிந்தமை கூறப்பெற்றது.

பி - ம். 1 தேரின்தட்டு.

2. புரவியெல்லா மற்றவாருன.

3. தாக்கிச் சிந்தப்.

4. பணையொடு ; முதலு நீந்தப், முதலு நீக்கி ; நீங்கி, நீங்கா, பாங் குறை பறவை ; பாங்குறு பறவை போலும். 38

## இந்திரசித்து வானத்து மறைதல்

3089. அழிந்ததேர்த் தட்டி னின்று
மங்குள்ள படைக ளள்ளிப்
பொழிந்தன னிளைய வீரன்
கணைகளால் துணித்துப் போக்க
மொழிந்ததோ ரளவின் விண்ணை
முட்டினு னுலக மூன்றும்
கிழிந்தன வென்ன வார்த்தான்
கண்டில ரோசை கேட்டார்.

(இந்திரசித்து), அழிந்த தேர் - அழிந்துபோன தேரினுடைய, தட்டினின்றும் - தட்டிலிருந்தும், அங்கு உள்ள படைகள் - அங்கே உள்ள படைகளையெல்லாம், அள்ளி - வாரி, பொழிந்தனன் - சொரிந்தான் ; (அவற்றை) இளைய வீரன் - இளைஞனை இலக்குவன், கணைகளால் - தன் அம்புகளால், துணித்துப் போக்க - துண்டுபடுத்தி அழிக்க, மொழிந்தது ஓர் அளவில் - ஒரு சொல் பேசும் நேரத்தில், விண்ணை முட்டினன் - வானிடத்தை அடைந்தான் ; உலகம் மூன்றும் கிழிந்தன என்ன ஆர்த்தான் - மூன்று உலகங்களும் கிழிந்துவிட்டனவோ என்னுமாறு அவன் (அங்கு நின்று) முழக்கம் செய்தான் ; கண்டிலர் - அவனிருக்குமிடத்தை எவரும் காணக்கூடவில்லை ; (ஆனல்), ஓசை கேட்டார் - (அவன் செய்த) ஓசையை மட்டும் (அனைவரும்) கேட்டனர்.

தேர்த்தட்டு - தேரின் நடுவிடம்; தேரில் அதுவே அகன்ற இடமாதலின் போர்ப் படைகள் முதலியன வைப்பதற்கு அதுவே ஏற்ற இடமாகும். மொழிந்தோர் அளவு - ஒரு சொல்கூறும் நேரம். கண்டிலர் கேட்டார்; ஒப்பு 'எடுத்தது கண்டனரிற்றது கேட்டார்' (பால. கார்முகப். 788).

பி - ம். 1. ஆங்குள்ள படையை யள்ளி; கணைகளள்ளி.
2. பொழிந்தவை; இளையவீரன்.
3. மொழிந்திரு வகையில்.
4. விண்ணை முட்டினுன், முட்டினது. 39

## இந்திரசித்து கன்மழை பொழிதல்

3090. மல்லின்மா மாரி யன்ன
தோளினுன் மழையின் வாய்ந்த
கல்லின்மா மாரி பெற்ற
வரத்தினுற் சொரியுங் காலைச்
செல்லுவான் றிசைக ளோரார்
சிரத்தினே டுடல்கள் சிந்தப்
புல்லினுர் நிலத்தை நின்ற
வானர வீரர் போகார்.

மா மாரி அன்ன - கரிய மேகம் போன்ற, மல்லின் தோளினுன் - வலிமை மிக்க தோளையுடைய இந்திரசித்து, பெற்ற வரத்தினுல் - (தான்) பெற்றிருந்த வரத்தின் ஆற்றலால், மழையின் வாய்ந்த - மழையைப்போல் அமைந்த, கல்லின் மா மாரி - கல்லாலான பெரிய மழையை, சொரியும் காலை - (வானரர் மீது) பொழிந்த போது, நின்ற வானர வீரர் போகார் - (போர்க்களத்தில்) நின்றிருந்த வானர வீரர் யாவரும் அகலாராய், செல்லுவான் - ஓடி ஒளியும் பொருட்டு, திசைகள் ஓரார் - திசைகளை உணரமாட்டாமல், சிரத்தினேடு உடல்கள் சிந்த - (தம்) தலைகளும் உடல்களும் சிதைய, நிலத்தை புல்லினுர் - பூமியைத் தழுவினுர்கள்,

வானத்தில் மறைந்த இந்திரசித்து தன் வரத்தின் ஆற்றலால் அங்கு நின்ற வானர வீரர்மீது கல்மழை சொரிந்ததால் அவ் வானரர் ஒன்றும் செய்ய இயலாமல் இறந்துபட்டனர் என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. மல்லன்மா ; தோளனுன் ; மழையின் வாய்த்த.

2. பொழியுங்காலேச்-

3. திசையுளோரராச் ; உடலஞ் சிந்திப்.

4. நின்று வானர வீரர் போகரர் ; வீரர் போல்வார், வீரரெல்லாம். 40

## இளைய பெருமாள் இந்திரசித்தைக் காணமாட்டாமல் திசைகளெங்கும் வாளியேவுதல்

3091. காண்கிலன் கல்லின் மாரி
யல்லது காளை வீரன்
சேண்கலந் தொளித்து நின்ற
செயலினைத் தெளிந்து நோக்கி
மாண்கலந் தளந்த மாயன்
வடிவென முழுதும் வௌவ
ஏண்கலந் தமைந்த வாளி
யேவினு னிடை விடாமல்.

காளை வீரன் - காளைபோன்ற வீரனுன இலக்குவன், கல்லின் மாரி அல்லது காண்கிலன் - கல் மழையையன்றி வேருென்றையும் காணுதவனுய், சேண் கலந்து ஒளித்து நின்ற செயலினை தெளிந்து நோக்கி - வானத்துடன் இந்திரசித்து (தன் உருவம் தோன்ருத படி) கலந்து நின்ற செயலை நன்ருக அறிந்து, மாண் கலந்து அளந்த மாயன் வடிவென - பெருமை கொண்டு (உலகங்களை) அளந்த திரிவிக்கிரமன் திருமேனி என்னுமாறு, முழுதும் வௌவ- பிரபஞ்சம் முழுமையும் பற்றுமாறு, ஏண் கலந்து அமைந்தவாளி - வலிமைகூடி அமைந்த அம்புகளை, இடைவிடாமல் ஏவினுன் - (நேரம் சிறிதும்) இடைவிடாமல் செலுத்தினுன்.

கன்மாரி எல்லாத் திசைகளினின்றும் வந்தமையால் இலக்குவன் எல்லாத் திசைகளிலும் வாளி ஏவினன் என்க. ஏவினன், என்றமையால் இந்திரசித்தைக் கொல்ல ஏவி அவற்றை விடுத்தனன் என்பது தொனிக்கிறது. மாயன் எங்கும் பரந்து நின்ற வடிவு கொண்டமை இங்குக் கூறப்பெற்றது. ஏண் - வலிமை; 'ஏணிலான் சேவகமும்' (சிறுபஞ்ச. 12); திண்மையும் ஆம்; நெஞ்சத்தே ணிகந்து' (சீவக. 770).

பி - ம். 1. காண்கில.

2. நின்ற செய்கையால் திசைகளெங்கும்; நின்ற செயற்கையால்.

3. மாண்கலந் தமைந்த மாயன்; முழுதும் வெளவி. 41

இரத்தம் பெருக இந்திரசித்து வானத்துக் காணப்படுதல்

3092. மறைந்தன திசைக ளெங்கும்
மாயம்போய் மலையு மாற்றல்
குறைந்தன னிருண்ட மேகக்
குழாத்திடைக் குருதிக் கொண்மூ
உறைந்துள தென்ன நின்று
னுருவினை யுலக மெல்லாம்
நிறைந்தவன் கண்டான் காணு
வினையதோர் நினைவ தானுன்.

திசைகள் எங்கும் மறைந்தன - (இலக்குவன் ஏவிய வாளிகளால்) திசைகளின் எல்லா இடங்களும் மறைந்து போயின; (இந்திரசித்து) மாயம் போய் - மாயமாகத் தன்னை மறைத்துக் கொண்டு, மலையும் ஆற்றல் குறைந்தனன் - போரிடும் வல்லமையிற் குறைந்தான்; இருண்ட மேகம் குழாத்திடை - இருளான மேகக் கூட்டங்களினிடையிலே, குருதிக் கொண்மூ - ஓர் இரத்த மேகம், உறைந்துளது என்ன - தங்கியுள்ளது என்று சொல்லுமாறு, நின்றுன் - நின்றவனை இந்திரசித்தினை, உலகம் எல்லாம் நிறைந்தவன் - உலகமெல்லாம் நிறைந்த பரம்பொருளான இலக்குவன், உருவினை கண்டான் - அவன் உருவத்தைப் பார்த்தான்; காணு - கண்டு, இனையது ஓர் நினைவது ஆனுன் - இத்தகைய ஓர் எண்ணமுடையவன் ஆனுன்,

உலகமெல்லாம் நிறைந்தவன் - இலக்குவன் : 'இவ்வுலகனைத்தும்... ..கலந்தேறிய தலைவன்' (யுத்த. 3010). கண்தான் காணு என்று பிரித்தும் பொருள் காண்பர். அவன் நினைத்தவை அடுத்த செய்யுளில் கூறப்பெறும்.

பி - ம். 1. திசைகளெல்லாம் ; மாறுபோய் மலையும் ; மறையுமாற்றல் ; மறையுமாற்றர்.
2. குறைந்தன விருண்ட.
3. நின்றான் வடிவினை.
4. நிறைந்தமன் ; நிறைந்தன தம்பி கண்டான் ; நினைப்பதானுன், நினைப்பனுனன். 42

## இலக்குவன் இந்திரசித்தின் கையைக் கொய்தல்

3093. சிலையறு தெனினு மற்றத்
திண்ணியோன் றிரண்ட தோளாம்
மலையறு தொழியா தென்னு
வரிசிலை யொன்று வாங்கிக்
கலையறுத் திங்க ளன்ன
வாளியாற் கையைக் கொய்தான்
விலையறு மணிப்பூ ணேடும்
வில்லொடும் நிலத்து வீழ.

'சிலை அறுது எனினும் - வில் அற்று விழாது என்றாலும், அ திண்ணியோன் - வலிமை மிக்க அவ்விந்திரசித்தின், திரண்ட தோள் ஆம் மலை - திரட்சியுற்ற தோள் ஆகிய மலையானது, அறுது ஒழியாது - அற்றுப் போகாமலிராது', என்னு - என்று சொல்லிக் கொண்டு, வரிசிலை யொன்று வாங்கி - தன்னிடமுள்ள கட்டுக்களையுடைய ஒப்பற்ற வில்லை வளைத்து, கலை அறு திங்கள் அன்ன வாளியால் - கலை அறுதலில்லாத அர்த்த சந்திரன் போன்ற அம்பினுல், விலை அறு மணி பூணேடும் - விலைமதிக்க முடியாத இரத்தினங்களமைந்த அணிகலன்களுடனும், வில்லொடும் - பிடித்த வில்லோடும், நிலத்து வீழ - தரையில் விழும்படி, கையைக் கொய்தான் - (அவன்) கையை வெட்டினுன். மற்று, அசை.

கலை இங்குக் கலைமானைக் குறித்தது. சந்திரனின் களங்கப் பகுதியை மான் என்பர் சிலர். அது பிறைச் சந்திரனில் காணப் பெறாது; அர்த்த சந்திரனில் அது தோன்றும்; ஆகவே அதனைக் கலையறுத் திங்கள் என்றார். கலை அறு திங்கள்; 'பாக வான் பிறைபோல் வெவ்வாய்ச் சுடுகணை' (யுத்த. 3094) என்று அடுத்த செய்யுளிலும் கூறப்படுதலால் அர்த்த சந்திர பாணமே குறிக்கப்பெற்றது என்க. சிலையறுத்து என்றது முன் வீடணன் கூறியது; 'ஆரழியாத சூலத் தண்ணற னருளினீந்த, தேரழியாத போது சிலைகரத் திருந்தபோதும், போரழியான்' (யுத்த. 3086). தேரழிந்த செய்தியை முன்கூறி, வில்லற்ற செய்தியை இங்குக் கூறினர்.

பி-ம். 1. வடிக்கணை யொன்று வாங்கிக். 43

3094. பாகவான் பிறைபோல் வெவ்வாய்ச்
சுடுகணை படுத லோடும்
வேகவான் கடுங்கா லெற்ற
முற்றும்போய் விளிந்த நாளில்
மாகவான் றடக்கை மண்மேல்
விழுந்தது மணிப்பூண் மின்ன
மேகமா காயத் திட்ட
வில்லொடும் வீழ்ந்த தென்ன.

முற்றும் போய் விளிந்த நாளில் - உலகங்களிலுள்ள யாவும் அழிந்திறந்த (ஊழியிறுதி) நாளில், வான் - வானத்தில், வேகம் - மிகுந்த வேகத்துடன் செல்லும், கடும் கால் எற்ற - கடுமையான காற்று மோத, மேகம் - ஒரு மேகமானது, ஆகாயத்து இட்ட வில்லொடும் - வானத்தில் இடப்பெற்ற (வான) வில்லோடும், வீழ்ந்தது என்ன - விழுந்தது என்று சொல்லுமாறு, வான் - பெருமை மிக்க, பாக - பாதியாயுள்ள, பிறை போல் - சந்திரனைப் போன்றதும், வெம் வாய் - கொடிய நுனியால், சுடு கணை - பகை வரை எரிப்பதுமான அம்பு, படுதலோடும் - இந்திரசித்தின்மீது தாக்கியவுடன், மாகம் - வானத்தினின்று, வான் - பெரிய, தடம் கை - (இந்திரசித்தின்) அகன்ற கை, மணி பூண் மின்ன - மணிகள் பதிக்கப் பெற்ற அணிகலன்கள் ஒளி வீச, மண்மேல் - தரைமீது, விழுந்தது - விழுந்தது.

யுகாந்தக் காற்றினால் மேகம் வில்லுடன் விழுவது போல, இலக்குவன் விடுத்த அம்பினால் இந்திரசித்தின் கை வில்லுடன் விழுந்தது என்க. உவமையணி. பாகம் - பகுதி; பாதி. இச் செய்யுளில் முதலடியாலும் இலக்குவன் விடுத்தது அர்த்த சந்திர பாணம் என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. அடுதலோடும்.

2. மோகவான்கடும்; கொடுங்கால்; விளியுநாளின்; முடியு நாளின்.

3. வீழ்ந்தது மணிப்பூண்; விசித்தது மணிப்பூண்.

4.. கூசத்திட்ட. 44

## விழுந்த கை துடித்தல்

3095. படித்தலஞ் சுமந்த நாகம்
பாகவான் பிறையைப் பற்றிக்
கடித்தது போலக் கோல
விரல்களா லிறுகக் கட்டிப்
பிடித்தவெஞ் சிலையி னோடும்
பேரெழில் வீரன் பொற்றோள்
துடித்தது மரமுங் கல்லுந்
துகள்படக் குரங்குந் துஞ்ச.

படி தலம் - பூமியாகிய இடத்தை, சுமந்த நாகம் - தூக்கிக் கொண்டிருக்கிற (ஐந்தலை) நாகம், வான் - வானத்திலுள்ள, பாக - பாதியான, பிறையை பற்றி - பிறைச் சந்திரனைப் பிடித்து, கடித்தது போல - வாயினாற் கடித்தது போன்று, கோல விரல்களால் இறுக கட்டிப் பிடித்த வெம் சிலையினோடும் - அழகிய தன் விரல்களால் இறுகக் கட்டிப் பிடித்த கொடிய வில்லோடும், பேர் எழில் வீரன் - மிகுந்த அழகினையுடைய வீரனான இந்திரசித்தின், பொன் தோள் -(விழுந்த) அழகிய தோளானது, மரமும் கல்லும் துகள்பட - மரங்களும் கற்களும் யாவும் நொறுங்கித் துகள்களாகவும், குரங்கும் துஞ்ச - குரங்குகள் எல்லாம் இறக்கவும், துடித்தது - துடித்தது.

இங்கு, கும்பகருணனின் கைகள் அறுபட்டபின் அவை செய்த சாகசங்களைப் பற்றிக் கூறும் செய்யுட்கள் நினைவுக்கு வரலாம்;

(1542 - 1545). இந்திரசித்தின் கைக்குப் பாம்பு; விரல்கள் சிலையைப பிடித்தமைக்கு ஐந்தலை நாகம் பாதிச் சந்திரனைக் கடித்தது உவமை; இல்பொருள். வில்லுக்குப் பிறை; 'பிறைபோல் குலாய செய்பூண் சிலை' (சீவக. 2198); 'இடைநாட் பிறையி னேற்றிய திருவில்' (பெருங். 1, 37, 26).

பி · ம். 2. கையில் விரல்களால்; கால் விரல்களாலிறுக்கக் கட்டி.

4. மாறெடு கல்லுந். 45

## வானவர் வியப்பு

3096. அந்தர மதனி னின்ற
வானவ ரருக்கன் வீழச்
சந்திரன் வீழ மேரு
மால்வரை தகர்ந்து வீழ
இந்திர சித்தின் பொற்றோ
ளிற்றிடை விழுந்த தென்றால்
எந்திர மனைய வாழ்க்கை
யினிச்சில ருகந்தெ னென்றார்.

அந்தரம் அதனின் நின்ற வானவர் - வான வெளியில் நின்று (வேடிக்கை பார்த்திருந்த) தேவர்கள், 'அருக்கன் வீழ - சூரியன் விழும்படியும், சந்திரன் வீழ - சந்திரன் விழும்படியும், மேரு மால் வரை தகர்ந்து விழ - மேரு என்னும் பெரிய மலை பொடித்து விழும் படியும், இந்திரசித்தின் பொன் தோள் இடை இற்று - இந்திர சித்தினுடைய அழகிய தோள் நடு அறுந்து, விழுந்தது என்றால் - விழுந்து விட்டது என்றால், இனி - (இந்த உண்மையை அறிந்த) பிறகும், சிலர் - சில மக்கள், எந்திரம் அனைய வாழ்க்கை - எந்திரப் பாவையை ஒத்த இந்த உயிர் வாழ்க்கையை, உகந்தது - விரும்பி, என் - ஆவதென்?' என்றார் - என்றனர்.

'அருக்கன் முதலானவை விழுந்தாலும் அழியாத இந்திர சித்து' என்பது பழையவுரை. இந்திரசித்தின் கை விழ இவையும் விழுந்தன என்று பொருள் கொள்ளப் பெற்றது. 'எந்திரம்-மரப்பாவை' என்பது பழையவுரை; 'இன்னுயி ரின்றி யேகு மெந்திரப் படிவ மொப்பான்' (சுந்தர. 566) என்பதும் காண்க.

எந்திரம், தானே இயங்காமல் பொறிகளாலும் இயக்குவானாலும் இயங்குவது; அது போன்று, வாழ்க்கை தன்னிச்சையற்றது என்பது கூறப் பெற்றது. இவ்வாழ்க்கையை 'நடக்கும் சூத்திரப் பாவை' என்பது திருக்கருவை பதிற்றுப் பந்தந்தாதி. 'நற்பொறி குயிற்றி வல்லான் செய்ததோர் நற்பொற் பாவை, பொற்பொறி கழல வெல்லாப் பொறிகளுங் கழல்வ தேபோல், சொற்பொறி சோர வெல்லாப் பொறிகளுஞ் சோர்ந்து நம்பன் இற்பொறி யின்ப நீக்கி யிராயிரர் சூழச் சென்றான்' (சீவக. 2886) என்பதும் காண்க.

பி - ம். 1. அருக்கன் விழா ; அருக்கன் விழ்க ; விழ்ந்தென.

2. சந்திரன் விழா ; விழ்க ; தகாந்து விழா ; விழ்க ; விழ்ந்தெனமேரு.

3. இற்றினி விழுந்த ; விழ்ந்ததென்றால்.

4. உகப்பதென்னே. 46

## அரக்கர் திகைப்பு

3097. மொய்யற மூர்த்தி யன்ன
மொய்ம்பினா னம்பி னாலப்
பொய்யறச் சிறிதென் றெண்ணும்
பெருமையான் புதல்வன் பூத்த
மையறக் கரிதென் றெண்ணு
மனத்தினான் வயிர மன்ன
கையறத் தலையற் றார்போற்
கலங்கினார் நிருதர் கண்டார்.

மொய் அறமூர்த்தி அன்ன மொய்ம்பினான் - நெருங்கிய தரும தேவதையை ஒத்த வலிமையனான இலக்குவனின், அம்பினால் - பகழியினாலே, பொய் அற சிறிது என்று எண்ணும் - பொய்யை மிக எளியது என்று இகழ்ந்து எண்ணும், அ பெருமையான் புதல்வன் - சிறியோனான இராவணனின் மகனான இந்திரசித்து, பூத்த - விளங்கிய, மை - மையானது, அற கரிது என்று எண்ணும் மனத்தினான் - (இவன் மனத்தைநோக்கி, என்னினும்) மிக்க கரியது என்று எண்ணத்தக்க (மிகக்கரிய) மனத்தினை உடைய அவனின், வயிரம் அன்ன கை அற - வயிரம் போன்ற

கை அற்றுப் போக, கண்டார் நிருதர் - கண்ட அரக்கர், தலை அற்றார் போல் - தங்கள் தலைகளே அற்றுப்போனவர் போல, கலங்கினர் - மனக் கலக்கம் அடைந்தார்கள்.

அற மூர்த்தி - இலக்குவன். அறச்சிறிது - மிகச் சிறிது, பொய் மிகச் சிறியதானாலும் பெருந்தீங்கு விளைப்பதாயிருக்க. பெரும் பொய்யையும் தன்னை ஒன்றும் செய்யமாட்டாத மிகச் சிறிய தென்று இகழும் பான்மையன் என்று கூறினர்; பெருமையன்; இங்கு இகழ்ச்சிக் குறிப்பு. மை, எண்ணும் என்றியைக்க, 'மையும் இவனெஞ்சம் நம்மினும் கருப்பென்றெண்ணும்' என்பது பழையவுரை. தலை - தலைவன் என்றும் ஆம்.

பி - ம். 1. மொய்யுறு மூர்த்தி யென்னும் மொய்ம்பினன்; முன்பினன்.

3. கரியதெண்ணும்; கரியதென்றும்; நிறந்திறன் வயிரமன்ன; வயிரத் திண்டோள்.

4. நிருதர் கண்டே. 47

## வானரர் போரிடல்

3098. அன்னது நிகழும் வேலை
யார்த்தெழுந் தரியின் வெள்ளம்
மின்னெயிற் றரக்கர் சேனை
யாவரும் மீளா வண்ணம்
கொன்னகக் கரத்தாற் பல்லான்
மரங்களான் மானக் குன்றால்
பொன்னெடு நாட்டை யெல்லாம்
புதுக்குடி யேற்றிற் றன்றே.

அன்னது நிகழும் வேலை - அது நடந்து கொண்டிருந்த நேரத்தில், அரியின் வெள்ளம் - வானரர்களின் கூட்டம், ஆர்த்து எழுந்து - பேரிரைச்சல் செய்துகொண்டு எழுந்து, மின் எயிறு அரக்கர் சேனை யாவரும் - மின்னல் போன்ற பற்களையுடைய அரக்கர் படையினர் யாவரும், மீளா வண்ணம் - நகரினுள் திரும்பிப் புகாவண்ணம், கொல் நகம் கரத்தால் - கொல்லும் நகங்களையுடைய (விரல்களையுடைய) கைகளாலும், பல்லால் - பற்களாலும், மரங்

களால் - மரங்களாலும், மான - பெரிய, குன்றால் - குன்றுகளாலும், நெடு பொன் நாட்டை எல்லாம் - நீண்ட சுவர்க்கத்திலெல்லாம், புதுக்குடி ஏற்றிற்று - புதிதாகக் குடிகளை ஏறச் செய்தது. அன்று, ஏ - அசைகள்,

அன்னது நிகழ்தல்; தேவர் வியப்பும் அரக்கர் திகைப்பும் நிகழ்தல். பொன் நாடு - சுவர்க்கம். வானரம் பொன்னாட்டைப் புதுக்குடி ஏற்றல்; அரக்கர்களைக் கொன்று தேவராக்கி வானுலகுக்கு அனுப்புதல். இது பிறிதினவிற்சியணி.

பி - ம். 3. பன்னகக் கரத்தால்; கரத்தாற் காலால்; பரிய குன்றால்.
4. பொன்னுடை நாட்டை.

48

## இந்திரசித்தின் வீரவாதம்

3099. காலங் கொண்டெ ழுந்த மேகக்
கருமையான் செம்மை காட்டும்
ஆலங்கொண் டிருண்ட கண்டத்
தமரர்கோ னருளிற் பெற்ற
சூலங்கொண் டெறிவ லென்னுத்
தோன்றினன் பகையிற் றோன்ற
மூலங்கொண் டுணரா நின்னை
முடித்தன்றி முடியே னென்றான்.

காலம் கொண்டு எழுந்த - உருவகாலத்தில் தோன்றிய, மேக கருமையான் - மேகத்தைப் போன்ற கரிய நிறத்தையுடைய இந்திரசித்து, செம்மை காட்டும் - சிவந்த நிறத்தைக் கொண்டவனும், ஆலம் கொண்டு இருண்ட கண்டத்து - விடத்தை உட்கொண்டு (அதனால்) இருளடைந்த கழுத்தினையும் உடையவனுமான, அமரர் கோன் - தேவர்களுக்கு மன்னனான சிவபிரான் அருளிற் பெற்ற - அருளினால் அடைந்த, சூலம் கொண்டு எறிவல் - என்னு சூலாயுதத்தைக் கையிற் கொண்டு வீசுவேன் என்று சொல்லிக் கொண்டு, தோன்றினன் - தோன்றி, 'பகையின் தோன்ற - (எனக்குப்) பகைமையினால் நீ தோன்றவேண்டிய மூலம் கொண்டு உணரா - (அதன்) காரணத்தை நான் அறியமாட்டாதவனாயிருக்கிற, நின்னை - உன்னை, முடித்தன்றி - இறக்குமாறு செய்தாலன்றி, முடியேன் என்றான் - நான் இறக்கமாட்டேன்' என்று கூறினான்.

செம்மை காட்டும் கருமையான் என்று கொண்டு, 'குருதி வடிதலால் செம்மை நிறத்தைக் கொண்ட கரியமேனி கொண்டவன்' என்றும் பொருள் காண்பர். இந்திரசித்தின் சூலம் சிவபெருமான் அருளியது. 'பகையிற் றேன்ற, மூலம் கொண்டுணரா நின்னை' என்றதற்கு, தன்னால் செலுத்தற்கரிய பகைவனாக நீ தோன்றிய தன் மூலகாரணத்தை அறியமாட்டாதவனாக இருக்கின்றேன்; நீ யாவன் என்று என்னால் உணரமாட்டாதபடி நீ இருக்கின்றாய்; என்றும், உன்னை எப்படியும் கொன்றபின் யானும் சாவேன்; என்றும் பொருள் கொள்ளப் பெற்றது. வேறுவகையாகக் கூறுவாரும் உளர். இந்திரசித்தின் வாயிலேயே அமங்கலமாக, 'முடித்தன்றி முடியேன்' என்று வந்துள்ளமையும் நோக்குக.

பி - ம். 1. கருமைவான் செம்மை; மேகங் கருமையான்.
2. அண்ணல் பாலருளிற் பெற்ற; சூலங்கொண்டு.
3. எறிவலென்று தோன்றினன்; தோன்றினன்; பகையின் றேற்ற; பகையிற்றேற்ற.
4. முடியேனென்பான்; முடியேனென்னு. 49

## இந்திரசித்தின் வதை

3100. காற்றென வுருமே றென்னக்
கனலெனக் கடைநா ளுற்ற
கூற்றமோர் சூலங் கொண்டு
குறுகிய தென்னக் கொல்வான்
தோற்றின னதனைக் காணு
வினித்தலை துணிக்குங் காலம்
ஏற்றதென் றயோத்தி வேந்தற்
கிளையவ னிதனைச் செய்தான்.

(இந்திரசித்து), கடைநாள் உற்ற - ஊழியின் இறுதி நாளில் உண்டான, காற்று என - (சூறைக்) காற்று என்னுமாறும், உரும் ஏறு என்ன - பேரிடி என்னுமாறும், கனல் என - நெருப்பு என்னுமாறும், கூற்றம் - இயமன், ஓர் சூலம் கொண்டு - ஒரு சூலத்தைக் கையில் கொண்டு, கொல்வான் - இலக்குவனைக் கொல்லும் பொருட்டு, குறுகியது என்ன - வந்தான் என்று சொல்லுமாறும்,

தோற்றினன் - வான வெளியிலே தன்னைத் தோற்றுவித்துக் கொண்டான்; அதனை - அவ்வாறு தோன்றியதை, அயோத்தி வேந்தற்கு இளையவன் - அயோத்திக்கு மன்னனான இராமபிரானின் தம்பியான இலக்குவன், காணா - கண்டு, 'இனி தலை துணிக்கும் காலம் ஏற்றது என்று - இனிமேல் இவன் தலையை வெட்டும் நேரம் வந்துவிட்டது 'என்று (எண்ணி,) இதனை செய்தான் - (பின் கூறப்பெறும்) இச் செயலைச் செய்தான்.

காற்று முதலியவற்றைச் சூலத்தின்மீது ஏற்றிக் கூறலும் ஆம். தோற்றினான் என்றதனால் அவன் தன் மறைவிடத்தி னின்று வெளிப்பட்டான் என்பதாயிற்று. அயோத்தி வேந்தற் கிளையவன் என்று இங்குக் கூறியதன் காரணம் அடுத்த செய்யு ளால் விளங்கும்.

பி - ம். 1. காற்றென்ன கடைநாளுண்ணும், நாளுன்னும்; கனலென்ன.
2. கூற்றென வுருவுகொண்டு.
3. தோற்றினன் றன்னைக்.
4. இளைய செய்தான்.

50

## இராமனே பரம் பொருளானால் இந்திரசித்தைக் கொல்க என்று இலக்குவன் அம்பு ஏவுதல்

3101. மறைகளே தேறத் தக்க
வேதியர் வணங்கற் பால
இறையவ னிராம னென்னு
நல்லற மூர்த்தி யென்னில்
பிறையெயிற் றிவனைக் கோறி
யென்றொரு பிறைவாய் வாளி
நிறையுற வாங்கி விட்டா
னுலகெலா நிறுத்தி நின்றான்.

'இராமன் என்னும் நல் அறமூர்த்தி - இராமபிரான் என்னும் நல்ல அற மூர்த்தியாவான், மறைகளே தேற தக்க - வேதங்களால் மட்டுமே ஆராய்ந்து அறியத்தக்க, வேதியர் வணங்கற் பால - வேதங்களைக் கற்றவர்களாலே வணங்கத்தக்க, இறையவன்

என்னில் - பரம் பொருள் என்பது உண்மையானால், பிறை எயிறு இவனை - பிறைபோல் வளைந்த பற்களையுடைய இவனை, கோறி - கொல்வாயாக ', என்று - என்று சொல்லி, (இலக்குவன்) நிறையுற வாங்கி - முழுமையும் (வில்லின் நாணை) இழுத்து வளைத்து, ஒரு பிறை வாய் வாளி - ஒரு பிறை போன்ற முகத்தை யுடைய அம்பை, விட்டான் - விடுத்தான் ; (அதனால்), உலகெலாம் நிறுத்தி - உலகங்கள் யாவற்றையும் தம் நிலையில் நிலைபெறச் செய்து, நின்றான் - தானும் புகழுடன் நிலைத்தான்.

இலக்குவன் இந்திரசித்தைக் கொல்ல எய்த அம்பைப் பற்றி வான்மீகம், ' அவ் அஸ்திரம் நல்ல இறகுகள் கட்டப்பெற்று உருண்ட உருவமுடையதாகி அழகிய கணுக்களும் அமைந்து நல்ல திருத்தங்களும் பொருந்தி, ஸ்வர்ணத்தினால் அழகு செய்யப் பெற்று, எத்தகைய உடலையும் பிளந்து உயிரைத் தொலைக்க வல்லதுமா யிருந்தது ; அது தடுக்கவும் பொறுக்கவும் முடியாதது. அது அரக்கர்களுக்கு அச்சத்தை விளைவிப்பதும் கொடிய ஸர்ப்பம் போன்றதும் தேவர்களால் பெரிதும் பூஜிக்கப்பட்டதுமா யிருந்தது. மற்றும் முன்பு தேவாஸுர யுத்தத்தில் தேவேந்திரன் தானவர்களை அந்த அஸ்திரத்தினால் வென்றனன். அம் மேலான பாணத்தை இலக்குவன் ஐந்திராஸ்த்ர மந்திரத்தினால் அபிமந் தரித்து, தன் பெரிய வில்லில் தொடுத்து நாணையேற்றி, வில்லை வளைத்து, காதுவரையில் இழுத்துத் தன் காரியம் நிறைவேறும் படி, ' பாணமே ! தசரதகுமாரனாகிய இராமன், தர்மஸ்வபாவனும் ஸத்யஸந்தனும் பௌருஷத்தில் எதிரில்லாதவனுமாயின் நீ இவ் விந்திரசித்தை வதிப்பாயாக என்றனன் ' என்று கூறும்.

அத்யாத்ம ராமாயணம் மேலும், ' அப்போது வீரரான இளைய பெருமாள் இந்திராஸ்திரத்தை யெடுத்து......ஸ்ரீ ராமபிரானுடைய திருவடித்தாமரைகளைச் சிந்தித்து, 'எமது தசராத்மஜர் தர்மாத்மா வாய் சத்தியசந்தராயிருந்தால் திரிலோகத்திலும் தனக்கிணையற்ற இந்தப் பாணமானது இந்திரசித்தை வெல்லக் கடவது என்று கூறி விடுத்தார் ' என்றுள்ளது.

இங்கு இலக்குவன் செய்த சபதம் நோக்கத்தகும். உலகெலாம் நிறுத்தி நின்றான் என்றது அவன் சேடமூர்த்தி என்பதைக்

குறித்தபடியும் ஆம். 'நின்றான்.' என்பதை இச்செய்யுளின் எழுவாயாக அமைத்துப் பொருள் காணலும் ஆம். இராமபிரான்; மறைகளே தேறத்தக்கவன்; அயோத். 277. இறைவன் (பரம் பொருள்); அயோத். 39, 278, 1156; ஆரணிய. 257; கிட்கிந்தா. 1, 56, 67, 87, 296, 350, 352, 376. அறமூர்த்தி; அயோத்தி 41; கிட்கிந்தா. 175; சுந்தர. 139, 1120.

பி - ம். 1. வணங்கற் பாலோன்; பாலான்.

2. இராமனே யந்நல்லற; இராமன்றானே நல்லற; இராமனெனின்.

3. அவனைக் கோறி.

4. நிறைவுற வாங்கி; நிறுத்த நின்றான். 51

310.2 நேமியுங் குலிச வேலும்
நெற்றியி னெருப்புக் கண்ணன்
நாமவே றானு மற்றை
நான்முகன் படையு நாணத்
தீமுகங் கதுவ வோடிச்
சென்றவன் சிரத்தைத் தள்ளிப்
பூமழை வானோர் சிந்தப்
பொலிந்ததப் பகழிப் புத்தேள்.

அ பகழி புத்தேள் - அந்த அம்பாகிய தெய்வம், நேமியும் - (திருமாலின்) சக்கரப் படையும், குலிச வேலும் - (இந்திரனின்) வச்சிராயுதமும், நெற்றியின் நெருப்பு கண்ணன் நாமவேல்தானும் - நெற்றியில் பெற்ற நெருப்புக் கண்ணனான சிவபிரானின் அச்சம் விளைக்கும் வேலும், மற்றை - இவையன்றி, நான்முகன் படையும் - பிரமதேவரின் படையும், நாண - (ஆகிய இவை) வெட்கமுற, தீ முகம் - அதன் நெருப்பு முகம், கதுவ - (பகைவனை)ப் பற்றும் பொருட்டு, ஓடிச் சென்று - விரைவாகச் சென்று, அவன் சிரத்தை தள்ளி - இந்திரசித்தின் தலையை (வெட்டி) வீழ்த்தி, வானோர் பூ மழை சிந்த - தேவர்கள் மலர் மாரி பொழிய, பொலிந்தது - விளங்கிற்று.

நான்முகன் படை - வாய்மை; 'வாய்மை வேலாழி படைக் கலம்' (யாப். வி. 94) என்ற தனிப்பாடலில் வாய்மை, நிறை

மொழி, நான்முகனின் படையாகக் கூறப்பெற்றது; தண்டாயுதம் என்பாரும் உளர். வானோர் பூமழை சிந்தியது பகழிக்கு என்க. தெய்வப்படை ஆதலின் பகழிப் புத்தேள் என்றார்.

பி - ம். 1. குலிச வேலும்; நெருப்புக் கண்ணன்.
2. மற்ற நான்முகன்.
3. சென்றனன் சிரத்தை.
4. பூமழை மாரி சிந்தப்; அமரர் சிந்த; போந்ததப் பகழி, புகுந்ததப் பகழி. 52

## இந்திரசித்தின் தலை அறுபட்டு வீழ்தல்

3103. அற்றவன் றலைமீ தோங்கி
யண்டமுற் றணுகா முன்னம்
பற்றிய சூலத் தோடு
முடலுறை பகழி யோடும்
எற்றிய காலக் காற்றான்
மின்னொடு மிடியி னோடும்
இற்றொரு காள மேகம்
வீழ்ந்தென வீழ்ந்த தியாக்கை.

அவன் தலை - இந்திரசித்தினுடைய தலை, அற்று -(உடலினின்று அறுபட்டு) வேறாகி, மீது ஓங்கி - மேலே உயர்ந்து, அண்டம் உற்று அணுகா முன்னம் -(மறுபடியும் கீழ் நோக்கி வந்து) உலகத்தை அடைந்து நெருங்குவதற்கு முன்னே, யாக்கை - (அவனுடைய) உடல், பற்றிய சூலத்தோடும்-(வலக்கையில்) பிடித்த சூலத்தோடும், உடல் உறை பகழியோடும் - உடலிலே தைத்து அங்கே தங்கியிருந்த அம்பினோடும், எற்றிய - வீசிய, கால காற்றான் - ஊழி முடிவுக் காலத்து எழும் (சண்டமாருதம் என்னும்) காற்றால், ஒரு காளமேகம் - ஒரு கரிய மேகமானது, மின்னொடும் இடியினோடும் - மின்னலுடனும் இடி முழக்கத்துடனும், இற்று வீழ்ந்தென - பறிந்து வீழ்ந்தது என்று சொல்லுமாறு, வீழ்ந்தது- தரையில் விழுந்தது

இந்திரசித்தின் யாக்கைக்குக் காளமேகம், இலக்குவன் எய்த பகழிக்குக் காலக் காற்று உவமைகள். மின், அவனணிந்த அணி

கலன்களாலும், இடி பேரிரைச்சலாலும் என்க. அண்டம் - பூமி; 'நீர் கொண்ட வண்டத்தும்' (அரிச். பு. பாயி. 3). துணியுண்ட தலை துள்ளி எழுந்து கீழேவிழ நேரமானதால், யாக்கையின் வீழ்ச்சி முந்தியது என்றார்.

பி - ம். 1. அண்டத்தை யணுகா.

2. உடனிறை பகழி; உடலுறு பகழி.

4. சுற்றிய புயல்விழ்ந் தென்ன வீழ்ந்தது சோர னியாக்கை; மற்றொரு காளமேகம்.

53

3104. விண்டலத் திலங்கு திங்க
ளிரண்டொடு மின்னு வீசுங்
குண்டலத் துணைக ளோடுங்
கொந்தளக் குஞ்சிச் செங்கேழ்ச்
சண்டவெங் கதிரோன் செக்கர்த்
தழலொடு மருவித் தாம
மண்டலம் விழுந்த தென்ன
விழுந்தது தலையும் மண்மேல்.

விண் தலத்து இலங்கு - வானிடத்தில் விளங்கும், திங்கள் இரண்டொடு - இரண்டு சந்திரர்களோடு (ஒத்து), மின்னு வீசும் - ஒளியை வீசுகின்ற, குண்டலம் துணைகளோடும் - இரண்டு குண்டலங்களோடும், கொந்தள குஞ்சி - சுருண்ட தலைமயிரின், செம் கேழ் - சிவந்த நிறமமைந்த, சண்ட வெம் செக்கர் தழலொடும் - கொடிய வெப்பமான சிவந்த நெருப்போடும், மருவி - சேர்ந்து, கதிரோன் தாம மண்டலம் - கதிரவனின் ஒளி மண்டலமானது, மண்மேல் விழுந்தது என்ன - தரையில் விழுந்தது என்னும்படி, தலையும் விழுந்தது - இந்திரசித்தின் தலை (மண்மேல்) விழுந்தது.

தாமம் - ஒளி. கொந்தளம் - மயிர்ச் சுருள். குஞ்சி - ஆடவர் தலைமயிர். கேழ் - நிறம். சண்டம் - கொடுமை. முன் செய்யுளில் யாக்கை விழுந்தது கூறி, இதனில் தலை விழுந்ததைக் கூறு கின்றார். செக்கர்த் தழல், இந்திரசித்தின் கண்களுக்கு. குருதி படிந்த இந்திரசித்தின் பேருடல் செக்கர்த் தழலொடு மருவியது, கதிரோன் தாம மண்டலத்துக்கு ஒப்பு. திங்கள் இரண்டு: இல்

பொருள்; குண்டலத்துக்குத் திங்கள். குஞ்சித் தழலொடும் என்று பொருத்திப் பொருள் கூறப்பெற்றது, அரக்கர் குஞ்சி செக்கர் நிறமுடைமையின். குஞ்சிக்கும் தழலுக்கும் ஒப்புமை; சுந்தர. *1185, 1213*.

## அரக்கர் இரிந்தோடுதல்

3105. உயிர்புறத் துற்ற காலை யுண்ணின்ற வுணர்வி னோடும்
செயிரறு பொறியு மந்தக் கரணமுஞ் சிந்து மாபோல்
அயிலெயிற் றரக்க ருள்ளா ராற்றல ராகி யான்ற
எயிலுடை யிலங்கை நோக்கி யிரிந்தனர் படையும்
[விட்டார்.

உயிர் - (ஒருவருடைய) உயிரானது, புறத்து உற்ற காலை - (உடலிலிருந்து) வெளியே அடைந்தபோது, உள் நின்ற உணர்வினோடும் - உள்ளே நின்ற உணர்வோடும், செயிர் அறு - குற்றமற்ற, பொறியும் - ஐம்பொறிகளும், அந்தக் கரணமும் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனப்படும் உட்கருவிகள் நான்கும், சிந்துமா போல் - உடலிலிருந்து சிதறி ஓடிவிடுவதுபோல, (இந்திரசித்து இறந்தவுடன்), அயில் எயிறு அரக்கர் உள்ளார் - கூரிய பற்களைக் கொண்ட அரக்கராயுள்ளவர், ஆற்றலர் ஆகி - தம் ஆற்றல் அற்றவராக ஆகி, படையும் விட்டார் - (தத்தம்) படைகளையும் (போர்க்களத்திலே) போட்டுவிட்டு, ஆன்ற எயில் உடை இலங்கை நோக்கி இரிந்தனர் - அகன்ற மதில்களை உடைய இலங்கையை நோக்கி ஓடினார்கள்.

உயிர் இந்திரசித்துக்கும், உணர்வு, பொறி, அந்தக்கரணம் முதலியன அரக்கர்கட்கும் உவமை. உள்ளார் என்றமையால் எஞ்சியவர் என்பதும் புலப்படும். எயிலுடை இலங்கை என்றது, பாதுகாப்புள்ளமை கருதி என்க.

பி-ம். 1. உயிரிறப் புக்க; உண்ணிறை வுணர்வு.
2. பொறியு மற்றைக் கரணமும்.
4. உள்ளாராகி யாற்ற, ராகி யேற்ற.

### தேவர்கள் மகிழ்ச்சியினுல் ஆரவாரித்தல்

3106. வில்லாள ராஞர்க் கெல்லா மேலவன் வீளித லோடும்
செல்லாதவ் விலங்கை வேந்தற் கரசெனக் களித்த தேவர்
எல்லாருந் தூசு வீசி யேறிட வார்த்த போது
கொல்லாத விரதத் தார்தங் கடவுளர் கூட்ட மொத்தார்.

வில்லாளர் ஆஞர்க்கு எல்லாம் மேலவன் - வில்லை ஆளும் திறமையுள்ளவர்களுக்குள் சிறந்தவஞன இந்திரசித்து, விளித லோடும் - இறக்கவும், 'அ இலங்கை வேந்தற்கு அரசு செல்லாது என - அந்த இலங்கை மன்னஞன இராவணனுக்கு அரசாட்சி இனி நடவாது' என்று, களித்த தேவர் எல்லாரும் - மனக்களிப் படைந்த தேவர்கள் யாவரும், தூசு வீசி - வஸ்திரங்களை வீசி, ஏறிட ஆர்த்தபோது - அவர்கள் மிகுந்த சத்தமிட்டபோது, கொல்லாத விரதத்தார் தம் கடவுளர் கூட்டம் ஒத்தார் - சமணர் கடவுளரின் தொகுதியை (அவர்கள்) ஒத்தார்கள்.

கொல்லாத விரதத்தார் - சமணர்; திகம்பர வகையினரும் அவர்தம் கடவுளரும் ஆடை நீக்கியவராதலால் இவ்வாறு கூறப் பட்டனர். தேவர்கள் மலர்மழை பொழிந்ததோடு நில்லாமல், மேலாடைகளை வீசியும், அரை ஆடையையும் அவிழ்த்து வீசியும் ஆரவாரித்தனர் என்க.

பி - ம். 2. களிக்குந் தேவர், களித்துத் தேவர்.
3. தூசு நீக்கி ; யெழுந்தவ ரார்த்தபோது.

56

### திருமால் முதலியோரை வாநரர் தம் கண்ணுற் காணுதல்

3107. வரந்தரு முதல்வன் மற்றை மான்மறிக் கரத்து வள்ளல்
புரந்தரன் முதல்வ ராய நான்மறைப் புலவர் பாரில்
நிரந்தரந் தோன்றி நின்ரு ரருளிஞ னிறைந்த நெஞ்சர்
கரந்தில ரவரை யாக்கை கண்டன குரங்குங் கண்ணுல்.

வரம் தரு முதல்வன் - அன்பர்கள் கேட்கும் வரன்களை ஈயும் முதற்கடவுளான திருமால், மான் மறி கரத்து வள்ளல் - மான்

குட்டியைத் தம் திருக்கையில் ஏந்தின வள்ளலான சிவபெருமான், புரந்தரன் - இந்திரன், முதல்வராய - இவர்களைத் தலைவர்களாகக் கொண்ட, நான் மறை புலவர் - நான்கு மறைகளையும் அறிந்த தேவர்கள், பாரில் - பூமியில், நிரந்தரம் - நெருக்கமாக, தோன்றி நின்றார் - (தம்மைத்) தோற்றுவித்துக்கொண்டு நின்றார்கள்: (அவர்கள்), அருளினால் நிறைந்த நெஞ்சர் - அவர்கள் அருளினால் நிறைந்த நெஞ்சையுடையவர்கள்; கரந்திலர் - அவர்கள் தம்மை மறைத்துக் கொண்டாரல்லர்; அவரை - அத்தகைய மேன்மையுள்ளவர்களை, குரங்கும் - குரங்குகளும், கண்ணால் - தம் ஊனக் கண்களால், யாக்கை கண்டனர் - (அத் தேவர்களின்) உடல்களை கண்டனர். மற்று, ஐ: அசைகள்.

புலவர் - தேவர். நிரந்தரம் - நெருக்கம். தோன்றி நின்றார், கரந்திலர், குரங்கும் கண்டன என்றவை முத்தேவர் முதலியோர் எளிதில் தம்மைப் புலப்படுத்திக்கொள்வதில்லை என்பதை வற்புறுத்துகின்றன. குரங்கும், உம்: இழிவு சிறப்பு.

பி - ம். 2. புலவரானோர்.
3. தோன்ற நின்றார்.
4. குரங்கு கண்ணால்; கண்டிலர் குரங்கும். 57

## இறந்த வாநரர் கடவுளருளினால் உயிர்பெற்றெழுதல்

3108. அறந்தலை நின்றார்க் கில்லை யழிவெனு மறிஞர் வார்த்தை
சிறந்தது சரங்கள் பாயச் சிந்திய சிரத்த வாகிப்
பறந்தலை யதனின் மற்றப் பாதக வரக்கன் கொல்ல
இறந்தன கவிக ளெல்லா மெழுந்தன விமையோ ரேத்த.

சரங்கள் பாய - பகைவனின் அம்புகள் பாய, கவிகள் எல்லாம் - குரங்குகள் யாவும், சிந்திய சிரத்த ஆகி - தலைகள் துணிந்தனவாகி, பறந்தலை அதனில் - போர்க்களத்தில், அ பாதக அரக்கன் கொல்ல இறந்தன - அந்தப் பாதகனான அரக்கன் கொல்ல இறந்தனவாகிய அவை, இமையோர் ஏத்த எழுந்தன - தேவர்கள் புகழ உயிர்பெற்று எழுந்தன; (இதனால்), 'அறம் தலை நின்றார்க்கு - அறத்தினிடம் நின்றவர்க்கு, அழிவு இல்லை எனும் - அழிதல் கிடையாது என்று சொல்லுகிற, அறிஞர் வார்த்தை -

அறிவாளிகளின் கூற்று, சிறந்தது - சிறப்படைந்தது. மற்று : அசை.

இச்செய்யுளால் தேவர்கள் இறந்த வானரர்களை எழுப்பி விட்டனர் என்பது தெரியவருகிறது. அறத்தில் நின்றவர்க்கு அழிவில்லை என்ற பெரியோர் கூற்று, இறந்த வானரர் எழுந்த செயலால் சிறப்பிக்கப்பெற்றது என்ருர். சிந்திய சிரத்தவாக : வடமொழிநடை. பறந்தலை - போர்க்களம் ; 'வெண்ணிப் பறந்தலை' (புறநா 66).

பி - ம். 1. வென்ப தறிஞர் வார்த்தை.
2. சிரத்தராகி.
3. யதனின் வந்த பாதக.
4. கவியுமெல்லா மெழுந்தன. 58

## அங்கதன் இந்திரசித்தின் தலையையேந்தி முன்னே செல்ல, அநுமன்மீது இலக்குவன் ஏறிச் செல்லுதல்

3109. ஆக்கையி னின்று வீழ்ந்த வரக்கன்றன் தலையை யங்கை
தூக்கினன் துள்ளுங் கூத்தன் வாலிசேய் தூசு செல்ல
மேக்குயர்ந் தமரர் வெள்ள மள்ளியே தொடர்ந்து வீசும்
பூக்கிளர் பந்தர் நீழ லநுமன்மே லிளவல் போனன்.

ஆக்கையினின்று - உடலிலிருந்து, வீழ்ந்த - (துணிக்கப் பெற்றுத் தரையில்) விழுந்த, அரக்கன் தன் தலையை - அரக்கனான இந்திரசித்தின் தலையை, துள்ளும் கூத்தன் - துள்ளிக் கூத்தாடும் செயலையுடையனாகி, வாலி சேய் - வாலியின் மகனான அங்கதன், அங்கை தூக்கினன் - (தன்) உள்ளங்கையில் வைத்துத் தூக்கி, தூசு செல்ல - முன்னணியிற் போக, மேக்கு உயர்ந்து - மிகவும் மேலான இடத்தில் தங்கி, அமரர் வெள்ளம் - தேவர் கூட்டத்தினர், அள்ளியே - கைகளால் வாரி, தொடர்ந்து வீசும் - இடைவிடாமல்

பொழியும், பூ கிளர் பந்தர் நீழல் - பூக்களால் விளங்கும் பந்தலின் நிழலிலே, அநுமன் மேல் - அநுமன் தோளின்மீது, இளவல் - இலக்குவன், போனன் - (இராமபிரானிருந்த இடத்தை நோக்கிச்) சென்றனன்.

அகம் + கை = அங்கை. தூசு - முன்னணிப்படை; இது தூசி எனப்படும். 'வாலிசேய் தூசு செல்ல' (திருமுடி. 4). மேக்கு - மேலிடம்; 'மேக்கெழு பெருஞ்சினை' (குறுந். 26). பந்தர்: கடைப் போலி. நீழல்: நீட்டல் விகாரம்.

பி - ம். 1. ஆக்கையினற்று விழ்ந்த; செந்தலையை யங்கை.

2. தூக்கின னுள்ளங் கூர்ந்த; தூது செல்ல.

3. வெள்ள மிடைவிடா விசுகின்ற, இடைவிடார் வீசுகின்ற. 59

## அங்கதன் கையிலிந்திரசித்தின் தலையைக் கண்ட இந்திரன் கூற்று

3110 வீங்கிய தோளன் தேய்ந்து மெலிகின்ற பழியன் மீதுற்
றோங்கிய முடியன் திங்க ளொளிபெறு முகத்த னுள்ளால்
வாங்கிய துயரன் மீப்போய் வளர்கின்ற புகழன் வந்துற்
றோங்கிய வுவகை யாள னிந்திர னினைய சொல்வான்.

(அப்பொழுது அக்காட்சியைக் கண்ட), இந்திரன் - இந்திரன், வீங்கிய தோளன் - பூரித்த தோள்களை உடையவனாய், தேய்ந்து மெலிகின்ற பழியன் - (அரக்கர் வீழ்ச்சிகளால்) தன் பழி தேய்ந்து மெலிவடைந்துவரும் தன்மையனாய், மீதுற்று ஓங்கிய முடியன் - மேலுற்ற உயர்ந்த தலையை யுடையவனாய், திங்கள் ஒளி பெறு முகத்தன் - சந்திரன் ஒளிபோன்ற ஒளியைப்பெற்ற முகத்தனாய், உள்ளால் வாங்கிய துயரன் - துயரம் உள்ளுக்குள்ளே அடக்கிய தன்மையனாய், மீ போய் வளர்கின்ற புகழன் - மேலே ஓங்கி வளர்கின்ற புகழையுடையவனாய், வந்துற்று - (புதிதாக) வந்து சேர்ந்து, ஓங்கிய உவகையாளன் - உயர்ந்த மகிழ்ச்சியை உடையனாகி, இனைய - இப்படிப்பட்ட சொற்களை, சொல்வான் - சொல்ல லுற்றான்.

மேகநாதன் இந்திரசித்து என்று பெயர் தாங்கக் காரணமாயிருந்த இந்திரன் இதுகாறும் நாணத்தோடும் பழியோடும் தலைகவிழ்ந்திருந்த நிலை, அவ்விந்திரசித்தின் அழிவால் முற்றிலும் மாற, அவன் மனம் மகிழ்ந்து அங்கதனை நோக்கிச் சில கூறலானான். அவை அடுத்த இரண்டு பாடல்களில் காணத்தகும்.

தேய்ந்து மெலிகின்ற பழியன் - அரக்கரால் வெல்லப்பெற்று அவர்க்கு அடங்கி வாழ்வதால் உண்டான பழி அரக்கர் தலைவர்கள் ஒருவர் பின் ஒருவராக மாண்டுபோக, இந்திரன் பழி தேய்ந்தவனானான். உள்ளால் அடங்கிய துயரம் - பழியினின்று அவன் விடுபட்டானெனினும் அவன் துயரம் முற்றிலும் நீங்காமல் சிறுகச் சிறுக உள்ளுக்குள்ளே அடங்கியது என்றார். மிகுந்த துயரமும் அச்சமும் கொண்ட ஒருவர் அவை நீங்கி மகிழ்ச்சி பெறும் காலத்து அவருக்குண்டாகும் மெய்ப்பாடுகள் இச்செய்யுளில் கூறப்பெறுதல் காண்க.

(இச்செய்யுளும் அடுத்துவரும் இரு செய்யுட்களும் இந்திரசித்தின் தலையைக்கண்ட இராமபிரானின் கூற்றுக்களையும் மெய்ப்பாடுகளையும் புலப்படுத்துமாறு பாடங்கள் சில சுவடிகளிலும், அச்சுப் புத்தகங்களிலும் காணப்பெறுகின்றன).

பா - ம். 1. மெலிகின்ற விழியன்; பழியன் மேன்மேல்.

2. ஓங்கிய வுவகை யூற மூள்ளத்த னும்பர்க் காக; திங்கட் கொளிர்கின்ற முகத்த னுள்ளம்.

3. தேங்கிய கடலை முன்னாட் டிரித்தவன் சேய்மெசங் கையால்.

4. தாங்கிய குரிசில் பற்றிக் கொணர்ந்திருந் தலையைக் கண்டான்; இந்திர னுரைப்ப தானன்.

60

3111. எல்லிவான் மதியி னுற்ற
கறையென யாண்டு மென்றேள்
புல்லிய வடுவும் போகா
தென்றகம் புழுங்கி நைந்தேன்

வில்லியர் திலகன் வந்து
துடைத்துற வெம்மை தீர்ந்தேன்
செல்வமும் பெறுதற் குண்டோ
குறையினிச் சிறுமை யாதோ.

(இந்திரன்), 'எல்லி - இரவில், வான் மதியின் - வானத்தில் (விளங்கும்) சந்திரனிடம், உற்ற கறையென - பொருந்திய களங்கம் என்னுமாறு, யாண்டும் - எப்போதும், என் தோள் புல்லிய வடுவும் - என் தோளிற் பொருந்திய புண்ணின் தழும்பும், போகாது என்று - மறையாது என்று, அகம் புழுங்கி நைந்தேன் - மனம் நொந்து வருந்தினேன்; வில்லியர் திலகன் - வில்வீரர்களுள் திலகம் போன்ற இலக்குவன், வந்து - தோன்றி, துடைத்துற - என் வடுவைத் துடைத்ததனால், வெம்மை தீர்ந்தேன் - (என் அவமானத்தால் உண்டான) கொடுமையினின்று விடுபட்டேன்; செல்வமும் பெறுதற்கு உண்டோ - இதைவிட யான் பெறுதற் குரிய பெரிய செல்வமும் உண்டோ? இனி - இனிமேல், குறை சிறுமை - (எனக்கு விளையும்) குறையால் (உண்டாகும்) எளிமை, யாது - எது? (ஒன்றுமின்று என்றபடி). ஓ: அசை.

மதியின் மறு; 'குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும் பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து' (குறள். 957); 'சான்றோர் தங்க ணெய்திய குற்றந், தோன்றுவழி விளங்குந் தோற்றம்போல, மாசறு விசும்பின் மறுநிறங் கிளர' (மணி. 6:3-5); நாலடி. 151. என்தோள் புல்லிய வடு என்றது, மேகநாதனுடன் இட்ட போரில் இந்திரன் பெற்ற உடற்புண் என்பதினும், அவன் தோல்வியுற்று வலிமையற்றவன் என்ற பழிச்சொல் பெற்றதால் அவனுக்கு உண்டான மனப்புண் என்று கொள்வது சிறப்பானது. வில்லியர் திலகன் - இலக்குவன்; 'வரிசிலை மறைவலோன்' (ஆரணிய. 783); 'வில்லி'; (கிட்கிந்தா. 629). குறையும் சிறுமை யும் என்றும் பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. எல்லிவாண், எல்லிவாழ்; கறையென வென்மேல் வந்து, கறையென விரண்டு மென்றேள்.

2. வடுவும் போகா வென்றகம்; என்றகம் புலம்புகின்றேன்.

3. சொல்லிய தரும நல்கத் துவக்கற்றுத் துயரந் தீர்ந்தேன்; வில்லிய திலகம்.

3112. தென்றலை யாழி தொட்டோன்
சேயருள் சிறுவன் செம்மல்
வென்றலைத் தென்னை யார்த்துப்
போர்த்தொழில் கடந்த வெய்யோன்
தன்றலை யெடுப்பக் கண்டு
தானவர் தலைகள் சாய
என்றலை யெடுக்க லானே
னினிக்குடை யெடுப்பே னென்றான்.

(இந்திரன் மேலும்), 'என்னை வென்று அலைத்து - என்னை வென்று தொல்லைப்படுத்தி, ஆர்த்து - பெருமுழக்கம் செய்து, போர்த்தொழில் கடந்த - போர்த்தொழிலிலே வெற்றியடைந்த, வெய்யோன் தன் - கொடிய தன்மையையுடைய இந்திரசித்தினுடைய, தலை - (வெட்டப்பட்ட) தலையை, தென் - அழகிய, தலை - இடத்தையுடைய, ஆழி - கடலை, தொட்டோன் சேய் - தோண்டின சகரபுத்திரரின் வமிசத்தில் தோன்றின இராமபிரானின், அருள் சிறுவன் செம்மல் - அருளைப் பெற்ற சிறுவனை செம்மைக் குணம் வாய்ந்த அங்கதன், எடுப்ப கண்டு - (கையிலே) எடுத்து வருவதைப் பார்த்து, தானவர் தலைகள் சாய - அசுரர்கள் அச்சத்தால் தலைகளைக் கவிழ்க்க, என் தலை எடுக்கலானேன் - என் தலையை நான் மேலே தூக்கலானேன்; இனி - இனிமேல், குடை எடுப்பேன் - (அரசர்க்குரிய) குடை பிடிக்கவும் உரியவனுவேன்' என்றான் - என்று கூறினான்.

இம் மூன்று செய்யுட்களால் இந்திரசித்து வதையுண்டது பற்றி, அவனால் மிகுந்த தொல்லைகட் குள்ளாயிருந்த இந்திரன் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தது கூறப்பெற்றது. ஆழி தொட்டோன் சேய், இங்கு இராமபிரானைக் குறித்தது; அவனால் அருளப்பெற்ற சிறுவனாகிய செம்மல் என்று கொள்ளப்பெற்றது. இந்திரசித்தின் தலையை அங்கதன் தன் கையில் எடுக்க, அசுரர்கள் தலைகள் சாய்ந்தன, இந்திரனின் தலை உயர்ந்தது என்று கூறியது நயம். குடை யெடுத்தல் அரசநிலைக்கு உரியது; இது காறும் இந்திரன் தன் நாடிழந்தமையால் அவன் குடை பிடிக்க வில்லை; இனிப் பிடிப்பான் என்பது கூறப்பெற்றது. இச்

செய்யுள் சில சுவடிகளிலும் அச்சுப் பதிப்புக்களிலும் பின்வருமாறு மாறி அமைந்துள்ளது.

தென்றலை யாழி சூழ்ந்த திண்மதி லிலங்கை காக்கும்
புன்றலைக் கள்வன் பெற்ற புதல்வனை யிளவல் வீழ்த்த
வன்றலை யெடுத்து நீமுன் வருதலால் வான ரேச
என்றலை யெடுக்க லானே னினிக்குடை யெடுப்ப னென்றான்.

பி - ம். 1. யாழி தொட்டார் சேயருள் ; தேவருட் சிறுவன் செம்மல்.
2. வென்றலைத் தென்ன வார்த்து.
3. இன்றலை யெடுத்து நீமுன்.
4. என்றலை யெடுத்தே னின்னனந்தனிக். 62

இதன்பின் ஓர் அதிகப்பாடல்

வான்றலை யெடுக்க வேலை மண்டலை யெடுக்க வானோர்
கோன்றலை யெடுக்க வேதக் குலந்தலை யெடுக்கக் குன்றாத்
தேன்றலை யெடுக்குந் தாராய் தேவரை வென்றான் றீய
ஊன்றலை யெடுத்தாய் நீயென் றுரைத்தன ருவகை மிக்கார்.

## வெற்றியுடன் இலக்குவன் மீண்டு வருவதை இராமபிரான் கண்டு மகிழ்தல்

3113. வரதன்போய் மறுகா நின்ற
மனத்தினன் மாயத் தோனைச்
சரதப்போர் வென்று மீளுந்
தருமமே தாங்க வென்பான்
விரதம்பூண் டுயிரி னேடுந்
தன்னுடை மீட்சி நோக்கும்
பரதன்போன் றிருந்தான் றம்பி
வருகின்ற பரிசைப் பார்த்தான்.

வரதன் - வரங்களை ஈபவனான இளவல், போய் - (இந்திரஜித்துடன் போரிடச்) சென்ற பிறகு, மறுகா நின்ற - கலங்கி நின்ற, மனத்தினன் - மனத்தை உடையனாய், தருமமே தாங்க -

அறம் ஒன்றே துணையாகி நின்று அவனைத் தாங்க, சரதம் - உண்மையாக, மாயத்தோனை போர் வென்று மீளும்-மாயம் நிரம்பிய இந்திரசித்தைப் போரில் வென்று திரும்பி வருவான், என்பான் - என்று சொல்லிக்கொண்டு (மனத்தைத் தேற்றிக் கொள்பவனாய்) இருந்த இராமபிரான், விரதம் பூண்டு - விரதங்களை மேற்கொண்டு, உயிரினோடும் - தன் உயிரைத் தாங்கிக்கொண்டு, தன்னுடை மீட்சி நோக்கும் - (காடு சென்ற) தன் திரும்புதலை எதிர்பார்த்து நிற்கும், பரதன் போன்று - பரதனைப் போன்று, இருந்தான் - (தான் கவலையுடன்) இருந்த நிலையில், தம்பி-தம்பியான இலக்குவன், வருகின்ற பரிசை - (வெற்றியுடன்) திரும்பி வருகின்ற தன்மையை, பார்த்தான் - (அவன்) கண்டான்.

இலக்குவனை எதிர்நோக்கி நின்ற இராமபிரானுக்கு, இராமபிரான் மீட்சியை எதிர்நோக்கி நின்ற பரதன் உவமை. 'வரதன் - இளவல்' பழையவுரை. சரதம் - உண்மை; 'வேத முடிவிது சரதமென்றான்' (யுத்த. 251).

பி - ம். 1. மன்னன்மா மாயத்தோனை ; மன்னுமா மாயத்தோன்.

2. தாங்குகென்பான் விரதம்பூண் டுய்வானோடும்.

3. தன்னுடைய வரவை நோக்கும்.

4. வருகின்ற தன்மை பார்த்தான் ; படியைப் பார்த்தான். 63

3114. வன்புலங் கடந்து மீளுந் தம்பிமேல் வைத்த மாலைத்
தன்புல நயன மென்னுந் தாமரை சொரியுந் தாரை
அன்புகொ லழுக ணீர்கொ லானந்த வாரி யேகொல்
என்புக ளுருகிச் சோருங் கருணைகொ லியார தோர்வார்.

வன் புலம் - பகைப் புலத்தில், கடந்து - வென்று, மீளும் - திரும்பி வரும், தம்பி மேல் - தம்பியாகிய இலக்குவன்மீது, வைத்த - இராமபிரான் (நோக்கி) வைத்தருளிய, தன் புலன் - தனது புலனாகிய, நயனம் என்னும் தாமரை - கண் என்னும் தாமரைகள், மாலை சொரியும் தாரை - ஒழுங்காகச் சொரியும் கண்ணீரொழுக்கு, அன்பு கொல் - (இராமபிரான் இலக்குவன்மீது கொண்ட) அன்பு காரணமாக ஆனதோ? (அன்றி), அழு

கணீர் கொல் - (அவன் வருத்தத்தால்) அழுததால் உண்டான கண்ணீரோ ? (அன்றி), ஆனந்த வாரியே கொல் - மகிழ்ச்சியால் பொங்கிய கடல்தானோ ? (அன்றி), என்புகள் உருகி சோரும் கருணை கொல் - (இராமபிரானின்) என்புகளே உருகி வழியும் கருணைதானோ ? அது யார் ஓர்வார் - (அவ்வாறு) இராமபிரான் நயனங்கள் சொரிந்தவற்றை (இன்னதென்று) யார் அறிவார் ? (ஒருவராலும் அறிய முடியாது என்றபடி).

'வன்புலம் - பகைப் புலம்; இலங்கை; உயுத்த களம்' என்பன பழையவுரை. மாலை - ஒழுங்கு. புலன் - அறிவு; இங்குப் பார்வை அறிவு. தாரை - நீரொழுக்கு. அன்பு கொல்; 'அன் பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்' (குறள். 71). என்புக ளுருகிச் சோர்தல்; 'என்பெனக் குருகுகின்ற திவர்கின்ற தளவில் காதல்' (கிட்கிந்தா. 56); 'என்பு தோன்றல வுருகின' (கிட்கிந்தா. 155) முதலியன காண்க. இச்செய்யுள் கவிக்கூற்று.

பி - ம். 1. தம்பிமேல் வைத்த காதல்.

3. கழிகணீர்கொல்.

4. என்புற வுருகிச்; கருணையால் யாரதோர்வார்; யாரேதேர்வார். 64

## இராமபிரானின் திருவடிகளில் இந்திரசித்தின் தலையைச் சமர்ப்பித்தலும் அவன் கொண்ட மகிழ்ச்சியும்

3115. விழுந்தழி கண்ணி னீரு
முவகையுங் களிப்பும் வீங்க
எழுந்தெதிர் வந்த வீர
னிணையடி முன்ன ரிட்டான்
கொழுந்தெழுஞ் செக்கர்க் கற்றை
வெயில்விட வெயிற்றின் கூட்டம்
அழுந்துறக் கடித்த பேழ்வாய்த்
தலையடி யுறையொன் றாக.

விழுந்து அழி கண்ணின் நீரும் - தன் (கண்ணினின்று கீழே) விழுந்து அழிந்துபோம் கண்ணீரும், உவகையும் - மகிழ்ச்சியும், களிப்பும் - மனக்களிப்பும், வீங்க - மேலோங்க, எழுந்து - தான்

இருந்த இடத்தினின்று மேலே எழுந்து, எதிர் வந்த வீரன் - (தன் தம்பியைக் காண) எதிர்நோக்கி வந்த வீரனான இராமபிரானின், இணை அடி முன்னர் - இரு பாதங்களுக்கும் முன்னே, (இந்திர சித்தினுடைய) கொழுந்து எழும் செக்கர் கற்றை - சுவாலை எழுகின்ற சிவந்த (தலை மயிர்த்) தொகுதி, வெயில் விட - வெயிலை வீச, எயிற்றின் கூட்டம் - பற்களின் தொகுதி, அழுந்துற கடித்த பேழ் வாய் - (உதடுகளைப் பற்கள்) அழுந்துமாறு கடித்த நிலையிலிருந்த பிளந்த வாயோடு கூடிய, தலை - தலையை, அடியுறை ஒன்று ஆக - ஒரு பாத காணிக்கையாக, இட்டான் - வைத்தான்.

இவ்வாறு வைத்தவன் அங்கதன் என்க. அரக்கர் தலைமயிர் நெருப்புப் போன்ற நிறமுடையதாதலின், 'கொழுந்தெழுஞ் செக்கர்க் கற்றை வெயில் விட' என்றார். எயிறு கடித்த பேழ் வாய்; இறக்கும்போது இந்திரசித்து இயற்றிய செயல் குறிக்கப் பெற்றது. அடியுறை - பாத காணிக்கை; 'ஈட்டிய பல்பொருள்களெம்பிரானுக் கடியுறையென்று' (திவ். பெரியாழ். 4.3.9).

பி - ம். 1. விழுந்திழி கண்ணீர்.
2. எழுந்தெதிர் நின்ற.
3. கொழுந்தழி சுடரின் கற்றைக்; கொழுந்தெரி சுடரின், கற்றைக் குழாங்கொள்; எயிற்றி னீட்டம்.
4. அழுந்துறு மடித்த பேழ்வாய்; உறையடி; அடியிறை. 65

3116. தலையினை நோக்குந் தம்பி
கொற்றவை தழீஇய பொற்றோண்
மலையினை நோக்கும் நின்ற
மாருதி வலியை நோக்கும்
சிலையினை நோக்குந் தேவர்
செய்கையை நோக்கும் செய்த
கொலையினை நோக்கு மொன்று
முரைத்திலன் களிப்புக் கொண்டான்.

(அப்பொழுது இராமபிரான்), தலையினை நோக்கும் - (தன் அடியில் இடப்பெற்ற இந்திரசித்தின்) தலையைப் பார்ப்பான்; தம்பி - இளவலின், கொற்றவை தழீஇய - வீரலக்ஷ்மி பொருந்திய,

பொன் தோள் மலையினை நோக்கும் - (இலக்குவனின்) அழகிய தோளாகிய மலையைப் பார்ப்பான்; நின்ற - அங்கே எதிரில் நின்ற, மாருதி - அநுமனுடைய, வலியை - உடல் வலிமையை, நோக்கும் - காண்பான்; சிலையினை நோக்கும் - (இலக்குவன் பிடித்த) வில்லைப் பார்ப்பான்; தேவர் செய்கையை நோக்கும் - தேவர்கள் அடிக்கடி செய்துவந்த செயல்களை ஆராய்வான்; செய்த கொலையினை நோக்கும் - இலக்குவன் இயற்றிய (செயற்கரிய) கொலையைக் கருதுவான்; (இவற்றையெல்லாம் கண்டும்) ஒன்றும் உரைத்திலன் - ஒரு பேச்சும் பேசாதவனாய், களிப்பு கொண்டான் - (நடந்தவற்றை எண்ணி மிகுந்த) களிப்பை அடைந்தவனானான்.

ஒன்று முரைத்திலன்; உணர்ச்சி மிகுங்காலத்து பேச்சு நிகழ்வதில்லை. என்பதற்கு, மேற்கோள்கள் :—'வாங்கிய வாழி தன்னை ........ஏங்கின ளிருந்த தல்லா லியம்பலள்........' (சுந்தர. 1287); 'அனையளாகி யநுமனை நோக்கினாள், இனைய தின்ன தியம்புவ தென்பதோர், நினைவி லாது நெடிதிருந் தாணெடு'' (யுத்த. மீட்சிப். 24). கொற்றவை - வீரத்திரு. 66

இலக்குவன் தமையன் தாள்களில் வீழ்தலும்
அவன் தன் தம்பியைப் போற்றுதலும்

3117 காளமே கத்தைச் செக்கர்
கலந்தெனக் கரிய குன்றம்
நாள்வெயிற் பரந்த தென்ன
நம்பிதன் தம்பி மார்பில்
தோளின்மே லுதிரச் செங்கேழ்ச்
சுடுவதன் னுருவில் தோன்றத்
தாளின்மேல் வணங்கி னானைத்
தழுவினன் தனித்தொன் றில்லான்.

தனித்து ஒன்று இல்லான் நம்பி - இலக்குவனையன்றித் தனக்கெனத் தனியாக ஒன்றுமில்லாதவனான பெரியோன் (இராமபிரான்), காளமேகத்தை - கரிய மேகத்தை, செக்கர் கலந்தென -

செவ்வானத்தைக் கூடினாற்போலவும், கரிய குன்றம் - கரிய ஒரு மலை, நாள் வெயில் பரந்தது என்ன - சூரியோதயகால வெயில் பரப்புற்றது என்றாற்போலவும், தன் தம்பி - இளவலின், மார்பில் - மார்பிலும், தோளின்மேல் - தோள்களின்மேலும், உதிர செம் கேழ் சுவடு - குருதி படிந்த சிவந்தநிறமுள்ள காயங்கள், தன் உருவில் தோன்ற - தன் திருமேனியில் புலப்பட, தாளின்மேல் வணங்கினானை - தன் திருவடிகளில் வணங்கினவனை, தழுவினன் - தழுவிக்கொண்டான்.

காளமேகமும், கரிய குன்றும் இராமபிரானுக்கும், செக்கரும், நாள் வெயிலும் உதிரம் படிந்த திருமேனியையுடைய இலக்குவனுக்கும் உவமைகளாகவும் கொள்க. செக்கர் - செவ்வானம்; 'செக்கர்கொள் பொழுதினான்' (கலித். 126). நாள் வெயில் - விடியற்கால வெயில். தனித்தொன்றில்லான்; இலக்குவனை யல்லாது தனித்து ஒரு நிலைமையுறாதவன்.

பி - ம் 1. காளமேகத்திற்; கரிய குன்றின்; கனகக் குன்றின்.
4. தழுவி நின்றிணைய சொன்னான்; தழுவினன் தடக்கையார. 67

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

கம்ப மதத்துக் களியானைக் காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பு மென்பா லினிவந்து குறுகி னாளென் றகங்குளிர்ந்தேன்
வம்பு செறிந்த மலர்க்கோயின் மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி யுடையான் பகையஞ்சா னென்னு மாற்றந் தந்தனையால்.

## வேறு

### இராமபிரான் இலக்குவனுடற் புண்களை யொற்றிப் போக்குதல்

3118. தூக்கிய தூணி வாங்கித்
தோளொடு மார்பைச் சுற்றி
வீக்கிய கவச பாச
மொழித்தது விரைவி னீக்கித்

தாக்கிய பகழிக் கூர்வாய்
தடிந்தபுண் தழும்பு மின்றிப்
போக்கினன் தழுவிப் பல்கால்
பொற்றடந் தோளி னெற்றி

(இராமபிரான் இலக்குவன்) தூக்கிய - சுமந்த, தூணி வாங்கி - அம்புப் புட்டிலை எடுத்து, தோளொடு மார்பை சுற்றி வீக்கிய - தோளையும் மார்பையும் சூழ்ந்து இறுக்கி கட்டிய, கவச பாசம் ஒழித்து - கவசத்தை யொட்டிய கயிற்றினை அவிழ்த்து, அது - அக்கவசத்தை, விரைவின் நீக்கி - வேகமாக நீக்கி, தாக்கிய - உடலைத் தாக்கிய, பகழி - அம்புகளின், கூர்வாய் - கூரிய நுனிகள், தடிந்த - வெட்டிய, புண் தழும்பும் இன்றி - புண்களும் தழும்பு களும் இல்லாமல் மாறும்படி, பல்கால் தழுவி - இலக்குவனைப் பலமுறை அணைத்துக்கொண்டு, பொன் தட தோளின் - பொன் னிறம் போன்ற (தன்) அழகிய அகன்ற தோள்களினாலே, ஒற்றி - ஒற்றடம் கொடுத்து, போக்கினன் - நீக்கினான்.

இங்கு இராமபிரான் இலக்குவனுக்குச் செய்த சிகிச்சைகள் கூறப்பெற்றன. முதனூலில் ஆரணிய காண்டத்தில் கர தூஷ ரோடும், அவர்களுடைய படைகளோடும் ஒன்றியாய் நின்று அவர்களை வென்ற இராமபிரானின் உடற்புண்களைச் சீதாப் பிராட்டி தன் ஆலிங்கத்தினால் அகற்றினாள் என்று கூறியது இங்குக் கருதத்தக்கது. வீக்குதல் - இறுக்குதல்; 'தானை வீக்கற விசித்த' (சீவக. 1086). தடிதல் - வெட்டுதல்; 'வாளோச்சி மிகத் தடிந்தான்' (பு. வெ. 5, 8). புண், பசியது; தழும்பு - காய்ந்த வடு. ஒற்றுதல் - ஒற்றடம் போடுதல்.

பி - ம். 1. தூக்கின தூணி; மார்பிற் சுற்றி.
2. விசித்தது விரைவின் நீக்கி; விரகினீக்கி. 68

இராமபிரான் வீடணனைப் புகழ்தல்

3119. ஆடவர் திலக நின்னா
லன்றிக லநும னென்னும்
சேடனா லன்று வேறோர்
தெய்வத்தின் சிறப்பு மன்று

வீடணன் தந்த வென்றி
யீதென விளம்பி மெய்ம்மை
ஏடவி ழலங்கல் மார்ப
னிருந்தன னினிதி னிப்பால்.

ஏடு அவிழ் - மலரிதழ்கள் மலர்கின்ற, மார்பன் - மார்பினை யுடைய இராமபிரான், (இலக்குவனை நோக்கி), 'ஆடவர் திலக - வீரர்களுள் திலகம் போன்றவனே! (இவ் வெற்றி), நின்னால் அன்று - உன்னால் பெறப்பெற்றது அன்று; இகல் அநுமன் என்னும் சேடனால் அன்று - வலிமை மிக்க அநுமன் எனப் பெறும் பெரியோனாலும் பெறப்பெற்றது அன்று; வேறு ஓர் தெய்வத்தின் சிறப்பும் அன்று - அந்நியமான ஒரு தெய்வம் தன் சிறப்பால் அருளியதும் அன்று; (ஆனால்), ஈது வீடணன் மெய்ம்மை தந்த வென்றி - இது வீடணன் உண்மையாக (நமக்கு) அளித்த வெற்றி, என - என்று, விளம்பி - சொல்லி, இனிதின் இருந்தனன் - இனிதாக அமர்ந்தருளினான்; இப்பால் - இந்தப் பக்கத்திலே (இவ்வாறிருக்க).

ஒரு நிகழ்ச்சியின் முடிவை ஒரு படலத்தில் முடித்து, அதன் இறுதியில், 'இப்பால்' என்று கூறி அடுத்த படலத்தை மேலே தொடங்குவது ஆசிரியர் கையாளும் ஒரு முறையாகும்; (ஆரணிய. 226); சுந்தர. 690 முதலியன காண்க.

பி - ம். 1. திலத நின்னால்.
2. மற்றோர் தெய்வத்தின் சிறப்பு.
4. மார்ப ரிருந்தனர்.



இந்திரசித்து வதைப் படலம் முற்றும்

---

# 28. இராவணன் சோகப் படலம்

இந்திரசித்து வதையுண்ட செய்தி கேட்ட இராவணன் சோகமடைந்து கூறியவற்றையும் செய்தவற்றையும் கூறும் படலம் என விரியும். சில சுவடிகளில் மூலபல சேனைப் படலம் இதனினின்று தொடங்கும்.

வேறு

## இராவணன் தன் மகன் இறந்த செய்தி அறிதல்

3120. ஓத ரோதன வேலை கடந்துளார்
பூத ரோதரம் புக்கெனப் போர்த்திழி
சீத ரோதக் குருதித் திரையொரீஇத்
தூத ரோடினர் தாதையிற் சொல்லுவான்.

தூதர் - (போர்க்களத்துக்குச் சென்றிருந்த இராவணனின்) தூதுவர்கள், தாதையின் சொல்லுவான் - (நடந்த செய்தியைத்) தந்தையாகிய இராவணனிடம் சொல்லும் பொருட்டு, ஓத ரோதன வேலை கடந்துளார் - கடலோசையை ஒத்த அழுகை யொலியின் கரையைக் கடந்து, போர்த்து இழி சீத ரோதம் குருதி திரை ஒரீஇ - (போர்க்களமெங்கும்) போர்த்ததுபோல் மூடிக் கொண்டு இழிந்தோடுகின்ற குளிர்ந்த கரையையுடைய இரத்த அலைகளைக் கடந்து (அதனை நீங்கி), பூதர உதரம் புக்கென - மேரு மலையின் வயிற்றினுள் புகுந்தது போல, (கோபுர வாயிலினுட் புகுந்து) ஓடினர் - (இலங்கையினுள்) ஓடினார்கள்.

தூதர், ரோதனம், பூதரம், உதரம், ரோதம் வடசொற்கள். ரோதனம் - அழுகை. பூதரம் - மலை; பூமியைத் தாங்கிக் கொண்டிருப்பது; (இங்கு மேருமலை); 'பூதர மனைய மேனி; (யுத்த. தேரேறு. 1). உதரம் - வயிறு; நடுவிடம். ரோதம் - கரை; அணையுமாம். 'அரோதம் - தகைத்தல்; சீதமாகிய தகைத்தலில் நின்ற குருதித்திரை நுழைந்தோடினர் தூதர்' என்பன பழையவுரை.

இச்செய்யுள் தூதுவர் இந்திரசித்து வதையுண்ட செய்தியை இராவணனுக்குக் கூறப் போர்க்களத்தை விட்டு, நகரின் கோபுர வாயிலினுள் நுழைந்து, ஓடிச் சென்ற செய்தியைக் கூறுவதாகும். ஓதம் - கடல்; கடலொலிக்கு ஆயிற்று. ரோதனத்துக்கு ஓதம் உவமை. குருதித்திரை என்றது போர்க்களத்தில் ஓடிய இரத்தப் பெருக்கின் அளவு கூறியவாறு. அழுகையொலிக் கரையையும், இரத்தம் நிறைந்த கரையையும் கடந்து கோபுர வாயிலினுட் புகுந்தனர் என்க. பூதர உதரம் புக்கென; 'மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல்' (சுந்தர. *161*). அரண்மனையிலிருந்த மந்திரிகளே இந்திரசித்து மாண்ட செய்தியை அறிந்து இராவணனிடம் கூறினர் என்று வான்மீகம் கூறும்.

பி - ம். 1. ஓதரோதமா வேலை; ஓதரோதமச்; ஓதரோதரம்; கடந்துராய்ப்.

2. பூதரோதனம்; போர்த்திறு; போர்க்கலும்; போர்க்கரும்.

3. ழிசையொரீஇத்.

4. தூதரோத வெங்காலிற் றுணைந்துளார்; ஓடினர் தூதை சொல்லுவார். 1

3121. அன்றி லங்கரும் பேடைக ளாமென
முன்றி லெங்கு மரக்கியர் மொய்த்தழ
இன்றி லங்கை யழிந்ததென் றேங்குவார்
சென்றி லங்கையிற் றாதையைச் சேர்ந்துளார்.

அரக்கியர் - அரக்க மாதர்கள், அன்றில் அம் கரும் பேடைகள் ஆம் என - அன்றில்களின் அழகிய கரிய பெண்பறவைகள் ஆம் என்று சொல்லும்படி, முன்றில் எங்கும் - அரண்மனையின் முன்றில் இடங்களிலெல்லாம், மொய்த்து - நெருக்கமாகக் கூடி, அழ - அழுகைக் குரலெழுப்ப, (அதனைக் கேட்டு), 'இன்று இலங்கை அழிந்தது' என்று ஏங்குவார் - இன்றைத்தினம் இலங்கை அழிந்துவிடும்' என்று எண்ணி மனம் ஏங்கின தூதர்கள், அயில் இலங்கு தாதையை - (கையில்) வேலைப் பிடித்திருந்த தந்தையான இராவணனை, சென்று சேர்ந்துளார் - போய் அடைந்தார்கள்,

அன்றில் நெய்தனிலப் பறவை. ஆணும் பெண்ணும் எப்பொழுதும் சேர்ந்தே வாழும்; இங்கு இந்திரசித்தின் அந்தப்புர மகளிரைக் குறித்தது. இப்பறவையின் கால் கரியது. இங்குக் கரும் பேடை என்றது இல்பொருள். முன்றில்: இலக்கணப் போலி. ஐயில் என்றது அயில் என்றதன் போலி. பெண்டிரின் அழுகைக் குரலைக்கொண்டு, 'இன்றிலங்கை யழிந்தது' என்று தூதுவர் ஏங்கினர் என்க. ஏங்கினவர் தூதர்.

பி - ம். 2. மொய்த்தெழ.

4. தாதையிற் சேர்ந்துளார்; மன்னனைச் சேர்ந்துளார்.

3122. பல்லும் வாயு மனமுந்தம் பாதமும்
நல்லு யிர்ப்பொறை யோடு நடுங்குவார்
இல்லை யாயின னுன்மக னின்றெனச்
சொல்லி னார்பயஞ் சுற்றத் துளங்குவார்.

(அத் தூதர்), பயம் சுற்ற - அச்சம் தம்மைச் சூழ, துளங்குவார் - தளர்ந்தவராய், தம் பல்லும் வாயும் மனமும் பாதமும் - தம்முடைய பல், வாய், மனம், கால்கள் என்பன யாவும், நல் உயிர்ப் பொறையோடு - தத்தம் நல்ல யாக்கைகளுடன், நடுங்குவார் - நடுங்குகின்றவராய், (இராவணனிடம்), 'இன்று உன் மகன் இல்லை ஆயினன்' என - இன்று உன் மகனாகிய இந்திரசித்து இறந்தவன் ஆயினன்' என்று, சொல்லினர் - சொன்னார்கள்.

உயிர்ப்பொறை; உடம்பு; 'ஒழிந்தவிழி பெற்றதொ ருயிர்ப் பொறையு மொத்தாள்' (சுந்தர. 554); உயிர்ப்பொறை பொதுவாகவும் பல் முதலியன சிறப்பாகவும் நடுக்கத்தைத் தோற்றுவித்தன என்க. இல்லையாயினன் - இறந்தனன். துளங்குதல் - தளர்தல்; 'சுடுகணை படுதலோடுந் துளங்கினன்' (யுத்த. 1087).

பி - ம். 1. மனமுந்தம் மாகமும்.

2. நடுங்கி மற்று.

4. சொல்லுவார் புயஞ்; சுற்றத் தொடங்குவார்; துளங்கினர்.

## இராவணன் நிலைமை கண்ட வானவர் முதலியோரின் செயல்

3123. மாடி ருந்தவர் வானவர் மாதரார்
ஆடல் நுண்ணிடை யார்மற்று மியாவரும்
வீடு மின்றிவ் வுலகென விம்முவார்
ஓடி யெங்க ணுஞ் சிந்தி யொளித்தனர்

(சோகச் செய்தி கேட்ட இராவணன் யாது செய்வானோ என்றஞ்சி), மாடிருந்தவர் - அருகில் இருந்தவர்களான, வானவர் மாதரார் - தேவப் பெண்களாகிய, ஆடல் நுண்ணிடையார் - ஆடுந் தன்மையையுடைய நுண்ணிய இடைகளையுடைய நாட்டிய மாதரும், மற்றும் யாவரும் - பிற யாவரும், 'இ உலகு இன்று வீடும் என - இந்த உலகை இன்று விட்டு நீங்குவோம்' என்று எண்ணி, விம்முவார் - விம்முகின்றவராய், எங்கணும் ஓடி - எல்லாப் பக்கங்களிலும் ஓடி, சிந்தி - சிதறிப்போய், ஒளித்தனர் - அவன் கண்களிற் படாமல் தம்மை மறைத்துக்கொண்டார்கள்.

இருந்தவர், வானவர், மாதரார், இடையார் எனத் தனித் தனியே பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம். இவ்வுலகம் வீடும் இன்று என்று பிரித்துக்கொள்வாரும் உளர்.

பி - ம். 1. மாடிருந்தனர் ; மாதவர் வானவர் ; வானவர் மாதவர் ; வானவர் தானவர்.
2. ஈடு நுண்ணிடை ; ஈடி னுண்ணிடை ; மற்றி யாவரும்.
3. வீடு மன்றிவ் வுலகெனு ; விம்மினர் ; விம்மியே.
4. ஒளித்ததால் ; ஒளிந்தவால்.

4

## இராவணன் சினமிக்குச் செய்தவை

3124 சுடர்க்கொ ழும்புகை தீவிழி தூண்டிடத்
தடற்று வாளுரு வித்தரு தூதரை
மிடற்று வீச லுருவிழுந் தானரோ
கடற்பெ ருந்திரை போற்கரஞ் சோரவே.

(இராவணன்), விழி - (தன்னுடைய) கண்கள், சுடர் கொழும் புகை தீ தூண்டிட - ஒளியுடன் கொழுவிய புகையைக் கொண்ட

நெருப்பைப் புலப்படுத்த, வாள் தடறு உருவி - தன் வாளை அதன் உறையினின்று உருவியெடுத்து, தரு தூதரை - கொடிய செய்தியைக் கொண்டுவந்த தூதர்களை, கடல் பொரு திரைபோல் - கடலிலே வீசும் பெரிய அலைகள் போன்ற, கரம் சோரவே - தன் கைகள் சோர்வடைய, மிடறு - அவர்களுடைய கழுத்துக் களிலே, வீசல் உரு-வீசி, விழுந்தான் - தானும் கீழே விழுந்தான். அரோ, அசை.

துக்கஞ் சொன்னவனை வெட்டச் சொன்னது: ஒப்பு: 'ஆக்கரிய மூக்குங்கை யரியுண்டா ளென்றுரை, நாக்கரியுந் தய முகனூர்' (ஆரணிய. 343). இராவணன் கைகளுக்குக் கடல் அலைகள்; அலைகள் மடிந்து வீழ்வன போல அவன் கைகள் மனச் சோர்வினால் வீழ்ந்தன என்பது குறிப்பு. தூதரைக் கோறல் கொடிதென்பதை அவன் தன் வருத்தத்தில் மறந்தவனானான் என்க. தடறு - ஆயுதவுறை; 'தடற்றிடங் கொள்வாள்' (களவழி. 18).

பி - ம். 2. தடத்து வாளுருவி ; வாளுருவித் தடந் தூதரை.
3. விசலுற்றான் விழுந்தான் ; விழுந்தாரரோ.
4. கடற் கருந்திரை ; கரஞ் சேரவே ; கரங் கொண்டுளான். 5

3125. வாய்ப்பி றந்து முயிர்ப்பின் வளர்ந்தும்வான்
காய்ப்பு றுந்தொறுங் கண்ணிடைக் காந்தியும்
போய்ப் பிறங்கிவ் வுலகைப் பொதியும்வெந்
தீப்பி றந்துள தின்றெனச் செய்ததால்.

பிறங்கு இ உலகை பொதியும் வெம் தீ - விளங்குகின்ற இந்த உலகைக் கவ்விக்கொள்ளும் கொடிய தீ, வாய் பிறந்தும்-வாயி னிடம் தோன்றியும், உயிர்ப்பின் வளர்ந்தும் - அவன் பெருமூச்சில் மிக்குப் பெருகியும், வான் - பெரிய, காய்ப்பு உறும் தொறும் - வெறுப்பு தோன்றும் தோறும், கண் இடை காந்தியும் - கண் களிலே எரிந்தும், இன்று போய் பிறந்துளது - இன்று (இராவண னிடம்) போய்த் தோன்றியுள்ளது, என - என்று சொல்லுமாறு, செய்தது - தொழிற்பட்டது. ஆல் - அசை.

உலகைப் பொதியும் வெந்தீ - ஊழித்தீ. ஊழித்தீ இன்று இராவணனிடம் பிறந்து வளர்ந்து காந்தி, இவ்வாறு பிறந்துளது

எனத் தோன்றிற்று என்க. வாயைக் கடித்து, பெருமூச் செறிந்து, விழிகளை உறுத்து இவ்வாறு அவன் தன் வெகுளியைத் தோற்றுவித்தான் என்பதைக் கூறினர். காய்ப்பு - வெறுப்பு. 'காய்ப்பு - கொல்லும் தொழில். வெந்தீ, வடவை உதித்தது போல இவன் வாய் முதலானவை நெருப்புச் சொரிந்து' என்பன பழையவுரை. வான் - பெருமை (பிங்.); 'இரு டேங்கு வான்முழை' (காசிக். காசியின் சிறப்பு. 13);

பி - ம். 1. உயிர்ப்பு வளர்ந்தும். உயிர்ப்பும்; வளர்ந்தும்வன், வளர்ந்துவான் வளர்ந்தவன்.
2. காப்பிறந் தறுவான்; காப்புறுந்தொறுங்.
3. பிறந்திவ்வுலகை; பொதியவெந்
4. உளவன்றென; செய்கையால், சென்றதால். 6

3126. படம்பி றங்கிய பாந்தளும் பாரும்பேர்ந்
திடம்பி றங்கி வலம்பெயர்ந் தீடுற
உடம்பி றங்கிக் கிடந்துழைத் தோங்குதீ
விடம்பி றந்த கடலென வெம்பினன்.

படம் பிறங்கிய பாந்தளும் - (பூமியைச் சுமக்கும்) படங்கள் விளங்கும் பாம்பாகிய ஆதிசேடனும், பாரும் - பூமியும், பேர்ந்து - தம் நிலை பெயர்ந்து, இடம் பிறங்கி - இடப்பக்கம் நிலைகெட்டு, வலம் பெயர்ந்து - வலப் பக்கமும் இடம் மாறி, ஈடு உற - வருத்த மடைய, உடம்பு - தன் உடலும், இறங்கி - ஆசனத்திலிருந்து கீழே விழுந்து, கிடந்து - தரையிற் கிடந்து, உழைத்து - துன்புற்று, ஓங்கு தீ விடம் பிறந்த கடலென - உயர்கின்ற நெருப் புப் போன்ற விடம் தோன்றிய கடல் போல, வெம்பினன் - (மனமும் உடலும்) வெந்தவனானான்.

துன்பத்தால் உழந்த இராவணனுக்கு விடம் பிறந்த கடல் உவமை. கடல் கடைந்த காலத்தில் அங்கு உண்டான நிகழ்ச்சி கள் தன் மகன் இறந்த செய்தி கேட்ட அவனுக்கு உண்டாயின என்றார். பிறங்குதல்; விளங்குதல்; 'பிறங்கொளி சேர் விண்ணாகி' (திருவாச. 7, 18); நிலைமாறுதல்; 'மேல் பிறங்காப் பாண்டிலா' (சீவக. 175). வலம் - வலிமையும் ஆம்; 'வாளின் வாழ்நர் தாள் வலம் வாழ்த்த' (பு. நா. 24). ஈடு - மன வருத்தம்; 'ஈடினுவிருந்

தெண்ணி' (சீவக. 1762). (இச் செய்யுளின் பாடமும் பொருளும் இன்னும் ஆராயத்தக்கன).

பி - ம். 1. பாரும் போன்று.

2. அலம் பெயர்ந்து ; பெயர்த்நின்டுற.

3. உடன் பிறங்கி, கிடந்துழைத்து, கிடந்துமைத்து.

4. விம்மினன். 7

3127. திருகு வெஞ்சினத் தீநிகர் சீற்றமும்
பெருகு காதலுந் துன்பும் பிறங்கிட
இருப தென்னு மெரிபுரை கண்களும்
உருகு செம்பென வோடிய தூற்றுநீர்.

(அப்பொழுது இராவணனுக்கு), திருகு வெம் சினம் - முறுகுகிற கொடிய சினமாகிய, தீ நிகர் சீற்றமும் - நெருப்பை ஒத்த பெருங் கோபமும், பெருகு காதலும் (இறந்த தன் மகனான இந்திரசித்தின்பால்) பெருகி ஓங்குகிற அன்பும், துன்பும் - (அவன் பிரிவால் விளைந்த) துன்பமும், பிறங்கிட - மிகுதியாக, இருபது என்னும் எரி புரை கண்களும் - இருபது என்று சொல்லப்படும் நெருப்பை ஒத்த கண்களினின்றும், உருகு செம்பு என - உருகுகின்ற செம்பு என்று சொல்லுமாறு, ஊற்று நீர் - (அவன் கண்களினின்று ஊற்றின கண்ணீர், ஓடியது - பெருகி ஓடிற்று.

சினம் - கோபம் தீராமை ; வெம்மையும் ஆம். சீற்றம், சினம் ஒரு பொருளன. காதல், மகன்மீது வைத்த அன்பு ; துன்பு அவன் இறந்ததால் விளைந்தது. பிறங்குதல் - மிகுதல். புரை, உவம உருபு. குருதிக்குச் செம்பு. ஊற்று, ஊறின நீர் எனினும் ஆம்.

பி - ம். 2. காதலுமன்பும் ; பிறழ்ந்திட.

4. ஊறின தூற்றுநீர் ; ஊன்றின வூற்றுநீர். 8

3128. கடித்த பற்குலங் கற்குலங் கண்ணுற
இடித்த காலத் துருமென வெங்கணும்
அடித்த கைத்தலத் தாற்றரை யாழிநீர்
வெடித்த வாய்தொறும் பொங்கின மீச்செல.

கற்குலம் - மலைகளின் தொகுதிகள், கண் அற - கணுக்கள் தகரும்படி, இடித்த - பேரிடியாக இடித்த, காலத்து உரும் என - கார் காலத்து இடிகள் என்னுமாறு, பற்குலம் - (பத்து வாய்களிலுமுள்ள) பற்களின் தொகுதிகள், கடித்த - ஒன்றோடொன்று கடித்துக் கொண்டன; தரை அடித்த கை தலத்தால் - தரையை அடித்த கைத்தலங்களால், எங்கணும் வெடித்த வாய் தொறும் - தரையில் எல்லாப் பக்கங்களிலும் வெடித்துண்டான குழிகள் தோறும், ஆழி நீர் - கடல் நீரானது, மீ செல - மேலே செல்லுமாறு, பொங்கின - பொங்கி எழுந்தது.

இச் செய்யுளில் இராவணன் தன் பற்களைக் கடித்துக் கொண்டும், தன் கைகளால் தரையை அடித்தும் தன் சினத்தைப் புலப்படுத்தியதும் அதனால் விளைந்தனவும் கூறப்பெறுகின்றன. கண் - கணு; மலையின் கணு என்பது அதன் கெட்டியான பகுதிகள் என்று கொள்ளப் பெற்றது. பற்குலம் உருமென கண்ணற இடித்த என்றும் அந்வயப் படுத்தலாம். 'உருமென அடித்த என்று பிரித்தலும் ஆம். 'கடித்த பற்குலமென வேறு பொருள் பிரித்துரைக்க; அம்மலை இலங்கைவரை பொடியாக இடிக்கும் இடியேறுபோல் அடித்த குழிதொறுங் கடல்நீர் பொங்கி எழுந்தது' என்பன பழையவுரை. இங்கு 'அம்மலை' என்ற பாடம் கொண்டு, அதன் பொருள் இலங்கையாகிய மலை என்றும் கொள்ளப் பெற்றது.

பி - ம். 1. கண்ணுற.
2. இடித்த காலத்துருமுற வெங்கணும்.
3. அடித்த கைத்தலத் தம்மலை யாழிநீர்; கைத்தல மம்மலை.
4. பொடித்த வாய்தொறும்; போக்கின மிச்செல; மீச்செல்வன. 9

## இராவணன் புலம்பல்

3129. மைந்த வோவெனும் மாமக னேயெனும்
எந்தை யோவெனு மென்னுயி ரேயெனும்
உந்தி னேனுனை நானுளெ னேயெனும்
வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்.

வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான் - முன்பே வெந்துபோன புண்ணிடத்தில் வேல் பட்டது போன்ற துன்பத்தைக் கொண்ட இராவணன், 'மைந்தவோ!' எனும் - மைந்தனே!' என்று கூவுவான்; 'மா மகனே எனும் - பெருமை மிக்க மகனே!' என்பான்; 'எந்தையோ எனும் - என் அப்பனே! என்று இரங்குவான்; 'என் உயிரே! எனும் - என் உயிரே! என்று அங்கலாய்ப்பான்; உனை உந்தினேன் - உன்னை நீங்கி, நான் உளேனே எனும்- நான் உயிருடன் இருக்கின்றேனே!' என்பான்.

மாமகன்; பெருத்த யாகங்கள் செய்து பெற்ற மகனே என்பது பொருள் என்பர். உந்துதல் - நீங்குதல்; 'உந்தாத வன்பொடு' (பதினொ. திருத்தொண். 19). உந்துதல், தள்ளுதலும் ஆம். வெந்த புண்ணில் வேல் படுதல்; சுந்தர. 997; கலித். 84, 30, 120, 17; பெருங். 1, 33, 95, 4, 13, 130; பெரிய பு. சிறுத். 50; கந்த பு. குமார. 46; நைடத. நகர் நீங்கு. 8. தஞ்சைவாணன். 113. சில சுவடிகளில் இச் செய்யுள் அடுத்த செய்யுளுக்குப் பின் அமைகின்றது.

பா-ம். 1. மைந்தனே யெனும்.
2. மென்மகனே யெனும்.
3. நானுளனேவெனும்.
4. வேல்பட்ட வெம்மையாய்.

3130. அரந்தை வானவ ரார்த்தன ரோவெனும்
புரந்த ரன்பகை போயிற்றன் றேவெனும்
கரந்தை சூடியும் பாற்கடற் கள்வனும்
நிரந்த ரம்பகை நீங்கின ரோவெனும்

இராவணன் மேலும், 'அரந்தை வானவர் - (முன்பு) துன்பத்தில் ஆழ்ந்திருந்த தேவர்கள், ஆர்த்தனரோ - (இப்பொழுது மகிழ்ச்சியினால்) முழங்கினார்களோ?' எனும் - என்பான்; புரந்தரன் - இந்திரனின், பகை - (இந்திரசித்தாகிய) பகை, போயிற்று அன்றோ - அழிந்தது அன்றோ?' எனும் - என்பான்; கரந்தை சூடியும் - கரந்தை மலர் தரிக்கும் சிவபெருமானும், பால் கடல் கள்வனும் - பால் கடலில் ஒளிந்திருக்கும் கள்வனான திருமாலும்,

நிரந்தரம் - (இனி) எப்பொழுதும், பகை நீங்கினரோ - தம் பகை ஒழிந்தார்களோ?' எனும் - என்பான்.

புரந்தரன் - இந்திரன்; (சுந்தர. 1081); இந்திரசித்துக்குப் புரந்தரன், சிவபிரான், திருமால் ஆகியோர் பகைவர் ஆகலின் அம் மூவரும் இப்பொழுது பகை நீங்கினரோ என்றான். அரந்தை - துன்பம்; விசனமும் ஆம்; 'ஒரு தனி வேழத் தரந்தையை...... தீர்த்தனை' (திவ். இயற்பா. திருவெழுகூற். 12). கரந்தை சூடி - சிவபிரான்; கரந்தை - திருநீற்றுப் பச்சை. கள்வன், தன்னை ஒளித்துக்கொண்டு நிற்றலால், நிரந்தரம். (யுத்த. 3107).

பி - ம். 1. வானர ரார்த்தனர்.
2. போயினவோ; போயினதோ.
4. நிரந்தவான் வகை; நிரந்தவான் பகை; நீக்கினரோவெனும். 11

3131. நீறு பூசியும் நேமியும் நீங்கினர்
மாறில் குன்றொடு வேலை மறைந்துளார்
ஊறு நீங்கின ராயுவ ணத்தினோ
டேறு மேறி யுலாவுவ ரென்னுமால்.

'நீறு பூசியும் - விபூதி பூசும் சிவபிரானும், நேமியும் - சக்கராயுதத்தைப் பிடித்த திருமாலும், மாறில் குன்றொடு - மாறுபாடற்ற (ஒரே நிலையிலுள்ள கயிலாயக்) குன்றினுள்ளும், வேலை-(திருப்பாற்) கடலினுள்ளும், மறைந்துளார் - ஒளிந்து கொண்டவர்களாய், நீங்கினர் - (முன்பு உன் எதிரில் வாராமல்) விலகிக் கொண்டனர்; (இப்பொழுதோ எனில்) ஊறு - துன்பத்தினின்று, நீங்கினராய் - விடுபட்டவர்களாய், ஏறும் - காளைமீதும், உவணத்தினோடு - கருடன்மீதும், ஏறி உலாவுவார் - (அச்சமின்றி) ஏறி வெளியில் உலாவுவார்கள்;' என்னும் - என்று சொல்வான். ஆல் - அசை.

நீறு பூசி - சிவபிரான். நேமி - திருமால். உவணத்தினோடு ஏறு என்றமை எதிர் நிரல் நிறை. முன்பு ஒளிந்திருந்தவர் இப்பொழுது உலாவுவார் என்றனன். பகைவர் மலையிலும் கடலிலும் ஒளித்தல்; (ஒப்பு); (சுந்தர. 969, 971).

பி - ம். 1. நீறுபூசியும் விண்டுவும்; நீங்கியே, நீங்கினர். 12

3132. வான மானமும் வானவ ரீட்டமும்
போன போன திசையிடம் புக்கன
தான மானவை சார்கில சார்குவ
ஊன மானிடர் வென்றிகொண் டோவெனும்.

(இதுகாறும்) வான மானமும் - வானத்திற் செல்லும் தெய்வ விமானங்களும், வானவர் ஈட்டமும் - தேவர் கூட்டங்களும், போன போன திசையிடம் - சென்ற சென்ற திசைகளில், புக்கன - புகுந்து போய், தானம் ஆனவை சார்கில - (தங்களுக்குரிய) இடங்களை அடையவில்லை ; ஊனம் - இழிவுள்ள, மானிடர் - மனிதர்கள், வென்றி கொண்டோம் எனும் - வெற்றி பெற்றோமென்று, சார்குவ - (அவை தம் இடங்களைச்) சார்வன ஆயின.

மானம் - விமானம் என்பதன் முதற்குறை. தானமானவை சார்கில - தத்தமக்குரிய இடங்களை அடையக் கூடாமல் போயின. ஊனம் - பழியும் ஆம் ; 'கேள்வற் கூனமும் பரிவு மஞ்சி' (சீவக. 1530).

பி - ம். 2. திசையிடைபுக்கன ; புக்கனர்.

3. சார்கில சார்குவது ; சார்கிலர் சார்குவது.

4. மானுடன், மானிடர்கள் வெற்றிகொண்டே மெனும். 13

## இராவணன் துயர்நிலை

3133. கெட்ட தூதர் கிளத்தின வாறொரு
கட்ட மானிடன் கொல்லவென் காதலன்
பட்டொ ழிந்தன னேயெனும் பன்முறை
விட்ட ழைக்கு முழைக்கும் வெதும்புமால்.

(மேலும் அவன்), 'கெட்ட தூதர் கிளத்தினவாறு - கொடிய தூதர்கள் சொன்னபடி, கட்ட ஒரு மானிடன் கொல்ல - கஷ்டத்தைத் தரும் ஒரு மானிடன் கொல்ல, என் காதலன் - என அன்புக்குரிய மகன், பட்டு ஒழிந்தனனே - இறந்து பட்டனனே, எனும் - என்று கூறுவான் ; பன்முறை விட்டு அழைக்கும் - பலமுறை வாய்விட்டு (அவன் பெயரைச் சொல்லி) அழைப்பான் ; உழைக்கும் - வருந்துவான் ; வெதும்பும் - வெந்து போவான். ஆல்: அசை.

காதலன் - மகன்; 'அறத்தின் காதலன்' (பாகவ. 1, 6, 1) உழைத்தல் - வருந்துதல்; 'வலையிற்பட் டுழைகின் றேற்கு' (திவ். திருமாலை. 36).

பி - ம். 1. கிளர்த்தின, கிளத்தினர்; கிளத்தினர் போய்யொரு; போயொரு.
2. கட்டியானிடன் கொல்லவென்
3. ஒழிந்தனனே; எனும் பான்முறை. 14

3134. எழுமி ருக்கும் நடக்கு மிரக்கமுற்
றழும ரற்று மயர்க்கும் வியர்க்கும்போய்
விழும்வி ழிக்கு முகிழ்க்குந்தன் மேனியால்
உழுநி லத்தை யுருளும் புரளுமால்.

(இராவணன்) எழும் - எழுவான்; இருக்கும் - தரையில் அமர்வான்; நடக்கும் - (சிறிது தூரம்) நடப்பான்; இரக்கம் உற்று அழும் - மனம் இரக்கமடைந்து அழுவான்; அரற்றும் - புலம்புவான்; அயர்க்கும் - சோர்வான்; வியர்க்கும் - வியர்வை விடுவான்; போய் விழும் - சற்று நடந்து சென்று விடுவான்; விழிக்கும் - கண்களை மலர்த்துவான்; முகிழ்க்கும் - அவற்றை மூடுவான்; தன் மேனியால் நிலத்தை உழும் - தன் உடலால் பூமியை உழுவான்; உருளும் - உருள்வான்; புரளும் - புரள்வான்; ஆல்: அசை.

துயரில் தோன்றும் மெய்ப்பாடுகள் இங்குச் சித்திரிக்கப் பெற்றுள்ளன. இப் பகுதியில் சுவடிகள் தோறும் பாடல்கள் மாறிக் கிடக்கின்றன.

பி - ம். 1. இரைக்கும் இரக்கமுற்று; இரக்கம்முற்றும்.
2. அழும் பரக்கும் மழைக்கும் போய்; அயர்க்கும் வியக்கும்; அழைக்கும் வியர்க்கும்.
4. நிலத்தை யுறமும்; 15

## இராவணன் சிரங்கள் புலம்பல்

3135. ஐய னேயெனு மோர்சிரம் யானினம்
செய்வ னேயர சென்னுமங் கோர்சிரம்
கையனே னுனைக் காட்டிக் கொடுத்தநான்
உய்வ னேயென் றுரைக்குமங் கோர்சிரம்.

ஓர் சிரம் - (இராவணனின் பத்துச் சிரங்களுள்) ஒரு சிரம், 'ஐயனே' எனும் - 'ஐயனே!' என்று கூப்பிடும்; அங்கு - அவ்விடத்தில், ஓர் சிரம் - ஒரு தலை, 'யான் இனம் அரசு செய்வனே' என்னும் - 'யான் (நீ இறந்த) பிறகும் அரசு செய்வேனோ?' என்று இரங்கும்; அங்கு ஓர் சிரம் - அவ்விடத்தில் மற்றொரு தலை, கையனேன் - அற்பனாகிய, உனை காட்டி கொடுத்த நான் - உன்னை பகைவனிடம் காட்டிக் கொடுத்த நான், உய்வனே - பிழைப்பேனோ?' என்று உரைக்கும் - என்று கூறும்.

இவ்வாறு மூன்று சிரங்கள் கூறினமை இங்குத் தெரிவிக்கப் பெற்றது. கையனே யுனை என்று பாடங்கொண்டு 'என் கை போன்றவனே! உன்னை' என்று பொருள் காணலும் ஆம். கையன் - சிறியன்; கை - சிறுமை; 'கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறிவாளர்'. (நாலடி. 311). அங்கு, அப்பொழுது என்றும் பொருள்படும். இவ்வாறே பின்னும் கொள்க.

பி - ம். 1. ஓர் தலை.
2. ஓர் தலை.
3. கொடுத்த நான்.
4. ஓர் தலை. 16

3136. எழுவிற் கோல மெழுதிய தோள்களால்
தழுவிக் கொள்கலை யென்னுமங் கோர்தலை
உழுவைப் போத்தை யுழையுயி ருண்பதே
செழுவிற் சேவக னேயெனு மோர்சிரம்.

அங்கு - அவ்விடத்தில், (இராவணனின் தலைகளுள்) ஓர் தலை - ஒரு தலையானது, 'கோலம் எழுதிய - சித்திரம் எழுதிய, எழுவின் - தூணைப் போன்ற, தோள்களால் - (உன்) தோள்களால், தழுவிக் கொள்கலை என்னும் - என்னை அணைத்துக் கொள்ளவில்லையே!' என்று கூறும்; ஓர் சிரம் - மற்றொரு தலையானது, 'உழுவைப் போத்தை - புலிப் போத்தை, உழை - மானினது, உயிர் உண்பதே - உயிரை உண்பதா? செழுவில் சேவகனே - செழுமையான வில்லை உடைய வீரனே!' எனும் - என்று விளம்பும்.

ஆடவர் தோளுக்கு எழு - 'எழுவுறழ் திணிதோள்' (பெருங். 2, 6, 131). தோளில் எழுதுதல்; 'எழிற்றோள் எழுதி' (பெருங். 1, 34, 201). வீரனுக்குப் புலிப்போத்து; 'புலிப் போத்தன்ன புல்லணற் காளை' (பெரும்பாண். 138); 'வயப் புலிப் போத் தன்னார்' (பெரிய. ஏனாதி. 13). புலிப்போத்து; 'பொறிவரி யிரும் புலிப் போத்துநவி வெரீஇ' (பெருங். 1, 54, 37); 'புலிப்போத்துக் கொடி' (நக்க. 4, 8 உரை). போத்தென்னும் பெயர் இளமைக்கும் ஆண்பாற்கும் உரித்து (தொல். மரபு. சூ 24, 41. பேர். மேற்); இங்கு உழுவைப் போத்து இந்திரசித்துக்கும், உழை இலக்குவனுக்கும் ஆயின. சேவகம் - வீரம்; (ஆரணிய. 435). இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பா - ம். 1. எழுதிய கைகளால்.
2. ஏவெனுமங்கோர்தலை; கொள்கிலையோர் வெனுமோர்தலை.
3. உழையுயிருண்பதோ.
4. ஓர் தலை. 17

3137. நீலங் காட்டிய கண்டனும் நேமியும்
ஏலுங் காட்டி னெறிந்த படைக்கெலாம்
தோலுங் காட்டித் துரந்தனை மீண்டுநின்
ஓலங் காட்டிலை யோவெனு மோர்சிரம்.

ஓர் சிரம் - பின்னும் ஒரு தலை, 'நீலம் காட்டிய கண்டனும் - (விடத்தின்) நீல நிறத்தைக் கழுத்திலே தோற்றுவித்த சிவ பிரானும், நேமியும் - சக்கரப் படையையுடைய திருமாலும், ஏலும் - பொருந்திய, காட்டின் - (போர் நடந்த) காட்டிடங்களில், எறிந்த படைக்கு எலாம் - உன்மீது வீசிய படைகளுக்கெல்லாம், மீண்டும் - எதிராக, தோலும் காட்டி - (அவர்களுக்குத்) தோல்வியைக் கொடுத்து, துரந்தனை - (உன் அம்புகளை) நீ செலுத்தினாய்; (இப் பொழுது) நின் ஓலம் - உன் வீர கர்ஜனையை, (இலக்குவனிட்ட போரிலே) காட்டிலையோ - நீ தெரிவிக்கவில்லையோ?' எனும் - என்று சொல்லும்.

இச்செய்யுள் சில சுவடிகளில் 'காசுமாடு' என்று தொடங்கும் செய்யுளுக்குப் பின் அமைந்துள்ளது. நீலம் காட்டிய கண்டன், நீலகண்டன்; சிவபெருமான். ஏலும் - பொருந்தும். காடு, இங்கே

பறந்தலையைக் குறித்தது. தோல் - தோல்வி. தோல் - கேடயம் என்றும் பொருள் கூறுவர். மீண்டும் என்பதைத் துரந்தனை யென்பதோடு கூட்டிப் பொருள் கொள்ளப் பெற்றது. ஓலம் - காட்டுதல், குரலைக்காட்டுதல் என்று பொருள் கொண்டு, 'என்னோடு பேச மாட்டோயோ' என்றும் பொருள் கொள்வர். கோலங் காட்டிலையோ என்ற பாடமும் உண்டு. 'தோலுங் காட்டி' என்பது அவர்களைத் தோற்கப் பண்ணி என்றும் பரிசைகொண்டு வென்றாய் என்றுமாம்' என்பது பழைய உரை.

பி - ம். 2. எறிந்த படையெலாம்.

3. மீண்டநின் ; மீளநின்.

4. கோலங் காட்டிலை. 18

3138. துஞ்சி னாய்கொல் துணைபிரிந் தேனெனும்
வஞ்ச மோவெனும் வாரலை யோவெனும்
நெஞ்சு நோவ நெடுந்தனி யேகிடந்து
அஞ்சி னேனென் றரற்றுமங் கோர்தலை.

அங்கு - அவ்விடத்தில், 'ஓர் தலை - ஒரு தலையானது, 'துஞ்சினாய் கொல் - நீ இறந்தாயோ? துணை பிரிந்தேன் - (எனக்குத்) துணையாயிருந்த உன்னைப் பிரிந்தேனே!' எனும் - என்று சொல்லும்; 'வஞ்சமோ' எனும் - 'இது வஞ்சனையாகுமோ?' என்று கூறும்; 'வாரலையோ' எனும் - 'நீ வரமாட்டாயோ' என்று கூறும்; (உன்னை இழந்த யான்) 'நெஞ்சு நோவ - என் மனம் நோவ, நெடும் தனியே கிடந்து - (நீ இல்லாமையால்) மிகத் தனிமையை அடைந்து கிடந்து, அஞ்சினேன் - அச்சமடைந்தேன்' என்று அரற்றும் - என்று சொல்லிப் புலம்பும்.

இச் செய்யுள் மூன்று சுவடிகளில் காணப்பெறவில்லை. சில சுவடிகளில் இச் செய்யுள் இடம் மாறிக் காண்கின்றது.

பி - ம். 1. துஞ்சும் போது துணைபிரிந் தேனெனும்.

4. அஞ்சினே னென்னருமகனே யெனுமங்கோர்தலை. 19

3139. காக மாடு களத்திடைக் காண்பனே
பாக சாதன் மௌலியொ டும்பறித்
தோகை மேவுற வைத்தவுன் னுச்சியில்
வாகை நாண்மல ரென்னுமற் றோர்தலை.

மற்றோர் தலை - வேறு ஒரு தலை, மௌலியோடும் பறித்து - (இந்திரனுடைய) கிரீடத்தோடும் பிடுங்கி, ஓகை மேவுற - உவகை பொங்க, உன் உச்சியில் வைத்த-உன் தலையில் வைத்துக்கொண்ட, பாகசாதன் நாண் வாகை மலர் - இந்திரனுடைய (வெற்றிக்கு அறிகுறியாயுள்ள) அன்று பூத்த வாகை மலர் (மாலையை இன்று), காகம் ஆடு களத்திடை காண்பேனே - காகங்கள் விளையாடுகின்ற போர்க்களத்திலே காண்பேனே ?' என்னும் - என்று கூறும்.

இந்திரசித்தின் தலையையே இராவணன் காணமுடியப் போவதில்லை. அவ்வாறிருக்க, அவன் தலையில் வைத்த கண்ணியைக் கண்டு இராவணன் புலம்பியதாக இச்செய்யுள் அமைந்திருப்பது, அக்கண்ணி பெயர்ந்து விழுந்து கிடந்தது எனக் கொள்ள இடங்கொடுக்கிறது. பாகசாதனன், பாகசாதன் என்று மருவிற்று. பாகசாதனன் - இந்திரன்; பாகன் எனனும் ஓர் அசுரனைக் கொன்றமையால் அப்பெயர் பெற்றான் என்ப. வாகை - வெற்றியைக் குறிக்கும் மலர். காகமாடு களம் - பிணங்களைத் தின்னும் பொருட்டுக் காகங்கள் அலைந்துகொண்டிருக்கும் போர்க்களம்.

பி - ம். 1. காண்பனேல்.
2. மோலியொடும் பறித்து.
3. மாதவ ருச்சியின் வைத்தநின்.
4. மற்றொரு தலை. 20

3140. சேலி யற்க ணியக்கர் தந்தேவிமார்
மேலி னித்தவிர் கிற்பர்கொல் வீரநின்
கோல விற்குரல் கேட்டுக் குலுங்கித்தம்
தாலி யைத்தொட லென்னுமற் றோர்தலை.

மற்று ஓர் தலை - பிறிதொரு தலையானது, 'வீர - வீரனே ! நின் - உன்னுடைய, கோல - அழகிய, வில் குரல் கேட்டு - வில்லின்

(நாணியைத் தெறித்த) குரல் (தம் காதுகளில் விழக்) கேட்டு, குலுங்கி - உடல் நடுங்கி, தம் தாலியைத் தொடல் - தம் தாலியைத் தொட்டு வாழ்த்தலாகிய செயலே, இயக்கர் தம் - இயக்கர்களின், சேல் இயல் கண் தேவிமார் - சேல்மீன்போன்று (அடிக்கடி பிறழும்) இயல்பினையுடைய கண்களையுடைய மனைவியர், இனி மேல் - (நீ இறந்த) இனிமேலே, தவிர்கிற்பர் கொல் - (செய்யாமல்) விலகிக் கொள்வார்களோ ?'' என்னும் - என்று கூறும்.

வில் குரல் கேட்டுத் தாலியைத் தொடல்: பகைவரின் வில் ஒலி கேட்டுத் தம் கணவர் உயிரைப்பற்றி ஐயுற்று அவர்தம் தேவிமார் தெய்வத்தை வணங்கித் தம் தாலியைத் தொட்டுக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்திக்கும் வழக்கத்தைக் குறித்தது'. 'மேலினித் தவிர்கிற்பர் கொல்' என்பது, தெய்வமே என்னுடைய தாலி பதனமென்று தொட்டு வாழ்த்துதல் இனித் தவிர்வார்கள் என்றபடி' என்பது பழையவுரை. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. தேவர்தந் தேவியர் ; தேவியரார்.
2. மேலியலத் தவிர்கிற்பர் ; வீரநுங்.
3. குலுக்கித்தந்.
4. ஓர் சிரம். 21

3141. கூற்ற முன்னெதிர் வந்துயிர் கொள்வதோர்
ஊற்றந் தானுடைத் தன்றெனை யும்மொளித்
தேற்ற வெவ்வுல குற்றனை யெல்லையில்
ஆற்ற லாயென் றுரைக்குமங் கோர்தலை.

'எல்லையில் ஆற்றலாய் - எல்லையற்ற வலிமையுடையோனே ! கூற்றம் - இயமன், உன் எதிர் வந்து - உனக்கு முன்னே வந்து (நின்று), உயிர் கொள்வது ஓர் ஊற்றம்தான் உடைத்தன்று - உன் உயிரை எடுப்பதற்கு ஏற்ற வலியைப் பெற்றதன்று ; எனையும் ஒளித்து - (எனக்கும் தெரிவிக்காமல்) என்னையும் மறைத்து, ஏற்ற - தக்க, எ உலகு உற்றனை - எந்த உலகுக்குச் சென்றனை ?' என்று அங்கு ஓர் தலை உரைக்கும் - என்று அவ் விடத்து ஒரு தலை கூறும்.

'இயமன் உன்னைக் கொண்டுபோகும் ஆற்றல் அற்றவன்; ஆகவே நீ அவனுலகு சென்றிராய்! வேறு எங்குச் சென்றுள்ளாய்?' என்றான் இராவணன் என்க. கூற்றம் ஊற்றமுடைத் தன்று; (ஒப்பு): 'செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும், உற்றன் றாயினு முய்வின்று மாதோ, பாடுநர் போலக் கைதொழு தேத்தி, இரந்தன் றாகல் வேண்டு ........ கூற்றே' (புறம். 226); 'உயிரிரக்குங் கொடுங் கூற்றில்' (பால. கையடைப். 10). 'ஐயனே யெனுமோர் சிரம்' என்று தொடங்கும் செய்யுள் முதல் இச் செய்யுள் ஈறாக உள்ள ஏழு செய்யுட்களில் இராவணனுடைய பத்துத் தலைகளும் ஒன்றன்பின் ஒன்றாக இந்திரசித்தின் இறப்பினால் உண்டான சோகத்தை ஒவ்வொரு விதமாகக் கூறிப் பிரலாபித்தமை கூறப்பெற்றுள்ளது. இவற்றுள் சில செய்யுட்கள் சில சுவடிகளில்லாமையை ஆங்காங்கே காட்டியுள்ளோம். இவற்றைப்போன்றே, சுந்தரகாண்டத்தில் 1091—1093 செய்யுட்களில் இராவணனின் பத்து முகங்களின் பத்துச் செயல்கள் கூறப் பெற்றுள்ளமை காணலாம். இங்கு 1091 ஆம் செய்யுளின் விளக்கக் குறிப்பில் அவை ஐயப்பாட்டுக்குரியன என்று குறித்திருக்கிறோம்; அதேகாரணமாக இச் செய்யுள்களும் ஐயப்படற்குரியனவேயாம்; ஆனால், பல சுவடிகளில் இவை இருப்பதாலும், பத்தென்னும் எண் முற்றுப் பெறுவதற்காகவும், ஏழு பாடல்களையும் இங்குப் பாடவரிசையிற் காட்டியுள்ளோம்.

பி - ம். 1. சிற்றமுன்னெதிர்.

2. எனையு மொழித்து; தானுடைத் தோவெனுமோர்தலை.

3. உற்றனை யெண்ணிலா.

4. என்றழைக்கு மோர்தலை; அங்கோர் சிரம். 22

## இராவணன் தன் மகனைப் போர்க்களத்தில் நாடுதல்

3142. இன்ன வாறழைத் தேங்குகின் றானெழுந்
துன்னு மாத்திரத் தோடின னூழிநாள்
பொன்னின் வானன்ன போர்க்களம் புக்கனன்
நன்மகன்றன தாக்கையை நாடுவான்.

இன்னவாறு - இவ்வாறு, அழைத்து - (தன் மகனைக்) கூப்பிட்டு, ஏங்குகின்றான் - (அவன் இறந்தமைக்காக) ஏங்குகின்ற

இராவணன், எழுந்து - தான் கிடந்த இடத்திலிருந்து எழுந்து, நன் மகன் தனது - தன்னுடைய நல்ல பிள்ளையாகிய இந்திரசித்தினுடைய, ஆக்கையை - உடலை, நாடுவான் - தேடும்பொருட்டு, ஊழி நாள் - யுகாந்த காலத்து, பொன்னின் வான் அன்ன - பொன்னுலகான தேவலோகம் போன்றிருந்த, போர்க்களம் - போர் நடந்த களத்தினுள், உன்னும் மாத்திரத்து - எண்ணும்பொழுதிலேயே, ஓடினன் புக்கனன் - ஓடிப் புகுந்தான்.

உன்னு மாத்திரத்து ஓடினன் - நினைத்தவுடனே எழுந்து ஓடினன் என்றபடி. ஊழிநாள் பொன்னின் வானன்ன போர்க்களம் - ஊழிமுடிவில் பொன்னுலகம் பூமியிற் கிடப்பதுபோன்ற போர்க்களம் என்று கூறுவர்.

பி - ம். 2. உன்னுமாத்திரை.

3. பொற்களன் புக்கனன்.

4. தன்மகன் றனதாக்கையை ; தன்மகனது யாக்கையை நாடியே. 23

## தேவர் முதலியோர் இரங்குதல்

3143. தேவ ரேமுத லாகிய சேவகர்
ஏவ ரும்முட னேதொடர்ந் தேகினர்
மூவ கைப்பே ருலகின் முறைமையும்
யாவ தாகுமின் றென்ன விரங்குவார்.

தேவரே முதலாகிய - தேவர்கள் முதலான, சேவகர் ஏவரும் - வீரர் யாவரும், 'மூவகை பேருலகின் முறைமையும் - (மேல், நடு, கீழ்) என்ற வகைகளைப்பெற்ற மூன்றுவகை உலகங்களின் வரிசையும், இன்று யாவது ஆகும் - இப்பொழுது ஏதாக ஆகும்? என்ன - என்று, இரங்குவார் - மனம் இரங்குபவராக ஆகி, உடனே - அப்பொழுதே, தொடர்ந்து - (இராவணனைப்) பின்பற்றி, ஏகினர் - சென்றார்கள்.

'தேவரே முதலாகிய தேவர்' என்று பாடங்கொண்டு, 'என்பது, தேவர், அவர்களுக்குத் தலைவர்களாகிய தேவர்களுமென்க .....ஏவரும் எனவே எல்லாருமென்பது, இராட்சதருமாம்' என்று பழையவுரை கூறும். தேவர்கள் சென்றமை அச்சத்தால்

என்க; அவ்வச்சம் இராவணன் வெகுண்டால் மூவகை உலகங்களின் முறைமையே கெட்டு எல்லாம் கெட்டுவிடுமே என்ற எண்ணத்தால் உண்டானதாம்.

பி-ம். 1. ஆகிய தேவர்கள்.

2. யாவரும் முடன்.

3. பேருலக முறைமையும், பேருலகும்.

4. ஏவதாகும்; என்றெண்ணி யிரங்குவார். 24

## பேய் முதலியவற்றின் செயல்

3144. அழுத வாற்சில வன்பின போன்றடி
தொழுத வாற்சில தூங்கின வாற்சில
உழுத யானைப் பிணம்புக் கொளித்தவால்
கழுதும் புள்ளு மரக்கனைக் காண்டலும்.

கழுதும் புள்ளும் - பேய்களும் பறவைகளும், அரக்கனை காண்டலும் - (போர்க்களத்தில்) இராவணனைக் கண்டபோது, சில அழுத-(அவற்றுள்) சில அழுதன; சில அன்பின போன்று - (இராவணனிடம்) மிக்க அன்பு கொண்டவை போலக் (காட்டிக் கொண்டு), அடி தொழுத - அவன் பாதங்களிலே விழுந்தன; சில தூங்கின - (வேறு சில பொய்யாகத்) தூங்கின; (சில) உழுத யானை பிணம் புக்கு ஒளித்த - (சில) போர்க்களத்திலே முயன்று போரிட்டு இறந்த யானைகளின் பிணங்களுக்குள்ளே புகுந்து ஒளித்தன. ஆல் எல்லா இடங்களிலும், அசைகள்.

கழுது - பேய். புள் - கழுகு முதலிய பறவைகள். இவை போர்க்களத்தில் பிணங்களைத் தின்பதற்காகச் சூழ்பவை; இவற்றுள் சில இராவணனைக் கண்டு அஞ்சி அவனுக்கு அன்புள்ளவைபோல நடித்தன. சில அச்சத்தால் அவன் கண்களிற் படாமல் ஒளிந்துகொண்டன.

பி-ம். 1. வன்பினவடி.

3. ஆனைப் பிணம்புக்.

4. கழுகும். 25

## இராவணன் தன் மகனுடலைத் தேடுதல்

3145. கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்
ஆடல் வென்றி யரக்கர்த மாக்கையும்
ஓடை யானையுந் தேரு முழக்கினன்
நாடி னன்றன் மகனுடல் நாளெலாம்.

(இராவணன்), தன் மகன் உடல் - தன் மகனின் உடலை, நாள் எலாம் - ஒருநாள் முழுமையும், நாடினன் - தேடினன்; (அவ்வாறு தேடும்போது), கோடி கோடி குதிரையின் கூட்டமும் - கோடிக்கணக்கான (இறந்த) குதிரைகளின் கூட்டங்களையும், ஆடல் - போரிலே, வென்றி - வெற்றியையுடைய, அரக்கர் தம் ஆக்கையும் - அரக்கர்களுடைய உடல்களையும், ஓடை யானையும் - முகபடாம் கொண்ட யானைகளையும், தேரும் - தேர்களையும், உழக்கினன் - (செல்லும் வழியில்) குழம்பச் செய்தான்.

ஆடல் - போர்; (திவா.). உழக்கினன் நாடினன் என்றும் இயைத்துப் பொருள் காணலாம்.

பி - ம். 1. கோடிவெள்ளக்.
2. அரக்கர தாக்கையும்.
3. ஓடை யொண்கரி தேரும்; உருட்டினன்.
4. மகனுட னுடுவான். 26

## இராவணன் இந்திரசித்தின் கையைக் காண்டல்

3146. பொய்கி டந்த விழிவழி நீருக
நெய்கி டந்த கனல்புரை நெஞ்சினன்
மொய்கி டந்த சிலையொடு மூரிமாக்
கைகி டந்தது கண்டனன் கண்களால்.

நெய் கிடந்த கனல் புரை நெஞ்சினன் - நெய் தங்கிய நெருப்பை ஒத்த மனத்தையுடைய இராவணன், பொய் கிடந்த விழி வழி - பொய்மை தங்கிய தன் விழிகளின் வழியிலே, நீர் உக - கண்ணீர் சிந்த, கண்களால் - தன் கண்களினால், மூரி - வலிமையையுடைய, மா - பெரிய, கை - இந்திரசித்தின் கை, மொய் கிடந்த சிலை

யொடு - வலிமை தங்கிய வில்லொடு, கிடந்தது - கிடந்ததை, கண்டனன் - பார்த்தான்.

'நெய் : நறுநெய், எருமை நெய், ஆட்டு நெய், தேங்காய் நெய், புன்னைக்காய் நெய், வேப்ப நெய், புங்க நெய், தேனெய், எண்ணெய் முதலியன' என்பது பழையவுரை, கண்களால் காணல்; சுந்தர. 216, 630, 1269 என்னுமிடங்களிலும் காண்க. சிலையொடு கை கிடந்தமை. 3093-5.

பி - ம். 1. மெய்கிடந்த ; பொய்கடந்த ; கிடந்து ; நீர்விழ.

2. நெய்கடந்த கனல் ; கனல்பொரு நெஞ்சினன்.

3. மூரியாய். 27

## இராவணனின் செயல்கள்

3147. பொங்கு தோள்வளை யுங்கணைப் புட்டிலோ
டங்க தங்களு மம்பு மிலங்கிட
வெங்க ணுக மெனப்பொலி கின்றதைச்
செங்கை யாலெடுத் தான்சிரஞ் சேர்த்தினன்.

(இராவணன்), பொங்கு - பூரித்து விளங்கும், தோள் - (இந்திரசித்தின்) தோளுக்கு (ப் பூட்டியிருந்த), வளையும் - வளைகளும், கணைப் புட்டிலோடு - அம்புகளைப் போடும் புட்டில்களும், அங்கதங்களும் - வாகு வலயங்களும், அம்பும் - அம்புகளும், இலங்கிட - விளங்க, வெம் கண் நாகம் என - கொடிய கண்ணையுடைய பாம்பு என்னுமாறு, பொலிகின்றதை - விளங்குகிற இந்திரசித்தின் கையை, செம் கையால் - தன் வளமைமிக்க கைகளால், எடுத்தான் - எடுத்து, சிரம் சேர்த்தினன் - தன் தலையிலே வைத்துக் கொண்டான்.

அங்கதம் - வாகுவலயம் ; 'புயவரை மிசை........அங்கதம்' (திருவிளை. மாணிக். 12). கைக்கு நாகம்.

பி - ம். 1. விரற்புட்டிலோடு ; பொழி புட்டிலொடு.

2. அம்பு மலங்கிட ; அம்பு மலம்பிட.

3. மெய்க்கையைக் ; பொலிகின்ற கையைச் ; பொலிமெய்யதைச். 28

3148. கற்றிண் மார்பிற் றழுவுங் கழுத்தினில்
சுற்றுஞ் சென்னியிற் சூட்டுஞ் சுழல்கணோ
டொற்றும் மோந்திட் டுருகு முழைக்குமால்
முற்று நாளின் விடுநெடு மூச்சினன்.

(மேலும்), முற்றும் நாளின் - ஆயுள் முடியும் நாளில், விடும் - விடுகின்றது போன்ற, நெடு மூச்சினன் - நீண்ட சுவாசத்தை விட்டுக் கொண்டிருந்த இராவணன், கல் திண் மார்பில் - பாறை போன்று வலிமை பெற்றிருந்த தன் மார்பில் வைத்து, தழுவும் (அக்கையைத் தன்கைகளால்) தழுவிக்கொள்வான்; கழுத்தினில் சுற்றும் - தன் கழுத்திலே சூழ்வித்துக்கொள்வான்; சென்னியில் சூட்டும் - தன் தலையிலே சூட்டிக்கொள்வான்; சுழல் கணோடு ஒற்றும் - சுழல்கின்ற தன் கண்களிலே வைத்து ஒற்றிக் கொள்வான்; மோந்திட்டு உருகும் - அதைத் தன் நாசியால் மோந்து பார்த்து மனம் உருகுவான்; உழைக்கும் - வருந்துவான் ஆல்: அசை.

முற்று நாள் - சாங்காலம்.

பி-ம். 1. கழுத்திடைச்.
2. சென்னியிற் சூடும் சுடர்க் கண்ணோடு; சென்னியிற் சூழும்.
3. ஒற்றும் சோரும்; ஓர்ந்திட்டு; உளைக்குமால்.
4. விடுநெடு மூக்கினன். 29

3149. கைகண் டான்பின் கருங்கடல் கண்டென
மெய்கண் டானதன் மேல்விழுந் தானரோ
பெய்கண் டாரை யருவிப் பெருந்திரை
மொய்கண் டார்திரை வேலையை மூடவே.

(இராவணன்), கை கண்டான் - (முதலிற்) கையைப் பார்த்தான்; பின் - பிறகு, கருங்கடல் கண்டென - கரிய கடலைக் கண்டது போன்ற, மெய் கண்டான் - (இந்திரசித்தின்) உடலைக் கண்டான்; கண் பெய் தாரை பெரு அருவி திரை - கண் சொரிகின்ற தாரையான பெரிய அருவியின் அலைகள், மொய் கண்டார் - வலிமை

கண்ட அரக்க வீரர்களாகிய, திரை வேலையை - அலைகளையுடைய கடலை, மூடவே - மூடிவிடுமாறு, (கண்டு) அதன்மேல் விழுந்தான் - அவ்வுடலின்மீது விழுந்தான். அரோ, அசை.

உய்கண்டார் திரை வேலை என்று பாடங்கொண்டு, 'உய் கண்டு - உய்யக் கண்டு; ஆர்திரை வேலை - நிரம்பிய அலைகளை யுடைய கடலை' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 1. கருங்கடல் போன்ற; கருங்கடல் கண்டனன்.

4. உய்கண்டார் திரை; மெய்கொண்டார் திரை; மொய்கண்டாரலை; வேலையிறேட்டுவான்; வேலை முடுக்கிவான்; வேலையின் மூட்டுவான்.

3150. அப்பு மாரி யழுந்திய மார்பைத்தன்
அப்பு மாரி யழுதிழி யாக்கையின்
அப்பு மாரி னணைக்கும் மரற்றுமால்
அப்பு மானுற்ற தியாவருற் றரரோ.

அம்பு - அம்புகளின், மாரி - மழை போன்ற மிகுதி, அழுந்திய மார்பை - ஊன்றிய (இந்திரசித்தின்) மார்பை, அழுது - (மகன் இறந்த தால்) அழுது, தன் - (இராவணன்) தன்னுடைய, அப்பு மாரி இழி யாக்கையின் - (கண்) நீர் மழை சொரிந்து வழிகின்ற உடலில், அப்பும் - அப்பிக் கொள்வான்; மாரின் - தன் மார்பிலே, அணைக் கும் - அணைத்துக் கொள்வான்; அரற்றும் - புலம்புவான்; அ புமான் - (இராவணனாகிய) அப் பெரியோன், உற்றது - அப் பொழுது பட்டதை, யாவர் உற்றார் - வேறு எவர் அடைந்தார்? (எவருமில்லை யென்றபடி). ஆல், அரோ, அசைகள்.

அம்பு மாரி, அப்பு மாரியானது வலித்தல். இரண்டாமடி அப்பு மாரி - (கண்) நீர் மழை. மூன்றும் அடி, அப்பும்; மார்பின் அணைக்கும் என்று பிரிக்க. அப்புதல் - தோயச் செய்தல். மார், மார்பு என்பதன் கடைக்குறை. நான்காமடி அ புமான், புமான் - புருடன். அப்பு மாரி, சிலேடை.

பி - ம். 1. அழுந்திய; மாரைத்தன்.

2. அழுந்திய யாக்கையன்; அழுத்திய யாக்கையன்.

3. அப்பும் மார்பில்.

3151. பறிக்கு மார்பிற் பகழியைப் பன்முறை
முறிக்கும் மூர்ச்சிக்கும் மோக்கு முயங்குமால்
எறிக்கும் வெங்கதி ரோடுல கேழையும்
கறிக்கும் வாயிலிட் டின்றெனக் காந்துமால்.

(இராவணன்), மார்பில் பகழியை பன்முறை பறிக்கும் - (இந்திரசித்தின்) மார்பில் பதிந்திருந்த அம்புகளைப் பலதடவை பறித்தெடுப்பான்; முறிக்கும் - அவற்றை முறிப்பான்; மூர்ச்சிக்கும் - மூர்ச்சை யடைவான்; மோக்கும் - மோந்து பார்ப்பான்; முயங்கும் - அணைத்துக் கொள்வான்; ' எறிக்கும் - வெயில் வீசும், வெம் கதிரோடு - கொடிய சூரியனையும், உலகு ஏழையும் - ஏழு உலகங்களையும், இன்று வாயில் இட்டு கறிக்கும் - இன்று என் வாய்களில் போட்டுக் கடிப்பேன்', என - என்று சொல்லி, காந்தும் - கோபிப்பான. ஆல்: அசை.

பி - ம். 2. ஏங்கு முயங்குமால்.

3. எறிக்கும் பைங்கதிரோடு ; உலகி யாவையும்.

4. காந்துவான். 32

3152. தேவ ரோடு முனிவருஞ் சீரியோர்
ஏவ ரோடு முடன்றிரி கின்றிலர்
மூவ ரோடு முலகொரு மூன்றுடன்
போவ தேகொன் முனிவெனும் பொம்மலான்.

'முனிவு-இவ் விராவணனின் கோபம், மூவரோடும்-சிவபிரான், திருமால், பிரமன் என்ற மூவருடனும், உலகு ஒரு மூன்றுடன் - மூன்று உலகங்களுடன், (மட்டுமே) போவதே கொல் - போய் முடியுமோ?' எனும் பொம்மலான் - என்ற (அச்ச) மிகுதியால், தேவரோடு முனிவரும் - தேவர்களும் தேவ முனிவர்களும், சீரியோர் ஏவரோடும் - சிறப்பான எவரோடும், உடன் திரிகின்றிலர்- கூடி (வெளியில்) திரியாதவராயினர்; (ஒளிந்து கொண்டனர் என்றபடி).

இராவணன் அப்பொழுது கொண்ட கோபம் மூவரோடும், மூவுலகங்களோடும் நிற்குமோ? அன்றிப் பின்னும் யார் மீதும் செல்லுமோ என்று அஞ்சித் தேவர் முதலியோர் எவருடனும் கூடி

வெளி வராமல் பதுங்கிக் கொண்டனர் என்க. ‘திரிகின்றிலர் மூவர் - கேடில்லாத மூவர்; இவர்களோடே திரியாத மூவரென்றுமாம்’ என்பது பழையவுரை.

பி - ம். 2. உடனுறைகின்றவர்; உடன்திரிகின்றிலர்; ஏவரோடுமிடமின்றி நின்றவன்.

3. மூன்றெருடும்.

3. போவதெனும்; பொங்கினன்; பொம்மலால், பொம்மலார். 33

## இராவணன் இந்திரசித்தின் தலையைக் காணமல் வருந்துதல்

3153. கண்டி லன்றலை காந்திய மானிடன்
கொண்டி றந்தன னென்பது கொண்டவன்
புண்டி றந்தன நெஞ்சன் பொருமலன்
விண்டி றந்திட விம்மி யரற்றினன்.

(இராவணன்), தலை கண்டிலன் - இந்திரசித்தின் தலையைக் காணாதவனாய், காந்தி-மனம் எரிந்து, ‘அ மானிடன் கொண்டு இறந்தனன் - அந்த மனிதன் (அத் தலையை) எடுத்துக் கொண்டு கடந்து விட்டனன்’, என்பது கொண்டவன் - என்று எண்ணினவனாய், புண் திறந்தன நெஞ்சன் - முன் உண்டான புண்கள் திறந்த நெஞ்சையுடையவனாய், பொருமலன்-உள்ளத்தே பொருமல் கொண்டு, விம்மி - விம்மி, விண் திறந்திட - வானம் கிழியும்படி, அரற்றினன் - புலம்பினான்.

அவன் புலம்பினவை மேல் செய்யுட்களில் காணப்பெறும். காந்துதல் - கோபித்தலும் ஆம். இறத்தல் -,கடத்தல். பொருமல் - அழாது விம்முகை; ‘உயிர் போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான்’ (யுத்த. மீட்சி, 208); பொருமல் - துன்பமும் ஆம். ‘போயதெம் பொருமலென்ன’ (பால. திருவவ. 24).

பி - ம். 1. காதிய மானிடன், மானிடர்.

2. கொண்டகன்றனன், இறந்தனர்; என்பதுங் கொண்டவன்.

3. நெஞ்சம் பொருமலன்.

4. விண்திறந்திற. 34

## வேறு

## இராவணன் புலம்பல்

3154 நிலையுமா திரத்து நின்ற யானையும்
நெற்றிக் கண்ணன்
மலையுமே யெளிய வோநான் பறித்தற்கு
மறுவின் மைந்தன்
தலையுமா ருயிருங் கொண்டா ரவருட
லோடுந் தங்கப்
புலையனே னின்னு மாவி சுமக்கின்றேன்
போலும் போலும்.

'நிலையும் மாதிரத்து - நிலத்துள்ள திக்கு எல்லைகளில், நின்ற யானையும் - நின்ற (திக்கு) யானைகளையும், நெற்றி கண்ணன் மலையுமே - நெற்றியில் கண்ணைக் கொண்ட சிவபிரானுக்குரிய வெள்ளியங்கிரியும் மட்டுமே, நான் பறித்தற்கு - நான் (அவை) நிலைபெயரப் பிடுங்குதற்கு, எளியவோ - எளியன ஆனவோ? மறு இல் மைந்தன் - குற்றமற்ற என் மகனின், தலையும் ஆர் உயிரும் கொண்டார் - தலையையும் அருமையான உயிரையும் எடுத்துக் கொண்டார்களே! அவர் - அம் மானிடர், உடலோடும் தங்க - தம் உடல்களோடு பொருந்தியிருக்கப் (பார்த்துக் கொண்டு) புலையனேன் - மிலேச்சனான யான், இன்னும் - இனியும், ஆவி சுமக்கின்றேன் - உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேனே! போலும் போலும் அசைகள்.

யானையும் மலையுமே எளியவோ என்ற இகழ்ச்சியால் இராவணன் தன் மகனைக் கொன்ற மானிடர் தலையையும் தான் பறிக்க எண்ணினான் என்றபடி. புலையன் என்று தன்னை இழித்துக் கொண்டது, தன் எளிமை நோக்கி. போலும் போலும் என்பன இசை நிறையாய் வந்தன.

பி - ம். 1. நிலையின் மாத்திரத்து; நெற்றிக் கண்ணுன்.
2. எளியவாயான் மறித்தற்கு மறுவில; எளியவே நான் பறித்தற்கு; எளியவோ நான் மறிதற்கு மனிதன் மைந்தன்.
3. அவருடலோடுந் தாக்கப், தாக்காப்; எனவுடருங்கி நின்ற.
4. இன்னமாவி; ஒருவன் போலாம்.

3155 எரியுண வளகை மூது
ரிந்திர னிருக்கை யெல்லாம்
பொரியுண வுலக மூன்றும்
பொதுவறப் புரந்தேன் போலாம்
அரியுணு மலங்கன் மௌலி
யிழந்தவென் மதலை யாக்கை
நரியுணக் கண்டே னூணி
னுயுணு முணவு நன்றால்.

'அளகை மூதூர் - (குபேரனின் நகரமான) அளகாபுரி என்னும் பழமையான ஊரும், இந்திரன் இருக்கை - இந்திரனுடைய நகரமான அமராவதி, (முதலிய), எல்லாம் - எல்லா நகரங்களையும், எரி உண பொரி உண - நெருப்பும் நெருப்புப் பொரிகளும் அழிக்கவும், உலகம் மூன்றும் - (மேல், நடு, கீழ், என்னும்) மூன்று உலகங்களையும், பொதுவற - (பொதுச் சொல் நீங்க) எனக்கே உரியனவாய், புரந்தேன் - காத்தேன் ; (இவை முன்பு ; ஆனால் இன்றோ), அரி - வண்டுகள், உணும் அலங்கன் மௌலி இழந்த - (தேன்) பருகும் மாலையை யணிந்திருந்த தலையை இழந்த, என் மதலை - என் மகனின், யாக்கை - உடலை, நரி உண கண்டேன் - (போர்க் களத்தில்) நரி உண்ணுமாறு கிடக்க நான் பார்த்தேன் ; ஊணின் - (யான் உண்ணும்) உணவினும், நாய் உணும் உணவு - நாய் தின்னும் (எச்சில்) உணவு, நன்று - மேலானது. போல் ஆம் ; ஆல், அசைகள்.

'எரியுண பொரியுண - எரிந்து பொரிந்து போக', என்பது பழையவுரை. பொதுவறப் புரத்தல் ; (ஒப்பு) ; பொதுச்சொற் பொறுஅது (புறம். 8, 2) ; 'பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளும் செல்வர்' (கலி. 68) ; அரசன் போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறுஅதல்' (நெடுநல். அவதாரிகை); 'கொடியு முரசுங் கொற்ற வெண் குடையும், பிறர்கொளப் பொறுஅன்றனே கொண்டு' (சிதம்பர மும்மணிக். 25). அரி - வண்டு ; 'மெல்லிலையரி யாம்பலொடு' (மதுரைக். 252). மௌலி இங்குத் தலைக்காயிற்று ; ஆகு பெயர். கண்டேன், வினையாலணையும் பெயராகவும் கொள்ளலாம். நாயுணுமுணவு ; எச்சில்.

பா-ம். 1. இந்திரனுலகமெல்லாம்; இந்திரரிருக்கை.

2. பொதுவறப் புகுந்தேன்.

3. மோலியென் மகனழிந்த யாக்கை.

4. நானுனு முணவு. 36

3156. பூண்டொரு பகைமேற் கொண்டென்
புத்திர னோடும் போனார்
மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார்
விரதிய ரிருவ ரோடும்
ஆண்டுள குரங்கு மொன்று
மமர்க்களத் தாரு மின்னும்
மாண்டில ரினிவே றுண்டோ
விராவணன் வீர வாழ்க்கை.

ஒரு பகை மேல் கொண்டு - (இலக்குவனாகிய) ஒரு பகையை (ஒழித்தலை) மேற்கொண்டு, என் புத்திரனோடும் - என் மகனோடும், போனார் - சென்றவர்கள், (யாவரும்), மீண்டிலர் - திரும்பாதவராய், விளிந்து வீழ்ந்தார் - இறந்து வீழ்ந்தார்கள்; ஆண்டு உள விரதியர் இருவரோடும் - அங்கே உள்ள விரதம் பூண்ட இருவருள்ளும், குரங்கும் - குரங்குகளுள்ளும், ஆரும் ஒன்றும் - (அவ்விரதியரில்) எவரும், (அக் குரங்குகளுள்) ஒன்றும், இன்னும் மாண்டிலர் - இன்னும் இறக்கவில்லை; இராவணன் வீர வாழ்க்கை இனி வேறு உண்டோ - இராவணனுடைய வீர வாழ்க்கைக்கு இதைத் தவிர வேறு உதாரணம் வேண்டுமோ? (வேண்டா, என்றபடி).

'இராவணன் வீரன் என்பது உண்மையாயின் இவ்வாறு அரக்கர்கள் யாவரும் அழியவும், மனிதர் இருவரும் அவர்களுடன் நின்ற குரங்குகள் யாவையும் உயிருடன் வாழ நேர்ந்திராது; ஆதலின் அவன் வீர மற்றவன்' என்று கூறித் தன்னைப் பழித்துக் கொண்டது இங்குக் கூறப்பெற்றது. விரதியர் - இராம இலக்குவர்; அவர்கள், 'தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற் கொண்டி'ருந்தமையால், என்க. இனி 'குரங்கு மொன்று......மாண்டிலர்' என்று இங்குக் கூறியது, முன் இந்திரசித்து வதைப் படலத்துள், 'செல்லும்வான் றிசைக ளோரார் சிரத்தினோ டுடல்கள் சிந்தப், புல்லினர் நிலத்தை நின்ற வானர

வீரர் ரெல்லாம் (யுத்த. 3090) என்றதனோடு மாறுபடுவதையும் ‘பகைமேற் கொண்டு...போனார் மீண்டிலர்’ என்றது, ‘அயிலெயிற்றரக்க ருள்ளா ராற்றல ராகி ஆன்ற, எயிலுடை யிலங்கை நோக்கி யிரிந்தனர் படையும் விட்டார்’ (யுத்த. 3105) என்பதனோடும் மாறுபடுவதையும் காணும்போது இராவணன் தன் துன்ப மிகுதியால் உண்மை யைக் காணாமல் ஏதோ கூறினன் என்றேனும், இச் செய்யுளைச் செருகல் என்றேனும் கொள்ள வேண்டியிருப்பது காண்க. அன்றி, மீண்டிலர், மாண்டிலர் என்ற தற்கு மருத்துமலையால் நிகழ்ந்த பழைய நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து இறந்த அரக்கர் மீண்டிலர்; இறந்த வானரர் மாண்டிலர் என்று கூறினவனாகக் கொள்ளல் வேண்டும். ‘மீண்டிலர் - செத்தவர்கள் அவர்களுக்குத் திரும்பியதுபோல நமக்குத் திரும்பியதில்லை’ என்பது பழையவுரை.

பி-ம். 1. புத்திரரோடும்; புத்திரனோடு மற்றோர்.
3. மாகளத்தாரும்; இன்னம், தாரும்வந்து.
4. இனி மற்றுண்டோ. 37

3157. கந்தர்ப்ப ரியக்கர் சித்த
ரரக்கர்தங் கன்னி மார்கள்
செந்தொக்குஞ் சொல்லினா ருன்
தேவியர் திருவி னல்லார்
வந்துற்றெங் கணவன் றன்னைக்
காட்டென்று மருங்கில் வீழ்ந்தால்
அந்தொக்க வரற்ற வோநான்
கூற்றையு மாடல் கொண்டேன்.

‘கந்தர்ப்பர் - கந்தர்வர், இயக்கர் - இயக்கர், சித்தர் - சித்தர்கள், அரக்கர் - இராக்கதர், தம் - இவர்களுடைய, கன்னிமார்கள் - பெண்களும், செந்து ஒக்கும் சொல்லினார் - செந்து என்னும் ஒரு பண்ணை ஒக்கும் மொழிகளை யுடையவர்களும் ஆன, உன் தேவியர் - உன் மனைவியர், திருவின் நல்லார் - இலக்குமியினும் அழகு வாய்ந்தவர்கள், வந்து உற்று - (என்னை) வந்தடைந்து, ‘எம் கணவன் தன்னைக் காட்டு என்று - எங்கள் கணவனைக் காட்டு’ என்று கூறி, மருங்கில் வீழ்ந்தால் - என் பக்கத்தில் விழுந் தால், கூற்றையும் ஆடல் கொண்டேன் - இயமன்மீதும் வெற்றி

கொண்டவனை யான், ஒக்க அரற்றவோ-(என் பத்துத் தலைகளும்) ஒருமிக்க அரற்றுதலைச் செய்யவோ? அந்த - அந்தோ!

கந்தர்ப்பர் - கந்தர்வர்; ஆரணிய. 1182. கந்தர்ப்பர், இயக்கர், சித்தர், இவர்கள் தேவகணங்கள் பதினெண்மரைச் சார்ந்தவர். இம் மரபுக் கன்னிகையரை இந்திரசித்து மணந்திருந்தான் என்பது இச் செய்யுளால் புலப்படுகிறது. செந்து - ஒரு பண். திருவின; இன்; ஐந்தாம் வேற்றுமை உருபு. அந்த, ஹந்த; என்ற வட சொல்லின் திரிபு; ஓர் இரக்கக் குறிப்பு. அந்து ஒருவகைப் பூச்சி என்றும் கூறுவர். அந்து ஒக்க: ஓசையிடவும் பலமின்றியுள்ள அந்துப் பூச்சி போன்று வாய்விட்டழாமல் திணறவோ எனினுமாம். ஆடல் - வெற்றி. இனி, பழையவுரை பின்வருமாறு கூறும். 'செந்தொக்குஞ் சொல்லினர் - செந்துவென்னும் ஓர் ராகம் போன்ற மொழியார்; தென்றுற்ற சொல்லினர் - அழகு பெற்ற மொழியார் அந்துற்றரற்றவோ (4 ஆம் அடி) என்றது, வந்து கேட்ட இயமனை யழைத்து, 'இந்திரசித்தின் உயிரைவிடு என்று சொல்லமாட்டாமல் இன்னும் இவர்களையும்...காரணமாகக் கொண்டுபோ' என்று கொடுக்கவோ முன் இயமனை வென்றது எனப் பொருள்'.

பி - ம். 1. சிந்தொக்குஞ் சொல்லினர்.

4. வெந்தொக்க வரற்றவோ; கூற்றையும் வெற்றி கொண்டேன், என் சொற்ற வரற்றவோ, அந்துற்றலோ நான். 38

3158. சினத்தொடுங் கொற்ற முற்ற
வித்திரன் செல்வம் மேவ
நினைத்தது முடித்து நின்றேன்
நேரிழை யொருத்தி தன்னால்
எனக்கு நீசெய்யத் தக்க
கடனெலா மிரங்கி யேங்கி
உனக்குநான் செய்வ தானே
னென்னின்யா ருலகத் துள்ளார்.

(இதுகாறும், நான்), சினத்தொடும் - கோபத்தோடும், கொற்றம் - வெற்றி, முற்ற - (எனக்கு) முதிர்ச்சியடைய, இந்திரன் செல்வம் மேவ - தேவேந்திரனுக்குரிய செல்வங்கள் என்னை வந்து அடைய, நினைத்தது முடித்து நின்றேன் - நான் கருதிய கருமங்களை

முடித்து நின்றேன்; நேரிழை ஒருத்தி தன்னால் - நேர்மையான அணிகலன்கள் பூண்ட (சீதை என்னும்) ஒருத்தி காரணமாக, எனக்கு நீ செய்யத் தக்க கடனெலாம் - (யான் இறந்த பிறகு தந்தையாகிய) என்பொருட்டு (மகனாகிய) நீ செய்ய வேண்டிய கடன்களெல்லாவற்றையும், இரங்கி - மனம் இரங்கி, ஏங்கி-வருந்தி, நான் உனக்கு செய்வது ஆனேன் - (தந்தையாகிய) யான் (மகனாகிய) உனக்குச் செய்ய வேண்டியவனானேன்; என்னின் யார் உலகத்து உள்ளார் - என்னைவிட இழிந்தவர் எவர் உலகத்தில் உள்ளவர்? (ஒருவரும் இல்லை என்றபடி).

'எனக்கு நீ......செய்வதானேன்' என்ற இராவணன் இந்திர சித்து இறந்த பின் கூறியதை இலக்குவன் இந்திரசித்திடமே, 'கரக்கு நுந்தைக்கு நீ செயக் கடவன கடன்கள், இரக்கமுற்றுனக் கவன்செயு மென்றன னிளையோன்' என்று கூறியதை (யுத்த. 2441) ஒப்பிடுக. இவ் வைந்து செய்யுட்களால் இராவணன தானிருக்கத் தன் மகன் இறந்தமை குறித்து வருந்திப் புலம்பினான் என்க.

பி-ம். 1. சினத்தொடு கோபமுற்றி; கொற்ற முற்றி; செல்வமேவி, செல்வந்தேறி
2. ஒருத்தி நீரால்.
3. ஏங்கியேங்கி, நீங்கியேங்கி.
4. நினக்கு நான் உலகினுள்ளார்; எண்ணிலாருலகத்துள்ளார. 39

## இராவணன் இந்திரசித்தினுடலுடன் இலங்கை புகல்

3159. என்பன பலவும் பன்னி யெடுத்தழைத் திரங்கி யேங்கி
அன்பினால் மகனைத் தாங்கி யரக்கிய ரரற்றி வீழப்
பொன்புனை நகரம் புக்கான் கண்டவர் புலம்பும் பூசல்
ஒன்பது திக்கு மற்றை யொருதிக்கு முற்ற தன்றே.

(இராவணன்), என்பன - (முன் செய்யுட்களில்) கூறப்பெற்ற பலவும் - பலவற்றையும், பன்னி - சொல்லி, எடுத்து அழைத்து - (தன் மகனின் பெயரை) உரக்கச் சொல்லி அவனை அழைத்து, இரங்கி ஏங்கி - மனம் இரக்கமடைந்து ஏக்கமுற்று, அன்பினால் மகனைத் தாங்கி - அன்பு கொண்டு மகனான இந்திரசித்தைச் சுமந்துகொண்டு, அரக்கியர் அரற்றி வீழ - அரக்கிமார்கள் புலம்பிக் கொண்டு (மண்ணிலே) வீழ, பொன்புனை நகரம் பொன்னால் -

புனைந்த தன் இலங்கா நகரத்தினுள், புக்கான் - புகுந்தான்; கண்டவர் - (இவ்வாறு அவன் வருவதைப்) பார்த்த நகரத்தினர், புலம்பும் பூசல்-புலம்பி அரற்றும் ஓசை, ஒன்பது திக்கும்-ஒன்பது திக்குகளையும், மற்றை ஒரு திக்கும் - எஞ்சிய ஒரு திக்கான பத்தாம் திக்கையும், உற்றது - அடைந்தது. அன்று, எ: அசைகள்.

பூசல் உற்றது என்றியைக்க. பொன்புனை நகரம் - சுந்தர. 96 முதலிய செய்யுட்கள் காண்க. பூசல் - பேரொலி. மற்றை ஒரு திக்கு, பத்தாம் திக்கு. எடுத்தழைத்தல்: உரக்கக்கூவி அழைத்தல்.

பி - ம். 1. எடுத்தமைத் திரங்கி ; எடுத்திளைத் திரங்கி.
2. யரக்கியர் தாங்கி யரற்றி விழ.
3. புலம்பப் பூசல்.
4. ஒன்பது திசையு.

## அரக்கியர் துயரம்

3160. கண்களைச் சூல்கின் றருங் கழுத்தினைத் தடிகின் றரும்
புண்கொளத் திறந்து மார்பி னீருளைப் போக்கு வாரும்
பண்கள்புக் கலம்பு நாவை யுயிரொடு பறிக்கின் றரும்
எண்களிற் பெரிய ரிந்த விருந்துயர் பொறுக்க லாற்றார்.

(இந்திரசித்தின் பிணத்தைப் பார்த்து), கண்களை சூல்கின்றரும் - தம் கண்களைத் தோண்டிக் கொள்பவர்களும், கழுத்தினை தடிகின்றரும் - தம் கழுத்துக்களை வெட்டிக் கொள்பவர்களும், மார்பின் - தம் மார்புகளை, புண்கொளத் திறந்து - புண்கள் உண்டாகுமாறு பிளந்து, ஈருளை - ஈரல்களை, போக்குவாரும் - நீக்குபவர்களும், பண்கள் புக்கு அலம்பும் நாவை - இராகங்கள் படிந்து தூய்மைப் படுத்தும் அவர்களுடைய நாக்கையும், உயிரொடு - உயிரையும், பறிக்கின்றரும் - பிடுங்கிக் கொள்பவர்களும், (ஆக உள்ள அந்நகர மகளிர்) இந்த இரும் துயர் பொறுக்கல் ஆற்றார் - இந்தப் பெரிய துயரைப் பொறுக்க இயலாதவராயினர், எண்களில் பெரியர் - எண்ணிக்கைகளில் அதிகமாயினர்.

இந்திரசித்தின் சாவையும் இராவணனின் சோகத்தையும் கண்ட இலங்கை மகளிரின் செயல்கள் கூறப்பெற்றன. பங்கமுற்ற உறுப்புக்களுடன் புலம்பிக்கொண்டு இலங்கை வீதியுளே புகுந்த சூர்ப்பணகையைக் கண்ட இலங்கை நகரத்தார் செயலை இங்கு ஒப்பிடுக. (ஆரணிய. 579); தடிதல் - வெட்டுதல்; 'வாளோச்சி மிகத் தடிந்தார்' (பு. வெ. 5, 8); ஈருள் - ஈரல்; 'ஈருட்டடிமூடி' (சீவக. 2791); பண்கள் புக்கு அலம்புதல்; அழகிய பிரயோகம். எண்களிற் பெரியரானூர் என்ற பாடம் கிடைப்பின் நலமாகும்.

பி - ம். 1. சூழ்கின்ருரும்; கடிகின்ருரும்.

2. புண்படத்திரந்து; ஈரலைப் போக்குவாரும்.

3. பெண்கள் புக்குருகி; உயிரொடு பிடுங்குவாரும்.

4. பொறுக்கிலாதார். 41

3161. மாதிரங் கடந்த திண்டோள்
மைந்தன்றன் மகுடச் சென்னி
போதலைப் புரிந்த யாக்கை
பொறுத்தனன் புகுதக் கண்டார்
ஓதநீர் வேலை யன்ன
கண்களா லுகுத்த வெள்ளக்
காதல்நீ ரோடி யாடற்
கருங்கடன் மடுத்த தன்றே.

மாதிரம் கடந்த திண் தோள் மைந்தன் தன் - திசைகளைக் கடந்த வலிய தோள்களையுடைய மகனுன இந்திரசித்தின், மகுடம் சென்னி - கிரீடம் தரித்த தலை, போதலைப் புரிந்த யாக்கை - இழந்த உடலை, பொறுத்தனன் - சுமந்து, புகுதக் கண்டார் - (இராவணன் நகரினுள்) புகக் கண்டவர், ஓதம் நீர் வேலை அன்ன - ஒலிமிக்க நீரையுடைய கடலை ஒத்த, கண்களால் உகுத்த - (தம்) கண்களிலிருந்து சிந்திய, காதல் நீர் வெள்ளம் - அன்பினுல் உண்டான நீர் வெள்ளம், ஓடி - ஓடி, ஆடல் கருங்கடல் மடுத்தது - (அலைகள்) அசைதலையுடைய கரிய கடலைச் சார்ந்தது. அன்று, ஏ : அசைகள்.

கண்ணீர் வெள்ளம் கடல் நீர் வெள்ளத்தை மடுத்தது என்க. மாதிரம் - மலையும் ஆம்; 'மாதிரம் பொருத தோள்' (பால.

திருவவதார. 68). மடுத்தல் - நிறைத்தல், சென்னி போதலைப் புரிந்த யாக்கை - முண்டம். பொறுத்தல் - சுமத்தல். ஆடல் - அசைதல்.

இதன்பின் இரு சுவடிகளிற் காணப்பெறும் அதிகப்பாடல்கள் :—

தொழும்புசெய் துளராந் தேவர் துன்பினர்போலத் தாமும்
பழங்க ணுற்றுடைய வேந்த னிணையடி விடாது பற்றி
உளங்களிப் புறுவோ ரோயா தழுதனர் மைந்த னுவி
இழந்தன னென்னக் கேட்டாங் கிடியுறு மரவை யொத்தார். 1

உம்பரி னுலவுந் தெய்வ வுருப்பசி முதல வாய
ஐம்பது கோடி தெய்வத் தாதிய ரழுது சூழ்ந்தார்
தும்பியி னினத்தை யெல்லாந் தொலைத்திடுங் குருளை மாயக்
கம்பமுற் றரியின் பேடு கலங்கிய தென்னச் சோர்ந்தார். 2

பி - ம். 1. கடந்த வீரன்; போதலர் துறந்த யாக்கை.

2. போகக் கண்டார்; போதக்கண்டார் வேலையுள்ளார் கண்களால்; வேலையென்ன வொழித்தனர் புகுத்த.

3. வெள்ளங் (காதல்) பார்சூழ் கருங்கடல்.

4. நீரோடியாருய்க் ; மறுகிற்றன்றே. 42

## இராவணன் அரண்மனை புகல்

3162. ஆவியி னினிய காத
லரக்கியர் முதல்வ ராய
தேவியர் குழாங்கள் சுற்றச்
சிரத்தின்மேல் தளிர்க்கை சேர்த்தி
ஓவிய மழுது வீழ்ந்து
புரள்வன வொப்ப வொல்லைக்
கோவியல் கோயிற் புக்கான்
குருதிநீர்க் குமிழிக் கண்ணான்.

ஓவியம் - சித்திரங்கள், சிரத்தின்மேல் தளிர் கை சேர்த்தி - தம் தலைகள்மீது தளிர் போன்ற கைகளை வைத்துக்கொண்டு, அழுது - அழுது, வீழ்ந்து புரள்வன - தரையில் வீழ்ந்து புரள்வன,

ஒப்ப-போல, ஆவியின் இனிய காதல்-உயிரைவிட இனிமையான காதலை உடைய, அரக்கியர் முதல்வராய தேவியர் குழாங்கள் சுற்ற-அரக்கியர் முதலான மனைவியர் கூட்டங்கள் தன்னைச் சூழ்ந்துவர, குருதி நீர் குமிழிக் கண்ணன் - இரத்தம் நீர்க் குமிழிகளைப்போலக் கொப்புளித்துக் கொண்டிருக்கும் கண்ணை உடைய இராவணன், ஒல்லை - விரைவாக, கோ இயல் - அரசர் வாழத்தக்க இயல்புகளோடு கூடிய, கோயில் - தன் அரண்மனைக்குள், புக்கான் - புகுந்தான்.

தேவியர் - இராவணன் தேவியர்; இந்திரசித்தின் தேவியர் என்பாரும் உளர். தேவியர் பல குலங்களையும் சார்ந்தவர் என்பது, அரக்கியர் முதல்வராய தேவியர் என்றதனுல் பெறப்படும்; யுத்த. 3157; சுந்தர 286 - 289 செய்யுட்களைக் காண்க. ஒல்லை - வேகமாய்; காலதாமதமின்றி. 'ஒல்லைக் கெடும்' (குறள். 563). ஒல்லை, பழைமை என்றுகொண்டு, கோவியற் கோயில் என்பதனோடு பொருத்துதலும் ஆம். "கோ-அரசனுனவன், இயல்பாகிய கோயிலில் காட்டுச் சவத்தை வீட்டிற் கொணர்ந்தான்" என்று ஓர் உரை பகரும்.

பி - ம். 2. சுற்றிச் சிரத்தின்.
3. ஒவிய மழுதுவிழ்ந் தரற்று மாபோல்.
4. கோவியல்; கோயில் புக்கார் குருதிநீர்க் குமிழிக் சுண்ணூர். 43

## மண்டோதரி வருந்துதல்

3163. கருங்குழற் கற்றைப் பாரங்
கால்தொடக் கமலப் பூவால்
குரும்பையைப் புடைக்கின் றுள்போற்
கைகளால் முலைமேற் கொட்டி
அருங்கலச் சும்மை தாங்க
வகலல்கு லன்றிச் சற்றே
மருங்குலு முண்டோ வென்ன
மயன்மகள் மறுகி வந்தாள்.

(அப்பொழுது), மயன்மகள் - மயனின் மகளாகிய மண்டோதரி, கருங்குழல் பாரம் கற்றை - தன் கரிய கூந்தலின் பளுவான

தொகுதி, கால் தொட - தன் குதிகால்களைத் தொடுமாறு (தலை அவிழ்ந்தவளாய்), கமல பூவால் - தாமரைப் பூவினால், குரும்பையை புடைக்கின்றாள் போல் - (தென்னங்) குரும்பையை அடிக்கின்றவள் போல, கைகளால் முலைமேல் கொட்டி - தன் கைகளினாலே தன் மார்புகளைப் புடைத்து, அரும் கலம் சும்மை தாங்க - அருமையான அணிகலன்களின் பாரத்தைச் சுமக்க, அகல் அல்குல் அன்றி - அகன்ற அல்குலே அல்லாமல், சற்றே - சிறிதளவு, மருங்குலும் - இடையும், உண்டோ என்ன - இருக்கின்றதோ என்று (பார்ப்பவர்கள்) பகருமாறு, மறுகி - மனம் சுழன்று, வந்தாள் - அங்கே வந்தாள்.

கமலப் பூவால்...கொட்டி; ஒப்பு: ' தாமரை தண்மதி சேர்ந்தது போலக், காமர் செங்கையிற் கண்ணீர் மாற்றி ' (மணிமே. 3 மலர் வனம்புக்க. 12). மண்டோதரி மயன் மகள்; சுந்தர. 290, 979; மண்டோதரியின் கூந்தல்; ' புயன் மகிழ் புரி குழல் ' (சுந்தர. 979); கொட்டுதல் - கையால் தட்டுதல்; ' கொட்டினன் றாள் ' சுந்தர. 830. சுமை - சும்மை; மறுகுதல் - சுழலுதல்.

பி - ம். 2. முலையிற் கொட்டி.
3. அருங்கலந் தனிர்பொற் பாதம் நிலத்தொடு மதுவே யென்று.
4. முண்டுண்டென்ன; முண்டுண்டோவென்ன; மறுகிவிழ்ந்தாள். 44

3164. தலையின்மேற் சுமந்த கையள்
தழலின்மேன் மிதிக்கின் றாள்போல்
நிலையின்மேன் மிதிக்குந் தாளா
ளேக்கத்தால் நிறைந்த நெஞ்சாள்
கொலையின்மேற் நிறுத்த வேடன்
கூர்ங்கணை யுயிரைக் கொள்ள
மலையின்மேன் மயில்வீழ்ந் தென்ன
மைந்தன்மேன் மறுகி வீழ்ந்தாள்.

(அம் மண்டோதரி மகனின் பிணத்தைக் கண்டு), தலையின் மேல் சுமந்த கையாள் - தன் தலைமீது உயர்த்திய கைகளை உடையளாய், தழலின்மேல் மிதிக்கின்றாள் போல் - நெருப்பின்மீது (தன் கால்களை வைத்து) மிதித்தவளைப்போல, நிலையின்மேல் - பூமியின்

மீது, மிதிக்கும் தாளாள் - பதிய வைக்க (முயலும்) கால்களை யுடையளாய், ஏக்கத்தால் - துக்கத்தால், நிறைந்த நெஞ்சாள் - நிரம்பிய நெஞ்சை உடையவளாய், கொலையின் மேல் குறித்த வேடன் - கொலை செய்வதுமீது மனத்தைக் குறித்த ஒரு வேடனின், கூர் கணை - கூரிய அம்பு, உயிரை கொள்ள - உயிரைப் போக்க, மயில் - ஒரு மயிலானது, மலையின் மேல் வீழ்ந்ததென்ன - மலைமீது விழுந்தது என்று சொல்லும்படி, மைந்தன்மேல் - (தன் சிறந்த) குமாரன்மீது, மறுகி வீழ்ந்தாள் - மனம் சுழன்று விழுந்தாள்.

தழல் - தீ; தீமீது மிதிக்கமாட்டாமல் அடி பதைபதைப்பது போல் நிலத்தில் ஊன்றி அடி வைக்காமல் தத்தளித்து நடந்தாள் என்க. நிலை - நிலம் (பிங்.) அம்பு பட்ட மயில், 'ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி' (முல்லைப். 84); மலையின்மேல் மயில் வீழ்ந்தது; இந்திரசித்துக்கு மலை; மண்டோதரிக்கு மயில். ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை.

பி - ம். 1. சுமந்தகையள்; தணலின்மேல்.

2. பதைக்குந் தாளாள்; தாளணேசத்தால்.

3. யுயிரைக்கூட; யுயிரைக்கூட்ட.

4. மயன்மகள் மறுகி வீழ்ந்தாள். 45

3165. உயிர்த்தில ளுணர்வு மில்லள்
உயிரிலள் கொல்லோ வென்னப்
பெயர்த்தில ளியாக்கை யொன்றும்
பேசலள் விம்மி யாதும்
வியர்த்திலள் நெடிது போது
விம்மலள் மெல்ல மெல்ல
அயர்த்திலள் அரிதிற் றேறி
வாய்திறந் தரற்ற லுற்ருள்.

(அம் மண்டோதரி அப்பொழுது), உயிர்த்திலள் - மூச்சு விடவில்லை; உணர்வும் இல்லள் - உணர்ச்சியும் அற்றவளானுள்; உயிரிலள் கொல்லோ என்ன - உயிரை இழந்தனளோ என்று ஐயுறுமாறு, யாக்கை - உடலை, பெயர்த்திலள் - அசைக்கவில்லை;

விம்மி - விம்மலெடுத்து, யாதும் ஒன்றும் பேசலள் - எதைப் பற்றியும் ஒரு சொல்லும் பேசினுளல்லள் ; நெடிது போது - நீண்ட நேரம், வியர்த்திலள் - வியர்வையடைந்தாளும் அல்லள் ; அயர்த்திலள் - (எதையும்) மறந்தாளுமல்லள் ; (இவ்வாறு கிடந்து), மெல்ல மெல்ல - மெதுவாக, அரிதில் - மிகுந்த கஷ்டத்துடன், தேறி - நன்னிலையடைந்து, (பிறகு) வாய் திறந்து - தன் வாயைத் திறந்து, அரற்றல் உற்றுள் - புலம்பலானுள்.

புத்திர சோகத்தில் பிறக்கும் மெய்ப்பாடுகள் இங்குக் கூறப்பெற்றன.

பி - ம். 1. உணர்வு மில்லாள், உணர்வு மில்லை ; உயிரிலள்கொல் லென்றெண்ணி; என்கொலென்னப்.

2. பேசலள் விலகியாதும் ; புல்லியாதும், யலதியாதும், யிலதியாதும் ; பேசலள்ல்லது ; பேசலள்பிறிதொன்று ; பேசலள்பிறங்கி.

3. நெடியது யாதும், நெடியபோதும் ; விம்மினள் மெல்ல ; மெள்ள மெள்ள.

4. அயிர்ந்திலள் ; அயர்த்தவளரிதிற்றேறி ; அயர்த்தனளரிதிற்றேறி, அயர்ந்தனளரிதிற்றேறி. 46

## மண்டோதரி புலம்புதல்

3166. கலையினுல் திங்கள் போல வளர்கின்ற காலத் தேயுன்
சிலையினு லரியை வெல்லக் காண்பதோர் தவ
[முன்செய்தேன்
தலையிலா வாக்கை காண வெத்தவஞ் செய்தே னந்தோ
நிலையிலா வாழ்வை யின்னும் நினைவனே நினைவி லாதேன்.

கலையினுல் - (நாள்தோறும் வளர்கின்ற) கலைவளர்ச்சியில், திங்கள் போல வளர்கின்ற காலத்தே - சந்திரன்போல (நாள்தோறும்) பெருகுகின்ற உன் இளம்பருவத்திலே, உன் சிலையினுல் - உன் வில்லினுல், அரியை - இந்திரனை, வெல்ல - வெல்ல, காண்பது ஓர் தவம் முன் செய்தேன் - (என் கண்களால்) காண்பதற்கு ஒப்பற்ற தவத்தினை முன்பு செய்திருந்தேன் ; அந்தோ - ஐயோ ! தலை இலா ஆக்கை காண - (இப்பொது உன்னுடைய)

தலை இல்லாத உடலைப் பார்க்க, எ தவம் செய்தேன் - எந்தத் தவம் செய்தேனோ? நினைவு இலாதேன் - (நன்றாக) நினைக்கும் சக்தியற்றவளாகிய யான், நிலையிலா வாழ்வை - நிலையற்றதான இந்த உலக வாழ்க்கையை, இன்னும் - உன் சாவைக் கண்ட பிறகும், நினைவனோ - நினைப்பேனோ?

கலை - கலையறிவும் ஆம். அரி - சிங்கமும் ஆம். மூன்றாமடியில் தவம் எதிர்மறை யிலக்கணையால் தீவினையைக் குறித்தது.

பி - ம். 1. கலையினிற் றிங்களென்ன ; வளர்கின்ற காலத்தைய, காலத்தென்ன காலனின்கை.

2. தவமும் செய்தேன்.

4. இன்னம் நினைவனே ; நெறியிலாதேன், நினைவிலாதான். 47

3167. ஐயனே யழக னேயென் னரும்பெற லமிழ்தே யாழிக்
கையனே மழுவனே யென் றிவர்வலி கடந்த கால
மொய்யனே முளரி யன்ன நின்முகங் கண்டி லாதேன்
உய்வனோ உலக மூன்றுக் கொருவனே செருவ லோனே.

"ஐயனே - என் ஐயா! அழகனே - என் அழகனே! என் பெறல் அரும் அமிழ்தே - எனக்குப் பெறுதற்கு அருமையான அமுதமே! ஆழிக்கையனே - சக்கராயுதம் பிடித்த திருமாலும், மழுவனே - மழு என்னும் படையை ஏந்திய சிவபெருமானும், என்ற இவர் - என்ற இரண்டு பெருந்தெய்வங்களாகிய இவர்களின், வலி கடந்த - வலிமையை வென்ற, காலம் மொய்யனே - காலன் போன்ற வலிமை பெற்றவனே! உலகம் மூன்றுக்கு ஒருவனே - மூன்று உலகங்களுள்ளும் ஒப்பற்றவனாய் விளங்குவோனே! செரு வலோனே - போரில் வல்லோனே! முளரி அன்ன - தாமரை போன்ற, நின் முகம் கண்டிலாதேன் - நின் முகத்தைக் காணாத யான், உய்வனோ - பிழைத்திருப்பேனோ?

கையனே, மழுவனே ; ஏகாரங்கள் எண்ணேகாரங்கள். சிவபெருமானையும் திருமாலையும் இந்திரசித்து வென்றமை ; யுத்த. 3130, 3131, 3137. மொய்யன் - வலியோன்.

பி - ம். 1. அரும்பெறல் மருந்தே.

2. என்றவர் வலி ; கடந்த காலை.

3. மெய்யனே ; மொய்யரு முளரி யன்ன முகனலங் கண்டி லாதேன்.

4. சிலைவலோனே. 48

3168. தாளரிச் சதங்கை யார்ப்பத் தவழ்கின்ற பருவந் தன்னில்
கோளரி யிரண்டு பற்றிக் கொணர்ந்தனை கொணர்ந்து
[கோபம்
மூளுறப் பொருத்தி மாட முன்றிலின் முறையி னோடு
மீளரு விளையாட் டின்னங் காண்பெனோ விதியி லாதேன்.

'தாள் - உன் பாதங்களில், அரி சதங்கை - உட்பரலிட்ட சதங்கைகள், ஆர்ப்ப - ஒலிக்கும் வண்ணம், தவழ்கின்ற பருவம் தன்னில் - தவழ்கின்ற இளமைப் பருவத்திலே, இரண்டு கோளரி - இரண்டு சிங்கங்களை, பற்றி - பிடித்து, கொணர்ந்தனை - நீ கொண்டுவந்தாய் ; கொணர்ந்து - அவ்வாறு கொண்டுவந்து, கோபம் மூளுற - (அவற்றிற்குக்) கோபம் உண்டாகுமாறு, பொருத்தி - போர்மூட்டி, மாட முன்றிலின் - மாடத்திலுள்ள முன்றிலில், முறையினோடு - முறைப்படி, (நீ விளையாடின), மீள அரும் விளையாட்டு - மீளமுடியாத உன் விளையாட்டை, விதியிலாதேன் - நல்விதி இல்லாத யான், இன்னம் காண்பெனோ - இன்னொரு முறை காண்பேனோ? (காணமாட்டேனே என்றபடி).

தாள் அரி சதங்கை ; கிண்கிணி. சதங்கை ஆர்ப்பத் தவழ் கின்ற பருவம் : 'அரி பொலி கிண்கிணி யார்ப்போவா வடி' (கலித். 81, 6); காலவை, சுடுபொன் வளைஇய ஈரமை சுற்றோடு, பொடியழல் புறந்தந்த செய்வுறு கிண்கிணி ; (கலித். 85 : 1-2); 'தேரைவாய்க் கிண்கிணி ஆர்ப்ப' (கலித். 86 : 9-10); 'கிண்கிணி களைந்தகால்' (புறம். 77 : 1). தவழ்கின்ற பருவத்தில் கோளரி பிடித்தல் இயலாதெனின், தளர்நடைப் பருவம் என்றதை அன்பினால் தவழ்கின்ற பருவம் என்றனள் எனலாம். கோளரி - சிங்கம். பொருத்துதல் - போர் மூட்டுதல் ; 'வாரணம் பொருத்துவாறும்' (பால. நாட்டுப். 16) ; பொருத்தும் என்று பாடங்கிடைப்பின் சிறப்பாகும்.

பி ம். 1. யார்க்கும் பருவத்தே தளிர்க்கை தன்னால்; பருவத்தேயும்; நாளணி யணிந்து மெல்ல நடக்கின்ற பருவத்தேயும்.

2. கொண்டனை கொணர்ந்து கோபம்.

3. வாளரிக் கண்ணிறூர்கள் வாழ்த்திட மறுகினேகி.

4. விளையாட்டின்னும். 49

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

பத்தெனுந் திசையும் வென்று கயிலையில் பரனை யெய்தி
அத்தலை யமர்செய் தாற்ரு னவனி டத்துமை யன்பால்தன்
கைத்தலக் கிளிநிற் கியக் கவர்ந் தெனக்களித்து நின்ற
வித்தகக் களிறே யின்னும் வேண்டினே னெழுந்தி ராயே.

3169. அம்புலி யம்ம வாவென் றழைத்தலு மவிர்வெண் டிங்கள்
இம்பர்வந் தானை யஞ்ச லெனவிரு கரத்தி னேந்தி
வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங்கும் வண்ணம்
எம்பெருங் களிறே காண வேசற்றே னெழுந்தி ராயே.

'எம் பெரும் களிறே - எங்கட்கு உரிய ஒரு பெரிய களிறு போன்றவனே! (நீ) அம்புலி - அம்புலியை நோக்கி, 'அம்ம வா என்று - அம்ம! வா என்று, அழைத்தலும் - அழைத்த காலத்தே, அவிர் - விளங்குகின்ற, வெண் திங்கள் - வெள்ளிய சந்திரன், இம்பர் - இவ்வுலகுக்கு, வந்தானை - வந்தவனை, 'அஞ்சல் என - பயப்படாதே' என்று கூறி, இரு கரத்தின் ஏந்தி - இரண்டு கைகளிலும் அவனைத் தாங்கிக்கொண்டு, (அவன் மீது) வம்புஉறு - புதுமையாகப் பொருந்திய, மறுவைப் பற்றி - களங்கத்தைப் பிடித்துக்கொண்டு, முயல் என - 'இது முயல்' என்று (சொல்லி), வாங்கும் வண்ணம் - அம்மறுவைத் துடைக்கும் தன்மையை, காண ஏசற்றேன் - (மறுபடியும்) பார்க்க விரும்பினேன்; எழுந்திராயே? - நீ எழமாட்டாயோ?

அம்ம - கேட்டற் பொருளைத் தழுவி வரும் இடைச் சொல்; 'அம்ம, கேட்பிக்கும்' (தொல். சொல். 278). 'அம்புலி! கேள்;

வா' என்று பொருள் கூறலும் ஆம். இம்பர் வந்தானை - பிள்ளைத் தமிழ் நூல்களில் நால்வித உபாயங்களால் அம்புலியை அழைப்பது கூறப்படுமே யன்றி அவன் வந்ததாக எங்கும் சொல்லப் படுவதில்லை; ஆனல், இந்திரசித்து அழைத்தலுமே அவன் வந்தனன் என்றமையால் இந்திரசித்தினிடம் அவன் கொண்ட அச்சம் காட்டப் பெற்றது. வம்பு உறு மறு; வம்பு - புதுமை; குழந்தையின் கண்ணுக்கு அக்களங்கம் புதுமையாகப் பட்டது என்க. வாங்குதல் - நீக்குதல்; 'வாங்குமின் மனத்துயர்' (யுத்த. மீட்சிப். 278); வண்ணம் காண என இயைக்க. ஏசறுதல் - ஆசைப்படுதல்; 'வரைத்தோள் கூடுதற் கேசற்ற கொம்பினை' (பதினோராம். ஆளு. திருவந். 45).

பி - ம். 1. அம்மா; அம்புலியாடவாவென்.

2. நம்பவுன் ஞுதை யானைக் கஞ்சினன் மருங்கு; நின்ருன்; நம்பவுன் ஞுதை யானை மருந்திடா மருக்கு நண்ண.

3. வாங்கும் வாட்கை, வாழ்க்கை; வம்புறு முயலைப் பற்றி மறுவென வாங்கும் வாழ்க்கை; வாங்கா வாழ்க்கை: முசலென வாங்கும் வாழ்க்கை.

4. களியேயென்ன யேக்கற்றேன். 50

3170. இயக்கிய ரரக்கி மார்கள் விஞ்சைய ரேழை மார்கள்
முயற்கறை பயிலாத் திங்கண் முகத்தியர் முழுது நின்னை
மயக்கிய முயக்கந் தன்னுன் மலரணை யமளி மீதே
அயர்த்தனை யுறங்கு வாயோ வமர்பொரு தலசி னுயோ.

'இயக்கியர் - இயக்கமகளிர், அரக்கிமார்கள் - அரக்கப் பெண்கள், விஞ்சையர் ஏழைமார்கள் - வித்யாதரமாதர் (ஆகிய), முயல் கறை பயிலா - முயல் என்னும் களங்கம் படியாத, திங்கள் முகத்தியர் - பூரண சந்திரன் போன்ற முகத்தையுடையவர்கள், நின்னை - உன்னை, முழுதும் - முழுவதும், மயக்கிய முயக்கம் தன்னால் - (உன்னை) மயங்கச் செய்த ஆலிங்கனத்தால், மலர் அணை அமளி மீது அயர்த்தனை உறங்குவாயோ - மலர்கள் பரப்பப்பெற்ற அணைகளையுடைய படுக்கைமீது (உன்னை) மறந்தவனாய்த் தூங்குவாயோ?

(அன்றி), அமர் பொருது அலசினையோ - போரிட்டு வருத்த மடைந்தாயோ?

இந்திரசித்தின் மனைவியர் பலமரபினர் என்பது முன்பே கூறப்பெற்றது; யுத்த, 3157 செய்யுள் காண்க. அவன் உறங்குவதாக மண்டோதரி கருதி அதற்குக் காரணங்களை அவள் காண்கிருள். அலசுதல் - வருந்துதல். மயக்கிய முயக்கம் - முயக்கத்தாற் பிறந்த அவசத்தைச் குறித்தது. ஏழையர் - பெண்கள்; 'எருதேறி யேழையுடனே' (தேவா. 1171, 2); முருக நின்னை என்று பாடமாகில் 'அழக' என்றும், 'குமர' என்றும் பொருள் கொள்க' என்பது பழையவுரை.

பி-ம். 1. அரக்கர் மாதர், அரக்கி மாதர்; விஞ்சைய ரேனை மாதர்; ஏழை மாதர்.

2. முயற்கறை மலராத் திங்கண், இலாத திங்கண், மெலிந்த திங்கண்; முருக நின்னை.

3. நயக்குநர் மருள; நீ நின்னவிர் முகங்காட்டி நல்காய்; நயக்குநர் மருளநீயும்.

4. அமர்பொரு தஞ்சினையோ. 51

3171. முக்கணன் முதலி னோரை யுலகொரு மூன்றி னோடும்
புக்கபோ ரெல்லாம் வென்று நின்றவென் புதல்வன் [போலாம்
மக்களி லொருவன் கொல்ல மாள்பவன் வான மேரு
உக்கமென் காலால் வேரோ டொடிவது முளதே யம்மா.

'முக்கணன் முதலினோரை - சிவபிரான் முதலிய முத்தேவர்களுடனும், உலகு ஒரு மூன்றினோடும் - மூன்று உலகங்களோடும், புக்க - உண்டான, போர் எல்லாம் - போர்கள் யாவற்றையும், வென்று நின்ற - வெற்றிகொண்டு நின்ற, என் புதல்வன் - என் மகன், மக்களில் ஒருவன் கொல்ல மாள்பவன் - மானிடரில் ஒருவன் கொல்ல இறப்பான்! அம்மா - ஆச்சரியம்! (இஃது) வான மேரு - பெரிய மேருமலை, உக்கம் மென் காலால் - விசிறியால் உண்டான மெல்லிய காற்றால், வேரோடு ஒடிவதும் உளதே போல் ஆம் - வேருடன் பெயர்ந்து விழுவதும் உண்டு (என்பது) போல ஆகும்.

இந்திரசித்து முப்பெருந் தேவரையும் மூவுலகையும் வென்றமை முன்னும் கூறப்பெற்றது. யுத்த. 2130, 3131, 3143, 3152 செய்யுட்களில் காண்க. அம்மா - வியப்புக் குறிப்பு. வான் - பெருமை. (பிங்).

பி - ம். 1. போல்வாய்.

2. மாள்வதே வானமேரு, மாள்வதே மானமேரு.

4. உக்கிட வனுவொன் ஞேடி யுதைத்தது போலுமம்மா. 52

3172. பஞ்செரி யுற்ற தென்ன வரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே மீண்ட தில்லை
அஞ்சினே னஞ்சினேனச் சீதையென் றமிழ்திற் றேய்த்த
நஞ்சினு லிலங்கை வேந்தன் நாளையித் தகைய னன்றே.

'பஞ்சு எரியுற்றது என்ன - பஞ்சு (நெருப்புப் பற்றி) எரிந்தது என்னுமாறு, அரக்கர் தம் பரவை எல்லாம் - அரக்கர் என்னும் கடல் முழுவதும், வெம் சின மனிதர் கொல்ல விளிந்ததே - கொடிய கோபத்தைக்கொண்ட (இரு) மனிதர் கொல்ல அழிந்ததே! மீண்டதில்லை - (பின்னும் அது) உயிர் பெற்றுத் திரும்பியதுமில்லை; அ சீதை என்று - அந்தச் சீதை என்று பெயர் கொண்டு வாழும், அமிழ்தில் தோய்த்த நஞ்சினுல் - அமுதத்தில் தோய்த்த விஷத்தினுல், நாளை - நாளைத்தினம், இலங்கை வேந்தன் - இராவணன், இ தகையன் அன்றே - இந்நிலையன் ஆவான் அல்லனே? அஞ்சினேன் அஞ்சினேன் - (இதை எண்ணி) அஞ்சினேன், அஞ்சினேன்'.

சீதை என்னும் நஞ்சு - 'வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்' (சுந்தர. 430); 'பேர் சனகியாம் நெடியதாய, நஞ்சு தின்றனர்' (யுத்த. 103); 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை' (யுத்த. 1284); அமிழ்தில் தோய்த்த நஞ்சு; (ஒப்பு): 'வஞ்சனே னெனக்கு நானே மாதரார் வடிவுகொண்ட, நஞ்சுதோ யமுத முண்பா னச்சினேன்' (யுத்த. 1576); 'இலங்கை வேந்தன் நாளையித்தகையன்' என்ற எண்ணம் மண்டோதரிக்கு மிக்க அச்சத்தைக் கொடுத்ததனுல், 'அஞ்சினேன் அஞ்சினேன்' என்று இருமுறை கூவினுள். 'அமுதம் பொதிந்த நஞ்சு -

கடுக்காய்; நஞ்சு பொதிந்த அமுதம்-சுக்கு' என்பன ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. 'கலையினால்' என்று தொடங்கும் செய்யுள் முதல் இஃது ஈறாக, ஏழு செய்யுட்கள் மண்டோதரி அரற்றியவை.

பி-ம். 1. மஞ்சரி யுற்ற.
2. மனிதன் கொல்ல; விளிந்தவர்.
3. அமுதாற் செய்த; அஞ்சினேன் நடுங்கினேனச்.
4. வேந்தும் நாளை; வெந்து நாளை, நாளை யித்தகைமைத்தன்றே. 53

## இராவணன் சீதையை வெட்டச் செல்லுதல்

3173. என்றழைத் திரங்கி யேங்க வித்துய ரெமர்கட் கெல்லாம்
பொன்றழைத் தனைய வல்குற் சீதையால் புகுந்த தென்ன
வன்றழைக் கல்லின் நெஞ்சின் வஞ்சகத் தாளை வாளால்
கொன்றிழைத் திடுவெ னென்னு வோடின னரக்கர்
[கோமான்.

என்று-இவ்வாறு சொல்லி, அழைத்து-தன் மகனை விளித்து, இரங்கி-மனம் இரங்கி, ஏங்க-மண்டோதரி ஏக்கமடைய, (அவள் கூறினவற்றைக் கேட்ட இராவணன்), 'எமர்கட்கு எல்லாம்-எங்களுக்கெல்லாம், இ துயர்-இந்தத் துன்பம், பொன் தழைத்த அனைய அல்குல் சீதையால்-பொன் தழைத்தாற் போன்ற அல்குலையுடைய சீதையினால், புகுந்தது என்ன-உண்டாயிற்று என்று கொண்டு, வன் தழை கல்லின் நெஞ்சின்-வன்மை பெருகிய கல்லினை ஒத்த நெஞ்சினையுடையவளும், வஞ்சகத்தாளை-வஞ்சகம் இயற்றுகின்றவளுமான பிராட்டியை, வாளால் கொன்று இழைத்திடுவென்-வாளினால் கொல்லுதலைச் செய்து முடிப்பேன்' என்னு-என்று சொல்லிக்கொண்டு, அரக்கர் கோமான்-அரக்கர்களின் அரசனான இராவணன், ஓடினான்-(அவளிருக்கும் இடம் நோக்கி) ஓடினான்.

தழைத்தல்-மிகுதல். 'சீதையால் புகுந்தது' என்பதை மண்டோதரி சொல்லாகவும் கொள்ளலாம். கல்லின் நெஞ்சு-

நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருக' (கந்தரநு. 1). வஞ்சகத்தாள்- இராவணன் இச் சொல்லால் பிராட்டியைக் குறிக்கின்றான்.

பி - ம். 1. என்றழைத் தேங்க நோக்கி; என்றுரைத்திரங்கல் கேட்டாங்கித்தகை; இத்துயர் நமர்கட்கெல்லாம்; ஏங்க நோக்கி யுயிர்த்துய்த்தெமர்க் கெல்லாம்.

2. புகுந்ததந்தோ; புகுந்ததென்னின்.

3. வன்றலைக் களவி னெஞ்சின்; வன்றழைக் கரும்பொனெஞ்சின்.

4. கொன்றழித்திடுவெனென்று. 54

## இராவணனை மகோதரன் தடுத்துக் கூறல்

3174. ஓடுகின் றானை நோக்கி
யுயர்பெரும் பழியை யுச்சிச்
சூடுகின் றானென் றஞ்சி
மகோதரன் துணிந்த நெஞ்சன்
மாடுசென் றடியின் வீழ்ந்து
வணங்கிநின் புகழ்க்கு மன்னா
கேடுவந் தடுத்த தென்னா
வினையன கிளத்த லுற்றான்.

ஓடுகின்றானை - (அவ்வாறு பிராட்டியிருக்கும் இடம் நோக்கி) ஓடுகின்ற இராவணனை, நோக்கி - பார்த்து, துணிந்த நெஞ்சன் மகோதரன் - தைரியங்கொண்ட நெஞ்சினனான மகோதரன், உயர் பெரும் பழியை - மிகப்பெரிய பழியை, உச்சி - தலையிலே, சூடுகின்றான் - சூட்டிக்கொள்கிறான், என்று அஞ்சி - என் றெண்ணிப் பயந்து, மாடு சென்று - அவனருகிற் போய், அடியின் வீழ்ந்து வணங்கி - அவன் பாதங்களில் விழுந்து வணங்கி, (அவனை நோக்கி), "மன்னா - அரசனே! நின் புகழ்க்கு கேடு வந்து அடுத்தது - உன் கீர்த்திக்கு அழிவு வந்து சேர்ந்தது" என்னா-என்று (தொடங்கி), இனையன - இப்படிப்பட்ட சொற்களை, கிளத்தல் உற்றான் - சொல்லலானான்.

அவன் அப்பொழுது கிளத்தியவை பின்வரும் ஐந்து செய்யுட் களிற் காணப்பெறும். இவ்வைந்து செய்யுள்களின் முறைவைப்பு

சில சுவடிகளில் மாறிக் காண்கிறது. வான்மீகத்தில் இராவணனை இங்குத் தடுத்து நிறுத்தியவன் சுபார்சுவன் என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. பழியினுச்சி.
2. வணங்கியுன் ; மன்றே.
4. கேடுவந்துற்றதென்ன. 55

3175. மங்கையைக் குலத்து ளானைத்
தவத்தியை முனிந்து வாளால்
சங்கை யொன்றின்றிக் கொன்றாற்
குலத்துக்கே தக்கா னென்று
கங்கையஞ் சென்னி யானுங்
கண்ணனுங் கமலத் தோனும்
செங்கையுங் கொட்டி யுன்னைச்
சிரிப்பரால் சிறிய னென்னு

'மங்கையை - ஒரு பெண்ணை, குலத்துளானை - சிறந்த குலத்துள் தோன்றியவளை, தவத்தியை - தவ நிலையில் உள்ளவளை, முனிந்து - கோபித்து, சங்கை ஒன்று இன்றி - அச்சம் ஒன்றும் இல்லாமல், வாளால் கொன்றால் - வாளினால் வெட்டிக் கொன்று விடுவாயானால், கங்கை அம் சென்னியானும் - கங்கையைத் தன் அழகிய தலையிலே கொண்டவனும், கண்ணனும் - திருமாலும், கமலத்தோனும் - மலரவனும், 'குலத்துக்கே தக்கான்' என்று - இவன் அரக்கர் குலத்துக்கே உரியவன் என்றும், 'சிறியன் - அற்பன்', என்னு-(என்றும்) சொல்லி, செம் கையும் கொட்டி - தம் செங்கைகளையும் கொட்டி, உன்னை சிரிப்பர் - உன்னை இகழ்வர். ஆல், அசை.

மங்கையை .. . தவத்தியை .....கொன்றால் ; ஒப்பு ; 'தையலைத் துணையிலாளைத் தவத்தியைத் தருமக் கற்பின், தெய்வதந்தன்னை மற்றுள்தேவியைத் திருவைத்தீண்டி, வெய்யவன் கொன்றால்' (யுத்த. 2838). 'குலத்துக்கே தக்கான் - இராட்சத குலத்துக்கே தக்கவன்; பிராமணிய குலம் கெட்டவன்' என்பது ஒருரை. பழையவுரை 'குலத்துக்கே தக்கதானதன்று, என்று பாடங்கொண்டு, 'புலத்திய மரபில் வந்ததற்கு இது போதாதென்றும், அரக்கனுயவன் இந்த எளிமை செய்யலாமோ என்றும் ஆம. திருமாலைக் கண்ணன்

என்றது 'காண்பார்க்கும் காணப்படும் பொருட்குங் கண்ணுகிப் பூண்பாய்போ னிற்றியால்' (ஆரணிய. 1174) என்ற காரணத்தால் என்க. 'கடல்வண்ணன் கண்ணன் விண்ணவர் கருமாணிக்கம்' (திருவாய். 3: 6, 10); 'கண்ணன் கண்ணல்லதில்லையோர் கண்ணே' (திருவாய். 2: 1).

பி - ம். 1. மங்கையர் குலத்துளாளை ; வானில் கொன்ருய்.

2. தக்கதென்று ; தகையேனென்று ; தக்கதென்ன.

4. சிறியையென்று ; சிறியனென்ரே. 56

3176. நீருள தனையுஞ் சூழ்ந்த
நெருப்புள தனையும் நீண்ட
பாருள தனையும் வானப்
பரப்புள தனையும் காலின்
பேருள தனையும் பேராப்
பெரும்பழி பிடித்தி போலாம்
போருள தனையும் வென்று
புகழுள தனையு முள்ளாய்.

'போர் உள தனையும் வென்று - போர் என்று உள்ளவரையும் (அனைத்தையும்) வென்று, புகழ் உள தனையும் உள்ளாய் - புகழ் என்று உள்ள யாவற்றையும் பெற்றுள்ள மன்ன! நீர் உள தனையும் - நீர் உள்ள வரையும், சூழ்ந்த நெருப்பு உள தனையும் - பரவிச் சூழும் இயல்பைப் பெற்ற நெருப்பு உள்ள வரையும், நீண்ட பார் உள தனையும் - நீளமான பூமி உள்ள வரையும், வானம் பரப்பு உள தனையும் - ஆகாயப்பரப்பு உள்ள வரையும், காலின் பேர் உள தனையும் - காற்றின் பெயர் உலகில் வழங்கும் வரையிலும், பேரா - மாறுபாடில்லா, பெரும் பழி - பெரிய பழிச் சொல்லை, பிடித்தி - நீ பிடித்துக்கொண்டாய்; போல், ஆம் அசைகள்.

தனை, அளவு குறிக்கப் பிற சொல்லின் பின்வரும் ஒரு சொல்; 'இத்தனையும் வேண்டுமெமக்கேலோரெம்பாவாய்' (திருவாச.7, 3). 'நீருள தனையும் ..'; பஞ்ச பூதங்கள் உள்ள வரையில் நிற்கக்கூடிய பழியைப் பிடித்தாய் என்றனன்; உலகம் பஞ்ச பூதங்

களின் சேர்க்கையாதலின் உலகமுள்ளளவும் இப்பழி நிற்கும் என்றபடி.

பி - ம். 1. நீண்டு நெருப்புள, சூழ்ந்து நெருப்புள.
2. காயப் பரப்புள ; பரப்பினது.
3. மாயாப் பெரும்பழி.
4. உள்ளால். 57

3177. தெள்ளருங் கால கேயர்
சிரத்தொடுந் திசைக்கண் யானை
வெள்ளிய மருப்புச் சிந்த
வீசிய விசயத் தொள்வாள்
வள்ளிய மருங்குல் செவ்வாய்
மாதர்மேல் வைத்த போது
கொள்ளுமோ தானவ் வாவி
நாணத்தாற் குறைவ தல்லால்.

தெள் அரு கால கேயர் சிரத்தொடும் - தெளிந்தறிதற்கு அருமையான காலகேயர் என்பாரின் தலைகளோடு, திசைக்கண் யானை - எட்டுத் திசைகளின்கண், (நிற்கும்), யானைகளின், வெள்ளிய - வெண்மையான, மருப்பு-கொம்புகளும், சிந்த - சிதறும் படி, வீசிய விசயத்து ஒள்வாள் - நீ வீசிய வெற்றியையுடைய ஒளி பொருந்திய வாளை, வள்ளி - கொடி போன்ற, அம் - அழகிய, மருங்குல் - இடுப்பையும், செம்மை வாய் மாதர்மேல்-சிவந்த வாயை யும் உடைய பெண்பாலர்மேல், வைத்த போது-செலுத்திய போது, நாணத்தால்-வெட்கத்தால், குறைவது அல்லால்-அந்த வாள் தன் தொழிலில் குறைவு படுவதல்லாமல், தான் அ ஆவி கொள்ளுமோ- (அது) தான் அந்த மாதரின் உயிரை எடுக்குமோ (எடுக்காது).

நீ கொல்வாயானாலும் வாள் கொல்லாது என்றனன். காலகேயரை இராவணன் வென்றது; (உத்தர. திக்குவிசயப். 83). காலகேயர் என்பவர் அசுரர்; திக்குப்பாலர்களை வெல்லச் சென்ற இராவணன் கடலில் ஒளித்திருந்த இவர்களை வருணன் நகருக்குச்

செல்லுமுன் வென்றான். திக்கயங்களை இராவணன் வென்றமை. (உத்தர. திக்குவிசய. 227). தான் அ ஆவி கொள்ளுமோ என்று பிரித்துப் பொருள் கொள்ளப் பெற்றது.

பி - ம். 1. தெள்ளிய காலகேயர்.

2. வெள்ளிய பொருப்புச்சிந்த ; விசயவொள்வாள்.

4. கொள்ளுமோ யாவிதானே. 58

3178. நிலத்தியல் பன்று வானின்
நெறியன்று நீதீ யன்று
தலத்தியல் பன்று மேலோர்
தருமமே லதுவு மன்று
புலத்தியன் மரபின் வந்து
புண்ணிய மரபு பூண்டாய்
வலத்தியல் பன்று மாயாப்
பழிகொடு மறுகு வாயோ.

'(இவ்வாறு மங்கையைக் கொல்லத் துணிவது), நிலத்து இயல்பு அன்று - பூமியில் உள்ளார்க்கு ஒத்த இயல்பு அன்று; வானின் நெறி அன்று - வானத்தில் வாழ்பவரின் வழியும் அன்று; நீதி அன்று - நீதியும் அன்று; தலத்து - இலங்கைத் தலத்துக்கு ஒத்த, இயல்பு அன்று - தன்மையும் அன்று; மேலோர் தரும மேல் - பெரியோர்கள் பின்பற்றி வந்த தரும நெறியோவெனில், அதுவும் அன்று - அதுவும் அன்று; புலத்தியன் மரபின் வந்து - புலத்தியன் வமிசத்தில் பிறந்து, புண்ணிய மரபு பூண்டாய் - அற நெறி முறைமையைத் தாங்கினாய்; (இது செய்தல்), வலத்து இயல்பு அன்று - வலிமையின் தன்மைக்கும் ஒவ்வாது; மாயா - என்றும் அழியாத, பழிகொடு-பழியைக் கொண்டு, மறுகுவாயோ - மனங் கலங்குவாயோ.

புலத்தியன் மரபு; ஒப்பு; 'சூரியன் மரபுக்குமோர் தொன் மறு' (கிட்கிந்தா. 316); (புண்ணிய), மரபு - முறைமை; 'ஈண்டு செலன் மரபிற் றன்னியல் வழா அ' (புறநா. 25); இயல்பும் ஆம். 'நிலத்தியல்பன்று - மூன்று லோகத்தினுமில்லாத முறை;

அரக்கர் யோனியிலே பிறந்த முறைக்கும் ஆகாது என்பது ஓர் உரை. நிலத்தியல்பு; 'நிலத்தியல்பான் நீர்திரிந்தற்றாகும்'; (குறள். 452). ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை.

பி-ம். 1. நெறியன்று புகழா நின்ற; புறத்தினின்ற, புறத்து நின்ற.

2. தருமமேலன்று தக்க; கருமமேலன்று.

3. வந்த புண்ணிய; புண்ணிய விரதம் பூண்டாய்; மரபு பூண்டார்.

4. பலத்தியல்பன்று; மாயப் பழி; பழிகொள மறுகுவாயோ; பழி கொண்டு மன்னுவாயோ. 59

3179. இன்றுநீ யிவளை வாளா
லெறிந்துபோ யிராமன் றன்னை
வென்றுமீண் டிலங்கை மூதூ
ரெய்தினை வெதும்பு வாயோ
பொன்றினள் சீதை யென்றே
போவர்க ளவர்தா மல்லால்
வென்றிட முடியா தென்னும்
வீரமோ விளம்ப லென்றான்.

'நீ - நீ, இன்று இவளை வாளால் எறிந்து - இன்று இச் சீதையை வாளினால் வெட்டி, போய் - போர்க்களத்துக்குச் சென்று, இராமன் தன்னை வென்று - இராமனை வென்று, இலங்கை மூதூர் மீண்டு எய்தினை - இலங்கையாகிய பழைய நகரத்துக்குத் திரும்பி வந்து, சீதை பொன்றினள் என்றே - சீதை இறந்துபட்டனளே என்று, வெதும்புவாயோ - மனம் வருந்துவாயோ? (அன்றி), (சீதை இறந்து பட்டாள்); (இனிப் போர் வேண்டுவதில்லை என்று) தாம் போவர் - தாமாகவே (அவர்கள்) (சண்டையிடாமல்), திரும்பி விடுவர், (வேறு வழியில்) அவர் - அந்த இராம இலக்குவரை, வென்றிட முடியாது - வெல்லுதல் இயலாது, என்னும் வீரமோ - என்று நீ எண்ணும் வீர வழியோ? விளம்பல் - சொல்லுவாயாக' என்றான் - என்று மகோதரன் இராவணனிடம் கூறினான்.

'இப்பொழுது சீதையைக் கொன்றுவிட்டால், பகைவர்களை நீ வென்றபின், அவள் இறந்துபட்டமையால், வெற்றி வீணாயிற்று என்று வருந்துவாய்; ஆதலால் அவளை வெட்டற்க' என்று கூறி மகோதரன் தடுத்தனன் என்க. பின் இரண்டடிகளில் சீதையைக்

கொன்று விடுதல், பகைவரை எதிர்த்து நிற்கமாட்டாது, அவர்களைத் திரும்பிப் போகச் செய்யும் பேடித்தனம் என்று மகோதரன் இராவணனை இடித்துக் கூறியதாகும். வீரமோ என்றது, பிற குறிப்பு. 'பொன்றினள் சீதை என்றே' என்பதை வெதும்பு வாயோ என்பதனோடும், விளம்பல் என்பதனோடும் தனித்தனி கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. இச் செய்யுளின் பின்னிரண் டடிகள் வேறு பாடங்களோடு காணப் பெறுகின்றன.

பி-ம். 1. வாளா லெறிந்தனை மனிதன் றன்னை.

2. சென்றுநீ வெதும்புவாயோ.

3. பொன்றினள் சீதையென்று புரவல புதல்வன் றன்னை,.........யென்று புகழ்நின் புதல்வன் றன்னை.

4. கொன்றவர் தம்மைக் கொல்லக் கூசினை கொள்க வென்றான், கொன்றவன் தன்னைக் கொல்லக் கூசினை போலுமென்றான். 60

ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை. அச்சுவடியில் இச் செய்யுளுடன் படலம் முற்றும்.

## இராவணன் தன் முயற்சியை விடல்

3180. என்னலு மெடுத்த கூர்வா
ளிருநிலத் திட்டு மீண்டு
மன்னவன் மைந்தன் றன்னை
மாற்றலர் வலிதிற் கொண்ட
சின்னமு மவர்கள் தங்கள்
சிரமுங் கொண்டன்றிச் சேர்கேன்
தொன்னெறித் தயிலத் தோணி
வளர்த்துமி னென்னச் சொன்னான்.

என்னலும் - இவ்வாறு மகோதரன் கூறவும், மன்னவன் - அரசனான இராவணன், எடுத்த கூர் வாள் - தன் கையில் தூக்கிய கூரிய வாளை, இரு நிலத்து இட்டு - பெரிய பூமியில் எறிந்துவிட்டு, 'மைந்தன் தன்னை - (என்) மைந்தனான இந்திரசித்தை, மாற்றலர் - பகைவர்கள், வலிதிற் கொண்ட - தம் வலிமையாற் கொண்ட, சின்னமும் - (அவர் தம் வெற்றிக்கு) அறிகுறியாயுள்ள அவன் தலையையும், அவர்கள் தங்கள் சிரமும் - அவ்விருவருடைய தலைகளையும்,

கொண்டு அன்றி - நான் கொண்டாலல்லாமல், மீண்டும் சேர்கேன் - திரும்பவும் இந் நகருக்குத் திரும்பமாட்டேன், என்று சொல்லி, 'தொல் நெறி - பழைய வழியால், தயிலத் தோணி வளர்த்துமின் - தயிலக் கொப்பரையில் படுக்க வையுங்கள்', என்ன சொன்னான் - என்று இராவணன் சொன்னான்.

இவ்வாள் சிவபிரான் அருளியது என்பதும் இதனைக் கொண்டு பெண் கொலை புரியக் கருதியதும், பின்பு இதனை இரு நிலத்தில் எறிந்ததும் இவ்வாளுக்கு இராவணன் செய்த குற்றங்களாகும் என்க. சின்னம்-வெற்றிக்கறி குறியாகக் கொண்ட இந்திரசித்தின் தலை. தயிலத் தோணி வளர்த்தல்; இறந்தவர் உடலை இறுதிச்சடங்கு செய்யத் தாமதம் உண்டாகும் காலத்து, அவ்வுடல் கெடாமலிருக்கும் பொருட்டு தைலத் தோணியில் இட்டு வைக்கும் வழக்கம் அயோத்தியா காண்டம் தைலமாட்டுப் படலம் என்ற படலப் பெயராலும், அதன் 76 ஆம் செய்யுளாலும் அறியலாம். பல சுவடிகளில் இப் படலம் இச் செய்யுளுடன் முடிகிறது; சில சுவடிகளில் அது அடுத்த செய்யுளுடன் முடிகிறது. முன் செய்யுளுடன் படலம் முடியும் சுவடிகளில் இது படைக்காட்சிப் படலத்தின் முதற் செய்யுளாகும்.

பி - ம். 1. இட்டு மீண்ட.

2. வலியிற் கொண்ட.

3. சென்னியுமவர்கள்; கொண்டன்றி மீள்கேன்.

4. வளர்த்துமின் மகனையென்றான்.

61

இராவணன் சோகப் படலம் முற்றும்.

---

## இந்திரசித்தின் வதைப் படலம் இராவணன் சோகப் படலம் என்ற இவற்றை யொட்டி முதனூல் கூறுவது.

வீடணன் இலக்குவனை நோக்கி இராக்கத சேனையை எவ்வாற்றானும முறியடிக்க வேண்டும் என்று கூற, இலக்குவன் வானர சேனையுடன போர்க்களம் சென்றான். அநுமன் அரக்கர்களை மரங் கொண்டழித்தான். அரக்கரும் பல்வேறு படைகள் கொண்டு போராடினர். இந்திரசித்தை அநுமன் கொல்ல முயன்றான். வீடணன், அவ்வாறு அவன் கொல்லாதபடி தடுக்கவேண்டும் என்று இளையபெருமாளுக்குக் கூறினன்; இடையில் இந்திரசித்துக்கும் வீடணனுக்கும் வாதம் நிகழ்ந்தது. வீடணன் மாற்றானிடம் அடிமையாகப் புகுந்ததனால் அவனைக் குறித்து விசனப் படவேண்டி யுள்ளது என்றும் எவன் ஸ்வபக்ஷத்தை விட்டுப் பரபக்ஷத்தை யடைகின்றானோ, அவன் ஸ்வபக்ஷம் நாசமான பிறகு அந்தப் பகைவர்களாலேயே நாசம் உறுகின்றான் என்றும், மாற்றானுக்கு ஸ்வஜனத்தைக் காட்டிக் கொடுத்தலாகிய செய்கை பிழையுடைத்தாகும் என்றும் கூறினான். மறுமொழியாக வீடணன், தான் அரக்கர் குலத்துப் பிறந்தவன் என்றும் அரக்கர் செய்கையுள்ளவன் அல்லன் என்றும், அறத்துக்கு மாறான கொள்கை தனக்குடன்பாடன்றென்றும், அறத்தினின்று வழுவியவனைக் கையில் விழுந்த பாம்பை உதறுவது போல உதறவேண்டும் என்றும், பிறரை வருத்துபவர், பிறர் மனைவியைக் கவருபவர் என்ற இவர்களை விட்டு நீங்குவதே முறையென்றும் கூறினன்.

இந்திரசித்து இச் சொற்களைக் கேட்டு வெகுண்டவனாய் வீர வாதம் பேசிக்கொண்டு செல்ல, இலக்குவனும் எதிர்வாதம் பேசிக் கொண்டு நின்றான். பெரும் போர் நிகழ்ந்தது. இடையிடையே வீடணன் உற்சாகமூட்ட இளையபெருமாள் சரம் தொடுத்தான். இந்திரசித்து மயங்கி வீழ்ந்தான். மீட்டும் அரக்கன் போருக்கு எழ இலக்குவன் அவனுடைய கவசத்தைப் பிளந்தான். பின்னர் இருவரும் கைகலந்தனர். வீடணன் சாம்பவன் என்ற இருவரும் கூடிப் போர் புரிந்தனர். இலக்குவன் இந்திரசித்தின் சாரதியைக் கொன்றான். உடனே இவன் வானரர்களை வஞ்சித்து இலங்கை சென்று தேரூர்ந்து வந்து எதிர்த்தான். இலக்குவன் இந்திரசித்தின் விற்களை அறுத்தான். வீடணன் இந்திரசித்தின் தேர்ப்

பாகனைக் கொன்றான். முடிவில் இலக்குவன் ஐந்திராத்திரத்தால் இந்திரசித்தைக் கொன்றான். கொல்லும்போது தன் கை அம்பினை நோக்கி, 'தசரதருடைய புதல்வரான ஸ்ரீ ராமர் தருமாத்துமா என்பதும் உண்மையையே நோன்பாகக் கொண்டவர் என்பதும் உண்மையானால், பாணமே! நீ இந்திரசித்தை வதைப்பாயாக' என்று சொல்லி விடுத்த அளவில் அது இந்திரசித்தின் தலையை அறுத்து வீழ்த்தியது. அரக்கர்கோன்மகன் வதையுண்டு கவசத்துடனும் தலைப்பாகையுடனும் பூமியில் வீழ்ந்தான்.

இந்திரசித்து வீழ்ந்த அளவில் அமரர்கள் முதலானோர் பேருவகை கொண்டனர். அரக்கர்கள் அஞ்சிச் சிதறியோடினர். இடை நடுவில் இலக்குவன் வானரர்களுடன் இராமபிரானையடைய இராமபிரான் தம்பியின் செயலைக் கொண்டாடினான். வீடணனும் அநுமனும் பலவாற்றானும் உதவி புரிந்திருப்பார்கள் என்றும் அவர்களுடைய வியக்கத்தகும் வல்லமையினால்தான் அரக்கன் மரித்தான் என்றும், இந்திரனை வென்ற இந்திரசித்தினை வதைத்தவனான இலக்குவன் சகாயம் உள்ள வரையில் தான் எவ்வாறு சீதையையும் தனது இராச்சியத்தையும் பெருமலிருக்க முடியும் என்றும் கூறிப் புகழ்ந்தான்.

இது இவ்வாறிருக்க, தன் மகன் இறந்ததுகேட்டு இராவணன் சோகம் மிகுந்து பலவாறு பிரலாபித்தான். பின்னர்க் கோபம் கொண்டு சீதையைக் கொல்ல வேண்டும் என்று எண்ணி அசோக வனம் நோக்கிச் சென்றான். அப்பொழுது அவன் மந்திரியான சுபார்சுவன் தடுக்க, அவன் அவ்வாறு செய்தலைத் தவிர்ந்து இராமபிரானுடன் போருக்கு ஆயத்தமானான். அடுத்து நிகழ்வது மூலபல யுத்தம்.

---

# 29. படைக் காட்சிப் படலம்

இது பல்லடங்களி லிருந்தும் வந்த. படைகளை (இராவணன்) காண்பதைக் கூறும் படலம் என விரியும்.

## படைகள் வந்திருத்தலைத் தூதர் இராவணனுக்கு அறிவித்தல்

3181 அத்தொழி லவருஞ் செய்தா
ராயிடை யனைத்துத் திக்கும்
பொத்திய நிருதர் தானை
கொணரிய போய தூதர்
ஒத்தன ரணுகி வந்து
வணங்கின ரிலங்கை யுன்னூர்ப்
பத்தியி னமைந்த தானைக்
கிடமிலை பணியென் னென்றார்.

அ தொழில் அவரும் செய்தார் - (இந்திரசித்தின் உடலைத் தைலத் தோணியில் இடுவதாகிய) அந்தத் தொழிலை அங்கிருந்த ஏவல்மாக்கள் செய்தனர்; அவ் இடை - அவ் வேளையில், அனைத்து திக்கும் பொத்திய நிருதர் தானை கொணரிய போய தூதர் - எல்லாத் திசைகளிலும் நிறைந்து நின்ற இராக்கதர் படையைக் கொணரும் பொருட்டுச் சென்றிருந்த தூதுவர், ஒத்தனர் அணுகி வந்து - ஒரு சேர நெருங்கி வந்து, வணங்கினர் - இலங்கேசனைப் பணிந்தவராய், 'இலங்கை உன் ஊர் - இலங்கை என்னும் உன்னுடைய நகரில், பத்தியின் - அணி அணியாக (இப்போது வந்து), அமைந்த - பொருந்தியுள்ள, தானைக்கு இடம் இலை - சேனைக்கு இடமில்லை; என் பணி - (நாங்கள் செய்ய வேண்டிய) பணி யாது', என்றார் - என்று கேட்டனர்.

அத் தொழில்; 'தொன்னெறித் தயிலத் தோணி வளர்த்து மின்' என்று அரக்கர்கோன் கூறப் பணியாளர் மேற்கொண்ட

தொழில். 'தையற் கடனின் றெடுத்தவனைத் தயிலக் கடலின் றலையுய்த்தார்' (அயோத்தி. தைலமாட்டு. 75) காண்க. ஆயிடை - அவ் + இடை; 'வகரக் கிளவி நான்மொழி யீற்றது' (பதிற்று. உரை.). அனைத்துத் திக்கும் - திக்கு அனைத்தும், பொத்திய - நிரம்பிய; 'பொத்திய துன்பத்தோடுஞ் சிதையுந் தாமும் போவார்' (யுத்த. 2791); கொணரிய - செய்யிய வென்னும் வாய்பாடு. பத்தி - வரிசை; 'நூறு பத்துடைப் பத்தியின்' (யுத்த. 1435); 'நானாவித மணிப்பித்திப் பத்தி' (சுந்தர. 197); பணி - கட்டளை யெனினுமாம். தானை - படை; பாரசீகச் சொல்லாகிய தாண் என்ற சொல்லின் விகாரம். பத்தியின் - அன்புகெழுமிய பணிவினால் எனினுமாம்.

பி - ம். 1. போன தூதர்.

3. அனுக.

4. அடைந்த ; பணியேநு, பணியது. 1

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

தொல்லைசேர் அண்ட கோடித் தொகையில்மற்ற ரக்கர் சேனை
இல்லையா யெவரு மின்னே யெய்திய விலங்கை யென்னும்
மல்லல்மா நகரும் போதா வான்முதல் திசைகள் பத்தின்
எல்லையுற் றளவு நின்றுங் கெழுந்தது சேனை வெள்ளம்.

ஒரு சுவடியில் மூலபல வரவுகாண் படலம் என்று எழுதப் பெற்றுள்ளது.

## இராவணன் சேனை யாண்டுளது? என்ன, தூதர் விடை கூறுதல்

3182. ஏம்பலுற் றெழுந்த மன்ன
னெவ்வழி யெய்திற் றென்றான்
கூம்பலுற் றுயர்ந்த கைய
ரொருவழி கூற லாமோ
வாம்புனற் பரவை யேழு
மிறுதியின் வளர்ந்த தென்னத்
தாம்பொடித் தெழுந்த தானைக்
குலகிட மில்லை யென்றார்.

ஏம்பல் உற்று எழுந்த-மகிழ்ச்சி பொருந்தி எழுந்த, மன்னன்-அரக்கர்கோன், 'எவ்வழி எய்திற்று - வந்த சேனை எவ்விடத்தில் வந்திருந்தது' என்றான் - என்று கேட்டான்; கூம்பல் உற்று உயர்ந்த கையர் - குவிந்துயர்ந்த கரங்களையுடைய தூதுவர், 'ஒரு வழி கூறல் ஆமோ - (அந்தப் பரந்த சேனை இன்ன இடத்தில் உள்ளது) என்று ஒரு இடத்தைச் சுட்டிக் கூறுதல் இயலுமோ? வாம் புனல் பரவை ஏழும் - அலைகள் தாவிச் செல்கின்ற ஏழு கடல்களும், இறுதியின் - யுக முடிவினில், வளர்ந்தது என்ன - பொங்கிப் பரந்தது என்னுமாறு, பொடித்து எழுந்த தானைக்கு, உலகு இடம் இல்லை - பொங்கியெழுந்த படைக்கு இந்தப் புவியில் இடம் பற்றாது', என்றார் - என்று மொழிந்தார். ஓகாரம்: எதிர் மறை. தாம்: அசை.

ஏம்பல்: மகிழ்ச்சி; 'ஏம்பல் வந்தெய்தச் சொல்லித் தேற்றினாயல்லை' (யுத்த. 3277); 'ஏம்பலுற்றிருந்தார் நொய்தின் இருமதி யிறந்ததன்றே' (யுத்த. விடை. 13). எவ்வழி-எவ்விடத்து; 'எவ்வழி யிருந்தான் சொன்ன கவிக்குலத்தரசன்' (கிட்கிந்தா. 63); கூம்பலுற் றுயர்ந்தகையர்' வணங்கற்கடையாளம். 'கூம்பலங் கைத்தலத் தன்பரென் பூடுரு கக்குனிக்கும்' (திருக்கோ. 11); 'குவிகை யேவலர்' (குசேலா. 2 : 78) என்றதும் காண்க. 'அங்கை போல் உள்ளமும் குவிந்த யாக்கையர்.' (ஆரணிய. 562); வாவும் என்பதுவாம் என நின்றது; 'வாம்புனற் பரவை ஞாலத்து' (யுத்த. விடை. 13). இறுதி - உலகம் அழியும் ஊழி முடிவு. தானைக்குக் கடல் பல இடங்களில் உவமை கூறப்படும். 'கடற் பெருந்தானை நோக்கான்' (யுத்த. 1213); 'கடற்றானை முன்னாகக் கண்டான்' (நள. 67). இனித் தானைக்கு இடமில்லை என்ற தொடரில், அரக்கர் பெருஞ் சேனைக்கு இவ்வுலகில் இடமில்லை; அது இறந்துபடும் என்ற தொனிப்பொருளும் காண்க. ஒருவழி கூறலாமோ என்பதற்கு, 'ஒரு திக்கிலே அடங்கினாலல்லவோ, இன்ன திக்கிலே வருகிறார் என்று சொல்வோம் என்றார்' என்பது பழையவுரை.

பி - ம். 1. எழுதும்; எயிற்று; என்னச்.

2. கூம்பலுற்றெழுந்த.

3. வளர்ந்ததென்னத்; வளைந்ததென்ன.

4. இடந்தாமில், தானில்.

## இலங்கையை நோக்கி வந்த சேனைகள்

3183. மண்ணுற நடந்த தானை
வளர்ந்தமாத் தூளி மண்ட
விண்ணுற நடக்கின் றுரு
மிதித்தன ரேக மேன்மேற்
கண்ணுற லருமை காணக்
கற்பத்தின் முடிவிற் கார்போல்
எண்ணுற லரிய சேனை
யெய்திய திலங்கை நோக்கி.

மண் உற - தரையிற் பொருந்துமாறு, நடந்த தானை - நடந்த படையினாலே, வளர்ந்த - பெருகிய, மா தூளி மண்ட - பெருந்துகள் மிக்கு எழுந்தமையின், விண் உற நடக்கின்றுரும் - ஆகாயத்தில் பொருந்தி நடக்கும் அமரர்களும், மிதித்தனர் - காலையூன்றியவர் களாய், ஏக - சென்று கொண்டிருக்க, கற்பத்தின் முடிவில் கார் போல் - யுக முடிவில் எழும் ஏழு மேகம் போன்று, எண்ணுறல் அரிய - கணக்கிட முடியாத, சேனை - அந்த அரக்கர் படை, (தூளிப் பரப்பினுல்), கண் உறல் அருமை காணு - பார்த்தற்கு அருமையாகக் காணப்பட்டு, இலங்கை நோக்கி - இலங்காபுரியை நோக்கி, மேல் மேல் எய்தியது - மேலும் மேலும் சென்றடைந்தது.

தூளி மண்ட விண்ணுற நடக்கின்றுரும்; (ஒப்பு) கதிகொண்ட சேனை நடவவெழுதுகள் ககனம் சுலாவி யனிலகதியுற, முதிர்சண்ட சூர கிரண மிருளெழுமுகில் பஞ்ச பூதவடிவு பெறவிய, னதிவண்ட லாக வமரருறைதருநகரம் பொன் வீதிபுழுதியெழ' (வில்லி. பா. 16, 73); கற்பம் - ஊழி; வானத்தெழுந்த துகளின் மிகுதியால் பூமியிற் கால் பாவாத தேவரும், தரையில் நடப்பது போன்று காணப் பட்டனர் என்பது கருத்து. மற்றும் எழுந்த தூளியானது அப் பெரும் படைச் செலவைப் பிறர் காணமுடியாமற் செய்தது என்பது 'கண்ணுறலருமை' என்பதன் கருத்து.

பி - ம். 1. வளர்த்த.

2. மண்மேல்! நடிக்கின்றுரும்; ஏகி.

3. கண்ணுறவு; காணக்; இறுதிக்; போய்,

4. எண்ணுறவு; அரியதானை.

3

## சேனைகளின் வருணனை

3184. வாட்டனின் வயங்க மின்னு
மழையதி னிருள மாட்டா
ஈட்டிய முரசி னார்ப்பை
யிடிப்பெதிர் முழங்க மாட்டா
மீட்டினி யுவமை யில்லை
வேலைமீச் சென்ற வென்னில்
தீட்டிய படையு மாவு
மியானையுந் தேருஞ் செல்ல

வாள் தனின் - வாள்கள் (ஒளிர்வது) போல, வயங்க - விளங்க, மழை மின்னு - மேகங்கள மின்னலைப் பெற்றிரா; ஈட்டிய-நெருங்கிய, முரசின் ஆர்ப்பை - முரசினுடைய பேரொலிக்கு மாறுக, இடிப்பு எதிர் முழங்க மாட்டா - (அவ் வானத்தின்) இடிகள் முழக்கம் செய்ய மாட்டா; (அல்லாமலும்) அதின் - அவ்வரக்கர் சேனை போல, மழை - மேகம், இருள மாட்டா - இருண்டிருக்க மாட்டா; (ஆதலின், அச் சேனைக்கு மேகங்கள் உவமையாக மாட்டா); தீட்டிய - (போர்க் கருவிகள்) தீட்டப் பெற்றுள்ள, படையும் - காலாட் படையும், மாவும் - குதிரைகளும், யானையும் - யானைகளும், தேரும் - தேரும், செல்ல - முழுதும், வேலை மீ சென்ற என்னில் - கடல்மீது நடந்து சென்றன எனின், (அச் சேனையால் மிதிக்கப்பட்ட கடல் அப்படைக்கு உவமையாகுமோ?) இனி மீட்டு உவமை இல்லை - இனி மீட்டும் (அந்தச் சேனைக்கு (உவமை கூறுமாறு) பிறிதொரு பொருள் இல்லை.

அரக்கர் சேனையாதலின், கடலின்மீது நடக்கும் ஆற்றல் பெற்றன என்க. மற்றும் பூமியில் இடம் போதாமையால், கடல் மீதும் அச் சேனை சென்றன எனினுமாம். சேனைகளின் காலால் மிதிக்கப்பட்ட கடல் ஆகலின், அக் கடலை இச் சேனைக்கு உவமை கூறற்கில்லை. ஈட்டிய - ஈண்டிய என்பதன் வலித்தல், வாட்களுக்கு மின்னும் உடற் கறுப்புக்கு மேகமும் முரசுக்கு இடியும் ஒவ்வா என்க.

பி-ம். 1. வாட்டணே; வயங்கா, வயங்கு; மின்னே; மாட்டார்.

2. இடிப்பொடு, இடியொடு; முழக்க முழக்கம் விட்டா, மாட்டா, முழக்கவொட்டா, இடிபடும்.

3. மேல் சென்றதென்ன; செல்வதென்ன, என்னின், சென்னி,

4. நீட்டிய; தேரும் படையும்; கரிகளுந் தேருந்துன்னி, தேரும் சென்ற, செல்ல. 4

## சேனையின் மிகுதி

3185. உலகினுக் குலகு போய்ப்போ
யொன்றினென் றொதுங்க லுற்ற
தொலேவருந் தானே மேன்மே
லெழுந்தது தொடர்ந்து சுற்ற
நிலவினுக் கிறையு மீனு
நீங்கின நிமிர்ந்து நின்றான்
அலரியு முந்து செல்லு
மாறுநீத் தஞ்சி யப்பால்.

தொலேவு அரு தானே - எண்ணத் தொலேயாத சேனே, மேல் மேல் எழுந்தது தொடர்ந்து சுற்ற - மென்மேலும் கிளர்ந்து தொடர்ந்து சூழ, (அச் சேனேத் தொகுதியைக் கண்ணுற்ற அச்சத்தால்), உலகினுக்கு உலகுபோய் போய் - உலகின் மேல் உலகாயுள்ள இடங்கள் சென்று சென்று, ஒன்றின் ஒன்று ஒதுங்கல் உற்ற - ஒன்றிலொன்று ஒதுங்கத் தொடங்கின; நிலவினுக்கு இறையும் - நிலவுக்குரிய தலேவனுகிய சந்திரனும், மீனும் - நட்சத்திரங்களும், நிமிர்ந்து நீங்கின - (தாம் இருந்த இடத்தினின்றும்) உயர்ந்து அகன்றன; அலரியும் - சூரியனும், அஞ்சி - பயந்து, முந்து செல்லும் ஆறு நீத்து அப்பால் நின்றான் - முன்னர்ச் சல்லும் வழி விலகி அப்பால் நின்றான்.

சேனே மிகுதியைக் குறிக்கின்றார். தொடர்புயர்வு நவிற்சியணி. படை மிகுதியால் உலகுகள் முதலாயின இடம் போதாமையின் அச் சேனேகள் தம்மேல் வந்தால், தரிக்க முடியாது, என்று அஞ்சித் தம்மிடம் விட்டு அகன்றன. தனித்தனியாக இருந்த நிலே நீங்கி உலகங்கள் ஒன்றின் ஒன்று உராய்ந்து கொண்டு அளவில் குறுகின என்பான். 'ஒன்றி னென்றொதுங்கல் உற்ற'

எனப்பட்டது. அலரி - சூரியன் ; 'அலரி கிட்டிசைப், பொன் றிணி நெடுவரை பொலிவுருத முன்' (கிட்கிந்தா. 688) ; 'அமுத வெண் மதியின் மரபை யுன்னியுனி, யலரி யண்ணன் முழு வெப்பத்து மூழ்கவும்' (மீனுட்சி. பிள்ளைத். 13).

பி - ம். 1. போம் போயொன்றி ; ஒதுங்கா.

2. நுலைவரும் ; தானையின், தானைதன் ; சுற்றி.

3. நிக்கிட ; நிமிர்ந்து சென்ருர், நிமிர நின்ருர், நிமிர நின்ருன், நிமிர்ந்து நின்ருர்.

## அச் சேனைகள் இலங்கைக்கு வந்த வருணனை

3186. மேற்பட விசும்பை முட்டி
மேருவின் விளங்கி விண்ட
நாற்பெரு வாயி லூடு
மிலங்கையூர் நடக்குந் தானை
கார்க்கருங் கடலை மற்ருேர்
கடத்திடைக் காலன் ருனே
சோர்ப்பது போன்றதி யாண்டுஞ்
சுமைபொரு துலக மென்ன.

மேல்பட - மேலிடம் பொருந்த, விசும்பை முட்டி - ஆகாயத்தை முட்டி, மேருவின் விளங்கி - மேருவைப் போல் ஒளிர்ந்து, விண்ட - திறந்த, நால் பெரு வாயில் ஊடும் - நான்கு பெரிய வாயில் வழியாக வும், இலங்கை ஊர் - இலங்கா புரியை நோக்கி, நடக்கும் தானை - நடக் கின்ற அந்தச் சேனையானது, காலன் தானே - யமனே, கார் கரு கடலை - கரிய நிறம் வாய்ந்த பெரிய கடலை, உலகம் யாண்டும் சுமை பொருது - உலகம் எவ்விடத்தும் சுமை தாங்காது, என்ன - என்ற காரணத்தால், மற்ருேர் கடத்திடை சோர்ப்பது போன்றது - பிறி தோர் சட்டியில் கொண்டு சேர்ப்பதை நிகர்த்திருந்தது.

புறத்திருந்து இலங்கா நகரில் புகும் அரக்கர் சேனை விரைவில் காலன் வாய்ப்படுவதாகி (அழிவதாகிக்) கடல் போல் பரவி நின்றது எனக. தற்குறிப்பேற்றம். விசும்பு - ஆகாயம். 'விசும்பை யும் கடந்தது விரிந்த தூளியே' (யுத்த. 1749) ; 'விசும்பின் மீதா

வேகுமேல்' (யுந்த. 2116); 'விழித்திமையாத முன்னம் வில்லொடும் விசும்பிற் சென்றான்' (யுந்த. 2118); மேற்படு விசும்பை யொட்டி; 'வன்கொண்டல் விட்டு மதி முட்டு வனமாடம்' சுந்தர. 96); 'இந் நெடுங் கோபுரத் துயர்ச்சி கண்டுணர்ந்தால், மேரு வெங்ஙனம் விளர்க்குமோ முழு முற்றும் வெள்கி' (சுந்தர. 115); மேருவின் விளங்கி விண்ட, நாற்பெரு வாயில்; 'மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல்' (சுந்தர. 161); 'கடவுள் மால்வரை கண் விடுத் தன்ன' என்பது (சிறுபாண். 205, 206). இலங்கையூர் - 'இலங்கையூ ரிவனுக் கீந்து' (யுந்த. 1617); உலகம் படையின் சுமையைத் தாங் காது என்று, அதன் சுமையை நீக்கும் பொருட்டு யமன் அவ் வரக்கரைக் கொல்வித்துத் தன் உலகில் சேர்ப்பது போன்ற தெனப்பட்டது. கார்க்கரும் - என்ற இரு சொற்களும் கருமை குறித்து நின்ற ஆகலின், கருமை - பெருமை எனப் பொருள் செய்யப்பட்டது. யாண்டும் - எவ்விடத்தும்; 'யாண்டுங் காணேன் மாண்டக்கோனை' (குறுந். 31); 'கைதவ மியற்றி யாண்டும்' (கிட்கிந்தா. 362).

பி - ம். 1. மூடி; விளங்கி நின்ற.

2. நடந்ததானை; நடக்கும் தானை.

3. காற்றடங், கார்ப்பெருங்; இடைக்கிடை, இடத்திடை; கான வாங்கி.

4. சேர்ப்பது; பெருது; பெரு மன்னே, என்று. 6

3187. நெருக்குடை வாயி லூடு
புகுமெனி னெடிது காலம்
இருக்குமித் தன்மை யென்னு
மதிலினுக் கும்ப ரெய்தி
அரக்கன திலங்கை யுற்ற
வண்டங்க ளனைத்தி னுள்ள
கருக்குல மேக மெல்லா
மொருவழிக் கலந்த தென்ன.

'நெருக்கு உடை - நெருக்கத்தையுடைய, வாயில் ஊடு - வாயி வின் வழியாக, புகும் எனில் - உள்ளே நுழைவோம் என்றால், (நுழைகின்ற), இ தன்மை - இத் தன்மையானது, நெடிது காலம் இருக்கும் - நீண்ட காலம் நீட்டிக்கும்', என்னு - என்று கருதி,

(வாயிலின் வழியாக உட்புகாமல்), அண்டங்கள் அனைத்தின் உள்ள - அண்டங்கள் எல்லாவற்றிலும் உள்ள, கருமேகம் குலம் எல்லாம் - சூற்கொண்ட மேகத்திரள் எல்லாம், ஒரு வழி கலந்தது என்ன - ஒரு படித்தாகக் கூடிக் கலந்தாற் போல, மதிலினுக்கு உம்பர் எய்தி - மதிலின் மேற்புறத்தை அடைந்து, அரக்கனது இலங்கை உற்ற - இராவணனுடைய இலங்கை நகரை அடைந்தன.

குலம் - தொகுதி. புகும் - புகுதும் என்பதன் விகாரம்.

பி - ம். 2. இருக்குமத்தனையே, இருக்குமத்துணையே, இருக்க வத்தன்மை ; மதிலுக்கும்,
3. அரக்கரது, அரைக்கணத்து ; கண்டங்கள்.
4. கருக்கிளர் ; ஒருங்குடன். 7

## இராவணன் அச்சேனை முழுவதையும் நோக்க தூதுவர் அணிவகுப்பைக் கூறுதல்

3188. அதுபொழு தரக்கர் கோனு
மணிகொள்கோ புரத்தி னெய்திப்
பொதுவுற நோக்க லுற்று
னொருநெறி போகப் போக
விதிமுறை காண்பெ னென்னும்
வேட்கையான் வேலை யேழுங்
கதுமென வொருங்கு நோக்கும்
பேதையிற் காதல் கொண்டான்.

அது பொழுது - அக் காலையில், அரக்கர் கோனும் - அரக்கர் தலைவனான இராவணனும், அணிகொள் - அழகமைந்த, கோபுரத்தின் எய்தி - கோபுரத்தின் உச்சியினை அடைந்து, வேலை ஏழும் - ஏழு கடல்களையும், ஒருங்கு கதுமென நோக்கும் - ஒருசேர விரைந்து காண்டல் வேண்டும் என்று விரும்பும், பேதையின் - அறிவிலி போன்று, காதல் கொண்டான் - ஆசையுற்றவனாய், பொது உற நோக்கல் உற்றான் - பொதுவாகக் கண்ணுறத் தொடங்கிப் (பார்வை), ஒரு நெறி போக போக - ஒரு வழிப் போய்க் கொண்டிருக்க, விதிமுறை - முறைப்படியே, காண்பென் என்னும்

வேட்கையான் - காண்பேன் என்னும் விருப்பத்தை யுடையவன் ஆனுன்.

ஒரே பார்வையாகச் சேனை முழுதும் கண்ணுற முடியாத நிலை யில் பிரித்து நோக்க வேண்டியதாயிற்று என்பது. படையைக் காணக் கோபுரத்தின் எய்தி; முன்னர் 'அரிக்குலப் பெருமை காண்பான், சென்னிவான் தடவும் செம்பொற் கோபுரத் தும்பர்ச் சேர்ந்தான்' (யுத்த. 798) என்றது காண்க. பெருங் காட்சிகளை நல்ல முறையில் காணவேண்டும் எனில் ஓர் உயரமான இடத்தி னின்று காண்பதே வழக்கம். ஒன்றும் விடாமல் அணியணியாகக் காண்டல் பற்றி 'விதிமுறை காண்பென்' எனப்பட்டது. 'பொதுவுற நோக்கல்' 'பொலங்குழையவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்' (சுந்தர. 1279); கதுமென - விரைவுக் குறிப்பு; 'வாரிற் பெய்கழல் மாருதி கதுமென வந்தான்' (யுத்த. 1171); வேட்கை - காதல்; 'வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல்' ஏழுவேலை; உவர் நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றுலாய கடல்கள்; கிட்கிந்தா. 174 காண்க.

பி - ம். 1. ஆசனத்திருக்கை புக்கான், மாசிலத்தாணி புக்கான்.

2. நோக்கினல்லால்; ஒரு வழி.

3. வேட்கையால் வேத நான்கும். 8

3189. மாதிர மொன்றி னின்று
மாறொரு திசைமேன் மண்டி
ஓதநீர் செல்வ தன்ன
தானையை யுணர்வு கூட
வேதவே தாந்தங் கூறும்
பொருளினை விரிக்கின் றூர்போல்
தூதுவ ரணிக டோறும்
வரன்முறை காட்டிச் சொன்னுர்.

மாதிரம் ஒன்றில் நின்று - ஒரு திசையிலிருந்து, மாறு ஒரு திசைமேல் - பிறிதொரு திசையின்மீது, மண்டி - மிக்குச் சென்று, ஓதம் நீர் செல்வது அன்ன - கடல்நீர் செல்வதுபோன்ற,

தானையை - படையை, தூதுவர் - தூதுவர்கள், அணிகள் தோறும் - அணிவகுப்புத்தோறும், உணர்வுகூட -(இராவணனுடைய) அறிவு கூடும்படி, காட்டி - சுட்டிக் காண்பித்து, வேதம் வேதாந்தம் கூறும் பொருளினை விரிக்கின்றார் போல் - வேத வேதாந்தங்கள் கூறும் பொருளை, விரிப்பவர் போல, வரன்முறை சொன்னார் - முறையாகச் சொன்னார்கள்.

மாதிரம் - திக்கு; 'மாதிரம் வளர்ந்தன வயிரத் தோள்களே' (யுத்த. மீட்சி. 249); 'மாதிர மெவையும் நோக்கான்' (யுத்த. 1213); வேத வேதாந்தங்களில் விரித்துக் கூறும், அதி நுட்பமான இறைவன் சொரூபத்தை, ஓர் சிறந்த ஆசிரியன் சீடனுக்கு மனதில் பதியுமாறு விளக்கிக் கூறுவதுபோன்று, பரந்த அச்சேனையை அணியணியாகப் பிரித்து இராவணனுக்கு உணரக் கூறினர் தூதுவர் என்க. ஓதநீர் - கடல்; 'ஓதநீர் கடந்து பகை கடிந்து' (யுத்த. 408), இச் செய்யுளில் கண்ட உவமை மிகவும் சிறந்த தொன்று.

பி - ப். 1. மற்றெரு.

2. செல்வதென்னத்; ஒருங்கு கூடி, ஒழுங்குகூட. உணர்வு கூட்டி.

4. பன்முறை காட்டிச் சொல்வார், நோக்கிச் சொல்வார். 9

## வேறு

3190. சாகத் தீவினி னுறைபவர் தானவர் சமைத்த
யாகத் திற்பிறந் தியைந்தவர் தேவரை யெல்லாம்
மோகத் திற்பட முடித்தவர் மாயையின் முதல்வர்
மேகத் தைத்தொடு மெய்யின ரிவரென விரித்தார்.

'இவர் - இவர்கள், சாகம் தீவினில் உறைபவர் - சாகத் தீவினில் உறைபவர்கள்; தானவர் சமைத்த - அரக்கர்கள் முயற்சியுடன் செய்த, யாகத்தில் பிறந்து இயைந்தவர் - வேள்வியிற் றோன்றி யமைந்தவர்; தேவரை எல்லாம் மோகத்தில் பட முடித்தவர் - வானோர்கள் அனைவரையும் மோகத்திற் சிக்குமாறு செய்து தீர்த்தவர்; மாயையின் முதல்வர் - மாயைகள் புரிவதில் தலை சிறந்தவர்; மேகத்தை தொடும் மெய்யினர் - மேகத்தைத் தீண்டுகின்ற

உடலை யுடையவர், என - என்று (ஓரணி வகுப்பிணைச் சுட்டி), விரித்தார் - விரிவாகக் கூறினர்.

சாகம் - தேக்கு; தேக்கு மரம் மிக்கிருந்ததால் இப் பெயர் பெற்றதென்பர். இதனைத் தேக்கந் தீவென்றும் பகர்வர்; இது ஏழு தீவுகளில் ஒன்று; பிற தீவுகள்: நாவலந் தீவு, இறலித் தீவு, இலவந் தீவு, கிரவுஞ்சத் தீவு, குசைத் தீவு, புட்கரத் தீவு. (பிங்.); மோகம் - அறியாமை; மயக்கம், மாயை; 'அதனை இன்ன தென்றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாகும், இது தனக் குள துடலியானுலகு மெய்யெனு மவருடையோர்கள், கதையிலாத பொய் வந்ததிப்படியென்று கண்ட பேரில்லை மைந்தா, விதன மாயையேன் வந்த தென்றுற் புத்தி விசாரமற்றதனாலே' (கைவல்யம். 2, 95) முதலாக உள்ள செய்யுட்கள் கொண்டு மாயை யின் தன்மையை அறிக. மற்றும் 'இந்த மாயையினால் சீவர்க் கேழவத்தைகளுண்டாகும்' (கைவல்ய 1, 59) முதலாகவுள்ள செய் யுட்களும் காணத்தகும்.

பி - ம். 1. தாபதர்.
2. தேவரை மேனுள்.
3. மோகத்திற் புக; முடிந்தவர்.
4. விதித்தார், விசைத்தார், விசித்தார். 10

3191. குசையின் றீவினி னுறைபவர் கூற்றுக்கும் விதிக்கும்
வசையும் வன்மையும் வளர்ப்பவர் வானநாட் டுறைவார்
இசையுஞ் செல்வமு மிருக்கையு மிழந்ததிங் கிவரால்
விசையந் தாமென நிற்பவ ரிவர்நெடு விறலோய்.

'நெடு விறலோய் - மிக்க ஆற்றல் சான்றவனே! இவர் - இவர் கள், குசையின் தீவினின் உறைபவர் - குசைத் தீவில் வசிப்பவர்; கூற்றுக்கும் விதிக்கும் வசையும் வன்மையும் வளர்ப்பவர் - யமனுக் கும் பிரமனுக்கும் முறையே பழியையும் வல்லமையையும் பெருக்கு பவர்; விசயம் தாம் என நிற்பவர் - வெற்றியே உருக் கொண்டாற் போன்று நிற்பவர்; இவரால் - இவர்களாலேதான், வானம் நாடு உறைவார் - விண்ணுலகத்து வதிகின்ற தேவர்கள்; இசையும்

செல்வமும் இருக்கையும் இங்கு இழந்தது - புகழினையும் செல்வத்தையும் இருக்கும் இடத்தையும் இப்போது இழந்தது.

குசையின் தீவு; யுத்த. 3190 ஆவது செய்யுள் குறிப்புக் காண்க. குசை - தருப்பைப் புல். அது நிறைந்திருந்தமை பற்றி எழுந்த பெயர். கூற்று - யமன்; 'கூற்றுடன்று மேல்வரினும்' (குறள். 765); 'கொம்பிற்கு மாயிற்றே கூற்று' (பு. வெ: மா: 4; 23); கூற்றுக்கும் விதிக்கும் வசையும் வன்மையும் என்பதில் நிரனிரையாகப் பொருள் கொள்க. கூற்றுக்கு வசை; இப்பெருந் தொகுதியைக் கொன்று குவித்துத் தன் சங்காரத் தொழிலைச் செய்ய முடியாமை; பிரமனுக்கு வன்மை அவனால் படைக்கப்பட்ட வுயிர் இறவாது நிற்றல். தேவர்கள் எல்லாம் பலவகைப் பரிபவம் உற்றது இக் கொடியோரால் என்பது கருத்து. வெற்றி வேறு தாம் வேறு என்பதின்றி வெற்றியே உருவாக உள்ளவர் என்க. (ஒப்பு): 'பிரிவெனுந்துய ருருவுகொண் டாலன்ன பிணியாள்' (சுந்தர. 336); 'மறையனைத்து மொருவடிவாமென' (பெரியபு. திருஞான. 188). விசயம் வடமொழி - எதுகை நோக்கி விசையம் என நின்றது.

பி - ம். 1. இவர் கொடுங் கூற்றின்.
2. மேன்மையும்; வளர்த்தவர்; உறைவோர்.
4. விசயந் தோளென, நானெனன, தானெனன; நின்றவரிவர் நெடு, உவகை மிக்கெழுந்தனர். 11

3192. இலவத் தீவினி னுறைபவ
ரிவர்கள் பண்டிமையாப்
புலவர்க் கிந்திரன் பொன்னக
ரழிதரப் பொருதார்
நிலவைச் செஞ்சடை வைத்தவன்
வரந்தர நிமிர்ந்தார்
உலவைக் காடுறு தீயென
வெகுளிபெற் றுடையார்.

'இவர்கள் - இவர்கள், இலவம் தீவினில் உறைபவர் - சான்மலித் தீவகத்தில் வதிபவர்; இமையா புலவர்க்கு இந்திரன் - இமையாத கண்ணைப் பெற்ற தேவர்கட்கு இறைவனான தேவேந்

திரனுடைய, பொன் நகர் அழிதர - பொன் மயமான அமராவதி நகரம், அழிவெய்துமாறு, பண்டு - முன்பு, பொருதார் - போர் புரிந்தவர்; நிலவை - பிறை மதியை, செம் சடை வைத்தவன் வரம் தர நிமிர்ந்தார் - செஞ்சடையில் வைத்தவனான சிவபெருமான் வரம் உதவத் தலை நிமிர்ந்தவர்; உலவை காடு உறு தீ என - காய்ந்த மரங்கள் செறிந்த காட்டில் எழுந்த தீப்போன்று, வெகுளி பெற்று உடையார் - சினம் மிகப் பெற்றவர்.

இலவந் தீவு - எழு தீவுகளில் ஒன்று. இந்திரன் என்ற பதத்திற்கே தலைவன் என்ற பொருள் உண்டு. 'இந்திரராகிப் பார்மேல்' (கந்தபு. நூற்பயன்). பொன்னகர்; 'பொன்னக ரியல்பெனப் பொலியு மேல்வையில்' (அயோத்தி. மந்தரை. 39). அழிதர - தர துணைவினை. நிலவு - பிறைமதி; 'தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடி' (தேவா. 61, 1); உலவைக் காடுறு தீ - வேகமும் கடுமையும் அழிக்கும் திறலும் பற்றி வெகுளிக்குவமை. 'புலவர்க்கு இந்திரன் - தேவர்கட்குத் தலைவன்' என்க.

பி - ம். 1. இவரிடமிமையாப்.
3. நிமிர்வார்; வரங்கொண்டு நிமிர்ந்தார்.
4. காட்டுறு; காடுறை. 12

3193. அன்றிற் றீவினி னுறைபவ
 ரிவர்பண்டை யமரர்க்
கென்றைக் கும்மிருந்
 துறைவிட மாம்வட மேருக்
குன்றைக் கொண்டு போய்க்
 குரைகட லிடவறக் குலைந்தோர்
சென்றித் தன்மையைத் தவிரு
 மென் றிரந்திடத் தீர்ந்தோர்.

'இவர் - இவர்கள், அன்றில் தீவினின் உறைபவர் - கிரௌஞ்சத் தீவில் வசிப்பவர்; பண்டை அமரர்க்கு - பழமையோரான தேவர்க்கு, என்றைக்கும் இருந்து உறைவிடம் ஆம் - எந்நாளும் இருந்து வதிகின்ற இடமாகிய, வடமேரு குன்றை - வடமேரு மலையை,

கொண்டுபோய் - எடுத்துச் சென்று, குரை கடல் - ஒலிக்கின்ற கடலிலே, இட - போகடத் தொடங்க, (அந்த அமரர்கள்), அற குலைந்தோர் - மிகவும் நிலை குலைந்தவராய். சென்று - போய், 'இ தன்மையை தவிரும் - இத் தன்மையைக் கை விடுங்கள்' என்று இரந்திட - என்று வேண்ட, தீர்ந்தோர் - அச் செயலைத் தவிர்ந்தவர்.

அன்றில் - கிரௌஞ்சப் பறவை; 'ஒன்றில் காலை யன்றில் போல' (நற். 124); வடமேரு; 'விசையாலனுங்க வடமேரு' (யுத்த. 2180); 'தள்ளாடிய வடமேருவிற் சலித்தான்' (யுத்த. 2993); 'வடமேருவுஞ் சோணை மழை மேகமும் போல வருமாலலங் காரர் பதிகேளிர்; திடராக மஞ்சீர நதியோலி டுந்தூய திருமா லிருஞ் சோலைமலை தானே' (அழகர் கலம். 19); குரை கடல்; 'கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர்' (தனிப்பா.)

பி - ம். 1. பண்டவ்வமரர்க்கு, யிவர்கள் பண்டமரர்.

2. உறைவிடமென்ற பொன்மேரு, ஆமென்னும், என வடமேரு.

3. இடலுற்ற, இடையுற; குலைத்தோர்.

4. நீருமென்றிரந்திட; நீர்ந்தார், தவிர்ந்தார். 13

3194. பவளத் தீவினி னுறைபவர் வெள்ளிபண் பழிந்தோர்
குவளைக் கண்ணியங் கிராக்கதக் கன்னியைக் கூட
அவளிற் றோன்றின ரையிரு கோடியர் நொய்தின்
திவளப் பாற்கடல் வறள்படத் தேக்கினர் சிலநாள்.

'(இவர்கள்) பவளக் குன்றினில் உறைபவர் - பவளமலையில் வசிப்பவர்கள்; வெள்ளி பண்பு அழிந்து - சுக்கிரபகவான் குணம் கெட்டு, (காமுகனாகி), ஓர் - ஒரு; குவளை கண்ணி - நீல மலர்போன்ற விழிகளை யுடையவளான, இராக்கதர் கன்னியை - அரக்கர் மகளை, அங்கு கூட - அவ்விடத்துப் புணர, அவளில் தோன்றினர் - அவளிடத்திலிருந்து உதித்தவர்; ஐயிரு கோடியர் - பத்துக்கோடி எண்ணினர்; திவள் - (வெண்ணிறத்துடன்) அசைந்தொளிர் கின்ற, அ பால் கடல் - அந்தப் பாற்கடல், வறள்பட - வற்றுமாறு, நொய்தின் - எளிதாக, சில நாள் தேக்கினர் - சில நாட்களில் நிரம்பப் பருகினவர்.

பவளத்தீவு: ஏழு தீவுகளுள் ஒன்று. வெள்ளி: சுக்கிராசாரியன். இவனை அசுரகுரு என்பர். 'வெள்ளியையாதல் விளம்பினை' (பால. வேள்வி. 29). சுக்கிர நீதி என்ற நூலின் ஆசிரியர்: இவன் பண்பழிந்தது. தேவரில் ஒருவனுயிருந்தும் ஓர் அரச்கியைப் புணர்ந்ததால் என்ப. அரக்கிக்கும் சுக்கிரனுக்கும் பிறந்தவர் ஐயிரு கோடியர் என்று குறிக்கப்பெற்றது. திவளுதல்-அசைதல். வறள்படுதல்: சுவறுதல் அல்லது வற்றுதல். தேக்குதல்-நிரம்பப் பருகுதல்; 'தேக்கியசெங் கனியிதழாரமுதுண்டுண்டு' (வில்லி பா. அருச். தீர்த்த. 42).

பி-ம். 1. பவளக் குன்றினில், குன்றிடை; பண்பழிந்தே, பண்பழித்தே, பண்பழிந்தோர், பண்டளித்தோர்.

2. கண்ணியோர்.

3. ஆயிரு கோடியர், அளப்பில் கோடியர், ஐயையிரு கோடி.

4. துவள; பாழ்படத்; வறளதாத்; சின்னுள்; தேக்கிய திறந்தோர்.

3195. கந்த மாதன மென்பதிக் கருங்கடற் கப்பான்
மந்த மாருத மூர்வதோர் கிரியதில் வாழ்வோர்
அந்தகா ரத்தொடும் ஆலகா லத்தொடும் பிறந்தோர்
இந்த வாளெயிற் றரக்கரெண் ணறிந்தில மிறைவ.

'இறைவ-அரசே! இந்த வாள் எயிறு அரக்கர்-இந்த வாள் போன்ற கோரப் பற்களையுடைய இராக்கதர், இ கரு கடற்கு அப்பால்-இந்தக் கரிய கடலுக்கு அப்பாலுள்ள, கந்தமாதனம் என்பது-கந்தமாதனம் என்பதாகிய, மந்த மாருதம்-இளந் தென்றற்காற்று, ஊர்வது ஓர் கிரியதில் வாழ்வார்-உலாவுவதான ஒப்பற்ற மலைக்கண் வதிபவர்; (நிறத்தால்) அந்தகாரத்தொடும்-இருட்டோடும், ஆலகாலத்தொடும் பிறந்தோர்-ஆலகால விஷத்தையும் ஒத்துத் தோன்றியவர்; எண் அறிந்திலம்-(இவர்கள்) எத்துணையர் என்று அறிந்தோம் இல்லை.

கந்தமாதனம்: எட்டுக் குல மலைகளில் ஒன்று: முனிவரிருப்பிடம். வீரவாகுதேவர் வீரமகேந்திரபுரியைத் தாவி நின்ற மலை; (அபி. சிந்.); இதனை ருத்ர இமாலயத்தின் ஒரு பகுதி என்றும் இது பதரிகாச்ரமத்தின் வடகிழக்கினின்று தொடங்கி நிற்கும் ஒரு பருவதம் என்றும் கூறுவர். 'இந்திரற் கஞ்சி மேனு

ளிருங்கடல் புக்கு நீங்காக், கக்தர சயிலந் தன்னைக் கண்டவர் வினைக டீர்க்கும், கந்தமா தனமென் றோதும் கிரியிவண் கிடப்ப கண்டாய், பைந்தொடி யடைந்த சேது பாவன மாய தென்றான்' (யுத்த.மீட்சி: 168); உயர்ந்த கந்தமாதன வெற்பு: (முத்துக். பிள்ளைத். செங்கீரை: 4); இது கைலையைச் சார்ந்துள்ளதும் முருகக்கடவுளுக் குரியதுமான ஓர் மலை. (கந்தமாதனம்; கயிலை மலை தேவாரம்' காண்க. ஏனைய கடல்கள் ஆறு உண்டாகலின் 'கருங்கடல்' என விதந்து கூறப்பட்டது. மந்தமாருதம் - இளந் தென்றல். கந்த மாமலர் காடு கடாவிய, மந்த மாருதம் வந்துற வைகுவான்' (கிட்கிந்தா. 572); அந்தகாரம்: இருள் எனப் பொருள்படும் வடசொல்; (பிங்.); 'அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போ லென்றிவைச் சுருக்கினவரார்' (தாயு. பரிபூரண. 10). ஆலகாலம்: இது ஆலாலம் எனவும் வழங்கும்; 'அங்கார தாரை பிறிதாலால மன்னாள்' (சுந்தர. 76); 'ஆல காலமு மஞ்சனக் குன்றமும்' (இரகு. இலவண. 6).

பி-ம். 1. கந்தமாருத மென்பர்.
2. முரல்வதோர், உறுவதோர்; கிரியினில்.
3. அந்த காலத்தில், அந்த காலந்தொடும்; ஆலகாலத்துடன்.
4. எண்ணிற்றந்தவர், எண்ணிறந்தனர், எண்ணிறந்தவர். 15

3196. மலய மென்பது பொதியமா மலையதின் மறவோர்
நிலய மன்னது சாகரத் தீவிடை நிற்குங்
குலையு மிவ்வுல கெனக்கொண்டு நான்முகன் கூறி
உலைவி லீரிதி லுறையுமென் றிரந்திட வுறைந்தார்.

'மலையம் என்பது பொதிய மா மலை - மலையம் என்பது பொதிய மாமலை யாகும்; அதில் - அதில் தோன்றிய, மறவோர் - வீர ராகிய, நிலயம் அன்னது - இவருடைய இருப்பிடம் என்கின்ற அது, சாகரம் தீவு இடை நிற்கும் - கடலிடையே உள்ள தீவினில் இருக்கும்; (இவர்கள் இவ்வுலகில் இருப்பார்களானால்) இவ் உலகு குலையும் என கொண்டு - இந்த உலகமும் அழிந்துபடும், என்று மனத்துட்கொண்டு, நான்முகன் - பிரமன், (அவர்களைப் பார்த்து) உலைவு இலீர் - அழிவில்லாதவர்களே! இதில் உறையும் - இங்கு வசியுங்கள்', என்று கூறி இரந்திட - என்று கெஞ்சிக் கேட்க, உறைந்தார் - (இவர்கள்) அங்கு வசிப்பதானார்.

பொதியம்: பாண்டி நாட்டில் உள்ள மலை. அகத்தியர் இருக்கை. இது பொதியில் எனவும் வழங்கும். பொது + இல்: பொதியில் என வந்தது என்பர். தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர்; 'தென்வரைப் பொதியிலாரம்' (சீவக. 2187); சாகரத் தீவு: எழுதீவுகளில் ஒன்று. பொதியில்: அம்பலம்.

பி - ம். 1. பொதியினல்லாதினி, பொதியமாத்தீவினில், பொதியிலா தீவிடை.

2. சாகரத்தீவிடை; நிற்கில், சாகரத்திடையிடை நிற்கும்.

3. குலையுமெவ்; கூறும், கூற.

4. உலைவிலர்; உறைந்திரும் என்றிட, உறைந்தார். 16

3197. முற்க ரக்கையர் மூவிலை வேலினர் முசுண்டி
சக்க ரத்தினர் சாபத்த ரெனநின்ற தலைவர்
நக்க ரக்கட லொரு மூன்றுக்கு நாதர்
புக்க ரப்பெருந் தீவிடை யுறைபவர் புகழோய்.

'புகழோய் - கீர்த்தி வாய்ந்தவனே! (இவர்கள்), முற்கரம் கையர் - முற்கரம் என்ற ஆயுதத்தைக் கைக்கொண்டவர்; மூ இலை வேலினர் - மூன்று இலை வடிவான வேலினை யேந்தியவர்; முசுண்டி சக்கரத்தினர் - முசுண்டியையும் ஆழிப் படையையும் தரித்தவர்; சாபத்தர் - வில்லைக் கொண்டவர்; என நின்ற - என்று கூறப்படுகின்ற, தலைவர் - தலைவர்கள்; நக்கரம் கடல் நால் ஒரு மூன்றுக்கு நாதர் - முதலைகள் வாழ்கின்ற ஏழு கடல்களுக்கும் இறைமை பூண்டவர்; புக்கரம் பெருந் தீவு இடை உறைபவர் - புட்கரம் என்னும் பெரிய தீவகத்து வதிபவர்.

சாபம்: சாபமே சபித்தல் வில்லாம் (நிகண்டு). சாபம்: கையாலும் ஓர் சாபம் காலாலும் ஓர் சாபம் என்றது காண்க. 'தாளொக்க வளைந்து நிற்ப விரண்டில்லை அநங்க சாபம்' (கிட்கிந்தா 774); நக்கரம் - நக்ரம், முதலை எனப் பொருள்படும் வடசொல். 'நக்கரம் கடற்புறத்து' (கிட்கிந்தா. 142); கடல் நாலொரு மூன்று. யுத்த. 3188-ஆம் செய்யுள் உரைக் குறிப்புக் காண்க. புட்கரத்தீவு: ஏழு தீவுகளில் ஒன்று. கடல் நாலொரு

மூன்றுக்கு நாதர் எனவே அவற்றால் முறையே புடை சூழப்பட்ட ஏழு புவனங்கட்கும் நாதர் எனினுமாம். புட்கரம் என்ற வடசொல் எதுகைநோக்கிப் புக்கரம் என நின்றது.

பி - ம். 1. முக்கரக் ; முசுண்டர்.
2. சாபத்தின்றனி.
3. நாலொடுந். 17

3198. மறலி யைப்பண்டு தம்பெருந் தாய்சொல வலியாற்
புறநி லைப்பெருஞ் சக்கர மால்வரைப் பொருப்பின்
விறல்கெ டச்சிறை யிட்டய னிரந்திட விட்டோர்
இறலி யப்பெருந் தீவிடை யுறைபவ ரிவர்கள்.

'இவர்கள், இறலி அ பெரு தீவிடை - இறலி என்ற அழகிய பெருந்தீவில், உறைபவர் - வாழ்பவர்கள் ; பண்டு - முன்பு, தம் பெரு தாய் சொல - தம் பெருமை பெற்ற தாய் சொல்ல; (இவ் வேழுலகுக்கும்) புறம் நிலை - அப்பாலுள்ள, பெரு சக்கரம் மால்வரை ,பொருப்பின் - சக்கரவாளம் எனப்படுகின்ற பெரிய மலையிலே, வலியால் - தம்முடைய வன்மையால், மறலியை விறல் கெட - யமனை ஆற்றல் குலையுமாறு, சிறை இட்டு - சிறைப் படுத்தி, அயன் இரந்திட - பிரமதேவன் நயந்து வேண்ட, விட்டோர் - (அந்த யமனைச்) சிறையினின்றும் விடுவித்தவர்.

மறலி : யமன் ; 'மறலி யஞ்சுறு விறலர்' (கிட்கிந்தா. 51) ; 'கொடு மறலி தூதாளும் கொன்றிளைத்தான்' (திருக்கருவை. கலித். அந்.); சக்கரவாளகிரி (மணி. 6 : 165); உரைக்குறிப்புக் காண்க. இறலி : ஏழு தீவினில் ஒன்று. (திவா) ; இறலியை இத்தி என்றும், மருதமரம் என்றும் கூறுப.

பி - ம். 1. புறநிலந்தரும், புடைநிலந்தரும்.
3. சிறையிட்டவனி வந்திட, விட்டார், விடுந்தார்.
4. இறலியைப் ; உற்றவரிவர், 18

3199. வேதா ளக்கரத் திவர்பண்டு புவியிடம் விரிவு
போதா துந்தமக் கெழுவகை யாய்நின்ற புவனம்
பாதா ளத்துறை வீரென நான்முகன் பணிப்ப
நாதா புக்கிருந் துனக்கன்பி னுலிவ ணடைந்தார்.

'நாதா - தலைவனே! வேதாளம் கரத்து இவர் - வேதாளத்தின் கையைப் போன்ற கையையுடைய இவர், பண்டு - முன்னுளில்,' புவி இடம் - பூமியில் உறைவதற்கு, உந்தம்க்கு விரிவு போதாது - உமக்கு இடம் பற்றுது; எழுவகையாய் நின்ற புவனம் - ஏழு வகையாய் நின்ற உலகத்தின்கண்ணுள்ள, பாதாளத்து உறைவீர் - பாதாளத்தில் வதிவீராக', என - என்று, நான்முகன் பணிப்ப - பிரமதேவன் பணித்தமையின், புக்கிருந்து - (பாதாளத்தில்) புக்கமர்ந்து, உனக்கு அன்பினுல் - உன்னிடத்துள்ள அன்பினுல்; இவண் நடந்தார் - (இப்போது) இங்கே வந்தார்கள்.

வேதாளம்: 'வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே' (நல்வழி. 23); எழுவகையாய் நின்ற புவனம்; பூலோகம், புவலோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன. புவனங்கள் கீழேழ் மேலேழ் என்றும் கூறுப. (கிட்கிந்தா. 174) உரைக் குறிப்பிற் காண்க. நாதா; விளி. உனக்கு; உருபுமயக்கம்.

பி - ம். 1. நிவர்; இவ்வுலகிடம், பண்டுலகிடம்.

2. போதாளப்புகும், போதாபுக்குமக்கு, போதாபுக்குமற்று: வகையால்.

3. பணிக்க.

4. புக்கிருந்தனர், புக்கிருந்தார்; உனக்கரிதினின், உனகருத்தினின்; இடைந்தார், அடைந்தார்.

19

3200. நிருதி தன்குலப் புதல்வர்நின் குலத்துக்கு நேரே
பருதி தேவர்கட் கெனத்தக்க பண்பினர் பானக்
குருதி பெற்றில ரேற்கட லேழையுங் குடிப்பார்
இருணி றத்தவ ரொருத்தரேழ் மலையையு மெடுப்பார்.

'(இவர்கள்), நிருதிதன் குலம் புதல்வர் - நிருதி என்னும் திக்கினைப் புரப்பவளின், வமிசததுத் தோன்றிய மக்களாவர்; நின் குலத்துக்கு நேர் - வீரிய சௌரிய பராக்கிரமங்களிலும், வரம் உடைமையினும், உனது குலத்துக்கு எவ்வகையிலும் ஒப்பாவார்; தேவர்கட்கு பருதி எனதக்க பண்பினர் - வானவர் கட்கு பருதி எனப் பகரத் தகுதிபெற்ற குண விசேடங்களை

யுடையவர்; பானம் குருதி பெற்றிலரேல் - பருகுவதற்கு உரிய உதிரத்தைப் பெறுமற் போவரேயாயின், கடல் ஏழையும் குடிப்பார் - கடல் ஏழினையும் பருகுவார்; இருள் நிறத்தவர் - இருள் போன்ற கரு நிறத்தினர்: ஒருத்தர் - ஒருவரே, ஏழ் மலையையும் எடுப்பார் - ஏழு குலகிரிகளையும் தூக்கும் வன்மை பெற்றவர்; ஏகாரம் தேற்றம்.

நிருதி: நிருருதி என்னும் வடசொல்லின் திரிவு. இது எட்டுத் திசைகளில் ஒன்று; தென்மேற்கு என்பர்; இதனைப் பாலிப்பவள் நிருதி என்ற பெண்மகள். 'நிருதித் திக்கினின்றவன்' (யுந்த. இராவணன் வதை. 137); 'இந்திரன் கலையா யென்மருங் கிருந்தான் அக்கினி உதரம் விட்டகலான். எமனெனைக் கருதா னரனெனக் கருதி, நிருதிவந் தென்னையென் செய்வாள், அந்தமாம் வருண னிருகண்விட்டகலான்' (தனிப்பா.) குலப் புதல்வர் - குலத்தை ஈடேற்ற வந்த மக்கள்; குலத்துக்கு நேர் - உன் குலத்தவர்க்கு எவ்வகையிலும் நிகர் என்பது, தேவர்கட்குப் பரிதி எனத்தக்க; தேவர்களில் பரிதி என்று சொல்லத்தக்க பெருமை சான்றவர்; எனவே அரக்கர்க்கு ஒப்பு மட்டும் அன்றி, உயர்ந்தவர் என்றும் கூறலாம். 'ஆதித்யானும் அஹம் விஷ்ணு; ஜ்யோதிஷாம்ரவிரம்சுமான்' (பகவற்கீதை. 10, 21); பானக் குருதி பெற்றிலரேல் கடலேழையுங் குடிப்பார்; 'தண்ணினீர் முறை தப்பிடிற் றடக்கையாற் றடவி, விண்ணின் மேகத்தை வாரிவாய்ப் பிழிந்திடும் விடாயர். (ஒப்பு): 'குடிக்குமேற் கடலேழையும் குடங்கையிற் குடிக்கும்' (கிட்கிந்தா. 709); கடல் ஏழு: கிட்கிந்தா. 174-ன் உரைக் குறிப்புக் காண்க. இருணிறத் தவர்: 'நிறத்துக் காரன்ன நெஞ்சினர்' (யுந்த. 3238); 'ஒருத்தர் ஏழ் மலையையும் எடுப்பார்' (ஒப்பு): 'ஒருவ ரேவல்ல ரோ ருலகத்தினைவெல்ல, இருவர்வேண்டுவ ரேழுலகத்தையும் இறுக்க' (யுந்த. 3244).

பி - ம். 2. தேவர்கள்; யானைக்.

3. பெற்றில ரெனிற்.

4. ஒருவர்; ஏழ் உலகையும், ஏழ் மலையினை,

3201. பார ணைத்தவெம் பன்றியை யன்பினுற் பார்த்த
காரணத்தினி னுதியான் பயந்தபைங் கழலோர்
பூர ணத்தடந் திசைதொறு மிந்திரன் புலரா
வார ணத்தினை நிறுத்தியே சூடினர் வாகை.

'பார் அணைத்தவெம் பன்றியை - பூமகளைத் தழுவிய, விருப்பம் தரத்தக்க வராகத்தை, அன்பினுல் - அன்புடன், பார்த்த காரணத்தினின் - நோக்கிய காரணம் பற்றி, ஆதியான் பயந்த பசுமை கழலோர் - திருமாலாற் பெறப்பட்ட பசிய பொன்னுற் செய்யப் பட்ட, வீரகண்டையை உடையவர் ஆவர்; (இவர்கள்), பூரணம் தடம் திசைதொறும் - முழுமையான பெருந்திசைகள் தோறும், புலரா - (மதம்) வற்ருத, வாரணத்தினை - (தம்முடைய) யானைகளை, நிறுத்தி வாகை சூடினர் - நிற்கும்படி செய்து, இந்திரன் வாகை சூடினர் - இந்திரனை வென்றதற்கறிகுறியாக வெற்றிமாலை யணிந்தார். ஏ : அசை.

பூ மகட்கும் வராகா வதாரமாக வந்த திருமாலுக்கும் பிறந்த வீரர் என்பது முதலிரண்டடிகளில் குறிக்கப் பெற்றது. வராகாவதாரம்: திருமாலின் மூன்ருவது அவதாரம்; பார் அணைத்த வெம் பன்றி: இரணியரக்கன் என்னும் அசுரன் பூமியைச் சுருட்டியெடுத்துப் பாதாளத்துட் செல்ல, தேவர்கள் திருமாலைத் துதித்து வேண்ட, அவர் ஒரு பன்றி உருவெடுத்துச் சென்று, அவ்விரணியாக்கனைக் கொன்று, பூமியைத் தம் கொம்பால் ஏந்தி எடுத்து முன்போல் நிலைநிறுத்தினர் என்பது வரலாறு. கிட்கிந்தா. 120 உரைக் குறிப்புக் காண்க. 'பாரையிடந்தவனும் பாரையளந்தவனும், பாரையெடுத்தவனும் பண்பாகப்-பாரை மனங், கொண்டவனும் உண்டவனும் கொண்டலென நின்றருளும், வண்ட மருந் தண்டுளவ மால்' என்பது காண்க. இந்திரனை வெற்றிகொண்டு வாகை சூடித் தமது வெற்றிக்கு அறிகுறியாகத் திக்கு யானைகளை விலக்கித் தமது வேழங்களை அவற்றினிடங்களில் இருத்தியவர் என்பது இறுதியிரண்டடிகளின் கருத்து. பகைவரை வென்றவர் தம் வேழங்களைப் பகைவர் நாட்டின் எல்லைப்புறங்களில் வைத்தல் பண்டைத் தமிழ்மரபு. 'ஒன்ருர், இகல்அற நூறித்தன்மத வாரணங், திசைதொறு நிறுவிய—சீயகங்கன்;' என்றது காண்க. (ஒப்பு) 'எட்டானைத் தம்பமுடன் சயத்தம்ப நாட்டிய;

பேரிறைவன் மைந்தன்' (வில்லி. பா, 13 ஆம்போர் 135); (ஒப்பு) புலவர் பெருஞ்சித்திரனார் குமணன் அளித்த யானையை வெளிமான் தம்பியின் காவன் மரத்திற்கொண்டு கட்டியது போன்ற செயலும், பகைவருடைய காவன் மரத்தை அல்லது காவற்சோலையை அழித்தலும் அரசர்க்கியல்பு' என்ற குறிப்பும் இங்கே காண்டற்குரியது. ஆதியான் - திருமால்; புலரா: மதம் வற்றப்பெறாத. வாரணம்: யானை. 'வாரணம் பொருதமார்பும்' (யுத்த: 1211); வாகை சூடுதல்: வெற்றிபெறுதல்.

பி-ம். 1. அணைந்த, மணந்த; பார்க்கும்.
2. ஆதியிற்; வெங்கழலோர்.
4. நிறுத்தினன். நிறுத்தியது; இவர்வரவஞ்சி. 21

3202. மறக்கண் வெஞ்சின மலையென விந்நின்ற வயவர்
இறக்கங் கீழிலாப் பாதலத் துறைகின்ற விகலோர்
அறக்கண் துஞ்சில னுயிரம் பணந்தலை யனந்தன்
உறக்கந் தீர்ந்தன னுறைகின்ற திவர்நடந் தொறுக்க.

'மறம்கண் வெஞ்சினம் மலை என இந் நின்ற வயவர் - கொடிய கண்களையும் கடுமையான கோபத்தினையுமுடைய மலை போன்ற பெருந் தோற்றமுள்ளவரான இங்கு நின்ற வீரர்கள், இறக்கம் கீழ் இலா-(தன்னிலும்) கீழே இறங்குவதற்கு இடமில்லாத, பாதலத்து உறைகின்ற - பாதாளத்து வதிகின்ற, இகலோர் - மாறுபாட்டினை யுடையவர்; இவர் - இவர்கள், உறைகின்றது - வசிக்கின்ற இடத்து, நடந்து ஒறுக்க - நடந்து அலைத்தலின், ஆயிரம் பணம் தலை அனந்தன் - ஆயிரம் படத்தோடு கூடிய தலைகளையுடைய ஆதிசேடன், உறக்கம் தீர்ந்தனன் - நித்திரை விடுத்தவனாய், அற கண் துஞ்சிலன்-மிகவும் கண் உறக்கம் கொள்ளாதவன் ஆயினன்.

புறத்தும் அகத்தும் வெகுளி தோன்ற நின்றவர் என்பதை மறக்கண் வெஞ்சின மலை எனப்பட்டது. இந் நின்ற; 'இந் நின்றாளென்னை யீன்றாள்' (அயோத்தி. குகப். 70); இறக்கம் கீழிலாப் பாதலம்; அத பாதாளம் - ரசாதலத்திற்கும் அடியில்

உள்ளது. இகல் - வலிமை, மாறுபாடு; அற - மிகுதியாக எனப் பொருள்படும் உரிச்சொல். ஆயிரம் பணந்தலை அனந்தன்; (ஆரணிய. 525); (கிட்கிந்தா. 742) சகச்ர பணுபணி மண்டல மண்டிதே என்றது காண்க. 'பைவிரிப்பஃறலை பாந்தள்' (கிட்கிந்தா. 433ம்) காண்க. 'ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை' என்றது (பரிபாடல். 1). உறக்கம் தீர்ந்தவனாய் அறக்கண் துஞ்சிலன் என்க.

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

மேய சக்கரப் பொருப்பிடை மேவிய திறலோர்
ஆயிரத் தொகை பெருந்தலை யுடையவர் அடங்கா
மாயை கற்றவர் வரத்தினர் வலியினர் மறப்போர்த்
தீயரித்திசை வரும்படை யரக்கர் திண்திறலோய்.'

பி - ம். 1. விண்ணின்ற.

2. கிழிலா சலத்து, கிழிலாரசாதலத்து, விறலோர்.

3. துஞ்சிலா! நனந்தலை.

4. உறைகின்றது; உணர்விடம் 22

3203. காளி யைப்பண்டு கண்ணுதல் காட்டிய காலை
மூள முற்றிய சினக்கொடுந் தீயிடை முளைத்தோர்
கூளி கட்குநல் லுடன்பிறந் தார்பெருங் குழுவாய்
வாளி மைக்கவும் வாளெயி றிமைக்கவும் வருவார்.

'(இவர்கள்) பண்டு - முன்பு, கண்ணுதல் - நெற்றி விழியினன் ஆன சிவபெருமான், காளியை காட்டிய காலை - காளிக்கு (ஊர்த்வ தாண்டவம் செய்து) காட்டிய காலத்து, மூள முற்றிய - (அக் காளியின்) மூளுமாறு முதிர்ந்த, சினம் கொடு தீ இடை முளைத்தோர் - கோபமாகிய கொடிய நெருப்பினின்று கிளம்பியவர்; கூளிகட்கு - பேய்களுக்கு, நல் - சிறந்த, உடன் பிறந்தார் - உடன் பிறப்புப் போன்றவர்கள்; வாள் இமைக்கவும் - (கையிற் பற்றிய) வாட்படை ஒளிரவும், வாள் எயிறு இமைக்கவும் பெரு குழுவாய் வருவார் - வாள் போன்று கூரிய பற்கள் ஒளிவிடவும், பெருந்திரளாக வருவர்.

முதலடியிற் குறிக்கப் பெற்ற வரலாறு: பண்டு ஓர் சமயம் தாண்டவம் புரியவல்ல தம்பிரானை அணுகிப் பராசத்தியான காளி

நடனப் போட்டியிட ஆயத்தமாக இருப்பதாகக் கூறப், பரமன் இயைந்தான். இருவரும் சளையாமல் ஆடுங்கால் சிவபெருமான் ஒரு காலைச் சிரம் வரையில் தூக்கி ஊர்த்வ தாண்டவம் செய்ய, பெண்பாலாகலின், அவ்வாறு செய்தற்கு நாணிச் சிவபெருமான் செய்த வஞ்சனையைக் கண்டு சினந்தாள் என்க. இன்றும் காளியின் கோயில் தில்லையில் ஊர் வெளியில் அமைந்துள்ளது; ஊர்த்வ தாண்டவர் விக்ரகம் ஒன்று, சிதம்பரம் ஆலயத்தில் நடராசப் பெருமான் எதிரில் கொடித்தம்பத் தண்மையில் உள்ள நிருத்த சபையில் காணலாம். கண்ணுதல் - நுதற்கண் என்பது முன் பின்னுகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. கூளி - காளியின் ஏவல் மகளிர். ஒருசேர வாளும் வாளெயிறும் இமைக்குமாறு என்றதில் உள்ள நயம் காண்க.

பி - ம். 2. சினத்தொடும், சினக்கடும். 23

இதன்பின் 'சீற்றம்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3204. பாவந் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்
தீவந் தோன்றிய முழைத்துணை யெனத்தெறு கண்ணர்
கோவந் தோன்றிடில் தாயையு முயிருணுங் கொடியோர்
சாவந் தோன்றிட வடதிசை மேல்வந்து சார்வார்.

'சாவம் தோன்றிட - வில்லானது விளங்கும்படி, வடதிசை மேல் வந்து சார்வார் - வட திசையின் மேல்வந்து அடைந்தவர்களாகிய இவர்கள், பாவம் தோன்றிய காலமே தோன்றிய - பாவம் தோன்றிய காலத்திலேயே தோன்றிய, பழையோர் - தொன்மையானவர்கள்; தீவம் தோன்றிய துணை முழை என தெறு கண்ணர் - விளக்கு மிளிர்கின்ற இரண்டு குகைகளென்று சொல்லுமாறு (தோன்றி), பயம்விளைக்கின்ற விழிகளுடன் கூடியவர்கள்; கோவம் தோன்றிடில் தாயையும் உயிர் உணும் கொடியோர் - சினம் எழுந்தால் பெற்ற தாயையும் கொன்று உண்ணும் தீயோர்.

புண்ணியம் பாவம் அநாதி என்ப; எனவே இந்த அரக்கர் இன்ன காலத்தில் தோன்றினர் என்று அறியக் கூடாதபடி அத்துணைத் தொன்மையர் எனப்பட்டது. அச்சம் விளைக்கின்ற கண்கள் இரண்டும் விளக்கு வைத்துள்ள குகையினைப் போன்றன

என்றார். 'கொள்ளி கொண்டிரண் டேமுழை யுட்புகிற், குன்று தோன்றுவ போல விழிப்பன்' (கலிங். பரணி 6 : 5); பாபம் தீபம் கோபம் சாபம்; இவை வடசொற்கள்; இவை முறையே பாவம் தீவம் கோவம் சாவம் என்ற எதுகை பெற்று வந்தன. முழைத் துணை என்பது துணைமுழை எனக் கொள்ளப்பட்டது. 'தாயையு முயிருணும் கொடியோர்' 'தாயை யாயினுந் தனிக்கொலை சூழினுந் தவிரா, மாயையான்' (யுத்த. 493); சாவம் - வில்; 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு) வடக்கு திசை - வட திசை; 'திசையொடு திசையும் பிறவும் சேரின்' (நன். உயிரீறு. 36) என்ற சூத்திரத்தின்படி நிலைமொழியின் உயிர் மெய்யும் சகர மெய்யும் கெட்டு வந்தது.

பி - ம். 1. நாள்முதற்.

2. முழையெனத் தெறுகின்ற, முழைதொறு மெனத்தெறும், முடை யெனத்தெறுசுடர்க்; முறைமையா மெனத்தெறு.

3. தாயையும் கொலைசெயும். 24

3205. சீற்ற மாகிய வைம்முக னுலகெலாந் தீப்பான்
ஏற்ற மாநுதல் விழியிடைத் தோன்றின ரிவரால்
கூற்ற மாகிய கொம்பினைம் பாலுடைக் கொடுமை
ஊற்ற மாகப்பண் டுதித்தவ ரென்பவ ருவரால்.

'இவர் - இவர்கள், சீற்றம் ஆகிய - வெகுளி கொண்டுள்ள, ஐமுகன் உலகு எலாம் தீப்பான் - ஐம்முகங்களை யுடையவனான சிவபெருமான் உலகனைத்தையும் எரியூட்டும் வண்ணம், ஏற்ற - அமைத்துக் கொண்டுள்ள, மா நுதல் விழி இடை தோன்றினர் - பெரிய நெற்றிக் கண்ணினின்று பிறந்தவர்; உவர் - அதோ அங் கிருப்பவர், ஐம்பால் உடை - கூந்தலைக் கொண்ட, கூற்றம் ஆகிய - யமன் என்று பகரத்தக்க, கொம்பின் - ஓர் பெண்ணின், கொடுமை ஊற்றம் ஆக - கொடுமைக்கு ஊன்றுகோலாக, பண்டு உதித்தவர் என்பவர் - முற்காலத்துத் தோன்றியவர் எனப்படுவார். ஆல்: அசை.

சிவபிரானுடைய சங்காரத் தொழில் முதலிரண்டடிகளில் குறிக்கப்பெற்றது. சீற்றம் - சினம். 'சீற்றமுந் தானுநின்றான் பெயர்ந்திலன் சென்ற பாதம்' (யுத்த. 1392); ஐம்முகன் - ஐந்து

முகங்களையுடைய சிவபெருமான்; ஐந்து முகங்கள்: ஈசானம், தற்புருடம், அகோரம், வாம தேவம், சத்யோசாதம். கூற்றமாகிய கொம்பு - யமன் ஓர் பெண்ணாக உருவகிக்கப்பட்டது. ஐம்பால் - ஐந்து தனிப் பகுதிகளாக அமைக்கப்படும் கூந்தல்: 'குழலையும் அளகத்தையும் வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையையும் துஞ்சையையும் விரித்தும் முடிக்கப்படுவது. சீவக. 2267 உரை. இனி ஐம்பால் என்பதற்கு ஐந்து தன்மையை யுடைய கூந்தல் என்று கொண்டு, மணம், மது, மென்மை, நெய்ப்பு, கருமை என்றும் உரைப்பர். கிட்கிந்தா. 479 உரைக் குறிப்பும் காணத்தகும். கொம்பு - உவம ஆகு பெயராகப் பெண்ணைக் குறித்தது. 'பெண்டிரிற் கூற்றமன்னாள்' (அயோத்தி. கைகேசி.79); ஊற்றம் - ஊன்றுகோல்; (யுத்த. 1392). ஐம்பால் உடை கொடுமை - ஐந்து பிரிவாகவுள்ள கொடுமை எனினுமாம். கொடுமைக்கு ஊற்றம் - கொடுமைக்கு வலிமை தருவது. (ஒப்பு); 'படரெலாம் படைத்தாளைப் பழி வளர்க்கும் செவிலியை' (அயோத். குகப். 70).

பா - ம். 1. நான்முக னுலகுள வுயிரெலாம், நான்முகன் முதலிடையுலகெலாம்.
2. நாள்மற்றவ் வெரியிடை, மற்றவ் வெரியொடும்.
3. ஐம்பாலிடை, அம்பாலுடை; கொடுமைக்கு.
4. ஊற்றமாகி, ஏற்றமாக; உதித்தனர், உதித்துளோர். 25

இங்கோர் அதிகப் பாடல்:—

ஏறுகோளரி முகத்தினர் திறற்புலி முகத்தைத்
தூறு வான்றலை யுடையவர் நூற்றிதழ்க் கமலத்
தேறு வான்றரும் வரத்தின ரேழ்பிலத் துறைவோர்
ஈறி லாத பல் அரக்கர்மற் றெவரினும் வலியோர்.

3206. காலன் மார்புழைச் சிவன்கழல் படவன்று கான்ற
வேலை யேயன்ன குருதியில் தோன்றிய வீரர்
சூல மேந்திமுன் னின்றவ ரிந்நின்ற தொகையார்
ஆல காலத்தி னமிழ்தின்முன் பிறந்தோ ரரக்கர்.

'சூலம் ஏந்தி முன் நின்றவர் - சூலத்தைக் கரத்தில் தாங்கி நின்றவர், காலன் மார்பு உழை - யமனுடைய மார்பில், சிவன் கழல்பட - சிவபிரானுடைய திருவடிபட, அன்று - அப்பொழுது,

கான்ற - (அம் மார்பு) கக்கிய, வேலை அன்ன - கடலைப் போன்ற, குருதியில் தோன்றிய வீரர் - உதிரத்தினின்றும் தோன்றிய வீரர் ஆவர்; இந் நின்ற தொகையார் - இங்கே நிற்கின்ற (பெருந்) தொகுதியாயுள்ள இவர், ஆலகாலத்தின் அமிழ்தின்முன் பிறந்த போர் அரக்கர் - ஆலகாலத்துக்கும் அமிழ்துக்கும் முன்னரே பிறந்தவரான போர் செய்யவல்ல அரக்கர். ஏ : தேற்றம்

காலன் - உரிய காலத்து உயிர்களைக் கவர்பவனுன யமன்; 'காலனும் காலம் பார்க்கும்' (புறநா. 41); மார்புழைச் சிவன் கழல் பட்டது; பதினாருவது ஆண்டில் தனக்கு இறப்பு என்று அறிந்த மார்க்கண்டன் சிவபிரானைச் சரண் அடைய, யமன் அவன் உயிரைக் கவர வந்தவன், பாசத்தைச் சிவபிரான் மீதும் வீசினுனுக, அந் நிலையில் சிவபிரான் அவனைக் காலால் உதைத்துக் கொன்றுன் என்பது; 'சாதல் அஞ்சினேனபயமென்ற வந்தணர்க்காகி யந்நாள், வெஞ்சினக் கூற்றை மாற்று மேன்மையின் மேன்மையுண்டோ' (யுத்த. 418); 'மார்க்கண்டற்காக மறலிபட்ட பாட்டை யுன்னிப்பார்க்கிலன்பர்க்கு பயம் உண்டோ பராபரமே' (தாயு. பராபரம்); கான்ற : 'கான்ற என்னும் இடக்கர் அணி குறித்துப் பிறிதொரு பொருள்மேனிற்றலின் மறைக்கப்படாது; தன் பொருள்மேல் நிற்றலின் மறைக்கப்படும்' (பெரும்பாண். 2 உரைக் குறிப்பு). ஆலகாலம்; (நாக. 72) இந் நின்ற : இந் நின்றுள் என்னை யின்றுள்' (அயோத்தி. குகப். 70); சூலமேந்தி முன் நின்றவர் என்பதற்குச் சிவபெருமானையும் எதிர்த்து நின்றவர் எனினுமாம்.

பி-ம். 1. மார்பினிற், மார்பிடைச்; பண்டு.
2. வேலையேமெனக்.
3. எந்தியு நின்றனர், நின்றவர், ஏந்திய கையினர்.
4. ஆலகாலமு மமிர்தமும், ஆலகாலத்து மமிழ்நினும். மமுதொடும்; பேரரக்கர், போலரக்கர்.



3207. வடவைத் தீயினில் வாசுகி கான்றமா கடுவை
இடவத் தீயிடை யெழுந்தவ ரிவர்கண மழையைத்
தடவத் தீயென நிமிர்ந்தகுஞ் சியருவர் தனித்தேர்
கடவத் தீந்தவெம் புரத்திடைத் தோன்றிய கழலோர்.

'இவர் - இவர்கள், (பாற்கடல் கடைந்த பொழுது) வாசுகி கான்ற - வாசுகி என்னும் அரவம் கக்கிய, மாகடுவை - கொடிய நஞ்சினை, வடவை தீயினில் இட - வடவா முகாக்கினியில் இட, அ தீ இடை எழுந்தவர் - அந்தத் தீயினிடத்துத் தோன்றியவர்; கணம் மழையை - தொகுதியான மேகத்தை, தடவ - தீண்டுமாறு, தீ என நிமிர்ந்த - நெருப்புப்போல் நிமிர்ந்துள்ள, குஞ்சியர் உவர் - குஞ்சியினை உடையவராகிய அதோ காணப்படுபவர், தனி தேர் - ஒப்பற்ற தேரை, கடவ - (பிரமனாகிய தேரோட்டி) செலுத்த (ச் சிவபெருமானால்), தீந்த - எரிந்துபட்ட, வெம் புரத்திடை தோன்றிய கழலோர் - கொடிய முப்புரத்தினில் உதித்த வீரக்கழலினையுடைய வீரர்.

வடவைத் தீ - பெண் குதிரையின் முகத்துடன் கடலின் வடபால் மறைந்து நின்று ஊழிக்காலத்து எழுந்து உலகினைப் யழிக்கும் மாபெருந் தீ; படபா என்ற வட சொல்லின் திரிபு. 'பகைத்தனை நெடுங்கடல் பருகும் பாவகன், சிகைக்கொழுந்தென' (ஆரணிய. 1144); 'வடகனலும் கண்கெட' (கிட்கிந்தா. 242); வாசுகி கான்ற மாகடு - பாற்கடல் கடைந்த காலத்து உண்டாயது. வாசுகி என்ற அரவம் நாணாக மந்தரமலை மத்தாகத் தேவரும் அசுரரும் கடல் கடைந்த வரலாறு பாலகாண்டத்து 'மத்து மந்தரம் வாசுகி கடைகயிறடை தூண், மெத்து சந்திரன் சுராசுரர் வேறு வேறுள்ள, கொத்தி ரண்டுபால் வலிப்பவ ரோடதி கொடுத்துக், கத்துவாரிதி மறுகுற வமிழ்தெழக் கடைமின்' (அகலிகை. 21) என்றது கொண்டு காண்க. கான்ற: இதன் முன் செய்யுட் குறிப்புக் காண்க. கண மழையைத் தடவித் தீ என நிமிர்ந்த குஞ்சியில் என்றது, வானளாவ உயர்ந்த பேருருவினர் என்பதும் அவர்களின் பங்கி தீப்போன்று விளங்கிற்று என்பதுங் குறிக்க. தனித்தேர் கடவத் தீந்த வெம்புரத்திடைத்; இங்கு முப்புரம் எரித்த வரலாறு குறிக்கப்பெற்றமை காண்க; (ஆரணிய. 258). முப்புரம்: இரும்பு பொன் செம்பினால் அமைந்தனவும். நினைத்த இடத்துக்கு எழுந்து செல்லக்கூடிய சத்தி யமைந்தனவுமான ஆகாயக் கோட்டைகளால் அமைந்த ஊர்கள். இம் மூன்றையும், இவற்றிற்குரிய வித்யுந்மாலி, தாருகாட்சன், கமலாட்சன் என்னும்

மூன்று அசுரர்களையும் சிவபிரான் தம் சிரிப்பினால் நெருப்பெழச் செய்து அழித்தனர் என்பது வரலாறு. ஆரணிய. 815, 905, 921ம் காண்க. கழலோர்: என்றது வீரக்கழலுடனேயே பிறந்தவர் எனினுமாம்.

பி-ம். 1. நீயிடை, நீயினை; கடுவைத்திட, கடுவைவிட.

2. இவரினம். இவரிவர்.

3. தடவுந்நிநிகர், தடவித்தீநிமிர், தடநவத்தீயென; நிமிர்ந்தவர்தறுகணா ரிறைவர், குஞ்சியர் சங்கரன் தனித்தேர், குஞ்சியரிவருவர் தனித்தோ, ரிறையவர்தனித்தேர். 27

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

சாலு மாபெருந் தலைவர்கள் தயங்கெரி நுதற்கண்
சூல பாணிதன் வரத்தினர் தொகுத்தபல் கோடி
மேலை யண்டத் துறைபவ ரிவர்பண்டு விரலால்
கோல வேலுடைக் குமரனை வெஞ்சமர் துரந்தோர்.

3208. இனைய ரின்னவ ரென்பதோ ரளவில ரைய
நினைய வுங்குறித் துரைக்கவு மரிதிவர் நிறைந்த
வினைய மும்பெரு வரங்களுந் தவங்களும் விளம்பின்
அனைய பேருக மாயிரத் தளவினு மடங்கா.

'ஐய - ஐயனே! இனையர் - இத்தனையவர், இன்னவர் - இன்னார், என்பது ஓர் அளவு இலர் - என்பதற்கும் ஓர் அளவில்லர்; இவர் - இவர்களைப்பற்றி, நினையவும் குறித்துரைக்கவும் அரிது - நினைக்கவும் குறிப்பிட்டுச் சொல்லவும் இயலாது; இவர் - இவர்களிடம், நிறைந்த வினையமும் - நிறைந்துள்ள வஞ்சனைகளும், பெரு வரங்களும் - பெரிய வரங்களும், தவங்களும் - தவங்களும், விளம்பின் - கூறப்புகின், அனைய பேர் உகம் ஆயிரத்து அளவினும் அடங்கா - அப்படிப்பட்ட ஆயிரம் பெரிய யுகங்களிலும் அடங்காவாம்.

இத்துணைவர் என்றும் இத்தகையவர் என்றும் விதந்து கூறவியலாதபடி உள்ளனர் என்பான் இனையர் இன்னவர் என்றார். வினையம்: வஞ்சம்.

பி - ம். 1. எனையர் ; என்பதொன்றிந் திரற்கேயும்.

2. அரிதிவர் நினைந்த, இவர் வரம்பிலர் நிறைந்த.

3. பெருந்தவங்களும் வரங்களும் ; விசும்பின்.

4. ஆயிரஞ் செல்லினும், அடங்கார்.



## வந்த சேனையோரின் திறமை

3209. ஒருவரே சென்றவ் வுறுதிறற் குரங்கையு முரவோர்
இருவ ரென்றவர் தம்மையு மொருகைகொண் டெற்றி
வருவர் மற்றினிப் பகர்வதென் வானவர்க் கரிய
திருவ வென்றனர் தூதுவ ரிராவணன் செப்பும்.

'வானவர்க்கு அரிய திருவ - தேவர்கட்கும் எய்தற்கரிய செல்வம் உடையவனே ! (இப்படைக்கண் உள்ளவரில்), ஒருவரே சென்று - ஒருத்தரே போய், அவ் - அந்த, உறுதிறல் குரங்கையும் - மிக்க ஆற்றல் வாய்ந்த குரங்கையும், உரவோர் என்றவர் - வன்மையுடையவர் எனப்படுபவராகிய, இருவர் தம்மையும் - (இராம இலக்குவர் என்ற) இருவரையும், ஒரு கைகொண்டு எற்றி வருவர் - ஒரு கையைக்கொண்டு அடித்து வருவார் ; மற்று இனி பகர்வது என் - வேறு இனிச் சொல்ல வேண்டுவது என்ன ?' என்றனர் தூதுவர் - என்று உரைத்தனர் தூதுவர் ; இராவணன் செப்பும் - அப்போது இராவணன் பகர்வதானான்.

குரங்கு, இருவர் எனவே மூவராயினர் ; இவர்களை ஒருவரே ஒருகை கொண்டு எற்றி வருவர் என்று அரக்கர்திறல் கூறப்பட்டமை காண்க. மற்று : வினைமாற்றுப் பொருளில் வந்தது. வானவர்க் கரிய திருவ ; இலங்கையின் வலத்தையும் இலங்கேசனுடைய பெரும் சம்பத்தையும் சுந்தரகாண்டம் ஊர்தேடு படலத்துக் காண்க. இராவணன் செப்பும் : செய்யும் என்னும் முற்று ஆண்பாற்கு வந்தது.

பி - ம். 1. சென்றிவ்.

2. இருவர் என்பவர் ; முன்கைகொண்டெற்றி, முன்கையோ டெற்றி, ஒருகையோ டொற்றி.

3. வருவர் மாறினி, என்னினி ; பகர்வது, வானவர் வணங்குறிஇ நிரப்பும்.

4. திருவை ; திருப ; நிகழ்த்தும் ;

## இராவணன் சேனைக்கு அளவு என்? எனத் தூதுவரின் விடை

3210. எத்தி றத்திதற் கெண்ணெனத் தொகைவகுத் தியன்ற
அத்தி றத்தினை யறைதிரென் றுரைசெய வவர்கள்
ஒத்த வெள்ளமோ ராயிர முளதென வுரைத்தார்
பித்தர் இப்படைக் கெண்சிறி தென்றனர் பெயர்ந்தார்.

'இதற்கு - இப்படைக்கு, எண் எத்திறத்து - எண் எந்தப்புறத்தில் உள்ளது, என - என்று, தொகை வகுத்து இயன்ற - தொகையை வகுத்துப் பொருந்திய, அ திறத்தினை அறைதிர் - அந்த வகையினைக் கூறுங்கள்', என்று - என்று, உரை செய - இராவணன் கேட்க, அவர்கள் - அத்தூதுவர்கள், 'ஒத்த வெள்ளம் - ஒருபடித்தாக அமைந்த வெள்ளம், ஓர் ஆயிரம் உளது - ஓர் ஆயிரம் உள்ளது, என உரைத்தார் - என்று பகர்பவர், பித்தர்-பித்தரேயாவர்; இ படைக்கு எண்சிறிது- இந்தச் சேனைக்கு (அளவிட்டுக் கூறுதற்கு இப்பொழுது கணித நூலின்கண் உள்ள) உச்ச எண்ணே சிறியது', என்றனர் - என்று மொழிந்தவராய், பெயர்ந்தார் - விலகி நின்றனர்.

இச் சேனைக்குத் தொடக்கம் எங்கே முடிவு எங்கே என்று இராவணன் வினவ, அவை ஒன்றும் இதற்கு அறைதற்கில்லை என்றும் இச்சேனையின் பேர் அளவைக் குறிப்பதற்கு நடைமுறை கணிதத்தில் எண் இல்லை என்றும் கூறினர் தூதுவர். பித்தர் : 'பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்' (பால. பாயிரம்); 'பித்தரு முளர்சிலர் விடு பெற்றிலார்' (யுத்த. 190).

பி - ம். 1. எத்துணைத் திறத்தது, எத்துணைத்திதற்கு.

2. இத்திறத்தினை ; அறைதி ; உரை செய்வாரவர்கள்.

3. வெள்ளமோரெழு நூறுமென, ஆயிரம்மென ; உரைத்திடுவர், உரைப்பார்.

4. என் அரிது.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஆதியாம்படைத் தலைவர்கள் வெள்ளம்நூ றடு போர்
மோது வீரர்மற் றுயிர வெள்ளமொய் மனத்தோர்
காது வெங்கொலைக் கரிபரி கடுந்திறற் காலாள்
ஓது வெள்ளமற் றுலப்பில கோடி யென் றுரைப்பார்.

## இராவணன் சேனுதிபதிகளை அழைத்துவருமாறு சொல்ல, சேனைத்தலைவர் வந்து மன்னன் அடி பணிதல்

3211. படைப்பெ ருங்குலத் தலைவரைக் கொணருதி ரென்பால்
கிடைத்து நானவர்க் குற்றுள பொருளெலாங் கிளத்தி
அடைத்த நல்லுரை விளம்பின னளவளா யமைவுற்
றுடைத்த பூசனை வரன்முறை யியற்றவென் றுரைத்தான்.

(இராவணன் தூதரை நோக்கி), 'நான் கிடைத்து - நான் நெருங்கி, அவர்க்கு உற்று உள பொருள் எலாம் - அவர்க்கு நேர்ந்துள்ள பொருள் எலாம், கிளத்தி - எடுத்துச்சொல்லி, அடைத்த - பொருந்திய, நல் உரை விளம்பின்ன் - சிறந்த வார்த்தைகளை மொழிந்தவனாய், அமைவுற்று - மன அமைதியுடன், அளவளாய் - அளவளாவி, உடைத்த பூசனை - உள்ள பூசனைகளை, வரன்முறை இயற்ற - மரபு வழியில் புரியுமாறு, படை பெரு குலம் தலைவரை - பெருந்திரளாயுள்ள படைத் தலைவர்களை, என்பால் கொணருதிர் - என்னிடத்தில் அழைத்து வாருங்கள்' என்று உரைத்தான் - என்று கூறினான்.

பெரும் குலப் படைத்தலைவர் எனக் கூட்டுக. குலம்:தொகுதி. கிடைத்து - கிட்டி; 'கிடைத்தானிகன் மாருதியைக் கிளர்வான்' (யுத்த. 2327); 'விடைத்தனி யேறன்னானோர் விடலையோர் வேற்கணாள்முன் கிடைத்து' (திருவிளை. தருமிக்கு. 42). அளவளாய்: 'அளவளாய் நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்' (மூதுரை. 4); 'அளவளாவில்லாதான் வாழ்க்கை' (குறள். 523); வரன்முறை: 'தொல்லை நான்மறை வரன்முறை' (யுத்த. 157); 'தூதுவர் அணிகடோறும் வரன்முறை காட்டிச்சொன்னார்' (யுத்த. படைக். 9); 'வரன்முறை துரக்கும் மெய்கொள் பூசனை' (யுத்த. 2563).

பி - ம். 1. கொணர்குதி ரென்பார், கொணருதிர் பன்பார்.

2. இடைத்த நாள் ; கிளர்த்தி.

3. அடுத்து ; அளவளாயுவந்தே.

4. உடைத்தோர் ; இயற்றெனச் சொன்னான். 31

3212. தூதர் கூறிடத் திசைதொறுந் திசைதொறுந் தொடர்ந்தார்
ஓத வேலையி னுயக ரெவரும்வந் துற்றார்
போது தூவினர் வணங்கின ரிராவணன் பொலன்றாள்
மோது மோலியின் பேரொலி வானினை முட்ட.

தூதர் - தூதுவர், கூறிட - (இராவணன் ஆணையைக்) கூறவும், ஓதம் வேலையின் - பெருக்கெடுத்த கடல்போற் பரந்த, நாயகர் எவரும் - சேனைத் தலைவர் எல்லோரும், திசைதொறும் திசைதொறும் - திக்குகளில் எல்லாமிருந்து, தொடர்ந்தார் வந்து உற்றார் - அணிவகுத்து வந்தவராய், இராவணன் பொலம்தாள் - இராவணனுடைய அழகிய பாதங்களிலே, போது தூவினர் - மலர்களை வாரியிறைத்து, மோதும் மோலியின் பேர் ஒலி - மோதுகின்ற மகுடத்தின் பேரொலியானது, வானினை முட்ட வணங்கினர் - வானத்தைத் தாக்குமாறு பணிந்தனர்.

ஓதம் : நீர்ப்பெருக்கு ; 'திரையவீங் கோதம் தந்து' (சிலப். கானல்வரி. சார்த்துவரி); இப்பொழுதும் கடற்கரை யூர்களில் கடல்பெருகி ஊர்க்குள் வருவதை ஓதம் என்றும், கரையினின்று மீள்வதை வத்தம் என்றும் கூறும் வழக்குக் காண்க. போது : மலரும் பருவத்தரும்பு என்பர் ; 'காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி' (குறள். 1227). தூவினர் வணங்கினர் என்க. தூவினர் முற்றெச்சம். 'மோது மோலி' 'ஒன்றோடொன்று மோதும் கிரீடம்' 'அடியிணை தொழுமிடமின்றி மன்னர்தம், முடியொடு முடி பொரு வாயின் முன்னினார்' (பால. எழுச்சி. 1); சேனைத் தலைவர்கள் இலங்கேசன் தாளில் விழும்போது அவர்தம் கிரீடம் பாதத்து முட்டுதலால் எழுந்த பேரொலி என்க ; (ஒப்பு): 'நின்றீமின் மன்னீர் நெருநற்றிறை கொணர்ந்து, முன்றந்த மன்னர் முடிதாக்க - இன்றும், திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே, பெருந் தண்ணுறந்தையார்கோ' (முத்தொள். 67).

பி - ம். 1. துறைதொறுந் துறைதொறுந் தொடர்ந்த.

4. மோலியர் ; பேரெழில் ; விசும்பினை, விசும்பின்மேல், முடங்க. 32

## இராவணன் வணங்கினவரை நலம் வினுதல்

3213. அனைய ரியாவரு மருகுசென் றடிமுறை வணங்கி
வினைய மேவின ரினிதினங் கிருந்ததோர் வேலை
நினையும் நல்வர வாகநும் வரவென நிரம்பி
மனையு மக்களும் வலியரே யென்றனன் மறவோன்.

*அனையர் யாவரும் - அவர்கள் அனைவோரும், அருகு சென்று - இராவணன் அண்மையிற் போய், அடி முறை வணங்கி - பாதங்களில் முறையாகப் பணிந்து, வினையம் மேவினர் - வணக்கத்துடன் கூடினவராய், அங்கு இனிதின் இருந்தது ஓர் வேலை - அங்கே மகிழ்வுடன் வீற்றிருந்தபோது, மறவோன் - வீரமிக்க இராவணன், (அவர்களைப் பார்த்து), 'நும் வரவு நினையும் நல்வரவு ஆக - நும்முடைய வரவு என்னுடைய நலத்தினையே கருதுகின்ற நல்வரவு ஆகட்டும்' என - என்று சொல்லி, நிரம்பி - மன நிறைவுடன், 'மனையும் மக்களும் வலியரே - உங்கள் மனைவிமாரும் மக்களும் நலம்பெற்று விளங்குகின்றனரா?, என்றனன் - என்று வினவினன். ஏகாரம் : வினு.*

*வினயம் - வணக்கம், நிரம்பி - மனப்பூர்வமாக, வலியரே - சேமமாக உள்ளனரா; 'வன் திறலாய வாலி வலியன் கொல்' (சுந்தர. 1125).*

பி - ம். 1. அடியுற. அடிமுடி.
2. மேனியோ ரினிதினங்கு, மேவினனருகினங்கு, மேவினனருகிணங்கு, மேவினனருகுணங்கு.
3. நினையின், நினைய ; மன்னவர் முகந்தோறும் விரும்பின ; நிரப்பி.
4. வலியரோ.



## சேனுதிபதிகளின் வினுவும், இராவணன் தனது நிலையைப் பகர்தலும்

3214. பெரிய திண்புய னீயுனை தவவரம் பெரிதால்
உரிய வேண்டிய பொருளெலா முடிப்பதற் கொன்றே
இரியல் தேவரைக் கண்டனம் பகைபிறி தில்லை
அரிய தென்னெமக் கென்றன ரவன்கருத் தறிவார்.

அவன் கருத்து அறிவார் - இராவணனுடைய உட்கருத்தினை அறிந்தவர்களான சேனைத்தலைவர், 'பெரிய திண்புயன் நீ உளை - பெரிய உறுதியான புயத்தினையுடைய நீ இருக்கின்றாய்; தவம் வரம் பெரிது - தவத்தால் பெற்ற வரமோ மிகவும் உயர்வானது; உரிய - உரியவாய், வேண்டிய பொருள் எலாம் - விரும்பத்தக்க பொருள்கள் அனைத்தும், முடிப்பதற்கு ஒன்றோ - முடித்துக் கொள்வதற்கு அருமையானதோ? தேவரை இரியல் கண்டனம் - தேவர்களை நிலைகுலையுமாறு செய்தோம்; பகை பிறிது இல்லை - பிற பகைகள் யாதும் இல்லை; எமக்கு அரியது என் - எமக்கு அருமையானது யாது உள்ளது?' என்றனர் - என்று மொழிந்தார்கள். ஆல், அசை. ஓகாரம், வினா.

உடற் பருமன் முற்றுமிருந்து உறுதியின்றெனில் பயனின்றாகலின் பெரியதிண் புயன் எனப்பட்டது. தவ வரம்: தவத்தினால் பெற்ற வரம்; செய்தவம் வேண்டிய வேண்டியாங் களிக்குமன்றோ? அவன் என்றது இலங்கேசன். எங்களால் ஆற்றமுடியாத காரியம் எதுவும் இல்லை என்பார். 'எமக்கு அரியதென்' என்றார்.

பா-ம். 1. பெரியநின், புயமாயிரம், புயமுயர்ந்துள, புயயாமுளம்; வரங்களும் பெரிதால்.

2. என்றோ.

3. இரியத்.

4. நமக்கு; பின்னவன் கருத்தறிவான். 34

3215. மாத ரார்களு மைந்தரு நின்மருங் கிருந்தார்
பேது றுதவ ரில்லைநீ வருந்தினை பெரிதும்
யாது கார ண மருளென வனையவ ரிசைத்தார்
சீதை காதலிற் பிறந்துள பரிசெலாத் தெரித்தான்.

'நின் மருங்கு இருந்தார் - உன் அண்மையில் இருந்த, மாதரார்களும் மைந்தரும் - மகளிரும் மக்களும் என்றவர்களில், பேதுறுதவர் இல்லை - கலக்கமடையாதவர்கள் இல்லை; நீ பெரிதும் வருந்தினை - நீ மிகவும் வருத்தமுற்றுள்ளனை; காரணம் யாது - (இங்ஙனம் வருந்தக்) காரணம் என்ன? அருள் - கூறியருள்க' என அனையவர் இசைத்தார் - என்று அவர்கள் வினவினர்; (அதற்கு

இராவணன்), சீதை காதலில் பிறந்துள பரிசு எலாம் தெரித்தான் - சீதையினிடத்துக் கொண்ட காதலால் (தனக்கு) உண்டாகியுள்ள தன்மைகள் அனைத்தையும் கூறினான்.

பேதுறுதல் - மனம் பேதித்தல் அல்லது கலங்குதல்; கும்ப. 169, 285. அனையவர் - சேனைத்தலைவர்கள்.

பி - ப். 1. நுன்மருங் கிருந்தார், அருகிருந்தாரும்.
2. வருந்தினை பெருக.
3. இனையவ ருரைத்தார்.
4. புகுந்துள பொருளெலாம், புகுந்துள பரிசெலாம்; செப்பும். 35

## சேனாதிபதிகள் நகையாடிக் கூறுதல்

3216 கும்ப கன்னனொ டிந்திர சித்தையுங் குலத்தின்
வெம்பு வெஞ்சினத் தரக்கர்தங் குழுவையும் வென்றார்
அம்பி னாற்சிறு மனிதரே நன்றுநம் மாற்றல்
நம்ப சேனையும் வானர மேயென நக்கார்.

'நம்ப - தலைவனே! கும்பகன்னனொடு - கும்பகன்னனுடனே, இந்திரசித்தையும் - இந்திரசித்தையும், குலத்தின் - வீரர் குலத்திற் பிறந்த, வெம்பும் - புழுங்குகின்ற, வெம் சினத்து அரக்கர் தம் குழுவையும் - கடும் கோபத்தினையுடைய இராக்கதர்களின் கூட்டத்தையும், அம்பினால் வென்றார் - அம்புகொண்டு வென்றவர், சிறு மனிதரே - சிறிய மானுடரோ? நம் ஆற்றல் நன்று - நம் வலிமை நன்றாயிருந்தது; சேனையும் வானரமே - (அவர்களுடைய) படையும் குரங்குகள்தானே', என நக்கார் - என்று கூறிச் சிரித்தார் -

நம் படையை வென்றவர்கள் சிறிய மனிதர்; அவர்கட்குத் துணையாக வந்தவர்கள் குரங்குகள்; நம்முடைய வலிமை நன்றாக இருந்தது என்று நகையாடி யுரைத்தனர் சேனைத் தலைவர். நன்று நம் ஆற்றல்: பிறகுறிப்பு; (ஒப்பு): 'பேசுவது மானமிடை பேணுவது காமம், கூசுவது மானிடரை நன்று நமகொற்றம்'

(யுத்த. 63). நக்கார் - நகை எள்ளல் நகை; 'நாயகன் தூதன் நக்கான்' (சுந்தர. 1125).

பி - ம். 3. சில மனிதரே.

4. நக்கான், நவின்றான். 36

3217. உலகைச் சேடன்ற னுச்சிநின் றெடுக்கவன் றோரேழ்
மலையை வேரொடும் வாங்கவன் றங்கையால் வாரி
அலைகொள் வேலையைக் குடிக்கவன் றழைத்தது மலரோ
டிலைகள் கோதுமக் குரங்கின்மே லேவக்கொ லெம்மை.

'அழைத்தது - (நீ) எங்களை வரவழைத்தது, உலகை சேடன் தன் உச்சி நின்று எடுக்க அன்று - இந்த உலகத்தை ஆதிசேடனுடைய உச்சியிலிருந்து பெயர்த்தெடுப்பதற்கன்று; ஓர் - ஒப்பற்ற, ஏழ் மலையை - சப்த கிரிகளை, அகம் கையால் - உள்ளங்கையால், வேரொடும் வாங்க அன்று - வேருடன் அகழ்வதற்கன்று; (அகங்கையால்) அலை கொள் வேலையை வாரி குடிக்க அன்று - அலைகளுடன் கூடிய ஆழியை வாரிப் பருகுவதற்கும் அன்று; மலரோடு இலைகள் கோதும் - மலர்களையும் இலைகளையும் கறிக்கின்ற, அ குரங்கின் மேல் எம்மை ஏவக் கொல் - அந்தக் குரக்குப்படை மீது எங்களை(ப் போர் புரியுமாறு) விடுத்தற்காகவோ'?

'எங்களுடைய வீர சௌரியங்கட்கேற்ற பெருந் தொழிலைச் செய்யுமாறு பணிப்பதன்றி, அற்பக் குரங்கினோடு பொருதற்காகவோ அழைத்தீர்' என்று சேனைத் தலைவர்கள் இராவணனை வினவினர். ஆதிசேடன் தன்னுடைய ஆயிரம் படம் கொண்ட தலைகளால் உலகத்தைத் தாங்குவதாக இதிகாசம் கூறும். அஷ்டகுலாசலம் என்பது வழக்கு. இங்கு ஏழ்மலை என்று குறிக்கப்பட்டது. அலைகொள் வேலையை வாரிக்குடிக்க எனக் கொண்டு கூட்டுக. மலரொடு இலைகள் கோதுவது குரங்கின் செயல் என்று சுட்டிக்காட்டி ஏளனம் செய்கின்றான். அகங்கையால் என்பதை இடைநிலை விளக்கிாக்கி மலையை வாங்க, வாரிக் குடிக்க என்ற இரண்டினுடன் கூட்டிப் பொருள் கொள்க.

பி - ம். 1. உச்சிமேல்; எடுக்கவொன்று.

2. வாங்கவோர் அங்கையால் வாங்கி.

3. வேலையை யிறைக்க, இழைக்க. 57

## நகையாடியவர்களை விலக்கிப் புட்கரத் தீவிற்கு அரசனை வன்னி யென்பவன் அந்த மானிடரின் வலி யாது? எனக் கேட்டல்

3218. என்னக் கையெறிந் திடியுரு மேறென நக்கு
மின்னும் வெள்ளெயிற் றரக்கரை யங்கையால் விலக்கி
வன்னி யென்பவன் புட்கரத் திவுக்கு மன்னன்
அன்ன மானிடர் தம்வலி யாதென வறைந்தான்.

என்ன - என்று மொழிந்து, கை எறிந்து - கைகொட்டி, இடி உரும் ஏறு என நக்கு - பேரிடிபோன்று (பெருமுழக்கம் உண்டாகு மாறு) சிரித்து, புட்கரம் தீவுக்கு மன்னன் - புட்கரத்தீவிற்கு அரச னை, வன்னி என்பவன் - வன்னி என்பவன், மின்னும் - ஒளிவிடு கின்ற, வெள் எயிறு அரக்கரை - வெண்ணிறமான பற்களையுடைய இராக்கதர்களை, அம் கையால் விலக்கி - அழகிய கரங்களால் அகற்றி, 'அன்ன - அத்தகைய, மானிடர் தம் வலி - மனிதர் களுடைய ஆற்றல், யாது - எத்தகையது', என அறைந்தான் - என்று சொன்னான் (வினவினான்).

கையெறிந் திடியுருமேறென நக்கு: 'கையெறிந் துருமென நக்கான்' (யுத்த. 128). புட்கரத் தீவு: 'புக்கரப் பெருந்தீவிடை யுறைபவர் புகழோய்' (யுத்த. படைக்காட்சி. 17). இப்படலம் 36ஆவது பாட்டில், 'அரக்கர்தம் குழுவையும் வென்றார், அம்பி னாற் சிறுமனிதரே' என்று கூறினமையின், அந்த மனிதர் யார்? அவர் வலி எத்தகையது என்று வினவினான் வன்னி.

பி - ம். 1. கைம்மறித்து; உருமாமென, உருவாமென; நக்க.

2. வாளெயிற்று.

3. வன்னி யென்றவன்; புட்கலத்.

4. அன்னமானுட ரார்வலி, அன்னமானுடர் யாரவர்; வலியரென்று, யாரவதென்று; அன்ன தோர்நரர் வலியரென் றேயவர்க் கறைந் தான்.

## மாலியவான் பதில் கூறத்தொடங்குதல்

3219 மற்ற வாசகங் கேட்டலும் மாலிய வான்வந்
துற்ற தன்மையும் மனிதர தூற்றமு முடனும்
கொற்ற வாநரத் தலைவர்தந் தகைமையும் கூறக்
கிற்றும் கேட்டிரா லென்றவன் கிளத்துவான் கிளர்ந்தான்.

மற்று - பின்பு, அ வாசகம் கேட்டலும் - (அந்த வன்னியின்) சொற்களைக் கேட்டவுடனே, மாலியவான் - மாலியவான் என்பவன், வந்து - வந்து, உற்ற தன்மையும் - (அப்போது) நிகழ்ந்துள்ள தன்மையையும், மனிதரது ஊற்றமும் - மானிடரின் வன்மையையும் உடன் ஆம் - உடன் நிற்கின்ற, கொற்றம் வாநரர் தலைவர் தம் தகைமையும் - வெற்றி பொருந்திய குரங்குத் தலைவர்களின் பண்பினையும், கூற கிற்றும் - எடுத்துச் சொல்லும் ஆற்றலுடையேம் (சொல்வோம்), கேட்டிர் - கேளுங்கள்', என்று - என்று சொல்லி, அவன் கிளத்துவான் கிளர்ந்தான் - அவன் சொல்லுவதற்கு எழுந்தான். ஆல்: அசை.

அவ்வாசகம்: யுத்த. படைக்காட்சி. 36, 37 காண்க. கிளத்து வான்: வானீற்று வினையெச்சம். அவன்: மாலியவான். மற்ற வாசகம் கேட்டலும்: 'மற்றவன் சொன்ன வாசகங் கேட்டலும்' (அயோத்தி. மந்திரப். 42).

பி - ம். 1. தலைவர்தந் தலைமையும், வலிமையும்; கூறிக்.

4. கேட்டிரேல், கேட்டிரே; என்றனன்; உணர்த்துவான், துணிந்தான்.

## மாலியவான் இராமபிரான் வல்லமையைக் கூறுதல்

3220. பரிய தோளுடை விராதன்மா ரீசனும் பட்டார்
கரிய மால்வரை நிகர்கர தூடணர் கதிர்வேல்
திரிசி ராவவர் திரைக்கட லனபெருஞ் சேனை
ஒருவி லாலொரு நாழிகைப் பொழுதினி னுலந்தார்.

'ஒரு விலால் - (இராமபிரானுடைய) ஒரே வில்லினால், பரிய தோள் உடை விராதன் மாரீசனும் பட்டார் - பருத்த தோள்களையுடைய விராதனும் மாரீசனும் மரித்தனர்; கரிய மால்வரை நிகர்

கரதூடணர் - கரிய பெரிய மலையை ஒத்த கரதூடணரும், கதிர் வேல் - ஒளிவாய்ந்த வேலினையுடைய, திரிசிரா அவர் - திரிசிரா என்கின்ற அவர்களும், திரைகடல் அன பெரு சேனை - (தங்களுடைய) அலை பொருந்திய கடலையொத்த பெருஞ்சேனையோடு, ஒரு நாழிகை பொழுதினில் உலந்தார் - ஒரு நாழிகைப் பொழுதினில் அழிந்துபட்டனர்.

செய்யுள் ஆகலின் நிகழ்ச்சிகள் முன்பின்னாக கூறப்பெற்றன. கரதூடணர் திரிசிரா வதம் முன்னும், மாரீசன் வதம் பின்னும் நிகழ்ந்தமை காண்க. திரிசிரா: இவனை, 'முத்தலைக் குரிசில்' (ஆரணிய. 474) என்பர். இவன் கரனுடைய படைத்தலைவன் என்பது முதனூலால் அறியப்படுவது. ஒரு விலாலொரு நாழிகைப் பொழுதினி னுலந்தார்: 'எல்லொன்று கமலச்செங்கணிராமனென் றிசைத்த ஏந்தல், வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏறினர் விண்ணி லென்றான்' (ஆரணிய. 617); 'கன்னலொன்றிற் களப்படக் கால்வளை, வின்னலம் புகழ்ந் தேங்கி வெதும்புவாள்' (சுந்தர. 351); உலத்தல்: 'உள்ளிற் சாகிலன் புறத்தினு முலக்கிலன்' (யுத்த. 146).

பி - ம். 1. வீரமாரீசனும் பட்டான்.
2. கரன்றூடணன்.
3. திரைக்கடலெனும், எனப்; குன்றையு மெடுக்குறும்.
4. போதிடை, பொழுதிடை. 40

சில பிரதிகளில் இச்செய்யுள் முதலடி நான்காவதடியாக உள்ளது.

3221. ஆழி யன்னநீ ரறிதிரன் றேகட லனைத்தும்
ஊழிக் காலெனக் கடப்பவன் வாலியென் போனை
ஏழு குன்றமு மெடுக்குறு மிடுக்கனை யிந்நாள்
பாழி மார்பகம் பிளந்துயிர் குடித்ததோர் பகழி.

'ஆழி அன்ன நீர் - கடலைப்போன்று பரந்த நீங்கள் (ஒரே நாளில்), கடல் அனைத்தும் - எல்லாக் கடல்களையும், ஊழி கால் என கடப்பவன் - பிரளயகாலத்துக் காற்றுப்போன்று கடப்பவனாகிய, வாலி என்போனை - வாலி என்பவனை, அறிதிர் அன்றே -

அறிவீர்கள் அன்றோ? ஏழு குன்றமும் - ஏழு குலவரைகளையும், எடுக்குறும் - அகழ்ந்தெடுக்கவல்ல, மிடுக்கனை - வலிசெறிந்த அவனை, இ நாள் - இக்காலத்து, ஓர் பகழி - இராமபிரானுடைய ஓர் அம்பானது, பாழி மார்பு அகம் பிளந்து உயிர் குடித்தது - வலிய மார்பினிடத்தைப் பிளந்து அவன் உயிரைப் பருகிற்று.

சேனைப் பரப்பிற்குக் கடல் உவமை. ஏழு குன்றமும் எடுக்குறும் மிடுக்கன்; (ஒப்பு): 'மேருவே முதற் கிரிகள் வேரொடும், பேருமேயவன் பேருமேல்' (கிட்கிந்தா. 119). மிடுக்கன் - வலியன்; 'மிடுக்கிலாதனை வீமனே வில்லில் விசயனே' (தேவா. 647 : 2). பகழி உயிர் குடித்தது; கிட்கிந்தா. 288, 289. ஏழு குன்றம்: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், கந்தமாதனம்; கிட்கிந்தா. 174 உரை காண்க.

பி - ம். 1. அன்றேழ்.
2. காற்றெனக் கடப்பவன்.
3. ஏழு குன்றையும். 41

3222. இங்கு வந்துநீர் வினயதெ னெறிதிரைப் பரவை
அங்கு வெந்தில தோசிறி தறிந்தது மிலிரோ
கங்கை சூடிதன் கடுஞ்சிலை யொடித்தவக் காலம்
உங்கள் வான்செவி புகுந்தில தோமுழங் கோதை.

'நீர் இங்கு வந்து வினயது என் - நீர் இங்கு வந்து கேட்பது என்? திரை எறி பரவை - அலை மோதுகின்ற கடல், அங்கு வெந்திலதோ - அக்கினி யம்புகொண்டு இராமபிரானால் எரிக்கப் பட்டபோழ்து (நீர் இருக்கும்) அந்த இடத்தும் வெந்த ஒளி தெரிந்தலதோ? சிறிது அறிந்ததும் இலிரோ - அல்லது (அதனை நீவிர்) சிறிதும் கவனித்தீரல்லிரோ? கங்கை சூடி தன் கடுசிலை ஒடித்த அ காலம் - கங்கா நதியைத் தலையிற் கொண்ட சிவபெருமானுடைய வலிய வில்லினை முறித்த அந்தக் காலத்து, முழங்கு ஓதை - முழக்கஞ் செய்த ஓசை, உங்கள் வான் செவி புகுந்திலதோ - உங்களுடைய பெருஞ் செவியில் நுழைந்ததில்லையோ? ஓகாரங்கள் வினா.

இங்கு இராமபிரான் விடுத்த அக்கினியத்திரத்தால் கடல் வெந்ததும் அவன் சிவதனுசை இறுத்ததும் கூறப்பட்டன. இங்கும் நிகழ்ச்சிகள் முறை மாறிக் கூறப்பட்டமை காண்க. கங்கை சூடிய வரலாறு; பால. அகலிகை. 46, 61 ல் காண்க. கங்கை சூடி; 'கங்கை சடைவைத்தவனொடும்' (ஆரணிய. 742); மற்றும், (கிட்கிந்தா. 96, 182); (சுந்தர. 350, 459) கடுஞ்சிலை யொடித்தது; பால. கார்முக. 32, 34 ல் காண்க. அங்கு வெந்திலதோ; வெந்தபோது எழுந்த ஒளி காணப்படவில்லையோ? (ஒப்பு); 'ஊர் தீயிட்டதோங்கிரும் புகையே யோத' (சுந்தர. 1254); கடுஞ்சிலை யொடித்த வக்காலம், உங்கள் வான்செவி புகுந்திலதோ முழங்கோதை; 'மேரு என் துணைக் கணவன் ஆற்றற் குரனிலா திற்று வீழ்ந்த, அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலுமம்மா' (சுந்தர. 451).

பி - ம். 1. நீர வந்து.
2. வெந்நிலவோ; அறிந்தும்மிலிரோ.
3. சூடினன்.
4. கேட்டிலவோ; முழக்கோதை. 42

3223. ஆயி ரம்பெரு வெள்ளமுண் டிலங்கையி னளவில்
தீயின் வெய்யபோ ரரக்கர்தஞ்சேனைஅச் சேனை
போய தந்தகன் புரம்புக நிறைந்தது போலாம்
ஏயு மும்மைநூன் மார்பின ரெய்தவில் லிரண்டால்.

'இலங்கையின் அளவில் - இலங்கையின் எல்லைப் புறத்தில், தீயின் வெய்ய - தீப்போன்று கொடுமை வாய்ந்த, போர் அரக்கர் தம் சேனை - போர் அரக்கரின் படை, ஆயிரம் பெரு வெள்ளம் உண்டு - ஆயிரம் பெரு வெள்ளம் உண்டு; அ சேனை, - அந்தப் பெரும் படை, ஏயும் - பொருந்திய, மும்மை நூல் மார்பினர் - முப்புரி நூலைத்தரித்த மார்பினையுடைய அந்த இராம இலக்குவர், எய்த - அம்பு தொடுத்துவிட்ட, இரண்டு வில்லால் - இரண்டு விற்களால், அந்தகன் புரம்புக போயது - யமபுரத்தின் உட்புறத்தில் சென்று, நிறைந்தது போலாம் - நிறைந்தது போலும்.

தீயின் வெய்ய; (ஒப்பு); 'நெருப்பை வென்றவன் நிகும்பன்' (யுத்த. 491); அந்தகன் - யமன். உயிர்களை அவற்றின் வாழ்நாள்

முடிவில் கவர்ந்து செல்பவன் என்பது பொருள்; 'அந்தகன் முதலினோர்' (யுத்த. 105); 'பட்டிக்கடாவில் வருமந்தகா' (கந்தரலங்.) அந்தகன்புரம் - யமன்புரம்; வைவஸ் வதப்பட்டணம் என்ப. மும்மை நூல் - முப்புரி நூல்.

பி - ம். 1. தீய வெய்ய; சேனையைச் சேனை, சேனையுஞ் சேர.
3. அந்தகபுரம்; நின்றது.
4. ஏய, நூறம்ம வந்து, நூன்மார்பர் வந்து, நூன் ஏயும் மெய்ம்மை, நூல் மனிதரே யெய்தவில் லிரண்டால், மனிதரே. 43

இங்கோர் அதிகப் பாடல்:—

அன்ன தன்றியும் ஆழிநீர்க் கப்புறத் துலகில்
துன்னு றுஞ்சத கோடிவெள் ளத்தொகை யரக்கர்
தன்னை யோர் கணத் தெரித்தது சலபதி வேண்ட
மன்னி ராகவன் வாளி யொன் றவையறிந் திலிரோ.

3224. கொற்ற வெஞ்சிலைக் கும்பகன் னனுநுங்கள் கோமான்
பெற்ற மக்களும் பிரகத்தன் முதலிய பிறரும்
மற்றை வீரரு மிந்திர சித்தொடு மடிந்தார்
இற்றை நாள்வரை யானுமற் றிவருமே யிருந்தோம்.

'கொற்றம் வெம் சிலை - வெற்றி பொருந்திய கொடிய வில்லை யுடைய, கும்பகன்னனும் - கும்பகன்னனும், நுங்கள் கோமான் பெற்ற மக்களும் - உங்கள் அரசனாகிய இராவணன் பெற்ற (அதி காயன் முதலிய) புதல்வரும், பிரகத்தன் முதலிய பிறரும் - பிரகத் தன் முதலிய பிறரும், மற்றை வீரரும் - மற்றுமுள்ள வீரரும், இந்திரசித்தொடும் மடிந்தார் - இந்திரசித்துடன் இறந்துபட்டனர், இற்றை நாள்வரை - இந்நாள் வரையில், யானும் இருவருமே இருந் தோம் - யானும் இருவருமே எஞ்சி நின்றோம்.

கொற்ற வெஞ்சிலைக் கும்பகன்னன்; இவனுடைய வில்லாற் றலைக் கும்பகன்னன் வதைப்படலத்துக் காண்க. நுங்கள் கோமான்; என்றது எள்ளிக் கூறியது. நுங்கள் கோமான் பெற்ற மக்கள் என்பதில் இந்திரசித்தும் அடங்கக் கூடும் எனினும், தனிச்

சிறப்புப் பற்றி இந்திரசித்தைப் பிரித்துக் கூறினர். 'முனிவர் வந்தார் அகத்தியரும் வந்தார்' என்ற இடத்துப் போல கோமான் பெற்ற மக்கள் - அதிகாயன், மகரக்கண்ணன் முதலான வர்கள். இற்றை; இன்று+ஐ; இருவர் அநுமன் வீடணன். மற்று - வினைமாற்று.

பி - ம். 1. கும்பகர்ணனுங்கள்.

2. மைந்தரும்; பிறுக்களும்; முதலினர்.

4. இவனும், அவனும். 44

3225. மூலத் தானையென் றுண்டது மும்மைநூ றமைந்த
கூலச் சேனையின் வெள்ளம்மற் றதற்கின்று குறித்த
காலச் செய்கையால் நீர்வந்து ளீரினித் தக்க
சீலச் சேனையுஞ் சேனையின் செய்கையுந் தெரிக்கில்.

'மூலம் தானை என்று உண்டு - மூலச் சேனை என்று ஒன்று உண்டு; அது - அது, மும்மை நூறு அமைந்த - மூன்று நூறு அமைந்த, கூலம் சேனையின் - தொகுதியின் சேனையின், வெள்ளம் - பரப்பு; அதற்கு - அந்தச் சேனைக்கு, இன்று - இன்று, குறித்த - போர் புரியுமாறு குறிக்கப்பட்ட, காலம் செய்கையால் நீர் வந்துளீர் - காலத்தியல்பால் நீர் வந்துளீர்; இனி தக்க சீலம் சேனையும் - இனித் தகுதிவாய்ந்த வீரப்பான்மையுள்ள (பகைவர்) படையையும், சேனையின் செய்கையும் - சேனையின் செய்கையையும், தெரிக்கில் - தெரிவிக்கப் புக்கால். இது குளகமாக, 'ஏகியது' என அடுத்த கவியொடு தொடரும்.

மூலத்தானை; இதன் விவரம் அடுத்துவரும் 'மூல பல வதைப் படலத்துக் காண்க. இங்குக் கூறியது கொண்டு, இங்கே குறிக்கப் பட்ட படைத் தலைவர்களைத் தவிர, மூலபலமாகத் தனிப்பட்டுள்ள மும்மை நூறமைந்த சேனை உண்டென்பது அறியப்படும். மும்மை; 'மும்மையா முலகந்தந்த' (சுந்தர. 560). கூலம் - தொகுதி. சீலம் - இடம் நோக்கி வீரப்பான்மை என்று கொள்ளப்பட்டது.

பி - ம். 1. தானையை, தானையென்றமைந்தன.
2. சேனையில்; இதற்கு.
3. வந்திலிரெனத்தக்க, வந்திலிரேலக்கழலோர், வந்திராயினக் கழலோர்
4. செய்கையுங் கவிப்பெருஞ் சேனையும்; செய்கையைச் சேனையின் செய்கையும், செய்கையுஞ் சேனையின் செய்கையும். 45

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

3226. ஒருகு ரங்குவந் திலங்கையை மலங்கெரி யூட்டித்
திருகு வெஞ்சினத் தக்கனை நிலத்தொடுந் தேய்த்துப்
பொருது தூதுரைத் தேகிய தரக்கியர் புலம்பக்
கருது சேனையாங் கடலுமாக் கடலையுங் கடந்து.

'ஒரு குரங்கு வந்து இலங்கையை மலங்கு எரி ஊட்டி - ஒரு குரங்கு வந்து இலங்கையைக் கலங்குதற்குக் காரணமான தீயை மூட்டி, அரக்கியர் புலம்ப - அரக்கியர் புலம்புமாறு, திருகுவெம் சினத்து அக்கனை - மாறுபடுகின்ற கடுங் கோபத்தையுடைய அக்கனை, நிலத்தொடுந் தேய்த்து - தரையில் இட்டுத் தேய்த்து, பொருது - போர் செய்து, கருது சேனை ஆம் கடலும் - மதிக்கத் தக்க சேனையாகிய கடலையும் (கொன்று), தூது உரைத்து - தூது சொல்லி, மா கடலையும் - பெரிய கடலையும், கடந்து ஏகியது - கடந்து போய்விட்டது.

ஒரு குரங்கு - அநுமன். மலங்கு எரி - மலங்குதற்குக் காரணமான தீ. மலங்குதல் - கலங்குதல். திருகு வெஞ்சினத்து; 'திருகு வெஞ்சினத்தன தெறுகட்டியுக' (யுத்த. 1336); அக்கனை நிலத்தொடும் தேய்த்து ஒரு குரங்கு சேனைக் கடலையும் கடந்து பெரிய கடலையும் கடந்து சென்றது; மாகடல்; கரிய கடலுமாம்.

பி - ம். 1. மலக்கெரி.
4. சேனையாங் கடலையுங் கடலையும், சேனையுங், சேனைமாக்; கொன்று மாக் கடலையும். 46

3227. கண்டிலீர் கொலாங் கடலினை மலைகொண்டு கட்டி
மண்டு போர்செய வானர ரியற்றிய மார்க்கம்
உண்டு வெள்ளமோ ரெழுபது மருந்தொரு நொடியிற்
கொண்டு வந்தது மேருவிற் கப்புறங் குதித்து.

'கடலினை - ஆழியை, மலை கொண்டு கட்டி - மலைகளைக் கொண்டு அணைத்து, மண்டு போர் செய-மிக்குச் செல்லும்படியான போரினைப் புரியுமாறு, வானரர் இயற்றிய மார்க்கம் கண்டிலீர் கொலாம் - குரங்குகள் ஆழியின் அமைத்த சேதுவைப் பார்த்திலீரோ? (எதிரிகள் பக்கத்தில்) வெள்ளம் ஓர் எழுபது உண்டு - எழுபது வெள்ளம் சேனை உள்ளது; (ஒரு குரங்கு), மேருவிற்கு அப்புறம் குதித்து - மேருமலைக்கு அப்பால் குதித்து, ஒரு நொடியில் - ஒரு நொடிப்பொழுதில், மருந்து கொண்டு வந்தது - மருந்து மலையைக் கொண்டுவந்தது.

கொலாம் - கொல், ஐயம். சேது அணை கட்டியது; மார்க்கம் - வழி எனப் பொருள் தரும் வடசொல்; இங்கு சேது அணை. எழுபது வெள்ளம் குரக்குச் சேனையில் ஒவ்வொரு குரங்கும் அநுமனைப் போன்ற பேராற்றல் வாய்ந்திருந்தது என்பது கருத்து.

பி - ம். 1. கொலோ; மலைகொடு.

2. போர் செய்த வாநரம்.

3. மருந்தொன்று.

4. குறித்து, குதித்தே. 7

3228. இதுவி யற்கையோர் சீதையென் றிருந்தவத் தியைந்தாள்
பொதுவி யற்கைதீர் கற்புடைப் பத்தினிப் பொருட்டால்
விதிவி ளைத்ததவ் வில்லியர் வெல்கநீர் வெல்க
முதுமொ ழிப்பதஞ் சொல்லினே னென்றுரை முடித்தான்.

'இது - இப் போர் உண்டான, இயற்கை - இயல்பு, ஓர் சீதை என்று - ஒப்பற்ற சீதை என்று, இரு தவத்து இயைந்தாள் - மிக்க தவத்துடன் கூடியவளான, பொது இயற்கைதீர் கற்புடை பத்தினி பொருட்டால் - பொதுவியற்கை ஒழிந்த (பிறர் எவர்க்கும் இல்லாது தனக்கே சிறப்பாக அமைந்த) கற்பினையுடைய, பத்தினி பொருட்டால் - ஒரு பத்தினியை முன்னிட்டு, விதி விளைத்தது - விதி உண்டு பண்ணியது; அவ் வில்லியர் வெல்க - அந்த வில்லியரே வெற்றி பெறுக, நீர் வெல்க - (அல்லது) நீர் வெற்றி பெறுக, முது மொழி பதம் சொல்லினென் - பழமையான மொழிகளால் (கிழவன் பேச்சாக) நிகழ்ந்தவற்றைப் பகர்ந்தேன்', என்று உரை முடித்தான் - என்று தன் பேச்சை நிறுத்தினன், மாலியவான்.

இருந்தவத் தியைந்தாள் - பிராட்டி ; 'நற்பெருந் தவத்தள்' (சுந்தர. 1273); பொதுவியற்கை தீர்கற்புடை; 'இற் பிறப்பென்ப தொன்றும், கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273); 'சானகியார்பேரழகு மவர்தம் கற்பும்' (யுத்த. இரா. வதை. 242) என்று வண்டோதரி கூறியது காண்க. 'பெருஞ்சிறைக் கற்பினளைப் பெண்ணினை' (யுத்த. 2821); 'தவத் தியைத் தருமக் கற்பின், தெய்வதந் தன்னை' (யுத்த. 66) என்பது இலக்குவன் கூற்று. 'பத்தினி தன்னைத் தீண்டி' (யுத்த. 2862) 'அருந்ததிக் கற்பினாளுக் கழிவுண்டோ' (யுத்த. 2868); விதி விளைத்தது - விதியின் செயல் பல இடங்களில் இக் காப்பியத் தில் காணலாம். முதுமொழி - வயோதிகன் மொழி என்க. பொது வியற்கைதீர்; (ஒப்பு): 'போகம் வேண்டிப் பொதுச் சொற்பொறு அன்' (புறநா. 8); 'பொது மொழி பிறர்க்கின்றி முழுதாளும் செல்வர்க்கு' (கலித். 68); 'அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற்பொறுஅய்' (நெடுநல். அவதாரிகை); 'கொடிய முரசுங் கொற்ற வெண்குடையும், பிறர்கொளப் பொறுஅன்றனே கொண்டு' (சிதம்பர. மும்மணி. 25); 'தன்னலதில்லை தன்னை யொப்பெனத் தனக்கு மீந்தாள்' (சுந்தர. 1271).

பி - ம். 1. இருந்தவத் தூயாள்.

3. விளைத்தவா.

4. முதுமொழிப்பலன்; என்றவன் முடிந்தான். 48

## இத்தனை நாள் பொராமைக்குக் காரணம் என்? என குரங்குடன் பொருதல் தகாதென்றிருந்தேனென்று இராவணன் கூறுதல்

3229. வன்னி மன்னனை நோக்கிநீ யிவரெலா மடிய
என்ன காரண மிகல்செயா திருந்ததென் றிசைத்தான்
புன்மை நோக்கினன் நாணினுற் பொருதிலே னென்றான்
அன்ன தேலினி யமையுமெங் கடனஃ தென்றான்.

வன்னி - வன்னி என்பவன், மன்னனை நோக்கி - (அரக்கர் கோனாகிய) இராவணனைப் பார்த்து, 'நீ - நீ, இவர் எலாம் மடிய - இவர்கள் அனைவரும் மரிப்பவும், இகல் செயாது இருந்தது என்ன காரணம் - போர் புரியாதிருந்தது என்ன காரணம்', என்று

இசைத்தான்-என்று கேட்டான், 'புன்மை நோக்கினன் - (குரக்குச் சேனையின்) இழிவைக் கருதியவனாய், நாணினால் பொருதிலேன் - வெட்கத்தால் போர் செய்யவில்லை', என்றான் - என்று பகர்ந்தான் இராவணன்; 'அன்னதேல் - அவ்வாறெனின், இனி - இனி, எம் கடன் அஃது அமையும் - எனது கடமையாக அப் போர் புரிதல் அமையும்', என்றான் - என்று கூறினன் வன்னி.

இகல் செயல் - போராடுதல்; 'இகல் செயக்கருதி யிருள் திரண்டாலித்து' (அரிச். பு. விவாக. 11); புன்மை நோக்கினன்.

பி - ம். 1. அவரெல்லாம்.

2. காரணத்து.

3. நோக்கினுன், கண்டியாம்; நாணினன், நாணினேன்; பொருதிலன், பொருதிலம்.

4. அன்னதே; கடமைய வென்றான், கடமையு மென்றான், கடமையஃதன்றே, கடமைய தென்றான், கடமையுமிதே. 49

## மாலியவான் சொற்படி சமாதானத்திற்கு இது காலமன்று என்று வன்னி கூறுதல்

3230. மூது ணர்ந்த விம் முதுமகன் கூறிய முயற்சி
சீதை யென்பவள் தனைவிட்டம் மனிதரைச் சேர்தல்
ஆதி யின்றலை செய்தக்க தினிச்செய விழிவால்
காத லிந்திர சித்தையா மியாண்டினிக் காண்டும்.

'மூதுணர்ந்த இ முதுமகன் - பழஞ் செய்திகளை நன்கறிந்த இந்தக் கிழமகன் (மாலியவான்), கூறிய முயற்சி - சொன்ன முயற்சி, சீதை என்பவள் தனை விட்டு - சீதை என்பவளைச் சிறைவிடு செய்து, அ மனிதரை சேர்தல் - அந்த மனிதரைக் கூடுதலாகும்; (அது), 'ஆதியின் தலை செய் தக்கது-தொடக்கத்திலேயே செய்யத் தக்க தொன்று; இனி செயல் இழிவு - இனிமேல் செய்வது தாழ் வினை விளைப்பதாகும்; காதல் இந்திரசித்தை யாம் யாண்டு இனி காண்டும் - அன்பிற்குப் பாத்திரமான இந்திரசித்தை யாம் இனி எங்கே காணப்போகிறோம்? ஆல்: அசை.

மாலியவான் சொற்போக்கிலிருந்து அவன் உட் கருத்துச் சீதையை விட்டு விடுவதும் இராமர் பக்கம் சேரலும் என்று

தெரிகின்றது என்றான் வன்னி. செய்தக்க; 'செயதக்க வல்ல செயக்கெடும்' (குறள். 466); 'காதலிந்திர சித்தையாமி யாண் டினிக் காண்டும்' என்பது இராவணன் கூற்றாகவும் சிலர் மொழிவர். காதல் - காதலுக்குரிய பிள்ளை எனினுமாம். 'மாரு தத்தின் காதலைத்தான்' (யுத்த.).

பி - ம். 2. மனிதரைப் பொருந்தல்.
3. செயத்தக்கது ; அழிவால்.
4. இந்திரசித்தையும் ; மாய்வித்தல் ; கண்டும், காண்மே. 50

3231. விட்ட மாயினு மாதினை வெஞ்சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலம் பெறுவது பழியால்
முட்டி மற்றவர் குலத்தொடு முடிக்குவ தல்லால்
கட்ட மத்தொழில் செருத்தொழி லினிச்செயுங் கடமை.

'மாதினை விட்டம் ஆயினும் - சீதையை விட்டு விட்டோம் எனினும், வெம் சமம் விரும்பி - கொடிய போரை விரும்பி, பட்ட வீரரை - உயிர் நீத்த வீரர்களை, பெறுகிலம் - இனிப் பெற மாட்டோம் ; பெறுவது பழி - (நாம்) அடைவது பழியேயாகும் ; முட்டி - சிறிது முயன்று, மற்றவர் - பகைவரை, குலத்தொடு முடிக்குவது அல்லால் - குலத்தொடு ஒழித்துக் கட்டுவதன்றி, அ தொழில் கட்டம் - அந்தச் சமரசத் தொழில் மிகவும் கஷ்ட மானது ; இனி செயும் கடமை செரு தொழில் - இனிப் புரிய வேண்டிய கடமை போர்த் தொழிலே யாகும். ஆல் : அசை.

பி - ம். 1. விட்டமாதினை யியினும், விட்டமாதரை யியினும், விட்டம்மாதினை யாயினும்.
3. குலத்தையும்.
4. கட்டமைத் தொழில் ; கட்டமைத் தொழிலினிச் ; தொழில் செருச் செயும் ; கடனே. 51

பகைவரை வெல்ல அரக்கர் விடை கொண்டெழுதல்

3232. என்றெ ழுந்தன ரிராக்கத ருக்கநீ யாமே
சென்று மற்றவர் சில்லுடற் குருதிநீர் தேக்கி
வென்று மீளுதும் வெள்குது மேன்மிட லில்லாப்
புன்றொ ழிற்குல மாதுமென் றுரைத்தனர் போனார்

என்று எழுந்தனன் - என்று வன்னி எழுந்தான்; இராக்கதர் - அவன் உடனிருந்த இராக்கதர், 'இ இருக்க - நீ (இங்கேயே) இருப்பாய், யாமே சென்று - நாமே போய், மற்றவர் - அந்த மானிடரின், சில் உடல் - சிறிய உடற்கண் உள்ள, குருதி நீர் தேக்கி - உதிரத்தைப் பருகி. வென்று மீளுதும் - வெற்றியுடன் திரும்புவோம்; வெள்குது மேல் - நாணிப் பின்னிடுவோமானால், மிடல் இல்லா - வலிமையற்ற, புன் தொழில் - அற்பமான செயலினை யுடைய, குலம் ஆதும் - குலத்தில் தோன்றியவராவோம்', என்று உரைத்தனர் போனர் - என்று சூளுரைத்துச் சென்றார்.

பல்வேறிடங்களில் இருந்து அரக்கர் சேனைகளைத் தலைவருடன் வரவழைத்த செய்தி முதனூலில் இல்லை. இங்கு மூலபல வரவுக் காண்டம் முற்றும் என்றும்,' மூலபலஞ் சேனை காண்படலம் முற்றும் என்றும் சில பிரதிகளில் காணப்படுகிறது. மூலபலம் படைக் காட்சிப் படலம் முற்றும்; படைகாட்டுப் படலம் முற்றும் என்றும் சில பிரதிகளில் காணலாம்.

பி - ம். 1. எழுந்தனர்; இருத்தி.

2. சில்லுடைக் குருதியும்.

3. கொன்று; மீள்குதும்: வெள்குவமேல்; வெள்குவதன் மிடலில்லா, வெள்குவதேன் கொற்றவ வென்றார்.

4. குலமின்றினி யென்றவர் புகன்றார், இன்றினி யென்றனர் போனார், வென்று மீள்குதும் வெள்குவ தென்மிடலில்லா, புன்றொழிற் குல மொன்றவே யென்றனர் புகன்றார். 52

படைக் காட்சிப் படலம் முற்றும்.

---

# 30. மூலபல வதைப் படலம்

இஃது, மூலபலத்தை இராமபிரான் வதைத்ததைக் கூறும் படலம் என விரியும்.

## பொருமாறு போகத் தொடங்கிய சேனதிபதிகட்கு இராவணன் இராம இலக்குவரைக் கொல்லுமாறு கட்டளையிடுதல்

3233. வான ரப்பெருஞ் சேனையை யானெரு வழிசென்
றூன றக்குறைத் துயிருண்பெ னீயிர்போ யொருங்கே
ஆன மற்றவ ரிருவரைக் கோறிரென் றறைந்தான்
தான வப்பெருங் கரிகளை வாட்கொண்டு தடிந்தான்.

தானவர் பெரு கரிகளை - அசுரராகிய பெரிய யானைகளை, வாள் கொண்டு தடிந்தான் - வாளினால் துணித்தவனாகிய இராவணன், (சேனைத் தலைவர்களைப் பார்த்து) 'யான் ஒரு வழி சென்று - நான் ஒரு வழியே சென்று, பெரு வானரர் சேனையை - பெரிய குரங்குப் படையை, ஊன் அற குறைத்து உயிர் உண்பென் - உடல் துணியுமாறு வெட்டி உயிரைப் பருகுவேன்; நீயிர் - நீங்கள், ஒருங்கே போய் - ஒன்றுகூடிச் சென்று, மற்றவர் ஆன இருவரை - பகைவர்களாக அமைந்த அந்த இரண்டு வீரர்களை, கோறிர் - கொல்லுதிர்', என்று அறைந்தான் - என்று கட்டளையிட்டான்.

ஊன்: ஊனாலாகிய உடல்; தடிதல்: 'சுக்கிரீவனைத் தடிந்து' (யுத்த. மீட்சிப். 151); இராவணன் தானவப் பெருங் கரிகளைத் தடிந்தது உத்தரகாண்டத்துக் காண்க. படைகளை ஏவி வெற்றி பெறுவது மட்டும் அல்ல; தானே பொருதலும் கடன் என்று அறிவித்தான் இராவணன்.

பி - ம். 1. பெருந் தானையை.
2. ஊனுறை, ஊனறத் நடிந்து.
3. மானிடப் பெயரிருவரை, ஆன வப்பெயர்; அமைத்தான், அமைந்தான்.
4. கிரிகளை, கிளைகளை; வான்கொடு, வேரொடுஞ். 1

## இராவணன் மூலபலத்தை முற்படச்செல்ல ஏவுமாறு பணித்தல்

3234. எனவு ரைத்தலு மெழுந்துதம் மிரதமே லேறிக்
கனைதி ரைக்கடற் சேனையைக் கலந்தது காணு
வினைய மற்றிலை மூலமாத் தானையை விரைவோ
டினையர் முற்செல வேவுகென் றிராவண னிசைத்தான்.

என உரைத்தலும் - என்று (இலங்கேசன்) பகர்ந்தவுடனே, எழுந்து - (அச்சேனைத் தலைவர்கள்) எழுந்து, தம் இரதம் மேல் ஏறி - தம்முடைய தேரின்மீது ஏறி, கனை திரை - ஒலிக்கின்ற அலையைக் கொண்ட, கடல் சேனையை - கடல்போல் பரந்த படையை, கலந்தது காணு - சேர்ந்ததைக் கண்டு, 'மற்று வினையம் இலை - வேறு செயல் இல்லை, மா மூலம் தானையை - பெரிய மூலப் படையை, விரைவோடு - விரைவாக, இனையர் - இத்தகையரான இவர்களின், முன் செல - முன்னே செல்லுமாறு, ஏவுக - போக விடுக,' என்று - என்று, (இராவணன்) இசைத்தான் - கட்டளை பிறப்பித்தான்.

கனைகடல்; 'கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை, நுனியிற் கரும்புதின் றற்றே' (நாலடி. 38); திரைக் கடல்: 'குமுத னிட்ட குலவரை கூத்தரிற் றிமித மிட்டுத் திரியுந் திரைக் கடல்' (யுத்த. 657); காணு - கண்டு: செய்யாவென்னும் வாய்பாடு. வினயம் - 'வினயமீ தல்ல தில்லை' (ஆரணிய. 274); ஏவுக என்று - என்பது அகரவீறு குறைந்து ஏவுகென்று என நின்றது. அரக்கர் படைக்கு முன்னே தனது மூலப்படையை ஏவுமாறு பணித்தான் இராவணன்.

பி - ம். 1. தம்மூர்தி ; போயேறி.
2. கனைகடற் பெருஞ் ; கடிபெருஞ்.
3. வினைய முற்ற மூல மாந்தானை.
4. இனையர் ; ஏகென.

## இராவணன் வாநரசேனையின்மீது போர்க்கு எழுதல்

3235. ஏவி யப்பெருந் தானையைத் தானும் வேட் டெழுந்தான்
தேவர் மெய்ப்புகழ் தேய்த்தவன் சில்லியந் தேர்மேற்
காவன் மூவகை யுலகமு முனிவருங் கலங்கப்
பூவை வண்ணத்தன் சேனைமே லொருபுறம் போனான்.

தேவர் மெய் புகழ் தேய்த்தவன் - வானவர்களுடைய உண்மையான கீர்த்தியை அழித்தவனாகிய இராவணன், அ பெரு தானையை ஏவி - அந்தப் பெரிய மூலபலத்தை விடுத்து, தானும் வேட்டு எழுந்தான் - தானும் (போரில்) ஆசைகொண்டு எழுந்தவனாய், காவன் மூவகை உலகமும் - தன் காவலில் உள்ள மூவகை உலகமும், முனிவரும் கலங்க - முனிவரும் கலங்குமாறு, சில்லி அம் தேர் மேல் - சக்கரங்களைக் கொண்ட தேரின்மீது (ஏறி), பூவை வண்ணத்தன் - பூவை நிறத்தவனான இராமபிரானுடைய, சேனை மேல் - குரக்குப் படைமீது, ஒரு புறம் போனான் - ஒருபுறம் சென்றான்.

இராவணன் சென்றான் என்க. வேட்டு - விரும்பி; 'வேட்ட பொழுதில் அவையவை போலுமே, தோட்டார் கதுப்பினாள் தோள்' (குறள். 1105); 'அவியை நாய்வேட்ட தென்ன' (ஆரணிய. 873); சில்லி - தேர் உருளை; 'சில்லியொடுங் திரண்டன தேரெலாம்' (சுந்தர. 1193); காவன் மூவகை உலகம் - இலங்கேசனுடைய ஆட்சியில் உண்மை; 'உலக மூன்றுங் காவலோன் பின்னை' (ஆரணிய. 258, 261, 272, 335, 589, 752, 753, 847); (சுந்தர. 442, 443, 448, 474): மூவகை உலகம் - சுவர்க்கம் மத்தியம் பாதலம். உலகம்: இடவாகுபெயர். முனிவரும் - உம்மை உயர்வு சிறப்பு. பூவை - காயாம்பூ; 'பூவைப்பூ வண்ணத்தான்' (ஆரணிய. 281); குரக்குப் படைப் பெரு வெள்ளமாகப் பல திசைகளிலும் பரவி நின்றமையின்' ஒருபுறம் போனான் எனப்பட்டது.

பி - ம். 1. ஏவிய; சேனைமேல், சேனையை; விட்டு.
2. துய்த்தவன்; செயிர்த்தவன்.
3. அமரருங் கலங்க.
4. வண்ணான்றன்; ஒருதிறம்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

போன பின்பல புவனமென் றுரைக்கின்ற பொறைசேர்
ஆன அண்டங்க ளெவற்றினு மமர்ந்திரு மூலத்
தானை தன்னையு மெழுகெனச் சாற்றினர் தறுகண்
கோனு ரைத்தமை தலைக்கொளும் கொடும்படைத் தலைவர்.

3236. எழுக சேனையென் றியானைமேல் மணிமுர செற்றி
வழுவில் வள்ளுவர் துறைதொறும் விளித்தலும் வல்லைக்
குழுவி யீண்டிய தென்பராற் குவலய முழுதுந்
தழுவி விண்ணையுந் திசையையுந் தடவுமாத் தானை.

வழுவில் வள்ளுவர் - தம் தொழிலில் எந்தவிதமான குறை பாடும் காண்டற் கரிய வள்ளுவர், 'சேனை எழுக - படை எழுவதாக', என்று - என்று, யானைமேல் மணி முரசு எற்றி - யானைமீது வைத்து அழகிய முரசத்தை அடிப்பித்து, துறை தொறும் - போர் நிகழவிருக்கும் இடங்களில் எல்லாம், விளித்தலும் - அறைகூவிச் செல்லுதலும், வல்லை - விரைவில், குவலயம் முழுதும் தழுவி - பூமி முழுதும் அணைத்துக்கொண்டு, விண்ணையும் - வானகத்திலும், திசையையும் - திக்குக்களிலும், தடவும் - சென்று தீண்டும், மா தானை - அந்தப் பெரியபடை, குழுவி ஈண்டியது என்பர் - கும்பலாக நெருங்கியது என்பர். ஆல் : அசை.

இராவணனுடைய மூலப்படை எங்கும் பரந்து நின்றது. முரசு - போர் முரசு; வள்ளுவர் - 'வள்ளுவர் சாக்கையெனும் பெயரரசர்க் குட்படு கருமத் தலைவர்க் கொன்றும்' (பிங்); 'ஏவின வள்ளுவர் இராம னுளையே' (அயோத்தி. மந்தரை. 25); 'ஆனை மேல் முர சறைந்தனர் வள்ளுவர்' (சுந்தர. 869); 'எழுக வெம் படைக ளென்ரு னேயெனு மளவி லெங்கும், முழுமுர செற்றிக் கொற்ற வள்ளுவர் முடுக்கி' (சுந்தர. 1294); வழுவில் - 'வழுவலில் வெள்ளத்தானை, (சுந்தர. 1294); (மணி. விழாவறை காதை. 27-31ம் காண்க. அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட, முரசெறி வள்ளுவ முதியனை' 'திருநாள் படைநாள் கடிநா ளென்றிப், பெரு

நாட் கல்லது பிறநாட் கறையாச், செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்' (பெருங். 1:155-156; 2:32—34); விளித்தல் - உரக்கக் கூவுதல்; 'வாய் விளித்தெழு' (யுத்த. மூலபல. 135); குவலயம் - பூமி; 'இவ்வானுங் குவலயமு மெல்லாமும்' (திருவாச. திருவெம். 12).

பி - ம். 1. அணி முரசு; ஏற்றி.

2. துறை துறை; விளிக்கலும்.

3. குழுவின், குழுவும்; நீண்டியது.

4. மண்ணையும் விசும்பையும்; மத்தானே. 4

## குழுவிய சேனையின் வருணனை

3237. அடங்கும் வேலைக ளண்டத்தி னகத்தகன் மலையும்
அடங்கு மன்னுயி ரனைத்துமவ் வரைப்பிடை யவைபோல்
அடங்குமே மற்றப் பெரும்படை யரக்கர்த மியாக்கை
அடங்கு மாயவன் குறளுருத் தன்மையி னல்லால்.

அ பெரும் படை - (மிகவும் பரந்திருந்த) அந்தப் பெரும் படை தாங்கிய, அரக்கர்தம் யாக்கை - இராக்கதரின் உடல்கள், அடங்கும் மாயவன் - (தன்னுள் மூன்றுலகமும்) அடங்குதற்குக் காரணமான திருமாலுடைய, குறள் உரு தன்மையின் - வாமன உருவத்தின் தன்மையில், அல்லால் - (சிறு வரம்பினதான) அந்த இலங்கைக்குள், (அடங்கி யிருத்தலன்றி), அடங்கும் வேலைகள் - (தன்னகத்தே) அடங்கிய கடல்களையுடைய, அண்டத்தின் அகத்து - அண்ட கோளத்துள்ளே, அகல் மலையும் - அகன்ற மலைகளும், மன் உயிர் அனைத்தும் அடங்கும் - நிலைபெற்ற உயிர்கள் அனைத்தும் அடங்கி நிற்கும் அவைபோல் அடங்குமே - அவைபோன்று அடங்குவ தாகுமோ? மற்று: அசை.

பேர் அண்டத்தில் உள்ள கடல் மலை உயிர்கள் யாவும், வாமன வடிவு கொண்ட திருமாலின் அகட்டிடை அடங்கியிருந்தது போன்று, மிகவும் பரந்த பெரும் சேனை அவ்விலங்கையினுள் அடங்கி நின்றதென்க........' நின்றகான் மண்ணெலாம் நிரம்பி யப்புறம், சென்றுபா விற்றில சிறிது பாரெனு, ஒன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை, வென்றகான் மீண்டது வெளிபெ

ருமையே' (பால. வேள்வி. 36); உவமையணி. யாக்கை: என்பு முதலிய எழுவகைத் தாதுக்களான் சேர்த்துக் கட்டப்பட்டது என்று உடலுக்குக் காரணக்குறி. மன்னுயிர்: 'மன்னுயி ரெல் லாந் தானே வருவித்து வளர்க்கு மாயன்' (யுத்த. 417); 'மாரி வறங்கூறின் மன்னுயி ரில்லை' (மணி. 7 : 10).

பி - ம். 1. அகத்தன மலைகள்.

2. முன்னுயிர்; அனைந்துமால், அனைத்தையும்; அவர் போய், அவர் போல்.

3. மற்றைப்; இரும்படை; அரக்கரதாக்கை.

4. தன்மையி னவரால்; தன்மைய ரல்லார்; தன்மையா லல்லால்; அடங்குமோ மற்ற; அடங்கு மாய்வதற் குற்றெடு தன்மையவானல்.

'தன்மையவல்லால்' என்பது ஓர் பிரதியில் நான்காமடி.

3238. அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த
மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மணாளர்
நிறத்துக் காரன்ன நெஞ்சினர் நெருப்புக்கு நெருப்பாய்ப்
புறத்தும் பொங்கிய பங்கியர் காலனும் புகழ்வார்.

(அந்த மூலபலத் தானை வீரர்) அறத்தை - அறத்தை, தின்று (உணவாக) உட்கொண்டு, அரு கருணையை பருகி - அருமையான கருணையை (நீராகப்) பருகி, வேறு அமைந்த - அறத்திற்கு எதிரிடையாக அமைந்த, மறத்தை - கொடுமையை, பூண்டு - அணியும் ஆபரணமாக மேற்கொண்டு, வெம் பாவத்தை மணம் புணர் மணாளர் - கொடிய பாவத்தை மனைவியாகக் கொள்கின்ற மண மக்கள்; கார் அன்ன நிறத்து நெஞ்சினர் - மேகம் போன்ற நிறத் தினையும் கரிய நெஞ்சினையும் உடையவர்; நெருப்புக்கு நெருப்பாய் - நெருப்புக்கு நெருப்புப் போன்று (மிகவும் சினம் கொண்டு, அம் மனத்தினுள்ளே இருக்கும் நெருப்பு), புறத்தும் பொங்கிய பங்கியர் - புறத்தும் பொங்கிப் பரந்தாற்போன்ற (செம்பட்ட) மயிரை யுடையவர்; காலனும் புகழ்வார் - (கொடுவினையில் தன்னிலும் மிக்கவர் என்று) யமனாலும் புகழத்தக்கவர்.

உருவமும் கறுப்பு உள்ளமும் கறுப்பு 'உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை. 81) போன்று என்க. நெருப் பாய்ப் பொங்கிய பங்கியர்; 'தீயென நிமிர்ந்த குஞ்சியர்' (யுத்த.

படைக். 27). கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள. தானை வீரரை மணமக்களாக உருவகம் செய்து அவர்க்கு உணவும், பானமுங் பூணும், வாழ்க்கைத் துணையும் கூறிய நயம் பாராட்டத் தக்கது. பங்கி: ஆண் மயிர். காலனும்: உம்மை உயர்வு சிறப்பு.

பி-ம். 1. வேரொடு மாந்து.

2. பூண்டரும்.

3. நிறத்துக் காரெனும்; நிறத்திற் காரென்ற; நிறத்திற் காரன்ன; நெருப்பிற்கு நெருப்பால்.

4. புறத்திற்; போகிய; புகல்வோர். 6

3239. நீண்ட தோள்களால் வேலையைப் புறஞ்செல நீக்கி
வேண்டு மீனெடு மகரங்கள் வாயிட்டு விழுங்கித்
தூண்டு வானுரு மேற்றினைச் செவிதொறுந் தூக்கி
மூண்ட வான்மழை யுரித்துடுத் துலாவரு மூர்க்கர்.

நீண்ட தோள்களால் - நீண்ட கரங்களால், வேலையை புறம் செல நீக்கி - ஆழி நீரைப் புறத்தே செல்லுமாறு அகற்றி, வேண்டும் மீனொடு - தேவையான மீன்களுடன், மகரங்கள் வாய் இட்டு விழுங்கி - மகரங்களை வாயிலேபோட்டு விழுங்கி, தூண்டு வான் உரும் ஏற்றினை - மேகத்தினல் எழுப்பப்படுகின்ற பேரிடியை, செவிதொறும் தூக்கி - காதுகளுக்கு அணியாக அணிந்து, வான் மூண்ட - ஆகாயத்திலே மூண்ட, மழை உரித்து - மேகங்களை உரித்து, உடுத்து உலாவரும் மூர்க்கர் - உடுத்துக்கொண்டு உலாவுகின்ற கொடியர்.

இச் செய்யுட்கண்ணும், அந்தச் சேனை வீரருடைய பேர் உடலும், கழிபேரிரையும், அணிகளும், உரையும் கூறப்பட்டன. முதலடிக்கு: (ஒப்பு); 'திவளப்பாற் கடல் வறள்படத் தேக்கினர் சில நாள்' (யுத்த. படைக். 14); 'ஆருத முன்னம் அகன் வேலையை யாறு செய்தான்' (யுத்த. 825); 'ஆழியேழுந்தன்னிரு தாளள வெனக் கடந்தேறும்' (யுத்த. 132); மகரம்: முதலை; (சங். 81); ஒருவகை மீனுமாம்; 'துள்ளுறு மகர மீன்கள்' (சுந்த. 23); தாண்டுதல்: 'தூண்டு மின்னலும் வறுமையுந் தொடர்தர' (அயோத்தி. மந்தரை. 72); மூர்க்கர் - பிடிவாதக் குண முள்ள கொடியர்' 'மூர்க்கரும் முதலையும் கொண்டதுவிடா' (பழமொழி.)

நிறத்திற்கேற்ப உடையும் கரியதாதல் வேண்டிப் பொலும் மழையை யுரித்துடுத்தவர் எனப்பட்டது. உருவும் உடையும் உள்ளமும் கரியவர்.

பி - ம். 1. நாள்களால், கால்களால்.

2. கரங்களால் வாயிட்டு.

2. தூண்டுவார்.

4. மூண்டு; மாமழை; முரிக்துடுத்து, புரிந்துடுத்து; உலாய் நடை முயல்வார்; உலாய் வருமுருவர், உலாவரு முருவர், உலாவரு முனிவார். 7

இதன்பின் 'உண்ணுந்தன்மை' என்ற பாடல் சில பிரதியில்.

3240. மால்வ ரைக்குலம் பரலென மழைக்குலஞ் சிலம்பாக்
கால்வ ரைப்பெரும் பாம்புகொண் டசைத்தபைங் கழலார்
மேல்வ ரைப்படர் கலுழன்வன் காற்றெனும் விசையோர்
நால்வ ரைக்கொணர்ந் துடன்பிணித் தாலன்ன நடையார்.

(அந்தக் கொடிய வீரர்), மால் குலம் வரை பரல் என - பெரிய குல பர்வதங்கள் பருக்கைக் கற்களாகப் பொருந்த, மழைகுலம் சிலம்பா - மேகக்கூட்டங்கள் சிலம்பாக, கால்வரை - பாதசயிலத்தில் உள்ள, பெரு பாம்பு கொண்டு அசைத்த பசுமை கழலார் - மலை களில் உள்ள பெரிய பாம்பு கொண்டு பிணித்த கழலினை உடைய வர்கள்; மேல்வரை படர் - விண்ணின் எல்லையிற் பறந்து செல் கின்ற, கலுழன் - கருடனும், வல் காற்று எனும் - பலத்த காற்றும் என்று பகரத்தக்க, விசையோர் - வேகத்துடன் கூடியவர்; நால் வரை கொணர்ந்து உடன் பிணித்தால் அன்ன நடையார் - தொங்குகின்ற மலைபோன்ற வாயினையுடைய யானையைக் கொணர்ந்து கட்டினாற்போன்ற நடையினர்.

மால்வரை குலம்: பெரிய மலைக் கூட்டம் எனினுமாம்; மால் என்பதற்கே மலை என்ற பொருள் உண்டாகலின் மால்வரை இரு பெயரொட்டுமாம். குலமலைகளைப் பருக்கைக் கற்களாக உள்ளிட்டு அம்மலைகளிற் றங்கிய மேகங்களைச் சிலம்பாக அணிந்து, மலைக் கண் உறையும் பாம்புகளாகிய நாணில் பசிய வீரகண்டையை கட்டி யுள்ள காலினர் என்பது முன் இரண்டடிகளின் கருத்து. கால்வரை;

பாதசயிலம், தாழ்வரை கழலார் எனவே கால் என்பது பெறப்படும், ஆகவே கால் என்பதற்குக் காலில் என்று பொருள் தரவில்லை. மலைகள் பரலும் மேகம் வீரக்கழலுமாக்கி மலைப்பாம்பு கொண்டு காலிற்கட்டுவோர் என்க. பாம்புகள் பெரும்பாலும் மலையடிவாரங்களிலேயே வதியும். பசுமை கழல் : பைங்கழல்; நடைவேகத்தில் கருடனையும் காற்றினையும் ஒப்பவர். நால்வரை : தொங்குகின்ற வாயினையுடைய மலைபோன்ற யானைகள்; யானைக்கு நால்வாய் என்ற பெயருண்டு. 'ஒருகை யிருமருப்பு மும்மதத்து நால்வாய்' (ஔவை). 'புழைத்தடக்கை நால்வாய்ப் பொருப்பு' 'ஒரு கோட்ட னிரு செவியன் மும்மதத்து நால்வாய்' (சிவ. சித்தி. பாயிரம்); (முத்தொள். 80); 'தொல்லையெனத் தொருவாய்க்கும் நால்வாய்க்கு மிரையெங்கே துரப்புவேனே' (தனிப்பா. விரராகவ. 3); நால்வரை அடையடுத்த உவம வாகுபெயர். ஓசை கருதி நால்வரைக் கொணர்ந்து என இரட்டித்தது. காற்றுப்போன்ற விரைந்த ஓட்டத்தினரேனும், மந்த கதியில் யானை போன்று கம்பீரமான நடையினர் என்க. 'போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்' (ஆரணிய. 221).

பி - ம். 1. மாவெனை ; போலென ; சிலம்பக்.
2. வரைக்குலஞ் சிலம்பு.
3. வெங்காற்றினும் ; வெய்யோர், விசையார், வெய்யார்.
4. பிணைத்தாலன்ன. 8

3241. உண்ணுந் தன்மைய வூன்முறை தப்பிடி னுடனே
பண்ணி னின்றமா லியானையை வாயிடும் பசியார்
தண்ணி னீர்முறை தப்பிடிற் றடக்கையாற் றடவி
விண்ணின் மேகத்தை வாரிவாய்ப் பிழிந்திடும் விடாயர்.

(மேலும் அவ்வீரர்), உண்ணும் தன்மைய - உண்ணத்தக்கனவான, ஊன் - மாமிச உணவு, முறை தப்பிடின் - உண்ண வேண்டிய வேளைக்குக் கிடைக்கத் தவறுமாயின், உடனே - உடனடியாக, பண்ணின் நின்ற - அலங்கரித்து நின்ற, மாலி யானையை - பெரிய வேழங்களை, வாய் இடும் பசியார் - வாயில் போட்டுக் கொள்ளக்கூடிய பசியை உடையவர்; தண் இன் நீர் - குளிர்ந்த இனிய நீர், முறை தப்பிடின் - குடிக்க வேண்டிய

வேளைக்குக் கிட்டாதாயின், தடகையால் தடவி - தமது பெரிய கரத்தால் தடவி, விண்ணின் மேகத்தை வாரி - வானத்தில் உள்ள மேகத்தை வாரி, வாய் பிழிந்திடும் விடாயர் - வாயில் பிழிந்து கொள்ளற்கேற்ற தானநீர் வேட்கை யுடையவர்.

ஊணும், அவர்களின் பேருடற்கும் பெரும் பசிக்கும் ஏற்ப அமைதல் வேண்டுமாகலின் 'உண்ணும் தன்மைய' எனப் பட்டது. ஊண் முறை தப்புதல்: உண்ணவேண்டிய வேளை பிறழுதல்; பண்ணினின்ற மால் யானை: திசையானைகள்; கிட்கிந்தா. 442. உரைக்குறிப்புக் காண்க. தண் இன் நீர் எனப் பிரிக்க. தப்புதல்: முறைபிறழுதல்; 'தப்பாமலென்னைத் தனியே யழைத்தருளி' (மல்லிச்சுரர் பதிகம்); 'ஆளன்றென்று வாளிற்றப் பார்' (புறநா. 74). தட கை - பெரிய கை; 'தடவுங் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல்.). விடாய் - தாகத்தின் வேகம், நீர் வேட்கை; 'தண்ணீர் விடாயெடுத்தால்' (இராமநா. யுத்த. 59).

பி - ம். 1. தன்மையவூண், தன்மையினூண்; பிழைத்துளவெனின், பிழைத்துள தெனின்; முறைதப்பினவ்.

2 மண்ணின் நின்ற.

3. தண்ணீரின்றியே தப்பிடிற்.

4. வானின்வாய்; பெய்திடும்; விடாயார். 9

இச் செய்யுள் சில பிரதிகளில் 'நீண்ட தோள்களால்' என்பதன் பின் காணப்படுகின்றது. இதன்பின் மால் வரை என்ற பாடல்.

3242. உறைந்த மந்தர முதலிய கிரிகளை யுருவ
எறிந்து வேனிலை காண்பவ ரிந்துவா லியாக்கை
சொறிந்து தீர்வுறு தினவினர் மலைகளைச் சுற்றி
அறைந்து கற்றமாத் தண்டின ரசனியி னுர்ப்பார்.

(மற்றும் அவ்வீரர்கள்), உறைந்த - பூமியில் நிலைபெற்ற, மந்தரம் முதலிய கிரிகளை - மந்தரம் முதலான மலைகளை, உருவ எறிந்து - ஊடுருவிச் செல்லுமாறு வீசி, வேல்நிலை காண்பவர் -

(தம்முடைய) வேலின் கூர்மையான நிலைமையைப் பரிசோதித்து அறிபவர்; இந்துவால் யாக்கை சொறிந்து தீர்வுறுதினவினர் - சந்திரனைக் கொண்டு தம் உடலைச் சொறிந்து தினவு தீர்த்துக் கொள்ளும் தன்மையார்; (தமது ஆயுதப் பயிற்சியில்), மலைகளை சுற்றி அறைந்து - மலைகளின்மேல் சுழற்றியடித்து, கற்றமா தண்டினர் - கற்றுக்கொண்ட பெரிய கதையினை யுடையவர், அசனியின் ஆர்ப்பார் - இடிபோன்று பெருமுழக்கம் செய்பவர்.

வேலின் தகுதியை அதனை மலைகளின்மீது எறிந்து அறிபவர். நினைத்த மாத்திரம் வானினும் செல்ல வல்லவராகலின், 'இந்துவால் தினவு தீர்பவர்' எனப்பட்டது. கற்றமாத்தண்டினர்; (ஒப்பு): 'பண்டுவானவர் தானவர் யாவரும் பற்றித், தெண்டிரைக் கடல் கடைதர வலியது தேடிக், கொண்ட மத்தினைக் கொற்றத்தன் குவவுத்தோட்கமைந்த, தண்டெனக் கொளலுற்றது நொய்தெனத் தவிர்ந்தான். (யுத்த. 139); மந்தர; ஆரணிய. 178, 530, 542.

பி-ம். 1. முதலினுற், கிரிகளே முதலிய வுருவம்.
2. எறிந்தவே னுனைக்.
3. மலையெனச் சுற்றி. 10

இதன்பின் 'ஒருவரே' என்ற பாடல் சில பிரதிகளில்.

3243. சூலம் வாங்கிடிற் சுடர்மழு வெறிந்திடிற் சுடர்வாள்
கோல வெஞ்சிலை பிடித்திடிற் கொற்றவேல் கொள்ளின்
சால வான்தண்டு தரித்திடிற் சக்கரந் தாங்கின்
காலன் மால்சிவன் குமரனென் றிவரையுங் கடுப்பார்

சூலம் வாங்கிடில் - சூலப்படையினைக் கையில் ஏற்றாலும்; சுடர் மழு எறிந்திடில் - ஒளியுடன் விளங்கும் மழுவினை வீசினாலும், சுடர் வாள் - ஒளியுள்ள வாள், கோலம் வெம்சிலை - அழகிய கொடியவில், (இவைகளை), பிடித்திடில் - கையிற் கொண்டாலும், கொற்றம் வேல் கொள்ளின் - வெற்றி வாய்ந்த வேற்படையைக் கொண்டாலும், சாலவான் தண்டு தரித்திடில் - மிகவும் பெரிய கதாயுதத்தை ஏந்தினாலும், சக்கரம் தாங்கின் - ஆழிப்படையைச் சுழற்றினாலும், காலன் - யமன், மால் - திருமால், சிவன் - சிவ

பெருமான், குமரன் - முருகன், என்ற இவரையும் கடுப்பார் - என்ற இவர்களையும் நிகர்ப்பார்.

சூலம், மழு, சிலை, தண்டு சக்கரம் என்ற இவைகளை யேந்திய அரக்கர் என்க. சூலத்தைக் காலனுக்கும், தண்டு சக்கரம திருமாலுக்கும், மழுவினைச் சிவபெருமானுக்கும், வேலினைக் குமரனுக்கும் கொள்க. 'சாலவாள் தண்டு' எனின் வாளினையும் திருமாலுக்கேற்றுக. சங்கம் ஒழிய திருமாலின் ஐம் படையில், சக்கரம் வாள் கதை சிலை என்பன வந்தமை காண்க. சால: மிக என்று பொருள்படும் உரிச்சொல்; 'சால வலசி னென்' (யுத்த. 2223).

பி - ம். 1. மழுவாங்கிடிற், ஏந்திடிற்; சூர்வாள்.
2. கோலும் பிடித்தவில்.
3. சாலவாள் தண்டு; திரித்திடிற்; சக்கரந் தரிக்கில்.
4. இவரையுங் கடப்பார். 11

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

3244. ஒருவ ரேவல்ல ரோருல கத்தினை வெல்ல
இருவர் வேண்டுவ ரேழுல கத்தையு மிறுக்கத்
திரிவ ரேலுடன் திரிதரு நெடுநிலஞ் செவ்வே
வருவ ரேலுடன் கடல்களுந் தொடர்ந்துபின் வருமால்.

ஓர் உலகத்தினை வெல்ல ஒருவரே வல்லர் - ஓர் உலகத்தினை வெற்றி கொள்ள ஒருத்தரே (போதுமான) வன்மை வாய்ந்தவர், ஏழ் உலகத்தையும் இறுக்க இருவர் வேண்டுவர் - ஏழு உலகத்தை யும் அழித்தற்கு இருவரே வேண்டப்படுவர்; (அவ் வீரர்) திரிவ ரேல் - திரிகுவராயின், நெடு நிலம் உடன் திரிதரும் - அவருடனே நெடு நிலமும் உடன் திரியும்; செவ்வே வருவரேல் - நேராக வருவ ராயின், உடன் கடல்களும் தொடர்ந்து பின்வரும் - (அவர் நடக் கின்ற வேகத்தால்) அவருடனே கடல்களும் தொடர்ந்து பின்னே வரும். ஆல்: அசை.

வல்லர்: 'அவை வல்ல ரல்லாருமில்லை' (பால. நகரப். 74) இறுத்தல் - அழித்தல்; 'இறுக்க வேண்டுவதில்லை' (யுத்த. 970);

மூன்றுமடிக்கு; 'பெயருமே னெடும் பூதங்கள் ஐந்தொடும் பெயரும்' (யுத்த. 142); (ஒப்பு) 'மேருவே முதற்கிரிகள் வேரொடும், பேருமேயவன் பேருமேல்' (கிட்கிந்தா. 119); இறுதியடிக்கு: 'அகன்ற பேராழி, ஏழுந் தன்னிரு தாளனவெனக் கடந்தேறும்' (யுத்த. 132); (ஒப்பு): 'வேலை தனித்தனி கடக்குந்தாள' (யுத்த. 132).

'ஒருவர் வேண்டுவ ரோருலகத்தையுமுண்ண' என்பது ஓர் பிரதியில் முதலடி.

பி - ம். 1. உலகத்தினையுண்ண, யண்ண.

2. வேண்டுவ தேழுலகத்தையுமிறுக்க, வேண்டுவ ரேழுலகிற்றையுமிறுக்கிற்; இறுக்கி.

3. உடல் திரிதரு.

4. கலை கடல்களும்; வரத் தொடர்ந்தபின் கரிகளும்; நடந்து. 12

## நால்வகைப் படைகளின் அணியும் தொகையும்

3245. மேக மெத்தனை விரிஞ்சன்ற னண்டத்து விரிந்த
நாக மெத்தனை யத்தனை நளிர்மணித் தேர்கள்
போக மெத்தனை யத்தனை புரவியி னீட்டம்
ஆக மெத்தனை யத்தனை யவன்படை யவதி.

'விரிஞ்சன் தன் அண்டத்து விரிந்த மேகம் எத்தனை - பிரமதேவனால் படைக்கப்பட்ட அண்ட கோளத்திற்குள் விரிந்த மேகங்கள் எத்தனையோ, அத்தனை நாகம் - அத்தனை யானைகள், அத்தனை - அந்த யானைத் தொகைக்கேற்ப, (அவண் உள்ளன); நளிர்மணி தேர்களும் - ஒலிக்கின்ற மணிகள் கட்டிய தேர்களும்; போகம் எத்தனை - துய்க்கும் போகங்கள் எத்தனை, அத்தனை புரவியின் ஈட்டம் - அத்தனை புரவியின் திரள்; ஆகம் - தோன்றும் உயிர்களின் உடலம், எத்தனை - எவ்வளவோ? அத்தனை அதன் படை அவதி - அத்தனை அவன் காலாட்படையின் எல்லை.

நாகம் - யானை; 'நாகக் குன்றம் நின்றன காண்மின்' (யுத்த. வானரர் களம். 6); அதற்கேற்ப மேகத்தைக் குறித்தார்.

பி - ம். 1. மேகமத்தனை ; அத்தனை மால்கரி விரிந்த.

2. நாகமெத்தனை ; யத்தனை நளிர் மணித்தேர்கள், தேர்களுமாளா, அத்தனை நளிர் மணித்தேர்கள், அந்தனை தேர் நளி நாளாப்.

3. போக முற்றின வெத்தனை யத்தனை புரவி.

4. ஆக மேலன வெத்தனை யத்தனை, ஆக முற்றின எத்தனை யானையின், ஆகமெத்தனை யத்தனை யவன்படை, ஆக முற்றிய வெத்தனை யத்தனை யனிகம். 13

3246. இன்ன தன்மைய யானைதே ரிவுளியென் றிவற்றின்
பன்னு பல்லணம் பருமமற் றுறுப்பொடு பலவும்
பொன்னு நன்னெடு மணியுங்கொண் டல்லது புனைந்த
சின்ன முள்ளன வில்லன மெய்ம்முற்றுந் தெரிந்தால்.

இன்ன தன்மைய - இத்தகைய தன்மையையுடைய, யானை தேர் இவுளி என்று இவற்றின் - யானை தேர் குதிரை என்ற இவற்றின், மெய் முற்றும் தெரிந்தால் - உடல் முழுவதையும் ஆராய்ந்து நோக்கின், பன்னும் - சிறப்பித்துப் பகரத்தக்க, பல்லணம் - மேற்றவிசும், பல உறுப்பொடு - பல உறுப்புக் களோடும், மருமம் - இரகசியத் தானங்களும், பொன்னும் நல்நெடு மணியும் கொண்டு அல்லது - பொன்னையும் சிறந்த பெரிய அரதனங்களையும் கொண்டு புனைந்துள்ளன அன்றி, (புனைந்த இந்தப் பொன் மணிகளினலியலாத), சின்னம் உள்ளன இல்லன - அடையாளம் உடையன இல்லாதன ஆயின.

பல்லணை முதலாயின பொன்னும் மணிகளும் கொண்டு சித்திரித்த சின்னங்களுடன் பொருந்தி யிருந்தன என்க. இவுளி - குதிரை ; 'அலங்குளைப் பரீஇயிவுளி'; 'வளிநடந்தன்ன வாச் செலிவுளி'; 'அலங்குளை யணியிவுளி' (புறநா. 4, 197, 382); பல்லணம் : 'கண் சிதைந்து பல்லணங் குலைந்து' (யுத்த. மூலபல. 87); மருமம் - மார்பு எனினுமாம்.

பி - ம். 2. பலிவணப், பல்படைப் ; பருவமுற்று, பருமமற்று.

3. மின்னு நன்மணியும்.

4. அல்லன வல்லன ; இல்லன வல்லன ; தெரிந்தான், முழுமுற்றுந் தெரியில். 14

3247. இப்பெ ரும்படை யெழுந்திரைத் தேகமே லெழுந்த்
துப்பு நீர்த்தன தூளியின் படலமீத் தூர்ப்பத்
தப்பில் கார்நிறந் தவிர்ந்தது கரிமதந் தழுவ
உப்பு நீங்கிய தோங்குநீர் வீங்கொலி யுவரி.

இ பெரு படை-இத்தகைய பரந்த சேனை, எழுந்து இரைத்து - எழுந்து முழக்கம் செய்து, ஏக - செல்ல, எழுந்த - மேலே கிளம்பிய, துப்பு நீர்த்தன தூளியின் - பவளத்தின் இயல்பினையுடைய செந் தூளியின், படலம்-தொகுதி, மீ தூர்ப்ப - மேலிடத்தை மூடியதால், தப்பு இல் - பெய்தலில் பிழையாத, கார் - மேகமும், நிறம் தவிர்ந் தது - (தனது) கரு நிறம் நீங்கப் பெற்றது (செந்நிறம் பெற்றது); கரி - யானையின், மதம் தழுவ - மதநீர் விரவியதால், ஓங்கு நீர் - மிக்க நீரையும், வீங்கு ஒலி - பேரொலியினையுமுடைய, உவரி - உப்புக் கடல், உப்பு நீங்கியது, (தன்) உவர்ப்புச் சுவை நீங்கப் பெற்றது.

கார் கருநிறம் நீங்கிச் செந்நிறம் பெற்றதும், உப்புக் கடல் உவர் நீங்கி யானையின் மதநீர்ச் சுவை பெற்றதும் பிறிதின் குணம் பெறலணி என்பர். 'தேனும் சாந்தமும்' (சுந்தர. 112) எனத் தொடங்கும் செய்யுளும் காணத்தகும். (ஒப்பு) 'இருண்ட கல்லையும் தன்னிறமாக்கிய விரதம்;' (பால. வரைக். 8); 'மேருவைச் சார்ந்த பொல்லாக் கருங் காக்கையும் பொன்னிறம் பெறுவது போன்று' என்க. துப்பு - பவளம்; 'வெளித் துப்பின் வேலை' (சுந்தர. 34); 'துப்பினுற் செய்த கையொடு' (சுந்தர. 337); தப்பு - பெய்யும் காலம் தவறுதல்; கரி - கரத்தையுடையது என்று யானைக்குக் காரணக் குறி. 'ஓங்குநீர் வீங்கொலி' என்ற இடத்து இணையெதுகை காண்க. (ஒப்பு) 'விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ' (பால. நகரப். 58); 'ஓவிய மான்கடோறு முறைத்தற வுரிஞ்சி யொண்கேழ், நாவியின் மணங்கனுற' (கிட்கிந்தா. 466); 'வேங்கை நாறின கொடிச்சியர் வடிக்குழல்' (கிட்கிந்தா. 479) எனத் தொடங்கும் செய்யுட்களும் இங்குக் காணத்தகும். உவரி - உப்புச் சுவை பெற்ற கடல். இ - பெயர் விகுதி. 'உலப்பில வுதிர வாறுவரி' (யுத்த. 1187); 'உருகுகின்றது போன்றுள துலகு சூழுவரி' (சுந்தர. 110).

பி - ம். 1. எடுந்துரைந்து ; எழுந்து.
2. துப்புதிர்ந்தன்ன, துப்புறச் சினந்துற்றன ; தூளியின் படலம்.
3. தப்ப ; தவிர்த்துளகரி.
4 விலங்கலை, விங்கலை.

3248 மலையும் வேலையு மற்றுள
பொருள்களும் வானோர்
நிலையு மப்புறத் துலகங்கள்
யாவையு நிரம்ப
உலைவு ருவகை யுண்டுபண்
டுமிழ்ந்தபே ரொருமைத்
தலைவன் வாயொத்த விலங்கையின்
வாயில்கள் தருவ.

(மூலத்தானையை) தருவ - வெளிவிடுவனவாகிய, இலங்கையின் வாயில்கள் - இலங்கையின் கோட்டை வாயில்கள், மலையும் வேலையும் மற்று உள பொருள்களும் - மலையும் கடல்களும் வேறுமுள்ள பொருள்களும், வானோர் நிலையும் - தேவர்களின் இருக்கையும், அப்புறத்து உலகங்கள் - அப்பால் உள்ள உலகங்களும், யாவையும் - ஆகிய அனைத்தும், உலைவு உருவகை - அழிவெய்தாவண்ணம், நிரம்ப - தன் வயிற்றினுள் அடங்குமாறு, பண்டு உண்டு - முன்னர் உட்கொண்டு, உமிழ்ந்த - பின்னர் உமிழ்ந்த, பேர் - பெரிய, ஒருமை தலைவன் - ஒப்பற்ற தலைவனான இறைவனது, வாய் ஒத்த - வாயை ஒத்தன.

இலங்கை மாநகரின் ஒவ்வொரு வாயிலும் திருமாலின் வாயை ஒத்தது. ஒருமைத் தலைவன் - ஒப்பற்ற இறைவன் ; (ஒப்பு) : 'வாழ மன்னுயிர் யாவையு மொருவழி வாழும், ஊழி நாயகன் திருவயிறொத்துள திவ்வூர்' (சுந்தர. 107) ; இப்படலத்து 'அடங்கும் வேலைகள்' என்ற 5 ஆவது செய்யுளை இங்கே காண்க. 'தனக்குவமை யில்லாதான்' (குறள். 7) ; 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய. 148).

பி - ம். 1. மற்றுள பொருள்களும் வரமும்.

2. நிரம்பி.

3. உண்டுமிழ்ந்தளந்த, உண்டு மீண்டுமிழ்ந்த ; உவமை.

4. தலைவனே யொத்தது, தலைவன் வாயொக்க, வாயில்கடோறும். 16

3249. கடம்பொ ருமதக் களிறுதேர்
பரிமிடை காலாள்
படம்பொ ருமையி னனந்தலை
யனந்தனும் பதைத்தான்
விடம்பொ ருதிரி யமரர்போற்
குரங்கின மிதிக்கும்
இடம்பொ ருமையுற் றிரிந்துபோய்
வடகரை யிறுத்த.

கடம் பொரு - கன்னத்தினின்று தங்காது பெருகுகின்ற, மதம் களிறு தேர் - மதநீரைக்கொண்ட ஆண் யானைகளும் தேர்களும், பரி - குதிரைகளும், மிடை - நெருங்கியுள்ள, காலாள் - காலாட்படைகளும், என்ற இவற்றின் பாரத்தை, நனம் தலை - அகன்ற தலையினையுடைய, அநந்தனும் - ஆதிசேடனும், படம் பொருமையின் - தன் ஆயிரம் படங்களும் தாங்கவியலாமையால், பதைத்தான் - துடிதுடித்தான் ; விடம் பொருது - (கடல் கடைந்த போது எழுந்த) ஆலகால விடத்தைக் காணவும் பொருது, இரி அமரர் போல் - நிலைகெட்டோடிய தேவர்கள்போன்று, குரங்கு இனம் - குரங்குக்கூட்டங்கள் (இராக்கதரின் பெருந்தொகுதி கண்டு பயந்து), மிதிக்கும் இடம் - தாம் நிற்கின்ற இடத்தில், பொருமை உற்று - நிற்கப்பெருத நிலையை அடைந்து, இரிந்து போய் - அகன்று சென்று, வடகரை இறுத்த - வட கரையில் தங்கின.

கடம் - கன்னம் ; யானையின் மதம் பெருகும் இடங்களில் ஒன்று. கடம் - யானைக் கதுப்பு ; (பிங்.) படம் - ஆதிசெடனுடைய ஆயிரம் படம், 'சரச்ர பணுபணி மண்டல மண்டிதே' என்பது வேதம். நனந்தலை : 'நனந்தலை யநந்தன்' (இராவணன் தேரேறு. 9) விடம் பொருதிரியமரர் ; கடல் கடைந்த வரலாறு ; (பால. அகலிகை. 21, 25) காண்க. 'நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்

மதிச் செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்' (பால. வேள்வி. 50).

பி-ம். 1. இடைக் கடவ, இடைக் காலாள், இடை கடல்கள், படை கடற்றன்.
4. பெருமையிற்றிரிந்து, பொருமையினிரிந்து; வடதிசை. 17

3250. ஆழி மால்வரை வேலிசுற் றிடவகுத் தமைத்த
ஏழு வேலையு மிடுவலை யரக்கரே யினமா
வாழி காலனுங் விதியும்வெவ் வினையுமே மள்ளர்
தோழ மாமதி லிலங்கைமால் வேட்டமேற் றொடர்ந்தார்.

ஆழி மால்வரை வேலி சுற்றிட - சக்கரவாள மலை வேலியாகச் சுற்றி நிற்க, வகுத்து அமைத்த - (நடுவே) வகுத்து அமைக்கப் பட்ட, ஏழு வேலையும் - ஏழு கடல்களினிடமும், வலை இடு - வலை யிடும் (இடம்), அரக்கரே இனம்மா - இராக்கதரே கூட்டமாக உள்ள விலங்குகள், காலனும் விதியும் வெம்மை வினையும் - யமனும் பிரமனும் கொடிய ஊழ்வினையும், மள்ளர் - (வேட்டையாடும்) வீரர்; (இந்த வீரர் இராக்கதர் அடைபட்டிருந்த), மா மதில் தோழம் - உயர்ந்த மதில்களால் சூழப்பட்ட இலங்கையாகிய கொட்டிலில், மேல் வேட்டம் தொடர்ந்தார் - மேலான வேட்டைத் தொழிலைத் தொடர்ந்து செய்தனர். வாழி, ஏ : அசை.

உருவகவணி; ஆழி மால்வரை - சக்கரவாளகிரி; 'சூழ்கடல் வளை இய வாழியங் குன்றம்' (மணி. 6, 162) 'ஆழி மாமலை' (கிட்கிந்தா. 116); ஏழுவேலை; கிட்கிந்தா. 174 உரைக் குறிப்புக் காண்க. இடுவலை - வலை வீசும் இடம். மா இனம் என மாறிக் கோடலுமாம்; மா - மிருகப் பொது; 'மாவுமாக்களுமை யறி வினவே' (தொல். மரபி. 32); மள்ளர் - வீரர். 'செருவி லொருவ பொருவிறல் மள்ள' (திருமுரு. 262); 'களம்புகு மள்ளர்' (கலி. 106); தோழம் - தொழுவம். 'விலங்குகளை யடைக்கும் கொட்டில் தோழத்திடைப் புகுந்தாள்' (பிரமோத். 3, 14).

பி-ம். 1. வேலை; சுற்றிடை.
2. இடுதிரை.
3. காலமும் விதியும்; வினையும் வேறுள்ள.
4. தோழமாகிய, தோழி மாமதில்; மாவேட்டை மேற்றொடர்ந்தார், மாறொடர்ந்திட வந்தார், மால்வேட்ட மேற்றொடர்ந்தான். 18

3251. ஆர்த்த வோசையோ வலங்குதே
ராழியி னதிர்ப்போ
கார்த்திண் மால்கரி முழக்கமோ
வாசியின் கலிப்போ
போர்த்த பல்லியத் தரவமோ
நெருக்கினுற் புழுங்கி
வேர்த்த வண்டத்தை வெடித்திடப்
பொலிந்தது மேன்மேல்.

நெருக்கினுல் புழுங்கி - நெருக்கத்தால் வெந்து, வேர்த்த - வேர்வுறுகின்ற, அண்டத்தை வெடித்திட - அண்ட கோளத்தை வெடித்திடுமாறு, மேல் மேல் பொலிந்தது - மென் மேலும் விளக்க முற்று எழுந்தது, ஆர்த்த ஓசையோ - (காலாட் படைகள்) ஆர்ப் பரித்த ஓசையோ? அலங்கு - அசைந்து செல்கின்ற, தேர் ஆழியின் அதிர்ப்போ - தேர் உருளைகளின் முழக்கமோ? கார் திண் மால்கரி முழக்கமோ - கரிய வலிய பெரிய யானையின் பிளிற்றெலியோ? வாசியின் கலிப்போ - குதிரைகளின் கனைப்பொலியோ? போர்த்த - (இவை அனைத்தையும்) உள்ளடக்கி மேலெழுந்த, பல் இயத்து அரவமோ - பலவகை இசைக் கருவிகளின் ஒலியோ?

ஆழி - தேருருளை. கார் திண்மால் எனவே நிறம் உறுதி பருமன் என மூன்றும் குறிக்கப்பட்டன. இயம் - இசைக் கருவி; இது தோற் கருவி துளைக் கருவி நரப்புக் கருவி கஞ்சக் கருவி என நான்கு வகைப்படும். இச் செய்யுட் கண் ஓசையின் பிரதி பதங்கள் வந்துள்ளமை காண்க.

பி - ம். 1. ஆழியினதிர்வோ, ஆர்ப்போ.
3. புழுங்கு.
4. பொடித்தது, பொலிந்தது; பொதிர்த்தது, புடைத்தது. 19

இதன்பின் 'தசும்பு' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3252. வழங்கு பல்படை மீனது மதகரி மகரம்
முழங்கு கின்றது முரிதிரைப் பரியது முரசம்
தழங்கு பேரொலி கலிப்பது தறுகண்மா நீருதப்
புழுங்கு வெஞ்சினச் சுறவது நிறைபுடைப் புணரி.

நிறைபு உடை புணரி - நிறைதலை யுடைய அந்தச் சேனைக் கடல், வழங்கு - செலுத்தற்குரிய, பல்படை மீனது - பல போர்க் கருவிகளாகிய மீனினைக் கொண்டது; மதகரி மகரம் முழங்குகின்றது - மதவேழமாகின்ற முதலை முழங்கப்பெற்றது; முரி - கரைக்கண் மோதி முரிகின்ற, திரை பரியது - அலைகளாகிய குதிரையை யுடையது; முரசம் தழங்கு பேர் ஒலி - முரசம் ஒலிப்பதாலான பேரொலி, கலிப்பது - சத்திப்பது; தறுகண்மா நிருதர் - அஞ்சாமையையுடைய பெரிய இராக்கதராகிய, புழுங்கும் வெஞ்சினம் - மனம் வேகின்ற கடுங் கோபத்தினையுடைய, சுறவது - சுறு மீனை யுடையது.

முற்றுருவகம் - சேனை கடலாக உருவகிக்கப் பட்டது. சேனைக் கடலின் படை மீன்; யானை, முதலை; அலை குதிரை; முரசொலி, கடலொலி; நிருதர், சினமிக்க சுறுமீன். குதிரைக்குக் கடல் அலையை உவமையாகக் கூறுவது கவி மரபு. முரசம் - போர் முரசம். அது: பகுதிப் பொருள் விகுதி. தறுகண் - அஞ்சாமை. 'தறுகணும் தோளிணை பற்றி' (சுந்தர. 988); புழுங்குதல் - வெந்தயர்தல்; 'புழுங்கிய வெஞ்சினத்து' (யுத்த. 1175). நிறைவு - நிறைதல்; தொழிற் பெயர். புணரி - பல நதிகளும் தன்னிடம் புணரப் பெறுவது. சுறவது: 'சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப' (புறநா. 13).

பி - ம். 1. மீனத்து.
2. முதுதிரை.
3. போரொலி; களிப்புறும்; நிருதர்.
4. சினச் சுறவதின், சுறவற, சினத்தரக்கராற்; குறைப்படைப், நிறை படை, நிறைபடப், இடைப்பட்ட. 20

3253. தசும்பிற் பொங்கிய திரள்புயத் தரக்கர்தந் தானை
பசும்புற் றண்டல மிதித்தலிற் கரிபடு மதத்தின்
அசும்பிற் சேறுபட் டளறுபட் டமிழுமா லடங்க
விசும்பிற் சேறலிற் கிடந்ததவ் விலங்கன்மே லிலங்கை.

அவ் விலங்கல் மேல் இலங்கை - அந்தத் திரிகோண மலை மீதுள்ள இலங்கை நகரானது, பசுமை புல் தண் தலம் - பசிய புல்லைக் கொண்ட குளிர்ந்த இடங்களை, தசும்பில் பொங்கிய -

குடம் போன்று இளர்ந்துள்ள, திரள் புயத்து அரக்கர் தம் தானை - திரண்ட புயங்களைக் கொண்ட இராக்கதர் சேனை, மிதித்தலின் - மிதித்தலாலும், கரிபடு - யானைகளினின்று தோன்றுகின்ற, மதத்தின் - மதப் பெருக்கினாலும், அசும்பின் செறுபட்டு - வழுக்கு நிலத்துச் சேறு போன்று, அளறுபட்டு - குழை சேறு பொருந்தி, அடங்க அமிழும் - எல்லாம் ஒருசேர அமிழ்ந்திடும்; விசும்பில் சேறலின் - (ஆனால்) பலரும் விண் வழியாகச் சேர்ந்திட்டதனால், கிடந்தது - அழிவின்றிக்[1] கிடந்தது. ஆல் : அசை.

தானையில் உள்ளார் பலரும் தரை வழிச் செல்லாது, விண் வழிச் சென்றதால் இலங்கைப் பதியானது குழை சேற்றில் அழுந்தாது நின்றது என, சேனை மிகுதி கூறப்பட்டது. தசும்பு-குடம், 'தசும்பிடை விரிந்தன' (யுத்த. 574); 'தசும்புடைக் கொடுந்தேர் தன்னை' (யுத்த. 1894); தண்தலம் - குளிர்ந்த இடம்.

பி - ம். 1. இராக்கதர் தானை.
2. பொற்றிண்டலம், திண்கடல் விதித்தலில், புற்றண்டலை.
3. அழுந்துபட்டழியும்.

21

## வானவர் அரக்கச் சேனையைப் பார்த்து நடுங்கிச் சிவபிரானிடம் முறையிடுதல்

3254. படியைப் பார்த்தனர் பரவையைப்
பார்த்தனர் படர்வான்
முடியைப் பார்த்தனர் பார்த்தனர்
நெடுந்திசை முழுதும்
விடியப் பார்ப்பதோர் வெள்ளிடை
கண்டிலர் மிடைந்த
கொடியைப் பார்த்தனர் வேர்த்தனர்
வானவர் குலைந்தார்.

வானவர் - தேவர்கள், படியை பார்த்தனர் - பூமியைப் பார்த்தனர், பரவையை பார்த்தனர் - (சேனைக்) கடலை நோக்கினர், படர்வான் முடியைப் பார்த்தனர் - பரவிய வானத்தின் சிகரத்தைக்

கண்ணுற்றார், நெடு திசை முழுதும் பார்த்தனர் - நீண்ட திக்கு முழுதும் பார்த்தனர், மிடைந்த கொடியை பார்த்தனர் - (எங்கும்) நெருங்கியிருந்த கொடிகளைப் பார்த்தனர், விடிய பார்ப்பது ஓர் வெள் இடை கண்டிலர் - சேனையில்லாது ஒழியப் பார்க்கத் தக்க தொரு வெற்றிடம் கண்டாரில்லை; வேர்த்தனர் குலைந்தார் - உடல் வேர்த்தவராய் நடுக்கம் எய்தினர்.

படி - எல்லாப பொருள்களும் தன்னகத்துப் படிய அல்லது தங்க வைத்தலின் பூமிக்குக் காரணக் குறி. சிலர் பிருத்வி என்ற வடசொல் பாகதமாகச் சிதைந்து படி என வந்தது என்பர். பரவை- பரப்பினால் பெயர் பெற்ற கடல். இங்குச் சேனைக்கடல் பரவை நுண்மண லெண்ணினும்' (யுத்த. 179). 'என் ஆசை யெழு பரவை' (பெரியபு. தடுத்தாட். 148); வெள்ளிடை; 'எங்கும் வெள்ளிடை மடுத்தலின்' (யுத்த. 559); 'வெள்ளிடை மருங்குலார்' 'வெள்ளிடை வியன் கோயில்' (சுந்தர. 206, 301) விடிய - கழிய, விடிதல் - கழிதல். ஒழிதல்; 'கங்குல் விடிந்ததென் றிருந்தேன்' (யுத்த. மாயா சீதை. 47).

பி - ம். 3. விடியப்; பார்ந்தது.
4. வேர்த்தன. 22

3255. உலகின் நாமலா வுருவெலா
மிராக்கத வுருவா
அலகில் பல்படை பிடித்தமர்க்
கெழுந்தவோ அன்றேல்
விலகு நீர்த்திரை வேலையோ
ரேழும்போய் விதியால்
அலகில் பல்லுருப் படைத்தன
வோவென வயிர்த்தார்.

'உலகின் - உலகினுள், நாம் அலா - நாமல்லாத, உரு எலாம் - உருவங்கள் அனைத்தும், இராக்கத உருவா - அரக்கர் உருவாகி, அலகு இல் - எண்ணற்ற, பல்படை பிடித்து அமர்க்கு எழுந் தவோ - பல போர்க் கருவிகளைப்பற்றிப் போர்க்குக் கிளம்பினவோ? அன்றேல் - அல்லாவிடில், விலகும்-விலகுகின்ற, நீர் திரை வேலை - நீரைக் கொண்ட அலைகளுடன் கூடிய கடல், ஓர் ஏழும் போய் - ஓர்

ஏழும் போய், விதியால் - முறையாக, அலகு இல் - அளவில்லாத, பல் உரு படைத்தனவோ - பல உருவங்களை உண்டாக்கினவோ?, என அயிர்த்தார் - என ஐயுற்றுக் கூறினர்', (வானவர்கள்).

தற்குறிப்பேற்றவணி. அலகில் - அளவிலாத; 'அலகிலா விளையாட்டுடையாரவர்' (பால. பாயிரம்). வேலையோர் ஏழு; கிட்கிந்தா. 174; உரைக் குறிப்புக் காண்க. விதியால் - விதி என்ற பிரமனை வேண்டி எனினுமாம். படைக்கும் அதிகாரம் அவனுக்கே ஆகலின். 'அயிர்த்தல் - ஐயுறல்; 'அன்னமா ரீசனொன்றே யயிர்த்தன னிதனையைய' (ஆரணிய. 793).

பி - ம். 1. உலகின் மால்வரை.
2. அலகிலாப்; எழுந்ததோ வன்றேல்.
3. விலகினீர், இலகுநீர்; வேலையோடெழும்.
4. அலைகொள்பல், புலைகொள்பல், புலைகள்வல்; பொடித்தனவரமெனப் பொலிந்தார், பொடித்தனவோ வென்று புகன்றார். 23

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

மூன்றி னூற்றிரே டாயிர மூளவன வெள்ளம்
ஆன்ற தேர்பரி கரியவை யானையும் அடங்கி
மூன்று லோகமு முற்றும்போய் முடிவுறு மென்ன
வேன்று சென்றதவ் விராமன்மே லிராக்கதப் பரவை.

3256. நடுங்கி நஞ்சடை கண்டனை
வானவர் நம்ப
ஒடுங்கி யாங்கரந் துறைவிட
மறிகில முயிரைப்
பிடுங்கி யுண்குவ ரியாரிவர்
பெருமைபண் டறிந்தார்
முடிந்த தெம்வலி யென்றன
ரோடுவான் முயல்வார்.

வானவர் - தேவர்கள், நஞ்சு அடை கண்டனை - விடம் தங்கப் பெற்ற கண்டனை சிவபெருமானை, நடுங்கி-நடுக்கமுற்று (நண்ணி),

'நம்ப - தலைவனே! யாம் ஒடுங்கி கரந்து - யாங்கள் ஒடுங்கி மறைந்து, உறைவு இடம் அறிகிலம் - தங்குதற்குரிய இடத்தை அறிகிலோம், (இவர்களோ), உயிரை பிடுங்கி உண்குவர் - உயிரைக் கைப்பற்றி உண்டிடுவர், இவர் பெருமை பண்டு அறிந்தார் யார் - இவர்களுடைய பெருமையை முன்னம் தெளிந்தவர் யாவர்? எம் வலி முடிந்தது - எங்கள் வன்மை முடிவடைந்து விட்டது', என்றனர் - என்று மொழிந்தவராய், ஓடுவான் முயல்வார் - ஓட முயற்சி செய்பவர் ஆயினர்.

தேவர்கள் நஞ்சடை கண்டனை அணுகியதன் காரணம், முன்னர் பாற்கடலிலிருந்து வந்த விடத்தை உட்கொண்டு அமரர்களைக் காத்தது போன்று, தங்களை இராக்கதரிடமிருந்து காத்தல் வேண்டும் என்ற குறிப்பு. கருத்துடை யடை கொளியணி. ஓடுவான் - வானீற்று வினையெச்சம்.

பா - ம். 1. நஞ்சுண்ட.

2. உணரலம், உணர்கிலம்.

3. பெருமை கண்டு; அறிவார், பெருமையிற் பிழைத்தார்.

4. முடிந்ததெங்குலம்; என்றவர்; முயன்றார். 24

3257. ஒருவ ரைக்கொல்ல வாயிர மிராமர்வந் தொருங்கே
இருப திற்றிரண் டாண்டுநின் றமர்செய்தா லென்னும்
நிருத ரைக்கொல்வ திடம்பெற்றோ ரிடையிலின் றன்றோ
பொருவ திப்படை கண்டுதம் முயிர்பொறுத் தன்றோ.

'(இவர்களுள்) ஒருவரை கொல்ல - ஒருத்தரைக் கொல்லவும், ஆயிரம் இராமர் ஒருங்கே வந்து - ஆயிரம் இராமர்கள் ஒன்றுகூடி வந்து, இருபதிற்று இரண்டு ஆண்டு - இருபத்து நான்கு ஆண்டுகள், நின்று - நின்று, அமர் செய்தால் என் ஆம் - போர் செய்தால் தான் என் ஆகும்? (அவர்களால் ஒருத்தரைக்கூடக் கொல்ல இயலாது); (நாங்கள் இராமபிரானுக்கு அருகிருந்து உதவுவோம் எனில்), நிருதரை கொல்வது - நிசாசரரைக் கொல்வது என்பது, இடம் பெற்று - நிற்க இடம் பெற்று, ஓர் இடையின் நின்று அன்றோ - ஓரிடத்தில் நிலையாக நின்றாலல்லவோ (இயலும்); (மற்றும் ஒருகால் நிற்க இடம் பெறினும்), பொருவது - இவர்களுடன் போர் புரிவது, இ படை கண்டு - இப் பெருஞ் சேனையைக்

கண்ணுற்று, தம் உயிர் பொறுத்தன்றே - தம்முடைய உயிரைத் தாங்கும் ஆற்றல் பெற்றபின் அல்லவோ? (கைகூடும்)!' ஓகாரம்: வினா.

பதிற்றிரண்டு - பன்னிரண்டு, இருபதிற்றிரண்டு: இருபத்து நாலு யாண்டு. இராமபிரான் வனத்தில் இருந்தது, பன்னிரண்டு ஆண்டு; இந்தப் பன்னிரண்டு ஆண்டுடன் மற்றொரு பன்னிரண்டு ஆண்டுகள் வனத்தில் தங்கினபோதும் இந்த அரக்கரைக் கொல்ல முடியாது என்பது கருத்து; இருபதிற்றிரண்டு நாற்பது ஆண்டு என்று கொள்வர் ஒருசாரார். இங்கு 'சூரறுத்தவனும் சுடர் நேமியும், ஊரறுத்த வொருவனும் ஓம்பினும், ஆரறத்தினோடன்றி நின்றாரவர், வேரறுப்பன் வெருவன்மிர் நீரென்றான்' 'வேந்தன் வீயவும் ஆய்வர மேவவும், ஏந்தலெம்பி யிளையவும் தொன்னகர், மாந்தர் வன்றுயர் கூறவும் யான்வனம், போந்த தென்னுடைப் புண்ணியத்தால் என்றான். 'புகல் புகுந்திலரேற் புறத்தண்டத்தின், அகல்வரேனு மென்அம்பொடும் வீழ்வரால், தகவில் துன்பந் தவிருதிர் நீரெனாப், பகலவன் குலமைந்தன் பணிக்கின்றான்' (ஆரணிய. 139, 135, 134) என்ற செய்யுட்கள் காணத்தகும்.

பி - ம். 3. பெற்றோர் நிலையில், பெற்றோரிடையில், பெற்றாரிடையில்.
4. தன்னுயிர். 25

## இராமபிரான் யாவரையுங் கொல்வார் நீர் அஞ்சற்க என்று சிவபெருமான் கூறுதல்

3258. என்றி றைஞ்சலு மணிமிடற் றிறைவனு மினிநீர்
ஒன்று மஞ்சலிர் வஞ்சனை யரக்கரை யொருங்கே
கொன்று நீக்குமக் கொற்றவ னிக்குல மெல்லாம்
பொன்று விப்பதோர் விதிதந்த தாமெனப் புகன்றான்.

என்று இறைஞ்சலும் - என்று சொல்லித் (தேவர்கள்) பணிந்த அளவில், மணிமிடறு இறைவனும் - நிலமணி போன்ற கழுத்தினையுடைய சிவபெருமானும், (அவ்வமரரை நோக்கி),

'இனி - இனிமேல், நீர் ஒன்றும் அஞ்சலிர் - நீங்கள் ஒரு சிறிதும் பயப்படாதீர்கள்; அ கொற்றவன் - அந்த வெற்றிவீரன், வஞ்சனை அரக்கரை - வஞ்சனைக் குணமுள்ள இராக்கதரை, ஒருங்கே கொன்று நீக்கும் - ஒருசேரக் கொலை செய்து ஒழித்திடுவான்; இ குலம் எல்லாம் - இந்த இராக்கதர் குலத்தை எல்லாம், பொன்றுவிப்பது ஓர் விதி - இறக்கச் செய்வதாகிய ஊழ் ஆனது, தந்தது ஆம் - (இவர்களை) இவ்விடத்தில் சேர்ப்பித்தது ஆகும்', என புகன்றான் - என்று பகர்ந்தான்.

மணிமிடற் றிறைவன்; 'நீல மணிமிடற் றொருவன் போல, மன்னுக பெரும' (புறநா. 9). ஒன்றும் - சிறிதும். ஊழின் வலியைச் சிவபெருமானே கூறுதல் காண்க. ஒன்றும் - சிறிதும்; 'ஒன்றும் பெறுத லிலரெனினும்' (குசேலோ. 3 : 122).

பி - ம். 1. என்றிசைத்தலு மணி; இருண்மிடற்று.
3. இக்கொற்றவர்; இக்குழுவெல்லாம்.
4. விதிதரந்; புகல்வான். 28

இங்கு அதிகப் பாடல்கள்,

தானல் லாதொரு பொருளிலை யெனத்தகு முதல்வன்
தானி ராமனென் றெழிலுரு வெடுத்ததுந் தவரோ
தானெம் மோடுபல் புவனங்கள் தனிவயிற் றடக்கும்
தானம் மேவினர்க் கிவரொரு பொருளெனத் தகுமோ.

நின்று காண்குதி ரிறைப்பொழு திங்குநீர் வெருவல்
இன்றி ராகவன் பகழிமற் றிராக்கதப் புணரி
கொன்று வற்றிடக் குறைத்துயிர் குடிக்குமென் றமரர்க்
கன்று முக்கண னுரைத்தல்கேட் டவருளந் தெளிந்தார்.

வானின் மேவிய வமரருக் கித்துணை மறுக்கம்
ஆன போதினி யகலிடத் துள்ளபல் லுயிர்கள்
ஈன மெய்திய தியம்பலென் எழுபது வெள்ளத்
தானை யாகிய கவிப்படை சலித்தது பெரிதால்.

## வாநரர்கள் மூலபலத்தைக் கண்டு அஞ்சியோடுதல்

3259. புற்றி னின்றுவல் லரவினம் புறப்படப் பொருமி
இற்ற தெம்வலி யெனவிரைந் திரிதரு மெலிபோல்
மற்றை வானரப் பெருங்கடல் பயங்கொண்டு மறுகிக்
கொற்ற வீரரைப் பார்த்தில திரிந்தது குலைவால்.

புற்றின் நின்று வல் அரவு இனம் புறப்பட - புற்றிலிருந்து வலிய பாம்புக் கூட்டம் புறப்பட, பொருமி - (அது கண்டு) மனம் உழன்று, 'எம் வலி இற்றது - எமது வலிமை அற்றது', என - என்று, விரைந்து - வேகமுடன், இரிதரும் எலிபோல் - நிலை குலைந்து ஓட்டம் எடுக்கும் எலிபோன்று, மற்றை வானரம் பெரு கடல் - மற்றை அந்தக் கடல்போன்ற பெருங் குரங்குச் சேனை, பயம் கொண்டு - (மூல பலத்தைக் கண்டு) அச்சம் மேற்கொண்டு, மறுகி - மனம் குழம்பி, கொற்றம் வீரரை - வெற்றி பொருந்திய வீரரான இராம இலக்குவரையும், பார்த்திலது - கருதி நோக்காமல், குலைவால் - நடுக்கத்தோடு, இரிந்தது - நிலைகெட்டு ஓடிற்று.

உவமையணி: ஒலித்தக்கா லென்னும் உவரி. எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்' (குறள். 763); 'எலியெலா மிப்படை யரவம் யானென' (அயோத்தி. குகப். 10); 'அரவி னுமத்தை யெலியிருந் தோதினு லதற்கு, விரவு நன்மையென்' (யுத்த. 179); வெற்றியே தவிரத் தோல்வி என்றும் கண்டறியாதவரான இராம இலக்குவரைக் கண்டும் மனம் தேராது ஓடியது குரக்குச் சேனை. குலைவால்: உருபுமயக்கம். புற்றினின்று வெளிப்படும் அரவு: இராக்கதர் படை: பயங்கொண்டு மறுகிய எலி: குரக்குச் சேனை. புற்று: எழுபெருந் தீவுகள் முதலியன. என இரைந்து - என்று கூச்சலிட்டு எனினுமாம்.

பி - ம். 1. பல்லாவின ; புற்று நின்றுபல்.
3. பெரும்படை ; பயத்தொடு, பயத்திடை ; வெருவிக். 27

3260. அணையின் மேற்சென்ற சிலசில வாழியை நீந்தப்
புணைகள் தேடின சிலசில நீந்தின போன
துணைக ளோடும் புக் கழுந்தின சிலசில தோன்றுப்
பணைக ளேறின மலைமுழைப் புக்கன பலவால்.

சில - சில குரங்குகள், அணையின்மேல் சென்ற - அணையின் மேல் ஏறிச்சென்றன; சில - சில குரங்குகள், ஆழியை நீந்த புணைகள் தேடின - கடலைத் தாண்டுதற்குத் தெப்பங்கள் தேடின; சிலசில - சிற்சில குரங்குகள், நீந்தின போன - நீந்திச் சென்றன; சில - சில குரங்குகள், துணைகளோடும் புக்கு அழுந்தின - துணைகளோடும் புகுந்து நீரில் அமிழ்ந்தன; சில - சில குரங்குகள், தோன்று - விழிகட்குப் புலப்படாமல், பணைகள் ஏறின - மரக் கிளைகளில் ஏறின; பல - பல குரங்குகள், மலை முழை புக்க - மலைக் குகைகளில் நுழைந்தன. ஆல்: அசை.

புணை - தெப்பம்; 'திரைசெய் நீர்விழும் சிலையினைப் புணை யன்றிச் சிலைகரை யேற்றுதால்' (விநாயகபு. அரசியற்.); 'காமக் கரும்புன லுய்க்குமே நாணொடு, நல்லாண்மை யென்னும் புணை' (குறள். 1133); 'காமக்கடன் மன்னு முண்டேயது நீந்தும். ஏமப் புணை மன்னுமில்' (குறள். 1164); 'இனமென்னும் ஏமப் புணையைச் சுடும்' (குறள். 506); தோன்று - கண்ணுக்குத் தோற்றுதபடி, பணை - மரக்கிளை; 'மராமரம் பணைகளோடும்' (யுத்த. 1642); முழை: மலைக் குகை; 'முழைக்கிடந்த வல்லரியின முழங்குவ போல்வ' (யுத்த. 3586); இது முழைஞ்சில் எனவும் வழங்கும்; 'மாரிமலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்' (திருப்பாவை. 23).

பி - ம். 1. மேற்சென்ற சிலசில. மேற்சிலர் சென்றனர்.
2. தேடினர் சிலர் சிலர்; நீந்தினர்; பொருத, பெருதார்.
3. துணைகடோறும்; புடைத்துச்செல்; புக்கழுந்தினர் சிலர் சிலர்.
4. ஏறினர்; பலமுறை; புக்கனர் பலரால், புக்கன பலவால், புக்கவர் பலரால்.

28

3261. அடைத்த பேரணை யளித்தது நமக்குயி ரடைய
உடைத்துப் போதுமா லவர்தொட ராமலென் றுரைத்து
புடைத்துச் செல்குவர் விசும்பினு மென்றன போதோன்
படைத்த தீக்கெலாம் பரந்தன ரென்றன பயத்தால்.

அடைத்த பேர் அணை - (கடலை) அடைக்குமாறு அமைத்த பெரிய அணையானது, நமக்கு உயிர் அளித்தது - நமது உயிர்

அளித்தது; (ஆதலின் நாமும்), 'அவர் தொடராமல் - அந்த இராக்கதர் பின் பற்றுதபடி, அடைய உடைத்து போதும் - (அதனை) அறவே உடைத்துச் செல்வோம்'; என்று உரைத்த - என்று சில குரங்குகள் கூறின; (சில குரங்குகள்) 'விசும்பினும் - விண்ணிலும், (நம்மை அரக்கர்) புடைத்து செல்குவர் - புடைத்து விட்டுப் போகுவர்', ஏன்றன - என்று சொல்லின; (சில குரங்குகள்) 'போதோன் படைத்த திக்கு எலாம் - பிரமதேவன் படைத்த திசைகளில் எல்லாம், பரந்தனர் - அரக்கர் பரவினர்', என்றன - என்று அச்சத்தாற் கூறின. ஆல்: அசை.

அடைய: ஒருசேர; முழுவதும். போதும்: உடன்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. உரைத்த: முற்று. புடைத்தல் - அடித்தல்; 'காதங் கறுத்துக் கதுப்பிற் புடைத்து' (தனிப்பா. காளமேகம்.). போதோன் - பிரமன்; ஆ ஓ வாகலும் செய்யுளில் உரித்தே, (நன்னூல்.). போதோன்: மலரிருக்கையனுகிய பிரமன்.

பி - ம். 1. நமக்குயிரழிவான், நம்முயிரழிய, பேருயிரடைய, நமக்குயிருடைய.
2. உரைத்துப்; உரைத்தார்.
3. செல்குவ; விசும்பினு டேறினவோதான், விசும்பினு மென்றனர் போக்கென், விசும்பினு மென்றனர் போர்க்க.
4. பரந்தன சென்றன, பரந்தன ரென்றனர், பாய்ந்தன சென்றன, பரந்தன ரென்றனர். 29

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வாயு லர்ந்தன சிலசில வயிறெரி தாழ்வுற்
றேய்த லுந்தின சிலசில வோடின நடுங்கிச்
சாய்த லுந்தின சிலசில தாழ்கடற் கிடையே
பாய்த லுந்தின சிலசில படர்கவிப் படைகள்.

3262. அரியின் வேந்தனு மனுமனு மங்கத னவனும்
பிரிய கிற்றில ரிறைவனை நின்றனர் பின்ருர்
இரிய லுற்றனர் மற்றையோ ரியாவரு மெறிநீர்
விரியும் வேலையுங் கடந்தது நோக்கினன் வீரன்.

அரியின் வேந்தனும்-குரக்கரசனான சுக்கிரீவனும், அநுமனும்-அநுமனும், அங்கதன் அவனும் - அங்கதனும், இறைவனை பிரியகிற்றிலர் - இராமபிரானைப் பிரிந்து செல்ல இயலாமல், பின்றார் நின்றனர் - பின்னிடாதவராய் நின்றனர்; மற்றையோர் யாவரும் - பிறர் எல்லோரும், இரியல் உற்றனர் - நிலைகுலைந் தோடத் தொடங்கினர்; எறி நீர் - அலைகளை வீசுகின்ற நீர், விரியும் வேலையும் - பரவப்பெற்ற கடலும், கடந்தது - தன் நிலையைக் கடந்தது: (இவை யனைத்தினையும்), வீரன் - இராமபிரான், நோக்கினன் - கண்ணுற்றான்.

குரங்குகள் சென்ற வேகத்தால் கடலும் தன் நிலை கடந்தது என்பது கருத்து. அங்கதன் அவனும்: அவனும் சொல்லுருபு. பிரியகிற்றிலர்: கில் ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. பின்றார் நின்றனர் என்க: பின்றார் முற்றெச்சம். இரியலுறுதல்: 'இரிய லிட்ட லறியோயாப் பூரலிட் டேங்கி வந்தாள்' (யுத்த. 1926).

பி - ம். 1. அங்கதன் ருனும்.

2. இறைவரை; பிரிந்தார், பிரிந்தே.

4. விரியும் வேலையைக்; கடந்தனர். 30

## இராமபிரான் இப்படை வந்த வகையென் என்று வினவ, வீடணன் கூறுதல்

3263. இக்கொ டும்படை யெங்குள தியம்புதி யென்றான்
மெய்க்கொ டுந்திறல் வீடணன் விளம்புவான் வீர
திக்க னைத்தினு மேழுமாத் தீவினுந் தீயோர்
புக்க மைத்திடப் புகுந்துள திராக்கதப் புணரி.

'இ கொடும் படை - இந்தக் கொடிய சேனை, எங்கு உளது - (இத்துணைக் காலமாக) யாண்டிருந்தது? இயம்புதி - பகர்வாயாக' என்றான் - என்று கேட்டான் இராமபிரான்; மெய் கொடும் திறல் வீடணன் விளம்புவான் - உண்மையான கொடிய வலி வாய்ந்த விடணன் (பின்வருமாறு) விடை தருவான் ஆனான்; வீர - வீரனே! திக்கு அனைத்தினும் - எல்லாத் திசைகளிலும், ஏழு மா தீவினும் - ஏழு பெரிய தீவுகளிலும், தீயோர் - கொடிய அரக்கர்கள், புக்கு

அழைத்திட - சென்று அழைத்தாராக, இராக்கதர் புணரி புகுந்து உளது - கடல்போன்ற அரக்கரின் பெருந்திரள் வந்துளது.

மெய் கொடுந்திறல் வீடணன்; வீடணன் சத்துவகுணத்தனே யானாலும் அரக்கர்க்குரிய கருமையான உடல் வன்மையுடன், அறிவு வன்மையும் பெற்றவன் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. இங்கு அவனுடைய அருமையான சூழ்ச்சித்திறன் என்க; 'வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே' (குறுந். 73) என்றது காண்க. குரக்குருவாய் வேவு பார்க்கவந்த ஒற்றர்களை அறிந்து பற்றியது கொண்டும், (யுத்த. 708); நிகும்பிலை வேள்வி நிகழ்ந்தபோது, இலக்குவனுக்கு மர்மங்கள் கூறி அவ்வப்பொழுது ஊக்கியது கொண்டும், வீடணனுடைய வன்கட் சூழ்ச்சியை அறிக. (யுத்த. நிகும்பிலை. 27, 101, 129) காண்க. ஏழு மாத்தீவு: (யுத்த. படைக்காட்சி: 10 - 19 காண்க.

பி - ம். 1. கொடும்பகை.

2. கடுந்திறல்; வீரன்.

3. நீவினு முறைவோர்;.

4. புக்கமைந்திட: அழைத்தது; புகுந்ததிவ் விராக்கதப் புணரி. 31

3264. ஏழெ னப்படுங் கீழுள தலத்தினின் றேறி
ஊழி முற்றிய கடலெனப் புகுந்தது முளதால்
வாழி மற்றவன் மூலமாத் தானைமுன் வருவ
ஆழி வேறினி யப்புறத் தில்லைவா ளரக்கர்.

'ஏழ் என படும் - ஏழ் என்று சொல்லப்படுகின்ற, கீழ் உள தலத்தினின்று ஏறி - பாதாள உலகத்தினின்று (இங்கு) எழுந்து வந்து, ஊழி முற்றிய கடல் என - மகாப் பிரளய காலத்தில் உலகத்தைச் (சூழ்ந்த) கடல் போன்று, புகுந்ததும் - புகுந்த சேனைத் தொகுதியும், உளது -(இதில்) அடங்கி யுள்ளது; முன் வருவ மற்றவன் மூலம் மா தானை - நம் முன்பு வருகின்ற இவை, அந்த இலங்கேசனுடைய பெரிய மூலபலமாகும்; வாள் அரக்கர் - கொடிய இராக்கதரின், ஆழி - கடல் போன்ற படை, இனி அப்புறத்து வேறு இல்லை - இனி அதற்கப்பால் வேறு கிடையாது. வாழி: முன்னிலையசை. ஆல்: அசை.

கீழுள தலம் ஏழு: அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ரசாதல, பாதாளம் என்பன. முன்னர் இராக்கதப் புணரி என்றார் (31); இங்கு ஊழி முற்றிய கடலுக் குவமித்தார்.

பி - ம். 2. புகுந்தது முளவால்.
3. வாழிபெற்றவன், மற்றிவண், மற்றவை.
4. இல்லையப் புறத்தின். 32

3265. ஈண்டிவ் வண்டத்தி லிராக்கத ரெனும்பெய ரெல்லாம்
மூண்டு வந்தது தீவினை முன்னின்று முடுக்க
மாண்டு வீழுமின் றென்கின்ற தென்மதி வலியூழ்
தூண்டு கின்றதென் றடிமலர் தொழுதவன் சொன்னான்.

'தீவினை நின்று முன் முடுக்க - தீவினையானது நின்று முன்னே உய்க்க, இவ் அண்டத்தில் - இந்த அண்டத்தில், இராக்கதர் எனும் பெயர் எல்லாம் - அரக்கர் என்று பெயர் தரித்த படையனைத்தும், ஈண்டு மூண்டு வந்தது - இங்கே முனைந்து வந்தது; வலி ஊழ் தூண்டுகின்றது - வன்மை வாய்ந்த ஊழ்வினை முடுக்குவதால், இன்று - இப்பொழுதே, (இப்பெருஞ் சேனைத் தொகுதி) மாண்டு வீழும் - இறந்துபடும், என்கின்றது என்மதி - என்று என் புத்தி கருதுகின்றது'; என்று - என்று, அடிமலர் தொழுது - இராமபிரானுடைய திருவடித் தாமரைகளை வணங்கி, அவன் - அந்த வீடணன், சொன்னான் - புகன்றான்.

ஈண்டு: இவ்விடத்து; 'ஈண்டுநீ யிருக்க' (சுந்தர. 525); மூண்டுவந்தது தீவினை: 'முன்செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே' (பட்டினத்); தீவினை முன்னின்று முடுக்க: 'அரக்கர் பாவமுமல்லவ ரியற்றிய வறமுந்துரக்க' (அயோத்தி. மந்தரை. 78); (ஒப்பு): ஊழ்வினை தூண்ட டனக்கு நல்லன சொல்லினை' (அயோத்தி. மந்தரை. 65); 'விதியதுவலியினானு மேலுள விளைவினாலும்' (ஆரணிய. 639). இழைக்கின்ற விதி முன்செல்ல, தூண்டுகின்றது: 'தூண்டு மின்னலும் வறுமையும் தொடர்தர' (அயோத்தி. மந்தரை. 72).

பா-ம். 1 ஈண்டிவ்வந்துள, வந்துளது, இவ்வண்டத்துள்

2. நீவிளை பிணைநின்று, பின்னின்று; முடுக.

3. விழுமின்றென்பதென் றென்மதவிதியாற், விழ்பவரென்ப தெனவவ மதிவிதியாற்

4. தூண்டுகின்றனர், தூண்டுகின்றனன்: அடிதொழுதனன், 33
தொழுதிவை.

## அஞ்சியோடிய வானரசேனையை யழைத்துவருமாறு இராமபிரான் அங்கதனுக்குக் கட்டளையிடல்

3266. கேட்ட வண்ணலு முறுவலுஞ் சீற்றமுங் கிளரக்
காட்டு கின்றனன் காணுதி யொருகணத் தென்று
ஓட்டின் மேற்கொண்ட தானையைப் பயந்துடைத் [துரவோய்
மீட்டி கொல்லென வங்கத னோடினன் விரைந்தான்.

கேட்ட அண்ணலும் - (வீடணன் மொழிகளைச்) செவியேற்ற பெருமையனான இராமபிரானும், முறுவலும் சீற்றமும் கிளர - ஒரு புறம் சிரிப்பும் பிறிதொருபுறம் சினமும் எழ, 'ஒரு கணத்து காட்டுகின்றனன் காணுதி - (இவர்கள் படும் பாட்டைக்) ஒரு கணப் பொழுதில், காண்பிக்கின்றேன் நீ காண்பாயாக'; என்று - என்று சொல்லி, உரவோய் - வலிமையோனே, 'ஓட்டின் மேல் கொண்ட தானையை - ஓட்டத்தை மேற்கொண்டுபோன (குரக்குப் படையை), பயம் துடைத்து - அச்சம் நீக்கி, மீட்டி கொல் - மீட்பாயாக', என - என்று கூற, அங்கதன் விரைந்தான் ஓடினன் - அங்கதன் வேகமாக ஓடினான்.

அண்ணல்: ஆண்பால் சிறப்புப் பெயர். முறுவலும் சீற்றமும் கிளர: இரு மெய்ப்பாடுகள் ஒரே சமயத்தில் தோன்றின. சீற்றம் அகத்தும், முறுவல் புறத்தும்; இந்நகையும் வீரத்தெழுந்த வெகுளி நகை. எள்ளல் நகையுமாம்; பிறனை எள்ளி நக்கது. எதிரிகளின் எளிமைபற்றி முறுவலும், வானரர்கள் அஞ்சியோடியது பற்றிச் சீற்றமும் எழுந்தன என்க. இரு மெய்ப்பாடுகள் எழுந்ததற்கு (ஒப்பு): 'என்றவனிறைஞ்ச நோக்கி யிரக்கமு முனிவுமெய்தி' (சுந்தர. 514) 'தம்பியை யுன்னுந்தோறுந் தாரை நீர் ததும்புங் கண்ணன், வம்பியல் சிலையை நோக்கி வாய்

மடித்துருத்து நக்கான். 'கிளர்ந்த சீற்றமுங் காதலு மெதிரெதிர் கிடைப்ப' (சுந்தர. 467, 985); 'கண்டதோர் வடிவாலுள்ளங் காதல் செய்துருகா நிற்கும், கொண்டதோர் பித்தவார்த்தை கோபமு முடனே யாக்கும்' (பெரிய.பு. தடுத்தாட். 42); ஓட்டு: தொழிற்பெயர். கொல்: ஐயம்: ஓட்டு: ஓட்டம்: 'ஓட்டிடை யுழலும்' (யுத்த. இராவணன் வதை. 71).

3. ஓட்டமேற்சென்ற, புரங்கொடுத்து

4. மீட்டுக்கொள்கென; விரைந்து. 34

3267. சென்று சேனையை யுற்றனன் சிறைசிறை கெடுவீர்
நின்று கேட்டபி னீங்குமி னெனச்சொல்லி நேர்வான்
ஒன்றுங் கேட்கில மென்றதக் குரக்கின முரையால்
வென்றி வெந்திறற் படைப்பெருந் தலைவர்கள் மீண்டார்.

சென்று சேனையை உற்றனன் - (அங்கதன்) போய் (குரக்குப் படையை) அடைந்து, 'சிறை சிறை கெடுவீர் - பக்கம் பக்கமாக நிலைகுலைந்து ஓடுபவர்களே! நின்று கேட்டபின் - நிதானித்து (நான் மொழிவதை)க் கேட்டபின்னர், நீங்குமின் - (ஓடுதலே செய்யத்தக்கது என்று தோன்றினால்), ஓடிவிடுங்கள்'; என சொல்லி - என்று நல்லுரை வழங்கி, நேர்வான் - (பின்னும்) பகர்வானானன்; அ குரக்கினம் - அந்தக் குரக்குப் படை, 'ஒன்றும் கேட்கிலம் - (நாங்கள்) ஒன்றும் கேளோம்', என்றது - என்று விடையிறுத்தது; உரையால் - இவனது சொல் வன்மையால், வென்றி - வெற்றியும், வெம்திறல் - கடிய வலிமையும் பெற்றிருந்த, படைபெரும் தலைவர்கள் - வானர சேனையில் இருந்த பெருந் தலைவர்கள் மட்டும், மீண்டார் - அங்கதனுடன் திரும்பி வந்தனர்.

சிறை சிறை: பக்கம் பக்கமாக; 'மறுகு சிறை' (பதிற்றுப். 29, 9); நேர்தல் - சொல்லுதல்; 'சீர்சடகோபன் நேர்தலாயிரத்து' (திருவாய். 1, 8, 11).

பி - ம். 1. சென்ற; தானையை; சிறிதிறை, சிறிதினம்.

3. கேட்டிடும்; என்றனர், என்றன; குரங்கின முறையால். 35

## அங்கதன் வினவ, நின்ற படைத்தலைவர்கள் ஓடிய காரணத்தை யுரைத்தல்

3268. மீண்டு வேலையின் வடகரை யாண்டொரு வெற்பின்
ஈண்டி னோர்களை யென்குறித் திரிவுற்ற தென்றான்
ஆண்ட நாயக கண்டிலை போலுநீ யவரை
மாண்டு செய்வதெ னென்றுரை கூறினர் மறுப்பார்.

மீண்டு - (ஓடுவதினின்றும்) மீண்டு, வேலையின் - ஆழியின், வடகரை - வடகரையில், ஆண்டு - அவ்விடத்து, ஒரு வெற்பில் - ஒரு மலையில், ஈண்டினோர்களை - நெருங்கி நின்ற குரக்குப் படைத் தலைவர்களை நோக்கி, 'என்குறித்து இரிவு உற்றது - என்ன காரணம் கொண்டு நீங்கள் நிலைகுலைந்து ஓடியது', என்றான் - என்று (அங்கதன்) கேட்டான்; 'ஆண்ட நாயக - எங்களை ஆட்கொண்ட தலைவனே! நீ அவரை கண்டிலைபோலும் - நீ அந்த இராக்கதரைப் பார்க்கவில்லைபோலும்; மாண்டு செய்வது என் - நாங்கள் இறந்துபடுவதால் ஆகக்கூடிய காரியம் யாது'? என்று - என்று, மறுப்பார் - பொர்க்கெழுவதை மறுக்கத் தொடங்கியவராய், உரை கூறினர் - (பின் வருமாறு) பகர்ந்தனர்.

போலும்: ஒப்பில் போலி; நீ அவரைக் கண்டிலை போலும் என மொழி மாற்றுக.

பி - ம். 1. யீண்ட: மீண்டும் வடவரை.
2. இரிகின்றது, இரிவுற்றீர்.
3. நீவாரை, நீரவரை.
4. என்றனர்; மறுத்தார். 36

3269. ஒருவ னிந்திர சித்தென வுள்ளவ னுளநாள்
செருவி னுற்றவை கொற்றவ மறத்தியோ தெரியிற்
பொருவின் மற்றவ ரிற்றில ரியாரொடும் பொருவார்
இருவர் விற்பிடித் தியாவரைத் தடுத்துநின் றெய்வார்.

'இந்திரசித்து என உள்ளவன் ஒருவன் உளநாள் - இந்திர சித்து என்று பேர் படைத்திருந்தவனான ஒப்பற்றவன் வாழ்ந்த

நாளில், கொற்றவ - வெற்றி வீரனே! செருவின் உற்றவை மறத்தியோ - போரில் நிகழ்ந்தவற்றை மறந்தனையோ? தெரியில் - ஆராயுமிடத்து, பொருவு இல் - ஒப்புமையில்லாத, மற்றவர் - அந்த இராக்கதர், இற்றிலர் - (அந்த இந்திரசித்துக்கு)த் தோற்றவர் அல்லராய், யாரொடும் பொருவார் - யாவருடனும் போர் செய்வார்; (இங்ஙனமாகவும்), இருவர் வில்பிடித்து யாவரை தடுத்து நின்று எய்வார் - இரண்டு வீரர்கள் வில்லினைக் கைக் கொண்டு யாவரைத் தடுத்து நின்று எய்யவல்லவர் ஆவார்.

உளநாள்: வாழ்ந்த காலத்து. மறத்தியோ: ஓகாரம் வினா. பொருவு, ஒப்பு: 'பொருவில் கேண்மையர்' (யுத்த. 317); 'போத மொத்தன னிராமன்வே றிதனில்லை பொருவே' (யுத்த. 1175) இருவர்: இராம இலக்குவர்.

பி - ம். 1. ஒருநாள், முனைநாட்.

2. செருவினுற்றன.

3. மற்றவர்; நிற்றிலர், அற்றிலர், மற்றவருற்றனர்; பொருவிர்.

4. எய்தார். 37

இதன்பின் 'ஊழியாயிரம்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3270. புரங்க டந்தவப் புனிதனே முதலிய புலவோர்
வரங்கள் தந்துல களிப்பவ ரியாவரு மாட்டார்
கரந்த டங்கின ரினிமற்றவ் வரக்கரைக் கடப்பார்
குரங்கு கொண்டுவந் தமர்செயு மானுடர் கொல்லாம்.

'வரங்கள் தந்து உலகு அளிப்பவர் - வரங்களை யீந்து உலகில் உள்ளோரைக் காத்தளிப்பவரான, புரம்கடந்த அ புனிதனே முதலிய புலவோர் - திரிபுரத்தை வென்ற தூய மூர்த்தியாகிய அந்தச் சிவபிரான் முதலிய வானவர், யாவரும் - எல்லோரும், மாட்டார் - முன் நிற்க இயலாதவராய், கரந்து அடங்கினர் - ஒளிந்து அடங்கிவிட்டார்கள்; இனி அவ் அரக்கரை கடப்பார் - இனி அந்த இராக்கதரை வெல்பவர், குரங்கு கொண்டு வந்து - வானரர்களைத் துணையெனக் கொண்டுவந்து, அமர் செய்யும் மானுடர் கொல் ஆம் - போர்புரியும் மானுடர் தாமோ? கொல்: ஐயம், மற்று; வினைமாற்று.

மாட்டார் ; முன்னின்று எதிர்க்க மாட்டார். 'வல்லார்க்கு மாட் டார்க்கும்' (அருட்பா) குரங்கு கொண்டு வந்தமர் செயுமானுடர்; (ஒப்பு) 'மக்களுங் குரங்குமே வலியரா மெனின், அக்கட் இராவணற் கமைந்த வாற்றலே' (யுத்த: 43) 'மண்ணியள் மனிசருங் குரங்கு மற்றவும், உண்ணிய வமைந்தன வுணவுக்குட்குமேல், திண்ணிய வரக்களிற்றீரர் யாவரே' (யுத்த. 45).

பி - ம். 3. யாரினி யரக்கரை, மற்றிவ்வரக்கரைக், மற்றிவ்வுலகினைக் கடப்பார்
4. கொல்லோ. 38

3271. ஊழி யாயிர கோடிநின் றுருத்திர ஞேடும்
ஆழி யானுமற் றயனெடு புரந்தர னவனும்
சூழ வோடின ரொருவனைக் கொன்றுதந் தோளால்
வீழு மாசெய்ய வல்லரேல் வென்றியி னன்றே.

'உருத்திரனேடும் - உருத்திரனேடும், ஆழியானும் - திரு மாலும், மற்று - ம்ற்றும், அயனெடு புரந்தரன் அவனும் - பிரம ஞேடு இந்திரனும், ஆயிரம் கோடி ஊழி - ஆயிரம் கோடி ஊழிக் காலம், நின்று - எதிர் நின்று, சூழ ஓடினர் - சுற்றி ஓடினராய், ஒருவனை - ஒருவனை, தம் தோளால் - தமது புய வன்மையால், கொன்று - கொலைசெய்து, வென்றியின் - வெற்றியுடன், வீழுமா செய்ய வல்லரேல் - வீழுமாறு செய்ய வன்மை யுடையவராகில், நன்றே - நல்லதாகும். ஏ - அசை.

ஆழியான் : பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திருமால்' 'ஆழி யான் பள்ளியணையே' (தனிப்பா. கம்பர்.); 'ஆழியானென் றுணரற் பாற்று' (முத்தொள்: 130); வீழுமாறு என்பது ஈறு குறைந்தது.

பி - ம். 1. உருத்திர ரோடும்.
2. அயனுமப், அமரரும் ; வானவர் கோனும்
3. சூழவோடினுல், சூழமோடினுல் ; ஒருவரை
4. வல்லயே, வல்லவோ, வல்லரோ ; யெனப்பினன்றே.

3272. என்னப் பாமற்றிவ் வெழுபது வெள்ளமு மொருவன்
தின்னப் போதுமோ தேவரின் வலியமோ சிறியேம்
முன்னிப் பாரெலாம் படைத்தவ னுளெலா முறைநின்
றுன்னிப் பார்த்துநின் றுறையிடக் குறையுமோ யூகம்.

'என் அப்பா - என்ன ஆச்சரியம்! இவ் எழுபது வெள்ளமும்- இந்த எழுபது வெள்ளம் குரக்குப் படையும், ஒருவன் தின்ன போதுமோ - ஒருவன் உணவிற்கு அமையுமோ? சிறியோம் - சிறுவராகிய நாம், தேவரின் வலியமோ - வானவரைப் பார்க்கிலும் வன்மை பெற்றுள்ளோமோ? யூகம் - இந்தச் சேனையானது, முறை நின்று முன்னி - முறையாக ஆராய்ந்து, இ பார் எலாம் முன்படைத்தவன் - இந்தப் பூமிகளை முன்பு படைத்தவனான பிரம தேவன், நாள் எலாம்-பலநாட்கள், பார்த்து நின்று-நோக்கி நின்று, உறை இட குறையுமோ - உறையிடுமாறு குறைந்து காட்டுமோ?

என் அப்பா : கி. பி. 12-ஆம் நூற்றூண்டு சித்தர் வதிந்த காலம்; இவர்கள் ஞான நெறியை மிகவும் எளிய நடையில் பாடிச் சென்றனர்; இவர்கள் பாடலில் 'கேளப்பா' 'பாரப்பா' என்ற தொடர்கள் வரும். இங்கும் அப்பா என்பது அருமை பற்றி எழுந்தது என்க. தேவரின் : இன் ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருள். முன்னிப்பார்த்தல், எண்ணி ஆராய்தல் : 'முன்னிய வேள்வி' (யுத்த : 2789) உறையிடக் குறையுமோ ; 'ஒழிந்த வேறுயிர்களெல்லாம் அரக்கருக்குறையும் போதா' (சுந்தர. 129); 'உறையிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ' (சுந்தர. 605); 'குரங்கின் மாப்படைக் குறையிட' (கிட்கிந்தா. 721); பதிற். 71; சீவக. 270. குறிப்புரை : திருவேங். அந்தாதி. 34 காண்க. உறை, பெரிய எண் கணக்கைக் குறிப்பிட அடையாளமாக வைக்கும் சிறு பொருள். யூகம் : வியூகம் என்ற வட சொற் றிரிபு.

பி - ம். 1. ஒருவர்
2. அவர்தம் மீன்; சிரின்.
3. முன்னைப்; பாரகம்.
4. அறையிடக்; குறையுமிவ்; ஓதம். 40

3273. நாய கன்தலை பத்துள கையுநா லைந்தென்
றேயு நெஞ்சின மொருவன்மற் றிவண்வந் திங்குற்றூர்
ஆயி ரந்தலை யதற்கிரட் டிக்கைய ரையா
பாயும் வேலையிற் கூலத்து மணலினும் பலரால்.

'நாயகன் ஒருவன் தலை பத்து உள - தலைவன் ஒருவனுக்குத் தலைபத்து உள்ளன; கையும் நாலைந்து-கைகளும் இருபது, என்று-

என்று (நினைத்தே), ஓயும் நெஞ்சினம்-தளர்ந்த உள்ளம் உடையவர் ஆனோம்; இங்கு இவண் வந்து உற்றார்-இப்போது இந்த இடத்து வந்து அடைந்தவரோ, ஆயிரம் தலை - ஆயிரம் தலைகளையும், அதற்கு இரட்டி கையர் - அதில் இருமடங்கான (ஈராயிரம்) கரங்களையும் உடையவர்கள் ; ஐயா - ஐயனே ! பாயும் - (அலை) தவழும், வேலையின் கூலத்து மணலினும் பலர் - கடற்கரை மணலினும் பலராவர். ஆல்: அசை. மற்று: வினைமாற்று.

நாயகன் தலைபத்துள கையு நாலைந்து: 'இருபது கரந்தலையீரைந்து' (யுத்த. 342); காண்க. 'பத்துள தலையும் தோளும் பலவுள' (சுந்தர. 448); 'சீதையை விடுவதுண்டோ விருபது திண்டோளுண்டாய்' (யுத்த. இந்திர. 9); என்பதும் 'பத்துள தலைப்பகுதி தோள்கள் பலவன்றோ' (ஆரணிய. 614); என்பதும் இராவணனே கூறியன. ஓய்தல் : ஊக்கம் குன்றுதல்; 'ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதனுணுக்கம்' (தொல். சொல். உரி. 34); அதற்கிரட்டிக் கையர் : இரண்டாயிரம் கையர். எண்ண முடியாதொன்றற்குக் கடல் மணலை உவமை கூறுவது மரபு. 'தொல்லைநம் பிறவி யெண்ணிற் றெருடுகடல் மணலு மாற்ற வெல்லைய' (சீவக. 270); 'மணலிற் பலரால் வாநரத்தின்' (சுந்தர : 602); 'கருங்கடலைக் கை நீத்துக்கொள லெளிது முந்நீர்க் கடற் கரையி னெய்மணலை யெண்ணி யளவிடலாம். (சேக்கீழார் புராணம். 51). கூலம்: கடற்கரை; 'கூலத்தா ருலகமெல்லாம்' (ஆரணிய. 657).

பி-ம். 2. ஓயுமுள்ளதே யொருவன் மற்றவன் வந்திங்குற்றார், ஓயு நெஞ்சினமொருவனிங்கவனில் வந்துற்று, ஓயுமுள்ளதோம்......உற்றார், ஓயு நெஞ்சினன்......இவர் வந்கிங்குற்றார்.

3. ஆயிரங் கரம், ஆயிரங் கையர் ; ஐஞ்ஞூறு தலையினரைய.

4. மாய. 41

3274. கும்ப கன்னனென் றுளன்மற்றிங் கொருவன்கைக்
[கொண்ட
அம்பு தாங்கவு மிடுக்கில மவன்செய்த தறிதி
உம்ப ரன்றியே யுணர்வுடை யார்பிற ருளரோ
நம்பி நீயுமுன் றனிமையை யறிந்திலை நடந்தாய்.

'கும்பகன்னன் என்று இங்கு உளன் ஒருவன் - கும்பகன்னன் என்று பெயர் கொண்டவனுன இங்கிருந்த ஒருவன், கை கொண்ட - கையில் ஏற்றிருந்த, அம்பு - அம்பினை, தாங்கவும் மிடுக்கு இலம் - ஏந்தும் வன்மையும் உடையோமல்லோம்; அவன் செய்தது அறிதி-அவன் செய்ததை அறிந்துள்ளனையே; (அவனை ஒப்பார் பலர் இங்குள்ளனர்); உம்பர் அன்றியே - தேவர்கள் அல்லாமலே, உணர்வு உடையார் பிறர் உளரோ - உணர்ச்சியை யுடையார் பிறர் உளரோ - உணர்ச்சியை யுடையவர் பிறர் உள்ளாரோ? (அவர்களும் அஞ்சுகின்றனரே); நம்பி - தலைவனே! அறிந்திலை - நீ அறியாப்பிள்ளை ஆதலின், நீயும் தனிமையை - நீயும் தனிப்பட்டவனுய், முன் நடந்தாய் (இங்கு) நடந்து வந்தனை. ஓ: வினு. எதிர்மறைப் பொருள். மற்று: அசை.

மிடுக்கு - வலிமை: 'மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக்கிவனென்று' (தேவா. 647: 2); உம்பர்-தேவர்: 'உம்பரான் முனிவராற்றேவரானுயர்' (பால: பாயி); தனிமையை அறிந்திலை - நீ தனியாக வந்தது பிழை என்றுர் வீரர்.

பி - ம். 1. ஒருவனங்கவன்கையிற்.
2. மிடுக்கிலன்; செய்தவறிவை.
4. நீயுனதருமையை, நீயுன்றனருமையை. 42

3275. அனும னுற்றலு மரசன தாற்றலு மிருவர்
தனுவி னுற்றலுந் தம்முயிர் தாங்கவுஞ் சாலா
கனியுங் காய்களு முணவுள முழையுள கரக்க
மனித ராளினெ னிராக்கத னுளினெனென் வையம்.

'அனுமன் ஆற்றலும் - அநுமனது வல்லபமும், அரசனது ஆற்றலும் - குரக்கரசனுன சுக்கிரீவனுடைய வல்லபமும், இருவர் - இரு வீரர்களான இராம இலக்குவரின், தனுவின் ஆற்றலும் - விற்களின் வன்மையும், தம் உயிர் தாங்கவும் சாலா - தம் உயிரைக் காத்துக் கொள்வதற்கும் போதா; கனியும் காய்களும் - பழங்களும் காய்களுமாகிய, உணவு உள - உணவுகள் உள்ளன; கரக்கமுழை உள - (ஒளித்து வாழக்) குகைகளும் உள்ளன; வையம் - இந்த

மாநிலத்தை, மனிதர் ஆளின் என் இராக்கதர் ஆளின் என் - மனிதர் ஆட்சி புரிந்தால் என்ன? இராக்கதர் ஆட்சி புரிந்தால் என்ன?

அரசன் - சுக்கிரீவன். தனு - வில்; 'தனுவினுயிரங்கோடி' (யுத்த. 2348); 'தனுவன்றித் துணையில்லான் தருமத்தின் கவசத் தான், மனுவென்ற நீதியான்' (பால. குலமுறை. 14); கனியுங் காய் களுமுணவுள முறையுள கரக்க; இயற்கை நவிற்சி. இறுதியடிக்கு, இராமன் ஆண்டாலென்ன இராவணன் ஆண்டால் என்ன என்ற பழமொழியை ஒப்பு நோக்குக. வையம் - மாநிலம்; 'வையமென்னை யிகழவும்' (பால. பாயி. 6); 'வையந் தந்த நான்முகன் மைந்தன் (சுந்தர. 483).

பா - ம். 1. அரசன்றன், அரசன்ருன்.

2. எங்களை யின்னுயிர் தாங்கர், தங்களைத் தாங்குவார் தாங்கார், தங்கடமுயிரினைத் தாங்கா.

3. காய்களுங் கானுள.

4. இராக்கதர்; ஆள்கிலென். 43

3276. தாமுளா ரன்றே புகழினைத் திருவொடுந் தரிப்பார்
யாமு ளோமெனி னெங்கிளை யுள்ளதெம் பெரும
போமி னீரென்று விடைதரத் தக்கனை புரப்போய்
சாமி னீரென்றல் தருமமன் றென்றனர் தளர்ந்தார்.

'தாம் உளார் அன்றே - தாம் உளரானுர் அல்லவோ, புகழினை திருவொடும் தரிப்பார் - கீர்த்தியைத் திருமகளோடும் தாங்குபவராவார்? யாம் உளோம் எனின் - யாங்கள் நிலை பெற்றுலல்லவோ (எம்மால் ஆதரிக்கப்பட்டு), எம் பெரும - எமது தலைவனே! எம் கிளை உள்ளது - எமது சுற்றமும் உள்ளதாகும், புரப்போய்-காத்தருள்பவனே! நீர் போமின்-நீங்கள் செல்லுங்கள்', என்று - என்று, விடைதர தக்கனை - (நீ எம்மனோர்க்கு) விடை யளித்தற்கு உரியை; நீர் சாமின் - நீவிர் இறந்துபடுங்கள், என்றல் - என்று மொழிதல், தருமம் அன்று - அறமாகாது,' என்றனர் தளர்ந்தார் - என்று சொல்லித் தளர்ச்சி யெய்தினர்,

நாங்கள் உயிருடன் வாழ்ந்தால் தானே பின்னர்ப் புகழைப் பற்றிச் சிந்திக்கலாம்; எங்கள் உயிர்க்கே ஆபத்து நேர இருக்கும் போது நாங்கள் ஓடிப் பிழைப்பதேயன்றிப் புகழை நாடி உயிர் விடுதல் தகுமா? எங்கள் உயிர் நீங்கினுல் எமது உறவினரும் மாள்வர். ஆகவே நீங்கள் சென்மின் என்னுது போர்க்குச் சென்று உயிர் விடுங்கள் என்பது பொருந்துமா என்றனர். அங்கதன் இளவரசன் ஆதலின் 'புரப்போய்' என விளிக்கப்பட்டான்.

பி-ம். 1. சேமுளாரலரே புகழ்த், தாமுளராவரே புகழ்த்; திரிப்பார்.
2. எங்ஙனம்; பெருமான்.
3. போமுனிர், போமுளீர்; விரைதரத்; தக்கன; புகழோய்.
4. சாமுன்; தருமமோ; தளர்ந்தான். 44

இங்கு அதிகப் பாடல்கள் :—

(1) அநுமனுற்றலு மரசன தாற்றலு மிருவர்.
தனுவி னுற்றலும் தங்களைத் தாங்குவார் தாங்கார்
கனியுங் காய்களும் உணவுள மலையுள காக்க
மனித ராளிலென் ராக்கதர் ஆளினென் வையம்.

(2) என்று சாம்பவன் முதலிய தலைவர்க ளியம்பக்
குன்று லாம்புயத் தங்கதன் குறுநகை புரிந்தே
நன்று நம்முரை நாயகர்ப் பிழைத்துநம் முயிர்கொண்
டொன்றி வாழ்தலு முரிமைய தேயென வுரைப்பான்.

வேறு

## அங்கதன் சாமபனை நோக்கி ஓடுவது தகாது என்று காரணம் காட்டி அறிவித்தல்

3277. சாம்பனை வதன நோக்கி
வாலிசே யறிவு சான்ருேய்
பாம்பணை யமல னேமற்
றிராமனென் றெமக்குப் பண்டே

ஏம்பல் வந் தெய்தச்
சொல்லித் தேற்றினு யல்லேயோநீ
ஆம்பலம் பகைஞன் றன்னே
டயிந்திர மறைந்தோ னன்னுய்.

வாலி சேய் - வாலி மகனுன அங்கதன், சாம்பனை வதனம் நோக்கி - சாம்பனை நேராகப் பார்த்து, 'அறிவு சான்ருேய் - அறிவு சால்பு என்பவற்ருல் மிக்கவனே! அம் ஆம்பல் பகைஞன் தன்னேடு அயிந்திரம் அமைந்தோன அன்னுய் - அழகிய ஆம்பல் மலருக்குப் பகைவன் ஆன கதிரோனிடத்து ஐந்திர வியாகரணம் படித்தவனுன அநுமனை ஒத்தவனே! நீ - நீ, பாம்பு அணே அமலனே - ஆதிசேடனுகிய அமளியில் படுத்துக்கொண்டுள்ள தூய மூர்த்தியே, இராமன் என்று - இராமபிரான் என்று, எமக்கு-எங் கட்கு, பண்டே - முன்னமே, ஏம்பல் வந்து எய்த - மகிழ்ச்சி வந்து பொருந்தும்படியாக, சொல்லி தேற்றினுய் அல்லேயோ - கூறித் தெளிவித்தா யல்லேயோ? மற்று : வினை மாற்று.

சாம்பன் - கரடிப் பெரும்படை விருத்தன். (யுத்த, 656); கிட்கிந்தா. 699 உரைக் குறிப்புக் காண்க. சான்ருேய் - சால்பு நிறைந்தவனே; 'அன்பு நாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றியதூண்' (குறள். 983) பண்டே: 'பண்டே புரிந்த பழவினை யாவையும்' (திருங்கருவை. கலித். அந்.); ஏம்பல் - மகிழ்ச்சி; 'ஏம்பலினிமேலே வி தியான் முடியு மென்ருன்' (கிட்கிந்தா. 836); 'ஏம்பல் வரத்தன் சிந்தை தெரிப் பான்' (கிட்கிந்தா. 997); சொல்லித் தேற்றியது: 'விரிஞ்சன் வெம் படை யென்ருலும் வேதத்தினுட்பங் கூறும், அரிந்தமன் தன்னை யொன்று மாற்றலது என்னு மாற்றல், தெரிந்தனன் முன்னே' (யுத்த. 2658); 'அன்னவன் றன்னைகண்டா லாற்றுமோ வாக்கை வேறே, இன்னுயி ரொன்றே மூலத்திருவரு மொருவரேயால்' (யுத்த. 2657) என்பன காண்க. ஆம்பல் அம் பகைஞன் - சூரியன். அவனிடம் அயிந்திரம் கற்றவன் அநுமன்; 'கலையனைத்தும் கதிரோன் முன் சென்ருேதினுன்' (யுத்த. 408); 'அயிந்திரம் கற்றவன் ஆணையேவலால்' (யுத்த. 345); 'வேதமொரு நாலுடன் விளங்கிய சடங்கமும் விரிந்த கலையும், ஓத நில வீதியிசை யேழு

பரிபூணருண னூரவிரைதேர், மீதுசெலும் வெங்கதிரவன்றனொ டயிந்திர வியாகரணமும், ஓதியொரு நாளினி னுணர்ந்தனனிம் மாருதி யுயர்ந்த புகழோய்' (உத்தர. அநுமப். 46); மற்றும் கதிரோனிடம் வேதம் கற்றது; (கிட்கிந்தா. 74, 989, 991).

பி-ம். 1. சார்ந்தோய்.

2. அமலன் மற்றிவ்விராமன், மற்றிவ்விரன்.

3. தேம்பல்; வந்துதவச் சொல்லித் தேற்றினுய், வந்துற்ற காலத்தியம் பினுய்; இல்லையோ நீ, இரவி போலாம், இரதிபோலாம், இரத போலாம்.

4. ஆம்பலன்; நிறைந்தோன். 45

3278. தேற்றுவாய் தெரிந்த சொல்லாற்
றெருட்டியித் தெருளி லோரை
ஆற்றுவா யல்லை நீயு
மஞ்சினை போலு மாவி
போற்றுவா யென்ற போது
புகழென்னும் புலமை யென்னும்
கூற்றின்வா யுற்ருல் வீரங்
குறைவரே யிறைமை கொண்டார்.

'தெரிந்த - ஆராய்ந்த, சொல்லால்-(இனிய) வார்த்தைகளால், இ தெருள் இலோரை - இந்தத் தெளிவில்லாத குரங்குகளை, தெருட்டி தேற்றுவாய் - தெளிவித்துத் தேற்றத் தக்காய்; (அத் தகைய) நீயும் - நீயும், ஆற்றுவாய் அல்லை-சிறிதும் ஆறுதலின்றி, அஞ்சினை போலும் - பயந்தனை போலும்; (அன்றியும்) ஆவி போற்றுவாய் - (உன்) உயிரையே போற்றுபவனானாய், என்ற போது - என்றபோதில், புகழ் என்னும் புலமை என்னும் - கீர்த்தி என் ஆகும்; உன் கல்வி நலம்தான் என்ன ஆகும்? இறைமை கொண்டார் - தலைமை பூண்டவர், கூற்றின் வாய் உற்ருல் - (ஒரு கால்) யமன் வாயிலே அகப்பட்ட போதும், (அதற்காகத் தம்) வீரம் குறைவரே - ஆண்மை குன்றப் பெறுவரோ?

தெருள் - தெளிவு; (யுத்த. வீடண. 127); ஆற்றுதல்; 'ஆற்றுவேன் நானுளனாக' (கிட்கிந்தா. 524); நீயும் - உம்மை

உயர்வு சிறப்பு. போலும் - ஒப்பில் போலி. இறுதியடிக்கு; 'கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர் நிற்கும் ஆற்றலதுவே படை' (குறள். 765). குறைவரே : ஏகாரம் எதிர்மறைப் பொருள்.

பி - ம். 1. தேற்றுவார், தேற்றுவார்த்; தெரிந்து, சிறந்த; தெருட்டுவாய், திரட்டியத்; தெளிவிலோரை.

2. ஆற்றுவாயல்ல; அஞ்சினர்; போல.

3. போற்றினய்.

4. வீரங் குறையுமோ, குறைவதே, குறைவதோ; விறன்மை; கொண்டாய். 46

3279. அஞ்சினும் பழியும் பூண்டா
மம்புவி யாண்டு மாவி
துஞ்சுமா றன்றி வாழ
வொண்ணுமோ நாண்மேற் றோன்றின்
நஞ்சுவா யிட்டா லன்ன
வமுதன்றோ நம்மை யம்மா
தஞ்சமென் றணைந்த வீரர்
தனிமையிற் சாதல் நன்றே.

'அஞ்சினும் - (இப்போது நாம்) பயந்தோம்; (அதனால்), அம் புவி - அழகிய பூமியில், பழியும் பூண்டாம் - பழியையும் மேற்கொண்டோம்; யாண்டும் - எங்குச் சென்றாலும், நாள்மேல் தோன்றின் - (நம்முடைய) வாழ்நாள் மீது (காலன்) தோன்றுவானாயின், ஆவி துஞ்சும் ஆறு அன்றி - உயிர் விடுதலன்றி, வாழ ஒண்ணுமோ - வாழ முடியுமோ? (நாம் இப்போது இராமபிரானுடன் கூடி இராவிடின்), நஞ்சுவாய் இட்டால் அன்ன - விடத்தை வாயிலிட்டாற் போன்ற, அமுது அன்றோ - தேவாமிருதம் போல் ஆகுவோம் அல்லோமோ?; தஞ்சம் என்று அணைந்த வீரர் - (நம்மைத்) தஞ்சம் என்று சேர்ந்த வீரரை, தனிமையில் - தனியாக விட்டுச் செல்வதில், சாதல் நன்று - நாம் இறத்தல் சிறந்தது. அம்மா : இரக்கம்.

அஞ்சினும் : 'அச்சமே கீழ்களதாசாரம்' (குறள். 1075); 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ தஞ்சல் அறிவார்

தொழில்' (குறள். 428); துஞ்சுதல் - மங்கல வழக்கு. ஓகாரம் - எதிர்மறை. அம்மா - வியப்பிடைச் சொல். சாதல்; 'சாதல் வந்தடுத்த காலும் தனக்கொரு சாதல் இன்றி' (விநாயக பு. அரசியல்).

பி - ம். 1. அம்பினுல் யாண்டும், அமரினுலாண்டும், அமரினிலாண்டும்.
2. துஞ்சுமாறின்றி.
3. நஞ்சினை யிட்டால்; அன்னது; அமிழ்தின்றே, அமுதன்றே.
4. தஞ்சமென்றடைந்த, உணர்ந்த; தனிமைநாஞ்; சார்தல். 47

3280. தானவ ரோடு மற்றைச்
சக்கரத் தலைவ னேடும்
வானவர் கடைய மாட்டா
மறிகடல் கடைந்த வாலி
யானவ னம்பொன் ருலே
யயர்ந்தமை யயர்த்த தென்னீ
மீனலர் வேலை பட்ட
துணர்ந்திலை போலு மேலோய்.

'தானவரோடும் - அரக்கரோடும், மற்றை - மற்றும், சக்கரம் தலைவனேடும் - ஆழிப்படை யேந்தினவனுன திருமாலோடும், வானவர் கடைய மாட்டா - அமரர் கடைய வியலாத, மறிகடல் - அலைகள் கரைக்கண் வந்து மடிகின்ற கடலை, கடைந்த வாலி ஆனவன் - கடைந்த வாலியானவன், அம்பு ஒன்ருலே - (இராமபிரானுடைய) வாளி ஒன்றினுல், அயர்ந்தமை - ஆவி சோர்ந்தமை, நீ அயர்த்தது என் - நீ மறந்ததென்? மேலோய் - உத்தமனே, மீன் அலர் வேலை - மீன் விளங்குகின்ற கடல், பட்டது உணர்ந்திலை போலும் - அடைந்த நிலையைத் தெரிந்தாயல்லை போலும்.

சக்கரம் - ஆழிப்படை. வாலி கடல் கடைந்தது; 'அலைகடல் கடைய வேண்டி னுரினிக் கடைவரையா' (கிட்கிந்தா. 372); 'கலக்கியக் கடல் கடைந்தமுதம் கண்டென' (கிட்கிந்தா. 249); யுத்த. இராவணன் மந்திர. 90; தனுவயிற்றில் உதித்தது பற்றித் தானவர்: தத்திதாந்தநாமம்.

பி-ம். 1. சக்கரத் தலைவரோடும்.

2. செய்ய மாட்டார்.

3. அழிந்தமை, உலந்தமை, உலர்ந்தமை; ஆர்த்தென்ன.

4. மீனலர், மீனகு; மிக்கோய். 48

3281. எத்தனை யரக்க ரேனுந்
தருமமாண் டில்லை யன்றே
அத்தனை யறத்தை வெல்லும்
பாவமென் றறிந்த துண்டோ
பித்தரைப் போல நீயு
மிவருடன் பெயர்ந்த தன்மை
ஒத்தில தென்னச் சொன்னு
னவனிவை யுரைப்ப தானுன்.

'அரக்கர் எத்தனை ஏனும் - இராக்கதர்கள் எத்துணையராயினும் தருமம் ஆண்டு இல்லை அன்றே - தருமம் என்பது அங்கே இல்லையல்லவோ? அத்தனை அறத்தை வெல்லும் பாவம் என்று அறிந்தது உண்டோ - மிகுதியாயுள்ள தருமத்தைப் பாவம் வெல்லும் என்பது கேட்டறிந்தது உண்டோ? பித்தரை போல நீயும் - உன்மத்தரைப் போன்று நீயும், இவருடன் - இந்த வீரர்களோடும், பெயர்ந்த தன்மை ஒத்திலது - இராமபிரானை விட்டு நீங்கிய தன்மை பொருந்துவதாக இல்லை,' என்ன சொன்னுன் - என்று பகர்ந்தான், அவன் இவை உரைப்பது ஆனுன் - அந்தச் சாம்பவன் இவ்வார்த்தைகளை மொழிவதானுன்.

தருமமில்லை: 'சத்தியம் சவசம்' இல்லை என்பது முதனூல். 'அறம் புகாமையா லழியுமிம்மதி' (சுந்தர. 118).

பி-ம். 1. என்றே, அன்றே.

2. அறிதல்.

3. பித்தரைப்போல நீரும்.

4. சாம்பனும் உரைப்பானுனன். 49

## சாம்பன் இறுத்த விடை

3282. நாணத்தாற் சிறிது போது
நலங்கின னிருந்து பின்னர்
தூணொத்த திரள்தோள் வீர
தோன்றிய வரக்கர் தோற்றம்
காணத்தா னிற்கத் தானக்
கறைமிடற் றவர்க்கு மாமே
கோணற்பூ வுண்ணும் வாழ்க்கைக்
குரங்கின்மேற் குற்ற முண்டோ.

(அப்போது சாம்பன்), நாணத்தால் - வெட்கத்தினால், சிறிது போது நலங்கினன் - சிறிது காலம் மனத் தளர்வு கொண்டவனாய், இருந்து - இருந்து, பின்னர் - பிறகு, 'தூண் ஒத்த திரள் தோள் வீர - தூணை ஒத்த திரண்ட தோளையுடைய வீரனே! தோன்றிய அரக்கர் தோற்றம் - (இப்போது) வந்துற்ற இராக்கதரின் காட்சியை, காண தான் - நோக்கவாவது, நிற்கதான் - எதிர்த்து நிற்கவாவது, கறைமிடற்று அவர்க்கும் ஆமே - நஞ்சினைக் கண்டத்திலேற்ற சிவபிரானுக்கும் இயலுமோ? (அங்ஙனம் எனில்), கோணல் - உடல் வளைந்துள்ளதும், பூ உண்ணும் வாழ்க்கை - பூக்களைத் தின்னும் எளிய வாழ்க்கையை யுடையதுமான, குரங்கின்மேல் குற்றம் உண்டோ - குரங்குகள் (அஞ்சி ஓடினவெனில்) அவற்றின்மீது பழி நிகழுமோ. ஓகாரம்: எதிர்மறைப் பொருள்.

நாணத்தால்: 'நாணத்தால் சாம்புகின்றான்; தன் வன்மையை அங்கதன் குறைவுபடுத்திக் கூறினமையின் எழுந்தது நாணம். நலங்குதல்-மனம் உடைதல்; 'விஞ்ச நலங்கியதும்' (திருவாசப். 4). 'நாம நீரிலங்கை யிற்றானலங்கவிட்ட' (ஆரணிய. 558); தூண், உயரம், திண்மை, திரட்சி, பெரும் பாரத்தையும் தாங்கும் வன்மை என்ற இவை பற்றித் தோளுக்குவமை. 'தூண்டர நிவந்த தோள்கள்' (அயோத்தி. குகப். 41); (ஒப்பு) 'எழுவுறழ் திண் தோள்' (பெருங். 1, 47, 109); தான் - அசை. கறைமிடற்றவன்; 'கங்கையின் கணவனைக் கறைமிடற் றமலனே' (கிட்கிந்தா. 182); 'கறையுடைக் கடவுள்' (சுந்தர. 78); 'கறைமிடறணியலு மணிந் தன்றக் கறை' (புறநா. 1); மற்றும், (திருவிளை. திருநாட்டு. 1); (திருவாலவாய். 17); சர்வசங்காரக் கடவுள் ஆதல்பற்றிக் கறைமிடற்றவற்கும் எனப்பட்டது; உம்மை உயர்வு சிறப்பு. ஆமே - ஏகாரம்

எதிர்மறைப் பொருளில் நின்றது; ஆகாது என்பது கருத்து. இங்கு முதற்கண் எழுந்த நாணத்தை அச்சம் விஞ்சியது; கோணற்பூ என்றே இயைத்தலுமாம்.

பி - ம். 1. நல்கினன் ; இருந்த ; பின்னும்.

2. தோள்மைந்த, மைந்தன் ; அரக்கர் விரம்.

3. தாவிறங்க வந்த ; மிடற்றவற்குமன்றே, மிடற்றவனுக்காமோ.

4. கோணப்பூ : யாக்கை ; பாற் குற்றம். 50

3283. தேவரு மவுணர் தாமுஞ்
செருப்பண்டு செய்த காலம்
ஏவரே யென்னுற் காணப்
பட்டில ரிருக்கை யான
மூவகை யுலகி னுள்ளா
ரிவர்துணை யாற்றன் முற்றும்
பாவக ருளரே கூற்றுந்
மிவருடன் பகைக்க வற்றே.

'தேவரும் அவுணர் தாமும் - அமரரும் அரக்கர்களும், பண்டு செரு செய்த காலம் - முன்னர்ப் போர் புரிந்த காலத்தில், என்னுல் காணப்பட்டு இலர் ஏவர் - என்னுல் கண்ணுறப் பெருதவர் யாவர்? இருக்கையான மூவகை உலகின் உள்ளார் - இருப்பிடமான மூவகை உலகினும் உள்ளவரில், இவர் துணை - இவர்க்குள்ள அளவு, ஆற்றல் முற்றும் - வலிமையில் முதிர்ந்தவரான, பாவகர் உளரே - கொடியோர் இருக்கின்றனரா? கூற்றும் இவர் உடன் பகைக்கவற்றே - யமனும் இவருடன் பகைமை கொள்ளக்கூடிய வன்மை யுள்ளதோ?

ஏவரே ; ஏ - வினுப் பொருள். 'ஏவரே யுலகந் தந்தார்' (யுத்த : 248). உளரே - ஏகாரம் எதிர்மறை. இலர் என்றபடி - கூற்றும் உம்மை உயர்வு சிறப்பு ; வற்றே - ஓகாரம், எதிர்மறைப் பொருள். கூற்றும் வற்றே - இங்கே ; 'கூற்றுடன்று மேல்வரினும் கூடியெதிர் நிற்கும், ஆற்றலது வேபடை' (குறள். 765) என்பது காணத்தக்கது. 'கூற்றுமென் பெயர் சொலக் குலையும்' (கிட்கிந்தா. 254) என்பது வாலி கூற்று. 'கூற்றையுங் கட்பொறி குறுகக் காண்பரேல், ஊற்றுறு குருதியோ டுயிரு முண்குவார்' (யுத்த. 478) ; 'கூற்றையு மாடல் கொண்டேன்' (யுத்த. 1364).

பி - ம். 1. பண்டுபோர் ; செருப்பூண்டு ; காலே.

2. பட்டிலார் இருக்கை யான்ற ; யான்முன்.

3. உள்ளாரவர், ரிவர்.

4. உளரோ கூற்றை யஞ்சினற் குற்ற முண்டோ, உளரே கூற்றை யஞ்சினர் பழியுமுண்டோ, உளரேரூற்றை யஞ்சினர் பழியுமுண்டோ.

3284. மாலியைக் கண்டேன் பின்னை
மாலிய வானைக் கண்டேன்
காலநே மியையுங் கண்டே
னிரணியன் றனையுங் கண்டேன்
ஆலமா விடமுங் கண்டேன்
மதுவினை யனுச னேடும்
வேலையைக் கலக்கக் கண்டே
னிவர்க்குள மிடுக்கு முண்டோ.

'மாலியை கண்டேன் - மாலியைப் பார்த்தேன், பின்னை - அதன் பின்னர், மாலியவானை கண்டேன் - மாலியவானைப் பார்த்தேன், கால நேமியையும் கண்டேன் - கால நேமியையும் பார்த்தேன், இரணியன் தனையும் கண்டேன் - இரணியனையும் பார்த்தேன், ஆலம் மாவிடமும் கண்டேன் - கொடிய ஆலகால விடத்தையும் பார்த்தேன், அனுசனேடும் - கைடபன் என்ற தம்பியுடனே, மதுவினை - மது என்ற அரக்கனை, வேலையை கலக்க கண்டேன் - கடலைக் கலக்குங்கால் கண்ணுற்றேன், இவர்க்கு உள மிடுக்கும் உண்டோ - இவர்கட்குள்ள வன்மை அவர்கட்கும் உண்டோ?

மாலி - இராவணனுக்குத் தாய் மாமன் ; 'மாதுலத் தலைவன்' (யுத்த. 898) ; 'மாலி பொய்க்குமோ' (யுத்த. மூலபல. 75) ; 'மாலியை மாலியவானை' (யுத்த. மூலபல. 171); 'கயிடனை மதுவை' (யுத்த. மூலபல. 171) ; மாலியவான் ; யுத்த. 733 உரைக் குறிப்புக் காண்க. 'ஆங்கவன் றன் மூதாதையாகிய மூப்பின் யாக்கை, வாங்கியவரிவிலன்ன மாலியவான்' (யுத்த. 1222), 'இவன் இராவணனுக்குக் கூறிய அறவுரை' (யுத்த. 1243, 1245); இவன் இராமபிரான் வன்மையை இலங்கேசற்குக் கூறுவதை யுத்த. படைக்காட்சி. 39, 48ல் காண்க. கால நேமி - இவனை இராவணனுக்கு அம்மான் என்பர் ; இன்னம் காலநேமி என்ற பெயர்

பூண்டவர் பலர் உண்டு; அவருள் ஒருவன் சஞ்சீவியின் பொருட்டு வடக்கு நோக்கிச் சென்ற அநுமனால் வதைக்கப்பட்ட ஓர் அசுரன். இவன் வஞ்சனை நிறைந்த மனத்தனாய்த் தவம் புரிந்தவன். (அபிதான. பக். 416); இங்குக் குறிக்கப் பெற்றவன் நூறு தலைகளும் நூறு கைகளும் ஏற்றவனாய், திருமாலுடன் போர் புரிந்து ஆழிப் படையால் இறந்தவன். இவனது மறு பிறப்புக் கம்ஸன் என்பர். இரணியன்; இவன் வரலாற்றினை யுத்த காண்டம் இரணியன் வதைப் படலத்துக் காண்க. ஆல மாவிடம் - திருப்பாற் கடல் கடைந்த காலத்துத் தோன்றிய கடுவிடம். மதுவினை அநுசனோடும்; மதகைடைபர் சரிதை; யுத்த. 1727, 1736ல் காண்க. மிடுக்கு - வலி; 'வேலை கடப்பென் மீளமிடுக்கின் றென விட்டான்' (கிட்கிந்தா. 981).

பி - ம். 1. பண்டை, மற்ற, மற்றை.

2. நேமியைக்; தன்னைக்.

3. அசனியோ.

4. உவர்க்குள்ள; மிடுக்குக் காணேன். 52

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

ஆனிமா முகவர் சீறும் அடுபுலி முகவர் மிக்க
யாளிமா முகவர் யானை முகவர் மற்றெரியும் வெங்கண்
கூளிமா முகவர் ஆதி அளப்பில கோடி யுள்ளார்
ஊழி சென்றாலு முட்கார் ஒருவரோ ரண்ட முண்பார்.

3285. வலியிதன் மேலே பெற்ற
வரத்தினர் மாயம் வல்லோர்
ஒலிகடன் மணலின் மிக்க
கணக்கின ருள்ள நோக்கிற்
கலியினுங் கொடியர் கற்ற
படைக்கலக் கரத்த ரென்றால்
மெலிகுவ தன்றி யுண்டோ
விண்ணவர் வெருவல் கண்டால்.

'(இவ்வரக்கர்கள்), வலி இதன் மேலே - இந்த வலிமையுடனே, பெற்ற வரத்தினர் - வரமும் பெற்றவர், மாயம் வல்லோர் - மாயை

யினும் தேர்ந்தவர்; ஒலி கடல் மணலின் மிக்க கணக்கினர் - ஒலிக்கின்ற கடலின் மணலைக் காட்டிலும் அதிகமான எண்ணிக்கையுள்ளவர்; உள்ளம் நோக்கில் - இவர்களின் மனத்தை ஆராயுங்கால், கலியினும் கொடியர் - கலி புருடனினும் மிகவும் கொடியர்; (அல்லாமலும்) படைக்கலம் கற்ற கரத்தர் - போர்க் கருவிகளை ஆளும் திறத்தை நன்கு கற்ற கைகளையுடையவர்; என்றால் - இவ்வாறானால், விண்ணோர் வெருவல் கண்டால் - வானவர்கள் அஞ்சுவதைக் கண்ணுறில், மெலிகுவது அன்றி உண்டோ - (குரங்குகளாகிய நாம்) தளர்வதல்லாமல் (பிறிதொரு செயலும் உள்ளதோ? உண்டோ: ஓகாரம் எதிர்மறைப் பொருள்.

உடல் வன்மை மட்டும் அன்று தவத்தால் பெற்ற வரங்களும் உள்ளவர். ஒலி கடல்- ஆர்கலி; 'ஒலி கடலுலகம்' (கிட்கிந்நா. 309) கடல் மணலையும் அளவிடல் கூடும்;' இவர்களின் தொகையைக் கணக்கிட வியலாது என்பது கருத்து. கலி - கலி புருஷன். இவனைப் பற்றிய வரலாற்றினை அபிதான சிந்தாமணி, 369 ஆம் பக்கத்தில் காண்க. நள மகாராஜனைப் பற்றித் தொந்தரவு செய்தவன் இவனே; கிட்கிந்நா. 309 உரைக் குறிப்பும் பார்க்க. பெற்ற வரத்தினர், கற்ற கரத்தர்: வடமொழி நடை. படைக்கலம் கற்ற கரத்தர் என மாற்றுக. வானவர்களே அஞ்சுவார் எனில் வானரர் அஞ்சக் கேட்க வேண்டுமோ? என்றபடி.

பி - ம். 1. வல்லார்.
2. கணக்கிலர்.
3. கருத்தர்.
4. விண்ணுற; மெலிவு கண்டால். 53

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

3286 ஆகினு மையம் வேண்டா
வழகிதன் றமரி னஞ்சிச்
சாகினும் பெயர்ந்த தன்மை
பழிதரு நரகிற் றள்ளும்

ஏகுது மீள வின்னு
மியம்புவ துளதா லைய
மேகமே யனையான் கண்ணி
னெங்ஙனம் விழித்து நிற்றும்.

'ஆகினும் - இவ்வாறெனினும், சாகினும் - இறப்பதாயிருந்தாலும், அமரின் அஞ்சி பெயர்ந்த தன்மை - போருக்குப் பயந்து நீங்கிய தன்மை, அழகிது அன்று - நேர்மையாகாது; பழிதரும் - (இம்மையில்) வசையை விளைக்கும், நரகில் தள்ளும் - (மறுமையில்) நரகில் வீழ்த்தும், ஐயம் வேண்டா - (இதில்) ஐயுறுவு வேண்டுவதில்லை; (ஆகவே) மீள ஏகுதும் - திரும்பிச் செல்வோம், ஐய - ஐயனே! இன்னும் இயம்புவது உளது - இன்னும் பகர வேண்டுவது ஒன்றுண்டு; (அது) மேகமே அனையான் - மேகத்தை ஒத்தவன் ஆன இராமபிரானுடைய, கண்ணின் - கண் முன்பு, எங்ஙனம் விழித்து நிற்றும் - எங்ஙனம் விழித்து நிற்போம்? ஆல் : அசை.

மேகமே அனையான் - மேகம் இராமபிரானுக்கு உருவினும் பண்பினும் உவமை. பழிதரு நரகிற்றள்ளும்; 'அத சோத்வமிமம் தர்மம் ஸஹ்யப்ராமம் நகர்ஷ்யஸி, ததஸ்வதர்மஞ் கீர்த்திஞ்ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி, அகீர்த்திஞ்சாபி பூதாநிகதயிஷ்யந்தி தேவ்யயாம், ஸம்பாவிதஸ்ய சாகீர்த்தி; மரணாத்திரிச்யதே; 2, 53, 54. அன்றி நீ இந்த தர்ம யுத்தத்தை நடத்தாமல் விடுவாய் ஆனல், அதனால் ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் கொன்று பாவத்தை யடைவாய். உலகத்தார் உனக்கு மாறாத வசையு முரைப்பார்கள்; புகழ் கொண்டோன் பின்னர் எய்தும் அபகீர்த்தி மரணத்திலும் கொடிதன்றே' (பகவற். 2, 33, 34) பார்க்க. நிற்றும் - றும் விகுதி இறந்த காலம் காட்டிற்று. 'றவ்வொடு கரமும்மை நிகழ் பல்லவும்' (நன். பத.).

பி - ப். 1. ஐயமுண்டா லார்க்கேனும், ஐயமுண்டா லறத்தினும், ஐயமுண்டா மாகிலும்.

2. போகினும் பெயர்ந்த, சாகிலம், போகிலம்; நரகிற் போக்கும்.

3. ஏகுமே, ஏகுதி; உளதாவெய்தி.

4. மேகமே யனையார்; காண; கண்முன்.

## சாம்பனை அங்கதன் தேற்றல்

3287. என்றெடுத் தெண்கின் றானைக்
கிறையவ னியம்ப லோடும்
வன்றிறற் குலிச மோச்சி
வரைசிற கரிந்து வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ
வமர்ந்தென மதத்திண் [குன்றின்
நின்றவ னளித்த மைந்தன்
மகனிவை நிகழ்த்த லுற்றான்.

என்று எண்கின் தானைக்கு இறையவன் - என்று கரடிச் சேனைக்குத் தலைவனான சாம்பன், எடுத்து இயம்பலோடும்-எடுத்து மொழிதலோடும், வல் திறல் - மிக்க வலிமையையுடைய, குலிசம் ஓச்சி - வச்சிராயுதத்தை உயர்த்தி, வரை சிறகு அரிந்து - மலைகளைச் சிறகரிந்து, வெள்ளி குன்று இடை - வெள்ளிக் குன்றில், நீலம் கொண்மூ - நீல நிறமுள்ள மேகம், அமர்ந்தென - பொருந்தினாற் போன்று, மதம் - மதத்தையுடைய, திண் - வலிய, குன்றின்-மலை போன்ற, ஐராவதம் என்ற வேழத்தின், நின்றவன் - ஏறி நின்றவனான இந்திரன், அளித்த மைந்தன் மகன் - இந்திரன் பெற்ற வாலி என்பானது மகனான அங்கதன், இவை நிகழ்த்தல் உற்றான் - இவ் வார்த்தைகளைப் புகலலுற்றான்.

வன்திறல் - 'வன்றிறற் குரங்கின் ஆற்றல்' (சுந்தர : 989). வரைசிற கரிந்தது ; 'விலங்கலெல்லாம், மாற்றுச் சிறையென் றரி' (சுந்தர. 65) ; 'வயிரவாட் படையால், செறிந்த வான்பெருஞ் சிறையறமலைகளைச் செயிரா, எறிந்த விந்திரனிட்ட' (சுந்தர. 1026). கொண்மூ - கடல் நீரைப் பருகுவது என்ற காரணக் குறி.

பி - ம். 3. அதிர்ந்தென ; மதத்தின் குன்றம்.
4. அருளும். 55

இச் செய்யுள் பல பிரதிகளில் இல்லை.
57

3288. எடுத்தலுஞ் சாய்தல் தானு
மெதிர்த்தலு மெதிர்ந்தோர் தம்மைப்
படுத்தலும் வீர் வாழ்க்கை
பற்றினர்க் குற்ற மேனுள்
அடுத்ததே யஃது நிற்க
வன்றியு மொன்று கூறற்
கெடுத்தது கேட்டீர் நீருங்
கருத்துளீர் ஏது நோக்கின்.

'எடுத்தலும் சாய்தல்தானும்-(நாமே பகைவரை) விஞ்சுதலும் தோற்றலும், எதிர்த்தலும் - (பகைவர்) எதிர்த்து நிற்றலும், எதிர்ந்தோர் தம்மை படுத்தலும்-எதிர்ந்தோரைக் கொல்லுதலும், வீரம் வாழ்க்கை பற்றினர்க்கு-வீர வாழ்வினை மேற்கொண்டார்க்கு, மேனுள் உற்ற அடுத்ததே - முன்னுள் தொடங்கி அடுத்ததே; அஃது நிற்க - அஃது ஒருபுறம் இருக்கட்டும்; அன்றியும் - அல்லாமலும், ஒன்று கூறற்கு - ஒன்று கூறுதற்கு, எடுத்தது கேட்டீர் - பொருந்திய அது கேட்டீராய், (இங்கு) இருந்துளீர்; (அதனால்), நோக்கின் - காரணம் நோக்குமிடத்து, நீரும் கருத்துளீர் - நீரும் ஆராய்ச்சியுள்ளவரே.

முதற்கண் அஞ்சுதலும், உற்று ஆய்ந்து நோக்கின் அச்சம் நீங்கிய நிலையில் போர் முனைக்கு ஏகுதலும், இயல்பே யாதலின், நாணத்திற்கு இடம் இல்லை என்பது குறிக்கப்பட்டது. எடுத்தல் - விஞ்சி நிற்றல். ஏது - காரணம்; 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும், மிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி' (தேவா. 1178 : 5).

பி - ம். 1. சாய்த்தருனும்; இறத்தலும்.

2. பற்றிநர்க்கு; உற்று.

3. அடுத்ததேயதெலாம், அடுத்ததேலாகும்; நிற்ப, கூறற்கடுத்தது, கூற்றுக் கடுத்தது.

4. கேட்டு மீண்டிங்கிருந்துளீரேது நோக்கின், கேட்டிரீண்டிக்கிளர்ந்து நீர்தருதனேக்கின்.

3289. ஒன்று நீரஞ்ச லைய
யாமெலா மொருங்கே சென்று
நின்றுமொன் றியற்ற லாற்றேம்
நேமியான் ருனே நேர்ந்து
கொன்றுபோர் கடக்கு மாயிற்
கொள்ளுதும் வென்றியன்றேல்
பொன்றுது மவனோ டென்ருன்
போதலே யழகிற் றென்ருன்.

'ஐய - ஐயனே! நீர் ஒன்றும் அஞ்சல் - நீர் சிறிதும் அஞ்ச வேண்டா; யாம் எலாம் ஒருங்கே சென்று நின்றும் - நாம் எல்லோரும் ஒன்றுகூடிப் போய் நின்றும், ஒன்று இயற்றல் ஆற்றேம் - ஒரு செயலும் புரிதற்கு வல்லமையுடையோமல்லம்; நேமியான் தானே நேர்ந்து - ஆழிப்படையை யுடையவனாகிய திருமாலின் அமிசமான இராமபிரானே (பகைவரை) எதிர்த்து, கொன்று - கொன்று, போர் கடக்கும் ஆயின் - போரைக் கடப்பானாயின், வென்றி கொள்ளுதும் - வெற்றி கொள்வோம்; அன்றேல் - அல்லாவிடின், அவனோடு பொன்றுதும் - அவனுடனே உயிர் நீங்கப் பெறுவோம்' என்ருன் - என்று புகன்றவனாய், 'போதலே - இராமபிரானை விடுத்து ஓடிப் போவதோ, அழகிற்று - சிறப்புடையதாவது?' என்ருன் - என்று கூறி முடித்தான் (அங்கதன்).

ஒன்றும் - சிறிதும், ஐய - அண்மைவிளி. போர் கடத்தல் - போரில் பகைவரை வெல்லுதல்; 'மன்னெயில் ஓம்பாது கடந்தட்டு' (புறநா. 40). கொள்ளுதும் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. தும் - எதிர்காலம் காட்டிற்று; 'தவ்வோ டிறப்பு மெதிர்வும்' (நன். 145). பொன்றுதும் - இறந்துபடுவோம்; 'பொன்றுதல் ஒரு காலத்துத் தவிருமோ' (யுத்த. 3060).

பி - ம். 1. என்றுநீ; வருந்தலைய; ஒருங்கு.
2. இயற்ற லாற்றும்.
3. வென்றியன்றிப், வெற்றியன்றேல்.
4. அவரோடென்ருன், அவரோ போன்ருர், அவரே பொன்ருர்; போதலே யழகிற்றென்ருன், போகலே, போதலோ புகழின்றன்ருே, பொருதவே புகழீதென்ருல்.

## சாம்பன் சொற்படி வாநரத் தலைவர் மீண்டுவர, மூண்ட அரக்கச் [1]சேனைகளைக் கண்டு இராமபிரான் தம்பிக்குக் கூறுதல்

3290. ஈண்டிய தானை நீங்க
நிற்பதென் யாமே சென்று
பூண்டவெம் பழியி னோடும்
போந்தனம் போது மென்னு
மீண்டனர் தலைவ ரெல்லா
மங்கத னோடும் வீரன்
மூண்டவெம் படையை நோக்கித்
தம்பிக்கு மொழிவ தானன்.

(அப்போது சாம்பன்), 'ஈண்டிய தானை நீங்க நிற்பது என் - நெருங்கிய சேனை நீங்க நிற்பது குறித்து என் சொல்வது? யாமே - நாமே, சென்று - போர்க்களத்தை நீத்துப் போய், பூண்ட வெம் பழியினோடும் - அதனால் மேற்கொண்ட வசையோடும், போந்தனம் - மீண்டு வந்தோம்; போதும் - (ஆகவே யாவரும்) செல்வோம்', என்னு - என்று பகர, தலைவர் எல்லாம் - சேனைத் தலைவர் அனைவரும், அங்கதனோடும் மீண்டனர் - அங்கதனுடன் திரும்பி வந்தனர்; வீரன் - வீரனான இராமபிரான், மூண்ட வெம் படையை நோக்கி - சினந்தெழுந்த கொடிய படையைப் பார்த்து, தம்பிக்கு - தம்பியிடத்து, மொழிவது ஆனன் - கூறலானான்.

ஈண்டுதல் - நெருங்குதல்; 'இருங்கண் ஞாலத்தீண்டு பயப் பெருவளம்' (குறுந். 267). 'ஈண்டிய புகழின்பாலார்' (பெரிய பு. அப்பூதி. 1); யாமே - ஏகாரம் தேற்றம்.

பி - ம். 1. நிற்பதே, நின்றதென்; என்று.
2. பூண்டனம்; போந்தநாம்; போதுமென்று.
4. பகையை; தம்பிமேல்.

## இராமபிரான் நான் ஒருவனே இவ்வரக்கரை யெல்லாம் கொல்வேனெனல்

3291. அத்தநீ யுணர்தி யன்றே
யரக்கர்தா னவுண ரேதான்
எத்தனை யுளரென் றாலு
மியான்சிலை யெடுத்த போது
தொத்துறு கனலின் வீழ்ந்த
பஞ்செனத் தொலையுந் தன்மை
ஒத்ததோ ரிடையூ றுண்டென்
றுணர்விடை யுதிப்ப தன்றால்.

'அத்த - அத்தனே! அரக்கர்தான் அவுணரேதான் - அரக்கரென்ன அவுணர்தாம் என்ன, எத்தனை உளர் என்றாலும் - (இவர்) எத்தனை பேர் உள்ளார் என்றாலும், (அவர்கள் அனைவரும்) யான் சிலை எடுத்தபோது - யான் வில்லை யுயர்த்தி அம்பு விடுத்தபோது, தொத்து உறு கனலின் - தொகுதியாக அமைந்த தீயின்கண், வீழ்ந்த பஞ்சு என - அகப்பட்ட பஞ்சு போன்று, தொலையும் தன்மை - அழிந்துபடும் தன்மையை, நீ உணர்தி அன்றே-நீ அறிந்துள்ளனை யன்றோ? ஒத்தது - (என் வல்லமைக்கு) ஏற்றதான, ஓர் இடையூறு உண்டு என்று - ஓர் இடையூறு உள்ளது என்று, என் உணர்வு இடை உதிப்பது அன்று - என் மதிக்குள் நிகழ்வது எதுவும் இல்லை? ஆல்: அசை.

அத்த என்பதற்குத் தந்தையே என்பது பொருள்; 'அத்தா இது கேளென வாரியன் பகருவான்' (கிட்கிந்தா. 269); 'அம்மையே யத்தனைய அப்பனே' (சுந்தர. 560); 'அன்னையும் அத்தனுமாவாய் அழல்வணா நீயலையோ' (தேவா. 1199: 3). கனலின் வீழ்ந்த பஞ்சு; 'பஞ்சி யெரியுற்றதென' (யுத்த. மூலபல. 153); 'பன்னலம் பஞ்சிக் குன்றம் படரெரி முகந்ததொப்ப' (சீவக. 2274); உவமையணி. தன் வல்லமையைக் குறைக்கக் கூடிய எந்தவிதமான இடையூறும் தனக்குப் புலப்படவில்லை என்றான் இராமபிரான்.

பி - ம். 1. அறிதி; அரக்கரே யவுணர் தானென்.
2. எத்துணை.
3. தொத்தறு; தொலைந்த; தொடருந் தன்மை.
4. ஒத்ததோ; உண்டோ; உதித்ததுண்டோ, உதித்ததென்றான்.

## ஓடிய வாநர சேனையை மாருதி முதலியவரோடிருந்து பாதுகாப்பாயென்று இராமபிரான். இலக்குவனுக்குக் கூறுதல்

3292. காக்குந ரின்மை கண்ட
கலக்கத்தாற் கவியின் சேனை
போக்கறப் போகித் தத்த
முறைவிடம் புகுத லுண்டால்
தாக்கியிப் படையை முற்றுந்
தலைதுமிப் பளவுந் தாங்கி
நீக்குதி நிருத ராங்கு
நெருங்குவார் நெருக்கா வண்ணம்

'காக்குநர் இன்மை கண்ட - பாதுகாப்பவர் இல்லாமையைக் கண்ட, கலக்கத்தால் - மனக் குழப்பத்தால், கவியின் சேனை - குரக்குப் படை, போக்கு அற - (போர்க்கு) செல்லுதல் ஒழிய, போகி - ஓடிச் சென்று, தம் தம் உறைவு இடம் புகுதல் உண்டு - தங்கள் தங்களுடைய வாழ்க்கை இடங்களில் நுழைவதுண்டு; ஆல் - ஆதலால், (நான்), இ படையை தாக்கி - இந்த அரக்கர் சேனையை எதிர்த்து, முற்றும் தலை துமிப்பு அளவும் - முழுதும் தலையைவெட்டி வீழ்த்தும் வரையில், (நீ) தாங்கி - இந்த வாநர சேனையைத்தாங்கி, ஆங்கு - அவருள்ள இடத்தில், நெருங்குவார் நிருதர் - அணுகக் கூடியவரான இராக்கதர், நெருக்கா வண்ணம் - அடர்க்காதபடி, நீக்குதி - தவிர்ப்பாயாக.

ஆதரிப்பவர் அற்ற நிலையில் சபல சித்தமுள்ள குரங்குகள் உயிர் தப்புவதற்காக ஓடி ஒளிதல் கூடும்; ஆகவே அவைகளைத் தேற்றிக் காக்க வேண்டும் என்றான் இராமபிரான். உண்டால்; ஆல் - ஆதலின் எனும் பொருட்டு. நெருங்குவாராகிய நிருதர் என்க. துமித்தல்: 'பிறைமுகச் சரஞ்சிரம் துமித்த' (ஆரணிய. 512); 'நாசி துமிப்பதன் முன்னகல்' (ஆரணிய. 1036).

பா - ம். 1. இன்மை; கண்டார்.

2. பொங்கித் தத்தம், பொதிந்து தந்தம், போக்கித் தத்தம்; புகுந்த துண்டேல், புகுதலுண்டேல், புகுதல் பொய்யாது.

3. தாக்கிய.

4. நீக்குநீ; நெருங்கா. 60

3293. இப்புறத் தினைய சேனை
யேவியாண் டிருந்த தீயோன்
அப்புறத் தமைந்த சூழ்ச்சி
யறிந்தவ னயலே வந்து
தப்பறக் கொன்று நீக்கி
லவனையார் தடுக்க வல்லார்
வெப்புறு கின்ற துள்ளம்
வீரநீ யன்றி வில்லோர்.

'இ புறத்து - இவ்விடத்து, இனைய சேனை - இத்தகைய படையை, ஏவி - செல்லுமாறு பணித்து, ஆண்டு இருந்த - அங்கே இருந்த, தீயோன்-கொடியோனும், அமைந்த சூழ்ச்சி அறிந்தவன் - பொருந்திய தந்திரத்தை யுணர்ந்தவனுமான இராவணன், அ புறத்து - அப்புறத்தில், அயலே வந்து - பக்கத்தில் வந்து, தப்பு அற- தவறுதலின்றி, கொன்று நீக்கில் - குரக்குப் படைகளைக் கொன்று ஒழித்தால், வீர - வீரனே, அவனை - அந்த இலங்கேசனை, நீ அன்றி - நீ அல்லாமல், தடுக்க வல்லோர் வில்லோர் - தடுக்கவல்ல வில்லிகள், யார் - யாவர்? உள்ளம் வெப்பு உறுகின்றது - (இது குறித்து) மனம் வேகின்றது.

இப்புறத்தினைய சேனை ஏவி: 'வினையமற்றிலை மூலமாத் தானையை விரைவோ, டினைய முற்செலவேவுகென் றிராவணன் இசைத்ததை' மூலபல. 2-ஆம் செய்யுட்கண் காண்க. தீயோன்- மன மொழிமெய்களால் தீமையே விளைக்கும் இராவணன். பிறன் தாரத்தை விழைந்தமையின் மனத்தாலும், கற்பரசியான பிராட்டி யின்பால் தகாத சொற்களை வழங்கினமையின் மொழியாலும், பிறர் அறியாமல் பிராட்டியை எடுத்துச் சென்றதால் காயத்தாலும் கொடியவன் என்க; 'குணங்கடியோன்'; (ஆரணிய. 687); 'நஞ்சிற் கொடியோன்' (ஆரணிய. 1094); 'நஞ்சம் அனையான்' (சுந்தர. 704); 'வெவ்வழி யிராவணன்' (கிட்கிந்தா. 194); அமைந்த சூழ்ச்சி யறிந்தவன்; 'வினைவலனிராவணன்' (கிட்கிந்தா. 809); 'வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்' (யுத்த. 1289). என்று கும்பகன்னன் இராவணனையும் உளப்படுத்திக் கூறியதும் இங்குக் காணத்தகும். இங்கும் மனம் உடல் வாக்கு என்ற மூன்றினும்

கொடியவர் அரக்கர் என்பது புலப்படும். வெப்பு - வெம்புதல்; 'வெப்பழியா தென்னெஞ்சு மூலந்தேன்' (ஆரணிய. 729); 'யாக்கை வெப்பினுற் புலர்ந்து' (சுந்தர. 337).

பி - ம். 2. அமைந்த ; அறிந்ததன், அறிந்தனன் ; வந்தால்.
3. கொன்று விழ்க்கில், நீக்கும் ; தடுக்கற் பாலார், தடுக்குந்தக்கார்.
4. வீரனீயலது ; வில்லால் ; வீரனீயன்றி யில்லோய் வீரர்க்கும் வீரனே.

3294. மாருதி யோடு நீயும் வானரக் கோனும் வல்லே
பேருதிர் சேனை காக்க வென்னுடைத் தனிமை பேணிச்
சோருதி ரென்னின் வெம்போர் தோற்றுநா மென்னச் [சொன்னுன்
வீரன்மற் றதனைக் கேட்ட விளையவன் விளம்ப லுற்ருன்.

'மாருதியோடு - அநுமனுடனே, நீயும் - (இலக்குவனுகிய) நீயும், வாநரர் கோனும் - குரக்கரசனுன சுக்கிரீவனும், வல்லே - விரைந்து, சேனை காக்க பேருதிர் - குரக்குப் படையைப் பாது காக்குமாறு செல்லுங்கள் ; என் உடை தனிமை பேணி சோருதிர் என்னின் - என்னுடைய தனிமையை மனத்துக்கொண்டு மனம் சலிப்பீராயின், நாம் வெம் போர் தோற்றும் - நாம் கொடிய யுத்தத்தில் தோல்வியுறுவோம்'; என்ன - என்று, வீரன் சொன்னுன் - ஆண்மையிற் சிறந்தோனுன இராமபிரான் பகர்ந் தான் ; அதனை கேட்ட இளையவன் விளம்பல் உற்ருன் - அதனைச் செவியேற்ற இலக்குவன் பின்வருமாறு கூறினுன். மற்று : அசை.

கோன் - அரசன் ; 'கோன்முறை தெரிந்திடிற் கோணிலை திரியும்' (மணி. 7 : 8). வல்லை - விரைவாக ; 'வல்லேயுள ராயின மானிடரை' (யுத்த. 1691). தோற்றும் - றும் விகுதி ; 'றவ்வொ டுகரவும் மைநிகழ் பல்லவும்' (நன். 145). மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது. இளையவன் - இலக்குவன் ; 'இராமன் பின்பு பிறந்தானு முள னென்னப் பிரியாதான் றனைப் பயந்த பெரியாள்' (அயோத்தி. குகப். 68) என்றமை காண்க. 'இளைய வனேகலும்' (ஆரணிய. 826); 'அவனுமுனைக் கிளையானே யிவனேபோ லருளிலனுல்' (ஆரணிய. 350); 'இராமனுக்

கிளையான்' (யுத்த. 1165); 'ஆழித்தனி முதனுயகற் கிளையான்' (யுத்த. 3001); 'திருமால்தனக் கிளையான் படை' (யுத்த. 3005).

பி-ம். 1. நீயிவ்; வாநரத் தலைவரோடும்.
3. சோருதி; எண்ணின்.
4. விரன் மற்றதனைக். 62

## இலக்குவன் இராமபிரான் கூறியதற்குடன்படுதல்

3295. அன்னதே கரும மைய வன்றியு மருகே நின்ருல்
என்னுனக் குதவி செய்வ திதுபடை யென்ற போது
சென்னியிற் சுமந்த கையர் தேவரே போல யாமும்
பொன்னுடை வரிவி லாற்றல் புறனின்று காண்டல்
[போக்கி.

(இளையவன் இராமபிரானை நோக்கி) 'ஐய - ஐயனே! அன்னதே கருமம் - அதுவே ஆற்றவேண்டிய செயல்; அன்றியும்- அல்லாமலும், படை - அரக்கப்படை, இது என்ற போது - இத் தகையதாக இருத்தலால், தேவரே போல - தேவர்களை ஒப்ப, யாமும் - நாமும், சென்னியில் சுமந்த கையர் - சிரத்திலேகுவித்த கரத்தினையுடையவராய், பொன் உடை வரிவில் ஆற்றல் - பொன்ஞல் இயன்ற கட்டமைந்த வில்லினது வன்மையை, புறன் நின்று காண்டல் போக்கி - புறத்தேயிருந்து நோக்குதலைத் தவிர்த்து, அருகே நின்ருல் - உன் பக்கத்தில் நின்ருல், உனக்கு செய்வது உதவி என் - உனக்குப் புரியத்தக்க உபகாரம் யாது?'.

அன்னதே கருமமைய: (ஒப்பு); 'அன்னதே முடிந்ததைய வறம் வெல்லும் பாவம் தோற்கு' (சுந்தர. 190); கருமம்: மேற்கொண்ட காரியம்; 'கருமஞ் செய்வொருவன் கைதூவேன் என்னும், பெருமையிற் பீடுடையதில்' (குறள். 1021). இது படை என்ற போது: இவ்வளவு பெரிதாக உள்ளது அரக்கர் சேனை என்னும் போது. சென்னியிற் சுமந்தகையர்; 'கரதலஞ் சுமந்த வுச்சியர்'

(ஆரணிய. 561). பொன்னுடை என்பதில், பொன் வில்லின் பொற் பிடியென்க. புறம் : புறன்; ஈற்றுப்போலி; காண்டல் : அல்விகுதிபெற்ற தொழிற்பெயர்.

பி - ம். 1. அன்னது ; அனைவேம்:
2. உதவி செய்தும்.
3. கையான் ; போல ; வாழும் ; யானும்.
4. ஊரிவிலேந்திப் ; கரண்டுமென்றான், கரண்டி போக்கி, காண்டல் போக்கில். 83

### அப்போது அநுமன் இராமபிரானிடம் தன் வேண்டுகோளைத் தெரிவித்தல்

3296. என்றவ னேக லுற்ற காலையி
னனும னெந்தாய்
புன்றொழிற் குரங்கெ னுதென்
றோளின்மே லேறிப் புக்கால்
நன்றெனக் கருதா நின்றேன்
அல்லது நாயி னேனுன்
பின்றனி நின்ற போது
மடிமையிற் பிழைப்பி லென்றான்.

என்று - என்று மொழிந்து, அவன் - அந்த இலக்குவன், ஏகல் உற்ற காலையில் - போக எழுந்த பொழுதில், அநுமன் - மாருதி, (இராமபிரானைப் பார்த்து), 'எந்தாய் - எந்தையே! புன் தொழில் குரங்கு எனது - அற்பமான தொழிலையுடைய குரங்கு தானே என்று புறக்கணிக்காமல், என் தோளின்மேல் ஏறி புக்கால் - என் புயத்தின்மீது ஏறிக்கொண்டு போர்க்களம் புகுந்தால், நன்று என கருதா நின்றேன் - நல்லது என்று நினை கின்றேன்; அல்லது - அல்லாமற் போனால், நாயினேன் - நாயினும் கடைப்பட்டவனான அடியேன், உன் பின் - உன் பின்னர், தனி நின்றபோதும் - தனித்து நின்ற காலத்தும், அடிமையில் பிழைப்

பில் - அடிமைத் திறத்தில் தவறுதலில்லாதாகும்' என்றான் - என்று தன் கருத்தைத் தெரிவித்தான்.

எந்தாய் - என் தந்தையே என்பதன் மரூஉ. புன்தொழில் குரங்கு; (ஒப்பு) 'சிற்றினக் குரங்கினோடும்' (கிட்கிந்தா. 354); 'கோணப் பூவுண்ணும் வாழ்க்கைக் குரங்கு' (யுத்த. 3282) புக்கால் நன்று - புகுந்தால் நல்லது என்க. நாயினேன் - பெரியோரிடம் அடியார்கள் பணிவு காட்டிக் கூறும் சொல்; 'நஞ்செனச் சிறந்தேனன்றோ நாயகன் அருளின் நாயேன்' (யுத்த. 429); 'நாயேன் பலநாளு நினைந்து' (தேவா. 1001 : 2); 'குரங்கெனக் கருதி நாயேன் கூறிய மனத்துக்கொள்ளேல்' (கிட்கிந்தா. 349); 'திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான்; தன்னை நாயினேனென்றும் நாயிற் கடைப் பட்டேனென்றும், 32 இடங்களுக்கு மேல் கூறுவது காண்க. 'நீங்கள் என் தோள்மீது ஏறிக் கொள்ளுதல் நலம் என்று நினைக்கின்றேன். திருவுளம் எப்படியோ; உங்கள் அருகில் துணையாக நிற்பினும் நான் புரிய வேண்டிய பணியைப் புரிகுவேன்; அடிமைத்திறத்தில் சிறிதும் பிறழேன்' என்று விநயமாகக் கூறினான் மாருதி.

பி - ம். 3. கருதுகின்றேன்.
4. நிற்குமாயின்; அடித்தொழில்; பிரியேன்.

## இராமபிரான் நீ இலக்குவனுக்குத் துணையாயிரு என்று அநுமனுக்கு ஏதுகாட்டி யுரைத்தல்

3297. ஐயநிற் கியலா துண்டோ
விராவண னயலே வந்துற்
றெய்யும்விற் கரத்து வீர
னிலக்குவன் றன்னோ டேற்றால்
மொய்யமர்க் களத்தி னுன்னைத்
துணைபெறு னென்னின் முன்ப
செய்யுமா வெற்றி யுண்டோ
சேனையுஞ் சிதையு மன்றே.

(இராமபிரான் அநுமனை நோக்கி), 'ஐய - ஐயனே! நிற்கு இயலாது உண்டோ - உனக்கு முடியாத செயலும் உள்ளதா? இராவணன் அயலே வந்து உற்று - இராவணன் அண்மையிலே வந்து பொருந்தி, எய்யும் - எய்கின்ற, வில் கரத்து வீரன் இலக்குவன் தன்னோடு ஏற்றால் - வில்லேந்திய கையினையுடைய வீரனை இலக்குவனோடு ஏற்றுப் பொருவானாயின் (அப்போது), மொய் அமர் களத்தின் உன்னை துணைபெறான் என்னின் - நெருங்கிய போர்க்களத்தில் உன்னைத் துணையாக அடையப் பெறானேல், முன்ப - வலியோனே! செய்யுமா வெற்றி உண்டோ - விளைக்கக்கூடிய பெரு வெற்றி உள்ளதோ? (அல்லாமலும்), சேனை யும் சிதையும் அன்றே - குரக்குப் படையும் சின்னாபின்னப்பட்டு அழியும் அல்லவோ?.

இராமபிரான் அநுமனுடைய ஆற்றலைப் புகழ்வதோடு வெற்றிபெற அவன் இன்றியமையாதவன் என்றும் குறிக்கின்றான். ஓகாரம் - வினா; எதிர்மறைப் பொருளில் வந்தது.

பி - ம். 1. ஐயனுக்கு; ஒன்றது; உண்டே; வந்தால்.

2. வீரனிளையவன்.

3. களத்தன்; பெருதொழியின்; மொய்ம்ப, முன்பு.

4. செய்யும் வெற்றியு முண்டாமோ; சிந்துமன்றே. 65

3298. ஏரைக்கொண் டமைந்த குஞ்சி
யிந்திர சித்தென் பான்றன்
போரைக்கொண் டிருந்த முன்னா
ளிளையவன் றன்னைப் போக்கிற்
றூரைக்கொண் டுன்னா லன்றே
வென்றதங் கவனை யின்னம்
வீரர்க்கும் வீர நின்னைப்
பிரிகலன் வெல்லு மென்பேன்.

'ஏரைக்கொண்டு அமைந்த குஞ்சி இந்திரசித்து என்பான் தன் - அழகைக்கொண்டு அமைந்த மயிர் முடியுடைய இந்திரசித்து என்பவன் தன், போரை கொண்டு இருந்த முன்னாள் - போரை மேற்கொண்டிருந்த நாளில், இளையவன் தன்னை

போக்கிற்று - இளையவனை அனுப்பியது, ஆரை கொண்டு - ஆரை முன்னிட்டு, (உன் ஆற்றலில் நம்பிக்கை கொண்டேயன்றோ ?); அங்கு - அந்த அமர்க்களத்தில், அவனை வென்றது - அவனை வெற்றிகொண்டது, உன்னால் அன்றே - உன்னாலே யல்லவோ? வீரர்க்கும் வீர - வீரர்க்கெல்லாம் வீரனே! நின்னை பிரிகலன் வெல்லும் என்பேன் - நின்னைப் பிரியாதவனாய் (அந்த இலக்குவன்) இன்னும் வெல்வானென்றே கருதுவேன்.

ஏரைக்கொண்டு அமைந்த இந்திரசித்து, குஞ்சி இந்திர சித்து என்று பிரித்துக் கூட்டினும் ஆம். குஞ்சிக்கு ஏர்; 'நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து' ,(சுந்தர. 546); என்று இராமபிரானுடைய தெய்வவெறியே கமழும் நறுங் குஞ்சி வருணிக்கப்படுவது காண்க; 'குஞ்சியழகும் கொடுந் தானைக் கோட்டழகும்' (நாலடி. 131) என்றதும் காண்க. குஞ்சி - ஆண்மயிர்.

பி - ம். 1. அமைந்த திண்டோள்.
2. போரைக் கொண்டிருந்து, கண்டிருந்தது; மேனன்; போக்கின்.
3. வென்றதன் றென்னச் சொன்னன், வென்றதென் றென்னச் சொன்னன்.
4. வீரன்; பிரிகிலன், பிரிகிலேன்; வெல்லும் என்றான். 60

3299. சேனையைக் காத்தென் பின்னே
திருநகர் தீர்ந்து போந்த
யானையைக் காத்து மற்றை
யிறைவனைக் காத்தெண் தீர்ந்த
வானையித் தலத்தி னேடு
மறையொடும் வளர்த்தி யென்றான்
ஏனைமற் றுரைக்கி லாதா
னிளவல்பின் னெழுந்து சென்றான்.

'சேனையை காத்து - சேனையைப் பாதுகாத்து, என்பின்னே - என் பின்னால், திருநகர் தீர்ந்து போந்த - அழகிய நகரமாகிய

அயோத்தியா புரியினின்றும் நீங்கிவந்த, யானையை காத்து - யானை போன்றவனான இளையவனைப் பாதுகாத்து, மற்றை - பின்னும் இறைவனைக் காத்து - சுக்கிரீவனைப் பாதுகாத்து, எண் தீர்ந்த - எண்ணை அல்லது நினைப்பின் வன்மையைக் கடந்து நின்ற, வானை - விண்ணுலகை, இதலத்திேனாடும் - இந்தப் பூமியோடும், மறை யொடும் - வேதத்துடனும், வளர்த்தி - தழைக்கச் செய்வாயாக' என்றான் - என்று கூறினன்; ஏனை மற்று உரைக்கிலாதான் - உத்தர மாகப் பிறிதொன்றும் பகரமாட்டாதவனாய், (அநுமன்) இளவல்பின் எழுந்து சென்றான் - இலக்குவன் பின்பு எழுந்து போனான்.

திருநகர் தீர்ந்து - 'திருநகர் தீர்ந்த பின்னர் செய்தவம் பயந்த தென்னா வரிசிலை வடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்' (ஆரணிய. 275). யானை உவம வாகுபெயராக இலக்குவனைச் சுட்டியது. உருவாலும், வலியாலும், நடையாலும், சலியாத் தன்மையாலும் யானை இளையவற்குவமை. இங்கு அன்பு பற்றிக் கூறியது. இளவல் - அல், பெயர்விகுதி.

பி - ம். 1. பின்னர்.

2. மற்றும்.

4. மற்றுரைத்திலாதான்; இளவலோடு; போனான்.



## வீடணனையும் இலக்குவனுக்குத் துணைபோகச் சொல்லுதல்

3300. வீடண நீயு மற்றுன்
தம்பியோ டேகி வெம்மை
கூடினர் செய்யு மாயந்
தெரிந்தனை கூறிக் கொற்றம்
நீடுறு தானை தன்னைத்
தாங்கினை நில்லா யென்னில்
கேடுள தாகு மென்றா
னவனது கேட்ப தானான்.

'வீடண - விபீடணனே! நீயும் - நீயும், உன் தம்பியோடு ஏகி - உன் தம்பியுடன் சென்று, வெம்மை கூடினர் - வெம்மையுடன் இயைந்தவரான அரக்கர், செய்யும் மாயம் தெரிந்தனை - செய்கின்ற மாயத்தை ஆராய்ந்து, கூறி - இயம்பி, கொற்றம் நீடு உறு தானை

தன்னை - வெற்றி நீடுகின்ற சேனையை, தாங்கினை நில்லாய் என்னில் - தாங்கி நில்லா யெனின், கேடு உளது ஆகும் - கெடுதல் நிகழ்தல் கூடும்', என்ருன் - என்று மொழிந்தான்; அவன் அது கேட்பது ஆனுன் - அவன் அதனைச் செவியேற்று (அதன்படி) ஒழுகலானுன். மற்று, அசை.

உன் தம்பியொடேகி - இராமபிரான் குகன் சுக்கிரீவன் வீடணன் என்ற மூவரையும் தன் தம்பிகளாகவும், தன் தம்பிமார்கள் மூவர்க்கும் குகனை அண்ணனுகவும் பாராட்டிக் கூறியுள்ளமை இங்குக் காணத்தகும். 'நைவிரலீர் மைந்தீர் .....நீங்கள் ஐவீரும் ஒருவீராய் அகனிலத்தை நெடுங்காலம் அளித்திர்' (அயோத்தி. குகப். 67) என்ற கோசலை கூற்றும்; 'குகனெடும் ஐவரானேம்' (யுத்த. 449); என்று தொடங்கும் செய்யுளும், 'கழற்கால் மைந்த னின்றுணைவ னிராகவனுக்கிலக்குவற்கு மிளையவர்க்கு மெனக்கு மூத்தான்' (அயோத்தி. குகப். 66) என்ற பரதன் கூற்றும், 'ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய, ஏழை வேடனுக் கெம்பியுன் தம்பிநீ தோழனங்கை கொழுந்தி' (சுந்தர. 352) என்ற வரிகளும் இங்குக் காணத்தக்கன. தாங்கினை - முற்றெச்சம்.

பி-ம். 2. கூடினை, தெரிந்தனை, தெரிந்தன, தெரிதி நீ; குறிக்கொண்டேகி.
3. நீடுள; தாங்கி நீ.
4. கோடுள; தலைமேற் கொண்டான்.

## சுக்கிரீவன் முதலானேர் இலக்குவனுக்குத் துணையாகச் செல்லுதல்

3301. சூரியன் சேயுஞ் செல்வன்
சொற்றதே யெண்ணுஞ் சொல்லன்
ஆரியன் பின்பு போனு
னனைவரு மதுவே நல்ல
காரிய மென்னக் கொண்டார்
கடற்படை காத்து நின்ருர்
வீரியன் பின்னர்ச் செய்த
செயலெலாம் விரிக்க லுற்ரும்.

சூரியன் சேயும் - கதிரவன் புதல்வனான சுக்கிரீவனும், செல்வன் - இராமபிரான், சொற்றதே - கூறியதையே, எண்ணும் சொல்லன் - கருதிச் சொல்லும் சொல்லை யுடையவனாகிய, ஆரியன் பின்பு போனான் - சிரேட்டனான இலக்குவன் பின்னர்ச் செல்லலுற்றான்; அனைவரும் - எல்லோரும், 'அதுவே நல்ல காரியம் - அதுவே உத்தமமான கருமம்', என்ன கொண்டார் - என்று உட்கொண்டவர்களாய், கடல் படை காத்து நின்றார் - கடல் போன்று பரந்த குரக்குச் சேனையைப் பாதுகாத்து நின்றார்; வீரியன் - வீரனான இராமபிரான், பின்னர் செய்த செயல் எலாம் விளம்பல் உற்றாம் - பின்பு ஆற்றிய செயல் அனைத்தும் விரித்து மொழியத் தொடங்கினோம்.

இச் செய்யுள் கவியின் கூற்று. ஆரியன் - இலக்குவன். 'ஆரியன் அம்பினால்' (யுத்த. 2075) கடல் படை - கடல் போன்று பரந்த சேனை. வீரியன்: 'சேர்த்த வீரியராயுள்ளார்' (யுத்த. 1235); 'வீரியன் தனக்கொருவனும் வீமனே' (வில்லி பா. நிரைமீட்சி. 18).

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

இசைந்தன னமருக் கெல்லா வுலகமு மிமைப்பின் வாரிப்
பிசைந்துசிற் றுதரத் துண்ணப் பெற்றநாள் பிடித்தமூர்த்தி
இசைத்தது போலுமென்றுங் கயன்சிவ னிருவர் தத்தம்
வசந்திகழ் கருத்தி னூடே மதித்திட வயங்கி நின்றான்.

பா - ம். 1. செல்வன், மற்றச்; என்னுஞ்; சொல்லால், சொல்லான்.
2. போனவனைவரும்.
4. பின்னைச்; வினையெலாம்; விளம்பல். 69

## இராமன் வில்லேந்தி முன் வந்து பொருதல்

3302. வில்லினைத் தொழுது வாங்கி
யேற்றினன் வின்னுண் மேருக்
கல்லெனச் சிறந்த தேயுங்
கருணையங் கடலே யன்ன

எல்லொளி மார்பில் வீரக்
கவசமிட் டிழையா வேதச்
சொல்லெனத் தொலையா வாளித்
தூணியும் புறத்துத் தூக்கி.

அம் கருணை கடலே - அழகிய கருணைக் கடலான இராம பிரானே, தொழுது - (கையால்) வணங்கி, வில்லினை வாங்கி - வில்லினை எடுத்து. வில் நாண் ஏற்றினன் - வில்லின் நாணியை யேற்றி, (பிறகு) மேரு கல் என சிறந்ததேயும் - மேருமலையைப் போன்று சிறந்ததாயினும், அன்ன - அத்தகைய, எல் ஒளி மார்பில் - அந்த விளங்குகின்ற ஒளியினையுடைய (தனது) மார்பிடத்து, வீரம் கவசம் இட்டு - வீர கவசத்தை யிட்டு, இழையா வேதம் சொல் என - (ஒருவரால் ஆக்கப்படாத) நான்மறைச் சொற்களைப் போல, தொலையா - முற்றுப்பெற்றழியாத, வாளி - அம்புகளை (உள்ளடக்கிய), தூணியும் - அம்பறாத் தூணியையும், புறத்து தூக்கி - முதுகிலே கட்டி, 'கூசின பொடியாலெங்கும்' என்ற அடுத்த கவியுடன் முடியும்).

இழையா வேதச் சொல்லென - வேதத்தைச் சிலர் பௌருஷேயம் என்றும் சிலர் அபௌருஷேயம் என்றும் புகல்வர்; இங்குப் பின் கொள்கையைப்பற்றி 'இழையா வேதச் சொல்' என்றார் என்க. எடுக்க எடுக்கக் குறையாத அம்பறாத் தூணிக்கு, குறையாத பொருள் வளமுள்ள நான்மறையை உவமை கூறியது காணத்தக்கது. 'நல்லியல் நவையறு கவிஞர் நாவரும், சொல்லெனத் தொலைவிலாத் தூணி' என்றதையும், மற்றும், யுத்த. 1060 உரைக் குறிப்பையும் காண்க. 'வேதங் தப்பினபோதும் அன்னான் தனுவுமிழ் சரங்கடப்பா' (யுத்த. 1236). என்றதும் காண்க.

பி - ம். 1. மெய்ந் நாண்.
2. செறிந்தது; எனும்; கருணையின்.
3. தீராக்; இமையோர்.
4. தொலைவில், தொலைவிலாத தூணியும், எனத்துணையவாளி. 70

3303. ஓசனை நூற்றின் வட்ட
மிடைவிடா துறைந்த சேனைத்
தூசிவந் தண்ணல் தன்னைப்
போக்கற வளைந்து சுற்றி
வீசின படையு மம்பு
மிடைதலும் விண்ணோ ராக்கை
கூசின பொடியா லெங்குங்
குமிழ்த்தன வியோம கூடம்.

நூற்றின் ஓசனை வட்டம் - நூறு யோசனை தூரம் வட்டமாக, இடைவிடாது உறைந்த சேனை - இடையீடின்றித் தங்கிய (பகைப்) படையின், தூசி வந்து - மூந்துற்றுப் பொருபடை வந்து, அண்ணல் தன்னை போக்கு அற வளைந்து - பெருந்தகையான இராமபிரானைப் போதற்கில்லாதபடி வளைந்து, சுற்றி - சூழ்ந்து கொண்டு, வீசின படையும் - எறிந்த போர்க் கருவிகளும், அம்பும் - வாளிகளும், மிடைதலும் - நெருங்கவும், விண்ணோர் ஆக்கை - தேவர்களின் உடல், கூசின - கூச்சமடைந்தன; பொடியால் - (அப்போது) கிளம்பிய புழுதியால், வியோம கூடம் எங்கும் குமிழ்த்தன - ஆகாயத்தினிடம் எங்கும் குமிழி கொண்டாற் போலாயின.

தூசி - சேனையின் முன்னணி; 'தூசியு மிரண்டுகையும் நெற்றியும் சுருண்டு' (யுத்த. 1871); இதனைக் கொடிப்படை யென்றும் வழங்குவர்; 'ஆடுகொடிப் படை' (அயோத்தி. கங்கைகாண். 22). போக்கற: 'போக்கின் றுனக்கரிதாலென' (யுத்த. 1112). குமிழ்த்தல் - குமிழியிடுதல்; 'செழுங்குருதி கொழித்திழிந்து குமிழ்த்தெறிய' (பெரியாழ். 4, 8, 7). வியோமம் - ஆகாசம்; (பிங்); 'நாமமும் வடிவுங்கிளைத்திடு வியோம வடிவமாய்த் தோன்றும்' (திருக்காளத். பு. சிவமான். 22).

பி - ம். 1. யோசனை; வட்டந்திடை; அருது; உற்ற.

3. மிடைதலின்.

4. பொடியாவேனும், ஒடியாவேனும்; குமிழ்த்தனர்; ரோமக் கூட்டம்.

இச் செய்யுள் ஒரு பிரதியில் இல்லை.

## இமையோர் இராமபிரானை யேத்துதலும் முனிவர் ஆசி மொழிதலும்

3304. கண்ணனே யெளியே மிட்ட
கவசமே கடலே யன்ன
வண்ணனே யறத்தின் வாழ்வே
மறையவர் வலியே மாறு
தொண்ணுமே நீய லாதோ
ரொருவர்க்கிப் படைமே லூன்ற
எண்ணமே முடித்தி யென்னு
வேத்தின ரிமையோ ரெல்லாம்.

(அப்போது), இமையோர் எல்லாம் - அமரர் அனைவோரும், (இராமபிரானை நோக்கி), 'கண்ணனே - கண்ணோட்டமுள்ளவனே! எளியேம் இட்ட கவசமே - எளியோமாகிய எங்கட்குப் பாதுகாவலாகப் பொருந்திய கவசமே! கடலே அன்ன - கடலை நிகர்த்த, வண்ணனே - நிறத்தை உடையவனே! அறத்தின் வாழ்வே - தருமத்தின் உறைவிடமே! மறையவர் வலியே - வேதியர்க்கு வலிமையாகி யிருப்பவனே! நீ அலாதோர் - நீ அல்லாத எவரேனும், ஒருவர்க்கு - ஒரு வர்க்கு, மாறுது - பின் வாங்காமல், இபடை மேல் ஊன்ற - இந்தச் சேனையைத் தாக்க, ஒண்ணுமே - இயலுமோ? எண்ணமே முடித்தி - எம்முடைய கருத்தை, (இராவணனை ஒழித்துக் கட்டுவதான எமது எண்ணத்தை) நிறைவேற்றுவாயாக', என்னு - என்று (குறையிரந்து), ஏத்தினர் - துதித்தனர்.

கண்ணன் - இங்கு அவதாரத் கண்ணனின்று; அருட்கண் அல்லது கண்ணோட்டமுடையவன் என்க. தாமரைக் கண்ணனுமாம். இட்ட கவசம் - அணியக்கூடிய கவசமே. 'கவசமா யாருயிராய்' (ஆரணிய. 99); 'சான்றோர் மெய்ம்மறை' (பதிற்று. 14, 12). கடலேயன்னவண்ணன்; 'மையோ மரகதமோ மறிகடலோ' (அயோத்தி. கங்கை. 1). அறத்தின் வாழ்வு (ஒப்பு); 'அருளின் வாழ்வே' (சுந்தர. 560); 'புகழின் வாழ்வே' (ஆரணிய. 197).

சர்வேந்திரியானும் நயனம் பிரதானம். 'கண்ணிற் சிறந்த உறுப் பில்லை' என்பர் ஆதலின், கண்ணை முற்கூறினர்.

பி-ம். 1. எளியேம் விட்ட.

2. வலியே மற்றேர்க்கு.

3. நின்னலாதோர்; ஒருவரிப், ஒருவர்க்குப். 72

3305. முனிவரே முதல்வ ராய
வறத்துறை முற்றி னோர்கள்
தனிமையு மரக்கர் தானைப்
பெருமையுந் தரிக்க லாதார்
பனிவரு கண்ணர் விம்மிப்
பதைக்கின்ற நெஞ்சர் பாவத்
தனைவருந் தோற்க வண்ணல்
வெல்கவென் றாசி சொன்னார்.

முனிவரே முதல்வர் ஆய-முனிவரே முதல்வராகிய, அறம் துறை முற்றினோர்கள்-அறத் துறையில் நிரம்பி நிற்பவர், தனிமையும்-இராமபிரானுடைய தனித்த நிலையையும், அரக்கர் தானை பெருமையும்-இராக்கதரின் சேனைப் படைப் பெருமையையும், தரிக்கலாதார்-பார்த்து மன அமைதி பெறுதவராய், பனிவரு கண்ணர்-நீர்த்துளி எழுகின்ற விழிகளை யுடையவரும், விம்மி பதைக்கின்ற நெஞ்சர்-விம்மித் துடிக்கின்ற உள்ளத்தை யுடைய வருமாகி, 'பாவத்து அனைவரும் தோற்க-பாவம் புரிந்தவர்கள் எல்லோரும் தோல்வியுறுக, அண்ணல் வெல்க-பெருமை யாளனான இராமபிரான் வெற்றி பெறுக'; என்று ஆசி சொன்னார்-என்று வாழ்த்துக் கூறினார்கள்.

அறத்துறை: 'அறத் துறையன்று வீரர்க்கழகுமன்று' (யுத்த. 924); 'அறத்துறையம்பி' (புறநா. 381); 'வேள்வியாக்கிய பொழுதின் அறத்துறை போகி' (பதிற்றுப். 7 ஆம் பதிகம்). தரிக்கலாதார்: 'தரிக்கிலேன் காய வாழ்க்கை' (திருச்சதகம்: 61). பெருமை, மிகுதி மேற்று. பனிவரு கண்ணர், பதைக்கின்ற

நெஞ்சர் - வடமொழி நடை. பாவத்து அனைவரும் - பாவிகளாகிய அரக்கர் எல்லோரும்: 'விநாசாயச துஷ்கிருதாம்' என்றபடி. தீமை புரிபவர்களை நாசம் பண்ணவே அவதரித்தவன் ஆகலின், தேவர்கள் இராமபிரானை வாழ்த்தி வேண்டினர்; மனப் பூர்வமான ஆசிகள் கருதிய பயனை விளைப்பனவாகலின் முனிவர் ஆசி கூறினர் என்க; 'ஆழியந் தடந்தேர் வீரன் ஏறலும் ஆசி கூறி' (யுத்த. 3643).

பா - ம். 2. தரிக்கலாற்ருர், தரித்திலாதார், தரிக்கிலாதார்.

3. பனிவருங்.



வேறு

3306. மற்றும் வேற றத்துள் நின்ற
வான நாட னைத்துளோர்
கொற்ற வில்லி வெல்க வஞ்ச
மாயர் வீக குவலயத்
துற்ற தீமை தீர்கவின்ருே
டென்று கூறி னூர்நிலம்
துற்ற வெம்ப டைக்கை நீச
ரின்ன வின்ன சொல்லினுர்.

மற்றும் - மேலும், வேறு அறத்துள் நின்ற - தனிப்பட்டு அறவழியில் ஒழுகிய, வானம் நாடு அனைத்துளோர்-வான முழுதும் உள்ளவர் எல்லாம், 'கொற்றம் வில்லி வெல்க - வெற்றி பொருந்திய வில் வீரனான இராமபிரான் வெல்வானாக; வஞ்சம் மாயர் வீக - வஞ்சனை மிக்க மாயை வல்லோர் இறந்தொழிக; குவலயத்து உற்ற தீமை - பூமியை வந்தடைந்த தீமை, இன்றொடு தீர்க - இன்றோடு ஒழிவதாக'; என்று கூறினூர் - என்று வாழ்த்தினூர்கள்; நிலம் துற்ற - பூமியில் நெருங்குகின்ற, வெம்படை கை நீசர் - கொடிய போர்க் கருவிகளை ஏந்திய கரத்தினையுடைய இழிந்த அரக்கர்கள், (அப்பொழுது) இன்ன இன்ன சொல்லினூர் - இவ்விவற்றைப் பகர்ந்தார்கள்.

இச் செய்யுள் முதல் 3330 ஆம் செய்யுள் முடிய வீரத்திற் கேற்ற சந்த விருத்தங்கள் அமைந்துள்ளன. கொற்ற வில்லி - இராமபிரான். வெல்க, தீர்க - வியங்கோள் வினைமுற்றுக்கள். வீக - இறந்துபடுக; 'வெற்றியே பெறுக தோற்கவீக வீயாது வாழ்க' (யுத்த. 411); குவலயம் - பூமி ; 'குவலய மிசைக்குப்புற்று' (கந்த பு. தாரக. 51); 'கூத்தனிவ்வானும் குவலயமு மெல்லோமும்' (திருவெம். 12). குவலயத்து உற்ற-பூமியில் கொடிய அரக்கர்களால் உண்டாய. எனினும் ஆம்; துற்ற - நெருங்கிய. துறுதல் - நெருங்குதல். 'இடையிடை துறுவன' (யுத்த. 1793). நீசர் - இழிந்த பண்பினர்; 'நெறியறிந்திலாத நீசா'.

பி - ம். 1. வான நாட்டு.
3. நிலத்து.
4. உற்ற ; இன்னர் ; சொல்லுவார். ( 4

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

## இராமபிரான் ஆற்றல் கண்டு அரக்கர் வியந்து கூறுதல்

3307. இரிந்த சேனை சிந்தி யாரு
மின்றி யேக நின்றுநம்
விரிந்த சேனை கண்டி யாது
மஞ்ச லின்றி வெஞ்சரம்
தெரிந்து சேவ கன்றி றம்ப
லின்றி யெய்து செய்கையான்
புரிந்த தன்மை வெற்றி மேலு
நன்று மாலி பொய்க்குமோ.

'நம் விரிந்த சேனை கண்டு - நமது பரந்த படையினைக் கண்ணுற்று, இரிந்த சேனை - நிலை குலைந்தோடிய (தன்) படை, சிந்தி - சிதறி, யாரும் இன்றி ஏக - எவரும் இல்லாமற் போய்விடவும், யாதும் அஞ்சல் இன்றி - சிறிதும் பயப்படுதலின்றி, நின்று - தான் தனித்து நின்று, வெம்சரம் தெரிந்து - கொடிய அம்புகளை தேர்ந்து கொண்டு, சேவகன் - வீரன், திறம்பல் இன்றி - மாறுபடுதல் இன்றி, எய்து செய்கையான் - (நம்முடன் போர) புரிகின்ற

செயலால், புரிந்த தன்மை - இவன் செய்த இச்செய்கை, வெற்றி மேலும் நன்று - வெற்றியினும் நன்று சிறந்ததே! மாலி பொய்க் குமோ - மாலியவான் பொய் மொழிவானோ? ஓகாரம் : எதிர்மறைப் பொருள் பொய்க்காது என்றபடி.

அஞ்சலின்றி வெஞ்சரம் - இங்கு இணை யெதுகை சந்தத்தைச் சிறப்பித்தல் காண்க. தெரிந்து - ஆராய்ந்தெடுத்து. சேவகன் - வீரனான இராமபிரான்; 'சிறந்தது போரே யென்றான், சேவகன் முறுவல் செய்தான்' (யுத்த. 919); 'பழியோருங் கருத்தினால் வருஞ் சேவகனல்லையோ' (யுத்த. 1534). திறம்பல் - மாறுபடல்; 'அறந்திறம்பு மென்று' (அயோத்தி. நகர்நீ. 222). மாலி பொய்க் குமோ: மாலி இராவணற்குக் கூறிய அறவுரை; (யுத்த. 899, 900). மற்றும், இராமபிரான் பெருமையை அவன் இலங்கேசனுக்குக் கூறியது; யுத்த. 3566, 3509 செய்யுட்களிலும் காண்க.

பி - ம். 1. இரிந்து; தானே; இன்றியேயும்.

2. வெஞ்சமம்.

3. தெரிந்த; சேவகர் இன்றி; இன்றியே செய்வீரியம், நின்ற செய் கையால்.

4. வென்றிமேலு மன்றுமாலி. 75

3308. புரங்க ளெய்த புங்க வற்கு
முண்டு தேர்பொ ருந்தினர்
பரந்த தேவர் மாய னம்மை
வேர் றுத்த பண்டைநாள்
விரைந்து புள்ளின் மீது விண்ணு
ளோர்க ளோடு மேவினன்
கரந்தி லன்த னித்தொ ருத்த
னேரும் வந்து காலினன்.

'புரங்கள் எய்த புங்கவற்கும் தேர் உண்டு - திரிபுரத்தை எய்து அழித்த சிவபிரானுக்கும் (பூமியாகிய) தேர் உண்டு; (அன்றியும், அவருடன்), பரந்த தேவர் - பரவிய அமரர், பொருந்தினர் - அமைந்தனர்; மாயன் - திருமால், நம்மை வேர் அறுத்த பண்டை நாள் - நம்மை வேருடன் களைந்த முன்னாளில், புள்ளின் மீது - கருடப் பறவையின்மீது, விரைந்து விண்ணு ளோர்களோடும்

மேவினன் - விரைவுடன் தேவர்களோடும் வந்து பொருந்தினன்; (இப்போதோ இவன்), தனித்து ஒருத்தன் - தனிப்பட்ட ஒருத்தனையும், கரந்திலன் - (தன்னை) ஒளியாதவனாயும், காலினன் வந்து நேரும் - காலினால் வந்து (நம்மைத்) தாக்குகின்றான்.

புரங்கள் எய்த புங்கவன் - சிவபெருமான்; இவ்வருஞ் செயல் கம்பநாடரால் இக் காப்பியத்தில் பல இடங்களிலும் குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம். புங்கவன் - சிறந்தோன். 'அமரர் புங்கவன் புந்தியினோர்ந்தான்' (காசிகண்ட. துருவ. தவ. 1); இனி, புங்கம் அம்பென்றே கொண்டு புரங்கள் எய்த திருமாலாகிய அம்பினைக் கொண்ட சிவபெருமான் எனினுமாம். தேர் பொருந்தினர் உண்டு என மாற்றுக. திரிபுரம் எரித்த வரலாறு; ஆரணிய. 458 உரைக் குறிப்புக் காண்க. நேரும், முற்று.

பி - ம். 1. புரங்கடந்த; தேர்ப்.

4. வந்த காலனுன். 76

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

இங்கு அதிகப் பாடல்கள் :—

அரைக்க ணத்த ரக்கர் வெள்ள மளவில் கோடி யாவிபோய்
தரைப்ப டப்பல் லண்ட கோடி தகர வண்ண றன்கைவில்
இரைக்கும்நா ணிடிப்பி னுக்கு டைந் திராம ராமவென்
றுரைக்கும் நாம மேயெ ழுந்த தும்ப ரோடு மிம்பரே.

சிரமொ டிந்து சிந்தி னர்கள் சிலவர் செஞ்சுடர்ப்படை
கரமொ டிந்து சிந்தி னர்கள் சிலவர் கல்லை வெல்லுமா
வுரமொ டிந்து சிந்தி னர்கள் சிலவர் ஊழி காலம்வாழ்
வரமொ டிந்து சிந்தி னர்கள் சிலவர் மண்ணின் மீதரோ.

3309. தேரு மாவு மியானை யோடு
சீய மியாளி யாதியா
மேரு மானு மெய்யர் நின்ற
வேலை யேழின் மேலவால்

வாரும் வாரு மென்ற ழைக்கு
மானி டற்கிம் மண்ணிடைப்
பேரு மாறு நம்மி டைப்பி
ழைக்கு மாறு மெங்ஙனே.

'தேரும் - இரதமும், மாவும் - குதிரைகளும், யானையோடு சீயம் யாளி ஆதியா - யானையுடன் சிங்கமும் யாளியும் முதலானவைகளும், மேரு மானும் மெய்யர் - மேரு மலையை நிகர்த்த உடலுடன் கூடியவர்களும், ஏழின் வேலை மேல நின்ற - ஏழு கடல்களினும் அதிகமாய் உள்ளனர்; (அங்ஙனம் ஆகவும்), 'வாரும் வாரும் - வாருங்கள் வாருங்கள், என்று அழைக்கும் மானிடற்கு - என்று அறைகூவி யழைக்கின்ற மானிடனுக்கு, இமண் இடை பேரும் ஆறும்- இந்தப் பூமியில் பிழைத்துப் போகும் வகையும், நம் இடை பிழைக்கும் ஆறும் எங்ஙனே - நம்மிடையுள்ளோர் உயிர் தப்பும் வகையும் எவ்வாறு?' (என்று அவ்வரக்கர் கூறிக்கொண்டனர்). ஆல்: அசை. ஏகாரம்: வினா.

மா-விலங்குப் பொது; இங்கு குதிரையைச் சுட்டியது. சீயம்- சிங்கம். 'நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லர சென்று நக்கான்' (யுத்த. 941). வேலை ஏழு; கிட்கிந்தா. 174 உரை காண்க.

பி - ம். 1. சீயமாளி; யாதியாய்.
2. மானுமென்ன, மேய, மெய்ய; மேலவாய், மேலவாம், வெய்யவாய். 7/
4. நம்முழைப்; பிழைக்குமாற தெங்ஙனே.

## இராமபிரான் நாண் எறிதலும் அரக்கரிடையே துன்னிமித்தம் தோன்றுதலும்

6310. என்று சென்றி ரைத்தெ ழுந்தோர்
சீய வேற டர்த்ததைக்
குன்று சூழ்வ ளைத்த போற்ற்ரு
டர்ந்த சேனை கூடலும்
நன்றி தென்று ஞால மேழு
நாக மேழு மானுந்தன்
வென்றி வில்லை வேத நாத
னுணெ றிந்த வேலைவாய்.

என்று - என்று சொல்லிக்கொண்டே, (அரக்கர்) சென்று - போய், இரைத்து எழுந்து - ஆரவாரித்துக் கிளம்பி, (தனித்து) ஓர் சீயம் ஏறு - ஆண் சிங்கம், அடர்த்ததை - தாக்கியதை, குன்று சூழ் வளைத்த போல் - குன்றுகள் போன்ற யானைகள் சூழ வளைத்தது போன்று; தொடர்ந்த சேனை - பின் தொடர்ந்த படை, கூடலும் - இராமபிரானைச் சுற்றிக் கொண்ட அளவில், வேதம் நாதன் - வேதப்பிரதிபாத்யனான இராமபிரான், 'இது நன்று - இது நல்லது', என்று - என்று மொழிந்து, ஞாலம் ஏழும் நாகம் ஏழும் - கீழேழுலகமும் மேலேழுலகமும், மானும் - ஒப்பாகப் பெற்ற, தன் வென்றி வில்லை - தன்னுடைய வெற்றி வில்லை, நாண் எறிந்த வேலை வாய் - குணத்தொனி செய்த பொழுதினுள்.

இச்செய்யுள், அடுத்த செய்யுளில் வரும் 'புலர்ந்த' என்பதனோடு பொருள் முடிவு கொள்ளும். சீய வேறு; சீயம் - சிங்கம்; 3309. ஞாலம் ஏழு - அதலம் முதலாயின, நாகம் ஏழு - பூலோகம் முதலியன. நாகம் என்ற சொல் சுவர்க்கம், பாதாளம் இரண்டினையும் குறிக்கும். வேத நாதன் - வேதங்களைத் தந்தவன் அல்லது வேதப் பிரதிபாத்யன் என்க. நாண் எறிதல் - நாண் கயிற்றைத் தெறித்துக் குணத்தொனி செய்தல்; 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர்' (யுத்த. 1413).

பி - ம். 1. அடர்த்திரைந்து; அடர்ந்தென, அடர்ந்ததை, எதிர்ந்ததை.
2. கைக்குன்று; வந்து சூழ் வளைத்த போற்றொடர்ந்து, வளைந்த போற்றொடர்ந்து.
3. ஏழுமான.
4. எல்லைவாய்.

79

3311. கதம்பு லர்ந்த சிந்தை வந்த
காவல் யானை மாலொடு
மதம்பு லர்ந்த நின்ற வீரர்
வாய்பு லர்ந்த மாவெலாம்
பதம்பு லர்ந்த வேக மாக
வாள ரக்கர் பண்புசால்
விதம்பு லர்ந்த தென்னின் வென்ற
வென்றி சொல்ல வேணுமோ.

காவல் வந்த யானை - பாதுகாவலாக வந்த யானைகள், மாலொடு - மத மயக்கத்துடன், மதம் புலர்ந்த - மதமும் மாறிவிட்டன; சிந்தை வந்த கதம் புலர்ந்த - உளத்தில் பொங்கி எழுந்த சினமும் மாறி விட்டன; நின்ற வீரர் வாய் - (அங்கு) நின்ற வீரர்களின் வாய், புலர்ந்த - வறண்டு விட்டன; மா எலாம் - குதிரைகள் எல்லாம், பதம் வேகம் புலர்ந்த - கால் வேகம் குறையப் பெற்றன; மாகம் வாள் அரக்கர் - ஆகாயம் போன்று பரந்த கொடிய இராக்கதரின், பண்பு - (போர் புரியும்) தன்மை, சால் விதம் - மிக்க நிலைமையும், புலர்ந்தது என்னின் - வற்றி நின்ற தென்னின், (இராமபிரான்,) வென்ற வென்றி சொல்ல வேணுமோ - வென்ற வெற்றியின் இயல்பினைக் கூறவும் வேண்டுமோ? (வேண்டா என்றபடி). ஓகாரம் - எதிர்மறை.

கதம் - கோபம்; புலர்ந்த என்ற சொல் அடுத்தடுத்தடி தோறும் வந்தது, சொற் பொருட்பின் வருநிலையணி. மால் - மயக்கம்; 'ஆராயு முத்தமிழ் ஆற்றூரிற் சோமி யழகு கண்டு, நாராயண னெடுமாலாகினான்' (தனிப்பா. 141). வென்றி என்றாலே அமையும்; வின்னுணெறிந்த அளவிலேயே அரக்கர் படை நிலை குமில மடைந்தது என்பதால் வென்ற வென்றி என்று வேண்டாது கூறப்பட்டது.

பி - ப். 1. புலந்த சிந்தை; வெந்த, வந்து; மாவொடும், யானைகையொடு.

2. புலந்து, புலர்ந்து.

3. புலர்ந்து; வேகமோய, மேகமாக.

4. புலந்த தென்னின், புலம்புலர்ந்த வென்றியன்று, வென்றியின்று, புலர்ந்த வென்றியின்று வேறு; வேண்டுமோ. 79

3312. வெறித்தி ரிந்த வாசி யோடு சீய மாவு மீளியும்
செறித்த மைந்த சில்லி யென்னு மாழி கூடு தேரெலாம்
முறித்தெ றிந்து முந்த யானை வீசு மூசு பாகரைப்
பிறித்தி ரிந்து சிந்த வந்தொ ராகு லப்பி றந்ததால்.

சீயம் மாவும் மீளியும் - சிங்கமாகிய விலங்கும் பேய்களும், வெறித்து - வெறிகொண்டு, இரிந்த வாசியோடு - நிலைகுலைந்தோடிய குதிரையுடனே, செறித்து அமைந்த - (தாம்) கட்டப்பட்டிருந்த,

சில்லி என்னும் - சில்லியெனப்படும், ஆழி கூடு தேர் எலாம் - உருளையுடன் கூடிய தேர்களை எல்லாம், முறித்து எறிந்து முந்த - தகர்த்து வீசி முற்பட்டுச் செல்லவும், யானை - யானைகள், வீசும் - (அங்குசத்தை) எறியும், மூசுபாகரை - நெருங்கிய பாகரை, பிறித்து - உயிரைப் போக்கி, இரிந்து சிந்த - நிலைதடுமாறிச் சிதற வும், ஓர் ஆகுலம் வந்து பிறந்தது - (அரக்கர் படையில்) ஒரு கலக்கமான நிலை நிகழ்ந்தது. ஆல் - அசை.

மீளி - பேய். சியமா - இருபெயரொட்டு; சில்லி - தேர்ச் சக்கரமாதலின், சில்லி என்னும் ஆழி என்றார். வீசு மூசு; இந்து சிந்த என்ற இடங்களில் இணையெதுகை காண்க. மூசுதல் - மொய்த்தல்; 'மூசுவண்டு' (காவடிச் சிந்து); 'மூசுவண்டின மும்மத யானையின்' (யுத்த. 673). பிரித்து, எதுகை நோக்கிப் பிறித்து எனவாயிற்று.

பி - ம். 1. வெறிந்திரிந்து, எறிந்திரிந்த, வெறித்திரிந்து; சியமாவியாளியும், சியமீளியாளியும்.

2. செறிந்து; சில்லிபுல்லுமாழி; மாழியொடுகூடுதேர், முந்துசில்லி புல்லு மாழிகூடு தேர்; சில்லியென்னு மாழியோடு தேரெலாம்.

3. முறிந்தெறிந்து முந்த, முறிந்தெழுந்த முந்த, முறிந்தெழுந் தணிந்த, முறிந்தெழுந்த முற்கை.

4. பிறிந்திருந்து, பிரிந்திரிந்து; சிந்தை; நொந்து; பிறந்த. 80

## இராமபிரான் அரக்கர் சேனைமீது அம்பு விடுதலும், அரக்கர் சேனை பட்டபாடும்

3313. இந்நி மித்த மிப்ப டைக்சி
டைந்து வந்த டுத்ததோர்
துந்நி மித்த மென்று கொண்டு
வானு ளோர்க டுள்ளினர்
அந்நி மித்த முற்ற போத
ரக்கர் கண்ண ரங்கமேல்
மின்னி மிர்த்த வன்ன வாளி
வேத நாதன் வீசினன்.

இ நிமித்தம் - இந்த நிமித்தங்கள், இ படைக்கு - இந்த (அரக்கர்) சேனைக்கு, இடைந்து வந்து அடுத்தது ஓர் - இடையூறு வந்து அடுத்ததாகிய ஒப்பற்ற, துன் நிமித்தம் என்று கொண்டு - கெட்ட நிமித்தம் என்று (உளத்துக்) கொண்டு, வானுளோர்கள் துள்ளினர் - விண்ணுலகினில் உள்ளவர் குதித்தார்கள்; அ நிமித்தம் உற்றபோது - அந்தக் கெட்ட அறிகுறிகள் நிகழ்ந்த போதில், அரக்கர் கண் அரங்க - இராக்கதர்கள் வருந்த, மேல் - அவர்மேல், மின் நிமிர்த்த அன்ன - மின்னலை நிமிர்த்தாலொத்த, வாளி - அம்புகளை, வேதநாதன் வீசினன் - வேதநாதனாகிய இராமபிரான் வாரியிறைத்தான்.

வேதநாதன்; 3310. நிமித்தம் - அறிகுறி, கண்ணரங்க - வருந்த; கண் உப சர்க்கம் என்பர். அரங்குதல் - அழுந்துதல்; 'நிலமரங்கிய வேரொடு' (யுத்த. 674).

பி ம். 1. என்னிமித்தம், எந்நிமித்தம்; இடந்துடித்தடுத்தது, இடந்துவந்தடுத்தது, வந்தயைந்ததோர்.

2. துன்னிமித்தமா; துன்னினர்.

3. அன்னிமித்தம்; அரக்கர்மே லரங்குகள், மேலரங்குதன், மேலவரங்குதன்.

8 i

4. மின்னிமிர்த்தது.

3314. ஆளி மேலு மாளின் மேலு
மானை மேலு மாடன்மா
மீளி மேலும் வீரர் மேலும்
வீரர் தேரின் மீதினும்
வாளி மேலும் வில்லின் மேலு
மண்ணின் மேல்வ ளர்ந்தமாத்
தூளி மேலு மேற வேற
வீரன் வாளி தூவினன்.

வீரன் - ஆண்மைமிக்க இராமபிரான், மண்ணின் மேல் வளர்ந்த மா தூளி - பூமியின் மீது பெருகித் தோன்றிய மிக்க தூளிகள், மேலும் ஏற ஏற - பேன்மேலும் மிக, (தேர்களில் பூட்டிய) ஆளிமேலும் - யாளிமேலும், ஆளின் மேலும் - தேரைச் செலுத்துகின்ற பாகர்மீதும், ஆனைமேலும் - வேழத்தின் மீதும்,

ஆடல்மா - வலிமைமிக்க குதிரைகளின் மீதும், மீளி மேலும் - பேய்களின் மேலும், வீரர் மேலும் - வீரர்கள் மேலும், வீரர் தேரின் மீதினும் - வீரர் ஏறிய இரதங்களின் மீதும், வாளிமேலும் - அவர்கள் ஏவிய அம்புகளின் மீதும், வில்லின் மேலும் - வில்லின்மீதும், வாளி தூவினன் - அம்புகளை வாரியிறைத்தான்.

ஆடல் : வெற்றி; அடல், முதனீண்டது; ஆடல்மா - நாட்டியம் ஆடும், குதிரையுமாம். 'ஆடன்மாகரிசேவகம மைந்தென வயர்ந்தான்' (யுத்த. 2547).

பி - ம். 1. யாளி.

2. தேரின்மேலும் வெல், தேரின்மீதரும்.

3. வாளின்; எழுந்தமா. 82

3315. மலைவி ழுந்த வாவி ழுந்த
மான யானை மள்ளர்செந்
தலைவி ழுந்த வாவி ழுந்த
தாய வாசி தாளறும்
சிலைவி ழுந்த வாவி ழுந்த
திண்ப தாகை திங்களின்
கலைவி ழுந்த வாவி ழுந்த
வெள்ளெ யிற்ற காடெலாம்.

(இராமபிரான் அம்புகள் பட்டு), மானம் யானை - பெருமை மிக்க யானைகள், மலைவிழுந்தவா விழுந்த - மலைகள் விழுந்தாற் போல விழுந்தன; தாய வாசி - தாவிச்சென்ற குதிரைகள், மள்ளர் செம் தலை விழுந்தவா விழுந்த - வீரர்களின் செந்தலை அறுபட்டு விழுந்தவண்ணம் விழுந்தன; தாள் அறும் சிலை - அடித்தண்டு அறுபட்ட விற்கள், விழுந்தவா - விழுந்தவிதமாக, திண்பதாகை - உறுதியான பெரிய கொடிகள், விழுந்த - விழுந்தன; வெள் எயிற காடு எலாம் - வெள்ளிய கோரப் பற்களின் தொகுதிகள் அனைத்தும், திங்களின் கலை விழுந்தவா விழுந்த - மதியின் கலைகள் விழுந்தவண்ணம் விழுந்தன.

மான யானை : 'அடுமதிற் பாய' என்ற முத்தொள்ளாயிரம் காண்க. நான்கடிகளிலும் விழுந்தவாறு என்பது ஈறுகெட்டு

நின்றது. மள்ளர் - வீரர்; 'கடும்பரம்பினின மள்ளர்' (யுத்த. 3541). பதாகை - பெரிய கொடி. வெள் எயிற்ற காடு - அரக்கர்களின் காடுபோற் குவிந்துள்ள கோரப் பற்கள்.

பி - ம். 1. வரைவிழுந்த ; மன்னர்.
2. தலைவிழுந்த வாய் ; தாளை வாசிதள்ளுறுஞ், தாயவாசிதாளிறும், தரைவாளி தாளறுஞ்.
3. தேர் விழுந்த திங்கள். 83

அதிகப் பாடல்கள் :—

அண்ட கோள மெண்டி சாமு கங்க ளெங்கு மாகியே
மண்டி மூடி வாழ ரக்கர் தாமும் வாகை வீரன்மேல்
கொண்ட லேழு மூழிவாயொர் குன்றின் மாரி பொழிவ போல்
சண்ட வேக மேறி வாளி மழை சொரிந்து தாக்கினர். 1

தேரின் மீத னந்த கோடி நிருதர் சீறு செம்முகக்
காரின் மீத னந்த கோடி வஞ்சர் காலின் மாவுமாத்
தாரின் மீத னந்த கோடி தறுக ணீசர் தாழ்விலாப்
பாரின் மீத னந்த கோடி பதகர் வந்து பற்றினர். 2

துடித வண்டை சங்கு பேரி துந்து மிக்கு லங்கள்கைத்
தடிது வண்ட ஞாணி ரங்கு தக்கை யோடு பம்பைமற்
றிடிபொ திந்த முரச மாதி யெண்ணில் பல்லி யக்குழாம்
படிநடுங்க வேப கைக்க ளத்தின் ஓசை விஞ்சவே. 3

இரைத்தடர்த் தரக்கர் வெள்ளம் எண்ணில் கோடி யிடைவிடா
துருத்தல் கண்டி ராக வன்புன் முறுவல் கொண்டொவ்
[வொருவருக்
கொருத்த னய தன்மை தானும் உணர்வு றுத படியெழச்
சரத்தின் மாரி பெய்த ரக்கர் தலைத ரைக்கண் வீழ்த்தினன். 4

நுனித்தி டற்க ருங்க டுப்பின் நொடிவரைக்கு ளெங்குமாய்க்
குனித்த விற்கை வாளி மாரி மழை சொரிந்து கோறலால்
மனித்தன் மற்றொ ருத்த னென்ற வாய்மை நன்று நன்றெனா
நினைத்தி றத்த ரக்கர் விம்மி தத்த ராய்வி ளம்புவார் 5

விண்ணின் மீத னந்த கோடி வீரன் என்ப ரல்ல விம்
மண்ணின் மீத னந்த கோடி முனித னென்ப ரயிலவெங்
கண்ணி னூட னந்த கோடி கண்ண னென்ப ரல்லவும்
எண்ண மீத னந்த கோடி யுண்டி ராம னென்பரால். 6

இத்தி றத்த ரக்சர் வெள்ள மெங்குமீதி யம்ப நின்
றெத்தி றத்தி னும்விடா திராம னெங்கு மெங்குமாய்
அத்தி றத்த ரக்க ரோடு மானதேர் பரிக்குலம்
தத்து றச்ச ரத்தின் மாரி யாற் றடிந்து வீழ்த்தினான். 7

இடைவி டாத ளப்பில் வெள்ள மிற்றி றந்து போகவும்
படைவி டாத ரக்க ராளிபோல் வளைந்து பற்றவும்
கொடைவி டாத வன் பொருள் குறைந்தி டாதும் வீதல்போல்
தொடைவி டாதி ராமன் வாளி வஞ்சர் மீது தூவினான். 8

3316. வாடை நாலு பாலும் வீச மாக மேக மாலவெங்
கோடை மாரி போல வாளி கூட வோடை யானையும்
ஆடன் மாவும் வீரர் தேரு மாளு மாள்வ தானவால்
பாடு பேரு மாறு கண்டு கண்செல் பண்பு மில்லையால்.

நாலு பாலும் - நாலாப் பக்கங்களிலும், வாடைவீச - வாடைக் காற்று அடிக்க, மாகம் மேகம் மாலை - பெரிய வானத்தில் உள்ள மேக வரிசைகள், வெம் கோடை மாரிபோல - கடுமையான வேனிற் காலத்துப் பெய்யும் மழைபோன்று, வாளி கூட - இராம பாணம் மிகுதியாகக் கூடுவதால், ஓடை யானையும் - நெற்றிப் பட்ட மணிந்த வேழங்களும், ஆடல் மாவும் - வலிய குதிரைகளும், வீரர் தேரும் - வீரரின் தேர்களும், ஆளும் - காலாட்படையும், மாள்வ தான - இறந்துபடுவன ஆயின ; ஆல் - (அங்ஙனம் இறந்து படுதலின்), பாடுபேரும் - பக்கத்திலே பெருகிச்சென்ற, ஆறு கண்டு - இரத்த வெள்ளத்தைக் கண்டு, கண் செல் பண்பும் இல்லையால் - கண் சென்ற இயல்பும் இல்லையாயின. தான் ; அசை.

வாடை - வடக்கிலிருந்து வீசும் காற்று. மாக மேக, கூட வோடை, மாளு மாள்வ, கண்செல் பண்பு ; என்ற இடங்களில் இணையெதுகை காண்க. ஓடை - யானையின் நெற்றிப் பட்டம் ; 'ஓடை யானையுந் தேருமுழக்கினான்' (யுத்த. 3145). ஆடன்மா ; 3314.

பி - ம். 1. மோக, லோக.

2. மாரிபோலும்; கூடியோட.

3. மாள்வதானவர்.

4. கொண்டு; பண்செய், போர்செய், கண்செய், பண்செல், பண்சொல் இன்மையால். 84

3317. விழித்த கண்கள் கைகண்.மெய்கள்
வேற லைக்க ழுத்தினில்
தெழித்த வாய்கள் செல்ல லுற்ற
தாள்க டோள்கள் செல்லினைப்
பழித்த வாளி சிந்த நின்று
பட்ட வன்றி விட்டகோல்
கழித்த வாயு தங்க ளொன்று
செய்த தில்லை கண்டதே.

செல்லினை பழித்த - மேகத்தை யிழித்த (மேகத்தினும் அதிக மாகப் பெய்கின்ற), வாளி - சரங்களை, சிந்த - இராமபிரான் தூவ, விழித்த கண்கள் - திறந்த விழிகளும், கைகள் மெய்கள் - கரங்களும் உடல்களும், கழுத்தினில் - கழுத்தின் மீதிருந்து, வெல்தலை - வெல்லுதலை, தெழித்த வாய்கள் - பழித்த வாய்களும், செல்லல் உற்ற தாள்கள் - நடக்கலுற்ற கால்களும், தோள்கள் - தோள்களும், நின்று பட்ட அன்றி - குலைந்து நின்றன அல்லாமல், விட்ட கோல் - அவ்வீரர் எய்த அம்பும், கழித்த ஆயுதங்கள் - (உறையினின்றும்) நீங்கிய போர்க் கருவிகளும், ஒன்று செய்தது கண்டது இல்லை - (இராமபிரானுக்கு) ஒரு சிறிய இடையூறும் செய்யக்கண்டதில்லை. ஏ : அசை.

விழித்த கண்கள் - 'விழித்த கண் வேல் கொண்டெறிய' (குறள். 775). தெழித்தல் - அதட்டுதல்; 'தெழித்தனள் உரப் பினள்' (அயோத்தி. மந்தரை. 53). செல்லினைப் பழித்தவாளி - இடைவிடாது பொழிவதில் மேகத்தையும் இகழும் வாளி மழை; அவன் சரமாரியாய்ப் பெய்தான் என்ற வழக்கும் காண்க. அரக்கர் எறிந்த ஆயுதங்கள் இராமபிரானை ஒன்றும் செய்யக்கூடவில்லை என்பது கருத்து. (ஒப்பு) : 'எறிந்த வெய்தன வெற்றின குத்தின வீர்த்தன படையாவும், முறிந்த நுண்பொடியாயின முடிந்தன

'முனிவிலான் முழுமேனி. சொறிந்த தன்மையும் செய்தில வாயின்' (யுத்த. 212): 'உள்ளவான் பெரும் படைக்கலம் யாவையும் உக்கன வுரவோய்நின், பிள்ளை மேனிக்கொ ரானிவந்திலதினிச் செயலென்கொல்' (யுத்த. 213).

பி-ம். 1. கைகள் மெய்கள் விற்கள் வேல்கள் வாளிகள், கைகள் விற்கள் வேல்கள் வாள்கள் விண்ணினுள்.

3. பழித்தவாசி; சிறிநின்று; பட்டதன்றி, பட்டதின்றி; இட்டதோல்.

4. கண்டதால், கண்டிரே. 85

3318. தொடுத்த வாளி யோடு விற்று
ணிந்து வீழு முன்றுணிந்
தெடுத்த வாள்க ளோடு தோள்க
ளிற்று வீழு மற்றுடன்
கடுத்த தாள்கள் கண்ட மாகு
மெங்ங னேக லந்துநேர்
தடுத்து வீரர் தாமு மொன்று
செய்யு மாச லத்தினல்.

தொடுத்த வாளியோடு - இராக்கதர் விடுத்த அம்புகளுடன், வில் துணிந்து வீழும் முன் - விற்கள் அறுபட்டு வீழ்வதன் முன்பு, துணிந்து எடுத்த வாள்களோடு - அவர்கள் துணிவுடன் கைக் கொண்ட வாள்களுடன், தோள்கள் இற்று வீழும் - தோள்கள் துணிபட்டு வீழாநிற்கும்; மற்று - மேலும், உடன் - உடனே, கடுத்த தாள்கள் - வேகமிக்க கால்கள், கண்டம் ஆகும் - துண்டு படும்; (எங்ஙனமெனில்), வீரர் - இராக்கத வீரர், நேர் கலந்து - நேரே விரவி, தடுத்து - இராம சரங்களை விலக்கி, தாமும் - தாங்களும், சலத்தினல் - கோபத்தால், (இந்த இராம பாணங் கட்கு எதிராக) ஒன்று செய்யுமா எங்ஙனே - ஒன்று செய்யும் விதம் எவ்வாறு?

கடுத்தல்: விரைந்து செல்லுதல்; 'கடுத்தது கேட்டீர்' (யுத்த. 3288). கண்டமாதல்: துண்டுபடுதல்; 'கண்டங்கள் பலவுங் காண்பன்' (யுத்த. 720). செய்யுமாறு என்பது ஈறுகெட்டு வந்தது. சலம்: தணியாக் கோபம் என்பர்; 'சலஞ்செயி னுலகமூன்று

மிலக்குவன் முடிப்பன்றுனே' (யுத்த. 3054); 'சலம் புரிதண்டு' (பரிபா. 12, 58).

பி - ம். 1. வீழுமென்.

2. வீழுமற்றது, விழுமுற்றுடன்.

3. கடுத்த வாள்கள்; கலந்துடன்.

4. தடுத்த; செய்யுமோ; சலத்திஞர், சலத்திஞன். 86

இதன்பின் 'வாவி கொண்ட' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3319. குரந்து ணிந்து கண்சி தைந்து
பல்ல ணங்கு லைந்துபேர்
உரந்து ணிந்து வீழ்வ தன்றி
யாவி யோட வொண்ணுமோ
சரந்து ணிந்த வொன்றை நூறு
சென்று சென்று தள்ளலால்
வரந்து ணிந்த வீரர் போரின்
முந்த வுந்து வாசியே.

துணிந்த ஒன்றை - (இராமபிரான்), இலக்காகக்கொண்ட ஒரு பொருளின் மீது, சரம் - (தொடுத்த) வாளி, நூறு சென்று சென்று - நூறுகச் சென்று சென்று, தள்ளலால் - வீழ்த்துவதால், வரம் - தாம் அடைந்த வரத்தின் வன்மையால், துணிந்த வீரர் - மனத்திடங் கொண்ட இராக்கத வயவர், போரின் முந்த உந்து வாசி - போர்க்களத்திலே முற்படுமாறு செலுத்திய குதிரைகள், குரம் துணிந்து - குளம்புகள் அறுபட்டும், கண் சிதைந்து - விழிகள் அழியப் பெற்றும், பல் - பல்லுடன், அணம் குலைந்து - மேல் வாயும் சிதையப் பெற்றும், பேர் உரம் துணிந்து - பெரிய மார்பு அறுபட்டும், வீழ்வது அன்றி - மடிவதே அல்லாமல், ஆவி - உயிருடன், ஓட ஒண்ணுமோ - பிழைத்து ஓடுதற்கு முடியுமோ? ஓகாரம்: எதிர்மறைப் பொருள்; ஏ: அசை.

சென்று சென்று; இடைவிடாமைப் பொருட்டு. வரம்: அரக்கர் பெற்ற வரங்கள். வாசி: குதிரை; 'மாரி கலித்தெனு வாசிகலித்த' (யுத்த. 2261).

குரம்: குளம்பு; 'பொன்னெடுந் தடந்தேர் பூண்ட புரவியின் குரங்கள் போக்கி' (யுத்த. 2358); பல்லணம் என்றே கொண்டு: குதிரைச் சேணம்; எனினுமாம். 'இவுளியென் றிவற்றின், பன்னு பல்லணம்' (யுத்த. 3246).

பி-ம். 1. துணித்த, சிதைந்த, சிதர்ந்தது; குலைந்த.

2. ஓடவுன்னுமே.

3. தள்ளினல்.

4. வரந்துணிந்து; போரிலுந்து.

87

3320. ஊர வுன்னின் முன்பு பட்டு யர்ந்த வெம்பி ணங்களால்
பேர வொல்வ தன்று பேரி னுயி ரம்பெ ருஞ்சரம்
தூர வொன்று நூறு கூறு பட்டு குந்து யக்கலால்
தேர்க ளென்று வந்த பாவி யென்ன செய்கை செய்யுமே.

(பகைவரின் தேர்கள்), ஊர உன்னின் - ஊர்ந்து செல்ல நினைப்பின், முன்பு பட்டு - முன்னர் போரில் மடிந்து, உயர்ந்த வெம்பிணங்களால் - குவியலாக உயர்ந்த கொடிய பிணங்களால், பேர ஒல்வது அன்று - (இடம் விட்டுச்) செல்லவும் இயல்வதில்லை; பேரின் - (முயன்று) நீங்கிச் சென்றாலோ, ஆயிரம் பெருசரம் - (இராமபிரான்) தொடுக்கின்ற ஆயிரக்கணக்கான பெரிய அம்புகள், தூர - நிரம்புதலால், (தேர்கள்), ஒன்று நூறு கூறுபட்டு உகும் - ஒன்று நூறு பகுதியாகிச் சிதறிவிடும்; (ஆகவே) துயக்கு அலால் - சோர்வுபடுதல் அன்றி, பாவி தேர்கள் என்று வந்த என்ன செய்கை செய்யும் - பரந்து தேர்கள் என்று வந்தன என்ன செயலை ஆற்றும்? ஏ: அசை.

ஊர: 'ஒலி கடலுகந்தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே' (கிட்கிந்தா. 309). உயர்ந்த - குவிந்து நின்ற. ஒல்வது: இயல்வது; 'ஒல்லுவதொல்லு மென்றலும்' (புறநா. 196); 'ஒல்லும் வகையால் அறவினை யோவாதே, செல்லும்வா யெல்லாம் செயல்' (குறள். 33); 'ஒல்வதறிந்து' (குறள். 472). தூர்த்தல்: நிறைத்தல். துயக்கு - சோர்வு. தேர்களையே பாவி என்று, உரை கூறினாரும் உளர். 'அழுக்காறெனவொரு பாவி' (குறள். 168) என வந்தது

போல. பாவி வந்த: பரவி வந்தன அல்லது வந்தவை என்று கொள்க. 3320—3330, செய்யுட் சந்தம், கிட்கிந்தா. 227—238 செய்யுட்களின் சந்தம் போன்றவை.

பி - ம். 1. ஊரவுன்னி.

2. பேரவுண்பது, ஒன்பது.

3. நூறுகூறுசென்று ; மட்டுகுந்துயக்கலால், பட்டுகுத்தயக்கலால் பட்டுடைந்துளைதலால்.

4. வந்தவாவி ; செய்யுமோ. 88

3321. எட்டு வன்றி சைக்க ணின்ற
யாவும் வல்ல யாவரும்
கிட்டி னுய்ந்து போகி லார்க
ளென்ன நின்ற கேள்வியால்
முட்டும் வெங்கண் மான யானை
யம்பு ராய முன்னமே
பட்டு வந்த போல்வி ழுந்த
வென்ன தன்மை பண்ணுமே.

முட்டும் வெம் கண் - தாக்கும் தன்மையுள்ள கொடிய விழிகளையும், மானம் - வீர உணர்ச்சியையும் உடைய, யானை - யானைகள், அம்பு உராய-வாளிகள் (தம்) மேற்படுதலால், முன்னமே பட்டு வந்த போல் விழுந்த - முன்னரே இறந்து வந்தன போன்று வீழ்ந்தன ; என்ன தன்மை பண்ணுமே - (அவை) என்ன செயலைச் செய்ய வல்லன? 'வல் திசை எட்டுக்கண் நின்ற - வலிய திக்கு எட்டுக் களிலும் நின்ற, யாவும் - எல்லாப் படைகளும், வல்ல யாவரும் - வன்மை பெற்ற வீரர் அனைவரும், கிட்டின் உய்ந்து போகிலார்கள் - நெருங்கிடின் பிழைத்துச் செல்லார்,' என்ன - என்னுமாறு, கேள்வி யால் நின்ற - கேள்வியோடு நின்றன. ஏகாரம், வினா.

எட்டுத்திசை : நான்கு திசைகளும் நான்கு கோணத் திசை களும். கிட்டின் - நெருங்கின் ; 'கிட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினன்' (அயோத்தி. குகப். 9); முட்டுதல் - தாக்குதல் ; 'முட்டு வேன் கொல்' (குறுந். 28).

பி-ம் 1. யாதுமல்லவாய்வரும், யாதுமல்லயாவரும்.

2. என்று நின்ற; கேள்வியாய், கிளர்ச்சியால்.

3. மாலியானை அம்புபாய.

4. விழுந்தது.

இதன்பின் 'ஊரவுன்னின்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

3322. வாவி கொண்ட புண்ட ரீக
மன்ன கண்ணன் வாளியோன்
றேவி னுண்டை நூறு கோடி
கொல்லு மென்ன வெண்ணுவான்
பூவி னண்டர் கோனு மெண்ம
யங்கு மன்ன போரின்வந்
தாவி கொண்ட கால னூர்க
டுப்பு மென்ன தாகுமே.

வாவி கொண்ட புண்டரீகம் அன்ன கண்ணன் - தடாகத்தில் உள்ள செந்தாமரை மலர் ஒத்த நேத்திரங்களையுடைய இராமபிரான், வாளி ஒன்று ஏவின் - ஓர் அம்பினைத் தொடுத்தால், உண்டை - அந்த வில் உண்டை, நூறு கோடி கொல்லும் - நூறு கோடி உயிர்களை வதைக்கும், என்ன - என்ற காரணத்தினால், எண்ணுவான் - (மடிந்த உயிர்களைக்) கணக்கிடுபவனான, பூவின் அண்டர் கோனும் - பூவினில் வதிகின்ற தேவர் தலைவனான அயனும், எண் மயங்கும் - கணக்கிடுவதில் திகைப்பு எய்தலானான்; அன்ன போரில் - அத்தகைய சண்டையில், வந்து ஆவிகொண்ட - (வந்து மடிந்த பிராணிகளின்) உயிரைக் கவர்ந்த, காலனார் - யமனாருடைய, கடுப்பும் - விரைந்து தொழிலாற்றும் இயல்பும், என்னது ஆகும் - எப்படிப்பட்டதாகும்? ஏகாரம்: வினா.

கண்ணன் என்பதை அருட்கண்ணனான இராமபிரான் என்று கொண்டு; ஓர் பொய்கையில் பூத்த தாமரை போன்றவன் என்றும் கொள்ளலாம். (ஒப்பு) 'அமலத்தின் கரமுங்காலும்வதனமுங் கண்ணுமான, கமலத்தின் காடு பூத்த காளமா மேக மொத்தான்' (யுத்த. 778); யுத்த. 354; உரை விளக்கமும் காண்க. உண்டை; 'பண்டை நாளிராகவன் பாணி வில்லுமிழ் உண்டை யுண்டதனை' (அயோத்தி. மந்தரை. 4); 'கூனிகூன் உண்டைகொண் டரங்க

வோட்டி யுள்மகிழ்ந்த நாதனூர் ' (திருச்சந்த விருத்தம். 49). பூவின் அண்டர் கோன் திருமாலின் நாபிக் கமலத் துதித்த தேவர் நாயகனாகிய பிரமன். கடுப்பு : விரைவு.

பி - ம். 1. மன்னனன்ன, அன்னகண்ண.
2. ஏவிலுண்ட, உன்னுவான்.
3. பூவிலுண்ட கோனுமெய்.
4. அன்னது ; ஆகுமால் ஆருமோ. 90

3323. கொடிக்கு லங்கள் தேரின் மேல
யானை மேல கோடைநாள்
இடிக்கு லங்கள் வீழ வெந்த
காடு போலெ ரிந்தவால்
முடிக்கு லங்கள் கோடி கோடி
சிந்த வேக முற்றுரு
வடிக்கு லங்கள் வாளி யோட
வாயி னூடு தீயினால்.

வடி வாளி குலங்கள் - கூரிய அம்புத்தொகுதிகள், கோடி கோடி - கோடிக்கணக்கான (இராக்கதர்களின்); முடி குலங்கள் சிந்த - முடித் தொகுதிகள் சிதைவுபடுமாறு, வேகம் முற்று உரு ஓட - வேகம் நிரம்பப் பெற்று விரைகையில், வாயின் ஊடு தீயினால் - (அச்சரங்களின்) வாயில் உள்ள நெருப்பினால், தேரின் மேல யானை மேல - தேரின்மீதும் யானையின் மீதும் உள்ள, கொடி குலங்கள் - துவசத் தொகுதிகள், கோடை நாள் - முதுவேனிற் காலத்தில், இடி குலங்கள் வீழ - இடித் தொகுதிகள் வீழ்வதால், வெந்த - வேகலுற்ற, காடுபோல் எரிந்த - காடுபோல் எரிந்தன. ஆல் : அசை.

குலங்கள் என்று நான்கடிகளும் வந்தது சொற்பொருட்பின் வருநிலையணி. முற்று உரு : உரு, செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.

இதன்பின் 'போரரி' என்ற பாடல் சில பிரதிகளில்.

பி - ம். 1. மேலகொண்டநாள்.

2. பொலெரிந்ததால்

3. சிந்திவேக.

4. வாயினேடு. 81

3324. அற்ற வேலும் வாளு மாதி யாயு தங்கள் மீதெழுந்
துற்ற வேக முந்த வோடி யோத வேலை யூடுறத்
துற்ற வெம்மை கைம்மி கச்சு றுக்கொ ளச்சு வைத்ததால்
மற்ற நீர்வ றந்து மீன்ம றிந்து மண்செ றிந்தவால்.

*அற்ற* - (இராமனம்புகளால்), துணிபட்ட, *வேலும் வாளும் ஆதி ஆயுதங்கள்* - வேற்படையும் வாட்படையும் ஆன போர்க்கருவிகள், (வீரர்கள் வன்மையுடன் வீசியதனுல்) *உற்ற வேகம் உந்த* - அமைந்த வேகம் செலுத்த, *மீது எழுந்து* - மேலே கிளம்பி, *ஓடி* - விரைந்து, *ஓதம் வேலை ஊடு உற* - நீர்ப் பெருக்கினைக் கொண்ட கடலகத்துப் பொருந்துங்கால், *துற்ற* - (தம்மிடம்) நெருங்கிய, *வெம்மை கைமிக* - வெப்பமானது அதிகரிக்க; *சுறுகொள சுவைத்ததால்* - சுறுசுறு என்னும் ஒலியெழப் பருகியதனுல், *அ நீர் வறந்து* - அந்த கடற் புனல் சுவறி, (அதில் வதியும்) *மீன்* - மீன்கள், *மறிந்து* - உயிர் மடங்கப்பெற்று, *மண் செறிந்த* - மண்ணில் நெருங்கின. மற்று; ஆல் - அசை.

துற்ற - நெருங்கிய. சுறுக்கொள - சுறு என்ற ஒலியேயெழ; அநுகரணக் குறிப்பு. வறந்து - வற்றி; 'வாயினும் பல்லினும் வறந்துலறினர்' (யுத்த. 107). கைம்மிகல் - மேன்மேல் மிகல்; 'கோபம், கைம்மிகக் கனன்றதல்லால்' (யுத்த. 2050); கை என்பதைத் தமிழ் உபசர்க்கம் என்பர்.

பி - ம். 1. வாளுமாகி.

3. துற்றிவெம்மை; துகைத்தவால், சுவைத்தவால், சுவைத்தலால்.

4. வற்றிமீன். 92

3325. போர ரிந்த மன்று ரந்த புங்க வாளி பொங்கினுர்
ஊரெ ரிந்த நாட்டு ரந்த தென்ன மின்னி யோடலால்
நீரெ ரிந்த வண்ண மேநெ ருப்பெ ரிந்த நீணெடும்
தேரெ ரிந்த வீரர் தஞ்சி ரம்பொடிந்து சிந்தவே.

போர் அரிந்தமன் - போரில் பகைவரை அடர்க்கவல்ல இராமபிரான், துரந்த - விடுத்த, புங்கம் வாளி - கூரிய அம்பு, பொங்கினர் - கொதித்தெழுந்த அசுரர்களின், ஊர் எரிந்த நாள் - முப்புரம் எரியுண்ட காலையில், துரந்தது என்ன-(சிவபிரான்) விடுத்த அம்பு என்னும் வண்ணம், மின்னி ஓடலால் - வெளிச்சம் விட்டுக் கொண்டு விரைவதால், நீர் எரிந்த வண்ணமே-(முன் இராமபிரான் விட்ட அம்பினுல் கடலின்) நீர் பற்றி எரிந்த மாதிரியே, வீரர்தம் சிரம் பொடிந்து சிந்த - வீரர்களின் தலைகள் பொடியுண்டு சிதறுமாறு, நெருப்பு எரிந்த - நெருப்புப் பற்றி எரிந்தன; (அதனுல்) நீள்நெடு தேர் எரிந்த - உயர்ந்த தேர்களும் எரிந்தன. ஏ - அசை.

அரிந்தமன் - பகைவரை வெல்பவன், 'வேதத்தின் நுட்பங் கூறும் அரிந்தமன்றன்னை' (யுத்த. 2658); 'அரிந்தமன் வெல்லுமென்றற் கையுறவில்' (யுத்த. 3646); பொங்கினர்: முப்புரத் தரக்கர்: 'புரங்களெய்த புங்கவற்கு' (யுத்த. 3308); திரிபுரம் எரித்த வரலாறு: (ஆரணிய. 458) உரை காண்க. நீர் எரிந்த வண்ணம்; இராமபிரான் கடலில் அக்கினி யம்பினைப் பிரயோகிக்குங்கால் நிகழ்ந்தவை இங்கு உவமையாக்கப்பட்டது; யுத்த. 548, 549 காண்க. இச்செய்யுட் சந்தத்துடன் திருமழிசையாழ்வார் விருத்தங்களை ஒப்பிடுக.

பி - ம். 1. போமரறிந்தமன்.
2. ஊரெறிந்த
3. நெருப்பெரிந்து.
4. பொதிந்து, பொரிந்து; சிந்துமே.



3326. பிடித்த வாள்கள் வேல்க ளோடு
தோள்கள் பேர ராவெனத்
துடித்த யானை மீதி ருந்து
போர்தொ டங்கு சூரர்தம்
மடித்த வாய்ச்செ ழுந்த லைக்கு
லம்பு ரண்ட வானின்மின்
இடித்த வாயி னிற்ற மாம
லைக்கு லங்க ளென்னவே.

யானைமீது இருந்து போர் தொடங்கு சூரர் தம் தோள்கள் - வேழத்தின் மேலமர்ந்து போர் தொடங்குகின்ற வீரரின் தோள்கள், பிடித்த வாள்கள் வேல்களோடு - கைப்பற்றிய வாள்களுடனும் வேல்களுடனும், (முறிந்து), பேர் அரா என துடித்த - பெரிய பாம்புகள் போன்று துடித்தன; மடித்த வாய் - (சினத்தினால்) மடிக்கப் பெற்ற அவர்களின் வாய்களைக் கொண்ட, செழு தலை குலம் - செழித்த தலைத் தொகுதிகள், வானின் மின் இடித்த வாயின் - மேகத்தின் இடி தாக்கிய இடத்தில், இற்ற - பிளந்து போன, மா மலை குலங்கள் என்ன - பெரிய மலைத் தொகுதிகள் என்னுமாறு, புரண்ட -(இற்றுப்) புரண்டன. ஏ - அசை.

பேர் அராவெனத் துடித்த; (ஒப்பு): 'வயவர், வரைபுரை யானைக்கை நூற, வரைமேல், உரும் எறி பாம்பிற் புரளும்' (களவழி. 13). மடித்தவாய் - சினத்தின் மெய்ப்பாடு; உவமையணி.

பி - ம். 2. துடித்தவானமீ திருந்து.
3. வாயசெத், வாய்கள்செந்; புரண்டு; வானமின். 94

3327. கோர வாளி சீய மீளி கூளி யோடு ஞாளியும்
போர வாளி னேடு தேர்கள் நூறு கோடி பொன்றுமால்
நார வாளி ஞால வாளி ஞான வாளி நாந்தகப்
பார வாளி வீர வாளி வேக வாளி பாயவே.

நாரம் ஆளி - நாரங்களை ஆள்பவனும், ஞாலம் ஆளி - பூமியை ஆட்சி செய்பவனும், ஞானம் ஆளி - ஞான வடிவினனும், நாந்தகம் பாரம் ஆளி-நாந்தகம் என்னும் வாட்படையைத் தரித்தவனுமாகி, வீரம் ஆளி - ஆண்மையை ஆள்பவனுன இராமபிரானுடைய, வேகம் வாளி பாய - விரைந்து செல்லும் அம்பு பாய்வதனால், கோரம் ஆளி - பயங்கரமான யாளிகளும், சீயம் - சிங்கங்களும், மீளி கூளியோடு - வன்மை வாய்ந்த பேய்களுடன், ஞாளியும் - செந் நாய்களும், ஆளினேடு - தேரைச் செலுத்துகின்ற சாரதியுடனே, போர - உயிர் நீங்கிவிட, நூறுகோடி தேர்கள் பொன்றும் - நூறு கோடி இரதங்கள் அழிவன ஆயின; ஆல், ஏ : அசை.

நாரம் - நீர்; 'நாரமுண்டலர்ந்த செங்கேழ் நளினம்' (சுந்தர. 541); நாந்தகம் - திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகிய வாள்; இச் செய்யுளின் ஓசை நயம் அறிந்து பாராட்டத்தக்கது.

பி - ம். 1. சியமணி.
2. வாளியோடு : தோள்கள்.
3. நாகவாளி.
4. வீரன் ; ஏகவாளி. 95

3328. ஆழி பெற்ற தேர ழுந்து மாள ழுந்து மாளொடச்
சூழி பெற்ற மாவ ழுந்தும் வாசி யுஞ்சு ரிக்குமால்
பூழி பெற்ற வெங்க ளங்கு ழிப்ப டப் பொழிந்தபேர்
ஊழி பெற்ற வாழி யென்ன சோரி நீரி னுள்ளரோ.

பூழி பெற்ற வெம் களம்-புழுதி பெற்ற கடுமையான போர்க்களம் (உதிரமிகுதியால்), குழிபட - குழியுண்டாகுமாறு, பொழிந்த - மேகம் பொழியப் பெற்ற, பேர் ஊழி பெற்ற - மகா யுகத்திறுதியில் தோன்றிய, ஆழி என்ன - கடலை நிகர்த்திருக்க, சோரி நீரின் உள் - அந்த உதிரப் பெருக்கினுள்ளே, ஆழி பெற்ற தேர் அழுந்தும் - சக்கரங்களுடன் கூடிய தேர் அழுந்தா நிற்கும்; ஆள் அழுந்தும் - காலாட்படை அழுந்தும்; ஆளொடு - பாகனுடனே, அ சூழி பெற்ற மா அழுந்தும் - அந்த நெற்றிப் பட்டம் அணியப்பெற்ற யானையும் அழுந்துமு; வாசியும் சுரிக்கும் - குதிரையும் அழுந்தி மறையும். ஆல், அசை; அரோ - ஈற்றிசை.

ஆள் - பாகன். சூழி - யானையின் நெற்றிப் பட்டம்; 'சூழி யானை துகைத்தது சோபனம்' (யுத்த. மீட்சி. 17); 'சூழி தூவியம்பெடை சோர்ந்தன' (யுத்த. 3475); பூழி - புழுதி; 'பூழி வெங்கான நண்ணி' (அயோத். கைகேசி. 107); 'முடித்தலை பூழியன' (யுத்த. 2903).

பி - ம். 1. ஆழியற்ற ; ஆளொடும், ஆளுடன்.
2. மாவெழுந்தும் ; சுருக்குமால், சரிக்குமால்.
3. குலம்படப், குழம்பிடைப் ; பொழிந்து.
4. ஊழியுற்ற ; வேலை ; பென்ன. 96

இங்கு அதிகப்பாடல்கள் :—

இன்ன வாரி ராம னெய்து சேனை வெள்ளம் யாவையும்
சின்ன பின்ன மாக நீறு செய்தல் கண்டு திருகியே
மின்னு வாள ரக்கர் வெள்ளம் எண்ணில் கோடி வெய்தினின்
துன்னி மூடு மந்த காரம் என்ன வந்து சுற்றினர். 1

வானின் மீத னந்த கோடி மாய வஞ்சர் மண்டினர்
ஆனை மீத னந்த கோடி யடலரக்க ரண்மினர்
சேனை மேக மொத்த னந்த கோடி தீயர் சுற்றினர்
மீன வேலை யொத்த னந்த கோடி வஞ்சர் மேவினர். 2

3329. அற்றுமே லெழுந்த வன்சி
ரங்கள் தம்மை யண்மிமேல்
ஒற்று மென்ன வங்குமிங்கும்
விண்ணு ளோரொ துங்குவார்
சுற்றும் வீழ்த லைக்கு லங்கள்
சொல்லு கல்லின் மாரிபோல்
எற்று மென்று பாரு ளோரு
மேங்கு வாரி ரங்குவார்.

'அற்று - துணிபட்டு, மேல் எழுந்த வல் சிரங்கள் - மேலே கிளம்பிய வலிய தலைகள், தம்மை அண்மி - தங்களை அணுகி, மேல் ஒற்றும் - மேலே தாக்கும்', என்ன - என்று அஞ்சி, விண் உளோர் அங்கும் இங்கும் ஒதுங்குவார் - வானுலகவாசிகள் அங்கு மிங்கும் நகர்வார்கள்; 'சுற்றும் வீழ்தலை குலங்கள் - சுற்றிலும் வீழ்கின்ற தலைத் தொகுதிகள், சொல்லு - பேசப்படுகின்ற, கல்லின் மாரிபோல் - கல்மழை ஒப்பத் (தம்மீது), எற்றும் - தாக்கும்' என்று - என்று, பார் உளோரும் - பூமியில் உள்ளவரும், ஏங்குவார் இரங்குவார் - ஏக்கமுற்றவராய் மனம் உளைவார்.

அண்மி - அணுகி.

பி - ம். 1. எழுந்துவெஞ்; அண்மையில்.
2. வானுளோர்; ஒதுங்கினர், ஒடுங்கினர்.
3. சுற்று; சொல்லும்; கல்லு.
4. பாரினெங்கும்; வாழ்குவார், வாழுவார்; இறங்குவார், இரங்கினர். 97

3330. மழைத்த மேகம் வீழ்வவென்ன
வான மானம் வாடையில்
சுழித்து வந்து வீழ்வவென்ன
மண்ணின்மீது துன்னுமால்
அழித்தொ டுங்கு கால மாரி
யன்ன வாளி யோளியால்
விழித்தெ ழுந்து வானி னூடு
மொய்த்த பொய்யர் மெய்யெலாம்.

அழித்து - உலகம் யாவையும் அழித்தலின், ஒடுங்கு - (உலகம்) ஒடுங்குதற்குக் காரணமான, காலம் மாரி' அன்ன - யுக முடிவில் பெய்யும் மழையை ஒத்த, (இராமபிரானுடைய) வாளி ஒளியால் - பாணங்களின் வரிசையால், (துணிபட்டு), விழித்து எழுந்து - கண்கள் திறந்த வண்ணம் மேலே கிளம்பி, வானின் ஊடு மொய்த்த - விண்ணிடத்தே நிரம்பிய, பொய்யர் மெய் எலாம்- பொய்யருடைய உடல்கள் யாவும், மழைத்த மேகம் - மழை நிறைந்த மேகம், வீழ்வ என்ன - வீழ்வன போன்றும், வானம் மானம் - ஆகாயத்தில் செல்லும் விமானங்கள், வாடையில் - பெருத்த வட காற்றினுல், சுழித்து வந்து வீழ்வ என்ன - சுழலுதல் உற்று வீழ்வன போன்றும், மண்ணின் மீது துன்னும் - பூமியினிடத்து வந்து அடையும். ஆல் : அசை.

அரக்கர் உடல்கள் இராமபிரான் அம்பினுல் வானத்தில் உந்தப் பெற்றுப் பின் கீழே விழும் என்றவாறு. மழைத்தல் - மழை நிறைந்திருத்தல்; 'மழைத்த வானமே' (கிட்கிந்தா. 433). ஒளி - வரிசை; 'ஒளின் முற்ருதுற்று' (யுத்த. 3532). 'மொய்த்த பொய்யர் மெய்யெலாம்' இத்தொடரில் எதுகை நயம் காண்க. மொய்த்தல் - நிறைதல்; 'மொய்த்துவளர் பேரழகு மூத்த வடிவேயோ' (பெரியபு. தடுத்தாட். 32); பொய்யர் மெய்யெலாம் என்பதில் தொடைமுரண் காண்க.

பி - ம். 1. விழ்வது, வாழ்க; வானமான வாடையில்.
2. விழ்வதென்ன, மண்ணின்மீது வந்து.
3. அழித்தொதுங்கு; அம்புபாய, ஆரியன்றன், அன்ன மன்னன்; வாளியால், முன்னமே.

## வேறு

## அரக்கர்கள் நிகழ்த்திய போர்

3331. தெய்வநெடும் படைக்கலங்கள் விடுவர்சிலர்
சுடுகணைகள் சிலையிற் கோலி
எய்வர்சில ரெறிவர்சில ரெற்றுவர்சுற்
றுவர்மலைகள் பலவு மேந்திப்
பெய்வர்சிலர் பிடித்துமெனக் கடுத்துறுவர்
படைக்கலங்கள் பெருது வாயால்
வைவர்சிலர் தெழிப்பர்சிலர் வருவர்சிலர்
திரிவர்சிலர் வயவர் மன்னே.

சிலர் - சில வீரர், தெய்வம் நெடும் படை கலங்கள் விடுவர் - தெய்வத் தன்மை வாய்ந்த நீண்ட போர்க் கருவிகளை எறிவர்; சிலர் - சில வீரர், சுடு கணைகள் சிலையில கோலி எய்வர் - சுடுகின்ற வாளிகளை வில்லில் பொருத்தி விடுவர்; சில்ர் - சிலர், (எறிகின்ற போர்க்கருவிகளை) எறிவர் - வீசுவர்; சிலர் - சில வீரர், மலைகள் பலவும் ஏந்தி - மலைகள் பலவற்றையும் தாங்கி, சுற்றுவர் - வலசாரி இடசாரியாகச் சுற்றி, பெய்வர்-பொழிவாராய், எற்றுவர்- தாக்குவர், (சிலர் - சில வயவர்), பிடித்தும் என - பற்றிக் கொள்வோம் என்று, கடுத்து - விரைந்து, உறுவர் - எய்துவர்; சிலர் - சில வீரர், படை கலங்கள் பெருது - போர்க் கருவிகள் (கிடைக்கப்) பெறுமல், வாயால் வைவர் - வாய்கொண்டு வசை பொழிவர், சிலர் தெழிப்பர்- சிலர் அதட்டுவார்கள்; சிலர் - சில வயவர், வருவர் - எதிர்த்து வருவர்; சிலர் வயவர் - சில வயவர்கள், திரிவர் - அங்குமிங்கும் அலைவார்கள். மன் ஓ: அசை.

தெய்வ நெடும்படை (பால. 2); கையாலாகாத நிலையில் வையத் தொடங்கினுர் சிலர் என்க. தெழித்தல் - மிரட்டுதல்.

பி - ம். 1. எறிவர் சிலர்.
2. குத்துவர்.

3332. ஆர்ப்பர்பல ரடர்ப்பர்பல ரடுத்தடுத்தே
படைக் கலங்க ளள்ளி யள்ளித்
தூர்ப்பர்பலர் மூவிலைவேல் துரப்பர்பலர்
கரப்பர்பலர் சுடுதீத் தோன்றப்
பார்ப்பர்பலர் நெடுவரையைப் பறிப்பர்பலர்
பகலோனைப் பற்றிச் சுற்றும்
கார்ப்பருவ மேகமென வேகநெடும்
படையரக்கர் கணிப்பி லாதார்.

பகலோனை பற்றி சுற்றும் - கதிரவனைச் சூழ்ந்து சுற்றுகின்ற, கார் பருவம் மேகம் என - கார் காலத்து மேகம் என்னுமாறு, வேகம் நெடும்படை கணிப்பிலாதார் அரக்கர் - விசையுடன் கூடிய நீண்ட போர்க் கருவிகளைத் தரித்த எண்ணற்ற இராக்கதரில், பலர்-பலர், ஆர்ப்பர் - ஆரவாரம் செய்வார்கள்; பலர் - பலர், அடர்ப்பர் - நெருங்கிப் பொருவார்கள்; பலர் - பலர், அடுத்து அடுத்து - இடைவிடாமல், படை கலங்கள் அள்ளி அள்ளி-போர்க் கருவிகளை வாரிவாரி, தூர்ப்பர் - மிகுதியாக எறிவார்கள்; பலர் - பலர், மூ இலை வேல் துரப்பர் - மூன்று இலை வடிவான வேலினை விடுவார்கள்; பலர் கரப்பர் - பலர் ஒளிந்து கொள்வார்கள்; பலர் - பலர், சுடு தீ தோன்ற - விழிகளிற் சுடுகின்ற தீ வெளிப்பட, பார்ப்பர் - கடுமையாக விழித்து நோக்குவார்கள்; பலர் - பலர், நெடுவரையை பறிப்பர் - உயர்ந்த மலைகளை வேரோடும் அகழ்வார்கள்.

பகலோனைப் பற்றிச் சுற்றும் கார்ப்பருவ மேகம் சிறந்த உவமை; பகலோன் என்பது சூரியன் வழி வந்த இராமபிரானைக் குறிக்கும்; கார்ப் பருவம் - கருநிறம் வாய்ந்த அரக்கர்களைக் குறிக்கும். முன் செய்யுளில் 'சிலர்' செயல்களைக் கூறி, இங்குப் 'பலர்' செயல்களைக் கூறுதல் காண்க.

பி - ம். 1. அடுத்தடுத்த.
2. வேல் தொடுப்பர்.
3. நெடுவரைகள்.
4. மேகமிற ; கணக்கிலாதார்.

## இராமபிரான் அரக்கர் படைகளை வென்று விளங்குதல்

3333. எறிந்தனவு மெய்தனவு மெடுத்தனவும்
பிடித்தனவும் படைக ளெல்லாம்
முறிந்தனவெங் கணைகள்பட முற்றினசுற்
றினதேரு மூரி மாவும்
நெறிந்தனகுஞ் சிகளோடு நெடுந்தலைக
ளுருண்டனபே ரிருளி னீங்கிப்
பிறிந்தனவெய் யவனென்னப் பெயர்ந்தனன்மீ
துயர்ந்ததடம் பெரிய தோளான்.

(இராக்கதர்கள்), எறிந்தனவும் எய்தனவும் - வீசியவைகளும் விடுத்தவைகளும், எடுத்தனவும் - (விடுமாறு) எடுத்தனவும், பிடித்தனவும் - (கையிற்) பற்றியனவும் ஆகிய, படைகள் எல்லாம் - போர்க் கருவிகள் அனைத்தும், வெம் கணைகள்பட முறிந்தன - கொடிய சரங்களால் தாக்கப்பட்டு ஒடிந்தன; சுற்றின - (இராம பிரானைச்) சூழ்ந்து நின்ற, தேரும் - இரதங்களும், முற்றின - இறுதி யுற்றன; மூரிமாவும்-வலிய யானைகளும், நெறிந்தன குஞ்சிகளோடு - நெறிந்த மயிர்களுடனே, நெடு தலைகள் உருண்டன - நீண்ட தலைகள் உருளப்பெற்றன; மீது உயர்ந்த தட பெரிய தோளான் - மேலோங்கிய மிகப் பெரிய தோளையுடையவனான இராமபிரான், பேர் இருளின் நீங்கி - பரந்த இருளினின்று நீங்கப் பெற்று, பிறிந்து அன வெய்யவன் என்ன - விடுதலையுற்ற அந்தக் கதிரவன் போல, பெயர்ந்தனன் - வெளி வந்து காணப்பட்டான்.

குஞ்சிகள் என்றமையின் ஆண் யானைகள் என்க. அரக்கர்களை இருளாகவும் இராமபிரானைக் கதிரோனாகவும் உருவகித்தார். 'இருளுடைவைகலேம் இரவி தோன்றினாய்' (ஆரணிய. 133) என்று தண்டக முனிவர் கூறியது காண்க. தடம் பெரிய - இரண்டும் ஒரே பொருளன. 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பினில்வழா' (நன். 397) என்றது காண்க. முன்னடியில் பல்வகையாகப் பயன் படுத்தக்கூடிய போர்க் கருவிகள் கூறப்பட்டன; யுத்த. 212 காண்க.

பி - ம். 2. முறிந்தனவும்.
3. இருளை நீங்கி, இருளை நீங்க, இருளை நீக்கி.

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

அடல்வார்சிலை யமலன்சொரி கனல்வெங்கணை கதுவித்
தொடர்போர்வய நிருதக்கடல் சுவறும்படி பருகப்
படுமாறயல் வருதீயவர் பலகோடியர் பலரும்
சுடரேறிய படை மாறிகள் சொரிந்தார் புடை வளைந்தார்.

## இராமபிரான் அம்பின் செயல்

3334. சொல்லறுக்கும் வலியரக்கர் தொடுகவசந்
துகள்படுக்குந் துணிக்கும் யாக்கை
வில்லறுக்குந் தலையறுக்கு மிடலறுக்கு
மடலறுக்கு மேன்மேல் வீசும்
கல்லறுக்கு மரமறுக்குங் கையறுக்குஞ்
செய்யமள்ளர் கமலத் தோடு
நெல்லறுக்குந் திருநாட னெடுஞ்சரமென்
றுலெவர்க்கு நிற்க லாமோ.

செய்ய மள்ளர் - வயல்களில் உள்ள உழவர், நெல்லோடு - விளைந்த நெல்லுடன், (அந்த நெற்பயிரினூடே முளைத்த), கமலம் அறுக்கும் - தாமரைகளையும் சேர்த்தறுக்கும், திரு நாடன் - (நீர்வளம் மிக்க) அழகிய கோசலை நாட்டினை யுடையவனே, (இராமபிரானுடைய), நெடு சரம் - நீண்ட வாளி, சொல் அறுக்கும் - எண்ணிச் சொல்வதைத் தொடர்ந்து பகர முடியாமல் தடை செய்யும்; வலி அரக்கர் - வன்மை வாய்ந்த இராக்கதர்கள், தொடு கவசம் - உடலில் பூண்ட கவசத்தை, துகள் படுக்கும் - பொடி செய்யும்; யாக்கை துணிக்கும் - (அவர்களின்) உடலைத் துண்டாடும்; வில் அறுக்கும் - வில்லைச் சேதிக்கும்; தலை அறுக்கும் மிடல் அறுக்கும் மடல் அறுக்கும் - தலைகளைக் கொய்யும் வலிமையை அழிக்கும், போர்த்திறத்தை இல்லையாகச் செய்யும்; மேல் மேல் வீசும் கல் அறுக்கும் - இடைவிடாது எறியும் மலைகளைத் துண்டு செய்யும்; மரம் அறுக்கும் - மரங்களை அறுக்கும், கை அறுக்கும் - அந்த (மரம் மலைகளைப் பற்றிய) கரங்களையும் துணிக்கும்; என்றால் - என்றால்; எவர்க்கும் நிற்கலாமோ - எவர்க்கேனும் எதிராக நிற்கமுடியுமோ ?.

இச் செய்யுள் படிப்பதற்கினிமையான ஓர் அரிய செய்யுள், திரிபு என்னும் சொல்லணியில் அமைந்துள்ளது. அடல் அறுக்கும் எனினுமாம். செய்ய: அகரம், ஆறும் வேற்றுமை யுருபு. செய்ய மள்ளர் - செம்மையான மள்ளர் எனினும் ஒன்றும்; மள்ளர் - உழவர்; 'கடும் பரம்பினின மள்ளர்' (யுத்த. 3541). நிற்கலாமோ - ஓகாரம் எதிர்மறைப் பொருள்; நிற்கலாகாது என்பது பொருள். கல் - மலை; 'தென்குமரி வடபெருங்கல்' (புறநா. 17).

பி - ம். 2. சரமறுக்கும் தலையறுக்குமடல்.

3. மார்பறுக்கும்; கரமறுக்கும்; செய்யின் மள்ளா.

4. அவர்க்கு; நினைக்கலாமோ, நிற்கலாமே. 102

## போர்கண்ட அமரர் பேசுவன

3335. காலிழந்தும் வாலிழந்துங் கையிழந்துங்
கழுத்திழந்தும் பருமக் கட்டின்
மேலிழந்து மருப்பிழந்தும் விழுந்தனவென்
குநரல்லால் வேலை யன்ன
மாலிழந்து மழையனைய மதமிழந்து
கதமிழந்து மலைபோல் வந்த
தோலிழந்த தொழிலொன்றுஞ் சொன்னர்க
ளில்லைநெடுஞ் சுரர்க ளெல்லாம்.

நெடு சுரர்கள் எல்லாம் - பெருமை சான்ற தேவர்கள் அனைவரும், 'கால் இழந்தும் வால் இழந்தும் கை இழந்தும் கழுத்து இழந்தும் - கால் வால் கை கழுத்து முதலியவற்றை இழந்தும, பருமம் கட்டின் - பருமத்தின்மீது கட்டுதலையுள்ள, மேல் இழந்தும் - அம்பாரியை இழந்தும், மருப்பு இழந்தும் - தந்தங்களை இழந்தும், மலைபோல் வந்த தோல் - மலை போன்று வந்த யானைகள், விழுந்தன', என்குநர் அல்லால் - வீழ்ந்தன என்று சொல்பவரல்லாமல், (இராமபிரான் போரைக் கண்டதும்), வேலை அன்ன - கடல்போற் பரந்த அவ்வி யானைகள், மால் இழந்தும் - (வெல்லுதல் வேண்டும் என்ற) ஆசையை இழந்தும், மழை அனைய - பெய்யும் திறத்தால் மேகத்தை யொத்த, மதம் இழந்தும் - மதத்தை இழந்தும், கதம் இழந்தும் - (இயற்கையாக உள்ள) கோபத்தை யிழந்தும், இழந்த

தொழிலொன்றும் - (இங்ஙனம்), இழந்த - இழக்கப் பெற்ற (மாலி ழத்தல் ஆதிய அத்), தொழில் ஒன்றும் - தொழில் ஒன்றையும், சொன்னார்கள் இல்லை - சொல்லவில்லை.

கட்புலனாயவற்றைக் கூறினரேயன்றி, இராமன் வாளிகளால் யானைகள் மாலிழந்தமை முதலியன காணப்படாமையின் கூறப் பெறவில்லை என்க. அன்ன - குறிப்பு வினையாலணையும் பெயர். நெடுமை - பெருமை மேற்று. தோல் - யானை ; 'தோலுரிந்து சுழன் றன தோலெலாம்' (சுந்தர. 1188); 'தோல்படத் துதைந்தெழு' (யுத்த. 1755).

பி - ம். 1. வாயிழந்தும் ; கழுத்திழந்த கையிழந்த ; கனகக் கட்டின், பாமக் கட்டின்.

2. ஏங்கின வல்லால், என்குவ வல்லால், என்குந வல்லால் ; வேலை யென்ன, வேறுவேறு.

3. மாலுழந்த மரலிழந்து மையனைய ; மலையனைய, வலியிழந்து.

4. கோளிழந்து ; சொல்லினவரில்லை, சொல்லினரில்லை ; இழந்தும் என்ற இடங்களில் எல்லாம் இழந்து என்ற பாடம் காண்கின்றது. 103

## வேறு

## எண்ணில் அரக்கர் பொர, இராமபிரான் ஒருவனாகவே யாவரையும் வென்றமை

3336. வேல்செல்வன சதகோடிகள் விண்மேனிமிர் விசிகக்
கோல்செல்வன சதகோடிகள் கொலைசெய்வன மலைபோல்
தோல்செல்வன சதகோடிகள் துரகந்தொட ரிரதக்
கால்செல்வன சதகோடிக ளொருவன்னவை கடிவான்.

(அப்போரின்கண் இராமபிரான்மீது), செல்வன வேல் - செல் வனவான வேல்கள், சதம் கோடிகள் - நூறு கோடிகள்; விண்மேல் - ஆகாயத்தில், செல்வன நிமிர் விசிகம் கோல் - நிமிர்ந்து செல்வன வான விசிகம் எனப்படும் அம்புகள், சத கோடிகள் - நூறு கோடிகள் ; கொலை செய்வன - கொலை செய்யும் தன்மையனவாய், மலைபோல் செல்வன - மலைபோலச் செல்வனவான, தோல் - யானை கள், சதகோடிகள் - நூறு கோடிகள் ; துரகம் தொடர் இரதம் - குதிரைகள் பூட்டப்பட்ட தேர்கள் ; கால் செல்வன - சக்கரங்களாற்

செல்வன, சத கோடிகள் - நூறு கோடிகள்; அவை கடிவான் - அவற்றையெல்லாம் வெதுண்டு ஒழிப்பான், ஒருவன் - ஒருவனான இராமபிரான்.

சத கோடிகள் நான்கடிகளும் வந்தமையின்; சொற் பொருட் பின் வருநிலையணி. சதகோடி - 'சதகோடி முடி வேந்தர் தங்க ளுயிர் கொண்டொளித்தார் சமருக்காற்றார்' (வி. பா. இராசசூயச். 15).

பி - ம். 1. விண்மேல்விடு.

2. செய்தவன் மலைய, மலையக், மலையிற், மலையைக்.

3. துரகத்தொடு மிந்தக், துரந்தோடினரிந்தக். 104

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

கோல்பொத்திய நெடுநாணினிற் கோமான்றொடை நெகிழ
மேல்பொத்திய நிருதக்குலம் வேரோடுடன் விளியத்
தோல்பொத்திய வுயிர்யாவையும் தொடக்கற்றுடன் மடியக்
கால்பொத்திய கைபொத்தின காகுத்தன் வெங்கணையால்.

3337. ஒரு வில்லியை யொருகாலையி
னுலகேழையு முடற்றும்
பெருவில்லிகண் முடிவில்லவர்
சரமாமழை பெய்வார்
பொருவில்லவர் கணைமாரிகள்
பொடியாம்வகை பொழியத்
திருவில்லிகள் தலைபோய்நெடு
மலைபோலுடல் சிதைவார்.

உலகு ஏழையும் உடற்றும் பெரு வில்லிகள் - ஏழுலகங்களையும் வருத்துகின்ற பெரிய வில்லாளிகளான, முடிவு இல்லவர் - எண்ணிறந்த இராக்கதர்கள், ஒரு வில்லியை - ஒரு வில் வீரனை, ஒரு காலையில் - ஒரே சமயத்தில் (குறிவைத்து), மா சர மழை பெய்வார் - பெரிய அம்பு மழையைப் பொழிவாரானார்; பொரு இல்லவர் - நிகரற்றவரான அவர்களின், கணை மாரிகள் - அம்பு மழைகள், பொடியாம் வகை - தூளாக மாறுமாறு, பொழிய - (இராமபிரான்)

பெய்வதனால், திரு இல்லிகள் - பாக்கியமில்லாதவரான அவ்வரக்கர்கள், தலை போய் - தலை துணியப்பெற்று, நெடுமலை போல் உடல் சிதைவார் - பெரிய மலைபோன்ற (தம்) உடல்கள் அழியப் பெற்றவரானார்கள்.

முடிவில்லவர் - எண்ணி முடியாதவர். சரம் ஆம் மழை எனினுமாம்; பொருகின்ற வில்லவர் என்றும் பிரிக்கலாம். திரு வில்லி - நல்லூழற்றவர்; 'திருவிலீ மற்றிதெம்மறைப் பொருளெனத் தெரிந்தாய்' (யுத்த. 181); திருவில்லி - மூதேவி யென்றும் கூறுப. வில்லி - வில் வீரன்; 'வில்லி தன் தூதன் யானிலங்கை மேயினேன்' (சுந்தர. 1116).

பி - ம். 1. உற்றுப், உழக்கும், ஒறுக்குப்.

2. பொரு; சரமாரிகள்; பொழிவார், பெய்தார்.

3. வில்லியர், வில்லிவை; பொடியாவன; போழ்ந்து.

4. போலுயர். 105

3338. நூறுயிர மதயானையின் வலியோரென நுவல்வோர்
மாறுயின ரொருகோல்பட மலைபோலுடன் மறிவார்
ஆறுயிர முளவாகுத லழிசெம்புன லவைபுக்
கேருதெறி கடல்பாய்வன சினமால்கரி யினமால்.

நூறு ஆயிரம் மதம் யானையின் வலியோர் என - ஓரிலக்கம் மத வேழத்தின் வன்மை பெற்றவர் என, நுவல்வோர் - புகழ்ந்து சொல்லப்படுபவரான இராக்கதர், ஒரு கோல்பட - (இராமபிரானுடைய) ஓர் சரம் தாக்கின அளவிலேயே, மாறு ஆயினர் - (அந்த வலிய) நிலைமை மாறப்பெற்றவராய், மலைபோல் உடல் மறிவார் - மலைபோன்ற (தம்) உடல்கள் மடியப்பெற்றுார்கள்; அழி - (உடல்கள்) அழிபட்டதனால் தோன்றிய, செம்புனல் - உதிரங்களில், ஆயிரம் ஆறு உள ஆகுதல் - ஆயிரம் யாறுகள் உண்டாயினமையால், அவை புக்கு - அந் நதிகளிலே புகுந்து, ஏருது - (நீந்திக்) கரையேறவியலாமல், சினம் மால் கரி இனம் - கோபமும் மதமயக்கமும் கொண்டனவான யானைத்தொகுதிகள், (அந்த உதிர நீர்ப் பெருக்குடனே), எறிகடல் பாய்வன - அலை வீசுகின்ற கடலிற் பாய்வனவாயின. ஆல்: அசை.

ஒரு கோல்பட மலைபோல் உடன் மறிவார் எனினுமாம். கோல்பட்ட உடனேயே என்பது பொருள்; (ஒப்பு); 'வில் ஒன்றிற் கடிகை மூன்றில் ஏற்றினன் விண்ணில் என்றாள்' (ஆரணிய. 617).

பி - ம். 3. உளவாகுவ, உளதாகுதல், உளராகுவர், உளவாகுவது; அதுபுக்கு.

4. ஏரு நெறி; சிலைமால், சினமா. 106

3339. மழுவற்றுத மலையற்றுகும் வளையற்றுகும் வயிரத்
தெழுவற்றுகு மெயிறற்றுகு மிலையற்றுகு மெழுவேல்
பழுவற்றுகு மதவெங்கரி பரியற்றுகு மிரதக்
குழுவற்றுகு மொருவெங்கணை தொடைபெற்றதொர்
[குறியால்.

ஒரு வெம் கணை - ஒப்பற்ற கொடிய அம்பானது, தொடை பெற்றது ஓர் குறியால் - தொடுக்கப் பெற்றதோர் குறியினால், (அரக்கர் எறிந்த) மழு அற்று உகும் - மழுக்கள் அற்றுச் சிந்தி விடும், மலை அற்று உகும் - மலைகள் அற்று உகும், வளை அற்று உகும் - வளைகள் என்னும் படைகள் அற்று உகும், வயிரத்து எழு அற்று உகும் - உறுதி வாய்ந்த எழு என்னும் கருவியும் அற்று உகும்; எழுவேல் இலை அற்று உகும் - மேலோங்கிய வேல் இலை யழிந்து கெடும்; எயிறு அற்று உகும் - பற்கள் உதிர்ந்து சிந்தும்; மதம் வெம் கரி பழு அற்று உகும் - மதம் கொண்ட கொடிய யானை விலாவெலும்புகள் ஒடிந்து அழியும்; பரி அற்று உகும் - குதிரைகள் இறந்துபடும்; இரதம் குழு அற்று உகும் - தேர்த் தொகுதி சிதைந்து ஒழியும்.

பழு - விலா எலும்பு; 'யானையின் பழுப்போல்' (சீவக. 1561).

பீ - ம். 1. மழுவிற்று; வானற்றுகும்.

2. இலையற்றுகு மயிலெற்றுகும், இலையற்றுகு மெயிறற்றுகும்; எறிவேல்.

3. பழுதற்றுகும்; ஒருவன் னெருதொடையால். 107

3340 ஒருகாலையி னுலகத்துறு முயிர்யாவையு முண்ணும்
வருகாலனு மவன்தூதரு நமன்தானுமவ் வரைப்பின்
இருகாலுடை யவரியாவருந் திரிந்தாரிளைத் திருந்தார்
அருகாயிர முயிர்கொண்டுத மாறேகல ரயர்த்தார்.

ஒரு காலையின் - ஏக காலத்தில், உலகத்து உறும் உயிர் யாவையும் உண்ணும் - நிலவுலகத்திடையே அமைந்துள்ள உயிரனைத்தையும் தின்னும் வன்மையுள்ள, அவ்வரைப்பின் வருகாலனும் - அப் போர்க்களத்தே வந்த யமனும், அவன் தூதரும் - அவனுடைய படர்களும், நமன் தானும் - நமனும், யாவரும் - அவர் போன்ற எல்லோரும், இருகால் உடையவர் - இரண்டு கால்களை உடையவராதலின், திரிந்தார் - திரிந்தவர்களாய், இளைத்து இருந்தார் - இளைத்திருந்து, அருகு - அண்மையில் உள்ள, ஆயிரம் உயிர் கொண்டு - ஆயிரக்கணக்கான உயிர்களைக்கொண்டு, தம் ஆறு ஏகலர் அயர்த்தார் - தம்முடைய வழியே செல்வதற்கும் மறந்தார்.

உயிரை உண்ணுதல் - மரபு வழுவமைதி; 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மரபே' (தொல். சொல்). காலன் - நியமிக்கப்பட்ட குறித்த காலத்து உயிர்களைக் கவர்பவன் என்ற காரணக்குறி. 'காலனுங் காலம் பார்க்கும்' (புறநா. 41). நமன் - யமனுடைய பிரதானி என்பர். திரிந்தார், இளைத்திருந்தார்; இவை முற்றெச்சங்கள். ஆறு - நெறி. முதலடிக்கு; (ஒப்பு); 'ஒருகாலையி னுலகேழையு முடற்றும்' (யுத்த. 3337).

பி - ம். 1. யாவையும் உண்ண.
3. இருகாலுடை வரையாமென; விழுந்தார்; இரிந்தார்.
4. அயர்ந்தார். 108

இங்கு அதிகப் பாடல்கள் :—

அதுபோதகல் வானின்மறைந் தருமாயைசெய் யரக்கர்
எதுபோதினு மழிவற்றவ ரிருள்வானுற மூடி
சதகோடிகள் கணைமாரிகள் தானெங்கு நிறைத்தார்
சதுமாமறை யமலன் னவை தடிந்தான்றழற் படையால்.

அமலன்விடு மனல்வெம்படை யடுவெம்பொடி சிதறித்
திமிலங்கொடு ககனஞ்செறி திறல் வஞ்சகர் புரியும்
பிமரங்கெட வவர்தம்முடல் பிளவுண்டுயி ரழியச்
சமரம்புகு மளவில்லவர் தமைவென்றதொர் நொடியில்.

இதன்பின் 'பிரிந்தார்' என்ற பாடல் சில பிரதிகளில்.

3341. அடுக்குற்றன மதயானையு
மழிதேர்களும் பரியும்
தொடுக்குற்றன விசும்பூடுறச்
சுமந்தோங்கின வெனினும்
மிடுக்குற்றன கவந்தக்குல
மெழுந்தாடலி னெல்லாம்
நடுக்குற்றன பிணக்குன்றுக
ளுயிர்நண்ணின வென்ன.

அடுக்கு உற்றன - வரிசையாகப் பொருந்தினவாய், அழி மத யானையும் - அழிந்த மத வேழங்களும், தேர்களும் பரியும் - தேர்களும் குதிரைகளும், தொடுக்குற்றன - (ஒன்றன்மேலொன்று) தொடுத்தல் பொருந்தினவாகி, விசும்பு ஊடு உற - வானத்திடைப் பொருந்த, சுமந்து ஓங்கின எனினும் - பெரிதும் உயர்ந்தனவாயினும், மிடுக்கு உற்றன - வலிமை யுள்ளனவாய், கவந்தம் குலம் - கவந்தங்களின் தொகுதி, எழுந்து ஆடலின் - துள்ளி ஆடுவதால், பிணம் குன்றுகள் - பிண மலைகள், உயிர் நண்ணின என்ன - உயிர் வரப்பெற்றன என்று, எல்லாம் நடுக்குற்றன - எல்லா உயிர்களும் நடுக்கம் எய்தின.

அடுக்குற்றன - ஒன்றன்மீது ஒன்றாக விழுந்து கிடந்தவை; பலவின்பால் வினையாலணையும் பெயர். அழி என்பதை யானை தேர் பரி என்ற மூன்றிற்கும் கொள்க. சுமந்து - மிகுதியாக என்னும் பொருளது. மிடுக்கு - வலிமை; 'வல்லாரை வெல்லு மிடுக்கினரோ' (ஆரணிய. 902). கவந்தம் - தலையற்ற உடற் குறை. இச் செய்யுள் திரிபு என்னும் சொல்லணியில் அமைந்தது நடுக்குற்றன: 'நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துனபந் துடையார்' (நாலடி. 93); 'நடுக்குறு துன்பமொடு நயவரப் பயிற்றி' (பெருங். 1 : 35 : 205) கவந்தங்களின் ஆட்டத்தால் பிணக்குன்றுகள் அசையவே, 'இராக்கதப் படையின் சவங்கள் உயிர் பெற்றனவோ' என்று பிராணிகள் நடுக்கமெய்தின என்பது கருத்து.

பி - ம். 1. மத யானைகள் ; அழிகோள்களும்.
2. தொடுக்குற்றுற ; சுமந்தேங்கின.
3. எழுந்தாடின.
4. உயிர்க்குற்றன.

120

3342. பட்டாருடற் படுசெம்புனல் திருமேனியிற் படலால்
சுட்டார்சிலைக் கருஞாயிறு புரைவான்கடை யுகநாள்
சுட்டாசறுத் துலகுண்ணுமச் சுடரோனெனப்
[பொலிந்தான்
ஒட்டாருடற் குருதிக்குளித் தெழுந்தானையு மொத்தான்.

பட்டார் உடல்படு - இறந்தவருடைய உடலினின்று வெளி வந்த, செம்புனல் - உதிர நீர், திருமேனியில் படலால் - (தனது) அழகிய உடலிற் படுதலால், கட்டு ஆர்சிலை - கட்டமைந்த வில்லைத் தாங்கிய, கரு ஞாயிறு புரைவான் - கருஞ் சூரியனைப் போல்பவனான இராமபிரான், யுகம் கடை நாள் - யுகத்தின் இறுதி நாளிலே, உலகு - உலகினை, சுட்டு ஆசறுத்து - எரித்து அறவே அழித்து, உண்ணும் அ சுடரோன் என பொலிந்தான் - உண்ணுகின்ற அந்தச் சூரியனைப் போன்று விளங்கினன்; (அஃதன்றியும்), ஒட்டார் உடல் குருதி குளித்து எழுந்தானையும் ஒத்தான் - பகைவரின் உடல் உதிரத்தில் மூழ்கி வெளி வந்தவனையும் நிகர்த்துக் காணப்பட்டான்.

படுதல் - இறத்தல்; 'பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகிலேன் யான்' (யுத்த. 3061). கரு ஞாயிறு - இராமபிரான்; 'உதயம தொழியத் தோன்றும் ஒரு கருஞாயிறொத்தான்' (யுத்த. 777). ஆசு - விரைவு எனினுமாம்; ஆசறுதல் என்பதற்கே முடிதல் என்ற பொருள் உண்டு; 'ஊழி சென்றுசறுங்காலை' (ஆரணிய. சரபங். 30). இராமபிரானுக்கு இங்குக் கூறப்பட்ட உவமைகள் மிகவும் பொருத்தமானவை; ஒட்டார் - பகைவர்; 'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்' (குறள். 967); 'ஒட்டாரோ டுலகோரேழும், சுட்டாலுந் தொலையா தன்றே' (சுந்தர. 653); பகைவரைக் கொன்று அவரது குருதியில் மூழ்கி எழுதல்: 'பரசுராமன் குருதியைச் சியமந்தக மடுவில் தேக்கி மூழ்கி எழுந்தான்' என்ற வரலாறு காண்க.

பி - ம். 1. புகு செம்புனல்.

3343 தீயொத்தன வுருமொத்தன சரஞ்சிந்திடச் சிரம்போய்
மாயத்தமர் மடிகின்றன ரெனவும்மறங் குறையா
காயத்திடை யுயிருண்டிட வுடன்மொய்த்தெழு களியால்
ஈயொத்தன நிருதக்குல நறவொத்தன னிறைவன்.

'தீ ஒத்தன - நெருப்பை நிகர்த்தனவும், உரும் ஒத்தன - இடியினை ஒத்தனவும் ஆன, சரம் - வாளிகளை, (இறைவன்) சிந்திட - சிதறுவதனால், சிரம் போய் - தலையறப் பெற்று, மாயம் தமர் - மாயத்தில் கைவந்த தம்மவர், மடிகின்றனர் - (போரில்) இறக்கின்றனர்', எனவும் - என்ற காரணம் கொண்டும், மறம் குறையா - வீரம் குன்றாது, காயத்து இடை உயிர் - (தமது) உடல் அகத்து உள்ள பிராணனையும், உண்டிட - (அந்த இராம சரங்கள்) பருகும்படி, களியால் - மயக்குடன், உடன் மொய்த்து எழு - சேர மொய்த்து எழுந்த, (மற்றுமுள்ள) நிருதர் குலம் - இராக்கதக் குலம், ஈ ஒத்தன - ஈயை ஒத்தன, இறைவன் - இராமபிரானோ, நறவு ஒத்தனன் - நறவை நிகர்த்து விளங்கினான்.

தீயும் உருமும் சரத்தினது எரிக்கும் தன்மைக்குவமை. குறையா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். காயம் - சரீரம்; 'காய மெத்தனையுள நெடுங்காயங்கள் கதுவ' (யுத்த. 3752); 'காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர்' (சுந்தர. 130). நறவு - தேன்; தேன் கூட்டிற்கு இலக்கணை. தேன்கூட்டினைத் தேனினம் மொய்த்தல் போன்று, இராமபிரானை அரக்கரினம் மொய்த்தன என்க.

பி - ம். 1. சிரம்போர்.

2. மாயத்தவர், மாயத்தனர்; படுகின்றனர், மடிகின்றவர்; மதங்குறையார்; குழையார்.

3. இடை கிழிந்தோடுவக்கணையால், இடையுடன் மொய்த்தன களியால், களிமால்.

4. ஈ மொய்த்தது, ஈயொத்தது.

## இராமபிரான் தன்னை மொய்த்தாரை யழித்தமை

3344. மொய்த்தாரையொ ரிமைப்பின்றலை
முடுகத்தொடு சிலையால்
தைத்தானவர் கழற்றிண்பசுங்
காயொத்தனர் சரத்தால்
கைத்தார்கடு களிறுங்கனத்
தேருங்களத் தழுந்தக்
குத்தானழி குழம்பாம்வகை
வழுவாச்சரக் குழுவால்.

மொய்த்தாரை - (அவ்வாறு) அடர்ந்த இராக்கதரை, ஓர் இமைப்பின் தலை - கண்ணிமைக்கும் ஓர் மாத்திரை அளவில், முடுக - விரைவுடன், தொடு சிலையால் - (சரங்களைத்) தொடுத்து விடுகின்ற வில்லினால், தைத்தான் - மூடினான் இராமபிரான்; அவர் - அந்த அரக்கர், சரத்தால் - (அங்ஙனம்) மூடிய அம்புகளால், திண் பசுமை கழல் காய் ஒத்தனர் - உறுதியான பசிய கழற்சிக் காயை நிகர்த்தனர்; கைத்தார் - பகைவர்களுடைய, கடு களிறும் - விரைவுள்ள யானையையும், கனம் தேரும் - உறுதியான தேரையும், வழுவா சரம் குழுவால் - குறிதவறாத அம்புத் தொகுதிகளால், அழி - பெருகுகின்ற, குழம்பாம் வகை - குழம்பாம் வகை செய்து, களத்து அழுந்த - களத்திலே யழுந்த, குத்தான் - சிந்தினான்.

குத்தான் - உகுத்தான் என்பதன் முதல் கெட்டது. கைத்தார்: கைத்தல் - வெறுத்தல்; வெறுத்தல் காரணமாகப் பகைவரைக் குறித்தது. மொய்த்தல்: 'மொய்த்துவளர் பேரழகு மூத்த வடிவேயோ' (பெரியபு. தடுத்தாட். 32); 'பெரும்புனல் மொய்த்து' (பெருங். 1, 46, 37); கழற்காய் - அம்பு தைத்த வீரற்குவமை. அழிதல் - பெருகுதல்; 'அழியும்புனலஞ்சன மாநதியே' (சீவக. 1193).

பி - ம். 1. முடுகிற்றெரு, முடுகிற்றெடு.
2. கைத்தான்; கழலிற்; ஒத்தன.
3. கைத்தார் நெடுந்தேரும் கடுங்களிறும், கைத்தான வெங்களிறும் கடுந்தேரும்.
4. குய்த்தாரழி; புரிந்தான்கணைக்.

இங்கு அதிகப் பாடல்கள் :—

காலாளெனு நிருதப்படை வெள்ளம்கடை களித்தற்
கேலாதன பலகோடிக ளிமையோர் கரை காணூர்
பாலாழியின் மிசையேதுயில் பரமன்சிலை பொழியும்
கோலாலவை குறைவற்றனர் குறையாதவர் கொதித்தார்.

கொதித்தாரெழு கடல்போல்வளை வுற்றூர்கொடு முசலம்
குதித்தோடிய சிலைவாளிகள் கூர்வேல்கதை குலிசம்
விதைத்தார்பொரு மமலன்மிசை வெய்தேபல வுயிரும்
விதித்தானையும் விதித்தான்சிலை வளைத்தேசரம்
[விதைத்தான்.

3345. பிரிந்தார்பல ரிரிந்தார்பலர்
பிழைத்தார்பல ருழைத்தார்
புரிந்தார்பலர் நெரிந்தார்பலர்
புரண்டார்பல ருருண்டார்
எரிந்தார்பலர் கரிந்தார்பல
ரெழுந்தார்பலர் விழுந்தார்
சொரிந்தார்குடல் துறந்தார்தலை
தொலைந்தாரெதிர் தொடர்ந்தார்.

(இராமபிரான் அம்புகளை விடுத்த காலத்து அரக்கர் குழுவில்) பிரிந்தார் பலர் - உயிர் நீங்கப் பெற்றவர்கள் பலர்; இரிந்தார் பலர் - நிலைகுலைந்து ஓடினூர் பலர்; பிழைத்தார் பலர் - அம்புக்கு இலக்காகாமல் தப்பிப்) பிழைத்தவர் பலர்; (பலர்) உழைத்தார் - பலர் வருந்தினர், புரிந்தார் பலர் - (போரை) விரும்பிச் செய்தவர் பலர்; நெரிந்தார் பலர் - உடல் நெரிந்தவர் பலர்; புரண்டார் பலர் - பூமியிற் புரண்டவர் பலர்; பலர் உருண்டார் - பலர் உருண்டார்கள்; எரிந்தார் பலர் - எரிந்தவர் பலர்; கரிந்தார் பலர் - கரிந்தவர்கள் பலர்; எழுந்தார் பலர் - பலர் எழுந்தார்; (பலர்) விழுந்தார் - பலர் தரையில் வீழ்ந்தார்; குடல் துறந்தார் - பலர் குடர் அறுபட்டவராய், சொரிந்தார் - (அக்குடரை) வெளியில் தள்ளினூர்கள்; (பலர்) எதிர் தொடர்ந்தார்-எதிர் தொடர்ந்தாராய், தலை தொலைந்தார் - தலையிழக்கப் பெற்றூர்கள்.

அரக்கர் பலவகையிலும் நிலைகுலைந்தழிந்த தன்மை கூறப்பட்டது. துமிதல் - வெட்டுண்ணுதல்; 'துன்பப் பேரிருள் துமிக்கத் தோன்றிய' (பெருங். 1, 42, 60); 'கையொடு துமித்தவை வாள்' (பெருங். 1, 46, 40).

பி - ம். 3. சரிந்தார், இரிந்தார்.

4. துணிந்தார்; தலைகிடந்தாரெதிர் தொடர்ந்தார். 113

3346. மணிகுண்டலம் வலயங்குழை மகரஞ்சுடர் மகுடம்
அணிகண்டிகை கவசங்கழல் திலகம்முத லகலம்
துணியுண்டவ ருடல்சிந்தின தொடர்கின்றன சுடரும்
திணிகொண்டலி னிடைமின்குல மிளிர்கின்றன சிவண.

திணி கொண்டலின் இடை - அடர்ந்த நீர் கொண்ட மேகத்திடையே, மின் குலம் மிளிர்கின்றன சிவண - மின்னல் தொகுதிகள் விளங்குவன ஒப்ப, துணி உண்டவர் உடல் - வெட்டப்பட்டவரின் உடலிலே, தொடர்கின்றன சுடரும் - தொடர்ந்து ஒளி செய்வனவான, மணி குண்டலம் - அரதன குண்டலமும், வலயம் - வாகு வலயமும், மகரம் குழை - மகரக் குழைகளும், சுடர் மகுடம் - ஒளி விடுகின்ற கிரீடமும், அணி கண்டிகை - அழகிய கண்டிகையும், கவசம் கழல் - கவசமும் கழலும், திலகம் - திலகமும், முதல - முதலான, கலம் - அணிகலங்கள், சிந்தின - சிதறி வீழ்வனவாயின.

திணி கொண்டல் - நீர் திணிக்கப் பெற்ற மேகம் எனினுமாம். கொண்டல் - நீரைக் கொள்வது என்று மேகத்துக்குக் காரணக் குறி. திணி கொண்டல் - வலிய கொண்டலுமாம். அல் - பெயர் விகுதி. மகரம் குழை என மாற்றுக. அணி கண்டிகை - அணியப் பெற்ற கண்டிகை யெனினுமாம். துணியுண்டவர் - அறுபட்டவர். சிவணுதல் - ஒத்தல்; 'பரற் பகையுழந்த நோயொடு சிவணி' (பொருந. 44).

பி - ம். 1. மகுடஞ் சுடர்.

2. அதிகம் முதலிலகத், திலகம் முதலிகலும், தில்கம் முதலகலத்.

3. துணிவுண்டவர்; தொடர்கின்றது, சுடர்கின்றது.

4. சிவணி. 114

## அரக்கர் வியக்குமாறு இராமபிரான் சாரி திரிந்தமை

3347. முன்னேயுளன் பின்னேயுளன்
முகத்தேயுள னகத்தின்
தன்னேயுளன் மருங்கேயுளன்
தலைமேலுளன் மலைமேல்
கொன்னேயுள னிலத்தேயுளன்
விசும்பேயுளன் கொடியோர்
என்னேயொரு கடுப்பென்றிட
விருஞ்சாரிகை திரிந்தான்.

'கொன்னே - அச்சம் உண்டாகுமாறு, முன்னே உளன் - (நம்) முன்பாக உள்ளான்; பின்னே உளன் - பின்னே உள்ளான்; முகத்தே உளன் - சேனையின் முன்னர் உள்ளான்; அகத்தின் தன்னே உளன் - அகத்தினிடத்தே உள்ளான், மருங்கே உளன் - (நமது) இருபுறத்திலும் உள்ளான்; தலைமேல் உளன் - தலை மீதுள்ளான், மலைமேல் உளன் - மலைமீது உள்ளான்; நிலத்தே உளன் - தரைமீதுள்ளான்; விசும்பே உளன் - ஆகாயத்தின்கண் உள்ளான்; ஒரு கடுப்பு என்னே - (இவனுடைய) ஒப்பற்ற வேகம் இருந்தவாறு என்னே!' என்று - என்று, கொடியோர் - தீயவரான அரக்கர், இட - வியந்துகூற, இரு சாரிகை திரிந்தான் - (இராம பிரான்) பெருஞ்சாரிகை திரிந்தான்.

முகம் - சேனை முகம். கொன் - அச்சம். விசும்பு - ஆகாயம்; 'விசும்புதைவருவளியும்' (புறநா. 2). கடுப்பு - வேகம்; 'குதிக் கின்ற கடுப்பின் கொட்பால்' (யுத்த. 3449). சாரிகை - வலசாரி இடசாரியாக வருதல்.

பி - ம். 1. முகத்தின்.
3. தன்னேரினன்; தலைமேல்.
4. திரிந்தார்.

3348. என்னேரின னென்னேரின னென்றியாவரு மெண்ணப்
பொன்னேர்வரு வரிவிற்கரத் தொருகோளரி போல்வான்
ஒன்னார்பெரும் படைப்போர்க்கட லுடைக்கின்றன
[னெனினும்
அன்னேரல ருடனேதிரி நிழலேயென லானான்.

(அங்ஙனம் சாரிகை திரிந்ததனால்), யாவரும் - எல்லோரும், '(ஒரு இராமனே பலராமராக வந்துள்ளான்), அவன் என் நேரினன் என் நேரினன் - அந்த இராமன் என் எதிர் உள்ளான் என்னெதிர் உள்ளான்', என்று எண்ண - என்று நினைய, பொன் நேர்வரு - பொன்னை ஒத்து விளங்கும், வரிவில் கரத்து - கட்டமைந்த வில் ஏந்திய கரத்தையுடைய, ஒரு - ஒப்பற்ற, கோள் அரி போல்வான் - சிங்கம் ஒத்தவனான இராமபிரான், ஒன்னார் - பகைவருடைய, பெரும் படை - பரந்த படையாகிய, போர் - போர்த்தல் அல்லது கவிதலை யுடைய, கடல் உடைக்கின்றனன் எனினும் - கடலை உடைக்கின்றா னாயினும், அல் - இருளை நிகர்த்த, நேரலர் உடனே - பகைவ ருடனே, திரி நிழலே எனல் ஆனான் - திரிகின்ற நிழலே என்று பகரத் தக்கவனானான்.

உடனிருந்தும் உடற்சாயை கைக்கு எட்டாதவாறு போல அரக்கர்க்கு அண்மையில் தான் இருந்தும் அவர் கைக்கு அகப் படாதவனாயினன் என்பது கருத்து. அல்-இருள்; 'அல்லையாண் டமைந்த மேனியழகன்' (அயோத்தி. குகப் 42); 'அல்லும் பகலும் ஒழியாது' (திருக்கருவை. கலித். அந்.). நேர் வருதல் - ஒத்தல். கோளரி - சிங்கம். பிறவுயிர்களைக் கொள்வது என்பது காரணக் குறி; 'பொருகின்றனர் கோளரி போல்வார்' (யுத்த. 1898).

பா - ம். 1. என யாவரும், என்றி யாவருமியம்பப்.

2. பொன்னேர் பொரு; ஒருவன் புகுந்தேற்றார், ஒரு கோளரி பொரு வான், ஒரு கோளரி போவான்.

3. அன்னார்விடு பெருவேற்படை, அன்னான் பொரவிடும் வேற்படையவர் தேர்கரி பரியாய்.

4. அன்னே ரவருடனே திரிதழலே யெனலானான், அன்னேருடனெதிரே வரு நிழலே யெனலரன,

3349 பள்ளம்படு கடலேழினும் படியேழினும் பகையின்
வெள்ளம்பல வுளவென்னினும் வினையம்பல தெரியாக்
கள்ளம்படர் பெருமாயையிற் கரந்தாருருப் பிறந்தார்
உள்ளன்றியும் புறத்தேயுமுற் றுளனுமென வுற்றுன்.

பள்ளம் படு கடல் ஏழினும் - பள்ளமாகப் பொருந்திய கடல் ஏழிலும், படி ஏழினும் - ஏழுலகங்களிலும், பகையின் - பகைமையை யுடைய, பல வெள்ளம் உள என்னினும் - பல வெள்ளம் சேனைகள் இருப்பதாயினும், பல வினையம் தெரியா - பல வஞ்சகச் செயல்களை அறிந்து, கள்ளம்படர் - கள்ளம் நிறைந்த, பெரு மாயையில் - மிக்க மாயையால், உரு கரந்தார் - உருவை மறைப்பவராய், பிறந்தார் - பிறந்தவரான இராக்கதரின், உள் அன்றியும் புறத்தேயும் - அகத்தில் மட்டுமன்றிப் புறத்தேயும், உற்று உளன் - பொருந்தி யுள்ளான், ஆம் என - என்று எண்ணுமாறு, உற்றுன் - பொருந்தி நின்றுன் (இராமபிரான்).

'அந்தர் பஹிர்ச்ச தத்சர்வம் வ்யாப்ய நாராயணஸ்திதா' என்றபடி உள்ளும் புறமும் எப்பொருள்களிலும் பரந்து நிறைந் துள்ளான் ஸ்ரீமந் நாராயணன். பரம்பொருள் ஆதலின் அவன் உள்ள இடம் என்றும், இல்லா இடம் என்றும் இல்லை ; நயவஞ்சக ரான அரக்கர் அகத்தும் உள்ளான். அச்சத்தினுல் அரக்கர் அகத் தும், சாரிகை திரிவதனுல் வெளிப்புறத்தும் உள்ளான் என்று பகவானுடைய சர்வாந்திரியாமித்வம் இங்குக் கூறப்பட்டது. வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும், ஊனும் உடலும் உயிரும்போல் உள்ளும் புறத்தும் உளனென்ப' (அயோத்தி. காப்பு.) பள்ளம் படுகடல்; 'இவ்வேலைப் பள்ளம்' (சுந்தர. 603) என்றது காண்க. படியேழினும்; 'படியேழும் தேடி யும் காணு முழுமுதல்' (திருக்கருவை. கலித். அந்.) 'படியிற் பிறந்து விழுந்திட்ட யாக்கை' (திருக்கருவை. கலித். அந்.) வினையம் - சூழ்ச்சி ; 'வினைய மீதல்லதில்லை' (ஆரணிய. 274) தெரியா - செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. மலையேழினும், பகரின்.
2. கள்ளம்படு நெடுமாயையபின் கரந்தானுடன் பிறந்தான்.
4. அன்றுளதாமென வுதித்தான்,

3350. நானுவிதப் பெருஞ்சாரிகை
திரிகின்றது நவிலார்
போனனிடை புகுந்தானெனப்
புலன்கொள்கிலர் மறந்தார்
தானுவது முணர்ந்தானுணர்ந்
துலகெங்கணுந் தானே
ஆனன்வினை துறந்தானென
விமையோர்களு மயிர்த்தார்.

போனன் - (இருந்த இடம் விட்டுப்) போனவனய், இடை புகுந்தான் என - இடையிலே புகுந்தான் என்பதை, புலன்கொள் கிலர் - (தம்) அறிவினில் ஏற்கமாட்டாதவராய், (இராமபிரான்), நானுவிதம் பெரு சாரிகை - பலவிதமான பெருஞ்சாரிகை, திரிகின்றது - திரிவதை, நவிலார் - உரையாதவராய், மறந்தார் - மறந்து, '(இராமபிரான்) உணர்ந்து - உணர்வுமயமாய், உலகு எங்கணும் - உலகத்தில் எல்லாப் பாகங்களிலும், தானே ஆனன் - தானேயான பரம்பொருள், தான் ஆவதும் உணர்ந் தான் - தான் ஆவதையும் உணர்ந்தவனய், (தான் எடுத்த அவதாரத்திற் செய்ய வேண்டிய தொழிலாகிய சங்கரிக்கும்) வினை - தொழிலை, தவிர்ந்தான் போலும் - கைவிட்டான் போலும், என - என்று, இமையோர்களும் அயிர்த்தார் - தேவர்களும் சங்கை கொண்டனர்.

நானுவிதம்; 'பெரிய நா ளொளிகொ ணுவி தமணிப் பித்திப் பத்தி' (சுந்தர. 197); நவிலுதல் - சொல்லுதல்; 'நவில்தொறும் நூல்நயம் போலும்' (குறள். 783); சாரிகை திரிந்த வேகத்தைக் கண்டறியமாட்டாமல், அரக்கரை அழிக்கும் தொழிலை விடுத்துத் தானன விபுத்தன்மையை மேற்கொண்டானே' என்று அமரர் ஐயுற்றனர் என்பது கருத்து. வினை - அரக்கரைச் சங்கரிப்பதாகிய வினை. இமையோர்களும் - உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 1. நானுவிதம்; பெருஞ்சிரிகை; நவில்வார்.
2. புகுந்தாரவன்; மறுத்தார்.
3. ஆனுனெனை விமையோர்களும் மரேசரு மயிர்த்தார். 116

61

3351. சண்டக்கடு நெடுங்காற்றிடை
துணிந்தெற்றிடத் தரை மேல்
கண்டப்படு மலைபோனெடு
மரம்போற்கடுந் தொழிலோர்
துண்டப்படக் கடுஞ்சாரிகை
திரிந்தான்சரஞ் சொரிந்தான்
அண்டத்தினை யளந்தானெனக்
கிளர்ந்தானிமிர்ந் தகன்றான்.

சண்டம் கடு நெடு காற்று - வேகம் பொருந்திய கொடிய நீண்டகால அளவினதான மாருதம், இடை துணிந்து எற்றிட - இடையே துண்டுபடுமாறு வீசுதலின், தரை மேல் - பூமியின்மீது, கண்டம் படும் - பிளவுபடும், மலைபோல் - மலைபோலவும், நெடுமரம் போல் - நீண்ட மரம் போலவும், கடும் தொழிலோர் - கொடுந் தொழிலையுடையவரான இராக்கதர், துண்டம்பட - துண்டாகும் படி, கடு சாரிகை திரிந்தான் - (இராமபிரான்) கடுஞ் சாரிகை திரிந்தானாய், நிமிர்ந்து அகன்றான் அண்டத்தினை அளந்தான் என - (முன்னர்த் திருவிக்கிரம அவதாரத்தில்,) ஓங்கியுயர்ந்து அண்டத்தை அளந்தவனான திருமால் போன்று, கிளர்ந்தான் - கிளர்ந்தானாய், சரம் சொரிந்தான் - அம்புகளைப் பொழிந்தான்.

சண்டக் கடுங்காற்று: 'சண்டமாருதமென்னத் தடவரை, கொண்டு சீறி' (யுத்த. 1018); 'சண்டமாருதம் வீச' (யுத்த. 2671); அண்டத்தினை அளந்தது: திருமால் திருவிக்கிரமாவதாரத்தில்; பால. வேள்வி. 20-38 காண்க. இறுதியடிக்கு: 'உலகளந்தவன் வளர்ந்தனனு மென உயர்ந்தான்' (யுத்த. 3606); 'மறைக்கு மெட்டாத பரஞ்சுடரிவ்வுலக மூன்றும். தன்னிரு தாள் உள் ளடக்கிப் பொலிபோழ்தின்' (யுத்த. 2665); 'ஏழினோடு டேழுநாடு மளந்தவனெனலு மானான்' (சுந்தர. 736); அண்டத்தினை: 'அண்டத்தளவு மினைய பகர்ந்தழைத்துப் பண்டைத் தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்' (யுத்த. 1653).

பா - ம். 1. காற்றிடை தொடர்ந்தேறிட. துணிந்தெற்றிட.
3. துண்டப்படும்; துரந்தான்.

3352. களியானையு நெடுந்தேர்களுங்
கடும்பாய்பரிக் கணனும்
தெளியாளியு முரட்சீயமுஞ்
சினவீரர்தந் திறமும்
வெளிவானக மிலதாம்வகை
விழுந்தோங்கிய பிழம்பால்
நளிமாமலை மலைதாவின
னடந்தான்கடற் கிடந்தான்.

கடல் கிடந்தான் - திருப்பாற் கடலில் கிடந்த திருக்கோலத்துடன் சேவை சாதித்தருளும் திருமாலின் அமிசமான இராமபிரான், களியானையும் - மதக் களிப்புக் கொண்ட வேழமும், நெடு தேர்களும் - உயர்ந்த தேர்களும், கடும் பாய்பரி கணனும் - வேகமாகப் பாய்ந்து செல்கின்ற குதிரைகளின் கூட்டமும், தெளியாளியும் - (வலிமை) தெளியப்பட்ட யாளியும், முரண் சீயமும் - வலிய சிங்கமும், சினம் வீரர் தம் திறமும் - கோபம் மிக்க வீரர்களான காலாட்படைகளின் கூறுபாடும், விழுந்து - கீழ் வீழ்ந்து, வான் அகம் - வானகமும், வெளி இலதாம் வகை - வெற்றிடம் இல்லாதபடி, ஓங்கிய பிழம்பால் - உயர்ந்துகாணப்பட்ட ஒளிப் பிழம்பினால், நளிமாமலை - பெரியதொரு மலையிலிருந்து, மலை தாவினன் - மற்றொரு மலையில் தாவி, நடந்தான் - நடப்பவனாயினன். (இராமபிரான்).

களியானை : 'கார் கடக்களி நல்யானை' (குசேலோ. 3, 21); களி நெடு கடும் என்று யானை தேர் பரி என்ற இவற்றிற்கு ஏற்ற அடைமொழிகளாதல் காண்க. வெளி : வெற்றிடம் ; நளி : பெரிய 'தடவுங்கயவும் நளியும் பெருமை' (பிங்). 'நளியிரு முந்நீர் நாவாயோட்டிய' (புறநா. 66). கடற்கிடந்தான் : திருப்பாற் கடலில் பள்ளி கொண்டுள்ள திருமாலின் அமிசமான இராமபிரான்.

பி - ம். 2. யாளியுமுறழ் ; தம்பிரமும் வளம்பாய்.
3. முந்தோங்கிய மிளிரும், பினம்பேர்.
4. நளிர்மாமலைமலை, நளிர்மாமலைதலை, நளிர்மாமலைமலை; கடந்தான். 120

## வேறு

## சேனையழிந்தமையின் வருணனை

3353. அம்ப ரங்கள் தொடுங்கொடி யாடையும்
அம்ப ரங்க ளொடுங்களி யானையும்
அம்ப ரங்க வழுந்தின சோரியின்
அம்ப ரங்க மருங்கல மாழ்ந்தென

அம்பரம் கம் - கடலின் நீரிலே, அருகலம் ஆழ்ந்து என - அரிய மரக்கலம் அழுந்தினாற் போன்று, அம்பு - (இராமபிரான் விடுத்த) வாளிகள், அரங்க - அழுந்தலால், அம்பரங்கள் தொடு கொடி ஆடையும் - ஆகாயத்தைச் சென்று தீண்டும் கொடிச் சீலையுடனும், அம்பரங்களொடும் - அம்பாரிகளுடனும், களியானையும் - மதக்களிப்புக் கொண்ட வேழங்களும், சோரியின் - உதிரப் பெருக்கிலே, அழுந்தின - பதியப்பெற்றன.

இச்செய்யுட்கள் அடிதோறும் முதல் ஆறு எழுத்துக்கள் ஒன்றி வந்தமையின் யமகம் என்னும் சொல்லணி. மரக்கலங்கள் கூம்புடனே கடலில் முழ்கியது போன்று கொடிகளுடனே அம்பாரிகளைத் தம்மேற் கொண்ட கரிகள். உதிர வெள்ளத்தில் அழுந்தின. அம்பரம் என்ற சொல் கடல், ஆகாயம் என்ற இரு பொருளில் வந்துள்ளமை காண்க. அம்பரம் - கடல்; 'எரிகணை யேவ வம்பர முற்றது' (வி. பா. 14-ஆம் போர். 93); நிலத்தை ஆடைபோலப் போர்ப்பதினால் அம்பரம் கடல் என்க. அம்பரம் - ஆகாயம்; 'அம்பரமே தண்ணீரே சோறே' (திருப்பாவை 17); 'அம்பரத்தில் ஆடுகின்றார் பாங்கிமாரே யென்னை யிம்பரத்தில் ஆட்டுகின்றார் பாங்கிமாரே' (திருவருட்பா.); 'அம்பரத் தெறிந் தார்ப்ப' (யுத்த. 1030); சோரி - இரத்தம்; 'மார்பெனு மலைவழங் கருவியோசைச் சோரியை நோக்கினன்' (கிட்கிந்தா. 298); அரங்குதல் - அழுந்துதல்; 'நிலமரங்கிய வேரொடு நேர் பறித்து' (யுத்த. 674).

பி - ம். 1, ஆடைய.

2. அம்பரங்கடொடும்; கொடி; யானைகள், யாளியும்.

4. அம்பரங்கள் வரும், அம்பரங்கவரும், அம்பரங்களரும். 121

3354. தம்ம னத்திற் சலத்தர் மலைத்தலை
வெம்மை யுற்றெழுந் தேறுவ மீளுவ
தெம்மு னைச்செரு மங்கைதன் செங்கையால்
அம்ம னைக்குல மாடுவ போன்றவே.

தம் மனத்தில் - தமது உள்ளத்தில், சலத்தர் - வஞ்சனை, நிறைந்தவரான இராக்கதரின், மலை தலை - மலையொத்த தலைகள், வெம்மை உற்று - (இராமபிரானுடைய வாளிகளால்) சேதிக்கப் படும் கடுஞ் செயலுக்குள்ளாகி, எழுந்து ஏறுவ - (அவர்களின் உடல்களினின்று) எழுந்து உயரச் சென்றனவாய், மீளுவ - மீள்வன, தெவ் முனை - போர்க்களத்திலே, செருமங்கை - போர் மகள், தன் செம் கையால் - தனது சிவந்த கைகளால், அம்மனை குலம் ஆடுவ போன்ற - அம்மனைத் தொகுதிகளை யாடுமவற்றை ஒத்தன ; ஏ - அசை.

மிகவும் பொருத்தமான உவமை ; சலம் - வஞ்சனை ; மலை தலை - மலைபோன்ற தலை என்க. தெவ் + முனை = தெம்முனை ; 'வகரக் கிளவி நான்மொழி யீற்றது' (தொல். எழுத்து. மொழி மரபு. 81); என்றபடி தெவ் என்பது ஒரு வகர வீற்றுச் சொல். 'தெவ்வுப் பகைமை' (தொல். சொல். 50); 'தெவ்வென் மொழியே தொழிற் பெய ரற்றே, மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்' (நன். 236)-ம் 'மகரம் வருங்கால் உகரச் சாரியை பெறுதலே யன்றி ஒரோ வழி ஈற்று வகரம் மகரமாகத் திரியவும் பெறும் என்ற அதன் உரையும் காண்க. செருமங்கை - போர் மகள் ; அம்மனையாடுதல் ; பெண்பாலரின் விளையாட்டுக்களில் ஒன்று ; பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங் களில் அம்மனைப் பருவம் ஒன்றுதல் காண்க.

பி - ம். 1. தம்மனத்த.
2. வீழ்வன, மீள்வன.
3. கொங்கையால்.
4. அம்முலைக் குலம் ; பெற்றதே, போன்றதே.



3355. கேட கங்கண வங்கையொ டுங்கிளர்
கேட கங்கள் துணிந்து கிடந்தன
கேட கங்கிளர் கின்றக ளத்தநன்
கேட கங்கள் மறிந்து கிடந்தவே.

கேடம் - வேட்டைக்குரிய, கங்கணம் அம் கையொடும் - கங்கணம் தரித்த அழகிய கையுடனே, கிளர் - ஒளிர்கின்ற, கேடகங்கள் - பரிசைகள், துணிந்து கிடந்தன - அறுபட்டுக் கிடந்தன; கேடு அகம் கிளர்கின்ற - கெடுதி தன்னிடம் விளங்குகின்ற, களத்த - போர்க்களத்தனவாய், நன்கு - சிறந்த, ஏட - இதழ்களையுடைய துப்பை மாலை சூடிய, கம்கள் - சிரசுகள், மறிந்து கிடந்த - உருண்டு கிடந்தன. ஏ - அசை.

கேடம் - வேட்டை; இங்கு இலக்கணையால் கொல்லும் தொழிலை யுணர்த்தி நின்றது. இச் செய்யுளும் யமகத்தமைந்தது. துணிந்து - பிளக்கப்பட்டு; கேடு அகம் கிளர்கின்ற என்றும், களத்த நன்கு ஏட கம்கள் எனவும் பிரிக்க. ஏடு - இதழ். இங்கு போர்மாலையாகிய தும்பையைச் சுட்டி நின்றது. 'ஏடவிழ் மாலையி தென்ன வெடுத்தான்' (பால. கார்முக. 35); கம் - சிரம்; (திவா).

பி - ம். 1. கேடகங்களறுவன கையொடும்; வல்கை நெடுங்கிளர், அங்கையொடுகிளர், அங்கையொடுங்கின.

2. துணித்து.

3. களத்தன, கரத்தன, களத்தென.

4. கிடந்தன. 123

3356. அங்க தங்களத் தற்றழி தாரொடும்
அங்க தங்களத் தற்றழி வுற்றவால்
புங்க வன்கணைப் புட்டில் பொருந்திய
புங்க வன்கணைப் புற்றர வம்பொர.

புங்கவன் - புருடோத்தமனை. இராமபிரானுடைய, கணை புட்டில் பொருந்திய - அம்புத்தூணியில் அமைந்த, புங்கம் - கூரிய நுனியுடைய, வல்கணை - வலிய அம்பாகிய, புற்று அரவம் பொர - புற்றுப்பாம்பானது தாக்குதலின், அங்கதம் களத்து அற்று - தோள்வளை கழுத்தைப் போன்றது; (கழுத்திற்றதுபோல அறுபட்டு நின்றது); அழிதாரொடும் - தேன் ஒழுகப் பெற்ற மலர் மாலைகளுடனே, அம்கதம் - அழகிய சினமும், களத்து - போர்க்களத்து, அற்று அழிவுற்றன - ஒழிந்து அழிவெய்தின, ஆல், அசை.

இராமபிரான் ஏவிய அம்புகளால், கழுத்தைப் போன்ற அங்கதமும் அழிய, போர் வயவர் கழுத்தறவே தம் மாலையும் சினமும் அழியப்பெற்றவராயினர். அங்கதம் - தோள்வளை; 'புய வரை மிசை வரம்பிலா, விலைகள் பெற்ற வங்கதம்' (திருவிளை. மாணிக்கம். 12); அழி - தேன் ஒழுக்கு. அம்புப் புட்டிலுக்குப் புற்றரவம். (ஒப்பு) 'புற்றி னூடுநுழை நாக மன்னபுகை வேக வாளிகள் புகப்புக' (யுத்த. 2022).

பி - ம். 1. அங்கவெங் களத்தற்று, அங்கவங் களத்தற்று; அழிதேரொடும், அழிந்தாரொடும்.

2. அங்கவெங் களத்தற்று, அங்கதங் கணத்தற்று; அவியுற்றவால், அழியுற்றவால்.

3. பொருந்தவப், பொருந்தவும்.

4. புற்றரவும். 124

3357. கயிறு சேர்கழற் கார்நிறக் கண்டகர்
எயிறு வாளி படத்துணிந் தியானையின்
வயிறு தோறு மறைவன வானிடைப்
புயல்தொ றும்புகு வெண்பிறை போன்றவே.

கயிறு சேர் - கயிற்றினால் இணைக்கப்பட்ட, கழல் - வீர கண்டையை அணிந்த, கார் நிறம் கண்டகர் - கருநிறம் பொருந்திய கொடிய இராக்கதரின், எயிறு - பற்கள், வாளிபட - அம்புகள் தைத்ததால், துணிந்து - அறுபட்டு, யானையின் வயிறு தோறும் மறைவன - வேழங்களின் வயிறு தோறும் மறைபவை, வான் இடை - வானத்திடையில் உள்ள, புயல்தொறும் - மேகங்கள் தோறும், புகு வெண் பிறைபோன்ற - நுழைகின்ற வெண்ணிற மான பிறையை ஒத்தன; ஏ - அசை.

யானைகட்குப் புயலும், எயிற்றுக்குப் பிறைச் சந்திரனும் உவமைகள். 'யானைகள் வயிற்றினூடு புகும் அரக்கருடைய கோரப் பற்களுக்கு, மேகத்தினூடு நுழையும் பிறைமதி உவமை. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. கழல் - கயிற்றிற் கோத்துக் கட்டப் பட்டது. கண்டகர் - முள்போன்றவர் எனவே கொடியர்; 'கண்

டகர் நெடுந்தலை கனலுங் கண்ணன' (யுத்த. 1768); 'கற்றைப் பூங்குழலாளைச் சிறை வைத்த கண்டகனை' (சுந்தர. 318); 'புளிக்குங் கண்டகர்' (சுந்தர. 659); 'கண்டகர், உடல் கடந்து நின்றாழி கடந்திலை' (சுந்தர. 1075).

பி - ம். 1. காரினில்.

2. வாளியினிற்றன.

4. போன்றவால். 125

இதன்பின் 'அங்க வெங்களத்து' என்றபாடல் ஓர்பிரதியில்.

3358. வென்றி வீர ரெயிறும் விடாமதக்
குன்றின் வெள்ளை மருப்புங் குவிந்தன
என்று மென்று மெழுந்த விளம்பிறை
ஒன்றி மாநிலத் துக்கவு மொத்தவால்.

வென்றி வீரர் எயிறும் - வெற்றி வாய்ந்த வயவரின் கோரப் பற்களும், விடாமதம் குன்றின் வெள்ளை மருப்பும் - இடைவிடாத மதப் பெருக்கினையுடைய மலை போன்ற வேழத்தின் வெண்மை நிறமுள்ள தந்தங்களும், குவிந்தன - குவிந்தனவாய், என்றும் என்றும் - பலநாட்களிலும், எழுந்த இளம்பிறை - தோன்றிய இளம் பிறைகள், ஒன்றி - ஒன்றுகூடி, மாநிலத்து உக்கவும் ஒத்த - பெரிய நிலத்திலே சிதறியவற்றையும் நிகர்த்தன. ஆல்: அசை.

எயிறும் மருப்பும் பல ஆகலின், அவற்றிற்கு ஏற்ப இளம் பிறை பலவாதல்காட்ட. 'என்றும் என்று மமைந்த இளம் பிறை' என்றார் - தன்மைத் தற்குறிப் பேற்றவணி. என்றும் என்றும் என்பது என்றென்றும் எனவும் வரும்.

பி - ம். 2. குவிந்தன.

3. என்றுமமைந்த.

4. ஒன்றின்; உற்றவும்; ஒக்குமால், ஒத்ததால். 126

## இரத்தக்கடல் பரந்ததனுல் பல தீவுகளிலும் உறைவோர் நெடு மலைகளின்மீது ஏறுதல்

3359. ஓவி லாருட லுந்துதி ரப்புனல்
பாவி வேலை யுலகு பரத்தலால்
தீவு தோறு மினிதுறை செய்கையர்
ஈவி லாத நெடுமலை யேறினர்.

ஓவிலார் - இடையீடில்லாது கிடந்த இராக்கதரின், உடல் - சரீரம், உந்து - வெளித் தள்ளுகின்ற, உதிரம் புனல் - இரத்த நீர், பாவி - பரவி, வேலை உலகு பரத்தலால் - கடல் சூழ்ந்த புவியிற் பரத்தலினுல், தீவு தோறும் இனிது உறை செய்கையர் - தீவுகள் தோறும் இன்பமாக வதியும் தன்மையரானவர், ஈவு இலாத - (கடல் பெருக்கினுல்) அழிவுபெருத, நெடுமலை ஏறினர் - உயர்ந்த மலைமீது ஏறினர்கள்.

ஓவுதல் - ஒழிதல்; 'ஓவுநாள் உயிர் போகுநாள்' (தேவா. 927, 3); 'ஓவா திரண்டுவவும் மட்டமியும்' (சீவக. 1517); பாவுதல் - பரத்தல்; 'மீப்பாவிய விமையோர் குலம்' (யுத்த. 3018); ஈவு - ஈறு; 'ஈவிலாத தீவினைகள்' (திருவாய். 4, 7, 3).

பி - ம். 1. ஓய்விலாத நதியுதிரப்புனல், ஓய்வில் காலத்தின் றீவினை யொத்தன, ஓய்வில் காலுந்தி யுதிரப்புனல்.
2. பாய்வில் வேலையினூடு பரந்தவரல், பாய்வில் வேலையுலகு பரத்தலால்.
3. சேர்கையர், செய்கையர்.



இங்கு அதிகப் பாடல்கள் :—

கொள்ளை வெஞ்சமர் கோலு மிராக்கத
வெள்ள முங்குறை வுற்றது மேடொடு
பள்ள மின்றிப் படுங்குரு திக்கடல்.
உள்ள வான்கடற் கோடிய தில்லையால். 1

தேய மெங்கு மிடம்சிறி தின்றியே
மாய வஞ்சர் மடியப் பிணமலை
போய வளர்ந்தொரு விசும்பொடும் புல்லிற்றுல்
ஆய தன்மையங் கண்ணனும் நோக்கியே. 2

கடலெரிந்த கனற்படை கார்முகத்
திடை தொடுத்ததை யேவி யிரும்பிணத்
திடல னைத்தையுத் தீர்க்கெனச் செப்பினான்
பொடிப டுத்தி யிமைப்பிற் புகுந்ததால். 3

அண்ட முற்று மனைத்துயி ரும்பெடுத்
துண்டு மிழ்ந்து படைக்கு மொருவனுக்
குண்டெ னற்கரி தென்னுள திச்செயல்
எண்ட ருந்தவ ரெண்ணுவ தில்லையால். 5

இற்ற தாக விராக்கத வீரர்கள்
உற்றொ ராயிர வெள்ள முடன்றெதிர்
சுற்றினார் பண்ட மாரி சொரிந்துளார்
வெற்றி வீரனும் கைவில் வணக்கினான். 5

தலைய றுத்த வருந்தடத் திண்புய
மலைய றுத்த வரும்வயக் கையொடு
சிலைய றுத்த வருந்திமிரத்தின் மெய்
நிலைய றுத்த வரும்மன்றி நின்றதார். 6

தேர ளப்பில பட்ட சிறுகண்மாக்
கார ளப்பில பட்ட கடும் பரித்
தார ளப்பில பட்ட தடம்புயல்
பேர ளப்பில பட்டனர் பீடிலார். 7

வானகத் தொடு மாநில மெண்டிசை
யான திக்கொரு பத்தும் அடுத்துறத்
தானொ ருக்கிய வஞ்சகர் தம்தலை
போன திக்கறி யாது புரட்டினான். 8

சுடரும் வேற்கணை தோமரம் சக்கரம்
அடரு மூவிலைச் சூலமற் றுதியாம்
படையின் மாரி பதகர் சொரிந்திடைத்
தொடர வீரன் துணித்தனன் வாளியால். 9

ஏன மோடெண் சீயம் மெழுமத
வானை யாளி புலியென் றிவைமுகம்
ஆன தீய வரக்கர் மடிந்திட
வான வன்கணை மாரி வழங்கினான். 10

வடி சுடர்க்கணை மாற்றமங் காயிர
முடி யுடைத்தலை யோர்தலை யும்மடிந்
திடுவ தித்தலத் தேயிடி யேற்றில்வான்
வடவ ரைச்சிக ரங்கள் மறிவபோல். 11

இரதம் யானை யிவுளியொ டெண்ணிலா
நிருதர் வெள்ளம் நெடுநிலத் திற்றிடச்
சரத மன்னைசொல் தாங்கித் தலத்துறும்
விரத வீரன்றன் வாளியின் வீட்டினன். 12

கடுவைத் தார்களன் கைப்படு கார்முகம்
ஒடியத் தாக்கு மொருவன் சிலையின் வாய்
வடவைத் தீச்சொரி வாளியின் மாமழை
படமற் றுயிர வெள்ளமும் பட்டதால். 12

பாலொத் தாழியின் பாம்பணை மேற்றுயில்
சீலத் தாண்மையோர் செய்யும் தவத்தினின்
ஞாலத் தாய விறைவ னிராவணன்
மூலத் தானை முடிய முருக்கினன். 14

## விண் முதலியவற்றில் உயிர் சென்று நிறைதல்

3360. விண்ணி றைந்தன மெய்யுயிர் வேலையும்
புண்ணி றைந்த புனலி னிறைந்தன
மண்ணி றைந்தன பேருடல் வானவர்
கண்ணி றைந்தன விற்றொழிற் கல்வியே.

மெய் உயிர் - உடற்கண் உள்ள உயிரால், விண் நிறைந்தன - ஆகாயத்தினிடங்கள் நிறைந்தன, வேலையும் - கடலும், புண் நிறைந்த - புண்ணினின்ற வெளிப்பட்ட, புனலின் நிறைந்தன - உதிர நீரால் நிறையப் பெற்றன; மண் - (யுத்த) பூமிகளும், பேர் உடல் நிறைந்தன- அறுபட்ட உடல்களால் நிறைந்தன; வில் தொழில் கல்வி வானவர் கண் நிறைந்தன - விற்றொழிலைக் குறித்த கல்வியால் தேவர்களின் கண்கள் நிறைந்தன.

மெய் உயிர் - மெய்க்கண் இருந்த உயிர். இந்த உயிர்கள் போரில் மடியப் பெற்றதனால் வீர சுவர்க்கம் புக்கன. புண்

இறைத்த என்பதில் இறைந்த என்பது மெலித்தல் விகாரம். பேர் உடல் - பேர்க்கப்பட்ட அல்லது பிளக்கப்பட்ட உடல், வினைத் தொகை. விற்றொழில் கல்வி எனவே வில்லினால் ஆற்றக்கூடிய பல செயல்களையும் ஆற்றற்குரிய வழிகளைப் போதிக்கும் கல்வி. கண்ணிறைதல் - கை நிறைந்த பணத்தைக் காட்டிலும் கண்ணிறைந்த கணவனே மேல் என்ற பழமொழி இங்குக் கருதத் தக்கது. விற்றொழில் கல்வி (ஒப்பு); 'கதையினுல் வதையின் கல்வி'.

பி - ம். 1. விண்ணிறந்தன.
2. புனலினிறந்தன.
4. கண்ணிறைந்தவவ். 128

## சோரி வெள்ளத்துடன் படைக்கலங்கள் கடலிற் புகுதல்

3361. செறுத்த வீரர் பெரும்படை சிந்தின
பொறுத்த சோரி புகக்கடல் புக்கன
இறுத்த நீரிற் செறிந்தன வெங்கணும்
அறுத்து மீன முலந்த வனந்தமே.

செறுத்த வீரர் - சினந்த வயவர்களின், பெருபடை - பெரும் படைகள், சிந்தின - சிதறினவாகி, பொறுத்த சோரி புக - (தம்மைத்) தாங்கின உதிரம் புக்கதால், (தாமும்) அவ்வுதிரப் புனலுடன், கடல் புக்கன - கடலிற் புக்கனவாய், இறுத்த நீரில் - (அக் கடலில்) தங்கிய நீரில், செறிந்தன - நெருங்கினவாகி, எங் கணும் - எல்லாப் பக்கத்திலும், அறுத்து - அறுத்தலால், உலந்த மீனம் அனந்தமே - உயிர் அழிந்த மீன்கள் எண்ணற்றனவாம். ஏ : அசை.

உலத்தல் - அழிதல்; 'உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவென்' (கிட்கிந்நா. 249); 'வெள்ளத் துலந்தது முலப் பிற்றன்றே' (யுத்த. 2024); அனந்தம் - எண்ணிறந்தது; ந+ அந்தம் எனப் பிரியும் வடமொழி சமாசம். 'ஐயிறு நூறுமல்ல

வனந்தமா முகங்களம்மா' (யுத்த. 3451); 'ஊரனந்தம் பெற்ற பேரனந்தமுற்ற வுறவனந்தம்' (தாயு. திருவருள் விலாச. 2).

பி - ம். 1. செறுத்து ; படைக்கலம் சிந்தின.

2. புறக்கடல்.

3. இறுத்து ; கானிற்.

4. அறுந்த ; மீன்முதனந்த வனந்தமால். 129

## அப்போது இராமபிரான் வெல்வதைப் பற்றி வன்னி யென்ற படைத்தலைவன் கூறலுறல்

3362. ஒல்வ தேயிவ் வொருவனிவ் வூகத்தைக்
கொல்வ தேநின்று குன்றன யாமெலாம்
வெல்வ தேது மிலாமையின் வெண்பலை
மெல்வ தேயென வன்னி விளம்பினுன்.

'இவ் ஒருவன் - இந்த (த் தனிப்பட்ட) ஒருவன், இவ் ஊகத்தை - இந்த அரக்கரின் வியூகத்தை, நின்று - எதிர்த்து நின்று, கொல்வது ஒல்வதே - கொலை புரிவது இயலக் கூடியதா? குன்றன யாம் எலாம் - மலை போன்ற நாம் அனைவரும், வெல்வது ஏதும் இலாமையின் - வெல்லும் குறி ஒன்றும் காணப்பெருமையின், வெள்பலை மெல்வதே - வெறும் வாயை மெல்லுவதா?' என - என்று, வன்னி விளம்பினுன் - வன்னி என்ற அரக்கன் மொழிந்தான். ஏகாரம் : வினு.

ஒல்வது - இயல்வது ; 'ஒல்லுவ தொல்லும் என்றலும்' (புறநா. 196); 'ஒல்லும் வகையால் அறவினை யோவாதே' (குறள். 33); யூகம் - ஊகம் என நின்றது ; 'ஆவோடல்லது யகரம் முதலாது' (தொல். மொழி மரபு. 65); என்ற இடத்து நச்சினார்க்கினியர், 'யவனர் யுத்தி யூயம் யோகம் யௌவனம் வடசொல்லென மறுக்க' என்றார் : யூகமும் அத்தகையதே. யூகம் - கருங் குரங்கென்பர். 'யூகமொடு மாமுக முசுக்கலை' (திருமுரு. 302); இவ் யூகம் என்ற சொல் இந்த ஆற்றுப் படைக்கண் வருதல் கண்டே இந் நூலைக் காலத்தாற் பிற்பட்ட தென்பர் சிலர். கொல்வதே குன்றனயாம்; என்பதில் உருவத்தால்

குன்றன்ன என்பதோடு அரக்கர்களின் செயலற்ற நிலையும் குறிக்கப் பெற்றமை காண்க. அசலம் என்ற குன்றின் பெயர்; சலித்த லில்லாதது என்று பொருள்படும். வெண்பலை மெல்வது - பழமொழி. 'வெறும் வாயை மெல்லும் ஔவையார் அவலைக் கண்டாள் விடுவாளா' என்றமை காண்க. பல்லுக்குக் கறிக்க வுணவேதுமின்மையின் வெண்பல் எனப்பட்டது. வன்னி - புட்கரத் தீவின் மன்னன். 'வன்னி யென்பவன் புட்கரத் தீவுக்கு மன்னன்' (யுத்த. 38); ஷை 49-ம் காண்க.

பி-ம். 1. நம் யூகத்தை, இவ் யூகத்தை, இவ் வோதத்தை.

2. நின்ற; குன்றென.

3. அல்லதேது; வன்பனை, வன்பலை.

4. மாலி. 130

3363. கோல்வி ழுந்தழுந் தாமுனங் கூடியாம்
மேல்வி ழுந்திடி னும்மிவன் வீயுமால்
கால்வி ழுந்த மழையன்ன காட்சியீர்
மால்வி ழுந்துளிர் போலு மயங்கிநீர்.

'கோல் - இராவணனுடைய அம்பு, விழுந்து அழுந்தா முனம் - (வந்து) வீழ்ந்து அழுந்துவதன் முன்பு, கூடியாம் மேல் விழுந்திடினும் - யாமெல்லாம் ஒருங்கே மேல் விழுந்த போதும், இவன் வீயும் - இவன் இறப்பான், - கால் விழுந்த மழை அன்ன - காலிறங்கின மழை போன்ற; காட்சியீர் - தோற்றத்தையுடையீர்! நீர் மயங்கி - நீர் மதிமயக்கமுற்று, மால் விழுந்துளிர் போலும் - புத்திப் பிரமையில் அகப்பட்டீர் போலும். ஆல்: அசை.

கோல் - அம்பு; 'வாலிமேற் கோலொன்று வாங்கி' (கிட்கிந்தா. 288); கால் விழுந்த மழை: மிகவும் கருமையாய்க் காணும் என்பர். 'மழைக்காலோதி, பாலினிறமே பெறினும்' (தனிப்பா. ஔவை) 'உறைகால் மாறிய' (பெரும்பாண். 291); என்ற இடத்துத் துளிகால் விழுதல் தவிர்ந்த என்று நச்சினார்க்கினியர் உரை கூறுதல் காண்க. மால் - மயக்கம்; 'நாராயண னெடுமாலாகினன்' (தனிப்பா. கம்பர்); போலும் - ஒப்பில் போலி.

பி - ம். 1. விழுந்தழுந்தாதமுன்.

2. அவன்.

3. காட்சியர்.

4. ஆல் விழுந்துனிர் போல, மால் விழுந்துனர் போல, ஈால் விழுந்தளி போல; மயங்குவிர், மயங்கினிர். 131

3364. ஆயி ரம்பெரு வெள்ள மரைபடத்
தேய நிற்பது பின்னினி யென்செயப்
பாயு முற்றுட னேயெனப் பன்னினுன்.
நாய கற்கொ ருதவியை நல்குவான்.

'ஆயிரம் பெரு வெள்ளம் - ஆயிரம் பெரு வெள்ளமாகிய படை, அரைபட - (சரங்களால்) அரைக்கப்படுதலினுல், தேய நிற்பது - அழிய நிற்பதாகும்; இனி பின் - இஃது அழிந்த பின்னர், என் செய - என்ன செய்ய வேண்டி யுள்ளது? (ஆதலின்) உடனே - உடனடியாக, உற்று - மன உறுதி பெற்று, பாயும் - இராமன்மீது பாயுங்கள்', என - என்று, நாயகற்கு ஓர் உதவியை நல்குவான் பன்னினுன் - (தன்) தலைவற்கு ஓர் உதவியைச் செய்வானுய்க் கூறினுன். (வன்னி).

அரைபடுதல் - துகைக்கப்படுதல். நாயகன் - தலைவன்; 'நாயகன் தூதனும் விரைவினண்ணினுன்' (சுந்தர. 390).

பி - ம். 1. அரைப்பட, அடிப்பட.

3. தேயில்; பின்பினியென் செயப், புண்ணிலிச் சேயகை.

4. 'காய மித்தனை யும்மவன் மேற்செல, பாயு முற்றுட னேயெனப் பன்னினுன்'. 132

## அரக்கர் பலவகைப் படைகளைப் பொழிய இராமபிரான் சரமழை பெய்தல்

3365. உற்று ருத்தெழு வெள்ள முடன்றெழாச்
சுற்று முற்றும் வளைந்தன தூவின
ஒற்றை மால்வரை மேலுயர் தாரைகள்
பற்றி மேகம் பொழிந்தெனப் பல்படை.

உற்று - பொருந்தி, உருத்து எழு - சினந்து கிளம்புகின்ற, வெள்ளம் - (அரக்கர் படை) வெள்ளமானது, உடன்று எழா - மாறு கொண்டெழுந்து, சுற்று முற்றும் வளைந்தன - சுற்றிலும் முழுதும் வளைந்தனவாய், ஒற்றை மால்வரை மேல் - ஒரு பெரிய மலைமீது, மேகம் பற்றி - மேகங்கள் சூழ்ந்து, உயர் தாரைகள் பொழிந்தென - மிக்க நீர்த்தாரைகளை வருடித்தன போல, பல்படை தூவின - பல படைக்கலங்களை வாரியிறைத்தன.

மழைத் தாரைகள் வீசப்பட்டு நிறையும் படைக்கலத்திற்கு உவமை. எழா - எழுந்து, செய்யா என்னும் வாய்பாடு. சுற்று முற்றும் : என்பதே ஓர் தொடர். பல்படை தூவின என்க. தாரைகள் : 'வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்' (பால. ஆற்று. 4) பொழிந்தன - பொழிந்தது என.

பி - ம். 1. ஒருத்து, ஒறுத்து ; ஒரு வெள்ளம்.
2. வளைத்தவர், வளைந்தனர் ; தூவினர்.
3. போலுயர்.
4. பொழிந்தன. 133

இச் செய்யுள் ஓர் பிரதியிலில்லை.

3366. குறித்தெ றிந்தன வெய்தன கூற்றுறத்
தறித்துத் தேருங் களிறுந் தரைப்பட
மறித்த வாசி துணித்தவர் மாப்படை
தெறித்துச் சிந்தச் சரமழை சிந்தினன்

குறித்து எறிந்தன - இராக்கதர் குறி பார்த்து வீசினவற்றையும், எய்தன - விடுத்தவற்றையும், கூறு உற - பல துண்டுகளாக, தறித்து - வெட்டி, தேரும் களிறும் தரைபட - தேரும் வேழங்களும் பூமியிற் படவும், மறித்த - மடக்கிய, வாசி - குதிரைகளை, துணித்து - சேதித்து, அவர் மா படை - அக் குதிரையி லேறியவரின் பெரிய படைகள், தெறித்து சிந்த - தெறித்துச் சிதறவும், சரமழை - அம்பு மழைகளை, சிந்தினன் - (இராமபிரான்) வாரி யிறைத்தான்.

கூறு உறுதல் - பல துண்டுகளாக அறுக்கப்படுதல். தறித்தல் - வெட்டுதல்; 'தறித்த விந்தனம் தினந்தொறும் தாங்கி' (திருவிளை. விறகு. 14).

பி - ம். 1. குறித்தெழுந்தன ; வெய்யன ; கூறுறத், கூற்றிறத், கூற்றிறந், கூற்றதைத்.

2. தறிந்த தேரும், தரித்த தேருங் ; கறைபட.

3. மறிந்த தேரும் புரவியு மாண்டன. 134

3367. வாய்வி ளித்தெழு பஃறலை வாளியில்
போய்வி ளித்த குருதிகள் பொங்குவ
பேய்க ளிப்ப நடிப்பன பெட்புறும்
தீவி ளித்திடு தீப நிகர்த்தவால்.

வாய் விளித்து - வாயினால் ஒலி செய்து கொண்டு, எழு - பாய்ந்து செல்கின்ற, பல்தலை வாளியில் போய் - பல தலைகளை யுடைய சரங்கள் சென்றுபாய்வதால், விளித்த - பேரிரைச்சலுடன் கூடி, இறந்துபட்டவருடைய, குருதிகள் - உதிரங்கள், பொங்குவ - பொங்கி எழுவன ஆயின ; (அங்குப்) பேய்களிப்ப - பேய்கள் மகிழ, நடிப்பன-நடிப்பவற்றின், தீ விளித்திடும் - அழைக்கும் (வாயிற் காணப்படும்) நெருப்பு, பெட்பு உறும் தீபம் நிகர்த்த - விரும்பப்படும் கலங்கரை விளக்கத்தை ஒத்தன. ஆல் : அசை.

உதிரப் பெருக்கைக் கண்டு அப் பெருக்கின் கரையில் பாடி நடிக்கின்ற கொள்ளிவாய்ப் பிசாசுகளின் வாயில் காணப்படும் தீ, திசை தவறாது வந்து கரை சேருமாறு மரக்கலங்களை அழைக்கும் கலங்கரை விளக்கம் ஒத்தது. அலைகடலில் பன்னாள் உழன்று திரியும் கலங்களைக் கரைகாட்டி அழைக்கும் விளக்கம் ஆதலின் பெட்புறும் எனப்பட்டது. கலம் - மரக்கலம். கரைதல் - அழைத்தல். தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. விளித்தல் - அழைத்தல்; 'கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்' (குறள். 894). இரண்டாமடியில் : விளிந்த என்பது விளித்த என நின்றது.

பி - ம். 1. வாய் விரித்து ; எழ ; பொன்றலை.

3. விளிப்ப, களிப்பு ; நடப்பன ; வேட்புறும்.

4. விளிப்புறு, விளித்தன, விளிப்பன. 135

3368. நெய்கொள் சோரி நிறைந்த நெடுங்கடல்
செய்ய வாடைய ளன்னசெஞ் சாந்தினள்
வைய மங்கை பொலிந்தனண் மங்கலச்
செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள்.

நெய் கொள் - நிணத்துடன் கூடிய, சோரி - உதிரத்தால், நிறைந்த நெடு கடல் - நிறைந்த பெருங் கடலாகிய, செய்ய ஆடையள் - செந்நிறமான ஆடையை உடுத்தவளும், அன்ன - அதே நிறம் கொண்ட, செம் சாந்தினள் - செஞ் சாந்தினைப் பூசிக் கொண்டிருப்பவளுமான, வையம் மங்கை - பூமியாகிய மங்கை, மங்கலம் செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள் - மங்கல நாளில் மேற்கொள்ளும் செந்நிறக் கோலம் தரித்தா லொத்த செய்கையை உடையவளாய், பொலிந்தனள் - விளங்கினாள்.

வையம் மங்கை - நில மடந்தை என்று கூறுவது மரபு; 'நிலமென்னும் நல்லாள்' (குறள். 640) என்றது காண்க. 'நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ' (பால. நகரப் : 2): செஞ் சாந்து; 'செஞ் சாந்தெறியினும் செத்தினும் போழினும், நெஞ்சோர்ந் தோடா நிலைமை' (தொல். மெய்ப்பாட்); புனைந்தாலன்ன என்பது புனைந்தன்ன என நின்றது; அரக்கர் அனைவரும் உதிர வெள்ளத்தில் கிடந்தாராக, வைய மங்கை மங்கலச் செய்ய கோலம் கொண்டமை: அறத்தினுடன் மாறுபட்ட பொல்லாத இராக்கதர்கள் ஒழிந்து நானிலம் நலம் பெற்றமையின் என்க. மற்றும் அரக்கர்கள் தமது அளவிறந்த கொடுமையால், பூமிக்குப் பாரமா யிருந்தவர்கள் ஒழிந்ததுபற்றி யுண்டான மகிழ்ச்சியுமாம்; இராமன் கண்ணன் முதலானவர்களின் அவதாரம். பூபாரம் தீர்க்க என்பது யாரும் அறிவர். 'பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா' (வில்லி பா. கிருட். தூது. 34) என்றது காண்க.

பி - ம். 1. பெருங்கடல்.
2 ஐய; செந்தாளினள்.
4. புனைந்தனன்.

3369. உப்புத் தேனுநெய் யொண்டயிர் பால்கரும்
பப்புத் தானென் றுரைத்தன வாழிகள்
துப்புப் போற்குரு தீப்புனல் சுற்றலால்
தப்பிற் றவ்வுரை யின்றோர் தனுவினால்.

உப்பு தேன் நெய் ஒண்தயிர் பால் கரும்பு அப்பு என்று உரைத்தன ஆழிகள் - உப்பு தேன் நெய் ஒள்ளிய தயிர் பால் கருப்பஞ்சாறு, சுத்தநீர் என்று வகுத்துக் கூறப்பட்ட ஏழு கடல் களும், துப்பு போல் குருதி புனல் - பவழம் போன்றுள்ள, (செந் நிறம் வாய்ந்த) உதிர நீர், சுற்றலால் - எங்கும் சூழ்தலால், இன்று - இப்பொழுது, ஓர் தனுவினால் - ஒரு வில்லினால், (ஏழு கடல்கள் உள்ளன), (என்ற) அவ் உரை தப்பிற்று-(என்ற) அந்த வார்த்தை பிழைத்தது. தான் : அசை.

தேனு : உ சாரியை, ஏழு கடல்கள். கிட்கிந்தா. ஆழி : கடல்; ஆழ்ந்திருப்பது பற்றி வந்த காரணக் குறி. குருதிக்குத் துப்பு உவமை; 'பவளம் சொரி தருபைபோல்' (களவழி. 14); அவ்வுரை தப்பிற்று என்றது : வெவ்வேறாக ஏழு கடல்கள் உண்டென்ற புராணக் கூற்றுக்கு மாறாக, எல்லாக் கடல்களுமே உதிரக் கடல் களாயின என்றவாறு. துப்பு - பவளம்; 'துப்பினாற் செய்த' (சுந்தர. 337); தப்புதல் - பிழைத்தல்; 'தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமியாதே' (சுந்தர. 460); தனு - வில்; 'தனு வன்றித் துணையில்லான் தருமத்தின் கவசத்தான்' (பால. குலமுறை. 14).

பி - ம். 1. தேன்மது.
2. உரைப்பன.
3. உற்றலால்.
4. தனுவினே.



3370. ஒன்று மேதொடை கோலொரு கோடிகள்
சென்று பாய்வன திங்க ளிளம்பிறை
அன்று போலென லாகிய தச்சிலை
என்று மாள்வ ரெதிர்த்த விராக்கதர்.

தொடை ஒன்றுமே - தொடுத்துவிடுவது ஒரே தடவைதான், கோல் - அம்புகளோ, ஒரு கோடிகள் சென்று பாய்வன - ஒரு கோடிகள் சென்று பாய்வன; அ சிலை - (அந்த இராமபிரானுடைய) அந்த வில், அன்றுபோல் இளம் பிறை திங்கள் என - அன்று தோன்றிய இளம் பிறைச் சந்திரன் என்னுமாறு, ஆகியது - வளைந்துள்ளது, (இங்ஙனம் இருப்பினும்), எதிர்த்த இராக்கதர் என்று மாள்வர் - எதிர்த்த அரக்கர்கள் என்று இறந்து ஒழிவரோ ?

ஒரே தொடுப்பில் ஒரு கோடி யம்புகள் வெளிப்படுமாறு இராமபிரான் வில் வளைத்து நின்ருன் என்பது கருத்து. 'உற்பத்தியயனே யொக்கும் ஓடும் போதரியே யொக்கும்' (யுத்த. 1237) ; என்ற செய்யுள் இங்கே காணத்தகும்.

பி - ம். 3. அன்றுபோல் வனவாகிய ; போலவுமாகியது ; இச்சிலை.
4. மாள்வது ; எதிர்ந்த. 138

வேறு

அரக்கர் படை இராமபிரான் சரத்தாற் பட்டமை

3371. எடுத்தவ ரிரைத்தவ ரெறிந்தவர்
செறிந்தவர் மறங்கொ டெதிரே
தடுத்தவர் சலித்தவர் சரிந்தவர்
பிரிந்தவர் தனிக்க ளிறுபோல்
கடுத்தவர் கலித்தவர் கறுத்தவர்
செறுத்தவர் கலந்து சரமேல்
தொடுத்தவர் துணிந்தவர் தொடர்ந்தனர்
கிடந்தனர் துரந்த கணையால்.

எடுத்தவர் - (படைக் கருவிகளை) எடுத்தவரும், இரைத்தவர் - (போரில் ஈடுபட்டுள்ள மகிழ்ச்சியால்) பெருங் கூச்சலிட்டவர்களும், செறிந்தவர் - (இராமபிரானை) நெருங்கியவராய், எறிந்தவர் - (ஆயுதங்களை) வீசினவரும், மறம் கொடு - வீரப் பான்மையோடு, எதிரே - எதிர்த்து வந்து, தடுத்தவர் - இராமபிரான் விடுத்த வாளிகளைத் தடுத்தவரும், சலித்தவர் - மனம் சலித்தவரும், சரிந்தவர் பிரிந்தவர் - (முன்னர்த்) தோல்வியுற்றுப் பிரிந்து போனவர்களும், தனி

களிறு போல் - தனித்த மதயானை போன்று, கடுத்தவர் - விசை கொண்டவரும், கலித்தவர் - செருக்கினவரும், கறுத்தவர்-வெகுளியுற்றவரும், செறுத்தவர் - சீறியவராய், கலந்து - நெருங்கி வந்து, சரம் மேல் தொடுத்தவர் - அம்பினை மேலே தொடுத்தவரும், (ஆகிய அனைவரும்) துரந்த கணையால் - (இராமபிரான்) செலுத்திய அம்புகளினால், துணிந்தவர் - துண்டு பட்டவராய், தொடர்ந்தனர் கிடந்தனர் - வரிசையாகக் கீழே கிடந்தனர்.

இரைத்தல்: 'இரைத்த மறை நான்கினொடு' (ஆரணிய. 160); இச் செய்யுட்கண் உள்ள கவிஞரின் வாக்கு வளம் காண்க. சலித்தல் - தளர்தல்; 'சலித்த காலையி லிமையவ ருலகெலாம் சலித்த' (யுத்த. 1141); 'மாதாவுடல் சலித்தாள் வல்வினையேன் கால் சலித்தேன்' (பட்டினத்தார் பாடல்) சரிந்தனர் - தோல்வியுற்று இறந்தவர். கலித்தல்; செருக்குதல்; 'சுறவு கலித்த புலவுநீர்' (மதுரைக் காஞ்சி. 112); 'கலிமயிலகவும்' (நெடுநல். 98), 'கருந் தொழிற் கலிமாக்கள்' (பட்டினப். 62); கறுத்தவர் - சினந்தவர்; 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள்' (தொல். சொல். உரி. 76).

பி - ம். 1. எடுத்தவணிரைத்தவர், எறிந்தவர் ரெதிர்ந்தவர், எதிர்ந்தவ ரெதிர்ந்தவர்; எறிந்தவர் செதிர்ந்தவர்.

2. கலித்தவ ரெதிர்ந்தவர், சரிந்தவரிருந்தவர்.

3. கவிந்தவர்: செறுத்தவரிறுத்தவர்; கவர்ந்து.

4. துணித்தனர், துணித்தவர், தொடர்ந்தவர், தொடர்ந்திலர். 139

3372. தொடுப்பது சுடர்ப்பகழி யாயிர
நிரைத்தவை துரந்த துறைபோய்ப்
படுப்பது வயப்பகழி யாயிரரை
யன்றுபதி னாயி ரவரைக்
கடுப்பது கருத்துமது கட்புலன்
மனங்கருதல் கல்வி யிலவேல்
எடுப்பது படப்பொருவ தன்றியிவர்
செய்வதொரு நன்றி யுளதோ.

தொடுப்பது-விடுப்பது, சுடர்பகழி ஆயிரம்-ஒளிசெறிந்த அம்புகள் ஆயிரமாகும்; நிரைத்தவை-வரிசையான அவை, துரந்த துறை

போய் - செலுத்தப்பட்ட துறையிற் சென்று, படுப்பது-கொல்வது, வயப்பகழி - வெற்றி பொருந்திய அம்புகளைக் கொண்ட, ஆயிரரை அன்று - ஆயிரம் வீரரை அன்று; பதினாயிரவரை - பதினாயிர வரை ஆகும்; அது கடுப்பு - (அந்த அம்பின்) வேகம் அத் தகையது; அது கருத்தும் - (அந்த அம்பை ஏவியவனின்) மனோ பாவமும் அவ்வாறானதே; கண் புலன் மனம் கருதல் கல்வி இல - கண்ணாகிய இந்திரியமும், (ஆறாவது இந்திரியமான) மனமும் (அந்தச் சரங்களின் வேகத்தைக்) கருதுதற்கும் (போதுமான) கல்வியுடைய அல்ல; வேல் எடுப்பது - (இந்த இராக்கதர்கள் தாம் ஏற்றுள்ள) வேலை உயர்த்துவது; பட பொருவது அன்றி - தாம் இறக்குமாறு பொருவது அல்லாமல், இவர் செய்வது ஒரு நன்றி உளதோ - இவர் (மாறாகச்) செய்வதற்கு ஒரு நற் செயலும் இருக்கின்றதோ? ஓகாரம் வினா; எதிர்மறைப் பொருளில் வந்தது.

அது கருத்தும் : கருத்தும் அது என்க. கடுப்பது கட்புலனிற் கும் கருத்தினை மனத்திற்கும் நிரை நிரையாகக் கொள்க. வேகம் கண்ணுக்குப் புலனாவதின்று; விடுத்தவர் கருத்தும் மனத்தால் ஆராயும் தரத்ததன்று. கட்புலன் : 'கட்புலனால் நோக்குவார்' (திருமுரு. 3 உரை); நன்றி - உதவியன்று; நல்ல செயல் என்க.

பா - ம். 1. நினைந்தவது; துறந்த, துரந்து.

2. வயப்படைஞர், வயப்பகைஞர்.

3. கையினயில் வேல், கல்வியிற்றதுவே.

4. அடுப்பது, படுப்பது; பெறுவது; அவர் செய்வதொரு செய்கை யுளவோ. 1.0

3373. தூசியொடு நெற்றியிரு கையினெடு
பேரணி கடைக்குழை தொகுத்
தூசிநுழை யாவகை சரத்தணி
வகுக்குமவை யுண்ணு முயிரை
ஆசைகளை யுற்றுருவு மப்புறமு
மோடும தனிப்பு றமுளார்
ஈசனெதி ருற்றுகுவ தல்லதிகன்
முற்றுவதொர் கொற்ற மெவனோ.

தூசியொடு நெற்றி - முன்னணியும் நெற்றியும், இருகையினொடு - இரு பக்கங்களிலும், (இடையேயுள்ள) பேர் அணி கடைகுழை - பேரணியும் பின் அணியும், தொகுத்து - (ஆகிய இவற்றை) ஒன்று கூட்டி, ஊசி நுழையா வகை - ஊசியும் உட்புகாத வண்ணம், சரத்து அணி வகுக்கும் - அம்புகளினால் அணியை வகுப்பவனாயினன் (இராமபிரான்); அவை - அந்தச் சரங்கள், உயிரை உண்ணும் - (அரக்கரின்) உயிரைப் பருகும்; ஆசைகளை உற்று உருவும் - திசைகளிற் பொருந்தி ஊடுருவிச் செல்லும்; அப்புறமும் ஓடும் - திசைகட்கு அப்பாலும் விரையும்; அதன் - அந்த அம்புக்கு (இலக்கான), இபுறம் உளார் - இப்புறமுள்ள அரக்கர், ஈசன் - இறைவனாகிய இராமபிரானுக்கு, எதிர் உற்று - எதிராகப் பொருந்தி, உகுவது அல்லது - உயிர் சிந்துவதன்றி, இகல் முற்றுவது ஓர் கொற்றம் எவன் - வலிமை மிக்குச் செய்வதாகிய ஒரு வெற்றியென்பது ஏது? ஓகாரம் வினா.

இந்நிலையில் அரக்கர் செல்வது அரிது என்றபடி. தூசி: முந்துற்றுப் பொருபடை; 'தூசியு மிரண்டு கையும் நெற்றியும்' (யுத்த. 1871); நெற்றி: முன்படைத் தலைமை; 'நெற்றியில் அரக்கர் பதிசெல்ல' (யுத்த. 690); கடைக்குழை: இதனைக் கூழை என்றும் வழங்குவர்; ஆசை: திசை; 'ஆசை சுமந்த நெடுங்கரி யன்னார்' (ஆரணிய. 1062); ஈசன்: இங்கு இராமபிரான்.

பி - ம். 1. கடைக்குழை வகுத்து.
2. நுழையாவெகு; வகுக்கும்வகை யுண்ணுமுயிரை, வகுத்து நிரை யுண்ணு நசையால்.
3. ஆசைதனை.
4. உற்றுருவப்; இல்லை.

141

3374. ஊனகு வடிக்கணைக ளூழியன
லொத்தன வுலந்த வுலவைக்
கானக நிகர்த்தன ரரக்கர்மலை
யொத்தன களித்த மதமா
மானவன் வயப்பகழி வீசுவலை
யொத்தன வளைப்புன லுள்வாழ்
மீனகுல மொத்தன கடற்படை
யினத்தொடும் விளிந்து றுதலால்.

வான் நகு - வானுடன் ஒளிர்கின்ற, வடிகணைகள் - கூரிய வாளிகள், ஊழி அனல் ஒத்தன - யுகமுடிவில் எழும் தீயை ஒத்தன; அரக்கர் - அரக்கர்கள், உலந்த உலவை கானகம் நிகர்த்தனர் - (அவ்வூழித் தீயால்) அழிந்து ஒழிந்த மரத்தொகுதிகளையுடைய காட்டை ஒத்தனர்; களித்த மதமா - களிப்பு மிக்க மத யானைகள், மலை ஒத்தன - மலைகளை நிகர்த்தன; (அல்லாமலும்), மானவன் - மநுவழியில் தோன்றியவனான இராமபிரானுடைய, வயம் பகழி - வலியமைந்த வாளிகள், வீசு வலை ஒத்தன - வீசிய வலையை யொத்தன; கடல் படை - கடல்போன்று பரந்த அரக்கர் சேனை, இனத்தொடும் விளிந்துறுதலால் - இனத்தொடும் அழிந்து பட்டதால், வளை புனலுள் வாழ் - உலகினை வளைத்து நின்ற கடல் நீரில் வதிவனவாகி (அவ்வலைக்கண் சிக்கிய) மீனம்குலம் ஒத்தன - மீன் கூட்டத்தை ஒத்தன.

ஊழியனல்: வடவைத்தீ; உலவை: வற்றிய மரம். கானகம் - காடு; 'காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட, பாதகம்' (நளவெண். 335); மானவன்: மனுவழியில் வந்த இராமபிரான்; தத்திதாந்தப்பதம். வளைப் புனல் சங்குகளைத் தன்னிடம் கொண்ட கடல் எனினுமாம். மீனகுலம்: வடசொற்றொடர்; விளிதல்: இறத்தல். 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில், தீமை புரிந்தொழுகு வார்' (குறள். 143).

பி - ம். 2. கதமா.

3. வளைக்குளுளவா, வளைப்புளுலவா, வயப்புரவிவாய்.

4. ஒத்தது, ஒத்தனர்; அறுநலால், இறுதலால். 142

3375. ஊழியிறு திக்கடுகு மாருதமு
மொத்தன விராம னுடனே
பூழியென வுக்குதிரு மால்வரைக
ளொத்தன ரரக்கர் பொருவார்
ஏழுலகு முற்றுயிர்கள் யாவையு
முருக்கியிறு திக்க ணின்வரும்
ஆழியையு மொத்தனனம் மன்னுயிரு
மொத்தன ரலைக்கு நிருதர்.

இராமன் - இராமபிரான், ஊழி இறுதி கடுகும் மாருதமும் ஒத்தனன் - யுகத்தின் முடிவில் வேகமுடன் வீசுகின்ற சண்ட மாருதத்தையும் ஒத்தான்; (அங்ஙனம் பெருங்காற்று வீசுதலின்), உடனே - உடனடியாக, பூழி என உக்கு உதிரும் மால்வரைகள் ஒத்தனர் - துகள்போன்று சிந்தி உதிர்கின்ற பெரிய மலைகளை ஒத்தனர், பொருவார் அரக்கர் - (இராமபிரானுடன் பொருபவரான) அரக்கர்கள்; (அல்லாமலும் இராமபிரான்) ஏழ் உலகும் உற்று - ஏழு உலகங்களையும் பொருந்தி, உயிர்கள் யாவையும் முருக்கி - எல்லாவுயிர்களையும் அழித்து, இறுதிக்கண்ணின் வரும் - யுகமுடிவில் பொங்கி எழுகின்ற, ஆழியையும் ஒத்தனன் - கடலையும் நிகர்த்தனன்; அலைக்கும் நிருதர் - (அவ் விராமபிரானால்) வருத்தப்படுகின்ற இராக்கதர், அமன் உயிரும் ஒத்தனர் - அந்த நிலைபெற்ற உயிர்களையும் ஒத்தனர்.

பூழி - புழுதி; 'ஊழியிற் பட்டகாலின் உலகங்கள் பட்டா லொப்பப், பூழியிற் பட்டு' (யுத்த. 1381); உக்கு உதிரும் எனப் பிரிக்க. பிரளய காலக்கடல், இராமபிரானுக்கும் அழிந்த அரக்கர்கள் அக்கடலால் அழிக்கப்பெறும் உயிர்கட்கும் உவமை. முருக்குதல் - அழித்தல்; 'ஞாலங்காவலர் தோள்வலி முருக்கி' (புறநா. 18); 'மைந்துடை மல்லன் மதவலி மூருக்கி' (புறநா. 80); உடல் அழிவதாக அதனகத்துக் குடிகொள்ளும் உயிர் அநாதியும் அழிவில்லாதது மாகலின் மன்னுயிர் எனப்பட்டது. உயிரின் அழியாத இயல்பினை; (பகவற்கீதை. சாங்கிய யோகம், ச்லோகம். 23—29.ல்) காண்க. மன்னுயிர் 'மன்னுயிரெல்லாம் மண்ணாள் வேந்தன் தன்னுயிரென்னும்' (மணி. 7 : 11-12).

பி - ம். 1. இராமனுழையே.
2. மால்வரையும்; பொருதார்.
3. ஏழுலகு மொத்து; முருக்கும், ஒறுக்கும், முறுக்கி.
4. இராமனுயிரொத்தனராக்கர் மலைவார். 

3376. மூலமுத லாயிடையு மாயிறுதி
யாயெவையு முற்று முயலுங்
காலமென லாயினனி ராமனவ்வ
ரக்கர்கடை நாளில் விளியுங்

கூலமில் சராசர மனைத்தினையு
மொத்தனர் குரைக டலெழும்
ஆலமென லாயினனி ராமனவர்
மீனமென லாயி னர்களால்.

இராமன்-இராமபிரான், மூலம் முதலாய் - முதற் காரணமாயிருந்து, இடையுமாய் - நடுவுமாய், இறுதி ஆய் - முடிவுமாய், எவையும்-(சரம் அசரம் ஆன) எல்லாப் பொருளும். முற்றும்-முடிவடைதற்கு இடனாகி, முயலும் - முயல்கின்ற, காலம் எனல் ஆயினன் - யுகமுடிவு காலம் என்று பகர்தற்கும் ஏற்றவனாயினன்; அவ் அரக்கர்-அந்த இராக்கதர்கள், கடை நாளில்-யுக இறுதியில், விளியும் - இறக்கின்ற, கூலம் இல்-வரம்பற்ற, சர அசரம் அனைத்தினையும் ஒத்தனர்-இயங்கு திணைப்பொருள் நிலத்திணைப் பொருள் என்ற எல்லாவற்றையும் ஒத்தனர்; குரை கடல் எழும்-ஒலிக்கின்ற கடற்கண் தோன்றிய, ஆலம் எனல் ஆயினன் இராமன்-ஆலகால விடம் ஒத்து நின்றனன் இராமபிரான்; அவர் - அந்த அரக்கர்கள், மீனம் எனல் ஆயினர்கள் - (அந்த விடத்தால் இறந்துபட்ட) மீன் என்று கூறுதற்கு ஏற்றவராயினர். ஆல், அசை.

முதல் அடிக்கு: (ஒப்பு) 'மூலமு நடுவுமீறு மில்லதோர் மும்மைத்தாய, காலமுங் கணக்குநீத்த காரணன்' (சுந்தர. 1122); கூலம்: எல்லை; வரம்பு. சர அசரம்: சராசரம்; வடமொழி தீர்க்க சந்தி; குரைகடல். 'கோக்கண்டு மன்னர் குரை கடல் புக்கிலர்' (தனிப்பா.) ஆலம்: விடம். 'ஆலம்பார்த்துண்டவன் போல், ஆற்றல்' (சுந்தர. 317); 'ஆலத்தினாலமிர் தாக்கிய கோன்' (திருக்கோவை. 27).

பி - ம். 1. முற்று முறலும்.
2. இராகவனரக்கர்.
3. குரைக்கடல்.
4. ஆயின வவ்விரன். 144

3377. வஞ்சவினை செய்துநெடு மன்றில்வள
முண்டுகரி பொய்க்கு மறமார்
நெஞ்சமுடை யோர்கள்குல மொத்தனர
ரக்கரற மொக்கு நெடியோன்

நஞ்சநெடு நீரினையு மொத்தன
னடுத்ததனை நக்கி னரையும்
பஞ்சமுறு நாளில்வறி யோர்களையு
மொத்தன ரரக்கர் படுவார்.

வஞ்சம் வினை செய்து - வஞ்சனைமிக்க செயல்களைப் புரிந்து, நெடு மன்றில் - பெருமை சான்ற நீதி மன்றத்தில், வளம் உண்டு - வழியில்லாத வழியில் (பொருளைப் பெற்று), கரிபொய்க்கும்-பொய்ச் சாட்சி புகல்கின்ற, மறம் ஆர் - பாவச் செயல் அமைந்த, நெஞ்சம் உடையோர்கள் - மனத்தை உடையவர்களின், குலம் ஒத்தனர் - குலத்தை நிகர்த்தனர், அரக்கர் - இராக்கதர்கள் ; நெடியோன் - பெருமை சான்ற இராமபிரான், அறம் ஒக்கும் - (அந்தக் குலத்தை யொழிக்கும்) தருமதேவதையை ஒப்பவன் ஆனான் ; (அல்லா மலும்) இராமபிரான், நஞ்சம் நெடு நீரினையும் ஒத்தனன் - விடங் கலந்த மிக்க நீரினையும் ஒத்தனன் ; அதனை அடுத்து நக்கினரை யும் - அதனை அடுத்து நக்கினவரையும், பஞ்சம் உறு நாளில் வறியோர்களையும், ஒத்தனர் அரக்கர் - பஞ்சம் வந்த காலத்து வறியோர்களையும் ஒத்தவராய் அரக்கர் ; படுவார் - மரிப்ப வரானார்கள்.

மன்றிற்கரிபொய்த்தவர் குலத்துடன் அழிவர் என்பது இங்கே வற்புறுத்தப்பட்டது. 'நெடுமன்றில் வளமுண்டு கரி பொய்த்தல் : 'மைக்கரு மனத்தொருவஞ்சன் மாண்பிலன், பொய் கரி கூறிய கொடுஞ் சொற்போலவே' (ஆரணிய. 485); அதன் உரையும். 'பொய்க்கரி புகலும் புன்கணார், குலங்களி னவிந்தனர்' (சுந்தர. 808); 'மொழியிற் பொய்த்த சான்றவன் குலமென' (யுத்த. 555); 'கொன்றுண்பான் நாச்சரம், கொடுங்கரிபோ வானுச்சாம்' (சிறுபஞ்ச. 10); 'வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே, பாதாள மூலி படருமே, மூதேவி, சென்றிருந்து வாழ் வளே, சேடன் குடிபுகுமே, மன்றோரம் சொன்னார்மனை' (நல்வழி. 23); என்பனவும் காண்க. நெடியோன் - திருமாலின் அமிசமான இராமபிரான் ; நெடியோன் குன்றமும். கலித். 34, 10. (ஒப்பு) 'செம்மையினிகந் தொரீஇ இப்பொருள் செய்வார்க் கப்பொருள், இம்மையு மறுமையும் பகையாவதறியாயோ' (கலித். 14, ); பஞ்ச முறுநாளில் வறியோர் - பஞ்சமில்லாத காலமெனின் சிலரேனும்

வேண்டுவ தளிப்பவர் இருத்தல் கூடும். வற்கடம் என்னில் முன்னரே வறுமையாற் பீடிக்கப் பட்டவர் பின்னும்புரக்கு நரின் மையின் இறப்பார் என்க.

பி - ம். 1. மன்னில் ; மறமா, மறவன்.
2. ஒத்தநெடியோன்.
3. நக்குநரையும்.
4. நாள் வறுமையோர் கஃயும் ; அவ்வீரர். 145

## இலங்கையிலுள்ளும் புறமும் தெரியாதபடி இரத்த வெள்ளம் தோன்ற அரக்கியர் கலங்கி யலறியோடுதல்

3378. வெள்ளமொரு நூறுபடும் வேலையினவ் .
வேலையுமி லங்கை வெளியும்
பள்ளமொடு மேடுதெரி யாதவகை
சோர்குருதி பம்பி யெழலும்
உள்ளுமதி லும்புறமு மொன்றுமறி
யாதலறி யோடி னர்களாற்
கள்ளநெடு மான்விழிய ரக்கியர்க
லக்கமொடு கால்கள் குலேவார்.

வெள்ளம் ஒரு நூறு படும் வேலையின் - ஒரு நூறு வெள்ளம் சேனை மரிக்கும் தருணத்தில், அவ் வேலையும் - அந்தக் கடலும், இலங்கை வெளியும் - இலங்கையின் வெற்றிடமும், பள்ளமொடு மேடு தெரியாத வகை-பள்ளமும் மேடும் அறிய முடியாதபடி, சோர் குருதி - பெருகுகின்ற உதிரம், பம்பி எழலும் - பரந்து எழுந்த அளவில், கள்ளம் நெடு மான்விழி அரக்கியர் - கள்ளத் தன்மை பொருந்திய, பெரிய மானின் கண்களையொத்த இராக்கத மகளிர், மதில் உள்ளும் புறமும் - மதிலின் உள்ளும் புறமும், ஒன்றும் அறியாது - யாதும் தெரியாமலே, கால்கள் குலேவார் - கால்கள் வலிகுன்றியவராய், கலக்கமொடு - கலக்கத்துடன், அலறி ஓடினர் கள் - அலறிக்கொண்டு ஓடினார்கள். ஆல், அசை.

மருண்ட பார்வையால் மான் உவமை.

பி - ம். 1. நூறெருடிரு நூறுபடும் வேலையின், நூறெருடிரு நூறுபடவேலையும் ; இலங்கை நகரும்.
2. மேடுமறியாதபடி.
3. உள்ள.

146

## நூறுசதகோடி படைத்தலைவர் தாங்கி நிற்றல்

3379. நீங்கினர் நெருங்கினர் முருங்கின
ருலைந்துலகி னீளு மலைபோல்
வீங்கின பெரும்பிணம் விசும்புற
வசும்புபடு சோரி விரிவுற்
றோங்கின நெடும்பரவை யொத்துயர
வெத்திசையு முற்றெ திருறத்
தாங்கினர் படைத்தலைவர் நூறுசத
கோடியர் தடுத்த லரியார்.

(சேனை வீரர்) நெருங்கினர் - நெருங்கிப் போர் புரிந்து, முருங்கினர் உலைந்து நீங்கினர் - அழிந்து உருமாறி (உயிர்) நீங்கப் பெற்றனர்; (அதனால்), உலகில் நீளும் மலைபோல் பெரும்பிணம் விசும்பு உற வீங்கின - உலகிடை நீளும் மலைபோன்ற பெரும் பிணங்கள், வானத்தைச் சென்று தீண்டுமாறு உயர்ந்தன; அசும்பு படு சோரி-பெருக்கெடுத்த உதிரம், விரிவுற்று - அகன்று, நெடு பரவை ஒத்து - நீண்ட கடலை ஒத்து, உயர - உயருமாறு, எ திசையும் உற்று எதிர் உற ஓங்கின - எத்திசையின் எல்லையிலும் சென்று எதிராகப் பொருந்துமாறு ஓங்கி நின்றன; (அவ் வேலையில்), தடுத்தல் அரியார் - தகைத்தற்கு அரியவரான, நூறு சதகோடியர் படைதலைவர் - நூறு சதகோடியரான சேனை அதிபர்கள், தாங்கினர் - (இராமபிரானைத் தடுத்து நின்றனர்.

அசும்பு - இரத்தக் கசிவு அல்லது, ஊற்று; 'அசும்பு விண்ணிடை யடங்கினன்' (யுத்த. 2541); தாங்குதல் - 'தாங்கு திறல் மறவர்' (பு. வெ. மா. காஞ்சி. 16); 'தார் தாங்கி வீழ்ந்தான் தலை' (பு. வெ. மா. காஞ்சி. 11) என்ற இடத்துப்போல என்க.

பி - ம். 1. உலந்து; விழவெருவில், நீளுமலையில்.
2. வீங்கினர்; வருவித்து.
3. ஓங்கினன்; ஒத்தியைவ, இசைவ, எதிர்வுற.
4. தாங்கின; தடுப்பவரியார்.

## படைத்தலைவரும் இராமபிரானும் பொருதமை

3380. தேருமத மாவும்வரை யாளியொடு
வாசிமிகு சீய முதலா
வூருமவை யாவையு நடாயினர்க
டாயினர் களுந்தி னர்களாற்
காருமுரு மேறுமெரி யேறுநிகர்
வெம்படையொ டம்பு கடிதின்
தூரும்வகை தூயினர் துரந்தனர்க
ளெய்தனர் தொடர்ந்த னர்களால்.

(அந்தப் படைத் தலைவர்கள்), தேரும் மதம் மாவும் - தேரும் மதம் பொருந்திய யானையும், வரை யாளியொடு - மலைப்புறத்துள்ள யாளியோடு, வாசி - குதிரையும், மிகு சீயம் - (வலிமை) மிகுந்த சிங்கமும், முதலா - முதலாக, ஊரும் அவை யாவையும் - ஊர்தியாயுள்ள எல்லாவற்றையும், கடாயினர் நடாயினர்கள் உந்தினர்-கடாவி நடத்தி (இராமபிரானை நோக்கிச்) செலுத்தினார்கள்; (அன்றியும்), காரும்-மேகமும், உரும் ஏறும்-பேரிடியும், எரி ஏறும்-பேரனலும், நிகர் - ஒத்த, வெம்படையொடு - கொடிய படைகளுடனே, கடிதின் - விரைவாக, தூரும்வகை தூயினர் - (போர்க்களம்) நிறையும்படி இறைத்தார்கள்; துரந்தனர்கள் எய்தனர் - விரைந்து எய்தவண்ணம், தொடர்ந்தனர்கள் - பின் தொடர்ந்தார்கள். ஆல், அசை.

நடாயினர்கள் - நடத்தினர்.

பி - ம். 1. வயமாவும்; வரையாளியொடு, வரையாளியொடு பாய்புரவி.

2. நடாவினர் கடாவினர்.

3. காருமெதிர் மேனியர்.

4. வீசினர், சிந்தினர், எய்தனரெறிந்தனர், தொடர்ந்தனையரால். 148

3381. வம்மினட வம்மினெதிர் வந்துநும
தாருயிர் வரங்கள் பிறவுந்
தம்மினென வின்னமொழி தந்தெதிர்
பொழிந்தன தடுப்ப ரியவாம்

வெம்மினென வெம்பகழி வேலையென
வேயினனவ் வெய்ய வினையோர்
தம்மின மனைத்தையு முனைந்தெதிர்
தடுத்தனர் தனித்த னியரோ.

(இராமபிரான் அந்தச் சேனைத்தலைவரை நோக்கி), 'வம்மின் - வாருங்கள், அடவம்மின் - (நான்) கொல்லுமாறு வாருங்கள்; எதிர் வந்து - நேராக வந்து, நுமது அருமை உயிர் - உங்களுடைய அருமையான உயிரையும், வரங்கள் - வரங்களையும், பிறவும் - மற்றும் உள்ளவற்றையும், தம்மின் - தந்துவிடுங்கள்'; என - என்று, இன்ன மொழி தந்து - இம்மொழிகளைச் சொல்லிக்கொண்டு, எதிர் பொழிந்தன - எதிர்முகமாகப் பெய்தனவும், தடுப்பு அரிய ஆம் - தடுத்தற்கு அரியனவுமான, வெம்பகழி - கொடிய அம்புகளை, வெம்மின் என - கொடிய மின்னலைப் போலவும், வேலை என - கடலைப் போலவும், ஏயினன் - ஏவினன்; அவ்வெய்ய வினையோர் - அந்தக் கொடிய தொழிலையுடைய படைத்தலைவர், தனி தனி - தனித்தனியே, எதிர் - எதிர் நின்று, தம் இனம் அனைத்தையும் - அந்த அம்புகளின் தொகுதி அனைத்தையும், முனைந்து தடுத்தனர் - மும்முரமாக விலக்கினர். அரோ : அசை.

வம்மின் : 'வம்மின் புலவீர் நும் மெய்வருத்திக் கைசெய் துய்ம்மினோ' (திருவாய். 3, 9 ; 6); ஆருயிர் வரங்கள் : உம்மைத் தொகை. தம்மின் : 'குமரி ஆடிப் போந்தேன், ஒருபிடிசோறு தம்மின்' (தொல். சொல். 15. உரை மேற்கோள்); தாம் குறுகித் 'தம்' என நின்று ஏவல் விகுதியான மின் சேர்ந்து மகர ஒற்று இரட்டித்துத் தம்மின் என நின்றது.

பி - ம். 1. வம்மிடை ; வரங்கள் பலவும்.

2. இன்னமொழி தந்தெதிர் பொழிந்தனர், இன்னமொழி மொழிந்தனர் பொழிந்தனர் ; தடுப்பவரிபார், தடுப்பரியராய்.

3. வன்பகழி ; வேலயில்கள், வேலையென, வேலையின வெல்லையில் வேலையென வம்பினனவ்,

4. முனிந்தெதிர், முனைக்கெதிர் ; தடுத்தன.

இங்கு அதிகப்பாடல் :—

ஈதவர்சொ லக்கயிலை யீசனும்
நகைத்திமைய வர்க்கு மொளிவான்
ஓதலி லரும்பிரம தத்துவ
முதற்கடவுள் யாமு முணரப்
பேதமுற மாயைபல பேணிவினை
யாடுதல்செ யாது பெருமாள்
நீதவுரு வங்கொளுமி ராமனென வேகருதி
நின்ற மொழி பொன்றி விடுமோ.

## தேவர்கள் சிவபிரானைக் கிட்டி வணங்கி, இப்போர் எவ்வாறு ஆகும்? என்று வினவுதல்

3382. அக்கணையை யக்கண மறுத்தனர்
செறுத்திக லரக்க ரடையப்
புக்கணைய லுற்றனர் மறைத்தனர்
புயற்கதிகம் வாளி பொழிவார்
திக்கணை வகுத்தன ரெனச்செல
நெருக்கினர் செருக்கின் மிகையால்
முக்கணனை யுற்றடி வணங்கியிமை
யோரிவை மொழிந்த னர்களால்.

இகல் அரக்கர் அடைய - மாறுபட்ட இராக்கதர்கள் யாவரும், புக்கு அணையல் உற்றனர் - புகுந்து ஒன்றுதலைப் பொருந்தி, அ கணையை - (இராமபிரான்) விடுத்த அந்த அம்புகளை, செறுத்து - சினந்து, அ கணம் - அக் கணத்தில் தானே, அறுத்தனர் - துணித்தொழித்து, புயற்கு அதிகம் - மேகத்தைக் காட்டிலும் மிகுதியான, வாளி - சரங்களை, பொழிவார் - சொரிபவராய், மறைத்தனர் - (இராமபிரானை) மறைத்து, திக்கு அணை வகுத்தனர் என - திசைக்கு ஓர் அணையை வகுத்தாற் போன்று, மிகை செருக்கினால்; மிக்க தருக்கோடு, செல நெருக்கினர் - மிகவும் நெருக்கி நின்றார்கள்; (அக்காலையில்), இமையோர் - தேவர்கள், முக்கணனை - மூன்று விழிகளையுடைய சிவபிரானை, உற்று - அடைந்து, அடி வணங்கி - திருவடிகளைத் தொழுது, இவை மொழிந்தனர்கள் - இவ் வார்த்தைகளைச் சொல்லலானார்கள். மொழிந்ததை அடுத்து வரும் இரண்டு செய்யுட்களில் காண்க. ஆல் : அசை.

அரக்கர் அடைய - அரக்கர் எல்லோரையும், புயற்கு அதிகம் வாளி - மேகம் சொரியும் நீர்த் தாரையினும் மிக்க அம்பு மழை, முக்கணன் - சிவபெருமான், மூன்று கண்கள் - சூரியன் சந்திரன் அங்கி என்பர். 'முக்கணு னெண்கணு முளரியாயிரங்கணும்' (யுத்த. 283); 'முக்கணுன் தடவரை யெடுத்த மொய்ம்பற்கு' (யுத்த. இராவணன் வதை. 148).

பி - ம். 1. அரக்கரடரப், அரக்கர கடாய்ப்.
2. மறைந்தன ; அதிகவாரி.
3. வகுத்தனவெனச் ; சிலர் ; நெருக்க, நெருக்கின் ; மிசையான்.
4. இது. 150

3383. படைத்தலைவ ருற்றொருவர் மும்மடி
யிராவண னெனும்ப டிமையோர்
கிடைத்தன ரவர்க்கொரு கணக்கிலை
வளைத்தனர் கிளர்ந்து லகெலாம்
அடைத்தனர் தெழித்தன ரழித்தனர்
தனித்துள னிராம னவரோ
துடைத்தனரெம் வெற்றியென வுற்றன
ரினிச்செயல் பணித்தி சுடரோய்.

'படை தலைவர் உற்ற - சேனைத் தலைவர்களில் பொருந்திய, ஒருவர் - ஒவ்வொருவரும், மும்மடி இராவணன் எனும்படிமையோர் - இராவணனினும் மும்மடங்கானவர் என்று பகரத்தக்க உருவினர் ; கிடைத்தனர் - (போரில்) கிட்டியவரான, அவர்க்கு ஒரு கணக்கு இலை - அவர்க்கு ஒரு வரம்பில்லை ; வளைத்தனர் கிளர்ந்து - வளைத்துப் பொங்கி, உலகு எலாம் - உலகினிடத்தை எல்லாம், அடைத்தனர் - அடைத்துக் கொண்டு, தெழித்தனர் அழித்தனர் - அதட்டலுடனே அழிக்கத் தொடங்கி யுள்ளனர் ; இராமன் தனித்து உளன் - இராமபிரான் தனித்துள்ளான் ; அவரோ - அவ் வானரர்களோ, எம் வெற்றி துடைத்தனர் - எமது வெற்றியை அழித்துள்ளார், என - என்னுமாறு, உற்றனர் - பொருந்தியவர் ; சுடரோய் - அழல் வண்ணனே ! இனி செயல் பணித்தி - இனி நிகழவிருக்கும் நிகழ்ச்சி யாது, அருள்வாயாக.

மும்மடி - மும்மடங்கு; 'வலிமும்மடி தோற்றினன்' (யுத்த. இராவணன் வதை. 184); 'எரியின் மும்மடி கொடியன சுடுசர மெய்தான்' (யுத்த. 548); படிமை - படிமம், வடிவம்; 'பல் புகழ் நிறுத்த படிமையோன்' (தொல். பாயி.) வளைத்தனர்: முற்றெச்சம். சுடரோய்: தீ வண்ணனான சிவபெருமானை விளித்தது.

பி - ம். 1. பெயரினர், படியிலோர்.

2. கணக்கிலர்: கிளைத்துளகெலாம்.

3. புடைத்தன ரடித்தனர் தெழித்தனர், அடைத்தனர் தெழித்தன ரடர்த்தனர்; தெரித்துளதிராமனவனே.

4. நம் வெற்றி, செய் வெற்றி; உற்றன. 155

3384. எய்தகணை யெய்துவதன் முன்பிடை
யறுத்திவர்க ளேழு லகமும்
மொய்கொள்கணை மாமுகி லெனும்படி
வளைத்தனர் முனிந்த னர்களால்
வைதுகொலி னல்லது மறப்படை
கொடிப்படை கடக்கும் வலிதான்
செய்யதிரு மாலினொ டுனக்குமரி
தென்றனர் திகைத்து விழுவார்.

'எய்த கணை - (இராமபிரான்) விடுத்த அம்பு, எய்துவதன் முன்பு - வந்து சேர்வதற்கு முன்னமே, இடை - நடுவிலேயே, அறுத்து - அந்தக் கணையைத் துணித்துவிட்டு, இவர்கள் - இவ்வரக்கர்கள், ஏழு உலகமும் மொய்கொள் - ஏழு உலகங்களையும் நெருங்குதலைக் கொண்டு, கணை - திரண்ட, மா முகில் எனும்படி - பெரிய மேகம் என்னுமாறு, வளைத்தனர் - சூழ்ந்து கொண்டவராய், முனிந்தனர்கள் - சினம் கொண்டுள்ளார்கள்; வைது கொலின் அல்லது - (இவ்வரக்கர் சேனையைச்), சபித்துக் கொன்றால் கொல்லக் கூடுமே தவிர, மறம் படை - வீரத்தைக் கொண்ட, கொடி படை - காலாட் படையைக் கொண்டு, (எதிர்த்து) கடக்கும் வலி - வெல்லக் கூடிய வலிமை, செய்ய திருமாலினொடு - செவ்விய திருமாலினுடனே, உனக்கும் அரிது - உனக்கும் அருமையானது', என்றனர் - என்று பகர்ந்தவராய், திகைத்து விழுவார் - மனம் திகிலுற்று விழலானார்கள். தான், ஆல்: அசை.

எய்த கணை எய்துவதன் என்ற இடத்து இணை யெதுகை நயம் காண்க. முகில் - பரப்பாலும் நிறத்தாலும் அரக்கர்க்குவமை. வைது கோலின் : 'வைதவை வில் மராமரம்' (பால. பாயிர.) மறம் படை : வீரம் படைத்த, கொடிப் படை : முன்னணியில் கொடி தாங்கிப் படரும் சேனை. 'ஆடு கொடிப்படை சாட' (அயோத்தி. குகப். 22).

பா - ம். 1. முன்படை ; துணித்திவர்கள்.
2. பெய்த கணை ; மொய்த்த கணை ; மாமுகிலினிற் புடை, மாமுகிலெனப் புடை ; பிடித்தனர்கள் போல், உலைத்தனர்களால்.
3. வைத்தகலின்.
4. செய்ததிருமாலுடன் ; விரைவார். 151

## சிவபிரான் இறுத்த விடை

3385. அஞ்சலினி யாங்கவர்க ளெத்தனைவ
ராயிடினு மத்த் னைவரும்
பஞ்சியெரி யுற்றதென வெந்தழிவ
ரிந்தவுரை பண்டு முளதால்
நஞ்சமமிழ் தத்தைநனி வென்றிடினு
நல்லற நடக்கு மதனை
வஞ்சவினை பொய்க்கருமம் வெல்லினுமி
ராமனையம் மாயர் கடவார்.

இனி அஞ்சல் - (நீங்கள்) இனி அஞ்சாதீர்கள், அவர்கள் - அவ்வரக்கர், ஆங்கு - அங்கே, எத்தனைவர் ஆயிடினும் - எத்தனை பேராயிருப்பினும், அத்தனைவரும் - அத்தனைபேர்களும், பஞ்சி எரி உற்றது என - பஞ்சில் தீப்பற்றினாற்போன்று, வெந்து அழிவர் - வெந்தழிவார் ; இந்த உரை பண்டும் உளது - இந்தப் பேச்சு முன்னமே உண்டாயது ; நஞ்சம் - விடமானது, அமிழ்தத்தை நனி வென்றிடினும் - அமுதத்தை மிகவும் வென்றிடினும், நடக்கும் நல் அறம் அதனை - நடைபெறக் கூடிய நல்லறத்தை, வஞ்சம் வினை - வஞ்ச வினையாகிய, பொய் கருமம் வெல்லினும் - பொய்ச் செயல் வென்றிடினும், அம் மாயர் - அந்த மாயச் செயலையுடைய அந்த இராக்கதர்கள், இராமனை - இராமபிரானை, கடவார் - வெல்ல மாட்டார். ஆல் : அசை.

'எத்தனையுளர் - அத்தனைவரும்' (யுத்த. 391); பஞ்சி எரியுறுதல்: முற்றும் அழிதற்கு உவமை. 'நஞ்சமமிழ்தத்தை நனி வென்றிடினும்; (ஒப்பு); 'பாஅல் புளிப்பினும் பகலிருளினும் நாஅல் வேத நெறி திரியினும்' (புறநா. 2); 'வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்' (சுந்தர. 405).

பி - ம். 1. அஞ்சிய யரன் மினவர், அஞ்சியயரேலவர்கள்.

2. பஞ்சில்; அனல்.

3. நலியாதுநனி.

4. வினையைத் தருமம், வினையக் கருமம்; வென்றிடினுமையனை; இவ்வஞ்சர். 153

3386. அரக்கருள ரார்சிலரவ் வீடண
னலாதுலகி னுவி யுடையார்
இரக்கமுள தாகினது நல்லற
மெழுந்துவளர் கின்ற தினிநீர்
கரக்கமுழை தேடியுழல் கின்றிலிர்க
ளின்றொரு கடும்ப கலிலே
குரக்கின்முத னயகனை யாளுடைய
கோளுழுவை கொல்லு மிவரை.

'அவ் வீடணன் அலாது - அந்த விபீடணன் அன்றி, உலகின் - உலகில், ஆவி உடையார் - உயிருடன் கூடியவராகிய, அரக்கர் - அரக்கர் தம்முள், யார் சிலர் உளர் - எந்தச் சிலர் தான் இருக்கின்றனர்? இரக்கம் உளது ஆகின் - இரக்கம் என்பது உள்ளதாயின், அது - அது காரணமாக, நல் அறம் எழுந்து வளர்கின்றது - நல்ல அறம் உயர்ந்து வளர்கின்றது; இனி - இனிமேல், நீர் கரக்க - நீர் ஒளித்துக் கொள்ளுமாறு, முழை தேடி-குகைகளைத் தேடிக் கொண்டு, உழல்கின்றிலிர்கள் - வருந்த வேண்டியதில்லை ஆவீர்கள்; இன்று ஒரு கடும் பகலிலே - இன்றைய ஓர் நடுப் பகலிலே, குரக்கின் முதல் நாயகனை - குரங்குகட்கு முதன்மைத் தலைவனான சுக்கிரீவனை, ஆளுடைய - அடிமையாகவுடைய, கோள் உழுவை - வலி வாய்ந்த புலிபோன்றவனான இராமபிரான், இவரை கொல்லும் - இவரைக் கொல்லுவான்.'

இங்கு உருத்திரமூர்த்தி வீடணனைப் புகழ்ந்தது காண்க; 'கனியுங் காய்களு முளவுள முழையுள கரக்க, மனிதரா ளிினெனி ராக்கதர் ஆளினென் வையம்' (மூலபல. 43) என்று குரக்குச் சேனைத் தலைவர் முன்னர்க் கூறியது காண்க. உழுவை: புலி. 'உழுவைப் போத்தை யுழையுயி ருண்பதே' (யுத்த. இராவணன் சோகப். 17).

பி - ம். 1. ஆர் சிலர்கள்; ஆகிடிலவ்; அலாலுலகிலாவி.
2. ஆகியது, ஆகிறது.
3. நின்றெரு.
4. குரக்கு; நாயகரை; வாளுடைய; அவரை. 154

அதிகப் பாடல்:—

பாறு தொடர்பகழி மாரி நிரைகள்பட
நீறு படுமிரத நிரையி னுடல்தவிர
வேறு படரவடர் விரவு சுடர்வலையம்
மாறு படவுலகின் மலைக ளளறுபட.

## பிரமனும் உருத்திரமூர்த்தி கூறியதை உடன்பட்டுச் சொல்ல அப்போது இராமபிரான் வாளி மழையால் அரக்கர் தலைகளைக் குவித்தல்

3387. என்றுபர மன்பகர நான்முகனு
மன்னபொரு ளேயி சைதலும்
நின்று நிலை யாறினர்கள் வானவரு
மானவனு நேமி யெனலாம்
துன்றுநெடு வாளிமழை மாரியினு
மேலன துரந்து விரைவிற்
கொன்றுகுல மால்வரைகண் மானுதலை
மாமலைகு வித்த னனரோ.

என்று பரமன் பகர - என்று சிவபெருமான் கூற, நான்முகனும் - பிரமதேவனும், அன்ன பொருளே இசைதலும் - அவ்வாறு அவன் கூறிய பொருளையே உடன்பட, வானவரும் - இமையோர்களும், நின்று நிலை ஆறினர்கள் - நிதானித்துக் கலக்கம்

தீர்ந்து மன அமைதி உற்றனர்; மானவனும் - இராமபிரானும், நேமி எனலாம் - ஆழிப்படை போன்று வட்டமாக அமைந்த, துன்று - நெருங்கிய, நெடு வாளி மழை - நீண்ட அம்பு மழையை, மாரியினும் மேலன - மாரியினும் அதிகமாக, தூரந்து - விடுத்து, விரைவில் கொன்று - விரைவாகக் கொன்று, குலமால் வரைகள் மானும் - பெரிய குல மலைகளை ஒத்துள்ள, மா தலை மலை - பெரிய தலை மலைகளை, குவித்தனன் - குவித்தான். அரோ : அசை.

பி - ம். 1. சிவனும்பகர ; இசைத்தலும்.

2. வானவர்கள் ; மானவரின் ; நேமியெனலாத்.

3. வென்றிநடு ; வானினுழை, வாளியவை, வாளியினும், தூளியினும்.

4. மேலவை, குன்று. 155

## வேறு

3388. மகர மறிகடலின் வளையும் வயநிருதர்
சிகர மனையவுடல் சிதறி யிறுவருயிர்
பகர வரியபதம் விரவ வமரர்பழ
நகர மிடமருக நவையர் நலிவுபட.

மகரம் - மகரமீன் நிறைந்த, மறி - அலை மடங்கப் பெற்ற, கடலின் - கடல் போல, வளையும் - இராமபிரானைச் சூழ்ந்து கொண்ட, வயம்-வலிமை வாய்ந்த, நவையர் நிருதர்-குற்றமுடையவரான அரக்கர், (தம்முடைய) உயிர்-ஆன்மா, பகர அரியபதம் விரவ-சொல்லுதற்கரிய (மிகவும் உயர்ந்த) சுவர்க்க பதத்தைப் பொருந்தவும், அமரர் - வானவருடைய, பழ நகரம் - புராதனமான தேவருலகு, இடம் அருக - இடமில்லாமற் போகவும், சிகரம் அனைய உடல் - மலைச் சிகரம் ஒத்த உடல், சிதறி - சிதறுண்டு, நலிவுபட - வருத்தமுற, இறுவர் - இறந்து ஒழிந்தனர்.

மகரம் - கடல்மீன் ; இதனாலேயே ஆழிக்கு மகராலயம் என்று பெயர் வந்தது என்பர். 'மறிகடல் : 'மையோ மரகதமோ மறி கடலோ' (அயோத்தி. கங்கைப். 1) ; உயிர் பகரவரியபதம் விரவ ; இறந்துபட்ட அரக்கர் உயிர்கள் வீர சுவர்க்கம் அடைய. இச் செய்யுட்கண் குற்றெழுத்தே பயின்று வந்தமையின் இதனைக்

குறுஞ் சீர்வண்ணம் என்பர். நவை: குற்றம்; 'நவையனைத்துந் துறந்தவன் ஞடினுன்' (யுத்த. இராவணன் வதை. 190); 'நவை யறுபாகை யன்றி யமுதினை நக்கினுலும்' (யுத்த. 1224).

பி - ம். 1. மகரமெறி ; கடலில்.

2. உருளவுயிர், இரிவருயிர்,

3. அமரர்படி.

4. மருகனணையர். 156

இச் செய்யுளின் பின் 'தினகரனை' என்ற பாடல் சில பிரதி களில் உள்ளது.

3389 உகளு மிவுளிதலை துமிய வுறுகழல்கள்
அகழி யறவலிய தலைக ளறுதலைவர்
துகளி னுடல்கள்விழ வுயிர்கள் சுரருலகின்
மகளிர் வனமுலைகள் தழுவி யகமகிழ.

உறு கழல்கள் - வலிய பாதங்கள், (தாம் வீழ்தலின்) அகழி அற - இலங்கையின் அகழியற்றிட (தூர்ந்து போக). வலிய தலைகள் அறு - (தமது) வலிய சிரங்கள் துணியப் பெற்ற, தலைவர் உடல்கள்- (குதிரைத்) தலைவர்களின் உடல்கள், துகளின் விழ - தூள் போன்று பூமியில் வீழ, உயிர்கள் - அவர்கள் உயிர்கள், சுரர் உல கின் மகளிர் - தேவலோகத்தின் கண் உள்ள மகளிரின், வனம் முலைகள் தழுவி - அழகிய தனங்களை அணைந்து, அகம் மகிழ - மனம் மகிழ்ந்து நிற்க, இவுளி - அவர்கள் ஏறிய குதிரைகள், தலை துமிய உகளும் - தலை துணிபட்டதனுல் துள்ளி விழும்.

உகளும்; 'ஒங்கு பெருஞ் செந்நெல் ஊடு கயலுகள' (திருப் பாவை. 3); வனமுலை; 'வனமுலை, பொறை சுமந்துருகி யிறந்ததோ' (அரிச்சந்திர பு. விவாக.).

பி - ம். 1. புரவிதலை ; உறுதலைகள்.

2. தகளியுற ; தலைவரறுகுவன.

4. மகளிர் இள. 157

இச் செய்யுளின் பின் 'பாறுபட' என்ற செய்யுள் சில பிரதி களில் உள்ளது.

3390. மலையு மறிகடலும் வனமு மருநிலமும்
உலைவி லமரருறை யுலகு முயிர்களொடு
தலையு முடலுமிடை தழுவ தவழ்குருதி
அலையு மரியதொரு திசையு மிலதணுக.

மலையும் - மலைகளிலும், மறி கடலும் - அலைகள் கரைக்கண வந்து மடங்குகின்ற கடல்களிலும், வனமும் - காடுகளிலும், மரு நிலமும் - மருப் பூமியிலும், உலைவு இல் - அழிதலில்லாத, அமரர் உறை உலகும் - தேவர்கள் வதிகின்ற உலகத்திலும், தலையும் உடலும் - (அரக்கர்களின்) தலைகளையும் உடல்களையும், இடை தழுவும் - இடையே தழுவிக் கொண்டு, தவழ் குருதி அலையும் - தவழ்கின்ற உதிரக் கடலும், உயிர்களொடும் அரியது ஒரு திசையும் - உயிர்களும் இல்லாத ஒரு திசையும், அணுக இலது - அணுகுமாறு இலலை.

மறிகடல் ; மூலபல. 156 காண்க.

பி - ம். 1. வறுநிலனும், உறுநிலனும், அறுநிலமும்.
3. தழுவுமிழி.
4. திசையிலவை தருக, திசையுமிலதருகு. 158

அரக்கர் முதல்வர் விளிய வானவர் பூமழை பொழிதல்

.3391. இனைய செருநிகழு மளவி னெதிர்பொருத
வினைய முடைமுதல்வ ரெவரு முடன்விளிய
அனைய படைநெளிய வமரர் சொரிமலர்கள்
நனைய விசையினெழு துவலை மழைகலிய.

இனைய - இப்படிப்பட்ட, செரு நிகழும் அளவின் - போர் நிகழும் போழ்தில், எதிர் பொருத - எதிரே போர் புரிந்த, வினையம் உடை முதல்வர் எவரும் - சூழ்ச்சிமிக்க முதல்வரான அரக்கர் அனைவரும், உடன் விளிய - ஒரு சேர அழிய, அனைய படை நெளிய - (அவர்களின்) அத்தகைய சேனை தத்தளிக்க, அமரர் சொரி மலர்கள் - வானவர் தூவிய மலர்களின், நனைய விசையின் எழு - மொட்டுகளில் உள்ளதும் விசையாக எழுந்ததுமான, துவலை - மதுத் துளிகளின், மழை கலிய - மழை மிக.

அடுத்த கவியுடன் தொடரும்.

பி - ம். 2. உடைய முதலவரும்.

3. அமரரழி குருதி, அமரினழி குருதி.

4. துணையின் ; மழைபொழிய. 159

இச் செய்யுள் சில பிரதிகளில் 'அழகிது' என்ற பாடலுக்குப் பின் உள்ளது.

## மீட்டும் கடும்போர்

3392. இரிய லுறுபடையை நிருத ரிடைவிலகி
எரிகள் சொரியுநெடு விழிய ரிழுதையர்கள்
திரிக திரிகவென வுரறு தெழிகுரலர்
கரிக ளரிகள்பரி கடிதி னெதிர்கடவ.

நிருதர் - அரக்கர், இடை விலகி - நடுவே ஒதுங்கிச் சென்று, இரியல் உறு படையை - நிலைகுலைந்து ஓடத் தொடங்கிய சேனையை அணுகி, எரிகள் சொரியும் நெடு விழியர் - நெருப்பைச் சொரிகின்ற நீண்ட நேத்திரங்களை யுடையவரும், 'இழுதையர்கள் - நல்லறிவற்றவர்களே! திரிக திரிக - திரும்புக திரும்புக', என - என்று, உரறு தெழிகுரலர் - உரத்து அதட்டிக் கூறுகின்ற குரலை யுடையவருமாகி, கரிகள் - வேழங்களையும், அரிகள் - சிங்கங்களை யும், பரி - குதிரைகளையும், கடிதின் எதிர் கடவ - வேகமாக, (இராம பிரான்) எதிரே செலுத்த.

பி - ம். 1. இழுதையர்கள்; அண்மைவிளி எரியகனல் சொரியும்.

3. திரிகையென வுரறுதெழிலர் மிகுகுரலர்.

4. கரிகளரிபரிகள், கரிகள் பரிகளரி ; கவ்வ. 160

3393. உலகு செவிடுபட மழைக ளுதிரவுயர்
அலகின் மலைகுலைய வமரர் தலையதிர
இலகு தொடுபடைக ளிடியொ டுருமனைய
விலகி யதுதிமிரம் வளையும் வகைவிளைய.

உலகு செவிடுபட - உலகு செவிடு படவும், மழைகள் - மேகங்கள், உதிர - கீழே சிதறவும், உயர் - உயர்ந்த, அலகு இல் - அள

வில்லாத, மலை குலைய - மலைகள் நிலை கெட்டுச் சரியவும், அமரர் - தேவர்கள், தலை அதிர - தலை நடுங்கவும், இலகு - ஒளி விடுகின்ற, தொடு படைகள் - கைக்கொண்டு செலுத்தும் போர்க் கருவிகள், இடியொடு உரும் அனைய - இடியுடனே மின்னலை ஒத்தனவாக, (நிலை தடுமாறியோடிய) அரக்கர் படை, திமிரம் வளையும் வகை விளைய - இருள் வளைந்து நிற்கும்வகை நிகழ, விலகியது - (இராம பிரானைச் சூழத்) திரும்பியது.

பி - ம். 1. உயரவுயர்.

3. இலகுகொடு ; உருமலைய.

4. திமிலம் விளையுமதை நலிய, வினையும்வகை விளைய. 161

3394. அழகி தழகிதென வழக னுவகையொடு
பழகு மதிதியரை யெதிர்கொள் பரிசுபட
விழைவி னெதிரவதி ரெரிகொள் விரிபகழி
மழைகள் முறைசொரிய வமரர் மலர்சொரிய.

அழகன் - திருமேனியழகன் ஆன இராமபிரானும், 'அழகிது அழகிது - அழகாகவுள்ளது அழகாகவுள்ளது', என - என்று சொல்லி, உவகையொடு - மன மகிழ்வுடன், பழகும் அதிதியரை - பழகிய அதிதியரை, எதிர்கொள் பரிசுபட - எதிர் ஏற்கின்ற தன்மை பொருந்த, விழைவின் - ஆசையுடன், எதிர அதிர் - (அரக்கரை) எதிர் கொள்ளுமாறு முழங்குகின்ற, எரி கொள் - எரிகின்ற நுதியைக் கொண்ட, விரி பகழி மழைகள் - பரந்த அம்பு மாரிகளை, முறை சொரிய - இடைவிடாது பொழியவும், அமரர் - வானவர்கள், மலர் சொரிய - மலர் மழை பெய்யவும். 'கொடிகள் திசை அடைவ' என அடுத்த செய்யுளில் முடியும்.

பி - ம். 3. விழியினெதி ரெதிரினெரிகள் விளி, விழைகு மெதிர வெதிரெதிர் கொள் விரி, விழைவி னெதிரெதிர்க ளெரிகள்விரி.

4. மழைகள் மழை. 162

3395 தினக ரனையணவு கொடிகள் திசையடைவ
சினவு பொருபரிகள் செறிவ வணுகவுயர்
அனக னெடுமமரின் முடுகி யெதிரவெழு
கனக வரைபொருவ கதிர்கொள் மணியிரதம்.

தினகரனை அணவு கொடிகள் - சூரியனைச் சென்று தீண்டுகின்ற கொடிகள், திசை அடைவ - திக்குகளைச் சென்று சேர்வனவாக, சினவு பொரு பரிகள் - கோபம் கொள்வனவும், போர் செய்ய வல்லனவுமான குதிரைகள், அணுக செறிவ - (போர் முறையில்) நெருங்குவனவாகி அடர்வன, கதிர் கொள்மணி இரதம் - ஒளி கொண்ட மணிகள் அழுத்திய தேர், உயர் - மேன்மையுள்ள, அனகனொடு - குற்றமற்ற இராமபிரானொடு, அமரின் - போரிடத்து, முடுகி - விரைந்து, எதிர எழு - எதிர்க்குமாறு எழுகின்ற, கனகம் வரை பொருவ - பொன் மலையான மேருவை ஒத்தன.

இச் செய்யுள் சில பிரதிகளில் 'மகர மறிகடலின்' பின் உள்ளது.

பி - ம். 1. தினகரனையனைய ; திரைகளொடும்.

2. வனசசனி யுலகுவயிர மிலகுவன, னகைகுனி யுலகுவயிர மிலதனுக, வயிரமுடனணுகி.

3. அமரிலடுகி முடுகுவன, அமரின் முடுகி யெழுபவன, முடுகி னெழுபவன

4. பொருத கடிய பரியிரதம், பொருவு கடிகை பரியிரதம். 163

இங்கு அதிகப் பாடல்:—

திரிய வுலகில்மலை திரிய விருசுடர்கள்
திரிய வொருவனெதிர் சினவி லொடுமடர
வரிகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது மிடை திரிய.

3396. பாறு படுசிறகு கழுகு பகழிபட
நீறு படுமிரத நிரையி னுடல்தழுவி
வேறு படர்படர விரவி சுடர்வலையம்
மாறு படவுலக நிரைக ளளறுபட.

பாறு - பருந்தும், படு சிறகு கழுகு - பொருந்திய சிறகினையுடைய கழுகும், பகழிபட - அம்புகள் தாக்குவதனால், நீறுபடு - சூர்ணமாக உதிர்கின்ற, இரதம் நிரையின் - தேர் வரிசைகளில் உள்ள, உடல் தழுவி - உடலை அணைந்து, வேறு படர் படர விரவி - வேறாகச் செல்லுதலைப் பொருந்தவும் (அந்த விசையால்), சுடர்

வலையம் - சூரியனது ஒளி வட்டம், மாறுபட - நிலை மாறவும், உலகம் நிரைகள் அளறுபட - உலக வரிசைகள், சேற்றின் தன்மையை அடையவும்.

பி - ம். 1. உடல் விரவி, உடறவிர.

3. தொடர்படர ; மலையம்.

4. உலகின் மலைகளளறுபட, உல்கிலாறு பலபடர. 164

இங்கு அதிகப் பாடல் :—

கரிய திலதமலை திரிய வவிர் சுடர்கள்
இரிய வொருவிலுடை யிருகை யொருகளிறு
திரிய விடுகுயவர் திரிகை யெனவுலகு
தெரிய வெழுகடலு முழுது முறை தெரிய.

3397 அருகு கடல்திரிய வலகின் மலைகுலைய
உருகு சுடர்களிடை திரிய வுரனுடைய
இருகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது முறைதிரிய

இருகை - இரு கைகளைக் கொண்ட, ஒரு - ஒப்பற்ற, உரன் உடைய களிறு - வலிமை வாய்ந்த வேழம் போன்ற இராமபிரான், திரிய - திரிவதனால், அருகு கடல் திரிய - அண்மையில் உள்ள கடல் கலங்கவும், அலகு இல் மலை குலைய - அளவில்லாத மலைகள் நிலைகெடவும், உருகு - உருகுவதற்குக் காரணமான, சுடர்கள் - இரு சுடர்கள், இடை திரிய - வானத்தினிடையே, மாறுபடவும், இடு குயவர் - மண்ணீட்டாளரான குலாலரின், திரிகை என - சக்கரம் போன்று, உலகு முழுதும் முறை திரிய - உல கடங்கலும் (தாம் இருக்கும்) முறையினின்று மாறுபடவும்.

சுடர்கள் : கதிர் மதியம். இருகை யொரு களிறு : 'இருகை வேழத்திராகவன்' (பால. பாயிரம்) குயவர் திரிகைக்கு இராமன் திரிகை ஒப்பு.

பி - ம். 1. மலைதிரிய.

2. அருகு ; வரிவிலுடை.

4. முறைதிரிவ. 165

இங்கு ஒரு பாடல் இல்லை என்பது ஐயரவர்கள் குறிப்பு.

இங்கு செய்யுட் பிரதியாக ஓர் பிரதியில்

திரிய வலகின்மலை திரிய விருசுடர்கள்
திரிய லொருவ னெதிர் சினவி னெடுமடர
வரிகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது மிடைதிரிய.

3398. சிவனு மயனுமெழு திகிரி யமரர்பதி
யவனு மமரர்குல மெவரு முனிவரொடு
கவன முறுகரண மிடுவர் கழுதினமும்
நமனும் வரிசிலையு மறனு நடனவில.

(அக் காலையில்), கழுது இனமும் - பேய் வருக்கங்களும், நமனும் - யமனும், வரி சிலையும் அறனும் நடம் நவில - (இராமபிரானுடைய) கட்டமைந்த வில்லும் தரும தேவதையும் ஆனந்தக் கூத்துப் பயில, சிவனும் அயனும் - சிவபெருமானும் பிரமனும், எழு - போர் புரியுமாறு எழுகின்ற, திகிரி - ஆழிப் படையை யுடைய, அமரர் பதி - தேவர்கள் கூட்டத்துக்கு இறைவன் ஆன, அவனும் - அத் திருமாலும், அமரர் குலம் எவரும் - வானவர் வழியைச் சேர்ந்த எவரும், முனிவரொடு - முனிவர்களும், கவனம் உறு - (மனக் களிப்பினால்) விரைவுடன் கூடிய, கரணம் இடுவர் - கரணமிடுவாராயினர்.

சிவனும் அயனும் என அடைமொழி இன்றிக் கூறித் திருமாலைத் திகிரி யமரர் பதியவன் என்று சிறப்பித்தது, இராவணாதிகளை ஒழித்துக்கட்ட வந்த இராமபிரான் திருமாலின் அமிசமாதல் கருதி என்க. மற்றும் அமரர் பதி எனத் தேவேந்திரனே பெரும்பாலும் கூறப்பட்டிருக்க, இங்குத் திருமாலை 'அமரர் பதி' என்றது, தேவேந்திரன் உள்பட அமரர்களைக் காக்கவே இராமபிரான் தோன்றியவன் ஆதலின் என்பது பெறப்படும். முனிவர் : மனன சீலர். கவனம் - வேகம் ; 'கவன வெம்பரியும் வேகக் கதமலைக்கரசும் காதற், பவனனக் கினிய நண்பன் பயந்தெடுத்தவனுக் கீந்தான்' (யுத்த. விடை கொடு. 24) ; கரணம் இடுதல் : தலையைக் கீழே நட்டு உடலை உயர்த்தி உருண்டு விழும் ஒரு விளையாட்டுச் செயல். கழுது - பேய் ; 'வெந்த வெம்பிணம் விழுங்கின கழுதுகள் விரும்பி' (யுத்த. 2430) ; 'கழுதொடு காட்டிடை நாடகமாடி' (திருவாசக. திருச்சதகம். 7) நமன் - யமனுடைய பிரதானி என்பர்.

'எற்றுக் கோநம ளுல்முனி வுண்பதே' (தேவா. 1205 : 6) இங்கு 'பனிக்கற் சுரத்துக்கரன் முதலோர் கவந்தப் படையும் பல்பேயும், தனிக்கைச் சிலையும் வானவரும் அமரர் குழுவுந் தனியறனும், இனிக்கட்டழிந்ததரக்கர் குலம் என்றே சுருதி யீரிரண்டும், குனிக்கக் குனித்த புருவத்துக் குவமை நீயே கோடி' (சுந்தர. 544) என்ற செய்யுள் நினைவு கூரத்தக்கது.

பி - ம். 2. முனிவரரும்.

3. கமள முதல் கரணம் ; மூவர் கரணமிடுவர் ; இடுவ, இருவர் ; கழு கினமும் 'கவனமுதல் கரண மனகன் கவலையிட. 166

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

கரிய திலதமலே திரிய வவிர்சுடர்கள்
இரிய வொருவிலுடை யிருகை யொருகளிறு
திரிய விடுகுயவர் திரிகை யெனவகிலம்
தெரிய வெழுகடலு முழுது முறைதிரிய.

3399. தேவர் திரிபுவன நிலையர் செருவிதனை
ஏவ ரறிவுறுவ ரிறுதி முதலறிவின்
மூவர் தலைகள்பொதி ரெறிவ ரறமுதல்வ,
பூவை நிறவவென வேத முறைபுகழ.

'திரிபுவனம் நிலையர் தேவர் - மூன்றுலகங்களிலும் தம்மிருப்பைக் கொண்டவரான வானோரில், ஏவர் - யாவர், செரு இதனை - இந்தப் போரினது, இறுதி - முடிவு இன்னவாகும் என்பதை, அறிவு உறுவர் - அறிவதைச் செய்வர்? முதல் அறிவின் மூவர் - முதல்வராகக் கருதப்பட்ட மூவர்கள் (இந்தப் போரினைக் கண்ணுற்று), தலைகள் பொதிர் எறிவர் - தலை நடுக்கங் கொள்வார்கள் ; அறம் முதல்வ - அறத்திற்கு முதல்வனே! பூவை நிறவ - காயாம் பூவண்ணனே!' என - என்று, வேதம் முறை புகழ - வேத புருடன் முறையால் துதி செய.

செரு - போர் ; 'செருவில் மாண்டவர் பெருமையும்' (யுத்த. 1432) ; ஏவர் : எவர் என்ற சுட்டு நீண்டது ; 'ஏவரே உலகம் தந்தார்' (யுத்த. 246) ; இறுதி ஏவர் அறிவுறுவர் என மாற்றுக. முதல் அறிவு முதன்மையான அறிவு எனினுமாம் ; 'முதலாவார்

மூவரே அம்மூவர் தம்முள், முதலாவான் மூரிநீர் வண்ணன்' (இயற்பா. முதல் 15); பொதிர் எறிதல் - நடுக்கம் கொள்ளுதல்; (யுத்த. அதிகாயன் 200); பூவை நிறவ: 'பொன்னைப்போலொளிரு மேனிப் பூவைபோல் வண்ணத்தான்' (ஆரணிய. 281); வேதம் முறை புகழ-வேத நூல் புகழ எனினுமாம்; முறை - நூல்; தேவாரத்திருமுறை என்றது காண்க.

பி - ம். 1. திரிபுவனமனைய நிலையில்; செருவிறலை; செருவதனை உணர்வின்; ஈறுமுதல் புணரின்.

3. தலைபொதிர்கள்; உறமுதல்வ.

4. புகழ்வ. 187

3400. எய்யு மொருபகழி யேழு கடலுமிடு
வெய்ய களிறுபரி யாளொ டிரதம்விழ
ஒய்ய வொருகதியி னோட வுணரமரர்
கய்க ளெனவவுணர் கால்கள் கதிகுலைவ.

எய்யும் (இராமபிரான்) செலுத்துகின்ற, ஒரு பகழி - ஒப்பற்ற வாளியினாலே, ஏழு கடலும் - ஏழு கடலிலும், இடு - நெற்றிப் ட்டம் ஒன்ற ஓடை அணியப் பெற்ற, வெய்ய களிறு - கொடிய வேழம், பரி - குதிரை, ஆளொடு இரதம் - காலாள் தேர் என்னும் நால் வகைப் படையும், விழ-வீழவும், ஒய்ய - (பாற்கடலைக் கடையுமாறு), விரைய, ஒரு கதியின் - ஒரு நடை கொண்டு, ஓடு அவுணர் அமரர் - ஓடுகின்ற அவுணர் வானவர் என்ற இவர்களின், கைகள் என - கரங்களைப் போல, (அஞ்சியிரிகின்ற) அவுணர் கால்கள் - அவுண ரின் கால்கள், கதி குலைவ - வேகம் குன்றலாயின.

இடுதல் - ஓடைப் பட்டமணிதல்; 'யானை யுடைய படை காண்டல், முன் இனிதே' என்றபடி களிற்றை முற் கூறினர். ஆள் - காலாள்; 'கற்றடந் திண்டோள் ஆளும்' (யுத்த. 3655); ஒய்ய - விரைய; 'ஒய்யென வெழுந்த செவ்வாய்க் கிழவி' (தொல். மரபி.); ஒய்யென; (யுத்த. 2511); கதி - நடையின் வேகம். 'கதிகொண்ட சேனை நடவ' (வில்லி பா. 16ஆம் போர் 73); ஒய் - அனுகரண வோசை. 'புஷ்பவர்ஷம் சொரிந்தும் கொண்டாடியும் அமரர் கரஞ்சலித்தது போல அரக்கர் கால் ஓடிச் சலித்தது' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஏழு நிரையுமிடு, தொடையுமிடு.

4. கையனெனவுணரக்; குலைய. 168

இதன் பின் 'அருக' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3401. அண்ணல் விடுபகழி யானை யிரதமயல்
பண்ணு புரவிபடை வீரர் தொகுபகுதி
புண்ணி னெடுகுறிகள் புள்ளியென விரைவின்
எண்ணு வனவனைய வெல்லை யிலநுழைவ.

அண்ணல் - பெருந்தகையான இராமபிரான், விடு பகழி - செலுத்தும் வாளிகள் தைப்பதனால், அயல் - அண்மையில் உள்ள, யானை - வேழம், இரதம் - தேர், பண்ணு புரவி - பருமம் அமைந்த குதிரை, படை வீரர் - பதாதிகள் (என்ற இவை), தொகு பகுதி - கூடிய பகுதிகளிலே, புண்ணினொடு - புண்ணுடன் தோன்றிய, குறிகள் - தழும்படையாளங்கள், புள்ளி என - புள்ளி யொப்பத் தோன்ற, (அந் நாற்படைகளை) விரைவின் எண்ணுவன அனைய - வேகமுடன் கணக்கிடுவனவற்றை நிகர்த்தனவாகி, எல்லை இல நுழைவ - எல்லையில்லாதனவாய் நுழைவனவாயின.

அண்ணல்: 'அண்ணற் பெரியோன் அடி வணங்கி' (சுந்தர. 392); இராமபிரான் செலுத்திய கணக்கற்ற வாளிகள், நாற்படைகளின் உடலிற் பாய்ந்து புண் தழும்பை உண்டாக்கியது; அந்தச் சேனைத் தொகுதியை அந்த அம்புகள் கணக்கிடுகையில், புள்ளியமைத்தாற் போன்றிருக்க, விரைவில் நுழைந்தன என்க. புள்ளியிடுதல். - பெருந் தொகுதிகளைக் கணக்கிடுபவர் நூற்றுக்கு ஒரு புள்ளியெனச் சங்கேதம் வைத்து எண்ணும் வழக்கம் இங்கு ஓர்க. உறையிடுதல் என்ற வழக்கம இங்கு உணரத் தகும்.

பி - ம். 1. அன்னலடு, அன்னலதி.

2. படைவர் தொகுதிபகுதி.

3. புண்ணிவிடு; பன்னியென விரைவின்; விரவி.

4. என்னுமளவு; எல்லையிலை நுழைய, எல்லையினி னுழைய. 169

## வேறு

## இராமபிரான் சரக்கூடம் சமைத்தல்

3402 சுருக்கமுற் றதுபடை சுருக்கத் தாலினிக்
கரக்குமுற் றொருபுறத் தென்னுங் கண்ணினல்
அரக்கருக் கன்றுசெல் வரிய தாம்வகை
சரக்கொடு நெடுமதில் சமைத்திட் டானரோ.

(இராமபிரான்), படை சுருக்கம் உற்றது - இவ்வரக்கர் சேனை அளவிற் குறைவதாயிற்று, சுருக்கத்தால் - (இவ்வாறு) குறைவதனல், இனி - இனிமேல், ஒரு புறத்து உற்று கரக்கும் - ஒரு சார் பொருந்தி ஒளித்துக் கொள்ளும், என்னும் கண்ணினல் - என்னும் கருத்தினல், அன்று - அப்போது, அரக்கருக்கு - இராக்கதர்க்கு, செல்வு அரியது ஆம் வகை-(அப்பால்) ஏகுவது இயலாத வண்ணம், சரம் கொடு - அம்புகளைக் கொண்டு, நெடு மதில் சமைத்திட்டான் - நீண்ட சரக்கூடத்தை அமைத்தான். அரோ : அசை.

சுருக்கம் : 'சுருக்கமுண்டவர் வலிக்கு' (யுத்த. 372) ; கண் - கருத்து ; செல்வு - தொழிற் பெயர் ; சரம்கொடு நெடுமதில் எனப் பிரிக்க. இதனை அம்பு மதில் என்றும் சரக்கூடம் என்றும் சொல்வர். இனி சரம் அம்பினல் செய்த கொடுமதில் - கொடிய மதில்எனினுமாம் ; சமைத்தல் : 'சானகி யுருவகமாகச் சமைத்த' (யுத்த. 2790).

பி - ம். 2. கரக்குமற்று, கரக்கமுற்று, கரக்கமற்றொரு புறமென்னுங் கண்டிலார்.
3. என்றும் ; செல்லரிய வாம்வகை, செல்வரிதாகிய, செல்வரியவாம் வகை.
4. சரக்கடு.

179

இங்கு அதிகப் பாடல் :—

ஆய்வல் லரக்கர்மற் றளவில் லாதவர்
தீயெழும் விழியினர் சினங்கொள் சிந்தையர்
காயும்வெம் படையினர் கடலிற் பொங்கியே
மேயினர் தத்தமி லிவைவி ளம்புவார்.

## அரக்கர் சேனையின் அழிவும் திகைப்பும்

3403. மாலியை மாலிய வானை மால்வரை
போலுயர் கயிடனை மதுவைப் போன்றுளார்
சாலிகை யாக்கையர் தணிப்பில் வெஞ்சர
வேலியைக் கடந்தில ருலகை வென்றுளார்.

உலகை வென்றுளார் - உலகினை வென்றுள்ளவரும், மாலியை - மாலியையும், மாலியவானை - மாலியவானையும், மால்வரை போல் உயர் - பெரிய மலை போன்றுயர்ந்துள்ள, கயிடனை - கயிடனையும், மதுவை - மதுவென்ற அசுரனையும், போன்று உளார் - போன்று உள்ளாருமான, சாலிகை யாக்கையர் - கவசம் பூண்ட உடலை யுடையவரான அவ்விராக்கதர்கள், (இராமபிரான் உண்டாக்கிய), தணிப்பு இல் - ஓய்வில்லாத, வெம் சரம் - கொடிய அம்புகளால் அமைக்கப் பெற்ற, வேலியை - அந்தக் காவல் மதிலை, கடந்திலர் - கடக்கவியலாதவராயினர்.

மாலி, மாலியவான்; மூலபல. 32 84 காண்க. முதலடி முற்றுமோனை, கயிடன்; மது - மது எனும் அவுணன் முன்றெட்டது. சாலிகை : கவசம் ; 'சாலிகை (யுத்த. 3440) ; தணிப்பு - தொழிற் பெயர். வேலி - இங்குக் காவலாக அமைந்த சரவேலி. மன்னற வேலியைக் கொன்றுய்விறல் வீரனே' கிட்கிந்தா. 318 'வரை' சக்கரமால் (யுத்த. 3198)

பி - ம். 2. மதுவைப் போன்றுளாய்.
3. யாக்கையது ; தணப்பில் வெஞ், அளப்பில் வெஞ், அரக்கர் செஞ்சரம்.
4. உவகை ; மேற்கொளார் ; வேலியைக் கடக்கிலார் உலகின் மேற் கொள்வார்.



இங்கு அதிகப் பாடல் :—

அன்றியு மொருவனிங் கமரிற் றம்படை
யென்றுள கரிபரி யிரத மீறில்போர்
வென்றிடும் பதாதியர் அனந்த வெள்ளமும்
கொன்றனன் கொதித்தொரு கடிகை யேழிலே,

3404. மாண்டவர் மாண்டனர் மற்று ளோரெலாம்
மீண்டன ரொருதிசை யேழு வேலையும்
மூண்டற முருக்கிய வூழிக் காலத்தில்
தூண்டுறு சுடர்சுடச் சுருங்கித் தொக்கபோல்.

மாண்டவர் மாண்டனர் - (இராமபிரான்) அம்புகளால், இறந்தவர் இறந்தவராக, மற்றுளோர் எலாம் - மற்றும் உள்ளவர் யாவரும், தூண்டுறு - தூண்டப் பெற்றுர் போன்று, சுடர் - ஒளிர்கின்ற (வடவைத்) தீ, மூண்டு - கொதித்தெழுந்து, அற - மிகவும், முருக்கிய - (எல்லாவற்றையும்) அழிக்கின்ற, ஊழி காலத்தில் - பிரளய காலத்தில், சுட - கொளுத்த, (அதனுல்) ஏழு வேலையும் சுருங்கி தொக்கபோல் - ஏழுகடலும் அளவிற் சுருங்கப் பெற்றதுபோன்று, ஒரு திசை மீண்டனர் - ஒரு திக்கில் இரும்பினர்.

ஏழு வேலையும் சுருங்கித் தொக்கபோல் என இணைக்க. முருக்குதல் - அழித்தல்; 'உடல்மு ருக்கியிட் டுண்குவெ னென்றலும்' (யுத்த. மீட்சி. 33),

பா - ம். 1. மாண்டனர் மாண்டனர், மாண்டவர் மாண்டற.
2. ஈண்டினர்; ஏழு வேலையை.
3. முருங்கிய; காலத்தீத்.
4. தூண்டிடு. 172

3405. புரஞ்சுடு கடவுளும் புள்ளின் பாகனும்
அரஞ்சுடு குலிசவே லமரர் வேந்தனும்
உரஞ்சுடு கிற்கில ரொருவ னுமுடை
வரஞ்சுடும் வலிசுடும் வாழு நாள்சுடும்.

'புரம் சுடு கடவுளும் - திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், புள்ளின் பாகனும் - கருடனை யூர்ந்து செல்பவனுன திருமாலும், அரம்சுடு - காய்ச்சி அரத்தினுல் அராவப்பட்ட, குலிசம் வேல் - வச்சிராயுதத்தினையுடைய, அமரர் வேந்தனும் - தேவர்க்கு அரசனுன இந்திரனும், உரம் சுடுகிற்கிலர் - (நமது) வலிமை அழிக்கமாட்டாதவராயினர்; ஒருவன் - தனித்த ஒருவன், நாம் உடை வரம் சுடும் - நாம (தவம் செய்து) பெற்றுள்ள வரங்களை அழிப்பான்

வலி சுடும் - (நமது) உடல்வலி மன வலியையும் அழிப்பான்; வாழ் நாள்சுடும் - வாழ்நாட்கும் இறுதி செய்வான்.

புரம்சுடு கடவுள் - சிவபெருமான்; யுத்த: 3207 யுத்த: 2450 புள்: கருடன்; குலிச வேல்-குலிசமாகிய வேல்; இரு பெயரொட்டு: குலிசமும் வேலும் எனினுமாம். அமரர் - பாற்கடலமுதுண்டு சாவில்லாதவர் என்ப. உரம்-வன்மை; வரம் - அரக்கர் பெற்ற வரங்களை உத்தரகாண்டம் கொண்டுணர்க. வாழுநாள்: 'உலகு மென் பெயருமெந்நாள் வாழுநாள்' (யுத்த. 445).

பி - ம். 3. ஒருவர் நாமுடை, ஒருவனம் முடை. 173

3406. ஆயிர வெள்ளமுண் டொருவ ராழிசூழ்
மாயிரு ஞாலத்தை மறிக்கும் வன்மையோர்
ஏயின பெரும்படை யிதனை யோர்விலால்
ஏயெனு மாத்திரத் தெய்து கொன்றனன்.

'ஒருவர் - ஒருவரே, ஆழிசூழ் - கடலாற் சூழப்பட்ட, மா இரு ஞாலத்தை - மிகப் பெரிய பூமியை, மறிக்கும் - தடுத்துப் போராற்ற வல்ல, வன்மையோர் - வலிமை யுடையோர்; (அப்படிப் பட்டவர்) ஆயிரம் வெள்ளம் உண்டு - ஆயிரம் வெள்ளம் என்னும் தொகை யினர் (நம் சேனையில்) உண்டு; ஏயின - அவ்வாறு பொருந்தின, பெரும்படை இதனை - இந்தப் பெரிய சேனையை (இவ்விராமன் தனது), ஓர் விலால் - ஒரு வில்லினால், ஏ எனும் மாத்திரத்து எய்து கொன்றனன் - ஏ என்னும் அளவிற்குள் எய்து கொன் றிட்டான்.

மாயிரு ஞாலம்: 'மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்க' (திருமுரு. 19); 'மாயிரு' என யகர உடம்படு மெய்வந்த தென்னை யெனின், அஃது 'இடையுரிவட சொலினியம்பிய கொளாதவும்' (நன்: மெய: 36) என்னும் சூத்திரத்தான் அமையும் என்க. ஏயின - ஏவின, ஏ எனுமாத்திரம் - ஒரு மாத்திரை அளவு. (யுத்த: 211: 2827). கிகும். 59. ஓர் விலால் ஏயெனு மாத்திரத் தெய்து கொன்றனன்; இதற்கு எதிராக, 'ஒருவரைக் கொல்ல

வாயிரம் இராமர் வந்தொருங்கே, இருபதிற்றிரண்டாண்டு நின்றமர் செய்தாலென்னும்' (யுத்த: 3257). என்று தேவர்கள் அஞ்சிக் கூறியதுடன் ஒப்பிட்டு நோக்குக.

பி-ம். 1. ஒருவன்.
2. பான்னமயோர், வன்கையோர்.
3. மேயின; அதனை. 174

3407. இடைபடும் படாதன விமைப்பி லோர்படை
புடைபட வலங்கொடு விலங்கிப் போகுமால்
படைபடு கோடியோர் பகழி யாற்பழிக்
கடைபடு மரக்கர்தம் பிறவி கட்டமால்.

இமைப்பு இலோர் படை - தேவர்களின் படையும், இடைபடும் - போர்க்களத்தில் (இவ்வரக்கர் சேனைக்கு முன்னே) இறந்தொழியும்; படாதன - அங்ஙனம் படாதவைகளும், புடைபட - புடைக்கப்படுவதால், (அவ்வரக்கர் சேனை), வலம் கொடு - வெற்றியை அடைந்து, விலங்கிப் போகும் - விலகி அப்புறம் செல்லும்; படைபடு - (இத்தகைய) சேனைகளில் பொருந்தி, கோடியோர் - கோடிக்கணக்கினராய், பகழியால் - (இராமபிரானுடைய) ஒரே வாளியால், கடை படும் பழி - மிகவும் இழிவான பழியைப் பெற்ற, அரக்கர் தம் பிறவி - அரக்கருடைய பிறவியானது, கட்டம் - மிகவும் கஷ்டத்தை உண்டு பண்ணற்கேயாம். ஆல்: அசைகள்.

இடை - போர்க் களத்திடை. இமைப்பிலோர் - தேவர்கள். கடை படுபழி என மாற்றுக. கட்டம் - கஷ்டம் என்ற வட சொல்லின் திரிபு. கட்டம் - வழக்குச் சொல்லுமாம். தேவர்கள் படையினையே முன்னர் எளிதில் முறியடித்த இந்த அரக்கர் படை ஒரு நரனுடைய அம்பிற்குத் தோற்றுப் பழியடைந்தமையின்; அரக்கர் பிறவியே கட்டப் பிறவி எனப்பட்டது.

பி-ம். 1. படாதினி.
2. புடைபடு, புடைபடும், உடைபடும், மோதுமால்.
3. சரத்தினூற்.
4. அரக்கராம்; பிறவிக்கட்டம்மா, கட்டமே. 175

3408. பண்டுல குய்த்தவ னேடும் பண்ணமை
குண்டையின் பாகனும் பிறருங் கூடினர்
அண்டர்கள் விசும்பினின் ருர்க்கின் ருருழைக்
கண்டில மிவனெடு மாயக் கள்வனல்.

'பண்டு-முன்பு, உலகு உய்த்தவனேடும்-உலகத்தைப் படைத்தவனான பிரம தேவனேடும், பண் அமை-சேணம் அமைந்த, குண்டையின் பாகனும் - காளை மாட்டினை ஊர்ந்து செல்பவனான சிவபெருமானும், பிறரும் - ஏனையோரும், கூடினர் - ஒன்று கூடியவர்களாய், விசும்பின் நின்று ஆர்க்கின்ருர் - ஆகாயத்தினின்று ஆரவாரம் செய்பவரான, அண்டர்கள் உழை - தேவர்களின் இடையில், (மாயவன் ஆன திருமாலை) கண்டிலம் - காண்கின்றேமில்லை; (ஆதலின்) இவன் - இந்த இராமபிரான், நெடு மாயம் கள்வன் - பெரிய கள்ளத்தையும் மாயையினையும் உடைய திருமாலே யாவன். ஆல் : அசை.

ஆர்த்து நின்ற தேவர்குழுவில் திருமால் காணப்பட்டமையின், அவனே இராமபிரானுகப் போந்தனன் என ஊகிக்கின்றனர். 'பண்ணமை குண்டை - இளம் எருது; 'வையம் பூண்கல்லா சிறு குண்டை' (மாயா சனக. 40); அண்டர் - அண்டரே தேவர் ஆயர், (நிகண்டு); 'அண்டர் நாயகனு ரென்னையறிவரேல்' (பெரிய பு. காரைக்கால். 54); விசும்பினின்ருர்க்கின்ருர் அண்டர்கள் உழை என மாற்றுக. உழை - ஏழாம் வேற்றுமை உருபு.

பி - ம். 1. அளித்தவனேடும், உதித்தவனேடும், அழித்தவன்.
.3 ஆர்க்கின்ருரிடை.

176

3409. கொன்றன னினியொரு கோடிகோடிமேற்
றன்றெனிற் பதுமமேற் ருகில் வெள்ளமாய்
நின்றது நின்றினி நினைவ தென்பிற
ஒன்றென வுணர்கென வன்னி யோதினன்.

' இனி - இப்போது, ஒரு கோடி கோடி மேற்று - ஒரு கோடி கோடிக்கு மேலாக, அன்று எனில் - அன்றெனில், பதுமம் மேற்று - பதுமம் என்னும் தொகைக்கு மேலாக, கொன்றனன் - (இவ்விராமபிரான்), கொலை செய்தான்; ஆகில் - ஆதலால், வெள்ளமாய் நின்றது - (நம் படை) வெள்ளத் தளவினதாய் நின்றது,

பிற,- பிறிதொன்றை, ஒன்று என - ஒரு பொருளாக, இனி நின்று நினைவது என் - இப்போது நின்று நினைவது என்ன (பயன் அளிக்கும்)? உணர்க - சிந்திப்பாயாக', என - என்று, வன்னி ஓதினான் - வன்னி என்பவன் விடை பகர்தல் ஆனான்.

கோடி கோடி:'கோடியில் கோடி' 'கோடியின் கோடியான குருக்கடனு சேனை' (வி. பா. நிரை மீட்சி. 122); மேற்று: மேலது. பதுமம்: ஓர் பேரெண்; (யுத்த. 488); இனி நின்று நினைவது என் என மாற்றுக, உணர்க என என்பது அகர ஈறு தொகுத்து உணர்கென என நின்றது; வன்னி: புட்கரத் தீவின் மன்னன்; யுத்த். 3218; 3239. பார்க்க. ''வெண்பலை மெல்வதே யென வன்னி யுத்த. 3362 விளம்பினான்'

பி - ம். 1. கோடியமற்று, கொன்றனன் சேனைகள் குறைந்தது, யாவுமற்ற.

2. விந்துமற்ருகில், பதுமன்றுயின ; வெள்ளமாம்.

3. நின்றன நின்றன, நன்றினி நினைவ.

4. ஒன்றென நினைகென, என்றன னுணர்கென. 177

இங்கு அதிகப் பாடல்கள் :—

இவ்வுரை வன்னியங் கியம்ப வீதுபோல்
செவ்வுரை வேறிலை யென்று தீயவர்
அவ்வுரைக் கனைவரும் அமைந்தங் கண்ணலோ
டெவ்வுரை யும்விடுத் தமரி னேற்றுளார்.

கொன்றனன் சேனைகள் குறைந்ததியா மேற்றுள
னன்றியுநிற்பது மழிவதாகுமால், நின்ற தெம்போரின்
நினைவ தென்னென்ரு, கொன்றிது கொண்மென
வன்னி யோதுவான்.

## வன்னி யென்பவன் அரக்கரை நோக்கி இராமபிரானுடன் பொருமாறு கூறுதல்

3410. விழித்துமோ விராவணன் முகத்து மீண்டியாம்
பழித்துமோ நம்மைநாம் படுவ தஞ்சினல்
அழித்துமோர் பிறப்புரு நெறிசென் றண்மயாம்
கழித்துமிவ் வாக்கையைப் புகழைக் கண்ணுற.

'நாம் படுவது அஞ்சினுல் - (பகைவரால்) கொல்லப்படுவதற்கு நாம் பயந்தோமானுல், யாம் - நாம், மீண்டு - திரும்பிச் சென்று, இராவணன் முகத்து விழித்துமோ - இராவணன் முகத்து விழிப்போமோ? நம்மை நாம் பழித்துமோ - நம்மை நாம். பழித்துக் கொண்டிருப்போமோ? (இவை செய்யத்தக்கன அல்ல); புகழைக் கண் உற - புகழை அடையுமாறு, அழித்தும் - நம்மை அழியச் செய்தேனும், ஓர் பிறப்பு உரு-(மீண்டும்) ஒரு பிறப்பினை அடையா, நெறி - ஒரு வழியை, யாம் சென்று அண்ம - நாம் சென்று சேர, இவ் யாக்கையை - இந்த உடலை, கழித்தும் - ஒழிக்கக் கடவோம்.

ஓகாரம் : வினு. ' இழித்தக்க செய்தொருவன் ஆர உணலின், பழித்தக்க செய்யான் பசித்தல் தவறே, விழித்திமைக்கு மாத் திரை யன்றே வொருவன், அழித்துப் பிறக்கும் பிறப்பு' (நாலடி. 302) என்ற செய்யுள் இங்குக் கருதத்தக்கது. ' இன்றுளார் நாளை மாள்வர் புகழுக்கு மிறுதி யுண்டோ' (யுத்த. 3060) என்பது இராவணன் கூற்று. அழித்துப் பிறப்புரு : ' அழித்துப் பிறக்க வொட்டா வயில்வேலன் கவியை யன்பால், எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்' (கந்தரலங். 2) ; கழித்தும் - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை முற்று. ஆக்கை - சரீரம் ; ' யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்' (நாலடி. 28).

பி-ம். 2. படுவதஞ்சியே, படுவதஞ்சினும், படுதலஞ்சினுல், படுத்தலஞ்சினும்.

3. அழித்துமோர் பிறப்புரு நெறிமற்ருதலால், ஆங்கு யாம், அண்மநாம் அண்முவாம்.

4. கழித்துமேல் ; கண்ணுரு.

178

இங்கு அதிகப் பாடல் :—

விடுத்துமோ விராவணன் முகத்து வேமெனில்
தடுத்தகூர் வாளியி னுரை நீங்கலா
தெடுத்தொரு முகத்தினு லெய்தி யாமினிக்
கொடுத்துநம் உயிரையென் றுருமை கூறினுன்.

3411. இடுக்கினிப் பெயர்ந்துறை யெண்ணு வேமெனின்
அடுத்தகூர் வாளியி னரண நீங்கலோம்
எடுத்தொரு முகத்தினு லெய்தி யாமினிக்
கொடுத்துநம் முயிரென வொருமை கூறினுன்.

'இ இடுக்கின் - இந்த நெருக்கடியான இந் நிலையில், பெயர்ந்து உறை எண்ணுவேம் எனின்-அப்பால் போய்த் தங்குதல் குறித்து ஆராய்வோமானால், அடுத்த - அடுத்துப் பொருந்தியுள்ள, கூர் வாளியின் - கூர்மையான அம்பினால் அமைக்கப்பட்ட, அரணம் - சரக்கோட்டையிலிருந்து, நீங்கலோம் - வெளியேற வியலாதவ ராணோம், யாம் இனி - நாம் இனியேனும், ஒரு முகத்தினால் எய்தி எடுத்து - ஒருமுகமாகக் கூடிப் போர் தொடங்கி, நம் உயிர் கொடுத்தும் - நமது பிராணனை விடுவோம்' என - என்று, ஒருமை கூறினன் - ஒருமனதாகச் சொன்னான்.

இடுக்கு - நெருக்கடியான நிலை; 'இடுக்கிவணியம் புவதென்னை' (யுத்த. 38); கூர்வாளி; 'ஏவு கூர்வாளியால்' (கிட்கிந்தா. 350); அரணம்; (இங்கு) சரக்கூடம்; நீங்கலோம்; அல் - எதிர்மறை யிடைநிலை. எடுத்து - போர் எடுத்து அல்லது தொடுத்து. கொடுத்து நம் உயிர் என்க.

பி - ம். 1. இடுக்கினிற் போந்து வேறு; இடுக்கினிப் பேர்ந்துறை, இடுத்தினிப் பெருந்துறை.

2. தடுத்த கூர்வாளியினுரைத் தாங்கலேம்; தடுத்த கூர்வாளியின்குரை நீக்கிலாது, அடுத்த கூர்வாளியினை நீங்கலால்.

4. வயிரையென்று; கூறினர். 179

இங்கு அதிகப் பாடல் :—

இடுக்கறப் பெயர்ந்துபோ யெய்து வோமெனின்
தடுத்திடுஞ் சரமதில் கடக்கத் தக்கதன்
றெடுத்தொரு முகத்தினு லெய்தி நாமினிக்
கொடுத்துநம் முயிரென வுருமை கூறினன்.

## அரக்கர் யாவரும் இராமபிரானை வளைத்து எதிர்த்தல்

3412. இளக்கரு நெடுவரை யீர்க்கு மாறெலாம்
அளக்கரிற் பாய்ந்தெனப் பதங்க மாரமுல்
விளக்கினில் வீழ்ந்தென விதிகொ டுந்தலால்
வளைத்தீரைத் தடர்த்தனர் மலையின் மேனியார்.

இளக்க அரு - அசைத்தற்கருமையான, (கடினமான) நெடு வரை - நெடிய மலையையும், ஈர்க்கும் ஆறு எலாம் - இழுத்துச்

செல்லும் வன்மை கொண்ட ஆறுகள் அனைத்தும், அளக்கரில் பாய்ந்து என - கடலில் சென்று வீழ்ந்தாற் போலவும், பதங்கம் - விட்டில் பூச்சி, ஆர் அழல் விளக்கினில் வீழ்ந்து என - அரிய தீச்சுடருடைய தீபத்தில் வீழ்ந்தாற் போலவும், விதி கொடு உந்த லால் - ஊழ்வினை பிடரியைப் பற்றித் தள்ளுதலால், மலையின் மேனியார் - நீலமேகம் போன்ற மேனியையுடைய அந்த இராக்கதர் கள், வளைத்து இரைத்து அடர்த்தனர் - சூழ்ந்து கொண்டு பேரிரைச்சல் செய்த வண்ணம் எதிர்த்து நெருக்கலாயினர்.

இளக்குதல்: 'வெளிலிளக்கும் களிறுபோல்' (பட்டினப். 172); இளக்க அரு என்பது அகர ஈறு தொக்கு இளக்கரு என நின்றது. ஈர்த்தல் - இழுத்தல்; 'இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த் தெனுளமுருக்கி' (திருவாச. திருவேசறவு 1.) அளக்கர்-ஆழி; 'அளக் கரோ டளக்கரிய' (சுந்தர. 259); 'அன்னவெந் துயரெனு மளக்கர் நீங்கினான்' (கிட்கிந்தா. 218); பாய்ந்தது என என்பது பாய்ந்தென என நின்றது. பதங்கம் - விட்டில்; கிட்கிந்தா. 510; பதங்கம் விளக் கில் வீழ்தல்; 'விளக்கிடை விட்டிலன்ன' (யுத்த. 2845); 'விளக் கெதிர் வீழ்ந்த விட்டிற் பான்மை வியக்க வேண்டா' யுத்த. 1593-ம் உரைக் குறிப்பும் காண்க. வீழ்ந்தது என என்பது வீழ்ந் தென என நின்றது. விதி கொடுந்தலால்: 'வென்றிவண் வருவெனென் றுரைக்கிலன், நின்றது விதி பிடித்துந்துகின்றது' (யுத்த. 1259); மலையின் - ஐந்தனுருபு ஒப்புப் பொருளில் வந்தது.

பி - ம். 1. இழிந்தவா றெலாம் ஆறனை.
2. பரந்தென மதங்கி யாரழல்.
3. கொணர்ந்தலால், கொடுத்தலால். 180

3413. மழுவெழுந் தண்டுகோல் வலயம் நாஞ்சில்வாள்
எழுவயிற் குந்தவே லீட்டி தோமரம்
கழுவிகற் கப்பண முதல கைப்படை
தொழுவினிற் புலியனு னுடலிற் றாவினர்.

மழு - மழுவும், எழும் - போரில் தலை நீட்டும், தண்டு - கதையும், கோல் - அம்பும், வலயம் - வலயமும், நாஞ்சில் - கலப்பையும், வாள் - வாட் படையும், எழு - கணையமும, அயில் - கூர்மையைக் கொண்ட, குந்தம் - குந்தமும், வேல் - வேலும், ஈட்டி - ஈட்டியும், தோமரம் -

தோமரமும், கழு - கழுவும், இகல் - வலிய, கப்பணம் - கப்பணமும், முதல - முதலான, கைபடை - அஸ்திரங்களை, தொழுவினில் - தொழுவத்தின்கண் உள்ள, புலி அனான் - புலியை ஒத்தவனான இராமபிரானுடைய, உடலில் தூவினர் - உடலிலே (அரக்கர்) வாரி வீசினார்கள்.

தண்டு - கதை; 'தண்டெனக் கொளலுற்றது நொய்தெனத் தவிர்ந்தான்' (யுத்த. 139); தோமரம்; (யுத்த. 1012); மந்தம் - கைப்படை; சஸ்திரம்: 'வென்றிக் கைப்படை நவின்ற வெம்போர்' (சூளா. சீய. 128); தொழுவினிற் புலிமிக்க சீற்றம் வாய்ந்த தென்பர். (ஒப்பு); 'அளையுழை பாம்பும் அரசும் நெருப்பும், முழையுறு சீயமும் என்றிவை நான்கும், குறுகார் அறிவுடையார்' (ஆசாரக். 84); 'அளைசெறி உழுவையும்' (குறிஞ்சிப். 252) என்பதற்கு முழைஞ்சிடத்திலே செறியும் புலிகளும் என்றது காண்க. 'மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து, வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி, மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப், போதருமா போலே' (திருப்பாவை. 23); கப்பணம்: 'இரும்பாற் செய்த யானை நெருஞ்சி முள்' 'கடுக வுந்திக் கப்பணஞ் சிதறினனே' (சீவக. 255); இச்செய்யுட்கண் பலவகைப் போர்க் கருவிகள் அடைமொழியின்றி வந்துள்ளமை காண்க.

பி - ம். 1. மழுவெழுத்; வலையம், வளைய.
2. குலிசவேல்.
3. கழுமுதற், முழுக்; கற்பணம்.
4. தொழுவிடைப், கொழுமனிற்; தூண்டினர். 181

## இராமபிரான் அவ்வரக்கர் மீது காந்தர்ப் பாத்திரம் விடுதல்

3414. காந்தருப் பம்மெனுங் கடவுண் மாப்படை
வேந்தருக் கரசனும் வில்லி னுக்கினன்
பாந்தளுக் கரசெனப் பறவைக் கேறெனப்
போந்துருத் ததுநெருப் பனைய போர்க்கணை.

காந்தருப்பம் எனும் - காந்தருப்ப மென்கின்ற, கடவுள் மாபடை - தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த அத்திரத்தை, வேந்தருக்கு அரசனும் - அரசர்க்கரசனான இராமபிரானும், வில்லின் ஊக்கினான் - வில்லில் வைத்துக் குறிபார்த்து எய்தார்; போர் - போரில் விடுத்த, நெருப்பு அனைய - நெருப்பை ஒத்த, கணை - அந்த அம்பு, பாந்தளுக்கு அரசு என - பாம்புகட்கு அரசனான ஆதிசேடனை ஒப்பவும், பறவைக்கு ஏறு என - பறவைகட்கு இறைவனான கருடனை ஒப்பவும், போந்து - (வில்லினின்று) எழுந்து சென்று, உருத்தது - சினந்தது.

காந்தருப்பம் - கந்தர்வர் சம்பந்தமானது என்று தத்திதாந்தப் பெயர், வேந்தர்க்கரசன் - இராசாதிராஜன், பாந்தள் - நாகம்; 'பாந்தளிற் பெரிய திண்டோட் பரதன்' (யுத்த. கும். 72); ஊக்குதல் - முயன்று செய்தல்; 'ஊக்கித் தாங்கி விண்படர்வெனென்' (ஆரணிய. 312); குறிபார்த்து எய்தல்: 'ஊக்கருங் கணையினர்' குறி தப்பும் வெம் கணையினர் என்றுரைத்தது காண்க. பாந்தள் - பெரும் பாம்பு; 'பழுவும் பரந்தளு முளப்படப் பிறவும்' (குறிஞ்சிப். 559); 'பாந்தளனன் பரேரெழுத் தடக்கை' (பெருங். 1, 58, 8); பாந்தளுக்கரசு - ஆதிசேடன்; பறவைக்கேறு - கருடன்.

பி - ம். 2. விலக்கி ; வீக்கினன்.
4. போந்துருத்தன ; பொற்கணை.

182

## அந்த அத்திரத்தின் வருணனை

3415. மூன்றுகண் ணமைந்தன முகமைந் துள்ளன
ஆன்றமெய் தழலன புனலு மாடுவ
வான்தொட நிமிர்வன வாளி மாமழை
தோன்றின புரஞ்சுடு மொருவன் தோற்றத்த.

மூன்று கண் அமைந்தன - மூன்று விழிகள் பொருந்தப் பெற்றனவும், முகம் ஐந்து உள்ளன - ஐந்து முகங்கள் உடையனவும், ஆன்ற மெய் - உயர்ந்த உடல்கள், தழல் அன - தழலைப் போன்றனவும், புனலும் ஆடுவ - புனலில் முழுகுவனவும், வான் தொட நிமிர்வன - வானைத் தீண்டுமாறு உயர்ந்தனவுமான, வாளி மாமழை - (அந்தக் கணையின்) பெரிய மழைகள், புரம் சுடும்

ஒருவன் - முப்புரம் எரித்த ஒப்பற்றவனான சிவபெருமான் போன்ற, தோற்றத்த - காட்சியினவாய், தோன்றின - புலப்பட்டன.

முக்கண்ணும், ஐந்து முகமும், முழுத்தழல் மேனியும், புனலாடுதலும், விண்தொட உயர்ந்து விளங்குதலும் புரமெரித்த சிவபிரான் அடையாளங்கள். அவற்றைப் போன்று கணைகளும் இருந்தன என்று சிலேடையாகக் கூறப்பட்டது. இவ்வடையாளங்கள் கொண்ட அம்புகள் அனைத்தும் காந்தர்வாத்திரத்தினின்று தோன்றின என்க. மூன்றுகண் - சூரியன் சந்திரன், அங்கி; அஞ்சுமுகம் - அகோரம், வாமனம், தத்புருடம், ஈசானம், சத்தியோசாதம் என்ப. மெய்த்தழலன; 'முழுத்தழல் மேனி' (தேவா. 1199 : 5); புனல் - கங்கைப் புனல், மற்றும் 'அபிஷேகப் பிரியோ சிவா என்றதும் காண்க. 'வான்தொட நிமிர்வன' என்ற தொடர் பெருமானுடைய அகண்டாகாரமான சரீரத்தைக் குறித்தது. திரிபுரம் எரித்தது' (ஆரணிய. 139, 258, 458, 815, 905, 921, 999; சுந்தர. 179, 451, 982, 991, 1171, 1177, 1178.

பி - ம். 1. வைமுகத்தன்.

2. ஆன்றன நெய்கனல், ஆன்றரு நெய்கனல்; புகையுமாமென, புனலுமாடின.

3. தொடை நிமிர்வன, நிவர்வன. 183

## மூலபலம் நொடிப்போதில் ஒழிந்து போதல்

3416. ஐயிரு கோடிய ரரக்கர் வேந்தர்கள்
மொய்வலி வீரர்க ளொழிய முற்றுற
எய்யெனு மாத்திரத் தவிந்த தென்பரால்
செய்தவத் திராவணன் மூலச் சேனையே.

ஐயிரு கோடியர் அரக்கர் வேந்தர்கள் - பத்துக்கோடி எண்ணிக்கையரான அரக்க மன்னர்கள், மொய்வலி வீரர்கள் - இறுகிய உடல் வன்மை வாய்ந்த வீரர்கள், முற்றுற ஒழிய-முழுவதும் மிச்சமின்றி ஒழியுமாறு, செய்தவத்து இராவணன் மூலம் சேனை - செய்தவத்தினனான இராவணனுடைய மூலப்படை, எ எனும்மாத்திரத்து - ஏ யெனுமளவில், அவிந்தது - அழிந்தது; என்பர் - என்று சொல்வார்கள். ஏ : ஆல்: அசைகள்.

மொய்வலி - மிக்க வலியுமாம். முற்றுற ஒழிய என மாற்றுக. ஏயெனும் என்பது எய்யெனும் எனக் குறுகியது. செய்தவத் திராவணன் - இவ்வரக்கன் செய்த கடுந்தவத்தை உத்தரகாண்டத்திற் காண்க. 'முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைந்த பெருந் தவமும்' (யுத்த. 3838); செய்தவத்து ;' வேண்டிய வேண்டியாங் செய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்' (குறள். 265).

பி - ம். 2. மெய்யெனும், எயிர்படைத் தலைவர்களொழிய மற்றெலாம்.

4. செய்பலத் ; செய்தவத் திராவணன் தெய்வ மாப்படை. 184

இங்கு அதிகப் பாடல் :—

இன்னவர் ஐயிரு கோடி யென்றுள
மன்னவர் சதமுக முடையர் மற்றவர்
துன்னினர் மனத்தனல் சுறுக்கொண் டேறிட
வுன்னினர் ஒருவருக் கொருவர் ஓதுவார்.

பல திசைகளினின்றும் பாதாளத்தினின்றும் வந்த அரக்கப் படைகள் போரச் சேறலைத் தெரிவிக்கும்

3417. மாப்பெருந் தீவுக ளேழு மாதிரம்
பாப்பரும் பாதலத் துள்ளும் பல்வகைக்
காப்பரு மலைகளும் பிறவுங் காப்பவர்
யாப்புறு காதல் ரிராவ ணற்கவர்.

மாபெரு தீவுகள் ஏழும்-மிகப் பரந்த ஏழு தீவுகளும், மாதிரம்-(எட்டுத்) திக்குகளிலும், பாப்பு அரு பாதலத்து உள்ளும் - பாம்புகள் உறைகின்ற அருமையான நாகலோகத்திலும், பல்வகை - பல வகைப்பட்ட, காப்பு அரு - பாதுகாத்தற்கரிய, மலைகளும் - மலைகளிலும், பிறவும் - மற்றுமுள்ள இடங்களிலும், காப்பவர் - புரப்பவராய், இராவணற்கு - இராவணனிடத்து, யாப்பு உறு காதலர் அவர் - உறுதியாகப் பிணிக்கப்பட்ட அன்புடன் கூடியவர்கள் அவ்வரக்கர்.

தீவுகள் - ஏழு ; படைக்காட்சிப் படலம் 10 ஆம் செய்யுள் முதல் 19 வரை பார்க்க. சாகம், குசை, இலவம், கிரௌஞ்சம்,

பவளம், கந்தமாதனம், மலயம், புட்கரம், இறலி முதலியன. மாதிரம் - திசை; 'மாதிர மெனைவயு நோக்கான்' (யுத்த. 1213); பாம்பு அரும் என்பது பாபபரும் என நின்றது. பாதலத்துக் கருமை எளிதில் எவரும் புக வியலாமை. 'பாதாளத்துறைவீரென நான்முகன் பணிப்ப' (யுத்த. படைக்காட்சி. 19); யாப்புறு காதலர்-அன்பினாலும் கடமையினாலும் பிணிக்கப்பட்டவர்.

பி - ம். 1. மாதிரப்.

2. மாத்திரப்.

3. பாப்பெரும்.

4. ஆப்புறு, ஆர்ப்புறுங் காவலர், காதலர். 185

3418. மாத்தட மேருவை வளைந்த வான்சுடர்
கோத்தகன் மார்பிடை யணியுங் கொள்கையார்
பூத்தவி சுகந்தவன் புகன்ற பொய்யறு
நாத்தழும் பேறிய வரத்தர் நண்ணினர்.

மாதட மேருவை - மிகவும் பெரிய மேரு கிரியை, வளைந்த-சுற்றி வருகின்ற, வான்சுடர் - உயர்ந்த சுடர்களாகிய இரவி மதிகளை, கோத்து - கோத்து, அகல் மார்பிடை - அகன்ற மார்பிடத்து, அணியும் கொள்கையார் - அணிகின்ற தன்மை யுள்ளவர்களாகி, பூதவிசு உகந்தவன் - தாமரை மலரைத் தன் இருக்கையாக மகிழ்ந்து ஏற்ற பிரமதேவன், புகன்ற-சொல்லிய, பொய் அறு - பொய்யற்ற, நாதழும்பு ஏறிய - நாத்தழும்பேற உருவேற்றுதலால் (பெற்ற) வரத்தர் - வரத்தினை உடையவர், நண்ணினர் - வந்து சேர்ந்தனர்,

மேருவைச் சுற்றி சூரிய சந்திரர் வருவதாகப் புராணங்கள் கூறும். 'குண்டலங்கள் குலவரையை வலம் வருவான்........ ... மண்டலங்கள் பன்னிரண்டும் நாலைந்தாய்' (ஆரணிய. 557); வான் சுடர் : வானத்துலாவும் சுடருமாம். சுடர் : சூரிய சந்திரர்க்கு இலக்கணை. நாத்தழும்பேற : நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்' (திருவாச. 4 : 47); 'கொழு நாத்தழும்பேறத் துதிக்கும் அடியார்' (அகிலாண்ட பிள்ளைத் தமிழ்.) மிகப் பெரு வரங்களைப் பிரமதேவன் தரப்பெற்றவர் அவ்வரக்கர் என்க.

பி - ம். 1. மேருவை யளந்து வானுறை, மேருவை மறைத்த வானெனா, வையக மளந்த வானவன்; வளஞ் செய்வான் கதிர்.

2. கோத்தன; அணிந்த.

3. புகன்று, புகழ்ந்து நாடோறும்.

4. ஏறியார்; அரக்கர், வரத்தை, வார்த்தை. 186

## வந்த அரக்கர் 'யாவரும் ஒருங்கு திரண்டா, தனித்தனியா பொருவது?' என்று தமக்குள் வினவுதல்

3419. நம்முளீண் டொருவனை வெல்லு நன்கெனின்
வெம்முனை யிராவணன் தனையும் வெல்லுமால்
இம்மென வுடனெடுத் தெழுந்து சேறுமோ
செம்மையில் தனித்தனிச் செய்து மோசெரு.

'ஈண்டு-இப்போது, நம்முள் - நமக்குள், ஒருவனை நன்கு வெல்லும் எனின் - ஒருவனை முற்றும் (இந்த இராமன்) வெல்வானாகில், வெம்முனை - கொடிய போர் முனையில், இராவணன் தனையும் வெல்லும் - இராவணனையும் வென்று விடுவான்; இம்மென - இம் மென்னும் அளவிலே, உடன் எழுந்து எடுத்து சேறுமோ-ஒருசேர எழுந்து பொருமாறு ஏகுவோமா? (அன்றி) செம்மையில் - நேர்மை யுடனே' தனி தனி செரு செய்துமோ - தனித் தனியாகப் போர் புரிவோமா? என்று அவ்வரக்கர்கள் வன்னியை வினவினர். ஆல்: அசை. ஓகாரம்: வினா.

ஈண்டு - இடம் காலம் என்ற இரண்டையும் குறித்து வரும். நன்கு வெல்லுதல்-முற்றும் வெற்றி பெறுதல். வெம்முனை: 'வெம் முனை விளைதலினன்று' (யுத்த. 365); இம்மென - விரைவுக் குறிப்பு; 'இம்மென்னு முன்னே யெழுநூறு முந்நூறும்' (தனிப்பா. காளமேகம்); செல் + தும் என்பது சேறும் என வந்தது. செம்மை- நடுவு நிலைமை; ஒருவனைப் பலர் எதிர்த்தல் போரற மன்மையின் செம்மையில் எனப்பட்டது. செரு செய்துமோ என மாற்றுக. எடுத்தெழுதல்: யுத்த பரிபாடை; (ஒப்பு); 'எடுத்தோச்சி' (சீவக. 2256) இதுமுதல் மூலபலமல்லாத தீவுச் சேனைகள் வருகை.

பி - ம். 1. நம்மில்; ஒருவரை; வெல்லினன்றிலா, வெல்லு நன்றெனில், வெல்லுமேயெனின்.

3. உடனடுத்தெழுந்து; சேர்துமோ.

4. செய்யுமோ செரு. 187

## வேறு

### அப்போது வன்னி ஒருங்கே சென்று பொர வேண்டுமென்று சொல்ல, யாவரும் அதனை உடன்படல்

3420. எல்லோ மெல்லோ மின்று வளைந்திந் நெடியோனை
வல்லே வல்ல போர்வலி கொண்டு மலையோமேல்
வெல்லோம் வெல்லோ மென்றனன் வன்னி மிடலோரும்
தொல்லோன் சொல்லே நன்றென வஃதே துணிவுற்ருர்.

'எல்லோம் எல்லோம் - எல்லோரும் எல்லோரும், இன்-று வளைந்து-இன்று (ஒன்ருகச்) சூழ்ந்து, இ நெடியோனை-நெடியவனுன இந்த இராமனை, வல்லே-விரைவாக, வல்ல-வன்மை வாய்ந்த, போர் வலிகொண்டு-போர் ஆற்றல் நிரம்பப்பெற்று, மலையோ மேல்-போர் செய்யோமேயானுல், வெல்லோம் வெல்லோம் - வெல்லமாட்டோம் வெல்லமாட்டோம்', என்றனன் வன்னி-என்று வன்னி என்பவன்; மொழிந்தான் மிடலோரும் - வலிமை சான்ற அரக்க வீரரும் 'தொல்லோன் சொல்லே நன்று' - பழைய வீரனுன வன்னி உரையே நல்லது', என - என்று சொல்லி, அஃதே துணிவுற்ருர் - அச் செயலையே துணிந்திட்டனர்.

படையினை ஊக்குதற்குத் தேவையான வலிமை சான்ற சொற்களை அடுத்தடுத்துச் சொல்லியூக்கும் மரபினுக்கேற்பச் சொற்கள் இச் செய்யுட்கண் அமைந்துள்ளமை காண்க. வல் - விரைவு. மலைதல் - எதிர்த்தல்.

பி - ம். 1. நில்லோ மெல்லோம் நின்று, நில்லே மெல்லா மொன்றி, எல்லோ மெல்லோ மின்று.

2. வல்லோம் ; வல்லேயோர் ; வளமுற்றி, வலிமுற்றி, வலி கொண்டே.

3. வெல்லேம் வெல்லேம்; வெல்லாம், வெல்லேம் வன்னியது மேவி.

4. தொல்லோய் சொல்லே, தொல்லோர் சொல்லே, சொல்லோ சொல்லோ ; வந்து. 188

3421. அன்னார் தாமு மார்கலி யேழு மெனவார்த்தார்
மின்னார் வான மிற்றுறு மென்றே விளிசங்கம்
கொன்னே யூதித் தோள்புடை கொட்டிக் கொடுசார்ந்தார்
என்னும் வைய மென்படு மாலித் திசையேதாம்.

அன்னார் தாமும் - அந்த அரக்கர்களும், ஆர்கலி ஏழும் என ஆர்த்தார் - ஏழு கடல் போல ஆரவாரம் செய்தனர்; (பின்னர்), மின் ஆர்வானம் - மின்னலுடன் கூடிய வானம், இற்று உறும் என்றே - இற்று வீழ்ந்திடும் என்று சொல்லுமாறு, விளி சங்கம் - ஒலிக்கின்ற சங்கினை, கொன்னே ஊதி - அச்சம் எழும்படி ஊதி, தோள் புடை கொட்டி.கொடு-தோளினிடத்தே அடித்துக்கொண்டு, சார்ந்தார் - வந்தடைந்தார்; வையம் என் ஆம் - இவ்வுலகம் என்ன வாகும், இ திசை தாம் என்படும் - இந்தத் திக்கும் என் படுமோ? ஆல்: அசை. ஏ: அசை.

ஏழுகடல்; விளிசங்கம் - ஒலிக்கின்ற சங்கு; 'வெள்ளை கொன் முனை' (குறுந் 91) விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ' (திருப்பாவை. 6); கொன் - அச்சம். தோள் புடை கொட்டுதல் - போர் வீரரின் செயல். (யுத்த: 730). மால் இத்திசை - பெரிய இந்தத் திசையெனினுமாம்.

பி - ம். 1. உடனார்த்தால்.
2. வீற்றுறு மென்றால், வீசுறு மென்றால்.
3. கொடிதார்த்தால், கொடு சேர்ந்தால்.
4. எனப்படும் வானந்; திசையெல்லாம். 189

3422. ஆர்த்தா ரன்னா ரன்ன கணத்தே யவராற்றல்
தீர்த்தா னுந்தன் வெஞ்சிலை நாணைத் தெறிவுற்றான்
பேர்த்தான் பேர்த்தான் முற்று மளந்தான் பிறழ்சங்கம்
ஆர்த்தா லொத்த தவ்வொலி யெல்லா வுலகுக்கும்.

அன்னார் - அவ்வரக்கர்கள், ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள்; அன்ன கணத்தே - அக்கணத்தில் தானே, (இதுகாறும்), அவர் ஆற்றல் - அவ்வரக்கரின் வல்லமையை, தீர்த்தானும் - போக்கி, வென்று வந்தவனான இராமபிரானும், தன் - தன்னுடைய, வெஞ்சிலை

நாணைத் தெறிவுற்றான் - கொடிய வில்லின் நாணியைத் தெறித்தான்; அவ்ஒலி - அதனால் எழுந்த அந்த ஒலி, பேர்த்தான் பேர்த்தான் - (தன் தாள்களைப்) பேர்த்துப் பேர்த்து, முற்றும் - எல்லா உலகங்களையும், அளந்தான் - அளந்த திருமாலின், பிறழ் சங்கம் - (வெற்றிச் சிறப்புடன்) விளங்கும் சங்கம், எல்லா உலகுக்கும் ஆர்த்தல் ஒத்தது - எல்லா உலகங்களிலும் ஆரவாரித்ததை ஒத்தது.

முற்றும் - மூன்று புவனங்களையும், உலகுக்கும் - வேற்றுமை மயக்கம். 'யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்' (நன். பெயர். 60).

பா - ம். 2. நீர்த்தான்றானும்; தெறிப்புற்றான், தெரிப்பு, தெரிவு.

3. போர்த்தான் பொற்றோள் முற்று மளந்தான் புகழ்ச் சங்கம், பேர்த்தான்......பிற சங்கம்.

4. வில்லொலி யெல்லாம். 190

## வேறு

3423. பல்லாயிர கோடியர் பல்கலைநூல்
வல்லாரவர் மெய்ம்மை வழங்கவலார்
எல்லாவுல கங்களு மேறியபோர்
வில்லாள ரரக்கரின் மேதகையார்.

பல் ஆயிரம் கோடியர் - பல ஆயிர கோடி எண்ணிக்கையுள்ளவரும், பல் கலை நூல் வல்லார் அவர் - பலவித கலை நூல்களைக் கற்றுத் தேர்ந்தவர்களும், மெய்ம்மை - செந்நெறியிலே, வழங்க வலார் - படைகளைக் கையாள வல்லவர்களும், எல்லா உலகங்களும் - அனைத்து உலகங்களிலும், ஏறிய - புகழ் மிகப் பெற்ற, போர் வில்லாளர் - போரிற் சிறந்த வில் வீரர்களும், அரக்கரின் மேதகையார் - இராக்கதரில் மேலான தகுதி வாய்ந்தவர்களும், சென்று செறிந்தனர் என்று அடுத்த செய்யுளுடன் இயையும்.

பல் கலைநூல் - போர்க்கலை ஆயுர்வேதக் கலை முதலியன. மெய்ம்மை - உண்மையான போர் முறை. ஏறுதல் - புகழால்மேம்

படுதல். வில்லாளர்: 'நினையா வில்லாளனே' (சுந்தர. 492); மேதகையவர்; (யுத்த. இராவணன் மந்திர. 67).

பி-ம். 1. பல்படையே, பல்படை நூல், பல்வகைநூல், பற்பல நூல்.

2. வல்லாரிவர். 191

3424. வென்றாருல கங்களை விண்ணவரோ
டொன்றாவுயர் தானவ ரோதமெலாம்
கொன்றார்நிமிர் கூற்றென வெவ்வுயிரும்
தின்றாரெதிர் சென்று செறிந்தனரால்.

உலகங்களை - உலகங்களை, வென்றார் - வென்று கொண்டவரும், விண்ணவரோடு - வானவரோடு, ஒன்றா - ஒரு சேர, உயர் தானவர் - வலிமையால் மேம்பட்ட, அரக்கர்களின் ஓதம் எலாம் - கடல் போன்ற பெருந்திரளை யெல்லாம், கொன்றார் - கொலை செய்தவரும், நிமிர் கூற்று என - (உயிர்களைக்) கொண்டு போவதற்கு முன் எழுகின்ற யமன் என்னுமாறு, எவ் உயிரும் தின்றார் - எவ்வுயிரையும் தின்றவருமான அவ்வரக்கர்கள், சென்று எதிர் செறிந்தனர் - சென்று (இராமபிரானுக்கு) நேராக நெருங்கினார்கள். ஆல்: அசை.

ஓதம் - கடல். இங்கே அரக்கர் பெருந்தொகுதியைக் குறித்து நின்றது. நிமிர்தல் - தான் மேற்கொண்ட காரியத்தில் ஊக்கி நிற்றல்: உயிரைத் தின்னுதல்; மரபு வழுவமைதி.

பி-ப். 1. விண்ணுலகோடு.

2. தானவர் யூகமெலாம்.

4. செறுத்தநரால். 192

3425. வளைத்தார் மதயானையை வன்றொழுவிற்
றளைத்தா ரெனவந்து தனித்தனியே
உளைத்தா ருருமேறென வொன்றலபோர்
விளைத்தா ரிமையோர்கள் வெதும்பினரால்.

வந்து - (அங்ஙனம் நெருங்கி) வந்து, மத யானையை - மதம் கொண்ட வேழத்தை, வல் தொழுவில் - வலிய யானைக் கூடத்தே தளைத்தார் என - பிணித்தார் போன்று, வளைத்தார் - (இராம பிரானைச்) சூழ்ந்து கொண்டு, தனி தனியே - தனித்தனியாக, (தடுத்து), உரும் ஏறு என உளைத்தார் - பேர் இடி போன்று முழங்கி, ஒன்று அல போர் விளைத்தார் - ஒரு தன்மையில் அகப் படாத பலவான போரைச் செய்தார்; (அது கண்டு), இமையோர்கள் - தேவர்கள், வெதும்பினர் - மனத்து வெம்மை கொண்டனர். ஆல்: அசை.

இராமபிரான் மதயானை; 'இருகை வேழத்திராகவன்' (கடவுள்வாழ்த்து); தொழு - யானைக் கூடம். ஒன்றல: 'ஒன்றல பலபல உறுதி யோதினன்' (யுத்த. 315) வெதும்பினர்: 'விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல்' (சுந்தர. 334).

இதன்பின் 'தேரார்ப்பொலி' என்ற பாடல் இரு பிரதிகளில்.

பி - ம். 1. வன்றெழுிவில், வான்றெழுவில்.

3. ஒன்னலர் போர். 193

3426. விட்டீய வழங்கிய வெம்படையிற்
சுட்டீய நிமிர்ந்த சுடர்ச்சுடரும்
கட்டீயு மொருங்கு கலந்தெழலால்
உட்டீயுற வெந்தன வேழுலகும்.

விண் தீய - விண்ணுலகமும் வேகுமாறு, (அரக்கர்) வழங்கிய - பிரயோகித்த, வெம் படையில் - கொடிய போர்க் கருவிகளில், சுட்டீய நிமிர்ந்த - சுடும்படி எழுந்த, சுடர் சுடரும் - சுடருடைய தீயும், கண் தீயும் - (கோபத்தால் அவர்களுடைய) விழியினின்று கிளம்பிய தீயும், ஒருங்கு கலந்து - ஒன்று கூடி, எழலால் - மேல் எழுந்த தனல், ஏழு உலகும் தீ உள் உற வெந்தன - ஏழு உலகங்களும் தீ உள்ளேபுகுந்து வெந்தன.

சுட்டீய, விட்டீய - விண் தீய; செய என்னும் வாய்பாட்டுச் சொற்கள். இதனையும் வினைத் திரிசொல்லாக்கிப் பகைவர் களத்தைவிட்டு நீங்குமாறு என்றும் பொருள் கொள்ளலாம்.

வினைத் திரிசொல் - இக்காலத்து வழக்கு வீழ்ந்தது. பண்டைச் சங்க நூல்களாகிய பதிற்றுப்பத்து, புறநானூறு முதலியவற்றில் இவைகளைக் காணலாம்.

இதன்பின் 'எல்லாரும்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

பி - ம். 1. வெட்டிய ; விளங்கிய.

4. எவ்வுலகும். 194

இச் செய்யுள் 'தேரார்ப்பொலி' என்ற பாடலுக்குப்பின் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

3427. தேரார்ப்பொலி வீரர் தெழிப்பொலியும்
தாரார்ப்பொலி யுங்கழல் தாக்கொலியும்
போரார்சிலை நாணி புடைப்பொலியும்
காராற்பொலி யுங்களி றார்ப்பொலியும்.

தேர் ஆர்ப்பு ஒலி - தேர்கள் விரையும்போது ஏற்படுகின்ற ஆரவாரவொலியும், வீரர் தெழிப்பு ஒலியும் - வீரர்கள் அதட்டுகின்ற ஒலியும், தார் ஆர்ப்பு ஒலியும் - கிண்கிணி மாலைகளின் பேரொலியும், கழல் தாக்கு ஒலியும் - வீர கண்டைகள் (ஒன்றோடொன்று) உராய்வதனால் நிகழும் ஒலியும், போர் ஆர்சிலை நாணி புடைப்பு ஒலியும் - போர் செயற்கமைந்த வில்லினது நாணியைத் தெறித்ததால் விளையும் குணத்தொனியும், காரால் பொலியும் களிறு ஆர்ப்பு ஒலியும் - மேகம் போன்று விளங்குகின்ற வேழங்களின் பிளிற்றொலியும் (அச் சேனையில் மிகுதியாக எழுந்தன).

தெழித்தல் - உரப்புதல்.. காரால் பொலி - கரு நிறத்துடன் விளங்குகின்ற எனினுமாம்.

பி - ம். 2. கழலார்ப்பொலி.

3. போரரார்ப்பொலி, போரரார்ச்சிலை, போராற்சிலை.

4. காரரர்ப்பொலியும், கழல் ஆர்ப்பு. 165

## இராமபிரான் அம்பு மழை பொழிய அரக்கர் சேனை அழிதல்

3428. எல்லாரு மிராவண னேயனையார்
வெல்லாவுல கில்லவர் மெய்வலியார்
தொல்லார் படைவந்து தொடர்ந்ததென
நல்லானு முருத்தெதிர் நண்ணினனால்.

எல்லாரும் - (அந்த அரக்கர் சேனையில் உள்ள) எல்லோரும், இராவணனே அனையார் - இராவணனையே நிகர்த்தவர்; வெல்லா உலகு இல்லவர் - (தம்மால்) வெல்லப் பெறாத உலகம் இருக்கப் பெறாதவர்; மெய் வலியார் - உண்மையான உடல் வன்மையுடன் கூடியவர்; (இத்தகைய) தொல்லார் படை வந்து தொடர்ந்தது என - பழமையானவரின் சேனை வந்து தொடர்ந்தது என்று கருதி, நல்லானும் - உத்தமனும் நல்ல வீரனுமான இராமபிரான், உருத்து - வெகுண்டு, எதிர் நண்ணினன் - எதிரே சென்றான். ஆல் : அசை.

மூலபலமாதலின் தொல்லார் படை எனப் பட்டது. 'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்' (யுத்த. 3204) என்று முன் கூறப்பட்டமை காண்க. உருத்தல்; 'ஊனகு வாளொரு கைக்கொடுருத்தான்' (யுத்த. 2804).

பி - ம். 2. மெய் வலியாற்.
3. சொல்லார் புடை. 196

3429. ஊழிக்கனல் போல்பவ ருந்தினபோர்
ஆழிப்படை யம்பொடு மற்றகலப்
பாழிக்கடை நாள்விடு பன்மழைபோல்
வாழிச்சுடர் வாளி வழங்கினனால்.

ஊழி கனல் போல்பவர் - பிரளய காலத்துக்கு நிகரானவரான அரக்கர், உந்தின - செலுத்தின, போர் - போர்க்குரிய, ஆழி படை - சக்கராயுதம், அம்பொடும் - (ஏவுதற்குக் கைக்கொண்ட) வாளியுடனே, அற்று அகல - முறிந்து ஒழியுமாறு, பாழி - வலிய, கடை நாள் விடு - யுகத்திறுதியில் பெய்கின்ற, பல் மழைபோல் - பெரு மழை போன்று, சுடர் வாளி - ஒளி பொருந்திய சரங்களை, வழங்கினன் - பிரயோகித்தான். (இராமபிரான்) வாழி : ஆல் : அசை.

அழிக்கும் பேராற்றலாலும் தீயெழ விழிக்கின்ற கண்களாலும் ஊழிக்கனலை ஒப்பானவர்கள். போர் ஆழிப்படை - போர்க்குரிய சக்கராயுதம். பாழி - வலிமை ; 'பாழியபணைத் தோள்வீர' (சுந்தர. 56) ; பல் மழை - நீர் மழை, நெருப்பு மழை, கல் மழை முதலியன நல்லவர்களை வாழ்விக்கும் வாளி ஆதலின் வாழிச் சுடர்வாளி எனப் பட்டது.

பி - ம். 1. போல வருந்தின. 197

3430. சூரோடு தொடர்ந்த சுடர்க்கணைதான்
தாரோ டகலங்கள் தடிந்திடலும்
தேரோடு மடிந்தனர் செங்கதிரோன்
ஊரோடு மடிந்தன னொத்துரவோர்.

சூரோடு தொடர்ந்த - வன்மையுடன் இயைந்த, சுடர் - ஒளி வாய்ந்த, கணைதான் - (அந்த இராம) பாணம், தார் ஒடு - (பகைவரின்) வாகைமாலை சூடப்பெற்ற, அகலங்கள் தடிந்திடலும் - மார்புகளை அறுத்திடவே, செம் கதிரோன் - செந்நிறம் வாய்ந்த கதிர்களையுடைய சூரியன், ஊரோடும் மடிந்தனன் ஒத்து - ஊர்கோளுடன் வீழ்வதை ஒத்து, உரவோர் - வல்லாளரான அவ்வரக்கர், தேரோடும் மடிந்தனர் - தேரோடும் இறந்து பட்டனர்.

தேருக்கும் வீரர்க்கும் முறையே ஊர்கோளும் சூரியனும் உவமை. தற்குறிப்பேற்றவணி. அகலங்களைத் தாரோடு தடிந்திடலும் எனினுமாம். சூர் - வலி, அகலம் - மார்பு; 'ஏமத்தடங் கவசத்திக லகலத்தன்' (யுத்த. 2985) ; ஊரோடு மடிந்தனன் ஒத்து : 'ஊரிழந்த கதிர் ; தேரையிழந்த வீரன்' (யுத்த. 1028) ; (யுத்த. 2450). உரவோர் ; 'உரவோரும்பல்' (புறநா. 18).

பி - ம். 3. தேரோடும் விழுந்தனர்.
4. மறிந்தன வொத்து, மறிந்தன ரொத்து, மடிந்தன வொத்து, மடிந்ததை யொத்து, விழுந்ததை யொத்து; உளதால். 198

3431. கொல்லோடு சுடர்க்கணை கூற்றினிணப்
பல்லோடு தொடர்ந்தன பாய்தலினல்
செல்லோடெழு மாமுகில் சிந்தினபோல்
வில்லோடும் விழுந்த மிடற்கரமே

கொல் ஒடு - கொல்லுதல் தொழில் மிக்குள்ள, சுடர் கணை - ஒளியுடன் கூடிய அம்புகள், கூற்றின் - யமனுடைய, நிணம் - கொழுப்புப் படிந்த, (பற்கள் ஒத்த), பல்லோடு - பற்களால், தொடர்ந்தன பாய்தலினல் - தொடரப் பெற்றனவாய்ப் பாய்தலினுல், வில்லோடும் - வில்லுடனே, விழுந்த மிடல் கரம் - விழுந்த வலிய, (அவ்வரக்கர்) கைகள், செல்லோடு எழு - மின்னலுடன் மேலெழுகின்ற, மாமுகில் - கரிய மேகங்கள், சிந்தின போல்-சிந்தின போன்று. (காணப்பட்டன). ஏ : அசை.

கொல் - கொல்லும் தொழில்; 'கொல்லார் மழுவாட் படையாய்' (தேவா. 966, 1); செல் - இடி; 'செல்லொலி திரடோள் கொட்டும் சேணொலி' (யுத்த. 2384); 'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' (திருமுரு. 5); 'நல்லமர்க்கடந்த நின் செல்லுறழ் தடக்கை' (பதிற். 52, 10); மாமுகில் - பெரிய மேகம் எனினும் ஆம்.

பி - ம். 1. சொல்லொடு ; கூற்றினரும், சுற்றினரும்.
2. தொடர்ந்தெனப் ; மால்சிலை சிந்தின ; மாயந்தால்.
4. விடக்கரமே, வடற்கரமே. 199

3432. செம்போ டுதிரத்திரை சிந்துவின்வாய்
வெம்போ டரவக்குல மேல்நிமிரும்
கொம்போடும் விழுந்தன வொத்தகுறைந்
தம்போடு விழுந்த வடற்கரமே.

குறைந்து - துணிக்கப்பட்டு, அம்போடு - (தொடுக்கக் கைக் கொண்ட) வாளியுடன், செம்போடு - செந்நிறத்தோடு பொருந்திய, உதிரம் திரை சிந்துவின் வாய் - இரத்தங்களான அலைகடலிலே, விழுந்த அடல் கரம்-விழுந்த வலிய கைகள், வெம்பு ஒடு அரவம் குலம் - வெகுண்டு விரைகின்ற பாம்புக் கூட்டம், (தாம் உறைந்த) மேல் நிமிரும் கொம்போடும் - மேலுயர்ந்த மரக் கிளைகளோடும், விழுந்தன ஒத்த - விழுந்தவற்றை ஒத்தன. ஏ: அசை,

உதிரத்திற்குச் செம்பு பல இடங்களிலும் உவமையாக இவ்வாசிரியர் கூறுகிறார்: 'செம்பொத்த குருதி தேக்கி யுடலையும் தின்பேனென்றான்' (யுத்த. 254); 'செப்பிற் செம்புனல் தோய்ந்த' (யுத்த. 982); 'உருக்கிய செம்பன உதிரக்கண்ணினான்' (யுத்த. 1469); இதன் உரையும் காண்க. கொம்பு - மரக்கிளை. 'கொம்போடடை பூக்கனி காயெனினும், வம்போமர மொன்றெனும் வாசகமே' (யுத்த. 240); கைக்குப் பாம்பு உவமை.

பி - ம். 1. ஆழியின்வாய்.
3. கொம்போடு மெழுந்தன; குறைத்து. 200

3433. முன்னோ டுதிரப்புனன் மூதுலகைப்
பின்னோடி வளைந்த பெருங்கடல்வாய்
மின்னோடும் விழுந்தன மேகமெனப்
பொன்னோடை நெடுங்கரி புக்கனவால்.

பொன் ஓடை, நெடு கரி - பொன்னாலாகிய நெற்றிப் பட்டம் அணியப் பெற்ற உயர்ந்த யானைகள், முன் ஓடு - முன்னே ஓடுகின்ற, உதிரம் புனல் - இரத்தப் புனலை, பின் ஓடி - பின்பற்றி ஓடி, முதுமை உலகை - பழமையான உலகினை, வளைந்த - சூழ்ந்து கொண்ட, பெரு கடல் வாய் - பெரிய கடலிடத்து, மின்னோடும் விழுந்தன - மின்னலுடன் வீழ்ந்த, மேகம் என - மேகம் எனும்படி, புக்கன - நுழைந்தன. ஆல்: அசை.

ஓடை - யானையின் நெற்றிப் பட்டம்; 'ஓடை யானையும் தேரும் உருட்டினான்' (யுத்த. 3149); 'பொன்னோடை புகரணி நுதல்' (புறநா. 3); பொன்னாலாகிய நெற்றிப்பட்டம் அணிந்த கரிய யானைகள் உதிர வெள்ளத்தால் இழுக்கப்பட்டுக் கடலை யடைந்தவை, கடலில் மின்னோடு வீழும் மேகம்போலு மெனப்பட்டது. தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. உதிரத்நிடை, உதிரத்நிரை; மூவுலகைப்.
3. வளைத்த.
3. எழுந்தன.
4. நெடுங்கிரி. 201

3434. மறவெற்றி யரக்கர் வலக்கையொடும்
நறவக்குரு திக்கடல் வீழ்நகைவாள்
சுறவொத்தன மீது துடித்தெழலால்
இறவொத்தன வாவு மினப்பரியே.

நறவம் குருதி கடல் - மணமுள்ள உதிரக் கடலிலே, மறம் வெற்றி - வீரத்தையும் வெற்றியையும் உடைய, அரக்கர் - அரக்கருடைய, வலம் கையொடும் - வலக் கையுடனே, வீழ் நகைவாள் - வீழ்ந்த ஒளியுள்ள வாள்கள், மீது துடித்து எழலால் - மேலே துடித்து எழுதலால், சுறவு ஒத்தன - சுறவை ஒத்தன; (அங்ஙனமே) வாவும் இனம் பரி - தாவுகின்ற இனமான குதிரைகளும், இறவு ஒத்தன - இறவு மீனை யொத்தன. ஏ : அசை.

மற வெற்றி - உம்மைத் தொகை. சுறவு - இறவு மீன் வகை. இவை முறையே சுருவென்றும் இரு அல்லது இருல் என்றும் வழங்கும். 'சுறவினத்தன்ன வாளோர் மொய்ப்ப' (புறநா. 13); 'தூத்திரஞ் சுருவினங் தொக்கபோன் மறவரும்' (சீவக. 2325); இரு : 'கூர் நல்லிறவின் பிள்ளையொடு பெறுஉம்' (புறநா. 342); இனப் பரிகள் சாதிக் குதிரைகளுமாம். வாவுதல் - தாவுதல்; 'வாவுமின மான்காள் மயில்காள்' (நைடத. பிரிவுறு : 18).

பி - ம். 2. இறவக்.

3. தொடர்ந்தெழலால்.

4. உற்றன வாமிவுளிப் பரியே. 202

3435. தாமச்சுடர் வாளி தடிந்தகலப்
பாமக்குரு திப்படி கின்றபடைச்
சேமப்படர் கேடக மால்கடல்சேர்
ஆமைக்குல மெத்தனை யத்தனையால்.

தாமம் சுடர்வாளி - பேரொளி யமைந்த அம்புகளால், தடிந்து அகல - (கரம்) துணிபட்டு வீழ்வதனால், பாம் - பரவிய, அ குருதி - அந்த உதிரத்தில், படிகின்ற - தோய்வனவாய், படை படர் - சேனைக்கண் உள்ள வீரர்கள், சேமம் கேடகம் - தமது பாதுகாப்பிற்காக ஏற்ற பரிசைகள், மால்கடல் சேர் - பெரிய கடலைச் சேர்ந்த,

ஆமை குலம் எத்தனை அத்தனை - ஆமைத்திரங்கள எத்தனையோ அத்தனையாம். ஆல், அசை.

தாமம் ஒளி; 'தாம மூவுலகமும் தழுவிச் சார்தல்ால்' (யுத்த. 205); பாவுதல்: பரத்தல்; பாமம்: ஆழம்; பழையவுரை. படர்: வீரர்; வடசொல்: யமபடர் என்ற வழக்குக் காண்க. (வி. பா. 13ஆம் போர். 1), படர்:கிடந்தனர் பல் பகைக்கையினர் யுத்த. 2073. இச்சொல் இக்காப்பியத்தில் இரண்டோரிடங்களிலேதான் பயின்றுள்ளது. மால் கடல்: கரிய கடலுமாம். பரிசைகள் எண்ணிறந்தன; அவை வடிவில் ஆமை போன்றிருத்தலின் ஆமைக் குலத்தைக் கூறினர் என்க. ஆமை: 'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கலாற்றின்' (குறள், 126); கடலாமை: சுத்தநீர் ஆமை என்ற வகைகள் உண்டு; 'கூவலாமை குரைகடலாமையை' (தேவா. 1218 : 5); என்றது காண்க. 'அடங்கலா லாமைபோன்றும்' (சீவக. 1895): 'நெடுமணி யூபத்திட்ட தவழ் நடையாமை' (சீவக. 1878).

பி - ம். 1. தடித்தகலப்.

3. சேமப்படை, சேமப்பிடி, சேமப்படு.

4. ஒத்தனவத்தனையால், ஒத்தனவத்தனையும். 203

3436. காம்போடு பதாகைள் காருதிரப்
பாம்போடு கடற்படி வுற்றனவால்
வாம்போர்நெடு வாடை மலைந்தகலக்
கூம்போடுயர் பாய்கள் குறைந்தனபோல்.

வாம்போர் - தாவிச் செய்கின்ற போரில், நெடுவாடை மலைந்த - பெரிய வாடைக் காற்றினால் அலைக்கப்பட்ட, கலம் உயர் பாய்கள் - மரக்கலங்களில் உயர்ந்த பாய்கள், கூம்போடு (பாய்மரத்துடன்) மூழ்கியனபோல, காம்போடு பதாகைகள் - பிடியொடு கூடிய பெருங்கொடிகள், கார் - கருநிறம் மருவிய, உதிரம் பாம்பு - உதிரப் பரப்பாகிய, ஓடு - ஓடுந் தன்மையுள்ள, கடல் படிவுற்றன - கடலில் வீழ்ந்து படிந்தன. ஆல், அசை.

காம்பு: மூங்கில்; இங்கே பதாகைகளின்பிடி. பதாகை: பெருங்கொடி. உதிரப் பாம்பு: பாம்பு; வாவும் என்பது வாம்

எனத்தொகுத்தது 'கவனவெம்பரி' (யுத்த. விடை: 24) என்றது காண்க, கலம்: மரக்கலம்; 'கெடுநீரார் காமக்கலன்' (குறள். 605); என்ற இடத்து கெட்டநீர்மையர் விரும்பி யேறுகின்ற மரக்கலம் என்று ,பரிமேலழகர் எழுதுவது காண்க. கூம்பு: பாய்மரம்; 'கூம்பு முதன் முறிய வீங்குபிணிய வீழ்ந்து' (மணி. 4, 30); பதாகை: மீதுறு பதாகையென வீசியது (யுத்த. இராமன் தேரேறு. 10). தற்குறிப்பேற்றம்.

இதன்பின் 'தெளிவுற்ற' என்ற பாடல் ஓர்பிரதியில்.

பி - ம். 1. கலைந்த பதாகையினம்.

3. மலைத்தகலக் மறிந்தகலக்; குறைந்தகலக். 204

3437. மண்டப்படு சோரியின் வாரியின்வீழ்
கண்டத்த கரத்தொகை கவ்வியதால்
முண்டக்கிளர் தண்டன முட்டொகுவன்
துண்டச்சுற வொத்த துடித்தனவால்.

மண்டப்படு சோரியின் வாரியின் - மிகுதியாகப் பெருகுகின்ற உதிரப் புனலிலே, வீழ் - வீழ்ந்த, கண்டத்து - துணிக்கப்பட்ட, கரம் தொகை - கைத்தொகுதியை, கவ்வியதால் - (அம்புகள்) கவ்வியதனுல், (அவை) முண்டம் கிளர் - தாமரை மலரில் விளங்குகின்ற, தண்டு அன - தண்டினை நிகர்த்த, முள் தொகுவன் துண்டம் - முள்தொக்க வலிய துண்டத்தையுடைய, சுறவு ஒத்த- சுறுமீனை யொத்தனவாய்த், துடித்தன - துடித்தன. ஆல், அசை.

மண்டுதல்: மிக்குச் செல்லுதல்; சோரியின் வாரியின்; இணையெதுகை நயம் காண்க. கண்டம்: துண்டம்; கண்டத்த கரத்தொகை - துண்டு படுத்தப் பட்ட கரத்தொகுதிகள். இவை முள் தொக்க வலிய சுறுத்துண்டுகளை ஒத்தன. முண்டம்: முண்டகம் என்பதன் விகாரம்; முண்டகம்: தாமரை; சுறு மீனுக்கும் முள் உண்டு; கைகள் சுறு மீனையொத்தன.

பி - ம். 1. மண்டபப்படி ; பல்கணைமாரியின்.

2. கண்டத்தொகைசவ்விய தொன்,

3. முண்டத்திரிதண்டின் முரட்டொருவன். 205

3438. தெளிவுற்ற பளிங்குறு சில்லிகொள்தேர்
விளிவுற்றுற வேறுற வீழ்வனதாம்
அளிமுற்றிய சோரிய வாழியிலாழ்
ஒளிமுற்றிய திங்களை யொத்துளவால்.

தெளிவு உற்ற - தெளிவு பொருந்திய, பளிங்கு உறு - பளிங்கினைமான, சில்லிகொள்தேர் - சக்கரத்தையுடைய தேர், விளிவு உற்று உற - அழிந்து போகையில், வேறு உற வீழ்வன தாம் - தனித்து வீழ்வனவாகிய அச்சில்லிகள், அளி முற்றிய - பாணங்களினுல் நிரம்பத்தோன்றிய, சோரிய - உதிர நீரையடைந்தனவாய்; ஆழியில் ஆழ் - கடலுள் அமிழ்கின்ற, ஒளிமுற்றிய - ஒளி நிரம்பிய, திங்களை ஒத்துள - சந்திரர்களை ஒத்தன. ஆல், அசை.

பி - ம். 1. லில்லிகடேர்.

2. விளிவிற்றுக. விளிவுற்றுக, விளியுற்றுற ; வேறு கவீழ்வனவும்.

3. அளிவற்றுகு, அளிபெற்றுகு ; சோரியிலாழியிலாழ், சோரியின் வாரியினும் ஆழியினுர்.

4. ஒத்துளதால் ; ஒத்தனவால். 206

3439. நிலை கோடலில் வென்றி யரக்கரைநேர்
கொலை கோடலின் மன்குறி கோளுறுமேல்
சிலைகோடிய தோறு சிரத்திரள்வன்
மலை கோடியின் மேலு மறிந்திடுமால்.

நிலை கோடல் இல் - நன்னெறியை ஏற்றலில்லாத, (இதுவரையில்), வென்றி அரக்கரை - வெற்றி பெற்றிருந்த இராக்கதரை நேர் கொலை கோடலின் - நேராகக் கொலை கொள்வதில், மன் குறி கோள் உறுமேல் - இராமபிரான் மனம் வைத்தனர் என்பதனுல்' (அப்பெருமானுடைய) சிலை - வில்லானது, கோடிய தோறும் - தவறிச் செல்லும் தோறும், சிரம் திரள் - சிரத்தொகுதி, வல் மலை

கோடியின் மேலும் - வலிய மலை கோடியின் மேலும், மறிந்திடும் - மறிந்திடுவன போன்றுயின. ஆல், அசை.

நிலை கோடல்: நிலைமாறுதல்; கொடுதல்: கோறுதல். குறி கோளுறுதல் ; குறிக்கொள்ளுதல்,

பி - ம். 1. நிலை கோடிய ; கொண்டலில் ; அரக்கரும்.
2. கோடி நமன், கோட நமன் ; குறிகோளுறுமே.
3. சினத்திளவன்.
4. மறிந்துறுமால், மறிந்திறுமால், மறித்திறுமால். 207

இதன்பின் 'பாருடு' என்ற பாடல் ஓர்பிரதியில்.

3440. திண்மார்பின் மிசைச்செறி சாலிகையின்
கண்வாளி கடைச்செறி கானநுழைந் -
தெண்வாயுற மொய்த்தன வின்னறையு
றுண்வாய்வரி வண்டின மொத்தனவால்.

திண்மார்பின் மிசை - திண்ணிய மார்பின்மீது, செறி - நெருங்க அமைத்த, சாலிகையின் கண் - கவசத்தினிடத்து, வாளி - அம்புகளின், கடைசெறி கானம் - கடையாகிய செறிந்த தொகுதி, நுழைந்து - புகுந்து, எண் வாய் உறமொய்த்தன - எண்ணும் தன்மை அமைந்து மொய்த்தவை, இன் நறை உற்று - இனிய தேனை அமைத்து, உண்வாய் - உண்ணுகின்ற வாயினையுடைய, வரி வண்டின் - பல நிறம் கொண்ட வண்டுகளின், இனம் ஒத்தன - இனத்தை ஒத்தன. ஆல், அசை.

சாலிகை : கவசம் ; 'சாலிகை முதலவான போர்ப் பரம்' (யுத்த. வேலெற்ற. 3516); உண்வாய்: வினைத்தொகை. வரி: கோடுமாம் ; பாணங்கட்கு வண்டு உவமை.

பி - ம். 1. திண் மார்பு ; மிசைச்செறு, மிசைக் சிறை காண நுழைந்து.
2. சிதைக் கண்ணின் ; சிறை காண.
3. வாயிற, வாயுற ; இன்னறவு, இன்னுறை. 208

## அரக்கப் படையைக் கொன்று குவிக்குமாறு இராமபிரான் சாரிவந்தமை

3441. பாறாடு களத்தொரு வன்பகலின்
கூறாகிய நாலிலோர் கூறிடையே
நூறாயின யோசனை நூழில்கள்சால்
மாறாதுழல் சாரிகை வந்தனனால்.

பாறு ஆடு - பருந்துகள் சரிக்கின்ற, நூறு யோசனை ஆயின - நூறு யோசனைப் பரப்புள்ள, களத்து - போர்க்களத்து, ஒருவன் - தனிப்பட்ட வீரனான இராமபிரான், பகலின் நாலில் ஓர் கூறு ஆகிய கூறிடையே - பகலின் நான்கில் ஓர் பகுதியான கால அளவிலே, நூழில்கள் சால் - அரக்கரைக் கொன்று குவிக்கும் தொழிற்குப் பொருந்த, மாறாது உழல் சாரிகை வந்தனன் - மாறாது முயன்று புரிகின்ற சாரிகை வந்தான். ஆல் : அசை.

பாறு - பருந்து. நூழில் - கொன்று குவித்தல்; ஓர் அரிய போர்ச் செயல். சாரிகை - வலசாரி யிடசாரி வருதல்.

பி - ம். 2. காலினோர் கூறிடையே.
3. நூறாகிய யோசனை ; நூழில்களாம், நூழில்களம்.
4. மாறாததொர் ; வந்திடுவான். 209

3442. நின்றாருட னின்று நிமிர்ந்தயலே
சென்றாரெதிர் சென்று திரிந்திடலால்
தன்தாதையை யோர்வுறு தன்மகனேர்
கொன்றானவ னேயிவ னென்றுகொள்வார்.

நின்றார் உடனே நின்றும் - (இராமபிரான்) நின்றவருடனே நின்றும், அயலே - அண்மையில், நிமிர்ந்து - கால் நிமிர்ந்து, சென்றார் எதிர் சென்றும் - சென்றார்க்கு நேராகச் சென்றும், திரிந்திடலால் - திரிந்து போர் செய்து கொல்லுமாதலின், ஓர்வு உறு - ஓர்தல் பொருந்திய, தன் மகன் நேர் - தன் புதல்வனுக்கு எதிரே, தன் தாதையை - அவன் தந்தையை, கொன்றான் - கொன்றானாகிய, அவனே - அந்த நரசிங்கப் பெருமானே, இவன் என்று கொள்வார் - இவன் என்று கருதுவார்கள்.

'எங்கும் உளன் கண்ணன்' (திருவாய். 2, 8, 9) என்றபடி போர்க்களத்தில் எங்கும் காணப்படுவதால் இவன் நரசிங்கப் பெருமானாகத் தோன்றிய திருமாலே என்று அப் போர்க்களத்தில் உள்ளவர் எண்ணலாயினர். ஓர்வுறு தன்மகன் - தன்னையுணர்ந்து தலைவனையும் உணர்ந்த பிரகலாதன்; 'ஆயவன் தனக்கரு மகன் அறிஞரின் அறிஞன்' (யுத்த. 148) என்ற செய்யுள் இங்குக் காணத்தகும். ஓர்வுறு தன்மகன் நேர் தாதையைக் கொன்றவன் - நரசிங்கன். மகன் - பிரகலாதன். தந்தை இரணியன்; தாதை - தந்தை; 'தாதையைக் கொன்றான் பின்னே தலைசுமந்திருகை நாற்றி' (யுத்த 938); இராமபிரானுக்கு நரசிங்கமூர்த்தி உவமை.

பி - ம். 1. நின்றுருடன் வந்து.
2. சிதைந்திடலால், சிரித்திடலால்.
3. என் மகனேர், தன் மகனைக்.
4. கொன்றானவ னேயவனென்று கொள்வார், கொன்றானிவனே யவ னென்று கொளீர். 210

3443. இங்கேயுள னிங்குள னிங்குளனென்
றங்கேயுணர் கின்ற வலந்தலைவாய்
வெங்கோப நெடும்படை வெஞ்சரம்விட்
டெங்கேனும் வழங்குவ ரேகுவரால்.

(இராமன் வெகு விரைவாகச் சுற்றிச் சாரிகை வருதலின் எங்கும் காணப்படுவானாக), 'இங்கே உளன் இங்கு உளன் - இங்கு உள்ளான் இவ்விடத்தில் இருக்கின்றான், இங்கு உளன் - இங்கு உள்ளான்' என்று-என்று, அங்கே-அந்தக் களத்தில், உணர்கின்ற அலம் தலைவாய்-தெளிகின்ற கலக்கமான நிலையிலே அச் சேனையின் உள்ளார், வெம் கோபம் - கடுஞ்சினத்துடன், நெடு படை - நெடிய விற்படை யினின்று, வெம்சரம் விட்டு - கொடிய அம்பினை எய்து, (இராமபிரானை இலக்காகப் பெறாது) எங்கேனும் வழங்குவர் - எங்கோ வேறிடங்களில் எய்வாராய், ஏகுவர் - (தாம்) உயிர் நீங்கப் பெறுவர். ஆல்: அசை.

வெங் கோபம், நெடும்படை வெம்சரம், என்பன அந்த வீரர் களின் கடுஞ் சினத்தைக் குறித்து நின்றது. அலந்தலை - கலங்கிய நிலை.

66

பி - ம். 2. உழல்கின்ற வலந்தலையால், உணர்கின்ற வலைத்தலைவாய்.

3. நெடுஞ்சரம் வெம்படை விட்டு.

4. எய்குவரால். 211

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

அங்கங்கவர் தம்மொடு மையனுயிர்க்
கங்கங்குள னென்பது தானறியாற்
கெங்கெங்கு மிராமனி ராமன்னெனு
வெங்கெங்கு மியம்பவு முற்றுளனால்.

**3444.** **ஒருவன்னென வுன்னுமு ணர்ச்சியிலார்**
**இரவன்றிது வோர்பக லென்பர்களால்**
**கரவன்றி திராமர் கணக்கிலரால்**
**பரவைமண லிற்பல ரென்பர்களால்.**

(இராமபிரான் எய்த அம்புகள் இருளை ஒழித்துத் தாம் ஒளி விடுதலால் அரக்கர்கள்), இது இரவு அன்று - இது இராக்காலம் அன்று, ஓர் பகல்-ஒருபகல் நேரம், என்பர்கள்-என்று பகர்வர்; (மேலும் இராமபிரான்) ஒருவன் - (இராமபிரான்) ஒருவனே, என - என்று, உன்னும் உணர்ச்சி இலார் - கருதும் நல்லுணர்வில்லாத அவர்கள், இது கரவு அன்று - இது வஞ்சகம் அன்று; இராமர் பரவை மணலில் பலர் கணக்கிலர் என்பர்கள் - இராமர் கடலின் மணலைப் போலப் பலராகி எண்ணிலராவர் என்று சொல்வார்கள். ஆல் : அசை.

பரவை மணல் - வரம்பின்றி எண்ண முடியாமைக்கு உவமை கூறப் பெறுவது; 'பரவை நுண் மணலெண்ணினும்' (யுத்த. 179); 'வண்ணக் கடலி னிடைக்கிடந்த மணலிற் பலரால் வானரத்தின், எண்ணற்கரிய படைத் தலைவர்' (கிட்கிந்தா. 602); 'வாழி : நன்னீர்ப்பஃறுளி மணலினும் பலவே' (புறநா. 9) என்று வாழ்த்துதல் காண்க.

பி - ம் 1. உணர்ச்சியிலீர்.

2. இதுவோ ; எய்தினரால்.

3. கரவன்றி ; உணக்கறவப், கணக்கிலவாம். 212

## அரக்கர் சேனையில் உள்ளார் தம்முள் அடித்துக்கொண்டு மாண்டமை

3445. ஒருவன்னொரு வன்மலை போலுயர்வோன்
ஒருவன்படை வெள்ளமொ ராயிரமே
ஒருவன்னொரு வன்னுயி ருண்டதலால்
ஒருவன்னுயி ருண்டது முள்ளதுவோ.

(இந்த அரக்கர் படையில்) ஒருவன் ஒருவன்-ஒவ்வொருவனும், மலைபோல் உயர்வோன் - மலை போன்றுயர்ந்த காட்சியன்; ஒரு வல் படை - ஒப்பற்ற வலிய சேனை, ஓராயிரம் வெள்ளம் - ஓராயிரம் வெள்ளமாகும்; (அந்தச் சேனையில் தம்மைத் தாமே இராமனாக மயங்க உணர்ந்து) ஒருவன் ஒருவன் உயிர் உண்டது அலால் - ஒருவன் மற்றொருவனுடைய உயிரைப் பருகியதல்லாமல், ஒருவன் - ஒப்பற்றவனான இராமபிரான், உயிர் உண்டது முள்ளதுவோ - (அப்போது அவர்களுடைய) உயிரை உண்டது உள்ளதுவோ? இல்லை என்றபடி. ஏ : அசை.

இராமபிரான் வாளியால் கொலையுண்டவர் பலர் இருக்க, அப்பெருமான் வெகு விரைவாகச் சாரி சுற்றுதலின் அவன்மீது அரக்கர் எய்யும் அப்பு குறிதவறி அடுத்து நின்ற அரக்கர் மீதுபட, அந்த அரக்கர் உயிர் விடுவார். இவ்வாறு அரக்கர் தம்மையே தாம் எய்து கொண்டு உயிர் நீத்தனர் என்க. இச் செய்யுளில் ஒருவன் என்ற சொல் பன்முறை வந்தது சொற்பொருட்பின் வருநிலையணி.

பி - ம். 1. உயர்வோர்.
2. ஆயிரமேல், ஆயிரமும்.
3. உண்ணுதலால்.
4. உண்பதும்; உள்ளதுவே. 218

அதிகப் பாடல்:—

ஏயுமை யிரண்டு கோடி யிறைவரோவ் வொருவர் சேனை
ஆயிர வெள்ளந் தானு மத்துணை வெள்ள மாகித்
தூயவ னவர்தம் சேனை தொலைத்தபின் னிறைவ ராவி
போயறப் பகழி மாரி பொழிந்தனன் பொன்றி வீழ்ந்தான்.

## அந்தச் சேனு வீரரான அரக்கர்க்கு இராமனது தோற்றம்

3446. தேர்மேலுளர் மாவொடு செந்தறுகட்
கார்மேலுளர் மாகடன் மேலுளரிப்
பார்மேலுள ரும்பர் பரந்துளரால்
போர்மேல விராமர் புகுந்திடுவார்.

போர் மேல இராமர் - போரை மேற்கொண்டவராய், புகுந்திடுவார் - புக்கு அழிப்பவரான இராமபிரான், தேர்மேல் உளர் - தேர் மீது உள்ளார்; மாவொடு - குதிரையுடனே, தறு - அழிப்பன போல் தோன்றுகின்ற, செம்கண் - சிவந்த விழிகளைக் கொண்ட, கார்மேல் உளர் - யானை மீதுள்ளார்; மாகடல் மேல் உளர் - பெரிய கடல்மேல் உள்ளார்; இ பார் மேல் உளர் - இந்தப் பூமியின்மீது உள்ளார்; உம்பர் பரந்து உளர் - வானிற் பரந்துள்ளார். அடுத்த செய்யுளுடன் தொடரும். ஆல் : அசை,

தறு - அழிக்கின்ற, கார் - இலக்கணையால் மேகம் போன்ற யானையைக் குறித்தது. உளர் - உள்ளார்; 'உளரென்னும் மாத்திரையரல்லார்' (குறள். 406).

பி - ம். 2. மேலுளர் நிர்.

4. போர் மேவிய விரர், மேலயர் விரர், மேலுமிராமர்; புகுந்தடுவார். 214

3447. என்னும்படி யெங்கணு மெங்கணுமாய்த்
துன்னுஞ்சுழ லுந்திரி யுஞ்சுடரும்
பின்னும்மரு கும்முட லும்பிரியான்
மன்னன்மகன் வஞ்சர் மயங்கினரால்.

என்னும்படி - என்று திகைப்புறும்படி, மன்னன் மகன் - தயரதன் புதல்வனான இராமபிரான், எங்கணும் எங்கணுமாய் - எல்லா இடங்களிலும் பொருந்தி, பின்னும் - பின்புறத்திலும், அருகும் - அண்மையிலும், உடலும் - உடலிலும், பிரியான் - பிரியாதவனாகி, துன்னும் - நெருங்குவான்; சுழலும் - சுற்றுவான், திரியும் - இங்கும் அங்கும் அலைவான்; சுடரும் - ஒளிவிட்டு நிற்பான்; (அது கண்டு) வஞ்சர் - வஞ்சகரான இராக்கத வீரர், மயங்கினர் - மருண்டனர். ஆல் : அசை.

மன்னன் மகன் - சக்கரவர்த்தித் திருமகனான இராமபிரான்.

பி - ம். 2. திரியுஞ் சுழலுந் தொடரும், திரியுஞ் சுடருஞ் சுழலும், திரியுந் தொடருஞ் சுழலும்.

3. அருகும் மெதிரும் ; ஒருவன்.

4. வீரர் மயங்கினரால். 215

## வேறு

## இராமபிரானுடைய வில் திறம்

3448. படுமத கரிபரி சிந்தின
பனிவரை யிரதம விந்தன
விடுதிசை செவிடுபி ளந்தன
விரிகட லளறதெ ழுந்தன
அடுபுலி யவுணர்த மங்கைய
ரலர்விழி யருவிகள் சிந்தின
கடுமணி நெடியவெ னுஞ்சிலை
கணகண கணவென னுந்தோறும்.

(இராமபிரானுடைய), நெடிய எனும் சிலை - நீண்டதெனப்படும் வில்லில் உள்ள, கடுமணி - கடுமையான ஓசையையுடைய மணிகள், (வில் அசைவதனால் தாமும் அசைவுற்று), கண கண கணன் எனும் தொறும் - கண கண கணவென்று ஒலிக்கும் தோறும், மதம் படு - மதம் பொருந்திய, கரி - யானையும், பரி - குதிரையும், சிந்தின - அழிந்தன; பனிவரை இரதம் அவிந்தன - இமய மலைபோன்ற தேர் அழிந்தன; விடு திசை - பரந்த திக்குகள், (அக்குரலால்) செவிடு பிளந்தன - செவிடுபடப் பிளந்தன, விரி கடல் அளறு அது எழுந்தன - பரந்த கடல் சேறுபட்டுக் காணப்பட்டன, (தம் கணவர்க்கு நேரக்கூடிய நிலையை நினைதலால்) அடுபுலி - கொல்லும் புலி போன்ற, அவுணர் தம் - அரக்கருடைய, மங்கையர் - மனைவிமார் களின், அலர் விழி - பரந்த விழியினின்று, அருவிகள் சிந்தின - துன்பக் கண்ணீராகிய அருவிகள் பாய்ந்தன.

மதம்படு என மாற்றுக. பனிவரை - இமய மலை ; 'பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்' (பால. கையடை. 7) அளறு-சேறு. அடுபுலி - வினைத்தொகை கண கண கணன், அநுகரணக் குறிப்பு.

பி - ம். 1. கரிகள் ; வரையல திரிந்தன.

2. விடுபடு திசை ; பரந்தன ; அளறெழுந்தன.

3. விடுபுலி ; அவுணர் மங்கையர் ; விழியருவி.

4. நெடிய வெஞ்சிலை ; கடிகை யோரரை செழும் கம்பலை ; கணவெனுந் தொறும். 218

இதன்பின் சில பிரதிகளில 'ஆனையாயிரம்' என்ற பாடல்.

வேறு

3449. ஊனேறு படைக்கைவீர
ரெதிரெதி ருருவந் தோறும்
கூனேறு சிலையுந் தானுங்
குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்
வானேறி னூர்கள் தேரு
மலைகின்ற வயவர் தேரும்
தானேறி வந்த தேரே
யாக்கினன் தனியே றன்னன்.

தனி ஏறு அன்னன் - ஒப்பற்ற ஆண் சிங்கம் போன்ற இராம பிரான், ஊன் ஏறு - ஊன் பொருந்தப் பெற்ற, படைகை வீரர் - போர்க் கருவிகளைக் கைக்கொண்ட வீரரின், எதிர் எதிர் - எதிர் எதிராக, உருவம் தோறும் - அவரவர் உருவம் தோறும், கூன் ஏறு - வளைவுடன் கூடிய, சிலையும் - வில்லும், தானும் - தானுமாக, குதிக்கின்ற - குதிக்கின்ற, கடுப்பின் கொட்பால் - விரைவின் தன்மையால், வான் ஏறினர்கள் தேரும் - இறந்த வீரர் உலகுபுகுமவர் தேரும், மலைகின்ற வயவர் தேரும் - பொருகின்ற வீரர்களின் தேரும், தான் ஏறிவந்த - (போர்க்களத்துக்குத்) தான் ஏறிவந்த, தேர் ஆக்கினன் - தான் ஏறி வந்ததான தரையாகிய தேராகச் செய்தான், எனவே தரை மட்டமாக்கினன் என்க. ஏ : அசை,; தேற்றமுமாம்.

சாரிகை திரிந்த வேகத்தால் பகைவர்களுடைய தேர்களைத் தரைமட்ட மாக்கினன் இராமபிரான். போர்க்களத்துத் தேர்மீது

இராமபிரான் வந்தவன் அல்லன் ஆதலாலும், அவன் போர்க்கு வந்தது தரைமீது நடந்தே யாதலாலும், இந்தத் தரையே ஒரு காலத்தில் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளுக்கே தேராக இருந்தமையானும், இப் பொருள் கூறப்பட்டது. தான் ஏறிவந்த தேர், ஒரு காலத்தில் சிவபெருமான் கைக்கொண்ட பூமியாகிய தேர் என்க. இனித் தானேறி வந்த தரைபாகிய தேர் போன்று ஆக்கினன் எனினுமாம். வானேறினர்கள் போரில் விழுப் புண் பட்டு வீர சுவர்க்கம் உற்றவர். தனியேறன்னன் தனியேறு-விடையேறெனினுமாம். 'விடைத் தனியேறன்னனோர் விடலை' (திருவிளை. தருமிக்கு. 42).

பி - ம். 1. வானேறுபடர்; வருந்தோறும்' உறுக்குந்தோறும்.

4. தானேறி நின்ற. 217

3450. காயிருஞ் சிலையொன் றேனுங்
கணைப்புட்டி லொன்ற தேனும்
தூயெழு பகழி மாரி மழைத்துளித்
தொகையின் மேல
ஆயிரங் கைகள் செய்த
செய்தன வமலன் செங்கை
ஆயிரங் கையுங் கூடி
யிரண்டுகை யாய வாறே.

காய் - (பகைவரைக்) காயும் வன்மையுள்ள, இருசிலை ஒன்றேனும் - பெரிய வில் ஒன்றே எனினும், கணை புட்டில் ஒன்ற தேனும் - அம்புப் புட்டில் ஒன்று தான் எனினும், தூய் எழு பகழிமாரி - அப் பெருமானால் இறைக்கப்பட்டு எழுகின்ற அம்பு மழை, மழை துளி தொகையின் மேல - மழைத் துளிகளின் எண்ணிக்கையைக் காட்டிலும் மிக்கன, (அப்போது) அமலன் - மலங்கள் நீங்கப் பெற்ற வனான இராமபிரானுடைய, செங்கை - (இரண்டு) சிவந்த கை, ஆயிரம் கைகள் செய்த செய்தன - ஆயிரம் கரங்கள் ஆற்றிய செயலைச் செய்தன; ஆயிரம் கையும் கூடி இரண்டு கைஆய ஆறு - ஆயிரம் கரங்களும் ஒன்றுகூடி இரண்டு கரங்களானவாறு என்ன அதிசயம். ஏ: அசை.

கணைப்புட்டில் - அம்புத் தூணி. தூவி என்பது தூய் என நின்றது. ஆயிரம் கையும் கூடிச் செய்த செயல் இரண்டு கரங்களால் ஆற்றிய செயலாக ஆயது வியப்பு. இனி, சகரச்ராட்ச சகச்ரபாத் என்று புகழப்பட்ட திருமால் தானுள நிலையில் ஆயிரம் கைகளை யுடையவன் இங்கே தானாக மேற்கொண்ட இராமாவதாரத்தில் இரு கையுடன் காட்சியளித்தவன் ஆதலின், அவனுடைய ஆயிரம் கையும் கூடிச் செய்யும் செயலே இங்கு இரண்டு கை செய்தது என்று கொள்க. இச் செய்யுட்களில் இராமபிரானுடைய பராக்கிரமம் கூறப்பட்டமை காண்க. இச்செய்யுள் கவிக்கூற்று.

பி - ம். 1. கணைப்புட்டி லொன்றுமேனும், இரண்டுமேனும், ஆண்டுமேனும், காண்டுமேலும்.

2. தூயவெம்; தொகைக்கு மேலாம், தொகையின் மேலாம்.

4. கைகள் கூடி, கையுங் கூட்டி; ஆனதன்றே, ஆயதன்றே. 218

இச் செய்யுள் சில மாறுதலுடன் :

காயிருஞ் சிலையொன்றேனுங் கணைப்புட்டி வொன்றதேனும்
தூயுறும் பகழி மாரிக் கடைமழை தொகையின் மும்மை
யாயுறும் படியே யைய னதிபெரும்வீர கொள்வீ
ராயிரங் கையுங்கூடி யிருகையாய்ப் புரிந்த தாயால்.

## இராமனை அவன் செயலாற் பல முகத்தவனெனல்

3451. பொய்யொரு முகத்த னாகி
மனிதனும் புணர்ப்பி தன்றால்
மெய்யுற வுணர்ந்தோம் வெள்ள
மாயிர மிடைந்த சேனை
செய்யுறு வினைய மெல்லா
மொருமுகந் தெரிவ துண்டே
ஐயிரு நூறு மல்ல
வனந்தமா முகங்க ளம்மா.

ஒரு முகத்தன் ஆகி - ஒரு முகத்தை யுடையவனாகி, மனிதனும் புணர்ப்பு - மானிடனாயிருக்கின்ற, இது - இந்தக் காட்சி, அன்று - மெய்யன்று, பொய் - பொய்த்தலே யாகும், (இதனை)

மெய் உற உணர்ந்தோம் - உண்மையாக உணர்ந்தோம், ஆயிரம் வெள்ளம் - ஆயிரம் வெள்ளம் என்ற எண்ணிக்கையுடனே, மிடைந்த சேனை - நெருங்கிய சேனை, செய்யுறு வினையம் எல்லாம் - ஆற்றிய போர்ச் செயலை எல்லாம், ஒரு முகம் தெரிவது உண்டே - ஒரு முகம் அறிவதென்பது உண்டோ? (இப்பிரானுடைய முகம்), ஐயிருநூறும் அல்ல - ஆயிரம் முகமேயும் அன்று, முகங்கள் அனந்தம் ஆம் - முகங்கள் எண்ணிறந்தன ஆகும். ஆல்: அசை. அம்மா - அசை.

புணர்ப்பு இது பொய் எனக் கூட்டுக. வெள்ளம் ஆயிரம் மிடைந்த சேனை: 'ஒருவன் படை வெள்ள மொராயிரமே' (யுத்த. 3445) என்றது காண்க. அனந்தமா முகங்கள்: 'சகச்ர சீர்ஷ ஹா புருஷகா' என்பது புருடசூக்தம். வினையம்; சூழ்ச்சி: 'வினைய மீதல்லதில்லை' (ஆரணிய. 274); இச் செய்யுள் கவிக்கூற்று. ஆயிரம் வெள்ளம் செய்யும் செயலனைத்தையும் இராமபிரான் ஒருவனாகவே அறிந்து ,அதற்குத் தக்கவாறு எதிர்ச் செயலைச் செய்தழித்தது கொண்டு, இவன் ஒரு முகமே உடையவன் எனினும், கட்புலனாகாது மறைந்துள்ள ஆயிரம் முகங்களை உடையவன் ஆவன் என்பது கருத்து.

பி - ம். 1. மளித்தனுகி ; புணர்ப்பன் என்றால், என்ன, என்றல.
2. உணர்ந்த ; விரர்.
3. செய்வுறும் ; விசயமெல்லாம்.
4. கையிரு நூறுகோடி. 219

## சிவபிரான் முதலியோர் இராமபிரான் வில்லாண்மை கண்டு வியத்தல்

3452. கண்ணுதற் பரமன் தானு
நான்முகக் கடவுள் தானும்
எண்ணுதுந் தொடர வெய்த
கோலென வெண்ண லுற்றார்

பண்ணையால் வகுக்க மாட்டார்
தனித்தனிப் பார்க்க லுற்றார்
ஒண்ணுமோ கணிக்க வென்பா
ருவகையி னுயர்ந்த தோளார்.

**கண் நுதல் பரமன் தானும்** - கண்ணை நெற்றியிலே உடைய பரமசிவனான உருத்திரனும், **நால் முகம் கடவுள் தானும்**-பிரமதேவனும், '(இராமபிரான்) **எய்த கோல்** - ஏவிய அம்புகளை, **தொடர** - தொடர்ச்சியாக, **எண்ணுதும்** - கணக்கிடுவோம்,' **என** - என்று மொழிந்து, **தனி தனி பார்க்கல் உற்றார்** - தனித் தனியாக நோக்குதலைப் பொருந்தி, **எண்ணல் உற்றார்** - எண்ண முன் வந்தவர்களாய், **பண்ணையால்** (அந்த அம்புகள்) பெருந் தொகுதியாயிருத்தலின், **வகுக்க மாட்டார்** - எண்ண இயலாதவராகி, **உவகையின் உயர்ந்த தோளார்** - மகிழ்ச்சியால் பூரித்த தோளையுடையவராய், '**கணிக்க ஒண்ணுமோ** - எண்ணுதல் கூடுமோ?' **என்பார்** - என்று பகர்வாராயினர். ஒண்ணுமோ - ஓகாரம் எதிர்மறை. ஒண்ணாது என்ற பொருளது.

**கண்ணுதல்** - சிவபெருமான்; 'கண்ணுதற் பெருங்கடவுளும்' (திருவிளை. திருநாட்டு. 57); கண்ணுதல் பரமன் என்றும் நான்முகக் கடவுள் என்றும் கூறியது. தனக்கு மேல் உயர்ந்தவனில்லாதவனும் ஈறில்லாதவனும் ஈசன் ஒருவனே என்றதற்கேற்ப, என்றும் அழிவில்லாதவனான சிவபெருமான் என்றும், 'நூறுகோடி பிரமர்கள் நுங்கினர்' என்றபடி பிரளய காலத்தில் அழியக்கூடிய கடவுளரில் ஒருவன் பிரமன் என்பதைக் குறித்தற்கும் என்க. தொடர எண்ணுதும் - என மாறிக் கூட்டுக. பண்ணை - பெருந் தொகுதி. இங்கே வேலின் தொகுதி. உவகை - இராமபிரானுடைய பேராற்றலை நினைந்து எழுந்தது என்க.

பி - ம். 1. கண்ணுதல் மூர்த்திதானும், மாயன்றானும்.
2. எண்ணுறும்; எய்வ கொல்லெனும்.
3. வகுப்ப, பகுக்க; ஆற்றார்.
4. என்றார்; உணர்ந்து கோளார், நிமிர்ந்த தோளார். 220

இங்கு அதிகப் பாடல்கள் :—

இட்டதோர் பேயரின் ஈரை யாயிரம்
பட்டபோ தாடுமோர் படுகு றைத்தலை
கட்டநூ றுயிரங் கவந்த மாடிடத்
தொட்டனன் சிலையணி மணிது ணக்கென. 1

மாத்திரைப் போதினில் மணிதொ னித்திடப்
போர்த் தொழிலரக்கர்மேல் பொருத பூசலில்
ஏத்திடை யிடைவிடா தேழு நாழிகை
கீர்த்தியன் சிலைமணி கிணுகி ணென்றதே. 2

## தேவர்கள், அளவிடமுடியாத அம்புகளை எய்தமைபற்றி வியத்தல்

3453. வெள்ள மீரைந்து நூறே
விடுகணை யவற்றின் மெய்யே
உள்ளவா றுளவா மென்றோ
ருரைகணக் குரைத்து மேனும்
கொள்ளையோ ருருவை நூறு
கொண்டன பலவாற் கொற்ற
வள்ளலே வழங்கி னனே
வென்றனர் மற்றை வானோர்.

வெள்ளம் ஈரைந்து நூறே - (போர் புரிய முன் வந்த அரக்கர் சேனையின் அளவோ) ஆயிரம் வெள்ளமேயாகும், அவற்றின் - அந்தச் சேனைகளின்மீது, விடுகணை - ஏவப்பட்ட அம்புகள், உள்ள ஆறு உளவாம் என்று - சேனை உள்ள அளவினவாக உள்ளன என்று, ஓர் உரை கணக்கு உரைத்து மேனும் - பேச்சுக்காக ஒரு கணக்கு ஒருவாறு மொழிவோம் எனினும், மெய்யே - அது உண்மையாகுமோ? (ஆகாது ஏன் என்றால்), கொள்ளை - போரிற் சூறையாடுகின்ற, ஓர் உருவை - ஒவ்வொருவர் உடலினையும், நூறு கொண்டன - நூறு துண்டங்களாகச் செய்தனவான கணைகள், பல - பலவாகும், (ஆகவே இவ்வாறு பெருந்தொகுதியான அம்புகளையும்), கொற்றம் வள்ளல் வழங்கினனே - வெற்றியும் வண்மை

யும் உள்ள இராமபிரானே ஏவினனோ', என்றனர் மற்றை வானோர்- என்று வியந்து ஏனைய தேவர்கள் கூறினர்கள். ஆல்: அசை. ஓகாரம்: ஐயம்.

வெள்ளம் ஈரைந்து நூறு; இப் படலம் 219 பார்க்க. வாளிகளை வரையறை யின்றி வழங்கினமையின் வள்ளல் எனப்பட்டது.

பி - ம். 1. நூறேன்; மென்மை, மெய்ம்மை.

2. உள்ளவாறுள தாமென்றுருபைக் கணக்கு; உணர்துமேனும், உணர்ந்த மேலும்.

3. உருவு; கொண்டனன் கொண்டாலன்ன.

4. வழங்கினனே. 221

## முனிவர், இராமபிரான் பாணங்கள் அளவிடற்கு முடியா எனல்

3454. குடைக்கெலாங் கொடிகட் கெல்லாங்
கொண்டன குவிந்த கொற்றப்
படைக்கெலாம் பகழிக் கெல்லாம்
யானைதேர் பரிமா வாதிக்
கடைக்கெலாந் துரந்த வாளி
கணித்ததற் களவை காட்டி
அடைக்கலா மறிஞர் யாரே
யென்றனர் முனிவ ரப்பால்.

அப்பால் - அப்புறம், முனிவர் - மனனசீலரான இருடிகள், 'குடைக்கு எலாம் கொடிகட்கு எல்லாம்-குடைகளுக்கும் கொடிகளுக்கும், கொண்டன-போர்க்களத்திற் பரந்தனவாகி, குவிந்த-திரண்டுள்ள, கொற்றம் படைக்கு எலாம் - வெற்றி பெற்ற போர்க் கருவிகளுக்கும், பகழிக்கு எல்லாம் -(அரக்கர் உய்த்த) அம்புகளுக்கும், யானை தேர் பரிமா ஆதி-யானை இரதம் குதிரை முதலாக, கடைக்கு எலாம் - காலாட்படை இறுதியாக உள்ளன வற்றிற்கும், (அழிவுண்டாகுமாறு இராமபிரான்), துரந்த வாளி - விடுத்த சரங்களை, கணித்து - கணக்கிட்டு, அதற்கு அளவை காட்டி - அதற்கு ஓர் அளவைக் கற்பித்து, அடைக்கலாம் அறிஞர்-அறுதி

யிடத்தக்க அறிவாளிகள், யாரே என்றனர் - யாவரே ' என்று மொழிந்தார்.

அடைத்தல் - அறுதியிட்டு நிரப்புதல்.

பி - ம். 1. கொண்டெனக், கொண்டனர்.

2. கணித்திதற்கு ; அளவைக் காட்டி, அளவுக்காட்டி.

3. கணித்தற்கு.

4. இடைக்கெலாம் ; முனிவர் பல்கால், இப்பால். 222

இங்கு அதிகப் பாடல்கள் :—

மொய்த்தனர் நூறு வெள்ள முரண்படத் தலைவர் கூட்டம்
பத்துநா ருய வெள்ளப் படையொடு மாயை பற்றி
ஒத்தயோ சனை நூ றென்ன வோதிய வரைப்பி னோங்கிப்
பத்தெனுந் திசையும்மூடிச் சொரிந்தனர் படையின் மாரி 1

யோசனை நூற்றின் வட்ட மிடையரு துற்ற சேனைத்
தூசிவந் தண்ண ‹ றன்னைப் போக்குற வளைத்துச் சுற்றி
வீசின படையும் அம்பும் மிடைதலின் விண்ணோர் யாக்கை
கூசினர் பொடிய ரென்றும் குமிழ்த்தனர் ஓமக் கூடம். 2

முன்னவ னதனை நோக்கி முறுவலித் தவர்க ளேவும்
பன்னெடும் பருவ மாரிப் படையெலாம் பொடிபட் டோடத்
தன்னெடுஞ் சிலையின் மாரி தனக்கெழு முகிலு மஞ்சத்
துன்னுவித் தரக்கர் வெள்ளச் சேனையைத் தொலைத்தல்
செய்தான். 3

காலவெங் கனலின் மாயக் கடும்படை சிலையிற் பூட்டி
மேலவன் விடுத லோடும் வெம்படை யரக்கர் வெள்ளம்
நாலும்மூ விரண்டு மான நூறொரு கணத்தில் நண்ணித்
தாலமேற் படுத்து மீண்ட தவன்சரம் தலைவர்த் தள்ளி. 4

முடிந்தது மூலத்தானை மூவுல கிருண்ட தீமை
விடிந்தது மேலை வானோர் வெந்துய ரவரினோடும்
பொடிந்தது புனிதன் வாளி போக்குறப் பொய்ய ராவி
படிந்தது ககன மெங்கும் பலித்தது தரும மன்றே. 5

ஈதொரு விளையாட் டன்பின் இத்துணை தாழ்த்தா னையன்
ஏதவன் துணியி னிப்பால் நீசரோர் பொருளோ வின்னும்
போதுமோ புவன கோடி போதினும் கணத்திற் பொன்றிப்
போதுமென் றயனெடிச னமரர்க்குப் புகன்று நின்றுன். 6

சேனையம் தலைவர் சேனை முழுவது மழிந்து சிந்தத்
தானெரி கனலின் பொங்கித் தரிப்பிலர் கடலின் சூழ்ந்தே
வானகம் மறையத் தத்தம் படைக்கல மாரி பெய்தார்
ஆனவை முழுதுஞ் சிந்த வறுத்தனன் அமலன் அம்பால். 7

இட்டதொர் பெயரி னீரை யாயிரம்
பட்டபோ தோடுமோர் படுகு றைத்தலை
கட்டநூ ருயிரங் கவந்த மாடிடத்
தொட்டனன் சிலையணி மணிது ணுக்கென. 8

மாத்திரை யொன் றில் மணி தொனித்திடப்
போர்த்தொழி லரக்கரைப் பொருத பூசலில்
ஏத்திடை யிடைவிடா தேழ நாழிகை
சீர்த்தியன் சிலைமணி கிணிகி ணென்றதே. 9

சில மாறுதல்களோடு இறுதி இரண்டு செய்யுட்களும் ஓர் பிரதியில் 3452ன் கீழ்க் குறிக்கப் பெற்றுள்ளன.

## அரக்கரின் துண்டிக்கப்பட்ட உறுப்புக்கள் கிடந்தவற்றின் வருணனை

3455. கண்டத்துங் கழுத்து மீதாய்க்
கபாலத்துங் கடக்க லுற்ற
சண்டப்போ ரரக்கர் தம்மைத்
தொடர்ந்துகொன் றமைந்த தன்மை
பிண்டத்திற் கருவாந் தன்பே
ருருக்களைப் பிரமன் தந்த
அண்டத்தை நிறையப் பெய்து
குலுக்கிய தனைய தான.

சண்டம் போர் அரக்கர் தம்மை தொடர்ந்து - உக்கிரமாகப் போர் புரியும் இராக்கதரைத் தொடர்ந்து, (அவர்களுடைய), கண்டத்தும் - குரல் வளையிலும், கழுத்து - கழுத்தின், மீதாய் - மீதாக, கபாலத்தும் - மண்டையோட்டிலும், கடக்கல் உற்ற -

கடந்து சென்ற அம்புகள், கொன்று அமைந்த தன்மை-கொன்று நின்ற தன்மை, பிண்டத்தில் கருவாம் - கருப் பிண்டத்தில் அமைந்த, தன் பேர் உருக்களை - தன்னுடைய மிக்க உருக்களை, பிரமன் தந்த - பிரமதேவன் படைத்த, அண்டத்தை நிறைய பெய்து - அண்டத்தில் நிரம்ப இட்டு, குலுக்கியது அனையது, ஆன - குலுக்கிய தன்மையை ஒத்தன.

இராம பாணங்களால் அறுபட்டுத் துண்டிக்கப்பட்ட பல்வேறு உறுப்புக்களாக அச்சேனை கிடந்த தன்மை, பிரமதேவன் தான் படைக்க வேண்டிய உயிர்கள் ஊன்தடியாயிருக்க, அக்கருக்களை அண்டத்தில் இட்டு வைத்தாற்போன்றிருந்தது என்பது கருத்து. கண்டமும் கருத்தும் ஒன்றென்பரேனும், இங்குக் கண்டம் குரல் வளையெனக் கொள்ளப்பட்டது.

பி - ம். 1. கண்டத்திற் கிழுமேலும், கண்டத்துக் கண்மீதுற்ற, கண்டத்துங் கிழுமீதிற் ; உற்ருன்.

2. தொடர்ந்து கோட்புணருந்தன்மை, தொடர்ந்து கோல்புணருந்தன்மை.

3. பிண்டத்திற் கருவதான ; பிண்டத்துக் கருவதாகும் பேருருக் களைய வந்த.

4. குலுக்கிய தனையனன்றன், குலுங்கிய தனையனுற்றன், குலுக்கிய தொத்ததம்மா. 223

## பத்துக்கோடி அரக்க வீரரிறந்துபட, மற்றையோர் தெய்வீகப் படைகளைச் செலுத்தக் கருதி இராமபிரானை நெருங்குதல்

3456. கோடியை யிரண்டு தொக்க
படைக்கல மள்ளர் கூவி
ஒடியோர் பக்க மாக
வுயிரிழந் துலத்த லோடும்
வீடிநின் றழிவ தென்னே
விண்ணவர் படைகள் வீசி
மூடுது மிவனை யென்றி
யாவரு முடுகி மொய்த்தார்.

ஐயிரண்டு கோடி - பத்துக்கோடி என்னுமாறு, தொக்க - தொகுத்து நின்ற, படைக்கலம் மள்ளர்-போர்க் கருவிகளை ஏந்திய

வீரர்கள், கூவி - புலம்பிக் கொண்டு, ஓர் பக்கமாக ஓடி - ஒரு பக்கமாக ஓடி, உயிர் இழந்து - உயிரிழக்கப் பெற்று, உலத்தலோடும் - அழிந்த அளவிலே, (நாம் சாதாரணப் படைகளை வீசி) வீடி நின்று அழிவது என்னே - உயிர் கொல்லப்பட்டு நின்று முடிவது ஏன்? விண்ணவர் படைகள் வீசி - தேவர் தம் படைகளை எறிந்து, இவனை மூடுதும் - இவன் திருமேனி முற்றும் மூடி இறக்கச் செய்வோம்', என்று - என்று நினைந்து, யாவரும் முடுகி மொய்த்தார் - எல்லோரும் விரைந்து நெருங்கினார்கள்.

மள்ளர் - வீரர். வீடி : 'வீடினதன்றறன் யானும் வீகிலேன்' (சுந்தர .396) விண்ணவர் படைகள் - அக்கினியாத்திரம், வாயுவாத்திரம், கந்தர்வாத்திரம் முதலாயின.

பி - ம். 1. கோடியே ; மள்ளர் கூடி, மன்னர் கூடி.
2. மூடியோர் ; பாகமாக ; உலர்தலோடும், உழைத்தலோடும்.
3. வீடியின்று.
4. என்னு ; மூண்டு மொய்த்தார். 224

## அரக்கர் தேவர்படைகளை விட, இராமபிரான் அவைகளை அந்தத் தேவர்படைகளாலேயே தடுத்தல்

3457 விண்டுவின் படையே யாதி
மேவயன் படையீ ருகக்
கொண்டொருங் குடனே விட்டார்
குலுங்கிய தமரர் கூட்டம்
அண்டமுங் கீழ மேலா
வாசிய ததனை யண்ணல்
கண்டொரு முறுவல் காட்டி
யவற்றினை யவற்றாற் காத்தான்.

விண்டுவின் படையே ஆதி - திருமாலின் அத்திரம் முதலாக, மேவு அயன் படை ஈறுக-பிரமாத்திரம் இறுதியாக உள்ளவற்றை, கொண்டு - அரக்கர் கைக்கொண்டு, உடனே ஒருங்கு விட்டார் - உடனே ஒருசேர விடுத்தார்கள்; (அதைக் கண்ணுற்று), அமரர்

கூட்டம் - தேவர்களின் தொகுதி, குலுங்கியது - உடல் நடுக்கம் உற்றது; அண்டமும் கீழமேலா ஆகியது - அண்டமும் தலைகீழாக ஆயிற்று; அதனை - அந்த நிகழ்ச்சியை, அண்ணல் - இராமபிரான், கண்டு - பார்த்து, ஒரு முறுவல் காட்டி - ஒப்பற்ற புன் சிரிப்பைச் செய்து, அவற்றை அவற்றால் காத்தான் - அந்தத் தேவர் படை களை அத்தேவர் படைகளாலேயே தடுத்திட்டான்.

விஷ்ணு என்பது விண்டு என மருவியது 'அடல் விண்டு வென ஒல்வானுமிவன்' (யுத்த. 1746); குலுங்குதல்: 'மூலை குலுங்குமாகில் மாரன் முடி குலுங்கும் செய்யவாய்க், கஞ்சமுங் குலுங்குமாகில் நெஞ்சமுங் குலுங்கும்' (திருச்செந்திற் கலம்பகம் மதங்கியார்) - கண்பொரு முறுவல் காட்டி; (ஒப்பு); 'தெறித்தபோ தொத்ததன்றிச் சினமுண்மை தெரிந்ததில்லை' (யுத்த. 1227); 'வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின் விளைந்த மேனுள்' (சுந்தர. 471)

பி - ம். 1. விண்டுவன் படையே; வெயிலவன், வெய்யவன்.

3. கீழ்மேலாய்த் தாக்கியது, கீழ்மேலதாகியது, கீழும் மேலுமாகியது; அனையவண்ணல். 225

அதிகப் பாடல்கள் :—

பகிரண்டப் பரப்பி னின்ற பலபல கோடி வெள்ளத்
தொகை மண்டு மரக்கர் யாரும் துஞ்சினர் கருவுந் துஞ்சக்
செகமுண்ட வொருவன் செங்கைச் சிலையுறு மணியின் ஓசை
புகவண்ட முழுதும் பாலின் பிரையெனப் பொலிந்ததன்றே. 1

நணியனுய்த் தமியன் தோன்றும் நம்பியை வளைந்த வஞ்சர்
அணியுரு தகன்ற வெள்ளம் அவை மடிந் திறந்த காலைக்
கணிதமே முறையே கொண்ட கடிகையைக் கடிகை வாய்வில்
வணியொலி யெழும்ப வானோர் வழுத்திட வள்ளல் நின்றான். 2

3458. தானவை தொடுத்த போது
தடுப்பரி துலகந் தானே
பூநனி வடவைத் தீயிற்
புக்கெனப் பொரிந்து போமென்

ருனது தெரிந்த வள்ள
லளப்பருங் கோடி யம்பால்
ஏனையர் தலைக ளெல்லா
மிடியுண்ட மலையி னிட்டான்.

'தான் - தான், அவை - அந்தத் தெய்வப் படைகளை, தொடுத்த போது - தொடுத்தக்கால் அப்போது, தடுப்பரிது - (பிறரால்) அவை தடுத்தற்கரியதாகும்; (மேலும்), பூ உலகம் தானே - இந்தப் பூமியே, வடவை தீயில் - வடவைத் தீயில், நனி புக்கு என - நன்றாக நுழைந்தாற் போல, பொரிந்து போம் - பொரிந்தழியும்;' என்று - என்று, ஆனது தெரிந்த வள்ளல் - பொருந்திய அந்த நுட்பத்தை அறிந்திருந்த வண்மையனான இராமபிரான், (அவ்வரக்கரைக் கொல்லுமாறு தேவர் படைகளை ஏவாமல்) அளப்பு அரும் கோடி அம்பால் - அளவிட முடியாத கோடிக் கணக்கான வாளிகளால், ஏனையர் தலைகள் எல்லாம் - அரக்கர் தம் சிரங்களனைத்தையும், இடி உண்ட மலையின் இட்டான் - இடியினால் தாக்கப்பட்ட மலைபோன்று காணுமாறு (தரையில்) வீழ்த்தினான்.

யாவரும் தடுக்க இயலாது என்று எண்ணித் தான் முன்னதாகத் தெய்வப் படைகளை விடுதல் தவிர்ந்தது கொண்டு இராமபிரானை வள்ளல் என்றான். சாதாரணப் பேரூழியில் பூவுலகம் வடவைத் தீயிற் பட்டழிந்ததுபோன்று அழியும் என்று கொள்க. முடிவில் வடவைத் தீயில் அழிகின்ற காலம் முன்னதாகவே நேரும் என்று அஞ்சி, அந்த அவசர நிலையைத் தவிர்க்க எண்ணினான் இராமபிரான் என்க. இனிப்பூ வடவைத் தீயிற் புக்காற் போன்று என்று உரை எழுதினாரும் உளர். ஊதினளவிலே வெப்பக் காற்றுப்பட்டு அழியும் மலரை அழிக்க வடவைத் தீ வேண்டுவதின்று; கொசுவைப் பிளக்கக் கோடாலியா? ஆகவே பூஉலகம் என இணைக்கப்பட்டது. இடியுண்ட மலை; இது கம்பநாடரால் பல இடங்களிலும் உவமையாக்கப்பட்டுள்ளது.

பி - ம். 2. புக்கெனப் போனதாமென்று, பொரிந்துமென்றால்.

3. ஆனவை, தானவை; துறந்த மறந்த; அண்ணல். 226

## அரக்கவெள்ளம் அவியப் பூதேவி பாரம் நீங்குதல்

3459. ஆயிர வெள்ளத் தோரு
மடுகளத் தவிந்து வீழ்ந்தார்
மாயிரு ஞாலத் தாள்தன்
வன்பொறைப் பார நீங்கி
மீயுயர்ந் தெழுந்தா ளன்றே
வீங்கொலி வேலை நின்றும்
போயொருங் கண்டத் தோடுங்
கோடியோ சனைகள் பொங்கி.

ஆயிரம் வெள்ளத்தோரும் - ஆயிரம் வெள்ளமான அரக்கரும், அடுகளத்து அவிந்து வீழ்ந்தார் - கொலைக் களத்திலே உயிர் நீங்கப்பெற்று வீழ்ந்தார்கள்; மா இரு ஞாலத்தாள் - மிகவும் பெருமை வாய்ந்த பூமிதேவி, தன் வல் பொறை பாரம் நீங்கி - தனது வலிய பாரமாயிருந்த சுமை ஒழியப் பெற்று, வீங்கு ஒலி வேலை நின்றும் - பேரொலியையுடைய கடலினின்றும், ஒருங்கு போய் - ஒரு சேரச் சென்று, அண்டத்தோடும் - தன் அண்டத் தோடும், கோடி யோசனைகள் பொங்கி - கோடி யோசனை தூரம் பொங்கி, மீ உயர்ந்து எழுந்தாள் - மேலெழுந்தோங்கினாள். அன்றே : தேற்றம்.

அரக்கர் என்ற பெரும் சுமையால் கடலில் அழுந்திக் கிடந்த பூமிதேவி இப்பொழுது அப்பாரம் நீங்கப் பெற்றமையின் உவக வுருண்டையுடன் மேலெழுந்து விளங்கினாள். இங்கு தொடர்ந்து ஆயிரம் வெள்ளம் என்று குறிப்பது நோக்கத்தக்கது. 'அகழ் வாரைத் தாங்கும் நிலம்போல' (குறள். 151) என்று பொறைக்கு எடுத்துக் காட்டாகக் கூறப்படுவதால் மாயிரு ஞாலம் என்று சிறப்பிக்கப் பெற்றுள் நிலமகள். மாயிரு ஞாலம் : என உரிச்சொல் ஆகார வீற்றின் வழியகரவுடம்படு மெய் வந்த தென்னையெனின், அஃது, 'இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்' என்னுஞ் சூத்திரத்தான் அமையும்' (நன், உயிரீற்று. 12. பொறையாகிய பாரம்.

பி - ம். 1. அடுகளத் திறந்து வீழ்ந்த; மாயிரு ஞாலத்தொன்றும் வன்பொறை பாரினீங்கி.

3. எழுந்ததன்றே, எழுந்தானன்றே.

4. போயொரு கண்டத்தோடும்; போயொரு கணத்திறேடி. 227

வேறு

3460 ஆனை யாயிரந் தேர்பதி னுயிர
மடர்பரி யொருகோடி
சேனை காவல ராயிரம் பேர்படிற்
கவந்தமொன் றெழுந்தாடும்
கான மாயிரங் கவந்தநின் றுடிடிற்
கவின்மணி கணிலென்னும்
ஏனை யம்மணி யேழரை நாழிகை
யாடிய தினிதன்றே.

ஆனை ஆயிரம் - யானைகள் ஆயிரமும், தேர் பதினுயிரம் - தேர்கள் பதினுயிரமும், அடர் பரி - அடர்க்கும் இயல்புள்ள குதிரைகள், ஒரு கோடி - ஒரு கோடியும், சேனை காவலர் ஆயிரம் பேர் படின் - சேனை காவலர் ஆயிரவரும் இறந்துபட்டால், கவந்தம் ஒன்று எழுந்து ஆடும் - கவந்தம் ஒன்று (களத்து) எழுந்து ஆடும் - எழுந்து கூத்தாடும்; கானம - காடு போன்ற, (பெருந் தொகுதியான) ஆயிரம் கவந்தம் - ஆயிரம் கவந்தங்கள், நின்று ஆடிடில் - எழுந்து ஆடுமாகில், (இராமபிரானுடைய கோதண்டம் என்னும் வில்லிற் கட்டியுள்ள), கவின் மணி - அழகிய மணி, கணில் என்னும் - கணின் என ஒலிக்கும்; ஏனை - மற்றை, அ மணி - அந்த மணியானது, (இந்தப் பெரும் போரிலே) இனிது - இனிதாக, ஏழரை நாழிகை ஆடியது - ஏழரை நாழிகை அசைந்து மணி அடித்தது. அன்று; ஏ: அசை.

கானகம் - காடு; இங்கே அரக்கரின் பெருந்திரள். கணி லெனல் - ஒலிக் குறிப்பு; 'மணி கண கணனெனுந் தொறும்' (யுத்த. 3448) காண்க. (இங்கு) அநேக மாயிரம் பேர்படக் கவந்த மொன் றுடுமக் கவந்தங்கள், அநேக மாயிர மாடவெஞ் சிலை

மணி யசைந்தொரு குரலார்க்கும், அநேக நாழிகை யருச்சுனன் சிலைமணி யார்த்தக் களம்பட்ட, வநேக மாயிரம் விருதரை யள வறிந் தார்கொலோ வுரைக்கிற்பார்' (வி. பா. 14ஆம் போர். 48-ம், 'பேரொத்த வாயிரம் பேர் மடிந்தாற் பிறக்கும் கவந்த' (திருவரங். மாலை. 44)-ம் எனத் தொடங்கும் பாட்டும் காணத்தகும்.

பி - ம். 1. அடற்பரி.

2. கவந்த மொன்றெழுந்தாடும்.

3. காளமாயிரங் கவந்த நின்றுடல் விற்கட்டின மணியொருநீனென்னும், கரளமாயிரங் கவந்த நின்றுடிடற் கட்டிய கடைமணி கணினெனும்.

4. ஏனையம்மணி, எனையிம்மணி; இடைவிடாதாடின விலங்கை, இடை விடா தாடியவன்றே. 228

'சேனை காவலத்தாயிரஞ் சிதைந்திடிற் கவந்த மொன்ருடும்' என்று இரண்டாமடி சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

## வேறு

## தேவர் முதலியோர் துயர் நீங்கி இராமபிரானை வாழ்த்துதல்

3461. நினைந்தன முடித்தே மென்னு
வானவர் துயர நீத்தார்
புனைந்தனென் வாகை யென்னு
விந்திர னுவகை பூத்தான்
வனைந்தன வல்லா வேதம்
வாழ்வுபெற் றுயர்ந்த மாதோ
அனந்தனுந் தலைக ளேந்தி
யயர்வுயிர்த் தவலந் தீர்ந்தான்.

வானவர் - தேவர்கள், 'நினைந்தன முடித்தேம் - கருதியவை முடியப் பெற்றேம்' என்னு - என்று, துயரம் நீத்தார் - துன்பம் ஒழியப் பெற்றார்கள்; 'வாகை புனைந்தனென் - வெற்றிமாலை சூடினேன்', என்னு - என்று, இந்திரன் உவகை பூத்தான் - இந்திரன் மகிழ்ந்தான்; வனைந்தன அல்லா வேதம் - (ஒருவரால்) செய்யப் படாததான நான்மறை, வாழ்வு பெற்று உயர்ந்த - வாழ்ச்சி பெற்று மேம்பட்டன; அனந்தனும் - ஆதிசேடனும், (பாரம் குறைந்

தமையால்), தலைகள் ஏந்தி-தலைகளை நிமிர்த்து, அயர்வு உயிர்த்து-மூச்சு விட்டுக்கொண்டு, அவலம் தீர்ந்தான் - துன்பம் ஒழியப் பெற்றான். மாது; ஓ: அசை.

இங்கு 'பனிக்கற் சுரத்து' (சுந்தர. 544) எனத் தொடங்கும் செய்யுளை ஒப்பு நோக்குக. வாகை - வெற்றி மாலை. 'வட திசை வாகை சூடி, (சாசனம்); வனைந்தன அல்லா வேதம் - வேதத்தைப் பௌருஷேயம் என்றும் அபௌருஷேயம் என்றும் வழங்குவர்; கர்பநாடர் கருத்து வேதம் அபௌருஷேயம் என்பதை இங்குக் காணலாம். அனந்தன் - ஆதிசேடன்; 'கீண்டில தனந்தனுச்சி கிழிந்திலது' (சுந்தர. 1277); 'அனந்தனல் வாழ்விகந்து' (யுத்த. 658); சேடனுக்கு ஆயிரம் தலைகள் ஆகலின், தலைகள் எனப் பன்மையாற் கூறப்பட்டது. சகச்ரபணாபணி மண்டல மண்டிதே என்பது வேதம்.

பி - ம். 1. நினைந்தது முடிந்தோம்; தீர்ந்தார்.

2. புனைந்தனன்; என்பான்.

3. வனைந்தனரெல்லரம், வனைந்தனவல்ல; வரம்பு; மாந்தர்.

4. அல்லல் தீர்ந்தான். 229

3462. தாய்படைத் துடைய செல்வ
மீகெனத் தம்பிக் கீந்து
வேய்படைத் துடைய கானம்
விண்ணவர் தவத்தான் மேவித்
தோய்படைத் தொழிலால் யார்க்குந்
துயர்துடைத் தானை நோக்கி
வாய்படைத் துடையா ரெல்லாம்
வாழ்த்தினர் வணக்கஞ் செய்தார்.

தாய் - அன்னையான கைகேயி, 'படைத்து உடைய செல்வம் - (நீ) அடைந்துள்ள அரசு செல்வத்தை, ஈக-அளிப்பாயாக', என - (என்று கட்டளையிட, தம்பிக்கு ஈந்து - (தன்) தம்பிக்குக் கொடுத்துவிட்டு, வேய் படைத்துடைய கானம் - மூங்கில் மிகுதியாகக்

கொண்டுள்ள காட்டில், விண்ணவர் தவத்தான் மேவி - தேவர்கள் ஆற்றிய தவத்தின் பயனாகப் பொருந்தி, தோய் படை தொழிலால்- மனத்துடன் மேற்கொண்ட படைக்கலத் தொழிலால், யார்க்கும் துயர் துடைத்தானை நோக்கி - எல்லோர்க்கும் துன்பத்தைப் போக்கியவனான இராமபிரானைப் பார்த்து, வாய் படைத்து உடையார் எல்லாம் வாழ்த்தினர் - வாயைப் படைத்தவர் அனைவரும் வாழ்த்தி, வணக்கம் செய்தார் - வணங்கினர்.

முதலடிக்கு; 'பெற்ற தாதை, ஈட்டிய செல்வம் ஆங்கே நம்பிக்குக் கொடுத்துப் போந்து, காட்டொரு கருமம் செய்தாய்' (கிட்கிந்தா. 310); 'தாதையுதவிய தரணி' (அயோத்தி. குகப். 35); ஈக என என்பது ஈகென என நின்றது. வேய் படைத் துடைய கானம்: 'வேயுயர் கானம் தானுந் தம்பியும் மிதிலைப் பொன்னும், போயினன்' (அயோத்தி. தைலமா: 60); 'வாழ்த்த வாயும் நினைக்கமட நெஞ்சும், தாழ்த்தச் சென்னியும்' இறைவனை வழிபடற்கே யாகலின், இங்கு 'வாய் படைத்துடையா ரெல்லாம் வாழ்த்தினர் வணக்கம் செய்தார்' எனப்பட்டது. 'வாயே வாழ்த்து கண்டாய்' (திருவங்கமாலை.) 'வாயவனை யல்லாது வாழ்த்தாது, (இயற்பா. 1 : 11) என்றமைக் கேற்ப இறைவனை வாழ்த்தாத வாய் இருந்தும் பயனின்றாகலின், 'வாய் படைத் துடையா ரெல்லாம்' எனப்பட்டது. இறைவனை ஏத்தாத வாய் கூழுக்கும் ஏக்கற்றிருக்கும் வெறும்வாய் என்று அருட்பிரகாச வள்ளலார் கூறியது காண்க.

பி - ம். 1. செல்வமீதென.
2. படைத்தனைய ; தவத்தின் மேவி.
3. தொழிலோர் ; துயர்கெடுத்தானை.
4. வாய் படைத்தார்களெல்லாம், படைந்துடையாரந்தோ. 230

## போர்க்களத்தில் நின்ற இராமபிரானது தோற்றம்

3463 தீ மொய்த்த வனைய செங்க
ணரக்கரை முழுதுஞ் சிந்திப்
பூமொய்த்த கரத்த ராகி
விண்ணவர் போற்ற நின்றான்

பேய்மொய்த்து நரிக ளீண்டிப்
பெரும் பிணம்பிறங்கித் தோன்றும்
ஈமத்துள் தமிய னின்ற
கறைமிடற் றிறைவ னொத்தான்.

தீ மொய்த்த அனைய செம்கண் - தீ மொய்த்தாற் போன்ற செந்நிறம் கொண்ட விழிகளையுடைய, அரக்கரை முழுதும் சிந்தி - அரக்கர் எல்லோரையும் (களத்துக்) கொன்றதனால், பூ மொய்த்த கரத்தர் ஆகி - பூக்கள் நிரம்பிய கரங்களை உடையவராகி, விண்ணவர் போற்ற நின்றான் - தேவர்கள் யாவரும் துதிக்க நின்றவனான இராமபிரான், பேய் மொய்த்து - பேய்கள் சூழ்ந்து, நரிகள் ஈண்டி - நரிகள் நெருங்கி, பெரும் பிணம் பிறங்கித் தோன்றும் - மிக்க பிணங்கள் விளங்கித் தோன்றுவதான, ஈமத்துள் - நன் காட்டிலே, தமியன் நின்ற - தனிப்பட்டவனாய் நின்ற, கறைமிடற்று இறைவன் ஒத்தான் - (விடக்) கறையைக் கண்டத்தில் ஏற்றுள்ள சிவபெருமானை நிகர்த்து விளங்கினான்.

சிவபிரான் ஈமத்துள் நடிப்பவன் ஆகலின் பேய்களும் நரிகளும் பிணங்களும் அவனைச் சுற்றி நிற்கும் எனப்பட்டது. இங்கு இராமபிரானுக்கும் உருத்திரனைக் கூறியது பேரளவில் அரக்கரைக் கொன்றமை குறித்து என்க. காப்புக் கடவுளே இங்கு அழித்தற் கடவுளாக மாறினார். 'கழுதொடு காட்டிடை நாடகமாடி' (திருவாச. திருச்சதகம். 7) என்றது காண்க. 'பேய் வாழ் காட்டகத்தாடும் பிரான்றனை' (திருவங்கமாலை.) ஈமம்: 'ஈமஞ் சேர்மாலை யென்ன மிழித்திடப்பட்டதன்றே' (சீவக. 210) இராமபிரானுக்குச் சிவபிரான் உவமை.

பி - ம். 1. தீ யெரித்தனை ; செங்கணிராக்கதர் தம்மை.
2. கரத்தராதி.
3. பேய் மொய்த்த ; பிணக்களத்தில்.
4. தனியே ; மிடற்றவனை ; மிடற்றிறையும். 231

3464. அண்டமாக் களமும் வீந்த
வரக்கரே வுயிரு மாகக்
கொண்டதோ ருருவந் தன்னு
லிறுதிநாள் வந்து கூட

மண்டுநாண் மறித்துங் காட்ட
மன்னுயி ரனைத்தும் வாரி
உண்டவன் தானே யான
தன்னொரு மூர்த்தி யொத்தான்.

மா கள அண்டமும் - பெரிய போர்க்கள அண்டமும், வீந்த அரக்கரே உயிரும் ஆக - இறந்துபட்ட அரக்கரே, (அந்த) அண்டத் உயிர்களுமாக, (அங்கு இராமபிரான் தான்) கொண்டது ஓர் உருவம் தன்னால் - கொண்டதான ஓருருவத்தினால், இறுதி நாள்வந்து கூட - யுக முடிவுக் காலம் வந்து இயைய, மண்டும் நாள் - சிருட்டிக் காலத்தில், மறித்தும் - மீட்டும், காட்ட - தோற்றுவித்தற்கு, மன் உயிர் அனைத்தும் வாரி - நிலைபெற்ற உயிர்களனைத்தையும் வாரி, உண்டவன் தானே யான தன் ஒரு மூர்த்தி ஒத்தான் - உண்டவன் தானே யான தன்னொரு மூர்த்தியையும் நிகர்த்து விளங்கினான்.

அரக்கர் அனைவரையும் அழித்துத் தான் அங்குத் தனியாக நின்ற இராமபிரான், யுக முடிவில் உயிர் அனைத்தையும் வாயுட் கொண்டு விளங்கும் திருமாலை ஒத்தான் என்க.

பி - ம். 1. அண்ட மீதளவுஞ் சேர்ந்த; அண்டமதளவு; வீந்த; அரக்கரெவ்; மாளக்.

2. கூடி.

3. மண்டு நன் மறிந்தும், மண்டு நாண் மறித்துக் கொண்ட.

4. உண்டதான்; உருத்திர மூர்த்தி. 232

## இராமபிரான் இலக்குவனுள்ளவிடம் நோக்கிச் செல்லல்

3465. ஆகுலந் துறந்த தேவ
ரள்ளினர் சொரிந்த வெள்ளச்
சேகறு மலருஞ் சாந்துஞ்
செருத்தொழில் வருத்தந் தீர்க்க
மாகொலை செய்த வள்ளல்
வாளமர்க் களத்தைக் கைவிட்
டேகின னிளவ லோடு
மிராவண னேற்ற கைம்மேல்.

ஆகுலம் துறந்த தேவர் - துன்பம் நீங்கப்பெற்ற தேவர், அள்ளினர் சொரிந்த - கையில் வாரிப் பொழிந்த, வெள்ளம் - பெரு வாரியான, சேகு அறுமலரும் - பழுது அகன்ற தூய மலர்களும், சாந்தும் - சந்தனமும், செரு தொழில் வருத்தம் - போர்த் தொழிலில் விளைந்த வருத்தத்தை, தீர்க்க - போக்க, மாகொலை செய்த வள்ளல் - (அரக்கரைப்) பெருங் கொலை செய்த கருணாநிதி, வாள் அமர்களத்தை கைவிட்டு - அந்த வாள்கொண்டு செய்யும் போர்க்களத்தை விடுத்து, இளவலோடும் - தம்பியான இலக்குவனோடும், இராவணன் ஏற்ற கைமேல் ஏகினன் - இராவணன் எதிர்த்து நின்ற போர்க்களத்தை நோக்கிப் போயினன்.

ஆகுலம் : வியாகுலம் என்ற வடசொல். கொலை செய்வதும் வன்மை எனப்படுமோ என்னின் படும்; துட்ட நிக்ரகத்தினாலேயே சிட்டபரிபாலனம் புரிய வேண்டுமாதலினாலும், களை களைவது பயிர் தழைக்கவே யாதலினாலும் என்க. (குறள். 550); காண்க. சாத்திரக் கருத்துப்படி இறைவனுடைய பஞ்சகிருத்தியங்களில் ஒன்றான சம்ஹாரமும் அருட்செயல் என்றே அழைத்தல் உணர்க. 'பார்த்திடின் அருளே எல்லாம்' (சிவசித்தி. 1, 37); என்றது காணத்தகும்.

பி - ம். 1. ஆகுலந் துறக்கத்.
2. சேகுறு.
3. மாகுலஞ்.
4. போர்மேல்.

233

3466. இவ்வழி யியன்ற வெல்லா
மியம்பினு மிரிந்து போன
தெவ்வழி யாற்றல் வெற்றிச்
சேனையின் செயலுஞ் சென்ற
வெவ்வழி யரக்கர் கோமான்
செய்கையு மிளைய வீரன்
எவ்வமி லாற்றற் போரு
முற்றுநா மியம்ப லுற்றும்.

இ வழி - இங்கு, (இராமபிரான் போர் புரிந்த இடத்து), இயன்ற எல்லாம் - நிகழ்ந்தன யாவும், இயம்பினும் - கூறினோம்; (இனி) இரிந்து போன - நிலை தடுமாறிச் சென்ற, தெவ் அழி ஆற்றல் - பகைவரை அழிக்கும் வன்மை வாய்ந்த, வெற்றி சேனையின் - வெற்றியுடன் கூடிய (குரக்குப்) படையின், செயலும் - செயலும், சென்ற - எதிர்த்துச் சென்ற, வெம்மை வழி - கொடிய மார்க்கத்தைப் பின்பற்றிய, அரக்கர் கோமான் செய்கையும் - இராக்கதர் தலைவனான இராவணன் செய்தனவும், இளைய வீரன் - இலக்குவனுடைய, எவ்வம் இல் - குற்றமற்ற, ஆற்றல் போரும் - வலிய போரும், முற்றும் - முழுவதையும், நாம் - நாம்; இயம்பல் உற்றும் - புகலத் தொடங்கினோம்.

தெவ்வுப் பகைமை (நிகண்டு); 'தெவ்வடக்கு சிந்தையானும் நன்றி தென்று சிந்தியா' (கிட்கிந்தா. 236) 'திண்பொருள் எய்தலாகும் தெவ்வரைச் செருக்கலாகும்' (சீவக. 1760); 'தெம்மடங்கிய சேணிலங்கேகயர்' (சுந்தர. 348); முற்றும்: ஒரு செய்தியை விடாமல் என்றபடி.

பி - ம். 1. இவ்வழி; இயன்றதெல்லாம்.

2. சேனையுஞ் செயலும், சேனையின் செல்வும்.

4. உற்றதும்; விளம்பலுற்றும். 234

## நிலைகுலைந்து சென்ற குரங்குச் சேனையும் மீளுதல்

3467. பெரும்படைத் தலைவர் யாரும்
பெயர்ந்திலர் பெயர்ந்து போய்நாம்
விரும்பினம் வாழ்க்கை யென்றால்
யாரிடை விலக்கற் பாலார்
வரும்பழி துடைத்தும் மாண்டு
வைகுதும் வானி னென்னு
இருங்கடல் பெயர்ந்த தென்னத்
தானையு மீண்ட திப்பால்.

'பெரும்படை தலைவர் யாரும் - பெரிய படைத் தலைவர் எல்லாரும், பெயர்ந்திலர் - (சமர்க்களத்தினின்று) மீண்டாரில்லை

(திரும்பவும் களத்திற்கே ஏகினர்), பெயர்ந்து போய் - நீங்கிச் சென்று, நாம் வாழ்க்கை விரும்பினம் என்றால் - நாம் உயிர் வாழ்வதை விழைந்தோம் ஆகில், (போர்க்களத்தை விடுத்துச் சென்றால்), இடை விலக்கல் பாலார் யார் - இடையே தடுத்தற்குரியவர் யாவர்? (எவருமில்லை); ஆயினும், வரும்பழி துடைத்தும் - நேரக்கூடிய வசை மொழியைப் போக்குவோம், மாண்டு - மரித்து, வானின் வைகுதும் - நாமும் வீரர் உலகில் தங்கப் பெறுவோம்', என்னு - என்று கூறி, இரு கடல் பெயர்ந்தது என்ன தானையும் இப்பால் மீண்டது - பெரிய கடல் நிலை பெயர்ந்தாற் போன்று வாநரப் படையும், இங்கு நிலை பெயர்ந்து சென்றது.

பழி - போருக்கு அஞ்சி மீண்டார் என்று உலகம் கூறும் வசை மொழி. வான் - வீரசுவர்க்கம்; யாமும் - உம்மை இழிவுச் சிறப்பு; முன்பு வாநரச் சேனை மூலபலத்தைக் கண்டு இரிந்து ஓடிய செய்தி, இப்படலம் 27-30-ல் காண்க. இப்பொழுது மீட்டும் போர்க்களத்துக்கு வந்தமை. இலக்குவன் தம்மைப் புரக்கத் துணிந்தமையான் என்க. (ஒப்பு); 'எட்டானைத் தம்பமுடன் சயத்தமபம் நாட்டியபே ரிறைவன் மைந்தன், பட்டானென்பது கேட்டு திருகினர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வி. பா. 13 ஆம் போர். 135)

பி - ம். 1. தலைவர் பொன்றயாமெலாம்; பிரிந்து போனேம்.
2. யார்பழி விலக்கற்பாலார்.
3. வானின் வைகுதும் யாமுமென்னு.
4. சேனையுமீண்டது.

235

ஓர் பிரதியில் படைக்காட்சிப் படலம் முதல் இதுவரையில் உள்ள பகுதி, மூலபல வதைப்படலம் என்ற பெயரோடு காண்கின்றது.

மூலபல வதைப்படலம் முற்றும்.

## மூலபல வதைப் படலத்தைப்பற்றி முதனூல் கூறுவது :—

இராவணன் சேனைத் தலைவரை நோக்கி இராமபிரானைத் தொலைக்கவியலாமற் போனால், பெரும்போர் புரிந்து அவன் மேனியைப் புண்படுத்துமாறு சொல்லித் தான் அவனை மறுநாள் கொல்வதாகக் கூறுகின்றான். சேனாதிபதிகள் கட்டளையை மேற்கொண்டு செல்ல, இருதிறத்தார்க்கும் பெரும்போர் நிகழ்கின்றது. போரைத் தாங்கமாட்டாது குரங்குப் படைகள் வீற்று வீற்றாக நிலைகெட்டு ஓடி இராமபிரானைச் சரணடைகின்றன. இராமபிரான் வேகமுடன் சாரி திரியவே, அரக்கர்கள் அவனைக் காணவே முடியவில்லை. இராமபிரான் செல்லுமிடத்துள்ள அரக்கனையே இராமபிரானாக மாறிக் கருதி, அரக்கர் தம்மைத் தாமே வதைத்துக் கொள்கின்றனர். அன்றியும் அச்ச மிகுதியால் ஒரு இராமனையே பல இராமர்களாகக் காண்கின்றனர். அந்தப் பெரும போரில் ஒரு முகூர்த்த காலத்திற்குள் ஏழுகோடியே இருபது லட்சம் தேர்களும், பதின்மூன்று கோடியே பன்னிரண்டு லட்சத் தறுபதினாயிரம் குதிரைகளும், நூற்று நாற்பத்தைந்து கோடியே என்பது லட்சம் காலாட்களும், சக்கரம்போற் சுழன்று போர்புரிந்த இராமபிரானால் அழிந்தன. எஞ்சியிருந்த அரக்கர் அஞ்சி இலங்கைக் கோடினர். அந்தப் போர்க்களம் மயானம் போற் காணப்பட்டது. அப்போது இராமபிரான் தன்னருகில் நின்ற சுக்கிரீவன் முதலியோரைப் பார்த்துத்தான் அத்துணை விரைவில் மூலபலத்தை யழித்தது அத்திர வன்மையினாலேயே தான் என்றுகூறி அத்தகைய திறல் அழித்தல் தொழிற்குரிமையுள்ள சிவபிரானுக்கும் தனக்குமே உள்ளது என்கின்றான். அப்போது இராமபிரானுடைய போர் வன்மையை வியந்து தேவர்கள், கந்தர்வர்கள் முதலானோர் கூடி வாயாரப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

---

# 31. வேலேற்ற படலம்

வீடணன்மீது இராவணன் எறிந்த வேலை இலக்குவன் தான் ஏற்றதைக் கூறும் படலம் என விரியும்.

## வேறு

### இராவணன் தேரேறிச் செல்லுதல்

3468. சில்லி யாயிரஞ் சில்லுளைப்
பரியொடுஞ் சேர்ந்த
எல்ல வன்கதிர் மண்டில
மாறுகொண் டிமைக்குஞ்
செல்லுந் தேர்மிசைச் சென்றனன்
தேவரைத் தொலைத்த
வில்லும் வெங்கணைப் புட்டிலுங்
கொற்றமும் விளங்க.

ஆயிரம் சில்லி - ஆயிரம் உருளைகளுடனே, சில் உளை - (சிலவாகிய பிடரி மயிருடன் கூடிய, ஆயிரம் பரியொடும் சேர்ந்த - ஆயிரம் குதிரைகளுடன் கூடியதும், எல்லவன் - சூரியனுடைய, கதிர் மண்டிலம் - ஒளி பொருந்திய மண்டிலத்துடன், மாறு கொண்டு இமைக்கும் - மாறுபாடுகொண்டு ஒளிர்வதுமான, செல்லும் தேர்மிசை - ஓடும் தேரின்மீது, (இராவணன்), தேவரை தொலைத்த வில்லும் - தேவரை அழித்த வில்லும், வெம் கணை புட்டிலும் - கொடிய அம்புகள் அடங்கிய தூணியும், கொற்றமும் விளங்க - வெற்றியும் விளங்க, சென்றனன் - (போர்க்களம் நோக்கிச்) சென்றான்.

சில்லி - தேர் உருளை, 'சில்லியோடுந் திரண்டன தேரெலாம்' (சுந்தர. 1195); உளை - பிடரி மயிர்; தலையாட்டம் என்றும் கூறுப. 'தடந்தேர் பூண்ட வுளைவயப்புரவி' (சுந்தர. 946); ஆயிரம் என்பது இடைநிலை விளக்காகச் 'சில்லி' என்பதனோடும், 'பரி' என்பதனோடும் இயையும். எல்லவன் - சூரியன்; 'எல்லவன் கான் முளை

யுணரு மேல்வயின்' (யுத்த. 1463); 'எல்லவன் மறந்தனன்' (யுத்த. மீட்சி. 273); இலங்கேசனுக்குச் சூரியன் உவமை.

பி - ம். 1. செறிந்த.
2. எல்லவாம்.
3. சொல்லுந்தேர்.
4. வேல்கணைப்.

இதன்பின் 'நூறு கோடி' என்ற பாடல் சிலபிரதிகளில்

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அரக்கர் சேனையோ ராயிர வெள்ளத்தை யமரில்
துரக்க மானுடர் தம்மையென் றுருபுடை துரந்து
வெருக்கொள் வானரச் சேனைமேற் றுன்செல்வான் விரும்பி
இருக்குந் தேரொடும் போயவ னிராவண னெதிர்ந்தான்.

## இராவணனுடன் சென்ற சேனைகள்

3469. நூறு கோடித்தேர் நொறில்பரி நூற்றிரு கோடி
யாறு போன்மத மாகரி யையிரு கோடி
ஏறு கோளுறு பதாதியு மிவற்றிவற் றிரட்டி
சீறு கோளரி யேறனு னுடனன்று சென்ற.

நூறு கோடி தேர் - நூறு கோடித் தேர்களும், நொறில் - விரைவுடன் கூடிய, நூறு இரு கோடி பரி - இரு நூறு கோடிக் குதிரைகளும், யாறுபோல் மதம் ஐயிருகோடி மாகரி - நதியைப் போல மதசலத்தைப் பெருக்குகின்ற, பத்துக்கோடி பெரிய யானை களும், இவற்று இவற்று இரட்டி - இங்குக் கூறப்பட்ட சேனைகள் யாவற்றினுக்கும் இருமடங்காகவுள்ள, ஏறு கோள் உறு பதாதியும் - ஆண் சிங்கம் போன்ற வலிமையைக் கொண்ட, காலாட் படையும், சீறு - சினக்கின்ற, கோள் அரி ஏறு அனன் உடன் - வலிமை படைத்த ஆண்சிங்கம் ஒத்தவனான இராவணனுடனே, அன்று சென்ற - அன்று சென்றன.

நொறில் பரி - விரைந்து செல்லும் குதிரை; 'நூறு பத்துடைப் பத்தியினொறிற் பரிபூண்ட' (யுத்த. 1435); பதாதி: வடசொல்; காலாட்படை.

பி - ம். 1. நொறில் பரி நூறிரு கோடி.

2. மாறு கோளுடைய மால்கரி, ஆறுகோடுடை மால்களிறு, யாறு மாமத மால்கரி, மால்களிறு.

3. ஏறு கோளறும், கோளறு; அவற்றினுக்கிரட்டி.

4. உடன் சென்ற சேனை, உடனவை சென்ற, உடனது சென்ற. 2

## பேரிகைகள் முதலியன ஒலித்தல்

3470. மூன்று வைப்பினு மப்புறத் துலகினு முனையின்
ஏன்று கோளுறும் வீரர்கள் வம்மினென் றிசைக்கும்
ஆன்ற பேரியு மதிர்குரற் சங்கமு மசனி
ஈன்ற காளமு மேழொடே ழுலகமு மிசைப்ப.

'மூன்றுவைப்பினும் - (மேல் கீழ் நடு என்ற) மூன்று உலகத்திலும், அ புறத்து உலகினும் - அதற்கு அப்பாற்பட்ட உலகத்தினும், முனையின் - போர்க்களத்தில், ஏன்று - எதிரேற்று, கோள் உறும் - பகைவர்களின் உயிரைக் கொள்ளுதல் பொருந்திய, வீரர்கள் - இராக்கத வீரர்கள், வம்மின் - வாருங்கள், என்று இசைக்கும் - என்று சொல்லுகின்ற (சொல்வது போன்று ஒலிக்கும்), ஆன்ற பேரியும் - உயர்ந்த பேரிகையும், அதிர் குரல் சங்கமும் - முழங்குகின்ற குரலையுடைய சங்கமும், அசனி ஈன்ற காளமும் - இடியினால் பெறப்பட்டதோ என்று சொல்லக்கூடிய பேரொலி வாய்ந்த எக்காளமும், ஏழொடேழு உலகமும் இசைப்ப - பதினான்குலகங்களிலும் ஒலிப்பனவாயின.

முரசங்கள் ஒலிப்பது வீரர்களை வாருங்கள் என்று வரவேற்பது போன்றது எனப்பட்டது தற்குறிப்பேற்றம். 'வம்மின்புலவீர் நும்மெய் வருந்திக் கைசெய்துய்ம் மினோ' (திருவாய். 3, 9, 6) மூன்று வைப்பு; மேல் கீழ் நடு என்ற மூன்று புவனங்கள். முனை - போர்

முனை. அசனி ஈன்ற என்பதற்கு இடிபோன்ற பேரொலியை விளைத்த எனினுமாம். காளம் - எக்காளம்.

பி - ம். 1. முப்புறத்து.

2. ஏன்று கொள்ளுநும், கொன்னுறும்.

3. பேரிமைகயரி.

4. உலகினும். 3

## வாநரவீரர் இராவணனையும் அரக்கர் சேனையையுங் காணுதல்

3471. அனைய ராகிய வரக்கர்க்கு மரக்கனை யவுணர்
வினைய வானவர் வெவ்வினைப் பயத்தினை வீரர்
நினையு நெஞ்சினைச் சுடுமதோர் நெருப்பினை நிமிர்ந்து
கனையு மெண்ணையுங் கடப்பதோர் கடலினைக் கண்டார்.

அவுணர் வினையம் வானவர் - அவுணரின் மாயச் சூழ்ச்சிக் கண் பட்ட தேவர்களின், வெம் வினைப்பயத்தினை - கொடிய தீவினைப் பயன் போன்றவனும், வீரர் நினையும் நெஞ்சினை சுடுமது ஓர் நெருப்பினை - வீரர்களின் நினைக்கும் தன்மையுள்ள நெஞ்சினைச் சுடவல்ல ஒப் பற்ற தீப்போன்றவனுமான, அனையர் ஆகிய அரக்கர்க்கும் அரக்கனை - அத்தகையவரான அரக்கர்க்கெல்லாம் பெரிய அரக்க னை இராவணனையும், எண்ணையும் கடப்பது ஓர் - எண்ணிக்கை யெல்லாம் கடப்பதாகிய ஒரு, நிமிர்ந்து கனையும் - ஓங்கி முழங்கு வதான, கடலினைக் கண்டார் - ஒப்பற்ற சேனைக் கடலை, (வாநர வீரர்கள்) பார்த்தனர்.

வினைய வானவர் - சூழ்ச்சி மிக்க அமரர். வினையின் பயனாக வும், உள்ளத்தையும் சுடும் நெருப்பாகவும் அரக்கனை உருவகம் செய்தார். நெஞ்சைச் சுடுதல்; 'எண்ணுவார் எண் கொதிப்ப' (குசேலோ. 1. 179); கனைதல் - ஒலித்தல்; 'கனைகடலைக் குலவரை யைக் கடந்து நின்ற பெரி யானை' (தேவா 12. 1); கடல் - கடல் போன்று நிறைந்து நின்ற அரக்கர் படை.

பி - ம். 1. அனையகாலையின்.
2. வினையை ; வெவ்வினைப் புயத்தினை.
3. நினைவில் ; நெஞ்சையும் ; சுடுவதாய் ; நெருப்பினில் ; நிமிர்ந்த.
4. விண்ணையுங் கடப்பதோர், கூற்றையுங் குடிப்பதோர் கூற்றினைக். 4

## கண்ட வாநரர்கள், யுத்தகோலா கலத்தோடு ஆரவாரித்தல்

3472. கண்டு கைகளோ டணிவகுத் துருமுறழ் கற்கள்
கொண்டு கூற்றமு நடுக்குறத் தோள்புடை கொட்டி
அண்ட கோளங்க ளடுக்கழிந் துலைவுற வார்த்தார்
மண்டு போரிடை மடிவதே நலமென மதித்தார்.

(வாநர வீரர்கள் அங்ஙனம் வந்த அரக்கனை), கைகளோடு கண்டு - அவன் பக்கப் படையுடன் பார்த்து, அணிவகுத்து - (தம்மை) அணியாக வகுத்து, மண்டு போரிடை - மிக்குச் செய்யும் போரிடத்து, மடிவதே - (இராமன் பொருட்டு) உயிர் துறத்தலே, நலம் என மதித்தார் - நன்று என்று எண்ணினவர்களாய், கூற்றமும் நடுக்கு உற - யமனும் குலையும்படி, தோள்புடை கொட்டி - தோட்புறங்களில் தட்டிக் கொண்டு, உரும் உறழ் கற்கள் கொண்டு - பேரிடியொத்துத் தாக்குவனவான, மலைகளை (தத்தம் கரங்களில்) வந்திக்கொண்டு, (அதிர்ச்சியால்), அண்டம் கோளங்கள் அடுக்கு அழிந்து உலைவு உற ஆர்த்தார் - அண்ட கோளங்கள் (தாம்) அடுக்காகவுள்ள நிலைமை குலையுமாறு பேராரவாரம் செய்தனர்.

கை - சேனை ; தோள்புடை கொட்டுதல் - வீரர் செயல்.

பி - ம். 1. கண்களொடு ; உருமுழற், உருமுறு.
3. அண்ட கோடிகள், கோளகை.
4. போர் செய்து ; நலமென்று ; வலித்தார். 5

## இருதிறத்துச் சேனைகளும் பொருதல்

3473. அரக்கன் சேனையு மாருயிர்
வழங்குவா னமைந்த
குரக்கு வேலையு மொன்றோடொன்
றெதிரெதிர் கோத்து

நெருக்கி நேர்ந்தன நெருப்பிமைப்
பொடித்தன நெருப்பின்
உருக்கு செம்பென வம்பரத்
தோடின துதிரம்.

அரக்கன் சேனையும் - அரக்கனது படையும், அருமை உயிர் வழங்குவான் அமைந்த குரக்கு வேலையும் - (தமது) அருமையான உயிரையும் தருவதற்கு மனம் பொருந்திய வானரர் கடலும், ஒன்றோடு ஒன்று எதிர் எதிர் கோத்து - ஒன்றோடொன்று நேர் நேராகப் பொருந்தி, நெருக்கி நேர்ந்தன - நெருக்கி எதிர்ந்தன; (அந்தப் போர்க்களத்தில்), இமை - கண்களில், நெருப்பு பொடித்தன - நெருப்பு எழுந்தன, நெருப்பின் உருக்கு செம்பு என உதிரம் அம்பரத்து ஓடின - நெருப்பில் உருக்கிய செம்பு போன்று இரத்தம் கடலை நோக்கி ஓடிற்று.

அருமை + உயிர்; ஆருயிர்; அருமை; பிரிந்தாற் பெறற் கருமை. வழங்குவான் - வானீற்று வினையெச்சம் எதிர்வு காட்டிற்று. இமை - கண்ணிமைப் பொழுதுமாம். உதிரத்திற்கு உருக்கிய செம்பு: 'செம்பொத்த குருதி நோக்கி' (யுத்த. 254); 'உருக்கிய செம்பன வுதிரக் கண்ணினன்' (யுத்த. 1469); 'உலைக் குவட்டுருகும் செம்பொத் துதிர நீர் வழங்கும் கண்ணன்' (யுத்த. 1927); அம்பரம் - ஆகாயம்; 'அம்பரத் தெரிந்தார்ப்ப வரக்கனும்' (யுத்த. 1030).

பி - ம். 1. அரக்கர்; சேனையை; வாங்குவான்.
2. குரங்கின்; ஒன்றினே டொன்றெதிர் கோத்த; எதிரெதிர் கோத்த.
3. நெருப்பிடை; பொடித்தென.
4. உருக்கு செம்பொன்; மூடின. 6

இறந்துவிட்ட சேனையின் வருணனை

3474. அற்ற வன்றலை யறுகுறை யெழுந்தெழுந் தண்டத்
தொற்ற வானக முதயமண் டிலமென வொளிரச்
சுற்று மேகத்தைத் தொத்திய குருதிநீர் துளிப்ப
முற்றும் வையகம் போர்க்கள மாமென முயன்ற.

அற்றவன் தலை - துணிபட்ட வலிய தலைகள், அறு குறை - இற்று வீழ்ந்த உடற் குறைகளினின்றும், எழுந்து எழுந்து - துள்ளித் துள்ளி, அண்டத்து - வானத்தில், ஒற்ற - தீண்டுவதாய், வான் அகம் - வானிடத்து, உதயம் மண்டிலம் என ஒளிர - உதய மண்டிலம் போன்று திகழா நிற்க, சுற்றும் மேகத்தை - வானத்தைச் சுற்றியுள்ள மேகத்தில், தொத்திய - (அத் தலைகளினின்றும்) தொத்திய, குருதி நீர் துளிப்ப - உதிரப் புனல் துளித்தலால், வையகம் முற்றும் - பூமண்டலம் முழுவதும், போர்களம் என முயன்ற ஆம் - போர்க்களம் என்று சொல்லும்படி முயன்றன, போன்றன.

அற்றவன் தலை: 'அற்ற தலைபோக, வருததலை நான்கினை யும், பற்றித் திருகிப் பறியேனோ' (தனிப்பா. ஔவை); உதிரத்துடன் பொருந்திய தலைகள் எழுந்து விண்ணிற் சென்றதனால் அவ் வானத்தினிடம் உதய மண்டலம் ஒத்து விளங்கியது; இத் தலைகளினின்று இழிந்த உதிரம் மேகத்திற் படியவே, அம் மேகம் நீரைப் பொழியாது உதிரத்தைப் பொழியப், பூதலம் முழுதும் போர்க்களம் ஒப்ப உதிரம் நிறையலாயிற்று. தொடர்புயர்வு நவிற்சியணி. தலை அறுபட்டவரின் பெருந்தொகையைச் சுட்டி நின்றது. முற்றும் வையகம் என்பதை வையகம் முற்றும் என மாற்றுக. வையகம் - பூமி; 'கறங்கு தெண்டிரை வையகம்' (சீவக. 248).

பா - ம். 1 வான்றலை; அண்டம், அண்ட.

2. ஒற்றை; வான்முகம்.

3. சுற்றிய, தோற்றிய, செற்றிய.

4. போர்க் களம்மாமென முயல, போர்க்களம் போன்றன முதிர்தம், போர்க்களமாமென்று, போர்க்களம் போலின்று முரஞ்ச. 7

3475. தூவி யம்பெடை யரியின மறிதரச் சூழி
தூவி யம்பெடை சோர்ந்தன சொரியுடற் சுரிப்ப
மேவி யம்படை படப்படக் குருதியின் வீழ்ந்த
மேவி யம்படைக் கடலிடைக் குடரொடு மிதந்த.

அம் படை கடல் இடை - அழகிய இராக்கதச் சேனையாகிய ஆழியில், மேவி - பொருந்தி, (இலக்குவன்), அம்பு எடை-வாளியை எடுக்கையில், (யானையின் மத சலம் பருக வந்த) தூவி - மெல்லிய,

இறகினையுடைய, அம்பெடை அரி இனம் - அழகிய பேடையுடன் கூடிய ஆண் வண்டுகளின் கூட்டம், மறிதர - மீள, (அவ் யானைகள்), சூழி - முகபடாத்தை, தூவி - வீசி, சோர்ந்தன - தளர்ந்தனவாய், வியம்மே - பெருமை வாய்ந்த, படை படபட - (இளைய பெருமானின்) அம்பு படுந்தோறும், குருதியின் - உதிரத்திலே, சொரி உடல் - (உதிரத்தைச்) சிந்துகின்ற தம் உடல், சுரிப்ப - சுற்றி அமிழுமாறு, வீழ்ந்த - வீழ்ந்தனவாய், குடரொடும் - குடலுடனே, மிதந்த - மிதந்தன.

இலக்குவன் அம்பினை எடுத்த அளவில் யானைகள் தமது நெற்றிப் பட்டத்தை வீசித் தளர்ந்து அம்புகள் தாக்குந்தோறும் உதிர வெள்ளத்தில் தமது உடல் அமிழும்படி வீழ்ந்து, குடலுடனே மிதந்தன. இதில் திரிபும் யமகமும் விரவி வந்தமை காண்க. தூவி: 'தூவியன்ன மென்புனலிடை' (சுந்தர. 340); 'அனிச்சமு மன்னத்தின் தூவியும்' (குறள். 1120); அரி - பல பொருள் ஒரு சொல்; இங்கே வண்டு. அறிதர-தர என்பது துணை வினை.

பி - ம். 1. இரிவன சொரிதர, அரியின மரிதர.

2. படிந்தெனச் சோரியுட் சுரிப்ப, சோர்ந்தெனச் சோரியுட் சுழிப்ப.

3. படப்படாக்.

4. மிதப்ப, மிதிப்ப. 8

3476. கண்டி றந்தனர் கணவர்தம் முகத்தவா முறுவல்
கண்டி றந்தனர் மடந்தைய ருயிரொடுங் கலந்தார்
பண்டி றந்தன பழம்புணர் வகம்புகப் பன்னிப்
பண்டி றந்தன புலம்பொலி சிலம்பொலி பனிப்ப.

மடந்தையர் - மகளிர், கண் திறந்தனர் கணவர் தம் - விழிகளைத் திறந்தவராகிய (தம்) கணவன்மாரின், முகத்த ஆம் - முகத்தில் எழுந்த, முறுவல் - புன்னகையை, கண்டு - நோக்கி, பண்டு இறந்தன பழம் புணர்வு - முன் (தாம் துய்த்துக்) கழிந்தனவான பழமை (கலவி நூலிற் கூறப்பட்ட) கரணங்கள், அகம்புக - (தம்) நினைவில் எழ, பன்னி - அவற்றை வாய்விட்டுக் கூறி, பண் திறந்து அன புலம்பு - கனராகங்களை உயர்த்துப் பாடினாற் போன்று (இன்னிசை யெழுமாறு) புலம்புகின்ற, ஒலி-ஒலியுடனே,

சிலம்பு-சிலம்பின் ஒலியும், பனிப்ப - ஒலிக்க, இறந்தனர் - (கணவன் மாருக்கு இறப்பு நேர்வதற்காக வருந்தி) உயிர் நீத்தவராய், உயிரோடும் கலந்தார் - (தம்) கணவன்மாருடன் (வீரர் உலகில்) ஒன்று கூடினர்.

சோக மிகுதியைக் குறிக்கும் ஓர் செய்யுள். உத்தமபத்தினிய ரான ஒரு சிலரைச் சாகுந்தறுவாயில் இருந்த தம் கணவன்மார் கண்திறந்து பார்க்க, அம் மாதர்க்கு முன்னர் தத்தம் கணவன் மாருடன் துய்த்த கலவிக் கரணங்கள் அனைத்தும் நினைவில் எழ, பண்ணிசைத்தாற் போன்று, அவற்றையெல்லாம் எடுத்துச் சொல்லிப் பலாக்கணம் பாடினர் என்க. மரணத்தைப் பொருட் படுத்தாத வீரர் ஆதலின் மரணத்தறுவாயிலும் முறுவலித்தனர் என்க. பழம்புணர்வு - முன் துய்த்த புணர்ச்சிக் கரணங்கள். புலம்பொலி சிலம்பொலி - இணை யெதுகை காண்க. பனித்தல் - ஒலித்தல்; 'தேவர்மெய்ப் பனிப்புற' (கல்லா. முரு. துதி.).

பி - ம். 1. இறந்தவர், இறந்தன; முகத்தவர் முகத்தோடு.
2. பண்டிறந்தனர்.
3. புணாக்கன்புக. புணர்களம்புக; பண்ணி.
4. பண் மறந்தன; பணிப்ப, பணிப்பார். 9

## மாற்றாரின் போரால் தன் சேனை தருக்கழியுமென்று இராவணன் கூறல்

3477. ஏழு மேழுமென் றிசைக்கின்ற வுலகங்கள் யாவும்
ஊழி போவதே யொப்பதோ ருலைவுற வுடற்றும்
நூழில் வெஞ்சம நோக்கியவ் விராவண னுவன்றன்
தாழி லென்படை தருக்கறு மென்பதோர் தன்மை.

'ஏழும் ஏழும் என்று இசைக்கின்ற - பதினான்கு எனச் சொல்லப் பெறுகின்ற, உலகங்கள் யாவும் - உலகனைத்தும், ஊழி - பேரூழியின் போது, போவதே ஒப்பது-அழியப் போவதை நிகர்ப்ப தாகிய, ஓர் - ஒப்பற்ற, உலைவு - அழிவினை, உற - பொருந்தும் வண்ணம், உடற்றும் - புரியும், நூழில் - கொன்று குவிக்கும் இட மான, வெம் சமம் நோக்கி-கொடிய போர்க்களத்தைக் கண்ணுற்று,

அவ் இராவணன்-அந்த அரக்கர் கோமான், தாழ் இல் என் படை-தாழ்ச்சியற்ற என்னுடைய சேனை, தருக்கு அறும்-செருக்குக் கெடப்பெறும்', என்பது ஓர் தன்மை-என்பதான ஓர் தன்மையை, நுவன்றான்-சொன்னான்.

நூழில்-கொன்று குவித்தல். நூழிலாட்டு எனவும் படும் 'நூழிற் சுடுதழற் புகை' (யுத்த. 2504); உடற்றும்; 'உடற்றும் பாவம் வந்தடையும்' (குசேலோ. 3, 124) தாழ்-தாழ்வு. தருக்கு-வலியுமாம்.

பி-ம். 1. உரைக்கின்ற; எவையும்.
2. ஊழி போவன வொப்பன; உடற்று இடற்று.
3. நோக்கிய விராவணன்.
4. படை தளர்வுறும். 110

## வானர சேனைகளுடன் பொருத அரக்கச் சேனை முற்றுங் கெடுதல்

3478. மரமுங் கல்லுமே வில்லொடு வாண்மழுச் சூலம்
அரமுங் கல்லும்வேல் முதலிய வயிற்படை யடக்கிச்
சிரமுங் கல்லெனச் சிந்தலிற் சிதைந்தது சேனை
உரமுங் கல்வியு முடையவன் செருநின்ற தொருபால்.

மரமும் கல்லுமே-(குரங்குகள் வீசிய) மரங்களும் மலைகளுமே (அரக்கர் எறிந்த), வில்லொடு வாள் மழுசூலம் அரமும் கல்லும்-வில்லும் வாளும் மழுவும் சூலமும் அரமும் கவண் கல்லும், வேல்-வேலும், முதலிய-முதலான, அயில் படை அடக்கி-கூரிய போர்க் கருவிகளை யடங்கச் செய்து, சிரமும்-அரக்கர் தலைகளையும், கல் என-கல் என்ற ஒலியுடன், சிந்தலில்-சிதறும்படி புரிந்ததனால், அ சேனை-அந்த அரக்கர் படை, சிதைந்தது-கெட்டொழிந்தது; உரமும்-உடல் வலியும், கல்வியும்-போர் முறைக் கல்வியும், உடையவன்-உடையவன் ஆன, இலக்குவனுடைய, செரு ஒருபால் நின்றது-போர் ஒருபுறம் நிகழா நின்றது.

கல்லென-ஒலிக் குறிப்பு; கல்லொப்ப எனினுமாம்.

பி - ம். 1. வாள்களும் வேலும்.

2. கல்லுமே ; முதலிய வியற்படை, முதலிய வாய்ப்படை ; அடுக்கிச், அரக்கர், யடர்க்க.

3. சிதைந்தன, சிதைந்தென, சிதைந்ததென், சிந்தின சேனை.

4. உடையவன் படை நின்ற. 11

இதன்பின் 'வில்லும்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

## அநுமனுடனே கூடிய இலக்குவன் அரக்கர் படையை வென்றமை.

3479. அழலுங் கட்களிற் றணியொடு துணிபடு மாவி
கழலும் பல்பரித் தேரொடு புரவியுஞ் சுற்றச்
சுழலுஞ் சோரிநீ ராற்றெடுங் கடலிடைக் கலக்கும்
குழலு நூலும்போ லனுமனுந் தானுமக் குமரன்.

அநுமனும் - மாருதியும், அ குமரன் தானும் - அந்த இலக்குவன் என்ற இளையோனும், குழலும் நூலும் போல் - நூற் குழலும் நூலும் போன்று, (செல்ல), அழலும் - நெருப்பெழுகின்ற, கண் - விழிகளையுடைய, களிறு அணியொடு - யானை வரிசையுடனே, துணிபடும் - துண்டு பட்டதனால், ஆவி சுழலும் - உயிர் ஊசலாடுகின்ற, பல் பரி தேரொடு - பல குதிரைகள் பூட்டப்பட்ட தேரும், புரவியும் - தனிப்பட்ட குதிரைகளும், கழலும் - பாய்கின்ற, சோரி நீர் ஆற்றொடும் - உதிரப் புனலாற்றினோடும், கடல் இடை கலக்கும் - கடலிடத்தே பாய்ந்து கலக்கும்.

அழலும் கண் - நெருப்புப் பிறக்கின்ற கண். அணியொடு துணிபடும் - இணையெதுகை. குழலும் நூலும் போல் - இணை பிரியாமைக்கு ஏற்ற உவமை ; 'நெய் குழலுறு மிழையென' (பால. திருவவ. 130) ; குழலும் நூலும்போல் மாருதியும் இராமபிரானும்.

பி - ம். 1. கற்களோடு ; துணிபடுமாவிச், துணிபடு மமலிச்.

2. தேரினத் தொகுதியுமன்ன, தேரோடு குதிரையும் மன்ன.

3. ஆற்றிடைக் கடலோடும்.

4. போனம் ; அநுமனும் குமரனும் துரக்க. 12

3480. வில்லுங் கூற்றுவற் குண்டெனத் திரிகின்ற வீரன்
கொல்லுங் கூற்றெனக் குறைக்குமிந் நிறைபெருங் குழுவை
ஒல்லுங் கோளரி யுருமன்ன குரங்கின துகிரும்
பல்லுங் கூர்க்கின்ற கூர்க்கிலா வரக்கர்தம் படைகள்.

கூற்றுவற்கு - யமனுக்கு, வில்லும் உண்டு என திரிகின்ற வீரன் - வில்லும் ஓர் ஆயுதமாக உள்ளது என்று (கண்டோர்) எண்ணுமாறு, (வில்லினை யேந்தி) அலைகின்ற வீரனை இலக்குவன், இ நிறை பெரு குழுவை - இந்தப் பூரணமான (சேனைத்) தொகுதியை, கொல்லும் கூற்று என - கொன்றொழிக்கும் யமன் போன்று, குறைக்கும் - குறையச் செய்வான்; ஒல்லும் கோள் அரி - எல்லாவற்றையும் கொல்லக்கூடிய வலிய சிங்கத்தையும், உரும் - இடியையும், அன்ன - போன்ற, குரங்கினது - குரங்கினுடைய, (அநுமனின்), உகிரும் பல்லும் - நகமும் பல்லும், கூர்க்கின்ற - மிகுகின்றன, அரக்கர் தம் படைகள் - இராக்கதர் போர்க் கருவிகளோ, கூர்க்கிலா - மிகுவதில்லை.

கூற்றுவற்கு உள்ள ஆயுதம் கதை; இங்கு வில்லொடும் திரியும் கூற்றன்ன வீரன் எனப்பட்டது. ஒல்லுதல் - இயலுதல்; 'ஒல்லும் வகையானறவினையோ வாதே, செல்லும்வா யெல்லாம் செயல்' (குறள். 33); 'ஒல்லுவதொல்லு மென்றலும்' (புறநா. 196); கோளரியையும் உருமையும் என்க. 'பொருகின்றனர் கோளரி போல்வார்' (யுத்த. 1898); உகிர் - நகம்; 'புற்றினை வள்ளுகிரால் கிலைபேர மறிப்ப' (யுத்த. 2908); கூர்க்கின்ற கூர்க்கிலா - முரண்.

பி - ம். 1. வில்லுங் கூற்றுறச்.
2. கூற்றையுங் குறைக்கும்.
4. கூர்கின்ற; கூர்கில, கூர்க்கில, கூர்ந்தில; பல்லுங் கூர்த்தில வரக்கர் தம் படைகளைப் பற்றி, பல்லுங் கூர்த்தில வரக்கர் தம்படைகளை யன்றி.



## சேனை யழிவுகண்டு இராவணன் தெரித்தல்

3481. கண்டு நின்றிறைப் பொழுதினிக் காலத்தைக் கழிப்பின்
உண்டு கைவிடுங் கூற்றுவ னிருதர்பே ருயிரை
மண்டு வெஞ்செரு நானொரு கணத்திடை மடித்தே
கொண்டு மீள்குவென் கொற்றமென் றிராவணன்
[கோதித்தான்.

'இறை பொழுதின்-சிறிது நேரம், கண்டு நின்று - (தன் படை குலைவதைப்) பார்த்து நின்று, இனி காலத்தை கழிப்பின் - இனிப் பொழுது போக்கினால், கூற்றுவன் - யமன், நிருதர் பேர் உயிரை - அரக்கரின் பெரிய உயிரை, உண்டு - முழுதும் உண்டு, கைவிடும் - (இப் போர்க்களத்தை) விட்டுவிடுவான்; (ஆதலின்), மண்டு வெம் செரு - மிக்குச் செய்கின்ற கடுமையான போரின் கண், ஒரு கணத் திடை-ஒரு கணத்தில், நான் மடித்து-நான் பகைவரைக் கொன்று, கொற்றம் கொண்டு மீள்குவென் - வெற்றியைக் கைக்கொண்டு திரும்புவேன்', என்று இராவணன் கொதித்தான் - என்று இராவணன் மனம் வெதும்பினான். ஏகாரம்: தேற்றம்.

உயிரை உண்டு - மரபு வழுவமைதி. கொற்றம் கொண்டு மீள்வென் என மாற்றுக. இறை - கணப்பொழுது; 'இறை ஈண்ட நிற்றிடின்' (யுத்த. இராவணன் வதை. 181).

பி - ம். 1. நின்றப் பொழுதினைக் காலத்தைக் கழிவின்.

2. கூற்றுவன் இருந்த.

3. களத்திடை; மண்டு வெஞ்செரு பொழுதினிற் செருக்களத்திடையே.

4. மீள்குவென். 14

ஒரு பிரதியில், 'கண்டு நின்றிறைப் பொழுதினிற் செருக் களத்திடையே, கொண்டு மீள்குவென் கூலத்தைக் கொடிய வெம்படையால், உண்டு கைவிடுங் கூற்றுவனிருதர் தம்முயிரைக். கொண்டு கொற்றமென்றிராவணன் கரங்கொண்டு கொதித்தான்; என்று காணப்படுகிறது.

## இராவணன் அம்புகளை விடுதல்

3482. ஊதை போல்வன வுருமுறழ் திறலன வுருவிப்
பூத ரங்களைப் பிளப்பன வண்டத்தைப் பொதுப்ப
மாதி ரங்களை யளப்பன மாற்றருங் கூற்றின்
தூது போல்வன சுடுகணை முறைமுறை துரந்தான்.

ஊதை போல்வன - காற்றைப் போல் விரைவனவும், உரும் உறழ் திறலன - இடியோடும் மாறு கொள்ளும் வன்மையனவும், பூதரங்களை உருவி பிளப்பன - மலைகளை உருவிக் கூறுபடுப்பனவும்,

அண்டத்தை பொதுப்ப - அண்டத்தைத் துளையிடுவனவும், மாதிரங்களை அளப்பன - திசைகளை அளப்பனவும், மாற்றரும் கூற்றின் - விலக்குதற்கரிய யமனுடைய, தூது போல்வன - தூது போல்வனவுவாகிய, சுடு கணை - சுடுந் தன்மையுள்ள வாளிகளை, முறை முறை துரந்தான் - முறை முறையாக விரைந்து விடுத்தான், (இராவணன்).

ஊதை - பெருங் காற்று; 'ஊதையோடருவிகளுமிழ்வதொத்தனன்' (யுத்த. 1500); இப்பொழுது இது வழக்கில் ஊதற் காற்று என வழங்குகின்றது. 'ஊதைபோல் விசையின்' (கிட்கிந்தா. 893); 'உலைவுறு முளமென வுலாய தூதையே' (கிட்கிந்தா. 443); பூதரம் - மலை; பூமியைத் தரிப்பது என்று காரணக் குறி. பொதுத்தல் - துளைத்தல்; 'அண்டத்தைப் பொதுப்புறத் தப்பினுலாடும்' (யுத்த. 133); 'அண்டத்தையும் பொதுத்தேகும்' (யுத்த. இராவணன். வதை. 48); மாதிரம் - திசை; 'மாதிரங் கடந்ததோளான்' (யுத்த. 1568); மாற்றருங் கூற்றின்; 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல். புறத். 79); சுடுகணை - வினைத் தொகை; அக்கினியத்திரமுமாம்.

பி - ம். 1. உருமுள.
2. பூதலங்களை.
4. கடுங்கணை; மாரியில் துரந்தான். சொரிந்தான். 15

## இராவணன் கடுங்கணையால் வாநரசேனை நிலைகுலைதல்

3483. ஆளி போன்றுள னெதிர்ந்தபோ தமர்க்களத் தடைந்த
ஞாளி போன்றுள னென்பதெ னள்ளிரு ளடைந்த
காளி போன்றன னிராவணன் வெள்ளிடைக் கரந்த
பூளை போன்றதப் பொருசினத் தரிகள்தம் புணரி.

ஆளி போன்று உளன் - சிங்கத்தை நிகர்த்தவனாகிய இராவணன், எதிர்ந்த போது - எதிர்த்துப் போர் செய்தபோது, அமர்க்களத்து அடைந்த - போர்க்களத்திலே நிறைந்த குரங்குகள், ஞாளி போன்று உள என்பது என் - நாய்கள் போன்று (இழிந்து) நின்றன என்பது என்; (சிங்கத்தின்முன் நாய்கள் போலும், இராவணன்முன் குரங்குகள் என்று சொல்வதற்குமில்லை என்றவாறு); நள் இருள் அடைந்த - நடு இரவிலே வந்தடைந்த, காளி போன்றனன் இரா

வணன் - காற்றுப் போன்றனன் இராவணன்; வெள் இடை - வெற்றிடத்திலே (காற்றுக்கு முன்னே) கரந்த - ஒளித்த, பூளை போன்றது - பூளைச் செடியைப் போன்றது, அ - அந்த, பொரு சினத்து அரிகள்தம் புணரி - பொருகின்ற கோபத்தினையுடைய வானர சேனைக்கடல்.

ஆளி: சிங்கம்; மல்லல் ஆளியைப்பல வளைந்து கொள்ளினும், கொல்லலாயிருக்குமோ குஞ்சரங்களால்' (வி. பா. நிரைமீட்சி. 84). ஞாளி: நாய்; 'ஞாளிகள் பூண்டன நரிகள் பூண்டன' (ஆரணிய. 581); இங்கு வெள்ளிடை: வெற்றிடம்; 'வெடியப் பார்ப்ப தோர் வெள்ளிடை கண்டிலார்' (யுத்த. 3250); பூளை: ஒரு வகை மலர்; 'மாருத மறைந்த பூளையாயினை கண்டனை' (யுத்த. 1210); புணரி: நதிகள் புணர்தற்கு இடமான கடல்: இ: பெயர் விகுதி; காற்று வீசும்போது பூளை பூச்சிதறி ஓடுவதுபோன்று' இராமன் அம்பு தாக்கியபோது, வானரப்படை நிலைகுலைந் தோடியது. காளி: காற்று; தெலுங்கு: காலி; கம்பநாடர் சில காலம் ஓரங்கல் பிரதாபருத்திரனிடம் வதிந்தவர் என்ற வரலாறு உண்டு அங்குச் சில தெலுங்கு வார்த்தைகள் பயின்றிருத்தல் கூடும். இங்குக் காலி தெலுங்கு வார்த்தை. 'அக்கட விராவணற் கமைந்த ஆற்றலே' (யுத்த. 43) என்றதும் காண்க.

பி - ம். 1. ஆளிபோன்றுளது; பேர்மறக்; எதிர்ந்த, அடைந்தார்.
2. நாளி போன்றுளது, போன்றுளர்; எனவதன்னைள்ளிருளுடைந்த.
3. வெள்ளிடைக் கலந்த. 16

## இரிந்த வாநரசேனைகளை அஞ்சற்க என்று விலக்கி இலக்குவன் அநுமன் தோள்மீது அமர்ந்து இராவணனை எதிர்த்தல்

3484. இரியல் போகின்ற சேனையை யிலக்குவன் விலக்கி
அரிக ளஞ்சன்மி னஞ்சன்மி னென்றருள் வழங்கித்
திரியு மாருதி தோளெனுந் தேர்மிசைச் சென்றான்
எரியும் வெஞ்சினத் திராவண னெதிர்புகுந் தேற்றான்.

இலக்குவன் - இலக்குமணன், இரியல் போகின்ற சேனையை - நிலைகுலைந்து விரைகின்ற (குரக்குப்) படையை, விலக்கி - தடுத்து, 'அரிகள் - வானரங்களே! அஞ்சன் மின் அஞ்சன்மின்-பயப்படாதீர் பயப்படாதீர்', என்று அருள் வழங்கி - என்று கருணை மொழி கூறித் தடுத்து, திரியும் மாருதி தோள் எனும் - திரிகின்ற அநும னுடைய, தோள் என்கின்ற, தேர்மிசை சென்றான் - தேரின்மீது அமர்ந்து சென்றவனாய், எரியும் வெம் சினத்து - எரிகின்ற கடுங் கோபத்தையுடைய, இராவணன் எதிர் புகுந்து ஏற்றான் - இராவணனுக்கு எதிரே புகுந்து (அவனை) எதிர்த்தான்.

அஞ்சி ஓடுவாரைத் தேற்றி நிறுத்துவது தலைவர் கடன் ஆகலின் இலக்குவன் தேற்றியது கூறப்பட்டது. ஏற்றான்: எதிர்த்தான்; மலைநாட்டு வழக்கு என்றெழுதுவர் ஐயரவர்கள்.

பி - ம். 3. தெரிய மாருதி; தேரிடைச்.
4. நேர்புகுந்து. 17

## இலக்குவனும் இராவணனும் பொருதல்

3485. ஏற்றுக் கோடலு மிராவண னெரிமுகப் பகழி
நூற்றுக் கோடியின் மேற்செலச் சிலைகொடு நூக்கக்
காற்றுக் கோடிய பஞ்செனத் திசைதொறுங் கரக்க
வேற்றுக் கோல்கொடு விலக்கின னிலக்குவன் விசையால்.

ஏற்று கோடலும் - (இலக்குவன் குரக்குச் சேனையைத் தாங்கிக் கொண்டே) எதிர்த்துப் போர் புரிந்த அளவில், இரா வணன் - இராவணன், எரிமுகம் பகழி - தீயை முகத்திலேயுடைய அம்புகளை, நூறு கோடியின் மேல்செல - நூறு கோடியினும் அதிகமாக, சிலைகொடு நூக்க - வில்லைக்கொண்டு செலுத்த, (அந்தச் சரங்கள்), காற்றுக்கு - காற்றின் முன், ஓடிய - பறந்த, பஞ்சு என - பஞ்சு போன்று, திசைதொறும் கரக்க - திசை தோறும் சென்று ஒளிக்குமாறு, இலக்குவன் - இளையவன், விசை யால் - வேகத்துடன், வேறு கோல்கொடு விலக்கினன் - வேறு வாளிகளைக்கொண்டு தவிர்த்தான்.

எரிமுகப் பகழி: ஆக்கினேயாத்திரம்; நூக்குதல்: செலுத்தல்; 'நூறுவாயென மாதலி நூக்கினன்' (யுத்த. இராவணன் வதை. 174). காற்றுக்கோடிய பஞ்சு: சிறந்த உவமை; (ஒப்பு): 'எறி காற்றிற் சருகென' (திருக்கருவை. கலித். 60); 'காற்றுக் கோடிய பஞ்சு' (யுத்த. 3185); உரை காண்க. விலக்கின னிலக்குவன்: இணையெதுகை. இச்செய்யுளும் முன் செய்யுளும் அந்தாதித் தொடை.

பி-ம். 2. சிலைகொடு தூவச், சிலைகொண்டு.

3. தலந்தொறுங் காக்க. 18

3486. விலக்கி னன்தடந் தோளினு மார்பினும் விசிகம்
உலக்க வுய்த்தன னிராவண னைந்தொடைந் துருவக்
கலக்க முற்றில னிளவலு முள்ளத்திற் கனன்றான்
அலக்க ணெய்துவித் தானட லரக்கனை யம்பால்.

விலக்கினன் - தன் அம்புகளைத் தடுத்தவனான இலக்குவனுடைய, தட தோளினும் - பெரிய தோளின்மேலும், மார்பினும் - மார்பின் மேலும், விசிகம் - அம்புகளை, இராவணன் உலக்க உய்த்தனன் - இராவணன் நன்கு பதியுமாறு விடுத்தான்; ஐந்தொடு ஐந்து உருவ - பத்துச் சரங்கள் (தன் உடலை) ஊடுருவிச் செல்லவும், கலக்கம் உற்றிலன் - கலக்கம் உறாதவனாகி, இளவலும் - இலக்குவனும், உள்ளத்தில் கனன்றான் - மனத்தால் வெகுண்டு, அடல் அரக்கனை - வலிய அரக்கனை, அம்பால் - தனது வாளியால், அலக்கண் எய்துவித்தான் - துன்புறச் செய்தான்.

விசிகம்: அம்பு; 'வெந்தீவினைப் பயன் ஒத்தனன் அரக்கன் சொரி விசிகம்' (யுத்த. இராவணன் வதை. 52). உலக்க: 'உலக்க வின்னுயிர் குடித்தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249). அலக்கண் - துன்பம்; 'அலக்கணெய்தி யமரரழிந்திட' (யுத்த. 3553); 'அங்கமு மனமுங் கண்ணு மாவியு மலக்கணுற்றான்' (யுத்த. 1829).

பி-ம். 3. உற்றிலா வுள்ளத்த திளவலும், உற்றிலா வுள்ளத்தி னிலக்குவன்.

4. அன்றவ்வரக்கனை, 19

## இலக்குவனுடைய வலிமை கண்டு இராவணன் மோகனுத் திரத்தைவிட, வீடணன் உரைகொண்டு திருமாலின் படையால் அதனை இலக்குவன் தவிர்த்தல்

3487. காக்க லாகலாக் கடுப்பினிற் றொடுப்பன கணைகள்
நூக்கி னுன்கணை நுறுக்கின னரக்கனு நூழில்
ஆக்கும் வெஞ்சமத் தரிதிவன் றனைவெல்வ தம்மா
நீக்கி யென்னினிச் செய்வதென் றிராவண னினைந்தான்.

காக்கல் ஆகலா கடுப்பினில் - தடுத்தற்கு இயலாத வேகத்துடன், தொடுப்பன கணைகள் - விடுப்பனவாகிய வாளிகளை, நூக்கினுன் - செலுத்தினவனுகிய இலக்குவனுடைய, கணை - சரங்களை, நுறுக்கினுன் - துகள் செய்தவனுகிய, அரக்கனும் - இராவணனும், 'நூழில் ஆக்கும் - பகைவர்களைக் கொன்று குவிக்கும், வெம் சமத்து - கொடிய போரில், இவன்தனை வெல்வது அரிது - இவனை வெற்றிகொள்வது அருமை; நீக்கி - இவனை விட்டிட்டு, இனி - இப்போது; செய்வது என் - காட்டக்கூடிய வீரர் செயல் யாது' என்று - என்று, இராவணன் நினைந்தான் - இராவணன் ஆலோசித்தான். அம்மா : வியப்பு.

இலக்குவன் பராக்கிரமத்தை இராவணன் வியந்தது; அம்மா: வியப்பு. நூழில் ஆக்குதல்: கொன்று குவித்தல்; 'ஒள்வாள் வீசிய நூழிலுமுளப்பட' (தொல். புறத். 72); 'நல்லிசை யெய்திய ஒருவற்கு வஞ்சத்தாற் கொன்ற வேந்தன் பல்படை புறங்கொடுத் தலின் அவரைக் கோறல் புரிதல் அறனன்றென்று கருதாது அவன் வாளாற்றடிந்து கொன்று குவித்தற் கண்ணும்' என்ற அதன் உரையும் காண்க. 'வள்ளை நீக்கி வயமீன் முகந்து, கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர், வேழப்பழனத்து நூழிலாட்டு (மதுரைக் காஞ்சி. 255, 257).

பா - ம். 3. ஆக்கி; வெல்லவம்பால், வெல்வதம்பால்.
4. நீக்கியென்,

3488. கடவுண் மாப்படை தொடுக்கின்மற் றவைமுற்றுங் கடக்க
விடவு மாற்றவும் வல்லனன்றி யாரையும் வெல்லும்
தடவு மாற்றலைக் கூற்றையுந் தமையனைப் போலச்
சுடவு மாற்றுமெவ் வுலகையு மெவனுக்குந் தோலான்.

'கடவுள் மா படை - தெய்வங்களின் பெயர்களைத் தரித்த பெரிய அம்புகளை, தொடுக்கின் - விடுத்தால், அவை முற்றும் கடக்க விடவும் - அவை முழுதும் கடந்து விடவும், ஆற்றவும் - பொறுக்கவும், வல்லன் அன்றி - வன்மை பெற்றவன் மட்டுமன்றி, யாரையும் வெல்லும் - எவரையும் வெற்றி கொள்வான்; கூற்றையும் ஆற்றலை தடவும் - யமன் வலிமையையும் சோதித்து நோக்குவான்; தமையனை போல - அண்ணனைப்போன்றே, எவ் உலகையும் - எந்த உலகத்தையும், சுடவும் ஆற்றும் - சுடுதலைச் செய்யவும் வல்லவன்; எவனுக்கும் தோலான் - யாரிடத்தும் தோல்வியடைய மாட்டான்.

தடவும் : சோதித்து நோக்கும்.

பி - ம். 1. முற்றுமங்க.

2. வல்லனேல்.

4. கடவு மாற்றலும் வல்லனே; அவனுக்குந், யாவர்க்குந். 21

3489. மோக மொன்றுண்டு முதலவன் வகுத்தது முன்னு
ளாக மற்றது கொற்றமுஞ் சிவன்றனை யழிப்ப
தேக முற்றிய விஞ்சையை யிவன்வயி னேவிக்
காக முற்றுழல் களத்தினிற் கிடத்துவென் கடிதின்.

'மோகம் ஒன்று உண்டு - மோகனாத்திரம் என்று ஒன்று உள்ளது; (அது) முன்னாள் முதலவன் வகுத்தது - ஆதி காலத்தில் முதற் கடவுள் அமைத்தது ஆகும்; (அது) ஆகம் அற்றது - கண்ணுக்குச் தெரியக்கூடிய உருவம் அற்றது. சிவன்தனை கொற்றமும் அழிப்பது-சிவபிரானுடைய வெற்றியையும் போக்கவல்லது; ஏகம் - ஒப்பற்ற தொன்றாகி, விஞ்சையை முற்றிய - மந்திரம் நிரம்பிய, (அந்த அத்திரத்தை), இவன் வயின் ஏவி - இவன்மீது செலுத்தி, காகம் உற்று உழல் களத்தினில் கடிதின் கிடத்துவென் - காகங்கள் பொருந்திச் சஞ்சரிக்கின்ற களத்திலே, (இவனை) விரைவில் விழுந்து கிடக்கும்படி புரிவேன்.'

மோகம்: மோகனாத்திரம். ஏகம்: ஒப்பற்றது. விஞ்சை: மாயையுடன் கூடிய அத்திரம்; காகம் உற்றுழல் களம்: (ஒப்பு) 'சொல்லுவமதுர மாற்றந் துண்டத்தாலுண்டுன் கண்ணைக், கல்லுவ காகம் வந்து கலப்பன' (யுத்த. 1623),

பி-ம். 2. கொற்றமீங்கிவன்றனை யனிப்பது.

3. முற்றியன்னனவையவை நனையேவி,யவ்வையின்ஏவி.

4. உற்றுழம்; களத்திடைக்; கிடப்பன, கடத்துவன். 23

3490. என்ப துன்னியவ் விஞ்சையை மனத்திடை யெண்ணி
முன்பன் மேல்வரத் துரந்தன னதுகண்டு முடுகி
அன்பின் வீடண னாழியான் படையினி னறுத்தி
என்ப தோதின னிலக்குவ னதுதொடுத் தெய்தான்.

என்பது உன்னி-என்ற இதனை நினைந்து, அவ்-அந்த விஞ்சையை-மோகன வாளியை, மனத்திடை எண்ணி-உள்ளத்தால் தியானித்து, முன்பன் மேல்வர-வலிமை மிக்க இலக்குவன்மீது செல்லுமாறு, துரந்தனன்-விரைந்து விடுத்தான்; (இராவணன்); அது கண்டு-அதை நோக்கி, வீடணன்-விபீடணன், அன்பின்-அன்பினாலே, முடுகி-விரைந்து, 'ஆழியான் படையினின்-திருமாலின் படையால் (விண்டு அத்திரத்தால்) அறுத்தி-(இந்த மோகன வாளியைத்) துணிப்பாயாக', என்பது ஓதினன்-என்பதை (இலக்குவற்குச்) சொன்னான்; இலக்குவன்-இலக்குவனும், அது தொடுத்து எய்தான்-அந்த விஷ்ணு அத்திரத்தைத் தொடுத்து விடுத்தான்.

முன்பன்-வன்மை சான்றோன். வீடணன் அன்பின் முடுகி என்க. அறுத்தி; ஏவல் வினை, முடுகி: 'சூதனுமுடுகத்தூண்ட' (யுத்த. இரா. வதை. 16).

பி-ம். 3. அன்பன் வீடணன்.

4. அது தொடுத்தறுத்தான். 24

## இலக்குவன் மோகன வாளியைப்போக்கலும், இராவணன் வீடணனிடம் வெகுளல்

3491. வீடணன்சொல விண்டுவின் படைக்கலம் விட்டான்
மூடு வெஞ்சின மோகத்தை நீக்கலு முனிந்தான்
மாடு நின்றவ னுபாயங்கண் மதித்திட வந்த
கேடு நந்தமக் கென்பது மனங்கொண்டு கிளர்ந்தான்.

வீடணன் சொல - வீபீடணன் சொன்ன அளவில், (இலக்குவன்), விண்டுவின் படைகலம் விட்டான் - திருமாலின் பெயர் கொண்ட வாளியைத் தொடுத்தவனாய். மூடும் வெம்சினம் மோகத்தை நீக்கலும் - மூடிய கடுமையான கோபத்துடன் கூடிய, மோகன வாளியை விலக்கிய அளவில், முனிந்தான் - வெகுண்டவனாய், (இராவணன்) 'மாடு நின்றவன் - அருகே நிற்பவனான வீடணன், உபாயங்கள் மதித்திட - தந்திரங்களைச் சிந்தித்துக் கூற, நந்தமக்கு வந்தகேடு - நமக்கு விளைந்த கெடுதி,' என்பது - என்பதை, மனம் கொண்டு கிளர்ந்தான் - உள்ளத்தே கொண்டவனாய், மூண்டு எழுந்தான்.

மாடு - பக்கம்; 'மாடுபற்றியிடங்கர் வலித்திட' (கிட்கிந்தா: 358). நந்தமக்கு: 'வாய்த்தது நந்தமக்கீதோர் பிறவி' (தேவா. 11 : 5). இறுதி இரண்டடிகட்கு: 'வீடணன் தந்த வென்றியிது' (யுத்த. 3119) என்றது காண்க.

பி - ம். 1. விட்டுவின்.
2. முடித்தலு முனிந்தான்.
3. நின்றுவன்; உபாயத்தை.



## மயன் தந்தவேலால் தன் தம்பியை யுயிர்கொள்ள இராவணன் கருதுதல்

3492. மயன்கொ டுத்தது மகளொடு வயங்கனல் வேள்வி
அயன் படைத்துள தாழியுங் குலிசமு மனைய
துயர்ந்த கொற்றமு மூழியுங் கடந்துள துருமிற்
சயந்த னைப்பொருந் தம்பியை யுயிர்கொளச்
[சமைந்தான்.

மயன் மகளொடு கொடுத்ததும் - (தன் புதல்வியை) மணம் செய்து கொடுத்தபோது) மயன் என்பவன் (தனக்கு) அளித்ததும், வயங்கு - விட்டு ஒளிர்கின்ற, அனல் வேள்வி - தீயினையுடைய யாகத்திலே, அயன் படைத்துளது-பிரமதேவன் உண்டாக்கியதும், ஆழியும் - சக்கரப் படையையும், குலிசமும் - வச்சிரப் படையையும், அனையது - நிகர்த்ததும், (பகைவரின்) உயர்ந்த கொற்றமும் - ஓங்கி வென்ற வெற்றியையும், ஊழியும் - பிரளய காலத்துத் தீயையும், கடந்துளது - கடந்துள்ளதுமான, படையால், உருவில் - வடிவத்தில், சயந்தனை பொரும் தம்பியை உயிர் கொள சமைந்தான் - (இந்திரன் மகன்) சயந்தனை ஒத்து விளங்கும் தம்பியான வீடணனை உயிர் கொள்ளுமாறு கருதினான் : (இராவணன்).

மண்டோதரி : இராவணன் மனைவி ; மயன்மகள்; வேள்வி : இ பெயர் விகுதி. இராவணன் கைவேலின் வரலாறு இங்குக் கூறப் பட்டது. பிரமனால் வேள்வியில் உண்டாக்கப்பட்டது. பகைவரைத் தாக்கும் வன்மையால் சக்கரப் படையையும் வச்சிரப் படையையும் ஒப்பது. சயந்தனைப் பொரும் தம்பியை ; வெற்றியே உருக் கொண்டன்ன தம்பி எனினுமாம். (ஒப்பு) 'பிரிவெனுந் துயருருவு கொண்டாலன்ன 'மயன் கொடுத்தது மகளொடும்; 'மின்னு வேலரக்கர் கோனும்' (ஆரணிய. 763) உரை காண்க.

பி - ம். 1. மகளிடை வயங்கனல் வேள்வி, மகளுடை மங்கல வேள்வி.
2. படைத்தது வாழியும் ; அனைய.
3. கொற்றமோ டூழியும் ; உருவின். 26

## இராவணன் வீடணன்மீது வேலை யேவுதல்

3493. விட்ட போதினி னொருவனை வீட்டியே மீளும்
பட்ட போதவ னான்முக னாயினும் படுக்கும்
வட்ட வேலது வலங்கொடு வாங்கினன் வணங்கி
எட்ட நிற்கலாத் தம்பிமேல் வல்விசைத் தெறிந்தான்.

விட்ட போதினில் - தொடுத்த அளவில், ஒருவனை வீட்டியே மீளும் - ஒருவனை அழித்தே திரும்புவதும், பட்டபோது - அது மேலே தாக்கியவளவில், அவன் - தாக்கப்பெற்றவன், நான்முகன் ஆயினும் - பிரம தேவனேயானாலும், படுக்கும் - (அவனையும்)

ஒழிக்கவல்லதும் ஆன, அது வேல் - அந்த வேலை, வட்டம் வலம் கொடுவணங்கி வாங்கினன் - வட்டமாக வலங்கொண்டு வணங்கி ஏற்று, எட்ட நிற்கலா - சேய்மையினில்லாது அண்மையில் நின்ற, தம்பிமேல் - தம்பியான வீடணன்மீது, வல் விசைத்து எறிந்தான் - வேகமாக வீசினான்.

மற்றும் அவ் வேலின் ஆற்றல் இச் செய்யுட் கண்ணும் கூறப் பட்டது. ஏவின அளவில் ஏவப்பட்டவனைக் கொல்லாமல் விடாது. காகாசுரன்மீது இராமபிரான் ஏவிய புற்கணை அவ்வசுரனைக் கொல்லாது அவன் விழியினைக் கவர்ந்ததை ஒப்பு நோக்குக. நான்முகனுயினும் படுக்கும் - இங்கு உம்மை உயர்வு சிறப்பு; நான் முகனைச் சிறப்பாகக் கூறியது அவனே வேள்வியில் இவ் வேலைப் படைத்தது பற்றி என்க. யுத்த. 3492 பார்க்க; வலம் கொடு - வலக்காம்கொண்டு எனினுமாம். நிற்கலா - அல்; எதிர்மறை இடைநிலை. விசைத்து எனின் அமையும் - மிக்க வேகம் குறிப்பான் வல் விசைத்து எனப்பட்டது. வல் விரைந்து என்றாற் போல; தம்பி - வீடணன். இச்செய்யுளும் இதனையடுத்த செய்யுளும் அந்தாதித் தொடை. 'அந்தமுதலாத் தொடுப்பதந்தாதி'.

பி - ம். 1. ஒருவரை; மீட்டியே.

2. பட்டபோதது; நான்முகற்காயினும்; நான்முகனுகிலும்.

4. எட்ட நிற்கிலா; விரைந்ததை யெறிந்தான். 27

வீடணன் 'இப்படை என்னுயிரை மாய்க்கும்!' என்ன இலக்குவன் 'அஞ்சாதே' யென்று தான் அங்குச் சார்தல்

3494. எறிந்த காலையில் வீடண
னதனிலை யெல்லாம்
அறிந்த சிந்தைய னையவீ
தென்னுயி ரழிக்கும்
பிறிந்து செய்யலாம் பொருளிலை
யென்றலும் பெரியோன்
அறிந்து போக்குவ லஞ்சல்நீ
யென்றிடை யணைந்தான்.

எறிந்த காலையில் - இராவணன் அந்த வேற்படையை எறிந்த போது, அதன் நிலை எல்லாம் - அதன் தன்மையை யெல்லாம், அறிந்த சிந்தையன் வீடணன் - நன்குணர்ந்திருந்த மனத்தினனான வீடணன், (இலக்குவனைப் பார்த்து), 'ஐய-ஐயனே, ஈது என் உயிர் அழிக்கும் - இது எனது உயிரைப் போக்கிவிடும்; பிறிந்து செய்யலாம் பொருள் இலை - (இதைக்) கடந்து ஆற்றக்கூடிய (இதனின்று தப்பக்கூடிய) செயல் யாதுமில்லை', என்றலும்-என்று மொழிந்த அளவில், பெரியோன் - பெருமை சான்றவனான இலக்குவன், 'அறிந்து போக்குவல் - (இதனைத் தடுக்கும் வகை) ஆராய்ந்து ஒழிப்பேன்; நீ அஞ்சல் - நீ பயப்படாதே', என்று - என்று மொழிந்து கொண்டே, இடை அணைந்தான் - அந்தத் தலத்தை அடைந்தான்.

அதன் நிலை - அந்த வேலின் நிலைமை. பிரிந்து - எதுகை நோக்கி வலித்தது. பெரியோன் என்று இலக்குவனை இங்குக் கூறியது சிறப்பாக நோக்கத்தக்கது. தன்பால் அடைக்கலம் புகுந்தவனை ஆருயிர் அளித்துக் காக்கத் துணிந்த பெருமை பற்றி: 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள். 26) என்று பெருமைக்கிலக் கணம் செந்நாப் போதார் கூறியமை காண்க.

பி - ம். 2. அணையவிது.

4. அறிந்து போக்குவன், காக்குவன்; அணைத்தான், நடந்தான், இடை வந்தான். 28

## இலக்குமன் விடுத்த அம்பு முதலியன அவ் வேலினை யொன்றுஞ் செய்யமாட்டா தொழியத் தேவர் மனம் வருந்துதல்

3495. எய்த வாளியு மேயின
படைக்கலம் யாவும்
செய்த மாதவத் தொருவனைச்
சிறுதொழிற் றீயோன்
வைத வைவினி லொழிந்தன
வீடணன் மாண்டான்
உய்த லில்லையென் றும்பரும்
பெருமன முலைந்தார்.

எய்த வாளியும் - (இலக்குவன்) விடுத்த அம்புகளும், ஏயின படைகலம் - செலுத்திய போர்க் கருவிகளும், யாவும் - மற்றும் எல்லாமும், செய்த மாதவத்து ஒருவனை - ஆற்றிய பெருந் தவத்தை யுடைய ஒப்பற்றவனை, சிறு தொழில் தீயோன் - அற்ப மான செயலைச் செய்யும் துட்டன், வைதவைவினில் ஒழிந்தன - திட்டிய வசைமொழி போன்று பயன்தராதனவாக, உம்பரும் - தேவர்களும், 'வீடணன் மாண்டான் - விபீடணன் இறந்தான், உய்தல் இல்லை - இனிப் பிழைப்பு இல்லை', என்று - என்று சொல்லி, பெரு மனம் உலைந்தார் - (தம்முடைய) பெரு மனம் வருந்தப் பெற்றார்கள்.

இச் செய்யுட்கண் கூறிய உவமை மிகவும் பாராட்டத்தக்கது. பெருந்தவச் சிரேட்டனை அற்பமான தொழிலை ஆற்றும் தீயவன் வைத வசை ஒன்றும் புரிதற்கில்லை. 'தவத்தின் முன் நில்லாதாம் பாவம்' (நீதி நூல்); உம்பரும் - உம்மை உயர்வு சிறப்பு. மாண்டான் - தெளிவு பற்றி எதிர்காலம் இறந்த காலமாக வந்தது. வைத வைவு: 'வைத வைவில் மராமர மேழ்துளை செய்தவன்' (பால. அவை. 5).

பி - ம். 1. மேவின, ஏவின ; எவையும்.
2. செய்ய ; தீயோர்.
3. வைதவாமென மறிந்தன.
4. திருமுகமுலைந்தார். 29

அவ்வேலைத் தம்தம் மார்பிலேற்குமாறு இலக்குவன் முதலியோர் ஒருவரையொருவர் முந்துதலைக் கூறும்

3496. தோற்ப னென்னினும் புகழ்நிற்குந்
தருமமுந் தொடரும்
ஆர்ப்பர் நல்லவ ரடைக்கலம்
புகுந்தவ னழியப்
பார்ப்ப தென்னெடும் பழிவந்து
படர்வதன் முன்னம்
ஏற்ப னென்தனி மார்பினென்
றிலக்குவ னெதிர்ந்தான்.

'தோற்பன் என்னினும் - (நான் உயிரை) விடுக்க நேரினும், புகழ் நிற்கும் - புகழ் நிலைபெறும்; தருமமும் தொடரும் - தருமமும் தொடர்ந்து நிற்கும்; நல்லவர் ஆர்ப்பர் - நல்லோர்கள் ஆரவாரம் புரிவர்; அடைக்கலம் புகுந்தவன் அழிய பார்ப்பது என் - (நம்மைச்) சரண் என்று வந்து நின்றவன் உயிர் நீங்குமாறு பார்த்துக் கொண்டு வாளாதிருப்பது எதற்கு? நெடு பழி. வந்து - (சரண் புக்கோனைக் கைவிட்டவன் என்ற) நீண்ட வசைமொழி வந்து, தொடர்வதன் முன்னம் - பின் பற்றுவதன் முன்பே, என் தனி மார்பின் - என்னுடைய ஒப்பற்ற மார்பின்கண், ஏற்பன் - (அவ் வேலை) ஏற்றுக் கொள்வேன்', என்று - என்று பகர்ந்து, இலக்குவன் எதிர்ந்தான் - (இலக்குவன்) அந்த வேலுக்கு எதிரே நின்றான்.

மிகவும் சோகத்தை யுண்டுபண்ணும் செய்யுள்; 'பாடுறு பசியை நோக்கித் தன் உயிர் கொடுத்தபைம்புள் போன்று வீடணன் உயிரைக் காப்பாற்றத் தன் உயிரையும் பொருட்படுத்தாது, இலக்குவன் வேலினை ஏற்றான்; 'சாதல் வந்தடுத்தகாலும் தனக்கொரு சாதலின்றிப், பூதல மிறக்கும் காலும் புகழுடம்பிருக்கு மந்தக், கோதறு புகழின் யாக்கைக் கொடையினாற் செல்வம்கூர, வாழ்தலை யுடையரன்றே வானமும் வணங்கு நீரார்' (விநாயகபு. அறசியற். 41): என்றது இங்குக் காணத் தகும். 'தன்னுயிர் புகழ்க்குவிற்ற சடாயு' என்று கழுகரசன் புகழப் பெற்றமையும் காண்க. 'அபயம் யாமென்றிரந்தவர்க் கெறிநீர் வேலை, கடைந்தவர்க்காகி யால முண்டவற் கண்டிலீரோ' (யுத்த. 414); 'மொய்யமர் முடித்துத் தெய்வ, மரண மென்தாதை பெற்ற தென்வயின் வழக்கன்றோமோ' (யுத்த. 419).

பி - ம். 1. தருமமுந் தொடங்கும்.
2. ஆர்ப்பர்; புகுந்தவனுலக்கப், உலக்கிற், நிற்க.
3. பார்ப்பதென்பெறப், என்றபிற்.
4. என்றணி, எள்ரிணி; நேர்ந்தான். 30

3497. இலக்கு வற்குமுன் வீடணன் புகுமிரு வரையும்
விலக்கி யங்கதன் மேற்செலு மவனையும் விலக்கிக்
கலக்கும் வாநரக் காவல னனுமன்முன் கடுகும்
அலக்க ணன்னதை யின்னதென் றுரைசெய லாமோ.

இலக்குவற்கு முன் வீடணன் - இலக்குவனுக்கு முன்பாக வீடணன், புகும் - புகுவான்; இருவரையும் விலக்கி - அவர் இருவரையும் அப்பால் போகச் செய்து, அங்கதன் மேல் செலும் - அங்கதன் முன் செல்பவன் ஆனான்; அவனையும் விலக்கி - அந்த அங்கதனையும் தடுத்து, வாநரர் காவலன் - குரங்கரசனான சுக்கிரீவன், கலக்கும் - முன்னே சென்று கூடுவான்; அநுமன் முன் கடுகும் - அநுமன் (அவனினும்) முற்பட்டுச் செல்வான், (அங்குத் தோன்றிய) அன்னது அலக்கணை - அத்தகைய துன்பத்தை, இன்னது என்று - இத்தகையதென்று, உரை செயல் ஆமோ - சொல்லுதற்கு முடியுமோ?

வாநரக் காவலன் கலக்கும் என்க. அலக்கண் - துன்பம்; 'அலக்கணெய்துவித்தான்' (யுத்த. 3488) ஓகாரம் - வினா. அன்னதை யின்னதென்று - எதுகை நயம். இங்குப் புறநானூறு, 290 - 298 செய்யுட்கள் ஒப்பு நோக்கத்தகுவன.

பி - ம். 2. மேற்செலும் விங்குநீர் வேலை.
3. அநுமன் முன் கடுக.
4. அலக்கணுற்றதை; உரை செயலாமே. 31

## இறுதியாக இலக்குவன் அவ் வேலைத் தன் மார்பிலேற்றல்

3498. முன்னின் றூரெலாம் பின்னுறக் காலினின் முடுகி
நின்மின் யானிது விலக்குவெ னென்றுரை நேரா
மின்னும் வேலினை விண்ணவர் கண்புடைத் திரங்க
பொன்னின் மார்பிடை யேற்றனன் முதுகிடைப் போக.

முன் நின்றூர் எலாம் - முன்னே யிருந்தவர் எல்லாம், பின் உற - தனக்குப் பின்னே செல்லுமாறு, காலினின் முடுகி - காற்றுப் போன்று விரைந்து சென்று, 'நின்மின் - நில்லுங்கள்! யான் இது விலக்குவன் - நான் இதனைத் தடுத்தொழிப்பேன்', என்று உரை நேரா - என்று மொழிந்து, விண்ணவர் கண் புடைத்து இரங்க - அமரர்கள் கண்களில் அடித்துக்கொண்டு வருந்த, முதுகிடை

போக - முதுகு வழியாக ஊடுருவுமாறு, மின்னும் வேலினை - ஒளி விடுகின்ற அந்த வேலாயுதத்தை, பொன்னின் மார்பிடை ஏற்ற னன் - (தனது) பொன்னிறமாகிய மார்பின்கண் (இலக்குவன்) ஏற்றுக் கொண்டான்.

முன்னே யிருந்தவர்: சுக்கிரீவன், அங்கதன், அநுமன். முடுகி - விரைந்து; (யுந்த. 3492); நேரா - நேர்ந்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், இலக்குவன் செந்நிறமாகலின், 'பொன்னின் மார்பிடை' எனப்பட்டது. கண் புடைத்து; 'தரும நின்று தன் கண்புடைத்தலமரச் சாய்ந்தான்' (யுத்த. 2573).

பி - ம். 1. முன்னினுரெல்லாம்; காலினும்.
2. நின்னில்; யானது.
4. மார்பிடை யெய்தனன்; போன. 32

## வீடணன் கதையினுல் இராவணனுடைய தேர்க் குதிரைகளையும் சாரதியையும் அழித்தல்

3499. எங்கு நீங்குதி நீயென வீடண னெழுந்தான்
சிங்க வேறென்ன சீற்றத்தா னிராவணன் தேரில்
பொங்கு பாய்பரி சாரதி யொடும்பட புடைத்தான்
சங்க வானவர் தலையெடுத் திடநெடுந் தண்டால்.

வீடணன் - விபீடணன், (இராவணனைப் பார்த்து) 'நீ எங்கு நீங்குதி - நீ எங்கே விலகிச் செல்லப் பார்க்கின்ருய்', என - என்று மொழிந்து கொண்டு, எழுந்தான் - எழுந்து, சிங்க ஏறு அன்ன சீற்றத்தான் - ஆண் சிங்கம் போன்ற சினத்தனுய், இராவணன் தேரில் பொங்கு பாய்பரி-இராவணனுடைய இரதத்திலே, எழுந்து பாய்கின்ற குதிரைகள், சாரதி யொடும்பட - தேர்ப் பாகனுடனே மரித்து வீழவும், சங்கம் வானவர் தலை எடுத்திட - திரளான அமரர்கள் தலை நிமிர்ந்து நிற்கவும், நெடு தண்டால் புடைத்தான் - தன்னுடைய நீண்ட கதை கொண்டு அடித்தான்.

சிங்கவேறு; 'சிங்க வேறனையான்' (யுந்த. 428); சாரதி - வடசொல்; தேர்ப்பாகன் என்பது பொருள். 'சில்லியந் தேர் கொடி சிதையச் சாரதி' (யுத்த. படைத்தலைவர். 41); நெடுந் தண்டால் புடைத்தான் என்க. சங்க வானவர் - வானவர் குழாம்.

தலையெடுத்தல் : 'வானரேச, என்றலை யெடுக்கலானேன், இனிக் குடை யெடுப்பனென்ருன்' (யுத்த. 3112); 'நிலையெடுத்து தலை யெடுத்து விழியாமை' (ஆரணிய. 319); தண்டு - வீடணனுக்குரிய கை ஆயுதம். வீடணனைக் கதாபாணி என்னும் முதனூல். தண்டு - கதை; 'தண்டிருந்த திவன் கரத்தில், தனுவிருந்ததவன் கரத்தில்' (வில்லி பா. கிருட்டினன். 46).

பி - ம். 1. நீங்குதியினியெனா.

2. சிற்றத்தவ்விராவணன், சிற்றத்தினிரரவணன்.

3. பொங்கு சாரதி புரவியின்றலையொடு, சாரதி பொடிபட. 33

## வீடணன்மீதும் அநுமன்மீதும் கணைகளையெய்து, தன் காரியம் முடிந்ததென்று இலங்கைக்கு ஏகுதல்

3500. சேய்வி சும்பினி னிமிர்ந்துநின் றிராவணன் சீறிப்
பாய்க டுங்கணைப் பத்தவ னுடல்புகப் பாய்ச்சி
ஆயி ரஞ்சர மனுமன்ற னுடலினி னழுத்திப்
போயி னன்செரு முடிந்ததென் றிலங்கையூர் புகுவான்.

இராவணன் - இராவணன், சேய் விசும்பினில் - தூரத்தில் உள்ள ஆகாயத்தில், நிமிர்ந்து நின்று சீறி - உயரவிருந்து வெகுண்டு, பாய் பத்து கடும் கணை - பாய்கின்ற பத்துக் கடுமையான வாளிகளை, அவன் உடல்புக பாய்ச்சி- அந்த வீடணனுடைய உடலிலே நுழையுமாறு செலுத்தி, அநுமன் தன் உடலினில் - மாருதியினுடைய உடலில், ஆயிரம் சரம் அழுத்தி - ஆயிரம் அம்புகளை அழுந்தச் செய்து, 'செரு முடிந்தது - போர் ஒழிந்தது' என்று - என்று சொல்லிக்கொண்டு, இலங்கை ஊர் புகுவான் போயினன் - இலங்கை மாநகர்க்கண் புகுவானாய்ப் போயினன்.

சேய்மை - தூரம்; ஆயிரம், பல என்ற பொருளில் வந்தது. புகுவான் போயினன் என முடிக்க. இலங்கையூர்; 'இலங்கையூரிவனுக்கீந்தியான் வேறிடத்திருந்து வாழ்வேன்' (யுத்த. 1617).

பி - ம். 3. அநுமன்றனுயிரிடை, உகத்திடை; உரத்திடை, உடம்பினிற்.

4. ஊர் புகுந்தான். 34

## இராவணனைத் தொடர்ந்து வீடணன் வெகுளுதல்

3501. தேடிச் சேர்ந்தவென் பொருட்டினு
னுலகுடைச் செல்வன்
வாடிப் போயின னீயினி
வஞ்சனை மதியால்
ஓடிப் போகுவ தெங்கடா
வுன்னொடு முடனே
வீடிப் போவனென் றரக்கன்மேல்
வீடணன் வெகுண்டான்.

'தேடி சேர்ந்த - (அடைக்கலமாகத்) தேடி யடைந்த, என் பொருட்டினால் - என் பொருட்டினாலே, உலகுடை செல்வன் - உலகினை எல்லா முடையனான செல்வனான இலக்குவன், வாடி போயினான் - (வேலூடுருவ) வாடிப் போயுள்ளான்; இனி - இனிமேல், நீ வஞ்சனை மதியால் - நீ வஞ்சனைப் புத்தியால், எங்கு அடா ஓடி போகுவது - எங்கடா ஓடிப் போவது? (உன்னுடன் போர் செய்து உன்னை மடிவித்து), உன்னொடும் உடனே வீடி போவன் - உன்னுடனேயே இறந்து படுவேன்', என்று - என்று, அரக்கன்மேல் வீடணன் வெகுண்டான் - இராவணன்மீது வீடணன் சினந்தான்.

உலகுடைச் செல்வன்; (ஒப்பு): 'நன்று நன்றிவ்வுலகுடை நாயகன், தன் றுணைப் பெருந்தேவி தவத்தொழில்' (சுந்தர. 633); 'பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை யொருங்கவிப்பான், தேடிப்போந்தன மிங்கு' (ஆரணிய. 341) என்ற செய்யுள் ஓசையை ஒப்பு நோக்குக.

பா - ம். 1. தேடிச் சேர்ந்தவன்.
2. வஞ்சனை மதியாய், வஞ்சகன் மதியால்.
4. விடண னெழுந்தான்.

35

## காரியம் முடிந்தபின் 'இவனேடு என் ?' என்று இராவணன் இலங்கையிற் புகுதல்

3502. வென்றி யென்வய மானது வீடணப் பசுவைக்
கொன்றி னிப்பய மில்லையென் றிராவணன் கொண்டான்
நின்றி லன்னென்று நோக்கிலன் முனிவெலா நீத்தான்
பொன் திணிந்தன மதிலுடை யிலங்கையூர் புக்கான்.

'வென்றி என் வயம் ஆனது - வெற்றியோ எனதாகி விட்டது; வீடணன் பசுவை இனி கொன்று பயம் இல்லை - பசுப்போன்ற வீடணனை இனிக் கொலை செய்வதால் பயன் இல்லை;' என்று - என்று, இராவணன் கொண்டான் - இராவணன் உள்ளத்துக் கொண்டவனாய், நின்றிலன் - எதிர்த்து நில்லாமலும், ஒன்றும் நோக்கிலன் - (அந்த வீடணனை ஒரு பொருளாக எண்ணி) ஒரு சிறிதும் பாராமலும், முனிவுஎலாம் நீத்தான் - சினம் எல்லாம் தவிர்ந்தவனாய், பொன் திணிந்தன மதில் உடை இலங்கை ஊர் புக்கான் - பொன் நெருங்கி உள்ளனவான மதில்களையுடைய இலங்கை நகரிலே புகுந்தான்.

வீடணப் பசு வென்றது இகழ்ச்சி; ஆற்றலில்லாதவன் என்றது குறிப்பு. பொன் திணிந்தன மதில் - இலங்கையூர்; (யுத்த. 1617) பார்க்க. பயம் - பயன்.

பா - ம். 1. என் வசம்; விடணன்.
2. கொன்றுமோர்.
3. நின்றுதான்; நோக்கலன்.
4. திணிந்தவன்; புகுந்தான்.



## வீடணனும் வாநரரும் பெருந்துன்பத்துளழுந்தல்

3503. அரக்க னேசினன் வீடணன்
வாய்திறந் தரற்றி
இரக்கந் தானென விலக்குவ
னிணையடித் தலத்தில்

கரக்க லாகலாக் காதலன்
வீழ்ந்தனன். கலுழ்ந்தான்
குரக்கு வெள்ளமுந் தலைவருந்
துயரிடைக் குளித்தார்.

அரக்கன் ஏகினன் - இராவணன் சென்றான்; வீடணன் - விபீடணனும்வான், கரக்கல் ஆகலா காதலன் - ஒளிக்க முடியாத அன்புடன் கூடியவனாய், வாய் திறந்து அரற்றி - வாய்விட்டு அழுது, இரக்கம் தான் என - இரக்கமே ஒருருவெடுத்து வந்ததோ என்று யாவரும் கருதுமாறு, இலக்குவன் இணை அடி தலத்தில் - இலக்குவனுடைய உபய பாதங்களில், வீழ்ந்தனன் - வீழ்ந்து, கலுழ்ந்தான் - அழுதான்; குரக்கு வெள்ளமும் - வெள்ளம் போன்ற குரக்குப் படையும், தலைவரும் - குரக்குப் படைத் தலைவரும், துயரிடைகுளித்தார் - துன்பக் கடலில் மூழ்கினர்.

கரக்கலாகலாக் காதலன் - ஒளிக்க அல்லது மறைக்க முடியாத அன்பு; 'அன்பிற்கும் உண்டோ வடைக்குந்தாழ்' (குறள். 7) என்றது காண்க. வெள்ளமும் தலைவரும் குளித்தார் - உயர் திணையும், அஃறிணையும் சேர்ந்து உயர்திணை முடிவு பெற்றன. துயர் இடைக்குளித்தார் - துயரை ஓர் சலாசயமாகக் கூறினர்.

பி - ம். 3. கரக்கலாதகக்; காதலின்; கலுழக், க்விழ்ந்தான். 37

## துயர மிகுதியால் வீடணன் இறக்க முயல, சாம்பவன் தடுத்தல்

3504. பொன்னி ரும்புறு தார்ப்புயப் பொருப்பினன் பொன்ற
என்னி ருந்துநா னிறப்பெனிக் கணத்தெனை யாளும்
மன்னி ருந்தினி வாழ்கில னென்றனன் மறுக
நின்னி லென்றனன் சாம்பவ னுரையொன்று நிகழ்த்தும்.

'பொன் இரும்பு உறும் - கரும்பொன் என்ற இரும்பு போன்ற திண்மையுடையதும், தார் - மாலை புனைந்ததுமான, புயம் பொருப்பினன் - மலைபோன்ற தோள்களை யுடையவனான இலக்குவன், பொன்ற - மடிய, நான் இருந்து என் - (நான்) உயிருடனிருந்து யாது பயன்; இக்கணத்து இறப்பென் - இந்நிமிடத்திலேயே உயிர்

நீப்பேன், இனி - இனி, (இலக்குவன் மரித்தபின்), எனை ஆளும் மன் - என்னை ஆட்கொண்டுள்ள மன்னவனான இராமபிரான், இருந்து இனி வாழ்கிலன் - உயிருடனிருந்து இனிமேல் வாழ மாட்டான்' என்றனன் மறுக - என்று சொல்லி, மனம் வருந்த - (அப்போது), 'நில் நில்-நில் நில்', என்றனன்-என்று, சாம்பவன் உரை ஒன்று நிகழ்த்தும் - சாம்பவன் ஒரு பேச்சைப் புகன்றான்.

இரும்புறு தார்ப்புயப் பொன்பொருப்பு எனினுமாம். மற்றும் பொன் போன்ற பொலிவும், இரும்பு போன்ற திண்மையும் கொண்டு தாரணிந்த புயம் எனினும் ஒன்றும். இரும்பினையும் கரும்பொன் என்பர்; 'செம்பொற் பருவரையும்' (பால. குலமுறை. 22). பொருப்பு - மலை; 'பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து' (வி. பா. சிறப்பு. 1). எனை ஆளும்மன் - என்னை ஆட்கொண்ட இராமபிரான். மறுகுதல்: (இராவணன் மந்திர. 11); இரணியன். 34. நில் நில் எனப்பிரிக்க.

பி - ம். 1. இரும்புறு காந்தமாய், இரும்புறு களிம்பெனல்.
2. கனைத்தென்னை.
3. வாழ்கலனென்றனன், வாழ்கிலேனென்றன.
4. நின்னிலெண்கிறை, என்றிறை. 88

## அநுமன் ஔஷதிகொணர்ந்து கொடுத்தல் பிழைப்பிப்பா னுதலால் எவரும் வருந்த வேண்டா என்று சாம்பவான் தேற்றுதல்

3505. அனும னிற்கநா மாருயிற் சிரங்குவ தறிவோ
நினையு மத்துணை மாத்திரத் துலகெலா நிமிர்வான்
வினையி னன்மருந் தளிக்கின்ற னுயிர்க்கின்றன் வீரன்
தினையு மல்லலுற் றழுங்கன்மி னென்றிடர் தீர்த்தான்.

'நினையும் அத்துணை மாத்திரத்து - நினையும் அந்த அளவின் உள்ளாக, உலகு எலாம் நிமிர்வான் - உலகெல்லாம் தலை நிமிர்ந்து செல்பவனும், வினையின் - (தன்) அரிய முயற்சியால், நல் மருந்து அளிக்கின்றான் - சிறந்த மருந்துகளைக் கொணர்ந்துதர வல்லவனு மான, அநுமன் நிற்க - அநுமன் இருக்கையில், நாம் ஆர் உயிர்க்கு இரங்குவது அறிவோ - நாம் அரிய உயிருக்கு இரங்குவது

அறிவின்பாற் படுமோ? (அன்றியும்) வீரன் - வீரனான இலக்குவன், உயிர்க்கின்றான் - உயிர்ப்புடையவனாகியும் உள்ளான்; (ஆதலின்) இனையும் - இணையளவும், அல்லல் உற்று அழுங்கன்மின் - துன்புற்று மனம் வருந்தாதீர்கள்', என்று - என்று கூறி, இடர் தீர்த்தான் - துயரத்தை நீக்கினான்.

அநுமன் நிற்க: பிரிந்த உயிரை மருத்து மலைகொண்டு மீட்கும் மாருதியிருப்ப. ஆருயிர்: அருமை உயிர்; வினையின் - நல் முயற்சியால்; உயிரையும் தரவல்லது ஆதலின் 'நல் மருந்து' எனப்பட்டது: 'கன்மருங் கெழுந் தென்றுமோர் துளிவரக் காணா நன் மருந்து' (சுந்தர. 332); 'வீயுமுயிர் மீளு மருந்துமெனலாகியது' (சுந்தர. 559); உயிரை மீட்கும் மருந்தும் உள்ளது: குற்றுயிராய்ச் சுவாசம் விடுகின்றான் வீரனான இலக்குவன் என்று சொல்லித் தேற்றினான். தினை: ஒரு சிறு அளவுக்கு உவமையாகக் கூறும் ஓர் தானியம்; 'தினைத்தனை யுள்ளதோர் பூவினிற் றேனுண்ணாதே' (திருவாச. திருக்கோத்தும்பி. 3); 'தினையனைத்தே யாயினும் செய்த நன்றுண்டால்' (நாலடி. 345); 'தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட, பனையளவு காட்டும்படித்தால்' (திருவள். மாலை. 5). அல்லல் - துன்பம்; 'செல்லல் அல்லல் இன்னாமையே' (தொல். சொல்.); 'அல்லலென் செயும் அருவினை யென்செய்யும்' (தேவா. 4:4).

பி - ம். 1. இரங்குறில்.
2. நினையு மத்துணை.
3. வீரர்க்கு வீரன்.
4. இனையும்; நீத்தான், அறுத்தான்.

## சாம்பவான் சொற்படி அநுமன் மருந்து கொணர்ந்து இலக்குவனை உயிர்ப்பித்தலைக் கூறும்

3506. மருத்தின் காதலன் மார்பிடை யம்பெலாம் வாங்கி
இருத்தி யோகடி தேகலை யிளவலை யின்னம்
வருத்தங் காணுமோ மன்னவ னென்னலு மன்னான்
கருத்தை யுன்னியம் மாருதி யுலகெலாங் கடந்தான்.

மருத்தின் - வாயுவினுடைய, காதலன் - புதல்வனுன, அநும னுடைய, மார்பிடை அம்பு எலாம் வாங்கி - மார்பினிடத்துள்ள அம்பு அனைத்தையும் எடுத்துவிட்டு (ச் சாம்பவான்), 'இளவலை - இலக்குவனை, இன்னம் வருத்தம் - (இங்ஙனம்) துயருடனிருக்க, மன்னவன் - இராமபிரான், காணுமோ - காண பொறுக்குமோ? (இந்தச் சங்கடமான நிலையை உணர்ந்திருந்தும்), கடிது ஏகலை இருத்தியோ - விரைந்து (மருந்து கொணரச்) செல்லாமல் தாமதிக்கக் கடவையோ?' என்னலும் - என்று மொழிதலும், அன்னுன் கருத்தை - அவனது எண்ணத்தை, உன்னி - நினைந்து, அ மாருதி - அந்த அநுமன், உலகு எலாம் கடந்தான் - (மருந்து கொணருமாறு) உலகத்தின் எல்லாப் பாகங்களையும் கடந்து சென்றுன்.

மருத்தின் காதலன்: மாருதி; தத்திதாந்தநாமம். வாங்கி: பெயர்த்து நீக்கி; கடிதேகலையிருத்தியோ என மாற்றுக. அன்னுன்: அந்தச் சாம்பவன், அம்மாருதி; அ பண்டறி சுட்டு இச்செய்யுட்கண் செயல்களின் விரைவினைக் காண்க. இருத்தியோ என்ற அளவிலே உலகெலாம் கடந்தான் என்று கூறியுள்ளமை கண்டுணர்க. உலகெலாம்: 'உலகெலாமுணர்ந்தோதற் கரியவன்' (பெரியபு. பாயி. 1); 'உலகெலாமாகி வேருயுடனுமாய்' (சிவ. சிந்தி. 2 : 1).

பி - ம். 1. இளவலையிங்ஙன், இஞ்ஞன்.

3. காணுமே. கான்றவோ; என்றனன்; மன்னன்.

4. கருத்தையுள்ளிய 40

வேறு

3507. உய்த்தொரு திசைமே லோடி
யுலகெலாங் கடக்கப் பாய்ந்து
மெய்த்தகு மருந்து தன்னை
வெற்பொடுங் கொணர்ந்த வீரன்
பொய்த்தலில் குறிகள்தானே
பொதுவற நோக்கிப் பொன்போல்
வைத்தது வாங்கிக்கொண்டு
வருதலில் வருத்த முண்டோ.

(உய்த்து) - (தன் கருத்தை மருந்தின்மீது) செலுத்தி, ஒரு திசைமேல் ஓடி - ஒப்பற்றதாகிய வடக்குத் திக்கின் வழியாக ஓடி, உலகு எலாம் கடக்க பாய்ந்து - உலகின் பாகங்கள் பலவற்றையும் கடந்திடுமாறு தாவிச் சென்று, மெய்தகு மருந்து தன்னை-உண்மை யான தகுதியமைந்த மருந்தினை, வெற்பொடும் கொணர்ந்த வீரன் - மலையுடனே முன்னர்க் கொணர்ந்துதந்த வீரனாகிய மாருதி, பொய்த்தல் இல் குறிகள்-தவறுதல் இல்லாத அடையாளங்களை, தானே - தானே, பொது அற - பொதுமை நீங்க, நோக்கி - பார்த்து, பொன் போல் - வைப்பு நிதிபோல், வைத்தது வாங்கி கொண்டு வருதலில் வருத்தம் உண்டோ - புதைத்து வைத்ததனை மீண்டும் கொணர்ந்து தருவதில் வருத்தம் உள்ளதோ? (இல்லை என்றபடி).

உண்மையாக உயிரைத் தரவல்ல உயர்ந்த ஓடதியாகலின் மெய்த்தகுமருந்து எனப்பட்டது. வெற்பு: மலை; - வெற்பினம் சிலையிற் றூண்டும் உண்மையாமெனவும் பற்று' (அதிகா, 217). 'வெற்பீன்ற வாசனையோ வறியேனடி மெல்லியலே' (தனிப்பா.). பொதுவற: சிறப்பாக, முன்னொரு முறை கொணர்ந்து உயிர்களை மீட்டுப் பின்னர் இருந்த இடத்திலேயே கொண்டு வைத்தவன் ஆகலின் 'வைத்தது வாங்கிக் கொண்டு வருதல்' எனப்பட்டது. ஓகாரம்: எதிர்மறை. இன்று என்றபடி.

பி - ம். 1. திசையேயோடி, திசையேயொல்லை.
2. மெய்த்தரு, மெய்த்தமெய்; வேரொடும்.
3. குறிகெடாமே, குறிகடாமே; பொதுவுற; பொன்மேல்.
4. வைத்தவை. 41

3508. தந்தனன் மருந்து தன்னைத்
தாக்குதன் முன்னே யோகம்
வந்தது மாண்டார்க் கெல்லா
முயிர்தரும் வலத்த தென்றால்
நொந்தவர் நோய்வு தீர்க்கச்
சிறிதன்றே நொடித்தன் முன்னே
இந்திர னுலக மார்க்க
வெழுந்தன னிளைய வீரன்.

மருந்து தந்தனன் - மருத்து மலையைக் கொணர்ந்தான் (அநுமன்); (அந்த மருந்தின் வாடை), தன்னை தாக்குதல் முன்னே - தன்மேற்படுதற்கு முன்னரே, யோகம் வந்தது - நினைவு எழுந்தது; மாண்டார்க்கு எல்லாம் உயிர்தரும் வலத்தது - இறந்தவர்க்கெல்லாம் உயிரை மீட்டுத் தரும் வன்மையுடையது (அம்மலை மருந்து), என்றால் - என்றால், நொந்தவர் நொய்வு தீர்க்க சிறிது அன்றே -(அம்பு தைத்து) வருந்தினவருடைய அவ்வருத்தத்தைப் போக்குதல் அதற்கு மிகவும் எளிதான செயல் அன்றோ? நொடித்தல் முன்னே - கைநொடிப் பொழுதிற்குள்ளாக, இந்திரன் உலகம் ஆர்க்க-இந்திரன் உலகத்துள்ள அமரர் ஆரவாரம் செய்ய, இளைய வீரன் எழுந்தனன் - இலக்குவன் உயிர் கூடி எழுந்தான்,

'தன்னை' முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. மேனியிற் படுவதற்கு முன்னே நறுமணத்தாலே பிரஞ்ஞை வந்ததென்பான்: தாக்குதன் முன்னே யோகம் வந்தது எனப்பட்டது. யோகம்: இங்கே இடை பிங்கலைகளால் நிகழும் உச்சுவாச நிச்சுவாசம் என்க. உயிர் தரும் வன்மையுடையது, சாதாரண நொய்வினைத்தீர்த்தல் ஒரு பெருஞ்செயலோ என்று அந்த மருந்தினைப் புகழ்ந்துளர் ஆசிரியர். நொடித்தல்: கைந்நொடிப் பொழுது 'கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை' (தொல். எழுத்து. 7) இந்திரன் உலகம்: இடவாகுபெயராக இந்திராதி தேவர்களைக் குறித்தது,

பி - ம். 1. முன்னம் வேகம், முன்னமேக்கம்.

3. நொந்தனனேடி, நொந்தவர் நோவு; தீர்த்தல்; வலிதன்றே; நொடிதன் முன்னம்.. 42

சில பிரதிகளில் வேலேற்ற படலம் இதனுடன் முடிய, அடுத்த செய்யுளில் வானரச் சேனைகளங் காண்படலம் தொடங்குகின்றது.

## எழுந்த இலக்குவன் வீடணன் சேமத்தையறிந்து அரக்கர் படுவது திண்ணமென மகிழ்தல்

3509. எழுந்துநின் றனுமன் றன்னை
யிருகையாற் றழுவி யெந்தாய்
விழுந்தில னன்றே மற்றவ்
வீடண னென்று விம்மித்

தொழுந்துணை யவனை நோக்கித்
துணுக்கமுந் துயரு நீக்கிக்
கொழுந்தியு மீண்டாள் பட்டா
னரக்கனென் றுவகை கொண்டான்.

எழுந்து நின்று - (இலக்குவன்) எழுந்து நின்று, அநுமன் தன்னை இரு கையால் தழுவி - மாருதியை இரண்டு கரங்களாலும் அணைத்துக் கொண்டு, 'எந்தாய் - என் தந்தையே! அவ்வீடணன் விழுந்திலன் அன்றே - அந்த வீடணன் இறந்திலன் அன்றே?' என்று - என்று கேட்டறிந்து, விம்மி - மனம் வெதும்பி, தொழும் - வணங்கி நின்ற, துணையவனை நோக்கி - தமையனுன அவனை (வீடணனைப்) பார்த்து, துணுக்கமும் துயரும் நீங்கி - மனத்தின் கண் இருந்த அச்சமும் துன்பமும் நீங்கப்பெற்று, 'கொழுந்தியும் மீண் டாள்-நமது மைத்துனியும் இனிச் சிறையினின்றும் மீண்டாள், அரக்கன் பட்டான் - இராவணனும் இறந்தான்' என்று - என்று, உவகை கொண்டான் - மகிழ்ச்சியுற்றான். மற்று: வினைமாற்று

துணுக்கமும் துயரும்: இறந்து பட்டானே என்ற அச்சத் தால் உண்டான நடுக்கமும் துன்பமும். துணுக்கம்; 'கொண்டனன் துணுக்க மெய்தீண்டக் கூசுவான்' (சுந்தர. 1269); 'தானவர் மகளிர், துணுக்க மெய்தினர் மங்கல நாண்களைத் தொட்டார்' (யுத்த. இராவ. தேரேறு. 29); துணுக்கமும் துயரும்: காரணமும் காரியமு மாதல் காண்க. கொழுந்தி - பிராட்டி; 'தோழனங்கை கொழுந்தி' (சுந்தர. 352); இங்கு பெரியதிரு. 5:8:1 பாசுரம் காணத்தகும். அரக்கன் பட்டே கொழுந்தி மீளவேண்டும் எனினும் இங்குத் தெளிவு பற்றி மாற்றிக் கூறப்பட்டது. 'விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறும் முக்காலமுமேற்புழி (நன். பொது. 33). மீண்டாள், பட்டான் என்றவிடத்து. எதிர் காலம் இறப்பில் வந்தது காண்க. கொழுந்தியு மீண்டாள். இத்துடன் 'கம்பமதத்துக் களியானைக் காவற் சனகன் பெற் றெடுத்த, கொம்பு மென்பா லினிவந்து குறுகி னுளென் றகங் குளிர்ந்தேன்' (யுத்த. 3119) ஐ ஒப்பு நோக்குக. கொழுந்தி: 'ஈண்டு தேவர நீதியிற் கொழுந்தியர்' (வி.பா. சம்பவ. 4). இங்கு வானரர் களங்காண் படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி-ம். 1. எழுந்திருந்து.
2. விழுந்திலனன்றே; மற்ற வீடணன்,

## எல்லோரும் இராமனை நோக்கிச் செல்லுதல்

3510. தருமமென் றறிஞர் சொல்லுந்
தனிப்பொருள் தன்னை யின்னே
கருமமென் றனும னுக்கிக்
காட்டிய தன்மை கண்டால்
அருமையென் னிராமற் கம்மா
வறம்வெல்லும் பாவந் தோற்கும்
இருமையு நோக்கி னென்னு
விராமன்பா லெழுந்து சென்றார்.

'தருமம் என்று அறிஞர் சொல்லும் தனிபொருள் தன்னை - தருமம் என்று அறிவோர் (புகழ்ந்து) பாராட்டுகின்ற, ஒப்பற்ற பொருளைப்பற்றி, இன்னே - இப்பொழுதே, கருமம் என்று - புரியத் தக்க காரியம் என்று, அநுமன் ஆக்கி காட்டிய தன்மை கண்டால்- மாருதி விளக்கிக் காட்டிய பான்மையை எண்ணி நோக்கினால், இராமற்கு அருமை என் - இராமபிரானுக்கு அருமையான காரியம் யாது உளது? ஏதுமில்லை; இருமையும் நோக்கின் - இம்மை மறுமைகளைக் கூர்ந்து நோக்குங்கால், அறம் வெல்லும் பாவம் தோற்கும் - தருமம் வெற்றி பெறும், பாவம் தோல்வியுறும்', என்னு - என்று சொல்லிக் கொண்டு, இராமன் பால் எழுந்து சென்றார் - (அனைவரும்) எழுந்து இராமனிடம் போயினர். அம்மா - ஆச்சரியம்;

தருமத்திற்கழிவில்லை: அது நன்மையே விளைக்கும் என்பதைத் தன் செயலால் மாருதி விளக்கிக் காட்டினன் என்பது கருத்து. தருமம் என்பது தனிப்பொருள்; அதனைத் தன் ஆற்றலாற் செயற்படுத்திக் காட்டியவன் மாருதி என்க. அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பது இந்நூலாற் காட்டப்பெறும் படிப்பினை. இருமை: இம்மை மறுமை; 'இருமையு நோக்குறு மியல்பினோர்க்கு' (கிட்கிந்தா. 258) தருமமே அநுமன் என்பது இங்குக் குறிக்கப் பட்டது. இங்கு வேலேற்ற படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 1. நன்னைப்பின்னே.

2. அநுமனுகக் ; காட்டியதினைய ; கண்டான்.

3. அருமையோயேதுமக்கம், அருமையே திராமர்க்கம்மா.

4. போனர். 44

## அனைவரும் சென்று வணங்க, இராமபிரான் விளைந்ததென்? என்று வினவுதல்

3511. ஒன்றல பலவென் றோங்கு
முயர்பிணத் தும்ப ரொன்று
குன்றுகள் பலவுஞ் சோரிக்
குரைகட லனைத்துந் தாவிச்
சென்றடைந் திராமன் தன்னைத்
திருவடி வணக்கஞ் செய்தார்
வென்றியின் தலைவர் கண்ட
விராமனென் விளைந்த தென்றான்.

ஒன்று அல பல என்று - ஒன்றல்ல பல என்று பகருமாறு, ஓங்கும் உயர் - மிகவும் உயர்ந்துள்ள, பிணத்து-சவங்களின், உம்பர் ஒன்று - வானளாவி நின்ற, குன்றுகள் பலவும் - குன்றுகள் பல வற்றையும், சோரி - உதிரத்தாலாகிய, குரைகடல் அனைத்தும் - ஒலிக்கின்ற கடல்கள் எல்லாவற்றையும், தாவி சென்று அடைந்து - கடந்து சென்றடைந்து, இராமன் தன்னை - இராம பிரானை, திருவடி - உபயபாதங்களில், வென்றியின் தலைவர் வணக் கம் செய்தார் - வெற்றிவீரரான வானரத் தலைவர்கள் வணங்கினர்; கண்ட இராமன் - அவர்களைக் கண்ணுற்ற இராமபிரான், 'விளைந் தது என் - நிகழ்ந்தது என்ன', என்றான் - என்று கேட்டான்.

சோரிக் குரைகடல், ஒழுக்குடன் ஒலியும் கொண்ட உதிரக் கடல்; 'ஓசைச் சோரியை நோக்கினான்' (கிட்கிந்தா. 298) என்ற இடத்துப்போல. குரைகடல்: 'கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர்' (தனிப்பா.). வெற்றியின் தலைவர்: வெற்றிவீரரான வானரர்கள்.

பி - ம். 1. பலவென்றேதும் ; பிணத்தும்பரோங்கும், தும்பரோடும்.
2. குரைகடல் பலவுந்.
3. இராமன் செம்பொற் றிருவடி.
4. தலைவர்க்கண்டா னுரைத்திடும். • 45

இங்குக் களங்காண்படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

## சாம்பவான் நிகழ்ந்தவற்றையெல்லாம் சொல்ல, இராமபிரான் அநுமனைக் கொண்டாடுதல்

3512. உற்றது முழுது நோக்கி
யொழிவற வுணர்வு ளூறச்
சொற்றனன் சாம்பன் வீர
னனுமனைத் தொடரப் புல்லிப்
பெற்றனெ னுன்னை யென்னை
பெருதன பெரியோ யொன்றும்
மற்றிடை யூறு செல்லா
வாயுளை யாதி யென்றான்.

(அது கேட்ட சாம்பவன்) உற்றது முழுதும் நோக்கி - நிகழ்ந்தவற்றை முற்றும் மனத்தால் கருதி, ஒழிவு அற - ஒன்றும் விடாமல், உணர்வு உள் ஊற சாம்பன் சொற்றனன் - இராமன் உள்ளத்தில் நன்கு பதியுமாறு சாம்பவன் பகர்ந்தான்; வீரன் - வீரனான இராமபிரானும், அநுமனை - மாருதியை, தொடர புல்லி - இடைவிடாது தொடர்ந்து தழுவி, 'உன்னை பெற்றனென் - உன்னைப் பெற்றுள்ளேன், பெரியோய் - பெருமை மிக்கவனே! பெருதன என்னை - பெருதன யாவை? மற்று-பின்னும், ஒன்றும் - சிறிதும், இடையூறு செல்லா ஆயுளை ஆதி - இடையூற்றையுருத ஆயுளை உடையை யாகுக', என்றான் - என்று ஆசீர்வதித்தான்.

உன்னை யென் துணைவனாகப் பெற்ற யான் பெற முடியாதது என்ன என்று, அநுமனைப் புகழ்ந்தான் இராமபிரான். பெரியோய் என்றது செயற்கரிய காரியம் செய்கின்ற மாருதியின் பெருமை

நோக்கி; 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள். 26) என்றது காண்க. (ஒப்பு); 'எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்முன்' (சீவக. 1760). இடையூறு செல்லா - துன்பமே நிகழப்பெருத, நிறைந்த ஆயுளைப் பெற்றவனுக ஆக வேண்டும் என்று சிரஞ்சீவிப் பட்டம் அளிக்கின்ருன். 'ஊழியோர் பகலா யோது மாண்டெலா முலக மேழும், ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' (சுந்தர. 561) என்று பிராட்டி வாழ்த்தியதும், 'மறை நான்கும் ஓதியுணர்ந்தீர், ஊழி கடந்தீர்' (கிட்கிந்தா. 992) என்று சாம்பவன் கூறியதும் காண்க. ஆகல் - அல் வீற்று வியங்கோள். மற்று - வினைமாற்று.

பி - ம். 1. முழுதும் நாடி : உணர்வினுன்றச்.

2. அநுமனைத் தொடர்ந்து புல்லி.

3. என்னே ; பெரியேரயென்று.

4. மற்றிடை யூறென்றில்லா, மற்றிடை யூறுவாரா, மற்றிடையீறு செல்லர ; ஆயுளையாகில். 46

## இலக்குவன் பெருமகிழ்வோடு இராமபிரானைத் தொழுது சார்தல்

3513. புயல்பொழி யருவிக் கண்ணன்
பொருமலன் பொங்கு கின்ருன்
உயிர்புறத் தொழிய நின்ற
வுடலன்ன வுருவத் தம்பி
துயர்தமக் குதவி மீளாத்
துறக்கம்போய் வந்த தொல்லைத்
தயரதற் கண்டா லொத்தான்
தம்முனைத் தொழுது சார்வான்.

புயல் பொழி - மேகம் போல் பொழிகின்ற, அருவி கண்ணன் - நீரருவியைக் கொண்ட விழிகளை யுடையவனும், பொருமலன் - உவகைக் கலுழ்ச்சியைக் கொண்டு நிற்பவனும், பொங்குகின்ருன் - மகிழ்ச்சி மிகப் பெற்றவனும், உயிர் புறத்து ஒழிய - உயிர் புறத்திலே தனித்து இருப்ப, நின்ற - பிரிந்து தனியே நின்ற, உடல் அன்ன - உடலினை நிகர்த்தவனுமாகிய, உருவம் தம்பி - அழகிய

இலக்குவன், துயர் தமக்கு உதவி - துன்பத்தைத் தங்களுக்குத் தந்து, மீளா துறக்கம் போய் - மீளற்கரிய சுவர்க்கத்தை யடைந்து, வந்த - மீண்டும் வந்த, தொல்லை - பழமையான, தயரதன் கண்டால் ஒத்தான் - தயரதனைக் கண்டாலொத்தவனாகி; தம்முனை தொழுது சார்வான் - தமையனான இராமனைக் கண்டு வணங்கிக் கிட்டுபவனானான்.

அருவிக் கண்ணன் - அருவி; இங்கே ஆனந்த பாஷ்பம். உயிர் புறத்தொழிய நின்ற உடலன்ன தம்பி. 'பூண்ட மெய்யுயிரே போகப் பொய்யுயிர் போல நின்ற ஆண்டகை' (சுந்தர. 525); ஈண்டு நீயிருக்காயாண்டங் கெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 545); என்பன காண்க. மீளாத் துறக்கம்: நசபுனராவர்த்ததே என்று கூறப்பெறும் முத்தியுலகு. இலக்குவன், இறந்த தயரதனைக் கண்டாற் போன்று இராமபிரானைக் கண்டான். (ஒப்பு) ஆரணிய. 202

பி - ம். 1. பொம்மலன், பொருமிறன்; பொங்குகின்றானை நோக்கி.
2. உடலன்னவுறுவற், உடம்பன்ன வுறுப்பிற், உடம்பன்ன வுருவிற்.
3. துயர் நமக்கு; துறக்கம் பெற்றுயர்ந்த.
4. கண்டாலொத்த; சார்ந்தான். 47

## வீடணனுக்காக இலக்குவன் உயிர் விடுத்ததை இராமபிரான் பாராட்டுதல்

3514. இளவலைத் தழுவி யைய
விரவிதன் குலத்துக் கேற்ற
வளவின மடைந் தோர்க்காசி
மன்னுயிர் கொடுத்த வண்மைத்
துளவியல் தொங்க லாய்நீ
யன்னது துணிந்தா யென்றால்
அளவிய லன்று செய்தற்
கடுப்பதே யாகு மன்றே.

இளவலை தழுவி - இலக்குவனை அணைத்துக் கொண்டு, (இராமபிரான்) 'ஐய - ஐயனே! அடைந்தோர்க்கு ஆகி - சரண் புக்கவரைப் பாதுகாத்தற்காக, மன் உயிர் கொடுத்த வண்மை - நிலை

பெற்ற உயிரை வழங்கிய வண்மையால், இரவிதன் குலத்துக்கு ஏற்ற - சூரிய வம்சத்துக்கு பொருந்திய, வளவினம் - வள்ளன்மைக் குணத்தினை உடையவர் ஆனோம்; துளவு இயல் தொங்கலாய் - துளவத்தால் தொடுக்கப்பட்ட மாலையைப் புனைந்தவனே! நீ - நீ, அன்னது துணிந்தாய் என்றால் - நீ அச் செயலைத் துணிவுடன் செய்தனை யெனின், (அச் செயல்), அளவியல் - மிக்க அளவினதான பெருஞ் செயல்; அன்று - அன்று; செய்தற்கு அடுப்பதே ஆகும் - (அப்போது) புரிதற்கு அமைந்த செய்கையே யாகும். ஏகாரம் - தேற்றம். அன்று, ஏ - ஈற்றசை.

இளவல் - இலக்குவன்; அல் - பெயர் விகுதி. இரவிதன் குலத்துக்கேற்ற வளவினம் - மனுமாந்தாதா முதலான முன்னோர் களின் வள்ளல் தன்மை கைவரப் பெற்றவரானோம். இங்கு யுத்த. 95 ஆம் பாடல் காணத்தகும். 'இவர் குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்' (பால. குலமுறை. 7); என்றதும் காண்க. வளவினம் - வினையாலணையும் பெயர். 'துளவியல் தொங்கலா யென்றது இலக்குவனை; தொங்கல் - மாலைக்குக் காரணக் குறி. அன்னது என்றது மன் னுயிர்க்குத் தன்னுயி ரளித்தல். துளவ மார்பனான திருமாலின் அமிசமாதலின், துளவியலலங்கலாய் எனப்பட்டது 'துளவ துளவவெனச் சொல்லும் சொல் போச்சே' (பிள்ளைப்பெருமாள்.).

பி - ம். 1. இளவலை நோக்கி; இராகவ குலத்துக்கு, இரவிவங்கிசத்துக்கு; இராகவர் குலத்துக்கு.

2. அடைந்தோர்த்தாங்கி, அடைந்தோற்றாங்கி; அளிக்குந் தன்மை, கொடுக்குந் தன்மை; கொடுக்கும் வன்மை.

4. அளவியதன்று; என்றான். 40

3515. புறவொன்றின் பொருட்டா யாக்கை
புண்ணுற வரிந்த புத்தேள்
அறவனு மைய நின்னை
நிகர்க்கில னப்பால் நின்ற
பிறவினை யுரைப்ப தென்னே
பேரரு ளாள ரென்பார்
கறவையுங் கன்று மொப்பார்
தமர்க்கிடர் காண்கி லென்றான்.

'ஒன்று புறவின் பொருட்டா - ஒரு புருவைக் காக்கும் பொருட்டாக, யாக்கை புண் உற அரிந்த புத்தேள் அறவனும் - உடலைப் புண்படுமாறு அறுத்துக் கூறு செய்த தெய்வத் தன்மையும் தருமசிந்தையும் பூண்ட சிபி மன்னனும், ஐய - ஐய, நின்னை. நிகர்க்கிலன் - உனக்கு ஒப்பாக மாட்டான்; அப்பால் நின்ற - அந்தச் சரிதையினும் புறம்பாக நின்ற, பிறவினை உரைப்பது - பிற செயலைப் பகர்வது, என்னே - எதன் பொருட்டு? பேர் அருளாளர் என்பார் - பேரருள் ஆள்பவர் என்பார், தமர்க்கு இடர் காண்கில் - தம்மைச் சார்ந்தார்க்குத் துன்பம் நேரக் காண்பாராயின், கறவையும் கன்றும் ஒப்பார் - கறவையும் கன்றும் போன்றவராவர்', என்றான் - என்று கூறினன் இராமபிரான்.

கறவையும் கன்று மொப்பார்; (ஒப்பு); 'தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகையனுனன்' (யுத்த. மீட்சி. 337); புத்தேள் - தன்னுடைய திவ்யப் பண்புகளால் தேவனே போன்றவன்; 'புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே, யொப்புரவினல்ல பிற' (குறள். 213); 'பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்' (ஆரணிய. 57); புத்தேள் அறவன் - சிபி மன்னன்; 'பிறந்தநாட் டொடங்கியாருந் துலைபுக்க பெரியோன் பெற்றி, மறந்த நாளுண்டே' (யுத்த. 413) ம் அதன் உரையும் காண்க, 'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை' (பால. திருவவ. 4); புண்ணுற வரிந்த புத்தேள் அறவனு நின்னை நிகர்க் கிலன் என்றது; அவன் உடலை அரிந்த அளவில் நின்றான்; இவன் உயிரையே தத்தம் செய்தான் என்பது கருதி, பிறவினை; 'பிற வினை யெல்லாம் தரும்' (குறள்: 321); பேரருளாள ரென்பர், கறவையும் கன்றுமொப்பார், தம்ர்க்கிடர் காண்கில் என்றது. கன்றுக்கு ஓர் ஊறுகாணுமிடத்துக் கறவைப் பசு வாத்சல்யத் தாற் கலங்குவது போன்று ஆவன செய்வர் என்க.

பா - ம். 1. புறவதின்; பொருட்டால், பொருட்டின்.
2. அறவது நின்னையைய.
3. பிறவினி.
4. தமக்கிடர்.

## இராமபிரான் இளைப்பாறுதல்

3516. சாலிகை முதல வான
போர்ப்பரந் தாங்கிற் றெல்லாம்
நீல்நிற நாயி றன்ன
நெடியவன் முறையி னீக்கிக்
கோல்சொரி தனுவுங் கொற்ற
வனுமன்கை கொடுத்துக் கொண்டல்
மேல்நிறை குன்ற மொன்றின்
மெய்ம்மெலி வாற்ற லுற்றான்.

சாலிகை முதல ஆன - கவசம் முதலவாகிய, போர் - போரின் பொருட்டு, பரம் தாங்கிற்று எல்லாம் - பாரமாகக் கொண்ட எல்லாம், முறையின் நீக்கி-முறைமையில் நீக்கி, நீல்நிற நாயிறு அன்ன நெடியவன் - நீல வண்ணமுள்ள கதிரவனை யொத்த இராமபிரான்; கோல் சொரி தனுவும் - வாளியைப் பொழியும் வில்லையும், கொற்றம் - வெற்றி சான்ற, அநுமன் கைகொடுத்து - மாருதி கையிற் கொடுத்து, கொண்டல் மேல் - மேகமானது (தன்) மேல், நிறை - தங்கப் பெற்ற, குன்றம் ஒன்றின் - குன்றம் ஒன்றின்மீது, மெய்மெலிவு ஆற்றல் உற்றான் - சரீரத் தளர்ச்சியைப் போக்கிக் கொள்ளலானான்.

சாலிகை - கவசம்; 'திண் மார்பின் மிசைச்செறி சாலிகையின்' (யுத்த. 3442); நீல் நிற நாயிறன்ன நெடியவன் - இராமபிரான்; இல்பொருள் உவமை. 'வட திசைச் சிகரி யொன்றின், உதயம தொழியத் தோன்று மொருகரு ஞாயிறொத்தான்' (யுத்த. 777); 'கருஞாயிறு போல்பவர்' பால. கடிமண. 4; பரம்-பாரம்; 'தள்ளரும் பரம் தாங்கிய ஒட்டகம்' (பால: எழுச்சி: 37) கோல் - அம்பு; 'வாலிமேற் கோலொன்று வாங்கி' (கிட்கிந்தா. 288); நாயிறு - ஞாயிறு; 'ஞாயிறனையை நின் பகைவர்க்கு' (புறநா. 59); தனு-வில்; 'தனுவன்றித் துணையில்லான் தருமத்தின் கவசத்தான்' (பால. குலமுறை. 14); மெய்ம் மெலிவாற்றல் - இளைப்பாறுதல்.

பி-ம். 2. நீன்ற ஞாயிறென்னும்.
3. கோலியதனுவும்.
4. மேலுறை குன்றமொன்றின், மேலுயர் குன்றினின்று, மேலுறைகின்ற குன்றின்.



வேலேற்ற படலம் முற்றும்.

## வேலேற்ற படலத்தை யொட்டிய முதனூற் குறிப்பு:

இராமர் விடுத்த அக்கினி வாளியால் தனது வாளி ஒழிக்கப் பட்டவளவில், இராவணன் சினந்து, மயன் கொடுத்ததும் உருத்திர மூர்த்தியை அதி தேவதையாகக் கொண்டதும் ஆன, அத்திரத்தை எடுத்து இராமன்மேல் விடுக்க முயன்றான். அவ் வத்திரத்தினின்று பல ஆயுதங்கள் கிளம்பின. இராமபிரான் அதனைக் காந்தருவாத்திரம் விடுத்து அழித்தார். மற்றும் இராவணன் சூரியாத்திரத்தை விடுக்க அதனையும் இராமபிரான் பொடி செய்தான். இந்நிலையில் வீடணன் முனைந்து இராவண னுடைய தேர்க் கொடிகளை அறுத்தெறிந்தான். இலங்கேச னுடைய தேர்ப்பாகன் தலையையும் துணித்தான். இராவணன் தன் தம்பிமீது வெகுண்டு சத்தி என்னும் ஆயுதத்தை வீடணன் மேல் வீசினான். அந்த சத்தி வீடணனை யணுகுமுன்னமே, இலக்கு வன் அதை மூன்று பாணங்களால் துண்டித்தான். பின்னர் மின்னும் வேலொன்றை இராவணன் கைக்கொண்டு வீடணன் மேல் ஏவ முயன்றான். அது வீடணனை யழிக்கும் என்று கண்டு, இலக்குவன் வீடணனைக் காக்க முன் வந்தான். இராவணன் கண்டு அதனை இலக்குவன் மீதுவிட முயன்றான். விடுத்த அளவில் அது இலக்குவன் மார்பினை ஊடுருவிற்று. இளையவன் தரையில் வீழ்ந்தான். அவன்மீது தைத்த வேலைப் பலர் முயன்றும் பிடுங்கக் கூடவில்லை. இராமபிரான் அது கண்டு அதனைப் பிடுங்கி யெறிந் தார். பின்னும் வெகுண்டு இராவணன்மீது பல அம்புகளை விடுத் தார். இராவணன் களத்தை விட்டகன்றான்.

பின்னர் இலக்குவன் அவச நிலைக்குப் பெரிதும் இரங்கி இராம பிரான் சுசேஷணனைப் பார்க்க, அவன் தேறுதல் சொல்லி, இலக்கு வனுக்கு ஏதும் அபாயமில்லை என்று கூறி, அநுமனைப் பார்த்து, மருத்து மலையைக் கொணருமாறு கூற, அநுமன் கொணர்ந்து பிழைப்பு மூட்டினான். இராமபிரான் மகிழ்ந்து இலக்குவனைத் தழுவி, 'வீரனே, என்னுடைய பாக்கியத்தால், மாண்ட நீ மீண்டும் பிழைத்திருக்கக் காண்கின்றேன். நீ மட்டும் மாண்டிருந் தால், என்னுயிரால் எனக்கு என்ன இலாபம். சீதையால்தான் என்ன லாபம். எனது வெற்றியால்தான் என்ன பயன்' என்றார்.

---

# 32. வாநரர் களங்காண் படலம்

இது வானரர்கள் (மூலபலங்கள் மரித்துக் கிடக்கும்) போர்க் களத்தைக் கண்ணுற்றதைக் கூறும் பகுதி என விரியும். இப் படலம் சில பிரதிகளில் வாநரச் சேனை களங்காண் படலம் என்ற பெயருடன் 'எழுந்து நின்று' (வேலேற்ற படலம் 43) என்ற செய்யுளில் தொடங்குகின்றது. சில பிரதிகளில் 'தொழுதனர்' என்ற இப் படலத்துச் செய்யுளில் 'வாநரர் களங்காட்சிப் படலம்' என்ற பெயருடனும், வாநரத்துத் தலைவர் களங்காட்சிப் படலம் என்ற பெயருடனும் இப்படலம் தொடங்குகின்றது. சில பிரதிகளில் இப்படலமும் இராவணன் களங்காண் படலமும் ஒன்று பட்டுக் களங்காண் படலம் என்ற பெயருடன் காணப்படுகிறது.

### சுக்கிரீவன் வந்து வணங்கி நிற்க, வாநரர் இராமபிரானுலழிந்த அரக்கரின் பெருமையை நோக்கித் திகைப்பும் நாணமும் அடைதல்

3517. ஆயபின் கவிதன் வேந்து
மளப்பருந் தானை யோடு
மேயின னிராமன் பாதம்
விதிமுறை வணங்கி வீந்த
தீயவர் பெருமை நோக்கி
நடுக்கமுந் திகைப்பு முற்றூர்
ஒய்வுறு மனத்தா ரொன்று
முணர்ந்திலர் நாண முற்றூர்.

ஆய பின் - அவ்வாறு நிகழ்ந்த பின்பு, கவிதன் வேந்தும் - வாநரர் தலைவனுகிய சுக்கிரீவனும், அளப்பு அரு தானையோடும் - அளவிட முடியாத சேனையுடனே, இராமன் பாதம் விதிமுறை வணங்கி - இராமபிரானுடைய திருவடிகளில் முறைமையின் வணங்கி, மேயினன் - அணுகினன்; (அக்காலையில்), வீந்த - இறந்துபட்ட, தீயவர் பெருமை நோக்கி - கொடிய அரக்கரின்

மிகுதி நோக்கி, நடுக்கமும் திகைப்பும் உற்றார் - நடுக்கமும் திகைப்பும் அடைந்து, ஓய்வு உறு மனத்தார் - தளர்ந்த மனத்தினராய், ஒன்றும் உணர்ந்திலர் நாணம் உற்றார் - ஏதும் உணரமாட்டாதவராய் வெட்கம் அடைந்தனர்.

அளப்பரும் : 'அளப்பருங் கடற் பெயர் அருந்தவத்தோனே' (யாப். விருத். பாயிரம்.). வீழ்தல் ; 'வீயுமுயிர் மீளும்' (சுந்தர. 558).

பி - ம். 1. ஆயவெங்கவியின் ; மடிப்பருந்.
2. வணங்கியிந்தத்.
3. திகைப்புந்தீர.
4. ஒய்வுறு மனத்தானென்று முரைத்திலர். 1

## மூன்றுலகத்தினும் மிக்க அரக்கர் சேனையை வென்றது எவ்வாறு என்று சுக்கிரீவன் வினவ, இராமபிரான் வீடணனோடு அதனைக் காணுமாறு பணித்தல்

3518. மூண்டெழு சேனை வெள்ள
முலகொரு மூன்று முற்றி
நீண்டுள வதனை யைய
வெங்ஙன நிமிர்ந்த தென்றான்
தூண்டிரண் டனைய திண்டோட்
சூரியன் சிறுவன் சொல்லக்
காண்டிநீ யரக்கர் வேந்தன்
றன்னெடுங் களத்தை யென்றான்.

தூண் திரண்டனைய திண் தோள் - தூண் திரண்டாற் போன்ற உறுதியான தோளையுடைய, சூரியன் சிறுவன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், 'மூண்டு எழு சேனை வெள்ளம் - போரில் முனைந்தெழுந்த சேனைப் பெருக்கானது, உலகு ஒரு மூன்றும் முற்றி - மூவுலகங்களிலும் நிறைந்து, நீண்டு உள - அவற்றின் மேலும் வளர்ந்திருந்தது ; ஐய - ஐயனே ! அதனை எங்ஙனம் நிமிர்ந்தது - அச் சேனையைக் கடந்து நின்றது எவ்வாறு',

என்றான் - என்று கேட்டான்; சொல்ல - அங்ஙனம் வினவிய அளவில், (இராமபிரான்), 'அரக்கர் வேந்தன் தன்னொடும் - அரக்கர் அதிபதியான வீடணனோடும், நீ களத்தை காண்டி - நீ அமர்க் களத்தை காண்பாயாக', என்றான் - என்று பகர்ந்தான்.

முற்றுதல் - நிறைதல். நிமிர்தல் - கடந்து சமாளித்து நிற்றல். இராமபிரானுடைய பேராற்றலைப் பலவாயிலாகக் கண்டுணர்ந்தும், நிமிர்ந்தது எங்ஙனம் என்று வியப்புற்றுக் கேட்டமையின் சூரியன் சிறுவன் எனப்பட்டது. தந்தை சொல்லைக் காப்பாற்ற வனம் சென்று பதினான்கு ஆண்டுகள் ஆண்டுறைந்தல்லது மீளேன் எனச் சங்கற்பித்த இராமபிரானை, வசிட்டன் நாட்டுக்கு வருமாறு வேண்டியபோது, பெருமான் அம்முனிவனை நோக்கித் 'தேன்தரு மலருளான் சிறுவ' (அயோத்தி. திருவடி. 126) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. தனது ஆசிரியனையே 'சிறுவ' என்று விளித்த தன் காரணம் உய்த்துணர்க. இராவணன் ஆட்சி மன்னனாக இருக்கவும், வீடணனை அரக்கர் வேந்தன் என்றது முன்னரே இலங்கையை அவனுக்கு வாக்குத்தானம் செய்தமை கொண்டு எனக் காண்க. 'ஆழியானவனை நோக்கி அருள்சுரந் துவகை தூண்ட, ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயரு மெந்நாள், வாழுநா ளன்று காறும் வாளெயிற் றரக்கர் வைகும், தாழ் கடலிலங்கை செல்வ நின்னதே தந்தேன்' (யுத்த 445) என்றது காண்க.

பி - ம். 1. உலகொடு; மூன்றின் மேலும்.
2. நீண்டுளது; என்ன.
3. சூரியன் புதல்வன்.
4. காண்டிரால்.

2

## வணங்கிவிட்டு வாநரத் தலைவர் வீடணனோடு சென்று போர்க்களங் காணுதல்

3519. தொழுதனர் தலைவ ரெல்லாந்
தோன்றிய காத லூண்ட
எழுகென விரைவிற் சென்று
ரிராவணற் கிளவ லோடும்

கழுகொடு பருந்தும் பாறும்
 பேய்களுங் கணங்க்ள் மற்றுங்
குழுவிய களத்தைக் கண்ணி
 னேக்கினர் துணுக்கங் கொண்டார்.

தலைவர் எல்லாம் - சேனைத் தலைவர் அனைவரும், தொழுதனர் - (இராமபிரானை) வணங்கி, தோன்றிய காதல் தூண்ட - (மனத்தின்கண்) உதித்த காதல் உண்ணின்று ஊக்க, இராவணற்கு இளவலோடும் - இராவணன் தம்பியான வீடணனேடும், எழுக என - எழுக என்று சொல்லி, விரைவில் சென்ருர் - விரைந்து போய், கழுகொடு பருந்தும் பாறும் - கழுகுடனே பருந்தும் பாறும், பேய்களும் - பேய்களும், மற்றும் - மற்றுமுள்ள, கணங்கள் - திரள்களும், குழுவிய களத்தை - திரண்டு நின்ற போர்க்களத்தை, கண்ணின் நோக்கினர் - கண்ணுரக் கண்டு, துணுக்கம் கொண்டார் - அச்சம் எய்தினர்.

தொழுதனர், நோக்கினர் - முற்றெச்சம். தோன்றுதல் - உள்ளத்தெழுதல். எழுக என என்பது எழுகென என நின்றது பாறு - பருந்தின் வகை ; 'பாருடு களத்து' (யுத்த. மூலபல. 209) ; துணுக்கம் - அச்சம் ; 'துணுக்கமெய்தினர் மங்கல நாண்களைத் தொட்டார்' (யுத்த. இராவணன் தேரேறு. 29) ; 'கொண்டனன் துணுக்க மெய்தீண்டக் கூசுவான்' (சுந்தர. 510).

இதிலிருந்து வாநரர் களங்காண் படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 2. தேந்தாரிராகவன், சென்ருரிராவணன். 3

## படுகளங்கண்ட வாநரர் முதலில் அஞ்சிப் பிறகு மகிழ்தல்

3520. ஏங்கினர் நடுக்க முற்று
 ரிரைத்திரைத் துள்ள மேற
வீங்கினர் வெருவ லுற்ருர்
 விம்மினு ருள்ளம் வெம்ப

ஓங்கினுர் மெள்ள மெள்ள
வுயிர்நிலைத் துவகை யூன்ற
ஆங்கவ ருற்ற தன்மை
யார்கொலோ பகரற் பாலார்.

(மற்றும் அவ் வாநரர்), ஏங்கினுர் - ஏக்கமுற்றுர்; நடுக்கம் உற்றுர் - நடுங்கினுர்; இரைத்து இரைத்து - விடாமல் ஆரவாரித்து, உள்ளம் ஏற-மனத்தில் (அச்சம்) அதிகமாக, வீங்கினுர்-பருக்கப் பெற்றுர்; வெருவல் உற்றுர் - வாயினுல் பிதற்றத் தொடங்கினுர்; உள்ளம் வெம்ப விம்மினுர் - மனம் வெப்பம் உறத் தேம்பி யழுதார்; மெள்ள மெள்ள உயிர் நிலைத்து-சிறிது சிறிதாக உயிர் நிலைக்கப்பெற்று, உவகை ஊன்ற - மகிழ்ச்சி நிலை கொள்ள, ஓங்கினுர் - தலை நிமிர்ந்து நின்றனர்; ஆங்கு - அப்போது, அவர் உற்ற தன்மை யார் கொலோ பகரற்பாலார் - அவர்கண் அடைந்த தன்மையை யார்தான் எடுத்து மொழியவல்லார்; ஒருவருமில்லை யென்றபடி.

இரைத்தல் - பெருங் கூச்சலிடுதல்; (நாக. 215) வெம்புதல்; 'வெம்புவாள் விழுவாள் பொய்யே' (நளிப்பா.). உவமை ஊன்ற - மகிழ்ச்சி நிலைகொள்ள.

பி - ம். 1. மேனி.
2. வெம்பி.
3. மனத்து உவகையூறி, ஊற.
4. வாங்கினுர், ஆங்கிவர்; யாரறிந்தறையகிற்பார். 4

## அரக்கச்சேனையைக் குறித்துக் கூறுமாறு வாநரர் வினவ, வீடணன் கூறுதல்

3521. ஆயிரம் பருவங் கண்டுங்
காட்சிக்கோர் கரையிற் றன்ருல்
மேயின துறைக டோறும்
விம்மினுர் நிற்ப தல்லால்
பாய்திரைப் பரவை யேழுங்
காண்குறும் பதக ரென்ன
நீயிருந் துரைத்தி யென்ருர்
வீடண னெறியிற் சொல்வான்

'பாய்திரை பரவை ஏழும் என்ன - தாவும் தன்மையதான அலைகளையுடைய ஏழு கடலும், (ஒன்றாகத் திரண்டாற்போன்று), காண்குறும் - காட்சியளிக்கின்ற, பதகர் - பாதகரான அரக்கர், மேயின துறைகள் தோறும் - பொருந்தி நின்ற தலங்கள் தோறும், விம்மினர் நிற்பது அல்லால் - விம்மி யழுதுகொண்டு தங்குவதன்றி, ஆயிரம் பருவம் கண்டும் - ஆயிரம் ஆண்டுகள் கண்டாலும், காட்சிக்கு ஓர் கரையிற்று அன்று - காண்டற்கு ஓர் வரையறை யின்மையின், நீ இருந்து உரைத்தி' - நீ நிதானித்துக் கூறுவாயாக,' என்றார் - என்று வானரர் கூறினர்: வீடணன் நெறியில் சொல்வான் - விபீடணன் முறையாகப் பகர்ந்தான். ஆல்: அசை.

பருவம்: இங்கு ஆண்டு; கரையிற்று அன்று - கரையையுடையது அன்று எனவே எல்லையில்லாதது; கரையிற்று: குறிப்பு வினைமுற்று. பரவை: கடல்; பரந்திருப்பது; பதகர் 'பாசங்கலந்த பசியோ லகன்ற பதகன் துரந்த வுரகம்' (யுத்த. 2199); 'பாற்கடலழுவத்துள்ளதப் பதகன் மூதூர்' (யுத்த. 911); 'நெறியினீங்கினோர் நீரல கூறினு, மறியாமையென் றறியல் வேண்டும்' (சிலப். 10: 237-238)

பி - ம். 1. பருவங்கண்டால்; அளவிற்றன்றால்.
2. போயின; உவகையோடும், விம்மினர் புலம்பல்.
3. வேலையேழும்; கான்குறும்; பதகனென்ன.
4. நீயிர் தேர்ந்து தெரிந்து என்றான்; சொன்னான். 5

வேறு

## வீடணன் இறந்த சேனைகளைச் சுட்டிக் கூறுதல்

3522. காகப் பந்தர்ச் செங்கள மெங்குஞ் செறிகால
வேகத் தம்பிற் பொன்றின வேனு முடலொன்றி
மேகச் சங்கந் தொக்கன வீழும் வெளியின்றி
நாகக் குன்றம் நின்றன காண்மின் னமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே, காகம் பந்தர் - காகப் பந்தரைக் கொண்டதும், செ களம் எங்கும் - (உதிரம் பரத்தலின்) செந்

நிறம் கொண்டதுமான, அமர்க்களத் தெவ்விடத்தும், செறி நெருக்கிய, காலம் வேகத்து அம்பில் - கூற்றுவ போன்ற வேகத்துடன் கூடிய அம்பினுல், பொன்றின ஏனும் - மறித்துக் கிடந்தனவாயினும், உடல் ஒன்றி - தாம் உடல்கள் ஒன்று பட்டதனுல், மேகம் சங்கம் - மேகத்தின் தொகுதிகள், தொக்கன வீழும் - திரண்டு படியப்பெறுகின்ற, நாகம் குன்றம் - யானைகள் நிரம்பிய மலைகள், வெளியின்றி - வெற்றிடம் இல்லாமல், நின்றன காண்மின் - நின்றனவற்றைப் பாருங்கள்.

காகமிட்ட பந்தர்க் கீழே வேழங்கள் இராமபிரான் வாளிகளால் இறந்து கிடந்தனவாயின. அவை உடல் ஒன்றுகூடி மேகம் படியப்பெறும் மலைகள் போன்று நின்றன எனப்பட்டது. கொலைபுரியும் தொழில் விரைவால் காலன் அம்புக்குவமை. மேகச் சங்கம் முகில் தொகுதிகள், தொக்கன வீழும் - திரண்டனவாய்ப் படியும். நாகம் : பல பொருள் ஒரு சொல் : இங்கு யானை. நமரங்காள் : நம்மவர்களே. விளி : சீவக. 517, 2623 ; நமர்காள் : அம் : அசை.

பி - ம். 1. செறி காலம்.

2. மோகத்தம்பிற், ஒகத்தம்பிற், யோகத்தம்பிற் ; வீடினவேனும் ; உடனென்றி.

3. தொக்கனவீழும் ; வெளியின்றி.

4. குன்றினின்றன. 6

3523. வென்றிச் செங்கண் வெம்மை யரக்கர் விசையூர்வ
ஒன்றிற் கொன்றுற் றம்பு தலைப்பட் டுயிர்நுங்கப்
பொன்றிச் சிங்க நாக வடுக்கல் பொலிகின்ற
குன்றிற் றுஞ்சுந் தன்மை நிகர்க்குங் குறிகாணீர்.

'வென்றி - (முன்னர்) வெற்றியுடன் கூடியவரும், செ கண் - சிவப்பேறிய கண்களையுடையவருமான, வெம்மை அரக்கர் - கொடிய இராக்கதர்கள்; விசை ஊர்வ - விரைந்து செல்வனவும், ஒன்றிற்கு ஒன்று உற்று - முந்துற்றவுமான, அம்பு - இராம பாணங்கள், தலைப்பட்டு - தம்மீது பொருந்தி, உயிர் நுங்க - உயிரை உண்ணுதலால், பொன்றி - இறந்து, நாகம் அடுக்கல் பொலிகின்ற - பாம்புகளைக் கொண்ட பக்கமலைகள் விளங்குகின்ற, குன்றில்

துஞ்சும் - மலையில் துயில்கின்ற, சிங்கம் தன்மை நிகர்க்கும் குறி காணீர் - சிங்கத்தின் தன்மையை ஒத்திருக்கும் குறியைக் காண்பீராக.

வென்றிச் செங்கண் : வென்றியையும் சிவந்த விழிகளையும் உடைய. தலைப்படுதல் : பொருந்துதல் ; தலை - உபசர்க்கம் ; உயிர் நுங்க - உயிரைப் பருக. நுங்குதல் - உண்ணுதல் ; 'காகாதிகள் நுங்குதல் காணுதியால்' (யுத்த. 1742); சிங்கம் நிகர்க்கும் எனக் கூட்டுக. அடுக்கல் - பக்கமலை ; 'அழுந்தவுய்த்த வடுக்கல் தகர்ந்து' (யுத்த. 669).

பி - ம். 1. விசையூர, மிசையூர.
2. ஒன்றுக்கொன்று, ஒன்றிற் சென்றுற்று.
3. நாகமடுக்கிற், நாகமடுக்கப், நாகவிடுக்கிற். 7

3524. அளியிற் பொங்கு மங்கண னேவு மயில்வாளிக்
களியிற் பட்டார் வாண்முக மின்னுங் கரையில்லாப்
புளினத் திட்டிற் கண்ணகன் வாரிக் கடல்பூத்த
நளினக் காடே யொப்பன காண்மின் னமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே! அளியில் பொங்கும் - கருணையினால் நிறையப்பெற்ற, அம்கணன் - அழகிய நேத்திரங்களையுடைய, இராமபிரான். ஏவும் - விடுகின்ற, அயில் வாளி - கூரிய சரத்தால், களியில் பட்டார் - மகிழ்ச்சியுடன் இறந்து வீழ்ந்தவரின், வாள் முகம் - ஒளி பொருந்திய முகங்கள், மின்னும் - ஒளிவிடுகின்ற, கரை இல்லா - கரையில்லாத, புளினம் திட்டின் - மணல் திட்டினைக் கொண்ட, கண் அகல் - இடம் அகன்ற, வாரி - நீரையுடைய, கடல் பூத்த - கடலிலே மலர்ந்த, நளினம் காடே ஒப்பன - தாமரைக் காட்டை நிகர்த்து காணப்படுவனவற்றை, காண்மின் - பாருங்கள்.

போர்க்களத்தில் இறப்பதால் மகிழ்ச்சியேயன்றி - துன்பம் துய்ப்பவர் அல்லராகலின், களியிற் பட்டார் எனப்பட்டது. 'குழாக்களிற்றரசர் குறித்தெழு கொலைக்களம், விழாக்களம் போல மெய்ம்மலியுவகையர்' (தொல். புறத். 17), காண்க. அளியில் - 'அளியிற் சிறந்த நல்லறமும்' (குசேலோ. 3, 124); புளினம் - மணல் ; 'இரதக் குறை புளினம்' (ஆரணிய. 455);

'மணிபடுபுளினம்' (பால. நாட்டுப். 47); கண்ணகல்: 'கண்ணகன் பெரும்படைத் தலைவர்' (யுத்த. 1965); வாரிக்கடல் - வாரியாகிய கடல் என இருபெயரொட்டாகக் கோடலுமாம். இனி அளியிற் பொங்கும் நளின்க் காடு எனக் கொண்டு கூட்டி, வண்டுகளால் மொய்க்கப் பெற்ற, நளினம் என்பாரும் உளர்.

பி - ம். 1. கங்கமுதற் பல்குலமார்க்கக், கங்கை முதற்பல்கண மார்க்கம்.
2, என்னும் கரையில்ல, முன்னுங் கரையில்ல, எங்கும் கரையில்லார்.
3. புளினத்திட்டைக் ; கண்கனல் சோரி, கண்ணகன் சோரி.
4. கானேயொத்தன ; பார்மின். 8

இதன்பின் 'ஒழுகிப்பாயும்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

3525. பூவாய் வாளிச் செல்லெறி காலைப் பரிபொன்றக்
கோவார் விண்வாய் வெண்கொடி திண்பா யொடுகூட
மாவார் திண்டேர் மண்டுத லானீர் மறிவேலை
நாவாய் மானச் செல்வன காண்மின் னமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே! கோ ஆர் - தலைமை சிறந்த, விண்வாய் - விண்ணிடத்தைச் சென்று தொடுகின்ற, வெள் கொடி - வெண்ணிறக் கொடியையுடைய, மா ஆர் திண் தேர் - குதிரைகள் கட்டுதலையுடைய உறுதியான ,தேர்கள், பூவாய் - கூர்மை செறிந்த, வாளி - அம்புகளாகிய, செல் எறிகாலை - இடி இடித்த காலத்து, பரிபொன்ற - (தாம்பாற் பிணிக்கப்பட்ட), குதிரைகள் இறந்து வீழவும் (உதிர வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டு), மண்டுதலால் - மிக்குச் செல்லுதலால், நீர் மறி வேலை - நீர்த்திரைகள் கரைகளில் மோதி மடக்கும்படியான கடலிலே, திண்பாயொடு கூட - வலிய பாயுடன் கூட, நாவாய் மான - மரக்கலங்களை ஒத்து விளங்க, செல்வன - செல்வனவற்றை, காண்மின் - பாருங்கள்.

செல்: இடி ; 'செல்லோடெழுமா முகில் சிந்தினபோல்' (யுத்த. 3431); கோ - தலைமை. விண்வாய்-விண்ணிலே வாய்ந்த அல்லது சென்று பொருந்திய, பாய் - பாய்மரம். மா - விலங்குப் பொது' குதிரைகள் இறந்துபட வெண்கொடித் தேர்கள் உதிர வெள்ளத்தில் ஈர்க்கப்பட்டுச் செல்வன, கடலிற் செல்லும் பாய் கட்டிய மரக்கலம் போலும் எனப்பட்டது. தற்குறிப்பேற்ற அணி. நாவாய்: 'நளியிரு முந்நீர் நாவா யோட்டி, வளி தொழில் ஆண்ட உரவோன் மருக' (புறநா. 66); தேருக்கு நாவாய்: மான - உவம உருபு.

பி - ம். 1. பாவாய்; பொன்றிக்.

2. கோவாய்வன்பாய், தேவார் விண்வாய்; திண்கால் கொடு, திண் காலொடு.

3. காவார்த், மாவாய்; மண்டுகுலாநீர், மண்டுபுலாநீர்; மறுவேலை. 8

3526. ஒழுகிப் பாயு மும்மத வேழ முயிரோடும்
எழுகிற் கில்லாச் செம்புனல் வெள்ளத் திடையிற்ற
பழகிற் றல்லாப் பஃறிரை தூங்கும் படர்வேலை
முழுகித் தோன்று மீனர சொக்கும் முறைநோக்கீர்.

'ஒழுகி பாயும் - பாய்ந்து ஒழுகுகின்ற, மும்மதம் வேழம்- மூன்று மதங்களையுடைய யானைகள், உயிரோடும் - உயிருடன் கூடியிருந்தும், எழுகிற்கில்லா-( இராமபிரான் வாளி தைத்ததனலோ, அல்லது உதிரப் பெருக்கில் அழுந்தியதாலோ) எழுந்திருக்க வியலாதனவாய், செம்புனல் வெள்ளத்து இடை இற்ற - உதிரப் பெருக்கிடை அகப்பட்டழிந்தன; பழகிற்று அல்லா - இதுகாறும் வழங்கப் பெருத, பல்திரை தூங்கும் படர் வேலை - பல அலைகள் மடங்கி வீழப்பெற்ற பரந்த கடலிலே, முழுகி 'தோன்றும் மீன் அரசு ஒக்கும் முறை நோக்கிர் - முழுகியும் வெளிப்பட்டும் மீனரசை நிகர்த்திருக்கும் முறையைக் காண்மின்கள்.

மும்மதம்; கன்ன கபோல கோசமதம், 'மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி' (தனிப்பா. ஒட்டக்கூத்தர்); கில் - ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. செம்புனல்: 'ஊறுபடு செம்புனல்' (யுத்த. 851); தற்குறிப்பேற்றவணி. வேழங்கள் அம்பினலடிபட்டு இரத்தப் பெருக்கில் மூழ்குவதும் வெளித் தோன்றுவதும் ஆன அரிய காட்சி, கடலிலே மீனரசு எழுந்து மூழ்கும் தன்மையைப் போலும் எனப்பட்டது. பல்+திரை; பஃறிரை: 'லள தவ் வணையின் ஆய்தம்' (நன்.).

பி - ம். 1. முழுகிமாயும்.

2. எழுகற்கில்லா, எழுகிற்கெல்லா, எழுகிச் செல்லா.

3. பழகிற்கில்லா; தாங்கும்.

4. மீனிறை; கரனீர். 10

இதன்பின் 'பூவாய்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

6527. கடக்கா ரென்னப் பொங்கு
கவந்தத் தொடு கைகள்
தொடக்கா நிற்கும் பேயில
யத்தின் றொழில் பண்ணி
மடக்கோ வில்லா வார்படி
மக்கூத் தமை விப்பான்
நடக்கால் காட்டுங் கண்ணுள
ரொக்குந் நமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே! கடம் கார் என்ன - தம் உடல் மேகத்தை ஒத்திருக்க, பொங்கு-முனைந்தெழுகின்ற, கவந்தத்தொடு கைகள் தொடக்கா நிற்கும் - தலையற்ற உடற் குறைகளுடன் கைகளை இணைக்கா நின்ற, பேய் - பேய், இலயத்தின் தொழில் பண்ணி - இலயத்தின் செயலைப் புரிந்தவண்ணம், மடக்கு ஒவு இல்லா - மடக்குதலில்லாத, வார் படிமம் கூத்து-நீண்ட பிரதிமைக் கூத்தை, அமைவிப்பான் - (சீடர்கட்குப்) மனம் பொருந்த செய்வதற்காக, நடம் கால் காட்டும் - நடனக் காலைக் காட்டுகின்ற, கண்ணுளர் ஒக்கும் - பரத நாட்டிய ஆசானை ஒக்கும்.

கடம் - சரீரம்; (பங்.) 'அங்கடம் கிழிந்திலர்' (யுத்த. 2916); தொடக்குதல் - ஒன்று சேர்த்தல். இலயம் - சுருதிலயம்; 'பண்ணிய விலயம் பற்றிப் பாடிய' (சீவக. 727); மடக்கோவில்லா - மடக்குதல் என்பன இல்லாத. படிமம் - பிரதிமம். படிமக்கூத்து - பொம்மலாட்டம். நடக்கால் - நடிக்கும் கால்; கண்ணுளர் - கழைக் கூத்தர். களிக்கு மஞ்ஞையைக் கண்ணுளரினமெனக் கருதி' (கிட்கிந்தா. 468). படிமம்: 'பல்புகழ் நிறுத்த படிமையோனே' (தொல். பாயி.); படிமை - பிரதிமா என்றதன் திரிபு. 'படிமக்கூத்து - இதனைப் பாவைக்கூத்து என்பர். 'படிமம் போன்றிருப்ப நோக்கி' (சீவக. 2642).

பி-ம். 2. பேய் சிலநாகத், பேய் நிலையத்தின்; பூண்ட; பண்ண, பேணி.
3. வடக்கோ, மடக்கோர்.
4. நடக்கோல்; கண்ணினர்; ஒப்பாம்.

3528. மழுவிற் கூர்வாய் வன்ப லிடுக்கின் வயவிரர்
குழுவிற் கொண்டார் நாடி தொடக்கப் பொறிகூட்டத்
தழுவிக் கொள்ளக் கள்ள மனப்பே யவைதள்ளி
நழுவிச் செல்லு மியல்பின காண்மின் னமரங்காள்.

'நமரங்கள் - நம்மவர்களே! வாய் - வாயிலே, மழுவில் கூர்வன் பல் - மழுவைக் காட்டிலும் கூரிய வலிய பல்லையும், இடுக்கு இல் - தளர்தலில்லாத, வயம் வீரர் - வெற்றியையும் உடைய (அரக்க) வீரர், குழுவில் கொண்டார் - கூட்டமாக இருப்பவரின், [நாடி - (உடல்) நரம்புகள், தொடக்கம் - பிணித்தலையுடைய, பொறி - யந்திரம் போன்று, கூட்ட - அகப்படுத்துமாறு, தழுவி கொள்ள - தழுவிக் கொள்ள, கள்ளம் மனம் பேய் - திருட்டு உள்ளத்துடன் கூடிய பேய்கள், அவை தள்ளி - அவற்றைத் தள்ளி, நழுவி செல்லும் இயல்பின காண்மின் - நழுவிச் செல்லும் தன்மையினவற்றைப் பாருங்கள்.

பி - ம். 2. கொண்டர் நாடி, கொண்டன்னடி; நுடித்தப், துடிக்கப்; பொறி கூடிந், பொறி கூட்டித்.

3. அவைதள்ள, தம்மை.

4. செல்லா விழ்வன, தள்ளிப் பேர்வன, செல்லா வியல்பின, செல்ல விழ்வன.

12

3529. பொன்னின் னோடை மின்பிறழ் நெற்றிப் புகர்வேழம்
பின்னும் முன்னும் மாறின வீழ்விற் பிணையுற்ற
தன்னின் னேரா மெய்யிரு பாலுந் தலைபெற்ற
என்னுந் தன்மைக் கேய்வன பல்வே றிவைகாணீர்.

'பொன்னின் ஓடை - பொன்னாற் செய்த நெற்றிப் பட்டத்தினால், மின்பிறழ் - ஒளி விளங்குகின்ற, நெற்றி - நெற்றியிலே, புகர் - செம் புள்ளிகளைக் கொண்ட, வேழம் - இரண்டு யானைகள், வீழ்வில் - (இராமபாணம் தைத்து) வீழ்கையில், பின்னும் முன்னும் மாறின - பின்புறமாகவும் முன்புறமாகவும் மாறிய நிலையில், பிணை உற்ற - சேர்தல் பொருந்தியவை, தன்னில் நேரா - தன்னில் (தான்) ஒப்பாக, மெய் இருபாலும் - உடலின் இருபுறமும், தலை பெற்ற - தலைகள் அமையப்பெற்ற விநோத விலங்கு, என்னும் தன்மைக்கு ஏய்வன - என்னும் தன்மைக்கொத்தன, பல்வேறு இவை காணீர் - பல வகையான இவற்றைக் காண்மின்கள்.

ஓடை - நெற்றிப் பட்டம்; 'ஓடை யானையு மாடன்மாவும்; (யுத்த. 3318); 'ஓடை யானையுந் தேருமுருட்டினும்' (யுத்த. 3147); புகர் - செம்புள்ளி; உயர்ந்த யானையின் இலக்கணங்களில் ஒன்று: 'அடிக்கை கனத்து மதம் பொழியாழி யினளவும் புகராலழகெய்தி' (வி. பா. 16, 7); இரண்டு யானைகள் மாறிப் பிணைந்துகிடந்தவை இருதலை விலங்குகள் போன்று காட்சியளித்தன. நேரா - நேர்ந்து; செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. மீன்பிறழ்.

2. பாறின; பிணைவுற்ற.

3. தலைபெற்றது. 13

3530. நாமத் திண்போர் முற்றிய கோபந் நகை நாறும்
பாமத் தொன்னீ ரன்ன நிறத்தோர் பகுவாய்கள்
தூமத் தோடும் வெங்கன லின்னுஞ் சுடர்கின்ற
ஓமக் குண்ட மொப்பன பல்வே றிவைகாணீர்.

'நாமம் - அச்சம் விளைக்கின்ற, திண் போர் - வலிய போரில், முற்றிய கோபம் - முதிர்ந்த சினம், நகை நாறும் - சிரிப்பிற்றோன்றப் பெற்றனவும், பாம் - பரவுதலையுடைய, அ - அந்த, தொல் நீர் அன்ன - பழமையான நீரையுடைய கடலை நிகர்த்த, நிறத்து - நிறத்தைக் கொண்டனவுமான, ஓர் - ஒப்பற்ற, பகுவாய்கள் - பிளவு பட்ட வாய்கள், தூமத்தோடும்-புகையுடனே, வெம் கனல்-கொடிய கனல், இன்னும் சுடர்கின்ற - இன்னும் எரிகின்ற, ஓமம் குண்டம் ஒப்பன - ஓம குண்டங்களை நிகர்ப்பன, பல்வேறு இவை காணீர் - பல்வேறான இவற்றைக் காண்பீராக.

நாமம்- அச்சம்; 'நாம வேற்காளை நளனென்பான்' (நள. 13); 'நாம யாழ்த்தேள்' (சுந்தர. 271); கோபம் நகை - வீரத்தெழுந்த வெகுளி நகை. 'வம்பியல் சிலையை நோக்கி வாய் மடித்துருத்து நக்கான்' (சுந்தர. 985); நாறுதல் - தோன்றுதல்; 'நாகம் வந்தடர்ப்பினு முணர்வு நாறுமோ' (சுந்தர. 674); 'நக்க செம்மணி நாறிய நீணிழல்' (சுந்தர. 270); பாம் - பரவும்; அ தொன்னீர் - அ பண்டறிசுட்டு; ஹோமம் என்ற வடசொல் ஓமம் என நின்றது. 'ஓம வேள்வியி னுறுபத முய்ப்பதும்' (யுத்த. 171).

பி - ம். 1. காலந், நாளிந்; நகை நின்றும்.
2. தெண்ணிர்.
3. வெங்கனலோடும், பெய்களலின்னும்.
4. வேறுவை, வேறவை. 14

3531. மின்னும் மோடை யாடல் வயப்போர் மிடல்வேழக்
கன்னம் மூலத் தற்றன வெண்சா மரைகாணீர்
மன்னும் மாநீர்த் தாமரை மானும் வதனத்த
அன்னம் மெல்லத் துஞ்சுவ வொக்கும் மவைகாணீர்.

'மின்னும் - ஒளி செய்கின்ற, ஓடை - நெற்றிப் பட்டத்தையும், ஆடல் - ஆடலையும் உடைய, வயம் போர் - வெற்றியுடன் கூடிய போரிலே, மிடல் - வலிமையைக் காட்டி நின்ற, வேழம் - யானை களின், கன்னம் மூலத்து - செவியின் அடிப்புறத்தினின்று, அற்றன - நீங்கி வெளிப்பட்டதான, வெண் சாமரை காணீர் - வெண் சாமரைகளைப் பாருங்கள்; மன்னும் - நிலைபெற்ற, மாநீர் - மிக்க நீரில் உள்ள, தாமரை மானும் - தாமரை மலரை நிகர்க்கும், (வீரர்களின்) வதனத்த - முகத்திற் படிந்த, அவை - அந்த வெண் சாமரைகள்; அன்னம் மெல்ல துஞ்சுவ ஒக்கும் - அன்னம் மெல்லத் துயில்வதை ஒக்கும், காணீர் - பாருங்கள்.

கன்ன மூலம் - செவியினடிப் பாகம்; வெண் சாம்மரைகள் வேழங்களின் செவியின் மேற்புறத்தில் கட்டப் பெற்றன கீழ் வீழ்ந்து கிடந்தன என்க. அன்னங்கட்கு வெண்சாமரை.

பி - ம். 1. பின்னும்; மதவேழ.
2. இற்றன, உற்றன; காண.
3. மன்னர் மன்னத், மன்னும் வாசத், மன்னர் மாளத்; வதனத்தால், வனமீதே.
4. அன்னம் பூவிற், பூமேற், மழுவில்; துஞ்சின; ஒக்கின்றன, ஒக் கின்றவை; பாரீர். 15

3532. ஒளின் முற்று துற்றுயர் வேழத் தொளிர்வெண்கோ
டாளின் முற்றுச் செம்புனல் வெள்ளத் தவைகாணீர்
கோளின் முற்றுச் செக்கரின் மேகக் குழுவின்கண்
நாளின் முற்று வெண்பிறை போலுந் நமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே! ஒளின் - வரிசையாக, முற்றுது - முற்றுகையிடாது, உற்று உயர் - (தனித் தனியே) பொருந்தி உயர்ந்த, வேழத்து - யானைகளின், ஒளிர் வெண்கோடு - விளங்குகின்ற வெள்ளிய கொம்புகள், ஆளின் முற்று - வீரர்களால் நிரம்பாத, செம்புனல் வெள்ளத்தவை - உதிரப் பெருக்கில் காணப் படுபவை, கோளின் - நீர் கொண்டு, முற்று - நிரம்பாத, செக்கரின் - செந்நிறமுள்ள, மேகம் குழுவின்கண் - மேகத் தொகுதியிற் காணப் பெறும், நாளின் முற்று - நாள் நிரம்பாத, வெண் பிறை போலும் - வெள்ளிய பிறை போன்று தோன்றும், காணீர் - பாருங்கள்.

உதிரம் படிந்ததினால் செந்நிறமுள்ள வேழங்களின் கொம்புகள் செக்கர் வானத்துக் காணப்படும் இளம் பிறை போலும் எனப் பட்டது. யானைகள் ஒன்றுகூடி வருமாயின் ஒன்றன் மேலொன்று விழ நேரும் ஆகலின், அதனைத் தவிர்க்க ஒளின் முற்றுது எனப் பட்டது. வீரர்கள் நிறைந்து அவர்களோடு யானையும் விரவி விழுந்து கிடப்பின், வேழங்களின் தந்தங்கள் காண்டற்கியலா தாகலின், 'ஆளின் முற்று' எனப்பட்டது. ஒளியின் என்பது ஒளின் என நின்றது. ஒளி - வரிசை. ஆள் - காலாள்' (யுத்த. அதிகாய. 115); 'கற்றடந் திண்டோளாளும்; (யுத்த. இரா. வதை. 13); நாளின் முற்று விளம்பிறை - மூன்று அல்லது ஏழுநாட் பிறைமதி. முற்றுத என்பது நான்கிடத்தும் ஈறு குறைந்தது. இச் செய்யுட்கண் திரிபு என்னும் சொல்லணி காண்க.

பி - ம். 1. வேளின், ஒளிம்; உற்றிகல்.
3. செருக்கண், செக்கருள்; குழிவிண்ணின்.
4. போல்வ.

16

3533 கொடியும் வில்லுங் கோலொடு
வேலுங் குவிதேருந்
துடியின் பாதக் குன்றின்
மிசைத்தோல் விசியின்கட்
டொடியும் வெய்யோர் கண்ணெரி
செல்ல வுடன்வெந்த
தடியுண் டாடிக் கூளி
தடிக்கின் றனகாணீர்.

'கொடியும் வில்லும் கோலொடு வேலும் குவி தேரும் - கொடி வில் அம்பு வேல் என்ற இவைகள் நிறைந்துள்ள தேரிலும், துடியின் பாதம் - துடியென்னும் பறையொத்த அடிகளையுடைய, குன்றின் மிசை - மலை போன்ற யானையின் மேல், தோல் விசியின் கட்டு - தோலாற் பிணிக்கப்பட்ட அம்பாரியினும், ஓடியும் - (இராம பாணத்தால் உயிர்) அழியப் பெற்றுத் தீர்ந்த, வெய்யோர் - தீயோரான இராக்கதரின், கண் எரி - விழிகளிலிருந்து கிளம்பிய நெருப்பு, செல்ல - சென்றதனால், உடன் வெந்த - ஒன்ருக வேக்காடுற்ற, தடி உண்டு - மாமிசத்தை யுட்கொண்டு, கூளி-பேய்கள், ஆடி - கூத்தாடி, தடிக்கின்றன-உடல்.பருப்பனவற்றை, காணீர் - பாருங்கள்.

துடி - குறிஞ்சி நிலத்துப் பறை. இங்கு அது யானையின் காலுக்குவமை. 'துடியடிக்கயந்தலை கலக்கிய' (கலிங்.11); குன்று - யானைக்கு இலக்கணை. விசித்தல் - இறுக்கிக் கட்டுதல். கட்டு - கட்டப்பட்ட அம்பாரி. ஓடிதல் - உயிரழிதல். கண் எரி - சினத்தின் விளைவு. தடி - ஊன்; 'ஊன் தடி பிறப்பினும்' (புற. நா. 74); கூளி - காளியின் ஏவலாள். தடியுண்டு தடிக்கின்றன என்ற இடத்துச் சொல் நயம் காண்க. தடிக்கின்றன - வினையாலணையும் பெயர்.

பி - ம். 1. கோலொடு தண்டும்.

2. தோல் விசுமஞ் சுட்டொடியின், தோறுவர்ச் சுட்டொடியின், தோல் விசியுஞ் சூட்டொடியின், தோல் வீசியின்.

3. சிந்த.

4. தடிக்கின்றவை.

17

3534. சகரம் முந்நீர்ச் செம்புனல்
வெள்ளந் தடுமாறு
மகரந் நன்மீன் வந்தன
கண்டு மனமுட்கிச்
சிகரம் மன்ன யாவைகொ
லென்னச் சிலநாணி
நகரம் நோக்கிச் செல்வன
காண்மின் னமரங்காள்.

'நமரங்காள் - நம்மவர்களே! சகரம் முந்நீர் - சகர புத்திரர்கள் அகழ்ந்ததான கடலுடன், செம்புனல் வெள்ளம் - உதிர நீர்ப் பெருக்கு, தடுமாறு - தடுமாறுவதனால், சில மகரம்-சில மகரமாகிய, நன்மீன் - பெரிய மீன்கள் இரத்த வெள்ளத்தில், வந்தன - வந்தன வற்றை, கண்டு - (வேழங்கள்) கண்ணுற்று, 'சிகரம் அன்ன யாவை கொல் - மலைச் சிகரத்தை நிகர்த்த இவை யாவையோ' என்ன - என்று, மனம் உட்கி - நெஞ்சில் அச்சங் கொண்டு, நாணி - வெட்கி, நகரம் நோக்கி செல்வன காண்மின் - தம்மிருப்பிடம் நோக்கிச் செல்வனவற்றைப் பாருங்கள்.

வேழங்கள் உருவிற் பெரியன; அவைகள்கூடத் தம்மினும் பெரிதாகக் காணப்பட்ட மகர மீன்களைக் கண்டு நாணினதாகக் கொள்க. சகரம் முந்நீர்: 'சகரர் தொட்டலால் சாகரம்' (பால. அகலிகை. 43); முந்நீர்: 'கடல் முந்நீர் விழவினெடியோன்' (புறநா. 9) இதன் உரையும், குறிப்புரையும் காண்க. தடுமாறு செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். மகர மீன்கள் உண்மையின் கடற்கு மகராலயம் என்று ஓர் பெயருண்டு. உட்குதல் - அஞ்சுதல்' 'உட்கப்படாஅர் ஒளியிழப்பர்' (குறள். 921).

பி - ம். 1. தடுமாறி, தடுமாற.
2. நன்மீன், வந்தது; காணு, காண்டும்.
3. யானை கொல்; நாவின்.

18

3535. விண்ணிற் பட்டார் வெற்புறழ் காயம் பலமென்மேல்
மண்ணிற் செல்வார் மேனியின் வீழ மடிவுற்றார்
எண்ணிற் றீரா வன்னவை தீரு மிடலில்லாக்
கண்ணிற் றீயார் விம்மி யுளைக்கும் படிகாணீர்.

'விண்ணில் பட்டார்-வானத்தில் இறந்து பட்டவரின், வெற்பு உறழ் - மலையை யொத்த, காயம் - உடல்கள், பல மென்மேல் - பல மேன்மேல், மண்ணில் செல்வார் - பூமியிற் செல்பவரின், மேனியின் வீழ மடிவுற்றார் - உடல்மீது வீழவே, (அவ்வாறு செல்பவர்கள்), உயிர் தளர்ந்தாராய், எண்ணில் தீரா - எண்ணி முடியாத, அன்னவை - அந்த உடல்களினின்றும், தீரும்மிடல் இல்லா - நீங்கும்

திறனற்று, கண்ணில் தீயார் - கண்ணினின்றும் தீப்பொறியைக் கக்குவாராய், விம்மி உளைக்கும்படி காணீர் - அழுது வருந்துகின்ற தன்மையைப் பாருங்கள்.

காயம் - உடல்; 'காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர்' 'காயமே யிது பொய்யடா காற்றடைத்த பையடா' (உடற்கூறு); மடிவுறுதல் - தளர்ந்து சோருதல். உளைத்தல் - வருந்துதல்; 'மாலை யென்னுயி ருளைப்பதும்' (கல்லாட. 70, 31). வானில் இறந்தவர் உடல் வீழ்ந்து தரையிற் செல்பவர் உயிர் குன்றினர் என்க.

பி - ம். 1. விண்ணிற் செல்வார்; வெம்புறழ்.
2. மேனியின்மீள.
3. நீவுமிடனல்லாக், நீருமிடமில்லாக்.
4. தோன்றூர்; உழக்கும். 19

3536. அச்சிற் றிண்டே ரானையின் மாமே லகன்வானின்
மொய்ச்சுச் சென்றூர் மொய்குரு தித்தா ரைகள் முட்ட
உச்சிச் சென்றூ னுயினும் வெய்யோ னுதயத்தின்
குச்சிச் சென்றூ னொத்துள னுகுங் குறிகாணீர்

'அச்சின் திண்தேர் - அச்சினையுடைய வலிய தேரின்மீதும், ஆனையின் மாமேல் - ஆனையின் மேலும் குதிரையின்மீதும், அகல் வானின் மொய்ச்சு சென்றூர் - அகன்ற ஆகாயத்தின் வழியாக நெருங்கிச் சென்றவரான இராக்கத வீரர்களின், மொய்குருதி தாரைகள் - அடர்ந்த உதிர ஒழுக்குகள், முட்ட - மேலே பாய்வதனுல், வெய்யோன் - சூரியன், உச்சி சென்றூன் ஆயினும் - உச்சிப்போதினையடைந்தானுயினும், உதயத்தின் குச்சி சென்றூன் ஒத்து உளன் ஆகும் குறிகாணீர் - உதயகிரியின் சிகரத்திற் சென்றூனையொத்துத் தோன்றும் குறியைப் பாருங்கள்.

அச்சு: தேர் உருளையின் நடுவில் அமைக்கும் அச்சு. மொய்த்து: மொய்ச்சு; இடைப்போலி. உதிரத்தாரை தன்மேல் பாய்ந்ததால் உச்சிக்காலத்துச் சூரியன், உதயகாலத்துச் சூரியன் போன்று காணப்பட்டான் என்பது கருத்து. உச்சியிற் செல்லும் கதிரோன் தூய வெள்ளொளியுடன் கூடியவன்; அவன் இப்பொழுது குருதிச் சார்பால் உதயசூரியன் ஒத்துச்சிவந்து காட்டினன் என்க. குச்சி: முகடு.

பி - ம். 1. மாமேற் காலாளின்.

2. மொய்க்குருதித் ; மூட.

4. ஒத்துளது. 20

3537. காருேய் மேனிக் கண்டகர் கண்டப் படுகாலை
ஆருே வென்ன விண்படர் செஞ்சோ ரியதாகி
வேருேர் நின்ற வெண்மதி செங்கேழ் நிறம்விம்மி
மாருேர் வெய்யோன் மண்டில மொக்கின் றதுகாணீர்.

'கால் தோய் மேனி - காற்றின் தன்மை வாய்ந்த (விரைந்து செல்லக்கூடிய) உடலினையுடைய, கண்டகர் - முட்போன்ற கொடிய பகைஞர், கண்டம் படுகாலை - துணிக்கப்படும்போது, விண்படர் செ சோரியது - விண்ணிற் பரவிய (அந்தச்) செம்புனலானது, ஆருே என்ன ஆகி - 'ஆருே' என்று கருதும்படி காணப்பட்டதனுல், வேறு நின்ற ஓர் வெள்மதி - வேருக நின்ற ஒப்பற்ற வெள்ளிய சந்திரன், செம்கேழ் நிறம்விம்மி - செந்நிறம் மிக்கு, மாறு - சந்திரனுக்கு மாருன, ஓர் வெய்யோன் - மண்டிலம் ஒக்கின்றது காணீர் - ஒரு சூரிய மண்டிலத்தை நிகர்த்து இருப்பதைப் பாருங்கள்.

கண்டகர் - முட்போன்றவர் எனவே விரோதிகள். கண்டகர் கண்டப்படு என்ற தொடரில் இணையெதுகை காண்க. கேழ்நிறம் : ஒரு பொருட் சொற்கள். விம்முதல் : நிறைதல் ; 'வில்லிலங்கு (படையோர் புடைவிம்ம' (யுத்த. 809); மாறு ஓர் வேறு ஓர் எனப்பிரிக்க.

பி - ம். 2. விண்டவர்.

3. வேருய் ; வெண்மணி ; விம்ம.

4. ஒக்கும்மவை, ஒக்கும் வகை. 21

வேறு

3538. வானனைய மண்ணனைய வளர்ந்தெழுந்த
பெருங்குருதி மகர வேலை
தானனைய் வுற்றெழும்பா ரவைதெளித்த
புதுமழையின் றுள்ளி தாங்கி

மீனனைய நறும்போதும் விரையருந்துஞ்
சிறைவண்டு நிறம்வே றெய்திக்
கானகமுங் கடிபொழிலு முறியீன்ற
போன்றொளிர்வ காண்மின் காண்மின்.

'வான் நனைய-வானம் நனையவும், மண் நனைய - பூமி நனையவும், வளர்ந்து எழுந்த - பெருகி எழுந்த, பெரு குருதி - பெரு உதிரத்தினால், மகர வேலை - கடலும், தான் நனைய - தான் நனைந்திடவும், உற்று எழும் - (இவ்வாறு பிணங்களினின்று) வெளிவருகின்ற, தெளித்த-தெளித்த, புதுமழையின் துள்ளி-புது மாரியின் துளியை, பாரவை - பூமியினிடங்கள், தாங்கி - தாங்குவதனால், மீன் அனைய நறு போதும்-நட்சத்திரங்கள் போன்று ஒளி செய்கின்ற நறுமணமுள்ள மலர்களும், விரை அருந்தும் - நறுமணமுள்ள தேனைப் பருகும், சிறை வண்டும் - சிறகுகளையுடைய வண்டுகளும், நிறம் வேறு எய்தி - வேற்று நிறம் அடையாநிற்க, கானகமும்-காட்டிடமும், கடிபொழிலும் - நறுமணமிக்க சோலைகளும், (தம்மீது பட்ட உதிரத்தால்), முறி ஈன்றபோன்று, ஒளிர்வ காண்மின் காண்மின்- தளிரையீன்றாற் போன்று விளங்குவதைப் பாருங்கள்.

வான் நனைய, மண் நனைய எனப்பிரிக்க. வளர்ந்த பெரும் என்பதனால், உதிரப்பெருக்கினை மிகுத்துக் கூறினர். பிணங்களினின்று பெருகிய உதிரம் பட்டு நட்சத்திரங்கள் போன்று மலர்களும் வண்டுகளுமே செந்நிறம் பெற்று விளங்கின என்க. விரை: நறுமணமுள்ள தாருக்கு இலக்கணை.

பி-ம். 1. னைந்தெழுந்த ; கொழுங்.
2. தானனைவுற்றெழும் பறவைச்சிறை ; துளியதாகி.
3. போதின் விரையரும்புங் கறை ; லேருகக்.
4. கானினமும், கானனமும் ; ஈன்றதெள. 22

3539. வரைபொருத மதயானை வளைமருப்பும்
கிளர்முத்து மணியும் வாரித்
திரைபொருது புறங்குவிப்பத் திறங்கொள்பணை
மரமுருட்டிச் சிறைப்புள் ளார்ப்ப

நுரைக்கொடியும் வெண்குடையுஞ் சாமரையு
மெனச்சுமந்து பிணத்தி னேன்மைக்
கரைபொருந்துங் கடன்மடுக்குங் கடுங்குருதிப்
பேராறு காண்மின் காண்மின்.

வரை பொருத - மலையுடன் போர் செய்த, மதம்யானை - மதங் கொண்ட வேழத்தின், வளை மருப்பும் - வளைந்த தந்தங்களும், கிளர்முத்தும் - விளங்குகின்ற நல் முத்துக்களும், மணியும் - மணிகளும் என்ற இவற்றை, வாரி - கவர்ந்துகொண்டு, திரை - அலைகள், பொருது-மோதி, புறம் குவிப்ப - ஒரு பக்கத்தில் குவிப்ப வும், திறம்கொள் - கூறுபாட்டைக்கொண்ட, பணை - கிளைகளை யுடைய, மரம் - மரத்தை, உருட்டி - உருட்டுதலால், சிறை புள் ஆர்ப்ப-சிறைகளுடைய பறவைகள் பேரொலி செய்யவும், கொடியும் வெண்குடையும், சாமரையும்-கொடிகளையும் வெண் குடைகளையும் வெண் சாமரைகளையும், நுரை என சுமந்து - நுரையென்னும்படி பாரத்தை, தாங்கிக்கொண்டு, பிணத்தின் - பிணங்களினுலான, நோன்மை-வலிமையோடுங்கூடிய கரை பொருந்தும்-கரையமைந்த, கடல் மடுக்கும்-கடலில் செலுத்தும், கடுகுருதி பேர் ஆறு காண்மின் காண்மின் - விரைந்து செல்லும் உதிரப் பேராற்றைக் காணுங்கள் காணுங்கள்.

பணை : கிளை, வெண்கொடிகளும் குடைகளும் சாமரையும் நுரைபோன்றிருக்கும் எனக் கூறப்பட்டது. கடல் மடுக்கும் - கடலிலே சென்று தள்ளும், இதில் குருதிப் பேராற்றின் செயல் வருணிக்கப்பட்டுள்ளது. இத்துடன் 'முத்தீர்த்துப் பொன் திரட்டி' (கிட்கிந்தா. 740); எனத் தொடங்கும் செய்யுளை ஒப்பு நோக்குக.

பா - ம். 1. மதவானை ; துணைமருப்பும், வளர் மருப்புங்கிளை.

2. பிறங்குவிப்ப.

3. நுரைக்குடையும் ; சாமரமும் ; பிணத்தினுண்மை.

4. கரைபொருது ; பேர்யாறு.

23

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

பரியினங்கள் கரநீக்கி யொழுகுமவை
பிறவுநிகர் பருக்கக் காண்மின்
விரிபுனலின் யாமைபோல் வீரர்படை
யெழும்பரிசை விதப்பக் காண்மின்
அரியபெருங் குருதியினில் இடங்கரே
கொன்றிட நின்றழைக்கும் யானை
கரியவனை வரவழைக்கும் கயக்கயத்தை
யொக்கின்ற காண்மின் காண்மின்.

3540. கைக்குன்றப் பெருங்கரைய நிருதர்புயக்
கற்செறிந்த கதலிக் கானம்
மொய்க்கின்ற பரித்திரைய முரட்கரிக்கைக்
கோண்மாவ முளரிக் கானின்
நெய்க்கின்ற வாண்முகத்த விழுங்குடரின்
பாசடைய நிணமேற் சேற்ற
உய்க்கின்ற வுதிரநிறக் களங்குளங்க
ளுலப்பிறந்த வுவையுங் காண்மின்.

'கை - கையையுடைய, குன்றம் - மலைபோன்ற யானையாகிய, பெருகரைய - பெரிய கரையையுடையனவும், நிருதர் - இராக்கதர் களுடைய, புயம் - புயங்களாகிய, கல் செறிந்த - கற்கள் செறிந்தனவும், கதலி கானம் மொய்க்கின்ற - கொடிகளின் திரள் ஒன்றிய, பரிதிரைய - குதிரைகளாகிய அலைகளை யுடையனவும், முரண்- மாறுபடும், கரிகை - யானைக் கைகளாகிய, கோள்மாவ - முதலை களைக் கொண்டனவும், முளரி கானின் - தாமரைக் காடுபோல, நெய்க்கின்ற - நெய்ப்பினைக்கொண்ட, வாள் முகத்த - ஒளி தங்கும் முகத்தை யுடையனவும், (ஒள்ளிய முகங்களாகிய தாமரைக் காட்டைப் போன்றனவும்), விழும் - நழுவுகின்ற, குடரின் - குட ராகிய, பசுமை அடைய - பாசிலையை யுடையனவும், நிணம்மேல் சேற்ற - நிணமாகிய மேலான சேற்றையுடையனவுமான, உய்க் கின்ற - (தன்னில் அகப்பட்டோரை) உள்ளிழுக்கின்ற, நிறம் களம் உதிரம் குளங்கள் - செந்நிறமுள்ள களங்களாகிய இரத்தக் குளங் கள், உலப்பு இறந்த - அளவிறந்தன; உவையும் காண்மின் - தோன்றுவனவற்றை உதுக்காண்மின்,

முன் செய்யுளில் உதிர ஆற்றைக் கூறினர். இதில் களமே குளம் போன்றதென்றார்; குளத்தில் உறுப்புகளாகிய கரை, கதலிக்காடு, அலை, முதலை, தாமரை, பாசடை, சேறு, புனல் என்ற யாவும் முறையே காணலாம். யானை - கரை, அரக்கருடைய புயங்கள் கல் அணை, குதிரை அலை, யானைக் கை முதலை, முகங்கள் தாமரைக்காடு, குடர் பாசிலை, நிணம் சேறு, களம் உதிரக் குளம். முற்றுருவகவணி.

பி - ம். 1. பயக்காற் செறிந்த; பதனங்காப்ப.
2. நிரையும், கரியின்; குரைமாவும்.
3. மெய்க்கின்ற; சேற்றில்.
4. உதிரநீர்க்குளங்கள் உலப்பில. 24

3541. நெடும்படைவா ணுஞ்சிலுழு நிணச்சேற்றி
னுதிரநீர் நிறைந்த காப்பிற்
கடும்பகடு படிதோய்ந்த கடும்பரம்பி
னினமள்ளர் கலந்த கையிற்
படுங்கமல மலர்நாறு முடிபரந்த
பெருங்கிடக்கைப் பரந்த பண்ணைத்
தடம்பணையி னறும்பழனந் தழுவியதே
யெனப்பொலியுந் தகையுங் காண்மின்.

'நெடு வாள் படை - நீண்ட வாட் படையாகிய, நாஞ்சில் - கலப்பையினால், உழு - உழுகின்ற, நிணம் சேற்றின் - நிணமாகிய சேற்றிலே, உதிரம் நீர் - குருதி நீராகிய, நிறைந்த காப்பின் - நிறைந்த நீர்த்தேக்கத்தினையும், கடு - விரைவுடன் கூடிய, பகடு - வேழங்களாகிய எருமைக்கடாக்கள், படி - படிந்து, தோய்ந்த - தோயப்பெற்றதாகி, பரந்த - வேகமாகப் பரவுதலையுடைய, இனம் மள்ளர் - இனமாகிய வீரராகிய, கடும்பரம்பின் - கடிய பரம்படிக்கும் தொழிலினையுடைய, பண்ணை - கூட்டமான உழவர்கள், கலந்த - பரவிய, கையில் -(இரு) புறத்தினையும் (பெற்று), படும் - தோன்றிய, கமலம் மலர் - தாமரை மலரின், நாறும் - மணம் கமழ்கின்ற. முடி - தலைகளாகிய நாற்றுமுடிகள், பரந்த - பரவிக்கிடந்த, பெரு கிடக்கை - பெரிய அந்தப் போர்க்களம், பரந்த பண்ணை - மிகுந்த மகளிர் கூட்டத்தினையுடைய, தடம்பணையின் - பெரிய வயல்களைக்

கொண்ட, நறுபழனம் - நறிய மருத நிலத்தின் தன்மையை, தழுவியதே என - தழுவியதேயென, பொலியும் தகையும் காண்மின் - விளங்குகின்ற தன்மையும் பாருங்கள்.

இதில் போர்க்களம் மருதநிலமாக உருவகம் செய்யப்பட்டது. நெடும் பகடாகிய எருமை, கடும்பரம்பின் இனமள்ளராகிய கடும் பரம்பின் இனமள்ளர், நாறுகின்ற முடியாகிய நாற்றுமுடி என்க. கலப்பை, உழும் சேறும் நீர்த்தேக்கம், எருமைக் கிடாக்கிடந்த பரம்பழிக்கும் தொழிலைக்கொண்ட மள்ளர் பரந்த பக்கம், நாறுமுடி பரந்த இருக்கையும், பண்ணை மகளிர் கூட்டமும் மருத நிலத்துக் காணும் காட்சிகள்; வாட்படையும், நிணமும், உதிரத் தேக்கமும், கடாக்களிறு படிந்த பரம்பினின் மள்ளர் பரந்த பக்கமும், தாமரை மலர் நாறு முடிபரந்த கிடக்கையும் இப்போர்க்களத்தும் உள்ளன என்க.

பி - ம். 1. நாஞ்சிலுழ.

2. படும்பகடு; கரும்பரம்பின்; பரந்த; கையுட்.

3. மலர்நாற்று; கலந்தபண்ணை.

4. பொலிந்த; தன்மை. 25

3542. வெளிறீர்த்த வரைபுரையு மிடலரக்க
ருடல்விழவும் வீரன் வில்லின்
ஒளிறீர்த்த முழுநெடுநா ணுருமேறு
பலபடவு முலகங் கீண்டு
நளிறீர்த்த நாகபுரம் புக்கிழிந்த
பகழிவழி நதியி னேடிக்
களிறீர்த்துப் புகமண்டுங் கருங்குருதித்
தடஞ்சுழிகள் காண்மின் காண்மின்.

'வெளில் - கட்டுத்தறியை, தீர்த்த-முறித்த, வரை புரையும் - யானையை ஒத்த, மிடல் அரக்கர் - வலிய இராக்கதரின், உடல் விழவும் - உடல் விழவும், வீரன் - வீரனுன இராமபிரானுடைய, ஒளிறு ஈர்த்த - விளங்குகின்ற (செவிவரையில்) இழுக்கப்பெற்ற, வில்லின் முழு நெடு நாண்-வில்லினது முழு நெடு நாண் கயிற்ருல், பல உரும் ஏறுபடவும் - பல இடியேறு போன்ற ஒலி எழவும்,

உலகம் கீண்டு - உலகத்தினைக் கிழித்து, நளில் - நடுவில், தீர்த்த - பிளவுபட்ட, நாகபுரம் - பாதாளத்தில், புக்கு இழிந்த - போய்ப் பாய்ந்த, பகழி வழி - (இராம பாணங்களினுற், பெருகியதாய், நதியின் ஓடி - ஆறுபோல ஓடி, களிறு ஈர்த்து - யானைகளை இழுத்துக்கொண்டு, புகமண்டும் - நெருக்கச் செய்கின்ற, கருகுருதி தடசுழிகள் - மிக்க உதிரப் பெருக்கின் பெரும் சுழிகளை, காண்மின் காண்மின் - பாருங்கள் பாருங்கள்.

இராமபிரான் வாளிகள் புறப்படுங்கால் நாணொலி பரப்பி அரக்கரை வீழ்த்து, இவ்வுலகத்தைப் பிளந்து பாதாளத்திற் புகும் என்று புகழ்ந்தவாறு; இச்சரங்கள் சேனைகளின் சரீரத்தைப் பிளக்குங்கால், அவ்வழிகளில் எழுந்த உதிரப்பெருக்கு ஆறுக ஓடி வேழங்களையும் தம்மிடத்து அகப்படுத்திச் செல்லுங்கால், அந்தக் குருதி நதியில் பெருஞ்சுழிகள் தோன்றும் எனப் பட்டது, வரை : மலைபோன்ற அரக்கர்க்கு இலக்கணை. நாணின் குணத்தொனி இடிபோன்றதென்க. நள்ளில் - நடுவில். அது நளில் என நின்றது. கருங்குருதி - பெரும் உதிரவெள்ளம் கருமை - பெருமை.

பி - ம். 1. வரைபுரைவ மிடலரக்கருடல், பைபுரவி மிடலாட்கறுடல்; வில்லிற்று.

2. ஒளிநீர்த்த முறநெடு.

3. நாகர்புரம்; தொறு நதியினேடி, தொறுந்நீயினேடி, விழிதோறும் போய்.

4. கடுங்நுருதி.



3543. கைத்தலமுங் காத்திரமுங் கருங்கழுத்து
நெடும்புயமு புரமுங் கண்டித்
தெய்த்திலபோய்த் திசைகடோறு மிருநிலத்தைக்
கிழித்திழிந்த தென்னி னல்லால்
மத்தகரி வயமாவின் வாணிருதர்
பெருங்கடலின் மற்றிவ் வாளி
தைத்துளதாய் நின்றதென வொன்றேயுங்
காண்பரிய தகையுங் காண்மின்.

'கைதலமும் - கையினிடமும், காத்திரமும் - முன்னங்காலும், கரு கழுத்தும் - கரிய கழுத்தும்; நெடு புயமும் - நீண்ட புயமும், உரமும் - மார்பும், கண்டித்து - துண்டித்து, எய்த்தில - (அவ்வளவிலும்) அமையாதனவாய், திசைகள்தொறும் போய் - எல்லாத் திக்குகளிலும் சென்று, இரு நிலத்தை கிழித்து இழிந்தது என்னின் அல்லால் - பெரிய பூமியைப் பிளந்துகொண்டு இழிந்தது என்று சொன்னாற் சொல்லக் கூடுமன்றி, மத்த கரி - மதம் கொண்ட வேழங்களிலும், வயம் மாவின் - வெற்றி பொருந்திய குதிரைகளிலும், வாள் நிருதர் பெரு கடலின் - வாளேந்திய நிருதராகிய பெருங்கடலிலும், இவ்வாளி ஒன்றேயும் - இவ்வாளி ஒன்றேனும், தைத்து உளதாய் நின்றது என - தைத்து நின்றது என்று, காண்பரிய தகையும் காண்மின் - காண்டற்கரிய சிறப்பினையும் பாருங்கள். மற்று : அசை.

இராமபிரான் எய்த அம்புகள் பட்ட உடல்களில் ஊடுருவிச் சென்றனவேயன்றி, அவற்றில் ஒன்றேனும் உடல்களில் தங்கவில்லை என்பது கருத்து. கைத்தலம் - (ஒப்பு) 'கைந்நிலை நெல்லியங்கனியிற் காட்டுகேன்' (சுந்தர. 676);); 'கைத்தல நிறை கனியப்பமொடவல் பொரி' (திருப்புகழ். விநாயகர் துதி); 'காத்திரம் முன்னம்கால். கண்டித்தல் - துணித்தல்' எய்த்தல் - இளைத்தல்; இருநிலம் - பூமி; 'இரு நிலம் பிளக்கவேர் வீழ்க்கும்மே' (வெற்றி வேற்கை.);

பி - ம். 1. காற்றரமும்; கடுங்கண்டித்து, கழுத்து நெடும் புயமுரமுங்கடிது போக.

2. எத்திசைப்போய்த்; குழித்திழிந்த.

3. மைத்தகளிற்றினமாவின், மைக்களிற்றின் வயமாவின், பேருடலில்; தெரியில் வாளி, மற்றின வாளி.

4. தைந்தன வானின்ற வென, தைத்துளவாய் நின்றதென. 27

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

என்றுரைத்துயர் வான்பிறப் பெய்திய
வென்றி வெஞ்சின வேழங்கள் தம்மொடும்
துன்று வாசித் தொகைகளும் கேண்மெனு
நின்ற வீடணன் தானு நிகழ்த்துவான்.

## வேறு.

3544. குமுத நாறு மதத்தன கூற்றன
சமுத ரோடு மடிந்தன சார்தரும்
திமிர மாவன்ன செய்கைய வித்திறம்
அமிர்தின் வந்தன வையிரு கோடியால்.

'குமுதம் நாறும் மதத்தன - குமுத மலர் போன்று கமழும் மதத்தை யுடையனவும், கூற்றன - யமனை ஒத்தனவும், சமுதரோடு மடிந்தன - பாகருடன் பட்டனவும், சார்தரும் - அணைகின்ற, திமிரம்மா அன்ன செய்கைய - இருள் நிறத்தவான கரும்பன்றியின் தொழிலையுடையனவுமான, இ திறம் - இத் தன்மை வாய்க்கப் பெற்ற, ஐயிறு கோடி - பத்துக்கோடி யானைகள், அமிர்தின் வந்தன - (பாற்கடலில்) அமுதத்துடன் வந்தனவாம். ஆல் : அசை.

ஸம்மிதர் சமுதர் என வந்தது. இருளி கருமா என்பன பன்றியின் பெயர்கள் ஆகலின் அதனைத் திமிரமா என்றார். திமிரம் - இருட்டு. சார்தரு : 'சார்தரா சார்தரும் நோய்' (குறள். 359).

பி - ம். 1. முகத்தன ; மையன.
2. முடிந்தன ; தாள்தரும், சார்க்கரும்.
3. திமிர்தமாலன்னவின்னன, திமிதமாலன்னவின்னன.
4. கோடியே.

28

3545. ஏறு நான்முகன் வேள்வி யெழுந்தன
ஊறு மாரியு மோங்கலை யோதமும்
மாறு மாயினு மாமத மாய்வரும்
ஆறு மாறில வாறிரு கோடியால்.

'ஊறும் மாரியும் - ஊற்றெடுக்கும் மழையும், ஓங்கு அலை ஓதமும் - உயர்ந்தெழும் அலையையுடைய கடலும், மாறும் ஆயினும் - நீர் மாறினாலும், மாமதமாய் வரும் - (அதற்குப் பிரதியாய்) மிக்க மத நீராய்ப் பெருகுகின்ற, ஆறுமாறில - ஆறுமாறப் பெறாதன வான, ஆறிரு கோடி - பன்னிரண்டு கோடி வேழங்கள், ஏறும் -

ஏற்றமுள்ள, நான்முகன் வேள்வி எழுந்தன - பிரமதேவன் இயற்றிய யாகத்தில் தோன்றியவை. ஆல் : அசை.

ஏறும் - புகழ் ஏறப் பெற்ற, மழையினும் கடல் நீரினும் மிக்கது யானையின் மதநீர் எனப்பட்டது. உயர்வு நவிற்சியணி. நீர் வறப்பினும் மதநீர் வற்றாது என்றது காண்க.

பி - ம். 2. ஓங்கிலையேதக.

3. மாமத மாறல.

4. கோடியே. 29

3546. உயிர்வ றந்து முதிரம் வறந்துதம்
மயர்வ றந்து மதமற வாதன
புயல வன்றிசைப் போர்மத வானையின்
இயல்ப ரம்பரை யேழிரு கோடியால்.

'(இங்குக் காணப்பெறும்)' ஏழிரு கோடி - பதினான்கு கோடி வேழங்கள், உயிர் வறந்தும் உதிரம் வறந்து - உயிர் வற்றினாலும் உடற்கணுள்ள உதிரம் வறண்டாலும், தம்மயர் வறந்தும் - தமது மதக் களிப்பு வற்றப் பெற்றாலும், மதம் அறவாதன - மதநீர் வற்றப் பெறாதனவாய், புயலவன் - மேகத்திற்குரியவனான இந்திரனுடைய, திசை - திக்கில், (கிழக்குத் திசையில்) இருக்கும், போர் மதம் யானையின் இயல் - போர் புரியும் இயல்புள்ள, பரம்பரை - பரம்பரையைச் சேர்ந்தன. ஆல் : அசை.

மயர் - மயக்கம்; 'மயர்வற மதிநலம்' (திருவாய். 1 : 1); மதம் அறவாதன என்க. புயலவன்-மேகநாதன் ஆன இந்திரன், அவன் திசை : இந்திர திசையெனும் கீழ்த்திசை.

பி - ம். 1. உயிர் மறந்து; மறந்துதம், மறந்துக.

4. ஏழெழு; கோடியே.

30

3547. கொடாது நிற்றலிற் கொற்ற நெடுந்திசை
எடாது நிற்பன நாட்ட மிமைப்பில
வடாது தீக்கின் மதவரை யின்வழிக்
கடாமு கத்த முளரிக் கணக்கவால்.

'கொடாது நிற்றலில் - (நீங்கள் இந்தத் திசைக் காவல் செய்யுங்கள்) என்று பிரமன் கொடாததனால், கொற்றம் நெடுதிசை - வெற்றி பொருந்திய பெரிய திக்குகளை, எடாது நிற்பன - தம் தோளில் சுமவாது நிற்பனவும், நாட்டம் இமைப்பு இல - கண்கள் இமையாதனவுமாகிய, வடாது திக்கின் - வடக்குத் திசைக்குரிய, மதம் வரையின் வழி - (சார்வ பௌமம் என்னும் பெயர் பூண்ட), யானையின் வழியாகத் தோன்றிய, கடாம் முகத்த - மத நீர்ப் பெருக்கை முகத்திடைக் கொண்டன இனங்கள், முளரி கணக்க - பதுமம் என்ற பேரெண்ணினவாம். ஆல் : அசை.

வடக்குள்ளது வடாது - மரூஉ. மதவரை - வெளிப்படை. கடாம் - மதம். முளரி - பதுமம் என்ற பேரெண். வலியில், திக்கு யானைகட்குப் பின்னிடுவனவல்ல - திசைகளைத் தாங்கவும் வல்லன. ஆயினும் திசைமுகன் நியமியாமையின் இவை திசை யானைகளாக இல்லை என்பது கருத்து. (ஒப்பு); 'பின்னை ரிந்திர னிலாமை யாற் பேரதிகாயன் ; (யுத்த. 507).

பி - ம். 2. எடாதுமிட்டன.
3. திக்கினிற் கைவரையின் ; விழிக். 31

3548. வான வர்க்கிறை வன்றிறை தந்தன
ஆன வர்க்கமோ ராயிர கோடியுந்
தான வர்க்கிறை வன்றிறை தந்தன
ஏன வர்க்கங் கணக்கில விவ்வெலாம்.

(இவையனைத்தும்); வானவர்க்கு இறைவன் திறை தந்தன ஆன - தேவேந்திரன் கப்பமாகத் தந்தனவான, வர்க்கம் - களிற்று வருக்கம், ஓராயிரம் கோடி - ஓராயிர கோடியாம்; இவ் எலாம் உம் - இவையெல்லாமும், தானவர்க்கு இறைவன் - தானவர்க்குத் தலைவன், திறை தந்தன (ஆன) - கப்பமாகத் தந்தனவான, ஏனவர்க்கம் (இவ் எல்லாம்) கணக்கில - ஆனை வர்க்கம் இவை எல்லாம் எண்ணற்றன.

வானவர்க்கிறை - இந்திரன். திறை - கப்பம்; 'திறையோடு மாசிறைஞ்சும்' (பால. குலமுறை. 24); வர்க்கம் - வட சொல். தனு வழியில் வந்தவர் தானவர் - தத்திதாந்தப் பதம். ஏனம் - யானை. தெலுங்கில் யானையை ஏனம் என்பர். 'ஏனுகதோனு தெச்சி

யேனுது பலுகுனு, நலுபு நலுபேகானி தெலுபுகாது' (வேமன பத்தியம்); கம்பநாடர் காவியத்தில் சில தெலுங்குச் சொற்கள் ஆங்காங்கு வந்துள்ளமை முன்னர்க் காட்டப்பட்டது.

பி - ம். 1. இறை தந்தன, நிறை தந்தவாறு, நிறைதந்தவற்று.

2. வர்க்கமிவ், வர்க்கமது.

4. ஆணை; கணக்கில விதெலாம், கணக்கிலே யாமரோ. 35

3549. பாற்க டற்பண் டமிழ்தம் பயந்தநாள்
ஆர்த்தெ ழுந்தன வாயிர மாயிரம்
மாற்க ணப்பரி யிங்கிவை மாறுவை
மேற்கின் வேலே வருணனை வென்றவால்.

'பண்டு - முன்பு, பால் கடல் அமிழ்தம் பயந்த நாள் - திருப்பாற் கடல் அமிர்தத்தைத் தோற்றுவித்த நாளில், ஆர்த்து எழுந்தன - ஆர்ப்பரித்து எழுந்தனவும், ஆயிரம் ஆயிரம் - ஆயிரம் ஆயிரக்கணக் கினவுமான, மால் கணப்பரி - பெருந் தொகுதியின் குதிரைகளான, இங்கு இவை - இங்கே காணப்படும் இவை; மாறு உவை - இவற் றிற்கு நேர் எதிரே நிற்பன, மேற்கின் வேலே - மேலைக் கடலிலுள்ள, வருணனை வென்ற - வருணனை முறியடித்துப் பெற்றவை. ஆல்: அசை.

திருப்பாற் கடல் கடைந்த காலத்து எழுந்தவைகளுள் பரி களும் உண்டு - உச்சைச்ச்ரவம் என்ற குதிரை அவற்றுள் ஒன்றென்பர். மால் கணம் - பெருங்கூட்டம். மாறு உவை எனப் பிரிக்க.

பி - ம். 1. எழுந்த நாள்.

3. மற்றுவை, மாறு செய். 33

3550. இருநி திக்கிழ வன்னிழந் தேகின
அரிய வப்பரி யாயிர மாயிரம்
விரிசி னத்திகல் விஞ்சையர் வேந்தனைப்
பொருது பற்றிய தாமரை போலுமால்.

'இருநிதி கிழவன் - பெரிய நிதிக்கு உரியவனுன குபேரன், இழந்து ஏகின - கைவிட்டுச் சென்றனவாய், அரிய - அரியனவான,

அ பரி - அந்தக் குதிரைகள், ஆயிரம் ஆயிரம் - பல்லாயிரமாகும்; விரி - பரந்த, சினத்து - வெகுளியுடன், இகல் - வீரத்தினையும் உடைய, விஞ்சையர் வேந்தனை - வித்தியாதர மன்னனை, பொருது - எதிர்த்து வென்று, பற்றிய - கைப்பற்றியவை, தாமரை போலும் - பதுமம் என்னும் கணக்கின போலும்'. ஆல்: அசை.

இருநிதிக் கிழவன் - குபேரன்; இருநிதி சங்கநிதி பதுமநிதியுமாம். பரிக்கு அருமை - எளிதில் கிடைப்பரிதாதல். வித்தியாதரர் என்ற பெயர் விஞ்சையர் என வந்தது. தாமரை - பதுமம் என்ற பேரெண்.

பி - ப். 1. இகழ்ந்தேகின.
2. வரவயப்பரி.
3. விரி சினத்திவை; வேந்தரைப். 134

3522 முதல் 3550 வரை படுகளக் காட்சியாக வீடணன் வருணித்தது.

## இவ்வாறு வீடணன் காட்டுகையில் பின்னர்ப் பார்த்துக் கொள்வோமென்று யாவரும் இராமனிடத்துச் செல்லத் தொடங்குதல்

3551. என்று காணினுங் காட்டினு மீதிறைக்
குன்று காணினுங் கோளில தாதலால்
நின்று காணுது நேமியி னுனுழைச்
சென்று காண்டுமென் றேகினர் செவ்வியோர்.

என்று - இவ்வாறு, 'காணினும் - நாங்களே கண்டாலும், காட்டினும் - (நீ காட்டக்) கண்டாலும், ஈது - இந்த மூலபலம், குன்று இறை காணினும் - மலையரசனை இமயத்தினைக் கண்டாலும், கோள் இலது - காணக்கூடிய கொள்கையை யுடையதன்று; ஆதலால், நின்று காணுதும் - நிதானித்துக் கண்ணுறுவோம்; (இப்போது) நேமியினுன் உழை - ஆழிப்படை தாங்கியுள்ள திருமாலின் அவ்தாரமான இராமபிரானிடம், சென்று காண்டும் - போய் அவனைக்கண்ணுறுவோம்', என்று - என்று சொல்லி, செவ்வியோர் - நற்பண்புள்ள வாநர வீரர், ஏகினர் - சென்றனர்.

குன்றிறை - மலையரசன். நேமியினுன் - இராமபிரான்.

பி - ம். 1. ஈதிரைக்.

2. கோதிலதாதலால்.

3. குன்றுங் ; காணெனும் ; கோது. 35

## யாவரும் இராமபிரானருகே அவன் போர்த் திறமையை வியந்துகொண்டிருத்தல்

3552. ஆரி யற்றொழு தாங்கவன் பாங்கரும்
போரி யற்கை நினைந்தெழு பொம்மலார்
பேரு யிர்ப்பொ டிருந்தனர் பின்புறு
காரி யத்தி னிலைமை கருதுவார்.

ஆரியன் - இராமபிரானை, தொழுது - வணங்கி, ஆங்கு - அங்கே, அவன் பாங்கு - அவன் அண்மையில், அரு - அருமையான, போர் இயற்கை நினைந்து - போர்த் திறத்தின் இயல்பினை யுணர்ந்து, எழு பொம்மலார் - எழுகின்ற வருத்தத்தினை யுடையவராய், பேர் உயிர்ப்பொடு இருந்தனர் - பெருமூச்சினுடன் இருந்தவராய், பின்பு உறு - பின்பு நிகழவிருக்கும், காரியத்தின் நிலைமை கருதுவார் - காரியத்தின் நிலைமையை நினைவாராயினர்.

ஆரியன் - இந்தப் பெயரால் இராமபிரான் கூறப்படுவதை இந் நூலிற் பல இடங்களிலும் காணலாம். 'சூரியன் மரபிற்குமோர் தொல்மறு, ஆரியன் பிறந்தாக்கினை' (கிட்கிந்தா. 316) ; ஆங் கவன் பாங்கரும் என்ற இடத்து இணையெதுகை காண்க. பொம்மல் - வருத்தம் ; 'முற்றுஞ் சுற்றிய பொம்மலோதை' (யுத்த. இரா. வதை. 5) ; காரியம் - செயல் ; 'காரியமாக வன்றேயாகுக' (யுத்த. 422) ; 'காரியமுண்மை யுன்னைக் காணிய வந்தேனென்றாள்' (ஆரணிய. 262) ; இப் படலத்தும் இதனை அடுத்துவரும் இராவணன் களம்காண் படலத்தும் உள்ள செய்திகள் முதல் நூலில் இல்லை. இவை கம்பநாடர் கற்பனைகளே. இதில் கண்ட உவமைகளும், உருவகங்களும் மிகவும் சிறந்துள்ளமை காண்க.

பி - ம். 1. ஆங்கரும். 36

வாநரர் களங்காண் படலம் முற்றும்.

---

# 33. இராவணன் களங்காண் படலம்

இது இராவணன் படுகளத்தைக் காணுவதைக் கூறும் படலம் என விரியும்.

## இலங்கையூர்ச் சென்ற இராவணன் வெற்றியின் மகிழ்ந்திருத்தல்

3553. அலக்க ணெய்தி யமர ரழிந்திட
உலக்க வானர வீரரை யோட்டியவ்
விலக்கு வன்றனை வீட்டி யிராவணன்
துலக்க மெய்தினன் தோமில் களிப்பினே.

அமரர் - தேவர்கள், அலக்கண் எய்தி அழிந்திட - துன்புற்றுக் கெடுமாறு, வானர வீரரை - குரங்கு வீரர்களை, உலக்க - வலி கெடுமாறு, ஓட்டி - துரத்தியும், அவ் இலக்குவன் தனை வீட்டி - அந்த இலக்குவனைக் கொன்றும், தோம் இல் களிப்பினே - குற்ற மற்ற மகிழ்ச்சியுடன், இராவணன் துலக்கம் எய்தினன் - இரா வணன் விளக்கமுற்றிருந்தான். ஏ - அசை.

அலக்கண் - துன்பம்: 'அரசன் மற்றவ ரலக்கணே யுரைசெய வறிந்தான்' (சுந்தர. 806), 'அலக்க ணெய்துவ தணிய துண்டு' (சுந்தா. 297); உலக்க - வற்ற அல்லது அழிய; 'உலக்க வின்னுயிர் குடித்தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249); 'மல்லெலாமகல வோட்டி, மானமென்பதனை வீட்டி' (குசேல. 1 : 66); தோம்-குற்றம்; தோடம் என்பதன் தொகுத்தல் என்பர்; 'தோமறு கடிகையும்' (சிலப். 10, 98); துலக்கம்: 'வென்றோர் விளக்கம்' (தொல். புறத். 8).

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை. இதனை மிகைப் பாடலாக்கும் மர்ரே பதிப்பு.

## தனக்கு அன்போடு போரில் உதவியவருக்கு விருந்தளிக்க இராவணன் கட்டளையிடுதல்

3554. பொருந்து போர்ப்பெருங் கோலத்திற் போர்த்தொழில்
வருந்தி னர்க்குத்த மன்பினின் வந்தவர்
அருந்து தற்கமை வாயின வாக்குவான்
விருந்த மைக்க மிகுகின்ற வேட்கையான்.

தம் அன்பினின் வந்தவர்க்கு - தம்முடைய அன்பினால் வந்தவராகி, பொருந்து - பொருந்திய, பெரும் போர் கோலத்தில் - பெருமை சான்ற போர்க் கோலத்துடன், போர் தொழில் வருந்தினர்க்கு - போர்ச் செயலில் உழன்றவர்கட்கு, அருந்துதற்கு அமைவு ஆயின ஆக்குவான் - உண்பதற்குப் பொருந்தியவற்றைப் பக்குவம் செய்வதற்காக, (இராவணன்), விருந்து அமைக்க மிகுகின்ற வேட்கையான் - விருந்து அமைத்தற்கு மிகுகின்ற ஆவல் உடையவனானான்.

போர்ப் பெருங்கோலம்; 'போர்ப் பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கென' (அயோத்தி. கிளைகண்டு. 50); போர்த் தொழில்; 'போர்த் தொழிற் சிரமம் போக்கி' (யுத்த. 3062); தம் அன்பினில் வந்தவர் - கூலிப் படைபோல் அன்றி உண்மையாகவே உயிரையும் கொடுத்துதவி புரியவேண்டும் என்று வந்த படை வீரர். அருந்துதற்கமைவாயின - அறுசுவை யுண்டி. ஆக்குவான் - வானீற்று வினையெச்சம். மூன்றாமடி முற்றுமோனை. வேட்கையான் என்பதைக் குளகமாக, அடுத்த செய்யுட்கண் உள்ள 'வருகென' என்பதனோடு இணைத்தலுமாம். வேட்கை - விருப்பம் கை - தொழிற் பெயர் விகுதி. 'காணிய நின்ற வேட்கை' 'வேட்கை யொருதலையுள்ளுதல் மெலிதல்' (தொல். களவி. 9).

பி - ம். 1. பொருந்து பொற்பெருங் கோயிலுட்.
2. வருந்தி நன்குற்ற; வந்தவர்க்கு.
3. அமைவாயுற; வாக்கிநல்.
4. வமைகின்ற.

3555. வான நாட்டை வருகென வல்விரைந்
தேனை நாட்டவ ரோடும்வந் தெய்தினர்
ஆன நாட்டந்த போக மமைத்தீர்மற்
றூன நாட்டி னிழத்தி ருயிரென்றான்.

வானம் நாட்டை - வான நாட்டிலுள்ளவரை, 'வல் விரைந்து - மிகவும் வேகமாக, வருகென - வருக' என்று இராவணன் கூறிய அளவில், ஏனை நாட்டவரோடும் - மற்ற தானவர் நாட்டில் உள்ளாரோடும், வந்து எய்தினர் - வந்து அடைந்தார்கள்; (இராவணன் அவரை நோக்கி); 'அந்த நாட்டு ஆன போகம் அமைத்தீர் - அந்த வான நாட்டில் உள்ள துய்ப்பதற்கான போகத்தை (இங்குள்ள) வீரர்கட்கு அமைப்பீராக; மற்று - மாறாக, ஊனம் நாட்டின் - குறைவு நிலைபெறும்படி செய்யின், உயிர் இழத்திர் - உயிரை இழப்பீர்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான்.

வான நாடு ஏனை நாடு - இடவாகு பெயராக அவற்றின்கண் உள்ளாரைக் குறித்தது. வருக என என்பதில் அகர ஈறு தொக்கது. அந்த நாட்டு ஆன போகம் என மொழி மாற்றாகச் செய்யப்பட்டது. அந்த - பண்டறிசுட்டு. ஊனம் - குறைவு. 'ஊன வில்லிறுத்து' (யுத்த. 120). நாட்டுதல் - நிலைபெறச் செய்தல்.

பி - ம். 2. ஏன; எய்தலும்.
3. மான நாட்டந்த, ஆன நாட்டத்த; அமைந்த.
4. இழந்தீர், இழப்பிருயிர். 8

## விண்ணுலகத்துப் போகப் பொருள்களுடன் அரமகளிர் வருதல்

3556. நறவு மூனு நவையற நல்லன
பிறவு மாடையுஞ் சாந்தமும் பெய்ம்மலர்த்
திறமு நானப் புனலொடு சேக்கையும்
புறமு முள்ளும் நிறையப் புகுந்தவால்.

நல்லன - நல்லனவான, நறவும் ஊனும் - கள்ளும் மாமிசமும், பிறவும் - பிற உணவுப் பொருள்களும், ஆடையும் - உடைகளும், சாந்தமும் - சந்தனமும், பெய் மலர் திறமும் - பெய்த மலர் வகை

களும், நானம் புனலொடு சேக்கையும் - நீராட்டிற்குரிய நீரும் படுக்கையும், புறமும் உள்ளும் - (அரண்மனையின்) புறத்தும் அகத்தும், நிறைய - நிறையுமாறு, நவையற புகுந்த - எவ்விதக் குற்றமும் இல்லாதபடி புகுந்தன. ஆல் : அசை.

நவை - குற்றம்; 'நவையனைத்தும் துறந்தவன்' (யுத்த. இரா. வதை. 190); நவையறு பாகை' (யுத்த. 1224); நானம் - ஸ்நாநம் என்ற வட சொல்லின் திரிபு. சேக்கை - படுக்கை; 'தின்று தின்றுமிழ் கின்றுரிற்றுயருக்கே சேக்கையானுள்' (யுத்த. 1595).

பி - ம். 1. நறவு முனும்.

3. நிறவும்; செய்கையின்.

4. புகுந்தநால்.

3557 நான நெய்ந்நன் குரைத்து நறும்புனல்
ஆன கோதற வாட்டி யமுதொடும்
பான மூட்டிச் சயனம் பரப்பவும்
வான நாடிய ரியாவரும் வந்தனர்.

நானம் நெய் - நீராடும் தைலத்தை, நன்கு உரைத்து - நன்றாகத் தேய்த்து, நறும் புனல் - நல்ல மணமுள்ள நீரால், ஆன - உடற்கணின்ற, கோது அற ஆட்டி - அழுக்கறுமாறு நீராட்டி, அமுதொடும் - உண்டற்குரிய உணவுகளுடனே, பானம் ஊட்டி - பருகுவதற்குரியனவும் உண்பித்து, சயனம் பரப்பவும் - படுக்கையும் விரிக்கும்படி, வான நாடியர் யாவரும் வந்தனர் - விண்ணாட்டு மகளிர் அனைவரும் வந்தார்கள்.

நான நெய் - நீராடும் வாசனைத் தைலம். உரைத்து-தேய்த்து; 'உரைத்துரைத்தோடி' (பால. வரைக். 8); நறும்புனல் : 'நதியின் பிழையன்று நறுபுனலின்மை' (அயோத்தி. நகர்நீ. 134); ஊட்டுதல்- பரிந்துண்பித்தல் : 'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லாள் ஊட்ட' (நாலடி. நிலையாமை); சயனம் - படுக்கை; வடசொல். 'சயனமாதர் கலவி தலைத்தரும்' (கிட்கிந்தா. 738); சயனம் பரப்புதல் - அவையல் கிளவி.

பி-ம். 1. நான நெய்யுரைப்பாரும்.

2. தோதற ; அட்டி, வாக்கி.

3. பானமுற்று முழுதும் பரப்பவும், பானமுட்டி படிசில் பரப்புவான்.

4. மான ; நாட்டியர் ; வந்தவால், வந்ததால், வந்தரால். 5

## அரக்க வீரர் போகம் நுகர்தல்

3558. பாடு வார்கள் பயில்நடம் பாவகத்
தாடு வார்க ளமளியி லன்புறக்
கூடு வார்கண் முதலுங் குறைவறந்
தேடி ளுரெனப் பண்ணையிற் சேர்ந்தவால்.

(சில வாநர மகளிர்), பாடுவார்கள் - பாடுவார்கள் ; (சிலர் தாம்) பயில் நடம் பாவகத்து ஆடுவார்கள் - பழகிய நடனத்தை மனக் குறிப்புடன் நடித்துக் காட்டுவார்கள், (சிலர்) அமளியில் - படுக்கையில், அன்பு உற கூடுவார்கள் - அன்பு மிகுமாறு கூடுவார்கள் ; முதலும் குறைவு அற தேடினர் என - முதற் பொருளும் குறைவில்லாதபடி தேடினவர்க்கும் போல, பண்ணையில் - அம் மகளிர் கூட்டத்தில், சேர்ந்த - பலவகை இன்பங்களும் கூடின. ஆல் - அசை.

பாவகம் - மனக் குறிப்பு ; 'மூவகை யுலகந்தோறும் முறையினின் றேவல் செய்வார், பாவக மின்னதென்று தெரிகிலர்' (யுத்த. 1219) ; அமளி - படுக்கை ; 'ஆயிர கோடியானைப் பெரும்பிணத் தமளி மேலான்' (யுத்த. 2647) முதல் : 'முதலிலார்க் கூதியமில்லை' (குறள். 449) ; பண்ணை - மகளிர்க் கூட்டம் ; 'பண்ணையினால் நோக்கி' (பிங்) ; (பால. பூக்கொய். 5) ; முதற் பொருள் குறையாமல் இலாபம் மேன்மேல் உண்டாகத் துய்ப்பவர் போன்று, அரக்க வீரர் பல்வகைப் போகமும் துய்த்தனர் என்க. முதலும் என்ற உம்மையால் இலாபமும் என்பது பெறப்பட்டது. பொருளும் போகமும் ஏராளமாகத் துய்த்தற்கு முன்பிறப்பில் செய்த புண்ணியமாகிய முதலைக் கொண்டவர் என்க. 'முற்றொடர்பிற் செய்த முறைமையால் வந்த செல்வம்' (பட்டினத்: நெஞ்சொடு: 5) என்றது காண்க.

பி - ம். 1. பயில் நெடும்.

2. இன்புறக்.

3. கூடுவார் முதலியாருங் குறைவற, கூடுவார்கள் முதல குறையற.

4. தேடினன், தேடுவார்; சேர்ந்ததால். 6

3559. அரச ராதி யடியவ ரந்தமா
வரைசெய் மேனி யிராக்கதர் வந்துளார்
விரைவி னிந்திர போகம் விளைவுறக்
கரையி லாத பெருவளங் கண்ணினர்.

அரசர் ஆதி - அரசர்கள் முதலாக, அடியவர் அந்தமா - ஏவற்பணியாற்றும் அவர்கள் ஈருக, வந்துளார் - வந்தடைந்தவரான, வரைசெய் மேனி இராக்கதர் - மலையை நிகர்த்த உடலையுடைய அரக்கர்கள், விரைவின் இந்திர போகம் விளைவு உற - வெகு சீக்கிரத்தில் இந்திரபோகம் தமக்கு விளைந்ததனால், கரை இலாத பெரு வளம் கண்ணினர் - எல்லை காண்பரிய அந்தப் பெரும் போகத்தைக் கருதித் துய்த்தனர்.

அந்தமா: அந்தமாக என்பது ஈறு கெட்டது. வரைசெய்; செய் உவம உருபு. வந்துளார் இராக்கதர் என மாற்றுக. பெரு வளம் - இன்பவளம்.

பி - ம். 1. அந்தமால்.

2. வந்தவால்.

3. விரைசினிந்திரன், விரைசெயிந்திரன்; விளைதர, விழைத.

4. கரைசெலாத, கரைசெயாத; கண்ணினன். 7

## மூலபலம் அழிந்ததை இராவணனிடம் வந்து தூதுவர் கூறுதல்

3560. இன்ன தன்மை யமைத்த விராக்கதர்
மன்னன் மாடுவந் தெய்தி வணங்கினர்
அன்ன சேனை களப்பட்ட வாறெலாம்
துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்.

இன்ன தன்மை அமைத்த - இத்தகைய நிலையை அமைத்த, இராக்கதர் மன்னன் மாடு - அரக்கர்கோனை இராவணனிடம், வந்து எய்தி - வந்தடைந்து, வணங்கினர் - பணிந்தவராகி, அன்ன சேனை - அந்த அரக்கர்படை, களப்பட்ட ஆறு எலாம் - போர்க் களத்தில் மடிந்தொழிந்த வகைகள் எல்லாவற்றையும், (அந்த இராவணனுடைய) செவி இடை - செவியிற் படும்படி, துன்னு தூதர் சொல்லுவார் - அவனுடைய அணுக்கப்பணியாளராக (ஐம்பெருங் குழுவில் ஒருவராக அமைந்த) தூதுவர் கூற லானார்கள்.

வணங்கினர் : முற்றெச்சம். களப்பட : 'கன்னின்றானெந்தை கணவன் களப்பட்டான்' (பு. வெ. மா. 8 : 22).

பி . ம். 1. அமைந்த.

2. வந்தேத்தி.

3. சேனைகள் பட்ட தவ்வாறெலாம், சேனைகள் பட்ட வாறெல்லாம்.

4. செவிமுதற் சொல்லுவார். 6

3561. நடுங்கு கின்ற வுடலினர் நாவுலர்ந்
தொடுங்கு கின்ற வுயிர்ப்பின ருள்ளழிந்
திடுங்கு கின்ற விழியின ரேங்கினர்
பிடுங்கு கின்ற வுரையினர் பேசுவார்.

நடுங்குகின்ற உடலினர் - நடுங்குகின்ற உடலினை உடைய வரும், நா உலர்ந்து - நாக்கு வறண்டு, ஒடுங்குகின்ற உயிர்ப்பினர் - தளர்கின்ற சுவாசத்தை யுடையவரும், உள் அழிந்து - மனம் அழிதலால், இடுங்குகின்ற விழியினர் - இடுங்குகின்ற கண்களை யுடையவரும், பிடுங்குகின்ற உரையினர் - (எளிதில் வெளிவராமை யால்) வலிந்து எடுத்துரைக்கும் சொற்களை யுடையவருமாகி, ஏங்கினர் பேசுவார் - ஏக்கம் கொண்டு (அத்தூதுவர்) கூற லானார்கள்.

நடுங்குகின்ற உடலினர், ஒடுங்குகின்ற உயிர்ப்பினர், இடுங்கு கின்ற விழியினர், பிடுங்குகின்ற உரையினர் இவை வடமொழி நடை. உள் அழிதல் - மனம் கெடுதல். வறுமையினாலோ பெருந்துயரத்தாலோ கண்கள் இடுங்கும் என்ப; இவைகொண்டே

இடுக்கண் என்பதை இடுங்குகண் என்று பிரித்துக் கூறுவர். இடுங்குகின்ற விழி: வழக்கு. அச்சத்தால், தாராளமாகச் சொற்கள் வெளிவராமையின், பிடுங்குகின்ற உரையினர் எனப்பட்டது.

பி - ம். 2. உள்ளீழிந்து, அலேந்து.
3. ஏங்கிமேல், ஏங்கின்மேற்.
4. மொழியினர்; உணர்வினர். 9

வேறு

3562 இன்றியார் விருந்திங் குண்பா ரிகன்முகத் திமையோர் [தந்த
வென்றியா யேவச் சென்ற வாயிர வெள்ளச் சேனை
நின்றுளார் புறத்தா ராக விராமன்கை நிமிர்ந்த சாபம்
ஒன்றினுல் நான்கு மூன்று கடிகையி னுலந்த தென்றார்.

'இகல் முகத்து-போரினிடத்து, இமையோர் தந்த வென்றியாய்-வானவரால் தரப்பட்ட வெற்றியுடன் கூடியவனே! (தேவர்களை வென்றவனே!), ஏவ சென்ற - நீ கட்டளையிட்டனுப்பப் போருக்குச் சென்ற, ஆயிரம் வெள்ளம் சேனை - ஆயிர வெள்ளம் சேனை, புறத்தார் ஆக - போர்ப்புறத்தினிடத்து நின்றதாக, இராமன் கை - இராமபிரான் கையில், நிமிர்ந்த சாபம் ஒன்றினுல் - உயர்ந்த வில் ஒன்றினுல், நான்கு மூன்று கடிகையின் உலந்தது - ஏழு நாழிகை யளவில் அழிந்தது', (இங்ஙனம் ஆக), இன்று இங்கு விருந்துண்பார் யார் - இவ்விடத்தில் விருந்து உண்பவர் யாவரோ (அவர்களே) நின்றுளார் - எஞ்சி நிலைத்தவர்கள், 'என்றார் - என்று (தூதர்) கூறினர்.

இன்றியார்: குற்றியலிகரம். இகல் முகம் - போர் முகம். இறுதியடிக்கு (ஒப்பு): 'வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏற்றினன் விண்ணில் என்றாள்' (ஆரணிய. 617). சாபம்: 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு); 'சாவ முண்டெனக் காருயிர் தந்ததால்' (சுந்தர. 627). கடிகை: 'முடிபுனை கடிகைநாள் மொழிமி னென்றனன்' (அயோத்தி. மந்தரை. 1).

பி - ம். 1. இன்றிரா ; இமையோர் ஆந்த.

2. வெள்ளம் சேனை.

3. நின்றது புறத்தாக ; நெடிய சாபம்.

4. இரண்டு மூன்று ; உலைந்தது. 10

## தூதுவர் மகிழ்ச்சி கொண்டாடுதற்கு உரியகாலம் அன்று எனல்

3563. வலிக்கடன் வானு ளோரைக் கொண்டுநீ வகுத்த போகம்
கலிக்கட னளிப்ப னென்று நிருதர்க்குக் கருதி னுயேல்
பலிக்கட னளிக்கற் பாலை யல்லதுன் குலத்தின் பாலோர்
ஒலிக்கட லுலகத் தில்லை யூருளா ருளரே யுள்ளார்.

வலி கடன் - (நீ உன்) வலியின் முறையால், வானுளோரை கொண்டு - வானவரைக் கொண்டு, வகுத்த போகம் - பலவகையாக வகுத்த போகத்தை, நிருதர்க்கு - அரக்கர்க்கு, கலி கடன் அளிப்பன் என்று - மகிழ்ச்சியால் மேற்கொண்ட 'கடமையாகத் தருவேன் என்று, நீ கருதினுயேல் - நீ நினைவாயானால், (அதற்கு இது தருணம் அன்று); ஊர் உளார் உளரே உள்ளார் - ஊரின்கண் உள்ளவர்தாம் உயிருடன் இருக்கின்றனர் ; அல்லது - அவர் அன்றி, உன் குலத்தின் பாலோர் - உன் குலத்தைச் சார்ந்தவர், ஒலி கடல் உலகத்து இல்லை - ஆரவாரிக்கின்ற கடல் சூழ்ந்த உலகத்தில் இல்லை; (ஆதலின் இறந்தவர்க்கு), பலி கடன் அளிக்கல் பாலை - பலியாகக் கடனைச் செய்வதற்கு உரியை அன்றி (உன் குலத்தைச் சேர்ந்தோர்க்குக் கொடுக்க இயலாது என்றும் அத்தூதுவர் பகர்ந்தார்).

வலிக்கடன் - வலிமை காரணமாக மேற்கொண்ட கடமை. கலி - மகிழ்ச்சி. பலிக்கடன் : இறந்தார் பொருட்டுச் செய்யப் பெறும் பிரபூதபலி முதலியன ; இதனைப் 'பெருஞ்சோற்று மிகு பதம்' (புறநா : 2). ஒலிக்கடல் - ஆர்கலி. ஊர் - இலங்கையூர். போருக்குச் செல்லாது ஊருக்குள் உள்ளவரே உயிருடன் எஞ்சியுள்ளனர் ; ஏனைய நிருதர் மாய்ந்து ஒழிந்தனர். இந் நிலையில் இறந்தவர் பொருட்டுப் பிண்டங்களையும் பிரபூத பலியையுமே நீ இனி அளிக்கவேண்டியவன் அன்றி, தேவர்களைக்

கொண்டு அரக்கரைப் போகம் நுகர்விக்க முயல்வது முறையன்று என்றனர் தூதுவர்.

பி-ம். 1. கடம்; வருத்தப் போகம், வகுத்த புன்கம்.
2. அளிப்பதென்று, கழிப்பானென்று; கருதினுயே.
3. அனமக்கார் வல்லை; பாலர்.
4. உளாரேயிங் குள்ளார். 11

## இராவணன் திகைப்பும், ஐயமும்

3564. ஈட்டரு முவகை யீட்டி யிருந்தவ னிசைத்த மாற்றம்
கேட்டலும் வெகுளி யோடு துணுக்கமு மிழவுங் கிட்டி
ஊட்டரக் குண்ட செங்கண் நெருப்புக வுயிர்ப்பு வீங்கத்
தீட்டிய படிவமென்னத் தோற்றினன் திகைத்த நெஞ்சன்.

ஈட்ட அரும் உவகை ஈட்டியிருந்தவன் - (பிறரால்) தேடியடைய முடியாத மகிழ்ச்சியையுற்றிருந்தவனான இராவணன், இசைத்த மாற்றம் கேட்டலும்-தூதுவர் பகர்ந்த சொற்களைக்கேட்ட அளவில், வெகுளியோடு - சினத்துடன், துணுக்கமும் - அச்சமும், இழவும் - துன்பமும், கிட்டி - அடையப்பெற்று, ஊட்டு அரக்கு உண்ட செம் கண்-செவ்வரக்கு ஊட்டப்பெற்றாற்போன்ற, செந்நிறமான விழிகளினின்று, நெருப்பு உக - தீப்பொறிகள் சிதற, உயிர்ப்பு வீங்க - பெருமூச்சு எறிய, திகைத்த நெஞ்சன் - திகைப்புற்ற மனத்தனாய், தீட்டிய படிவம் என்ன - வரையப்பட்ட ஓவியம் போன்று, தோற்றினன் - காணப்பட்டான்.

இசைத்த: தூதுவர் இசைத்த; பல மெய்ப்பாடுகள் ஒருங்கே நிகழ்ந்தன என்பர். 'வெகுளியொடு துணுக்கமும் இழவும் எனப்பட்டது. சிறுமானுடர் இழைத்த கொலைச் செயலைக் கண்டு வெகுளி, இன்னும் என்ன நேருமோ என்ற துணுக்கம், பெருவாரியாக அரக்கரை இழக்க நேர்ந்ததாகிய இழவு என்க. ஊட்டரக்கு - செவ்வரக்கு; 'ஊட்டரக்கூட்டிய வனைய செங்கணன்' யுத்த. 3060); இயற்கையாகவே அரக்கர்க்குச் சிவந்த கண்கள்; இங்கு வெகுளியால் மிக்குச் சிவந்து காட்டினவாதலின் 'ஊட்டரக்கூட்டிய' எனப்பட்டது. நெருப்பு உகுதல், உயிர்ப்பு வீங்குதல், கண்கள் சிவப்பேறுதல் மனத்திகைப்பு என்ற இவை

சீற்றத்தின் விளைவுகள். செயலற்ற நிலையைத் தெரிப்பான் தீட்டியபடிவம் என்னத் தோற்றினன் எனப்பட்டது. (ஒப்பு) 'எழுதிய படிவமொத்தெய்துவான் தனை' (அயோத்தி. கிளைகண்டு. 49); படிவம்: உருவம்.

பி - ம். 1. உரைத்த; இசைத்த.
2. இழிவும் கிட்ட.
3. ஊட்டரக்கனைய. 12

3565. என்னினும் வலிய ரான விராக்கத ரியாரும் வீயார்
உன்னினு முலப்பி லாதா ருவரியின் மணலி னீள்வார்
பின்னொரு பெயரு மின்றி மாண்டன ரென்று சொன்ன
இந்நிலை யிதுவோ பொய்ம்மை விளம்பினீர் போலு
[மென்றான்.

'என்னினும் வலியர் ஆன இராக்கதர் யாரும் வீயார் - என்னைக் காட்டிலும் வன்மை வாய்ந்தவரான (மூலபலத்துச் சென்ற) அரக்கர்கள் எவரும் இறவார்; உன்னினும் - (உள்ளத்தால்) கருதுவோம் எனினும், உலப்பு இலாதார் - அளத்தற்கு இயலாதவண்ணம், உவரியின் மணலின் நீள்வார் - கடல் மணலினும் அதிகமாவர்; (அத்தகையோரில்) பின் ஒரு பெயரும் இன்றி - பின் ஒருவர்கூட இல்லாமல், மாண்டனர் என்று சொன்ன - இறந்துபட்டனர் என்று உரைக்கின்ற, இ நிலை இதுவோ - இந்த (அவசமான) நிலைமையாகிய இதுவோ நிகழ்ந்தது; பொய்ம்மை விளம்பினீர் போலும் - பொய்யுரையே பகர்ந்தீர் போலும்', என்றான் - என்று இராவணன் (ஐயம் கொண்டு) உரைத்தான்.

உலப்பிலாமை - அளத்தற்கருமை; 'உலப்பிலா வானந்தமாய தேனினைச் சொரிந்து' (திருவாச. பிடித்து. 9) உவரி-கடல்; காரணக் குறி. மணலின் - இன் ஐந்தாம் வேற்றுமை உருபு. (ஒப்பு) பொருள் பொய்ம்மை 'பொய்ம்மையும் வாய்ம்மையிடத்த' (குறள். 292); போலும் - ஒப்பில் போலி.

பி - ம். 1. யாண்டும்.
2. மணலின் மேலார்.
3. மாண்டிறப்பிறந்தோன் செய்த, மாண்டனரென்று பேசும்.
4. விளம்பினர், விளம்புதிர்; விரைவின். 13

3566. கேட்டய லிருந்த மாலி யீதொரு கீழ்மைத் தாமோ
ஓட்டுறு தூதர் பொய்யே யுரைப்பரோ வுலகம் யாவும்
வீட்டுவ திமைப்பி னன்றே வீங்கெரி விரிந்த வெல்லாம்
மாட்டுவ னொருவ னன்றே யிறுதியின் மனத்தா லென்றான்.

கேட்டு - (இச் சொற்களைச்) செவிக்கொண்டு, அயல் இருந்த மாலி - அருகிலிருந்த மாலியவான்; 'ஈது ஒரு கீழ்மைத்து ஆமோ - (மூலபலமனைத்தும் இராமன் கொன்றான் என்ற) இச்செய்தி இகழ்ந்து, ஐயுறுதற்குரிய ஓர் செயல் ஆகுமோ? (இன்று) ஓட்டுறு தூதர் பொய்யே உரைப்பரோ - (நிகழ்ந்ததை) ஓடிவந்து பகர்ந்த தூதுவர் பொய்யுரை பகர்வரோ? உலகம் யாவும் விரிந்த எல்லாம் - உலகு எங்கும் பரந்துள்ள பொருள் அனைத்தையும், இறுதியின் - ஊழியின் முடிவில், மனத்தால் - (தன் மனச்) சங்கற்பத்தால், மாட்டுவன் ஒருவன் அன்றே - அழிக்க எண்ணுபவனான சங்கார மூர்த்தி தான் ஒருவனாகவே, வீங்கு எரி - மிக்கெழுந்து பரவும் ஊழித்தீயினைக் கொண்டு, இமைப்பின் நன்றே வீட்டுவது - கண்ணிமைப் பொழுதில் ஒன்றும் விடாமல் அழிப்பது', என்றான் - என்று கூறினான். ஓகாரம்: எதிர்மறைப்பொருள்.

மாலி - மாலியவான்; மாட்டுதல் - அழித்தல்; மனத்தால் - சங்கற்ப மாத்திரையால்; 'பேரூழியில் சராசரமனைத்தும் தன் சங்கற்பமாத்திரையாலேயே அழிப்பவன் சர்வசங்கார கடவுள்; இராமபிரானும் அவனன்றி வேறல்லன். அவனே மூலபலத்தையறவே அழித்தான் என்றால் அஃது ஓர் பெரிய காரியமோ? சங்கித்தற்குரியதோ? நீ தூதுவர் சொன்னதை மெய்யெனவே கோடல்தகும்' என்றான் மாலியவான்.

பி - ம். 1. இருந்து; கிழமைத்தாமோ.
3. எரிவிரிந்ததென்ன.
4 மனத்தாலன்றே.

14

3567. அளப்பரு முலகம் யாவு
மளித்துக்காத் தழிக்கின் றான்தன்
உளப்பெருந் தகைமை தன்னு
லொருவனென் றுண்மை வேதங்

கிளப்பது கேட்டு மன்றே
யரவின்மேற் கிடந்து மேனுள்
முளைத்தபே ரிராம னென்ற
வீடணன் மொழி பொய்த்தாமோ.

'தன் உளம் பெருதகைமை தன்னுல்-தனதுமனத்தின் பெருந் தகுதியைக்கொண்டு, (மனச்சங்கற்பத்தினுல்), அளப்பரும் உலகம் யாவும் - அளவிடற்கரிய உலகனைத்தையும், அளித்து காத்து அழிக்கின்ருன் - படைத்து காத்துச் சங்கரிக்கின்றவன், ஒருவன் - ஒப்பில்லாதவன், என்று - என்று, உண்மை வேதம் கிளப்பது கேட்டும் அன்றே - சத்தியமான மறைகள் பகர்வதைச் செவிக் கொண்டுள்ளோம் அல்லவோ? (அப்பரம் பொருள் பாற்கடலில்) மேனுள் அரவின்மேல் கிடந்து - முற்காலத்தில் ஆதிசேடனுகிய பாயல்மீது கிடந்த திருக்கோலத்துடன் காட்சியளித்து, (இப் பொழுது) முளைத்த - இங்குத் தோன்றிய, பேர் இராமன்-பெருமை சான்ற இராமபிரான்,' என்ற-என்று மொழிந்த, வீடணன் மொழி பொய்த்து ஆமோ-விபீடணுழ்வானின் வார்த்தை பொய்யாகுமோ? ஆமோ: ஓகாரம் எதிர்மறை.

அளித்துக் காத்து அழித்தல்: இறைவனுடைய முத்தொழில் இவைகள் உயிர்கள் உய்யும் பொருட்டே கடவுள் மேற்கொள்வது. 'உலகம் யாவையுந் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும நீக்கலும்' (பால. கடவுள்.); உளம் பெரும்தகைமை: சங்கற்பம்; இச் சாமாத்திரத்தால் அனைத்தையும் செய்வது. முதலிரண்டடிகட்கு 'தன்னின் முன்னிய பொருளிலா வொருதனித்தலைவன்' (யுத்த. 122). உண்மை வேதம்: 'நால் வேத நெறி திரியினும்' (புறநா. 2); என்றது காண்க. வேதம் கிளப்பது கேட்டும் என்று இராவணனை உளப்படுத்திக் கூறியது, இராவணன் வேதம் வல்லவனுதலின்; 'ஐயன் வேத மாயிரம் வல்லான்' (சுந்தர. 483); என்றது காண்க. வேதம் கிளப்பது; எழுதாக்கிளவி என்று ஓர் பெயர் வேதத்துக் குள்ளமை காண்க. அன்று ஏ:ஈற்றசை; தேற்றமுமாம். வீடணன் மொழி. யுத்த. 96—108 காண்க. 'எம்பிரானிருவராய, அன்னவர் தம்மொடும் வானரத் தலைவரா யனுகி நின்ருர், மன்னு நம் பகைஞராம்' (யுத்த. 109).

பி ம். 1. அமைத்துக் ; அழிக்கின்றரும்.

2. பருத்தகைமை, பருந்தன்மை, பெருந்தன்மை ; உண்மையென்று.

3. கிளப்பதும், கிளப்புறக் ; கேட்டி ; அநந்தன்மேற் கிளந்து. 15

3568. ஒன்றிடி னதனை யுண்ணு
முலகத்தி னுயிர்க்கொன் ருத
நின்றன வெல்லாம் பெய்தா
லுடனுங்கு நெருப்புங் காண்டும்
குன்ருெடு மரனும் புல்லும்
பல்லுயிர்க் குழுவுங் கொல்லும்
வன்றிறற் காற்றுங் காண்டும்
வலிக்கொரு வரம்பு முண்டோ.

ஒன்று இடின் - ஒன்றை (த் தன்னுள்) இட்டால், அதனை உண்ணும் - அதனை உண்ணுவதான, உலகத்தின் உயிர்க்கு - இவ்வுலகத்துயிர்க்கு, ஒன்ருத - உண்ணுதற் கொவ்வாதனவாய், நின்றன எல்லாம் பெய்தால் - இருந்தவை யெல்லாவற்றையும் போகட்டாலும். (அவை அனைத்தையும்), உடன் நுங்கும் - உடனடியாக விழுங்கவல்ல, நெருப்பும் காண்டும் - தீயையும் பார்த்திருக்கின்ரோம் ; குன்ருெடு - குன்றுடன், மரனும் புல்லும் பல் உயிர் குழுவும் - மரனையும் புல்லையும் பல உயிர் வர்க்கங்களையும், கொல்லும் - அழிக்கின்ற, வல்திறல் காற்றும் காண்டும் - மிக்க வன்மைவாய்ந்த காற்றினையும், கண்டுள்ளோம்; (ஆகவே) வலிக்கு ஒரு வரம்பு உண்டோ - (உண்மையான) வலிக்கு ஓர் எல்லை உண்டோ ? இல்லை என்றபடி.

பெய்தல்: 'பெய்திறனெல்லாம் பெய்து பேசினன்' (யுத்த. 1374); வன்திறற் காற்று: 'நீரும் நீர்தரு நெருப்பும் வன்காற்றும்' (கிட்கிந்தா. 289); உலகில் உள்ள உயிர்கள் உண்டற்குரிய பொருளைத்தான் உண்ணும். ஆனல் இத்தன்மைக்கு மாருக, எதையும் அழிக்கும் சேர்ந்தாரைக் கொல்லும் நெருப்பையும் குன்றுமரம் முதலியவற்றை ஒழிக்கவல்ல காற்றையும் கண்டுள்ளோம்; ஆகவே இன்ன இடத்து இன்ன ஆற்றல் உண்டு என்று துணிந்து கூறற்கில்லை. இதுகொண்டே உருவத்தால் மனிதரேனும் அரக்கர்படை யனைத்தையும் வென்று அழிக்கவல்லவர் இராம

இலக்குவர் எனப்பட்டது. காற்றும்: என்ற உம்மைகொண்டு படைக்கப்பெற்ற உலகம் ஊழியின் அழியுங்கால்; நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், தீ காற்றிலும்: ஒடுங்கியழியும் என்ற உண்மையும் காண்க. வேற்றுப்பொருள்வைப்பணி. பிறிதுமொழிதல் என்றும் கூறுவர்.

பி-ம். 1. உலகை; உலகத்தினுயிர்க்கொன்ருக; உலகத்துளுயிரான்ருேநி.
2. பொய்தானுடனுரு.
3. குன்ருெடு மானும்; உயிர்க்குலமும்.
4. வரம்புண்டாமோ. 16

முதலடி, 'ஒன்றிடிலதனை யுண்ணு முலகத்தை விறகென்ருேத' என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது.

3569. பட்டது முண்டே யுன்னை
யிந்திரச் செல்வம் பற்று
விட்டது மெய்ம்மை யைய
மீண்டொரு வினையு மில்லைக்
கெட்ட துன் பொருட்டினுலே
நின்னுடைக் கேளி ரெல்லாஞ்
சிட்டது செய்தி யென்ரு
னதற்கவன் சீற்றஞ் செய்தான்.

'உன்னை இந்திர செல்வம் பட்டதும் உண்டு - உன்னை இந்திரனுடைய செல்வம் பொருந்திய காலமும் உண்டு; பற்று விட்டது - (அது இப்போது உன்னைப்) பற்றுதலை யொழிந்தது, மெய்ம்மை - இது உண்மை; ஐய - ஐயனே! மீண்டு ஒரு வினையும் இல்லை - இனி மீளவும் செய்தற்கு எந்தச் செயலுமில்லை; உன் பொருட்டினுலே - உன்காரணமாகவே, நின் உடை கேளிர் எல்லாம் கெட்டது - உன்னுடைய உறவினர் அனைவரும் கெட்டழிந்தனர்; (ஆகவே), சிட்டது - சிரேட்டற்குரிய செயலையே, செய்தி - புரிவாயாக', என்ருன் - என்று பகர்ந்தான் மாலியவான்; அதற்கு - அவ்வாறு அவன் பகர்ந்தது கேட்டு, அவன் - அந்த இராவணன், சீற்றம் செய்தான் - கோபம் கொண்டான். ஏ - அசை.

படுதல் - பொருந்துதல், இந்திரச் செல்வம் - சக்கரச் செல்வம்; செல்வம் பற்றுவிட்டது - செல்வம் விட்டகன்றது; உன்பொருட்டினாலே நின்னுடைக் கேளிரெல்லாம் கெட்டது; 'புத்திரர் குருக்கள் நின் பொருவில் கேண்மையர், மித்திர ரடைந்துளோர் மெலியர் வன்மையோர், இத்தனைபேரையு மிராமன் வெஞ்சரம், சித்திரவதைசெயக் கண்டு தீர்தியோ' (யுத்த. 317); என்று வீடணன் கூறியது காண்க. 'ஒப்பருந் திருவு நீங்கி யுறவொடு முலக்கவுன்னித், தப்புதியறத்தை யேழாய் தருமத்தைக் காமியாதே' (சுந்தர. 460); என்பது சானகி கூற்று. கேளிர் - உறவினர் அடிக்கடி யோக க்ஷேமங்களைக் கேட்டறியும் இயல்பினர்; இர் - பலர்பாற் பெயர்விகுதி. சிட்டது - சிரேஷ்டம் என்ற வடசொல். சிட்டம் எனத்திரிந்து, அச்சொல் சிட்டது என்று குறிப்பு முற்றாயது. சிரேட்டர் சிட்டர் என வந்தமையும் காண்க. 'சிட்டர் செயல் செய்திலை' (யுத்த. 64). சிட்டது: 'ஆசை சீதைபால் விடுத்து அன்னை உடையாரிடம் ஒப்புவித்து வாழ்தல் என்க. இங்கு: 'கலங்காத வீரியரானாலும் போகின்ற காலம் வந்தால், நலங்காம லேவெல்ல மாட்டுவ ரோவிந்த நானிலத்தில் சலம் காவலெந்திரம் மதிலேழ் தலைபத்துத் தானிருந்தும், இலங்காபுரிநின்றதோ வெள்ளை நாவலிருப்பவனே' (தனிப்பா.) என்றது காண்க.

பி - ம். 1. இந்திரர், இந்திர.
2. மேன்மையை, மெய்யே ஐய; மீட்டொருவினையம்.
4. இராவணன் சீற்றம்.

17

## இலக்குவனைக் கொன்றேனாதலால், வெற்றி தன்னதே யென்று இராவணன் கூறுதல்

3570. இலக்குவன் தன்னை வேலா
லெறிந்துயிர் கூற்றுக் கீந்தேன்
அலக்கணிற் றலைவ ரெல்லா
மழுந்தின ரதனைக் கண்டால்
உலக்குமா லிராமன் பின்ன
ருயிர்ப்பொறை யுகவா னுற்ற
மலக்கமுண் டாகி னாக
வாகையென் வயத்த தென்றான்.

'இலக்குவன் தன்னை - இளைய பெருமாளை, வேலால் எறிந்து - வேல் கொண்டு வீசி, உயிர் கூற்றுக்கு ஈந்தேன் - அவனுடைய உயிரை யமனுக்களித்தேன்; தலைவர் எல்லாம் - வானரத் தலைவர் அனைவரும், அலக்கணில் அழுந்தினர் - துன்பத்துள் ஆழ்ந்தனர்; அதனை கண்டால் - அதனைக் கண்ணுற்றால், பின்னர்-பிறகு, உயிர் பொறை உகவான் - உயிர் சுமந்து வாழ விரும்பாதவனாகி, இராமன் உலக்கும் - இராமன் இறப்பான்; உற்ற - (மூலபல வழிவால்) எனக்கு நேர்ந்துள்ள, மலக்கம் - மனக் கலக்கம், உண்டு ஆகில் - எனக்கு உளதாகும் எனின், ஆக - உளதாகட்டும்; (முடிவில்) வாகை-வெற்றி, என் வயத்தது-என் பாலேயுள்ளது', என்றான் - என்று மொழிந்தான் இராவணன்.

வேலெறிந்த இலக்குவன் குற்றுயிராய்க் கிடந்ததையே நினைத்துப் பேசுகின்றான்; பின்னர் மருந்தினால் அவன் உயிர் பெற்றமை நேரிதின் உணரானாகலின். தம்பி மரித்த நிலையில் தனித்துறையும் வாழ்வு பெரும் பாரமேயாதலின்; 'உயிர்ப் பொறை யுகவான்' எனப்பட்டது. மலக்கம் - மனக் கலக்கம். 'மலக்கமுண் டுழலும் தேவர்' (யுத்த. மீட்சி. 295); வாகை - வெற்றிமாலை. 'மாலினார் கெடவாகையே, சூலமேகொடு சூடினான்' (யுத்த. 1321).

பி - ம். 3. உலக்குமெய்; பின்னே, பின்னை; உதவான்.
4. மலக்கமுண்டாகிலாத.



இலக்குவன் உயிர் பெற்றமையைத் தூதுவர் வந்து கூறுதல்

3571. ஆண்டது கண்டு நின்ற
தூதுவ ரைய மெய்யே
மீண்டதவ் வளவி னுவி
மாருதி மருந்து மெய்யில்
தீண்டவுந் தாழ்த்த தில்லை
யாருமச் செங்க ணானைப்
பூண்டனர் தழுவிப் புக்கார்
காணுதி போதி யென்றார்.

'ஆண்டு - அப் போர்க்களத்தில், (வேல்பட்டு வீழ்ந்த இலக்குவன் மருத்து மலையால் உயிர் மீளப் பெற்ற) அது - அந் நிகழ்ச்சியை, கண்டு நின்ற - கண்ணுற்று நின்ற, தூதுவர் - தூதர்; 'ஐய - ஐயனே; மாருதி மருந்து - அநுமன் கொணர்ந்த சஞ்சீவி மருந்து, மெய்யில் தீண்டவும் - உடம்பில் படுமளவும், தாழ்த்தது இல்லை - தாமதிக்க வில்லை, அவ் அளவில் - அந்த அளவில், ஆவி மீண்டது - (இலக்குவன்) உயிர் மீளப் பெற்றது; மெய்யே - இஃது உண்மையே; யாரும் - தலைவரெல்லாம், அ செம் கணனை - அந்தச் செந்தாமரைக் கண்ணனை (இலக்குவனை) பூண்டனர் - சூழ்ந்து கொண்டவராய், தழுவி புக்கார் - தழுவிக் கொண்டு புகுந்தனர்; காணுதி போதி - அதனைச் சென்று காண்பாயாக', என்றார் - என்று மொழிந்தார்.

தூதுவர் - தாழ்த்தல்: தாமதித்தல்: 'தாழா தேகுதி யறிஞ வென்றான்' (யுத்த. 433): 'தீண்டவும் தாழ்த்ததில்லை' தந்தனன் மருந்து தன்னைத் தாக்குதன் முன்னே யோகம், வந்தது' (யுத்த. 3508) என்றமை காண்க.

பி - ம். 1. கேட்டுநின்ற; தூதர்கள்.

2. மீண்டதவ்விளவல்; மருந்துமேனி.

3. தாழ்ந்தது.

4. மருந்து வெற்பை வீசினன் புக்கது; தழுவிப்புக்கார் போதுதி காணின்; என்றான்.

18

## ஆயிரம் வெள்ளத்ததான அரக்கச்சேனை யிறந்ததை ஐயுற்ற இராவணன் கோபுரத்தின்மீது ஏறி அதனுண்மையைக் காணுதல்

3572. தேறில னாத லானே
மறுகுறு சிந்தை தேற
ஏறினன் கனகத் தாரைக்
கோபுரத் தும்ப ரெய்தி
ஊறின சேனை வெள்ள
முலந்தபே ருண்மை யெல்லாம்
காறின வுள்ள நோவக்
கண்களாற் றெரியக் கண்டான்.

